தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—78

# இங்கிலாந்து வரலாறு—II

(ஆங்கிலேயர் வருகையிலிருந்து 1918 வரை
மூன்று பாகங்களில்)

## (A HISTORY OF ENGLAND—II)

(From the Coming of the English to 1918—In Three Parts)

ஆசிரியர்
சர் கீத் ஃபீலிங்

தமிழாக்கம்
பா. மாணிக்கவேலு, எம்.ஏ.,
உதவிப் பேராசிரியர், வரலாற்றுத் துறை,
அரசினர் கலைக் கல்லூரி, கோவை.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—73

# இங்கிலாந்து வரலாறு—II

(ஆங்கிலேயர் வருகையிலிருந்து 1918 வரை
மூன்று பாகங்களில்)

# (A HISTORY OF ENGLAND—II)

**(From the coming of the English to 1918—In Three Parts)**

*ஆசிரியர்*

**சர் கீத் ஃபீலிங்**

*தமிழாக்கம்*

**பா. மாணிக்கவேலு, எம்.ஏ.,**

*உதவிப் பேராசிரியர், வரலாற்றுத் துறை,*
*அரசினர் கலைக் கல்லூரி, கோவை.*




**தமிழ் வெளியீட்டுக் கழகம்**
தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—March, 1965

B.T.P. No. 73

# A HISTORY OF ENGLAND—II

SIR KEITH FEILING

Translation

P. MANICKAVELU





PRICE Rs. 13-00



Printed by
The Midland Printers,
Vepery, Madras-7

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஐந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **'இங்கிலாந்து வரலாறு-II'** என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் **73**ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **108** நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும், ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

**எம். பக்தவத்ஸலம்**

# மொழிபெயர்ப்பாசிரியர் முன்னுரை

முன்னோர் ஒழுகிக்காட்டிய உயர்ந்த நெறிகளையும் அன்னோர் கொண்டிருந்த சிறந்த பண்பினையும் பின்னோர்க்கு நினைப்பூட்டி அவர்களை நல்வழிப்படுத்துவன வரலாற்று நூல்களே. மக்கள் அவற்றை ஆர்வத்துடன் படித்து உணர்ச்சிபெற்று, ஊக்கம் கொண்டு, முன்னேற்றப் பாதையில் செல்கின்றனர். இங்ஙனம் உணர்ச்சிப்பெருக்கிற்கும், உயர்விற்கும் வித்தாய் அமையும் வரலாற்று நூல்க்ள் அவரவர்தம் தாய்மொழியிலேயே கிடைக்குமானல் நனிபயன் நல்கும். பிறநாட்டு இலக்கியங்கள் தமிழில் செய்வோம் என்று பாரதி கண்ட கனவு நினைவாகிவரும் இந் நாளில், தாய் மொழியிற் கல்வி, தீந்தமிழ் வளர்ச்சி என்றெல்லாம் எண்ணும் இவ் வேளையில், சர் கீத் ஃபீலிங் அவர்களது இங்கிலாந்து வரலாற்றின் ஒரு பகுதியை மொழிபெயர்ப்பதற்கோர் நல்வாய்ப்புத் தந்து ஊக்கமும் உற்சாகமும் அளித்த தமிழ் வெளியீட்டுக் கழகத்தார்க்கு எனது நன்றி உரித்தாகும். படிகள் எடுத்தும் பிழை திருத்தியும் உதவிய நண்பர்கட்கும் என் நன்றி.

**பா. மாணிக்கவேலு**

## பொருளடக்கம்



### மடல் IV

### தற்கால இங்கிலாந்து உருவாக்கப்பெறல் (1509–1660)

# மடல் V

## சமநிலை

## (1660–1760)

## படங்கள்



## மரபுமுறை விளக்கப் பட்டியல்

ஜான் ஹோவர்டு
முதலாம் நார்ஃபோக் பிரபு
(1485-ல் பாஸ்வொர்த்தில் கொல்லப்பட்டவர்)

தாமஸ்
இரண்டாம் கோமகன் (1524)

- தாமஸ் மூன்றும் கோமகன் 1554
  - சர்ரே ஏர்ல் பிரபு
    - தாமஸ் நான்காம் கோமகன் 1572-ல் கொல்லப் பட்டார்
      - வழிவழியாக வந்த பிற்காலப் பிரபுக்கள்
      - தாமஸ் ஹோவர்டு கடற்படைத் தலைவர்
- எட்மண்டு
  - காதரைன் ஹோவர்டு 1542-ல் கொல்லப் பட்டார்
- வில்லியம்
  - இரண்டாம் சார்லஸ் பிரபு நாட்டிங்காம் பிரபுவும் ஆவர் (1624)
- எலிசபெத்

மேரி = வில்லியம் கேரி
- ஹென்றி முதல் ஹட்சன் பிரபு (1596)

சர் ஃபிலிப் சிட்னி (1)

**யாரைச் சார்ந்தவர்கள்**

ஜார்ஜ் பொலீன்
லண்டன் நகர மேயர் (*1457*)

சர் வில்லியம் பொலீன்

= தாமஸ் பொலீன்
வில்ட்ஷயர் ஏர்ல் பிரபு

ஆன் = சர் J. சாக்வில்
ரிச்சர்டு சாக்வில்
தாமஸ் சாக்வில்
பக்கர்ட் பிரபு
கருவூலப் பிரபு
(*1599*)

ஆன் =
| எட்டாம் ஹென்றி
எலிசபெத் இராணியார்

காதரைன் = சர் ஃபிரான்ஸிஸ் நோலிஸ்

வால்டர் டெவரக்ஸ் (1) = லட்டிஸ் = (2) ராபர்ட் டட்லி
எஸ்ஸக்ஸ் ஏர்ல் பிரபு
லீசெஸ்டர்
ஏர்ல் பிரபு

= ஃபிரான்ஸஸ்
சர் ஃபிரான்ஸிஸ்
வால்ஷிங்காமின்
மகள்

= (2) ராபர்ட்
எஸ்ஸக்ஸ்
ஏர்ல்பிரபு
*1601*-ல்
கொல்லப்
பட்டார்

பெனிலோப் = (1) ரிச் பிரபு
(2) சார்லஸ்
மான்ட்
ஜாய்
பிரபு

ராபர்ட்
மூன்றும் எஸ்ஸக்ஸ் ஏர்ல் பிரபு
பாராளுமன்றப் படைத்
தலைவர் (*1642*)

## ஸ்டூவர்டு அரசர் குலவழி

இரண்டாம் ராபர்ட்
(1371–1390)

மூன்றாம் ராபர்ட்
(1390–1406)

முதலாம் ஜேம்ஸ் = ஜோன் பீ:போர்ட்
(1406–37)

இரண்டாம் ஜேம்ஸ்
(1437–60)

மூன்றாம் ஜேம்ஸ்
(1460–88)

அல்பெனி கோமகன்
அலெக்சாந்தர்

மேரி = ஜேம்ஸ்,
ஹாமில்டன் பிரபு

கொள்ளுப் பேரன்
லென்னக்ஸ் ஏர்ல் பிரபுவான மாத்யூ

நான்காம் ஜேம்ஸ் = மார்கரட் டியூடர் = (2) ஆரும் ஆங்கஸ் பிரபு
(1488–1513)

மார்கரட் = லென்னக்ஸ் ஏர்ல் பிரபுவான மாத்யூ

ஐந்தாம் ஜேம்ஸ் = கைஸ்நாட்டு மேரி
(1513–42)

ஸ்காட்டிய மேரி இராணியார் = டார்ன்லி

சார்லஸ், ஆரும் ஏர்ல் பிரபு

ஆரும் ஜேம்ஸ்
இங்கிலாந்து அரசர் முதலாம் ஜேம்ஸ்
(1576–1625)

அராபல்லா ஸ்டூவர்டு = வில்லியம் சேமூர்,
சீமாட்டி (1615) பின்னர் சாமர்செட் பிரபு.

# பதினேழாம் நூற்றாண்டில் அரசர் குலவழி

முதலாம் ஜேம்ஸ்=டென்மார்க் நாட்டு ஆன்
(1603-25)

ஹென்றி
(1612)

முதலாம் சார்லஸ்=ஹென்ரீட்டா மேரியா
(1625-49)

எலிசபெத்=ஐந்தாம் ஃபிரடரிக், பேலடின்
தேர்வாளர், பொஹிமிய
நாட்டு மன்னர்

இரண்டாம்=பிரகன்ஸா
சார்லஸ் நாட்டு
(1660-85) காதரைன்

ஹென்றி
கிளவ்செஸ்டர்
கோமகன்
(1660)

ஹென்ரீட்டா=ஃபிலிப்
ஆர்லியன்ஸ்
கோமகன்

மேரி=இரண்டாம்
வில்லியம்
ஆரஞ்சு
அரசர்

ஆன்=விக்டர் அமாதியஸ்,
செவாய் பிரபு சார்டினீய
நாட்டு முதலரசர்

ஆன் =இரண்டாம் ஜேம்ஸ்=மாடனா
ஹைடு நாட்டு
மேரி

மூன்றும் வில்லியம்=மேரி
(1688-1702)

ஆன்=டென்மார்க்
நாட்டு ஜார்ஜ்

ஜேம்ஸ் எட்வர்டு
மூத்த போலி

சார்லஸ் லிவிஸ்
பாலடின் தேர்வாளர்
(1680)

மரீஸ்

ரூபர்ட்

சோபியா=எர்னஸ் அகஸ்டஸ்
ஹனோவரின் முதல் தேர்வாளர்

முதலாம் ஜார்ஜ்
(1714-27)


சர் ஹென்றி சிட்னி=மேரி
அயர்லாந்தின் துணைப் பிரபு (1586)
காப்பாளர் நார்த்தம்பர் லண்டின் மகள்
வால்டர் டெவரக்ஸ்=
முதலாம் எஸ்ஸக்ஸ் பிரபு
சர் ஃபிலிப் சிட்னி
மேரி=ஹெர்பர்ட்
இரண்டாம் பெம்புரோக் ஏர்ல் பிரபு
ராபர்ட் லீசெஸ்டர் ஏர்ல் பிரபு (1626)
ஹென்றி=டோ
9ஆம் நார்த்தம் பர்லண்டு பிரபு
ரொதி
ராபர்ட் இரண்டாம் ஏர்ல் பிரபு 1601-ல் கொல்லப்பட்டவர்
ராபர்ட் மூன் றும் ஏர்ல் பிரபு
ஃபிலிப் பெம்புரோக், மான்ட் கோமரி ஏர்ல் பிரபு (1650)
ராபர்ட்=டோ
இரண் டாம் ஏர்ல் பிரபு (1677)
ரொதி
லூஸி கார் லைின் கோமகள்
அல்கர்னுன் பத்தாம் ஏர்ல் பிரபு (1668)
அல்கர்னுன் சிட்னி 1683-ல் கொல் லப்பட்டார்
ஹென்றி ரோம்னே ஏர்ல் பிரபு 1704
டோரொதி=ஹென்றி ஸ்பென்சர்
முதலாம் சண்டர் லண்டு பிரபு
ராபர்ட் இரண்டாம் ஏர்ல் பிரபு
டோரொதி=ஹாலிஃபாக்ஸ், டிரிம்மர்

# எதிர்க்கட்சி செல்வந்தர்

லெட்டிஷ் நோலிஸ்




ஸ்பானிய வாரிசுரிமை
ஆர்ச்டியூக் ஃபிலிப்=ஜோவன்ஞ காஸ்டீல்
பேரரசர் ஐந்தாம் சார்லஸ் 1558
பேரரசர் முதலாம் பர்டிஞண்டு 1564
ஸ்பெயின் நாட்டு இரண்டாம் பிலிப்=ஆன் இரண்டாம் மாக்ஸ் மிலியனின் மகள்
ஸ்டீரியநாட்டு சார்லஸ்
பேரரசர் இரண்டாம் மாக்ஸிமிலியன் 1576
பேரரசர் இரண்டாம் ருடால்ப் 1612
பேரரசர் மத்தயஸ் 1619
மூன்றும் பிலிப்=மார்கரட்
பேரரசர் இரண்டாம் பர்டிஞண்டு 1637
ஆன்=ஃபிரெஞ்சு நாட்டு பதின்மூன்றும் லூயி
மேரியா=பேரரசர் மூன்றும் பர்டிஞண்டு
ஃபிரான்ஸின் எலிசபெத்=(1)நான்காம் ஃபிலிப் 1665=(2)மேரியா
பதிஞன்காம் லூயி 1715=மேரியா தெரிசா


ஸ்பெயின் நாட்டு
இரண்டாம் சார்லஸ்
மார்கரட் = பேரரசர் முதலாம் லியோபால்டு = நியூபர்க் நாட்டு
1705
எலியஞர்
டாபின் இளவரசர் லூயி
மேரியா அன்டோனிஞ = பவேரிய நாட்டுத்
தேர்வாளர்
பேரரசர் முதலாம்
ஜோசப் 1711
ஆர்ச்டியூக் சார்லஸ்
பின்னர்
பேரரசர் நான்காம்
சார்லஸ்
பர்கண்டி கோமகன்
1712
ஆஞ்சு நாட்டு ஃபிலிப்
பின்னர் ஸ்பெயின்
நாட்டு மன்னர்
ஐந்தாம் ஃபிலிப்
1700–46
தேர்வாளர் இளவரசர்
1699

## ஹனேவர் குலவழி

**டியூடரும் ஸ்டுவர்டுகளும்**

பொஹிமிய நாட்டு அரசி எலிசபெத்

**பிளான்டாஜினெட்டினர்**

இரண்டாம் ஹென்றி, 1189

மாடில்டா = அரிமா ஹென்றி

(13 தலைமுறைகள்)

சோபியா = எர்னஸ்ட், அகஸ்டஸ், பிரன்ஸ்விக்-லுனிபர்க் கோமகன் ஹனேவர் நாட்டுத் தேர்வாளர், 1698

முதலாம் ஜார்ஜ் = பிரன்ஸ்விக்-செல்லி நாட்டு சோபியா டொரோதி

சோபியா சார்லோட்டி = பிரஷ்ய நாட்டு முதலாம் ஃபிரடரிக்

இரண்டாம் ஜார்ஜ் = அன்ஸ்பாச் நாட்டு கரோலின் (1727-60)

சோபியா டொரோதி = பிரஷ்ய நாட்டு பிரடரிக் வில்லியம்

மாமன்னன் ஃபிரடரிக்

ஆன் = ஆரஞ்சு இளவரசர் நான்காம் வில்லியம்

ஃபிரடரிக் = சாக்ஸி-கோதா நாட்டு அகஸ்தா வேல்ஸ் இளவரசர் 1751

அமீலியா 1786

வில்லியம் கம்பர்லண்டு கோமகன் 1765

அகஸ்தா = வில்லியம், பிரன்ஸ்விக் கோமகன்

மூன்றும் ஜார்ஜ் = மெக்லன்பர்க் நாட்டு சார்லோட்டி 1760-1820


கரோலின் = நான்காம் ஜார்ஜ்
சார்லோட்டி, 1817
ஃபிரடரிக் யார்க் கோமகன் 1827
நான்காம் வில்லியம் 1830–37 = சாக்ஸ்-மினிங்கன் நாட்டு அடிலெய்டு
எட்வர்டு கென்ட் கோமகன் 1820 = விக்டோரியா
விக்டோரியா மகாராணியார்
எர்னஸ்ட் கம்பர்லண்டு கோமகன் ஹனேவர் நாட்டரசர் 1851
மற்ற நான்கு பிள்ளைகளும் ஆறு பெண்களும்

## கிரான்வில்களும் பிட்களும்

தாமஸ் பிட்
சென்னை கவர்னர் (1726)

ஜேம்ஸ் = லூசி
முதலாம் ஸ்டான்ஹோப் ஏர்ல் பிரபு (1721)

ராபர்ட்

பிலிப் இரண்டாம் ஏர்ல் பிரபு

சார்லஸ் = ஹெஸ்டர்
மூன்றும் ஏர்ல் பிரபு

ஹெஸ்டர் ஸ்டான்ஹோப் சீமாட்டி

சர் ரிச்சர்டு டெம்பிள்
ஸ்டோவின் மூன்றும் பரோனெட்
பாராளுமன்ற உறுப்பினர் 1654-97

வோட்டனைச் சார்ந்த = ஹெஸ்டர்
ரிச்சர்டு கிரன்வில்

ரிச்சர்டு கோபாம்
வைகவுண்ட் பிரபு 1749

கிரிஸ்டியன் = சர் டி. லிட்டில்டன்

வில்லியம் = ஹெஸ்டர்
சாத்தம் பிரபு பிரதம அமைச்சர் 1766

ரிச்சர்டு டெம்பிள்
ஏர்ல் பிரபு 1769

ஜார்ஜ் = எலிசபெத்
பிரதம அமைச்சர் 1763
சர் வில்லியம் விண்டாமின் மகள்

ஜார்ஜ் முதலாம் லிட்டில்டன் பிரபு

ஜான் இரண்டாம் ஏர்ல் பிரபு

வில்லியம் பிரதம அமைச்சர்
(1783-1801)
(1804-1806)

ஜார்ஜ் = மேரி
பக்கிங்காம் மார்குவிஸ் பிரபு (1813)
ராபர்ட் நூஜெண்ட் ஏர்ல் பிரபு

வில்லியம் கிரன்வில்
பிரபு பிரதம அமைச்சர் 1806-7

ரிச்சர்டு பக்கிங்காம்
பிரபு (1839)

மடல் IV

# தற்கால இங்கிலாந்து உருவாக்கப்பெறல்

.[Making of Modern England]

(1509–1660)

## 1. எட்டாம் ஹென்றி: புது யுகத்தில் பழைய திட்டங்கள், 1509–1529

எட்டாம் ஹென்றியின் ஆட்சி முடிவுற்ற காலத்தில் நவீன இங்கிலாந்து (தற்கால இங்கிலாந்து) தோன்றத் தொடங்கியது. அச்சுப்பொறி கண்டு பிடிக்கப்படல், புது உலகங்களைக் கண்டு பிடித்தல், மறுமலர்ச்சி, சமய சீர்திருத்தம் ஆகியவை மக்களின் சிந்தனை, கருத்துகளைக் கொள்ளும் முறை, ஆட்சிநடாத்த உரிமை பெற்ற வகுப்பு முதலானவற்றைப் புரட்சிகரமாக மாற்றி யமைத்தன. பொருளாதார அமைப்பில் விலைவாசிகளில் ஏற்பட்ட நெருக்கடி இம் மாறுதல்களை விரைவுபடுத்தின. அது நீண்ட நாளைய தேவையாகும். மேற்கூறிய முறைகள் அனைத்தும் ஒன்றாக இணைந்து ஸ்காட்லாந்து, அயர்லாந்து நாடுகளுடன் இங்கிலாந்தின் தொடர்பை வலியுறுத்தி, அவற்றை இணைத்துக்கொள்ளும் முடிவை அடைந்தன. சமயப்போர்கள், துருக்கியரின் முன்னேற்றம், கீழ்த் திசை நாடுகளையும் அமெரிக்கக் கண்டங்களையும் வெற்றிபெறல் ஆகிய வெளிநாடுகளில் நடைபெற்ற பிற நிகழ்ச்சிகளுடன் இணைந்து மேல்நாட்டினர் ஐரோப்பாவின் உயர்வையும் சிறப்பை யும் உலகத்தில் நிலைநாட்டினர். அத்துடன், மத்தியதரைக்கடல் பகுதியில் குவிந்திருந்த பலத்தை அட்லாண்டிக் பெருங்கடல்பால் திருப்பிவிட்டனர். கி.பி. 1640ஆம் ஆண்டுவாக்கில் பத் தொன்பதாம் நூற்றுண்டு இங்கிலாந்தின் தன்மைகள் தெளிவாகத் தென்படலாயின. அவ்வாண்டிற்குள் இங்கிலாந்து கடல் பயணம்

செய்கிற நாடாகவும், தொழில் வளம் மிகுந்து, பிராட்டஸ்டென்ட் சமயத்தை ஆதரித்து, மத்திய வகுப்பாரின் நாடாகவும் மாறலாயிற்று.

எட்டாம் ஹென்றியின் ஆட்சியில் இங்கிலாந்தின் மேற்கூறிய மாறுதல்களுக்கான முதல் கட்டம் அமைக்கப்பெற்றது. அதனால், அவரைத் தலைசிறந்த மனிதரென்றுகூடச் சொல்லலாம். ஆனால், இதைச் செய்து முடிப்பதில் அவர் நேர்மையான முறைகளைப் பின் பற்றவில்லை. எட்டாம் ஹென்றி தம் மக்களனைவரையும்விட புகழ் மிக்கவரானார். அதற்குப் பல காரணங்களுண்டு. 'உலகில் மிகச் சிறப்பாக உடை உடுத்தும் பெரு மன்னர்' என்று வெனீஷியர்கள் அவரைப் புகழ்ந்தார்கள். ஏன் தம்மைவிட அழகில் சிறந்தவர்கள் வேறு யாருமில்லை என்று அவரே கருதலானார். எட்டாம் ஹென்றி, சிறந்த குதிரை வீரரும் நன்கு பாடத்தெரிந்த கலைஞருமாவார். அவர் மூன்று அந்நிய மொழிகளில் பேசத் தெரிந்தவர்; சமய சித்தாந்தங்களில் எவ்வளவு கூர்த்த மதியினராய் இருந்தாரோ அங்ஙனமே கப்பற்கட்டும் தொழிலிலும் பயிற்சி மிக்கவராய் இருந்தார் அவர். அவருடைய பேச்சில் கவர்ச்சி இருக்கவில்லை. பாராளு மன்றச் சட்டங்களிலுள்ள குறைகளை உடனுக்குடன் கண்டுபிடிக்கும் பண்பினர்; அதேபோன்று கடிதங்களிலும் காணப்பெறும் குற்றங் குறைகளை எளிதாக உணர்ந்துகொள்ளும் இயல்பினர். அரசியல் ஞானத்தில் திறல்மிகுந்த வல்லவர்; அவர் கொடுங் கோலர்களான அயல்நாட்டு மன்னர்களைத் தம் கொடுமையின் மூலமாகவே எதிர்த்தார். அவர் வீணர்களை விலைகொடுத்து வாங்கி அஞ்சவேண்டியவரையும் அச்சுறுத்தினார். எனினும், சாதாரண ஆங்கில மக்களின் உள்ளுணர்ச்சிகளுக்குத் தக தம் முரட்டுத் தன்மைகளையும் துணிச்சலான செயல்களையும் அவர் செய்து முடித்தார். தமக்குத் தொண்டாற்றும் சிறந்த ஊழியர்களைத் தேர்ந் தெடுத்து, அவர்களை முழுவதும் நம்பியவர் எட்டாம் ஹென்றி. உல்ஸி, கிராம்வெல் என்ற இருவருக்குமட்டும் அவர் பெரும் அதி காரங்களை நல்கினார். ஆனால், அவ்விருவரும் ஈவிரக்கமற்றவர்கள். தாம் செய்துமுடிக்க வேண்டும் என்று மனத்தில் முடிவுசெய்த செயல்களைச் செய்து முடித்து சிறந்த அரசரென நிலைநாட்டியவர் களில் எட்டாம் ஹென்றியை நிகர்த்தவர் வேறு யாருமில்லை. அவரிடம் தன்னலநோக்கு பெருமளவுக்கு எப்போதும் குடிகொண் டிருந்தது. வெற்றிக்குமேல் வெற்றிபெற்றபோது அவரின் ஆசை அபிலாஷைகள் கட்டுப்படுத்தமுடியாத அளவுக்குப் பெருகலாயின. இறுதியில் அவர் வைத்ததே சட்டம் என்று கொள்ளும் முறையில் நின்ற அவருக்கு, நேர்மையொழுக்கங்களும், ஆழ்ந்த அறிவுரை களும் பணிந்து அடி வணங்க வேண்டுபவை ஆயின. 'என்

னுடைய தலையைக் கொடுத்தால் ஃபிரான்ஸில் கோட்டையொன்று கிடைக்கும் என்று தெரிந்தபோது அது போகாமல் நின்றது கிடையாது' என்று மூர் என்பார் குறிப்பிட்டுள்ளார். அதனால், தன் விருப்பத்தைப் பூர்த்தி செய்துகொள்ள அவர் யாரையும் பலி கொடுக்கச் சித்தமாயிருந்தார். அவருக்கு இருந்த பல இச்சைகளில் மக்களின் பெருஞ் செல்வாக்கைப் பெறவேண்டுமென்பதும் ஒன்று. அதனால், பல திறமைகளைப்பெற்று விலங்குணர்ச்சி கொண்ட அவர் கொடுங்கோலனாகவில்லை. இறுதியில் அவர் போர்ப் படையின்றியும், காமன்ஸ் சபையின் ஆதரவின்மூலமாகவும் ஆட்சி நடாத்தினார். நாட்டு மக்களில் பெரும்பான்மையானவரை அவர் தமக்கு விசுவாசமுள்ளவராகக் கொண்டார். அவருடைய கொள்கையால் கடுமையான புரட்சியொன்றைக் கடக்கவேண்டி யேற்பட்டது.

ஹென்றிக்குக் கல்வி கற்பித்த ஆசிரியப் பெருமக்களும் அவருடைய சமகாலத்தவரான இளைஞர்களும், இங்கிலாந்தில் புதிய யுகம் பிறந்ததற்காக இன்பக் கனவுகளைக் கண்டார்கள். பொருள் வவ்வும் பேயாட்சி ஒழிந்துவிட்டதென்பதை நிரூபிப்பான்வேண்டி, அவர் பதவிக்கு வந்தவுடன் எம்ஸன், டட்லி என்ற தம் தந்தையாரின் இரு அமைச்சர்களைக் கழுவேற்றினார். தம் தந்தையாரின் கருவூலத்தை நிரப்பக் கருவியாக நின்ற கொடுமையான சட்டங்கள் பலவற்றைத் தள்ளிவைத்தார். கல்வியைக் காமுறும் காலம் அது; நாட்டில் அமைதியை நாடின காலம் அது; நாட்டு மக்கள், திருச்சபையிலும் அரசின் போக்கிலும் எண்ணற்ற சீர்திருத்தங்களை அவர் தொடங்குவார் என்று எதிர்பார்த்தனர். ஏனெனில், அக் காலம் அமைதியற்றிருந்தது; மக்கள் மனத்தில் தொன்று தொட்டு வந்த அமைதியற்ற நிலைக்குப் புதுப் பரிகாரங்களைப் பேண ஆயத்தமாக இருந்த அருமையான யுகம் அது. ஆங்கில மக்கள் விரும்பிப் போற்றிய நூல்களையெல்லாம் வரையேதுமின்றி அச்சடித்துத் தந்தார் காக்ஸ்டன். அவர் கி.பி. 1491ஆம் ஆண்டில் காலமானார். ஆனால், தாம் காலமாகும் கடைசி தருணம் வரை மேற்கூறிய பணியைச் செம்மையாகச் செய்து முடித்தார் அவர். வரலாற்றுக் குறிப்புகள், பக்தியூட்டும் இலக்கியங்கள், இங்கிலாந்தில் சாஸர் போன்ற பழைய கவிஞர்களின் நூல்கள், இவற்றுடன் ஒருசில இலத்தீன் மொழிபெயர்ப்பு நூல்கள் ஆகியவற்றை அரை நூற்றாண்டுக் காலம் அச்சடித்து நாட்டுக்கு நன்மைகள் புரிந்தவர் காக்ஸ்டன். இத் தருணத்தில் ஐரோப்பிய அச்சகங்கள் ராபிலஸ் (Rabelais)*, அரியோஸ்டோ (Ariosto),

* ராபிலஸ் என்பார் ஒரு ஃபிரெஞ்சியர்; நகைச்சுவை இலக்கியக் கர்த்தா.

வாஸரி (Vasari) அல்லது ரான்சார்ட் (Ronsard) போன்ருரின் நூல்களை அச்சடித்துவந்தன.

எனினும், காக்ஸ்டனும் அவருக்குப் பின் வந்த அச்சாளர்களும் இரு அடிப்படையான செயல்களைச் செய்தனர். முதலாவது, அவர்கள் பண்டைய கிரேக்க, இலத்தீன் மொழி இலக்கியங்களிலிருந்து கடன் வாங்கியதற்கும் நாட்டுப் பேச்சு மொழியில் இருந்ததற்கும் இடைப்பட்ட வழியொன்றை இலக்கியத்தில் தெரிந்தேற்றனர். அதன் விளைவாக ஆங்கிலப் பேச்சில் ஒரு குறிப்பிட்ட தரத்தை ஏற்படுத்தினர். இரண்டாவது, அவர்கள் பெருமளவில் நூல்கள் அச்சிட்டமையால் மக்கள் கருத்துப் பெருகி வளர்ந்தது. மூர் என்பாரின் மைத்துனர் ராஸ்டல் (Rastell) போன்ற அச்சக உரிமையாளர்கள் சட்டங்களைப் பல பதிப்புகளாக அச்சிட்டு வெளியிட்டனர். வின்கின் டி வோர்ட் (Wynkin de Worde) என்பார் முப்பதாண்டுகளில் ஏறத்தாழ எழுநூறு நூல்களை வெளியிட்டார். கி.பி. 1520ஆம் ஆண்டு ஒன்றில்மட்டும் ஆக்ஸ்ஃபோர்ட் நூல் விற்பனையாளர் ஒருவர் இரண்டாயிரம் நூல்களுக்குமேல் விற்பனை செய்தார். மேற்கூறிய புள்ளி விவரங்களில் இருந்து மறுமலர்ச்சியால் ஏற்பட்ட விளைவுகளின் முழுப்பயனையும் பெற இங்கிலாந்து பலகாலம் பொறுத்திருக்கவேண்டியதாயிற்று என்பது தெளிவாகப் புரியும். ஆனல், இக் காலத்தை நாம் லங்காஸ்டிரயர் காலத்துடன் ஒப்பிடவேண்டும். அக் காலத்தில் ஒரு சில டஜன் கையெழுத்துப் பிரதிகளைச் சிரமத்துடன் கைமாற்றிக்கொண்டதையும், திரும்பப் பார்த்து எழுதியதையும் இக் காலத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இங்கிலாந்தில் ஆண்டுதோறும் வெளிவந்த நூல்களின் பெருமை தெரியவரும்.

இலக்கிய மலர்ச்சிக்கான நல்ல திருப்பம் ஏழாம் ஹென்றியின் ஆட்சிக்காலத்தில் தோன்றியது. அஃதும் அவருடைய ஆட்சியின் மறுபாதியில் தோன்றியது. ஏனெனில், கி.பி. 1500-க்கு முன்னர் இங்கிலாந்தில் முறைப்படுத்தப்பெற்று கிரேக்கக் கல்வி சொல்லித்தரப்படவில்லை. ஏறத்தாழ அது தெரியாதென்றே கூறிவிடலாம். கிரேக்க இலக்கியத்தை இங்கிலாந்தில் பரப்பிய பலருள் குரோசின் (Grocyn) என்பார் ஒருவர். அவர் இத்தாலியிலிருந்து திரும்பிவந்து ஆக்ஸ்ஃபோர்ட்டில் கிரேக்கமொழியில் சொற்பொழிவாற்றினர். பின்னர், லண்டன் ரெக்டராக இருந்து உயர்ந்த இலக்கிய ஆய்வுகளை நடத்தினர். மற்ருெருவர் லினக்கர் (Linacre) என்பவர். அவர் ஃபிளாரன்ஸிலும் வெனிஸிலும் கிரேக்க மொழியைக் கற்று உணர்ந்தார். தாம் கற்ற விஞ்ஞானக் கல்வியின் பயனக, அவர் மருத்துவக் கல்லூரியொன்றை நிலை

நாட்டினர். ஆக்ஸ்ஃபோர்டிலிருந்து இத்தாலி சென்ற பிறிதொருவர் ஜான் கோலட் என்பார். அவர் செயின்ட் பால்ஸின் மதகுருவாக இருந்தவர். ஏழாம் ஹென்றி சாவதற்குமுன் அவர் இப் பதவியைத் தான் வகித்தார். பின்னா அவர் செயின்ட் பால் பள்ளிக்கூடத்தை, லில்லி (Lilly) என்ற அப் பள்ளியின் தலைமை ஆசிரியருடன் சேர்ந்து நிலைநாட்டினர். அவருடைய இலத்தின்மொழி இலக்கணம் அடுத்த நூறு ஆண்டுகளுக்குப் பல தலைமுறை பள்ளி மாணவர்களைப் பயிற்றுவித்தது. அவர்களுக்குத் துணையாக இரு பெருமக்கள் ஆக்ஸ்ஃபோர்டில் வந்து சேர்ந்தனர். பின்னர், அவ்விருவரும் லண்டன் மாநகர் வந்துற்றனர். முதலாமவர், ராட்டர்டாமிலிருந்து வந்த ஏராஸ்மஸ் என்ற ஐரோப்பியப் பேரறிஞர். இரண்டாமவர், தாமஸ் மூர் என்ற ஆங்கில அறிஞர். அவர் ஆங்கிலத்தில் சிறந்த அறிஞர். ஏராஸ்மஸ்ஸும் தாமஸ் மூரும் சமகாலத்தவர்கள். மூர் பலகாலம் மடாலயத் துறவி வாழ்க்கை வாழ்ந்து, அரசியலில் கிறிஸ்துவ சமயக் கருத்துகளைப் புகுத்தவேண்டுமென்று எண்ணி ஊசலாடியவர். அக் காலத்தில் புதுக் கல்வியை மக்கள் விரும்பிப் போற்றினர். மார்கரெட் ராணியின் பாதுகாப்பிலும் அவளுடைய பேராசிரியர் ஃபிஷர் என்ற பிஷப்பின் கட்டளையாலும், இப் புதுக் கல்வி கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் உற்சாகத்துடன் கற்பிக்கப் பெற்றது. ஏராஸ்மஸ்ஸும் மார்க்கரெட்டின் பேராசிரியர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார். ஆர்ச்பிஷப் வார்ஹாம் என்பாரும் புதுக் கல்வியைப் போற்றினர். சில்லாண்டுகளுக்குள் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் பலபெரும் பிராட்டஸ்டென்ட் தலைவர்கள் தோன்றி வளரலாயினர். கிரான்மர், லாட்டிமர் என்பவர்களும், டைண்டேல், கவர்டேல் போன்ற விவிலிய மொழிபெயர்ப்பாளர்களும், பிராட்டஸ்டென்ட் சமயத்திற்காகத் தொடக்கத்தில் உயிர் துறந்த தியாகிகளும், வில்லியம் செஸில் போன்று தொண்டுக் கிழவர் ஆகும் வரை பிராட்டஸ்டென்ட் சமயத்தைப் போற்றி அதை வெற்றிபெறச் செய்தவர்களுமான எண்ணற்ற பெரியார்கள் இங்கிலாந்தில் பிராட்டஸ்டென்ட் சமயத்தை நிலைநாட்டினர். ஆக்ஸ்ஃபோர்டில் ஃபாக்ஸ் என்பார் கார்பஸ் கிறிஸ்டி கல்லூரியை நிலைநாட்டி, அங்கு கிரேக்க, இலத்தீன் மொழியில் சொற்பொழிவாற்றி, அச்சிட்ட நூல்களைக் கொண்ட நூல் நிலையம் ஒன்றையும் நிலைபெறச் செய்தார். அத் தருணத்தில் ஈட்டன் கல்லூரியிலும், வின்செஸ்டர் கல்லூரியிலும் கிரேக்கப் பாடங்கள் தொடங்கப்பெற்றன. அப் பெருமக்களைத் தூண்டும் புத்துணர்ச்சிகள் பல்கிப் பெருகலாயின. அமெரிகோ வெஸ்புச்சி புது உலகத்தைக் கண்டறிந்த புதுச் செய்திகள் அவர்தம் யாத்திரை நூலிலிருந்து வெளிவந்தன. போப்பாண்டவரின் பிரதிநிதிகளான கார்டினல்களும் ஃபிளாரன்டைன் இளவரசர்களும் பிளாட்டோவின் கருத்துகளைத்

திரும்பி கற்கலாயினர். அத்துடன் அரிஸ்டாடிலின் நூல்களும் விரும்பிக் கற்கப்பெற்றன. ரோமானியப் பேராசிரியர்கள் அற வாழ்க்கை நெறிகளையும் அரசின் பெருமையையும் போற்றி வந்தார்கள்.

முதல் தலைமுறையாக வந்த மேற்கூறிய ஆங்கிலச் சீர்திருத்தக்காரர்கள் கத்தோலிக்க சமயத்தைச் சீர்திருத்த முடியும் என்று நம்பினார்கள். ஏராஸ்மஸ் அந்நியரேனும் அவர் இங்கிலாந்து வந்தமையால் அவரையும் ஆங்கிலச் சீர்திருத்தக்காரர் என்று கொள்வது மரபு. கோலட்டின் ஆக்ஸ்ஃபோர்டு சொற்பொழிவுகளை ஆகட்டும்; அன்றி, செயின்ட் பால் திருச்சபையில் ஆற்றிய சமயப் பிரசாரங்களை ஆகட்டும் லோலார்டுகளே மகிழ்ச்சியுடன் கேட்டனர். அப்பிரசங்கங்கள் ஆகட்டும் அல்லது ஏராஸ்மஸ் விவிலியத்தின் புதிய ஏற்பாட்டைப் பதித்த பெருமையிலாகட்டும், அவர்கள் ஒரே ஒரு வழியைத்தான் கடைப்பிடித்தார்கள். அஃதாவது, தங்கள் சமயத்தின் கருத்துகளைக் கூறும் மூல நூல்களைக் காணவேண்டும் என்றும், அவற்றை வரலாற்று நூல்களாகக் கொள்ளவேண்டும் என்றும், அவை சமயக் கருத்துகளைமட்டும் போதிப்பவை என்றும் கொள்ளவேண்டும் என்றனர். மேலும், அதைக் கடவுளின் வாக்குகள் என்றும், அதைப் பூரணமாக நம்பவேண்டும் என்றும், அதில் வரும் உருவகப் பொருள்களையும் அப்படியே கொள்ளவேண்டும் என்று கூறிய இடைக்கால அறிஞர்களின் கருத்துகளைத் தூர எறிந்துவிடவேண்டுமென்றும் அவர்கள் கருதினர். சமயத்தை வளர்க்கவேண்டுமேயன்றி, ஒரு குறிப்பிட்ட கொள்கையைப் பிடிவாதமாகப் பிடிக்க வேண்டியதில்லை என்றும், மனிதரின் பகுத்தறிவுக்கேற்ப கடவுளின் அவசியத்தை இணைக்க வேண்டும் என்றும் கூறினர். 'ஏசுநாதர் விரிந்து பரந்தவராக இருக்கவேண்டுமென்றதைக் குறுக்கி நோக்காதீர்' என்று ஏராஸ்மஸ் கூறினார். விவிலியத்தை ஏற்றுக்கொண்டு, திருச்சபையின் தோன்றுதொட்டு வந்த சமயக் கருத்துகளை ஏற்றுக்கொண்டு, ஏசுநாதர் அவதரித்ததையும் ஒப்புக் கொண்டாலும், இப்புதிய சீர்திருத்தவாதிகள் கிறிஸ்துவ சமயத்தில் புகுந்திருந்த உலகியல் வாழ்க்கையைக் கடுமையாகத் தாக்கினர். சமயச் சடங்குகள், உருவ வழிபாடுகள், பெக்கெட்டுக்குக் கான்டர்பரியில் கோயில் அமைத்து வ்ழிபட்டமை, பாப மன்னிப்புச் சீட்டுகளை விற்றல், அறியாமையில் ஆழ்ந்த மடாலயத் துறவிகளின் டாம்பிகமான விழாக்கள், பரிசுத்த ஆவிபற்றிய பத்தாம்பசலிக் கருத்துகள் ஆகியவற்றையும் அவர்கள் கடுமையாகத் தாக்கினர். மூர் அவர்களின் தொடக்கக் காலத்துக் கட்டுரைகளில் கொடுங்கோலர்களைப் பற்றிய வெறுப்புரைகளைக் காண்கிறோம். கோலட், போர்செய்

வதற்கு எதிராக அரசரின் முன்னிலையிலேயே பிரசாரம் செய்தார். அரசர்களைப் போர் செய்யக் கூடாதென்று விரும்பி இவர்கள் போர்க்குணம் படைத்த போப்பாண்டவர்களைக் கண்டு அல்ல லுற்றனர். இரண்டாம் ஜூலியஸ் என்ற போப்பாண்டவர் ஒரு போர்வீரர் போன்றவர். பத்தாம் லியோ என்ற மெடிஸி அரசியல் வாதி போன்று நாடகமாடினார். அவரைப் பார்த்து ஏராஸ்மஸ் 'ஏசுநாதர் செத்துவிட்டது போன்று' இவர்கள் ஏன் நடிக்கிறார்கள் என்று வேதனைப்பட்டார்.

மேற்கூறிய தலைமுறையினர் ஆங்கில சமுதாயத்தில் காணப் பெற்ற அல்லல்களைக் கண்டும் வெறுமனே இருக்கவில்லை. டட்லி என்பார் சிறையில் அடைக்கப்பெற்று மரணத்தை எதிர்பார்த்து நிற்கும்வேளையில் 'காமன்வெல்த் தரு' (The Tree of Commonwealth) என்ற நூலை எழுதினார். அதில் கல்வியின் வீழ்ச்சியைப்பற்றியும் குற்றம் இழைக்கும் பாதிரிகளை நியமிக்கும் லௌகிகர்களைப்பற்றி யும் ஏழைமக்கள் அச்சுறுத்தப்பெற்றுச் சொல்லொணாத் துயர்ப் படுவதையும் அவர் குறிப்பிட்டுள்ளார். வேலைநீக்கம் பெற்ற போர் வீரர்களும், நிலங்கள் வேலி அடைக்கப்பெற்றதால் வேலையிழந் தோரும் நாடோடிகளுடன் தெருவெல்லாம் சுற்றி அலைந்தார்கள். அப்படிச் சுற்றித் திரிந்தவர்கள் கசையடிபெற்று அவரவர் கிராமங் களுக்குத் திருப்பியனுப்பப்பெற்றனர்; அல்லது இவ் வேலையற்றோர் கூட்டமாகச் செல்வாக்குற்ற பெருமக்கள் செத்தபோது கொடுக்கப் பெறும் இறைச்சித் துண்டுகளுக்காக ஆயிரக்கணக்கில் அவர்களின் சவ அடக்கத்தில் பங்கு கொண்டனர். ஆண்டுதோறும், கொடுந் திருட்டுக் குற்றங்களுக்காகவும் குதிரைகளைத் திருடிய குற்றத்திற் காகவும் நூற்றுக்கணக்கானவர்கள் மரண தண்டனை விதிக்கப் பெற்று கழுவேற்றப்பட்டார்கள். பிளாட்டோவின் லட்சிய சமுதாயம் வேண்டுமென கனவுகண்ட சீர்திருத்தவாதிகளுக்கும் சமுதாயத்தில் காணப்பெற்ற அன்றைய நிலைக்கும் பெரும் ஏற்றத் தாழ்வுகள் காணப்பெற்றன. இவ்விதமான முரண்பாடுகளை மனத்திற் கொண்டுதான் கி.பி. 1516ஆம் ஆண்டில் தாமஸ் மூர் என்ற அறிஞர் 'உடோப்பியா' (Utopia) என்ற நூலை வெளியிட்டார். 'இவ்விஷயங்கள் நம்முடைய முந்தையரை மகிழ்ச்சியூட்டியவை' என்ற பழைமை வாதத்தில் தஞ்சம் புகுந்த பிற்போக்குவாதிகள் அந் நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் குற்றஞ் சாட்டப்பெற்றனர். அவர்தம் நடைமுறைகளின் விளைவாக 'பணக்காரர்கள் அவர் களுக்குத் தேவையான பொருள்களைக்' காமன்வெல்த் என்ற பட்டத்தையும் பெயரையும் பயன்படுத்திச் சேகரிக்கும் சதியில் ஈடுபட்டனர். 'கறையான் அரித்த அல்லது செல்லரித்த பழைய சட்டங்களை'க் காட்டி அரசு பொருளீட்டி லாபம் பெற்றதையும்

அவர் அந் நூலில் கண்டித்தார். 'தனிச் சிறப்புரிமை' என்னும் பெயரால் நாட்டில் நிலவிய ஏற்றத்தாழ்வுகளையும் அவர் கடுமையாகத் தாக்கித் தம் நூலில் கண்டித்திருந்தார். 'உடோப்பியா'வில் பகுத்தறிவுடன் ஆளப்படும் சமுதாயம் எவ்வகையில் அன்றைய சமுதாயத்திலிருந்து மாறுபட்டு விளங்கும் என்பதையும், உண்மையான கிறிஸ்துவர்களைக் கொண்டிருந்தால் சமுதாயம் வேறுவிதத்தில் அமையும்என்பதையும் தெளிவாக விளக்கிக் கூறுவதையே நாம் காண்கிறோம். புரட்சிகரமான சீர்திருத்தங்கள் வேண்டுமென எதிர்பார்த்த மக்களை மூர் எச்சரித்தார். 'உங்களால் புரட்சிகரமான சீர்திருத்தங்களைக் காணமுடியாவிட்டால், திருச்சபை நடவடிக்கைகளில், பயன்பாட்டாலும் பழக்கத்தாலும் உறுதியாக்கப்பெற்ற குற்றங்குறைகளைத் திருத்திப் பரிகாரம் காண முயலவேண்டும். குற்றங்குறைகளுக்காகத் திருச்சபையாகிய காமன்வெல்த்தைப் புறக்கணிக்கக்கூடாது ; அதை விடவும் கூடாது'. மேலும் 'உங்களால் நல்லதாக ஆக்கமுடியாவிட்டாலும் அது மிகமோசமாக ஆகாமல் திருத்துவீர்களாகுக'. மூர் தம் 'உடோப்பியா'வில் கத்தோலிக்கத் திருச்சபையில் இருந்துகொண்டே அதைத் திருத்த வேண்டும் என்றுதான் போதித்தார். சமயத் தொடர்புள்ள சமுதாயத்தையே அவர் வலியுறுத்தினர். சமயக் கருத்துகளை ஒப்புக்கொள்ளாதவர்களைத் துன்புறுத்தக்கூடாதென்றும், ஆனால், சமயக் கருத்தை ஒப்புக்கொள்ளாதவர்கள் அதை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமேயன்றி வெளியில் சொல்லக்கூடாதென்றும், மடாலயங்கள் சீர்திருத்தப்படவேண்டுமென்றும் அவர் விரும்பினர். எல்லோரும் இன்புற்று, ஓய்வுபெற்று வாழும் நல்வாழ்க்கையைப் பெற்றுப் பொருளைப்பற்றி அக்கரைப்படாது வாழவேண்டுமென்று 'உடோப்பியா'வில் மூர் குறிப்பிட்டிருக்கிறார். பொருளியல் வாழ்க்கையை அவர் உதாசீனம் செய்துவிட்டமையால், தங்கத்தைச் சிறைச்சாலை காப்புகளுக்கும் சமையற் பாத்திரங்களுக்கும் உபயோகப்படுத்தவேண்டியே 'உடோப்பியா' குறிக்கின்றது. போரினால் பெறும் புகழைக்கொண்டு மக்கள் வாழாத நிலையுள்ள உலகத்தை அவர் வேண்டினர்.

சமயத்தில் புரட்சிகரமான மாறுதலை வேண்டியவர்களுக்கும் அதைச் சீர்திருத்திப் பயன்படுத்தவேண்டு மென்றவர்களுக்கும் சொந்தக் காரணங்கள் பல இருந்தன. இவர்களில் ஒருசிறு குழுவினர் புரட்சிவாதிகளாகவும் இருந்தனர். கி.பி. 1512-ல் கோலட், திருச்சபையினர் மகாநாடொன்றில் சமயத்தில் காணப்படும் குறைகள் அனைத்திற்கும் பிஷப்புகளே காரணம் என்றுகண்டித்தார். அத்துடன் குடியானவர்கள் அல்லது பதவி வேட்டைக்காரர்கள் குடித்துவிட்டுக் கொம்மாளம் போடுவது போன்று

உலகியலில் ஈடுபட்ட திருச்சபையினரையும், அவர்களுக்கென்றே தனியாக இருந்த திருச்சபை நீதிமன்றங்களையும் அவர் கண்டித்தார். பிஷப்புகளில் சிலர் அவருடைய செயின்ட் பால் பள்ளியைத் தாக்கியும், அவரைச் சமய நிந்தனையாளர் என்றும் கூறித் தாக்கினர். ஏராஸ்மஸ்ஸின் 'புதிய ஏற்பாட்டைப்' பயன்படுத்தக்கூடாதென்று கேம்பிரிட்ஜ் கல்லூரிகளில் தடை விதித்தனர். ஆக்ஸ்ஃபோர்டில் 'கிரேக்கர்'களும் 'ட்ரோஜன்'களும் தெருக்களில் சண்டையிட்டுக் கொண்டனர். லங்காஸ்டிரியர் காலத்தில் நாம் கண்டதைப் போன்று லோலார்டிகளும் மறைமுகமாகத் திருச்சபை நடவடிக்கைகளைத் தொடர்ந்து கண்டித்தனர்; லோலார்டிகளில் சிலர் மிகத் தீவிரவாதிகள் அல்லது கற்பனைவாதிகள்; சிலர் மிதவாதிகள். அவர்களுக்கெதிராக, ஹன்டிங்டன்ஷயரில் படைதரித்த கூட்டம் ஒன்று கிறிஸ்துவுக்கெதிரானவர்களை அழிப்பதாகச் சபதம் பூண்டு உலவிவந்தது. அவர்களில் பெண் பிரசாரகர்களும் இருந்தனர்; வேறு சிலர் திருமணத்தை நம்பாதவர்கள். பாதிரிகளாயிருப்பவர்கள் எல்லோருமே நல்லவர்கள் என்று எண்ணியவர்களும் இருந்தனர். அவர்கள் அனைவரும் பொதுவாக விவிலியத்தை ஒப்புக்கொண்டனர். ஆனால், கி.பி. 1452-ல் சிசெஸ்டரைச் சார்ந்த பிஷப் பீகாக் என்பவர் இதை மறுத்து அனைவரும் பகுத்தறிவைத்தான் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று மறுத்தபோது, அவருடைய பிற பிஷப் நண்பர்கள் அதிர்ச்சியடைந்தவர்களாய் சமய நிந்தனையாளரைச் சார்ந்தவர் என்று ஐயம்கொண்டு அவரைத் தள்ளிவைத்தனர். நான்காம் எட்வர்டின் காலத்தில் சமய நிந்தனையாளர்கள் ஒரு சிலர் எரிக்கப்பெற்றனர்; ஏழாம் ஹென்றியின் காலத்தில் பக்கிங்ஹாம்ஷயரில் இவ்வெண்ணிக்கை அதிகமானதுடன், அதிகமானபேர் கட்சிமாறி திரும்பவும் கத்தோலிக்கச் சமயத்தின் ஆதரவாளராயினர். லண்டன் மாநகர் தாய்மார்கள் பெர்மாண்ட்ஸி அல்லது வில்லெஸ்டன் போன்ற புகழ்மிக்க திருக்கோயில்களைக் குறைகூறி ஏளனம் செய்தனர். திருச்சபைக்குப் பத்திலொன்று வரி கொடுப்பதைத் திரும்பத்திரும்ப கொடுக்க மறுத்தனர்; இக்கிளர்ச்சியில் பல மடாலயக் குருமார்களும் சம்பந்தப்பட்டிருந்தனர்.

பொதுவாக நாட்டுமக்கள் அனைவரும் திருச்சபையை வெறுக்கின்றனர் என்பதைச் சுட்டிக்காட்டும் இரு சம்பவங்கள் கி.பி. 1515-ல் நிகழ்ந்தன. ரிச்சர்ட் ஹன் (Richard Hunne) என்பாரைச் சமய நிந்தனையாளர் என்று ஐயுற்று பிஷப்பின் அதிகாரிகள் அவரைச் சிறைச்சாலையில் கொன்றுவிட்டதை லண்டன் ஜூரி ஒருவர் கண்டுபிடித்தார். 'திருச்சபை ஊழியர்கள் ஏபலைப் (Abel) போன்று ஒரு பாபமும் அறியாதவர்களாக இருந்

தாலும்' லண்டன் ஜூரி குற்றம்சாட்டிக் கண்டுபிடித்திருப்பார் என்று பிஷப் அறிவித்தார். காமன்ஸ் சபையினர் ஜூரியை ஆதரித்தனர். அவர்களும் மேற்கூறிய குற்றத்தை நிரூபிக்க வாய்ப்பொன்றை நல்கினர். தாழ்நிலை குருமார்கள் குற்றவாளிக ளாகக் கருதப்பெற்றால் அவர்கள் பதவியிலிருந்து நீக்கப்படுவர் என்ற கி.பி. 1512ஆம் ஆண்டின் தற்காலிகச் சட்டமொன்றைப் புதுப்பிக்க எண்ணினர் காமன்ஸ் சபையினர். அரசரின் பாப மன்னிப்புக் குருவான 'ஸ்டாண்டிஷ்' (Standish) என்பார் அச் சட்டத்தை ஆதரித்தார். ஆனால், திருச்சபை மகாநாடு தேவனின் அபிஷேகத்தைப் பெற்றவர்களை லௌகிகரின் நீதிமன்றங்கள் விசாரிக்கக்கூடாதென்று வாதித்தது. பிரபுக்கள், காமன்ஸ் சபை யினரான சாமானியர், நீதிபதிகள் முதலானோர் கொலைக் குற்றம் புரிந்தவர்களைத் திருச்சபை நீதிமன்றங்கள் பாதுகாக்கக்கூடா தென்றும், திருச்சபை மகாநாடு புரேமுனைர் சட்டத்தை மீறிவிட்ட தென்றும் அறிவுறுத்தினர். உல்ஸி, மேற்படி விஷயத்தை ரோமா புரியில் போப்பாண்டவரிடம் முறையிட்டு அவரின் கருத்தறிய வேண்டுமென்று யோசனை கூறியபோது, 'இங்கிலாந்து அரசர் களுக்குக் கடவுள் ஒருவரே பெரியவர்; அவரல்லாத பிறரை அவர்கள் எப்போதும் பெரியவர்களாக ஒப்புக்கொண்டது இல்லை' என்று மன்னர் எட்டாம் ஹென்றி பதிலிறுத்தார். எனவே, புது யுகத்தில் இங்கிலாந்து திருச்சபை விவகாரத்தில் பெரிய அளவில் முன்னேறிச் சீர்திருத்தக் கருத்துகளைப் போற்றும் இவ் வேளையில், லூதர் இத் தகைய சமய சீர்திருத்தக் கருத்துகளை இரண்டாண்டுகளுக்குப் பின்னர் வெளியிட்டு ஜெர்மனியில் புத்துணர்ச்சி யூட்டினார்.

இங்கிலாந்தில் இவையெல்லாம் நடைபெற்றுவந்தபோதிலும், சமயத் துறையிலும் சமூகத் துறையிலும், அடுத்த பதினெட் டாண்டுகளுக்கு எட்டாம் ஹென்றி மன்னர் தீவிரமானதொன் றையும் செய்ய ஈடுபடவில்லை. அதற்கு மாறாக, அவர் ஐந்தாம் ஹென்றியின் ஆசை அபிலாஷைகளை மனத்திற்கொண்டு ஏழாம் ஹென்றியின் வழியில் ஆட்சி நடாத்தினார். தம் வமிசம் நிலைபெற முடியாதோ என்ற அச்சங் காரணமாக அவர் கொடுமையான நடவடிக்கைகளில் ஈடுபட்டார். தம் தந்தையின் கருத்தை நிறை வேற்றி ஆரகான் இளவரசி காதரைனை மணந்துகொண்டார். அவளுக்குப் பிறந்த ஆண்குழந்தைகள் செத்துப் பிறந்தன; அல்லது பிறந்தவுடன் செத்தன. அவளுக்கு மேரி என்ற ஒரேஒரு மகள் தான் இருந்தாள். கி.பி. 1513-ல் சிறையில் அடைக்கப்பெற் றிருந்த எட்மண்ட் டெ லா போல் (Edmund de la Pole) என்பார் தூக்கிலிடப்பெற்றார். அவருடைய சகோதரர் ஃபிரெஞ்சுப்படை யில் சேர்ந்திருந்ததே டெ லா போலின் மரணத்திற்குக் காரணம்.

கி.பி. 1521-ல் பக்கிங்ஹாம் டியூக்கின்பேரில் பொய்க்குற்றம் சுமத்தப்பெற்றுத் தண்டிக்கப்பெற்ருர். அவர் நான்காம் எட்வர்டின் உறவினர். சாலிஸ்பரி சீமாட்டியும் அச்சுறுத்தப்பட்டாள். அவள் கிளாரன்ஸ் கோமகனின் மகள். கடுமையான நடவடிக்கைகளை எடுப்பதன்மூலமே அரசாங்கம் உயிர்வாழ்வதாயிற்று. வேல்ஸில் அமைதியற்ற நிலை பெருகிக் காணப்பெற்றது. நார்த்தம்பர்லாந்தில் வாழ்ந்த பிரபுக்கள் கொள்ளைக்கூட்டங்களுடன் கூடிக் குலாவிநின்றனர். கி.பி. 1517-ல் நாடெங்கும் 'அந்நியர்கள்-ஒழிக' என்ற கூக்குரல் கிளம்பலாயிற்று. அந்நியர்களுக்கெதிரான வாணிகத்தில் ஈடுபட்டிருந்தவர்களும் பொதுமக்களைச் சார்ந்த பிரசாரகர்களும் இதைத் தூண்டிவிட்டனர். மே தினம் ஒன்றில், தொழிற்பயிற்சி பெற்றுவந்த பல்லாயிரம் ஊழியர்கள் தத்தம் தடிகளுடன் லண்டன் மாநகரின் தெருக்களில் அந்நிய வணிகர்களுக்கெதிராகக் கிளர்ச்சி செய்தனர். அவர்கள் சிறைக்கதவுகளை உடைத்து, அந்நியர் வீடுகளைச் சூறையாடினர். அவர்களை ஹோவர்டின் போர்வீரர்கள் அடக்கினர் ; பலர் சிரச்சேதமும் செய்யப்பெற்றனர்.

கோபம் மூண்ட சில வேளைகளில் இவ் விவகாரங்களில் குறுக்கிட்டாலும், அரசர் இவ்வாண்டுகளில் சிற்றின்பச் சுவை மிகுந்து இன்ப வாழ்வில் களிப்புற்றிருந்தார். 'பெண்களை நாடியும் வேட்டையாடியும்' அரசர் பொழுதுபோக்கினர் என்று பதிவேடு ஒன்று குறிப்பிடுகிறது. சிக்கன வாழ்வில் பொருளைச் சேமித்து வைத்த தம் தந்தையாரின் கொள்கைக்கு மாருக ஹென்றி ஆடம்பர கேளிக்கைகளில் பொருளை வாரி இறைத்தார். மூரியர் உடையுடுத்தும் ராபின்ஹுட் போன்று அலங்கரித்துக்கொண்டும் தம் அரச சபையினருக்கு ஆனந்தமூட்டினர் ; நாட்கள் செல்லச் செல்ல, அவருக்குக் காதரின்மேல் இருந்த காதல் குறைந்து, பாசம் பிரிந்து போய்விட்டது. காமக்கிழத்தியொருத்தியின்மூலம் அவருக்கு மகன் ஒருவன் பிறந்தான். அவரை ரிச்மாண்டின் டியூக்காக்கி அவருக்கு எண்ணற்ற பதவிகளை வாரி வழங்கினர். கி.பி. 1520ஆம் ஆண்டுக்குப் பின்னர் அவருடைய அரசிபோன்று அதிகாரம் வகித்த மேரி பொலீன் என்ற மாதரசி அவரின் அன்புக்குப் பாத்திரமானுள். தம் தகப்பனுரால் நியமிக்கப்பெற்றிருந்த ஃபாக்ஸ், வார்ஹாம் என்ற இரண்டு அமைச்சர்களையும் அவர் பதவியிலிருந்து நீக்கினர். அவர்களுக்குப் பதிலாக, புகழ்மிக்கவர்களும் வேவ்வேருன குணப்பண்புகளைக் கொண்டவர்களுமான இருவர் நியமிக்கப்பெற்றனர். தாமஸ் ஹோவர்ட் (Thomas Howard) என்பார் ஒருவர். அவர் நிதியாளராகவும், சர்ரேயின் எர்ல் பிரபுவாகவும் பதவிகள் பெற்ருர். ஃபிளாடனில் பெற்ற வெற்றிக்காக அவரை அரசர்

நார்ஃபோக்கின் டியூக்காக்கினர். மற்றவர், தாமஸ் உல்ஸி என்பார். அவர் (Thomas Wolsey) கசாப்புக்கடைக்காரர் ஒருவரின் மகன். அவர் ஃபாக்ஸ் என்பவரால் பயிற்றுவிக்கப்பெற்றவர். கி.பி. 1518ஆம் ஆண்டுவாக்கில் அவர் யார்க்கின் ஆர்ச்பிஷப்பாகவும், சான்சலராகவும், கார்டினலாகவும், போப்பாண்டவரின் பிரதிநிதியாகவும் பல பெரும் பொறுப்புகளைப் பெற்ருர்.

ஆனல், உல்ஸி, நாட்டுமக்கள் அனைவரது வெறுப்புக்கு ஆளானுர். டெர்பி போன்ற பெரும் பிரபுக்களையும் அவர் விண்மீன் மன்றத்தில் கொண்டுவந்து தண்டித்தமையால், பிரபுக்களும் அமைச்சர்களும் அவரை வெறுத்தனர். அவருடைய நீதிமன்றத்தின் பெரும் அதிகாரங்களைச் சாதாரண சட்ட வல்லுநர்களும் கண்டித்தனர். சமயச் சீர்திருத்தவாதிகள் அவர்மீது நம்பிக்கை இழந்தனர். லண்டன் மாநகரவாசிகளும், பாராளுமன்றத்தில் செல்வாக்குபெற்ற மத்தியதர வகுப்பினரும்கூட அவரை வெறுத்தனர். எனினும், சீர்திருத்தத்தின் அவசியம் தெரிந்த செயல்வீரர் உல்ஸி. பிஷப்புகளையும் மடாலய குருமார்களையும் அவரவர் திருச்சபைகளைச் சீர்திருத்த வேண்டினர். வயது குறைந்தவர்களைக் குருமார்களாகக்கொள்வதில் கட்டுத்திட்டங்கள் வேண்டுமென்பதையுணர்ந்து, அதற்காகப் போப்பாண்டவரின் அனுமதியையும் உல்ஸி பெற்ருர். இதனல், குற்றமுள்ள திருச்சபை ஊழியர்களின் எண்ணிக்கை குறைந்து சுருங்கலாயிற்று. திருச்சபை மடாலயங்களைச் சென்று பார்வையிடும் அதிகாரத்தை, அவர் போப்பாண்டவரின் ஆணையொன்ருல் பெற்ருர். அவர் சென்று பார்வையிட்டபின் முப்பது மடாலயங்களைக் கலைத்துவிட்டார்; பிறவற்றிடமிருந்து பெரும் பொருள்களை நன்கொடையாகப் பறித்தார். அப் பொருள்களிலிருந்து ஆக்ஸ்ஃபோர்ட் கல்லூரிகளில் ஒன்ருன கிரைஸ்ட் சர்ச் கல்லூரிக்குப் பெருமானியங்கள் வழங்கினர். இன்றும் அது அவரின் நினைவைப் போற்றும் எடுத்துக்காட்டாக நிலைபெற்றுள்ளது. இக் கல்லூரியில் நூற்றுக்கணக்கானவர் திருச்சபைச் சட்டங்களைக் கற்றுப் பேராசிரியர்களாகப் பணியாற்றி, திருச்சபையில் சமய சீர்திருத்தத்தைக் கொணர்ந்து, திருச்சபையை அரசின் தொண்டில் ஈடுபடுத்த இருந்தனர். அவர் தம்முடைய சொந்த ஊரான இப்ஸ்விச் (Ipswich) என்ற இடத்தில் மற்ருெரு நிறுவனத்தை நிறுவி அங்கிருந்தும் எண்ணற்றவரைத் திருச்சபையில் பயிற்றுவித்தார். அரசரின் ஆலோசனை சபையிலும் அதனுடைய கிளைகளிலும், அவரின் நிர்வாகத் திறமையால் அமைதியும் ஒழுங்கும் வலியுறுத்தப்பெற்று நல்லாட்சி நிலவியது. குறிப்பாக, அவை ஏழை எளியவரின் மனக்குறைகளைத் தீர்க்க முயன்றன.

அரச நிலங்களை வேலியிட்டுத் தமதாக்கிக்கொண்டவர்களைச் சட்டம், கமிஷன் ஆகியவற்றை நியமித்து விசாரணை செய்து அதைத் தடுக்க முயன்றார். பல ஆய்வுகளை நடத்தி ஏழைகளின் வழக்குகளைக் கவனிக்க வேண்டுகோள் நீதிமன்றத்தை (Court of Requests) அவர் திட்டவட்டமாக அமைத்தார். வேல்ஸ் ஆலோசனை சபையின் அதிகாரம் எல்லைப்புறப் பிரபுக்களின் பகுதிகளிலும் செல்லுபடியாகும்படி பரப்பினார். வட கவுன்சில் சபையின் (Council of the North) மதிப்பை உயர்த்தி ஸ்காட்டிஷ் எல்லைப்புறங்களை அதன் ஆளுகைக்கு உட்படுத்தினார். அரசரின் மகனை ரிச்மாண்டு அச் சபையின் தலைவரானார். உல்ஸியின் சக்தியும் சாமர்த்தியமும் நுழையாத இடமே இல்லையெனலாம். ஸ்பானியரான வைவஸ் (Vives) என்பாரை ஆக்ஸ்ஃபோர்டிற்கு வரவழைத்து மாணவ தத்துவவாதத்தைக் கற்பித்தார். வடமேற்கு வழியாக ஆசியாக் கண்டத்திற்கு வழி கண்டுபிடிக்க (கடல் வழியாக) முயன்றவர்களுக்குப் பொருளுதவி செய்ய லண்டன் மாநகர வர்த்தகக் குழுக்களைத் தூண்டினார். மேற்கூறிய வகைகளில் உல்ஸி தம் அதிகாரத்தை எல்லாத்துறைகளிலும் ஈடுபடுத்தினார்.

ஆனால், உல்ஸி ஆடம்பரப் பிரியர். அவர் செய்த நற்பணிகளுக்கெதிராக அவருடைய சுயநலம் குறுக்கிட்டது. டாம்பீகம், பெரும் விருந்துகள், பரந்த அரண்மனை ஆகியவற்றில் அவர் பெரும் பொருளை வீணடித்தார். ஹேம்டன் கோர்ட் (Hampton Court), வொயிட் ஹால் (White Hall) ஆகிய இடங்களிலிருந்த கட்டடங்களைப் புதுப்பித்து அரண்மனைகள் போன்று ஆக்கினார். இவ்விடங்களில் அரசர்கள் வாழத் தொடங்கினார்கள். அவருக்குப் பல மக்கள் இருந்தனர். அவர்களில் ஒருவருக்கு அவர் ஆர்ச்டீகன் பதவிபோன்ற திருச்சபை பதவிகளையும் பெரும் பொருளையும் வாரி வழங்கினார். அந்நிய நாட்டு அரசர்களிடமிருந்து அவர் பெரும் உதவிப் பணங்களைப் பெற்றார். போப்பாண்டவர் ஆகவேண்டும் என்ற பேராசையுற்று அதற்குத் தக அவர்தம் கொள்கைகளை மாற்றிக்கொண்டார். போப்பாண்டவரின் பிரதிநிதியாகத் தமக்கிருந்த பதவியைப் பயன்படுத்திப் பிஷப்புகளை அடக்கியும், போப்பாண்டவரின் தூதுவர்களுக்கு எதிராகப் புரேமுனைர் சட்டங்களைச் சுட்டிக்காட்டி அச்சுறுத்தியும், விண்மீன் மன்றத்தில் புதுச் சட்டங்களைக் கொணர்ந்து பலரைத் துன்புறுத்தியதும் ஆகிய இவ்வெல்லா அதிகாரங்களையும் தம் கீழ்க் கொணர்ந்து ஒருமுகப் படுத்தினார் உல்ஸி. இவ்வனைத்தும் முடிவற்று அஞ்சத் தகுந்தவையாம். ஏனெனில், இவ்வனைத்தும் அரசருக்குப் பெருந் துன்பங்களைக் கொடுத்தன. மேலும், அவரும் அரசரும் இணைந்து ஐரோப்பாவில் செயலாற்றிய கொள்கைகளினால் அவை ஆங்கில

மக்களின் உணர்ச்சியிலும் அரசியல் திட்டமரபிலும் பெரும் பிளவை உண்டாக்கின.

ஐரோப்பாவின் உள்ளும் புறமும் போர்கள் மூண்டன. பாபமான காம்பராய் உடன்படிக்கையினர் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டனர். கி.பி. 1511-ல் ஸ்பெயின் அரசரும் போப்பாண்டவரும் புனிதக் கூட்டு என்ற ஒப்பந்தத்தைச் செய்து கொண்டனர். பின்னர் இவர்களுடன் பேரரசர் மாக்ஸிமிலியனும் சேர்ந்துகொண்டார். இவர்கள் அனைவரும் ஃபிரான்சுக்கெதிராகக் கிளம்பினர். பலவித சுயநலக் காரணங்களால் எட்டாம் ஹென்றியும் இப் புனிதக் கூட்டில் சேர்ந்துகொண்டார். அவர் ஃபிரெஞ்சியரின் வெற்றியைக்கண்டு பொறாமை மிக்கவரானார். மேலும், தம்முடைய கடற்படையின் திறனைக் காட்டவேண்டுமெனவும் கங்கணம் பூண்டார் அவர். அவரின் மாமனாரான ஸ்பெயின் அரசரும் அவரைத் தூண்டினார். போப்பாண்டவருடன் அவருக்கு நெருங்கிய தொடர்பிருந்ததுடன் தம்மையும் ஒரு தூய கிறிஸ்துவராக எண்ணியவர் ஹென்றி. ஃபிரெஞ்சியருடன் போருக்குச் செல்வதை ஆலோசனை சபையிலும் பலர் எதிர்த்தனர். ஏனெனில், ஃபிரெஞ்சியருடன் போர் மூண்டால் அது ஸ்காட்லாந்திலும் இங்கிலாந்துக்கெதிரான போரைத் தூண்டும். எனவே, அவர்கள் ஃபிரான்சுடன் போருக்குச் செல்வதை எதிர்த்தனர். ஆனால், அரசரோ தீர்மான மார்கப் போருக்குச் செல்ல உறுதி பூண்டார். உல்ஸியைத் தமக்கு உறுதுணையாகப் பயன்படுத்திக்கொண்டு அவரைத் தம் கருவியாக்கிக் கொள்ளலாம் என்பதை அவர் கண்டுபிடித்தார். போரின் முதலாண்டில் தோல்வி ஏற்பட்டாலும், அவர் முயன்று நின்று கி.பி. 1513-ல் முழுவெற்றி பெற்றார். எட்டாம் ஹென்றி அரசர், தாமே நேரில் சென்று ஃபிரெஞ்சியரை ஸ்பர்ஸ் சண்டையில் தோற்கடித்தார். அர்டோயிஸில் உள்ள கினிகேட் எனுமிடத்தில் இப் போர் நடைபெற்று ஹென்றி வெற்றிபெற்றார். கி.பி. 1513 செப்டம்பரில் எழுபது ஆண்டுகள் நிரம்பிய சர்ரே பிரபு ஸ்காட்லாந்துடன் போரிடச் சென்றார். நார்த்தம்பர்லாந்தின் எல்லையில் ஃபிளாடன் என்ற இடத்தில் ஸ்காட்டியர் இங்கிலாந்துக்கெதிராக அணிவகுத்தனர். சர்ரே பிரபுவின் திறமையால் ஸ்காட்டியர் பின்வாங்கி ஓடினர். அந்திவேளையில் நடைபெற்ற நேருக்கு நேரான சண்டையில் ஸ்காட்லாந்து மன்னர் நான்காம் ஜேம்ஸ் மன்னரை சர்ரே பிரபு கொன்றார். ஸ்காட்டியர் தோற்று ஓடினர். நான்காம் ஜேம்ஸ் மன்னருடன் பதினாயிரம் ஸ்காட்டியரும் சர்ரே பிரபுவால் கொல்லப்பட்டனர். பேரும் புகழையும் போதுமான அளவுக்கு நிலைநாட்டி, ஃபிரான்சைப் போப்பாண்டவருடன் உடன்படிக்கை செய்துகொள்ளுமாறு வற்புறுத்தியவுடன்,

ஹென்றி தம்முடைய நண்பர்களின் சுயநலத்தைக் கண்டு அவர்களுடைய தொடர்பை அறுத்துக்கொண்டார். ஃபிரான்ஸுடன் கி.பி. 1514-ல் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார் எட்டாம் ஹென்றி. அதன்படி ஃபிரான்ஸ் மன்னர் பன்னிரண்டாம் லூயியின் மகள் மேரியை, எட்டாம் ஹென்றி மணந்துகொண்டார். டூர்னே என்ற இடத்தையும் ஆங்கிலேயர் ஃபிரான்சியரிடமிருந்து பெற்றனர்.

ஹென்றி, ஃபிரான்சில் பெற்ற வெற்றி நீடித்திருக்கவில்லை. அடுத்தவாண்டில் பன்னிரண்டாம் லூயி மன்னர் காலமானர். அவருடைய விதவை மனைவி, ஹென்றியின் நண்பரும் சஃப்போக் டியூக்குமான பிராண்டன் (Brandon) என்பாரைக் காதலித்து மணந்துகொண்டார். ஃபிரான்சின் புது அரசரான முதலாம் ஃபிரான்சிஸ் இத்தாலியில் ஃபிரான்சின் ஆதிக்கத்தைத் திரும்பவும் நிலைநாட்ட உறுதி பூண்டார். ஃபிரான்சின் அரசவாரிசான ஆல்பனி (Albany) என்பாரைக் ஸ்காட்லாந்திற்கு அனுப்பி இங்கிலாந்திற்கு எதிராக அங்குக் கலகத்தைத் தூண்டிவிட ஏற்பாடு செய்தார். அதன் விளைவாக, ஸ்காட்லாந்தின் அரசியும் எட்டாம் ஹென்றியின் மகளுமான மார்கரெட் ஸ்காட்லாந்திலிருந்து விரட்டப்பெற்ருள். ஃபிரான்சிஸ் இத்தாலியில் மிலானைத் தோற்கடித்துக்கைப்பற்றினர். மாரிக்னுேனே என்றவிடத்தில் நடந்த போரில் ஸ்விட்ஸர்லாந்தும் தோற்கடிக்கப்பெற்றது. போப்பாண்டவர் பத்தாம் லியோ சமாதானம் செய்துகொள்ள வற்புறுத்தப்பெற்ருர். கி.பி. 1516-ல் ஸ்பெயின் அரசர் ஃபெர்டினண்ட் ஆரகானும் காலமானர். அவருக்குப் பின்னர் ஸ்பெயின் வாரிசுரிமையை அவருடைய பேரரான சார்லஸ் பெற்று அரசரானர். அவர் ஃபிரான்ஸுடன் உடனே ஒப்பந்தம் செய்துகொண்டார். ஏனெனில், அவருக்கு அவர்தம் புது அரியணை உறுதியாகக் கிடைப்பதான நிலை ஏற்பட்டிருக்கவில்லை. ஐரோப்பாவில் ஏற்பட்ட இச் சம்பவங்களைக் குறித்து இங்கிலாந்தில் எரிச்சல் ஏற்பட்டது. எட்டாம் ஹென்றி அதட்டலிலும் எதிர்ப்பிலும் தலைப்படலானர். ஏனெனில், தாம் செய்துகொண்ட ஒப்பந்தம் தவிடுபொடியாகிவிட்டதை அவர் உணர்ந்தார் ; எனவே வெகுண்டார். ஹென்றி தம்மையே 'ஸ்காட்லாந்தின் காவலர்' என்று கூறி உரிமைகொண்டாடினர். பேரரசர் மாக்ஸிமிலியனைத் தம்பக்கல் கொள்ளவேண்டி ஹென்றி அவருக்குக் கணிசமான அளவு பொருளுதவியையும் கொடுத்தார். எனினும், அவரால் பயனென்றும் ஏற்படவில்லை. இங்ஙனம் பயனற்ற வழிகளில் பொருள் விரயம் ஏற்படுவதற்கு ஆலோசனை சபையில் பலத்த எதிர்ப்பேற்பட்டது. அரசரும் கார்டினலும் அவர்கள் சொற்படி நடக்கவேண்டியவராயினர். இது ஃபிரான்ஸின்

மன்னரும் ஹாப்ஸ்பர்க்குகளும் போரிட்டுக்கொண்டவரை நீடித்தது. எனினும் ஹென்றியும் கார்டினலும் அரைகுறை வெற்றியொன்றைப் பெற்றனர். அதற்கு 'எங்கும் நிறைந்த சமாதானம்' (Universal Peace) என்று பெயர். இது கி.பி. 1518-ல் ஏற்பட்டது. அதன் விளைவாக, ஃபிரான்ஸ் மன்னர் ஃபிரான்சிஸ், ஆங்கிலேயர் டூர்னேயைத் தமக்குக் கொடுத்துவிட்டதற்கு இழப்பீடாகப் (Indemnity) பெரும் பொருளைக் கொடுத்தார். ஹென்றியின் மகள் மேரியைத் தன் குழந்தைப் பையனுக்கு மணம் முடிக்கவும் அவர் ஒப்புக்கொண்டார். ஆல்பனிக்குக் கொடுக்கப்பெற்ற பாது காப்பையும் திரும்பிப் பெற்றுக்கொண்டார். அத்துடன் உல்ஸிக்கும் பிற அமைச்சர்களுக்கும் பெரும் பொருளைக் கையூட்டாகக் கொடுத்தார். மேலும், உல்ஸியைப் போப்பாண்டவரின் பிரதி நிதியாக ஃபிரான்ஸுக்கு நியமித்துக்கொண்டார். அவருக்குப் போப்பாண்டவரின் ஆதரவு தேவைப்பட்டதால் உல்ஸிக்கு அப் பதவியைக் கொடுப்பதன்மூலம், தம்முடைய குறிக்கோள்களை அடைந்துவிடலாம் என்று ஃபிரான்ஸிஸ் நம்பினார்.

ஃபிரான்ஸின்மீது பொறுமை கொண்டதால் தமக்கு பல தோல்விகள் ஏற்பட்டதுடன் பெரும் பொருட் செலவும் ஆனதை உணர்ந்தார் ஹென்றி. மேலும், அவருடைய நண்பர்களாக வந்த ஐரோப்பிய அரசர்கள் நன்றிகெட்டவர்களாக இருந்தனர். எனவே, வேண்டுமென்றே அவர் ஃபிரான்சுடன் இணங்கிச் செல்லும் கொள்கையை மேற்கொண்டார். உல்ஸிக்கு, போப்பாண்டவராக வேண்டும் என்ற விருப்பம் உண்மையில் இருந்தது. எனினும், அவரே இங்கிலாந்தின் கொள்கைகளுக்குக் காரணமாயிருந்தார் எனக் கொள்வது சரியன்று ; ஏனெனில், அவரே எப்போதும் நடு நிலைமை வகிப்பது முடியாத செயல் என்பதை வாதித்து வந்திருக் கிறார். உடன்படிக்கைகள்மூலம், இங்கிலாந்திற்கு ஏற்பட இருந்த அசௌகரியங்களை ஈடுசெய்ய முடியும் என்று அவர் நம்பினார். உல்ஸியும் அரசரும், போப்பாண்டவருடன் இணைந்து வேலை செய்யவேண்டும் என்ற கொள்கையினால் ஆட்கொள்ளப் பெற்றனர். ஹென்றியும் இங்கிலாந்து ஃபிரான்சில் இழந்த மாகாணங்களை மீண்டும் கைப்பற்றவேண்டும் என்று பன்முறை பேசிவந்தார். உண்மையில் அவருடைய எண்ணமெல்லாம் ஃபிரான்சினிடமிருந்து ஒரு சில கோட்டைகளைக் குறைந்த விலைக்கு வாங்கி அதிக விலைக்கு விற்கும் கொள்கையைத்தான் அவர் கடைப் பிடித்தார். அவர்களுடைய நடவடிக்கைகள் உணர்ச்சிவயப்பட்டு எழுந்தமையால் சக்தி சமநிலைக் கொள்கையை (Balance of Power) 'இங்கிலாந்து கடைப்பிடிக்காவண்ணம் திட்டமிட்டனர். ஐரோப்பாவில் நிலவிய போரைப் பயன்படுத்திக்கொண்டு

தங்களுடைய செல்வாக்கையும் இலாபத்தையும் அடைய அவர்கள் முன்வந்தனர். அவர்களின் ஆசையெல்லாம் இதுதான். பலமுள்ள சக்திகளை ஆதரிப்பது அல்லது அச் சக்தியைத் தொல்லைக்குட் படுத்தி, அதன்மூலம் இங்கிலாந்து லாபம்பெற வேண்டுவது.

உல்ஸியின் வீழ்ச்சிக்குக் காரணமாக இரு பெரும் நிகழ்ச்சிகள் நடக்கத் தொடங்கின. கி.பி. 1517ஆம் ஆண்டின் இறுதியில் போப்பாண்டவரை எதிர்க்க லூதர் கிளம்பினார். நான்காண்டு காலத்திற்குள் அவர் ஜெர்மனியின் அரைப்பாகத்தைக் கைப் பற்றினார். கி.பி. 1519-ல் மாக்ஸிமிலியன் காலமானார். ஜெர்மானிய தேசிய உணர்ச்சி வெற்றிபெற்று வீறுகொண் டெழுந்தது. ஸ்பெயின் ஆர்ச்டியூக்கான சார்லஸ், பேரரசுப் பகுதி களையும் ஹாப்ஸ்பர்க் பகுதிகளையும், முன்னரே நெதர்லாந்து, இத்தாலி, ஸ்பெயின் ஆகிய நாடுகளிடமிருந்து பெற்ற பகுதி களுடன் இணைத்துக்கொண்டார். ஃபிரான்ஸைச் சுற்றிலும் சார்லஸின் பேரரசுப் பகுதிகளைக் கண்ட ஃபிரான்ஸ், சார்லஸின் மீது போர் தொடுக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், போப்பாண்டவர் சார்லஸைத்தான் ஆதரிப்பார் என்பது தெரிய வந்தது. ஏனெனில், போப்பாண்டவரின் வழிவழியாக உரிமையாகி வந்த ஃபிளாரன்ஸைப் பாதுகாத்து, சமய நிந்தனை செய்யும் லூதரை அடக்கவும், அவருக்குப் பேரரசின் ஆதரவு வேண்டும் என்பதை உணர்ந்தனர். இங்கிலாந்தும் அதே முடிவுக்கு வந்தது. பேரரசுப் பதவிக்கும்,அரை மனத்துடன் ஹென்றி போட்டியிட்டார். அதற்குக் காரணம் அப் போட்டியில் ஃபிரான்ஸ் வெற்றிபெறக் கூடாது என்பதேயாம். எனவே, நடுநிலைமைக் கொள்கையைக் கடைப்பிடிக்க இங்கிலாந்து மறுக்குமானால், பேரரசருடன் உடன் படிக்கை செய்துகொள்வதையே மக்கள் பெரிதும் விரும்பினர். ஏனெனில், போர்வீரர் வகுப்பினர் அனைவரும் ஃபிரான்ஸுடன் இங்கிலாந்து ஒப்பந்தம் செய்துகொள்வதை வெறுத்தனர். வணிகர்கள் இங்கிலாந்து நெதர்லாந்துடன் சமாதான ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டுமென விரும்பினர். எட்டாம் ஹென்றியின் மனைவியான காதரினும் தம் சகோதரனின் மகனுடன் (சார்லஸுடன்) சேர்வதையே விரும்பினாள். இத் தருணத்தில் ஹென்றி மன்னரும் லூதருக்கெதிராகப் புகழ்மிக்க நூலொன்றை எழுதி வெளி யிட்டார். அதன் விளைவாக அவருக்குச் 'சமயக் காவலர்' (Defender of the Faith) என்ற பட்டப்பெயர் சூட்டப்பெற்றது. ஹென்றி ஃபிரான்ஸுடன் 'பொன்னுடை நிலம்' என்ற இடத்தில் பேச்சு வார்த்தை நடத்தினார். இப் பேச்சுவார்த்தையினால் ஹென்றிக்கும் ஃபிரான்ஸுக்கும் அழியா நட்பு நீடிக்கும் என்று எதிர்பார்த்தனர். இப் பேச்சுவார்த்தைகள் கி.பி. 1520ஆம் ஆண்டில் கிஸ்நெஸ்

(Guisnes) என்ற இடத்திற்கருகில் மிக மிக ஆடம்பரமான முறையில் நடைபெற்றன. ஆனால், அப்படி எதிர்பார்த்தோர் ஏமாந்தனர். ஹென்றி ஃபிரான்ஸுடன் 'பொன்னுடை நில'ப் பேச்சு வார்த்தை நடத்தியதற்கு முன்னும் பேச்சுவார்த்தைக்குப் பின்னும் சார்லஸை பேட்டி கண்டார். கி.பி. 1521-ல் ஹென்றியும் பேரரசரும் உடன்படிக்கையொன்றைச் செய்துகொண்டு, சார்லஸ் மேரியை மணக்க உடன்பட்டதுடன், ஃபிரான்ஸின்மீது படையெடுக்க வேண்டுமென்றும், சமய நிந்தனையாளரை ஒறுக்க வேண்டுமென்றும் முடிவுக்கு வந்தனர்.

கி.பி. 1522–5 வரை போர் தொடர்ந்து நடைபெற்றது. போப்பாண்டவர்கள் இருவர் காலமாகி இருந்தும், உல்ஸியின் பேராசை (போப்பாண்டவராக வேண்டுமென்ற ஆசை) பூர்த்தியாகவில்லை. பேரரசர் சார்லஸ் அவரைப் போப்பாண்டவராக்க உதவுவதாகக் கொடுத்த வாக்குறுதிகள் நிறைவேற்றப்படவில்லை. போரில் வெற்றி எதுவும் ஏற்படாது எனக் கொண்டமையால் குறுக்கிடவும் முடியவில்லை. இங்கிலாந்தின் போர்கள் இக் காலத்தில் தளர்ந்தே காணப்பெற்றன. அதே இங்கிலாந்தின் வெளிநாட்டுக் கொள்கையும் கபடமுள்ளதாக நிலவியது. நீண்ட காலத்திற்கு முன் ஜான் கான்ட் படையெடுத்ததைப் போன்று இங்கிலாந்துப் படைகள் ஃபிரான்ஸின்மீது படையெடுத்துச் சூறையாடின. எனினும் பயன் ஒன்றும் ஏற்படவில்லை. அரசர் ஸோம் ஆற்றுக்கு வடபால் இருந்த ஃபிரெஞ்சுப் பகுதிகளை வெல்லலாம் என்று நம்பியிருந்தார். ஸ்காட்டியருடைய தேசிய உணர்ச்சியைக் கண்ட மார்கரெட் டியூடரே அயர்ந்துவிட்டாள். ஆங்கிலப் படைகளோவெனில் ஸ்காட்டிய எல்லையில் பெரும் அழிவுகளைச் செய்தமையால் ஸ்காட்டியர் இங்கிலாந்தை மனமார வெறுத்தனர். அவர்கள் இங்கிலாந்துக்கு எதிராகவும் மாறினர். கி.பி. 1524-ல் இங்கிலாந்து மீண்டும் அதன் வெளிநாட்டுக் கொள்கையில் பிடிப்பேதுமின்றி ஊசலாடியது. பேரரசரையும் இத் தருணத்தில் இங்கிலாந்து கைவிடவே, பேரரசர் தனித்துநின்று போரிட வேண்டியவரானார். கி.பி. 1525ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் சார்லஸ் ஃபிரான்ஸ் மன்னர் முதலாம் ஃபிரான்ஸிஸ் என்பாரைப் பேவியா என்னுமிடத்தில் முறியடித்தார். ஃபிரான்ஸைச் சில மாதங்களில் பேரரசருடன் பங்குபோட்டுக்கொள்ள வாய்ப்புக் கிட்டிவிட்டதென்று ஹென்றியும் உல்ஸியும் நம்பினர். ஆனால், பேரரசர் சார்லஸ் ஃபிரான்ஸினிடமிருந்த தாம் விரும்பிய தனைத்தையும் பெற்றுக்கொண்டதுடன் இங்கிலாந்தினிடமிருந்து ஒன்றையும் எதிர்பார்க்கவில்லை. அத்துடன் தாம் இங்கிலாந்து இளவரசி மேரியை மணக்கக் கொடுத்திருந்த வாக்குறுதியை மீறி,

சார்லஸ், போர்த்துகீசிய இளவரசியை மணந்துகொண்டார். கி.பி. 1525–9 வரை நடைபெற்ற இறுதிக்கட்டத்தில் உல்ஸியின் கொள்கைகள் அனைத்தும் தோல்வியுற்றுக் குலைந்தன. இச் சீர் குலைவுகள் உல்ஸியின் இரு முடிவுகளைத் தொடர்ந்துவர இருந்தன. முதலாவது, அவர் ஃபிரான்ஸுடன் சமாதானம் செய்துகொண்டது; இரண்டாவது மிக வல்லவரும் வெற்றிவீரருமான பேரரசர் சார்லஸுக்கு எதிராக ஃபிரான்ஸுடன் உடன்படிக்கை செய்து கொண்டது. இவ்விரண்டு விளைவுகளுக்கும் இரு முக்கிய காரணங்கள் இருந்தன. முதலாவது போர் விரும்பாத இங்கிலாந்து மக்களின் எதிர்ப்பு, இரண்டாவது தம் மனைவியான காதரினை ஹென்றி விவாகரத்து செய்ய முடிவுசெய்தது.

இங்கிலாந்தின் போர்க் கொள்கையினால் அரசாங்கம் மிகக் கொடுங்கோன்மையான முறையில் பணத்தைப் பெறவேண்டியதாயிற்று. அரசரின் மன்றம், சராசரியாக அமைதி நிலவும் ஆண்டுகளில் 65,000 பவுன்களைச் செலவு செய்துவந்தது. ஆனால், கி.பி. 1517-ல் இருந்து இஃது ஏறத்தாழ ஏழு லட்சம் பவுன்களாக உயர்ந்தது. எனவே, இவ்விரு தொகைக்கும் நடுவில் ஏற்பட்ட இடைவெளியை ஈடுகட்ட உல்ஸி புதிய வரியொன்றைக் கண்டுபிடித்தார். அதன் விளைவாக, நிலத்தின்மீதும் பிற பொருள்களின்மீதும் இடைக்காலத்தில் வசூலிக்கப்பெற்ற பத்திலொரு பங்கு, பதினைந்தில் ஒரு பங்கு ஆகிய வரிகளை உயர்த்திப் பெரும் பொருள் பறிக்கத் திட்டமிட்டார். பாராளுமன்றத்தின் முணுமுணுப்பும், கி.பி. 1515-ல் அது திருச்சபைக்கு எதிராகச் சென்று கண்டனம் தெரிவித்தமையாலும் உல்ஸி பிற வரிகளைப் போட அஞ்சினார். வரி விதிப்புக்கு மாறாக வேறுவகைகளில் மக்களுக்குப் பிடித்தமில்லாத சிக்கன முறைகளைக் கையாண்டார் உல்ஸி. இவ்வகைச் சிக்கனத்தால் இங்கிலாந்து பல பெரும் நஷ்டங்களைப் பெறவேண்டியதாயிற்று. எடுத்துக்காட்டாக, அயர்லாந்தில் ஆன செலவை அவர் குறைத்ததைக் குறிப்பிடலாம். கி.பி. 1522-ல் மீண்டும் போர் தொடங்கியபோது, தனியான கமிஷனர்கள் நியமிக்கப்பெற்று அவர்கள் மீண்டுமொரு புதிய மதிப்பீட்டைப் போட்டனர். அதன் அடிப்படையில் கட்டாயக் கடன் வசூலிக்கப்பட்டது. இதன்மூலம் 1,50,000 பவுன்கள் கிடைத்தன. கி.பி. 1523-ல் உல்ஸி தாமே நேரில் சென்று காமன்ஸ் சபையினரிடம் இருந்து 8,00,000 பவுன்களை மானியம் கேட்டார். காமன்ஸ் சபை உறுப்பினர்கள் அவரால் அச்சுறுத்தப்பெற்றனர். வேண்டா வெறுப்புற்றிருந்த நகரப் பிரதிநிதிகளுக்கு மாறாக அரசருடைய ஊழியர்களுக்கு வாக்குரிமை கொடுக்கப்போவதாகவும் அவர் அச்சுறுத்தினர். நான்கு மாத விவாதங்களுக்குப் பிறகு, உல்ஸி

கேட்டதொகையில் முக்கால்பங்கு கொடுக்கக் காமன்ஸ் சபையினர் ஒருப்பட்டனர். இதைப்பற்றித் தெருக்களிலும் மதுக் கடைகளிலும் மக்கள் பேசினர்; முணுமுணுத்தனர். இவ் வரியால் கூலிக்கு உழைத்தவர்களும் பணம்கொடுக்க வேண்டியவராயினர். போப்பாண்டவரின் பிரதிநிதியாக இருந்தமையால் திருச்சபையினர் தம் கோயில் வருமானத்தில் பாதியளவை மானியமாகக் கொடுக்க வேண்டுமென்றும் அவர் வலியுறுத்தினர்.

கி.பி. 1525-ல் எல்லா மானியத் தொகைகளும் வசூல் ஆவதற்கு முன்னும், கட்டாயக் கடன்களைத் திருப்பித் தருவதற்கு முன்னும், பேவியாவில் சார்லஸ் வெற்றிபெற்ற செய்தி அவரைத் தம் கடைசி முயற்சிக்குத் தூண்டியது. 'இணக்கமான கடன்" (amicable loan) என்ற பெயரிலும், அரசர் தாமே நேரிடையாகப் படைகளை ஃபிரான்ஸிற்கு நடத்திச்செல்ல இருக்கிறார் என்று கூறியும், லௌகிகர்களின் வருவாயில் ஆறில் ஒரு பங்கையும், திருச்சபையினரிடமிருந்து மூன்றிலொருபங்கு செல்வத்தையும் கொடுக்க வேண்டி கார்டினல் உல்ஸி பணம் கேட்டார். பேவியாவில் பெற்ற தோல்விக் கெதிராக தீமூட்டி ஆர்பாட்டம் செய்யவேண்டிய கட்டளைகளை மக்கள் கடுகடுப்புடன் நோக்கினர். திருச்சபையினர் மகாநாடு கூட்டி விவாதித்த பின்னரே அதைப்பற்றிச் சிந்திக்க முடியுமென்றும், அதற்கு முன்னர் வரிகொடுக்க முடியாதெனவும் மறுத்துவிட்டனர். கென்டில் அரசரின் ஆணையால் உருவாக்கப் பெற்ற கமிஷனர்கள் தாக்கப்பெற்றனர். தம் அண்டை அயலாரின்மீது சக்தியைப் பயன்படுத்திப் பொருள்பெற பிரபுக்கள் மறுத்துவிட்டனர். தொழில்வளம் மிகுந்த இங்கிலாந்து பகுதிகளில் தொழிலாளர் வேலையிலிருந்து நீக்கப்பெற்றனர். அரசருக் கெதிராக ஆலயமணிகள் முழங்கப்பட்டன; அங்காடிகள் மூடப் பெற்றன. நார்ஃபோக், சஃப்போக் பிரபுக்களின் சாமர்த்தியத் தாலும், லேவன்ஹாமில் பெரிய கம்பள வியாபாரியாக இருந்த ஸ்பிரிங் என்பாரும் முயற்சி செய்தமையால் நாட்டில் ஏற்பட இருந்த கலகம் தவிர்க்கப்பெற்றது. ஃபிரஞ்சுப் போரில் ஈடுபட்டதால் பயன் ஒன்றும் ஏற்படவில்லை என்பதையும், கார்டினல் உல்ஸி பெரும் பொருளை ரோமாபுரிக்கு அனுப்புகிறார் என்பதையும் சுட்டிக்காட்டும் சுவரொட்டிகள் ஒட்டப்பெற்றன. போதாக் குறைக்கு லண்டன் ஆல்டர்மன்கள் உல்ஸியின் முன்னிலையிலேயே அவர் கேட்கும் கடன் தொகைகள் பாராளுமன்றச் சட்டத்திற்கு எதிரானவை என்று முழங்கினர். எனவே, பொதுமக்கள் கருத்துக் கிசைய அரசாங்கம் பின்வாங்க நேரிட்டது; ஃபிரான்ஸுடன் சமாதானம் செய்துகொள்ளவும் முனைந்தது. இதன் விளைவாகப்

அரசரும் கார்டினலும் பெரும் பொருளை ஃபிரான்ஸினிடமிருந்து ஊதியமாகப் பெற்றனர்.

ஓராண்டுக்குப் பின்னர் மீண்டும் முதலாம் ஃபிரான்சிஸ் என்ற ஃபிரெஞ்சு அரசரைத் தூண்டிவிட்டு, பேவியா போருக்குப் பின்னர் பேரரசருடன் செய்துகொண்ட உடன்படிக்கையின் ஏழு முடிவுகளையும் உடைக்க அவர்கள் தூண்டினர். அத்துடன் பேரரசருக்கெதிராக இத்தாலியையும் போருக்கு எழத் தூண்டி விட்டனர். கி.பி. 1527 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் உல்ஸி, ஃபிரான்ஸுடன் திருமண உடன்படிக்கை யொன்றையும் மேற்கொண்டார். மே மாதத்தில் ஸ்பானியரும் ஜெர்மானியரும் ரோமாபுரியைச் சூறையாடியபோது உல்ஸி ஃபிரெஞ்சியரையும் இத்தாலியரையும் மேலும் ஆதரிக்கத் தீர்மானித்தார். சிலகாலத்திற்கு இத்தாலியின் சமன்நிலை ஊசலாடிக்கொண்டிருந்தது. ஆனால், கி.பி. 1529-ல் அவருடைய நண்பர்கள் அனைவரும் பெருந் தோல்வியுற்றனர். ஃபிரான்ஸும் போப்பாண்டவரும் ஐந்தாம் சார்லஸுடன் காம்ப்ராய், பார்ஸிலோனா என்ற உடன்படிக்கைகளைச் செய்துகொண்டனர். இதனால், ஃபிளாரன்ஸில் மெடிஸி வமிசத்தினர் காப்பாற்றப்பட்டனர். ஆனால், இத்தாலியும், போப்பாண்டவரும் ஸ்பெயினின் கட்டுப்பாட்டிற்கு உட்படவேண்டியவராயினர். இங்ஙனம் பதினெட்டாண்டுகள் உற்சாகத்துடனும் தீவிரத்துடனும் உல்ஸி பின்பற்றிய வெளிநாட்டுக் கொள்கையால் இங்கிலாந்துக்குப் பயன் சிறிதும் இல்லாது போயின.

பல்லாண்டுகளாக இக் கொள்கைகளை மக்கள் விரும்பாது எதிர்ப்புத் தெரிவித்துவந்தனர். இத் தருணத்தில் தாமஸ் கிராம்வெல் என்பார் பாராளுமன்றத்தின் புதிய உறுப்பினரானார். ஃபிரான்ஸில் நிலையாகக் கைக்கொள்ளமுடியாத நாய்ப்பொந்துகளை வெல்வதற்காக, நாட்டின் எல்லையில் ஸ்காட்லாந்து பகை நாடாக இருப்பதுநேர்மையாகுமா? என்று வினாவெழுப்பினார் கிராம்வெல். பெரும் அளவில் போர்ச் செலவுகள் ஏற்பட்டமையால் வரிகொடுப்போர் முணுமுணுத்தனர். ஏழாம் ஹென்றி காலத்தில் இருந்ததைவிட ஒரு அடி நிலம்கூட அதிகம்பெற முடியவில்லை எட்டாம் ஹென்றியால் என்று கண்ட மக்கள், முணுமுணுத்து வரிகொடுக்க மறுத்தனர். இங்கிலாந்தை 'விடுதலையாக்காது பிணிக்கும்' அரசரின் கொள்கைகளுக்காக அவர்கள் ஏன் கட்டாய வரிகளைக் கொடுக்கவேண்டும் என்றனர்.

பேரரசுடன் போர் செய்ய நெருக்கடியான நிலை ஏற்பட்டுவிட்டதால், லண்டன் மாநகரின் சிறந்த வாணிபங்கள் சிதைந்தன.

ஆன்ட்வெர்ப்பிலிருந்து வரவேண்டிய பொருள்கள் அடைபட்டுப் போயின. மக்கள் அரசரின் கொள்கைகளை மேலும் கண்டிக்கலாயினர். உல்ஸி யொருவரே உடன்படிக்கைக்குக் காரணம் என்பதை ஃபிரெஞ்சு தூதர் ஒப்புக்கொண்டார்; ஜெர்மனியுடன் சச்சரவிட்டுக்கொள்வதைப் பிராட்டஸ்டென்டுகள் வெறுத்தனர். ஆலோசனை சபையில், உல்ஸிக்கு எதிராக நார்ஃபோக் எதிர்ப்பைத் தெரிவித்து, எதிர்ப்பாளர்களுக்குத் தலைமை தாங்கினர். நாட்டைப் பிணித்த அச்சமும் கோபமும், மக்களின் வேலையில்லாத் திண்டாட்டத்தின்மூலமும் கலகங்களின்மூலமும் தெளிவாயின. போரில் வெற்றியேற்பட்டால்மட்டும் கார்டினல் உல்ஸி காப்பாற்றப் படலாம்; ஒருவேளை அதனுலும் முடியாது போயினும் போகலாம். ஏனெனில், அவர் பொறியில் அகப்பட்டநிலையில் சிக்கிக்கொண்டார். போப்பாண்டவரிடமிருந்து அதிகாரங்களைத் தாமே பெற்றுக் கொள்ள வேண்டுமெனப் பெரிதும் விரும்பினர் உல்ஸி. போப்பாண்டவர் ஸ்பானியரின் கைதிபோன்று இருந்தமையால் அவரின் அதிகாரங்களைத் தம்மீது மாற்றிவிடும்படியும் மூர்க்கமாய் முயன்று பார்த்தார். உல்ஸி அப்படி முயன்றமைக்குக் காரணம் ஒன்றிருந்தது. எட்டாம் ஹென்றி இறுதியாக ஸ்பானிய இளவரசியும் தம் மனைவியுமான காதரினை விவாகரத்து செய்து விடுவதாக கி.பி. 1526-ல் உறுதிபூண்டார். இவ் விவகாரத்தை அனுமதிப்பவர் போப்பாண்டவர்தான். போப்பாண்டவரின் அதிகாரங்களைப் பெற்றுக்கொண்டால், விவாகரத்தை எட்டாம் ஹென்றி கேட்டபடி தாமே அளித்துவிட்டுத் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள எண்ணினர் உல்ஸி. அத்துடன் அரசருக்கு ஃபிரெஞ்சு இளவரசியையும், அவர் மகளை ஃபிரெஞ்சு அரசருக்கும் மணம் முடித்து சக்தி சமன்நிலையை ஈடு செய்யலாம் என்றும் உல்ஸி மனப்பால் குடித்தார். ஆனல், அரசர் ஆன் பொலீனை மணக்க உறுதிபூண்டிருப்பதாக விரைவில் தெரியவந்தது.

போர்மூண்ட காலங்களில் எல்லாம் உயிருடனிருக்கும் யார்க்கிய வமிச வழித்தோன்றல்களைச் சிறைசெய்யவேண்டும் என்ற பேச்சுகள் எப்போதும் அடிபட்டுவந்தன. அரச வாரிசுரிமைக்கு ஏற்பட்ட அச்சமும், அரசர் ஆன் பொலீனை மணந்து கொண்டால் அது ஏற்றுக்கொள்ளப்படுமா என்ற ஐயமும், மேரியைத் தவிர அவரின் பிற குழந்தைகள் இறந்துபட்டதால் இயற்கையாகவே மக்களின் மனத்தை வாட்டின. இதை உணர்ந்த ஹென்றியும் இத் திருமணம் ஏற்றுக்கொள்ளப்படாது போகும் என்று முடிவு கட்டிவிட்டார். எனவே, உல்ஸியைத் தவிர பிற பிஷப்புகளையும் தமக்கு ஆதரவு கொடுக்கவேண்டுமென ஹென்றி கேட்டுக்கொண்டவார். போப்பாண்டருக்கு ஹென்றி இடையருது

பல உதவிகளைப் புரிந்துவந்தமையால், அவர் தம்முடைய விவாகரத்தை அனுமதித்துவிடலாம் என்று ஹென்றி எதிர்பார்த்தார். சமீபத்தில்தான் ஹென்றி, மார்கரெட் டியூடரின் விவாகரத்துக்காக அவள் இரண்டாம் கணவன் ஆங்கஸுக்கு எதிராகப் போப்பாண்டவரின் அனுமதிபெற்று அவர்களைப் பிரித்தார். போப்பாண்டவர் சமீப காலத்தில் இரு ஃபிரான்ஸ் மன்னர்களுக்கு விவாகரத்து கொடுத்திருந்ததையும் அவர் உணர்ந்திருந்தார். எனவே, தமக்கு உறுதியாகப் போப்பாண்டவரிடமிருந்து காதரினை விலக்கும் விவகாரத்தில் அனுமதி கிட்டிவிடும் என்று ஹென்றி நம்பினார்.

இந்நிலையில் ஹென்றி திருச்சபையை எதிர்த்த 'பிராட்டஸ்டென்ட்' மனப்பான்மையைக் கொண்டாரில்லை. அவர் கத்தோலிக்க சமயத்தை ஏற்றுக்கொண்டிருந்தார். இதுதான் தொடக்கநிலை. போப்பாண்டவரின் அதிகாரங்களைக் குறைகூறுவதற்கு மாறாக, அவர் அண்ணன் மனைவியை மணந்துகொண்டமை சமயக் கோட்பாடுகளின்படி செல்லாது என்ற காரணத்தை விளக்கிக்கூறி, மணவிலக்கை (விவாகரத்து) அனுமதிக்கும்படி வேண்டலாம் என்றும், அத்துடன் தம் முன்னாள் மனைவி மேரியின் சகோதரியான ஆன் பொலீனை அரசர் மணக்க அனுமதி கோரலாம் என்றும் உல்ஸி அரசருக்கு அறிவுரை கூறினார். தாம் எண்ணிய கருமத்தைத் திண்ணிய முறையில் முடிக்க இயலுமென்று உல்ஸி உறுதிமொழி அளித்த போது, ஹென்றி ஆங்கில நீதிமன்றங்களைக் கலக்காமல் ரோமாபுரியுடன் நேர்த்தொடர்புகொண்டார். அங்கு எட்டாம் ஹென்றியின் தூதுவர்களும் லஞ்சமும் வேலைசெய்ததன் விளைவாக ஒரு குழு ஒன்றை அனுப்பி ஆராய்ந்து, போப்பாண்டவர் பிரதிநிதிகளின் அத்தாட்சிபெற்று, வேறு முறையீடொன்றுமின்றி சட்டம் ஏற்றுக்கொள்ளப்பெற்று, விவாகரத்து அளிக்கப்படுமென்றும் நம்பினார்.

அப்போது போப்பாண்டவராக இருந்தவர் ஏழாம் கிளமென்ட் என்ற பெரியாராவர். எட்டாம் ஹென்றியின் தூதர்களின் கடுமையான மொழிகளைக் கேட்ட போப்பாண்டவர் வெளிறிப் போனார். அவ்வப்போது கண்களைத் துடைத்துக்கொண்டார். தம் கைக்குட்டையால் பல முடிச்சுகளைப் போட்டுக்கொண்டே இருந்தாரெனினும், அவர்களின் பேச்சுக்குக் கட்டுப்படவில்லை. இப்பெரிய பொறுப்பைத் தவிர்க்க முடிந்திருந்தால் அவர் அதைச் செய்து முடித்திருப்பார். அதன்படி ஹென்றி மறுமணம் செய்துகொண்டு ஐரோப்பாவெங்கும் அச் செய்தியை பரவச்செய்து இருக்கலாம். அன்றி, காதரின் பெண் மடாலயம் ஒன்றில் சென்று காலம் கழித்து

விடலாம் என்று வற்புறுத்தலாம். ஆனால், இவ்வனைத்தையும் காதரின் ஒப்புக்கொள்ள மறுத்ததுடன், ஆர்தரை தாம் மணந்து கொண்டது எப்போதும் நிறைவேற்றப்படவில்லை (consummated) என்றும் வற்புறுத்தினாள். மேலும், அவளுக்குப் பின்னால் அவருடைய அண்ணன் மகனான சார்லஸ் பெரும் பேரரசர் நின்று அவளை ஆதரிக்கலாம். அவருடைய படைகள் ஏற்கெனவே ரோமாபுரியைச் சுற்றி நின்றிருந்தன. லூதர் போற்றிய கொள்கைகளை ஒழிக்கப் போப்பாண்டவருக்கு சார்லஸின் உதவி இன்றியமையாததாகும். அத்துடன் மெடிஸியைப் பாதுகாக்கவும் அவருக்குப் பேரரசர் சார்லஸின் உதவி தேவைப்பட்டது. இத் தருணத்தில் காதரினுக்கு மணவிலக்குக் கொடுப்பது அவரை எதிர்ப்பதாகும். போப் பாண்டவருக்குப் பேரரசர் சார்லஸைப் பகைத்துக்கொள்ளும் துணி வேற்படவில்லை. கி.பி. 1528-ல் இவ் விவகாரத்தை விசாரணை செய்ய ஒரு சிறு நீதிக் குழுவை நியமித்தார். இத்தாலியக் கார்டினலான காம்பெஜ்ஜியோ என்பாரும் ஆங்கிலக் கார்டினலான உல்ஸியும் அக் குழுவின் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டனர். ஆனால், போப்பாண்டவர் காம்பெஜ்ஜியோவுக்கு ரகசியக் கட்டளை களைக் கொடுத்திருந்தார். கி.பி. 1529 ஆம் ஆண்டு மே மாதத்தில் அக் குழு பிளாக்ஃப்ரையர்ஸ் (Blackfriars) என்ற இடத்தில் இருந்த டாமினிகர்கள் மன்றத்தில் கூடி விசாரணை தொடங்கியதுமே, அரசி காதரின் அக் குழுவினை அங்கீகரிக்க முடியாதென ரோமாபுரிக்கு முறையிட்டாள். இத் தருணத்தில் ஜூலை மாதத்தில் இங்கிலாந் தைக் கலந்தாலோசியாமல் ஃபிரெஞ்சியர் பேரரசருடன் சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டனர். காம்பெஜ்ஜியோ தம் விசாரணை யைத் தள்ளிப்போட்டார். அரசரை ரோமாபுரிக்கு வந்து நேரடி யாக விவகாரங்களைத் தம்மிடம் விளக்கும்படி போப்பாண்டவர் உத்தரவு பிறப்பித்தார்.

இப்படிப்பட்ட முடிவால் என்ன நேரிடும் என்பதை முன்னரே விளக்கி உல்ஸி, போப்பாண்டவரை எச்சரித்திருந்தார். இதன் மூலம் உல்ஸி, தமக்கு அழிவுகாலம் நெருங்கிவிடுவதுடன், போப் பாண்டவருக்கு இங்கிலாந்தின் பக்தியும் அன்பும் பறந்துபோய் விடும் என்றும் உணர்ந்திருந்தார். அக்டோபர் மாதவாக்கில் முதல் தொல்லை வரத்தொடங்கியது. அப்போது அரசரின் அதிகாரிகள், கார்டினல் உல்ஸியை, அரசரின் நீதிமன்றத்தின் முன்வந்து போப் பாண்டவரின் பிரதிநிதியான அவர் புரோமுனேர் சட்டத்திற்கு எதி ராகச்சென்று அதை மீறியதற்கான காரணங்களை விளக்கவேண்டு மென உத்தரவிட்டனர். பிஷப்புகளையும் ஆதரவாளர்களையும் அச் சுறுத்திப்பொருள் பறித்ததாகவும், மடாலயங்களிலிருந்து கையூட்டு (லஞ்சம்) வாங்கியதாகவும், அவர் குற்றஞ் சாட்டப்பட்டார்.

அவருடைய அரண்மனைகள் பறிக்கப்பெற்றன. அவருடைய எண்ணற்ற பகைவர்கள் அவரைப்பற்றிய அவதூறுகளை அரசரிடமே புகன்றுவந்தனர். அவர்கள் அனைவருக்கும் தலைவியாக நின்று உல்ஸிக்கு எதிராகத் தூபம் போட்டாள் ஆன் பொலீன். அவளை அரசர் 'இரவுக் காக்கை' (night crow) என்று அழைப்பது வழக்கம். 'இரவுக் காக்கை' அரசரின் காதில் உல்ஸிக்கெதிராக இடையறாது கரைந்தது. அவள் உல்ஸியின் பழைய பகைவரான நார்ஃபோக்கின் உறவினள். அரசரின் அணுக்கத் தோழரான சஃப்போக்கும் உல்ஸிக்கு எதிராகக் கிளம்பினார். அத்துடன் உல்ஸியின் வீழ்ச்சியை விரும்பிய அதிகாரிகளும் அவருடன் இணைந்துகொண்டனர். அவரை அடுத்து சான்சலரான பேரறிஞர் தாமஸ் மூரும், பெரும்பாலான பிஷப்புகளும் உல்ஸிக்கு எதிராகக் கிளம்பினர்.

இதைவிடக் கீழ்த்தரமான செயல்கள் நடக்க இருந்தன. அரசர் லூதரின் நூல்களைப் படிக்கத் தொடங்கி இருந்தார். போப்பாண்டவர் இறைவனின் சட்டத்திற்கும் இயற்கை விதிகளுக்கும் எதிராகச் செல்லமுடியாது, செல்லக்கூடாதென அவர் வாதாடினார். ஆன்பொலீனின் மதகுருவிடம் அவர் பாடம் கேட்கத் தொடங்கினார். அவர் பெயர் கிரான்மர் என்பதாகும். கற்றறிந்தாரின் கருத்தெல்லாம் அரசரையே ஆதரிப்பன என்று கிரான்மர் கூறிவந்தார். திருச்சபையின் செல்வத்தை அரசர் கைப்பற்றவேண்டுமென பிராட்டஸ்டென்ட் பத்திரிகைக்காரர்கள் தூண்டிவந்தனர். 'புதிய ஏற்பாட்டை' ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த டைண்டேல் என்பார் திருச்சபையைச் சீர்திருத்துவது அரசரின் இறைமைப் பணியாகும் என்று வலியுறுத்தினார். 'ஆங்கில ஏற்பாடு'களைப் போற்றிப் புகழ்ந்த 'கிறிஸ்துவ சகோதரத்துவம்' ஒன்று பெருகி வளர்ந்தது. இப் 'பெரு விஷய'த்தைத் தம் சொந்த ஆட்சிப் பகுதியில் தீர்க்க முயலலாம் என்று ஒருமுறை போப்பாண்டவரே கூறியிருந்தார். அதைத் தொடர்ந்து முயற்சி செய்வது பலன் அளிக்கும் என்று ஹென்றி தாமே முயற்சி செய்ய முனைந்தார். காம்பெஜ்ஜியோ மணவிலக்கு விவகாரத்தைத் தள்ளிப்போட்ட பதினைந்து நாட்களில் புதிய பாராளுமன்றம் ஒன்றைக் கூட்டுவதற்கான ஆணை பிறப்பித்தலை அரசர் தாமே மேற்கொண்டார். அப் பாராளுமன்றம் அக்டோபரில் கூடவேண்டுமென்றும் அவர் உத்தரவிட்டார். யாருடைய நம்பிக்கைகள் வெற்றிபெறும் என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாது. கார்டினலின் ஒருமுகப்படுத்தப்பெற்ற மத்திய அதிகாரத்தை வெறுத்த பிரபுக்களின் எண்ணத்தை நிறைவேற்றுவாரா? அன்றி அரசர் லூதரின் கொள்கைகளை ஆதரித்து வந்ததை ஐயுற்றுவந்த பிஷப்புகளின் எண்ணத்தை நீக்குவாரா?

அன்றி, சீர்திருத்தவாதிகளின் புரட்சியை முன்னின்று நடத்து வாரா? பாராளுமன்றத்தைத் தம் போக்கில் கொண்டுசென்று திருச்சபையின் செல்வத்தை மட்டுமன்றி கத்தோலிக்கச் சமயத்தையே இங்கிலாந்திலிருந்து அழித்துவிடுவாரா? அரசர் எதைச் செய்வார் என்பதை அப்போது யாராலும் உறுதியாகக் கூற முடியவில்லை.

## சமகால நிகழ்ச்சிகள்

1510 கோவாவை ஆல்புகர்க் கைப்பற்றல்.

1511 புனிதக்கூட்டை இரண்டாம் ஜூலியஸ் கூட்டல்.
லூதர் ரோமாபுரிக்குச் செல்லல்.
டியூட்டானிக் இயக்கத்தின் பெருந்தலைவராக ஹோஹன்ஜோலர்ன் இனத்தவரான ஆல்பர்ட் தேர்ந்தெடுக்கப்படல்.

1512 ரெவன்னு போர்.
ஃபிரான்ஸில் மெடிஸியர் மீட்சி

1513–21 போப்பாண்டவர் பத்தாம் லியோ.

1513 மாக்கியவெல்லி 'பிரின்ஸ்' என்ற தம் நூலை எழுதுதல்.
பசிபிக் பெருங்கடலை பால்போ சென்றடைதல்.

1515 வெஸ்ட்மினிஸ்டரில் ஏழாம் ஹென்றியின் திருக்கோயில் கட்டப்பெறுதல்.
ஃபிரான்ஸின் அரசராக முதலாம் ஃபிரான்ஸிஸ் என்பார் பதவியேற்றல் (—1547), அவர் ஸ்விஸ் மக்களை மாரிக்னுனே போரில் தோற்கடித்தல்.
ராபேல் என்பாரின் சிஸ்டைன் மடோனு ஓவியம்.

1516 ஸ்பெயினில் ஃபெர்டினுண்டுக்குப் பதிலாக ஆர்ச்டியூக் சார்லஸ் அரசராதல்.
அவருடைய சகோதரரான ஃபெர்டினுண்ட், ஹங்கேரி பொஹிமியாவின் அரசரான லூயில் என்பாரின் சகோதரி மேரியை மணத்தல்.

1517 எகிப்தைத் துருக்கியர் கைப்பற்றல்.
விட்டன்பர்க்கில் லூதரின் 95 கட்டளைகள்.

1518 மருத்துவக் கல்லூரியை லைனேகர் நிலைநாட்டல்.

1519 ஐந்தாம் சார்லஸ் மாக்ஸிமில்லியனை யடுத்துப் பேரரசர் ஆதல்.
கார்டெஸ் மெக்ஸிகோவைக் கண்டுபிடித்தல்.

1520 மெகல்லன் உலகினைச் சுற்றி வலம் வரல்.

1520-66 துருக்கியின் சோலிமன் மாக்னி:பிசியன்ட் (Solyman Magnificent) என்பாரின் ஆட்சி.

1521 வார்ம்ஸ் மகாநாட்டில் லூதர் நாடு கடத்தப்படல்.
வில்லாலர் எனுமிடத்தில் ஸ்பானியக் கம்யூன்கள் தோற்கடிக்கப்பெறல்.

1523-60 கஸ்டவஸ் வாஸா என்பார் ஸ்வீடனின் அரசராதல்.
—1534 ஏழாம் கிளமென்ட் போப்பாண்டவராக ஆட்சி நடத்துதல்.

1525 பேவியா போர்.
ஜெர்மனியில் குடியானவர் கலகம்.

1526 மோஹாக்ஸ் போர்.
டெல்லியில் முகலாய வமிசத்தை பாபர் நிலைநாட்டல்.
இங்கிலாந்துக்கு ஹோல்பியன் என்பார் வந்து சேர்ந்தார்.

# 2. எட்டாம் ஹென்றி : இங்கிலாந்து நவீனமயம் ஆதல்,

## (Henry VIII : The Modernizing of England)

## 1529–1547

இங்கிலாந்து ஒருமைப்படுத்தப்பெற்ற ஐக்கிய இராச்சியமாகி, பிராட்டஸ்டென்ட் சமயத்தை ஏற்று, கடலாதிக்கம் பெற்ற நாடாகி, முதலாளித்துவ பொருளாதாரத்தை ஒப்புக்கொண்டு நவீனகால பிரிட்டனாக ஆவதற்கு முன்னர், பேரழிவின் அடிப்படையில் பல செயல்கள் செய்யப்படவேண்டுவனவாயின. இவ் வகைச் செயல்களைச் செய்ய முனைந்தவர்கள் தூய்மையற்றவர்களாய் கீழ்த்தரமான இதயம் கொண்டு பணியாற்ற வேண்டியவராயினர். இக்கயமைத் தன்மைகளைத் தொடர்ந்து, நாட்டில் சமயச் சீர்திருத்தம் ஏற்பட்டதைக் கண்டும் நாம் வியப்படைய வேண்டுவதில்லை. எட்டாம் ஹென்றியின் சொந்த ஒழுக்க வீழ்ச்சி எதிர்பார்க்கப்படாததொன்றாகும். 'ஏசுநாதரே என்னுடைய நம்பிக்கை' என்று தம் தொடக்கக்காலக் கடிதங்களில் குறிப்பிட்டிருந்த இவ்விளைய கிறிஸ்துவ மன்னர், காமவெறிபிடித்த விலங்குபோன்று தாழ்ச்சியுற்று, பல அரசிகளையும் பெண்டாட்டிகளையும் பெற்று இன்புற்றிருந்தார். அவருடைய செருக்கும் பிடிவாதமும், தற்புகழ்ச்சித் தன்மையிலும் கொடுமையிலும் சென்று தாழ்ந்தன. தம்முடைய முதல் மனைவி காதரினை விடமிட்டுக் கொல்லப்போவதாகப் பயமுறுத்தி, அவருடைய மகளை அவளிடமிருந்து பிரித்து வேறாக்கி, பின் அவளை அழித்ததுபோன்று, அவர் ஆன் பொலீனையும் கழுவேற்றி அவள் சாவதைக் கண்டு களித்த கயவர். தாம் செய்த செயல்களைத் தம் ஊழியர்கள் வாய்பேசாது ஒப்புக்கொள்ள வேண்டுமென உத்தரவு இட்டதுடன், அவரின் செயல்களைச் சரியானவையென்றும் அறுபடா வெற்றியைத் தருபவை என்றும் வெளிப்படையாகக் கூறவும் அவர் பணித்தார். உல்ஸி, டவர் சிறையில் அடைக்கக் கொண்டுசெல்லப்பெற்றார். ஏனெனில்,

மணவிலக்கு கேட்ட ஹென்றி செய்கையால் அவர் மனமுடைந்து நம்பிக்கை யிழந்தவரானர். அந்நிய நாட்டு அரசர்களின் உதவியால் அவர் தம் செல்வாக்கைத் திரும்பப்பெற எண்ணியிருந்தார். ஆனல், கி.பி. 1530ஆம் ஆண்டில் அவர் காலமானர். அவர் திருச்சபையைச் சேர்ந்தவராயிருந்தும் வாழ்க்கையில் லௌகிகப் பேராசைக்குள்ளாகியிருந்து, வாணுளை வீணுக்கியமையை நினைந்து நினைந்து வருந்தினர். 'மன்னருக்குச் செய்த சேவையில் அரைப் பங்கு பக்தியை இறைவனிடத்தில் காட்டியிருந்தேனேயானல் ஆண்டவன் என்னை இங்ஙனம் புறக்கணித்திருக்கமாட்டார்' என்று மனம் நொந்து உல்ஸி இறந்தாரென்ருல், தாமஸ் மூர் 'முதலில் இறைவனைப் பேணுங்கள்; பின்னர் என்னிடம் வருக' என்று பணித்த மன்னரின் சொற்படி, உண்மையாக நடந்து அவரிடம் அவரும் பலியானர். ஹென்றியை மக்கள் வெறுக்க கிராம்வெலின் கொள்கைகளே காரணம் எனக்கொண்டு அவரும் கொல்லப்பட்டார். கத்தோலிக்க ஆதிக்கத்தை நிலைநாட்ட முனைந்த பிஷப்புகள் பலர் பலியாயினர். பிராட்டஸ்டென்ட் சமயச் சீர்திருத்தத்தை விரைவாக நடைமுறைப்படுத்த வேண்டுமென்ற சாதாரண மக்களிலும் பலர் கொல்லப்பெற்றனர். ஆனல், மேற் கூறியோர் அனைவரும் 'கடவுளைப் போற்ருதவர்கள், உண்மையைப் போற்ருதவர்கள், மன்னர்மன்னரைப் போற்ருதவர்கள்' என்று கண்டிக்கப்பெற்றனர். அரசரின் இச்சைகளை மறைமுகமாக வேனும் குறைகூறிய அனைவரும் தண்டிக்கப்பெற்றனர்.

மணவிலக்கு பெறுவதில் அவர் கொண்டிருந்த உறுதி, இறுதியில் ரோமாபுரியுடன் இருந்த ஒவ்வொரு பந்தத்தையும் நொறுக்கி அழித்தது; அவர் மடாலயங்களைக் கலைத்தார்; பழைய கட்டுப்பாடுகள் பலவற்றைத் திரும்பப் புதுக்கினர். இவற்றின் பலனக அரசின் அதிகாரங்கள் பெருமளவில் பல்கிப் பெருகின; சொத்துக்களைப் பகிர்ந்து கொடுப்பதிலோர் புரட்சி, அயர்லாந்துடனும் வேல்ஸுடனும் மிக நெருங்கிய தொடர்பால் ஏற்பட்ட ஒற்றுமை உணர்வு, ஸ்காட்லாந்தின்மீது ஆதிபத்தியப் புத்துரிமைகள், கத்தோலிக்கச் சமயத்தை ஆதரித்த நாடுகளின் அச்சுறுத்தல், இவற்றின் விளைவாக தேசீயப் பாதுகாப்பில் புதிய தேவைகள் இன்னோரன்ன பலவற்றையும் அவருடைய நடவடிக்கைகள் தாங்கி வரலாயின. மேற்கூறிய அனைத்துடனும் சேர்ந்த வேறு பல நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. பண விலையில் ஒரு புரட்சி; இப் புரட்சியால் சமூகப் பிளவுகள் ஏற்பட்டு ஏழைமையில் புதியதொரு பிரச்சினை முதலியனவும் ஏற்படலாயின. பெரும் சக்தியும் திறமையும்கொண்ட அரசாங்கம் ஒன்றினல்தான் இவ்வனைத்தையும் செங்குருதி சிந்தாமல் செய்துவைக்க முடியும். பாராளுமன்றத்தின்

பெயரால் இவ்வனைத்தையும் செய்துமுடித்த பெருமை அரசியல் வாதியான ஹென்றியைச் சாரும் என்றால் மிகையாகாது.

தமக்கு முன்னர்ப் பணியாற்றிய அரசாங்கங்கள் செய்த வற்றை மிகத் தீவிரமாய், தீர்மானமாய் ஹென்றி இப்போது செய்து முடித்தார். கி.பி. 1529ஆம் ஆண்டிலும் அதற்குப் பின்னரும் கூட்டப்பெற்ற பாராளுமன்றத்தில் அரசரின் ஊழியர்கள் நேர்முக வற்புறுத்தலின்மூலமாகவும், தலப் பெருமக்கள் மறைமுகமாகவும் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களாக ஆக்கப்பெற்றனர். அரசர், காமன்ஸ் சபையினருக்கு விண்மீன் மன்றத்தில் சொற்பொழி வாற்றத் தொடங்கினர். தம்மை எதிர்த்த பிரபுக்களுக்கு அரச ஆணைகள் கொடுக்க மறுத்தார். தமக்குக் கீழ்ப்படியாத உறுப் பினர்களை அச்சுறுத்தினர். எனவே, பாராளுமன்றத்தைத் தலைமை தாங்கி நடத்தவும் அவர்களை விரட்டவும் வேண்டியவரானர். சொத்துகள் உடைய சொந்தக்காரர்களின் நலனைப் பாதிக்கும் சட்டங்களைக் காமன்ஸ் சபையார் பன்முறை எதிர்த்தனர். மிக மிக விழிப்புடன் இருந்து அவர்கள் பொதுச்சட்டத்தைப் பாது காத்தார்கள். அரசாங்க மசோதாக்களை, அவர்கள் அடிக்கடி திருந்தங்கள் கொணர்ந்து மாற்றினர். தம் வாரிசாக அரசர் யாரைவேண்டுமானாலும் நியமிக்கும் • உரிமையை அரசரின் இஷ்டத்திற்கு விட்டபொழுது, அவர்கள் அதைத் தாராளமாகச் செய்தனர். ஏனெனில், ஆண்டுதோறும் வளர்ந்துவந்த அரசரின் ஆழ்ந்த அறிவில் மிகுந்த மரியாதை கொண்டவர்களாய் அவர் இச்சைப்படி வாரிசுரிமையைத் தீர்மானிக்கச் சம்மதித்தனர். கொடுங்கோலரான அவருக்கு நிலையான படையொன்றும் இருக்க வில்லை. தென் இங்கிலாந்திலிருந்து பெற்ற சம்பளமற்ற படை வீரர்களைக் கொண்டு கத்தோலிக்கர் நிறைந்த வடபாகத்தில் ஏற்பட்ட கலகத்தை அடக்கினர். பாராளுமன்றத்தில் இதுவரையில் வேறு யாரும் கடைப்பிடிக்காத அளவில் நடந்துகொண்டார். கி.பி. 1529ஆம் ஆண்டில் கூட்டப்பெற்ற காமன்ஸ் சபை தொடர்ந்து ஏழு ஆண்டுகள் பணியாற்றியது. பாராளுமன்றத்தில் மேன்மேலும் தம்முடைய அறிவுரையாளர்களையும் அமைச்சர் களையும் நுழைவித்தார் ஹென்றி. திருச்சபையை அடக்க அவர் கொடுத்த ஒவ்வோர் அடியிலும் அல்லது தம்முடைய திருமணத் தொல்லைகளிலும், விளம்பரத்தையும், அச்சிடுதலையும், முறையீடு களைத் திறமையாக வெளியிடுதலையும் கருவியாக்கிக் கொண்டார்.

திருச்சபை விவகாரத்தில் இங்கிலாந்து கொண்ட கருத்து யாது? திருச்சபையின் உண்மையான நிலை என்ன? இவ் வினக் களுக்குப் பதிலிறுத்தால்தான் ஹென்றி பெற்ற ஆதரவினை

மதிப்பிட முடியும். அத்துடன் அவர் இவ் விவகாரத்தில் படிப்படியாக நடவடிக்கை எடுத்த முறையும் அவர் நடவடிக்கை எடுத்ததில் உள்ள நியாய அநியாயங்களும், லாப நஷ்டங்களும் தெரியவரும்.

விக்லி:ப்பின் தாக்குதலிலிருந்து திருச்சபையில் ஏதாவது மாற்றங்கள் ஏற்பட்டிருந்தால் அவை நல்ல மாற்றங்கள் என்றே கொள்ளவேண்டும். வார்ஹாம், :பிஷர், டன்ஸ்டால் என்பார்கள் ஆர்ச்பிஷப் அருண்டேலேயும் அவர்தம் பிறப்புகளையும் விடச் சிறந்தவர்கள் எனலாம். அந்நியத் துறவி மடங்களும், மடாலயத் துறவிகள் பெற்றுவந்த சலுகைகளுமான சில கொடுமைகள் நீக்கப்பெற்றன. அத்துடன் ரோமாபுரிக்கு (போப்பாண்டவருக்கு) இங்கிலாந்திலிருந்து பொருள் செல்வதும் குறைந்துபோய்விட்டது. கையெழுத்துப் பிரதிகளின்மூலம் பயன்பட்ட சமய நூல்கள் அச்சிடப்பெற்று நாடெங்கும் வாரி வழங்கப்பெற்றன. சாரம் பிரைமர் (Sarum primer) என்ற புத்தகம் 116 பதிப்புகள் அச்சடிக்கப்பெற்றிருந்தன. சில பதிப்புகளுக்கு ஆங்கில மொழி பெயர்ப்பு இணைப்புகளும் இருந்தன. காக்ஸ்டனும் அவரைத் தொடர்ந்து வந்தவர்களும் ரோல், ஹில்ட்டன் (Rolle & Hilton) என்பவர்களது மர்ம இலக்கியங்களைத் தொகுதிகளாக வெளியிட்டனர். மக்களின் சமய உணர்ச்சியைப்பற்றி ஐயப்படுவதற்கு வாய்ப்புகளேயில்லை. எந்தத் தேர்விலும் அவர்களின் சமய உணர்ச்சி வெளிப்பட வாய்ப்புகள் இருந்தன. ஏனெனில், அவர்கள் கூட்டு வாழ்க்கையும், அவர்களுடைய விருந்துகளும், வில் வித்தைப் போட்டிகளும் ஆகிய அனைத்தும் கிராமத் திருச்சபையைச் சார்ந்து நின்றன. கத்தோலிக்கச் சமய பக்தி, சமுதாயத்தைப் பிணைத்த பெரும் சக்தி என்பதற்கறிகுறியாக நூற்றுக்கணக்கான உயில்களும் ஏற்பாடுகளும் (Testaments) நிலைத்து நின்றன. திருச்சபைக் கோயிலின் பிரசங்க மேடைகள், ஆடையணிகள், ஏழைகளுக்குதவும் கடன்கள் முதலானவற்றிற்கான உயில்கள் எழுதப்பெற்றிருந்தன. கில்டுகளும் சன்ட்ரிகளும் எண்ணற்ற உதவிகளைச் செய்தன. பள்ளிக்கூடங்கள், ஏழைகளுக்கான இலவச உணவு விடுதிகள் போன்றவை உதவிக்கெழுந்தன. மர்ம நாடகங்கள், எண்ணற்ற சமயப் பாட்டுகள், பலவகையில் கட்டப் பெற்ற பாரிஷ் கோயில்களும், மடாலயங்கள் ஆகிய இவை யனைத்தும் மக்கள் அனைவரது நம்பிக்கைகளும், கேளிக்கைகளும், அறநிலையங்களும் சமய நம்பிக்கையைச் சார்ந்து நின்றன என்பதைச் சுட்டிக்காட்டுகின்றன.

இத்தகைய சூழ்நிலைக்கெதிராகச் சமயச் சீர்திருத்தத்தை உடனடியாகக் கோரும் குறைபாடுகளைக் காட்டவேண்டியதாகிறது.

ஸ்பெயினில் புரட்சியற்றமுறையில் இச் சமயச்சீர்திருத்தம் வந்தது. ஜெர்மனியில் லூதர் சமயச்சீர்திருத்தத்தைப் பலாத்கார முறையில் கொணர்ந்தார். ரோமாபுரி மிகக் கீழ்த்தரமான நிலையில் இருந்தது. சமயக் கொண்டாட்டங்களுக்கும் சிலுவைப் போர்களுக்குமாகக் கேட்கப்பெற்ற பொருள்களை அடிக்கடி படை திரட்டப் பயன்படுத்தியதை ஆங்கிலேயர் உணர்ந்துவந்திருந்தனர். பொருள் திரட்டும் தருணங்களில் எல்லாம் போப்பாண்டவரின் தீச் செயல்களையும், ஒழுக்க விழ்ச்சியையும், போப்பாண்டவரின் நீதிமன்றங்களில் பொருளைக்கொண்டு எல்லாச் செல்வாக்குகளைப் பெறலாம் என்ற விஷயத்தையும் தூதுவர்கள் அறிக்கைகளின்மூலம் குறித்து வந்தனர். ஏராஸ்மஸ்ஸும் புதிய பேரறிஞர்களும் போர் வெறி கொண்ட கலைஞரின் விநோதகர்களுமான போப்பாண்டவர்களைக் குறித்து ஏளனம் செய்துவந்தார்கள். அவர்கள் கடவுளின் பிரதிநிதிகள் என்று உரிமைகொண்டாடுவதை அவர்கள் வரலாற்றுக் குறிப்புகளுக்கு முரணானது எனக் கண்டித்தனர். கடந்த நூற்றுண்டுக்குள் போப்பாண்டவர்களின் பிரதிநிதிகளை ஏற்க மறுத்து ஆங்கிலேயர் சுதந்திரத்தை நிலைநாட்டியிருந்தனர். திருச்சபை நீதிமன்றங்களுக் கெதிராகப் பொதுச்சட்டம் சக்தி வாய்ந்ததாகி, அவற்றை அடக்கவும் முயன்றுவந்தது.

திருச்சபையில் சமயப் பிளவுகள் ஏற்பட்டு இரு போப்பாண்டவர்கள் போட்டியிட்டு, அவிக்ஞனில் போப்பாண்டவர் ஒருவர் நிலைபெற்ற காலத்தில் ஏற்பட்ட பழிபாவங்கள் ஆங்கிலத் திருச்சபையிலும் தென்பட்டன. திருச்சபை இயக்கம் வீண் செலவுக்கு இலக்காகி, பெருஞ்சுமைகளைச் சுமப்பதாகி, கட்டுப்பாடற்ற நிலையில் காலூன்றி நின்றது. பெரும்பாலான லௌகீகர்கள் நேர்முகமாகத் திருச்சபை நிர்வாகத்தினுல் பாதிக்கப்படாதிருந்தாலும், திருச்சபைகளுக்கு அவர்கள் பெருந் தொகைகளை ஆண்டுதோறும் கொடுக்கவேண்டியிருந்ததை மக்கள் வெறுத்தனர். (பிஷப்பாக்கப்பட்டவர் தம் பதவியேற்ற முதல் ஆண்டு வருமானம் அனைத்தையும் போப்பாண்டவருக்குக் கொடுக்கக் கடமைப்பட்டவர்). புதிதாகக் குருமாரானவர் கட்டணம் செலுத்தவேண்டியவராயினர். புதிய ஆர்ச்பிஷப்புகள் தாம் பெறும் போர்வைக்காக ஆயிரம் பவுன்கள் கொடுக்கவேண்டியவராயினர். மேலும், ரோமாபுரிக்கு முறையீடுகளுக்காகப் பெரும் பொருளைக் கொடுக்கவேண்டியிருந்தது. போப்பாண்டவரின் பிற கட்டளைகள் ஏற்பாடுகளுக்காக, இத் தொகை பல மடங்காகப் பெருகியது. வாழ்க்கைபற்றிய வழக்குகள், பாவமன்னிப்புச் சீட்டுகளை விற்றல் முதலியவற்றுலும் அவர்கள் பொருள் பறித்ததை மக்கள் வெறுத்தனர். மேலும், திருச்சபையினருக்குள்ளும் கடுமையான பிளவுகள் தென்பட்டன.

மடாலயங்களைக் கலைப்பதைப் பல பிஷப்புகள் விரும்புவோராயினர். பிஷப்புகளும் மடாலயத் துறவிகளும் செல்வச் செருக்கில் சிறப்புற்றிருந்ததைத் திரிதுறவிகள் தாக்கினர். இவர்கள் லூதரது கொள்கைகளால் கவரப்பெற்றனர். கோயில் வருமானமற்ற பல திருச்சபை ஊழியர்களும், கோயில் வருமானம் பெற்ற சிலரும் பரம ஏழைகளாக விளங்கினர். எனவே, அவர்கள் வெறுக்கத் தகுந்த முறையில் பொருளை நாடி வந்தனர். அத்துடன் ஒருவரே பல வேலைகளைப்பெற்று ஊதியம் பெறுவதும், ஆளே இல்லாத போது, இருப்பதாகப் பொருள்பெறுவதுமாகிய தீமைகள் திருச்சபையில் புகுந்திருந்தன. இத்தகைய தீமைகளுக்குப் பெரும்பாலும் அரசாங்கமும் லௌகீகர்களுமே பொறுப்பாவர். பெரும்பாலான பிஷப்புகள் அரசியல் சேவைக்காக வேலை உயர்வு பெற்றனர், எடுத்துக்காட்டாக, ஃபாக்ஸ் என்ற பெரியார் தம்மாதிக்கத்தின் கீழிருந்த இரு திருக்கோயிலைத் தொடர்ந்து ஆதிக்கம் செய்தாலும் அவற்றைச் சென்று பார்த்தாரில்லை அல்லது பாங்கோர் என்ற ஊரின் பிஷப் அவ்வூருக்குப் பதினான்கு ஆண்டுகளாகச் செல்லவேயில்லை. உல்ஸி, தம்முடைய சொந்த மகனுக்கு டீன் பதவியொன்றையும், இரண்டு ஆர்ச்டீகன் பதவிகளையும், ஐந்து பிரிபெண்ட் (prebend) என்ற சமய மானிய நிலங்களையும், இரண்டு மடங்களுக்கு அதிபர் வேலையையும் கொடுத்திருந்தார். நிலக்கிழார்கள், பல பாதிரிகளை அவர்களின் தகுதிக்கேற்பத் தம் பண்ணை மானேஜர்கள் ஆகவும், அணுக்கத் தோழர்களாகவும் கொண்டு அவர்களுக்குப் பொருளுதவி செய்தனர்.

> 'யாரால் புகழ்ச்சி உரை கூறமுடியுமோ அவரும்,
> பருந்து ஒன்றைக் கையிலேந்தி வரமுடியுமோ அவரும்
> ஹனிட்டன் அல்லது கிளேஸ்ட் என்ற இடங்களின்
> 'பாதிரிகள் அவர்'

என்று டெவன்ஷயர் திருச்சபையினரது பாட்டு ஒன்று கூறியது. மடாலயங்களுக்கும் பெரும் பொறுப்புகள் இருந்தன. ஏனெனில், அவற்றில் எண்ணற்றவர் தம் வாழ்க்கையை நடத்தும் பணிகளைப் பெற்றிருந்தனர். அங்கு நியமனம் பெற்ற சில குருமார்கள் குறைந்த ஊதியம் பெற்றனர். மேலும், திருச்சபைப் பண்ணைகளை லௌகிகர்களைக்கொண்டு உழுது பயிரிடும் பணியும் அவர்களுக்கிருந்தது.

திருச்சபையினர் உலகியலில் ஈடுபட்ட லௌகிகர்போன்று லௌகிகர்களாய் வாழ்ந்துவந்தனர். பிராட்டஸ்டென்ட் பத்திரிகைக்காரர்கள் திருச்சபையில் நிலவிவந்த ஊழல்களையும் குறைபாடுகளையும் சுட்டிக்காட்டத் தொடங்கிய புலகாலத்திற்கு

முன்னரே, கார்டினல் மார்ட்டன், திருச்சபையினர் வேட்டையாடுவதில் ஈடுபடுவதையும் மதுக்கடைகளில் குடித்துக் கூத்தாடுவதையும் எள்ளி நகையாடினர். திருச்சபையினரின் பொருளாசைக்கு எதிராகக் கோலட் என்பார் பிரசாரம் செய்துவந்தார். பத்திலொருபங்கு தீர்வை பெருத பாதிரிகள் தாம் செய்யும் ஒவ்வொரு சடங்கிற்கும் பொருள் கேட்டனர். பிணிவாய்ப்பட்டோருக்குச் செய்யும் சமயப் பிரசார நற்கருணைக்கும் அல்லது ஈஸ்டர் பண்டிகையின்போது ஏழைகளுக்குக் கூறும் நற்கருணைக்குங் கூடப் பொருள் கேட்டனர். இவ்வனைத்தையும்விட வெறுக்கத்தகுந்தது செத்தவனின் ஆடையணிகளையும், பாடையைச்சுற்றி வைக்கப்படும் மெழுகுவர்த்திகளையும் தம்மதென உரிமைகொண்டாடியதாகும். இவ்வுலகத்தைச் சேராதவற்றிலிருந்து தாம் பெற்றதாகக் கூறிக்கொண்ட திருச்சபையினரின் சில உரிமைகளையும் மக்கள் வெறுத்தனர். உயில்களைப் பதிக்கும்போது ஏற்படும் செலவுக்காகத் திருச்சபை நீதிமன்றங்கள் பெருந் தொகைகளைக் கட்டணமாகப் பெற்றன. தனிப்பட்ட மக்களின் வீடுகளுக்குள் நுழைந்து மக்கள் திருக்கோயில்களுக்கு வரவேண்டுமென்று அவற்றின் ஊழியர்கள் கூறிவந்தனர் அல்லது மக்களின் குற்றங் குறைகளைத் துப்பறியச் சென்றுவந்தனர். சமய நிந்தனைபற்றிய வழக்கு விசாரணையின்போது அவர்கள் விசாரணைக்காரர்கள் செய்யும் பிரமாணத்தையும் முறைகளையும் கைவிட்டனர்.

இதனல், நீதியின் எளிய கருத்துகளும் குழப்பப்பட்டு அவர்கள் தம் மனம்போனபடி விசாரணை நடத்தினர். திருச்சபையினரின் மனத்துக்குப் பிடிக்காதவை அனைத்தும் சமய நிந்தனையாகக் கருதப்பட்டன. பாதிரியின் உடையணிந்துகொண்டு பல சண்டாளர்கள் தாம் செய்யும் குற்றங்களிலிருந்து தப்பித்துக்கொண்டனர். வெஸ்ட்மினிஸ்டர் போன்ற மடாலயங்கள் கொலைக்காரர்களுக்குத் தஞ்சம் கொடுத்துவந்தன. இவ்வகையில் திருச்சபையினருக்குக் கொடுக்கப்பட்ட சலுகைகள் தவருகப் பயன்படுத்தப்பெற்றன. குறிப்பாக லண்டனிலும், தென் இங்கிலாந்தின் பெரும்பாலான பகுதிகளிலும், திருச்சபையினருக்கெதிரான உணர்ச்சிகள் பலாத்காரமான முறையில் வெளிவரலாயின. அத்துடன் அவர்களைக் கடுகடுப்பான முறையிலும் நோக்கத் தொடங்கினர். தகுதியற்ற பாதிரிகளையும் கொழுத்த மடாலயத் துறவிகளையும், எள்ளி நகையாடினமை இடைக்கால் இலக்கியத்தில் தென்பட்டிருந்தாலும் சமய நம்பிக்கை குலையாதிருந்தது. ஆனல், மறுமலர்ச்சிக்குப் பின்னர், மக்கள் மனத்தில் சமயத்தைப்பற்றிய ஐயப்பாடுகள் ஆழ்ந்து பெருகின. ஏரர்ஸ்மஸ், பலருக்கு எள்ளி நகையாடும் பழக்கத்தில் இருந்த ஆபத்துகளையும் விளக்கிப் போதித்தார்.

இருந்தபோதிலும், மேற்கூறிய குற்றச்சாட்டுகளைக் கொணர்ந்த காமன்ஸ் சபையினர் இக் குற்றச்சாட்டுகளைச் சமய நிந்தனையென்று கூறிய கருத்துகளை ஏற்க மறுத்தனர். எனினும், கி.பி. 1529-ல் சமய மாற்றம் வேண்டுமென்று கேட்டவர் மிகச் சிலரே எனலாம். லோலார்டுகளின் பழக்க வழக்கங்களும் நூல் களும் அவ்வப்போது வெளிவந்தாலும், லண்டன் அத்தியட்ச குருவின் ஆதிக்கப் பகுதியான பெரும்பரப்பில் இவ்வண்ணம் குற்றஞ்சாட்டியவர்கள் ஏறத்தாழ இருபதாண்டுகளுக்குள்ளாக ஐம்பதுக்கும் குறைந்தவர்களே இருந்தார்கள் என்று கூறலாம். கி.பி. 1511-க்குப் பிறகு சமயச் சிந்தனையாளர்களைக் கழுவேற் றியதும் இல்லையெனலாம். எனவே, மெல்ல வளர்ச்சியுற்ற இச் சமயச் சீர்திருத்த இயக்கம் திடுமெனப் பயங்கரமாக வளரலா யிற்று. குறிப்பாக, கி.பி.1520-க்குப் பிறகு லூதரின் போதனைகள் வெகுவாகப் பரவலாயின. இப்போதனைகள் தொடக்கத்தில் கடற் கரையையொட்டியிருந்த கிழக்கு ஆங்கிலத் துறைமுகங்களின் வழியாகவும், கேம்பிரிட்ஜில் சமயச் சித்தாந்தங்களைக் கற்ற மாண வர்கள் மூலமாகவும் பரவத் தொடங்கின. அங்கிருந்து சிலர் உல்ஸியால் தொடங்கப்பெற்ற புதுக் கல்லூரிக்குச் சென்றனர். அவர்கள், ஆக்ஸ்ஃபோர்டையும் இச் சமயச் சீர்திருத்தக்கொள்கை களில் ஈடுபடுத்தினர். லாட்டிமர், கிரான்மர் போன்ற பிற சீர் திருத்தவாதிகள் பெரும் பதவிகளைப்பெற்று உயர்ந்துவந்தனர். டைண்டேல் என்பார் ஐரோப்பா கண்டத்திற்கு ஓடிச்சென்று கி.பி. 1526ஆம் ஆண்டுவாக்கில் விவிலிய நூலின் ஏற்பாட்டுக்கு ஆங்கில மொழிபெயர்ப்பைப் பூர்த்தி செய்தார். இத் தருணத்தில், துண்டுப் பிரசுரங்கள் திருச்சபையினரைக் 'கொள்ளைக் கூட்டத் தினர்' என்று ஏசிப் பழித்துரைத்தன. அவர்களைச் 'சோம்பேறி முட்டாள்கள்' என்று அத் துண்டுப் பிரசுரங்கள் பழிகூறின. அத்துடன் அவர்கள் நாட்டின் தொத்து நோய்கள் எனவும் குறை கூறின. அத்தகைய நூல்களையும் துண்டுப் பிரசுரங்களையும் அரசாங்கத்தினர் தீயிட்டுக் கொளுத்தினர். எனினும், ஹென்றி, தனிப்பட்ட முறையில் அரசியல் சார்பாக, லூதர், விக்லிஃப் என்பாரின் கருத்துகளை ஆதரித்துப் பேசிவந்தார்.

அடுத்து வந்த மூன்றாண்டுகளுக்கு அவர் திருச்சபை அமைப்பைக் குலைக்காது தாம் செய்யவேண்டிய பணிகள் அனைத் தையும் செய்துவந்தார். அவற்றைச் செய்வதற்கு அவருக்குத் தகுந்த காரணமொன்றும் ஏற்பட்டது. ஃபிரான்ஸ், எட்டாம் ஹென்றியின் சொற்படி, போப்பாண்டவருடன் செய்துகொண்ட உடன்படிக்கையைப் புறக்கணித்துவிட மறுத்துவிட்டது. காமன்ஸ் சபையிலேயே அரசர் தம் மனைவியைத் திரும்ப

அழைத்துக்கொள்ள வேண்டுமெனக் கோரிக்கை விடுத்தனர். அரசருக்குப் புதிதாக வந்த அமைச்சர்களான நார்ஃபோக், மூர், கார்டினர் போன்ற பெரியார்கள் பெரும் பழைமை விரும்பிகள். பிரபுக்கள், தம் தூதுவர்களையும் அறிக்கைகளையும் ரோமாபுரிக்கு அனுப்பிவைத்தனர். வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களில் திருச்சபைபற்றிய கருத்துரைகளைச் சேகரித்துப் போப்பாண்டவரை அச்சுறுத்தினர். எனினும், இங்கிலாந்தில் அரசர் ஒருசில பிராட்டஸ்டென்டுகளை உயிருடன் எரிக்க அனுமதித்தார்; இஃது ஒருபுறம். மற்றொரு புறத்தில், திருச்சபையினருக்கெதிரான உணர்ச்சியைப் பாராளுமன்றத்திலேயே தூண்டிவிட்டார். சிறு சிறு சட்டங்கள் மூலம் உயில்கள் பதிக்கப்பெறும்போது திருச்சபையினர் பெறும் சட்டணம், சாவின்போது பெறும் கட்டணம் முதலியன குறைக்கப்பட்டன. அத்துடன் திருச்சபையினர் ஒருவர் பல வேலைகளுக்கு ஊதியம் பெறுவதையும், மடாலயங்களையும், சீர்திருத்த சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், பிஷப்புகள் ஹென்றியின் நடவடிக்கைகளை எதிர்த்தபோது அவர் மேலும் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொள்ளலானார். கி.பி. 1531-ல் திருச்சபை மகாநாடுகளில் அரசரே திருச்சபைகளின் பாதுகாவலர் என்று ஒப்புக்கொள்ளும்படியும், புரேமுனைர் சட்டத்தால் அச்சுறுத்தியும், அவர்களைக் கட்டாயப்படுத்தினர். மேலும், 'ஏசுநாதரின் சட்டம் அனுமதிக்கும் முறையில் அவரே திருச்சபையின் தனிப்பெரும் தலைவர்' என்றும், பாவமன்னிப்பு வேண்டுவோர் பெரும் அபராதம் கட்டவேண்டுமென்றும் கோரினர்.

கி.பி. 1532ஆம் ஆண்டுவாக்கில் ரோமாபுரியிலிருந்து எதையும் எதிர்பார்க்கமுடியாது என்பதும் புலப்படலாயிற்று. உள்நாட்டிலும் எதிர்ப்புகள் பெருகலாயின. நாட்டின் வடபாகத்தில் இருந்துவந்த செய்திகளின்மூலம், அரசர் வேசியொருத்தியின் ஆதிக்கத்திற்குட்பட்டு இச் செயல்களைச் செய்கிறார் என்ற முணுமுணுப்புகள் வெளிவரத்தலைப்பட்டு அறிவிக்கப்பட்டன. காமன்ஸ் சபையினர் வரிகொடுக்க மறுத்து, நீண்ட நாட்கள் கூடியிருந்த பாராளுமன்றத்தைக் கலைக்கவேண்டுமென்று கோரினர். பெரும் எதிர்ப்புகளுக்கிடையே அரசர் மசோதாவொன்றைத் தாமே நேரில் வந்து பாராளுமன்றத்தில் சமர்ப்பித்து நிறைவேற்றினர். அதன்படி போப்பாண்டவர் தமக்குப் பணியாவிடின் போப்பாண்டவருக்குக் கொடுக்கப்படும் ஆண்டு வருவாயை நிறுத்தவேண்டும் என்றும், போப்பாண்டவரின் ஆணைகளின்றியே பிஷப்புகள் பதவியேற்கலாம் என்றும் தீர்மானித்தார். கிராம்வெல்லினால் நடத்தப்பெற்றுப் பாராளுமன்றத்தில் இருந்த அரசரின் ஊழியர்கள், மத வழக்குத் தீர்ப்போருக்கெதிராக அரசரின் ஆட்களை வேண்டினர். அத்துடன்

அவர்கள், திருச்சபை மகாநாட்டினர் திருச்சபைச் சட்டங்களைச் செய்தல், திருச்சபை நீதிமன்றங்கள், கடுமையான சமய நிந்தனை விசாரணைகள் ஆகியவற்றையும் எதிர்த்துக் குறை கூறினர். திருச்சபையினருக்கு அடங்கி நடப்பதாக திருச்சபை மகாநாட்டினர் ஒப்புக்கொள்ளவேண்டுமெனவும் அச்சுறுத்தப்பட்டனர். அரசரின் அனுமதியின்றித் திருச்சபையினர் தமக்கான சட்டங்களைச் செய்யக்கூடாதென்றும் இதனல் அறிவிக்கப்பெற்றது. எனினும், இதைப் பிரபுக்கள் சட்டமாக ஒப்புக்கொள்ள மறுத்தனர். மூர் என்பார் தம்முடைய சான்சலர் பதவியை, இதன் விளைவாக ராஜிநாமா செய்தார். பின்னர், பிராட்டஸ்டென்டுகளுக்கெதிராகக் கடுமையாக அவர் எழுதத் தொடங்கினர். வார்ஹாம் என்பாரும் தாம் சாவதற்கு முன்னர் புரேமுனைர் சட்டத்தால் பாதிக்கப் பட்டவரானர்.

கி.பி. 1533ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் போப் பாண்டவரிடம் மணவிலக்குக் கோரிய ஹென்றி, மற்ருெரு செயலைச் செய்து அதை முடிவு கட்டினர். அவ்வாண்டில் அவருடைய காமக் கிழத்தியான ஆன் பொலீன் கருவுற்றிருந்ததை உணர்ந்து, பிறக்க இருக்கும் குழந்தைக்கு மாசு கற்பிக்கக்கூடாதென்ற கருத்தால் அவளை யாருமறியாது திருமணம் செய்துகொண்டார். அவருடைய அரசியல் தந்திரமும் நெருக்கும் திறனும், கடுமையானவையாயினும் அவருக்கு வெற்றியை ஈந்தன. போப்பாண்டவரை லஞ்சமும் அச்சுறுத்தலும் சேர்ந்து கிரான்மரை ஆர்ச்பிஷப்பாக ஏற்றுக் கொள்ள வைத்தன. போப்பாண்டவர் அதற்கான ஆணைகளையும் பிறப்பித்தார். காதரினைத் தள்ளிவைத்து விலக்களிக்கும் அதிகாரத் தைக்கொடுக்க எந்தப் போப்பாண்டவருக்கும் உரிமை கிடையாது எனத் திருச்சபை மகாநாடு அறிவித்தது, பாராளுமன்றம் 'வேண்டு கோள் சட்டம்' ஒன்றை (Act of Appeals) இயற்றி, 'இங்கிலாந் தில் நடைபெறும் ஆட்சி ஒருபேரரசாகும்'; எனவே இங்கிலாந்தின் வழக்குகள் அனைத்தையும் அதன் சொந்த நீதிமன்றங்களிலேயே விசாரித்துத் தீர்ப்புக்கூறும் முழுத்தகுதியும் திறமையும் பெற்றவை என்று கூறியது. ஆர்ச்பிஷப்பான கிரான்மர், காதரினுக்கும் ஹென்றிக்கும் நடந்த மணம் சமயச் சட்டப்படி செல்லாது என்று அறிவித்தார். ஜூன் மாதத்தில் ஆன் பொலீன் அரசியாக முடி சூட்டப்பெற்ருள். அவள் அவ்வாண்டு செப்டம்பர் மாதத்தில் எலிஸபெத் இளவரசியைப் பெற்றெடுத்தாள்.

திருச்சபை விவகாரம் ஆன் பொலீனுடைய திருமண அங்கீகரத்தாலும், அன்றி அவள் பெற்ற பெண்ணினுடனும் முடிய வில்லை. ஃபிளாண்டர்ஸில் அரசரைச் சமய விலக்கு (மதப் பிரஷ்டம்)

செய்துவிட்ட போப்பாண்டவரின் தண்டனை ஒட்டப் பெற்றிருந்தது. புதுத் திருமணத்தால் புதிதான வாரிசுரிமைச் சட்டங்கள் வரவேண்டியவையாயின. லாட்டிமரும் பிறச் சமயச் சீர் திருத்தவாதிகளும் கத்தோலிக்கர் கொள்கைகளை எதிர்த்து வந்தனர். ஆன் பொலீன் குடும்பத்தினர் லூதரின் சித்தாந்தங் களைப் பின்பற்றியவர்களைப் போற்றிவந்தனர். போப்பாண்டவரை ஆதரித்தவர்களும், அரசரை ஆதரித்தவர்களும் பழைய தத்துவங்களை எடுத்துக்கூறி வேண்டுகோள் விடுத்தனர். திருச் சபையினர் தாமஸ் பெக்கெட்டையும், அரசரின் கட்சியினர் இரண்டாம் ஹென்றியையும், ஜான் மன்னரையும் தத்தமக்கு மேற்கோள் காட்டிக்கொண்டனர். இதற்குள்ளேயே ஹென்றி, பிராட்டஸ்டென்ட் ஜெர்மனிக்குத் தூதுவர்களை அனுப்பிப் போப் பாண்டவருக்கெதிராகச் சபையொன்றைக் கூட்டுமாறு வேண்டினர். பழைமை விரும்பிகள் அரசர் எப்போது மரணமாவார் என்று குறி பார்த்துச் சொன்னதை விவாதித்துவந்தனர். கான்டர்பரி பெண் துறவியான எலிஸபெத் பார்டன் என்பார் அரசரின் மரணத்தைப்பற்றிக் குறி சொல்லியிருந்தார். அந்த அம்மையாரின் திர்க்கதரிசனமான முன்னறிவிப்புகளும் ஒழுக்க உயர்வும் நீண்ட காலமாகவே மிகுந்த செல்வாக்குற்றிருந்தன. பேரரசர், மேரியின் உரிமைகளைப் பாதுகாக்க முயலுவார் என்பதும், அவர் யார்க்கிய குடும்பங்களுடனும், ஸ்காட்டியர், அயர்லாந்து மக்கள் முதலானவருடனும் தொடர்பு கொண்டிருந்தார் என்பதும் தெரியலாயின.

இவ்வகையான நெருக்கடி ஏற்பட்டபோது ஹென்றி தம்முடைய புதிய செயலாளர் தாமஸ் கிராம்வெல்லையே பரிபூரணமாக நம்பினர். கிராம்வெல் தாமாகவே உழைத்து முன்னுக்கு வந்த ஒரு வணிகர். சில மாடலயங்களைக் கலைக்க அவர் ஏற்கெனவே உல்ஸிக்கு நல்ல பயனுள்ள தொண்டைச் செய்திருந்தார். உல்ஸியின் வீழ்ச்சியால் கிராம்வெல் பலவகைகளில் தம் செல்வாக்கைப் பெருக்கிக்கொண்டார். ஆஸ்டின் ஃபிரையர்ஸ் என்ற இடத்திலிருந்த பாதுகாப்பான அவரது அரண் மனையிலிருந்தும், அவருடைய தனிப்பட்ட குறிப்பேடுகளி லிருந்தும் பல ரகசியங்கள் தெரியவந்தன. வெளிநாடுகளுக்குப் பயணம் சென்றபோது அவருக்கு இத்தாலிய இலக்கியத்தில் பிடிப்பேற்பட்டிருந்தது. மாக்கியவெல்ஸியின் கருத்துப்படி முழு உரிமைபெற்ற அரசினை அவர் போற்றினர். இதைத்தவிர வேறு லட்சியமோ அல்லது அறத் திண்மையோ இல்லாதவர்போன்று அவர் காணப்பெற்றார். பாராளுமன்ற அரசாங்கத்தின் ஆமை வேகத்தைக்கண்டு பெரும் வெறுப்படைந்தவர் கிராம்வெல். வெளி

நாட்டிலிருந்த பிராட்டஸ்டென்ட் கிறிஸ்துவர்களுடன் அவர் தனிப்பட்ட தொடர்புகளைக் கொண்டிருந்தார். அவர் அவற்றைக் காமன்வெல்த்தின் பயனுக்கு உபயோகித்தவர். காலஞ் செல்லச் செல்ல அவர் 'போப்பாண்டவரை ஆதரிப்போரும் துரோகிகளும் வேறுனவரல்லர் ; ஒருவரே' எனக்கொண்டு வாதித்தார். கிறிஸ்துவ உலகத்திலேயே ஹென்றியைப் பெரும் செல்வராக ஆக்கப் போவதாக அவர் உரைத்தார். அரசரின் செல்வத்தைப் பெருக்க கண்ணுக்குத் தெரிந்த வழி திருச்சபையின் செல்வங்களை வவ்வுதலே யாகும்.

ஹென்றியும் கிராம்வெல்லும், கி.பி. 1534-ல் வெற்றியை உறுதிபடுத்தலாயினர். பாராளுமன்ற உறுப்பினர்களையும் தேர்தலையும் சிரமமெடுத்துக்கொண்டு கிராம்வெல் கண் காணித்தார். ஒரே ஒருமுறை பாராளுமன்ற உறுப்பினர் அரசரைக் காண வந்தனர் (அதாவது ஒரே ஒரு தடவைதான் பாராளுமன்றம் கூடியது). பிஷப்பிரிக்குகளின் பதவிகளில் சில பூர்த்தி செய்யப்படாமல் இருந்தன. சில குருமார்கள் வற்புறுத்தலின்பேரில் ராஜிநாமா செய்விக்கப்பெற்றனர். எனவே, அவ்விடங்களில் எல்லாம் தமக்கு வேண்டியவரைப் போட்டுக் கொண்டனர். இவற்றைத் தூண்டிவிட்ட துண்டுப்பிரசுரங்கள் பத்திரிகைகளில் வெளிவரலாயின.

மேற்கூறிய உபாயங்களின் வாயிலாக அரசாங்கம் ஐந்து இன்றியமையாத நடவடிக்கைகளை மேற்கொண்டது. முதலாவது, அன்னேட்ஸ் சட்டம் எனப்படும் முதலாண்டு வருவாய்பற்றிய சட்டம். பிஷப்புகள் தாம் பதவியேற்றவுடன் முதல் வருட வருவாயைப் போப்பாண்டவருக்குக் கொடுக்க இதற்குமுன் கடமை பெற்றிருந்தனர். இரண்டாண்டுகளுக்கு முன்பே ஹென்றி அவற்றைப் போப்பாண்டவருக்குக் கொடுக்கலாகாது என்று அச் சுறுத்தி வந்தார். இப்போது அதைச் சட்டமாகக் கொணர்ந்தார். அதன்படி, போப்பாண்டவருக்கு யாரும் தம் முதலாண்டு வருவாயைக் கொடுக்கத் தேவையில்லை ; பிஷப்புகள் போப் பாண்டவரின் ஆணையைப் பெறவேண்டியதில்லை ; இனிமேல் திருக்கோயில் ஊழியர்கள் அரசர் நியமிப்பவரையே பிஷப்பாகத் தேர்ந்தெடுக்காதுபோனுல், அரசர் அப் பதவிக்குத் தம் ஆணையின் மூலம் ஒருவரை நியமிக்கவேண்டும் என்றும் உறுதிப்பட்டது. அடுத்து வந்த 'டிஸ்பென்சேஷன்ஸ் ஆக்ட்' என்னும் பகிர்ந் தளிக்கும் சட்டப்படி (Dispensations Act), பீட்டர் பென்னி வரியும் அல்லது பகிர்ந்தளிப்புகளும் லைசென்ஸுகளும் போப் பாண்டவரால் கொடுக்கப்பெற்றவற்றிலிருந்து தடுக்கப்பட்டது.

'அரசரை அவமரியாதை செய்து கொடுக்கப்பெற்ற பணம்' என்று இது தூற்றப்பட்டது. மூன்றாவது சட்டம், கி.பி. 1532-ல் 'அடங்கி நடத்தல்' பற்றியதைச் சட்டமாக்கியது. அதன்படி, முறையீடுகளை ரோமாபுரிக்கு அனுப்பவேண்டியதில்லை என்று வேண்டுகோள்களின் சட்டத்தைப் (Act of Appeals) பலப்படுத்தியது. இனி, திருச்சபை நீதிமன்றத்திற்கும் அரச நீதிமன்றமே உயர்ந்தது ; முடிவான தீர்ப்பளிக்கவல்லது என்று உறுதிப்படுத்தப் பட்டது.

நான்காவதாக வந்தது வாரிசுரிமைச் சட்டம் (Act of Succession). அதன்படி, ஹென்றியின் முதல் திருமணம் சட்டப்படி செல்லாது என்றும், ஆன்பொலீனுக்குப் பிறக்கும் தம் ஆண்மக்களே தமக்குப்பின் வாரிசாகவேண்டு மென்றும், அவர்களுக்குப் பின்னர் ஹென்றியின் பிற திருமணங்களினால் பிறக்கும் ஆண் குழந்தைகளுக்கும், அதை அடுத்து எலிஸபெத் இளவரசியும் பட்டத்திற்கு வரவேண்டுமென்றும் கூறியது. இதற்கு எதிராகக் குற்றம் புரிவோர் துரோகக் குற்றத்தில் தண்டிக்கப்படுவர். இதைப் பாராளுமன்றம் ஒரு வகையில் மாற்றி, துரோகக் குற்றத்தைச் செய்யாமல் துரோகம்பற்றிய வார்த்தைகளைப் பேசுவோர் குறைந்த தண்டனையைப் பெறவேண்டுமெனத் தண்டனையின் கடுமையைக் குறைத்தது. இறுதியாக, சமய நிந்தனையாளர்பற்றிய சட்டமொன்று லங்காஸ்டிரியரின் சட்டங்களைத் திருத்தியமைத்தது. அதன்படி, சமய நிந்தனையாளரை இதற்குமுன் திருச்சபை நீதிமன்றங்கள் தண்டித்தன. ஹென்றியின் சட்டத்தால் திருச்சபை நீதிமன்றங்களின் அதிகாரம் அரசின் நீதிமன்றங்களுக்கே கொடுக்கப்பெற்றன. அத்துடன் அரச ஆணைகள் சட்டாயமாக்கப் பெற்றன.

மேற்கூறிய சட்டத்தை நிறைவேற்றி முடிப்பதற்குள் அட்டெயிண்டர் மசோதா (Bill of Attainder) என்னும் உரிமை நீக்கும் மசோதாவைக் கொணர்ந்து, ஹென்றி, காதரினையும் அவருடைய அனுதாபிகளையும் கென்ட் மடாலயத்திற்கு அனுப்பினர். அப் பட்டியலில் சேர்க்கப்பெற்றிருந்த மூரும், காதரின் முக்கிய ஆதரவாளரான பிஷப் ஃபிஷரும் அரசரின் புதிய வாரிசுரிமைச் சட்டத்தை ஒப்புக்கொள்ளும்படி வற்புறுத்தப்பெற்றனர். வாரிசுரிமை சட்டத்தை அவர்கள் ஒப்புக்கொண்டு பிரமாணம் எடுக்க ஆயத்தமாயிருந்தாலும், அச் சட்டத்தின் பாயிரத்தை ஒப்புக்கொள்ள மறுத்தனர். அப் பாயிரம் போப்பாண்டவரின் அதிகாரத்தையும் ஹென்றியின் முதல் திருமணத்தையும் மறுத்திருந்தன. எனவே, அவர்கள் ஏற்க மறுத்தனர். இதன் விளைவாக, அவ்விருவரும் டவர்

சிறைக்கு அனுப்பப்பெற்றனர். அவர்கள் அரசருக்கு எதிராகச் செல்வதில்லை என்று உறுதிமொழி கொடுத்தனரேனும் அவற்றை ஏற்க மறுத்த அரசர் அவர்களைச் சிறைக்கு அனுப்பினார்.

தூய்மைக்குப் பெயர்பெற்ற பெரும்பாலான திரிதுறவியர் வாரிசுரிமை சட்டத்தை ஏற்க மறுத்தனர். பலர் அரசருக்கெதிராகத் துரோகப் பேச்சுக்களைப் பேசலாயினர். இதைக்கண்ட ஹென்றி, கடும்கோபம்கொண்டு மூர்க்கத்தன்மை மிக்கவரானார். அடுத்துக் கூடிய பாராளுமன்றத்தில் பிரமாணம்பற்றிய விதிகளை மேலும் கடுமைப்படுத்தியதுடன், பிஷப்பின் முதலாண்டு வருவாய், பத்திலொரு பங்கு தீர்வை முதலானவற்றை அரசருக்குக் கொடுக்க வேண்டுமென சட்டத்தை மாற்றியமைத்தார். மேலும், ஆதிபத்திய சட்டம் ஒன்றையும் கொணர்ந்து, திருச்சபை மாநாடுகளின் அதிகாரம் பறிக்கப்பெற்று, சமய நிந்தனையாளரை விசாரிக்கும் அதிகாரமும் அரசரைச் சார்ந்ததேயெனச் சட்டமாக்கினார். துரோகக் குற்றச் சட்டம் ஒன்றும் கொணரப்பட்டது. அதன்படி அரசரின் பதவியையும் அல்லது அரசரைச் சமய நிந்தனையாளர் என்று தூற்றியதையும் அல்லது கொடுங்கோலர் என்று பழித்ததையும் துரோகக் குற்றமாக்கினர் (பாராளுமன்றம் அவ் வார்த்தைகளுக்கு மாறாக 'வன்மமுள்ள' என்று திருத்தியமைத்தது). இத்தகைய பெரும் அதிகாரங்களைப்பெற்று, ஜூரிகளையும் தம் இச்சைப்படி நடக்கவேண்டுமெனக் கண்டித்து வலியுறுத்திய ஹென்றி, கி.பி. 1535ஆம் ஆண்டின் தொடக்கத்தில் சார்ட்டர்ஹவுஸ் (Charterhouse), சியான் (Sion) முதலான இடங்களிலிருந்த திரிதுறவியரைத் தூக்கிலிட்டுக் கொன்றார்.

போப்பாண்டவர், ஃபிஷரைக் கார்டினலாக நியமித்தபோது அவரின் தலைவிதி நிர்ணயிக்கப்பட்டது. ஹென்றி, ஃபிஷரின் தலையை ரோமாபுரிக்கே அனுப்புவதாகவும், அங்கு அத் தலை கார்டினல் பதவியைப் பெற்றுக்கொள்ளட்டும் என்றும் முழங்கினார். ஜூரியொருவர் ஃபிஷரைச் சிரச்சேதம் செய்வித்தார். அவருடன் எண்ணற்ற கார்த்தூஷியர்களும் கொல்லப்பட்டனர். கொல்லப் பட்டவர்களைவிட மிகுதியானபேர் சிறையில் பட்டினிபோடப்பட்டுக் கொல்லப்பட்டனர். அவ்வாண்டு ஜூன் மாதத்தில் சிறப்புக் குழு ஒன்று நிறுவப்பெற்று, சட்ட வல்லுநர்களின் பொய் சாட்சியத்தால், மூர், அரசரின் ஆதிபத்தியத்திற்கு எதிராகப் பேசினார் என்று பொய்க்குற்றம் சாட்டி அவரைக் கண்டித்தது. அவர் அஞ்சாது எதிர்த்துச் சவால் விடுக்கலானார். அதுதான் இடைக்கால லட்சியத்தின் கடைசி சவாலாகும். அதன்படி, அரசரின் ஆதிபத்திய சட்டம், கடவுளுக்கும் மகா சாசனத்திற்கும் எதிரானது என்றும்,

ஒரு தலைமுறையில் ஓர் அரசரின் ஆட்சிக்காலத்தில் இயற்றப் பெற்ற இச் சட்டம், கிறிஸ்துவ உலகத்திற்கும், ஆயிரம் ஆண்டுக் காலமாக பொதுக் கவுன்சில்களால் ஒப்புக்கொள்ளப்பெற்ற மரபுக்கும் எதிரானது என்றும் முழங்கினார். ஆனால், ஹென்றி திருச்சபையைப் பிரித்ததன் பொருள் என்னவென்பது மூர், ஃபிஷர் ஆகியோரின் தலைகள் லண்டன் பாலத்தில் தொங்கியதிலிருந்து தெரியவந்தது.

இவ்வாண்டில் வந்த மேலுமிரண்டு சட்டங்கள் ஹென்றியின் கருத்தைத் தெளிவாக்கின. 'உண்மைக் கீழ்ப்படிதல்' (True Obedience) என்னும் நூலில் பிஷப் கார்டினர் அரசரின் தெய்வீக உரிமையே விவிலியம், ரோமானியச் சட்டம், ஆங்கில வரலாறு ஆகியவை போதிக்கின்றனவென்றும், திருச்சபையும் அரசும் ஒன்றையே குறிப்பவை என்றும், ஏசுநாதரே இவ்வுலக ஆதிபத்தியத்தை ஒப்புக்கொள்ளவில்லையென்றும் குறிப்பிட்டிருந்தார். அதற்கு மாறாக, ரெஜினால்ட் போல் (Reginald Pole) என்பார் இத்தாலியில் புகலிடம் பெற்று வாழ்ந்தபோது 'திருச்சபையின் ஐக்கியம்' என்ற சிறு நூலொன்றை வெளியிட்டார். அரசரின் உறவினரான அவரை, ஹென்றி தம் பக்கம் திருப்ப வெகுவாக முயன்றார். அவர் கருத்துப்படி, ஏசுநாதரின் பிரதிநிதியான போப்பாண்டவரின் அதிகாரத்தைப் பாதித்ததிலிருந்து ஹென்றி கிறிஸ்துவ உலகத்தின் பொருளை அழித்துவிட்டார் என்றும், அரச பதவியேற்றபோது தாம் கொடுத்த வாக்குறுதிகளை மீறிவிட்டார் என்றும், தம் நாட்டு மக்களைக் கொள்ளையடித்தார் என்றும், தம் காம இச்சைகளுக்குத் தம் மக்களின் புதிய மலர்களைப் பலியாக்கினார் என்றும் கண்டனம் தெரிவித்தார். 'இங்கிலாந்து நாடு துருக்கியாகிவிட்டதா என்ன ? பின் ஏன் அங்கு வாளின் முனையில் ஆட்சி நடைபெறவேண்டும் ?' என்று அவர் கூக்குரலிட்டார்.

ஆனால், கிராம்வெல்லின் தலைமையில் பணியாற்றத் தொடங்கிய புதிய அரசு, அரசரால் உண்டாக்கப்பெற்ற புரட்சியை மேலும் தொடர்ந்து செலுத்தலாயிற்று. 'ரெஜினால்ட் போல்' என்பாரைத் தாம் பணியவைக்கப்போவதாகவும் கிராம்வெல் பறைசாற்றினார். போப்பாண்டவரைச் சபதமிட்டுத் தள்ளும்படி திருச்சபையினரைப் புது முறையில் ஆணையிட்டு உறுதிமொழி கூறி வற்புறுத்தினார். கிராம்வெல்லே அரசரின் சமயத் தலைவரானார் (Vicar-General). திருச்சபைச் சொத்துக்களின் சரியான மதிப்பீடுகளைக் காண கிராம்வெல் தாம் புதிய பொறுப்பேற்றவுடன் முனைந்தார். பிஷப்புகள் கொடுத்துவந்த முதல் வருட வருமானத்தைக் கோயில் வருமானம்பெற்ற அனைவரையும் தம் முதல்

வருட வருமானத்தை அவருக்குக் கொடுக்கவேண்டுமென இப்போது கட்டளையிட்டார். அவருடைய நண்பரான கவர்டேல் (Coverdale) என்பார் விவிலிய நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பொன்றைச் செய்துகொண்டுவந்தார். போப்பாண்டவரின் பிரதிநிதிகளான 'ஃபாதர்'கள் (Fathers) எழுதிய நூல்களையும் திருச்சபைச் சட்டத்தையும், படிக்கக்கூடாதெனப் பல்கலைக் கழகங்களுக்கு ஒருமுறை சென்றுவந்த கிராம்வெல் கட்டளையிட்டு அவற்றை அழித்தார். திருச்சபையினர் சொத்துகள் அனைத்தையும் கைப்பற்றலாமா என்று சிந்தித்த அவர், திருச்சபை ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுத்துவிடலாம் என்று ஆலோசித்தபிறகு, மடாலயங்களைச் சென்று பார்த்து வந்தார். இம்முறை மடாலயங்களை அழிக்கத் தொடங்கினர்.

போர்க்காலங்களில் அந்நியர் வசமிருந்த மடங்களை ஓரளவு அழித்தார். சிறு மடாலயங்களின் சொத்துகளைக் கல்லூரிகளுக்கு மானியமாக்கினர். இப்படிச் செய்தபின்னரும் அறுநூறுக்கு மேற்பட்ட மடாலயங்கள் எஞ்சியிருந்தன. இம் மடாலயங்களில் ஏழாயிரம் மடாலயத் துறவிகளும், திரி துறவிகளும், பதவியேற்று முழு உரிமை பெற்றவர்களாய்த் திகழ்ந்தனர். இவற்றில், மேலும் ஏறத்தாழ இரண்டாயிரம் பெண் துறவியரும் இருந்தனர். அம் மடாலயங்களின் மொத்த வருமானம் ஏறத்தாழ 1,35,000 பவுன்கள் மதிப்புடையதாகும். அஃதாவது, இக்காலக் கணக்குப்படி அது 20,00,000பவுன்களுக்குச் சமமாகும். இவை தவிர அவற்றின் கட்டடங்கள், திருக்கோயில்கள், பண முதலீடுகள் ஆகியவை பெரும் மதிப்பைப் பெற்றிருந்தன. தலைப்பாகை அணிந்த இருபத்தேழு குருமார்கள் அரசாட்சியில் பிரபுக்களாக நியமிக்கப்பெற்றிருந்தனர். ஃபவுன்டன்ஸ், ரீடிங், பியூரி முதலான சிறப்புற்ற மடாலயங்களின் தலைவர்களை அவர்களின்கீழ் பணியாற்றிய எண்ணற்றவர்கள் இம் மடாலயங்களைச் சார்ந்து நின்றனர். அத்தகைய செல்வாக்குபெற்ற பெருந்தலைவர்கள் இம் மடாலயத் தலைவர்கள். இம் மடாலயங்களைப் பார்த்துவர கிராம்வெல்லால் அனுப்பப்பெற்றவர்கள் தாம் காணுதகையும் கண்டதையும் மிகைப்படுத்தியும், இல்லாததையும் பொல்லாததையும் புனைந்துரைத்தார்கள். ஏனெனில், இம் மடாலயங்களைக் காணச் சென்றவர்கள் கீழ்த்தரப் பண்புள்ள கயவர்கள். திருச்சபைக்கு எதிரான செய்திகளைப் புனைந்துரைக்கவேண்டியே அவர்கள் அனுப்பப்பெற்றார்கள். ஆனால், இம் மடாலயத் துறவிகளின் செல்வாக்குக் குறைந்திருந்ததும் உண்மைதான். அவர்கள் செய்த நன்மைகள் குறைந்துபோயிருந்தன. பல மடாலயங்கள் யாருமற்றுக் காணப்பெற்றமையைக் காரணமாகக் காட்டி, தம்

வீழ்ச்சிக்கு முன்னர் உல்ஸியே அவற்றை அழித்தார். கிராம் வெல்லின் ஆதிக்கக் காலத்திற்கு முன்பே பிஷப்புகளின் அறிக்கை களிலிருந்தும், மடாலயங்களைப் பார்த்து வந்தவர்களின் அறிக்கை களிலிருந்தும் மூன்று அல்லது நான்கு நம்பகமான செய்திகளைச் சேகரிக்கலாம்.

மடாலயமுறைக் கொள்கைகளின் உயர்ந்த லட்சியங்கள் லௌகிக இச்சைகளான மண்ணாசையிலும் பொன்னாசையிலும் ஈடுபட்டதனால் தாழ்ந்து சிறப்புக் குன்றின. இவர்கள் சில சமயங் களில் ஆடம்பரமான மாளிகைகளைக் கட்டிக்கொண்டு வாழ்ந்தனர் மடாலயக் குருமார்களில் சிலர், தமக்கு முன்னரோ அன்றி பக்கத்திலோ செல்ல குதிரை வீரர்களையும், அவ் வீரர்கள் ஏறி வந்த குதிரைகளுக்குப் பளபளப்பான கடிவாளங்களுமிட்டு அலங்கரித்தனர். பெண் துறவிகள் இடையில் பட்டு அரைஞாண் கயிறுகளை அணிந்தனர். நேசிப்புக்குப் பாத்திரமான நாய்களை ஆடம்பரப் பொருள்களாக வளர்த்துவந்தனர். ஈன்ஷாம் என்ற இடத்தில் மடாலயத் துறவியின் சகோதரி ஒருத்தியே மடாலயத்தைக் கண்காணிக்கும் பொறுப்பேற்றிருந்தாள். நார்விச் மடாலயத்தில், நாவிதர்களும் துணித் தைப்பவர்களும் தத்தம் குடும்பங்களுடன் வாழத் தலைப்பட்டனர். இவற்றால் இம் மடாலயங்கள் பெரும்பாலும் குடும்பங்கள்போல் காணப்பெற்றன. அவர்களைச் சுற்றியிருந்த லௌகிகரின் சூழ்நிலையும் ஒழுக்க வீழ்ச்சி யுற்றுக் கண்டிக்கத்தகுந்த முறையிலேயே தாழ்ந்திருந்தது.

அரசர்களும், அம் மடாலயங்களை நிறுவக் காரணமாயிருந்த பெரியாரின் சந்ததியினரும், தமக்கும், தம்மைப் பின்பற்றியவர் களுக்குத் தங்கியிருக்க இடத்தையும், உண்ண உணவையும் இவ் விடங்களே கொடுக்கவேண்டுமென வற்புறுத்தினர். மடாலயங் களின் அண்டை அயலில் இருந்த உயர்குலத்தோரும், சட்ட வல்லுநர்களும் திருச்சபை நீதிமன்றங்களில் காரியஸ்தர்களாகவும், திருச்சபைப் பண்ணைகளை உழுது பயிரிடும் நிலப்பிரப்புக்களு மாயினர். எனவே, மடாலயங்கள் தம் சொந்த நிலங்களை நீண்ட காலக் குத்தகைக்கு விட்டுவிட்டபடியால் பண்ணைகளைத் தம் நேர் பார்வையிலும் ஆதிக்கத்திலிருந்தும் இழந்தனர். இம் மடாலயத் துறவிகளில் பலர் தல செல்வர்களின் நண்பர்களாகி அவர்களிட மிருந்து வருட வருமானம் பெற்றும், தம் பாரிஷ் விவகாரங்களை அவர்களுக்குக் கொடுத்தும் வந்தமையால் மிகுந்த செவாக்குற்றுத் தனி வகுப்பினர்போன்று திகழ்ந்தனர். மடாலயங்கள் அழிக்கப் பட்டபோது இச் செல்வாக்குப்பெற்ற வகுப்பினர் தாம் பெற்றுவந்த சலுகைகள் மீண்டும் வேண்டுமெனக் கோரினர். அவர்களின் செல்வ

நிலையும் பெருங் குழப்பத்தில் சிக்குண்டிருந்தது. ஏனைய கூட்டுறவுக் கழகங்களைப்போன்று, இவற்றையும் மடாலயங்களில் பணியாற்றிய ஊழியர்கள் பொருளைக் கொள்ளையடித்தனர். மடாலயத்தின் பல விஷயங்களையும் கவனிக்க வெவ்வேறு துறையினர் தனித்தனியாக இருந்தனர். இத் துறைகளில் ஒழுங்கீனம் காணப்பெற்றது. மேலும், இவ்வனைத்தும் ஆட்சிப்பீடத்தின் அதிகாரியாக இருந்த மடாலயத் துறவியின் குண நலன்களுக்கேற்ப அமைந்திருந்தன. ஒழுக்க வீனரும் ஊதாரிகளும் தலைவர்களாக இருப்பின் ஒரு தலைமுறைக்கு இம் மடாலயங்கள் கடன்பட்டு நிற்கவேண்டிய நிலையும் இருந்தது. வெஸ்ட்மினிஸ்டர் மடாலயம் நீண்டகாலமாகக் கடனாளியாக நின்றது. பியூரி மடாலயத் தலைமைக் குரு சிக்கனத்திற்காக லண்டனில் வாழ்ந்துவரலானார்.

பொதுவான நிலை இதுதான்; மடாலயத் துறவிகள் பழைமை விரும்பிகளாயும் சோம்பலுற்ற நிலக்கிழார்களாயும் திகழ்ந்தமையால், புத்துலகில் அவர்களால் செல்வாக்குப்பெற இயலவில்லை. பீட்டர்பரோ போன்ற மடாலயங்கள் நிலத்தை வேலியிட்டு அடைக்கும் கொள்கையைப் பின்பற்றி நூற்றுக் கணக்கான குடியானவர்களை வேலையிலிருந்து விரட்டியபோது அவர்களின் கொள்கை வெறுப்புக்காளாகியது. அவர்களிடம் சிறு பிச்சை வாங்கும் எண்ணற்றவர்கள் அவர்களைச் சார்ந்து நின்றார்கள். எனினும், அவர்கள் ஏழைஎளியவர்களுக்குத் தொடர்ந்து கொடுத்துதவிய பொருள்தொகை பெரிதென்று கூறமுடியாது. அவர்கள் கல்விக்காகச் செய்த தொண்டைச் சிறிதெனப் பழித்துரைக்க முடியாது. சியான் என்ற இடத்திலிருந்த மடாலயத் துறவிகள் நல்ல நூல்களைத் தயாரித்துவந்தனர். துறவிகளாக வர இருந்த சிறந்த மாணவர்களை அவர்கள் பல்கலைக் கழகங்களுக்குப் பயிற்சிபெற அனுப்பிவைத்தனர். சில மடாலயங்கள், பையன்களுக்கும் பாடகர்களுக்குமான பண்ணைகளை நடத்திவந்தன. வின்செஸ்டர்போன்ற பெண் மடாலயங்களில் உயர்குல மக்கள் வீட்டுப் பெண்பிள்ளைகள் வாழ்ந்து கல்வி கற்றனர்.

திருச்சபையினர் செய்த குற்றங்களுக்கு விதிக்கப்பெற்ற தண்டனைகளோ அல்பமானவையாய் இருந்தன. கொடும் பாபம் செய்து ஒழுங்கற்ற நடத்தையில் ஈடுபட்ட மடாலயக் குருமார்கள், பதவியிலிருந்து விலக்கப்பெற்று, ஓய்வூதியம்பெற்று நலமாக வாழ்ந்தனர். மதுக்கடைகளைச் சுற்றிவந்த துறவிகள் துதிப் பாடல்களைப் பன்முறை ஓதும் தண்டனையைப் பெற்றனர். கிராமத் திருக்கோயில்களிலிருந்த சிறு குருமார்கள் அங்குக் காணப்பெருமலும், சிறு குடியானவர்கள் போன்றும் தண்டனையிலிருந்து

விலக்கப்பெற்றுக் காணப்பெற்றூர்கள். இறுதியாக, இம் மடாலயங்கள் தனித்து நின்றன. பிஷப்புகளும், திரி துறவிகளும் நெடுநாள் பகைவர்கள். எனவே அவர்கள் சேர்ந்து வாழவில்லை. லெளகிகர்கள் இத் திருச்சபைச் செல்வங்களைக்கண்டு வெறுப்புற்றனர். அவர்கள் போப்பாண்டவரை ஆதரித்து நின்று அதனுல் உயர்ச்சியையோ தாழ்ச்சியையோ பெற்றனர். பெரும்பாலான பெரும் மடாலயங்கள் போப்பாண்டவரின் நேரதிகாரத்திற்கே கட்டுப்பட்டவர்கள் என்று கூறிக்கொண்டனர். இதுதான் நாட்டில் 'காணப்பெற்ற பெரும்பான்மையான காட்சி. வால்ஷிங்ஹாம் என்ற இடத்தில் காணப்பெற்ற கெட்ட நடவடிக்கைகள் போன்றும், கிளாஸ்டன்பரியில் நிரூபிக்கப்பெற்ற தூயவாழ்க்கையும், ஹெக்ஸ்ஹாம் (Hexham) என்ற மடாலயத்தின் உதவிகளும் பொதுவான சூழ்நிலைக்கு எதிரான ஓரிரு தனித்த காட்சிகளாம். ஆனுல், பொதுவாகப் பார்க்குமிடத்தும், அதில் காணப்பெற்ற தன்மைகளின் அளவிலிருந்தும், இம் மடாலயங்கள் தம் தூய தொண்டுணர்ச்சியிலிருந்து வழுவி எளிமையும் இனிமையானதுமான வாழ்க்கை வாழ்ந்துவந்தமையால், அவை எதற்காக உருவாக்கப்பெற்றனவோ அத் தேவை பூர்த்தி செய்யப்படாது வாழ்ந்து வரலாயின.

இம் மடாலயங்களை என்ன செய்யவேண்டும் என்பதுபற்றி அரசரைச் சுற்றியிருந்தோரிடம் கருத்துவேறுபாடுகள் நிலவி வந்தன. கிராம்வெல் அவ்வளைத்தையும் அழிக்க வேண்டிய கருத்தைக்கொண்டிருந்தார் என்றல், கிரான்மரும் லாட்டிமரும், அவற்றில் சிலவற்றை மடாலயத் துறவிகளைப் பயிற்றுவிக்கும் பயிற்சிப் பள்ளிகளாகவும் அறநிலையங்களாகவும் தொடரவேண்டுமெனக் கருதினர். இதையே, சில தல உயர்குல மக்களும் சில சமயங்களில் கேட்டும் வந்தனர். இவ்விருவகைக் கருத்துகளுக்கும் ஒருவகை இணக்கமேற்பட்டபோதுதான் கி.பி. 1536ஆம் ஆண்டின் சட்டம் இயற்றப்பெற்றது. அதன்படி முந்நூற்று எழுபது சிறு மடாலயங்கள் கலைக்கப்பெற்றன. இருநூறு பவுனே அல்லது அதற்குக் குறைவான வருமானத்தையோ பெற்ற இம் மடாலயங்கள் அழிக்கப்பட்டபோது பாராளுமன்றத்தில் சிறிதேனும் எதிர்ப்பு எழவில்லை. ஆனுல், இச் சட்டத்துடன் சேர்ந்து சில கடுமையான 'கட்டளைகளும்' (Injunctions) வெளியாயின. அதன்படி மடாலய வாழ்க்கைமுறை பொறுக்கமுடியாத அளவுக்குக் கட்டுப்படுத்தப்பெற்றது. இளையவரான துறவிகள் தம் முதியோரைப் பழித்துரைக்கும்படி தூண்டிவிடப்பட்டனர். கி.பி. 1540ஆம் ஆண்டுவாக்கில் கடுமையான அச்சுறுத்தலின் விளைவாகவும், தனிப்பட்ட மடாலயத் துறவிகளின் ஒப்புதலைப்

பெற்றும், அல்லது கத்தோலிக்கச் சமயத்தை எதிர்த்தால் அவர்களுக்குக் கிடைத்த பங்கையும் ஏற்று வந்தமையால், பெரும்பாலான மடாலயங்கள் அரசரைச் சரணடைந்தன. பாராளுமன்றம் சட்டமியற்றி அம் மடாலயங்களை அழிப்பதற்கு முன்னமே இக் கதி ஏற்பட்டதால் இம் மடாலயங்கள் சீர்குலைந்தன.

மடாலயங்களின் முடிவையும் அதனால் ஏற்படும் பலன்களையும் எதிர்பார்த்து, மடாலயங்களைக் கலைத்ததால் பெரும் நஷ்டம் ஏற்பட்டுவிட்டதென்றோ, மனிதப் பண்புக்கு முரணானதென்றோ கொள்வது தவறாகும். சில ஆண்டுகளுக்கு, பொருள் சேர்க்கும் நீதி மன்றம் ஒன்று நிறுவப்பெற்று, இம் மடாலயங்களின் பொருளைக் கட்டுப்படுத்திவந்தது. இதனால், அரசருக்கு 1,00,000 பவுன்கள் வருவாய் கிட்டியது. இம் மடாலயத் திருச்சபைகள் இருந்த இடத்தில் ஆறு புதிய பிஷப்பிரிக்குகள் நிறுவப்பெற்றன. பெரும்பாலான மடாலயத் துறவிகள் ஓய்வூதியம் பெற்றனர். பலர் திருமணம் செய்துகொண்டு வாழத் தலைப்பட்டனர். இம் மடாலயத் துறவிகள் ஆச்சரியப்படும் வகையில் பலர் பாரிஷ் பாதிரிகளாக எலிஸபெத்தின் காலம் வரை தொடர்ந்து பணியாற்றினர். முன்னர் மடாலயத் திருக்கோயில்களாக இருந்த எட்டு இடங்களில் பல துறவிகள் திருச்சபை விதிகளைத் தொடர்ந்து கடைப்பிடித்து வந்தனர். வெஸ்ட்மினிஸ்டரின் குருவானவர் அதன் டீன் என்ற பதவியேற்றார். பீட்டர்பரோவின் குரு தம் பழைய மடாலயத்திலேயே அதன் பிஷப்பாகப் பணியாற்றினர். கல்விக்கு அவர்கள் செய்த பெருந் தொண்டும், அறநிலையங்களைப் பாதுகாத்தலுமே, இம் மடாலயங்கள் அழிக்கப்பெற்றதால் பாதிக்கப்பெற்று, சமுதாயத்திற்கு நஷ்டம் ஏற்பட்டது. பெரும்பாலான இம் மடாலயப் பள்ளிகளிலேதான், பெண்கள் கல்வி கற்க வாய்ப்பேற்பட்டது. இவை அழிக்கப்பெற்றதால் பல்கலைக் கழகங்களுக்குச் செல்லும் மாணவர்கள் பலரின் வாய்ப்புகள் அழிந்தன. ஆனால், ஹென்றி, லண்டனிலிருந்த பெரும்பாலான ஆஸ்பத்திரிகளைக் கைப்பற்றிக்கொண்டார். ஆறும் எட்வர்டின் காலத்தில், 'மூடப் பழக்கம்' என்ற போர்வையில் அரசாங்கம் சான்டரிகளுடனும், பாரிஷ் கில்டுகளுடனும் இணைக்கப்பெற்றிருந்த பள்ளிகளைக் கலைத்து விட்டது. திருச்சபைத் தொண்டில் ஈடுபடச் சென்றவர்களின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்தது. இதன் விளைவாகப் பிற்காலத்தில் எலிஸபெத்தின் காலத்தில் வளர்ந்த பியூரிட்டானிஸம் என்னும் கடும் தூய்மைச் சமயத்தினர் சிறு அளவில் உருவாயினர்.

மடாலயங்களைக் கலைத்ததனால் அரசியலில் ஈடுபட்டு ஆதிக்கம் செலுத்திய வகுப்பினர் அனைவரும் ஆதாயம் பெற்றுக்

கிடைத்ததைப் பகிர்ந்து கொண்டனர். நார்ஃபோக், பேகட் (Paget) போன்ற கத்தோலிக்கரும், புதிய அரசாட்சியில் உயர்ந்து வந்த அரசியல்வாதிகளான செஸில், ரஸ்ஸல் போன்றவர்களுடன் சேர்ந்துகொண்டனர். புதிதாகப் பல அரசியல் குடும்பங்கள் இதனுல் நிறுவப்படலாயின. கிராம்வெல்லின் உறவினரும் பின்னுல் வர இருந்த ஆலிவர் கிராம்வெல்லின் முன்னேருமான ஒருவர், ஹின்சிங்புருக் என்ற இடத்தில் தம் குடும்பத்தை நிலை நாட்டினுர். ஹென்றி சாவதற்குள் மடாலய நிலங்களில் மூன்றிலிரண்டு பங்கு நிலங்களைப் பெரும்பாலும் நன்கொடையாகக் கொடுப்பதற்கு மாருக அவற்றை விற்றுவிட்டார். மிகுதியிருந்த நிலம் அரசருக்குரியதெனக் கொண்டு அவற்றை குத்தகைக்கு விற்றனர். தொடக்கத்தில் இந் நிலமானியங்கள், ஏறத்தாழ ஓராயிரம் பேர்களுக்கும் கூட்டு நிறுவனங்களுக்கும் கொடுக்கப்பட்டபோதிலும், லண்டன் மாநகர, துணிந்து வாணிகம் செய்யும் வியாபாரிகள் (speculators) சுறுசுறுப்பு மிக்கவர்களாகி, பெரும் பங்கு நிலங்களை மத்திய வகுப்பினருக்குத் திரும்பவும் விற்றுவிட்டனர். சமயச் சீர்திருத்த இயக்கத்தின்போது அரசரை ஆதரித்த செல்வாக்குமிக்க இவர்கள் காலப்போக்கில் மாறலாயினர். திருச்சபைச் சொத்துகளைக் கொள்ளையடிப்பதில் பல நிலையில் இருப்பவர்களும் பங்குகொண்டனர். உயர்ந்த அரசாங்க ஊழியர்கள் முதல் சிறு பார்வையாளர்களின் குதிரைப் பாகர் வரையிலுள்ள எல்லோரும் கொள்ளையிடுவதில் உற்சாகம் காட்டினர். திருச்சபை ஆடைகளைக் குதிரைப் பாகர்கள் தம் குதிரைகளுக்குத் தேவையான சேணத்துணியாகப் பயன்படுத்தத் திருடிக்கொண்டனர். திருக்கோயில் கூரைகள் ஈயத் தகட்டால் வேயப்பட்டிருந்தன. குடியானவர்கள் அவ் ஈயத் தகடுகளை அபகரித்துக்கொண்டனர். திருச்சபையிலிருந்து கொண்டுசென்ற கற்களைப் பயன்படுத்தி உழவர்கள் மாட்டுத் தொழுவங்களைக் கட்டிக்கொண்டனர். ஆரும் எட்வர்டின் காலத்தில் சீர்திருத்தவாதிகள் இப் புதிய நிலக்கிழார்களின் கொடுமைகளைக் கண்டித்தனர். அறநிலையங்கள் சரிந்து குலைந்து போனதையும், திருக்கோயில் நிலங்களைப் பறித்ததனுல் ஏற்பட்ட தவற்றையும் உணர்ந்தவர்கள் ஆனுர்கள். இவர்களும் சீர்திருத்தவாதிகளும் கண்டிக்கப்படலாயினர். ‘அவர்களின் கையில் இன்னும் இருப்பதே திருச்சபை காமன்வெல்த்துக்கு மிகுந்த லாபகரமானதாகும்’ என்று ஒருவர் எழுதினுர்.

இம் மடாலயங்கள் கலைக்கப்படுவதற்கு முன்னரே சமயச் சீர்திருத்தத்திற்கு மூலகாரணமாக இருந்த ஹென்றி மன்னரின் திருமணம் வேறு பலவற்றுடன் இணைந்து பெரும் முடிவுகளைக் கொடுப்பதாக அமையலாயிற்று. கி.பி. 1536 ஜனவரியில்

ஆரகான் இளவரசி காதரின் இறந்துபோகவே அவளின் காரண மாகப் போர் ஏற்படலாம் என்று அஞ்சிய ஹென்றிக்கு அச்சமும் நீங்கலாயிற்று. மே மாதத்தில் சோரம்போனவள் என்ற காரணம் காட்டி, ஹென்றி, ஆன் பொலீனையும் தூக்கிலிட்டார். உண்மையில், ஆன் பொலீன் சோரம்போனதற்கான சான்றுகள் இருக்கவில்லையென்றாலும், அவளுடைய நடத்தையைக் கண்ணுற்ற வர்கள் அதை நம்பமுடியாததன்று என்று கொள்ளவும் துணிய மாட்டார்கள். ஹென்றிக்கு அவள் மிகுந்த சலிப்பைத் தந்தாள். பேரரசுவாதிகளையும் பழைமை விரும்பிகளையும், அவளது மரணத்தால் சமாதானம் செய்விக்க முடியும் என்று எண்ணிய ஹென்றி, அவள் இறந்த பத்து நாட்களில் ஜேன் செய்மூர் என்பாளை மணந்துகொண்டார். எச்சரிக்கையாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற புதிய பாராளுமன்றம் கூடியபோது எலிஸபெத் காமக்கிழத்தியின் மகளானபடியால் அவள் வாரிசுரிமைக்குத் தகுதியற்றவள் என்ற கிரான்மரின் கருத்தை எதிரொலித்தது. இப் பாராளுமன்றம் ஹென்றியே தமக்குப் பின்னர் வாரிசுரிமை பெறவேண்டியவர்களை உயில்மூலம் நிர்ணயிக்கவேண்டுமென்று அரசருக்கு அதிகாரம் அளித்தது.

இருந்தபோதிலும் சமயச் சீர்திருத்தத்திற்கான எதிர்த் தாக்குதல் ஒன்றும் ஏற்படவில்லை. ஏனெனில், சமயச் சீர்திருத்தம் என்பது ஒரு தீவிரமான விவகாரம் ஆகும். அதை ஹென்றியின் சபல நிலைப்பின் ஏற்றத் தாழ்வுகளால் மாற்ற முடியவில்லை. கத்தோலிக்க நிறுவனங்களின்மீது ஏற்பட்ட தாக்குதல்களைச் சமாளித்து நிற்கக் கத்தோலிக்கச் சமயத்தால் முடியவில்லை. பல நூற்றாண்டுகளாக (ரோமானிய)ப் போப்பாண்டவரின் ஆதிக்கத் திற்கு எதிர்ப்புகள் இருந்தேவந்திருக்கின்றன. எதிர்ப்பு வந்த போதெல்லாம் எதிர்ப்புக்கான காரணங்களும் எப்போதும் ஒருவித மாகவே இருந்தன. கத்தோலிக்கச் சமயத்தில் விவிலிய நூலின் விதிப்படி நடப்பது ஒவ்வொரு தனிப்பட்ட மனிதனின் உரிமை யெனக்கொண்டார்கள்; அல்லது திருச்சபையினரின் அதிகாரத் தைக் குறைக்கவேண்டுமென தேசிய நிறுவனங்கள் கேட்டதை மறுத் தார்கள்; அல்லது கிறிஸ்துவ உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் போப்பாண்டவரின் ஆதிக்கமே நிலைநிறுத்தப்பட வேண்டுமெனக் கேட்டனர். மேற்கூறிய விஷயங்களில் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து பல சச்சரவுகள் இருந்தேவந்தன. போப்பாண்டவரின் அதிகாரம் குறைக்கப்படுவது சமயச் சீர்திருத்தச் சித்தாந்த வாதிகளைத் திருப்தியுறச் செய்யும். திருச்சபையின் அதி காரத்தைக் குறைத்து தேசிய நிறுவனங்களைப் பலப்படுத்துவ தென்பது அரசியல்வாதிகளைத் திருப்தி செய்யும். ஆனால், சமயச்

சீர்திருத்தத்தின் தீவிரமெல்லாம், இதற்கு முன்னர் ஏற்பட்ட சமய மறுமலர்ச்சியைப் போன்று, விவிலிய நூலைப் போற்றுவது தனிப் பட்ட மனிதனின் உரிமையென்பதையே பொறுத்திருந்தது. திருச் சபைக்கெதிராக வந்த கருத்துகளைத் தொடர்புபடுத்திப் பார்த்தால் இக் கருத்துகள் செயின்ட் அகஸ்டினின் சிந்தனையின் காலத்தி லிருந்து வந்ததெனலாம். சமய நம்பிக்கையை நேர்மை எனக் கொண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்ற திருச்சபையினர். சமயச் சடங்குகளாலோ அன்றிச் சமய 'நூல்களாலோ' சார்ந்திராமல் ஏசுநாதரின் திறமையையும் தகுதியையுமே சார்ந்து, அவற்றால் பாதுகாக்கப்படல், இதன்மூலம் மோட்சத்தை முன்கூட்டிப்பெற இந் நம்பிக்கை உதவுவது ஆகியவை பல காலமாகப் பேசப்பட்டு வந்திருக்கின்றன.

இங்ஙனம், சமயத்தின் தனிப்பெரும் தலைவரான ஹென்றியே, சமயத்திற்கான வரையறைகளையும் அதிகார வரம்புகளையும் கூற வேண்டியவரானார். ஹென்றி, அனபாப்டிஸ்ட் எனும் மறுமுறை ஞான நீராடியவர்களையும் கத்தோலிக்கருடன் எரித்தபோதிலும் அவர் அமைதியை நிலைநாட்ட முயன்றது பயனற்றுப்போய் விட்டது. ஏனெனில், நாடு முழுவதிலும் சமயச் சண்டைகளின் எதிரொலி கேட்கலாயிற்று. கிழக்கு ஆங்கிலியர்கள் சிலுவைகளைக் கொளுத்தினர். சமயத்தில் தூய்மை விரும்பிகளான ப்யூரிட் டன்கள் சமய ஆடைகளையும் சமயக் கருவிகளையும் தாக்கினர். ஜெர்மனியிலும் சுவிட்ஸர்லாந்திலும் எங்கும் சமயச் சச்சரவுகள் தென்படலாயின. திருச்சபைத் துறவிகள் மணம்செய்துகொள்வது பற்றியும் விவிலிய நூலைப் படிப்பதுபற்றியும் ஐரோப்பாவெங்கும் சச்சரவுகள் ஏற்பட்டுவந்தன. இச் சச்சரவு இக்காலத்தில் இங்கி லாந்தையும் பீடிக்கத் தொடங்கின. கி.பி. 1536-ல் அரசாங்கம் திருச்சபையினரை மேலும் அதன் கட்டுப்பாட்டின்கீழ்க் கொணர இரு நடவடிக்கைகளை மேற்கொண்டது. 'பத்து விதிகள்' (Ten Articles) என்ற புதிய சட்டம் ஒன்றை உண்டாக்கி, அதை பிஷப்புக ளிடையே காணப்பெற்ற இரு கட்சிகளும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென அரசர் வலியுறுத்தினார். இவ் விதிகள் பழைமை விரும்பிகளின் பத்திரமாகும். இவ் விதிகளின்படி, அவை மூன்று சமயச் சடங்குகளையே நிலைநாட்டின என்றாலும், அவ் விதிகள், ரொட்டியும் சாராயமும் கிறிஸ்துவின் தசையாகவும் இரத்தமாகவும் மாறிவிடும் என்று நம்பும் 'பொருள் மாற்றக்' கொள்கையை அங்கி கரித்தன. சமயத்தைப்போன்று நல்ல நூல்களையும் அனுமதித் தன. பாபவிமோசன ஸ்தானத்தை அவை கண்டித்தாலும், உருவச் சிலைகளைப் பயன்படுத்துவதை அவை ஒப்புக்கொண்டன. கிராம் வெல் அவற்றைப் பல கட்டளைகளுடன் குறித்துக்கொடுத்தார்.

அதனால், சடங்குகளும் நம்பிக்கைக்குப் பாத்திரமான பொருள் களும் வேறுபடுத்தப்பெற்றன. அத்துடன் சமயப் பணியும் அற நிலையப் பாதுகாப்புமே உண்மையான சமயமென்றும், அவை புனித யாத்திரையையும் சமய எச்சங்களையும்விட சிறந்தவையென்றும், ஆங்கிலத்தில் கட்டளைகளைப் போதிக்கவேண்டுமென்றும் ஆணை யிட்டு, ஒவ்வொரு திருச்சபையிலும் ஒவ்வோர் ஆங்கில விவிலிய நூல் இருக்கவேண்டுமென்றும் பணித்தார். இவற்றை அவர் விடுக்க முயற்சிசெய்தபோது கத்தோலிக்க இங்கிலாந்து இறுதி யான கலகம்செய்ய முற்பட்டது. 

எட்டாம் ஹென்றியின் ஆட்சியின் நெருக்கடியான காலமாக இஃது அமையலாயிற்று. ஏனெனில், ஹென்றிக்கு எதிராக நின்ற பெரும் ஆபத்துகளைக் கத்தோலிக்கச் சமயம் ஒன்றாக ஐக்கியப் படுத்தி ஹென்றியை எதிர்க்க முற்படலாம். தம்முடைய மகள் மேரிக்கு அவர் தவறுகள் இழைத்திருந்தார். யார்க்கியரது ரத்தக் கலப்புபெற்ற டெலாபோல் குடும்பத்தினருக்கும் அவர் கொடுமைகள் இழைத்திருந்தார். ஐந்தாம் சார்லஸும் ஃபிரான்ஸின் அரசர் முதலாம் ஃபிரான்சிஸ் என்பாரும் ஹென்றிக்கு எதிராகக் கூட்டுச்சேர்ந்தனர். போப்பாண்டவர் அவரை மதப் பிரஷ்டம் செய்திருந்தார். போதாக்குறைக்கு ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலும் பழைய குழப்பங்கள் நீடித்துத் தொடரலாயின. இத்துணை எதிர்ப்புகள் இணைந்திருந்தாலும், ஹென்றி வெற்றித் திருமகளை மணந்திருந்தபடியால் அவருக்கு நல்லயோகம் அடித்தது. கி.பி. 1538ஆம் ஆண்டு வரை பேரரசும் ஃபிரான்ஸும் போரில் ஈடுபட்டிருந்தன. அவர்கள் இங்கிலாந்தின் நட்புறவை நாடிப் போட்டியிட்டுக்கொண்டமையால், போப்பாண்டவரின் பிரதி நிதியான ரெஜினல்ட் போல் என்பாரைத் தம் நாட்டு எல்லைகளுக் குள் வரலாகாது என்று கட்டளையிட்டனர். இங்கிலாந்தின் வட பாகம் கிளர்ந்தெழுவதற்கு முன்னர் அயர்லாந்து அடக்கப்பட்டது. வடபாகத்திற்குக் கேந்திரம் கிடையாது ; யார்க்கியரை நடத்திச் செல்லும் தலைவருமில்லை. இவ்விருவரும் போப்பாண்டவரின் மதப்பிரஷ்ட ஆணை வரும் முன்னர் தகர்த்துக் குலைக்கப்பெற்றனர்.

எட்டாம் ஹென்றிக்கு எதிராகக்கிளம்பிய இக்கலகக்காரர்களை 'அருள் யாத்திரை'யினர் (Pilgrimage of Grace) என்பர். இவர்கள் கத்தோலிக்க இங்கிலாந்தின் பிரதிநிதிகளோடன்றி, மரண தண்டனை விதிக்கப்பட்டாற்போன்று தென்பட்ட பழைய இங்கிலாந்து முழுமைக்கும் பிரதிநிதிகள்போல் காணப் பெற்றனர். கி.பி. 1536ஆம் ஆண்டில் இக் கலகக்காரர்கள் லிங்கன்ஷயரில் திருச்சபைக் கோயில்களை அரசர் அழித்ததை

யும் புதிய வரிவிதிப்புகளையும் எதிர்த்துக் கிளர்ச்சியில் இறங்கினர். யார்க்ஷயர் முழுவதும் இக் கலகம் பரவலாயிற்று. அங்கு டி'ஆர்க்கி போன்ற பிரபுக்களை இக் கலகக்காரர்கள் தம் வசப்படுத்திக்கொண்டனர். ஏனெனில், அப் பகுதியின் தல அரசாங்கம் அவரின் செல்வாக்கைச் சார்ந்து நின்றது. ஃபவுன்டன்ஸ் அல்து போல்ட்டன்போன்ற பெரும் திருக்கோயில் களும், டெம்பெஸ்ட்டுகள், கான்ஸ்டபிள்கள், கிளிஃப்போர்டுகள் போன்ற நாட்டுப்புற உயர் குடிமக்களும் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். அவர்கள் செய்த கொடுமையால் அவர்கள் விண்மீன் மன்றத்திற்கு எப்போதும் வந்து சென்றனர். அவர்கள் பற்பல காரணங்களுக்காக அரசரை எதிர்த்தமையால் அவர்களின் போராட்டத்தில் ஒற்றுமையிருக்கவில்லை; அவர்கள் பிரிந்துபிளவுண்டிருந்தனர். மீண்டும் மடாலயங்கள் நிலைநாட்டப்பெற வேண்டி கத்தோலிக்கர் நிலங்களுக்கு வேலியுடைத்ததை எதிர்த்த குடியான வர்கள், தங்களுடைய நில உரிமையைப் பாதுகாக்க முனைந்தவர் களான எல்லைப்புற உழவர்கள் ஆகியோர் பெருமக்களான ஸ்கொயர் என்பார்களுடன் சேர்ந்துகொண்டனர்.

இவ்வனைவரும் மேற்கூறியவற்றைஏன் கேட்டனர் எனில் அதில் அவர்களுக்கு லாபமும் ஆதாயமும் இணைந்திருந்தன. அரசரின் புதிய கட்டுப்பாடுகளையும், அவர் அதிகாரங்களனைத்தையும் தம்மிடம் ஒருங்கே ஒன்றுசேர்ந்து மையப்படுத்திக்கொண்டதை யும் வெறுத்தவர்களான அவர்கள், அரசர், கிராம்வெல்லையும் கிரான்மரையும் பதவியிலிருந்து விலக்கவேண்டுமென்றும், அரசரின் குறுக்கீடற்றுத் தேர்தெடுக்கப்பெற்ற பாராளுமன்றத்தை அவர் யார்க்கில் கூட்டவேண்டுமென்றும் கோரிக்கை விடுத்தனர். இதே யாண்டில் அரசர் கொண்டுவந்த சில புதிய சட்டங்கள் பல வகுப்புகளைக் கோபம் கொள்ளும்படி செய்தன. உயர்குல மக்கள், நிலங்களை அறநிலையங்களுக்கும் அல்லது 'பயன்படுத்துதலுக்கும்' கொடுக்கப்பட்டால் அந் நிலங்களைத் தாமே உரிமைப்படுத்திக் கொண்டு வரிவிதிப்பையும் ஏமாற்றச் சந்தர்ப்பம் பார்த்தனர். கிராம்வெல் நீண்ட நாட்களாக முயன்று, காமன்ஸ் சபையினர் இதை நிறுத்திவிடவேண்டுமெனத் தூண்டினர். ஆனால், இந்த ஆண்டில்தான் 'பயன்படுத்துதல்பற்றிய சட்டத்'தைக் (Statute of Uses) கொணர்ந்து வெற்றிபெற்றார். இவற்றுடன் வேறு சில தீவிரமான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பெற்றன. டர்ஹாம், ஹேக்ஸ்ஹாம் போன்ற அரச நீதிமன்றங்கள் தனிச் சிறப்புரிமை களைப்பெற்று அரசரின் ஆட்சி செல்லுபடியாகாதபடி இருந்தன. அவற்றையும் அரசரே எடுத்துக்கொண்டு அரசரின் அதிகாரம் அவ்விடங்களிலும் செல்லுபடியாகும்படி செய்துகொண்டார்.

இதனுல் ரிப்பன், பீவர்லிபோன்ற திருக்கோயில்களில் தஞ்சம் புகுந்திருந்த கொடுங் குற்றவாளிகள் பெரும் அல்லலுற்றனர். பிராட்ஃபோர்ட், வேக்ஃபீல்ட்போன்ற இடங்களின் கம்பள வியாபாரிகளும் துணி வியாபாரிகளும் செய்துவந்த மோசடிகளுக்கெதிராகப் புதுச் சட்டதிட்டங்கள் வந்ததைப்பொருது அவர்களும் குடியானவர்களுடன் சேர்ந்துகொண்டனர். விலேவாசிகளில் ஏற்பட்ட உயர்விஞலும் பெரும்பாலான மக்கள் பாதிக்கப்பெற்றனர். 'பெர்ஸிகளுக்கு ஆயிரங்கள் ஏன்' என்ற கடுமையான எதிர்ப்பொலிகளுடன், சீப்சைடின் கொள்ளேயைக் கொண்டு வருவோம் என்றும் பயங்கர அச்சுறுத்தல்கள் கிளம்பின. சமயம் என்ற போர்வையில் சிலவேளேகளில் கிளர்ச்சிகள் எழுந்தன. சில வேளேகளில் சமயமே நாட்டில் நிலவிய மனக்குறைகள் அனைத்தையும் ஒன்ருக இணைக்கும் சாந்தாக மாறி, அரச ஆதிக்கத்தைப் பெரிதாகப் போற்றிய பிரசாரங்களுக்கெதிராகத் தூண்டப்பட்டது. மடாலயங்களிலிருந்து விரட்டப்பெற்ற துறவிகளும் வடபாகத்து அரசியல் உணர்ச்சியால் தூண்டப்பெற்றவர்களும் சேர்ந்து இக் கிளர்ச்சியை மூட்டிவிட்டார்கள். இவர்கள் இன்னும் தாமஸ் லங்காஸ்டிரரின் திருக்கோயிலுக்கும், ஆர்ச்பிசப் ஸ்க்ரோப்பின் ஆலயத்திற்கும் சென்று ஆராதனேகள் செய்துவந்தனர். சில வேளேகளில் அவர்தம் லட்சியம் தூயதாக இருந்தது. குறிப்பாக இதை லங்காஷயரில் காணலாம். இங்கிருந்த குடியானவர்கள் ஒரு கீதம் இசைத்தார்கள். அது பின்வருமாறு :

'ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டார்,
ஏனெனில் உங்களுடைய பாபங்கள் பெரியவை
காமன்ஸ் சபையாகிய நாம் வழிகாட்டுவோம்
கடவுளின் அருள் நமக்கு இருக்கும்
அதன்மூலம் பழைய செல்வத்தையும்
அமைதியையும் நிலே நாட்டுவோம்'

ஆனுல், பழைமை விரும்பிகளால் தூண்டப்பெற்ற இக் கலகம் அரசருக்கெதிராக ஒருவார்த்தையும் கூறவில்லே. அவர்கள் அரசரை நம்பினுர்கள். அவர்களின் வெறுப்புக்கு இலக்கானவர் கிராம்வெல் ஒருவரே. யார்க்ஷயர் மக்கள் கிராம்வெலே ஹாமன் (Haman) என்று அழைத்தனர். அக் கலகக்காரர்களின் தலேவரான டி'ஆர்க்கி என்பார் தம்மை அரசரின் உண்மை ஊழியர் என்று சொல்லிக்கொண்டதுடன் தம் லட்சியம் 'ஒரு கடவுள், ஒரு சமயம், ஓர் அரசர்' என்பதில் இருப்பதாகவும் கூறிக்கொண்டார்.

லிங்கன்ஷயரில் கிளம்பிய கலகம் பதினேந்து நாட்களுக்குள் முடிவடைந்துவிட்டது. ஏனெனில், பிரபுக்கள் அரசருக்கெதிராகக்

கிளம்பத் தயங்கினர். அத்துடன் அரசர் பல எச்சரிக்கைகளையும் அச்சுறுத்தல்களையும் ஏவிவிட்டு அவர்களைப் பழித்துரைத்தார். அரசருக்கெதிராகக் கிளம்பிய இந்த ஒரு ஷயரின் தைரியம், அரசு முழுமைக்கும் எதிராகக் கிளம்பிய கொடுமையும் விலங்குத் தன்மையும் பெற்றதாகும் என்றும், இதில் அந்த ஷயரின் சாமானிய மக்கள் பங்குகொள்வது தகாது என்றும் அரசரின் அமைச்சர்களின் கூற்றுப்படி அவரும் அறிக்கைவிட்டார். அவர்கள் அரசனுக்கு விசுவாசம் தெரிவிக்கவேண்டிய கடமைப்பட்டவர்கள்: ஏனெனில், இது கடவுளின் கட்டளையாகும். கடவுளால் அனுப்பப் பெற்ற இவ்வரசர் முப்பதாண்டுக் காலம் மக்களின் ஆட்சியில் கழித்திருக்கிறார். 'ஐயன்மீர்! இஃது உங்கள் சொந்த நாடான இங்கிலாந்துக்கு அவமானம் பயப்பதாகும்' என்றும் அமைச்சர்கள் முழங்கினர்.

ஆனால், யார்க்ஷயர் கலகம் அவ்வளவு எளிதில் அடங்குவதாக இல்லை. ஏனெனில், அங்குக் கலகத்தின் தலைவராக இருந்த ராபர்ட் ஆஸ்க் (Robert Aske) என்பார் கிழக்கு ரைடிங்கிலிருந்த வழக்கறிஞர் ஆவார். எழுத்து வாசனையற்ற குடியானவப் பொது மக்களை அமைதியான முறையில் தூண்டிவிட்டுக் கிளர்ச்சி நடத்தினர் அவர். அக்டோபர் மாத இறுதிக்குள் அவருடைய படைவீரர்கள் யார்க்கில் நுழைந்தனர். டேன்லாப் பகுதியிலுள்ள ஹெண்டிரடுகளுக்கு வேப்பன்டேக்குகள் என்று பெயர். இவ்வேப்பன் டேக்குகள் ஒவ்வொன்றும் தத்தம் திருச்சபையின் சிலுவை ஏந்திக் கொண்டு அணிவகுத்துச் சென்றன. ஹல் என்ற இடமும் போண்டி ஃபிராக்ட் என்ற அரசருடைய கோட்டை நகரமும் கலக்கக்காரர் களுக்குச் சரண் அடைந்தன. கெண்டால் (Kendal) வீரர்கள் லங்காஸ்டரில் புகுந்தனர். கலகக்காரரிடம் இத் தருணத்தில் படைக்கலம் ஏந்திய 40,000 பேர்கள் இருந்தனர். இவர்கள் யார்க்ஷயர் முழுவதிலிருந்து மட்டுமன்றி, கத்பெர்ட்டின் சின்ன மேந்திய பிஷப்பிரிக்குகளைச் சேர்ந்தார் அனைவரையும் உட்கொண் டிருந்தது. வடபாகப்பள்ளத்தாக்குகளைச் சேர்ந்த குதிரை வீரர்கள் ஏரி மாவட்ட மக்களுக்குத் தலைமைதாங்கி வந்தனர். யார்க்கின் ஆர்ச்பிஷப்பும் பெரும்பாலும் இக் கலகக்காரர்களை ஆதரித்து அவர்களுடன் இணைந்தவரானர். நார்த்தம்பர்லாந்து பிரபுவின் சகோதரரான தாமஸ் பெர்ஸி என்பாரும் போருக்கு ஆயத்தமாகிக் கிளம்பியிருந்தார். அவரிடம் வடபாகத்திலிருந்த பிரபுக்களில் அரைப் பங்கினரும், அரைப் பங்குக்கும் மேற்பட்ட ஸ்கொயர் என்னும் உயர்குலத்தோரும் இருந்தனர். ராபர்ட் ஆஸ்க்கின் கலகக்காரச் சேனையின் திறமையின் காரணமாக நார்ஃபோக் பிரபு போர் நிறுத்த ஒப்பந்தத்திற்கு இணங்கவேண்டியவரானர்.

உள்நாட்டுக் கலகம் வேண்டிய தீவிரவாதிகள் தடுத்து நிறுத்தப் பெற்றதுடன், ஹென்றியின் சாக்குப்போக்குச் சொல்லுகிற பதில்களை அவர்கள் உதறி எறிந்துவிட்டனர்.

அவ்வாண்டு டிசம்பர் மாதத்தில் 'அருள் யாத்திரை' யினர் தங்களுடைய முழு திட்டத்தையும் தீர்மானித்தனர். விக்லி∴ப், லூதர், டைண்டேல் போன்றோர்களின் நூல்களை அழித்துவிடவேண்டு மென்று அவர்கள் கோரினர். அத்துடன் ஒருசில மடாலயங் களையும் திருக்கோயில்களையுமாவது திரும்ப நிலைநாட்டவேண்டு மென்றும், போப்பாண்டவரின் சமய ஆதிக்கம் ஒன்றைமட்டும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும் கேட்டனர். மேரி இளவரசியை வாரிசுரிமைக்கு ஏற்றவளாகக் கருதவேண்டும் என்றும், 'பயன் படுத்தும்' சட்டத்தையும் துரோகக் குற்றச்சட்டத்தையும் விலக்க வேண்டுமென்றும், கிராம்வெல்லைப் பதவியிலிருந்து நீக்கவேண்டு மென்றும், பொதுச் சட்டத்தைப் பறிக்கும் ஆலோசனை சபையின் அதிகாரங்களைத் தடுக்கவேண்டுமென்றும், நிலங்களுக்கு வேலி யமைத்தலை நிறுத்தவேண்டுமென்றும், பாராளுமன்றக் கூட்ட மொன்றை வடக்கில் நடத்தவேண்டுமென்றும், பீவர்லி, கெண்டால் போன்ற புதிய பரோக்களுக்குப் பாராளுமன்றத்தில் இடங்கள் ஒதுக்கப்படவேண்டுமென்றும் கேட்டனர். அரசருக்குக் காலம் தேவைப்பட்டதால் நடவடிக்கைகள் எதுவும் தீவிரமாக எடுக்கப் படவில்லை. நார்∴போக் கலகக்காரர்கள் அனைவரையும் மன்னித்து விடுவதாகவும், பாராளுமன்றத்தை வடக்கில் கூட்ட முயற்சிப்ப தாகவும் வாக்குறுதி கொடுத்தவுடன், 'அருள் யாத்திரை' வீரர்கள் கலைந்துசென்றனர். ஆஸ்க், அங்கிருந்து லண்டன் சென்று அரசரைப் பேட்டி கண்டார். தாம் கொடுத்த வாக்குறுதிகளைக் காப்பாற்றவேண்டுமென்று கபடமே உருவான ஹென்றியிடம் வேண்டினர்.

ஆனால், வடபாகத்தில் முரட்டுத்தன்மை மிக்குற்று நின்றமை யால் ஆஸ்க்கின் மிதவாதக் கொள்கைகளை அவர்கள் எதிர்த் தனர். அரசர் வடபாகத்தில் இருந்த கலகக்காரர்களைப் பிடிக்கும் சூழ்ச்சியில் ஈடுபட்டார். வடபாகத்தின்மீது படையெடுத்து அவர்களை எதிர்ப்பதாகப் போக்குக்காட்டினால், கலகக்காரர்கள் இரண்டுபட்டுவிடுவர் என்று அரசர் எண்ணினர். பிரபுக்களைச் 'சட்டத்தின் சுமை கூலியாக' வந்த ஆஸ்க்குக்கு எதிராகப் பயன் படுத்திக்கொண்டார். குடியானவர்கள் எப்போதும் இவ்வகைத் துரோகத்தை எதிர்பார்த்திருந்தனர். லீட்ஸ் திருச்சபையில் ஒட்டப்பெற்றிருந்த சுவரொட்டியில் 'காமன்ஸ் மக்களே! உங்க ளுடைய படைக்கலங்களை எச்சரிக்கையாக வைத்திருங்கள்.

பிரபுக்களை நம்பாதீர்கள்' என்று காணப்பட்டது. ஒரு சில மடாலயத் துறவிகளின் தூண்டுதலால் உந்தப்பெற்ற சில ஸ்கொயர் என்ற பிரபுக்களும் உழவர்களும், கி.பி. 1537ஆம் ஆண்டில் மீண்டும் படைதிரட்டிப் போருக்கெழுந்தனர். ஆஸ்க்கும், டி'ஆர்க்கியும் அவர்களைத் தடுத்து நிறுத்த அரும்பாடுபட்டனர் என்றாலும், அரசர் தாம் கொடுத்த வாக்குறுதிகளை மறுக்க வாய்ப்பை எதிர்பார்த்திருந்தார். கார்லைல் என்ற இடத்தில் நடைமுறைப்படுத்தப்பெற்ற இராணுவச் சட்டத்தினால் எழுபத்து நால்வர் தூக்கிலிடப்பெற்றனர். வேறு சில இடங்களில் பலரை ஜூரிகள் தண்டித்தனர். ஆக மொத்தம் ஏறத்தாழ இருநூறுபேர் தூக்கிலிடப்பெற்றனர். அரசரின் ரத்த தாகத்தை நார்ஃபோக்கினால் தணிக்கமுடியவில்லை. மடாலயத் துறவிகள் கட்டி வைக்கப்படவேண்டுமென்றார் அவர். தங்கள் கணவர்களின் தொங்கிய உடல்களை இரவோடிரவாக எடுத்துச்சென்ற பெண்களைக்கூட அரசர் வெகுண்டு கோபித்துக்கொண்டார். லண்டன் மாநகர், லிங்கன், யார்க் முதலான இடங்களில் எண்ணற்றவர்கள் தூக்கிலிடப்பட்டனர். தூக்கிலிடப்பெற்றவர்களின் தலைகள் இருந்த இடத்திலும், தலைவர்களின் இருப்பிடங்கள் முதலான இடங்களிலும் பிண நாற்றம் அடிக்கலாயிற்று. ஆஸ்க், டி'ஆர்க்கி, கான்ஸ்டபிள், பெர்ஸி, ஜெர்வால்க்ஸ் குருமார், ஃபவுன்டன்ஸ் மடாலயத்தின் முன்னாளைய குருமாரிருவர் இவர்களுடன் பார்லிங்ஸின் (Barlings) குருமாரும், லிங்கனைச்சார்ந்த வேறு முப்பதின்மருமாகத் தூக்கிலிடப்பெற்றனர். இவ்வகையாகக் கத்தோலிக்கர் கலகம் அடக்கப்பெற்றது. 'உன்னுடைய தலையைக் கொய்ய மற்றொருவர் காத்திருப்பார், பொறு' என்று கிராம்வெல்லை நோக்கி டி'ஆர்க்கி கூச்சலிட்டார்.

கத்தோலிக்கர் கலகத்தின் விளைவாக இரு பலன்கள் ஏற்பட்டன. முதலாவது, 'வட கவுன்சிலின்' அமைப்புமுறை (Constitution of the Council of the North) முடிவாக அறிவிக்கப் பெற்றது. இளவரசருடைய அரண்மனை வாசிகளின் கட்டுப் பாட்டிலிருந்தும், தலப் பிரபுக்களின் செல்வாக்கிலிருந்தும் இவ் வட கவுன்சில் விடுதலைபெற்று, அச் சபை சம்பளம்பெற்ற அதிகாரி களால் நிர்வகிக்கப்பட்டது. அத்துடன் ஐந்து கவுன்டிகளுக்கு நிர் வாகத்துறையாகவும் உயர்நீதிமன்றமாகவும் இருக்கும் அதிகாரம் பெற்று, எல்லா வாக்குரிமைகளையும்மீறி வட கவுன்சில் பெரும் உரிமைபெற்றது. நார்த்தம்பர்லாந்து எர்ல் அரசரையே தம் முடைய வாரிசாக ஏற்றுக்கொள்ள வற்புறுத்தப்பட்டார். யார்க் கின் ஆர்ச்பிஷப்பும் ரிப்பன், பீவர்லி, ஹேக்ஸாம்ஷயர் முதலான இடங்களுக்குத் தமக்கிருந்த உரிமைகளைச் சரணடையக் கட்டாயப்

படுத்தப்பெற்ருர். இது மற்றெரு சிறு பயனுகும். இரண்டாவது பயன் என்னவென்ருல், அரசர் யார்க்கியரை வஞ்சந் தீர்த்துக் கொண்டது. யார்க்கியர் நீண்ட நாட்களாக அச்சுறுத்துப்பெற்று வந்தனர். இப்போது அவர்களை ஒழித்துக்கட்ட வாய்ப்பு ஏற்பட்டது. யார்க்கியர் பேரரசுத் தூதுவர்களுடன் தொடர்பு கொண்டிருந்தனர். அத் தொடர்பினுல் அரசருக்குப் பயங்கரமான ஆபத்து ஏற்படலாம். மேலும், ஃபிரான்ஸும் பேரரசும் உடன் படிக்கை செய்துகொண்டதால் அவை இணைந்து இங்கிலாந்துக் கெதிராகச் செல்லலாம். மேலும், அவர்கள் கார்டினல் போலுடன் தொடர்புகொண்டு கத்தோலிக்க ஐரோப்பாவை ஒன்ருக இணைக்க முற்பட்டனர். அவர்களின் மதீயீனச் சொற்கள், அவர்களின் வெளிப்படையான கத்தோலிக்க அனுதாபம், மேற்கு பாகத்தில் அவர்களின் ஆதிக்கம் இவற்றைக்கொண்டே அவர்களைக் கண்டிக்க முடிவுசெய்தார் ஹென்றி மன்னர். ஏனெனில், துரோகக் குற்றம் ஒன்றையும் நிரூபிக்க இயலவில்லை. கிளாரன்ஸின் பேரரும், போலின் மூத்த மகனுமான மாண்டேகு, எக்ஸிடரின் கோர்ட்டினே மார்க்விஸ், ஆபர்காவனி வமிசத்தைச் சார்ந்த எட்வர்ட் நெவில் முதலானேர் தூக்கிலிடப்பெற்றனர். போலின் மூப்புற்ற தாயான சாலிஸ்பரி கோமகள் அரச துரோகத்துக்கு உரிமை நீக்கப் பெற்ருள் கி.பி. 1541-ல் மீண்டும் யார்க்ஷயரில் சதியொன்று உருவானபோது, சாலிஸ்பரி கோமகள் விசாரணையேதுமின்றிக் கழுவேற்றப்பட்டாள். அந்த அம்மையார் கழுமரத்தின் கத்தியிலிருந்து தப்பத் தூக்குமரத்தைச் சுற்றிச்சுற்றி வந்தாளாம். எனினும் அவளும் பலியானுள்.

எட்டாம் ஹென்றி பெருந் தலைவராய்த் தொடர்ந்து விளங்கலானுர். கி.பி. 1537-ல் அவருடைய மகன் ரிச்மாண்ட் காலமானுர். ரிச்மாண்ட், ஹென்றியின் காமக்கிழத்தி யொருத்தியின் மகன். அவ்வாண்டில் ஜேன் செய்மூருக்கு ஆண் மகவு ஒன்று பிறந்தது. அக் குழந்தையே வருங்காலத்தில் ஆரும் எட்வர்ட் என்ற பட்டப்பெயருடன் ஹென்றியின் வாரிசாக வந்தான். ஆனுல், எட்வர்ட் பிறந்ததும் ஜேன் செய்மூர் காலமானுர். அவளது மரணச் செய்தியைக் கேள்வியுற்ற லாட்டிமர் மிக்க மகிழ்ச்சி அடைந்தார். கடவுளின் ஆணை பொய்ப்பதில்லை; அவரின் வாக்குறுதிகள் காக்கப்பெற்றன. 'உண்மையில் அவர், தானே இங்கிலாந்தின் கடவுள் என்பதைக் காட்டித் தெளிவாக்கிவிட்டார்; அல்லது அவர் ஓர் ஆங்கிலக் கடவுள்.' ஹென்றியும் லாட்டிமரும் படிப்படியாகக் காமன்வெல்த்தை ஒற்றுமைப்படுத்தும் தம் பணியைத் தீவிரமாய்ச் செய்தனர். சமயச் சீர்திருத்தத்தால் அது மிக இன்றியமையாததாகிவிட்டது. பிரிட்டன் முழுவதையும் ஒரே

சட்டத்தாலும் ஒரே பாராளுமன்றத்தாலும் இணைக்கவேண்டும் என்று அவர்கள் உறுதிபூண்டனர். பழைய படைமானிய உரிமைபெற்ற இடங்களை அழித்ததில் மட்டும் மனநிறைவு படாது, ஹென்றி, புதிய உறுப்பினர்களையும் பாராளுமன்றத்தில் சேர்த்துக்கொண்டார். பெர்விக், கலே போன்ற தம் காவல் படையினர் இருந்த நகரங்களிலிருந்தும், தம்முடைய சொந்த உரிமைக்குட்பட்ட செஷயரிலிருந்தும், லங்காஷயரில் இருந்து மேலும் எண்மரும் பாராளுமன்றத்தின் உறுப்பினராயினர். வேல்ஸை இங்கிலாந்துடன் இணைக்கப் பெரும் சட்டமொன்றும் இயற்றப்பெற்றது. இன்னும் நிலைத்திருந்த பழைய, புதிய எல்லைப்புற ஷயர்களையும் தம் ஆட்சியுடன் அவர் இணைத்துக் கொண்டார். மேலும், புதிதாக இணைக்கப்பெற்ற பகுதிகளிலும் பொதுச் சட்டம், அமைதிக்காவல் நீதிபதிகள் ஆகியவற்றைப் பொதுமையாக்கினர். இப் பகுதிகளிலும் ஆங்கில மொழியே பேசப்படவேண்டுமென ஆங்கிலத்திற்கு முதலிடம் கொடுத்தார். காமன்ஸ் சபையில், வேல்ஸிலிருந்தும் இருபத்துநால்வரை உறுப்பினராகச் சேர்த்துக்கொண்டார். 'எல்லைப்புறச்சபை' எனப்படும் மார்ச் கவுன்சிலைப் பாராளுமன்றச் சட்டப்படி ஒழுங்கு படுத்தினர்.

வேல்ஸை இங்கிலாந்துடன் இணைப்பதில் வெற்றிகண்ட ஹென்றி அயர்லாந்து விஷயத்தில் தொல்லைகள்பட்டார். வேல்ஸ் எப்பொழுதும் இங்கிலாந்துடன், ஆங்கில அரசரின் பகுதியாக இருந்துவந்தமையால் அதை இணைப்பதில் கடினம் தோன்றவில்லை. சமயச் சீர்திருத்தம் அயர்லாந்து விஷயத்தில் அரசரைத் தலையிடத் தூண்டியது. இப் பிரச்சினை நீண்ட நாட்களாகப் புறக்கணிக்கப் பட்டுவந்தது. எனவே, அதைப் புதுமுறையில் கையாள ஹென்றி எண்ணினர். ஐரோப்பாவில் போர்களில் ஈடுபட்டிருந்ததால் ஹென்றி அயர்லாந்து பிரச்சினையை ஒத்திப்போட்டிருந்தார். கி.பி. 1534-ல் ஃபிட்ஸ்ஜெரால்டு வமிசத்தினர் கத்தோலிக்கச் சமயத்தாலும், ஸ்பானியரது புத்திமதியாலும் தூண்டப்பெற்றுக் கலகத்தைத் தொடங்கி அதற்குத் தலைமை தாங்கினர். டப்ளின் தவிர, நாட்டின் பிறபகுதிகள் அனைத்தையும் அவர்கள் கைப்பற்றினர். டப்ளின் ஆர்ச்பிஷப் கொல்லப்பெற்றார். அரசப் பிரதிநிதியாக அயர்லாந்தில் அப்போது இருந்தவர் லியோனர்ட் கிரே என்பாரவர். வெகு சிரமப்பட்டும் கடுமையான நடவடிக்கை யெடுத்தும், அவர் அரசருடைய பீரங்கிப் படையைப் பயன்படுத்தி அயர்லாந்தின் சிறு பகுதியொன்றில்மட்டும் சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்டினர். டைபர்ன் என்ற இடத்தில் கில்டேர் எர்லும் அவருடைய ஐந்து உறவினர்களும் இறந்தனர்.

அதே ஆண்டில் யார்க்கில் ஆஸ்க் தண்டனை பெற்றார். 'அயர்லாந்தின் மன்னரும், அயர்லாந்து திருச்சபையின் தலைவரும்' என்ற பட்டப் பெயரைச் சூட்டிக்கொண்டார் ஹென்றி. அயர்லாந்திலும் மடாலயங்கள் அழிக்கப்பெற்றன. அதாவது, ஆங்கில நில உரிமைச் சட்டங்களையும், ஆங்கில மொழியையும் அயர்லாந்தில் நடைமுறைப் படுத்தவும் முயன்றார் என்பதுதான் அதன் பொருள். பயங்கரக் கொள்கைகளைக் கடைப்பிடித்த கிராம்வெல்லின் வீழ்ச்சிக்குப் பின்னர் அவருடைய கொள்கைகளும் கைவிடப்பெற்று, அக் கொள்கைகள் திருத்தியமைக்கப்பெற்றன. இக் கொள்கையினால் ஏற்பட்ட நஷ்டங்கள் மிகப் பலவாம். மேலும், அரசரின் பிரதிநிதியாக இருந்த கிரேயும் கில்டேர் வமிசத்துடன் திருமணத் தொடர்புகொண்டிருந்தார். அவர் அயர்லாந்து கட்சிப் பிரதிகட்சிகளில் ஈடுபட்டு, கிராம்வெல்லைப்போன்று, தம்முடைய தோல்விகளுக்காகக் கழுவேற்றப்பட்டார். ஹென்றியின் ஆட்சி முடிவதற்குள், அவர் சமாதானக் கொள்கையையே கடைப்பிடிக்கலானார். அயர்லாந்து தலைவர்களைப் 'பியர்' என்னும் பிரபுப் பட்டம் பெற்றுக்கொள்ளும்படி தூண்டினார். மேலும், அவர்களின் நிலங்களுக்குப் புதிய உரிமைப் பத்திரங்களை லஞ்சமாகக் கொடுத்தார். அயர்லாந்து கத்தோலிக்கச் சமயத்துக்கெதிராகப் போர்செய்து அதை இங்கிலாந்துடன் இணைத்து ஒற்றுமைப் படுத்தியது நீடித்து நிற்குமா என்பதை எதிர்காலம்தான் தீர்மானிக்கவேண்டும்.

ஹென்றியின் மணவிலக்கில் தொடங்கிய இச் சீர்திருத்தங்கள் பெருமளவுக்குப் பெருகின. சமயக் கலவரங்களால், நாட்டில் எல்லாவிதமான மனக் குறைகளும் ஏற்பட்டிருந்தமையால் இச் சீர்திருத்தங்களை ஒரு துறையுடன்மட்டும் நிறுத்திக்கொள்வது முடியாததாகிவிட்டது. கிராம்வெல்லின் அமைச்சரவை கொடுங்கோன்மை நிறைந்ததாகி, மதுக்கடையில் அவருக்கு எதிராகப் பேசப்படும் செய்திகளிலிருந்து கலையில் கடைகளில் பேசப்படும் செய்திகள்வரை அவரை வந்தடைந்தன. தமக்கெதிராகப் பேசியவரைக் கிராம்வெல் கடுமையாகத் தண்டித்தார். அவருக்கெதிராகக் கிளம்பிய ஒவ்வோர் இயக்கமும் ஈவு இரக்கமின்றி அடக்கப்பட்டு, அவ்வியக்கங்களில் ஈடுபட்டவர்கள் கழுவேற்றப்பெற்றனர். தானியக்கலகம் ஒன்றில் ஈடுபட்ட பதினான்குபேர் சாமர்செட்டில் ஒரேயடியாகக் கொல்லப்பட்டனர். அரசரின் கொடுங்கோலாட்சியைக் குறைகூறின பன்னிருவர் நார்ஃபோக்கில் கொல்லப் பெற்றனர். சமயச் சீர்திருத்தவாதிகள் பாரிஷ் திருச்சபைகளில் விவிலிய நூலைப் பிரசங்கம் செய்தனர். உருவச்சிலைகள் அல்லது ஊர்வலங்கள்பற்றித் தொடர்ந்து சச்சரவுகள் இருந்துவந்தன.

கிறிஸ்துவ உலகமனைத்தும் சமயக் கருத்துகளால் பிளவு ஏற்பட்டு விட்டபடியால், இங்கிலாந்து தன் சுய பாதுகாப்புக்காகவேனும் பிராட்டஸ்டென்ட் சமய வெளிநாட்டுக் கொள்கையை ஏற்றுக் கொள்ளவேண்டி ஏற்படலாம். பேரரசும் ஃபிரான்ஸும் இணைந்து போன சமயங்களில் எல்லாம், ஆங்கிலத் தூதர்கள் லூதரின் சித்தாந்தங்களை ஏற்றுக்கொண்ட இளவரசர்களை அணுகிவந்தனர். கி.பி. 1540 ஆம் ஆண்டுவாக்கில் ஐரோப்பாவில் யாருடைய துணையு மற்று ஹென்றி தனித்து நிற்கவேண்டியவரானார். அவருடைய மைத்துரான ஸ்காட்லாந்து மன்னர் ஐந்தாம் ஜேம்ஸ் அவருக் கெதிராக ஃபிரெஞ்சு இளவரசி கைஸ் மேரியை (Mary of Guise) மணந்துகொண்டார். பேரரசர் கலகக்காரர்களைத் தாக்க ஃபிளாண்டர்ஸுக்குப் போகும் வழியில் பாரிஸின் வழியாகச் சென்றார். கத்தோலிக்கர் உறுதியாகப் படையெடுப்பர்போன்ற சூழ்நிலை ஏற்பட்டிருந்தது. பிராட்டஸ்டென்ட் சமயத்திற்கும் கத்தோலிக்கச் சமயத்திற்கும் உள்ள வேறுபாடுகளை அரசருக்குக் கிராம்வெல் விளக்கிக்கூறினார். எனினும், ஆலோசனை சபையில் கட்சிப் பிரதி கட்சிகள் தோன்றி சச்சரவிட்டுக்கொண்டன. அதனால், கிராம்வெல்லின் உயிர், திருச்சபையின் எதிர்காலம், இங்கிலாந்தின் வெளிநாட்டுக் கொள்கை ஆகிய அனைத்தும் ஊசலாடி நின்றன.

ஹென்றி, எல்லாவற்றையும் பாதிக்கக்கூடிய மைய முனையாக விளங்கினார். ரோமாபுரியுடன் இங்கிலாந்தைப் பிணைக்கும் எல்லாவற்றையும் இவர் அழிக்க முற்பட்டார். போப் பாண்டவரைத் தூற்ற மிகப் புனிதமான சமய எச்சப் பொருள் களையும், வால்ஷிங்ஹாம் மாதாவின் உருவச்சிலையையும், ஹெய்ல்ஸ் (Hailes) என்ற இடத்திருந்த புனித இரத்தத்தையும், அணிகலன்களால் அலங்கரிக்கப்பெற்றிருந்த செயின்ட் தாமஸ் பெக்கெட்டின் திருக்கோயிலையும் அவர் தீயிட்டுக்கொளுத்தினர். லோபர்ன், கோல்செஸ்டர், ரீடிங், கிளாஸ்டன்பரி ஆகிய நான்கு மடாலயக் குருமார்களும் அவரவர் மடாலய வாயிலிலேயே கொல்லப் பெற்றனர். மடாலயத் துறவிகளை அழித்துப்பெற்ற பொருள்களைக் கொண்டு அரசர் தேசிய பாதுகாப்புக்கான போர்ப்படை ஒன்றைத் திரட்டினர். அவர் பியோலி திருமடத்தை (Beaulieu Abbey) அழித்து, அதன் கற்களைக்கொண்டு ஹர்ஸ்ட் கோட்டையைக் கட்டு வித்தார். ஒவ்வொரு கிராமத்திலும் ஓர் உடைக்கப்பெற்ற திருக் கோயில், அல்லது புதிய குடியானவருக்கு அதிகக் குத்தகைக்கு விடப்பெற்ற நிலங்கள் முதலியவை சமயச் சீர்திருத்தக் கொடுமை களுக்குச் சான்றாக நின்றன. எனினும், அரசர் கத்தோலிக்கச் சமயத்தில் இருந்த தம் நம்பிக்கையை விட்டுக்கொடுப்பவராகத்

தென்படவில்லை. அரசர் பொதுத்தொழுகை நடத்துதல், திருச்சபை ஊழியர்களைக்கொண்டு திருமணம் நடாத்துதல் ஆகியவற்றில் விட்டுக்கொடுக்க மாட்டார் என்பதை ஜெர்மானியர் தெரிந்துகொண்டனர். மடாலயக் குருமார்களைக் கொன்றபோதிலும், ஹென்றி, சமய நிந்தனையாளரிடம் நேருக்கு நேராக விவாதித்தார். இச் சமய நிந்தனையாளர்கள் கர்த்தர் உண்மையாக இருப்பதை மறுத்தனர். அவர்களுடன் ஹென்றி எதிர்த்து வாதித்தார். சமயச் சடங்கு அவருடைய கொள்கையின் முக்கிய கருத்து. அதை அவரே தேர்ந்தெடுத்துக்கொண்டார். 'எல்லோருக்கும் தலைவர் அவரே! அவர் உண்மை வடிவானவர்' என்ற கொள்கையை மன்னர் ஒப்புக்கொண்டார். அவர் கத்தோலிக்கச் சமயத்தை வைத்துக் காப்பாற்றுவதன்மூலம் பேரரசரின் உடன்படிக்கையை மீண்டும் புதுக்கிக்கொள்ளலாம் என்று எண்ணினர் போலும். வடபாகத்தில் தோன்றிய சமயக் கலவரங்களின்போது கத்தோலிக்கச் சமயம் இங்கிலாந்தில் மக்கள் ஆதரவைப்பெற்று நிலவுகிறது என்பதற்குச் சான்றாக அமைந்தது. தாம் முன்னர் இயற்றிய "பத்து விதிகள்" (பிஷப்புகளின் நூல்) என்ற நூலுக்குத் துணைவிதிகள் சிலவற்றையும் செய்திருந்தார். அவற்றிலிருந்து அவருக்குக் கத்தோலிக்கச் சமயத்தில் இருந்த ஈடுபாடு தெரியலாயிற்று.

கி.பி. 1539-ல் கூடிய பாராளுமன்றம் ஹென்றியின் ஆட்சியில் இன்றியமையாததொன்றாகும். இக் கூட்டத்தில் ஹென்றியின் கொள்கையின் இரு கூறுகளும் தெளிவாக விளங்கலாயின. பாராளுமன்றத்தில் அவருக்கு அதிசயிக்கத்தகுந்த முறையில் பேராதரவு இருந்தது. ஆனால், ஆலோசனை சபையில் போராட்டம் காணப்பெற்றது. கிராம்வெல்லும் கார்டினரும் இவ்விரு கட்சிகளின் தலைவராக விளங்கினர். ஒவ்வொருவரும் தேர்தலில் தம் செல்வாக்கைப் பயன்படுத்திக்கொண்டனர். கிராம்வெல்லின் வற்புறுத்தலின்பேரில் ஹென்றி, ஜெர்மானிய இளவரசியான ஆன் கிளிவ்ஸ் என்பாளை மணக்கப் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கினர். ஆன், ஜெர்மனியில் இருந்த கிளிவ்ஸ் டியூக்கின் சகோதரியாவார். பேரரசுக்கு எதிராக லூதரை ஆதரித்த பிராட்டஸ்டென்டுகளுடன் அவரை இணைக்க கிராம்வெல் முயன்று இத் திருமணத்தை ஏற்பாடு செய்தார். பிஷப்புகள் வெகுண்டு இத் திருமணத்திற்கு எதிராக விவாதித்தபோது, ஹென்றி, அவர்களின் விவாதத்தைச் சுருக்கமாக வெட்டிவிட்டார். கத்தோலிக்கரது கடுமையான திட்டமான 'ஆறு விதிச் சட்ட'த்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று அவரே நேராகப் பாராளுமன்றத்திற்குச் சென்று அவர்களுக்காகப் பரிந்துரைத்தார். இச் சட்டம்

கருத்துவேறுபாடுகளை நீக்கிப் 'பொருள் மாற்ற'த்தை உறுதிப் படுத்தியது. [அவ் வழிபாட்டின்போது படைக்கப்படும் ரொட்டியும் சாராயமும் கிறிஸ்துவின் தசையாகவும் இரத்தமாகவும் மாறிவிடும் என்று ரோமானியக் கத்தோலிக்கர்கள் நம்பினர். இக் கொள் கைக்குப் 'பொருள் மாற்றம்' (transubstantiation) என்பது பெயர்.] அதை ஏற்றுக்கொள்ள மறுத்து அதைத் தாக்குபவர் தூக்குத் தண்டனை பெறுவர் என்றும் அச் சட்டம் விதித்தது. பிராட்டஸ் டென்டுகள் கூறியபடி இரண்டிலும் ஏற்படும் ஐக்கியத்தைக் கத்தோலிக்கர் மறுத்தனர். திருச்சபையினர் திருமணம் செய்து கொள்ளக்கூடாது என்பதையும், கற்பு விதிகள்பற்றியும், தனிப் பட்ட தொழுகைகள், பாவமன்னிப்பு முறையீடுகள் ஆகியவற்றையும் மீண்டும் ஒப்புக்கொண்டு உறுதிபடுத்தியது. காமன்ஸ் சபை யினர் சமய விஷயத்தில் அரசருடன் ஒத்துப்போனது எவ்வளவு உண்மையோ அதேபோன்று கிராம்வெல்லை வெறுத்தனர் என்பதும் உண்மை. மன்னருடைய பேரறிக்கைகளும், உத்தரவுகளும், பாராளுமன்றம் இயற்றும் சட்டங்களின் மதிப்பையும் தன்மை யையும் உடையவை என்றுகூட அப் பாராளுமன்றம் ஒரு சட்டம் இயற்றியது. மேலும், சமயச் சிந்தனைபற்றி அரசர் எப்படி வேண்டுமானாலும் விளக்கம் செய்யலாம் என்றும் அவருக்கு முழு அதிகாரம் அளித்தது. இப் பாராளுமன்றம் பொதுச் சட்டத்தில் சொத்துரிமைபற்றியவற்றைப் பெருவாரியாகப் பாதுகாக்க நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டு நீண்ட விவாதத்திற்குப் பின்னர் கிராம்வெல்லையும் எதிர்க்கத் தொடங்கியது. இந்த 'ஆறு விதிச் சட்ட'த்தைப் பொதுமக்கள் எதிர்ப்பொன்றையும் கூறுமல் ஆதரித்து ஏற்றுக்கொண்டனர். லண்டன் ஜூரிகள்மட்டும் ஐந்நூறு சமய நிந்தனையாளர்களைத் தண்டித்தனர். இவற்றைக் கண்டு பிராட்டஸ்டென்ட் ஜெர்மனியிலும், ஆங்கிலச் சமயச் சீர் திருத்தக்காரர்களிடையேயும் ஆழ்ந்த மனக்கலக்கம் ஏற்பட்டது. இருப்பினும், பேரரசும் ஃபிரான்ஸும் உடன்படிக்கை செய்து கொள்ள இருக்கிறுர்கள் என்பதை அறிந்தபோது, ஹென்றி, வேண்டா வெறுப்போடு ஆன் கிளிவ்ஸ் என்ற ஜெர்மானிய இளவரசியை மணந்துகொண்டார்.

ஆன் கிளிவ்ஸுக்கும் ஹென்றிக்கும் நடந்த திருமணம் கி.பி. 1540ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் நடைபெற்றது. ஆனுல், ஜூலை மாதத்தில் அத் திருமணத்தை விலக்கிவிட்டார் ஹென்றி. கிராம்வெல்லும் தலையிழந்தார். ஹென்றி, வேண்டா வெறுப்புடன் இந்த 'ஃபிளாண்டர்ஸ் பெட்டைக்குதிரை'யை மணந்து கொண்டார். ஆனுல், அவள் அழகற்றவள்; அவளுக்கு ஆங்கில மொழியில் பயிற்சி கிடையாது; சீட்டு விளையாடத் தெரியாது;

இசையிலோ ஞான சூனியமானவள். அவளுடைய தமையனான டியூக் வில்லியம், ஹென்றிக்கு உதவுவார் என்ற நம்பிக்கை பொய்த்துப்போய், பேரரசரால் அச்சம் ஏற்பட்டு இங்கிலாந்தின் உதவியை நாடினார். மேலும், பேரரசருக்கும் ஃபிரான்ஸுக்கும் இடையில் நிலவிய உடன்படிக்கையை ஹென்றி வெறுத்தவர். ஆனால், இத்தருணத்தில் பேரரசரும் ஃபிரெஞ்சு மன்னரும், மிலான், நெதர்லாந்து விவகாரங்களில் தமக்கிருந்த பழைய சச்சரவுகளினால் தாம் செய்துகொண்டிருந்த உடன்படிக்கையை அறுத்துக் கொண்டனர். இங்கிலியில் இருந்த ஹென்றியை கிராம்வெல்லின் பகைவர்கள் அவரது கொள்கை தேசிய அபாயத்தில் கொண்டு விடும் என்றும், லூதரின் கொள்கைகளை ஆதரிப்பது சமய நிந்தனை யாகுமென்றும் சுலபமாகத் திரித்துக்கூறினர். மானம்கெட்ட நார்ஃபோக் பிரபுவுக்கு வேறு பல ஆசைகள் இருந்தன. கார்டினரோ நேர்மையானவர். இவ்விருவரும் கிராம்வெல்லின் கொள்கைகளை அரசருக்குத் தவறாகக் கூறினர். அத்துடன் நார்ஃபோக் டியூக்கின் சகோதரி முறைமையான காதரின் ஹோவர்ட் என்ற அழகான பெண்ணை அவருக்கு மனைவியாக்கவும் அவர்கள் முயன்றனர். ஹோவர்ட் இளமை வயதினள்; கவர்ச்சி கரமான தோற்றமும் கொண்டவள். எனவே, அரசருக்கு அவளைத் திருமணம் செய்வித்து அவரைத் திருப்திப்படுத்த எண்ணினர். கிராம்வெல் கொன்று தீர்த்த பழைய பிரபுக்களின் வழியினர் இப்போது நார்ஃபோக்கையும் கார்டினரையும் ஆதரித்தனர். பாராளுமன்றமும் திருச்சபை மகாநாட்டினரும், அரசரை, ஆன் செய்முறைத் தள்ளிவைத்துவிட்டு மறுமணம் செய்துகொள்ளுமாறு வேண்டினர். அரசத் துரோகக் குற்றச் சட்டமொன்று இயற்றப் பட்டு கிராம்வெல் கொல்லப்பட்டார். அவருடன் அவருடைய கொள்கைகளை ஆதரித்து லூதரின் உடன்பாட்டை விரும்பிய ஆறு திருதுறவியரும் கழுவேற்றப்பெற்றனர். இஃது ஒரு புறம்; மறு புறம், அரசரின் ஆதிக்கத்தை ஒப்புக்கொள்ள மறுத்து, போப் பாண்டவரை ஆதரித்தவர்களும் தூக்கிலிடப்பட்டனர். அத்துடன் 'உயில்கள் சட்டம்' என்பதை இயற்றி நாட்டுப்புறப் பிரபுக்களை மகிழ்வித்தார். அதன்படி, தம்முடைய நிலங்களைத் தம் சந்ததியாருக்கு விட்டுச்செல்லும் உரிமையை அவர் அவர்களுக்குத் திரும்பக்கொடுத்தார். 'பயன்படுத்துதல் சட்டம்' (Statute of Uses) அவ்வுரிமையைப் பறித்திருந்தது.

கிராம்வெல்லின் வீழ்ச்சியால், ஹென்றி, மக்களால் மிகவும் விரும்பப்பட்டார். ஆனால், பின்னர் தம் வாழ்நாள் முழுவதும் அவர் கத்தோலிக்கப் பழைமை விரும்பிக் கொள்கையையே ஆதரித்து வந்ததுடன், பேரரசுடனும் உடன்படிக்கை ஒன்றை மீண்டும் செய்து

கொண்டார். வருங்காலத்தில் பிராட்டஸ்டென்ட் தியாகியாக இருந்த ஹூப்பர் (Hooper) என்பார், அரசர் 'போப்பாண்டவரை அழித்துவிட்டாரேயன்றி போப்பினுடைய ஆதிக்கத்தையன்று' என்று மனம் நொந்தார். நாட்டில் சமயத்தின் பேரால் ஒருவரும் துன்புறுத்தப்படவில்லை யென்றால், பெரும்பான்மையான நாட்டு மக்கள் கத்தோலிக்கப் பழக்க வழக்கங்களைப் போற்றியதே முக்கிய காரணமாகும். கி.பி. 1543-ல் கொள்கைபற்றிய மற்றோர் அறிக்கை இறுதியாகப் 'பொருள் மாற்றத்தை' (transubstantiation) ஒப்புக்கொள்ளவேண்டுமென வலியுறுத்தியது. காதரின் ஹோவர்டுடன் ஹென்றி செய்துகொண்ட திருமணமும் விரைவில் முறிய வேண்டியதாயிற்று. அதற்குக் காரணம், அவள் திருமணத்திற்கு முன்னரே ஒழுக்கங்கெட்டவளாக இருந்தாள் என்று கண்டுபிடிக்கப் பட்டதேயாகும். அதற்குப் பின்னர், அவள் நன்றிகெட்டு, ஹென்றிக்குத் துரோகம் செய்தவள் என்றும் ஒருவேளை கருதப் பட்டிருக்கலாம். அவளும் தலை துணிக்கப்பெற்றாள். ஆனால், அவள் உடனடியாகக் கொல்லப்பட்டதால் அரசரின் கொள்கை ஒன்றும் தீவிரமாக மாறவில்லை; அல்லது பிராட்டஸ்டென்ட் கொள்கைப் பற்று உள்ளவளும், மதியூகியும், அன்பு நிறைந்தவளுமான காதரின்பார் என்பாளை மணந்துகொண்டதாலும் அவருடைய கொள்கையொன்றும் மாறிவிடவில்லை.

எனினும், ஹென்றியின் ஆட்சி, ஒற்றுமையின்மையிலும் மக்களின் மனக் குறையிலும் முடிவுற்றது. அவரின் வல்லாட்சி உச்சநிலையை அடைந்தது. டவர் சிறையில் ஒருசில நாட்களாவது அடைக்கப்பெறாத முக்கியமான அரசியல்வாதிகள் இல்லையென்றால் மிகையாகாது. வல்லாட்சி மிகுவதற்கு மற்றொரு காரணம், ஹென்றியின் உடல்நிலை சீர்கெட்டு வந்ததாகும். அரசருக்கு அணுக்கத் தோழர்களாய் இருந்தவர்கள், வயது நிரம்பாத அரசனை அரியணையில் அமர்த்தச் சாமர்த்தியமாய் முயன்றுபார்த்தனர். தனிப்பட்ட முறையில் சிறைக் கைதிகளைப் பெரும்பாலும் துன்புறுத்தி கேள்விகேட்டுவரும் பழக்கம் ஏறத்தாழ எல்லோர் மாட்டும் ஏற்படலாயிற்று. லண்டன் ஆல்டர்மன்கள், கட்டாயக் கடன்களை எதிர்த்தமைக்காகச் சிறை செய்யப்பட்டனர் அல்லது போர்ப்பணிக்காக அனுப்பப்பெற்றனர். எல்லா வகுப்பார்களும் விலையுயர்வால் பெரும் தொல்லைகள் அனுபவித்தனர். இதற்கு ஒரு காரணம், நல்ல மகசூல் ஏற்படாமையாகும். மற்றொரு காரணம், அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையில் இருந்த தவறுகளாகும். இங்கிலாந்தின்மீது படையெடுப்புகள் எடுக்க ஆயத்தமான நாடுகளுக்கெதிராகப் படைக்கலங்களைத் தயாரிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. கி.பி. 1543-6-ல் போர்

ஏற்படவே மடாலய நிலங்களை விற்றுப் பொருளைத் திரட்ட வேண்டிய நிலைவந்தது. எனவே, மீண்டும் எஞ்சியிருந்த ஆஸ்பத்திரி களையும் சான்ட்ரிகளையும் கலைக்கவேண்டியதாயிற்று. ஹென்றியின் ஆட்சியின் இறுதி ஏழு ஆண்டுகளில் அவரின் வருமானம், முதல் முப்பதாண்டுகளில் நேர்முக வரிவிதிப்புகளினால் கிடைத்த வருவாயில் அரைப்பங்கு அளவுக்கு உயர்ந்தது. இவை தவிர, திரும்பக்கொடுக்கப்பெறாத கட்டாயக் கடன்களின் சுமை மிக அதிகமாக இருந்தது. அரசாங்கம் ஆன்ட்வெர்ப்பிலிருந்து 12 சதவிகிதக் கடும்வட்டி கொடுத்துப் பொருளைக் கடன் வாங்கியது. அத்துடன் நாட்டின் நாணயச் செலாவணியிலும் மந்தநிலை ஏற்பட்டது. தங்க நாணயங்களின் மதிப்பைக் குறைத்ததுடன், வெள்ளி நாணயங்களில் இருமடங்கு கலவை உலோகங்களையும் கலந்தனர். இதனாலும், அரசாங்கத்திற்கு ஐந்து லட்சம் பவுன்கள் லாபம் கிடைத்தது. எனினும், வரிவிதிப்புகளினால் உண்மையில் வருமானம் குறைந்துபோனதுடன், கருவூலமும் வற்றிவிட்டது.

போரினால் ஏற்பட்ட பெரும் அழிவிலிருந்து ஹென்றியின் செருக்கு உச்சநிலையடைந்து ஓரளவுக்குப் பைத்தியமான நிலையை அடைந்திருந்தது. ஆனாலும், கத்தோலிக்கச் சமயத்தை நாடு முழுமையிலும் பரப்பவேண்டும் என்ற அவருடைய கருத்து வெறும் கனவாகவே நின்றுவிட்டது. ஃபிரான்ஸுக்கும் பேரரசுக்கும் இடையே நிகழ்ந்த போரை வாய்ப்பாகக்கொண்டு அவர் ஸ்காட்லாந்தின் விவகாரத்தில் தம் தலையீட்டை மீண்டும் புதுப் பித்துக் கொண்டார். ஸ்காட்லாந்து மன்னர் ஐந்தாம் ஜேம்ஸ் ஆங்கிலோபில் ஆங்கஸ் (Anglophil Angus) வமிசத்தை விரட்டி விட்டார். அவருடைய அமைச்சரான கார்டினல் பீட்டன் (Cardinal Beaton) தீவிரமான கத்தோலிக்கர். ஸ்காட்டியர் ஆங்கில அகதிகளுக்குப் புகலிடம் கொடுத்ததுடன், மடாலயங்களைக் கைப் பற்றும்படி புகன்ற ஹென்றியின் அறிவுரைகளைப் புறக்கணித்து விட்டனர். அத்துடன், ஸ்காட்டியர் ஃபிரான்ஸுடன் வைத்திருந்த உடன்படிக்கையை அறுத்துக்கொள்ளுமாறு கேட்ட ஹென்றியின் எண்ணத்தையும் ஸ்காட்டியர் ஒப்புக்கொள்ள மறுத்தனர். ஸ்காட்லாந்து அரசரின் தமையன் மகனைக் கைப்பற்ற எண்ணிய ஹென்றி, கி.பி. 1542-ல் ஸ்காட்லாந்தின்மீது படையெடுத்தார். ஹென்றியின் தூதுவரும், மேற்கு எல்லைப்புறப்பகுதிகளின் பாது காப்பாளருமான வார்ட்டன் (Wharton) என்பார் சிறிய ஆங்கிலப் படையொன்றை நடத்திச்சென்று ஆங்கிலப் படையைவிடப் பெரிதான ஸ்காட்டியப் படையை சால்வே மாஸ் (Solway Moss) என்ற இடத்தில் நடந்த போரில் முறியடித்தார். மனமுடைந்த ஐந்தாம் ஜேம்ஸ் டிசம்பர் மாதத்தில் காலமானார். அவருடைய

விதவை மனைவியான மேரி கைஸ், கத்தோலிக்கக் கருத்துகளில் மிகுந்த தீரமும் உறுதியும் கொண்டிருந்தவள். ஐந்தாம் ஜேம்ஸ் இறக்கும்முன் அவருக்கு ஒரு பெண் மகவு பிறந்திருந்தது. அவர் காலமானபோது அக் குழந்தை பிறந்து ஒருவாரம்தான் ஆகியிருந்தது. அப் பெண்மகவே பின்னர் ஸ்காட்டிய அரசி மேரி என்று பெயர்பெற்ருள்.

ஸ்காட்லாந்தின் ஆதிபத்திய உரிமையைமட்டும் கேட்டிருந்த ஹென்றி, இப்பொழுது அதன் முழு அரசுரிமையையும் கேட்க லானார். ஹென்றியின் ஏஜண்டுகள் அரசப்பிரதிநிதியாக விளங்கிய ஆரான் (Arran) என்பவருக்குக் கட்டளையிட்டு, ஸ்காட்டிய மொழியில் விவிலியநூலைப் பயன்படுத்த அனுமதித்தனர். கி.பி. 1543-ல் அவருடைய வற்புறுத்தலின்பேரில் குழந்தையான ஸ்காட்டிய அரசி மேரியை ஹென்றியின் மகன் எட்வர்டுக்கு மணம் செய்விக்கும் உடன்படிக்கையொன்றை ஏற்பாடு செய்து கொண்டார். மேரி பத்தாண்டுகளைக் கழித்தவுடன், இங்கிலாந்தில் வந்து தங்க வேண்டுமென்று ஏற்பாடாயிற்று. ஹென்றியின் அக்கிரமங்களைப் பொறுக்காத ஸ்காட்டிய தேசியவாதிகள் பீட்டனைத் தலைவராகக் கொண்டு, இங்கிலாந்துடன் செய்து கொண்ட உடன்படிக்கையை ஒப்புக்கொள்ள மறுத்தனர். சமய நிந்தனையாளர்கள் கடுமையாகத் தண்டிக்கப்பெற்றனர். அவர்கள் பெற்ற வெற்றியால் மற்றொரு பலனும் கிட்டியது. ஹென்றிக்கும் ஸ்காட்டிய பிராட்டஸ்டென்ட் சமய ஆதரிப்பாளர்களுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. அப் பிராட்டஸ்டென்ட் குழுக் களில்தான் ஜான் நாக்ஸ் புதிதாகச் சேர்ந்திருந்தார். இந்த உடன் படிக்கையை வலியுறுத்த படைகள் செய்யவேண்டிய காரியத்தை ஹென்றி செய்து முடித்தார். ஹென்றியின் மைத்துனரும், ஜேன் செய்மூரின் சகோதரருமான ஹெர்ட்ஃபோர்ட் என்பார் ஸ்காட்லாந்திலிருந்த பிராட்டஸ்டென்ட் சமயத்தைச் சார்ந்த அமைச்சர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். அவர் எடின்பரோவைத் தீக்கிரையாக்கினார். கி.பி. 1545-ல் ஆங்கிலப் படையொன்று சுற்றி வளைத்துக்கொள்ளப் பட்டுத் தோற்கடிக்கப்பெற்றது. ஹெர்ட்ஃபோர்ட்டின் படைகள் எல்லைப்புற ஷயர்களைச் சூறையாடின. கெல்ஸோ, மெல்ரோஸ் போன்ற பெரும் மடாலயங்கள் கொளுத்தப்பெற்றன. ஆரானின் முக்கிய எதிரியான லேனக்ஸ் (Lennox) என்பார் அரசப் பிரதிநிதிப் பதவிக்கு அவருடன் போட்டியிட்டவர். லேனக்ஸ், ஹென்றியின் உறவினரான மார்கரெட்டைத் திருமணம் செய்திருந்தார். மார்கரெட் ஆங்கஸின் மகள். கி.பி. 1546-ல் இங்கிலாந்தின் நீண்ட நாளைய தூண்டுதலின்பேரில், பீட்டனின் பகைவர்கள்

லேனுக்ஸை அவருடைய செயின்ட் ஆண்ட்ரூஸ் கோட்டையிலேயே கொன்றுவிட்டனர். ஹென்றி இறக்கும்போதும் ஸ்காட்லாந்துடன் தொடர்ந்து போர் நடந்துவந்தது. ஸ்காட்டியர் சுதந்திர எண்ணம் கொண்டிருந்தமையால் இங்கிலாந்துடன் இணைவதையும், மிதவாதக் கத்தோலிக்கச் சமயத்தையும் ஏற்க மறுத்தனர். இங்கிலாந்துடன் இணையும் கொள்கை வெற்றிபெற முடியாது என்பதை அயர்லாந்தும் எடுத்துக்காட்ட இருந்தது. அயர்லாந்தில் இருந்த புதிய ஜெஸ்யூட் இயக்கத்தினர் இணைப்புக்கெதிராகத் திட்டங்களை ஏற்கெனவே ஆயத்தம் செய்து அயர்லாந்து தேசிய இனத்தைக் கத்தோலிக்க ஐரோப்பாவுடன் இணைக்க முயன்றனர்.

போசுடன் ஏற்பட்ட உடன்படிக்கையும், அரசர் ஸ்காட்லாந்தின் போரில் ஈடுபட்டிருக்கையில் ஃபிரான்ஸ் அதற்குத் துணை செய்யாமல் தடுத்துவைக்கும் நோக்கத்தோடு செய்துகொண்டதேயாகும். அரசர் உயிர்வாழ்ந்திருந்தாலும் இவ்வுடன்படிக்கையால் பலன் ஏற்பட்டிருக்குமோ என்பதும் ஐயப்பாடான செய்தியேயாகும். கி.பி. 1544-ல் அவர் ஃபிரான்ஸின்மீது படையெடுத்து போலோனைக் கைப்பற்றினர். எனினும், ஃபிரான்ஸ் பேரரசுடன் தனியாக உடன்படிக்கையொன்றைச் செய்துகொண்டது. ஃபிரெஞ்சியர், வைட் தீவின்மீது படையெடுத்ததை ஹென்றி முறியடித்தபோதிலும், நாட்டில் பொருளற்ற வறுமைத்தன்மை ஏற்பட்டமையால் அவர் ஃபிரான்ஸுடனும் ஓர் ஒப்பந்தத்திற்கு வந்தார். அதன்படி, போலோன் ஹென்றியின் வசமே இருக்கவேண்டுமென்றும் எட்டு ஆண்டுகளுக்குள் ஃபிரெஞ்சியர் அதை மீட்டுக்கொள்ளலாம் என்றும் ஏற்பாடு செய்துகொண்டார். இதைக்கண்ட பேரரசர் இங்கிலாந்தின் உறவை முறித்துக்கொண்டார். டிரென்ட் கவுன்சில் கூடியபோது ஹென்றி மீண்டும் சமய விஷயமாக நாடு கடத்தப்பட்டார். ஹென்றி, லூதரின் கொள்கையை ஆதரித்த ஜெர்மானிய நாடுகளுடன் மீண்டும் தொடர்புகொண்டார்.

ஹென்றியின் சமயக் கொள்கைகளிலும் பிறகொள்கைகளிலும் உண்டான ஏற்றத்தாழ்வுகளினாலும் சூழ்ச்சியாலும் அவருடைய இறுதி ஆண்டுகள் பெரும் குழப்பத்தில் ஆழ்ந்தன. கிரான்மருக்கு ஹென்றியிடம் இருந்த செல்வாக்குக் குறையாது குலையாது இருந்தபோதிலும், ஹென்றி தம்முடைய ஜெர்மானிய மனைவியை விலக்கிவிட்டார். அவளுக்கு லூதரின் கொள்கைகளில் பற்று இருந்தது. அத்துடன் ஜெர்மானிய, சுவிட்ஸர்லாந்தைய சமயச் சித்தாந்தங்கள் ஹென்றியின் சிந்தனையை அலைக்கழித்தன. தனிப்பட அவரும் ‘பொருள் மாற்றத்தை’ (Transubstantiation)

நம்பாதவராக இருந்தார். மேலும், ஆறும் எட்வர்டின் காலத்தில் தொழுகைப் புத்தகமாக இருப்பதன் நகலைக் கோத்து வந்தார். இத் தருணத்தில் கத்தோலிக்கரான கார்டினரும், அவருடைய குழுவினரும் இடையறாது அவரைத் தம்பக்கம் இழுக்க முயன்றுவந்தனர். அரசரின் சொந்த குருமாரும், கென்ட் பிரபுக்களும் அரசருக்கு எதிராக இருப்பதாக அறிவித்தனர். விவிலிய நூலைப் பயன்படுத்தும் விஷயத்தில் கிளர்ச்சிகள் மூண்டன. இவையெல்லாம், ரோமாபுரிக்கு எதிராக அரசர் பயன் படுத்திய ஆயுதங்கள் அனைத்தும் பயனற்றுப்போய்விட்டன என்பதைத்தான் காட்டின.

விவிலிய நூலை அச்சிடும் உரிமையைக் கிராம்வெல் உத்தர விட்டுப் பறித்துக்கொண்டார். இவ் வேலையைத் தனிப்ப டைண்டேல் தொடங்கினார். ஆனால், இறுதியாக மத்தேயுவின் விவிலிய நூலின் கி.பி. 1538ஆம் ஆண்டின் மொழிபெயர்ப்பு அவர் ஏற்றுக்கொண்டார். அடுத்த ஆண்டில் வந்த 'பெரிய விவிலிய நூலின்' (Great Bible) மூன்றில் இரண்டு பாகம் டைண்டேலின் மொழிபெயர்ப்பை அடிப்படையாகக்கொண்டது. சில ஆண்டுகளில் அப் போதனைகளால் மக்கள் கவரப்பெற்றனர். ஆட்டிடையர்கள், தொழிலாளர்கள், அவர்களின் மனைவியர் முதலானோர் மேற்படி விவிலிய நூலைப் பெற்றுப் போற்றிவந்தனர். கை ஆஃப் வார்விக் (Guy of Warwick) என்ற நூலையும், பழைய கட்டுக்கதைகளையும் படிப்பதற்கு மாறாக விவிலிய நூலே பொது மக்களின் வாசிப்புக்குப் பயன்படுத்தப்பெற்றது. ஜனநாயக சமயச் சீர்திருத்தக்காரர்கள் உயர்ந்த குரலில் அதைப் படித்து, திருச் சபைத் தொண்டுகளைத் தடுத்துக் குறுக்கிட்டனர். கொஞ்சங் கொஞ்சமாக உருவச்சிலைகளையும், புனித யாத்திரைகள் செல் வதையும் சட்டங்கள் அகற்றிவிட்டன. அத்துடன் திருக்கோயில் களில் அலங்கார விளக்குகள், மணிகள் முதலியனவும் குறைக்கப் பெற்றன. எனினும், கத்தோலிக்கர் கிளர்ச்சி செய்யவில்லை. ஆனால், கத்தோலிக்கச் சமயத்தை அவமதித்து, பொதுத் தொழுகைகளை வசைப்பாட்டுகளில் குற்றஞ்சாட்டி, ஏளனமான அம்மானைப் பாட்டுகளில் அவர்களைக் குறைகூறியபோது கத்தோ லிக்க உணர்வு வெகுண்டெழுந்தது. கார்டினரும் அவருடைய நண்பர்களும் கத்தோலிக்க மொழிபெயர்ப்பில் வந்த விவிலிய நூலைக் கொணர அரும்பாடுபட்டனர்; ஆனால் பயனில்லை. கி.பி. 1543ல் இயற்றப்பெற்ற சட்டப்படி அதைப் பெண்கள், குடியானவர்கள், தொழிலாளர்கள் ஆகியோர் படிக்கக்கூடாதெனத் தடுக்கப் பெற்றனர். ஆனால், அஃது எல்லோரையும், பிரைமியரையும் (Primer) தொழுகைப் பாட்டுகளையும் (Psalms) ஆங்கிலத்தில் படிக்க

அனுமதித்தது. இவ்வகையில் சமயமும் ஆங்கில மயமாக்கப் படுவது பெருகிவந்தது. இது கி.பி. 1545-ல் கிரான்மரின் புகழ் பெற்ற தேவப் பிரார்த்தனை முதன்முதலாகச் செயின்ட் பால்ஸில் பாடப்பெறும்வரை புழக்கத்தில் இருந்தது.

சமய நிந்தனையாளர் தீக்கிரையாக்கப்பெற்றுவந்தனரேனும், பிராட்டஸ்டென்ட் உணர்ச்சியும், ஆறு விதிச் சட்டத்திற்காக அவ்வாண்டு கூட்டப்பெற்ற பாராளுமன்றத்திலேயே வெளியாகியது. அதற்குப் பதில் விடுக்கும் முறையில், ஹென்றி, தம்முடைய இறுதியானதும் மிகமிக அழகானதுமான சொற்பொழிவை நிகழ்த்தினர். உதாரகுணம் என்றும் இங்ஙனம் தாழ்ந்து போகவில்லை என்று அவர் குறிப்பிட்டார். 'ஒருவர் மற்றொருவரைச் சமய நிந்தனையாளர் என்றும் அனபாப்டிஸ்ட்டு என்றும் கூறிக்கொள்கின்றனர். அவரே மீண்டும் அவரைப் போப் பாண்டவரைச் சார்ந்தவர் என்றும், வஞ்சகர் என்றும், பாரிஸி (Pharisee) என்றும் கூறிக்கொள்கின்றனர்.' திருச்சபை ஊழியர் குறைகூறப்படவேண்டியவரே எனினும், லௌகிகர் அவர்களைவிடக் கண்டிக்கப்படவேண்டியவர். ஏனெனில், அவர்கள் விவிலிய நூலைக் குறைகூறினர்; 'அதைப் பாதிரிகளுக்கு எதிராகத் தூஷணையாகவும் இகழ்ச்சியாகவும்' கூறலாயினர். இதன் விளைவாக 'அந்த விலைமதிக்க முடியாத அணிகலனான தேவனின் சொற்கள் விவாதிக்கப்பெற்று, செய்யுளாக்கப்பெற்று, பாடப்பெற்று, ஒவ்வொரு மதுக்கடையிலும் தூற்றப்படுவதாயிற்று.

அடுத்த ஆண்டில், கத்தோலிக்கருக்கும் பிராட்டஸ்டென்டுகளுக்குமிடையே எழுந்த வெறுப்புகள் உச்சநிலையை எய்தின. பிராட்டஸ்டென்டுகள் அச்சிட்ட பிரசுரங்களின்மூலம் இவ் வெறுப்புகளை வெளியிட்டபோதிலும், கத்தோலிக்கரே முதலில் தாக்கப் பெற்றனர். சிறந்திருந்த சீர்திருத்தவாதிகள் சிலர் அவர்களை விசாரணைசெய்தனர். லாட்டிமர் சிறையில் அடைக்கப்பெற்றார். பிராட்டஸ்டென்ட் புத்தகங்களைப் பரிசோதிக்க ஏற்பாடு செய்தனர்; எழுபேர் தீயிட்டுக் கொளுத்தப்பெற்றனர். அவர்களுள் ஆன் ஆஸ்க்யூ (Anne Askew) என்ற லிங்கன்ஷயர் மாது ஒருத்தியும் இருந்தாள். அவளைச் சான்சலரும் அட்டர்னி-ஜெனரலும் பரணில் கட்டித் துன்புறுத்தியதை அவளே கூறிச்சென்றாள். அரசரின் அரண்மனையிலும் கோயிலிலுங்கூட, சமயச் சிந்தனை தென்படலாயிற்று. அரசியாருக்கு எதிராகவும் இவ்வகைச் செய்திகள் வர இருந்தன என்று நம்பப்பட்டது.

இப்படியாக, கி.பி. 1556ஆம் ஆண்டின் கோடைக்காலம் கழிந்தது. ஆனல், போரில் ஈடுபடச்சென்று திரும்பிய அவர்தம்

சிறந்த செயல் வீரர்களில் இருவரான ஹெர்ட்ஃபோர்டும் டட்லியும் வந்தபோது, ஹென்றி எதிர்கட்சியைப் பலமாக ஆதரிக்கத் தொடங்கினர். அவரால் கிரான்மரையோ, காதரின் பார் என்ற அவர்தம் மனைவியையோ, ஹெர்ட்ஃபோர்டையோ உதறித்தள்ள முடியவில்லை. அவர்கள் அரசரின் மகனும் வாரிசுமான எட்வர்டை உறுதியாக ஆதரித்தனர். சர்ரே பிரபு, பிராட்டஸ்டென்டுகளான ஹோவர்டு வமிசத்தவர் அரச பதவியைக் கைப்பற்ற முயற்சி செய்கிறார்கள் என்று கிளம்பிவிட்டார். அவர் ஒரு கவிஞர். கலவர நடவடிக்கைகளில் கடுமையாக ஈடுபடுவர்; தாமும் அரச வமிசத்தவர் என்று அறிவிலிபோன்று சொல்லிக்கொண்டார்; திடுமென முன்னேறிய சேய்மூர்களை அவர் இகழ்ந்தார். கடற்போரில் வெற்றி பெற்ற வீரரான ஜான் டட்லி என்பாரும் பிராட்டஸ்டென்டுகளின் பக்கலில் இருந்தார். பல அமைச்சர்களும் பாராளுமன்ற உறுப்பினர்களும் அவரை ஆதரித்தனர்; ஏனெனில், அவர் ஆதிக்கம் பெறும் நல்வாய்ப்பைப் பெற்றவர் என அவரை நம்பினர். கார்டினரை ஆதரித்த பேகட்டும் அவரை ஆதரித்தார்.

டிசம்பர் மாதத்தில் சர்ரே பிரபுவும் அவருடைய தந்தையாரான நார்ஃபோக்கும் டவர் சிறையில் அடைக்கப்பெற்றனர். டிசம்பர் 30 ஆம் தேதி அரசர் தம் உயிலை மீண்டும் வரைந்தார். அதன்படி, ஹென்றிக்குப் பிறகு அவர் மகன் எட்வர்ட்; எட்வர்டிற்கு மக்களில்லாவிட்டால் மேரி (காதரின் ஆரகானின் மகள்); அவளுக்கும் மக்களில்லாவிடில் அவளுக்குப் பிறகு எலிஸபெத் (ஆன் பொலீனின் மகள்). இம் முறையில் ஆட்சி செய்யவேண்டுமென நிர்ணயிக்கப் பெற்றது. உயிலில் குறிப்பிட்டவர்களின் திருமணம் ஆலோசனை சபையின் ஒப்புதலைப்பெற்று நடைபெறவேண்டுமென்றும், அவர்களுக்குப் பின்னர் தம்முடைய இரண்டாம் சகோதரி மேரியின் பெண்களுக்கும் ஏற்பாடு செய்யப்பெற்றது. இதன்படி, கத்தோலிக்கச் சமயத்தைச் சார்ந்த ஸ்காட்டிய வமிசத்திற்கும் வாரிசுரிமை கிடைத்தது குறிப்பிடத்தக்கது. எட்வர்டின் ஆசிரியராகப் பெரும் பிராட்டஸ்டென்டுகள் நியமிக்கப் பெற்றனர். அரசரின் உயிலை நடைமுறைப்படுத்த அதிகாரம் பெற்றிருந்த ஆலோசனை சபையில் பிராட்டஸ்டென்டுகள் பெரும்பான்மையினராக இருந்தனர். இத் தருணத்தில் கார்டினரும் தலைவாங்கப்பட்டார். கி.பி. 1547 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 19 ஆம் நாள் சர்ரே பிரபு கழுவேற்றப்பட்டார். அம் மாதம் 27 ஆம் தேதி அரசரின் கமிஷனர்கள் நார்ஃபோக்கின்மீது அரசத் துரோகக்குற்றம் சாட்டினர். அவர் அடுத்த நாளான ஜனவரி 28 ஆம் தேதி சாகவேண்டியவர். இறுதிவரைக்கும் தீர்மானமான முடிவெடுத்த அரசர் துரோகக்குற்றம் சாட்டப்பெற்ற சர்ரே,

நார்ஃபோக் இவர்களின் நிலங்களைப் பிரிவினை செய்வதுபற்றி விவாதித்தார். ஆனால், 28ஆம் தேதி முடிவிற்குள் கிரான்மரின் கையைப் பிடித்துக்கொண்டே எட்டாம் ஹென்றி இறந்து போனார்.

அவரின் ஆட்சியில் ஏற்பட்ட பெரும் குழப்பங்களின் காரணமாக, அவரது ஆட்சியில் ஏற்பட்ட நடவடிக்கைகளை ஆராய்ந்து பார்ப்பது கடினம். அவர் முடித்துச் சென்றவற்றில் எவ்வெவற்றைத் திருத்தவேண்டிய அல்லது இல்லாமல் மாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது என்பதைப் பின்னர்க் காண்போம். அவர் காலத்தில் நாணய மதிப்புக் குறைக்கப்பட்டிருந்தது. ஏழைமை புதுவகையில் பெருகியிருந்தது. சமயப் பிளவுகள் ஸ்காட்லாந்து விவகாரம் முற்றிக் கசப்பான நிலையை யெய்தியது. அயர்லாந்து பிரச்சினை தீர்க்கப்படவில்லை. எனவே, மேற்கூறிய பிரச்சினைகளைப்பற்றிப் பின்னர்தான் ஆராயவேண்டும். இங்கிலாந்தின் பரம்பரையான சுதந்திரம், எட்டாம் ஹென்றி யினால் உருவாக்கப்பெற்ற புதிய அரசின் சக்தி, திறமையைவிட மிக்க பலமுற்றிருந்தது. ஹென்றியின் ஆட்சிக்காலத்தில் அரச ஆலோசனை சபைகள், நீதிமன்றம் ஆகியவை பொதுச்சட்டத்தின் அதிகாரங்களை ஆக்கிரமித்துக்கொண்டன. அதில், கிராம்வெல் அரச துரோகத்தைப்பற்றிப் (Lese Majeste) பேசிவந்தார்; திருச் சபையினர் அரசரின் தெய்விக உரிமையைப்பற்றிப் பேசலாயினர். தம் அமைச்சர்கள் முணுமுணுத்துப் பேசுவதை ஒருபோதும் பொறுத்துக்கொள்ளாமல் ஹென்றி தம்முடைய அருஞ்செயல்களை உரக்கக் கூச்சலிட்டு வெளியிட்டார். அவர் இடைக்காலத் திருச்சபையை அழித்து, பாராளுமன்றத்தை இடையருது பயன் படுத்திச் சமுதாயத்தைப் புனருத்தாரணம் செய்தார். பாராளு மன்றத்தில் விவாதத்தை அவர் வரவேற்றார். அவர் சமயத்தை மாற்றமுற்பட்டபோதும், தமக்குப் பின்னர் அரசுரிமை பெறவேண் டியவர்களை அவரே திட்டமிட்டு அமைத்தபோதும், வரிவிதிப்புகளை தம்மிஷ்டப்படி நீக்கிவிட்டபோதும் பாராளுமன்றம் அவரது நடவடிக்கைகளை நம்பியது. கிராமக் கடைகளிலும் இக் காலத்தில் பாராளுமன்றச் சட்டங்கள் அச்சடிக்கப்பெற்று விலையாயின. பொருள் சேமிப்பு மன்றம் (Augmentations Court), படைமானிய நிலுவைகளைக் கண்காணித்த பாதுகாப்புரிமை மன்றங்கள் (Court of Wards), வேல்ஸின் ஆலோசனை சபை (Council of Wards) அல்லது கடற்படைத்துறை போன்ற அரசாங்கத்தின் கருவிகளைச் சட்டங்களின் மூலம் ஹென்றி ஒழுங்குபடுத்தியிருந்தார்.

ஹென்றி ஓர் உண்மையான அரசர்; அவரே தம் கைப்பட வெளிநாட்டுக் கடிதங்களைத் திரும்ப வரைந்தார். சமயக்

கொள்கைகளைத் திருத்தியமைத்தார். மேலும், அரசாங்கத்தின் திறமையைத் தொடர்ந்து பெருக்கியவரும் அவரே. விண்மீன் மன்றத்தில் அவரது ஏற்பாட்டினால் அரசியல் விவகாரங்களைக் கவனிக்கும் பிரிவி கவுன்சிலையும், நீதிக்கான கவுன்சிலையும் தனித்தனியாகப் பிரித்துச் செயலாற்றவைத்தார். கௌரவ வரிசைமுறைக்கான சட்டப்படி (Statute of Precedence) அரசரின் செயலாளரின் உயர்ந்த பதவியை அவர் உறுதிப்படுத்தினார்; செயலாளருக்குத் துணைசெய்ய மற்றொரு கூட்டாளியையும் கொடுத்தார். தற்காலிகமாக அவர் ஏற்படுத்திய கமிஷன்களிலிருந்து லார்டு லெப்டினன்ட் என்ற பதவி பிற்காலத்தில் உருவாகியது. 'கஸ்டோஸ் ரோடுலோரம்' (Custos Rotulorum) என்ற பதவியை அவருடைய சட்டங்கள் ஏற்படுத்தின. அப் பதவி வகித்தவர்களின் பணியாள் அமைதிக்காவலரின் எழுத்தாளர்களாகவும், ஏழைகளின் சட்டங்கள், சிவில்பாரிஷ், திருமணம், மரணசாசன நிரூபணம் முதலியவற்றைப் பாதுகாப்பவரும் ஆனார்கள். அவருடைய தொடக்ககாலப் போர்களும், புரட்சிகளும் தொடர்ந்து கடைப்பிடிக்கவேண்டிய சமூகக் கொள்கைகளை அனுமதிக்காது தடுத்தன. எனினும், அவரது அமைச்சர்களின் இடைவிடாத விழிப்பினாலும், சட்டங்களாலும் அரசரின் அதிகாரங்களை அரசுக்குத் (State) தொடர்ந்து மாற்றின. எடுத்துக்காட்டாக, விலைவாசிகளையும் கூலியையும் நிர்ணயித்தல், நிலங்களைச்சுற்றி வேலியடைப்பதற்கு எதிரான சட்டங்கள், தலத் தேர்தல்களைக் கூர்ந்து கவனித்தல் முதலிய அதிகாரங்கள் அரசுபெற்று ஓங்கலாயிற்று. பட்டயம்பெற்ற வணிகர்களை அவர் ஸ்பெயினுக்கு அனுப்பி, அவர்களை இன்குயிஷிஷன் நீதிமன்றங்களிலிருந்து பாதுகாத்தார். ஹெம்ப், ஃப்ளாக்ஸ் போன்ற சணல் தொழில்களைக் குறிப்பாக வளர்க்க முயன்றார். தம் தந்தையின் நாவாய்ச் சட்டத்தைத் திரட்டி ஒன்று சேர்த்தார்.

நாட்டில் பல கருத்துகளைப் பரப்பி அதனால் பல குழப்பங்கள் ஏற்பட்டபோதிலும், அவர் தேசிய சக்தியைப் பெருக்க உதவும் பல மூலதத்துவங்களைக் காட்டிச் சென்றார். தொடக்ககாலத்திலிருந்து அவர் கடற் படையையும், பீரங்கிப் படையையும் வளர்ப்பதில் கருத்துமிக்கவரானார். இவ்விரண்டையும் இணைத்துக் கடலாதிக்கத்தை உருவாக்கினார். அவர் உருவாக்கிய 'கிரேட் ஹாரி' (Great Harry) என்னும் கப்பல் புதிய போர்க் கப்பலுக்கு முன்மாதிரியாக அமைந்தது. இக் கப்பல்களில் பீரங்கிகள் வைக்கப்பட்டன. கப்பலின் முன்னணியம் (Bow), கப்பலின் பின்னணியம் (Stern) ஆகிய பாகங்களில் இப் பீரங்கிகள் வைக்கப்பட்டன. முன்னர் இவை கோட்டைகளில் வைக்கப்பெற்றிருந்தன. இப் பீரங்கிகள்

கப்பலின் உடலில் பொருத்தப்பட்டிருந்த இடப்பக்கத் துவாரங்களின்மூலம் சுடப்பெற்றன. அத்துடன் இவற்றை ஒருமிக்க வெடித்துத் தீர்க்கமுடியும். டிரேக் முதல் நெல்சன் வரை வந்த மாலுமிகள் இவ்வகைக் கப்பல்களைப் பயன்படுத்தினர். அதிலேயே அவர்தம் வெற்றியின் ரகசியம் இருந்தது. ஹென்றி காலமானபோது, கடற்படையில் ஐம்பத்துமூன்று கப்பல்கள், இரண்டாயிரம் துப்பாக்கிகளுக்குமேலாகச் சுமந்து சென்றன. அவரும் பிளிமத்தைச் சார்ந்த வில்லியம் ஹாக்கின்ஸ் போன்ற அவருடைய வல்லுநர்களும் தொடர்ந்து பரிசோதனைகள் நடத்தி இக்கால அமைப்பில் கப்பல்களைக் கட்டிவந்தனர். தூலத்தின் நீளத்திற்கேற்ப கப்பலில் பரந்த மேல்தட்டுகள் அமைந்திருந்தமையால், இக் கப்பல்கள் இடைக்காலக் கப்பல்களைவிட வேகமாகச் சென்றன. ‘காலி’ (galley) என்னும் சிறு தோணிகள் கனம் குறைந்த துப்பாக்கிகளைமட்டும் சுமந்து செல்லும் துணைக் கப்பல்கள் ஆயின. போர்ட்ஸ்மவுத்தில் ஏழாம் ஹென்றி கப்பல் துறையை ஏற்படுத்தியிருந்தார். எட்டாம் ஹென்றி டெப்ட்ஃபோர்ட், உல்விச் என்ற மற்றுமிரண்டு அரசாங்கக் கப்பல் துறைகளைக் கட்டுவித்தார். மாலுமிகளைப் பயிற்றுவிக்க ‘டிரினிட்டி இல்லம்’ (Trinity House) என்ற இடத்தையும் நிலை நாட்டினர். கப்பற்படை போர்டு ஒன்றையும் அவர் அமைத்தார். உண்மையில், அதுதான் தற்காலக் கடற்படைத்துறையின் மூலமாகும். போர்ட்ஸ்மவுத்தில் பீரங்கிப்படைகளை வைக்கப் பெரும் பொருளைச் செலவிட்டார். டீல் என்ற இடத்தில் கட்டடங்களையும், பாதுகாப்பரண்களையும் அமைக்கவும் பொருள் செலவிட்டார். பாதுகாப்புக்கு உதவும் ஒவ்வொன்றையும் காக்க அவர் சட்டங்கள் செய்தார். போருக்குப் பயன்படும் வில் கொம்புகளை ஏற்றுமதி செய்வதை அவர் தடுத்தார். திருமடாலய மணிகளிலிருந்து பீரங்கிகளை வார்த்துப் பயன்படுத்தினர். கிராம பட்டுகளில் (Village Butts), கைத் துப்பாக்கிகளையும் வில்களையும் பயன்படுத்தும் அதிகாரம் வழங்கினர். அவற்றைப் பரிசோதிக்கக் கி.பி. 1545-ல் ஃபிரெஞ்சுப் படையெடுப்புகள் வந்தபோது, கனத்த துப்பாக்கிப் படை கொண்டிருந்த டட்லி, அவர்களைக் கடலிலும் நிலத்திலும் சமாளித்தார். அவரது படையில் 1,00,000 படை வீரர்கள் இருந்தனர்.

செயின்ட் ஜார்ஜ் திருக்கோயிலில் எட்டாம் ஹென்றியின் சடலம் புதைக்கப்பெற்றது. ‘கர்த்தரை நினைந்து உயிர்விட்டவர்கள் அவரின் ஆசி பெற்றவர்கள்’ என்று விவிலிய நூலில் காணப்பட்ட பகுதியை கார்டினர் மேற்கூறிய திருக்கோயிலில் போதித்தார்.

## சமகால நிகழ்ச்சிகள்

1527 ரோமாபுரி சூறையாடப்படல்.
காஸ்டிகிலியோன் என்பார் 'இல் கார்டிஜியானே' என்பதை இயற்றல்.

1528 ஆல்பிரெசெட் ட்ரூரர் என்பாரின் மரணம்.

1529 பார்ஸிலோனு, காம்ப்ராய் உடன்படிக்கைகள்.

1530 ஆக்ஸ்பர்க் பாவ மன்னிப்புக் கூட்டம்.
மால்ட்டாவில் நைட்ஸ் ஹாஸ்பிட்டலர்ஸ் நிலை பெறுதல்.

1531 கேப்பல் என்ற இடத்தில் சுவிங்லி என்பார் கொல்லப் படுதல்.
கினி கடற்கரையிலிருந்து நீக்கிரோக்கள் அமெரிக்கா வுக்கு இறக்குமதியாதல்.

1532 'பெரு'வில் பிஸ்ஸாரோவின் படையெடுப்பு.
ராபெல்ஸ் என்பாரின் 'பாண்டகுருயெல்' என்ற நூலின் முதற்பகுதி எழுதப்பெறல்.

1533–84 ரஷியாவில் ஐவான் (கொடுங்கோலன்) ஆட்சி.
அரியோஸ்டோவின் மரணம்.
முதலாம் ஃபிரான்சிஸ் என்பாரின் மகன் ஹென்றியை காதரின் டி மெடிசி மணந்துகொள்ளல்.

1534 ஏசு சங்கம் அமைக்கப்பெறல்.
முன்ஸ்டர் என்ற இடத்தில் அனபாப்டிஸ்ட்டுகளின் ஆதிக்கம்.

1535–49 போப்பாண்டவர் மூன்றும் பால் (ஃபார்னஸி).
மிலானில் கடைசி ஸ்ஃபோர்ஸா டியூக்கின் மரணம்.
டேனியர் ஹான்ஸியாடிக் குழுவை இறுதியாக அழிக்கப்படல்.

1536 ஏராஸ்மஸ்ஸின் மரணம்.
ஜெனிவாவில் கால்வின் தென்படல்.

1539 ஸ்பானியர் கூபாவைக் கைப்பற்றி ஃபிளாரிடாவின் மீது படையெடுத்தல்.

1541 கார்டினல் கன்டாரினியின் சமய ஒருமைக்கான பேச்சுவார்த்தைகளின் முறிவு.
புடா-பெஸ்த்தைத் துருக்கியர் கைப்பற்றல்.

**1542** ஃபிரான்ஸிஸ் ஜேவியர் தூரக்கிழக்கில் கிறிஸ்துவ சமயப் பிரசாரத்தைத் தொடங்கல்.
கராஃபா என்பார் போப்பாண்டவரின் இன்குயிஷிஷன் நீதிமன்றத்தை அமைத்தல்.

**1543** கானடாவிற்குக் கார்ட்டியர் நான்காம் முறை கடற் பயணம் செய்தல்.
கோப்பர்நீக்கஸின் மரணம்.

**1544** போடோஸி சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்படல்.
கோனிக்ஸ்பர்க் பல்கலைக் கழகம் நிலைநாட்டப்படல்.

**1545** காந்தஹாரில் ஹுமாயூன் நுழைதல்.
பரே (Pare) என்பார் அறுவை சிகிச்சை முறைபற்றி எழுதுதல்.

**1546** லூதரின் மரணம்.
டிரென்ட் கவுன்சிலின் முதல் கூட்டம்.
கேம்பிரிட்ஜில் டிரினிட்டி கல்லூரியும், ஆக்ஸ்ஃபோர்டில் கிரைஸ்ட் சர்ச் கல்லூரியும் அரசரால் நிலைநாட்டப்படல்.

**1547** செர்வான்டஸ் என்பாரின் பிறப்பு.
ஐந்தாம் சார்லஸ் மன்னர் சாக்ஸனி மாரீஸ் என்பாருடன் இணைந்து முஹல்பர்க் போரில் வெற்றிபெறல்.
—1559 ஃபிரான்ஸில் இரண்டாம் ஹென்றியின் ஆட்சி.

# 3. குழப்பம், 1547 – 1558

## 1. ஆரும் எட்வர்ட்

சமயச் சீர்திருத்தம் அதன் உச்சநிலையை அடைந்துகொண்டிருந்தது. லூதரின் சமயக் கொள்கைகளைக் கடைப்பிடித்த தலைவர்களைப் பேரரசர் ஐந்தாம் சார்லஸ் மன்னர் சிறைப்பிடித்தார். ஆனால், ஸ்பானியப் போர்ப்படைகள் ஜெர்மனியைத் துன்புறுத்தி இளவரசர்களின் போரைக் கிளப்பிவிட்டனர். அப் போரின் விளைவாகச் சார்லஸின் அருஞ் செயல்கள் அனைத்தும் நாசமாயின. பேரரசரின் இன்குயிஷிஷன் நீதிமன்றங்கள் நெதர்லாந்திலும், செவில் என்ற இடத்திலும், மேற்கிந்தியத் தீவுகளிலும் தொடர்ந்து நடக்கும் பயங்கரமான கொடுமைகளுக்கான விதைகளை ஊன்றியிருந்தன. ஃபிரான்ஸின் அரசரான முதலாம் ஃபிரான்ஸிஸ் எட்டாம் ஹென்றி இறந்த இரண்டு மாதத்திற்குள்ளேயே இறந்துபோனார். ஃபிரான்ஸில் இரண்டாம் ஹென்றி என்பார் அவரைத் தொடர்ந்து அரசரானார். அவரிடம் முதலாம் ஃபிரான்ஸிஸிடம் இருந்த தூர்த்தத்தனமான பொறையுடைமை இல்லாமையால் அவர் ஹியூஜினேக்களுடன் போர் தொடுத்தார். [ஃபிரான்ஸின் பிராட்டஸ்டென்டுகளுக்கு ஹியூஜினேக்கள் (Huguenots) என்று பெயர்]. கி.பி. 1546–50 வரை கூடிய டிரென்ட் கவுன்சிலின் (Trent Council) முதல் கூட்டம் சமாதானக் கொள்கைகளைப் புறக்கணித்துவிட்டது. ரோமாபுரியில் இருந்த பலர் இச் சமாதானக் கொள்கையைப் பின்பற்றவேண்டுமெனத் தூண்டப்பட்டிருந்தனர். டிரென்ட் கவுன்சில் கத்தோலிக்கக் கொள்கைகளைத் திரும்ப வரையறுத்துக் கூறலாயிற்று. இச் செயலைத் திறமையாகச் செய்துமுடிக்கும் பெரும் உதவியைக் கத்தோலிக்கர் ஏசு சங்கத்திலிருந்து (Society of Jesus) பெற்றனர். பிற்காலத்தில் அதை அமைத்தவர் இக்நேஷியஸ் லயோலா என்பவராவர். அவரது முயற்சியால் ரோமாபுரிக் கத்தோலிக்கர் திரும்பவும் தங்களை நிலைநாட்டிக்கொள்ளும் திறமைபெற்றவர்கள் ஆனார்கள்.

ஏசு சங்கத்தின் அரும்பணியால் பல அரசர்கள் மீண்டும் கத்தோலிக்கச் சமயத்தைப் போற்றத் தொடங்கினர். இளைஞர்களும் அதனால் மனம் கவரப்பெறுவோராயினர். அத் தருணத்தில்தான் லூதர் காலமானார். அவரைத் தொடர்ந்து பிராட்டஸ்டென்ட் கொள்கைகளின் தலைவரான மெலாஞ்ச்தான் (Melanchthon) என்பவர் லூதரைப்போன்று இயற்கைத் திறமைகளற்றவர். பிராட்டஸ்டென்ட் கொள்கைகள் சுவிட்ஸர்லாந்திலும், தென் ஜெர்மனியிலும் தீவிரமாக ஒளிவிட்டுப் பிரகாசித்தன. அவர்கள் சுவிங்லி என்பாரின் போதனைகளைக் கடைப்பிடிக்கலாயினர். அவரது போதனையால் பிராட்டஸ்டென்டுகள் ஜனநாயக அடிப்படையில் சமயத்தை இயக்குவித்தார்கள். அவர்கள் தொடக்ககாலத் திருச்சபைகளை நிலைநாட்டவேண்டுமென வலியுறுத்தினர். அக் கொள்கையை முடிவாகக்கொண்ட அவர்களுக்கு ஜான் கால்வின் என்ற ஃபிரெஞ்சியர் பின்னர் தலைவராக வந்தார். அவர் பேரறிஞர். அவர் கி.பி. 1541ஆம் ஆண்டிலிருந்து ஜெனிவாவைத் தம் தலைமை இடமாக்கிக்கொண்டார். அவருடன் ஸ்ட்ராஸ்பர்க்கைச் சார்ந்த ப்யூஸர் (Bucer) என்பாரும், ஜூரிச்சைச் சேர்ந்த புல்லிங்கர் (Bullinger) என்பாரும் பிராட்டஸ்டென்ட் சமயத்தைப் போற்றுவோராயினர். இத்தாலியிலும் சமயப் போர்களினால் செங்குருதி பரவலாயிற்று. அதேபோன்று போலந்திலும், மத்திய கிழக்கு நாடுகள் எல்லாவற்றிலும் சமயப்போர்கள் மூண்டன. ஏசுநாதரின் உடலும் ரத்தமும்பற்றிய 'பொருள் மாற்றம்' என்ற கொள்கைபற்றி ஏற்பட்ட விவாதத்தாலேயே இங்கெல்லாம் சமயச்சண்டைகள் மூண்டன. முன்னர் ஏற்பட்ட போர்களுக்கும் இஃதே காரணமாய் அமைந்தது.

எட்டாம் ஹென்றி தம் அரியணையை ஒன்பது வயது பாலகனிடம் விட்டுச்சென்றபோது முதல் முறையாக இச் சச்சரவு இங்கிலாந்திலும் ஏற்படலாயிற்று. ஆறும் எட்வர்ட் பதவியேற்ற சில வாரங்களுக்குள்ளேயே அவருடைய ஆலோசனை சபை அவருடைய தகப்பனார் சிரமப்பட்டு நிலைநாட்டியிருந்த சமநிலைக் கொள்கையைப் புறக்கணித்தது. ஆலோசனை சபையினர் எட்வர்ட்டின் பாதுகாவலராக ஹெர்ட்ஃபோர்டு பிரபுவை நியமித்தனர். (இனி அவரை சாமர்செட் டியூக் என்போம்). அவருக்குக் கட்டுப்பாடொன்றையும் அவர்கள் விதிக்கவில்லை. அவர், ஆட்சியிலிருந்த பிரபல கத்தோலிக்கர்களைப் பதவியிலிருந்து விலக்கினார். அவர்கள் கூட்டிய முதல் பாராளுமன்றம் அரசர் வயதுக்கு வந்ததும் தாம் வயதுவராத காலத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டங்களை விலக்கிவைக்க அரசரை அனுமதிக்கும் சட்டத்தை விலக்கிவைத்தனர்.

சாமர்செட் டியூக் டியூடர் வமிசத்திற்கு நன்முறையில் தொண்டாற்றினர். குறிப்பாக அவருடைய சகோதரி ஜேன் செய்மூர் எட்டாம் ஹென்றியை மணந்த நாளிலிருந்து இத் தொண்டு தொடர்ந்துவந்தது. அவர் சிறந்த லட்சியமும் கூர்த்த பயிற்சியும் ஒருங்கே இணையப்பெற்றவர். மடாலயங்களை அழித்ததில் பெரும் பங்கைக் கொண்ட அவர், திருச்சபை அழிவுகளிலிருந்து சாமர்செட் அரண்மனை என்ற அழகிய மாளிகையைக் கட்டுவித்தார். அவர் வெஸ்ட்மினிஸ்டர் ஆலயத்தைக்கூட அழிக்க முயன்றார். அவரிடம் சமயக்கொள்கைகளில் ஆழ்ந்த பற்று இருந்ததோடு, மன்பதையின்பால் இரக்கமும் கொண்டிருந்தமையால் சமயச் சீர்திருத்தக் கொடுமைகளுக்குப் புறம்பாக அவர் நின்றார். ஸ்காட்டியத் தகராறை மாற்றி ஸ்காட்டியரையும் ஆங்கிலேயரையும் மனம் இணைந்து நடக்கச் செய்வதுடன், இரண்டு அரசாங்கங்களும் இணையவேண்டும் என்றும் நம்பினர். ' எல்லைச் சுவராகக் கடலும், பாதுகாப்புப் படைகளாகப் பரஸ்பர அன்பும், பாதுகாக்க இறைவனையும் ' கொண்டு பிரிட்டிஷ் பேரரசர் ஒருவரின்கீழ் இரண்டும் இணையவேண்டும் என்று அவர் பெரிதும் விரும்பினர்.

சமய ஒருமையால் பொறையுடைமை நிலைநாட்டப்படலாம் என்றும் அவர் நம்பினர். நில அடைப்பால் புறக்கணிக்கப்பட்ட குடியானவர்களுக்கு அவர் பேராதரவு நல்கினர். கடைசியாகக் குறிப்பிட்ட பணியைச் செய்வதில் அரசின் முக்கிய ஏஜன்டாக இருந்தவர் ஜான் ஹேல்ஸ் (John Hales) என்பவராவர். அவர் ஏற்கெனவே சமயத்திற்காக நாடு கடத்தப்பட்டவர். மீண்டும் ஒருமுறை அங்ஙனம் நாடு கடத்தப்பட இருந்தார். அவர் ஒரு ஜனநாயகவாதி ; நாட்டில் பொற்காலம் பிறக்கப்போவதாக அவர் நம்பிக்கை தெரிவித்தாலும் அவரால் இரும்புக் காலத்தைத்தான் கொணர முடிந்தது. இதிலிருந்து ஓரளவு நாம் பாதுகாப்பாளரான சாமர்செட் டியூக்கின் குணநலத்தை அறிகிறோம். அவர்தான் வில்லியம் செஸில், தாமஸ் ஸ்மித் போன்ற கேம்பிரிட்ஜ் கல்லூரிப் பிராட்டஸ்டென்டுகளை அரசியல் துறைக்குக் கொணர்ந்தவர். அவர்கள் பின்னல் எலிஸபெத் மகாராணியாரின் ஆட்சியின்போது சிறந்த அமைச்சர்களாகப் பணியாற்றினர்கள். ஆனல், அவருடைய அறிவுரையாளர்களில் தலைசிறந்தவர் பேகட் (Paget) என்பவராவர். அவர் சமயத்தைவிட அரசின் (State) அமைதியை மேலானதாகப் போற்றியவர். அவர், தொடக்க காலத்திலேயே சாமர்செட்டை, அவரின் உத்தம பாவனைகளாலும், மக்கள் அபிமானத்தைப்பெறும் பேரார்வத்தாலும் ஏற்பட இருப்பதை முன்னரே எச்சரித்தார்.

'ஏழைகளிடத்து நல்லவராகவேண்டும் என்ற உங்கள் கருத்திலிருந்து விடுதலை பெறுங்கள். ஏனெனில், மேன்மை பொருந்திய நீங்கள் இவ்வகையான ஏழை மனம் கொண்டிருப்பது போன்று வேறு யாரும் கொண்டதில்லை. எனவே, விடுதலை பெறுங்கள்'.

சட்டத்தை நடைமுறைப்படுத்தாததிலிருந்தும், கிரான்மரின் போதனைகளைக் கடைப்பிடித்ததிலிருந்தும் அரசாங்கம் புதுவகை நடவடிக்கையைப் பின்பற்றியது என்பது தெளிவாயிற்று. லண்டன் தொழுகைக் கூட்டங்களில் உருவச்சிலைகள் எடுத்துச் செல்லப்பெற்றன. அங்குச் சுவரெல்லாம் வெள்ளையடிக்கப் பெற்றன. நீண்ட அலங்கார உடைகளை அவர்கள் நகரத் தையல் தொழிலாளர்களிடம் தைக்கக்கொடுத்தனர். இதே தருணத்தில் போர்ட்ஸ்மத்தில் தொழுகை மேடைகளை உடைத்துத் தள்ளினர். இவற்றை கார்டினர் 'முரடர்களும் லோலார்டுகளும்' செய்த தகாத செயல்கள் என்று குற்றஞ் சாட்டினர். அரசருடைய அதிகாரத்தைப்பெற்றுப் பிரசுரிக்கப்பெற்ற பிரசங்கங்கள் சமயச் சடங்குகளைப் புறக்கணித்ததுடன், வண்ண ஓவியங்களையும், வண்ணப் பலகணிகளையும் அழிக்கத் தூண்டின.

இலையுதிர் காலத்தில் பாராளுமன்றம் கூடியபோது லண்டன் மாநகரில் ஒரே கலவரமான சூழ்நிலை காணப்பெற்றது. மக்கள் கோபவெறியில் தலைகால் தெரியாது நின்றனர். தொழில் பயிற்சி பெறும் ஊழியர்கள் ஹோஸ்ட் என்ற விழாவின்போது திருச்சபையினரைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டு அவர்களை எள்ளி நகையாடினர். இத் தருணத்தில் பாதுகாப்பாளரான சாமர்செட் டியூக் ஸ்காட்டியரைப் பிங்கிப் (Pinkie) என்ற இடத்தில் வெற்றி கண்டு வாகைசூடி திரும்பினர். அரசாங்கமும் பெரும் முன்னேற்ற மான நடவடிக்கைகளைக் கைக்கொண்டது. அவர் ஸ்காட்டியரின்மீது படையெடுத்துச்சென்ற படையெடுப்புக்காகப் புதிய சான்ட்ரீஸ் சட்டம் ஒன்றை இயற்றுவித்துப் பணம்பெற்றார். ஏறத்தாழ இரண்டாயிரத்திற்குட்பட்ட இந்தச் சான்ட்ரி நிறுவனங்கள் கலைக் கப்பெற்று அவற்றின் பொருள்கள் பறிமுதல் செய்யப்பட்டன. 'மூடப் பழக்கங்களுக்கு இரையான எல்லா கில்டுகளையும் அழித்து அவற்றின் பொருளையும் பறிமுதல் செய்தனர். இதனால், எண்ணற்ற கல்விச்சாலைகளும் அறநிலையங்களும் அழிக்கப் பெற்றதால் பேராபத்தான சூழ்நிலை உருவாகியது. இதன் விளைவாகக் காமன்ஸ் சபையிலும் பெருத்த எதிர்ப்புகள் எழுந்தன. இதைத் தவிர, சாமர்செட் டியூக் செய்த ஏனைய நடவடிக்கைகள் பேராதரவுபெற்றன. சமயச் சடங்கைத் (Sacrament) தம்மிஷ்டப்படி நிர்வகிக்கலாம் என்று இருவகையினரையும் அவரது

சட்டங்களில் ஒன்று பணித்தது. தேர்தல் என்ற போர்வையில் நடந்த ஊழல்களை நீக்கி, பிஷப்புகளை அரச ஆணையால் நியமிக்க மற்றொரு சட்டம் இயற்றப்பெற்றது. ஹென்றியின் காலத்தில் இயற்றப்பெற்ற துரோகக் குற்றத்துடன் இணைக்கப்பெற்ற வற்றை விலக்கும் சட்டமொன்றும் இயற்றப்பெற்றது. அதில் வாரிசுரிமை, ஆதிபத்தியம் இவை முன்னர்போன்றே பாது காக்கப்பெற்றதுடன் விலக்கு அளிக்கப்பெறுதும் காக்கப் பெற்றன. அத்துடன் துரோகக் குற்றம் சாட்டப்பெற்ற வர்களை நிரூபிக்க இரண்டு சாட்சியங்கள் தேவை என்றும் நிர்ணயிக்கப்பட்டது. ரோமானியக் கத்தோலிக்கச் சமயக் கொள்கைகளை வற்புறுத்திய ‘ஆறு விதிச் சட்டம்’ நீக்கப்பெற்றது. அத்துடன் சமய நிந்தனைபற்றி நடைமுறையில் இருந்த எல்லாச் சட்டங்களையும், விவிலிய நூலைப் படிப்பதில் இருந்த எல்லாத் தடைகளையும் நீக்கியதுடன், மன்னர் பேரறிக்கைகள் பாராளு மன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கு நிகரான மதிப் புடையவை என்னும் நிலைமையையும் மாற்றிற்று. ஆனால், இவ் வமைதியான சூழ்நிலை எத்துணை நாட்சளுக்கு நீடிக்கும்? சமயத்தை எளிமையாக்கிய இச் சட்டம் எத்துணை நாட்களுக்கு நீடிக்கும்?

கி.பி. 1548ஆம் ஆண்டில் பாராளுமன்றத்திற்கு வெளியே எடுக்கப்பெற்ற நடவடிக்கைகளிலிருந்து அரசாங்கம் இச் சமயச் சுதந்திரத்தைப் பயன்படுத்த முயன்ற நிலை தெளிவாயிற்று. அரசருடைய குருமார்கள் ஆங்கிலத்திலேயே தம்முடைய தொழுகைகளைப் படித்து மற்றவர்களுக்கு முன்மாதிரியாக நின்றனர். சமயச் சடங்குபற்றிய கட்டளைக்கான பேரறிக்கை யொன்று வெளியிடப்பெற்றது. அதன்படி, லௌகிகர்களுக்கு ஆங்கில ஆராதனைத் தொழுகைக்கூட்டம் ஒன்றும் ஏற்படலாயிற்று. இத் தருணத்தில் அரசரின் மேற்பார்வையாளரும் கமிஷனர்களும் உருவச்சிலைசுளை அழிக்குமாறு கட்டளையிட்டனர். மேலும், சான்ட்ரிகளின் சொத்துக்களை மதிப்பெடுக்கவும் அவர்கள் முனைந்தனர். நார்ஃபோக் இன்னும் டவர் சிறையிலேயே அடைக்கப் பெற்றிருந்தார். அவருடன் கார்டினரும் இப்போது சேர்ந்து சிறைப்படுத்தப்பெற்றார். சட்டமியற்றப்படாமையால் வந்த கிரான்மரின் விதிகள் அநியாயமானவை என்றும், அவை நடை முறைப்படுத்தப்படுவதைப் பார்த்துக்கொண்டு அவரால் வெறுமனே இருக்க முடியாதென்றும் கார்டினர் எதிர்த்தார். எனவே, அவரும் சிறைப்படுத்தப்பெற்றார்.

சமயச் சடங்கு, அனபாப்டிஸம், சாத்விக மதம், பொதுவுடமைத் தத்துவம் ஆகியவற்றிற்கு எதிரான சமய நிந்தனைகள் மன்னிக்க

முடியாத பாபங்கள் என்று கருதிய எட்டாம் ஹென்றி, தம்முடைய பொது மன்னிப்புப்பற்றிய ஆணையொன்றில் மேற்கூறியவற்றைத் தவிர்த்திருந்தார். ஆனால் இப்போது, இவையும் இன்னும் பலவும் 'சமாதானப்படுத்துதல்' என்ற பெயரில் சமயத்தை அழித்தன.

மேற்கூறிய கொள்கைகள் பெரும்பாலும் வெளியிடங்களிலிருந்துவந்தவை. ஐரோப்பாவில் பேரரசரின் கொள்கையை ஒப்புக்கொள்ளாமல் பிராட்டஸ்டென்ட் சமயத்தை ஆதரித்தவர்கள் அவரால் ஒறுக்கப்பட்டனர். அவர்களில் சிலர் உயிருக்கஞ்சி அகதிகளாய் இங்கிலாந்துக்கு ஓடி வந்தனர். அவர்களைப் பயன்படுத்தி கிரான்மர், டிரான்ட் கவுன்சிலைப்போன்று அதற்கு எதிரான மகாநாடொன்றைக் கூட்டச் சிந்தித்தார். கி.பி. 1548–9-ல் சமயச் சீர்திருத்தக்காரர்கள் இங்கிலாந்திற்கு எண்ணற்றவர்கள் வந்து குவிந்தனர். அப்படி வந்தவர்களில் ஜெர்மானிய ப்யூஸர் (Bucer) என்ற புகழ்மிக்காரும், ஒச்சினோ, பீட்டர் மார்ட்டியர் (Peter Martyr) என்ற இத்தாலியர்களும், ஆஸ்டின் திரிதுறவியர் தொழுகைக் கூட்டங்களை அமைத்துத் தந்த போல் லாஸ்கி என்பாரும், கான்டர்பரியில் ஃபிரெஞ்சுத் திருச்சபையொன்றும், கிளாஸ்டன்பரியில் எஞ்சியிருந்தவற்றைப்பெற்ற ஸ்ட்ராஸ்பர்க் நெசவாளிகளும் முக்கியமானவர்கள் ஆவர். ப்யூஸர், கேம்பிரிட்ஜ் கல்லூரியில் சமயப் பேராசிரியரானார். பீட்டர் மார்ட்டியர் ஆக்ஸ்ஃபோர்டில் பேராசிரியரானார். எட்டாம் ஹென்றியின் காலத்தில் சமயத்திற்காக இங்கிலாந்தைவிட்டு ஓடிச்சென்றவர்களும் இங்கிலாந்திற்குத் திரும்பவும் வந்துசேர்ந்தனர். ஜூரிச்சிலிருந்து வந்த ஹூப்பர் அப்படிப்பட்டவர்களில் ஒருவர்.

இப்படியாக, திருச்சபையையும், அரசையும் ஒரு நூற்றாண்டுக் காலம் குழப்பத்தில் ஆழ்த்திய சச்சரவுகள் தொடங்கின. புதிய, பழைய சொத்துரிமையாளரிடையே நடந்த சச்சரவைவிட ஆழ்ந்ததாக இருந்தது இப் புதிய சச்சரவு. ஆடை அலங்காரம் அல்லது உருவச்சிலைகள் அல்லது பிஷப்புகள்போன்ற மேற்போக்காகத் தென்பட்ட காரணங்களைவிட இச் சச்சரவு ஆழ்ந்து காணப்பெற்றது. இடைக்காலக் கத்தோலிக்கச் சமயத்திற்கும் பியூரிட்டானிஸத்திற்கும் இடையில் பல சம்பந்தங்களும் தொடர்புகளும் காணப்படலாம். ஆனால், கத்தோலிக்கச் சமயத்திற்கும் பிராட்டஸ்டென்ட் சமயத்திற்குமிடையே ஏற்பட்ட பிளவு ஏற்கெனவே நிலைநாட்டப்பெற்றுவிட்டது. சாமர்செட்டின் சட்டங்கள் ஏற்கெனவே மோட்ச வழியையும் இறைவனின் தேர்ந்தெடுக்கப்பெற்ற வழியையும் குறித்துப் பேசலாயின. லண்டனின் பட்டுநூல் வணிகரும் பத்திராதிபருமான பிரிங்லோ என்பார்,

ஏற்கெனவே 'இறைவனின் திராட்சைத் தோட்டத்தில்' பணிபுரிந்த தொழிலாளருக்கென பெரும்பொருளை அவ்விறைமைத் தன்மை பெற்றவர்களுக்காக அளித்திருந்தார். நம்பிக்கை ஒன்றின் மூலமே மோட்சமடையலாம் என்று போதித்த புதிய பிரசங்கங்களின் வாயிலாகச் சமயம் தனிப்பட்டவர்களைச் சார்ந்தது என விளங்கலாயிற்று. ஆனால், கத்தோலிக்கர்கள் சமயச் சடங்குகளின் மீதும், நற்பணிகளின் மீதும் சார்ந்திருந்தால்தான் மோட்சம்பெற முடியும் என்ற சுமையைப்போட்டு உண்மைச் சமயத்தைக் குறைத்துவிட்டனர்.

ஒவ்வொரு கிறிஸ்துவரும் பாதிரி போன்றவரே என்ற லூதரின் போதனையில்தான் இது சென்று முடியும். இதைத்தான் கார்டினர் கிரான்மருக்கு எச்சரித்து ஜெர்மனியின் பழிபாவம் என்று கூறினார். கிரான்மர் முடிவுற்றதைப்போன்று பிரஸ்பிட்டீரியன் ஒழுக்க முறையில் சென்று முடிந்தது. பிரஸ்பிட்டீரியன் தத்துவங்களைக் கால்வின் ஜெனீவாவில் வளர்த்தபடி, மோட்சத்திற்காக வழி முன்னரே வகுத்தவிட்டபடியால், பாபம் புரிந்தாலும் அதை அழிக்க முடியாது என்று கருதினர். மீண்டும், இறைவனின் வாக்காலே நிலைநாட்டப்பெற்ற இத் திருச்சபை மனிதனுக்கும் அவனைப் படைப்பித்தவனை இறைவனுக்கும் இடையே குறுக்கிடும் மரபுகளை ஏற்றுக்கொள்ளவில்லை. இது பிரசங்க மேடையைவிட மேடைக்கும், தொழுகைக் கூட்டத்தைவிட பாதிரிக்கும் முக்கியத்தைக் கொடுத்தது. இதில் சமயத்தின் 'பொதுத்'தன்மை இன்றியமையாததாக இருந்தது. 'சாமானிய மக்கள் படுத்துறங்கும் நடுச்சாமத்தில் தொழுகை நடத்துவதால் ஏற்படும் பெரும் புனிதத்தன்மைதான் என்னை ?' என்று ஒருவர் கேட்டார். இப்படிக் கேட்டவர் எலிசபெத் அரசியாரின் காலத்து பிஷப் ஒருவராவார்.

ஆனால், வேதநூலான விவிலியத்தைச் சார்ந்திருப்பது எவ்வளவு தூரம் செல்லும் அல்லது அதை உரைவிளக்கம் செய்பவர் யார்? திருச்சபை ஆடை அணிகளையும் சடங்குகளையும், 'ஆரானிக் (Aaronic) பழக்க வழக்கங்கள்' என்றும் 'பால் தேவனின் மேடை' (Altars of Baal) என்றும் ஹூப்பரைப் பேச வைத்தது. இதற்கு மாறாக, கிரான்மர் 'எவையெல்லாம் விவிலிய நூலில் முறைப்படுத்தப்படவில்லையோ அவையெல்லாம் விவிலியத்திற்கு எதிரானதாகும்' என்றும், 'அது சாதாரணமான கொள்கையை முறைமாற்றுவதுபோன்று சமயத்தையும் முறை மாற்றுவதாகும்' என்றும் முழங்கினார்.

இடைக்காலச் சமயத்தில் நிரூபிக்கப்பட்டபடி, கத்தோலிக் கருக்கும் விவிலியத்தை ஆதாரமாகக்கொண்ட கிறிஸ்துவர்களுக்கு மிடையே எழுந்த சச்சரவுகள் இச் சமயச் சடங்குபற்றியவிவாதத்தி லேயே மிக உயர்ந்து எழுந்தது. 'பொருள் மாற்றம்' என்ற சமயச் சடங்குபற்றியே பெரிய விவாதங்கள் எழுந்தன. 'பொருள் மாற்றம்' என்ற சடங்கில் படைக்கப்படும் ரொட்டியும் சாராயமும், ஏசுநாதரின் சதையாகவும் ரத்தமாகவும் மாறும் என்ற நம்பிக்கை பற்றிய சர்ச்சைகளுடன் பிறவும் சேர்ந்திருந்தன. ரிட்லி என்பார் கிரான்மரையே அவருடைய கொள்கையிலிருந்து மாற்றிவிட்டார். எனவே, கார்டினர் ஒருவரைத்தவிர அதை ஆதரிப்பார் யாருமில்லை. சுவிங்லியின் போதனைகளை ப்யூஸர் திருத்தியமைத்து ஏற்றெடுத்த போது அது மிகத் தெளிவாகக் கூறலாயிற்று. அதன்படி, சமயச் சடங்கு ஒரு யாகமன்று; அஃது ஒரு நினைவுக்கொண்டாட்டமே யாகும் என்றும், கடவுளின் அருளைப்பெற விரும்பும் நபரின் தகுதியையே இது சார்ந்திருக்கிறதென்றும் ஹூப்பர் கூறினர். வழிபாடுசெய்யும் பிற சடங்குகளைப்போன்றே சமயச் சடங்கு செய்யும்காலத்தில் ஏசுநாதர் பிரசன்னம் அமைகிறது. இவ் வகையில் எழுந்த கொள்கையின் தீவிரத்திற்கும் கத்தோலிக்கச் சமயக் கொள்கைக்கும் இடையில் லூதரின் விளக்கங்களும், சுவிட்ஸர்லாந்து, ஜெர்மானியக் கருத்துகளும் இருந்தன. கிரான் மரின் கருத்துகள் பலவிதமான மனப்பதிவுகளை ஏற்படுத்தித் தெளிவற்று விளங்கின. ஆனால், அவர் இடதுசாரிபோன்று இருந்தாலும், அவரும் ரிட்லியும் ஒருபோதும் ஏசுநாதரின் பிரசன்னத்தை ஆன்மிகக் கருத்தில் மறுக்கவில்லை. அவரின் கூற்றுப்படி, சமயச் சடங்கு நினைவுகூரும் ஒரு முறையீடேயன்றி வேறொன்றில்லை. இச் சச்சரவு நாட்டை அலைக்கழித்தது. 'கடவுளையும் மனிதரையும் ஆக்கும் கொடிய அப்பம்' என்று இவற்றைத் துண்டுப் பிரசுரங்கள் எள்ளி நகையாடின. பில்லிங்ஸ் கேட் அச்சகங்களிலிருந்து லூதரின் மொழிபெயர்ப்புகள் வெளி வரலாயின. சாமர்செட்டின் அன்புக்குப் பாத்திரரான பிரசாரகர் ஒருவர் பூலே (Poole) என்ற இடத்தில் ஏசுநாதரின் உண்மைப் பிரசன்னத்தைத் தாக்கிப் பேசியபோது அதைக் கேட்டிருந்த தல வணிகர் ஒருவர் தம் இருக்கையை விட்டெழுந்து, 'பெருமக்களே! இவர் பேச்சைக் கேட்காதீர்கள்; இவர் சைத்தானிடமிருந்து வந்தவர். எனவே, சைத்தானின் தத்துவங்களைப் பிரசாரம் செய்கிறார்' என்று முழங்கினர்.

ஆறும் எட்வர்டின் பிஞ்சு மனத்தில் இத்தகைய புயல்வீசி வந்தபோது, எட்டாம் ஹென்றி போப்பாண்டவரின் கொள்கையை ஏற்றுக்கொண்டமைக்கு அவரைச் சுற்றியிருந்தவரின் கெட்ட

எண்ணமே காரணம் என்று தர்க்கித்து, கிரான்மரும் அவருடைய வட்டாரத்தினரும் கி.பி. 1549 ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் முதன் முதலாகப் பிரார்த்தனை நூலை வெளியிட்டனர். இந் நூல் கத்தோலிக்க, பிராட்டஸ்டென்ட் ஆதாரங்களைக்கொண்டு தொகுக்கப்பெற்றதாகும். பிரபுக்களின் சபையில் நடைபெற்ற பெரும் விவாதத்தைக் கேட்கப் பல காமன்ஸ் சபையினர் சென்றனர். அங்குக் கத்தோலிக்கர் ரொட்டித்துண்டுதான் 'ஈட்டியால் குத்தப்பெற்ற ஏசுநாதரின் உடலாகும்' என்று வாதாடினர். அப்போது ரிட்லி 'ரொட்டி சாதாரணமானதுதான் ; ஆனால், அது தெய்விகத்தன்மை பெற்றுவிட்டது' என்றுமட்டும் பேச வந்தார். பாராளுமன்றத்தில் எழுந்த எதிர்ப்புகள் கிரான் மரின் நகலைக் கத்தோலிக்க முறையில் திருத்தியமைத்தது. வழிபாட்டு ஒருமைச் சட்டத்தை (Act of Uniformity) பன்னிரு பிஷப்புகள் ஆதரித்தனர். ஆனால், அதை எண்மர் எதிர்த்தனர். இதுதான் எட்வர்டின் முதல் சமாதான உடன்பாடாகும். 'பொருள் மாற்றம்' மறைந்துபோனதெனினும், கார்டினர் போன்ற கத்தோலிக்கர்கள் ஏசுநாதரின் உண்மைப் பிரசன்னத்தை நம்பினர். புனிதக்கூட்டு எனப்படும் பொதுத்தொழுகை தேவா ராதனையில் இன்னும் மேடையைப்பற்றிப் பேசப்பெற்றது. அத்துடன் நீண்ட அங்கிகள், போர்வைகள் முதலானவற்றைப் பயன்படுத்துதலை மேற்கொண்டது. தேவாராதனை, சபைக் கூட்டத்தைப்போன்று இருந்தாலும், கிரான்மரின் ஆங்கிலம் கத்தோலிக்கரது பக்திச்சிறப்பின் பெரும் அழகைப் பாதுகாத்தது.

திருச்சபையினர் அதைப் பயன்படுத்தக் கட்டாயப்படுத்தப் பட்டனரேனும், அதில் வேறு ஒரு விதிகளும் சேர்க்கப்படவில்லை. அச் சட்டம் லௌகிகர்கள் தேவாராதனையில் பங்குகொள்ள வேண்டுமென்று வலியுறுத்தவில்லை. திருச்சபையினர் திருமணம் செய்துகொள்வதை மற்றொரு சட்டம் அனுமதித்தது. புதிதாக வந்த கட்டளைகளின்படி கத்தோலிக்கர் கண்ட இங்கிலாந்தின் பழக்கவழக்கங்கள் அனைத்தும் முடிவாக அழிக்கப்பெற்றன. மேடையின் இறுதி ஒளி (Last light on the altar), புனிதக் கல்லறைத் தொழுகையின்போது அடிக்கப்படும் ஆலய மணி முதலியனவும் புறக்கணிக்கப்பட்டன. அரசரின் கமிஷனர்கள், பல்கலைக் கழகங்களைப் பார்வையிட்டு, புதிய சட்டங்களை வழங்கி, சமய உறுப்புகளையும் பலகணிகளையும் அழிக்கத்தூண்டி, அங்கெல்லாம் குழப்பத்தை நிலைநாட்டினர். ஆக்ஸ்ஃபோர்டில் மக்தலேன் கல்லூரியைச் சார்ந்தவர்கள் பழைய தொழுகைப் புத்தகங்களைக் கோடறிகளால் கொத்தி நாசம் விளைவித்தனர். மார்க்கெட் கூடுமிடங்களில் கத்தோலிக்கச் சமயச் சித்தாந்தங்களைத் தீயிட்டுக்

கொளுத்தினர். ஆனல், அதேசமயத்தில் சாமர்செட்டின் அரசாங்கத்தைக் குலேக்கும் பல காரணங்களும் ஏற்படலாயின.

சாமர்செட்டின் வெளிநாட்டுக் கொள்கை தோல்வியுற்றது. ஆங்கில-ஸ்காட்டிய திருமணத்திற்காக போலோனேக் கைவிட மறுத்த ஃபிரான்ஸ் அதைத் திரும்பப்பிடிக்கத் தன்காலிலேயே நின்று முயற்சி செய்ய உறுதிபூண்டது. கி.பி. 1557-ல் ஃபிரெஞ்சியர் படை செயின்ட் ஆண்ட்ரூஸைக் கைப்பற்றிக் கொண்டது. அங்குதான் பீட்டனேக் கொன்றவர்கள் தஞ்சம் புகுந்திருந்தனர். அங்கிருந்த அவர்களைச் சிறைப்படுத்திக் கொண்டும் அல்லது அவர்தம் சிறு கப்பல்களில் பணிசெய்யும் படியும் அவர்கள் கட்டாயப்படுத்தப்பெற்றனர். அவர்களில் ஜான் நாக்ஸும் ஒருவர். அவ்வாண்டின் இலையுதிர்காலத்தில் சாமர்செட் ஸ்காட்லாந்தின்மீது படையெடுத்தார். அங்கு அவர் பிங்கி என்னுமிடத்தில் பெரும் வெற்றியொன்றைப் பெற்ருர். பிங்கி என்ற இடம் ஈஸக் என்ற ஆற்றின் கரையிலுள்ளது. இப் போரின்போது, ஸ்காட்டியர் பலத்த பாதுகாப்பரண்களைக் கைவிட்டுவிட்டனர். டம்ஃப்ரீஸையும் இன்னும் மற்ற முக்கிய எல்லேப்புற ஷயர்களையும் ஆங்கிலேயர் கைப்பற்றிக்கொண்டனர். ஆங்கிலேயர், ஸ்காட்லாந்தின் ஜனநாயகத்தை விவிலிய நூலைக் கொண்டும், அங்கிருந்த பிரபுக்களுக்கு லஞ்சம் கொடுத்தும் வெல்ல முயன்றனர். ஆனல், கி.பி. 1548ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் இளையவளான மேரி அரசி ஃபிரான்ஸ் நாட்டிற்கு அனுப்பப்பட்டு ஃபிரான்ஸ் மன்னரின் மூத்தமகனைத் திருமணம் செய்து கொள்வதென உறுதி செய்யப்பெற்ருள். ஃபிரஞ்சுப் படைகளும் படிப்படியாக ஸ்காட்லாந்தில் ஆங்கிலேயர் கைப்பற்றிய இடங்களையெல்லாம் மீண்டும் பிடித்துக்கொண்டன.

இங்கிலாந்தில் ஏற்பட்ட உள்நாட்டுக் குழப்பத்தின் காரணமாக எச்சரிக்கையாகப் படையெடுத்து முன்னேறிய ஃபிரெஞ்சியர் வெளிப்படையான போரில் ஈடுபடலாயினர். சாமர்செட் பிரபுவின் பலவீனம் அவருடைய சகோதரரான தாமஸ் சேய்மூரின் சதியால் முதன்முதலாகத் தென்படலாயிற்று. அவர் எட்டாம் ஹென்றியின் ஆருவது மனைவியும் விதவையுமான காதரின் பார் அம்மையாரைத் திருமணம் செய்துகொண்டமையான், அவர் தம் சகோதரரும் அரசரின் பாதுகாப்பாளருமான சாமர்செட் பிரபுவின் பகைவ ராஞர். அவர் இங்கிலாந்தின் வாரிசாக எட்டாம் ஹென்றியின் சொந்த மக்களுக்குப் பின்னர் வர இருந்தவர்களுடன் உறவு வைத்துக்கொண்டு, ஜேன் கிரே என்பாளை அரசர் எட்வர்டுக்கு மணம் முடித்துத் தம் பதவியை நிலைப்படுத்திக்கொள்ளலாம்

என்று எண்ணினர். படைக்கலன்களைச் சேகரித்துக் கடற்படைத் தலைவராக இருந்த அவர், தம் அதிகாரத்தைப் பயன்படுத்தி பிரிஸ்டல் கால்வாயில் நடமாடிய கடற் கொள்ளைக்காரர்களுடன் பங்குகொண்டு, அவர்கள் கொள்ளையில் அரைப்பங்கைப் பெற்றார். இறுதியாக, அவருடைய மனைவி இறந்தபோது, எலிசபெத் இளவரசியை மணக்கவும் எண்ணங்கொண்டார். அவருடைய குற்றங்கள் அரசத் துரோகக் குற்றத்தைச் சார்ந்தனவா, சாராதனவா என்பதை ஆராயாமல் அவர் கி.பி. 1549 மார்ச் மாதத்தில் கழுவேற்றப்பட்டார். பாதுகாப்பாளரின் பகைவர்கள் இதைச்செய்து பெருமகிழ்வு கொண்டனர்.

இத் தருணத்தில் கத்தோலிக்கரின் எதிர்விளைவு நடவடிக்கைகள் தோன்றுவதற்கான அறிகுறிகள் தென்பட்டன. இதற்கு முந்திய ஆண்டிலேயே காரன்வாலில் திருச்சபை அணிகலன்கள் பறிக்கப் பட்டதற்கெதிராகக் கலகங்கள் நடைபெற்றிருந்தன. இதனால் முப்பதுபேர் தலைவாங்கப்பட்டனர். கி.பி. 1549ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் மூண்ட கலகம் இதைவிட வலிமைவாய்ந்ததாகும். இது டெவன், கார்ன்வால் கிராமங்களில் வழிபாட்டு நூலுக்கெதிராக ஒரேசமயத்தில் மூண்டது. இவ்விடங்களில் இருந்த சில பழைய வமிசத்தினரும், தலமேயர்களும் இக்கலகத்திற்கு ஆதரவு கொடுத்தனர். பதினாயிரம் கலகக்காரர்கள் எக்ஸிடாரை முற்றுகை யிட்டனர். பொதுத் தொழுகை, ஆறு விதிச் சட்டங்கள் முதலான வற்றைத் திரும்பவும் மீட்கவேண்டுமென்று இவர்கள் கோரினர். ஒவ்வொரு ஷயரிலும் அவர்கள் இரு மடாலயங்கள் வேண்டு மென்றனர். கார்ன்வால் கலகக்காரர்களுக்கு ஆங்கிலம் தெரியாமை யால் அவர்கள் லத்தீன் மொழியில் தேவாரத்தையைக் கேட்டனர். ரஸ்ஸல், ஹெர்பர்ட், கிரே டி வில்டன் என்ற படைத் தலைவர்கள், பீரங்கிப் படையையும் அந்நியப் படை வீரர்களையும் கொண்டும் அவர்களை ஆக்ஸ்டு மாதம்வரை அடக்கமுடியவில்லை. பின்னர், அவர்கள் வெகு சிரமத்துடன் கடுமையான போர்புரிந்துகொண்டு எக்ஸிடார்வரை படையெடுத்துச் சென்றனர். ஆக்ஸ்ஃபோர்டைச் சுற்றியுள்ள கத்தோலிக்கப் பகுதிகளில் மற்றொரு கலகம் மூண்டது. அங்குப் பாதிரிகளின் சடலங்கள் அவர்களின் திருச்சபைக்கோபுரங் களின்மீது தொங்கவிடப்பட்டிருந்தன. இது அரசாங்கத்தின் அச்சத்தை மேலும் அதிகப்படுத்துவதாக அமைந்தது.

என்னும், கத்தோலிக்கச் சமயத்தினர் பிராட்டஸ்டென்டு ஜன நாயகத்திற்கு எதிராகக் கொடுமைகள் புரிந்ததைவிட அவ்வாண்டின் உண்மையான சிறப்பு மற்றொன்றில் நிலைத்திருந்தது. இக் கொடுமைகள் இருபதாண்டுகளாக யூதரையும் ஜெர்மானிய

இளவரசர்களையும் அச்சுறுத்திவந்தது உண்மைதான். கடந்த இருநூறு ஆண்டுகளில் அவ்வகையான துன்பம் ஏற்பட்டதில்லை. அவ்வாண்டில் நாட்டிற்குச் சொல்லொணாத் துயர்கள் ஏற்பட்டன. ஜெர்மானியரைப்போன்று ஆங்கிலேயரும் பொருளாதாரப் புரட்சியொன்றில் சிக்குண்டனர். அமெரிக்காவிலிருந்து வெள்ளி, பன்னாட்டுப் பொருள்கள், ஆன்ட்வெர்ப்பின் நிதிமார்க்கெட்டில் ஏற்பட்ட ஸ்பெகுலேஷன் வியாபாரம் ஆகியவை இடைக்காலத் திட்டத்தை இறுதியாக அழிக்க இருந்தன. எட்டாம் ஹென்றி ஆங்கில நாணயத்தின் மதிப்பைக் குறைத்தநாளிலிருந்து நாட்டில் விலைவாசிகள் படிப்படியாக உயர்ந்துகொண்டே சென்றன. கி.பி. 1530 ஆண்டுடன் கி.பி. 1580ஆம் ஆண்டு விலைவாசிகளை ஒப்பிட்டு நோக்குங்கால் விலைகளின் மட்டம் இருநூறு சதவிகிதம் உயர்ந்திருந்தது. எட்வர்டின் ஆட்சியின்போது இம் முறை அரைப்பங்குகூட பூர்த்தியடையவில்லை. நாணய முறையின் ஒவ்வொரு கூறையும் (feature) இடைக்கால மக்கள் வெறுத்தனர். நிலக்கிழார்கள் குத்தகைக்காரர்களை வருத்தும் குத்தகைத் தொகைகளைக்கேட்டு அவர்களை நிலத்தைவிட்டு விரட்டினர். அபராதங்கள் அதிகப்படுத்தப்பெற்றதால் காபிஹோல்டர்கள் (Copyholders) துன்புற்றனர்; அல்லது தம் உரிமைகள் பறிக்கப்படுவதை அவர்கள் காமன்ஸ் சபையிலேயே கூறி அவர்களை ஆதரித்தனர். அவர்களின் நில அடைப்புகளிலிருந்த மான் கன்றுகள் குடியானவர்களின் பண்ணையிலிருந்த கதிர்களின்மீது பாய்ந்து அழித்தன. லண்டன் மாநகர வணிகர்கள் தோட்டங்களை விலைக்கு வாங்கினமையால், அவர்கள் நகரைச் சுற்றியுள்ள இடங்களில் பட்டு உற்பத்தியைச் செய்யத் தொடங்கினர். கம்பள வணிகரும் துணி வணிகரும் சிறுசிறு நெசவாளர்களை அழித்துவந்தனர். அவர்கள் கூலியாகப் 'பழைய, பயனற்ற துணிமணிகளையும், நாற்றமெடுத்த மீனையும்' பண்டமாற்றிக்கொண்டனர். அவர்கள் நீண்டநாட்களாகப் பணியில் இருந்தவர்களை நீக்கி, குறைந்த கூலிக்குப் பயிற்சிபெறும் தொழிலாளர்களை அமர்த்திக்கொண்டனர். கில்டுகள் அழிக்கப்பட்டதால் ஏழைகளுக்கு உதவும் அறநிலையங்களும் சீரழிந்தன. ஏழைகளுக்காக உயில் எழுதப்பெற்று விடப்பட்டிருந்த கிராமச் சிறு நில மானியங்களையும் பலர் களவாடி வந்தனர். சான்ட்ரீஸ் சட்டத்தால் பல பள்ளிகள் அழிந்திருந்தன. பெருகின செலவினங்களைத் தாங்கமுடியாது ஆக்ஸ்ஃபோர்டிலும், கேம்பிரிட்ஜிலுமிருந்த ஏழை மாணவர்கள் தங்கள் கல்வியை அரைகுறையாகவிட்டு அகன்றனர்.

பிரசங்கங்கள், அம்மானைப் பாட்டுகள், துண்டுப் பிரசுரங்கள் ஆகியவற்றின்மூலம் சீர்திருத்தவாதிகள், சமயச் சீர்திருத்த

இயக்கம் செய்த கொடுமைகளால் மனமிடிந்துபோனதைக் குறிப்பிட்டு எழுதியிருந்தனர். பொருளாசையின் விளைவாக 'பொதுச் சொத்துப் போய் பொது வறுமை' வந்துவிட்டதாக லீவர் (Lever) என்பார் ஆலோசனை சபையின்முன் பேசினார். 'உங்கள் கைகள் ரத்தக்கறைபட்டிருக்கின்றன' என்றும் அவர் ஏசினார். 'புராதன, கடவுள் தன்மைவாய்ந்த ஆங்கிலக் குடியானவர்கள்' எங்கே சென்றுவிட்டனர் என்று பிஷப் ஒருவர் அரசருக்கு எழுதினார். 'ஆட்டிடையரும் அவருடைய நாயும் நாட்டைவிட்டு வெளியேற்றப்பட்டனர்' என்று குடியானவரின் மகனான லாட்டிமர் தம்முடைய சிறப்புப் பிரசங்கங்களில் குறிப்பிட்டார். 'லண்டன் மாநகரச் சேற்று வீதிகளில் பிறந்த மேனியாய்க்கிடந்து உழல' என்று பிறிதொருவர் கூச்சலிட்டார்.

பழைமை விரும்பிகளான கன்சர்வேடிவ்களால் 'காமன் வெல்த் மக்கள்' என்று குறிப்பிடப்பட்ட அவர்கள், புதிய பிரபுக்கள் தங்களின் மரக்கோப்பைகளுக்கு மாறாக வெள்ளித் தட்டுகளைப் பெற்றுக்கொண்டனர் என்று கூறுகின்றனர். ஏசுநாதர் அனைவருக்கும் கொடுத்த நிலங்களை அவர்கள் தங்களுக்கே முழு உரிமை பெற்றதாக்கிக் கொண்டவர்களுக்கு எதிராகவும், 'வேடிக்கையான ஆரம்பச் சூரர்களும் ஆடம்பரக்காரர்களுமான' இவர்கள் பாராளுமன்ற இடங்களை வென்றுவருவதற்கு எதிராகவும் வந்துவிட்டனர் என்று குறை கூறிவந்தனர். தீவிரமான பிராட்டஸ்டென்டுகள் பழைய கத்தோலிக்கரைக் கண்டித்துவந்தனர்.

> 'நரகத்தில் ஒழுங்கற்று இருப்பதைப்போன்று
> ஒவ்வொரு மனிதனும் தனக்காக வாழ்ந்து,
> ஒரு மனிதனும்கூட எல்லோருக்குமாக வாழாத
> நிலை இது என்று நான் கூறலாம்.'

தமது சொந்தச் செருக்கினாலும் சமயக் கொள்கையாலும் நிரப்பப்பெற்றவரான, சாமர்செட், 'காமன்வெல்த்' மக்களின் கட்சியை ஆதரிப்போராயினர். அவருக்கெதிராக இருந்த பிரபுக்களை அவர் 'குப்பைமேட்டுப் பிரபுக்கள்' என்றழைத்தார். சில அடைப்புகளைக் கண்டித்த உல்ஸியைப் பின்பற்றித் தாமும் சுறுசுறுப்பாக அக் கொள்கையைக் கடைப்பிடித்தார். 'திருப்திபடுத்த முடியாத பேராசை'யின் விளைவாகவே நாட்டில் இத் துன்பங்கள் வந்ததைக் கண்டிக்கும் அவருடைய பேறிக்கைகள், கம்பளத்தின்மீது புதிய வரி, விசாரணைசெய்ய கமிஷன் ஒன்று, மேற்கத்திய கலகக்காரர்களிடம் ஆழ்ந்த அனுதாபம், ஏழை மக்களின் குறைகளைக்கேட்க தம் அரண்மனையில் ஒரு தனிப்பட்ட நீதிமன்றம் ஆகியவை பொருளாசை மிக்கோரையும், நியாயமனம்

கொண்டாரையும், பழைமை விரும்பிகளையும் கோபமூட்டின. பாராளுமன்றமும் தொடர்ந்து அவரை எதிர்த்து வந்தது. ஏழை மக்களுக்குக் கல்வி புகட்டவும், நிலங்களிலிருந்து அவர்களை விரட்டுவதைத் தடுக்கவும், பூந்தோட்டங்களை நிறுவுவதைத் தடுக்கவும், உணவுப்பொருள்கள் (regrating) செய்வோரைத் தண்டிக்கவும் நோக்கம்கொண்ட மசோதாக்களைப் பாராளுமன்றம் ஏற்க மறுத்தது. நாட்டுப்புற பிரபுக்கள் நில அடைப்புக் கமிஷனர்களைத் தடுத்து, ஜூரிகளால் தண்டிக்கமுடியாதபடி குறுக்கிட்டனர். குடியானவர்களைத் தொடமுடியவில்லையென்று அவர்கள் குறைகூறினபோதும், சாமர்செட்டின் 'காரசாரமான மனசாட்சி'யைப் பேகட் (Paget) ஏளனம் செய்தபோதும் அல்லது டெவன்ஷயரில் நகரங்களில் ஜெர்மானியப்போர்ப்படை வீரர்களைப் படை வீடுகளில் தங்கவைத்து 'வேர்வை வழியச்' செய்ய வேண்டுவதை தூண்டியபோதும், தீவிரவாதிகள், மறுபக்கத்தில் பிழைபடாத பாராளுமன்றத்தின் புதிய 'பதின்மூன்று கட்டளை'களைப் பழித்துரைத்தனர். லாட்டிமர் நிராசையோடு 'சொற்பொழிவுகளினால் தம் நாக்கு சலிப்படையும்வரை நிற்காது பிரசாரம் செய்து' மேற்கூறிய நல்ல சட்டங்கள் நிறைவேற்றப் படாததைக் கண்டிக்கப்போவதாகக் கூக்குரலிட்டார்.

கி.பி. 1549ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் நில அடைப்புக்கெதிராகத் தொடங்கிய கலகங்கள் நார்ஃபோக் கலவரமாக முடிவுற்றன. பழைமை விரும்பிகள் அரசாங்கமே மறைமுகமாக இக் கலவரத்தைத் தூண்டிவிட்டது என்று கூறினர். அதன் தலைவரான ராபர்ட் கெட் (Robert Kett) தோல் பதனிடுபவர். நார்விச்சுக்கு வெளியே மௌஸ்ஹோல்டு ஹில் என்ற இடத்தில் அவர்தம் படையில் 20,000 குடியானவர் இருந்தனர். அவர்களை நல்ல கட்டுப்பாட்டின்கீழ் அவர் வைத்திருந்தார். ஆனால், காலம் செல்லச்செல்ல அவர்கள் நாட்டுப்புறங்களின்மீது படையெடுத்து அப் பகுதிகளைத் தீக்கிரையாக்கிச் சூறையாடினர். பின்னர், அவர்கள் 'யார்மத்' (Yarmouth) என்ற இடத்தைக் கைப்பற்ற முயன்றனர். குறைந்த குத்தகைகள், அடிமைகளை விடுதலை செய்தல், நில அடைப்புகளையும் விளையாட்டுகள் பற்றிய சட்டத்தையும் தீர்த்துக்கட்டும்படி அவர்கள் கேட்டனர். ஏசுநாதர் மக்களை விடுதலையாக்கவே மரணமடைந்தார். எனவே, தங்களையும் அடிமைத் தளையிலிருந்து விடுவிக்கவேண்டுமெனக் கோரினர். தமக்கு விருவிடைமூலம் சமயத்தைப் போதிக்கும் திருச்சபையினரையும் அவர்கள் வேண்டினர். அங்ஙனம் போதிக்கவரும் பாதிரிகள் அங்கங்கேயே தங்கியிருக்கவேண்டுமென்றும் விரும்பினர். தங்களால் பிடிக்கப்பட்ட பிரபுக்களை

அவர்கள் கைவிலங்கிட்டுச் சிறைபடுத்தினரேனும், சமயச் சீர் திருத்தம் என்ற போர்வையில் நாள்தோறும் தேவாராதனைகள் செய்தனர். நார்விக் கூட்டு நிறுவனத்திலிருந்தும்கூட அவர் களுக்கு அனுதாபிகள் இருந்தனர். எனினும், கெட் என்பவரால் பொறுமையிழந்தவராய் 'எளியோரும் சாமானியருமான காமன்ஸ் சபையில் மறைந்து கிடக்கும்' அதிகாரங்களைப்பெறக் கேட்டனர். 'பிரபுக்களை'க் குறை கூறியவர்களுக்கு எதிராகத் திருச்சபையும் அரசும் ஒன்ருக இணைந்தன. இத்தாலியின் ஒரு படை அவர் களால் முறியடிக்கப்பட்டது. ஆனால், ஆகஸ்டு மாதத்தில் வார்விக் பிரபு, ஜெர்மனியக் கூலிப்பட்டாளத்துடனும் வேல்ஸ் பீரங்கிப் படையுடனும் வந்து சேர்ந்தார். நேருக்கு நேராக நடைபெற்ற சண்டையில் கலகக்காரர்கள் முறியடிக்கப்பட்டனர். ஏறத்தாழ மூவாயிரம்பேர் போர்க்களத்தில் இறந்துபட்டனர். கெட் உள் ளிட்ட ஏனைய முந்நூற்றுவர் கழுவேற்றப்பெற்றனர்.

நாட்டில் சட்டத்தையும் அமைதியையும் காக்கும் இவ் வெற்றிக்குப் பின் சாமர்செட் வீழ்ச்சியுற்ருர். அவருடைய கொள்கைகள் அனைத்தும் தோல்வியுற்றன. நெருக்கடியான காலங்களில் அவரால் இணைந்து ஒற்றுமைகொண்ட படை பலத்தையோ, படைவீரர்களுக்கான சம்பளத்தைக் கொடுக்கவோ முடியாதவரானுர். வார்விக், ரஸ்ஸல் இன்னும் ஏனைய வெற்றி வீரர்கள் பேகட்டின் உதவியைப்பெற்றனர். அவர் பாது காப்பாளரான சாமர்செட்டின் கூர்த்த மதிகொண்ட அறிவுரை யாளர். அத்துடன், சாமர்செட்டால் விரட்டப்பெற்ற கத்தோ லிக்கர்களையும், அவருடைய கொடுங்கோன்மையான போக்கினுல் வெறுப்புற்றவர்களையும் அவர்கள் தம் ஆதரவாளராகப் பெற்றனர். அவர்கள் அச்சிட்ட வேண்டுகோள்களை வெளியிட்டு லண்டன் மாநகர நிலையான குடிமக்களுக்கெதிராகக் கலகக்காரக் கும்பலைத் தூண்டிவிட எண்ணியதும் பயன்படவில்லை. சாமர்செட்டின் ஆதிக்கத்தைக் குலைப்பதுடன் திருப்தியுற்ற புதிய தலைவர்கள், விரைவில் கத்தோலிக்க உறுப்பினர்களை விலக்கித் தள்ளினர். காமன்ஸ் சபையினர் சாமர்செட்டிற்குச் சிறிதளவு அனுதாபம் காட்டியிருந்தபடியால் கி.பி. 1550 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அவரை ஆலோசனை சபையில் மீண்டும் உறுப்பினராக்கினர்.

ஏழாம் ஹென்றிக்குப் பொருள் பறித்துக்கொடுத்து உதவிய தற்காகத் தூக்கிலிடப்பெற்ற டட்லி என்ற அமைச்சரின் மகன் வார்விக், இவருடைய மகன் எலிசபெத் இளவரசியின் அன்புக்குப் பாத்திரரான ராபர்ட் டட்லி என்பாராவர். அவர் லீஸ்டரின் எர்லாகவும் இருந்தார். இக் கட்டுக் கருத்துள்ள குடும்

பத்தில் வந்தவர்தான் ஜான் டட்லி என்பார். அவர் செயல் வீரராயினும் மிகக் கீழ்த்தரமான பண்பினர். அவர் புதிய 'ஆல்சிப்யடீஸ்' (Alcibiades) என்று சீர்திருத்த பிஷப்பு ஒருவர் கூறினர். இழிவுகள் நிறைந்த காலத்தின் மிக இழிந்தவர் அவர். எனினும், ஹூப்பர் அவரை 'ஏசுநாதரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான துணிச்சலான படைவீரர்' என்று கருதினர். ஹூப்பர் ஒரு ப்யூரிடன். சாமர்செட்டின் தோல்விக்குக் காரணமாக இருந்தவர் அவர் என்பதையும் ஹூப்பர் தெளிந்தார்.

அவருடைய தலைமையில் ஆலோசனை சபையும் பாராளுமன்றமும் அடக்குமுறையில் இறங்கின. பிரிவி கவுன்சிலருக்கெதிராகச் சதியில் ஈடுபடுவது, சட்டத்தில் மாற்றம் கேட்க கிளர்ச்சிகளைத் தூண்டிவிடுவது, அல்லது நில அடைப்புகளைத் தகர்ப்பது, குறைந்த குத்தகை வேண்டுமெனக் கிளர்ச்சியில் ஈடுபடுவது முதலியன துரோகக் குற்றமாக்கப்பெற்றன. துரோகக் குற்றச்சாட்டில் இரு சாட்சியங்கள் தேவையென்று கோரிய சாமர் செட்டின் காலத்துச்சட்டமானது தள்ளிவைக்கப்பெற்றது. ஷயர்களில் பாதுகாப்பை மேற்கொள்ள குதிரைப்படை வீரர்கள் நிறுவப் பெற்றதுடன், அவர்களுக்குச் சம்பளமும் கொடுக்கப்பெற்றது. நாட்டில் ஏற்பட்ட பொறுக்கமுடியாத வறுமையின் விளைவாக அரசாங்கம் போரை நிறுத்தி, கி.பி. 1550-ல் அவமானமானதொரு உடன்படிக்கையைச் செய்துகொண்டது. இவ்வுடன்படிக்கையால் போலோன் மீட்கப்பட்டதெனினும் ஸ்காட்லாந்தைப் புறக்கணிக்க வேண்டியதாயிற்று. மேலும், இங்கிலாந்துக்கு ஏற்பட இருந்த அவமரியாதை ஃபிரான்ஸுக்கும் பேரரசுக்கும் இடையே மூண்ட போரின் விளைவாகத் தவிர்க்கப்பெற்றது.

சாமர்செட்டின் சமயப் பொறையை வார்விக் குலைத்துவிட்டார். திருச்சபை முழுவதையும் பிராட்டஸ்டென்டாகச் செய்து அஃது அரசாங்கத்தையே சார்ந்திருப்பதாகவும் ஆக்கப்பெற்றது. கார்டினர், பான்னர் இன்னும் பிற கத்தோலிக்க பிஷப்புகளின் சொத்துக்கள் பறிக்கப்பெற்று, அவரைப் பின்பற்றி வந்தவர்களும் வார்விக்குக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியவராயினர். வின்செஸ்டரின் புதிய பிஷப்பொருவர் அதன் பண்ணைகளைக் குறிப்பிட்ட உதவிப்பணத்திற்காக மாற்றிக்கொண்டார். ஹூப்பர் பிஷப்பிரிக் ஒன்றை ஒப்புக்கொண்டாரெனினும், அவரும் தம் நிலபுலங்களில் பலவற்றை இழக்கவேண்டியவரானர். கிளாஸ்டர் திருச்சபை அழிக்கப்பெற்று, டர்ஹாம் மீண்டும் நிலை நாட்டப்பெற்றது. இதனல் வார்விக் கணிசமான நன்கொடைகளைப் பெற்றார். ஓரளவு கட்டாயப்படுத்தப்பெற்றும், ஓரளவு

தம்மிச்சையுடனும் நியமிக்கப்பெற்ற புதிய பிஷப்புகள் சமயச் சீர்திருத்தத்துடன் தங்கள் பணிகளைத் தொடங்கினர். தாழ்நிலை திருச்சபை ஊழியர்களைப் புதிய ஆர்டினல் என்ற பதவி பறித்த துடன், பிஷப்புகளுக்கும் பாதிரிகளுக்குமிடையே இருந்த வேறு பாடுகளைப் பிரித்துக் காட்டியது.

ரிட்லி என்பார் லண்டனின் நற்கருணைத் தொழுகையின்போது மேஜைகளைப் போடக் கட்டளையிட்டார். இதற்கெதிராக, செயின்ட் பால் திருக்கோயிலில் கலகங்கள் மூண்டன. எனினும், அக் கட்டளைகள் நாடுமுழுமையும் நடைமுறைப்படுத்தப்பெற்றன. முன்னர் கொடுத்த வாக்குறுதிகளுக்கெதிராக, பேரரசரின் நல்லெண்ணத்திற்கு மாறாக, ஆலோசனை சபையினர் மேரி இளவரசியைத் தொழுகையைப் புறக்கணிக்குமாறு வேண்டி முயன்றனர்; எனினும் பயனில்லை.

நாடெங்கும் வறுமையும் குழப்பமும் தாண்டவமாடின. அரசாங்கத்திற்கெதிராக, மூன்றிலிரண்டுபங்கு மாஜிஸ்டிரேட்டுகளும் பிரபுக்களும் இருந்தனர் என்று செஸில் குறிப்பிடுகிறார். ஒவ்வொரு சாலையின் முடிவிலும் தூக்குமரம் நின்றிருந்தது. கெட் தூக்கிலிடப்பட்டு அவருடைய மக்கிய உடல் தொங்கி ஊசலாடி நிற்பதை நார்விக் பிரபு எரிச்சலுடன் பார்த்து வருந்தினார். நாடெங்கும் தொடர்ந்து கலகங்கள் நடைபெற்றன. மிடில்செக்ஸில் ‘காப்டன் ரெட்கேப்’ என்பார் கலகம் செய்தார். எஸ்ஸெக்ஸில் நில அடைப்புத் தகராறுகளினால் லண்டன் மாநகர் மக்களுக்குக் கிடைத்துவந்த இனிய வெண்ணெய்ப் பொருள்கள் கிட்டாது போயின. வெள்ளி நாணயத்தில் சாமர்செட் பிரபு பாதிக்குப்பாதி கலவைப்பொருள் சேர்க்க அனுமதித்திருந்தார். வார்விக் அதை மூன்றில் இரண்டு பாகமாக உயர்த்தினார். மேலும், ஷில்லிங்கின் மதிப்பு ஆறு பென்ஸாகக் குறைந்தது. பொருள் களின் விலைவாசிகள் ஏறுமுகத்தில் உயர்ந்துவந்தன. வறுமை யால் வாட்டப்பெற்ற குடியானவர்கள் லண்டனை நோக்கி ஓடினர். ஆனால், அவர்களுக்கு எதிராக அரசருடைய பேரறிக்கைகள் வெளியிடப்பெற்றதால் ‘அவர்கள் தங்களின் நன்றிகெட்ட நிலங்களை நாடித் திரும்பவேண்டியவராயினர். கத்தோலிக்கர்களின் பொருள் பறிக்கப்பட்டதனால் அவர்களும், மனக்கசப்புற்றிருந்த பிராட்டஸ்டென்டுகளும் சச்சரவு இட்டுக்கொண்டிருந்தபொழுது, கிரான்மரும் கார்டினரும் சமயச் சடங்குபற்றித் துண்டுப் பிரசுரங் களின்மூலம் இலக்கியப் போராட்டத்தில் ஈடுபட்டனர். இதனால் சமய நம்பிக்கையே குலைந்துபோய்விட்டது. திருச்சபையின் நிலை

பரிதாபகரமாகிவிட்டது. மாம்ஸ்பரியில் அழிவுண்ட மடாலயத்தில் துணி வியாபாரியொருவர் நெசவுத் தறிகளைப் பூட்டியிருந்தார்.

செயின்ட் பால் திருச்சபை முற்றத்தில் இளைஞரான லண்டன் பிரபுவொருவர் புருக்களைச் சுடும் போட்டிப்பந்தயங்களை அமைத்திருந்தார். இதைக் கண்ட ப்யூஸரும், பேகட்டும் பழைய சமயம் ஏறத்தாழ அழிந்துவிட்டதென்றும், ஆனால் அதனிடத்தைப் புதிய சமயம் ஒன்றும் கைப்பற்றவில்லை என்பதையும் ஒப்புக்கொண்டார்கள். அரசாங்கம் லைசென்ஸ்பெற்ற பிரசாரகர்கள்மூலம் சமயப் போதனையைச் செய்ய அனுமதித்திருந்தது. நாடகங்கள் நடிப்பதை அரசாங்கம் நிறுத்த முயற்சிசெய்தது. எனினும், அச்சுக்கூடங்கள் விவிலியத்தின் ஏற்பாடுகளை (Testaments) ஏராளமாக அச்சிட்டுக் குறைந்த விலையில் வெளியிட்டன. அவ் ஏற்பாடுகளுடன் கத்தோலிக்க எதிர்ப்பு விளக்கவுரைகளும் சேர்க்கப்பெற்றிருந்தன. இரகசியச் சங்கங்கள் லண்டனைச் சுற்றியுள்ள கவுன்டிகளில் தீவிரமான சமய நிந்தனையாளர்களைப் பரப்பி, திருச்சபையினருக்கு எதிராகப் பணிபுரிந்தன. தீவிரமான சமயவாதிகள் மக்களற்ற பிரசங்க மேடைகளைக் கண்டித்தனர். அவர்கள் பொதுத்தொழுகை ஆராதனைக் கூட்டங்களை எள்ளி நகையாடினர். அவர்கள், லௌகிகர்கள் பெய்லீப்களையும் (அமீனுக்களையும்) குதிரைப்பாகர்களையும் பாரிஷ் திருச்சபைகளுக்கு நியமிக்கப்படுவதைக் குற்றமாகக் கருதினர். பாராபஸ் (Barabbas) என்ற கொள்ளைக்காரன் 'இப்போது பட்டு உடையணிந்து கொள்ளையடிக்கும் கொள்ளையன்' என்று ஜில்பின் என்ற உண்மையான ப்யூரிட்டன் ஒருவர் கூக்குரலிட்டார்.

சமயத்தை அழித்துவிட்டமையால் ஏற்பட்ட வெறுமையால் நாடெங்கும் பயங்கர அறியாமை தலைவிரித்தாடியது. பதினாறு வயது நிரம்பிய சிறுவர்களுக்குக்கூட இறைவணக்கப் பாடல்கள் தெரியவில்லை. ஹூப்பர் தம்முடைய திருச்சபை மாவட்டத்திற்குப் பார்வையிடச் சென்றபோது, அங்கிருந்த பாதிரிகளில் அரைப் பங்கினர் கட்டளைகளைக் (Commandments) கூடத் திருப்பிக்கூறும் தகுதியற்றவராயிருப்பதைக் கண்டார். அரசரால் நியமனம் பெற்ற சமயப் பிரசாரகர்களில் சிலர் தூய துறவிகள்; எனினும் பிஷப்புகளுக்குக் கொள்கைகளோ குணநலன்களோ இருந்து அவற்றால் மதிப்புப் பெற்றவர்களாக அமையாது ஒழிந்தனர். பின்னர், இவர்கள் சமயத்திற்காக உயிர்துறந்து தியாகிகள் ஆயினர். ஹூப்பர், குருமார்கள் ஆட்சி நிர்வாகத்தை ஒரு சிறிதும் நம்பாதவர். ஏனெனில், அக் குருமார்களில் சிலர் திருமணம் செய்துகொண்டவர்களானபடியால் கண்டிக்கப்பெற்றனர். ஒரு சிலர் குத்தகை வியாபாரத்தில் ஈடுபட்டுக் கொள்ளைலாபம்

அடித்தனர். திருச்சபை நீதிமன்றங்களைத் திருத்தவேண்டிய கிரான்மரின் வேண்டுகோளையும் அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வில்லை.

மிதவாதிகளின் ஆதரவைப்பெற்று நாட்டில் நிலவிய குழப்பத்தைப் பயன்படுத்திப் பதவியைத் திரும்பப்பெற முயன்றார் என்ற குற்றஞ்சாட்டப்பெற்று, இறுதியாக, சாமர்செட் கொல்லப் பட்டார். அவர், கார்டினரை ஒருவேளை மன்னித்து, இளவரசி மேரியைக் கண்டிக்காதுவிட்டு லண்டன் மாநகர் வாசிகளையும் பாராளுமன்றத்தையும் வேண்டி முறையீடொன்றையும் வெளியிட்டார். புதிதாக வெற்றிபெற்றவர்களுக்குப் புதிய பதவிகள் கொடுக்கப்பட்டதுடன் கி.பி. 1551 அக்டோபரில் சாமர்செட் சிறைசெய்யப்பட்டார். வார்விக் பிரபு நார்த்தம்பர் லாந்தின் டியூக்கானர். டோர்செட் பிரபுவுக்கு சஃப்போக் டியூக்டம் கொடுக்கப்பெற்றது. ஹெர்பர்ட் பெம்ப்ரோக் எர்லானர். அரசரின் செயலாளராக இருந்த செஸில் நைட் பட்டம் பெற்றார். அவருக்கெதிரானவர்களைக்கொண்ட கமிஷன் அவருக்குத் தூக்கு தண்டனை விதித்தது. 'கடவுள் அவரைக் காப்பாராகுக' என்று லண்டன் மக்கள் எழுப்பிய குரலைக் குதிரைப்படை வீரர்களால் கட்டுப்படுத்தமுடியவில்லை. அவரை விடுதலைசெய்யவேண்டி களியாட்டுத் தீபங்கள் கொண்டாடப்பெற்றன. கி.பி. 1552ஆம் ஆண்டு ஜனவரி மாதத்து நாளொன்றின் விடிகாலையில் அவர் அவசர அவசரமாகத் தூக்கிலிடப்பெற்றார்.

அடுத்தநாள் பாராளுமன்றம் கூட அனுமதிக்கப்பட்டது. அஃது இரண்டாண்டுகளின் இடைவெளிக்குப்பின் கூடியது. அவர்கள் சாமர்செட்டிடம் தங்களுக்கிருந்த அனுதாபத்தை உடனே காட்டினர், நர்த்தம்பர்லாந்து டியூக்கான வார்விக் பிரபுவின் நண்பர்கள் எண்ணிக்கையில் குறைந்திருந்தனர். எட்டாம் ஹென்றியின் அரசியல் ஞானிகளில் ரிச் என்பார் வயதானவர். பேகட் அவமானப்படுத்தப்பெற்றிருந்தார், வடபாகக் கத்தோலிக்கரும் பழைமைவாதிகளான கன்ஸர்வேடிவ்களும் தனித்து நின்றனர். சாமர்செட்டின் வீழ்ச்சி அவசியமானதென ஒப்புக்கொண்ட செஸில்போன்ற மிதவாதிகள் வன்முறைகளை வெறுத்தனர். ஆனால், நார்த்தம்பர்லாந்து பிரபுவுக்குப் பெரும் ஆதரவுகொடுத்தவர் இளையவரான அரசர் எட்வர்டேயாவர். அவர் பதினன்கு வயதைக் கடக்காதவர். எனினும், அவரிடம் டியூடர் வமிசத்தின் அறிவும், அவர்களின் ஈவிரக்கமற்ற தன்மையும் குடி கொண்டிருந்தன. ஏற்கெனவே, எட்வர்ட் பாராளுமன்றத்திற்கான மசோதாக்களை வரைந்துவரலானர், 'நரகத்து வேட்டை நாய் களால்' சூழப்பெற்ற நாட்டில் ஒழுக்கச் சீர்திருத்தத்தைக் கொணர

வேண்டுமென்ற மேன்மைக் கருத்துகளை அவர் கொண்டிருந்தார். அவருக்குப் பியூரிட்டன் கருத்துகளில் ஆழ்ந்த பற்று இருந்தது. அவரைச் சுற்றியிருந்தவர்களால் அதைக் குறைக்க முடியவில்லை. நாட்டில் நீண்ட சீர்திருத்தங்கள் வேண்டுமென்றோரை அவர் ஆதரித்து நின்றார்.

கி.பி. 1552-ல் கூடிய பாராளுமன்றத்தின் முக்கியப்பணி இரண்டாவது சமய உடன்பாட்டை ஏற்படுத்துவதேயாகும். அதன்படி இரண்டாவது வழிபாட்டுநூல் ஒன்று வெளியிடப் பெற்றது. கார்டினரும், ப்யூஸரும் எதிர் எதிராக நின்று, முதல் வழிபாட்டுநூலில் இவையிவை கத்தோலிக்கக் கருத்துகள் என்று கூறப்பட்டவற்றை விட்டொழித்தனர். அதன்படி, இறந்தவருக்குச் செய்யப்பெறும் வழிபாடு நிறுத்தப்பெற்றது. சமயச் சடங்கு களின்போது சிறப்பிடங்கள் பெறுவதையும் அச் சட்டங்கள் அழித்தன. தொழுகையின்போது தொழுகைக்கான மேசைகளை வைக்க அவர்கள் கட்டளையிட்டனர். அபிஷேக ஆராதனைக்கான புதிய தொழுகைநூல் ஒன்று ஆடை அணிகலன்களைப் பறித்துக் கொண்டது. ஹூப்பர், லாஸ்கி, நாக்ஸ் முதலியவரால் தூண்டப் பெற்ற தீவிரவாதிகள் சமயச் சடங்கின்போது உட்காரும் பழக்கத்தை மேற்கொண்டனர். அவர்களின் வற்புறுத்தலின் விளைவாக ஆலோசனை சபை வழிபாட்டுநூலில் 'கறுப்பு மையினால் அச்சிடப்பெற்ற கட்டளைச் சட்டத்'தையும் சேர்த்து இணைத்தது. அத்துடன் மண்டியிடுவது அர்ப்பணச் சடங்கைப் புகழ்தலாகாது என்றும் வலியுறுத்தினர். இப் புதிய நூல், புதிதாக இயற்றப் பெற்ற 'வழிபாட்டு ஒருமைச் சட்டத்'துடன் இணைக்கப்பெற்றது. இப் புதிய சட்டத்தின்படி, இதைத் தவிர பிற தொழுகைகளில் பங்குகொண்ட லௌகிகர்கள் முதல்தடவையாகத் தண்டிக்கப் பெற்றனர். இவ் வழிபாட்டு நூலும் அதைத்தொடர்ந்து வெளியிடப்பெற்ற நாற்பத்திரண்டு விதிகளும் அவ்வாண்டின் திருச்சபை மகாநாட்டில் சமர்ப்பிக்கப்பெற்றன. அரசாங்கம் கிரான்மரின் திருத்தம்பெற்ற திருச்சபை விதிச் சட்டத்தை அச்சிட்டு வெளியிட முடியாதுபோயினும், அவர் இப்போது பிராஸ்பிட்டீரியன் திருச்சபையின் கருத்துகளில் பாதிக்குப்பாதி ஏற்றுக்கொள்ள ஆயத்தமானார்.

இத் தருணத்தில் பொருளாதாரச் சீரழிவு நாடெங்கும் கோரத் தாண்டவமாடியது. நாட்டு மக்கள், பெரிதும் நாணய மதிப்பு குறைக்கப்பட்டதால் பாதிக்கப்பட்டவர்களாயினர். அரசரின் கடன் தொகைகள் கால் மிலியனாக இருந்தது ($2\frac{1}{2}$ லட்சம்); போர் வீரர்கள் சம்பளமின்றித் தவித்தனர். நார்த்தம்பர்லாந்து பிரபு

நாட்டில் சிக்கனத்தை மேற்கொள்ளப் பெரிதும் முயன்றார். ஆனால், அவர் வரிகேட்க அஞ்சினார். ஃபிரெஞ்சியர் இத் தருணத்தில் கலேயைக் கைப்பற்ற முயன்றனர். அவர்களே பெரும்பாலும் ஸ்காட்லாந்தை ஆண்டனர். அவர்கள் அயர்லாந்து விவகாரத்திலும் குறுக்கிட்டனர். எனவே, அரசாங்கம் கோட்டைகளைக் கலைத்தது; கலங்களை விற்றது; அயர்லாந்தில் வெள்ளிச் சுரங்கங்களை எதிர்நோக்கியது; ஆன்ட்வெர்ப்பிலிருந்து கடன் வாங்கியது; பொருள் சேகரித்தும் போதாமையால் சான்ட்ரி நிலங்களைப் பறித்துக்கொள்ள இறுதியாக முயற்சிசெய்தது. அத்துடன், திருச்சபைக்குச் சொந்தமான தட்டுகளையும், ஆலய மணிகளையும், மெழுகுவத்திகளையும், பிச்சைப் பெட்டிகளையுங்கூட விற்றுப் பொருள் சேர்த்தது.

இங்கிலையில் நார்த்தம்பர்லாந்து பிரபுவின் அரசியல் ஆதிக்கம் ஆட்டம்கண்டது. அவர் தம்முடைய அணுக்கத் தோழர்களைக் குழுவாகக் கூட்டிக்கொண்டார். அத்துடன் நிலங்கள், சம்பளங்கள், பிழைப்புக்கானவற்றை விற்றல், பத்தில் ஒருபங்கு வரிவாங்குதல் முதலியவற்றால் ஏறத்தாழ ஐந்து லட்சம் பவுன்களுக்குச் செல்வத்தைப் பெருக்கிக்கொண்டார். ஏறத்தாழ பெர்ஸி பிரபுக்களின் நிலபுலங்கள் அனைத்தையும் அவர் தாமே வைத்துக் கொண்டார். ஆனால், அவர் கத்தோலிக்கரின் ஆதரவை இழந்தார். பிராட்டஸ்டென்டுகளிடையே ஒழுக்கநெறிபற்றிய விவகாரத்தில் கலகம் ஏற்பட்டது. இத் தருணத்தில் லண்டன் மாநகரவாசிகள் கட்டாயப்படுத்திப் பறித்த திருச்சபை நிலங்களை அரசாங்கம் திருப்பித் தந்துவிட்டால் ஒருவேளை உணவாவது கொடுக்கமுடியும் என்று வலியுறுத்தினர். இவர்களில் குறிப்பாக ரிஷ்லி என்ற பிஷப், லண்டன் நகரத் தெருக்களில், ஏசுநாதர் 'பசிப்பிணியால் பீடிக்கப்பெற்று, பிறந்த மேனியாய்க் கவனிப்பாரற்றுக்' கிடக்கிறார் என்று செஸில் என்பாரிடம் குறிப்பிட்டார். செயின்ட் பார்த்தலோமியோ, செயின்ட் தாமஸ் ஆஸ்பத்திரிகளுக்கு மீண்டும் மானியங்கள் அனுமதிக்கப்பட்டு ஏழைகளைத் திருத்த உதவும் விடுதியொன்றை பிரைட்வெல் என்ற இடத்தில் நிலைநாட்டவேண்டுமென்றும், ஒருசில லத்தீன், கிரேக்கமொழிப் பள்ளிகளைக் குறைந்த அளவிலாவது சாசனப்படுத்தவேண்டுமென்றும் அவர்கள் கூறினர். கி.பி. 1553-ல் பொருளற்ற நிலையில் அதைப் பெறவேண்டிய நிர்ப்பந்தத்தால் தூண்டப்பெற்று, நார்த்தம்பர்லாந்து பிரபு மற்றொரு பாராளுமன்றத்தைக் கூட்டினார். அப் பாராளுமன்றத்தில் தமக்கு வேண்டியவரை அவர் நிரப்பப்பார்த்தும் பயனில்லாமல் போயிற்று. பாராளுமன்றம் அவருக்கு உதவிப்பணம் அளித்தது. ஆனால், லஞ்சக் குற்றத்திலிருந்து காக்கும்பொருட்டு தணிக்கை

ஒன்றையும் அஃது ஏற்பாடுசெய்தது. அவர் தீவிரவாதிகளான சமயப் பிரசாரகர்கள்மீது கடுமையான முறையில் தாக்குதல் ஒன்றையும் நடத்தினர்.

ஆறும் எட்வர்ட் உடலுருக்கி நோயான க்ஷயரோகத்தில் பீடிக்கப்பெற்று ஒயிட்ஹாலிலிருந்து வெஸ்ட்மினிஸ்டர்வரைகூட சவாரிசெய்ய முடியாதவராய் அங்கு மரணப்படுக்கையில் படுத்தார். எனவே, அது நார்த்தம்பர்லாந்தின் அழிவுக்கு வழிகோலியது. எட்வர்டைத் தொடர்ந்து அவரின் சட்டப்படியான வாரிசாக வர இருந்த மேரியை நார்த்தம்பர்லாந்தினல் எதிர்க்க முடியுமா? அவர் அஞ்சினர். அவர், மேரி வாரிசுரிமைபெருது தடுக்க வாரிசுரிமையைத் திருத்தி மாற்றியமைக்கத் திட்டம் வகுத்தார் என்ற வதந்திகள் நீண்டநாட்களாகவே உலவிவந்தன. எட்டாம் ஹென்றியின் உயிலுக்கும் சட்டங்களுக்கும் எதிராக, அதை மீறி மரணப் படுக்கையில் கிடந்த எட்வர்டைச் சமயத்தின் பெயரால் அவர்தம் சகோதரி மேரியை உயிலிலிருந்து விலக்கவேண்டுமெனத் தூண்டினர். வாரிசுரிமையை ஜேன் கிரே அரசியின் ஆண் சந்ததியினர் பெறவேண்டுமென மாற்றக் கோரினர். ஜேன் கிரே நார்த்தம்பர்லாந்து டியூக்கின் கையாளான சஃப்போக் பிரபுவின் மகள். அவளை, நார்த்தம்பர்லாந்து, தம்முடைய சொந்த மகன் கில்ட்ஃபோர்ட் டட்லி என்பாருக்கு மணம் முடித்தார். எட்வர்ட் மரணவாயிலை அடுத்து நின்றமையால் அதைக்கூடச் செய்ய முடியாமல் போயிற்று. எனவே, ஜேன் கிரேயையே வாரிசுரிமை பெற்றவராக்கி, அவளுக்குப் பின்னர், அவளின் ஆண் சந்ததியினரும், பின்னர் அவளுடைய சகோதரியையும் வாரிசாகக் கொள்ளத் தூண்டும் தந்திரத்தை மேற்கொண்டார். ஜூன் மாதத்தில் ஆலோசனை சபை இத் 'தந்திரத்தை' உறுதியுடன் கடைப்பிடிக்கப்போவதாக விரதம் பூண்டது. நீதிபதிகளை எட்வர்ட் அதட்டிப் பயமுறுத்தினர். இவ்விவகாரத்தில் 'தாம் எந்த மனிதனுடனும் நேருக்குநேர் நின்று போரிடப்போவதாக' நார்த்தம்பர்லாந்து கூறிக்கொண்டார். நூற்றெரு பிரபுக்கள், கிரான்மரை உள்ளிட்ட பிஷப்புகள், செஸில் உள்பட பெரும் அதிகாரிகள் ஆகியோர் அதற்கான உரிமைப் பத்திரங்களை ஆயத்தம் செய்தனர். ஹெர்பட்டுகள், கிளிஃபோர்டுகள், ஹேஸ்டிங்குகள் முதலான வமிசங்களுடன் திருமண உறவு வைத்துக்கொண்டு அவர்களையும் தம்பால் சேர்த்துக்கொள்ள முயன்ருர். பேரரசரோ ஃபிரெஞ்சியருடன் தம் வாணுள் முழுவதும் லொராயினில் போரிட்டுக் கொண்டிருந்தார். ஃபிரெஞ்சியர் ஸ்காட் மேரி அரசிக்காகப் போரிட வருவர்; ஆனல், பேரரசரின் தாயாதியான மேரி டியூடருக்கு எதிராக உதவிக்கு வரமாட்டார். அரசர் ஜூலை மாதம் 6 ஆம் தேதி

காலமானார். அவர் காலமான செய்தியை மறைத்துவைத்து, நார்த்தம்பர்லாந்து டியூக், மேரியை லண்டனுக்கு வரும்படி கட்டளையிட்டார். ஆனால், அவள் எச்சரிக்கப்பட்டிருந்தமையால் நார்ஃபோக்குக்கு ஓடிவிட்டாள்.

பதினைந்து நாட்களில் அனைத்தும் முடிந்துவிட்டன. நார்த்தம்பர்லாந்துக்கெதிராக அரசருக்கு விசுவாசம் தெரிவித்த மக்களும், அரச வமிசத்தினரும், வறியவர்களும், ஒறுக்கப்பட்டவர்களுமாக அனைவரும் திரண்டு கலகப்புயலைக் கிளப்பினர். பிராட்டஸ்டென்டுகளும் நல்லரசரான எட்வர்டை நஞ்சிட்டுக் கொன்றுவிட்டனர் என்று சபதம் செய்தனர். கிழக்கு ஆங்கிலியா மேரியை ஆதரித்தது. பேகட் திரும்பவும் வெளிவந்து செஸில் (Cecil) என்பாருடன் இணைந்து மிதவாத உறுப்பினர்களைத் தம்பக்கல் வென்றுகொண்டனர். லண்டனிலிருந்து கிழக்கு ஆங்கிலியாவுக்குச் செல்லத் தீர்மானித்த நார்த்தம்பர்லாந்து டியூக் மிட்லாந்து பகுதியில் ஏற்பட்ட கலகங்களால் அறுபட்டுத் தடுக்கப்பட்டவரானார். அவரைக் கேம்பிரிட்ஜில் சிறை செய்தனர். அவரும் அவருடைய ஆண் மக்களும் விரைவாகச் சிறையில் அடைக்கப்பெற்றனர். ஜேன் கிரேயும், ரிட்லியும் சிறை புகுந்தனர். நார்ஃபோக், கார்டினர், எட்வர்ட் கோர்ட்டினே போன்றவர்கள் சிறையிலிருந்து வெளிவந்தனர். ஆலயமணிகளும் உறுப்புகளும் மீண்டும் விடுதலைபெற்றன. அழுத கண்ணீரும் தொழுத கையினருமாய் நாட்டுமக்கள் ஆனந்தக் கண்ணீரால் புதிய அரசியை வாழ்த்தி வரவேற்றனர். ஆகஸ்டு மாதத்தில் தம்முடைய பிராட்டஸ்டென்டு சமயத்தைப் புறக்கணித்துவிட்டு சாமர்செட் மீது சுமத்தப்பெற்ற குற்றங்கள் பொய்யானவை என்பதை ஒப்புக்கொண்டவராய் நார்த்தம்பர்லாந்து பிரபு தலை கொய்யப் பெற்று வாழ்வு துறந்தார். எச்சரிக்கையான அவருடைய கூட்டாளிகளான ரஸ்ஸல், பெம்ப்ரோக் போன்ற மற்றவர்கள் அரசியாருடன் உடன்படிக்கை செய்துகொண்டு எண்ணற்ற பொருள்களைப்பெற்று வாழ்ந்தனர்.

## 2. மேரி

ஆறும் எட்வர்ட் பிராட்டஸ்டென்டு சமயத்தைப் பரப்ப முயன்றார். ஆனால், அவருக்குப்பின்னர் அரசியான மேரி டியூடர் கத்தோலிக்கச் சமயத்தைச் சார்ந்தவள். இதனால், மகிழ்ச்சியற்ற இங்கிலாந்தின் விவகாரங்கள் ஒரு துருவத்திலிருந்து, மற்றொரு துருவத்தை நோக்கி வேகமாகப் பாய்ந்து செல்லலாயின.

கத்தோலிக்கச் சமயத்தைச்சார்ந்த அரசியாரது இரு தீர்மானமான முடிவுகளால் ஆங்கிலப் பிராட்டஸ்டென்டு சமயம் இறுதியில் உறுதிபடுத்தப் பெறுவதாயிற்று. முதலாவது, அரசியார் ஸ்பானிய இளவரசர் ஒருவரை மணந்தது. இரண்டாவது, சமய நிந்தனையாளரை வாட்டிவதைத்துத் தீயிலிட்டுக் கொளுத்தியது. இவ்விரண்டும் ஆங்கில மக்களைச் சமயத்தாலும் தேசியத்தாலும் இணைத்து ஒன்றாக்கியது.

மேரி அரசியாரது கொள்கையும், நார்த்தம்பர்லாந்து பிரபுவின் கொள்கையைப்போன்று தோல்வியுற்றது. அதற்குக் காரணம் நாட்டில் ஏற்பட்ட கொடுமைகளைக் கண்டு நெஞ்சு பொறுது வெறுப் புற்றதுமட்டுமன்றி பெரும்பான்மையான மக்களின் அரசியல் விழிப்புணர்ச்சியும் காரணம் ஆகும். நாட்டில் ஏற்பட்ட வெறுப் புணர்ச்சியும் பெருமளவிலேயே ஏற்பட்டிருந்தது. ஆனால், அதை விடப் பெரியது மக்களின் அரசியல் விழிப்புணர்ச்சி. ரிச் (Rich) போன்ற மிகத் தாழ்மையான மக்கள் இருந்தார்கள். அவர் கத்தோலிக்கரான தாமஸ் மூர் என்பவரை அழித்துவிட்டவர். அவர் இப்போது எஸ்ஸெக்ஸில் கவுன்டியில் பிராட்டஸ்டென்டுகளைக் காட்டிக்கொடுப்பதில் தீவிரப் பங்குகொண்டிருந்தார். ஆனால், பொதுவான சூழ்நிலை மதிக்கப்பட்டத்தக்கதாக இருந்தது. சமயத்தைப் பொருத்தமட்டில் இங்கிலாந்தில் உறுதியான அடிப் படைகள் ஏற்படவில்லை. குறிப்பாக ஃபிரான்ஸையோ ஜெர்மனியையோ போன்று உறுதியான தன்மையில் இங்கி லாந்தில் சமயம்பற்றிய முடிவு ஏற்படவில்லை. ஒரு குறிப்பிட்ட சமயக் கொள்கைக்கான பிடிப்பைவிட அரசுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதில் மிக உறுதியான உணர்வு தென்படலாயிற்று. எட்டாம் ஹென்றிக்கும் ஆறும் எட்வர்டுக்கும் பணியாற்றிய அமைச்சர்களான ரஸ்ஸல், பெம்ப்ரோக், அருண்டேல், ஷ்ரூஸ்பரி போன்றவர்கள் மேரி அரசிக்கும் விசுவாசத்துடன் பணிபுரிந்து எலிசபெத் அரசியாரின் ஆட்சிக்காலம்வரை நீடிக்க இருந்தனர்.

சாமர்செட் பிரபுவின் செயலாளராகவும் பின்னர் எலிசபெத் அரசியாரின் செயலாளராகவும் வர இருந்தவரான செஸில் பிரபு, மேரி அரசியாரின் ஆட்சியில் அவ்வப்போது பணிபுரிய நியமிக்கப் பெற்றார். அவர் பொதுத் தொழுகைக்குச் சென்றுவந்தார். அவர் அமைதியான முறையில், பூந்தோட்டங்களையும் மான்களை வளர்க்கும் கானகங்களையும் அமைப்பதில் பொழுதுபோக்கினார். எட்வர்ட் காலத்திய பிஷப்புகளில் பதின்மர் தொடர்ந்து பதவி வகித்தனர். அதைப்போன்றே பாரிஷ் திருச்சபையினரில் முக்கால் பங்கினர் பதவியில் இருந்தனர். அவர்களில் பலர் சமயத்தில் உறுதியான பற்றுக்காக மட்டுமன்றி, திருமணம் செய்துகொண்ட

காரணத்துக்காக அப் பதவியிலிருந்து விரட்டப்பட்டனர். சுருங்கக்கூறின், இங்கிலாந்தில் கத்தோலிக்கச் சமயத்தை நிலை நாட்ட உறுதிபூண்டிருந்த மேரி அரசியாரின் கனவுகள் அரசியல் உணர்வால் தூண்டப்பெற்றிருந்த சமுதாய மக்களால் நனவாக்கப் படாது நைந்து அடக்கப்பட்டன. ஆங்கிலச் சமுதாய மக்கள் எட்டாம் ஹென்றி அரசின் விஷயத்தில் கையாண்ட கொள்கையையும் தமக்குத் திருச்சபைச் சொத்துகள் கிடைத்ததையும் வைத்துக்கொண்டு காக்கவே முனைந்து உறுதிபூண்டனர்.

மேரியின் கொள்கைகள் அவரது ஆட்சிக்குக் கூற்றுவனாக அமைந்தன என்பது உண்மைதான். ஆனால், மேரி, ஸ்பெயினைச் சார்ந்துநின்றதும் இயற்கைதான். ஏனெனில், ஸ்பெயின்தான் அவமானப்படுத்தப்பட்ட மேரியின் அன்னையாரான காதரின் ஆரகானுக்கும் பேரரசருக்கும் தாயகமாக விளங்கியது. ஆங்கில மக்கள் அரசியாரைக் கைவிட்டபோது, அவளைக் காக்க முன்வந்தவர் பேரரசர் ஒருவர்தான். எனவே, பேரரசர் அரசியாரது நண்பராக இருந்ததில் வியப்பொன்றுமில்லை. ஆனால், அரசியாரின் திருமணம் ஆலோசனை சபையில் பிளவுகளை உண்டாக்கி இரு கட்சிகள் ஏற்பட வழிசெய்தது. உடல் பருத்தவரும் கடுகடுப்பான தன்மையினருமான கார்டினர், அரசியார், எட்வர்ட் கோர்ட்டினே என்பாரை மணந்துகொள்ளவேண்டுமென விரும்பினர். அவர், நாட்டில் மீண்டும் கத்தோலிக்கச் சமய மீட்சியைக்காண விழைந்து, நாட்டைக் குழப்பமுற்ற நிலையிலிருந்து காக்க எண்ணினர். அவருடைய தனிப்பட்ட பகைவரான பேகட் பேரரசருடன் இணங்கி, இங்கிலாந்தும் நெதர்லாந்தும், ஃபிரான்ஸுக்கெதிராக இணைவதையே கத்தோலிக்கச் சமய மீட்சியைவிடப் பெரிதாகக் கொண்டார். மேரி அரசியாரை அவர் இளக்கமாக இருக்கவேண்டியதுடன் இங்கிலாந்தின் தனித்தன்மையையும்காட்ட அரசியார் முனையவேண்டுமென விரும்பினர். கார்டினல் போல் என்பாரும் கார்டினரை ஆதரித்தமையால், ஹாப்ஸ்பர்க்குகள் அவரைத் திருமணத்திற்குப் பின்னரே இங்கிலாந்து நாட்டிற்கு அனுப்ப அனுமதித்தனர். ஆனால், இத் திருமணம் பாராளுமன்றத்தை மீறிச் செய்யப்பெற்றதால் அதன் கண்டனத்திற்கும் அதைத் தொடர்ந்து நாட்டில் பெரும் கலகத்திற்கும் வழிசெய்தது.

பொதுத் தொழுகையை (Mass) குருமார்கள் மீண்டும் தொடங்கியபோது, அவர்களை லண்டன்வாசிகள், 'பொய்யர்கள்' என்றும் 'போப்பாண்டவரின் ஏஜன்டுகள்' என்றும் கூறி எள்ளி நகையாடினர். எனினும், கி.பி. 1553ஆம் ஆண்டில் நார்த்தம்பர்

லாந்து டியூக்கும், அவருடைய கோஷ்டியினரையும் தவிர வேறு ஒருவரும் துன்புறுத்தப்படவில்லை. அயல்நாட்டவரின் தொழுகைக் கூட்டங்கள் அமைதியாக நடைபெற்று முடிவடைந்தன. செல்வாக்கு பெற்ற பிராட்டஸ்டென்டுகள் அரசாங்கத்தின் சம்மதத்தின்பேரில் வெளிநாடுகளுக்குச் சென்றனர். பொதுத் தொழுகைக்கு எதிராக எழுதும்வரை கிரான்மர்கூட சிறையில் அடைக்கப்படவில்லை. அக்டோபர் மாதத்தில், பாராளுமன்றம் அரசியின் தாயான காதரின் ஆரகானின் மணவிலக்கை ரத்துசெய்துவிட்டதுடன், ஆறும் எட்வர்டின் சமயச் சட்டங்களும் விலக்கப்பெற்றன. இதற்குப் பின்னர், நாட்டின் நிலை எட்டாம் ஹென்றி விட்டுச்சென்ற நிலைக்குத் திரும்பிச் சென்றது. அதே நிலையில் கார்டினரின் கொள்கைகள் நாட்டை இன்னமும் கொண்டுசென்றிருக்கும். ஆனால், அரசியின் திருமணத்திற்கெதிராகப் பாராளுமன்றம் விவாதித்தும் பயன் ஏற்படவில்லை. அத்துடன் பேரரசரின் தூதுவருக்கு அரசியிடம் இருந்த வெளிப்படையான செல்வாக்கும் நாட்டு மக்களைக் கோபத்தில் ஆழ்த்தியது. அதன் விளைவாக, கி.பி. 1554ஆம் ஆண்டு ஜனவரியில் நாட்டில் கலகங்கள் தோன்றின. கோர்ட்டினே கலகத்தைக் காட்டிக்கொடுத்துவிட்டமையால் கலகம் அவசர அவசரமாகத் தொடங்கப்படவேண்டியேற்பட்டது. மேற்குப்பாகத்தில் கலகங்கள் மூண்டன எனினும் அங்குப் போதிய உற்சாகம் ஏற்படவில்லை. ஸ்பானியர் படையெடுக்க இருக்கிறார்கள் என்ற வதந்தியை மிட்லண்ட் பகுதியில் தூண்டிவிட்டார் சஃப்போக் பிரபு. அதனாலும் பயன் ஏற்படவில்லை. ஆனால், ஃபிரெஞ்சியரின் பணத்தையும் படைக்கலன்களையும்பெற்ற கென்ட் பகுதியில் கலகம் பெரும்பாலும் வெற்றிபெற்ற நிலையில் இருந்தது.

கலகத்திற்குத் தலைமை வகித்தவர் சர் தாமஸ் வயட் என்பாராவர். அவர் திறமைவாய்ந்த படைவீரர் எனினும் கொடுந்தன்மைகளைக் கொண்டவர். லண்டனில் பயிற்சி பெற்றிருந்த கொள்ளைக்கூட்டத்தினர் சிலர் அவருடன் சேர்ந்துகொண்டனர். வயட் லண்டன் பாலத்தைக் கடக்க சௌத்வார்க்கிலிருந்து ஒருமுறை முயன்றும் பயனில்லாமல், கிங்ஸ்டனில் ஆற்றைக் கடந்தார். சாரிங் கிராஸ் பகுதியைச் சுற்றிலும் வெற்றி தோல்வியற்ற குழப்பமான முறையில் சண்டைகள் நடைபெற்றன. ஒயிட்ஹாலின் முற்றங்களில்கூடக் கலகக்காரர்களின் அம்புகள் தைத்தன. ஆனால், டெம்பில் பார் (Temple Bar) என்ற இடத்தில் வயட் கைப்பற்றப்பெற்றார். அவரது தீரமான உணர்ச்சியால் மேரி அரசியார் காப்பாற்றப்பெற்றார். பிராட்டஸ்டென்டு பிரபுக்கள் அரசியை விசுவாசத்துடன் காத்தனர், தோல்வியுற்ற வயட் கொல்லப்பெற்றதுடன், ஜேன் கிரே கோமகள், அவளது தந்தையான

ச.:ப்போக் பிரபு, அவருடைய கணவரான டட்லி முதலானோர் தூக்கிலிடப்பெற்றனர். இக் கலகத்தின் விளைவாக எலிசபெத் இளவரசியும் தற்காலிகமாக டவர் சிறையில் அடைக்கப்பெற்றார். அவள் ஒரு கட்சியைத் தொடங்கவும் இது வழிசெய்தது. ஸ்பானியர் எலிசபெத்தைக் கழுவேற்றிவிடவேண்டுமென வற்புறுத்தினர் எனினும், கலகக்காரர்கள் அவரை கோர்ட்டினே பிரபுவுக்கு மணம் முடிக்க விரும்பினர்.

அவ்வாண்டு கோடைக்காலத்தில் பல பிராட்டஸ்டென்டுகள் தண்டிக்கப்பெற்றனர். இத் தருணத்தில் ஆக்ஸ்.:போர்ட் கூட்டம் ஒன்று கிரான்மர், லாட்டிமர், ரிட்லி போன்ற சிறைக் கைதிகளை எள்ளி நகையாடிக் கூச்சலிட்டது. எனினும் கத்தோலிக்கச் சமயம் பல துன்பங்களை மேற்கொள்ளவேண்டியதாயிற்று. சமய நிந்தனை பற்றிய சட்டங்களையும், ஆறு விதிச் சட்டத்தையும் திரும்பக் கொணரக் கோரிய மசோதாக்களைப் பிரபுக்கள் சபையினர் ஏற்க மறுத்துவிட்டனர். அதற்கு முக்கியக் காரணமும் இருந்தது. பல பிரபுக்கள் திருச்சபைச் சொத்துகளைத் தமதாக்கிக்கொண்டிருந்தனர். எனவே, மேற்கூறிய சட்டங்களை அனுமதிப்பதன் மூலம் அவர்களில் சிலராவது சமய நிந்தனைச் சட்டத்தால் பாதிக்கப்பட நேரிடுமோ என அஞ்சினர். பேகட்டும் ஸ்பானியரும் கத்தோலிக்கச் சமயத்திற்கு அதிக உற்சாகம் காட்டுவது மேரியின் திருமணத் திற்குத் தடையாக ஆகலாம் என்ற காரணத்தால் அச் சட்டங்களை ஒப்புக்கொண்டனர். காமன்ஸ் சபையினரும் மசோதா ஒன்றைக் கொணரச் சிந்தித்துவந்தனர். அதன்படி மடாலய நிலங்களைச் சொந்தமாகக் கொண்டவர்களைக் காக்கவும், எலிசபெத்தை வாரிசுரிமையிலிருந்து நீக்கவும் திட்டமிட்டதை ஒருவரும் ஆதரிக்கக் கூடாது என்றும் அம் மசோதா கூறியது. ஆலோசனை சபையில் வெறும் கூச்சலே மிஞ்சியது என்று மேரி குற்றஞ்சாட்டினர். இறுதியாக ஸ்பானியர்கள் அவரைப் பாராளுமன்றத்தைக் கலைத்து விடும்படி யோசனை கூறினர். பாராளுமன்றம் மேரி அரசியின் திருமணச் சட்டத்தின் ஒவ்வொரு விதியையும் பொறுமையுடன் ஆய்ந்து பார்த்ததைக் கண்டு பொறுத ஸ்பானியர் அதைக் கலைக்கக் கோரியதில் வியப்பொன்றுமில்லை.

மேற்கூறிய அனைத்தும் ஏட்டுச்சுரைக்காயாய் நின்றபோது பார்க்க அழகாகத் தென்பட்டது. .:பிலிப் அரசருக்கும் மேரிக்கும் பிறக்கும் குழந்தை பர்கண்டி, நெதர்லாந்து ஆகியவற்றுடன் ஆங்கில ஆட்சிப் பகுதிகள் அனைத்தையும் வாரிசாகப் பெறும் என்பதும், இங்கிலாந்தில் ஆங்கிலேயரே பதவி வகிக்கவேண்டும் என்பதும், மேரி காலமானபோது .:பிலிப் அவருடைய உரிமைகள்

அனைத்தையும் இழக்கவேண்டும் என்பதும் தீர்மானமான பின்னர், வின்செஸ்டரில், கோலாகலத்துடனும் மகிழ்ச்சியுடனும் அவர்களுக்குத் திருமணம் நடந்தேறியது. அவர்கள் லண்டனிலும் நுழைந்தனர். தம் கணவரைத் தம்முடன் சமையற்காரனையும் கொண்டுவரவேண்டுமென எச்சரித்திருந்தார் மேரி ராணியார். ஏனெனில், யாராவது இங்கிலாந்தில் விடமிட்டுக் கொன்றுவிட்டால் என்செய்வது என்ற அச்சத்தின் பயனாக அவ்வண்ணம் அவர் எச்சரித்திருந்தார். ஃபிலிப் வெகுபாடுபட்டு ஆங்கிலப் பழக்க வழக்கங்களை மேற்கொள்ள முயன்றுவந்தார். ஆங்கிலச் சாராயத்தையே குடிக்க முயன்றார். மேரி ராணிக்குச் சீதனமாக வண்டி நிறைய ஸ்பானியப் பொன்னையும் பொருளையும் ஏற்றி வந்தார். எனினும், நாட்டு மக்கள் அவரை வெறுத்தனர்.

கி.பி. 1554–5-ல் மூன்றாவது பாராளுமன்றம் கூட்டப் பெற்றது. இப் பாராளுமன்றம் போப்பாண்டவருடன் சமாதானம் செய்துகொள்ள முயலும் நோக்கத்தோடு கூட்டப் பெற்றது. முடிந்தமட்டும் கத்தோலிக்க உறுப்பினர்களையே தேர்ந்தெடுக்கவேண்டுமென்றும், சொத்து விவகாரங்களில் தாம் தலையிடுவதில்லை என்று வாக்குறுதி கொடுத்தும் அப் பாராளுமன்றம் கூட்டப்பெற்றது. ஆனால், பாராளுமன்றத்தில் நாற்பது சதவிகிதம் பழைய உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தனர். மேலும், பாராளுமன்ற நடவடிக்கைகள் அனைத்திலும், அவர்கள் பணிந்துவிட்டதற்கான அறிகுறிகளே தென்படவில்லை. நவம்பர் மாதத்தில் போப்பாண்டவரின் உத்தரவுபெற்றுப் புதிய நிலச் சொந்தக்காரர்களை உறுதிப்படுத்திய கார்டினல் போல், லண்டன் திரும்பி, சமயப் பிளவிலும் மதப்பிரஷ்டத்திலும் இருந்த இங்கிலாந்தின் பாபத்தை மன்னித்தார். பாராளுமன்றம், எட்டாம் ஹென்றி போப்பாண்டவருக்கெதிராகச் செய்த சட்டங்களைத் தள்ளிவைத்தது. ஆனால், திருச்சபை நிலங்களைப் பெற்றவர்கள் எவ்வகையிலும் பாதிக்கப்படாத முறையில் வலிவான பாதுகாப்புகளைப்பெற்றே இச் சட்டங்கள் தள்ளிவைக்கப்பெற்றன. போப்பாண்டவரின் ஆதிபத்திய உரிமையையும் திருச்சபை நீதிமன்றங்களையும் மீண்டும் நிலைநாட்டினர். திருச்சபைச் சொத்தைப் பறித்ததையோ, திருச்சபைக் கட்டணங்களுக்கு எதிரான சட்டங்களைத் தள்ளிவைக்கவோ செய்து அவர்கள் சரணடையவில்லை. பிறவற்றில் அவர்கள் அரசியாருக்கு இணங்கினர். மிகக் கொடிய துரோகக் குற்றச் சட்டம் ஒன்றை நிறைவேற்றி, அதன்மூலம் ஓரளவு பிராட்டஸ்டென்டு இரகசியச் சங்கங்களை அடக்க முனைந்தனர். சமய நிந்தனைக்கெதிராக இடைக்காலச் சட்டங்களை மீண்டும் புதுப்பித்தனர்.

இருந்தபோதிலும், ஃபிலிப் தம்மை ஆங்கில அரசின் வாரிசாக ஆங்கீகரிக்கவேண்டுமென விரும்பினுரேனும், பாராளுமன்றம் 'செவிடன் காதில் ஊதிய சங்கென' வாளா இருந்துவிட்டது. ஃபிரான்ஸுக்கெதிராக ஸ்பெயினுடன் ஒத்துழைக்கவேண்டிய கோரிக்கையையும் பாராளுமன்றம் ஏற்க மறுத்துவிட்டது. இங்கிலாந்தில், அயல்நாட்டுக் காவலர்களும் ஸ்பானியப் பிரபுக்களும் எண்ணற்று வந்திருந்ததை ஆங்கிலேயர் விரும்பவில்லே. அவர்கள் விளேயாட்டுகளில்கூட ஆங்கிலேயரைக் கொல்லவே விழைந்தனர். அவர்கள் ஸ்பானியக் கப்பல்களே 'முஸ்ஸல் மீன்-கூடு' என்று எள்ளி நகையாடினர். இனிமையற்ற ஸ்பானியப் பழக்கவழக்கங்களே அவர்கள் வெறுத்தனர். அரசாங்க அலுவல்கள் அனேத்தும் இளவரசரும் மேரியின் கணவருமான ஃபிலிப்புக்குப் புரியும் வகையில் ஆங்கிலத்திலிருந்து லத்தீன், ஸ்பானிய மொழியில் மொழி பெயர்க்கப்பெற்றதையும் அவர்கள் வெறுத்தனர். அரசரை வேடிக்கை செய்யும் நோக்கத்தோடு பாடப்பெற்ற அம்மானேப் பாடல்களே லண்டன் மக்கள் மகிழ்ச்சியுடன் பாடினர். ஃபிளீட் தெரு தூக்கு மரங்களில் 'மழையில் நாள்முழுதும் தொங்கிச்செத்த' ஆங்கிலேயர்களேக் கோபத்துடனும் எரிச்சலுடனும் நோக்கினர். இங்கிலாந்தும் விரைவில் ஃபிளாண்டர்ஸ் அல்லது நேபிள்ஸ் போன்று அடிமைத்தளேயால் பிணிக்கப்படுமென துண்டுப் பிரசுரங்கள் திரும்பத்திரும்பக் கூறிவந்தன.

சமய நிந்தனேச் சட்டங்களே புதுப்பித்த ஒரே மாதத்திற்குள் மேரி அரசியார் சமயத்திற்காகப் பிராட்டஸ்டென்டுகளே ஒறுக்கும் செயலில் இறங்கினுர். ஆனுல், இது ஸ்பானியரின் தூண்டுதலினுலன்று. ஸ்பானியர்கள் இத் துன்புறுத்தலில் இறங்கவில்லே. ஏனெனில், கி.பி. 1555 செப்டம்பர் மாதத்தில் ஃபிலிப் இங்கிலாந்தைவிட்டு அகன்ருர். கி.பி. 1557 ஆம் ஆண்டில்மட்டும் ஒரு சில மாதங்கள் அவர் இங்கிலாந்திற்கு வந்திருந்தார். பின்னர் வரவேயில்லே. இத் துன்புறுத்தலுக்கு கார்டினரும் காரணமாகார். அவருடைய திருச்சபை மாவட்டத்தில் ஒருவர்கூட சமய நோக்கத்தோடு கொல்லப்படவில்லே. மேலும், அவர் கி.பி. 1555 நவம்பரில் காலமாகிவிட்டார். எனவே, இத் துன்புறுத்துதல் அனேத்திற்கும் மேரியே பொறுப்பானவர் எனவேண்டும். அவ்வாண்டில்மட்டும் எழுபதின்மர் எரிக்கப்பட்டனர். மேரியின் ஆட்சியின் இறுதிக்குள் முந்நூறுபேர்வரை இவ்வாறு எரிக்கப்பெற்றனர். பிராட்டஸ்டென்டு பகுதிகளில் இருந்து இவர்கள் பிடிக்கப்பெற்றனர். 238 பேர் லண்டன் திருச்சபை மாவட்டத்திலும், கிழக்கு ஆங்கிலியா, ஸஸ்ஸெக்ஸ், கென்ட் முதலான பகுதிகளில் இருந்தும் பிடிபட்டனர். இவ்வாறு சமய நிந்தனேயின்

பெயரால் ஒறுக்கப்பட்டவர்களில் தாய்மார்களும், பையன்களும், வயதானவர்களும், குருடர்களும், பல கைத்திறத் தொழிலாளர் களும், நாட்டைவிட்டு அஞ்சி ஓடாத பிராட்டஸ்டென்டுகளின் மலர்ந்த மொட்டுகள்போன்றிருந்த குருமார்களும், ஒருசில அரசியல்வாதிகளும் சேர்ந்திருந்தனர். கிளாஸ்ட்டரில் தம்முடைய பழைய திருச்சபை மாவட்டத்தில் ஹூப்பர் எரிக்கப்பட்டார். ஆக்ஸ்ஃபோர்டில், லாட்டிமரும் ரிட்லியும் எரிக்கப்பெற்றனர். அத்துடன், எட்வர்ட் காலத்துச் சமய போதகர்கள் பலரும் எரியுண்டனர். கிரான்மர் அச்சுறுத்தலின்பேரில் பன்முறை கத்தோலிக்கச் சமயத்தை ஏற்றுக்கொண்டதாகக் கையொப்ப மிட்டார். இதன் வாயிலாகப் பிற பிராட்டஸ்டென்டுகளையும் கத்தோலிக்கர் ஆக்க முடியுமென அரசாங்கம் நம்பியது. ஆனால், இறுதியில் அவரும் கழுவேற்றப்பட்டு எரிக்கப்படப்போகும்முன், கத்தோலிக்கராகத் தம்மை ஒப்புக்கொண்டு வாக்குமூலத்தில் கையெழுத்திட்ட வலக் கையை நெருப்பில் முதலில் நீட்டிப் பின்னர் அவரும் தீக்குளித்தார். சமயத்திற்காக இத்துணைபேர் கழுவேற்றப்பட்டதை ஆங்கில மன்பதையினர் எப்படி யெடுத்துக் கொள்வர் என்பதே பிரச்சினையாக இருந்தது. பழங்களையும் பானங்களையும் விற்க வருவோர், பல்வகைக் காட்சிகளைக் காணக் கூடிய மக்கள் கூட்டம்பற்றி நாம் சில சமயங்களில் படிக்கிறோம். இவ்வகை மக்கள் அவ்வப்போது சமய நிந்தனையின் பெயரால் ஒறுக்கப்பெற்றவர்கள் ஏற்ற கொடுமைகளைக் கண்டு நெஞ்சுரு கினர். இவ்வாறு ஒறுக்கப்பெற்றவர்களை மக்கள் ஆழ்ந்த அனுதாபத்துடனும், எரிச்சலுடனும் பன்முறை கண்டனர். அவர்கள் படும் மரண வேதனையிலிருந்து எளிதில் விடுதலையளிக்க வெடி மருந்துகளை வைத்துக் கொளுத்திவிட்டனர். இக் கொடுமைகள் அரசியல் பிழையும் அற வாழ்வில் மன்னிக்கமுடியாத மாபெரும் குற்றமுமாகும். பிஷப்புகளைவிட அதிகமாக நெசவாளர் களும், தொழில் பயிற்சி மாணவர்களும் அல்லது விதவைகளும் மெழுகுவத்திகளை ஏற்றி அவர்களின் நினைவைப் போற்றினர். மூப்புற்றவரான லாட்டிமர், ரிட்லியைப் பார்த்து, 'இம் மெழுகு வத்திகளை ஒருவராலும் அணைக்கமுடியாது' என்று கூறினார்.

இடைவிடாது சமய நிந்தனையின் பெயரால் துன்புறுத்தப் பட்டதற்கு, நாடு கடத்தப்பெற்ற பிராட்டஸ்டென்டு சமயத் தலைவர் களின் கொடுமைகளும் காரணமாகும். இவர்கள் அதிக எண்ணிக் கையில் இல்லாவிட்டாலும், ஸ்ட்ராஸ்பர்க், ஃபிராங்க்ஃபர்ட், ஜூரிச், பாஸல் முதலான இடங்களில் இருந்தவர்கள் அவர்களின் பிரதிநிதிகள் போன்று, தீவிரமாய், நன்கு இணைந்து செயலாற்றும் இயக்க முறையில் பணியாற்றினர். அவர்களுள் ஜூவெல்,

கிரின்டால், ஹார்ன், காக்ஸ் போன்ற எலிசபெத் காலத்தில் பிஷப்பாகப் போக இருந்தவர்களும், மேலும் பிஷப்புகள் ஐவரும் இருந்தனர். ஜெனீவாவில் நாக்ஸ் என்ற பெரியார் மேரி ராணியின் காலத்துக் கொடுமைகளைத் தம்முடைய பிரசுரம் ஒன்றில் 'கொடுமைகள் நிறைந்த பெண்களின் ஆட்சிக்கு எதிரான சூறாவளி முழக்கம்' (Blast of the Trumpet against the Monstrous Regiment of Women) என்று கடுமையாகத் தாக்கினர். 'கடவுளின் தூதர்கள் இதற்குப் பழிக்குப் பழிவாங்க ஏற்கெனவே நியமிக்கப்பெற்று விட்டார்கள்' என்று முன்னறிவித்தார். ஃப்போக் சீமாட்டி போன்ற பிரபுக்கள் சிலர்; செஸிலின் மாமனரான குக்போன்ற பெரும் செல்வர்கள்; எஸ்ஸெக்ஸ் நெசவாளிகளின் தொழுகைக் கூட்டத்தினர் முதலியோர் இவ்வாறு ஓடினவர்களில் சிறப்பான வர்கள். இவ்வாறு ஓடினவர்களில் 'தியாகிகளின் வரலாறு' என்னும் நூலை இயற்றிய ஃபாக்ஸ் என்பவர் ஒருவர். அவர் எழுதிய நூல் அடுத்த நூறுண்டுகளுக்குப் பிராட்டஸ்டென்டு சமயத்தைப் பறைசாற்றும் நற்கருவியாக இருந்தது. நாலிஸ், வால்சிங்ஹாம் என்ற இருவர் எலிசபெத்தின் ஆட்சியின்போது அமைச்சர்களாக இருந்தவர்கள். அவர்களும் இவ்வகையில் நாட்டைவிட்டு ஓடின வர்களேயாவர். போரிட்டு எதிர்க்கவேண்டுமென இப் பிர சாரகர்கள் அடிக்கடி பிரசாரம் செய்துவந்தனர். பலர் தீவிரமான தத்துவம் வேண்டுமென்று கோரினர். சமயச் சடங்குகள்பற்றி அவர்கள் கொண்டிருந்த கருத்துகள் ஆங்கிலச் சிறைக் கூடங்களில் அடைக்கப்பெற்றிருந்தவர்களுக்கு எட்டியது. இச் சிறைக்கூடங் களில் ப்யூரிட்டன் சமயத்தைப் பரப்பிய கிறிஸ்துவப் பாதிரிகள் இருந்தனர்.

தன் தந்தையாரின் பாராளுமன்ற அமைப்புமுறைப்படி பணி யாற்றவேண்டி இருந்தமையால், மேரி தன் தந்தையாரின் அடிச் சுவட்டைப் பின்பற்றி இருபத்தேழு புதிய உறுப்பினர்களைப் பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுத்தார். இவர்களில் பதின்மர் பழைமை விரும்பிகளான கன்ஸர்வேடிவ்கள் நிரம்பிய யார்க்ஷயரில் இருந்து வந்தனர். ஆனல், கி.பி. 1555-ல் கிரான்மரின் மரணத் திற்குப் பிறகு கூட்டப்பட்ட பாராளுமன்றத்தில் தொல்லைகள் பெருகிவந்தன. கத்தோலிக்கச் சமயத்தைத் திரும்பக்கொணர்ந்து பாடம் கற்பிக்கவேண்டுமென எண்ணிய பாராளுமன்ற உறுப் பினர்களும், கத்தோலிக்கர் அல்லாதாரையும் அரசாங்கம் துன்புறுத்தத் தொடங்கியதால், பிராட்டஸ்டான்டிஸம் மேலும் உறுதிப்படுவதைக் கண்டு தளர்ச்சியுற்றனர். நாடுகடத்தப் பட்டிருப்போரின் சொத்துகளைப் பறிமுதல்செய்யக் கோரிய மசோதா ஒன்றையும் பாராளுமன்றம் ஏற்றுக்கொள்ள மறுத்து

விட்டது. பாராளுமன்றத்தில் இடம்பெற்றிருந்த அரசாங்க அதிகாரிகளை விலக்கவேண்டுமெனக் கோரிய மசோதாவொன்றை விவாதித்தனர். போப்பாண்டவருக்குச் செலுத்தப்பெற்ற முதலாண்டு வருவாய், பத்தில் ஒரு பங்கு வரி முதலானவற்றை மேரியின் தந்தையான எட்டாம் ஹென்றி கைப்பற்றி இருந்தார். அவற்றை மீண்டும் போப்பாண்டவருக்குக் கொடுக்கவேண்டுமென விரும்பினர். தன் சுவாதீனத்திலிருந்த ஆங்கிலத் திருச்சபையினருக்குப் பத்திலொரு பங்கு வரியையும், கோயில் வருமானமுள்ள பதவிகளையும் அரசியார் கொடுத்தார். ஆனால், இம் மசோதா கடுமையான பிரிவுகளை ஏற்படுத்திய பின்னர் நிறைவேற்றப்பட்ட போதிலும், போப்பாண்டவருக்குக் கொடுக்கப்படும் முதல் ஆண்டு வருவாய் முழுவதையும் கொடுக்க மறுத்துவிட்டது. அரச ஆணைக்குட்பட்ட பதவிகளில்மட்டும் அரசியார் தம்மிஷ்டப்படி நடக்க அனுமதித்தது இப் பாராளுமன்றம். லௌகிகர்கள் தம் வருவாயில் ஒன்றையும் கொடுக்க உறுதியாக மறுத்துவிட்டார்கள்.

இதற்குப் பின்னர், அடுத்த இரண்டாண்டுகளுக்குப் பாராளுமன்றம் கூட்டப்படவேயில்லை. கி.பி. 1556–7-ல் கண்டுபிடிக்கப்பெற்ற சதிகளில் பல உறுப்பினர்கள் பங்குகொண்டிருந்தது கன்டுபிடிக்கப்பட்டது. எலிசபெத் இளவரசிகூட இச் சதிகளில் கலந்திருப்பாரோ எனச் சந்தேகிக்கப்பட்டார். எதிர்காலத்தில் எலிசபெத் அரசியாரிடம் பணிபுரிய இருந்த ஊழியர்கள் பலர் நிச்சயமாக இச் சதிகளில் பங்குகொண்டிருந்தனர். சமயச் சின்னங்களான உருவச்சிலைகளைச் சிதைத்தல், குருமார்களைத் தாக்குதல் போன்ற கொடுஞ் செயல்களில் ஈடுபட்டு, பிராட்டஸ்டென்டு சமய உணர்ச்சியை வெளிப்படுத்தினர். எஸ்ஸெக்ஸ் கானகங்களிலும், ஐலிங்டன் விடுதிகளிலும் (Islington inns) சமய நிந்தனையாளரின் கூட்டங்கள் திருட்டுத்தனமாகக் கூடலாயின. ஓயிட்சாப்பல் என்ற இடத்தில் இருந்த கொத்தனார் ஒருவர் வாரந்தோறும் தம் தோட்டத்தில் பெரும் கூட்டங்களுக்குச் சமயப் போதனைகளை விடாது செய்துவந்தார். அரசியாரின் பாதுகாப்பாளரில்கூட மறைமுகமாகப் பிராட்டஸ்டென்டு சமய ஆதரவாளர்களாக இருந்தவர்கள் இருந்தனர். ஃஸ்பானியக் குடியேற்றங்களில் வியாபாரம் செய்யக்கூடாதென ஃபிலிப்பால் தடுக்கப்பெற்றிருந்ததால், ஆங்கில மாலுமிகள் தங்களின் சொந்தப் பொறுப்பில் கப்பல்களை ஆப்பிரிக்காவுக்கும் பிரேஸிலுக்கும் அனுப்பினர். சிலர் ஆங்கிலக் கால்வாயில் பகைவர் கப்பல்களைக் கொள்ளையடிக்கும் போர்க் கப்பல்களைக்கொண்டு கொள்ளையடித்துவந்தனர். இத் தருணத்தில் துணிச்சலான மாலுமிகளில் சிலர் ஆர்க்கேஞ்சலைக் கண்டுபிடித்து, மாஸ்கோவின் மன்னரவைக்குச் சென்றுவந்தனர்.

சுருங்கக்கூறின் புதிய இங்கிலாந்து ஒன்று வளர்ந்துவந்தது. அங்குப் பழைய கண்மூடிப் பழக்கவழக்கங்களும், அந்நிய அரசாங்கப் பிடிப்புகளும் முழுதும் விடுபட்டுப்போய்விட்டன.

அரசிக்கு மகவு பிறக்கும் என்ற நம்பிக்கையும் நாட்பட நாட்பட குறைந்துபோய்விட்டமையால், அவரும் சொல்லொணுத் துயரில் ஆழ்ந்தார். அவருடைய உடல் நலமோ கெட்டுவந்தது. அவரது கணவர் ஃபிலிப்போ அவருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டார். அரசியார் ஃபிலிப்பைவிட பதினேராண்டு வயதில் பெரியவர் என்பது அவருக்கு அடிக்கடி நினைவுக்கு வந்து வருத்தியது. கி.பி. 1557-ல் ஸ்பானியர் கடைப்பிடித்த கொள்கையினுல் மேரியாரது குறிக்கோள்கள் தவிடுபொடியானதுடன் ஆங்கில மக்களையும் அது சினத்தில் ஆழ்த்தியது. அப்போது போப்பாண்டவராக இருந்தவர் நான்காம் பால் என்னும் நேபிள்ஸ் பெரியாராவர். அவர் மிகவும் தீவிரமானவர், தேசியவாதி; எனவே, ஸ்பானியருக்கெதிரான கொள்கைகளைக் கடைப்பிடித்தார். அவர் ஃபிரெஞ்சியருடன் சேர்ந்துகொண்டார். ஃபிரான்சுடன் இங்கிலாந்து போருக்குச் செல்லவேண்டுமென ஃபிலிப் ஆலோசனை சபையின் எண்ணத்தைக் கேட்க விழைந்தார். வெற்றியும் பெற்ருர். போல் (Pole) பிஷப் அதை எதிர்த்தார். எனினும், போப்பாண்டவர் போலைத் தம் பிரதிநிதிப் பதவியிலிருந்து நீக்கிவிட்டார். செயின்ட் குவென்டின் (St.-Quentin) என்னுமிடத்தில் ஃபிலிப் ஆங்கிலப் படையின் துணையுடன் ஃபிரெஞ்சுப் படையைத் தோற்கடித்தார். இது மாபெரும் வெற்றியேயெனினும், இங்கிலாந்தை ஸ்காட்டியரின் தாக்குதலிலிருந்து பாதுகாக்க ஃபிலிப் நடவடிக்கையொன்றையும் எடுக்கவில்லை. அரசாங்கத்தால் படைவீரர்களையும், போதுமான பொருளையும் கொடுக்க முடியவில்லை. கட்டாயக் கடன் கேட்கப்பட்டபோது மக்கள் அதை எதிர்த்தனர். சானல் தீவில் ஃபிரெஞ்சியர் படையுடன் இறங்கினர். கி.பி. 1558ஆம் ஆண்டு ஜனவரியில் ஃபிரெஞ்சியர் திடுமெனத் தாக்கி ஆங்கிலேயரைப் பேரதிர்ச்சியுறச் செய்தனர். மேரியும், ஏன், இங்கிலாந்து மக்களும் மனமுடைந்துபோயினர். நீண்டநாட்களாக ஃபிரெஞ்சியரின் அச்சுறுத்தலும், ஃபிரெஞ்சு அனுதாபிகள் பலரின் ஆசியும், பாதுகாப்புகள் அனைத்தும் பயனற்றுப்போய்விட்டன என்று அரசாங்க ஊழியர்கள் அரசாங்கத்திற்கு அறிவுறுத்தினர். இத் தருணத்தில் கலேயை ஃபிரெஞ்சியர் கைப்பற்றினர். கலேயின் வீழ்ச்சி இங்கிலாந்தின் இருநூறு வருட ஆட்சிச் சிறப்பைச் சீர்குலைத்தது.

ஸ்பெயினையும், ஃபிலிப்பையும் பாராளுமன்றம் உண்மையில் கைகழுவி விட்டது. அவர்கள் கொடுத்த வரியோ மிகக் குறைவாக

இருந்தது. எனினும், அரசாங்கம் ஆன்ட்வெர்ப்பில் 14 சதவிகித வட்டியில் பெருங் கடன்கள் வாங்கிவந்தது. இங்கிலாந்திலிருந்த ஃபிரெஞ்சியர்களை நாட்டைவிட்டு வெளியேற்றவும் அவர்கள் ஒருப்படவில்லை. ஆலோசனை சபையும் நெதர்லாந்துக்குப் படை வீரர்களை அனுப்ப மறுத்துவிட்டது. ஃபிலிப் அரசரும் மேரியைக் கைவிட்டார். மேரியோ திருச்சபைக்குப் பல மானியங்களைத் திரும்பவும் மீட்டுக் கொடுத்திருந்தார். பெண் துறவியர் சிலர் சியானுக்கும், ஆண் துறவியர் சிலர் வெஸ்ட்மினிஸ்டருக்கும் மீட்கப்பெற்றனர். கி.பி. 1558-ல் மட்டும் ஏறத்தாழ ஐம்பதுக்கு மேற்பட்ட சமயநிந்தனையாளர்கள் எரிக்கப்பெற்றனர். துடிப்புள்ளவர்கள் அனைவரும் நாடுகடத்தப்பட்டும், அரசிக்கு எதிராகக் கிளம்பியும் இருந்தனர். பிராட்டஸ்டென்டு கூட்டங்கள் தீங்கற்றவை என்று கருதப்பெறத் தொடங்கின. அரசியாரும் ஆர்ச்பிஷப் போலும் செத்துக்கொண்டிருந்த செய்தி கேட்டபோது எல்லா மக்களும் ஹேட்ஃபீல்ட் என்ற இடத்தில் ஆங்கில ஓக் மரத்தடியில் பண்டைய நூல்களை வாசித்து வந்த எலிசபெத்தை நோக்கிநின்றனர். கி.பி. 1558ஆம் ஆண்டு நவம்பர் 17ஆம் நாள் டியூடர் அரசர்களிலேயே சிறந்த நல்லொழுக்கம் வாய்ந்த மேரி அரசியார் இறந்துபோனார். மகிழ்ச்சிக் கடலில் துள்ளிக்குதித்த லண்டன் மாநகர மக்கள் சொக்கப்பானை தீயிட்டுக் கொண்டாடிக் கொண்டிருந்தபோது, கார்டினல் போல் என்பாரும் இறந்து போனார்.

## சமகால நிகழ்ச்சிகள்

1548 ஜெர்மனியில் இன்டரீம் சபைக்கூட்டம் (Interim).

1549 ஃபிரான்ஸில் பிளியேட் கவிஞர்கள் எழுதத் தொடங்கல்.

1550 வாசரி என்பாரின் 'வண்ணக் கலைஞர்களின் வாழ்க்கை வரலாறு' எழுதப்படல்.

1551 பாலெஸ்ட்ரினா போப்பாண்டவரின் இசைக்குப் பொறுப்பாளராதல்.

டிரென்ட் கவுன்சிலின் இரண்டாம் கூட்டம்.

1552 சாக்சனியின் மாரீஸ் என்பாரும் ஃபிரெஞ்சியரும் பேரரசரைத் தோற்கடித்தல்.

1553 ஜெனிவாவில் செர்விட்டஸ் என்பார் எரிக்கப்படல்.

1555-59 போப்பாண்டவர் நான்காம் பால் என்பாரின் ஆட்சி (Caraffa).

*1555* ஆக்ஸ்பர்க் சமய உடன்படிக்கை.

*1556–64* பேரரசர் முதலாம் ஃபெர்டினண்ட் என்பாரின் ஆட்சி.

— *1605.* டெல்லியில் அக்பரின் ஆட்சி.

லயோலாவின் மரணம் ; லேனஸ் (Laynez) என்பார் அவரைப் பின்பற்றி ஏசு சங்கத் தலைவராதல்.

*1557* செயின்ட் குவென்டின் போர்.

ஸ்பெயினில் தேசிய பொருள் வறட்சி ஏற்படல்.

*1558* ஸகாட்டிய மேரி அரசியார் ஃபிரெஞ்சு அரசரின் மூத்த மகனை (டாபின்) மணத்தல்.

ஐந்தாம் சார்லஸ் மன்னரின் மரணம்.

# 4. எலிசபெத் ராணியாரின் ஆட்சி: I. 1558-1573

இந்த யுகத்தில் ஐரோப்பாக் கண்டமானது அனல் உமிழும் உலையினூடே சென்று, அதன்பிறகு மெதுவாகக் குளிர்ந்து தன்னுடைய பதினெட்டாம் நூற்றாண்டின் வடிவைப் பெற்றது எனலாம். ஆயின், இங்கிலாந்து முன்னூறு ஆண்டுகளின் முயற்சிப்பால் உருவான முழுமை நிலையை எய்தியது. சமயச் சண்டைகளின் விளைவாக மனித இனத்தில் மாறாத பிளவுகள் தோன்றின. ட்ரெண்ட் (Trent) கவுன்சிலினால் செம்மையுற்று, போப்பினரால் (Papacy) நிறுவப்பெற்று, அரசியல் ரீதியில் ஸ்பெயின் நாட்டினால் இயக்கப்பெற்றச் சமயச் சீர்திருத்த எதிர் இயக்கம், பிராட்டஸ்டென்ட் சமயத்திற்கு எதிராகக் கிளம்பியது. ஆனால், வழிவழியாக வந்த வெறுப்புணர்ச்சிகளும் வாணிபப் போட்டிகளும் சமயங்களின் செல்வாக்கையும் மீறி மக்களின் மனத்தைப் பாதித்தன. கத்தோலிக்க நாடாகிய ஃபிரான்ஸ் மாட்சிமைமிக்க மன்னர்கள் தலைமையில் கத்தோலிக்க ஹாப்ஸ் பர்கினரையே அழிக்கப் புறப்பட்டது. அதற்கு அனுசரணையாக ஃபிராட்டஸ்டென்ட் நாடுகளான ஹாலந்து, ஜெர்மனி, ஸ்காண்டிநேவியா (Scandinavia) ஆகியவை இருந்தன. ஃபிரான்ஸ் தன்னுள் இருந்த சமயப் பூசல்களைப் புதைத்துவிட்டுப் புதியதோர் யுகத்தில் புது நடைபோட்டது. அச் சமயம் போலியான ஸ்பானியப் பேரரசு தன்னுடைய வாரிசு உரிமைச் சிக்கல், பொருளாதாரப் பிற்போக்கு நிலை, குற்றங்கள் ஆகியவற்றின் விளைவாக வீழ்ச்சியுற்றது.

கத்தோலிக்க நாடுகளிடையே காணப்பெறும் போட்டி காரணமாக அவைகள் ஒன்றாக இணைந்து தாக்கும் இடரிலிருந்து தப்பிய இங்கிலாந்து, தனக்கென்றே ஒரு சமய இணக்கத்தைச் செய்துகொண்டது. இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் இணையும் வாய்ப்பினை இறுதியில் ஏற்படுத்தித் தந்த ஸ்காட்டிஷ் பிராட்டஸ்டென்டுகளின் கூட்டுறவு இக் காலத்தில்தான் தோன்றியது.

அயர்லாந்தில் கத்தோலிக்கரின் புறக் காவல் நிலையம் அழிந்தது. இங்கிலாந்தின் புதுப்பொருள் புவியெங்கிலும் பரவிப் போரிற்கு அடித்தளம் அமைத்தது. அதே சமயத்தில் உள்நாட்டில் நடுத்தர முதலாளித்துவச் சமுதாயம் உருவாகியது. ஆதிக்கப் பாதையில் அடியெடுத்து வைத்த வணிகரும், வழக்கறிஞரும், நாட்டுப்புறச் சீமான்களும் பாராளுமன்றத்தை ஐக்கியத்தின் அரணாகவும், அதிகாரத்தின் இருப்பிடமாகவும் ஆக்கினர். இறுதியாக, ஐரோப்பாவின் புதிய கல்வியைத் தன்னகத்தேகொண்டு, சிறிது காலத்திற்கு ஆன்மீகச் சமநிலை பெற்றபிறகு, ஆங்கில எண்ண எழுச்சிகளும் இலக்கியமும் குறையற்ற நிறைவை நாடிச் சென்றன. தேசிய அரசுகளின் புது யுகத்தின் நெருக்கடிகள் காரணமாக ஐந்து மில்லியன் மக்களைக்கொண்ட ஆங்கிலச் சமுதாயம் பிளவுபட்டிருந்தது. ஆயினும், இப் பிளவுகளோ, ஸ்டுவர்டு அரசர்களின் (Stuart) பிழைகளோ நெடுங்காலமாக இருந்துவரும் முன்னேற்றத்தைத் தடைசெய்யமுடியவில்லை. சமயச் சீர்திருத்தம், மறுமலர்ச்சி, தொடர்ந்து வரும் தல ஆட்சி, தேடி வந்த பொருள் ஆகியவற்றோடு கத்தோலிக்க எட்டாம் ஹென்றியும், பிராட்டஸ்டென்ட் காமன்ஸ் சபையினரும் (House of Commons) இக்கால இங்கிலாந்தை உருவாக்கினர். ட்ரேக் (Drake), ஷேக்ஸ் பியர் (Shakespeare), ஹூக்கர் (Hooker), பேகன் (Bacon), ஜான் சன் (Jonson), மில்டன் (Milton), சிசில்கள் (Cecils), பிம் (Pym), கிராம்வெல் (Cromwell) ஆகியோர் இக்காலத்தை அணி செய்தனர்.

புரட்சி, பெரு நன்மையை அளித்தது. எலிசபெத் ராணியார் தாம் ஆட்சிபுரிந்த 45 ஆண்டுகளில் 40 ஆண்டு களுக்கு வில்லியம் செசில் (William Cecil) என்னும் அமைச் சரையே இறுதிப் புகலிடமாக நம்பியிருந்தார். முதலில் அவர் களால், அரசியல் குழப்ப நிலைக்குப் பலியாகாமல் தப்பிய ரசல்கள் (Russells), அருண்டேல் (Arundel), வின்செஸ்டர் (Winchester) போன்றோரைப் புறக்கணிக்கமுடியவில்லை. அதே சமயத்தில் இராணியார் முதலிலிருந்து கடைசிவரை தம்மைக் காதலித்த வர்களை அரசியல் ஆதரவாளராகக் கொண்டிருந்தார். ராபர்ட் டட்லி (Robert Dudley) யின்மீது கொண்ட காதலால், அவரை மணந்துகொண்டுவிடுவாரோ என்று ராணியாரின் தலைசிறந்த பணியாளர்கள் பேரச்சம் கொண்டிருந்தனர். அவர் கெடுமதி படைத்த நார்த்தம்பர்லாந்து பிரபுவின் மகனாவார். ஆற்றல் குறைந்தவராக இருந்தபோதிலும் தம் தந்தையாரைப்போலவே தன்னலம் மிக்கவர். பழங்குடிப் பிரபுக்கள் அவரைப் 'போக்கிரி' (gypsey) என்று அழைத்தனர். இறுதியில் ராணியாரின் பகுத் தறிவு பாசத்தை வென்றது என்றாலும், அவருடைய பற்றுறுதி முழு

வதையும் ராபர்ட் இழந்துவிடவில்லை. டட்லி, எப்போதும் மனவுறுதி தளர்ந்தவராக இருந்தார். அதே சமயத்தில் அவருடைய மனைவியாராகிய அமி ராப்சார்ட் (Amy Robsart) என்பவரின் மர்ம மறைவு அவரது பெயருக்குக் களங்கம் ஏற்படுத்தியது. அதைப் போலவே அவருடைய மனைவியின் முதல் கணவருடைய மகனுகிய எஸ்ஸக்ஸ் (Essex) என்பாரும், இராணியாரின் ஆட்சியின் இறுதியில் தம்முடைய குற்றங்களால் தம்மையே அழித்துக் கொண்டார். இத்தகையோரும், ராலே (Raleigh) என்பவரின் தன்முனைப்பான கவர்ச்சியும் இருந்தபோதிலும், தங்களுடைய புடமிட்ட சேவைகள்மூலமாகச் செசில்கள் (Cecils) ராணியார் மீது ஓரளவு செல்வாக்கு செலுத்தினர். அதைப் போலவே ராணியார் தம்முடைய பொலீன் (Boleyn) குடும்பத்தைச் சார்ந்த நோல்லிகள் (Knollys), வால்சிங்காம் (Walsingham), காரேக்கள் (Careys), மில்ட்மே (Mildmay) ஆகியோரைச் சார்ந்திருந்தார்.

ராணியாரும் அவரது முதன் மந்திரியும் வலிமைமிக்க ஜோடியாயினர். ராணியாரிடம் தமது தந்தையாரின் வேந்தருக்குரிய வேகமும் மனநிலையும் காணப்பெற்றன. இக் குணங்களினுல் ஒருமுறை அரச அவையைச் சார்ந்த ஒருவரின் முகத்தில் பீர் மதுவைக் கொட்டினுர். சில சமயங்களில் அவரிடம் பணிசெய்ய மறுத்து மணவாழ்வை நாடிய அரச தாதியைச் சிறையிலிட்டார். ஆனுல், இதே குணங்கள் ஆற்றல் மிகுத்தோரையும் அச்சுறுத்தி அடக்கவும், காமன்ஸ் சபையினரைக் கட்டுப்படுத்தவும், நாட்டு மக்களை ஊக்குவிக்கவும் உதவின. பெண் என்ற முறையில் தம்மிடம் இருக்கும் நலன்களைத் திறமையோடு அரசியல் காரியங்களுக்குப் பயன்படுத்திக்கொண்டார். அஸ்சாம் (Ascham) என்பவரிடம் கிரேக்க மொழி கற்ற அவர், பல்கலைக் கழகங்களில் லத்தீன் மொழியில் உரைகள் ஆற்றவும், அன்னிய நாட்டுத் தூதருடன் அவர்கள் மொழியிலே அளவளாவும் திறனும் பெற்றிருந்தார். மறுமலர்ச்சிக் காலத்து முரட்டுத்தனமான இத்தாலிய மக்களின் அறிவுணர்ச்சி அவரிடம் காணப்பட்டது. அதனுேடு புகழ் தேடிக் கொள்வதிலும், அண்ணுந்து பார்க்கும் அப்பாவி மக்களிடையே மேம்பாடு அடைவதிலும், அணிகலன்களிலும், அளவிறந்த ஆடைகளிலும் வெளிப்படையான ஆனந்தம் கொண்டார். அவருடைய பண்பியல்புகளால் அரசவை ஒழுக்க நெறியில் நின்றது என்று கூற முடியாவிட்டாலும், அடக்கமுடையதாகவும், வீறு கொண்டதாகவும், அச்சுறுத்துவதாகவும் இருந்தது. அவருடைய பழைமைப் பற்றும் கத்தோலிக்க மனமும் தீவிர பிராட்டஸ்டென்டுகளை ஐயுறுமாறு செய்தன. அவருடைய அயல்நாட்டுக் கொள்கை, சமயங்களின்மீது கொண்ட ஆர்வத்தினுல் பாதிக்கப்

பெறவில்லை. அவை ஆங்கிலிகன் திருச்சபையை உருவாக்கும் உயர் தகுதியை ஏற்படுத்தின. ஏழாம் ஹென்றியை மிஞ்சிய பேரவா, மணமாகா மங்கையின் தயக்கம், ஐயுறும் மனம் ஆகியவற்றினைக் கொண்டு ஆபத்து வருங்காலத்தில் தானே பொறுப்பேற்றதனல் அவருடைய அமைச்சர்கள் அதிக பிழைகள் செய்தாரில்லை. பல்லாண்டுகளாக வளர்ந்துவந்த புகழ் காரணமாக அவர் 'கட்டிய பாவாடையோடு நாட்டைவிட்டு வெளியேற்றினலும் கிறிஸ்துவ உலகின் எப் பகுதியிலும் தம்மால் வாழமுடியும்' என்று பெருமை பேசினர். இதனை மக்கள் போற்றி ஏற்றுக்கொண்டனர். தாம் ஒரு சாதாரண ஆங்கிலேயர் என்று கூறிய அவரிடம் மக்கள் அன்பு பாராட்டினர். 'உங்களுடைய அன்பினல் ஆட்சிபுரிந்தேன்' என்று அரசியார் பெருமைபடக் கூறியதை மக்கள் மெய்ப்பித்தனர்.

செசில், ராணியாரின் தான்தோன்றித்தனத்திற்கு மாறாகக் கடமை, கடும் உழைப்பு, நடுநிலைமை ஆகியவற்றைக் கொண்டிருந்தார். தம்முடைய வகுப்பாரைப்போல மூன்று பகுதிகளின் அரசாங்கச் சமயங்களுக்குப் பணிந்தாலும், தம்முடைய குடும்பத் தொடர்புகள் பிராட்டஸ்டென்டினருடன் இருந்தாலும், அவர் சமயப் பூசல்களைக் குறைக்கப் பாடுபட்டார். அக் கால நிலையில் ஊழல் அற்றவராக இருந்தார். தம்முடைய பண்ணைகளைப் பராமரிப்பது போலவே, நாட்டுப் பொருளாதாரத்தைப் பொறுப்போடு நடத்திச் சென்றார். தமது தொழிலில் சூழ்ச்சித்திறத்தைப் பயன்படுத்தினர் என்றாலும், அவர் 'அடிப்படையில் அடக்கமும், அன்பும் நிறைந்தவராக விளங்கினர். அரச அவையினரையும் பகட்டான ஆடைகளையும் வெறுத்துவந்தார். பழமொழிகளையும் மேற்கோள்களையும் மிகுதியாகப் பயன்படுத்தினர். விரைவாக முடிவெடுக்க வொண்ணாத மந்த மதியினராக இருந்தபோதிலும், அவரது நேர் நிலையான பண்புகள் போற்றுதற்குரியன. டியூடர், ஸ்டூவர்ட் முடியாட்சிகளில் அவரைவிட அரசியல் சட்டத்திற்குக் கட்டுப்பட வேண்டும் எனும் மனம்படைத்த மந்திரி யாரும் இல்லை. நீதிபதிகளின் ஆலோசனையைக் கேட்பதிலும், பாராளுமன்றத்தின் சட்ட முறையான அதிகாரங்களை ஒப்புக்கொள்வதிலும் அவரை விஞ்சியவர் யாரும் இல்லை. சமய குருமாரின் ஆதிக்கத்தை வெறுத்ததாலும், பொருளாதார முன்னேற்றத்தில் தணியாத ஆர்வம் காட்டியதாலும் மக்களால் மேலும் மதிக்கப்பெற்றார். அவர் தம் பொருள் பெருக்க ஆர்வத்தைத் தனிப்பட்ட முறையில் அவர் செய்த முதலீடுகள் மெய்ப்பிக்கின்றன. அவரிடம் பழைமை மனப்பான்மை இருந்தபோதிலும், பிற அமைச்சர்களைப் போலவே தொழில் நலன்களின் நெருக்கத்திற்குப் பணிந்தபோதிலும், நாட்டு வளத்தைப்பெருக்க உண்மையாக உழைத்தார். அதனல், போரின்

புன்மையையும், முடிவுறுத் தன்மையையும் உணர்ந்த அவர் அமைதியையே நாடினர்.

அரசாங்கத்தில் அதிக பங்குபெற்ற மூன்றுமவர், செசிலினல் நியமிக்கப்பெற்ற புதிய ஆர்ச்பிஷப்பான மாத்யூ பார்க்கர் (Matthew Parker) ஆவார். கேம்பிரிட்ஜ் (Cambridge) பல்கலைக் கழகப் படைப்பாகிய அவர், பொலீன்களின் (Boleyns) கட்சிக்காரர். அறிவும், பழைமைப் பற்றும் மிக்க அரசியல் அறிஞர். அவர் தாம் பதினேழு ஆண்டுகள் கான்டர்பரியில் பதவி வகித்து வந்த காலத்தில் ராணியாரோடும் செசிலோடும் இணைந்து ஆங்கிலிகன் திருச்சபைக்கு உரமூட்டினர். கத்தோலிக்கச் சமயத்திற்கும், கால்வினிசத்திற்கும் இடையே வலிமைமிக்க திருச்சபையை உருவாக்குவதில் அவருக்கு உரிய பங்கு ஒன்று உண்டு.

எலிசபெத் ராணியின் ஆட்சியில், தொல்லைகளும் சிக்கல்களும் தொடர்ந்து வந்தன என்றாலும், 1569–72 ஆண்டுகளில் தோன்றிய நெருக்கடி, ராணியாரும் செசிலும் எவற்றிற்காக அரும்பாடுபட்டார்களோ அவற்றையெல்லாம் அநேகமாக அழித்து விடும்போல் இருந்தது. முந்திய ஆண்டுகளை ஆட்சியின் முதற்படியாக எடுத்துக்கொண்டால், இக் காலப்பகுதி அவசரமான ஒன்றோடொன்று பிணைந்திருந்த பிரச்சினைகள் நிறைந்த பெருஞ்சிக்கல் காலமாகத் தோன்றுகின்றது. ராணியார் மணம்புரிந்து, மக்களை ஈன்று எடுக்காவிடில் அரச உரிமை, பாதி பிரஞ்சுக்காரரும் கத்தோலிக்கச் சமயத்தவருமான ஸ்காட்டிய மேரி ராணியாரைச் (Mary Queen of Scots) சாரும் அல்லது ஜேன் கிரே (Jane Grey) சீமாட்டியின் சகோதரியான காதரைன்போன்ற பிராட்டஸ்டென்ட் உரிமையாளருக்குக் கிடைக்கவேண்டும். இத்தகைய விளைவு எதுவும் ஆங்கிலிகத் திருச்சபையை நிச்சயமாகப் பாதிக்கும். அதே சமயத்தில் அது திருச்சபையினல் பாதிக்கப்படும். நாட்டைப் பிளவு செய்வதோடு, ராணியார் தேர்ந்தெடுக்கவேண்டிய நட்பு நாடுகளையும் நிர்ணயிக்கும். ஆயின், ராணியாரின் வாரிசுரிமைக் கொள்கை காமன்ஸ் சபையில் கிடைக்கும் ஓட்டுகளின் எண்ணிக்கைக்கு ஏற்றவாறு மாறியது. பிரான்ஸில் கத்தோலிக்கருக்கும் ஹியூக்நோக்களுக்குமிடையேயும், ஸ்காட்லாந்தில் மேரிக்கும் பிராட்டஸ்டென்டுகளுக்குமிடையேயும் நிலவிய சக்திச் சமநிலை, டச்சுக் கலகம், துருக்கியப்போர் போன்ற நெடுந்தொலைவிலுள்ள நிகழ்ச்சிகளும் ராணியாரின் கொள்கையைப் பாதித்தன. அவ்வப்போது அரசியாரின் வாரிசுரிமைக் கொள்கை மாறியதற்கு அரண்மனைத் திருக்கோயிலில் மேலும் சில மெழுகுவத்திகளை வைத்தல், ஸ்காட்லாந்தின் எல்லைக்குச் (Scottish Border) சில துருப்புகளை அனுப்புதல்,

அல்லது டிவோன் (Devon) கொள்ளைக் கப்பல்களைக் கடலில் செலுத்துதல் ஆகியவை அறிகுறிகளாக அமைந்தன.

இத்தகைய பன்னாட்டுச் சிக்கலான சூழ்நிலையில் ஒருசில நிலையான கூறுகள் ஒளிவிட்டன. 1555ஆம் ஆண்டு ஆக்ஸ்பர்க் (Augsburg) சமயச் சமாதானத்தோடு தொடங்கிய புதிய யுகம் ஐந்தாம் சார்லஸ் இறந்ததால் முடிவுற்றது. அவர் விட்டுச்சென்ற உயில் (will) ஆஸ்திரியப் பேரரசைக் கூறுபோட்டது. அவரது மகனாகிய ஸ்பெயின் நாட்டு அரசர் ஃபிலிப், நெதர்லாந்தையும் இத்தாலியையும் பெற்றார். அவரது சகோதரர், ஜெர்மனியையும் ஆஸ்திரியப் பகுதிகளையும் அடைந்தார். இங்ஙனம் கத்தோலிக்கச் சமயத்தில் பற்றுகொண்டதும், ஃபிரான்ஸைச் சுற்றி இருந்ததுமான பகுதிகள் ஃபிலிப்பிடம் இருந்தன. அதே சமயத்தில் 'லூதரானிஸம்' (Lutheranism) அரசாங்கத்தினால் ஏற்றுக்கொள்ளப்பெற்ற சமயமாக விளங்கிய ஜெர்மனியில் ஆஸ்திரியக் குலம் ஆட்சி செலுத்தியது. அங்கிருந்து அக் குலத்தோர் தங்கள் நலன்களைப் பெருக்க, போலந்தையும் பால்கன் நாடுகளையும் எதிர் நோக்கி இருந்தனர். இத்தாலியைப் பெறுவதற்காக அறுபது ஆண்டுகள் நிகழ்ந்த போரில் ஃபிரான்ஸ் தோல்வியுற்றது. அந்நிலையில் ஃபிரான்ஸ், பெல்ஜியம் ரைன் பகுதி ஆகியவற்றில் முன்னேறி ஹாப்ஸ்பர்க்கினர் தன்னைச் சூழ்ந்துகொள்வதை எப்படியாகிலும் தடைசெய்யவேண்டி இருந்தது. ஆனால், இத்தாலியப் போர்களும் சமயச் சீர்திருத்தமும் ஃபிரான்ஸில் பெரும் புயலைக் கிளப்பின. இறுதியில் வந்த ஆற்றலற்ற வெலோய்ஸ் (Valois) அரசர்களால் அப் புயலைச் சமாளிக்க முடியவில்லை. இரண்டாம் ஹென்றி 1559ஆம் ஆண்டு விளையாட்டுப் போட்டியில் கொல்லப்பட்டார். அவருடைய விதவையாகிய மனைவி காதரைன் டி மெடிசி (Catharine de Medici) என்பவர் எலிசபெத் இராணியாரைக்காட்டிலும் அரசியல் ஆசைகள் மிகுந்தவர். அவர் தமது மகனுடைய பட்டத்தைக் காப்பதற்காக எல்லாச் சமயங்களையும், கட்சிகளையும் பயன்படுத்திக்கொள்ளத் தவறவில்லை.

எந்தக் கட்சியை ஃபிரான்ஸ் ஆதரிக்கின்றதோ அதைப் பெரிதும் பொறுத்து இருந்தது ஆங்கிலக் கொள்கை. அதைப் போலவே ஸ்பெயினின் பிரிட்டிஷ் நோக்கும். ஸ்காட்லாந்தில் சக்திச் சமநிலையும் ஃபிரெஞ்சுக் கொள்கையைப்பொறுத்து இருந்தது. ஆனால், இந்த ஃபிரான்ஸில் தோன்றிய சமயப் போர்களின் முடிவு யூக்நோக்கள், டச்சு, ஜெர்மானியப் பிராட்டஸ்டென்டுகளோடு கொள்ளும் உறவு நிலையையும், கத்தோலிக்க மக்களின் ஆதரவைப்

பெறுவதற்கு அவர்களிடமிருந்த திறமையையும் பொறுத்து இருந்தது. மற்றொரு முக்கியமான சூழ்நிலையும் உருவாகிக் கொண்டிருந்தது. வல்லரசுகள் கடல்கடந்த நாடுகளில் முன்னேறின. இத்தகைய அயல் நாடுகளில் ஆதிக்கப்பெருக்கம் சமயப் பகையில் சிக்கியது. 1570-1580 ஆம் ஆண்டுகளுக் கிடையில் பல தோல்விகளுக்குப் பிறகு, இறுதியாக ஆங்கில வெல் திறப் புரட்சி ஒன்று ஏற்பட்டது. மேலே குறிப்பிடப்பெற்ற காரணங்கள் ஒன்றாக இணைந்து டியூடர்களின் இங்கிலாந்திற்கும் ஸ்பெயினுக்குமிடையே இருந்த நட்புறவினைக் குலைத்தன. அதற்கு மாறாக, இங்கிலாந்திற்கும் ஃபிரான்ஸிற்கும் இடையே ஒப்பந்தம் ஏற்பட்டது. இவ்வொப்பந்தம் குழப்பமேதுமின்றி நூறு ஆண்டு களுக்கு நீடித்தது.

ஸ்பெயினுக்கும் ஃபிரான்ஸிற்குமிடையே இருந்த பகைமை, எலிசபெத் ராணியாரையும் செசிலையும், 1559-60 ஆம் ஆண்டு களுக்கிடையே சில முக்கிய முடிவுகள் எடுக்குமாறு செய்தது. அமைதியே அதனுடைய இன்றியமையாத நன்மையாக நிலவியது. மேலும், சடாவ் காம்ப்ரிஸிஸ் (Cateau Cambresis) உடன்படிக் கையின்படி, தாம் கலே நகரத்தை ஒப்படைக்க வேண்டியிருந்த போதிலும், ஹாப்ஸ்பர்கினர் எலிசபெத் ராணியாருக்கும் ஃபிரான்ஸிற்குமிடையே நின்றனர். அவர்கள், ரோமிலிருந்து வந்த சமயவிலக்கு ஆணையை (excommunication) வழிமறித்துப் பறித்தனர். ஃபிலிப், தம்மை மணந்துகொள்ள வேண்டுமென்று அனுப்பிய கோரிக்கையை எலிசபெத் ராணியார் நிராகரித்தார். இராணியார் அவ்வாறு செய்யாதிருந்தால் அவர்தம் முடிக்கே ஆபத்து வந்திருக்கும். ஃபிலிப்பின் தூதர்கள் அவரிடம் சென்று எலிசபெத் ராணியார் 'பிசாசின் மகள்' என்றும், செசிலைச் 'சாப மிடப்பெற்ற சமய வைரி' என்றும் இழிவுபடுத்திக் கூறிய போதிலும், இவற்றையெல்லாம் ராணியார் பொறுத்துக் கொள்ளவேண்டியிருந்தது. ஏனெனில், 1559 ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல் ஸ்காட்லாந்தின் மேரி ராணியாரும் அவரது கணவர் இரண்டாம் ஃபிரான்ஸிஸ் (Francis) என்பவரும் ஃபிரான்ஸின் ஆட்சிபீடத்தில் அமர்ந்தனர். மேரியின் உறவினர் களாகிய கைஸ்கள் (Guises) படைத் தலைமைபெற்று இருந்தனர். ஃபிரான்ஸ், இங்கிலாந்து, ஸ்காட்லாந்து ஆகிய மூன்று நாடுகளும் ஒரு குடையின்கீழ் வருவதைக்காட்டிலும் இங்கிலாந்தும் ஸ்காட் லாந்தும் எதிர்ச் சமய நாடுகளாக இருப்பது மேல் என்று ஃபிலிப் எண்ணினார். இங்ஙனம் இங்கிலாந்து திருச்சபையை அமைக்கவும், பிராட்டஸ்டென்ட் ஸ்காட்லாந்தை உருவாக்கவும் எலிசபெத் ராணியாரால் முடிந்தது.

தமது திருக்கோயிலில் ஹோஸ்ட் (Host) உயர்த்தினதற்காக பிஷப்பைக் கடிந்துகொள்ளுதல், சொற்பொழிவு மேடையைத் திருத்தி அமைத்தல்போன்ற பல சிறு அறிகுறிகள் ராணியார் தமது தந்தையாரின் வழியைப் பின்பற்றுவார் என்பதை வெளிப்படுத்தின. ஆனல், இடையில் இருவரது ஆட்சி வந்த காரணத்தினல் ஹென்றியின் விட்டுக்கொடுத்து ஒப்பந்தம் செய்து கொள்ளும் திட்டம் நிறைவேறுவதற்கில்லை. 1559ஆம் ஆண்டு கூடிய காமன்ஸ் சபையில் பெரும்பான்மையினர் (பாதிக்கு மேற்பட்டவர் மேரி ராணியார் காலத்தும் அமர்ந்தவர் எனினும்) ஆறும் எட்வர்டின் தொழுகை நூலை வற்புறுத்தினர். நாடுகடத்தப் பெற்றுத் திரும்பிவந்தவர்களின் குழு ஒன்று, சமயச் சீர்திருத்தம் மேலும் முன்னேறிச் செல்லவேண்டுமென்று கவுன்சிலை வற்புறுத்தியது. அதே சமயத்தில் மறுபுறம் குருமார் திருக்கூட்டத்தினரும், பிஷப்புகளும் பிடிவாதமான கத்தோலிக்கராக இருந்தனர்.

மூன்று மாதங்களுக்கு விவாதம் தொடர்ந்து நடந்தது. பிரபுக்கள் சபைக்கும் காமன்ஸ் சபைக்குமிடையே முட்டுநிலை தோன்றியது. அதன்பிறகே திருச்சபை நிர்ணயம் செய்யப் பெற்றது. இது தீவிர சீர்திருத்தவாதிகளுக்குப் பெருத்த ஏமாற்றமாக இருந்தது. அது காமன்ஸ் சபையினுடையதைக் காட்டிலும் இராணியாரின் எண்ணத்தையே நிறைவேற்றுவதாக இருந்தது. மேலும், அது சமயக் குறிக்கோளைக்காட்டிலும் அரசியல் சார்ந்ததாக அமைந்தது. அஃது அரசாங்கத்தின் நிர்ணயமாக இருந்தது. ஏனெனில், குருமார் திருக்கூட்டம் புறக்கணிக்கப்பட்டது. பிஷப்புகள் அத்துணைபேரும் அதற்கு எதிராக ஓட்டளித்தனர். எனினும் அது பழைமையைச் சார்ந்ததாகவே இருந்தது. மேரியின் சட்டத்தை ரத்துசெய்து ஹென்றியினுடையதைத் திரும்பக் கொண்டுவரும் வகையில் புதிய ஆதிக்கச் சட்டம் (Act of Supremacy) நிறைவேற்றப்பட்டது. அதில் இராணியார் தனி ஆதிக்கத் தலைவர் (Supreme Head) என்னும் தீவிரமான பட்டம் சேர்க்கப்பெறவில்லை. குருமார், அதிகாரிகள், பல்கலைக் கழகப் பட்டதாரிகள் ஆகியோர், சமய வழக்குகளிலும் லௌகிக வழக்குகளிலும் ராணியாரே தலைமை உரிமை உடையவர் என்று உறுதிமொழி எடுத்துக்கொள்ளவேண்டும். அரசியார் சில ஆணையாளரை நியமிக்கவேண்டும். அவர்கள் புறச்சமயங்களுக்கு அளிக்கும் இலக்கணம், திருமறையாலும் முதல் நான்கு திருச்சபைக் கூட்டங்களாலும்[1] வரையறுக்கப்பெற்றதாக இருக்கவேண்டும்.

[1] அதாவது கி.பி. 325-451ஆம் ஆண்டுகளில் நிகேயா (Nicaea), கான்ஸ்டான்டிநோபிள் (Constontinople), இபிசஸ் (Ephesus), சால்சிடன் (Chalcedon) ஆகிய இடங்களில் கூடியவை.

அல்லது குருமார் திருக்கூட்டத்தின் அனுமதியோடு பாராளு மன்றத்தினால் நிர்ணயிக்கப்பெற்று இருக்கவேண்டும். ஒருமைச் சட்டம் (Act of Uniformity) மூன்று ஓட்டுகள் வித்தியாசத்தில் பிரபுக்கள் சபையில் நிறைவேறியது. அது லௌகீகர்களைப் பாரிஷ் கோயிலுக்குச் செல்லவேண்டுமென்று வற்புறுத்தியது. 1552ஆம் ஆண்டின் தொழுகை நூலை அடிப்படையாகக்கொண்ட போதிலும் சில குறிப்பிடத்தக்க மாறுதல்களை ஏற்படுத்தியது. வழிபாட்டுப் பாசுரத்தில் (Litany) ரோமினுடைய வெறுக்கத்தக்க குற்றங்களுக்கு எதிராக உள்ள துணைவாசகங்களை நீக்கியது. இறைவழிபாட்டில் மண்டி இடுவதை விளக்கும் தலைப்பு (rubric) கைவிடப்பட்டது. உண்மை உருத்தோற்றக் கோட்பாட்டினை அறிந்துகொள்ள உதவும் வாக்கியத்தினை முதல் தொழுகை நூலிலிருந்து மீட்டுக்கொணர்ந்தது. ஆறும் எட்வர்ட் ஆட்சியின் இரண்டாம் ஆண்டில் வழக்கில் இருந்ததைப்போல குருமார் பதவி யேற்கும்போது பெறவேண்டிய உடைகளில் 'கால்வரை நீண்டுள்ள அங்கியும் (albs), மேல் அங்கியும் (copes)' சேர்க்கப்படுதல் வேண்டும். 1559ஆம் ஆண்டிற்குமுன் வெளியிடப்பெற்ற ஆணை களின்படி 'பலிபீடம் இருந்த இடத்தில்' புனித மேஜையை வைக்க வேண்டுமென்றும், திருவிருந்து வழிபாட்டின்போது அதைத் திருக் கோயிலின் கிழக்குப் பகுதி (chancel) அறைக்குக் கொண்டுசெல்ல வேண்டும் என்றும், யேசுவின் பெயருக்கு மதிப்புத் தருதல் வேண்டும் என்றும், பிஷப்புகளின் அனுமதியும் அமைதிக்காவல ருடைய அனுமதியும் இன்றி குருமார் மணம்புரிந்துகொள்ளக் கூடாது என்றும் உத்தரவிடப்பட்டது.

இவ்வாறு விட்டுக்கொடுத்து ஒப்பந்தம் செய்துகொண்டது கத்தோலிக்க குருமாருக்குத் திருப்தி அளிக்கவில்லை. மேரி இராணியாரின்காலத்து பிஷப்புகளில் ஒருவரைத் தவிர மற்றை யோர் பதவியிலிருந்து நீக்கப்பெற்றனர். அவர்களோடு 200 பாரிஷ் குருமார்களும் பதவி இழந்தனர். அடுத்த பத்து ஆண்டு களில் அவர்களது எண்ணிக்கை அநேகமாக ஆயிரத்திற்கும் மேற்பட்டது. சீர்திருத்தவாதிகளுக்கும் அது மனநிறைவைத் தரவில்லை. நாடு கடத்தப்பெற்றவர்கள் குருமாரின் உடை வழங்கும் சடங்கு 'அமோரைட்டுகளின் நினைவுச் சின்னங்கள்' (Relics of the Amorites) என எண்ணிப் புலம்பினர்; குழப்ப நிலைக்காக வருந்தினர். பண்டைக்காலக் கிறித்துவர் பிஷப்புகளை ஏற்றுக் கொண்டனரா என்னும் ஐயப்பாடு தோன்றியது. நாடுகடத்தப் பட்டவர்கள் தங்களுடைய அன்னியநாட்டு ஆலோசகர்களைக் கலந்த பிறகே பிஷப் பதவிகளை ஏற்றுக்கொண்டனர். எனினும், இந்தத் திருச்சபை நிர்ணயத்தினால் இங்கிலாந்தில் அமைதி

நிலவியது. அஃது ஐரோப்பாவில் தலைநிமிர்ந்து நிற்க முடிந்தது. ஐரோப்பிய நாடுகளின் அரசியல் தூதுவர்களிடம் எலிசபெத் ராணியார் தம்முடைய திருச்சபை ஆக்ஸ்பர்க் சமாதானத்தின் போது ஏற்றுக்கொள்ளப்பெற்ற திருச்சபையிலிருந்து அதிகம் மாறுபடவில்லை என்று வாதிட்டார். ஆயினும் கடுந்தண்டனைகள் கத்தோலிக்கரை வாட்டின. உதாரணமாக ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் கல்லூரிகளின் தலைவர்கள் பதினறுபேர் பதவியைத் துறக்கவேண்டியதாயிற்று. புதிய தொழுகை நூல் ஆண்டவனின் அருள்வாக்கு எனக் கூறும் அறிக்கையில் கையெழுத்துதிடுமாறு வற்புறுத்தப் பெற்றனர். 1563ஆம் ஆண்டில் குருமார் திருக்கூட்டம் முப்பத்தொன்பது கட்டளைகளை ஏற்றுக்கொண்டது. அதே சமயத்தில் ஃபாக்ஸ் (Foxe) எழுதிய 'மார்டயர்ஸ்' (Martyrs) எனும் நூல் எவ்வளவு தொல்லைகளுக்குப்பின் அவர்களது சமயம் தோன்றியது என்பதை மக்களுக்கு நினைவுறுத்தியது. எனினும், திருச்சபை அமைப்பு மிகக் கடினமான ஒன்ருகும். இச் சட்டங்களை நடைமுறைக்குக் கொண்டுவரும் பணி மாஜிஸ்டிரேட்டுகளுடையதாகும். வடபகுதிகளில் அவர்கள் அரை கத்தோலிக்கர்களாக இருந்தனர். பார்டர் (Border) குடும்பத்தினர் தங்களுடைய பாரிஷ்களை அரசப் பிரதிநிதிகளை வரவேற்கச் சொல்லவில்லை. பதவியிலிருந்து தள்ளப்பெற்ற குருமார்களுக்காகக் கோலாகலமான வரவேற்புகளும் ஒளிவிளக்கு ஊர்வலங்களும் நடைபெற்றன.

1563ஆம் ஆண்டுச் சட்டமொன்று சமயச் சட்டங்களின் செய்முறைகளை இறுக்கமாக்கியது. காமன்ஸ் சபை உறுப்பினர்களும் ஆசிரியர்களும் ஆதிக்க உறுதிமொழி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தப்பெற்றனர். இராணியார் தமது பிஷப்புகளையும் விட்டுவைக்கவில்லை. அவர்களுடைய நிலைமையும் கடினமாகியது. இராணியாருடைய திருக்கோயிலில் கையாளப் பெற்றசடங்குகள் பிராட்டஸ்டென்டுகளின் மனத்தைப் புண்படுத்துவனவாக இருந்தன. இராணியார் மணமான குருமார்களை வெறுத்தொதுக்கினர். அவர்களைத் தலைகோயிலின் எல்லையைவிட்டே விரட்டினர். சமய குருவிற்கான அங்கியை அணியத் தவறிய நார்ஃபோக்கைச் சார்ந்த ஊர்சமய குருமார்களிடம் வெறுப்பைக் காட்டினர். பிஷப்புகளிடமிருந்து நல்ல பண்ணைகளைப் பெற்றுக் கொண்டு, அவற்றிற்கு ஈடாகச் சொற்பமான அரச மானியங்களை அளித்துத் திருச்சபையைக் கொள்ளையிட்டார். இதன் காரணமாகத் திருச்சபையின் அடிப்படைப் பிரச்சினை மேலும் சிக்கல் மிகுந்ததாயிற்று. இருபது ஆண்டுகளாக நடந்த கொள்ளை, புரட்சி ஆகியவற்றின் விளைவாகத் திருச்சபையில் வறுமையும் கட்டுப்

பாடற்ற நிலேயும் தலைதூக்கின. வெறுமையான மானியங்களும் அறிவற்ற குருமார்களும் இவற்றிற்குச் சான்ருக இருந்தனர். குருமார்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருந்ததால் அவர்களே விட ஒன்றும் அறியாதவராயிருந்த சமயம் சாரா வாசகர்களை அவர்களோடு சேர்க்கவேண்டியதாயிற்று.

இவ்வாறு போராடிக்கொண்டிருந்த திருச்சபை அமைப்பு, கத்தோலிக்கச் சமயத்திற்கு எதிரான அணைச் சுவராக இருந்தது. இத்தகைய சமய நிர்ணயத்தை ஸ்காட்லாந்திலும் அமைக்க எலிசபெத் ராணியார் உதவிபுரிந்தார். ஃபிரெஞ்சு ஆதிக்கத்திலும் கைஸைச் (Guise) சார்ந்த மேரியின் காப்பாளர் ஆட்சியிலும் நெளிந்த சில செல்வந்தர்கள் பிராட்டஸ்டென்ட் சமயத்தைச் சார்ந்தனர். 1559ஆம் ஆண்டில் திருக்கூட்டப் பிரபுக்கள் (Lords of Congregation) தங்களுடைய சமயத்தைக் காத்துக்கொள்ள எழுந்தனர். 1559ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ஜான் நாக்ஸ் (John Knox) என்பவர் ஸ்காட்லாந்திற்குத் திரும்பினர். மே மாதத்தில் பெர்த் என்னுமிடத்தில் புரட்சி தோன்றியது. மடங்களில் உள்ள திருக்கோயில்கள் தீக்கிரையாயின; கோடரிகொண்டு சிதைக்கப் பெற்றன. திருக்கூட்டம் (Congregation) எலிசபெத் இராணியாரின் உதவியை நாடியது. அவர் அப்போது தான் செய்துகொண்ட உடன்படிக்கையைக் கைவிட்டு, கத்தோலிக்க ஐரோப்பாவோடு போர்தொடுக்கத் துணிவாரா என்ற கேள்வி எழுந்தது. இருப்பினும், அவர் அவ்வாறு செய்யவில்லையென்ருல், ஜூலை மாதத்தில் ஃபிரெஞ்சு அரசியாக வந்து துணிகரமாக இங்கிலாந்து அரசப்படைகளுக்கு இடமளித்த ஸ்காட்லாந்தின் புதிய ராணியாரான மேரி, தம்முடைய நாட்டையும் இங்கிலாந்தின் வட பகுதியையும் கத்தோலிக்கமயமாக்குவார் எனும் அச்சம் இருந்தது. அருண்டேலும் பழைமையை விரும்பிய ஆலோசகர் சிலரும், ராணியாருக்கும் ஆஸ்திரிய ஆர்ச்டியூக் சார்லசுக்கும் மணமுடித்துவைக்க முயன்றகாலை, செசில், தீவிரமாகவும் இராணியார் தயக்கத்திற்குப் பின்னும் ஸ்காட்லாந்தில் செயல்படத் தீர்மானித்தனர். முதலில் திருக்கூட்டத்தினருக்கு மறைமுகமாக நன்கொடைகளை வழங்கினர். அதன் பிறகு ஃபிரெஞ்சுக்காரர் ஸ்காட்லாந்தின் உதவிக்காக வந்திறங்குவதைத் தடுக்கும் பொறுப்பினை ஏற்பதற்காக அட்மிரல் விண்டர் (Admiral Winter) என்பவரை அனுப்பினர். இறுதியில் ஸ்காட்லாந்தினர் தனித்து நின்று போர்புரியும் திறனற்று இருந்தனர் என்பதறிந்து ஒரு படையினை 1560ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் ஏவினர். அவர்கள் இத்தகைய செயலில் ஒவ்வொரு படியையும் நிறுத்தி

நிதானமாக அறிவுகொண்டு அளந்தே மேற்கொண்டனர். ஃபிலிப்பிற்கு எதிராக நெதர்லாந்துகளில் (Netherlands) கலகக்காரர் இருந்ததையும், அவர் ட்ரிபோலி (Tripoli) என்னுமிடத்தில் தோல்வியுற்றதையும் உணர்ந்திருந்தனர். அதே சமயத்தில் ஃபிரான்ஸில் யூக்நோக்களைக் கலகம் விளைக்குமாறு தூண்டினர். வீராங்கனையான கைஸைச் சார்ந்த மேரி ஜூன் மாதத்தில் மறைந்தார். ஜூலை மாதத்தில் ஆங்கிலப் படையினரும் ஸ்காட்லாந்துப் புரட்சியாளரும் உடன்படிக்கை செய்துகொண்டனர். அதன்படி ஃபிரெஞ்சுப் படைகள் துரத்தப்பெறுதல் வேண்டும். மேரி இராணியார் ஆங்கில அரசப்படைகளைப் பயன்படுத்துவதை நிறுத்திவிட வேண்டும். அதே சமயத்தில் ஸ்காட்டிஷ் பாராளுமன்றம் பிராட்டஸ்டென்ட் சமயக் கோட்பாட்டு அறிவிப்பினை (Protestant confession) வரைந்தது. இச் சூழ்நிலையில் எலிசபெத் ராணியார் டிரென்ட் திருச்சபைக் கூட்டத்திற்கு வருமாறு போப்பாண்டவர் விடுத்த அழைப்பினை மறுத்ததில் வியப்பதற்கொன்றுமில்லை. இராணியார், மேலும், மரியன் (Marian) பிஷப்புகள் சிலரை டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பினர்.

போர்களிடையே அமைதிக்காலக் கலைகளைப் புறக்கணிக்காதது எலிசபெத் இராணியாரின் அரசாங்கத்தின் சிறப்பியல்பாகும். அதனோடு அரசாங்கத்தினர் அக் கலைகளின் அடிப்படைகளோடு ஈடுபாடு கொள்வது தங்களது கடமை என எண்ணினர். முதலில் நிதித்துறையை எடுத்துக்கொள்வோம். இராணியாரின் உள்துறைச் செயலாளர்களில் ஒருவர் நல்ல அரசாங்கத்திற்கான பண்புப் பட்டியலைச் சுருக்கமாக விளக்கினர். 'சமாதானமும் அமைதியும் நிலைபெறவேண்டுமென்றும், அரசாங்கத்தின் நிதியினை எடுத்தல் தகாது என்றும், பாராளுமன்றங்கள் கூடாது' என்றும் குறிப்பிட்டார். இவைகள் இராணியார் பொருளாதார ரீதியில் போரை வெறுத்தது நியாயம் என்று வலியுறுத்துகின்றன. வரிவிதிப்புகளை நெருக்கடி காலத்திற்கென்று ஒதுக்கிவைக்கவேண்டுமென்ற கருத்தும் இருந்தது. அதே சமயத்தில் டியூடரின் அனுபவத்திலிருந்து எவ்வாறு அரசியலில் செல்வாக்குபெற்ற வகுப்பினர் வரிகொடாது விலகினர் என்பது தெரியவந்தது. எலிசபெத்தின் ஆட்சித் தொடக்கத்தில் பொது வருமானம் 2,00,000 பவுன்களாக இருந்தது. அவரது ஆட்சியின் முடிவில் 3,00,000 பவுன்களாக உயர்ந்தது. ஆட்சி முழுவதிலும் பாராளுமன்றம் வழங்கிய மானியங்கள் சராசரியில் ஆண்டொன்றுக்கு 80,000 பவுன்களுக்குமேல் செல்லவில்லை. மேரி இராணியார் மிகுதியான கடன் சுமையை விட்டுச்சென்றார். படைக்கலச்சாலைகள் காலியாக இருந்தன. வாணிபம் சீர்குலைந்திருந்தது. அதனோடு அச்சமயம்

ஏற்பட்ட ஸ்காட்லாந்து படையெடுப்பு ஓராண்டு வருமானம் முழுவதையும் விழுங்கியது. செலவினங்களைக் குறைப்பதும், கேடு பயக்கும் கும்பலை அழிப்பதும் செசிலின் மனத்தைவிட்டகலாத நினைவுகளாயின. அவருடைய ஆரம்பகால குறிப்புகளில் 'செய்ய வேண்டுவன எவை' என்பதில், இராணியாருடைய செவிலியரின் உணவுப் படிகளைக் குறைக்கும் திட்டமும் அடங்கி இருந்தது.

1543ஆம் ஆண்டிலிருந்து வெளியிடப்பெற்ற கெட்ட நாணயங்களைத் திரும்பப்பெற்றுக்கொண்டு, புதிய வெள்ளி நாணயங்களை இலாபத்தோடு வெளியிடும் பெரும்பணியை 1561ஆம் ஆண்டில் செய்து முடித்தார். தாமஸ் கிரஷாம் (Thomas Gresham) என்பவரின் துணையோடும் காலந்தவறாது கடன்களைத் திருப்பித் தருவதன் மூலமாகவும் கடன் செலவுகளைக் குறைத்தார். சிறிது காலத்திற்குள் கடன்கள் எல்லாம் இலண்டனிலேயே திரட்டப்பெற்றன; வெளிநாடுகளிலிருந்து அன்று.

பொதுச் செலவினைக் குறைத்தபிறகு, செசில், இரண்டாவது இன்றியமையாத வேலையாகிய படைக்கலப் பெருக்கத்தில் ஈடுபட்டார். தம்முடைய நாடு வெடி மருந்துகளுக்கும், கனிப்பொருள்களுக்கும் (metals), நாவாய்த் தளவாடங்களுக்கும் பிற நாடுகளிடம் கையேந்தி நிற்கும் நிலையை மாற்ற உறுதிபூண்டார். செம்பு, துத்தநாகம் ஆகிய கனிப்பொருள்களை வெட்டியெடுக்கவும் தீவிர திட்டங்களை வகுத்தார். மேலும், பித்தளைத் (brass) தொழிலையும், மெண்டிப்ஸில் (Mendips) புதிதாகத் தோடங்கிய தாமிரச் (zinc) சுரங்கங்களையும் உயர்நிலைக்குக் கொணர்ந்தார். கப்பற்படையை மனதில்கொண்டு காட்டுமரங்களை அழிப்பதைத் தடைச்செய்யும் சட்டமொன்றைக் கொண்டுவந்தார். சணல் உற்பத்தியைப் பெருக்கினார். கப்பல் கட்டுந் தொழிலுக்கு ஏராளமான நன்கொடைகள் வழங்கினார். துறைமுகங்களைச் செப்பனிடுவதற்காகக் கட்டாயமாகத் தொழிலாளர்களை வேலைக்கமர்த்தினார். மீன்பிடிப்புத் தளங்கள் கடலோடிகளை உருவாக்கும் என்ற எண்ணத்தில், மக்கள் நோன்பு நாட்களில்மட்டும் மீன் உட்கொள்ளாது ஆண்டுமுழுதும் வாரத்திற்கு இருமுறை மீனை உணவாகக்கொள்ளவேண்டுமென்று சட்டம் கொண்டுவந்தார்.

நாவாய்ச் சட்டங்கள், தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டங்கள், கடற்கொள்ளைக் கூட்டத்தினரின் துணைகொண்டு பொருள்களை ஏற்றுமதி செய்தல் ஆகிய வன்முறை வழிகளில் வாணிபத்தைப் பெருக்கமுடியாது என நம்பினார். அதற்கு மாறாக, கட்டுப்பாடற்ற, சுதந்திரம் அளிப்பதன்மூலமாகவும், புதிய அங்காடிகளை நிறுவுவதன்மூலமாகவும், செயலாய்வுகள் நடத்துவதன்மூலமாகவும்

தான் வாணிப வளம் பெருகுமென அறிந்தார். எனவேதான், பிற்காலத்தில் ட்ரேக்கினுடைய (Drake) கடற்கொள்ளைகள், ஸ்பானிய அங்காடியை இழந்ததற்கு ஈடாகாது என வற்புறுத்திக் கூறினர். முதலிலிருந்தே சாக்சன் (Saxon) சுரங்கத் தொழிலாளர்கள், இத்தாலிய, ஃபிளிமிங் (Fleming) நெசவுத் தொழிலாளர்கள் ஆகியோர் இங்கிலாந்தில் வந்து குடியேற ஊக்கமளித்தார். உப்பளத் தொழில், கண்ணாடித் தொழில் போன்றவற்றில் அளித்ததைப்போல் பல தொழில்களில் தனியுரிமைப் பத்திரங்களை வழங்கினர். அவரது கொள்கையின் சிறப்பு எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் சுங்கவரி இருமடங்கானதிலிருந்து தெள்ளிதின் புலப்படுகின்றது.

இந்த அறிவுகொளுத்தும் பழைமை விரும்பியான செசில், பழைமைப்பண்பு மிகுந்த சமுதாயம் ஒன்றினை முறையாகப் பெற்று, அதனைக் காத்துநின்றார். வாணிபச் சமநிலையைக் குறிக்கோளாகக்கொண்டு விதிக்கப்பெற்ற அதிகமான காப்புவரிகளினல் வெட்டுக்கருவிகள், குல்லாய்கள் போன்ற வெளிநாட்டுப் பொருள்கள் அறவே தடைசெய்யப்பெற்றன. நம் நாட்டுக் கம்பளியை ஏற்றுமதி செய்வதும் அடியோடு நிறுத்தப்பட்டது. நகரத்திற்கும் நாட்டுப்புறத்திற்குமிடையேயும், உற்பத்தியாளருக்கும் நுகர்வோருக்குமிடையேயும், வேலைவாங்குவோருக்கும் வேலைசெய்வோருக்குமிடையேயும் சமநிலையைக் காப்பதற்காகப் பலவிதக் கட்டுப்பாடுகளை விதிக்க முயன்றார். 1563 ஆம் ஆண்டு நிறைவேறிய சிறப்புமிக்க தொழிலாளர் சட்டம் (Statue of Labourers) இரண்டு நூற்றாண்டுகளாக ஏற்பட்ட மாறுதல்களைத் தொகுத்து அடுத்துவரும் இரு நூற்றாண்டுகளில் வரப்போகும் தொழில்களின் நிலையை வரையறுத்தது. நீண்ட காலமாகச் சீர்குலைந்துவந்த பரோக்களைக் கைத்தொழில்களுக்குத் தனிச் சலுகைகள் வழங்குவதன்மூலம் புதுப்பித்தது. இலண்டன் நகரத்தில் இருந்த ஏழு ஆண்டுகளுக்குத் தொழிற்பயிற்சி அளிக்கும் பழக்கத்தைப் பொதுவாகக் கட்டாயமாக்கியது. சொந்த வருவாயுமின்றி, தொழில்களில் ஈடுபடாதிருந்த அனைவரையும் நிலங்களில் வேலை செய்யுமாறு கட்டாயப்படுத்தப்பெற வேண்டும் என்று விதித்தது. ஓராண்டிற்குக் குறைந்த தொழில் தேர்வு அனுமதிக்கப்படவில்லை. உறுதிப் பத்திரங்களின்றி ஒருவரும் தங்களுடைய பாரிஷைவிட்டு நீங்குதல் கூடாது. மேலும், இச் சட்டம் பொருள்களின் விலையை நோக்கும்போது ஊதியங்கள் மிகக் குறைவாகும் என்று அறிவித்தது. அமைதிக்காப்பாளர் ஆண்டுதோறும் தலத்தில் ஊதிய நிர்ணயம் செய்யவேண்டுமென்றும் விதித்தது. இந்த நிர்ணயத்திற்கு எதிராக மக்கள்

கவுன்சிலுக்கு முறையிடலாம். செசில் கொண்டுவந்த பிற சட்டங்கள் புதிய நிலைகளுக்கு இணங்க இருந்தன. அதே சமயத்தில் அம் மாறுதல்கள் தவறுனமுறையில் பயன்படுத்துவதைத் தடைசெய்வதாகவும் அமைந்தன. முதலாளிகள் பல தொழிற்பயிற்சி பெறுவோரை வைத்துக்கொள்ளும் உரிமை பெற்றனர். இடைக்கால வட்டிச்சட்டம் மறைந்தது. பத்துச் சத வீதம்வரை வட்டி வாங்கலாமென்றாகியது. ஆனால், தானியத்தின் உள்நாட்டு விலை 10 ஷில்லிங்கிற்கும் அதிகமாகப்போனால் அஃது ஏற்றுமதி செய்யப்பெறுதல் கூடாது. விலைகளை நிர்ணயிக்கவும் அளிப்பினை உயர்த்தவும் கவுன்சில் தலையிட்டது. டிரஸ்ட்டுகளும் (trusts) காப்புறுதிகளும் நிறைந்த யுகத்திற்கேற்றவாறு பொய்க் கையெழுத்துச் சட்டம் திருத்தியமைக்கப்பட்டது. 1563ஆம் ஆண்டு இரவலர் சட்டம் முதன்முறையாகக் கட்டாய வரிவீதம் ஒன்றினை வற்புறுத்தியது.

அரசாங்கத்தின் ஆணை, நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் மூலைமுடுக்குகளிலும் பரவலாக இருந்தது. தாமஸ் கிராம்வெல், ஒருமுறை சமயக் குற்றங்களை விசாரிக்கும் ஆணையாளரை நியமித்ததை முன் நிகழ்வாகக்கொண்டு உயர் ஆணை நீதிமன்றம் (High Commission Court) நிரந்தர அடிப்படையில் நிறுவப்பெற்றது. வடக்குக் கவுன்சில் உடனடியாகச் செயல்படுத்தும் அதிகாரங்களுடன் திருத்தி அமைக்கப்பட்டது. எல்லைப்புறப் பகுதிகளை ஆளும் பொறுப்பினைத் தலப் பிரமுகர்களான பரசிக்கள் (Percies), டேகர்கள் (Dacres) ஆகியோரிடமிருந்து எடுத்துவிட்டனர். மற்றுமொருமுறை அயர்லாந்து திருச்சபையை முறையாக ஆங்கிலிகத் திருச்சபை ஆக்கினர். வெல்ஷ் (Welsh) பகுதியில் பைபிளைப் புகுத்தினர். இங்ஙனம் வாரத்தில் மூன்று நாட்களுக்குக் காலை 9 மணி முதல் கவுன்சிலில் அமர்ந்து, செசில், ஒற்றுமையையும் சீர்திருத்தத்தையும் ஒருங்கே கொண்டுவந்தார்.

எனினும், அவருடைய நம்பிக்கைகள் நிலையற்றவையாக இருந்தன. வாரிசு உரிமையோ தனியராக நின்ற எலிசபெத்தின் வாழ்க்கையில் தொக்கிநின்றது. அடுத்துவரும் பத்து ஆண்டுகளில் ஸ்காட்லாந்து மேரி இராணியாரால் நேர்ந்த ஆபத்திற்கு இஃது ஓர் அறிகுறியாக அமைந்தது.

அந்த இடர் எத்துணைக் கடுமையானது என்பது 1561 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்திலேயே வெளிப்பட்டது. பத்தொன்பது வயதில் விதவையாகிய மேரி, ஸ்காட்லாந்து திரும்பினர். அவர் எடின்பரோ உடன்படிக்கையினை ஏற்க மறுத்ததால், இங்கிலாந்தின் பட்டத்து உரிமை என்று இல்லாவிட்டாலும், வாரிசுரிமையைப்

பணயம்வைத்தார். அதே மாதத்தில், சட்டத்தின்மூலமாகவும் தம்முடைய தந்தையாரின் உயிலின்படியும் தமக்குப் பின் பட்டத்திற்கு வருவதாக இருந்த காதரைன் கிரே, காப்பாளர் சாமர்செட் (Somerset) என்பவரின் மகனை இரகசியமாக மணந்துகொண்டதை எலிசபெத் அறிந்து ஆத்திரங்கொண்டு அவர்களிருவரையும் டவர் கோட்டைச் சிறைக்கனுப்பினர். இதற்கிடையில், அமி ராப்சார்ட் (Amy Robsart) என்பவரின் மரணத்தைப்பற்றிய இழிவான பேச்சுக்களும், அவர் லீசெஸ்டரோடு ஆடிய காதல் நாடகமும் அவரது பெயருக்குக் களங்கம் ஏற்படுத்தியபோதிலும், அவரை மணந்துகொள்வதாக வந்த பலரை ஒதுக்கித்தள்ளினர். உதாரணமாக, ஸ்காட்லாந்து பிராட்டஸ்டென்டுகள் விரும்பிய அர்ரன் (Arran), கத்தோலிக்கராகிய ஆர்ச்டியூக் சார்லஸ், காதல் பித்தரான ஸ்வீடன் நாட்டு எரிக் (Eric) ஆகியோரின் கோரிக்கைகளுக்கு இராணியார் இணங்க மறுத்தார்.

செசிலைப்போலவே இங்கிலாந்து, ஸ்காட்லாந்து ஆகிய இருநாடுகளின் ஐக்கியத்தில்தான் அவைகளின் எதிர்காலம் இருந்தது என்று உணர்ந்தவர்கள் ஸ்காட்லாந்திலும் இருந்தனர். அவர்கள் மேரியின் ஒன்றுவிட்ட சகோதரரான மோரே (Moray), லெதிங்டனைச்சார்ந்த (Lethington)மெய்ட்லண்ட (Maitland) ஆகியவர்கள். அவர்கள் மேரி பிராட்டஸ்டென்ட் சமயத்தில் சேருவார் என்ற நம்பிக்கையும் கொண்டிருந்தனர். ஆனால், மேரியோ இங்கிலாந்து வாரிசுரிமையைத் தனக்கென்று உறுதிமொழி அளிக்காதவரை ஓர் அடியும் நகருவதில்லை என்றிருந்தார். அத்தகைய உறுதிமொழி எதையும் எலிசபெத் இராணியார் தர மறுத்துவிட்டார். 'என்னுடைய ஆட்சியின் முடிவை நானே விரும்புவேன் என்று நினைத்துக் கொண்டனரா' என்று வாதித்தார். அதனால் தமது பாராளுமன்றத்தில் தம்முடைய வாரிசை நியமனம் செய்தால் அவரைச்சுற்றிச் சதிகள் எழும் என்று கூறினர். அதற்கு அவருடைய சொந்த அனுபவமே சான்றாக இருந்தது. அவரது தமக்கையாகிய மேரியின் ஆட்சியில் எலிசபெத்தின் விருப்பமின்றியே அவர் சார்பில் சதிகள் நடந்தன. அதனை அவர் மறந்துவிடவில்லை. மேலும், கத்தோலிக்கர் ஒருவரை வாரிசாக அறிவித்தால் இங்கிலாந்து பிளவுபடும் என்பதையும் அறிந்திருந்தார்.

இராணியர் இருவரும் தகுதியான ஒப்பந்தம் ஒன்றினைச் செய்துகொள்ள விழைந்தபோதிலும் சூழ்நிலைகள் பாதகமாக அமைந்திருந்தன. கைஸ்கள் (Guises) 1562 ஆம் ஆண்டில் செய்த படுகொலைகளும், ஃபிரான்சில் தோன்றிய புதிய சண்டைகளும் எலிசபெத் இராணியாரை ஹூக்நோர்க்களுக்கு உதவிசெய்ய ஊக்கு

வித்தன. யூக்நோக்கள், கலே நகரத்தை மீட்டுத் தருவதற்கு ஈடாக ஹாவ்ரே (Havre) என்பவரை எலிசபெத்திடம் ஒப்படைத்தனர். கொள்ளை நோய் காரணமாக ஆங்கிலச் சேனை மெலிந்திருந்த போதிலும், இராணியாரின் கொள்கையை நாட்டுப்பற்று மிகுந்த ஃபிரெஞ்சுக்காரர் ஏற்கமறுத்தபோதிலும், 1563ஆம் ஆண்டு கூடிய பாராளுமன்றம் ஃபிராட்டஸ்டென்ட் சமயவெறி பிடித்தலைந்தது. கவுன்சிலில் வலிமைமிக்க குழு ஒன்று கிரேயின் உரிமையை ஆதரித்தது. அம்மை நோயினால் இறக்கும் தறுவாயில் இருந்த இராணியார் பிழைத்துக்கொண்டது மக்களிடையே மனப் பீதியை உண்டாக்கியது.

ஸ்காட்லாந்தின் மேரி அதுவரையில் இன்பங்களைத் துய்ப்பதிலே காலத்தைக் கடத்தியபோதிலும், தற்போது தீவிர கத்தோலிக்கராக மாறினார். நாக்ஸும் (Knox) அவரது நண்பர்களும் காட்டிய சமயவெறி மேரிக்குப் பேரவமானத்தை உண்டாக்கியது. பிராட்டஸ்டென்ட் இங்கிலாந்தை அடையமுடியும் என்ற நம்பிக்கையை இழந்திருந்தார். வலிமைமிக்க ஒருவரை அவர் மணந்துகொண்டால் எலிசபெத் இராணியாரை அச்சுறுத்துவதாக அமையும். அவர் ஸ்பெயின் நாட்டு ஃபிலிப்பின் மகனாகிய டான் கார்லோஸை (Don Carlos) மணந்துகொள்வது போர்ப்பயமூட்டுவதாகுமென்று எலிசபெத் நினைத்தார். எனவே, தம்முடைய குடிமக்களுள் ஒருவரை மேரி மணந்துகொள்ள வேண்டுமென்றும், இல்லையானால் இங்கிலாந்தின் பட்டத்திற்கு உரிமை அற்றவராவார் என்றும் கூறினார். அதற்காகவேண்டித் தம் அன்பிற்கு உரியவரான லீசெஸ்டரையே மேரிக்கு மணமுடித்துவைக்கத் துணிந்தார். அப்போதும் தம்முடைய திருமணத்தைப்பற்றிய முடிவு ஏற்படும் வரை வாரிசுரிமைபற்றி மேரிக்கு உறுதிமொழி ஏதும் அளிக்க மறுத்தார்.

ஆனால், 1565ஆம் ஆண்டில் மேரி, எலிசபெத் இராணியாரின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், தம்முடைய நெருங்கிய உறவினரான டார்ன்லீ (Darlney) என்பவரை மணந்துகொண்டார். அவரும் ஒரு கத்தோலிக்கரே. அவர் பிராட்டஸ்டென்டாகிய அர்ரனுக்கும், மேரியின் சகோதரரான மோரேவுக்கும் எதிராக ஈடு கொடுக்கக்கூடியவர். ஏழாம் ஹென்றியின் வழித்தோன்றலாகிய அவர் இங்கிலாந்தில் வாழ்ந்த கத்தோலிக்கரின் ஆதரவைப் பெறக்கூடும். இத் திருமணம் எலிசபெத்திற்கு விட்ட அறைகூவலாகும். எனினும், தம்முடைய ஆலோசகர் கருத்திற்கு மாறாக இராணியார் போர்தொடுக்க விரும்பவில்லை. மறுமுறையும் ஆர்ச்டியூக் சார்லஸை மணந்து

கொள்வதைப்பற்றி ஆலோசித்தார். ஓராண்டு காலத்திற்குள் மேரியிடம் கத்தோலிக்க வெறியும், பிராட்டஸ்டென்டுகளைப் பழிவாங்கும் ஆர்வமும் காணப்பெற்றன. தம்முடைய கணவர், மூடர் என்றும் பண்பிழந்தவர் என்றும் கண்டு அவரோடு சண்டையிட்டார். இச் சண்டையின் விளைவாக 1566 ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் மேரியின் இத்தாலியச் செயலாளரான ரிசியோ (Rizzio) என்பவர் டார்ன்லியின் தூண்டுதலினால் கொலை செய்யப்பட்டார். பிரிட்டிஷ் பேராட்சிகள் இச் சதியைப்பற்றி அறிந்திருந்த போதிலும், மோரே அதிகாரத்திற்கு வருவதை வரவேற்ற போதிலும் ஸ்காட்லாந்து இளவரசர் ஜேம்ஸின் பிறப்பினால் (ஜூன் மாதத்தில்) வாரிசுரிமையில் குழப்பம் தோன்றியது. வாரிசு உரிமை காரணமாகக் கட்சிப்பிளவுகள் மேலும் விரிவடைந்தன. ஸ்காட்லாந்தியர் குழந்தையாகிய இளவரசரை இங்கிலாந்தின் இளவரசர் என அறிவித்தனர். இச் செயலைப் போக்கிரித்தனம் என்று ஆங்கிலக் காமன்ஸ் சபை உறுப்பினர் கண்டித்தனர். மேலும், இராணியார் மணம்புரிந்துகொண்டால்தான் மானியம் அளிக்கவேண்டும் என்று விதிக்க முயன்றார். இதற்கிடையில் ஆல்வா (Alva) வின் காட்டுமிராண்டித்தனமான ஒறுத்தல்களின் விளைவாக 30,000 ஃபிளீமிய அகதிகள் இங்கிலாந்திற்கு வந்தனர். மிதவாத பிஷப்பான ஜூவல் (Jewel) என்பவர், இராணியாருக்கு ஆஸ்திரிய இளவரசருக்கும் இடையே பேசப்பட்ட திருமணக்கொள்கை துறத்தலுக்கு ஒப்பாகும் என்று கண்டித்தார். அப்போதும் இராணியாரைத் தாமே மணந்து கொள்ளும் எண்ணத்தைக் கைவிடாத இழிகுணம் படைத்த லீசெஸ்டர், இராணியாரின் திருமண திட்டத்தைக் கவுன்சிலில் முறியடித்தார். அரசவையில் கடும் போராட்டம் எழுந்தது.

இரண்டாந் தடவையாக மேரி தமது உணர்ச்சிக்கு அடிமையாகித் தம்முடைய நலன்களை எலிசபெத்திற்கு அளித்து விட்டார் எனலாம். இங்கிலாந்தின் இராணியாரோ உணர்ச்சியை கொள்கைக்குப்பின் வைத்தார். எடின்பரோ நகரத்திற்கு வெளியே உள்ள கிர்க்-ஓ-ஃபீல்டு (Kirk-o'-Field) என்னுமிடத்தில் டார்ன்லீ தங்கியிருந்த அரண்மனை 1567 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் வெடிமருந்தால் தகர்க்கப்பட்டது. அவருடைய உடல் அவ்வரண்மனைக்கு வெளியே சிதைவுண்டு கிடந்தது. இச் சதியில் ஸ்காட்டிஷ் கவுன்சிலில் இருந்த பலருக்குப் பங்குண்டு. ஆயினும் மேரி, துணிகரமிக்க பாத்வெல் (Bothwell) என்பவர்மீது கொண்ட தணியாத காதலினால், தம் கணவரைக்கொல்லும் சதியில் பெரும் பங்குபெற்றார். தம்முடைய கணவரைக் கொன்றவரையே மேரி மே மாதத்தில் மணந்துகொண்டபோது ஸ்காட்லாந்தில் அவருக்

கெதிராகக் கலகம் தோன்றியது. கிர்க் திருச்சபையினர், படை வீரர், எடின்பர்க் நகரமக்கள் ஆகியோர் அனைவரும் 'பரத்தையை எரிக்கவேண்டு'மென்று கூக்குரலிட்டனர். பாத்வெல் டென்மார்க்கிற்கு ஓடினர். ஸ்காட்லாந்தின் பாராளுமன்றம் மேரியை முடிதுறக்கச்செய்தது. அவருடைய குழந்தையான ஜேம்ஸுக்கு நான்காம் ஜேம்ஸ் என்று பட்டம் சூட்டி, மோரேவைக் காப்பாளராக நியமித்தது. லோச் லெவன் (Loch Leven) என்னுமிடத்தில் ஏறக்குறைய ஓராண்டுகாலம் சிறையிலிருந்த மேரி, 1568ஆம் ஆண்டு மே மாதத்தில் சிறையிலிருந்து தப்பினர். அவருடைய படைகள் லாங்சைடு (Langside) என்னுமிடத்தில் முறியடிக்கப்பெற்றன. தரையில் படுத்துறங்கியும் ஓட்ஸ் கஞ்சியை அருந்தியும், தொண்ணூறு மைல் குதிரை சவாரிசெய்து ஆங்கில எல்லையைக் கடந்தார். உடனே கலகக்காரர்களுக்கு எதிராக முறைப்படி வந்த அரசியாகிய தமக்கு உதவுமாறு எலிசபெத் ராணியாரை வேண்டினர். ராணியார் அவ் வேண்டுதலுக்குச் செவிசாய்த்ததை அறிந்த மோரே கடுஞ் சீற்றமடைந்தார். ராணியாரின் நெருங்கிய ஆலோசகரும் ஆச்சரியத்தில் மூழ்கினர். ஆயின், எலிசபெத், கலகக்காரர்கள் வெற்றியடைவதை விரும்பவில்லை. தீவிரக் கொள்கை ஃபிரான்சின் பொறாமையைத் தூண்டிவிடும் என்று அஞ்சினர். சமாதானம் செய்துவைக்கும் பாகத்தை ஏற்கவேண்டுமென்று விரும்பினர். மேலும், மேரி இங்கிலாந்தில் இருப்பது தமக்கு ஆபத்து என நினைத்தார். ஏனெனில், அவரை மையமாக வைத்து அவருடைய ஆதரவாளர் தமக்கு எதிராகக் கலகம் விளைவிக்கக்கூடும் என அஞ்சினர். மாரிக்காலத்தில் மாநாடுகள் கூடின. மோரே, மேரியின்மீது பல குற்றங்களைச் சாட்டினர். புகழ்மிக்க காஸ்கட் (Casket) கடிதங்களில் மேரி கொலைசெய்தவர் என்றும், கூடா ஒழுக்கம் கொண்டவர் என்றும் குறிப்பாக எழுதினர். அதன்பின் இராணியார் தெளிவான முடிவு எதையும் அளிக்கவில்லை. ஏதாவது ஒரு காரணத்தை வைத்து முன்நிலை மீட்சியை ஏற்படுத்துவதில் பிடிவாதமாக இருந்தார்.

ராணியாரின் உள்ளுணர்வு சரியாகவே இருந்தது. ஏனெனில், மேரி சுதந்திரத்தோடு இருப்பதைக்காட்டிலும் கைதியாக இருந்தது பேராபத்து விளைவிப்பதாகும். அவருடைய கொள்கைகள் நம்பிக்கை இழந்தனவாகவும், சீர்கேடுற்றனவாகவும் இருந்தன. பாத்வெல்லிடம் அவருக்கிருந்த மோகம் தீர்ந்தது. முதலில் மேரியின் ஆங்கிலப் பாதுகாவலராக இருந்த நொல்லிஸ் (Knollys), மேரியிடம் வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையில் 'பழிவாங்கும் பண்பும் தீய ஆர்வமும்' இருந்தன என்று குறிப்பிட்டார். மேரி ஆங்கிலத் திருச்சபையைச் சார்வதுபோல் இருந்த அதே சமயத்தில் இரகசிய

மாக ஸ்பானியரின் உதவியை நாடினர். முடிதுறக்க முடியா தென்றார். இங்கிலாந்தில் அவரிடம் பலர் பரிவுகாட்டினர். அவரை நார்ஃபோக் (Norfolk) கோமகனுருக்கு மணமுடித்துவைக்கும் திட்டம் உருவாகியது. அதே சமயத்தில் அவரை ஸ்காட்லாந்திற்கு அனுப்புவதோ, ஃபிரான்ஸுக்கு நாடுகடத்துவதோ தற்கொலைக்குச் சமமாகும் என்பதைச் செசில் கூட்டத்தினர் வற்புறுத்திக் கூறினர். மேலும், அவருக்குரிய மரியாதையோடு சிறையில் வைப்பதொன்றே நடைபெறக்கூடிய செயல் என்றனர். மேரி, ஐரோப்பிய நாடுகளின் பகைமை, அமைதியின்மை ஆகியவை 1569–72ஆம் ஆண்டு களில் ஒரு நெருக்கடி நிலைமையைத் தோற்றுவித்தன.

பாதுகாப்பு வழியாகச் செசில் பயன்படுத்திய மீச்செலவுப் பாதுகாப்பு, ஸ்பெயினுடனான போரினை அநேகமாக உருவாக்கியது. நெதர்லாந்து கலகக்காரரைத் தூண்டிவிட ஆங்கிலக் கத்தோலிக்க ரோடு ஸ்பானியர் சேர்ந்துசெய்த சூழ்ச்சிகளை முறியடிக்க இங்கிலாந்து முயன்றது. காப்புவரிச் சண்டையின் விளைவாகத் துணிகர வணிகர்கள் (Merchant Adventurers) ஆன்ட்வெர்ப்பை (Antwerp) விட்டு, ஹாம்பர்க்கிற்குச் (Hamburg) சென்றனர். ஆங்கிலத் துறைமுகங்களினால் பயன்பெற்ற கடற்கொள்ளைக் காரர்கள், ஸ்பெயினுக்கும் பெல்ஜியத்திற்குமிடையே உள்ள போக்குவரத்தினைத் துண்டித்தனர். ஸ்பானியச் சமயநீதி மன்றங்கள் (Inquisitions) ஆங்கிலேய வணிகர்களைத் துன்புறுத்தின. 1568ஆம் ஆண்டின் இறுதியில் மெக்ஸிகோ கடற்கரையில் ஹாக்கின்ஸ (Hawkins), ட்ரேக் ஆகியோரின் தலைமையில் இருந்த கடற்படையினை ஸ்பானியக் கப்பற்கூட்டம் ஒன்று நம்பிக்கைக்கேடான முறையில் தாக்கிய செய்தி கிடைத்தது. இதற்கு எதிர்நடவடிக்கையாக ஆங்கிலேயர் ஃபிளாண்டர்ஸில் இருந்த ஸ்பானியத் துருப்புகளுக்காக இத்தாலிய பாங்கர்கள் (banker) கப்பல்களில் அனுப்பிய பெருநிதிக் குவியலைக் கைப்பற்ற எண்ணினர். இலண்டனிலுள்ள ஸ்பானியத் தூதராலயம் மேரிக்கும் செசிலின் எதிரிகளுக்குமிடையே தொடர்பினை ஏற்படுத்தி வைத்தது. இதற்கிடையில் ஃபிரான்சில் மூன்றாவது சமயப் போர் மூண்டது. யூக்நோக்களுக்கு உதவுவதற்காக இங்கிலாந்தி லிருந்து தொண்டர்களும் தளவாடங்களும் அனுப்பப்பெற்றனர்.

செசிலுக்கு எதிராகத் தனிபட்டமுறையில் வெறுப்புக் கொண்டவர்களும் பாதி ஐரோப்பாக்கண்டத்தோடு போர் மூட்டக் கூடியதாகக் காணப்பெற்ற கொள்கையை உள்ளபடியே எதிர்த்த வரும் இருந்தனர். நிலமானியப் பிரபுக்களின் காழ்ப்பும், அரசத் துரோகமும் அவருக்குப் பகையாக வந்தன. வெளிநாடுகளுடன்

சமாதானம், வாரிசுரிமை நிர்ணயம், செசிலின் வீழ்ச்சி ஆகியவற்றை ஒருங்கிணைத்துப் பழைமைப் பண்பாளரான அருண்டேல், சந்தர்ப்பவாதியான லீசெஸ்டர், வடபகுதிக் கத்தோலிக்கர் ஆகியோர்கள் ஒன்று திரண்டனர். அவர்கள் மேரி, பிராட்டஸ்டென்ட் நார்ஃபோக்கை மணந்துகொள்வதை வரவேற்றனர், அவர்களில் பலர் ராணியாரைக் கவிழ்க்கும் திட்டத்தையோ. கத்தோலிக்கச் சமயத்தைப் புகுத்தும் எண்ணத்தையோ கொண்டிருக்கவில்லை என்றாலும், மிகத் தீவிரமான வழிகளைப் பின்பற்றினர். இங்கிலாந்தின் வாணிபத்தைத் தடைசெய்யுமாறு ஸ்பெயினையும் ஃபிரான்ஸையும் வற்புறுத்தினர். செசிலைச் சிறையிலிடுவதற்கான பகுத்தாய்வில் இறங்கினர். மேரிக்கு ஆதரவு தருவதாக உறுதிமொழிக் கடிதங்களை அனுப்பினர். ஆனால், லீசெஸ்டர், ராணியாரைப் பகைத்துக்கொள்ளவில்லை. ஸ்பெயினும் வெளிப்படையாகப் போரில் இறங்குவதில்லை என்று தீர்மானித்தது. அதேசமயத்தில் செசில், தள்ளாடுமிந்த பகைக்கூட்டத்தினைச் சிதைத்தார். எலிசபெத் ராணியார் நார்ஃபோக்கின் திருமணத்திற்கு எதிராக எடுத்த தீர்மானமும், மேரி ஸ்காட்லாந்திற்குத் திரும்புவதை அனுமதிக்கப்போவதில்லை என்ற மோரேயின் தீர்மானமும் இவ்வெதிர்க்கட்சியினை இருந்த இடம் தெரியாமற்செய்தன. ஆதியிலே நாட்டுப்பற்று மிகுந்தவராக இருந்த நார்ஃபோக், தளர்மதியினாலும் சருக்கினாலும் சதிகாரரைச் சார்ந்ததனால், 1569ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் டவர் கோட்டைச் சிறைக்குச் சென்றார். இங்ஙனம் அரசியல் சதி அர்த்தமற்றதாகியது.

ஆனால், அன்னிய நாடுகளாலும், ஆங்கிலேய அரசியல்வாதிகளாலும் பயன்படுத்திக்கொள்ளப்பட்ட கத்தோலிக்கராகிய நார்த்தம்பர்லாந்தின் ஏர்லும் [அவருடைய தந்தையார் அருள் யாத்திரை (Pilgrimage of Grace) யில் கலந்து கொண்டதற்காக மரணதண்டனை அடைந்தார்], வெஸ்ட்மோர்லாந்து ஏர்லும் (Earl of Westmorland), யார்க்ஷயர், போர்டர் ஆகிய பகுதிகளைச் சார்ந்தவர்களும் ராணியாரிடம் மன்னிப்புக் கோர மறுத்தனர். அதே சமயத்தில் அவர்கள் தங்களுடன் இருந்த தீவிரவாதிகளின்மீது கொண்ட செல்வாக்கினை இழந்திருந்தனர். வடபகுதிகள் ஏற்கெனவே ஏழ்மைநிலையில் உள்ளவை. அவைகள் நெதர்லாந்துகளுடன் கொண்ட வாணிபத்தை இழந்ததால் பெரிதும் பாதிக்கப்பட்டன. மேலும், அரசாங்கத்தின் புதிய பழக்கவழக்கங்கள் அப்பகுதி மக்களுக்கு ஆத்திரமூட்டுவதாக இருந்தன. உதாரணமாகச் செல்வந்தர்கள் அரசவைக்குப் போகவேண்டுமென்று எதிர்பாக்கப்பட்டது. வழக்குத்தொடர்ந்தவர்கள் யார்க் நகருக்குச் செல்ல

வேண்டியதாயிற்று. முன்னுளில் வடபகுதி மக்களின் வாழ்க்கை முறையில் இளம் வீரர்கள் பெர்ஸி, டாக்ரி போன்ற குடும்பங்களில் பணிபுரிய முடியும். ஆனுல், அத்தகைய வாழ்க்கை இப்போது மறைந்துவந்தது. எனினும், அவர்கள் பிரபுக்களைப் பின்பற்றிய தோடு பழைய திருச்சபையில் பற்றுறுதி கொண்டவர்களாயும் இருந்தனர். அவர்களிற் சிலருடைய புதல்வர், சமயம் காரணமாக நாடுகடத்தப்பட்டு இருந்தனர். பழக்க வழக்கங்களினுல் ஸ்காட் லாந்தியக் கத்தோலிக்கரோடு பிணைந்திருந்தனர். அதுவரையில் தங்களுடைய மாஜிஸ்டிரேட்டுகள் தப்பிவந்த ஆதிக்க உறுதி மொழியை அளிக்கவேண்டுமென்று அரசாங்கம் காட்டாயப் படுத்தும் என்ற அச்சம் அவர்களிடம் இருந்தது.

இங்நிலையில் நவம்பர் மாதத்தில் கலகம் தோன்றியது. அதில் வட கவுன்சிலைச்சார்ந்த பெர்ஸியும், நெவில்லியும் (Neville), டெம் பெஸ்டும், ஸ்வின்பர்னும் (Swinburne) கலந்துகொண்டனர். அச் சமயத்தில் நடுநிலைமைவகித்த யார்க்ஷயர் செல்வந்தர் ஒவ்வொரு வரும் ஒரு மகனை 'ஐந்து புண்கள்' (Five Wounds) கொடியின் கீழ்ப் போர்புரிய அனுப்பிவைத்தனர். டர்ஹாம் தலைக்கோயிலில் (Durham cathedral) பொதுத் தொழுகையைக் கேட்டனர். பல கிராமப் புல்வெளிகளில் மறைநூல் கொளுத்தப்பெற்றது. கலகக் காரர் மேரியை விடுவிக்கும் நோக்கத்தோடு தெற்கில் செல்பி (Selby) வரை அணிவகுத்துச்சென்றனர். தெற்கிலிருந்த படை களுக்கும் பெர்விக்கில் தங்கி இருந்த படைகளுக்கும் இடையே அகப்பட்டுக்கொண்ட அவர்கள், யார்க் நகரம் மோரேவுடன் ஒத்துழைப்பதைக் கண்டு வேகமாகப் பின்வாங்கினர். ஆனுல், அவர்கள் போர்டர் பகுதிக்கு ஓடுவதற்குள் 1570ஆம் ஆண்டு ஜனவரி மாதம் மோரே கொலைசெய்யப்பட்டார். ஸ்காட்லாந்தியக் கத்தோலிக்கர் வட இங்கிலாந்தியருடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முனைந்தனர். எனினும், அவர்கள் வந்து சேர்வதற்குள் எலிசபெத் ராணியாரின் உறவினரான ஹட்சன் (Hudson) என்பவர் டேக்ரேயை அவருக்குச் சொந்தமான நாவொர்த் (Naworth) என்னும் இடத்தில் முறியடித்தார். இங்ஙனம் ஏறக் குறைய எண்ணூறுபேர் கொல்லப்பட்ட பிறகு புரட்சிக் கலகம் ஓய்ந்தது.

மே மாதத்தில் எலிசபெத் ராணியாரைச் சமயவிலக்கு செய்யும் ஐந்தாம் பயஸ் (Pius V) எனும் போப்பின் ஆணை லண்டன் நகரத்தில் ஒட்டப்பெற்றது. உள்நாட்டுப் போரினுல் ஸ்காட் லாந்து சீர்குலைந்தது. ஸ்பெயினும் பிரான்ஸும் மேரியின் உரிமையை வற்புறுத்தின. மறுபடியும் ராணியாரின் மனம்

மேரியை அழித்துவிடவேண்டுமெனும் செசிலின் கூட்டத்திற்கும், லீசெஸ்டர்-அருண்டேல் கட்சிக்குமிடையே ஊசலாடியது. இங்கிலாந்துடன் நட்புகொண்டிருப்பதாக மேரி அளிக்கும் வாக்குறுதியின் பேரிலும், குழந்தையாகிய ஜேம்ஸை இங்கிலாந்திலேயே வளர்க்க ஒப்படைக்கவேண்டும் என்ற நிபந்தனையின்பேரிலும், மேரியை ஸ்காட்லாந்தின் அரசியாக்கவேண்டுமென்பது ராணியின் சொந்தத் திட்டமாக இருந்தது. ஆனால், இவை இரண்டையுமே ஜேம்ஸின் காப்பாளர் தீவிரமாக எதிர்த்தார். அதே சமயத்தில் மேரி மற்றொரு சதியில் ஈடுபட்டார். லண்டன் நகரத்தில் வாழ்ந்த ஃபிளாரன்ஸைச் சார்ந்த பாங்கரான ரிடால்ஃபியே (Ridolfi) அச் சதியில் மையமாக இருந்தவர். அவர் ரோமிற்கும் மாட்ரிட் நகரத்திற்கும் சதித் திட்டமொன்றை கொண்டு சென்றார். அதன்படி ஸ்பானியப் படையொன்று கலகக்காரரின் உதவிக்கு வரவேண்டும். எலிசபெத் ராணியாரைக் கைது செய்யவேண்டும்; அல்லது கொலை செய்யவேண்டும்; மேரியை நார்ஃபோக்கிற்கு மணமுடித்து வைக்கவேண்டும். நார்ஃபோக், ராணியாரால் தாராள மனத்துடன் நடத்தப்பெற்றபோதிலும் மேரியின் உணர்ச்சிமிகுந்த கடிதங்களினால் கவரப்பெற்றார். இவற்றையெல்லாம் செசில் அறிந்தார். நார்ஃபோக், அரசத் துரோகத்திற்காக உரிமைகளை இழந்தார். எனினும், அவருடைய மரணத்தை ராணியார் ஆறுமாதங்களுக்கு ஒத்திப்போட்டார்.

பிற செய்திகளைப்போல இவ்விடத்திலேயும் சமயப் பிளவுகள் ராணியாரைச் செயல்படச் செய்தன. அந்த ஆண்டில் பியூரிட்டானியரின் செல்வாக்கு மிகுந்திருந்த காமன்ஸ் சபையில், மேரியையும் அவரது வாரிசுகளையும் இங்கிலாந்து அரச உரிமையிலிருந்து விலக்குவதற்குக் கொண்டுவரப்பெற்ற மசோதா ஒன்றை மிகுந்த தொல்லையுடன் தடுத்தார். 1572 ஆம் ஆண்டில் காமன்ஸ் சபையினர் நார்ஃபோக்கின் மரண தண்டனையை நிறைவேற்றுமாறு வற்புறுத்தினர். மேலும், அரசத் துரோகத்திற்காக மேரியின் உரிமைகளை நீக்கவேண்டுமென்று நெருக்கினர். 'கோடரியே அடுத்த எச்சரிக்கை விடுக்கவேண்டும்' என்று ஓர் உறுப்பினர் கூறினார். பியூரிட்டன் சமயத்தைச் சார்ந்த பீட்டர் வென்ட்வொர்த்தோ, மேரியைப் 'பண்பற்ற பரத்தை' என்று தூற்றினார். ஆனால், மேரியின் உரிமைகளைப் பறிக்க வேண்டும்; மேலும் சதிகள் நடவாது இருப்பதற்காக அவளுடைய உயிரைப் பணயமாக வைக்க வேண்டும் என்பதுபோன்ற கடுமையான திட்டங்களையும் எலிசபெத் ராணியார் தள்ளிவிட்டார்.

எனினும், இரண்டு குறிப்பிடத்தக்க நிகழ்வுகள் ராணியாரைப் புதிய பாதையில் கொண்டுசென்றன. ஸ்காட்லாந்தில் மோரே

விற்குப் பிறகு, இரண்டு காப்பாளர் இறந்துவிட்டபோதிலும், 1572ஆம் ஆண்டின் இறுதியில் மோர்டன் (Morton) என்பவருடைய ஆட்சியில் ஸ்காட்லாந்து உறுதியான பிராட்டஸ்டென்ட் நாடாக விளங்கியது. ராணியாரும் மேரியை மீட்கும் எண்ணத்தை அறவே மறந்தார். மேலும், ஃபிரான்ஸும் மேரியைக் கைவிட்டது. அதன் காரணமாக ஃபிரெஞ்சு அரசவையில் எதிர் வினைகள் தோன்றியபோதிலும், ஆகஸ்ட் மாதத்தில் செயின்ட் பர்த்தலமியூ (St. Bartholomew) படுகொலை செய்யப்பெற்று இருந்தபோதிலும், ஃபிரான்ஸிற்கும் இங்கிலாந்திற்கும் நட்புறவு தோன்றும் வகையில் வெல்திறப் புரட்சி உருவாகிவந்தது. ஃபிரெஞ்சு அரசர் வேண்டுமானால் யூக்னோக்களின் தலைவரான கோலிக்னியைக் (Coligny) கொன்றிருக்கலாம். ஆனால், அவர் ஸ்பெயினுக்கெதிராக நெதர்லாந்துகளிலும் இங்கிலாந்திலும் உள்ள பிராட்டஸ்டென்டுகளோடு நட்புறவு கொள்ளும் கொள்கையைப் பின்பற்றவேண்டியது அவசியமாயிற்று. இங்கிலாந்துடன் ஸ்பெயின் கொண்டிருந்த நட்புறவு செல்வாக்கிழந்தது. ஆல்வா, ஆன்ட்வெர்ப்பின் வாணிபத்தை அழித்ததால், அந் நட்புறவால் இங்கிலாந்திற்குப் பயனொன்றும் இல்லை. டச்சுக் கடற் பிச்சைக்காரர்கள் (Dutch sea-beggars) ஃப்ளஷிங்கைக் (Flushing) கைப்பற்றிய பிறகு பல படையெடுப்புகளை மேற்கொண்டனர். அப் படையெடுப்புகளின் அடிப்படையில்தான் ஆரஞ்சு நாட்டின் வில்லியம் ஒற்றுமை உணர் நாடொன்றை உருவாக்கினார்.

அடுத்த சில ஆண்டுகளில் செலவினக் குறைவும், சாக்காடும், பதவியாளர் மாற்றமும் ஓர் இடைவரம்பினைக் குறிப்பதாக இருக்கின்றன. ஸ்காட்லாந்தியர் நார்த்தம்பர்லண்டை ராணியாரிடம் ஒப்படைத்தனர். அவர் நார்ஃபோக்கைத் தொடர்ந்து தூக்குமேடை ஏறினார். எட்டாம் ஹென்றியின் பழைய கவுன்சிலர் ஒவ்வொருவராக இறந்தனர். செசிலின் செல்வாக்கு மிதமிஞ்சி இருந்ததற்கு அடையாளமாக அவர் பெற்ற பர்க்ளீ (Burghley) என்னும் பட்டம் காணப்படுகின்றது. மேலும், பதவி உயர்வுபெற்று கருவூலப் பிரபுவாக மாறினார். அவர் வகித்திருந்த செயலாளர் பதவி சர் தாமஸ் ஸ்மித் (Sir Thomas Smith) என்னும் பிராட்டஸ்டென்டிற்கு அளிக்கப்பெற்றது. மற்றுமொரு செயலாளர் பதவியைப் பீட்டர் வென்ட்வொர்த்தின் மைத்துனரான வால்ஷிங்காம் (Walsingham) என்னும் தீவிர பிராட்டஸ்டென்ட் பெற்றார். 1573ஆம் ஆண்டில் ட்ரேக் முதன்முறையாகப் பசிஃபிக் மாக்கடலில் கண்ணோட்டம் விட்டார். இரண்டாண்டுகளுக்குப் பின் பகுத்தறிவுமிக்க ஆர்ச்பிஷப் பார்க்கர் (Parker) இறந்தவுடன் பியூரிட்டனாகிய கிரிண்டால் (Grindal) அப் பதவியை ஏற்றார். அச்சமயம், ஜெசூட் சமயப் பரப்

பாளர் இங்கிலாந்தில் கத்தோலிக்கச் சமயத்தின் செல்வாக்கை மீட்பதற்காக வந்திறங்கினர். சிறையிலிருந்த மேரிக்கு இங்கிலாந்தில் வலிமைமிக்க கட்சியின் ஆதரவு கிடைக்கவில்லை. அதைப்போலவே அவருக்கும் ஃபிரான்சின் ஆதரவும் ஆண்டுதோறும் குறைந்து கொண்டேவந்தது. எனவே, அவர் சீர்திருத்த மறுப்பியக்கத்தின் தலைமை குருவாகவும், ஸ்பெயினின் கருவியாகவும் விளங்கும் நிலை எய்தினர். மத்தியதரைக் கடலில் திரிந்த கடலோடிகள், ஐரிஷ் தலைவர்கள், மெக்சிகோவில் இருந்த அரசப்பகர ஆட்கள் (Viceroys), ஃபிரெஞ்சுக் கத்தோலிக்கர் ஆகியோரிடமிருந்து வந்த கடிதங்களை அலசிப் பார்த்து, கத்தோலிக்கச் சமயத்தையும், ஸ்பானியப் பேரரசையும் காக்கப் போர் ஒன்றே வழி என ஃபிலிப் தீர்மானிக்கும் வரையில், மேரியும் பெல்ஜியத்தில் நாடு கடத்தப்பெற்று இருந்த ஆங்கிலக் கத்தோலிக்கரும் பொறுத்திருக்கவேண்டியதாயிற்று.

## சமகால நிகழ்ச்சிகள்

*1559* சடாவ் காம்பிரிசிஸ் (Cateau Cambaresis) உடன்படிக்கை.

ரோமில் அட்டவணை தொகுத்தல்.

*1560* வெஸ்ட்மினிஸ்டர் பள்ளித் துவக்கம். காதரைன் டிமெடிசி ஒன்பதாம் சார்லஸின் காப்பாளராதல்.

*1561* ஃபிரான்சில் எல்'ஹோபிடல் என்பார் (L'hopital) சமயப் பொறைக்கான முயற்சிகளைச் செய்தல்.

மர்ச்சன்ட் டெய்லர் (Merchant Taylor) பள்ளித் துவக்கம்.

*1562* அடிமைகளைக் கொண்டுவருவதற்காக ஜான் ஹாக்கின்சின் (John Hawkins) பிரயாணங்கள்.

டிரான்ட் திருச்சபைக்கூட்ட மூன்றும் தொடர்.

*1563* கைஸின் கோமகனான ஃபிரான்சிஸ் என்பவரின் கொலை.

ஃபாக்ஸ் 'மார்டயர்ஸ்' (Book of Martyrs) எனும் நூல் எழுதியது.

*1564* கால்வினின் (Calvin) மறைவு.

கலிலியோ (Galileo), ஷேக்ஸ்பியர், மார்லோ போன்றவர்களின் தோற்றம்.

*1565* ஆரஞ்சு நாட்டு வில்லியமும் எக்மான்ட்டும் இரண்டாம் ஃபிலிப்பை எதிர்த்தல்.

1566-72 ஐந்தாம் பயஸ் போப்பாண்டவர் (Pope Pius V).
ராயல் எக்ஸ்சேஞ்சை (Royal Exchange) கிரெஷாம் தோற்றுவித்தல்.

1567 ஜப்பானில் அரசாங்கம் ஒருமுனைப்படுத்தப்பெறல்.
நெதர்லாந்துகளுக்கு ஆல்வா வருதல்.
ரக்பி (Rugby) பள்ளியின் தோற்றம்.

1568 தோவாய் (Douai) என்னுமிடத்தில் ஆங்கிலக் கத்தோலிக்கக் கல்லூரியின் தோற்றம்.

1569 மெர்க்காடரின் (Mercator) உலக வரைபடம்.
ஜார்னுக் (Jarnac) என்னுமிடத்தில் கோண்டே (Conde) கொல்லப்படுதல்.

1570 ஃபிரான்ஸில் கோலிக்னியின் (Coligne) ஆதிக்கம்.
பல்லாடியோ (Palladio) என்பவர் கட்டடக் கலைபற்றி எழுதுதல்.

1571 லிபான்டோ (Lepanto) சண்டை.

1572 போலந்தில் ஜகல்லன் (Jagellon) அரசகுலம் முடிவடைதல்.
செயின்ட் பார்த்தலோமியூவின் படுகொலை.
ஹாலந்தில் கலகம்.

1573 ட்ரேக் பசிஃபிக் மாக்கடலைப் பார்த்தல்.
துருக்கியர் சைப்ரஸ் (Cyprus) தீவைக் கைப்பற்றுதல்.

# 5. எலிசபெத் ராணியாரின் ஆட்சி : II. 1573 - 1603

எலிசபெத் ராணியாரின் ஆட்சியில் நெருக்கடி நிறைந்து காணப்பெற்ற இறுதி முப்பது ஆண்டுகள், இங்கிலாந்தின் வருங் காலத்தை நிர்ணயிக்கும் வல்லமைபெற்றவையாகும். கொள்கை, சமயம், அரசாங்கம், அதிகாரம் ஆகியவற்றையும் நிர்ணயித்த காலம் இக் காலமேயாகும். இவ்வாறு நிர்ணயிக்கப்பெற்றவை களில் பெரும்பாலானவை ஆங்கிலேயர்களின் கட்டுப்பாட்டிற்கு மீறிய நிகழ்ச்சிகளின் விளைவாகத் தோன்றியவையாகத் தெரி கின்றன. உதாரணமாக, இவைகள், ஹாலந்திற்கும் ஸ்பெயி னுக்கும் இடையே இருந்த பகைமை, ஸ்பானியர் போர்ச்சுகலை வென்றடக்கிய செயல், போப்பாண்டவர்களின் நடவடிக்கைகள், யூக்நோக்களின் வலிப்பெருக்கம் ஆகியவற்றைச் சார்ந்திருந்தன. ஸ்பெயினுடன் நேர்ந்த போர், ஆங்கிலக் கடலாதிக்கத்தின் தோற்றம், ஸ்காட்டிய இராணியாரும் ஆங்கிலக் கத்தோலிக்கரும் செய்த சதிகள், பியூரிட்டன் சமயத்தின் செல்வாக்கு, பாராளு மன்றத்தில் எதிர்க்கட்சியின் தோற்றம், அயர்லாந்துடன் போர் ஆகிய வரலாற்று இழைகளைத் தெள்ளிதின் தேர்வதற்காக இவை களைப் பகுத்துப் பார்த்தல் வேண்டற்பாலதெனினும், அவை யனைத்தும் ஒன்றோடொன்று பின்னிக்கிடப்பவை என்பதை நாம் மறந்துவிடுதல் கூடாது.

வெளிநாட்டு விவகாரங்களில் இரு படிகளைக் காண்கிறோம். ஒன்றில் படைக்கலம்தாங்கி முரண்பட்டு நின்றநிலை. மற்றொன்றில் கடும்போர் நிகழ்ந்தது. இந்த நிலைமாற்றம் 1585ஆம் ஆண்டு ஏற்பட்டது. போரைக்குறித்துக் கவுன்சிலில் பிளவும் தோன்றியது. ஒருவகையில் இராணியாரே அமைதியை நாடிய கட்சியின் தலைவராக விளங்கினார். அவருடைய பொருளாதார அறிவு, போரையும் அதன் காரணமாக வரும் வரிவிதிப்பினையும் வெறுக்கச் செய்தது. அவர் வால்ஷிங்காமின் இரகசியப் பணித்துறைக் காகும் செலவையும், சேனையில் காணப்பெற்ற ஊழல்களையும்

கண்டித்தார். அன்னிய பிராட்டஸ்டென்டுகளுக்குக் கடனுதவி அளித்தபோதெல்லாம் எதிர்த்தார். தள்ளிப்போட்டது தடைப் பட்ட போராகலாம் என்று அவர் நினைத்தாரென்ருல் அதற்குக் காரணங்கள் உண்டு. அவர் தம்முடைய அமைச்சர்களைக் காட்டிலும் அஞ்சாநெஞ்சம் கொண்டவர். தம்மிடமுள்ள கவர்ச்சிக் கலைகளில் நேர்மையான நம்பிக்கைகொண்டிருந்தார். ஸ்பானியத் தூதுவரைத் திருப்தி செய்வதற்காக புாண்டு (Band) வாத்தியக் குழுவினரை 'பெல்ஸ் ஆப் பேவியா' (Bells of Pavia) எனும் பாடலை இசைக்குமாறு செய்தார். அதே சமயத்தில் ட்ரேக் ஸ்பானியக் கப்பல்களைக் கொள்ளையிட்டுக் கொணரும் பொருள்களில் பங்கு பெற்ருர். திருமணம் செய்துகொள்வதில்லை என்று தீர்மானித் திருந்தபோதிலும், பத்து ஆண்டுகளுக்குப் பயனோடு ஃபிரெஞ்சுக் காரருடன் மணம்பற்றி பேசிவந்தார். அவரிடம் உண்மைக் காதல்கொண்டிருந்ததாகக் கூறியவரும் ராணியாரால் 'தவளை' (her frog) என்று குறிப்பிடப்பெற்றவருமான ஆஞ்சு (Anjou)வின் கோமகனோடு காதல் நாடகம் ஆடுவதில் ஒருவகை இன்பம் கண்டார். தமது 'உணர்ச்சி' என்று ராணியாரே குறிப்பிட்ட செசில் அவருடன் செயலாற்றினர். தம்முடைய திருமணத்தில் ராணி யார் காட்டியதைவிட அதிக அக்கறை கொண்டவராகச் செசில் இருந்தபோதிலும், அவருக்கு அமைதியும், அயல்நாட்டு வாணிபமும் முதன்மையாகப்பட்டன. எளிதில் உணர்ச்சிவயப்படுபவரும், நல்லதே நேருமென்று நினைப்பவருமான வால்ஷிங்காம் இவர் களுக்கு எதிராக நின்ருர். ஐரோப்பா, அவருக்குக் கொள்கைகள் மோதும் போர்க்களமாகக் காட்சியளித்தது. 'கிறிஸ்துவும் பேயும் (Belial) இணைந்து வாழமுடியாது' என்றும், 'கடவுள் தம்முடைய கோபத்தை வெளிக்காட்டும் கோலாகப் பயன்படுத்திய செருக்கு மிகுந்த ஸ்பானியருக்கு எதிராகப் பிராட்டஸ்டென்ட் ஐரோப்பாவை ஒன்று திரட்டவேண்டும்' என்றும் குறிப்பிட்டார். லீசெஸ்டர் வழக்கம்போல் அவருடன் சேர்ந்தார், அவர் ராணியாரின் திருமணத் திட்டத்தை எதிர்த்தார் (for auld lang syne). அவர் விரும்பிய செல்வாக்கினைப் பெருக்கிக்கொள்ள பியூட்டரின் சமயத்தைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பினர்.

செயின்ட் பர்த்தலமியூவின் நாளும், போர்க்குணம் மிகுந்த மூன்ரும் ஹென்றி ஃபிரான்சின் முடிமன்னர் ஆனதும், தொழில் நலன்களின் நெருக்கடியும் ஒன்ருக இணைந்து 1574-ல் ஸ்பெயினேடு ஒரு வாணிப ஒப்பந்தம் ஏற்படுவதற்கும், லா ரோச்சல்லியில் (La Rochelle) இருந்த பிராட்டஸ்டென்டுகளுக்கு ஆங்கிலேயர் உதவி கிடைப்பதற்கும் காரணங்களாக அமைந்தன. அப்போது ஃபிரான்சில் நடைபெற்ற சமயப்போர்களில் மந்தநிலைதோன்றியது.

1576ஆம் ஆண்டில் ஆரஞ்சு நாட்டு வில்லியத்தின் தலைமையில் ஏற்பட்ட நெதர்லாந்துகளின் ஐக்கியம் ஐரோப்பிய அரசியலில் பெருத்த மாறுதலை உண்டாக்கியது. ஸ்பானியர் ஃப்ளீமிஷ் கத்தோலிக்கர்களைத் தம்பக்கம் இழுத்துக்கொள்வதன்மூலமாக இந்த ஐக்கியத்தைக் குலைக்கத் திட்டமிட்டனர். இத் திட்டத்தை நிறைவேற்ற முதலில் ஃபிலிப்பின் சகோதரரான, ஆஸ்திரியாவைச் சார்ந்த விரமிக்க டான் ஜான் (Don John) முயன்றார். அவர் இறந்த பிறகு, ஒப்பற்ற போர்வீரராக விளங்கிய பார்மாவின் அலெக்சாந்தர் (Alexander of Parma) இத் திட்டத்தை நிறைவேற்றுவதில் வெற்றி கண்டார். இங்கிலையில் முழு பிராட்டஸ்டென்ட் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று வால்ஷிங்காம் வற்புறுத்திய அதே சமயத்தில், ராணியாரின் திட்டம் பதற்றம் ஏதுமின்றி எச்சரிக்கையுடன் கூடியதாக அமைந்தது. இதன்படி ஸ்பெயினின் மேலாதிக்கத்திற்கு உட்பட்ட மெலிந்த நெதர்லாந்தையே அவர் வரவேற்றார். அதோடு பிராட்டஸ்டென்டுகளுக்குப் பாதுகாப்பு அளிக்கப்படவேண்டுமென்றும் விழைந்தார். ஆங்கில வாணிப வளர்ச்சிக்குப் பேரிடராக இருக்கக்கூடிய ஆரஞ்சு இளவரசரின் போரிடும் உரிமைகளை ஏற்க மறுத்தார்.

எனவே, ஆரஞ்சு இளவரசர் ஃபிரான்சோடு சேர்ந்துவிடுவதாகப் பயமுறுத்தினர். அதனையும் ராணியார் புறக்கணிக்கவே ஆரஞ்சு இளவரசர் தாம் கூறியதைப்போலவே செய்யவும் துணிந்தார். அதனால் பேராபத்து தோன்றுவதாக இருந்தது. ஏனெனில், நெதர்லாந்துகள் ஸ்பானியரின் ஆதிக்கத்தில் இருப்பதைவிட ஃபிரான்சின் ஆதிக்கத்தில் இருப்பது பேராபத்தினை விளைவிப்பதாகும். எனினும், குறைந்த அளவில் இருக்கும் ஃபிரெஞ்சு உதவி சில நன்மைகள் அளிப்பதாக இருந்தது. அது மிதவாதிகளும் யூக்நோக்களும் நம்பி இருந்த ஃபிரெஞ்சுப் பட்டத்திற்கு வரக்கூடியவரான ஆஞ்சுவின் நிலையை உயர்த்தும். ஃபிரான்சுக்கும் ஸ்பெயினுக்குமிடையே போர் மூளலாம். ஆங்கிலேயர் பொருட்செலவின்றி டச்சுக்காரரைக் காக்கலாம். 1578-79ஆம் ஆண்டுகளில் நெதர்லாந்துகளுக்கு வெளியிலும் சில நிகழ்ச்சிகள் ராணியாரை அந் நாட்டு விவகாரங்களில் இரகசியமாகத் தலையிடத் தூண்டின. உதாரணமாக, ஸ்காட்லாந்தில் கத்தோலிக்கச் சமயம் புத்துயிர் பெறுதல், ஸ்பானியர் போர்ச்சுகலின்மீது படையெடுத்துச் செல்லுதல், ஸ்பானிய அமெரிக்கப் பேரரசைத் தாக்கிய ஆங்கிலக் கடலோடிகளுக்கு ஃபிலிப்பின் அச்சுறுத்தல், அயர்லாந்தில் ஸ்பானியத் துருப்புகள் வந்து இறங்குதல் ஆகியவற்றைக் கூறலாம். எனவே, ஃபிரெஞ்சுத் திருமணத்திட்டம் புதுப்பிக்கப் பெற்றது. ராணியாரின் 'தவளை'யெனக் குறிக்கப்பெற்ற ஆரஞ்சு

கோமகன் இருமுறை அவரைக் காண வந்தார். ஆயினும், இறுதியில் சமயம் காரணமாகத் திருமணப்பேச்சு முறிந்தது. மோதிரங்கள், காலுறையைக்கட்டும் நாடாக்கள் போன்ற பரிசுப் பொருள்களைக் கொடுத்து ஆடிய காதல் நாடகத்தின் விளைவாக ஒருசிறு உதவி மானியம் ஃபிரான்சிடமிருந்து கிடைத்தது. ராணியார் ஃபிரெஞ்சுக் காரரை நெதர்லாந்தில் ஊக்குவித்தார். ஆனால், அதேசமயத்தில் சில காப்புகளை ஏற்படுத்திக்கொண்டார். ஃபிரெஞ்சுக்காரர் அதிக வெற்றி அடைந்துவிடுவார்கள் என்று தெரிந்தால் அவர்களுக்கு எதிராகத் தலையிடுவதற்கென்று கால்வினியச் சமயப்பற்று கொண்ட ஜெர்மன் இளவரசர்களுக்கு உதவி மானியம் வழங்கினர். மேலும், ஸ்பெயினோடு சமாதானப் பேச்சுவார்த்தையை முழுதும் முறித்துக்கொள்ளாமலிருந்தார். ஆஞ்சு கோமகனரின் படை களைக்கொண்டும், போர்ச்சுகல் அரசுக்கு உரிமை கொண்டாடிய டான் அன்டோனியோவை (Don Antonio) ட்ரேக்குடன் கடல் வழியாக அனுப்பியும் ஸ்பெயினைக் கைப்பற்ற எண்ணினர். இதனால் செலவு குறைவு என்றாலும் இது சீரிய கொள்கையன்று. மக்களால் பெரிதும் விரும்பப்பட்டதுமன்று. பியூரிட்டன் உறுப் பினரும் எழுத்தாளரும், ராணியாரின் கத்தோலிக்கத் திருமணம் சமயத்தைத் துறப்பதாகும் எனக் கூறினர். இவ்வித எதிர்ப்பிற் காகவே பிரபல வழக்கறிஞரும், பிரஸ்பிடீரிய தலைவராகிய கார்ட் ரைட்டின் (Cartwright) மைத்துனருமாகிய ஜான் ஸ்டப்பி (John Stubbe) என்பவர் தொழுமரத்தில் (pillory) தம் கையினை இழந்தார்.

பர்க்ளீ (Burghley) குறிப்பிட்டதைப்போல ராணியாரின் 'நீடிக்கும் கொள்கையும் பசப்பும்' பல ஆண்டுகளுக்கு வெற்றி யளித்தன. ஏனெனில், ஃபிலிப்பினுடைய கவனம் பிற இடங்களில் இருந்தது. எலிசபெத்தினுடைய கொள்கையும், காதரைன்-டி-மெடிசியின் கொள்கையும் ஒன்றாகவே இருந்தன. மேலும், இக் கொள்கை இங்கிலாந்தில் உள்நாட்டு நிலை உறுதியடையும்வரை போரை ஒத்திப்போடும் வாய்ப்பினை அளித்தது. எனினும், புயலுக்கு அருகே காலவரையறையின்றி கப்பல் செலுத்துதலும், போர், அமைதி ஆகிய இரண்டின் முழு நன்மைகளைத் துய்ப்பதும் முடியாத காரியங்களாகும். இராணியாரின் செலவுச் சிக்கனம் ஸ்காட்லாந்து பிராட்டஸ்டென்ட் தலைவர்களை அநேகமாக அழித்தது. டச்சுக்காரர் கடனைத் திருப்பித் தராதபோது அவர்மீது இராணியார் கடுஞ்சினங் கொண்டார். 1580ஆம் ஆண்டில் போர்ச்சுகலும், அதனுடைய துறைமுகங்களோடு, ஆப்பிரிக்கா, இந்தியா, பிரேசில் (Brazil) ஆகிய பகுதிகளில் இருந்த அதனுடைய குடியேற்றங்களும் ஸ்பெயினுக்குக் கிடைத்தன. 1584ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில்

ஆஞ்சு கோமகன் இறந்தார். அதனல், நவாரே (Navarre) யைச் சார்ந்த ஹென்றி ஃபிரெஞ்சு வாரிசாக வருவதும், உள்நாட்டுப் போர் ஒன்று மூளுவதும் நிச்சயமென்ருயிற்று. அதே மாதத்தில் பேசாத வில்லியம் என்பவர் (William the Silent) கொல்லப்பட்டார். வால்ஷிங்காம் கட்சியினர் விரும்பியதைப் போன்றே, டச்சுக்காரரின் தனியுரிமையை எலிசபெத் இராணியார் ஏற்க மறுத்தார். ஆனல், 1585-ல் பார்மா இளவரசர், ஆன்ட்வெர்ப் நகரைக் கைப்பற்றியது ஆபத்தின் அறிகுறியாக வந்தது. அதே சமயத்தில் ஃபிரெஞ்சுக்காரர், கைஸ்களுடன் வெளிப் படையாகவே இணைந்துகொண்டதன் விளைவாக இந்த இடர் பன்மடங்காகப் பெருகியது. இதன் காரணமாக அடுத்த முப்பது ஆண்டுகளில் தாய்நாடுகளின் அரசியலில் இங்கிலாந்தை இராணியார் அதிகமாக ஆழ்த்தக்கூடிய கொள்கை ஒன்றினைக் கடைப்பிடித்தார். லீசெஸ்டரின் தலைமையில் 6000 படைவீரரை அந் நாடுகளுக்கு அனுப்பினர். அதேசமயத்தில் சில டச்சுத் துறை முகங்கள் போர்ச் செலவிற்கான ஈட்டுறுதியாக இங்கிலாந்திடம் ஒப்படைக்கப்பெற்றன. இதுபோது போர்த்திறமற்ற லீசெஸ்டர் தோல்வியுற்ருரெனினும், இந்த ஆண்டில் செட்பென் (Zutphen) எனுமிடத்தில் நடந்த புகழ்பெற்ற போரில் கொல்லப்பெற்ற ஃபிலிப் சிட்னி (Philip Sydney) இறவாப்புகழ் எய்தினர். மேலும், இப் போர், டச்சுப் போர்முறையில் சில ஒப்பற்ற படைத்தலைவரை ஆக்கித்தந்தது. இதற்கிடையில் ட்ரேக், விகோ (Vigo), கார்டஜீன (Cartagena), ஃப்ளாரிடா (Florida) போன்ற இடங்களைத் தாக்கி அழித்தார். இத்தகைய எளிமையான வெற்றிகளும், அவர் கொண்டுவந்த கொள்ளைப் பொருளான 60,000 பவுன்களும், ஸ்பானியப் பேரரசு எத்துணை தூரம் பாதுகாப்பற்றுக் கிடந்தது என்பதைப் பறைசாற்றின. இச் செயல்கள் அநேகமாக ஆர்மடாப் (Armada) போரைத் தோற்றுவித்து இருக்கும். ஆயின், இவ்வித நெருக்கடிக்குப்பின் பொதுப்படையான காரணங்களையும் விளைவு களையும்கொண்ட நிலையொன்று காணப்பெறுகின்றது.

சமயப்பற்றுறுதிகொண்டவர்கள் இங்கிலாந்து திருச்சபையின் வழிபாட்டிற்குச் செல்லக்கூடாதென்று திருப்பீடம் தடைவிதித்தத னுலும், 1570ஆம் ஆண்டு வெளிவந்த போப்பாணை புரட்சிக் கலகத்தைத் தூண்டியதாலும், கத்தோலிக்கப் பிரச்சினையில் குறிப்பிடத்தக்க மாறுதல் தோன்றியது. இருவகைச் சிக்கல்கள் அங்கே எழுந்தன. ஆங்கிலத் திருச்சபைக்குச் செல்லாத சமயச் சார்பற்றவர்கள், பொதுவாக ஈஸ்டர் திருவிருந்து வழிபாட்டில் கலந்துகொள்ளாதிருப்பதற்காகத் தங்களுடைய இருப்பிடங்களை மாற்றிக்கொண்டனர். அவர்கள் அரசாங்கத்தின் கொள்கை

மாற்றத்திற்கேற்ப நடத்தப்பெற்றார்கள். வடக்கிலிருந்த மாஜிஸ்ட்ரேட்டுகளும், ஜூரிகளும் தங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட இத்தகையோரைத் துன்புறுத்த விரும்பவில்லை. அதே போன்று பண்ணை வீடுகளில் தங்கியிருந்த வயோதிக குருமாருக்குத் தொல்லை தரவும் விரும்பவில்லை. இத்தகையோர் ஒருபுறமிருக்க, மற்றொருபுறத்தில் இருந்தவர்கள் இவர்களினின்றும் மாறுபட்டவர் என்பதோடு ஆபத்தானவர். அவர்கள் ஐரோப்பாக் கண்டத்திலிருந்து வந்த கத்தோலிக்கச் சமயப் பிரபுக் குழுவினர் ஆவர். 1568ஆம் ஆண்டில் வில்லியம் அல்லன் (William Allen) என்பவர், தோவாய் (Douai) என்னுமிடத்தில் சமயக் கல்விச்சாலை ஒன்றை நிறுவினார். பிற்காலத்தில் அது ரீம்ஸ் (Rheims) நகருக்குச் சென்றது. அதன்பிறகு மற்றொரு கல்விச்சாலை ரோம் நகரில் நிறுவப்பெற்றது. 1580ஆம் ஆண்டில் சமயப்பற்று மிகுந்த 100 குருமார் மாறுவேடங்களில் எல்லா ஆறுகளிலும் வந்திறங்கினர். சிலர் நிலக்கரி ஏற்றிச் செல்வதற்காக நியூகாசில் நகருக்கு வந்த ஃபிரெஞ்சுக் கப்பல்களில் வந்திறங்கினர். அதே சமயத்தில் ஆற்றல் மிகுந்த இருவர் ஜெசூட் சமயப் பரப்புக் குழு ஒன்றுடன் வந்தனர். அவர்களில் புனித எட்மண்ட் காம்பியன் (Edmund Campion) ஆன்மாக்களை வெல்லுவதற்காக வந்தார். இராபர்ட் பர்சன்ஸ் (Robert Persons) என்பவரோ அரசியல் சதிகாரர். ராபர்ட், நாடுகடத்தப்பெற்றவர்கள், லோவெய்னில் கூடியிருந்த வடநாட்டு கலகக்காரர், ஸ்காட்லாந்தின் மேரி ராணியார் ஆகியோருடன் தொடர்புகொண்டார். இவற்றிற்கெல்லாம் மேரி இராணியாரே காரணம் என வால்ஷிங்காம் நம்பினார். அடுத்த நூறு ஆண்டுகளுக்கு இங்கிலாந்தில் தொத்திக்கொண்ட திகில் ஒன்று இப்போது தோன்றியது. 1581ஆம் ஆண்டில் காம்பியன் பர்க்ஷயரில் (Berkshire) பிடிப்பட்டுச் சித்திரவதை செய்து கொல்லப்பட்டார். அதே சமயத்தில் பர்சன்ஸினுடைய அச்சகம் எஸ்ஸக்ஸில் கண்டு பிடிக்கப்பெற்றது. அவனும் ஐரோப்பாவிற்கு ஓடிவிட்டான். எலிசபெத் ராணியாரின் ஆட்சி முடிவடைவதற்குள் ஏறக்குறைய 200 கத்தோலிக்கர் கொல்லப்பெற்றனர். மேலும் பலர் சிறையில் வாடினர்.

எனினும், அவர்கள் கத்தோலிக்கராக அழியவில்லை; துரோகிகளாக அழிந்தார்கள் என்று பர்க்ளீ வாதாடியதில் உண்மை இருக்கின்றது. ஏனெனில், எலிசபெத்தின் ஆட்சியின் முதல் இருபது ஆண்டுகளில் அரசாங்கம் அரை டஜன் கத்தோலிக்கருக்குமேல் கொல்லவில்லை. ஆனால், 1571ஆம் ஆண்டு வந்த சட்டம் மிகக் கடுமையானது. அது ராணியாருடைய பட்டத்தை மறுப்பது அரசத் துரோகம் என்றும், மணிகள்,

சிலுவைகள், பிற கத்தோலிக்க அணிகலன்கள் ஆகியவற்றைக் கொண்டுவருவது குற்றம் என்றும் விதித்தது. 1581ஆம் ஆண்டுச் சட்டம் மேலும் கடுமையாக இருந்தது. ஆங்கிலத் திருச்சபையை ஏற்காதவர்கள் கட்டவேண்டிய தண்டம் மாதத்திற்கு 20 பவுனுகை உயர்ந்தது. எனினும், இவ்விரு சட்டங்களும், கத்தோலிக்கரையும் கத்தோலிக்கச் சமயத்தைப் பரப்புவோரையும் தனியாகப் பிரித்து எண்ணி, பிந்தையோருக்கு மரணதண்டனை வழங்கின. ராணியார் மேலும் கத்தோலிக்கரைத் துன்புறுத்த விரும்பாததைக் கவுன்சில் உறுப்பினர் குறை கூறினர். சமய வினைச் சோதனையை ராணியார் தள்ளி விட்டார். எனினும், கத்தோலிக்கர் எப் பக்கமும் இடருற்றனர்; அவர்கள் தண்டங்களின் சுமை தாங்காது நொந்தனர். பலமுறை சிறைப்பட்டனர். ஆயினும், அரசாங்கம் இங்கிலாந்தில் பிறந்த கத்தோலிக்கரையும், வெளி நாடுகளில் பதிவுபெற்ற பிரசாரகர்களையும் வேருக எண்ணி, அதற்கேற்ப நடவடிக்கைகளை எடுப்பதில் உறுதியாக நின்றது.

போப்பாக இருந்த பதின்மூன்றும் கிரிகோரியின் (Gregory XIII) செயலால் கத்தோலிக்கச் சமயத்தையும், அரசத் துரோகத்தையும் பிரித்துப் பார்ப்பது அநேகமாக இயலாத காரியமாகிவிட்டது. அவர் தம் முன்னோர் விடுத்த ஆணையை அப்படியே நிறைவேற்றத் துணிந்தார். 1579ஆம் ஆண்டில் லோவெய்னில் ஆங்கிலக் கல்வித் தலைவராக இருந்த நிக்கோலஸ் சாண்டர்ஸ் (Nicholas Sanders) போப்பின் தூதராக (papal legate) ஸ்பானிய வீரர்களோடு அயர்லாந்தை வந்தடைந்தார். எலிசபெத்தைக் கொல்லுதல் பாபமல்ல என்று போதனைசெய்ய அனுமதிவழங்கினர். ஸ்காட்லாந்தின் வழியாக இங்கிலாந்தின்மீது படையெடுக்கவேண்டுமென்றும், மேரியை விடுவிக்கவேண்டுமென்றும், ஸ்பெயினும் கைஸ்களும் வகுத்த திட்டங்களை ஏற்றுக்கொண்டார். ஐந்தாம் சிக்ஸ்டஸ் (Sixtus V) அல்லனைக் கார்டினலாக நியமித்தார். இங்கிலாந்தின்மீதான படையெடுப்பின் செலவிற்காக நிதியளிப்பதாக வாக்குறுதி தந்தார்.

ஆயினும், ஃபிலிப் செய்த தாமதத்தினுலும், ஸ்காட்லாந்தியரிடையே அடிக்கடி தோன்றிய மாற்றங்களினுலும் இச் சதிகள் பயனற்றுப்போயின. இச் சமயம் கடைசி முறையாக மேரியோடு சமாதானம் செய்துகொள்ளும் சாத்தியக்கூறுகளை எலிசபெத் இராணியார் ஆராய்ந்தார். அதே சமயத்தில் ஸ்காட்லாந்தில் படையைப் பயன்படுத்தவேண்டுமென்ற வால்ஷிங்காமின் திட்டத்தை பர்க்ளீ வன்மையாக எதிர்த்தார். வால்ஷிங்காம்

பேரிடர்ப்பட்டுச் சதிகளைப்பற்றி ஏராளமான செய்திகளைச் சேர்த்தார். அவருடைய ஒற்றர்களில் ஒருவன் பாரிஸ் நகர வீதியில் கொல்லப்பட்டான். பயோன் (Bayonne) நகரத்தில் மற்றொரு ஒற்றனைக் கத்தோலிக்கச் சமயத்தவர் வேடத்தில் வைத்திருந்தார். நாடுகடத்தப்பெற்றவர்களிடையே வெல்ஷ்களுக்கும் ஆங்கிலேயருக்குமிடையில் இருந்த வெறுப்பையும், சமயம் சாராதவருக்கும் ஜெசூட்டுகளுக்குமிடையில் இருந்த வேற்றுமையையும் பயன்படுத்திக்கொண்டு பல செய்திகளைச் சேகரித்தார். ஒவ்வோராண்டும் அவர் நினைத்த காரியத்தை நெருங்கினர். 1582ஆம் ஆண்டில் பல் மருத்துவன் வேடம் புனைந்து வந்த ஸ்பானியப் பேராள் ஒருவனை ஸ்காட்லாந்து எல்லையில் பிடித்துக் கொண்டதால் ஸ்பானியத்திட்டத்தை மேரி அறிவர் என்பது வெளிப்பட்டது. அடுத்த ஆண்டில் அவருடைய ஒற்றரின் உதவியால் ஃபிரெஞ்சுத் தூதராலயத்தில் ஃபிரான்சிஸ் த்ராக்மார்டன் (Francis Throgmorton) என்பவன் பிடிபட்டான். சித்திரவதைக்கு உட்படுத்தப்பெற்ற அவன் ஃபிரெஞ்சுக்காரர் அருண்டேலில் வந்து இறங்குவதாக இருந்த திட்டத்தினை விளக்கமாக வெளியிட்டான். எனவே, ஸ்பானியத் தூதர் நாட்டைவிட்டு வெளியேறுமாறு ஆணை பிறந்தது. 1584-ல் ஆரஞ்சின் (Orange) கொலைக்குப் பிறகு அரசாங்கம் ஸ்காட்லாந்திய ஜெசூட்டாகிய கிரிச்டன் (Crichton) என்பவரைப் பிடித்துக்கொண்டது. அதோடு முந்தைய சதிகளைப் பற்றியும் விரிவாக அறிய முடிந்தது. கவுன்சில் சுற்றறிக்கையாக எண்ணத் தொடர்பு (associaton) ஒன்றைப்பற்றி வெளியிட்டபோது அதில் ஆயிரக்கணக்கானவர் கையொப்பமிட்டனர். அவர்கள் ராணியாரின் உயிருக்கு ஊறுசெய்து அரியணையில் அமர முயல்பவரைப் பழிவாங்குவதாக உறுதிமொழி தந்தனர். 1585ஆம் ஆண்டு பாராளுமன்றம் இவ்வெண்ணத் தொடர்பைச் சட்ட முறையான தாக்கியது. மேலும் ஜெசூட்களும் அவர்தம் குருமாரும் இங்கிலாந்தில் இருக்கத் தடைவிதித்தது. பாரி (Parry) என்னும் உறுப்பினர் எலிசபெத்தைக் கொலைசெய்ய மேரியின் பேராளுடைய ஒப்புதலைப்பெற்றார் என்பது தெரியவந்தது. ஆக இந்த ஆண்டில், சார்ட்லி (Chartley) யில், பாலட் (Paulet) எனும் பியூரிட்டன் காவலரின் வசமிருந்த பாதுகாப்பான சிறைக்கு மேரியைக் கொண்டு சென்றனர்.

1586ஆம் ஆண்டில் மேரி எலிசபெத் விரித்த வலையில் வீழ்ந்தார். அவருடைய ஒன்றுதிரண்ட கடிதங்களெல்லாம் இடைமறிக்கப்பட்டன. இறுதியாக, நாடுகடத்தப்பெற்றவரின் சமயப் பள்ளியில் கல்விகற்ற ஒற்றன் ஒருவனுடைய துணையோடும், கைதிகளுக்கு பீர் அனுப்புவதைக் கடிதங்கள் வரும்வழியாகக் கொண்டும்,

வால்ஷிங்காம், ராணியாரைக் கொலைசெய்யத் தூண்டும் சமய குருவாகிய பாலார்டையும் (Ballard), மேரியின் வேலைக்காரனாகிய பாபிங்டனையும் (Babington) கைது செய்தார். அவர்களுடைய வழக்கு விசாரணையில் மேரி சதியை அறிந்திருந்தார் என்பதும் அவருடைய ஒப்புதல் அதற்குக் கிடைத்தது என்பதும் வெளியாயின. அதன் பிறகு தனி ஆணைக்குழு மேரியைக் குற்றவாளி எனக்கண்டது. பாராளுமன்றத்தின் இரு சபைகளும் அவருக்கு மரணதண்டனை அளிக்குமாறு விண்ணப்பங்களை அனுப்பின. பல மாத காலத்திற்கு ராணியார் செயலற்று நின்றார். மேரியைத் தனிப்பட்ட முறையில் கொலை செய்ய முடியுமா என்பதைப்பற்றிப் பாலட்டிடம் (Paulet) கலந்தார். அதுவே முடிதரித்த அரசியைக் கொல்லுவதற்கு உகந்த வழி என்று சில அன்னிய நாட்டவரும் கருதினர். ஆனால், பாலட் தம்முடைய மனச்சாட்சியை அவ்விதத்தில் சிதைக்க முடியாது என்று கூறிவிட்டார். அதுவே பிராட்டஸ்டென்ட் இங்கிலாந்தின் பதிலாகவும் இருந்தது. இறுதியில் எலிசபெத் மேரியைக் கொல்லும் பற்றாணையில் கையொப்பமிட்டார். அதனைக் கவுன்சில் மறுபரிசீலனை இன்றி அனுப்பியது. 1587 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 8 ஆம் நாள் ஃபோதரிங்கே கோட்டையில் (Fotheringay Castle) மேரியின் தலையைக் கொய்தனர்.

மேரி இறக்கும்போது பிராட்டஸ்டென்ட் குருமாரின் வாயடைக்கும் பொருட்டு துதிப் பாடல்களை உரக்கப் படித்தார். ஆங்கிலேயர், மேரி உயிர் வாழ்வதே இங்கிலாந்திற்கு ஆபத்து எனக் கருதினர். அவர்களிடமிருந்து மேரியை எலிசபெத்தினால் பதினைந்து ஆண்டுகளுக்குத்தான் காக்க முடிந்தது. ராணியார் தம்முடைய பற்றாணையின் பேரில் செயல்பட்டபோதிலும், செயலாளராக இருந்த டேவிட்சனைச் (Davidson) சிறையிலடைத்தார். எனினும், ஸ்காட்லாந்தியரோ ஃபிரெஞ்சுக்காரரோ எதிர்ப்புத் தெரிவிப்பதைத் தவிர வேறொன்றும் செய்யமுடியாது என்பதை நன்குணர்ந்திருந்தார்கள். ஆனால், மேரியின் தலையைத் துணித்து லண்டன் நகர மணிகள் ஒலித்தபோது ஃபிலிப் இங்கிலாந்தின்மீது படையெடுக்கத் தீர்மானித்தார். ஏனெனில், புறச்சமயியான ஆரும் ஜேம்ஸைப் போலத் தமக்கும் இங்கிலாந்து அரசில் உரிமை உண்டு எனக் கூறினர். ஹாலந்தில் ஆங்கிலேயர் அதிக ஆயுதங்களைக் குவித்ததும், கடுமையாக நடந்த ஃபிரெஞ்சுப்போரில் புறச்சமயத்தவரான நவாரே (Navarre) பல வெற்றிகளை அடைந்ததும் அவருடைய ஆத்திரத்தைக் கிளரின. இப்படி வந்த ஆபத்துகளுக்கும் ஆத்திரமூட்டும் செயல்களுக்கும் முத்தாய்ப்பு வைப்பதுபோல் மேரியின் மரணம் வந்தது. இங்கிலாந்தின் கடலாதிக்கம், ஹாலந்திற்கும் ஃபிரான்சுக்கும் படைகளை ஏற்றிச் செல்லவும், வெடி மருந்துகளை

அளித்து உதவவும் பயன்பட்டது. இதனால், தமது நாட்டுக் கலகக்காரர் வாழ்ந்தனர் என்று ஃபிலிப் உணர்ந்தார். அதனோடு ஸ்பெயினின் செய்திப் போக்குவரத்தையும் ஸ்பானிய அமெரிக்காவிலிருந்து வரும் பொருள்களையும் ஆங்கிலக் கடலாதிக்கம் தடை செய்தது என்பதையும் அறிந்தார்.

எலிசபெத் கால இங்கிலாந்துக் கடலோடிகளில் ஒரு சிலரைத் தவிர மற்றையோர் பேரரசைத் தோற்றுவிக்கும் ஊக்கம் கொண்டிருக்கவில்லை. அவர்களுக்கு நிதி அளித்த வாணிபக் குழுக்களும் செல்வம் தேடுவதையும் முதலீடு செய்வதையும் நோக்கமாகக் கொண்டன. எட்டாம் ஹென்றியின் காலத்தில் கானரீகளுக்குப் (Canaries) பேராட்களை அனுப்பி லெவான்டுடன் (Levant) வாணிபம் செய்த பிரிஸ்டல் கூட்டத்தினரைப்போல, கடலோடிகளுக்கு நிதி உதவி அளித்த வாணிபக் குழுக்கள் செல்வம் தேடுவதிலும் முதலீடு செய்வதிலும் குறியாக இருந்தன. ஆயின், கொலம்பஸின் (Columbus) காலத்திலிருந்தும், ஜான் கபாட்டின் (John Cabot) காலத்திலிருந்தும் உலகம் பெரும் மாறுதலை அடைந்திருந்தது. துருக்கிய வெற்றிகள் நிலவழி வாணிபத்தைத் தடை செய்தன. போர்ச்சுகீசியர், இந்தியாவிற்கும் கிழக்கிந்தியத் தீவுகளுக்கும் நன்னம்பிக்கை முனை வழியைக் கண்டுபிடித்து நலனடைந்தனர். 1519–22ஆம் ஆண்டுகளுக்கிடையே கார்டஸ் (Cortez) மெக்சிகோவை வென்றார். மெகல்லன் (Magellan) பசிஃபிக் மாக்கடலில் தென்மேற்கு வழியைக் கண்டுபிடித்தார். அவரது கப்பல் ஒன்று உலகையே வலம்வந்தது. 1532ஆம் ஆண்டில் பிஸாரோ (Pizarro) பெருவைக் (Peru) கைப்பற்றினர். கீழ்நாட்டு வாசனைப் பொருள்கள் போர்ச்சுகலைச் செல்வங் கொழித்த நாடாக்கின. அமெரிக்கப் பொன்னும் வெள்ளியும் ஸ்பெயினில் வந்து குவிந்தன.

எலிசபெத் ஆட்சிக்கு வருவதற்குமுன் பல ஆங்கில நூல்களில் இப் புதிய கண்டுபிடிப்புகள் பகுத்தாயப்பெற்றன. மேலும், புதிய அங்காடிகளைக் காட்டும் வேறு அறிகுறிகளும் தென்பட்டன. உதாரணமாக, துருக்கியருடன் சச்சரவு, ஸ்பானியச் சமய நீதி மன்றங்கள், ஸ்டேபிலும் (Staple) ஹான்சாவும் (Hansa) சீர்குலைதல் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். கடலோடிகளின் முயற்சி இரு திசைகளில் சென்றது. முதல் திட்டத்தினை அனுபவமிகுந்த செபாஸ்டியன் காபட் (Sebastian Cabot) ஆறும் எட்வர்டின் அரசாங்கத்திடம் அளித்தார். அவர் தம்முடைய தந்தையாரோடு ஆசியாவின் அளவிடற்கரிய வளத்திற்கு வழிகாண விழைந்தார். போர்ச்சுகீசியர் கண்டுபிடித்த தென்கிழக்கு வழியைவிட, ஸ்பானியர் கண்ட தென்மேற்கு வழியைவிட, குறுகிய வடக்கு வழியினைக்

கண்டுபிடிக்கப் பல பயணங்கள் மேற்கொண்டிருந்தார். இங்ஙனம் 1552ஆம் ஆண்டில் மஸ்கோவி (Muscovy) நிறுவப்பெற்றது. வடகிழக்கு வழியைக் கண்டுபிடிக்க பிரிஸ்டலின் சான்சலரும், வில்லோபியும் (Willoughby) சிறப்புமிக்க பயணத்தைத் தொடங்கினர். வில்லோபி தம்முடைய கப்பலாட்களுடன் மர்மான் கரையில் (Murman coast) பனிக்குளிரினால் இறந்தார். ஆயினும், சான்சலர் ஆர்க் ஏஞ்சலை (Archangel) அடைந்தார். அவர் ரஷ்ய மன்னர் ஃஸாரினால் மாஸ்கோவில் வரவேற்பளிக்கப்பெற்றார். இருபது ஆண்டுகளாக ஆசியாவிற்குக் கடல்வழி கண்டுபிடிக்க வேண்டுமென்று செய்த முயற்சிகள் வீணாயின என்றாலும், அவருடைய பயணங்களும், 1557-64ஆம் ஆண்டுகளுக்கிடையே அந்தோனி ஜெங்கின்ஸன் (Anthony Jenkinson) என்பவருடைய பயணங்களும், ரஷ்ய அங்காடிகளை அறிவதற்கு வாய்ப்பாக இருந்தன. ஒரு சிறிது காலத்திற்குக் காஸ்பியன், பாரசீகம் ஆகிய இடங்களுக்கும் வாணிபம் பரவுவதற்கு வாய்ப்பளித்தன. இவ் வாணிபத்தில் ஏற்பட்ட இடர்களின் விளைவாக 1580ஆம் ஆண்டில் துருக்கியரோடு உடன்படிக்கை ஏற்பட்டது. மேலும் லெவொன்ட் கம்பெனி தோன்றியது. அதைப்போலவே 1583-91 ஆண்டுகளுக்கிடையில் ரால்ப் ஃபிட்ச் (Ralph Fitch) அலெப்போவிற்குப் (Aleppo) பயணமானார். அங்கிருந்து பாரசீக வளைகுடா, இந்தியா, மலேயா ஆகிய இடங்களுக்கும் சென்றார். இத்தகைய முயற்சிகளின் விளைவாகத் தென்கிழக்கு வழி கண்டுபிடிக்கப்பெறவில்லையென்றாலும் கதேவை (Cathay) அடையப் பயன்பட்டன. ஆங்கிலேயர் கிழக்கில் ஸ்பானியருடன் போட்டியிடத் தொடங்கினர் எனலாம்.

1530ஆம் ஆண்டில் பின்னளில் பிளைமவுத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்ற பாராளுமன்ற உறுப்பினரான வில்லியம் ஹாக்கின்ஸ், புதிய அரசியல் சார்ந்த ஆபத்துகளைக் கொணரும் வாணிபத்தில் ஈடுபடத் தொடங்கினர். போர்ச்சுகீசியரின் வாணிபத் தனியுரிமையை முறிக்கும் வகையில் கயானா கரைக்குச் சீப்பையும் காப்பையும் கொண்டுசென்று, அவற்றிற்குப் பதிலாகத் தந்தத்தையும் நீக்ரோவரையும் கொண்டுவந்தார். பிரேசிலோடும் வாணிபம் செய்யத் தொடங்கினர். லண்டன் நகர வாணிபக் குழு ஒன்று, 1553ஆம் ஆண்டில் கயானாவையும் கோல்டு கோஸ்டையும் ஆராய்வதற்காகக் கப்பல்களை அனுப்பியது. இதன் விளைவாகப் போர்ச்சுகீசியருடன் கடுமையான மோதல் ஏற்பட்டது. 1562-ல் வில்லியம் ஹாக்கின்ஸின் மகன் ஜான் ஹாக்கின்ஸ், தம்முடைய ஸ்பானிய வாணிபத்தின் அனுபவத்தைக்கொண்டு திட்டமொன்றை வகுத்தார். நீக்ரோவரை ஆப்பிரிக்காவிலிருந்து

கொண்டுசென்று, அவர்களை ஆர்வத்தோடு ஏற்றுக்கொள்ளும் ஸ்பானிய மெய்னிலும், மேற்கிந்தியத் தீவுகளிலும் விற்கவேண்டு மென்பது திட்டம். அதன் காரணமாகப் போர் ஒன்றும் நிகழாது என்பது அவருடைய வாதம். ஆனால், ஸ்பெயினிலிருந்து பிறந்த ஆணைகள் எதிர்ப்பைத் தீவிரமாக்கின. 1568 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் மூன்றாவது பயணத்தின்போது, ஹாக்கின்ஸும் ட்ரேக்கும் நம்பிக்கை கேடுறும் முறையில் செயின்ட் ஜான் டி உல்லா (St. Juan de Ullua) என்னுமிடத்தில் தாக்குண்டனர். தங்களுடைய கொடிக் கப்பலையும் 300 கப்பலாட்களையும் இழந்தனர்.

அடுத்த பதினைந்து ஆண்டுகளில் முயற்சிகள் மூன்று எண்ணங்களின் அடிப்படையில் இருந்தன. ஆசியாவிற்கு வடகிழக்கு வழியைக் காணும் முயற்சி பயனற்றுப்போகவே, வடமேற்கு வழியைக் கண்டுபிடிக்கும் எண்ணம் தோன்றியது. ஸ்பெயினுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கவேண்டுமென்றும் அல்லது பாதுகாப்புச் செய்துகொள்ள வேண்டுமென்றும் விருப்பம் ஏற்பட்டது. இறுதியாக, குடியேற்றங்களைத் தோற்றுவிக்கும் எண்ணம் மேலோங்கிநின்றது. ஹம்ப்ரீ கில்பர்ட் (Humphrey Gilbert) என்பவரின் நூல்களினால் ஊக்கம்பெற்று, மைக்கேல் லோக் (Michael Lok) எனும் லண்டன் நகர வணிகர் ஒருவருடைய நிதி உதவிபெற்று, யார்க்ஷயரைச் சார்ந்த கல்வியறிவற்ற ஃப்ரோபிஷர் (Frobisher) 1576–78 ஆம் ஆண்டுகளுக்கிடையில் வடமேற்கில் உள்ள பாஃபின் நாட்டிற்கும் (Baffin's Land) ஹட்சன் நீர்ச் சந்திக்கும் மூன்றுமுறை சென்றுவந்தார். ஆயின், அவர் நிறைய தங்கத்தைக் கண்டுபிடித்தார் என்றும், அதில் பெரும் பகுதி இங்கிலாந்தில் சாலை அமைக்கும் கனிப்பொருளாகப் பயன் படுத்தப்பெற்றது என்ற எண்ணம் அவருடைய கண்டுபிடிப்பு முயற்சிகளுக்கு இடையூறாக இருந்தன. 1585–87 ஆண்டுகளுக்கிடையே ஜான் டேவிஸ் (John Davis) என்பவர் மேற்கொண்ட மூன்று பயணங்கள் மேலும் வடக்கே சென்றன. அவர் கண்டு பிடித்ததாகக் கூறிய வழி பனியால் மூடப்பெற்றது என்றாலும், அவரது பயணங்கள் கிரீன்லாந்து (Greenland), லாப்ரடார் (Labrador) ஆகிய பகுதிகளின் விளக்க வரைபடம் அமைக்கப் பயன் பட்டன. இதற்கிடையில் பலவித நோக்கங்களைக் கொண்டவர்கள் இம் முயற்சியில் ஈடுபட்டனர். கில்பர்ட் (Gilbert), நில இயல் நிபுணர் ஹக்லூட் (Hakluyt) [அவருடைய 'பிரயாணங்கள்' (Voyages) எனும் நூலின் முதல் பதிப்பு 1582 ஆம் ஆண்டில் வெளிவந்தது] போன்றவர்கள் ஆங்கில ஆதிக்கத்தினைக் கொடி நாட்டிப் பரப்பினால்தான் வாணிபத்திற்குப் பாதுகாப்பு ஏற்படும்

என்றும், அதனால் குடியேற்றங்களை அமைக்கவேண்டுமென்றும் வற்புறுத்தினர். கில்பர்ட், பலதடவை தவறியபின் 1583ஆம் ஆண்டில் கப்பலில் பயணமானார். அவரே நியூபவுன்லாண்டில் ஆங்கில ஆதிக்கத்திற்கு அடிகோலியவர். அவர், மேலும் தெற்கில் ஆய்வுப் பயணம் செய்து இடர்ப்பட்டுத் தம் நாடு திரும்பினார். வழியில் தம்முடைய ஸ்குயிரல் (Squirrel) என்னும் பத்து டன் போர்க் கப்பலில் இறந்தார். 'நாம் நிலத்தின்மூலமாகவும் கடல் வழியாகவும்சொர்க்கத்தின் அருகிலிருக்கிறோம்' எனும் வாசகத்தைத் தம் நினைவாக விட்டுச்சென்றார். அவருடைய ஒன்றுவிட்ட சகோதரரான வால்டர் ராலே (Walter Raleigh), வர்ஜீனியா என்று அவரால் அழைக்கப்பெற்ற இடத்தினைக் கண்டுபிடிப்பதற்காக 1585ஆம் ஆண்டில் பயணமானார்.

இவ்வித ஆய்வுப் பயணங்களும் போராடும் பேரரசும், ஸ்பெயின் நாட்டு ஃபிலிப்பைப் போர்தொடுக்கும் முடிவினை எடுக்கச்செய்யவில்லை. ஆயின், ட்ரேக்கின் நடவடிக்கைகள் அவ்வித முடிவிற்கு அவரைத் துரத்தின. போப்பின் ஆணையோ, தெளிவற்ற வரையறையோ ஆங்கில வணிகரைத் தடைசெய்யவில்லை. பயன் விளையத்தக்க முறையில் பகுதிகளைக் கைப்பற்றினாலொழிய போப்பின் ஆணையோ, தெளிவற்ற வரம்பு முறையோ ஆங்கில வணிகரைத் தடைசெய்ய முடியாது என்னும் கொள்கையை ட்ரேக் கொண்டிருந்தார். அக் கொள்கையை ஆங்கிலேயர் போர்ச்சுகலுக்கு எதிராகப் பயன்படுத்தினர். அதுவே ஸ்பானியப் பேரரசை அழிக்கவல்லதாக இருந்தது. அதனோடு ஸ்பானியரைப் பழிவாங்க ஏற்கெனவே ஃபிரெஞ்சுக் கடலோடிகள் ஸ்பானியக் கப்பல்களை எங்குக் கண்டாலும் தாக்கும் வழக்கத்தை மேற்கொள்ளத் தீர்மானித்திருந்தனர். ஹாக்கின்ஸிடம் காணப்பெற்ற குடிமக்களுக்குரிய உணர்வும், டேவிஸிடம் காணப்பெற்ற பற்றுறுதியும், விஞ்ஞான அறிவும் ட்ரேக்கிடம் இல்லையென்றாலும், அவர் போர்த்துறையில் ஒப்பற்ற திறம்படைத்தவராக இருந்தார். எப்போதும் தனித் தலைமையையே வற்புறுத்திய அவர் கிளைவ் (Clive) போன்ற செயல் வீரர். அத் துறையில் தன்னிகரற்று விளங்கியவர்.

பல ஆண்டுகள் நோட்டமிட்ட பின் 1572ஆம் ஆண்டில் பொன் விளையும் பகுதியொன்றைக் கண்டார். அவ்விடத்தில் பனாமா நிலச்சந்தி வழியாகப் பெரு(Peru) நாட்டிலிருந்து கோவேறிக் கழுதைகளின்மீது வெள்ளி கொண்டுவரப்பட்டது. ட்ரேக் அங்கிருந்து நாம்ப்ரே டி டியாஸ் (Nombre de Dios) எனும் பகுதியில் நுழைந்து நிலச்சந்தியைக் கடந்துசென்று பசிஃபிக்

மாக்கடலைக் கண்டார். அதன்பிறகு 40,000 பவுன்களுடன் நாடு திரும்பினர். அவருடைய கப்பல் துணைவராக இருந்த ஆக்சன்ஹாம் (Oxenham) என்பவர் தனிப்பட்ட முறையில் ட்ரேக் செய்ததைப் போலவே தாமும் செய்ய விழைந்தார். அதற்கிணங்க 1576 ஆம் ஆண்டில் தம்முடைய கப்பல்களைப் பசி:பிக் மாக்கடலில் செலுத்தினர். ஆனால், அவர் பிடிபட்டு லீமா (Lima) என்னுமிடத்தில் தூக்கிலிடப்பெற்றார். இதற்கிடையில் இங்கிலாந்திற்கும் ஸ்பெயினுக்கும் இடையே ஓரளவு நட்புறவு காணப்பெற்ற காலத்தில், ட்ரேக் அயர்லாந்துப் போரில் பணியாற்றினர். அவர் 1577 ஆம் ஆண்டில் மறுமுறையும் மேற்குத் திசையில் பயணமாவதற்குமுன் பெரும் நிகழ்ச்சிகள் சில நடைபெற்றன. ஆங்கில நிலநூல் வல்லுநர் ஆசியாவிற்குச் செல்ல மெகல்லன் நீர்ச்சந்தியே மிகச்சிறந்தது எனத் தீர்மானித்தனர். தென் பசி:பிக் மாக்கடலில் பெரும் நிலப்பரப்பு இருப்பதாக நம்பினர். அவர்களிற் சிலர் குடியேற்றங்களை ஏற்படுத்த எண்ணினர். வால்ஷிங்காமும், அநேகமாக ராணியாரும் ஸ்பானிய அமெரிக்காவைத் தாக்க ஆயத்தமாக இருந்தனர். ஆனால், பர்க்ளீ இதற்கு எதிராக இருந்தார்.

டிசம்பர் மாதத்தில் நெகிழும் தன்மையுள்ள ஆணைகளோடு ட்ரேக் தம்முடைய 'கோல்டன் ஹிண்ட்' (Golden Hind) என்னும் கப்பலில் பயணமானர். மூன்றாண்டுகள் நீடித்த இப் பயணத்தில் அவர் உலகையே ஒருமுறை வலம் வந்தார். தொல்லை மிகுந்த படைக் கலகத்தை அடக்கிய பின்பு, மெகல்லன் நீர்ச்சந்தியைக் கடந்தார். பனமாவைத் தாக்குவதில் பயனில்லை என்றறிந்து, வால்பாரெய்சோ (Valparaiso), சிலி (Chile), பெரு ஆகிய பகுதிகளில் தமக்கு வேண்டியனவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டு வடமேற்கு வழியின் வெளிப்போக்கை அறிதற்காகக் கலி:போர்னியா (Californian) கரைக்குச் சென்றார். 1579 ஆம் ஆண்டு கோடையில் பசி:பிக் மாக்கடலைக் கடக்கத் தொடங்கினர். மொலூக்காஸ் தீவில் (Moluccas) வாசனைப் பொருள்களைப்பெற்று, தலச் சுல்தானுடன் உடன்படிக்கை ஒன்றும் செய்துகொண்டார். அவ்வுடன்படிக்கை பிற்காலத்தில் பல உரிமைகள் பெறுவதற்கு உதவியாக இருந்தது. ஜாவாவிற்குச் சென்று, இந்து மாக்கடலைக் கடந்து நன்னம்பிக்கை முனையைச் சுற்றிக்கொண்டு, 1580 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் தம் நாடு வந்துசேர்ந்தார். 1586–88 ஆம் ஆண்டுகளில் தாமஸ் காவெண்டிஷ் (Thomas Cavendish) என்னும் ச:போக் (Suffolk) பிரமுகர், ட்ரேக் சென்ற வழியைப் பின்பற்றி உலகைச் சுற்றிவந்தார். அவர் ஆர்மடா அழிந்த ஒரு மாதம் கழித்துத் தம்முடைய கப்பலின் பாய்மரத்தில் நீலச் சித்திரப்

பட்டாடை கட்டி தேம்ஸ் நதியில் புகுந்தார். அதுபோது ராணி யார் கிரீன்விச் (Greenwich) மாளிகையிலிருந்து கைகாட்டி வர வேற்றார்.

இத்தகைய முயற்சியில் நான்கு அரசியற்கூறுகள் மேலோங்கி நின்றன. கடல் தலைவர்கள் தீவிர பிராட்டஸ்டென்டுகள். ட்ரேக் எழுதியதைப்போல ஸ்பானியர் 'உண்மைச் சமயத்தவரின் பகைவ ராகவும், பொய்த் தேவைப் (Baal) பூசிப்பவராகவும்' இருந்தனர். அதே சமயத்தில் ஆக்சன்ஹாமினுடைய (Oxenham) கப்ப லாட்கள், கைப்பற்றிய குருமார் உடை தரித்து மேற்கிந்தியர் தங்களை லூதரன்கள் (Lutherans) என்று அழைத்துக்கொள்ளு மாறு போதனை செய்தனர். கடலோடிகளுடைய வெற்றி தொடர்ந்து இருந்ததால், ஸ்பெயின் தனது படைகளுக்கு நிதி அளிக்க முடியாத நிலையில் இருந்தது. அதைப்போலவே நெதர் லாந்துகளையும் கைப்பற்ற முடியாமல் நின்றது. எலிசபெத் ராணியார் இவ்வித நடவடிக்கைகளைப்பற்றித் தமக்கொன்றும் தெரியாது எனச் சாதித்தபோதிலும் ஹாக்கின்ஸினுடைய ஆரம்ப காலக் கொள்ளைப் பொருளில்கூடப் பங்கு பெற்றார். எப்போதும் ஓரிரு கப்பல்களை அளித்து உதவிவந்தார். கடலோடிகள் கொண்டு வரும் பொருள்களில் பெரும்பகுதியைத் தமது பங்காகக் கொண் டார். அதே சமயத்தில் ட்ரேக்கின் பயணத்திற்கு நிதி உதவி அளித்த வணிகக்குழுவில், வால்ஷிங்காமும் லீசெஸ்டரும் சேர்ந்திருந் தனர். அவர்களோடு தற்போது நாவாய்ப்படைக் கருவூல நாயக ராக இருந்த ஜான் ஹாக்கின்ஸும் இணைந்திருந்தார். இந்தப் புத்தாய்வுப் பயணங்களை நடத்திச்சென்ற தலைவர்களும் அவை களில் பயன்படுத்தப்பெற்ற கப்பல்களும், தொழிலுக்குரிய கப்பல் படையின் நடுப்பகுதியாக அமைந்ததைக் காணலாம். எட்டாம் ஹென்றியின் கப்பற்படை, அடுத்த இரண்டு வலிமையற்ற அரசர்கள் காலத்திலும், எலிசபெத் ராணியாரின் வறிய ஆரம்ப காலத்திலும் எண்ணிக்கையில் மிகக் குறைந்துவிட்டது. ஆனால், 1587ஆம் ஆண்டில் அரசியாரின் கப்பலரண் வரிசையில் 25 கப்பல்களே இருந்தபோதிலும், சண்டைக் கப்பல்கள் என்ற முறையில் அவைகள் மேம்பாடுற்றவை. ஹாக்கின்சின் தலைமை யில் பலவித அரங்கங்களுக்கு ஏற்றவாறு அவைகள் கட்டப் பெற்றன அல்லது குறைக்கப்பெற்றன. சில, விட்டத்தின் விகிதத்தைக்காட்டிலும் நீண்டும், உயரமான கப்பல்களைவிடத் தாழ்ந்தும் இருந்தன. படைவீரரை ஏற்றிச்செல்ல வசதியாக முன் புறமும் பின்புறமும் உள்ள அறைகளைக் கொண்டிருந்தன. கப்ப லாட்கள் நல்ல ஊதியம் பெற்றனர். குறைந்த எண்ணிக்கையின ராக இருந்தனர். எனவே, அவர்களுக்கு உணவு அளிப்பதில்

சிக்கனம் ஏற்படுவதோடு நீண்ட நாட்கள் அவர்கள் கடலிலேயே பயணம் செய்யமுடியும். இக் கப்பல்களில் பலமான பீரங்கிகளை நிறையப் பொருத்தி இருந்தனர். எட்டாம் ஹென்றியின் நாவாய்ச் செயற்குழுவினை ஹாக்கின்ஸ், பர்க்ளீயின் ஆதரவோடு சீர்திருத்தினர். கப்பல் தளங்களிலும், கப்பல் கான்ட்ராக்டர்களிடமும் மலிந்துகிடந்த ஊழல்கள் சிலவற்றை ஒழித்தார். டவர் ஹில் (Tower Hill) என்னுமிடத்தில் கடற்படை நிர்வாகத்தை ஏற்று நடத்திய அனுபவமிக்க கடலோடிகள் எந்தக் கப்பற்படையும் மிஞ்சும் அளவிற்கு எண்ணிக்கையும் பீரங்கி பலமும் அவர்களிடம் உண்டு என்பதை உணர்ந்திருந்தனர். இங்ஙனம் மேம்பட்டு இருந்த இக் கப்பற்படையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஸ்பானிய ஆர்மடா சாதாரண மிதக்கும் தரைப்படையாகவே தோன்றுகின்றது.

ஆங்கிலக் கடற்படையினருடைய நம்பிக்கை வீண்போகவில்லை. ஃபிலிப் படையெடுக்கத் திட்டமிட்டிருந்த ஆண்டாகிய 1587-ல் அந்த நம்பிக்கை எத்துணை தூரம் நேர்மையானது என்பது புலப்பட்டது. அதே சமயத்தில் பார்மா இளவரசர் தம்முடைய தட்டையான அடிப்புறங்கொண்ட கப்பல்கள் செல்வதற்காக ஃபிளீமியக் கால்வாய்களை ஆழமாக்கினர். ஏப்ரல் மாதத்தில் ட்ரேக் காடிஸ் துறைமுகத்தைத் தாக்கியதால் 'ஸ்பானிய அரசருடைய தாடி கொளுத்தப்பட்டதோடு' மேலும் சில முக்கிய விளைவுகளும் தோன்றின. ட்ரேக்கினுடைய ஒப்புயர்வற்ற போர் சார்ந்த சூழ்ச்சித் திறத்தினால் ஸ்பானியர் செயல்படுவதில் ஓராண்டு கால தாமதம் ஏற்பட்டது. அவருடைய பீரங்கிகள் ஆர்மடாவின் ஒரு பகுதியை அப்படியே அழித்துவிட்டன. இதன் விளைவாக ஸ்பானியக் கடற்படைத் தலைவர்கள் தாங்கள் புறப்படுவதற்கு முன்பே தோல்வி கண்டதாக ஓரளவு எண்ணினர். நம்முடைய கடற்படைத் தலைவர் அனைவரும், மனமொடிந்த பகைவரின் கப்பல்கள் ஆறு துறைமுகங்களில் தங்கி இருந்த சமயத்திலேயே மற்றுமொரு முறை தாக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். உடனடியாகச் செயல்புரியாத பர்க்ளீயை 'நீண்டு நரைத்ததாடியும் வெண்தலையும் உடையவர்' என்று மனக்கசப்போடு தூற்றினர். ஆனால், ராணியார் படை திரட்டுவதற்கான செலவைக் கண்டு திகிலடைந்தார். மேலும், ஃபிலிப் தம்முடைய படையெடுக்கும் திட்டத்தைக் கைவிடுவார் என்று நம்பினர். அதனால், சமாதானப் பேச்சு தொடர்ந்து நடைபெறவேண்டுமென்று வற்புறுத்தினர். அதன் விளைவாக ஸ்பானியக் கடற்கரையிலேயே தாக்குதலைத் தொடங்கவேண்டுமென்ற ஆணை காலந்தாழ்ந்து வந்தது. எனவே, ஸ்பானியக் கடற்படை எந்தநிலையில் ஆங்கிலக்

கப்பற்படையைத் தாக்கக்கூடாது என்று ட்ரேக் எண்ணினரோ அதே நிலையில் தாக்கியது. அப்போது, பிரிட்டிஷ் கப்பற்படை அமைதியாகப் பாதுகாப்புகொண்டு இருந்தது. மேலும், பிளை மவுத்தில் மூலப்படையும், ஆங்கிலக் கால்வாயில் ஒருசிறு அணியு மாகப் பிரிந்துநின்றது.

இறுதியில் கத்தோலிக்க உலகம் எதிர்நோக்கி இருந்த நாள் வந்தது. போப், மறுமுறையும் எலிசபெத்தைச் சமயவிலக்கு செய்தார். கார்டினல் அல்லன், ராணியாரைத் 'தகாப்புணர்ச்சி கொள்ளும் பரத்தை' (incestuous bastard) என்று தூற்றினர். கத்தோலிக்க இங்கிலாந்து முழுதும் கலகத்திலீடுபடும் என்ற செய்தி அவருக்குக் கிடைத்தது. ஸ்பானியக் கொடிக்கப்பல் கன்னி மரியா (Virgin), இயேசுநாதர் ஆகியோரின் கொடிகளின்கீழ் மிதந்துவந்தது. ஆனல், ஃபிலிப்ஸ் நடைபெறுதற்கரிய போர்ச் செயல்களைப் புரியுமாறு தம்முடைய தளகர்த்தர்களுக்கு ஆணை யிட்டார். மெடினு சிடோனியா (Medina Sidonia) வின் கப்பற் படை எதிர்ப்பேதுமின்றி மார்கேட் (Margate) என்னும் ஆங்கிலத் துறைமுகத்தைக் கைப்பற்றுவதற்காக ஆங்கிலக் கால்வாயில் செல்லவேண்டும். அங்கிருந்து ஃபிளாண்டர்ஸில் இருந்த பார்மா இளவரசரின் துருப்புகளை ஏற்றிவரவேண்டும். இக்காரணத்திஞல் ஸ்பானிய ஆர்மடா 22,000 படை வீரர்களையும், 8,000 மாலுமி களையுமே கொண்டிருந்தது. அது சண்டையைத் தவிர்க்கவேண்டி, அரச ஊர்வலம்போல் இரண்டு நாட் (knot) வேகத்தில் பிளைமவுத் தைக் கடந்து முன்னேறியது.

ஆங்கிலக் கடற்படைத் தளகர்த்தராகிய எஃபிங்காமைச் சார்ந்த ஹோவர்டு (Howard of Effingham) என்பவரின் தலைமையில் துணைத் தளகர்த்தர்களாக ட்ரேக்கும், ஹாக்கின்ஸ், ஃப்ரோபிஷர், ஃபென்னர் (Fenner) ஆகியோரும் பணியாற்றினர். இவர்களோடு சில தலைசிறந்த செல்வந்தரும், படைவீரரும் செயலாற்றினர். இவர்களையெல்லாம் சமாதானப்படுத்தி ஒன்ருக இணைத்துப் பயன் படுத்துவது கடினமான செயலாகும். பாதி அளவிற்குமேல் தன் னிச்சையாக வந்த வணிகக் கப்பல்களைக்கொண்டு, ஒவ்வொரு சிறு அணியின் தலைவரும் தம் விருப்பம்போல் போர்முறைத் திறத்தைப் பயன்படுத்திக்கொள்ளுமாறுவிட்ட இங்கிலாந்தின் கடற்படையை பெருமிதமான கப்பற்படை என்று அழைப்பதற்கில்லை. ஆயினும், ஆங்கிலேயர் தம்முடைய கப்பல்களைப் பிளைமவுத் துறைமுகத்திற்கு வெளிக்கொணர்ந்த 1588 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 21 ஆம் தேதியிலிருந்து, கிராவெலைன்ஸ் (Gravelines) என்னுமிடத்திற்கருகே நாள்முழுதும் போர் நடந்த 29 ஆம் தேதி வரையுள்ள எட்டுநாட்கள்

தொடர்ந்து செயலாற்றிய ஆங்கிலேயரின் திறமை இதனுல் புலனுகின்றது.

ஆங்கிலேயர் தம்முடைய கப்பல்களின்மீதும், கடல் அனுபவத்தின்மீதும் கொண்டிருந்த நம்பிக்கையின் விளைவாக, டிரஃபால்கர் சண்டைவரையில் கடற்போரில் இன்றியமையாததாக இருந்த காற்று, வானிலை அளவுமானி ஆகியவற்றைப் பயன்படுத்தினர். ஸ்பானியருடையதைக் காட்டிலும் நெடுந்தொலைவில் குண்டு எறியக்கூடிய பீரங்கிகளை உடைய ஆங்கிலக் கப்பல்கள் பகைப்படைக்கு முன் அடிக்கடி தோன்றி அழிவினைத் தந்தன. அகன்ற பகுதியைப் பயன்படுத்தி மிக விரைவாகச்சென்று தாக்கின. ஸ்பானியர் தங்களுடைய கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிற்பதுபோல் தோன்றுகிறது என்று எழுதுமளவிற்கு ஆங்கிலக் கப்பல்கள் வேகமாகச் செயலாற்றின. இங்ஙனம் ஆங்கிலேயர் ஸ்பானியர் புரிந்து கொள்ளும் ஒரே முறையைத் தவிர்த்து அவர்கள் வைட் தீவினைக் (Isle of Wight) கைப்பற்றும் முயற்சியை முறியடித்து விரட்டினர். ஸ்பானியப்படை சேதம் அதிகம் அடையவில்லையென்றாலும், கலக்கம் அடைந்து கலே நகருக்குச்சென்றது. அங்கே ஆங்கிலப் படை டௌன்ஸ் (Downs) என்னுமிடத்தில் இருந்த கடற்படை அணியோடு இணைந்து வெடிமருந்துக் குறையையும் போக்கிக் கொண்டது. ஜூலை மாதம் 28ஆம் தேதி நள்ளிரவில், ஹோவர்டு, எரிகப்பல்களைக்கொண்டு நங்கூரம் பாய்ச்சி நின்ற ஸ்பானியக் கப்பல்களைத் துரத்தினர். 29ஆம் தேதி நான்கு ஸ்பானியக் கப்பல்களை மூழ்கடித்தார். மேலும் பல கப்பல்கள் சேதமுற்றன. அவைகள் பார்மாவின் படையைச் சந்திக்கும் இடத்திற்கப்பால் விரட்டப்பெற்றன. அவ்வாறு விரட்டப்பெற்ற கப்பல்கள் சாதகமான காற்று இல்லாமலிருந்திருந்தால் ஃஜீலண்டு (Zealand) மணற்றிடரில் அகப்பட்டு அழிந்திருக்கும். இங்ஙனம் ஸ்பானிய ஆர்மடா கொண்ட நோக்கம் கைகூடவில்லை. உணவுப் பொருள் தட்டுப்பட்டு, குடிநீர் இன்றி, குதிரைகளைக் கடலில் எறிந்து வடக்கு நோக்கி ஓடியது. ஸ்காட்லாந்தைச் சுற்றிக்கொண்டு, அயர்லாந்தின் துறைமுகம் ஒன்றில் தங்கிச் சீரமைத்துக்கொண்டபிறகு நாடு திரும்பவேண்டுமென்று ஆணை வந்தது. ஆனல், போர் முன்னேற்றத்திற்கென்று ஆட்களைக்கொண்டிருந்த ஆர்மடா ஆங்கில பீரங்கிகளினல் தாக்குண்டு, புயற் காற்றினல் அலைக்கப்பெற்று இருந்த சூழ்நிலையில் இவ்வாணையை நிறைவேற்றுவது இயலாததாகும். ஸ்பானியர் போரில் ஒன்பது அல்லது பத்து கப்பல்களைத்தான் இழந்தனர். ஆனல், இடர்மிகுந்த இந்தப் பிரயாணத்தில் குறைந்தது 50 கப்பல்களையாவது இழந்திருப்பர். அயர்லாந்தின் கரைகளில் சடலங்களும் உடைந்த மரத்துண்டு

களும் குவிந்தன. இங்கிலாந்தில் படையெடுப்பு பயம் தீர்வதற்குப் பல வாரங்களாயின. ஆயின், அதன் பிறகு ராணியாரின்மீது நாட்டுமக்கள் கொண்ட பற்று கரைபுரண்டோடியது. அவர் டில்பரியில் (Tilbury) இருந்த படைவீரரிடம் 'கொடுங்கோலர் அஞ்சட்டும்' என்றும் உங்களுடன் வாழ்ந்து இறப்பதற்கும், என் ஆண்டவருக்கும், நாட்டிற்கும், மக்களுக்கும் என்னுடைய புகழ், குருதி ஆகியவற்றைப் புழுதியில் கிடத்த உறுதிபூண்டு வந்திருக்கிறேன் என்றும் கூறினர்.

போரில் கிடைத்த வெற்றி பிராட்டஸ்டென்ட் சமயத்தைக் காப்பாற்றியது. ஆனல், எலிசபெத்தின் காலத்தைக் கடந்த ஒரு போராட்டத்தினைத் துவக்கியது. அடுத்து வந்த பதினைந்து ஆண்டுகள் இருள் சூழ்ந்தனவாகவும், ஏமாற்றமளிப்பனவாகவும் காணப்படுகின்றன. 1596ஆம் ஆண்டளவில் ராணியாரின் பழைய ஆதரவாளர்களான லீசெஸ்டர், நோலிக்கள் (Knollys), ஹட்டன் ஆகியோரும் போர்த் தலைவர்களான ட்ரேக், ஹாக்கின்ஸ், ஃப்ரோபிஷர், வால்ஷிங்காம் போன்றோரும் ('நற்செய்தி' என்று ஃபிலிப் மன்னர் குறிப்பிட்டதுபோல) மடிந்தனர். 1598-ல் பர்க்ளீயும் மறைந்தார். நாட்டில் கொள்ளை நோய் தாண்டவமாடியது. பெரும் பொருட்செலவும், பேரிடரும் விளைத்த அயர்லாந்துப் போர் ஆரம்பமாகியது. அதே சமயத்தில் நவரேயின் ஹென்றி நம்முடைய நட்பைக் கைவிட்டுத் தனியாக உடன்படிக்கை செய்துகொண்டார். அரசியல் சூழ்நிலையிலும் ஒருவித மாறுதல் காணப்பெற்றது. ராணியார் உடல் நலம் குன்ருது வாழ்ந்த போதிலும், 'குளோரியான' (Gloriana) நாட்கள் கடந்துவிட்டன. வளர்ந்துவரும் இளம் சமுதாயம் பதற்றம் மிகுந்ததாக இருந்தது. ஸ்பானியரைத் தோற்கடிக்க உதவிய பிராட்டஸ்டென்ட் உணர்ச்சி ராணியார் வெறுத்த பியூரிட்டன் திட்டத்தை நிறைவேற்றுமாறு அவரை நெருக்கியது. அதேபோன்று அவருடைய அரசாங்கத்தின் வெற்றியே, கவுன்சில் ஆட்சியைக் குறைகூறும் நாட்டினத்தை உருவாக்கியது. இங்ஙனம் அவருடைய இறுதி ஆண்டுகள் காமன்ஸ் சபையில் தோன்றிய எதிர்ப்பினை மறுப்பதில் கழிந்தது. ராணியாரின் வயதுக்கான மரியாதையும், அவருடைய பெரும் புகழும், பழைய கவர்ச்சியுமே அச் சபையினரை அடக்கியாண்டன என்று கூறலாம். கவுன்சிலிலேயே தீவிரமான வேற்றுமைகள் காணப்பெற்றன. ஒரு சாரார் கடலிலே கலமறுத்துப் போர் புரிவதை வற்புறுத்தினர். மற்ருெரு சாரார் ஐரோப்பாவிலுள்ள நேசநாடுகளுக்கு உதவி மானியம் அளிக்கவேண்டுமென்றும், வாய்ப்புக் கிடைத்தால் ஓரளவு பலன் தரக்கூடிய உடன்படிக்கையைச் செய்துகொள்ளவேண்டுமென்றும் வாதாடினர்.

எலிசபெத் டச்சுக்காரருக்கும் யூக்நோக்களுக்கும் தொடர்ந்து உதவி யளித்து வந்தார். ஆர்மடா போருக்குப்பிறகு, ஐந்து ஆண்டுகளில் இங்கிலாந்தின் ஓராண்டு வருமானத்தைக் காட்டிலும் 3,00,000 பவுன்களுக்குமேல் ஃபிரான்சிற்கு அனுப்பினர். இங்கேதான் நிலைப் படையின் வித்தாக இருந்த துருப்புகள் ஒப்பற்ற படைத் தலைவர் களாகிய நோரேக்கள் (Norreys), வீர்கள் (Veres) ஆகியோரின் தலைமையில் பயிற்சிபெற்றனர். ஆனால், அவர் சேனைகளைப் பெருக்குவதற்காகத் தம் பொருளைப் பாழடிக்க விரும்பவில்லை. நட்பு நாடுகளும் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுப்பதாக இல்லை. நார்மண்டி, பிரிட்டானி, ஹாலந்து ஆகிய பகுதிகளில் மேற் கொண்ட எண்ணிறந்த சிறுசிறு படையெடுப்புகள் ஒருசில போர் திறச் சூழ்ச்சிமிக்க இடங்களைப் பெறுவதற்கும், ஸ்பானியர் ஃபிரான்சில் நிரந்தரமாக தளம் அமைத்துக்கொள்ளாமல் தடுப்ப தற்குமே பயன்பட்டன. பார்மாவின் மறைவும், 1593ஆம் ஆண்டில் நவரேயின் ஹென்றி கத்தோலிக்கச் சமயத்திற்கு மாறியதும் நெருக்குதலைத் தளர்த்தின. ஏனெனில், ஒன்றுபட்ட ஃபிரான்சும், ஆரஞ்சுப் பகுதியைச்சார்ந்த மாரிஸ்ஸின் (Maurice) திறனும் ஸ்பெயினை எதிர்த்து நிற்கக்கூடியவை.

நாவாய்ச் சண்டை மிகுந்த ஏமாற்றமளித்தது. இஃது ஒரு விதத்தில் மாறுபட்ட கொள்கைகளின் விளைவு. ஆனால், அதிக அளவு ஸ்பானியருடைய திறமையில் காணப்பெற்ற வளர்ச்சியே காரணம் எனலாம். இங்கிலாந்தைக் கைவிட்டுச் சென்றவர்கள் மேன்மையான கப்பல் கட்டுவது எப்படி என்பதை ஸ்பானியருக்குக் கற்பித்தனர். அவர்களது வலிமைமிக்க 'இந்தியக் காவற்படை' வகையைச் சார்ந்த 'கால்லியான்' (galleon) என்னும் பெருங் கப்பல்களும், வேகமாகப் பொருள்களை ஏற்றிச்செல்லும் கப்பல் களும், மேற்கிந்தியத் தீவுகளில் ஆற்றல்மிகுந்த அர்ண்களும், செயின்ட் ஹெலினாவிலிருந்து வரும் கப்பல்களுக்கு அளிக்கப்பெற்ற பாதுகாப்பும் ட்ரேக்கினுடைய திடீர் தாக்குதல் முறைகளைப் பயனற்றதாக்கின. 1589ஆம் ஆண்டில் லிஸ்பனையும் அசோர ஸையும் (Azores) தாக்க ட்ரேக் மேற்கொண்ட படையெடுப்பு தோல்வியுற்றது. டான் அன்டோனியோவிற்கு ஆதரவாகப் போர்ச்சுகல் கலகம்செய்ய விரும்பவில்லை. அவர் 10,000 வீரர்களை இழந்தார். இதனால் ட்ரேக்கை இருள் மேகம் சூழ்ந்தது. சில ஆண்டுகளுக்கு அவர் தங்கத்தைத் தேடுவதிலும், பகைவரின் வாணி பத்தை அழிப்பதிலும் ஈடுபட்டார். இவ்வித நடவடிக்கைகளுக்கு வணிகக் குழுக்களும், துணிகரமிக்க கம்பர்லாந்தின் ஏர்ல் போன்று முள்ள செல்வந்தரும் நிதி உதவி அளித்தனர். திறமையும் வீரமும் மிக்கவர் சிலர் தங்களுடைய முயற்சியில் வெற்றி பெற்றனர்.

இவ் வெற்றிகள் புகழ் மிக்கவை அல்லவாயினும், 1591ஆம் ஆண்டில் நடைபெற்ற அசோரஸ் சண்டையைக் காட்டிலும் வெற்றி மிக்கவை. ரிச்சர்டு கிரன்வில் (Richard Grenville) என்பவர் தம்முடைய 'ரெவெஞ்' (Revenge) எனும் கப்பலுக்குமுன் பெரும் பகைப்படை நின்றபோதும் பின்வாங்க மறுத்தார். இது போற்றுதற்குரியதுதான். ஆனால், போரன்று. ஸ்பானியர் கலே நகரைக் கைப்பற்றியதும், பென்ஃசான்ஸைக் (Penzance) கொளுத்தியது. இத்தகைய தாக்குதல்கள் போர்த்திறத் திண்மையைத் தொடவில்லையென்பது தெளிவாகிறது. எனவே, ட்ரேக் நாட்டுச் சேவைக்குத் திரும்ப அழைக்கப்பெற்றார். ஸ்பெயினில் அவருடைய பெயரைக்கேட்டே பேயைக்கண்டு அஞ்சுவதுபோல மக்கள் நடுங்கினர். ஆங்கில ஒற்றன் ஒருவன் 'ஃபிரான்சில் டால்போட்டின் பெயரைக்கேட்டு அஞ்சியதைக்காட்டிலும் ஸ்பெயினில் ட்ரேக்கின் பெயரைக் கேட்டு பயந்தனர்' என்று அறிவித்தான்.

ட்ரேக்கினுடைய இறுதிக் கடற்பயணம் கேடுற்றதாக இருந்தது. அவர் கானரிஸில் தோற்றார். மேலும், போர்டோ ரிகோவிற்கு (Puerto Rico) அருகில் முறியடிக்கப்பெற்றார். பனமாவில் தம்முடைய புகழ்மிக்க நாட்களில் இருந்தநிலை மாறிவிட்டதைக் கண்டார். இப்பயணத்தில் ஹாக்கின்ஸ், ட்ரேக் ஆகிய இணையற்ற வீரரை இழந்துவிட்டு ஆங்கிலக் கப்பல்கள் 1596ஆம் ஆண்டு நாடு திரும்பின. அதே ஆண்டில் எலிசபெத்தின் ஆட்சியிலே அனுப்பப் பெற்ற படைகளைக்காட்டிலும் வலிய படை ஒன்று ஹோவர்டு, எஸ்ஸக்ஸ், ராலே ஆகியோரின்கீழ்ச் சென்று, காடிஸ் துறைமுகப் பட்டினத்தையும், அங்கிருந்து பெருஞ்செல்வத்தையும் கைப்பற்றியது. மேற்கிந்தியக் கப்பல் கூட்டத்தைக் கொளுத்துமாறு ஸ்பெயினை வற்புறுத்தியது. ஆயின், இதுவே பெருமளவில் மேற்கொள்ளப்பெற்ற இறுதிப் படையெடுப்பாகும். 1597ஆம் ஆண்டில் அசோரஸுக்குச் சென்ற தீவுப்பயணம் ஸ்பானிய நிதிக் கப்பல்களைக் கைப்பற்றத் தவறியது. மேலும், எஸ்ஸக்ஸுக்கும் ராலேவுக்குமிடையே தோன்றிய பூசல்களினால் இப் பயணம் முறிந்தது. 1598ஆம் ஆண்டில் இரண்டாம் ஃபிலிப் இறந்தார். அவரோடு கத்தோலிக்கச் சமயப் போரில் எஞ்சி நின்றதும் மறைந்தது. அதே சமயத்தில் ஃபிரான்ஸ் போரிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டதனால், ஆங்கிலேயர் டச்சுக்காரருக்கு அதிக உதவி அளிப்பது அவசியமாயிற்று. மேலும், பெரும் அயர்லாந்துப் போர் இங்கிலாந்தின் முனைப்பையெல்லாம் தன்பக்கம் திருப்பியது. எனினும், தனிப்பட்டவருடைய முயற்சி முழுதும் நின்றுவிடவில்லை. கயானா மேட்டு நிலங்களில் எங்கோ ஓரிடத்திலிருந்த பொன் விளையும் பூமியாகிய எல் டொராடோவின் வளத்தை நாடி ராலே

சில கப்பல்களை ஒரினுகோ ஆற்றிற்கு அனுப்பினர். காவெண்டிஷ் என்பவருடைய பயணத்திலிருந்தும், அன்னிய ஆதாரங்களை ஒன்று திரட்டி ஹக்லூட்பெற்ற அறிவிலிருந்தும் கொண்ட செய்திகளின் அடிப்படையில், டச்சுப்போட்டியால் உந்தப்பெற்ற லண்டன் நகர வணிகக்கூட்டம் ஒன்று, இந்தியாவிற்கும் ஸ்பைஸ் தீவுகளுக்கும் (Spice Islands) பலமுறை கப்பல்களை அனுப்பியது. 1591ஆம் ஆண்டில் இப்பகுதிகளை அடைந்த ஜேம்ஸ் லங்காஸ்டர் (James Lancaster), பத்து ஆண்டுகள் கழித்துக் கிழக்கிந்தியக் கம்பெனியின் முதல் கப்பற்படையை நடத்திச்சென்ருர்.

அயர்லாந்தைத் தவிர மற்றுமோர் அரசியல் பிரச்சினையைத் தீர்ப்பதில் எலிசபெத்தின் அரசாங்கம் தோல்வி கண்டது. எட்டாம் ஹென்றியின் காலத்தில் ஏற்பட்ட திருச்சபை அரசு ஒற்றுமையை நிலைபெறச் செய்வதில் தோல்வியடைந்தது. எலிசபெத் பட்டத்திற்கு வந்தபோதே காலங் கடந்துவிட்டது எனலாம். ஏனெனில், பியூரிட்டன்கள் தாங்கள் கூறிக் கொண்டதைப்போல விக்ளிப்பின் (Wyclif) கொள்கையைப் பின்பற்ருவிட்டாலும், ஆரும் எட்வர்டு காலத்தில் வெற்றியடைந்த போதும், மேரியின் காலத்தில் நாடுகடத்தப்பெற்றபோதும், திருச்சபை அரசாங்கம், திருமறைக்கொள்கை ஆகியவற்றில் கால்வினுடைய கருத்துகளை ஏற்றுக்கொண்டனர். எனவே, விட்டுக்கொடுத்து ஒப்பந்தம் செய்துகொள்வது இயலாத தொன்ருகியது. எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் இருந்த பிஷப்புகளின் முதல் தலைமுறையினர் போப்பாண்டவர் சார்ந்த முறையில் பதவியேற்கும் எண்ணம் எதையும் ஏற்க மறுத்தனர். ஆன்மப் பாதுகாவலராகத்தான் தங்களுடைய பதவியைக் கருதினர். மெழுகுவத்திகள், சிலுவைகள், சடங்குகள் ஆகியவற்றிற்கு ராணியார் முன்னுரிமை வழங்கியதை அறவே வெறுத்தனர். பல குருமார்கள் முதலிலிருந்தே நீண்ட அங்கியை அணிய மறுத்தனர். 1563ஆம் ஆண்டில் குருமார் திருக்கூட்டத்தின் கீழ்ச்சபைத் திருவிருந்து வழிபாட்டின்போது மண்டியிடுதல், கத்தோலிக்கச் சமயத்தின் அமைப்பு, புறச்சின்னங்கள் ஆகியவற்றிற்கெதிராக வந்த விண்ணப்பம் ஒன்றை ஒரு வோட்டு வித்தியாசத்தில் தள்ளிவிட்டது. பைபிளைப் படித்ததால் உண்டான கிளர்ச்சியினுலும், ரோமின்மீதும் ஸ்பெயினின்மீதும் இருந்த வெறுப்பினுலும், பியூரிட்டன் சமயம் பெருஞ்செல்வாக்குடன் விளங்கியது. பியூரிட்டன் சமயப் பிரசாரகர்கள் நாடகங்களைத் தாக்கினர். கிராமக்குழு நாடகங்களைக்கூட அவர்கள் விட்டு வைக்கவில்லை. மே தினம் கொண்டாடுவதைக் கண்டித்தனர். குழந்தைகளுக்குத் திருமுழுக்காட்டும்போது (babtize) திரு

மறையில் உள்ள பெயர்களையே சூட்டினர். பழங்கால இங்கிலாந்தில் ஞாயிற்றுக்கிழமைகளில் திருக்கோயிலுக்குச் செல்லும் நேரமும், கோடைக்காலத்தில் அறுவடை செய்யும் சமயமும் தவிர, மற்ற நேரங்களில் இசை, நாட்டியம், கால்பந்து விளையாட்டு (foot-ball) ஆகியவை அனுமதிக்கப்பெற்றன. அவற்றிற்குப் பதிலாக சப்பத்தைப் (Sabbath) புகுத்தினர். பியூரிட்டானியர் புறச்சமயத்திற்கும், பிறன்மனை விழைதலுக்கும் மரண தண்டனை விதிக்கவேண்டுமென்றனர். ஒவ்வொரு காமன்ஸ் சபைக் கூட்டத்திலும், தொழுகை நூல், சமயச் சடங்குகள், திருச்சபை நீதிமன்றங்கள் ஆகியவற்றிற்கெதிராக மசோதாக்களைக் கொண்டுவந்தனர். பர்க்லீ விட்டுக்கொடுத்திருப்பார். அவரது குடும்பத்தினரும் தீவிரமாக இருந்தனர். வால்ஷிங்காம், நோலிக்கள், மில்ட்மே (Mildmay) ஆகியோர் தீவிர பியூரிட்டர்களாக இருந்தனர். புகழை விரும்பிய லீசெஸ்டரும் எஸ்ஸக்ஸும் பிராட்டஸ்டென்ட் சமயத்தை ஆதரித்து உயர எண்ணினர். லீசெஸ்டர்ஷயரைப் பியூரிட்டானியர் கோட்டையாக்கிய ஹன்டிங்டன் (Huntingdon) போன்ற செல்வாக்கு மிகுந்த செல்வந்தரும், சானல் தீவுகளில் (Channel Isles) பியூரிட்டன் சமயத்தை ஆதரித்த பாலட் (Paulet) போன்ற அதிகாரிகளும், ஆன்ட்வெர்ப், மிட்டல்பர்க் (Middelburg) போன்ற வணிகக் குடியேற்றங்களும், ட்ரேக்கும் தம்முடைய கப்பல்களில் உள்ளமறிந்த பியூரிட்டன்களாக இருந்தனர். உண்மையில், எலிசபெத் காலத்தில் திறமை வாய்ந்தவரில் பாதிக்குமேல் பியூரிட்டன் சமயத்தவர். ஆயினும், ராணியாரின் உறுதி ஒன்றே ஆங்கிலத் திருச்சபையைக் காத்தது. அவருடைய சமய குருமார்களில் தலைசிறந்தவரான ஹூக்கர் ‘ஆண்டவரின் அருளாலும், அவர்தம் பணியாளாகிய எலிசபெத்தினாலும் நாம் இருக்கிறோம்’ என்று அறிவித்தார்.

இப் பிரச்சினையின் கடுமைக்கும் அஃது எளிதில் தீர்க்கமுடியாததாக இருந்ததற்கும் இரு காரணங்கள் இருக்கின்றன. பெரும்பான்மையான மக்கள் திருச்சபையின் ஐக்கியத்தை விரும்பினர். சமயப்போரை உண்மைச் சமயத்திற்கு ஊறு செய்வதாகும் என்றனர். திருச்சபையைவிட்டு நீங்கும் உரிமையை அவர்கள் கோரவில்லை. ஆனால், தாங்களே திருச்சபை என்றனர். எனவே, இப் பிரச்சினையின் வேரானது இரு துருவங்களாக இருந்த கத்தோலிக்கருக்கும் அரச திருச்சபையே வேண்டாம் என்ற சிறுபான்மையினருக்குமிடையே இல்லை. அதற்குமாறாக இடையிலேதான் இருந்தது. அதில் ராணியாரின் திருச்சபை ஏற்பாட்டினை மனமார ஏற்றுக்கொண்டவர்களில் சிறுபகுதியினர் இருந்தனர். ஆனால், இரு பெரிய பிரிவினர் இக் கட்சியைச் சார்ந்திருந்தனர்.

அவர்கள் சமயச் சார்பற்றவர்களில் ஐந்தில் மூன்று பங்கினராக இருந்தனர். இணங்கும் திருச்சபையினர் பிஷப்புகளை வெறுத்தனர். தங்களுடைய குருமார் நீண்ட வெண்ணிற அங்கி அணியாது ஜெனீவா மேலங்கியை (Geneva gown) அணிதல் வேண்டுமென்று விரும்பினர். பலமுறை திருவிருந்தை அமர்ந்தே உட்கொண்டனர். ஆனால், அவர்கள் திருச்சபையைப் பிளவுபடுத்தவில்லை. அதே கட்சியில் உண்மையான பிரஸ்பிடீரியர்களும் இருந்தனர். அவர்கள் ஜெனீவா அல்லது ஸ்காட்லாந்து ஆகிய நாடுகளில் இருந்த மாதிரியை அப்படியே பின்பற்றவேண்டுமென்றனர். இரண்டாவதாக ஆதரவுத் திட்டம் பிரச்சினையை இடர்மிகுந்ததாக்கியது. எஸ்ஸெக்ஸில் ரிச் (Rich) குடும்பத்தினரைப்போன்று பியூரிட்டன் சமயப் பற்றுகொண்ட நிலப்பிரபுக்கள் பியூரிட்டன் குருமாரையே அமர்த்தினர். நார்த்தாம்டன்ஷயரைச் சார்ந்த பீட்டர் வென்ட்வொர்த் (Peter Ventworth) போன்றவர் இரகசியத் தொழுகைக் கூட்டத் திட்டத்தை வகுத்தனர். இங்ஙனம் லண்டன் நகரம், அரசவை, தலைமைக் கோயில் உள்ள நகரங்கள் ஆகியவற்றில் காணப்பெறும் பழக்கம் நாட்டுப்புறப் பாரிஷ்களில் மாறுபட்டு இருந்தது. மேலும், அவ்வாறு அமர்த்தப்பெற்ற குருமாரை நீக்கும் முயற்சி பொதுச்சட்டத்திற்கு (common law) முரணாகும். இவ்விதச் சமயப் பூசல்கள் விரைவிலேயே அரசியல் சட்டத்தைப் பாதிப்பதாக இருந்தன. வரலாற்று அடிப்படையில் திருச்சபையில் ஆதிக்கம் அரசியாரின் ஆதிக்கமாகத்தான் இருக்கவேண்டுமென்று எலிசபெத் உறுதியாகக் கூறினார். சமயம்சாரா செய்திகளில் பாராளுமன்றத்தையே உயர்நீதிமன்றமாகக் கொண்டார். சமயம் சார்ந்தவரைப் போப்பின் பிரதிநிதிகளாகிய பிஷப் போன்றவர்மூலமாகவும், குருமார் திருக்கூட்டத்தின்மூலமாகவும் ஆண்டார். பாராளுமன்றத்தில் கொண்டுவரப்படும் சமய மசோதாக்களைத் தள்ளுபடி செய்தார்.

முதற்படியில் ' வெஸ்டியேரியன் வாக்கு எதிர்வாக்கு வாதம்' தோன்றியது. வெகுவிரைவில் அஃது இரண்டாம் படியை அடைந்து பேரிடரினை விளைவித்தது. சமயச் சடங்குகளில் குழப்பம் மிகுந்திருந்தது. சமய ஆட்சிப் பிரிவுகள் (dioceses) சிலவற்றில் குருமார் வெண்ணிற நீள் அங்கிகூட அணிவதில்லை. வழிபாடு சில சமயங்களில் திருக்கோயில் நடுப்பகுதியிலும் (nave) சில சமயங்களில் கீழ்ப்பகுதி அறையிலும் (chancel) நடைபெற்றது. திருவிருந்தை, சிலர் அமர்ந்தும் மற்றையோர் நின்றுகொண்டும் உட்கொண்டனர். சிலர் தொழுகை நூலைப் படித்தனர். சிலர் ஜெனீவா பாசுரங்களைப் பாடினர். கத்தோலிக்கச் சதிகள் நாட்டைக் கலக்கியபோது கத்தோலிக்கரை மிகுதியாக எதிர்த்த குற்றத்திற்

காகவே நாட்டுப்பற்று மிக்க பியூரிட்டன்களுக்குக் கடுந் தண்டனைகள் வழங்குவதை எதிர்க்கும் உணர்ச்சி மக்களிடையே தோன்றியது. ஒப்பற்ற பியூரிட்டன் தலைவர் 'வெண்ணிற நீள் அங்கிக்காக நாம் இவ்வாறு நடத்தப்படவேண்டும்?' என்றும் 'போப்பினுடைய தலையும் உடலும் நீக்கிய பின்னும் அவருடைய அங்கிக்காகப் போரிட வேண்டுமா?' என்றும் வினவினர். நீள் அங்கி அணிவது தம் விருப்பத்தைப்பொறுத்து இருக்கவேண்டுமென்று விண்ணப்பம் விடுத்தவர்களில் பின்னுளில் ஆர்ச்பிஷப்பாக வந்தவர் இருவரும் இருந்தனர். கிரிண்டாலோ (Grindal) மன்னிப்புக் கோருவதுபோல் மண்டியிட்டு 'இறைவன் நமக்கு நல்ல காலத்தை அளிக்கும் வரை' பொறுத்துக்கொள்ளவேண்டுமென்று கூறினர். பார்க்கர்மட்டும் கட்டுப்பாட்டிற்கு முதலிடம் தரவேண்டுமென்று வற்புறுத்தினர். 'சட்டங்களையும் ஆணைகளையும் செயல்படுத்த வேண்டுமென்றார். கவுன்சிலும், மற்ற குருமாரும் அவருக்கு ஆதரவு காட்டவில்லை. 1566ஆம் ஆண்டில் அவர் வெளியிட்ட 'விளம்பரங்களில்' (Advertisements) அமர்ந்து திருவிருந்து அருந்தவேண்டுமென்றும், குறைந்தது வெண்ணிற நீள் அங்கியாவது அணிய வேண்டுமென்றும் வற்புறுத்தினர். மேலும், சமய குருமார் தொழுகை நூலையும் முப்பத்தொன்பது விதிகளையும் ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று கட்டாயப்படுத்தினர்.

பியூரிட்டன்கள் தங்களுக்கே உரிய வழியில் எதிர்த்துப் போராடினர். அவர்களின் தலைவர்களான கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகப் பேராசிரியர் கார்ட்ரைட் (Cartwright) என்பவரும், வால்டர் ட்ராவர்ஸ் (Walter Travers) என்பவரும் உண்மை அறிவாளிகள். அவர்கள் தங்கள் வாழ்நாட்களின் பெரும் பகுதியினை ஜினிவா வோடும், ஹிடல்பர்க்கோடும் (Heidelberg) தொடர்புகொள் வதிலும், நெதர்லாந்துகளிலுள்ள ஆங்கிலத் திருக்கோயில்களில் தொண்டு செய்வதிலும் கழித்தவர்கள். அவர்கள் 1572ஆம் ஆண்டில் ஆண்டவரின் வார்த்தைகளில், கட்டுப்பாடும் சமயமும் ஒருங்கே அமைந்துள்ளன என்றும், கொள்கையின் அடிப்படையில் 'பாராளுமன்றத்திற்கான எச்சரிக்கை'யை விடுத்தனர். பிஷப்பு களின் தலைமை நீங்கவேண்டுமென்றனர். சமயக் கூட்டத்தினல் தேர்ந்தெடுக்கப்பெற்ற குருமாருக்கு வயதுவந்தோர் உதவி அளிக்க வேண்டுமென்றும் வாதாடினர். 'போப்பின் சாணக் குவியலில் இருந்து எடுக்கப்பெற்ற' தொழுகை நூலைத் துறந்து கால்வினிஸ்டு களின் வழியைப் பின்பற்றவேண்டுமென்றனர். பாராளுமன்றத்தின் பல மசோதாக்களின் அடிப்படையாக இருந்த 'கட்டுப் பாட்டு நூலை' (Book of Discipline) டிரேவர்ஸ் 1574ஆம் ஆண்டு பதிப்பித்தார்.

புரட்சிக்குப் பிறகு திருச்சபை மிகவும் மோசமான நிலையை எய்திய காரணத்தால், பியூரிட்டன் சமய இயக்கம் செல்வாக்குப் பெற்றது. குருமாரின் பற்றுக்குறை கடுமையாகியது. 1561ஆம் ஆண்டில் லண்டன் சமய ஆட்சிப் பிரிவில் ஏறக்குறைய நூறு குருமார் பதவிகள் காலியாக இருந்தன. இழிந்த உலோகாயதம் மேலிருந்து கிழ்வரை திருச்சபையை அழித்தது. இக் குற்றம் புரிவதில் ராணியார் முதன்மையாக நின்றார். ஆக்ஸ்:ஃபோர்டு திருப் பீடத்தை (See) இருபது ஆண்டுகளுக்கும், ஈலி (Ely) திருப்பீடத்தை பதினெட்டு ஆண்டுகளுக்கும் நிரப்பாமல் வைத்திருந்தார். அவைகளின் வருவாயைத் தாமே எடுத்துக்கொண்டார். அரசியல் வாதிகள் பிஷப்புகளின் நிலங்களைக் கைப்பற்றினர். சமயச் சார்பற்ற கோவில் மகிமை வைத்திருந்தோரும், ஆதரவாளர்களும் பெருஞ் செல்வந்தராயினர். 'பையன்கள், அறிவற்ற கழுதைகள்' என்று கார்ட்ரைட் குறிப்பிட்ட குறை ஊதியம்பெற்ற ஊர்ச் சமய குருமாரை அவர்களே நியமித்தனர். அதைப்போலவே கல்வியறிவில்லாப் பணியாளர்களையும் அமர்த்தினர். ஈலியைச் சார்ந்த காக்ஸ் (Cox) போன்ற பிஷப்புகள் தங்கள் குடும்பங்களை வளப்படுத்துவதற்காகக் குத்தகைச் சூதாட்டத்தில் இறங்கினர். இவ்வாறு திருச்சபைச் செல்வமெல்லாம் சீரழிந்த அதே சமயத்தில் பிற இடங்களில் வறுமை சமய வாழ்வை அழித்தது. ஏறக்குறைய ஐந்தின் ஒருபங்கு பாரிஷ்கள் ஸ்தலத்திலேயே தங்குகிற குருமாரின்றித் தவித்தன. குறைந்த ஊதியம் தரப் பட்டதால், குருமாரிடையே பல பதவி தாங்கும் முறைமையும் உரிய இடத்தில் இல்லாதிருக்கும் பழக்கமும் பெருகின. இவற்றின் விளைவாக வேல்ஸ்போன்ற பகுதிகளில் அநேகமாகச் சமய வாழ்வே அற்றுப்போனது என்றே கூறலாம். திருச்சபை நீதிமன்றங்களில் சீர்திருத்தம் ஏதும் தோன்றவில்லை. அவைகள் கழுவாய்க்குப் பதிலாகப் பணம்பெற்றன. அதே சமயத்தில் பேராசை கொண்ட ஒரு குருமார் கூட்டத்தினர் அனுமதிச் சீட்டுகள், கட்டணங்கள் ஆகியவற்றின்மூலம் பிழைத்தனர்.

பாராளுமன்றத்தின்மூலமாக ராணியார், தங்கள் முன்னேற்றப்பாதையைத் தடுத்தார் என்று கண்ட சீர்திருத்தக்காரர்கள் உள்ளிருந்தே வேலைசெய்ய முற்பட்டனர். அவர்கள் 'வருவது உரைக்கும்' முறையால் திருச்சபைத் தலைவர்களின் அனுதாபத்தைப்பெற்றனர். கிழக்கு ஆங்கிலியாவிலும் (East Anglia) மிட்லாந்துகளிலும் ஒழுக்கநெறிச் சீர்திருத்தம், திருமுறைப் படிப்பு என்று தொடங்கிய கூட்டங்கள் சட்டமுறைப்படி இல்லாத பிரஸ்பிடீரியாக உருவெடுத்தது. அவர்கள் திருவுரையே சமயத்தின் உயிர்நாடி என வற்புறுத்தினர். கால்வினின் வினாவிடைகளை

மையமாகவைத்த பல சமயச் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்தனர். சில இடங்களில் திருவிருந்து கொள்ள வருவோரின் ஒழுக்கக் கட்டுப்பாட்டிற்காக நகரசபை அதிகாரிகளும், உறுப்பினரும் சமய குருமாருக்கு உதவியாக இருந்தனர். பார்க்கரின் வாரிசான கிரிண்டாலும் மற்ற பிஷப்புகளும் 'வருவதுரைக்கும்' (prophesyings) வழக்கத்தை முறையாகத் தொடர்ந்து மேற்கொள்ள விரும்பினர். ஆனல், ராணியார் 1576ஆம் ஆண்டில் பெருஞ் சினத்தோடு இவைகளில் தலையிட்டார். இறுதியாக, 'பியூரிட்டன் சமயம் முடியாட்சிக்கு உகந்தது அன்று' எனும் முடிவிற்கு வந்தார். அவருடைய கொள்கையை ஏற்க மறுத்த ஆர்ச்பிஷப்பைப் பதவியிலிருந்து விலக்கி, அன்னர் இறக்கும்வரையில் அவரை இழிவு படுத்தினர்.

இவ்வாறு வெளிப்படையாகச் சீர்திருத்தம் கொண்டுவரும் முயற்சியில் தோல்வியுற்ற பியூரிட்டன்கள் ஓர் இரகசிய அமைப்பை உருவாக்கிச் சட்டமுறை சார்ந்த நிறுவனத்திற்கு எதிராகத் தங்களுடைய 'கிளாசிஸ்' (classis) திட்டத்தைக் கொண்டு வந்தனர். அவர்களின் குருமார், குருமார் திருக்கூட்டத்திற்கு அடங்கி இருந்தனர். பிஷப் பதவியேற்றலை மரபு சார்ந்த ஒன்ருகவே எண்ணினர். 'கட்டுப்பாட்டு நூலி'ல் பற்றுறுதி கொண்டனர். வழிபாட்டில் தாங்கள் வெறுத்த பகுதிகளை விட்டனர். தல சமயச் சபைகளை ஏற்படுத்தி நாட்டுக் கவுன்சில்களையும் உருவாக்கினர். பாராளுமன்றத் தேர்தல்களில் மிகுந்த அக்கறையோடு ஈடுபட்டனர். 1585–87ஆம் ஆண்டுகளுக்கிடையே காமன்ஸ் சபையில் பிரஸ்பிடீரிய திருச்சபை ஏற்பாடு வெளிப்படையாக விவாதிக்கப்பட்டது. பியூரிட்டானியர், குருமார் நிலைபற்றிய தங்களுடைய அறிக்கையைத் தங்கள் அரசியல் தோழர்களிடம் சமர்ப்பித்தனர். உதாரணமாக, அவர்களுடைய வார்விக்ஷயர் (Warwickshire) பட்டியலில் 186 குருமாரில் 120 பேர் 'ஊமையர்' (Dumb) என்றும், மற்றும் 48 பேர் 'திருமறைக்கு அவமானம் போன்றவர்' என்றும் அறிவித்தனர்.

அவர்கள் அதிக வெற்றியடையாததற்கு ராணியார்மட்டும் காரணமல்லர். சில பியூரிட்டன்களின் வன்முறைச் செயல்களும் ஆங்கிலிகன் சமயத்தில் தோன்றிய மாற்றமும் ஓரளவு காரணங்களாக அமைகின்றன. எலிசபெத்தின் ஆட்சி ஆரம்ப காலத்தில் அனபாப்டிஸ்டுகள் (Anabaptists) அல்லது 'அன்புக் குடும்பத்தினர்' (Family of Love) போன்ற பல சமயப் பிரிவினர் ஸ்ட்ராண்டின் மூலை முடுக்குகளிலும், தேம்ஸ் நதியின்மீதுள்ள கப்பல்களிலும் கூட்டங்கள் நடத்தியதை அரசாங்கம் கண்டு

பிடித்தது. ஆயின், இறுதியில் இடரிளைவிளைத்த பியூரிட்டன் சமயப் பிரிவு ராபர்ட் ப்ரௌன் (Robert Browne) என்பவரால் 1580ஆம் ஆண்டளவில் தோற்றுவிக்கப்பெற்றது. அவர், சமயம் என்பது தனிப்பட்டோர் நம்பிக்கையென்றும், திருச்சபை யென்பது அதிகமாக உள்ள தகுதிமிக்கோரின் கூட்டமே என்றும் கருதினர். 'யாருக்காகவும் காத்திராத சீர்திருத்தம்' எனும் தம்முடைய அறிக்கையில் ராணியாரின் ஆதிக்கத்தை அறவே எதிர்க்கவேண்டுமென்றும், சமயப் பிரிவினையே சுதந்திரத்திற்கு வழியென்றும் போதித்தார். ப்ரௌன் திருச்சபைக்குத் திரும்பிய போதிலும், அவரது தீவிர சீடர்கள் தனித்தனியான சமயக் கூட்டங்களை அமைத்தனர். அவர்கள் ராணியாரின் ஆதிக்கத்தை ஏற்க மறுத்ததாலும், புரட்சியைப்பற்றிய வதந்தியின்விளைவாகவும், 1593ஆம் ஆண்டில் பலர் [குறிப்பாக வேல்ஸ் நாட்டைச்சார்ந்த பென்றி (Penry)] மரண தண்டனை அடைந்தனர். அதே ஆண்டில் கொண்டுவரப்பெற்ற சட்டம்ஒன்று இரகசியச் சமயக்கூட்டங்களில் கலந்துகொள்வோருக்கு நாடுகடத்தும் தண்டனை விதித்தது. குருமார் திருக்கூட்டத்தைச் சார்ந்த பலர் ஹாலந்திற்கு ஓடி விட்டனர்.

நடுத்தர பியூரிட்டன் சமயம் கீழ்த்தரமான பிரசாரத்தினுல் மேலும் அழிவுற்றது. இப் பிரசாரத்தின் உச்சநிலை 1588–90 ஆம் ஆண்டுகளில் இரகசிய அச்சுக்கூடம் ஒன்று வெளியிட்ட துண்டுப் பிரசுரங்களின்மூலம் தோன்றியது. மார்டின் மார்பிரிலேட் (Martin Marprelate) என்று கையொப்பமிட்ட பெயர் தெரியாத ஆசிரியர்கள் அரசாங்கத் தணிக்கையை எதிர்த்தனர். உயர்பதவியில் உள்ளோரின் தனிப்பட்ட குறைபாடுகளை வெளிக் கொணர்ந்தனர். உதாரணமாக, லண்டன் பிஷப், ஞாயிறு அன்று முடப்பந்தாட்டம் (bowls) ஆடினர் என்று எழுதினர். கிறித்துவிற்கு எதிரான இழிகுணத்தாரையும், தட்டைமுக் பிஷப்புக் களையும், போதனை செய்யா ஊர் குருமாரையும் கிண்டல் செய்தனர்.

இதற்கிடையில் அவர்களுடைய தாக்குதல்களுக்குட்பட்ட திருச்சபை, ஒப்பற்ற தலைவர் ஒருவரையும் சில பழைய கொள்கை களையும் பெற்றது. 1583ஆம் ஆண்டில் விட்கிஃப்ட் (Whitgift) என்பவர் துயர்மிகுந்த கிரிண்டாலுக்குப் பதிலாகப் பதவியேற்ருர். ராணியாரைக் காதலித்த அவரைத் 'தமது கரியகணவர்' என்று ராணியாரே குறிப்பிட்டார். அவர் கால்வினியக் கொள்கையில் உறுதியான பற்றுடையவராக இருந்தபோதிலும் குருமாரின் சமய தத்துவம், திருமறையே தொழுகைக்கு உத்தரவாதம் எனும்

கருத்து ஆகிய இரண்டு பியூரிட்டன் கொள்கைகள் பொறுக்க முடியாதவை என்று எண்ணினர். கவுன்சிலில் பாதிக்குமேற் பட்டவர் எதிர்த்தபோதிலும், பர்க்ளீ மறுப்புரை தந்தபோதிலும், அவர், குருமார்கள் ராணியாரின் ஆதிக்கத்தினை ஏற்றுக்கொள்ளு மாறு வற்புறுத்தினர். அதைப்போலவே தொழுகை நூலிலோ, முப்பத்தொன்பது விதிகளோ திருமுறைக்கு மாறான எதையும் கொண்டிருக்கவில்லை என்று அறிவிக்குமாறு அவர்களை வற்புறுத் தினர். அவரது கருவியாக உயர்ஆணை நீதிமன்றம் பயன்பட்டது. அது திருச்சபை நீதிமன்றங்கள் யாவற்றையும் பயனற்றுப் போகுமாறு செய்யுமளவிற்கு ஒருமுகப்படுத்தப்பெற்று இருந்தது. அதனுடைய செயல்முறை சமயச் சட்டத்தைச் சார்ந்ததாகும். அது, சமய வெறுப்பு நீதிமன்றங்களைப்போன்றது என்று பர்க்ளி குறிப்பிட்டார். அதில் ஒருவனது வாயிலிருந்தே தான் குற்றவாளி என்பதை வெளிப்படுத்தும் பணித்துறை சார்ந்த பிரமாணம் வற்புறுத்தப்பட்டது. பதவியிலிருந்து தள்ளுவதும், சிறிது காலத் திற்குப் பதவியிலிருந்து நீக்கி வைப்பதும் விதிக்கப்பெற்ற தண்டனைகள். காமன்ஸ் சபையிலும், மாஜிஸ்ட்ரேட்டுகளிட மிருந்தும் வந்த எதிர்ப்பிற்கிடையேயும் விட்கிஃப்ட் இவைகளை வற்புறுத்திவந்தார். அவர் சீர்திருத்தவாதியோடுகூட கண்டிப் பாளருமாவர். திருந்திய முறையில் 'வருவதுரைக்கும்' பழக்கத்தை மீட்டார். பல பதவி வகிக்கும் முறைமையையும், பணிபுரியும் இடத்திலே தங்காதிருக்கும் பழக்கத்தையும், சமய விலக்கைத் தவறான வழியில் பயன்படுத்துவதையும் ஓரளவு கட்டுப்படுத்தினர்.

அந்த நூற்றாண்டின் திருப்பத்தில் ஐரோப்பா முழுவதிலும் ஒருவகையான கத்தோலிக்க எதிர்வினைத் தோன்றியது. இத் தலைமுறையில் கல்வியறிவு நன்கு மதிக்கப்பெற்றது. பகுத்தறிவு மிகுந்த பிஷப்புகளாகிய பார்க்கர், ஜிவெல் போன்றவர் களுடைய முறை ஆங்கிலேயர் நம்பி இருந்த நடுநிலையான திருச்சபை நல்லது என்பதை வற்புறுத்தியது. அவர்கள் திருமறையோடு, பண்டைய சமயத்தில் ரோம் தலையிடுவதற்கு முன்பிருந்த 400 ஆண்டுகளின் அதிகாரத்தையும் வலியுறுத்தினர். விட்கிப்ட்டினுடைய வலக்கையாக இருந்து, வாரிசாக வந்த பான்கிராஃப்ட் (Bancroft) ஒரு புதிய சமயப் பிரிவினுக்குத் தலைமை தாங்கினர். அப் பிரிவினர் எபிஸ்கொபஸி திருச்சபையில் இன்றியமையாதது என்று வாதாடினர். புனிதமான லான்ஸ் லாட் ஆண்ட்ரூஸ் (Lancelot Andrewes) போன்றோரிடையே காணப்பெற்ற ஆங்கிலோ-கத்தோலிக்கக் கடவுட்பற்று வளர்ந்தது. இத்தகையோர் மனத்தில் டியூடர் காலச் சட்டங்களில் காணப் பெறும் கருத்தாகிய இங்கிலாந்தில் சமயச் சீர்திருத்தம்

புரட்சியன்று ; முன்நிலை மீட்சியே என்பதன் பொருள் ஆழமாகப் பதிந்திருந்தது. ரிச்சர்டு ஹூக்கர் (Richard Hooker), ட்ராவர்ஸுடன் பல ஆண்டுகள் வாதிட்டபிறகு 1593ஆம் ஆண்டில் 'சமய அரசியல்' (Ecclesiastical Polity) என்னும் நூலின் முதல் பகுதிகளைப் பதிப்பித்தார். இத்தகைய ஆழ்ந்தகன்ற அறிவுச் சுனையிலிருந்து, காலம் செல்லச்செல்லத் திருச்சபை தனக்கு வேண்டிய ஆதாரங்களைப் பெற்றது. கடவுளின் குரலாக இருந்த சட்டம், படைப்பின் திட்டமாகும். ஆண்டவனின் நன்கொடையான பகுத்தறிவு அத் திட்டத்திலேயே அடங்கி இருக்க வேண்டும். திருமறை அப் பகுத்தறிவினைத் ஒதுக்குவதற்காக வந்ததன்று. அதனை உறம்பெறச் செய்வதற்கே இருந்தது. திருமறையில் பேறு பெறுவதற்கு இன்றியமையாதனவெல்லாம் இருந்தபோதிலும் பல செய்திகளைப்பற்றி அக்கறைகாட்டாது, அறிவிற்கும் பகுத்தறிவிற்குமே விட்டுவிட்டது. வெண்ணிற நீள் அங்கி, திருச்சபையின் புற ஆட்சி போன்றவற்றைப்பற்றி அது கவலைகொள்ளவில்லை. திருச்சபை வளரும் ஆற்றலோடு கூடிய உயிருள்ள சமுதாயமாகும். இன்னோரன்ன கருத்துகள் மலர்ந்தன.

இத்தகைய பகுத்தறிவு ஆராய்ச்சி ஒருநாள் பியூரிட்டன் சமயத்தைச் சமாதானப்படுத்தும் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால், இதற்கிடையில் சமயப் பூசல் அரசியலில் நெருக்கடியை உண்டாக்கியது. காமன்ஸ் சபை உறுப்பினர் 'ராணியாரும் அவரிடம் பற்றுறுதிகொண்ட காமன்ஸ் சபையினரும், நாட்டாட்சிக்குரிய ஒரே நிறுவனத்தினர்' என்று ராணியாரிடம் கூறினர். அதைப்போன்றே உணரவும் செய்தனர். மேலும், ராணியார் தமது முதன்மைக் கவுன்சிலர்களில் சிலரைக் காமன்ஸ் சபையில் வைத்திருப்பதன்மூலம் பூசலைத் தவிர்க்க முயன்றது அவரது பகுத்தறிவைப் புலப்படுத்துகின்றது. எனினும், அவருடைய ஆட்சியில் பெற்ற நன்மைகளே காமன்ஸ் சபையினரிடம் தற்பெருமையோடுகூடிய அதிகாரத்தினை மேம்படுத்தியது. பர்க்ளீயின் அரசியல்முறை நடுநிலைமையோடு பல ஆண்டுகளுக்கு நிலவிய அமைதி, சட்டத்திடம் மக்கள் கொண்ட மதிப்பினை உயர்த்தியது. அதே சமயத்தில் ஏராளமான முக்கிய வேலைகள் மன்ற உறுப்பினரிடம் தரப்பட்டதால் அவர்கள் தங்களுக்கென்றே செயல்முறை ஒன்றினை வகுத்துக்கொண்டனர். இக் காலத்தில்தான் குழு முறையும் உருவாகியது. ராணியாரின் பேராளாகிய சபாநாயகர் இல்லாமல் முழுச் சபையும் குழுவாக அமரும் பழக்கமும், உரிமை, தேர்தல்கள் ஆகியவற்றிற்கான குழுக்களும் உருவாயின.

இத்தகைய அரசியல்முறை சார்ந்த பூசலைப் பெரிதாக்கியது சமயமே. திருச்சபை விதிகளின் வரலாற்றிலிருந்து ஆதிக்கம் தமக்கே உரியது என்று எலிசபெத் ராணியார் வற்புறுத்தியது தெளிவாகத் தெரிகிறது. 1563ஆம் ஆண்டில் குருமார் திருக் கூட்டம் வரைந்த முப்பத்தொன்பது விதிகளுடன் மற்றொரு துணை வாசகத்தையும் ராணியாரே சேர்த்தார். சமயச் சடங்குகளைப் பற்றிய ஆணைகளை வெளியிடும் அதிகாரமும், சமயம் சார்ந்த கருத்து மாறுபாடுகள் தோன்றும்போது தீர்ப்பளிக்கும் அதிகார மும் திருச்சபைக்கு உண்டு' என்பது இங்கே வலியுறுத்தப் பெற்றது. 1571ஆம் ஆண்டுச் சட்டம் சமய குருமார் 1563-ல் தோன்றிய விதிகளைமட்டும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும், அதிலும் கொள்கையைப் பொருத்த விதிகளைத்தான் கடைப்பிடிக்க வேண்டுமென்று வகுத்தபோதிலும் நடைமுறையில் ஆர்ச்பிஷப் புகள் ராணியாராலும், தங்களாலும் திருத்தி அமைக்கப்பெற்ற எல்லா விதிகளையும் கடைப்பிடிக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். குருமார் சபையினலும், ராணியாராலும் செயலுரிமை அளிக்கப் பெற்ற சமயச் சட்டங்களின் முறைசார்ந்த தகுதி எத்தகையது? அவைகள் பாராளுமன்றத்தின் ஒப்புதல் இன்றி, குறிப்பாகச் சமயம் சாராத மக்களை எவ்வாறு கட்டுப்படுத்தும்? என்பது போன்ற விஞக்களெல்லாம் எழுந்தன.

உயர்ஆணை நீதிமன்றம் மக்களின் வாழ்க்கையோடு உணவு, சட்ட அறிவு ஆகியவற்றைக்காட்டிலும் நெருங்கி இருந்தது. எலிசபெத் ராணியாரின் முன்னேர்கள் பல தற்காலிக ஆணைகளைப் பிறப்பித்தனர். அதன்பிறகு, ராணியார் ஆதிக்கச் சட்டத்தின் மூலமாக நிரந்தர நீதி மன்றத்தை நிறுவினர். அதனுடைய அதிகாரங்கள் அச் சட்ட வரம்பிற்குட்பட்டு இருந்தனவா அல்லது அழிக்கப்பெற்ற இடைக்காலத் திருச்சபை நீதிமன்றங்களின் ஆற்றல் எல்லையைக்கொண்டிருந்தனவா என்று பொது வழக்கறிஞர் விவாதித்தனர். உண்மையில் ராணியாரின் பாது காப்பு உரிமைச் சீட்டுகள் (letters-patent), மேரி ராணியார் அளித்த தண்டம் விதித்தல், சிறைக்கனுப்புதல் ஆகிய அதிகாரங்களையே அதற்குத் திரும்பத் தந்தன. அதனுடைய பணிசார்ந்த பிரமாணம் சமயச் சட்டத்திலிருந்து கடன்வாங்கப்பெற்றது. இந்த வாதங்க ளெல்லாம் 1591-ல் கவுட்ரே (Cawdrey) என்பவரின் வழக்கில் மோதிக்கொண்டன. பர்க்ளீயின் பதவிகளில் ஒன்றை வகித்த ஊர் குருவாகிய அவர், நீள் அங்கியை அணிய மறுத்ததோடு, தொழுகை நூல் இழிந்தது என்றும் கூறினர். அதனல் ஆணையாளர் அவரைப் பதவியிலிருந்து நீக்கினர். ராணியாரின் நீதிமன்றம் தன்னுடைய அதிகாரங்கள் சட்டத்தோடு முரண்பட்டு நின்றாலும்,

ராணியாரின் ஆதிக்கத்தின் வலிமையால் சட்டமுறையானவை என்று தீர்ப்பளித்தது.

இங்ஙனம், முப்பது ஆண்டுகளுக்குச் சட்ட அடிப்படையில் கொண்ட கருத்து, சடங்குகள் ஆகியவற்றோடு போராடியது. ராணியார் திருச்சபை மசோதாக்களை நிராகரித்ததும், பாராளு மன்ற உறுப்பினரைச் சிறையிலடைத்ததும், பூசலைப் பாராளு மன்றத்தின் முழுச் சுதந்திரத்தைப் பொறுத்த பூசலாக விரிவாக்கியது. ராணியார் காமன்ஸ் சபையினர் காரணங்களோடு 'உண்டு, இல்லை' என்று கூறும் சுதந்திரம் பெற்றவரே என்று கூறினர். தாராளமான ஆனால், ஒழுங்குவரம்பு கடவாத பேச்சு உரிமை உண்டு. ஆனால், சமய அமைப்பையும் ஓர் அரசாங் கத்தையும் உருவாக்கும் உரிமை கிடையாது. அவர்கள் சுதந்திரம் என்னும் முகமூடியின்கீழ் ராணியாருடைய துறைகளாகிய திருச்சபை, வாரிசுரிமை, கொள்கை ஆகியவற்றில் தலையிடக் கூடாது; ஒவ்வொரு சமையற்காரியும் சமய குருமாரைக் கண்டிக்கத் தொடங்கிவிட்டனர் என்று ராணியார் ஒருமுறை வெறுப்போடு கூறினர். அதைப்போலவே காமன்ஸ் சபையினரும் கடவுளினால் துணிவடைந்து ஆண்டவரின் அருள்வாக்கு என்னும் போர்வையின்கீழ் அவரது அரசாங்கத்தைக் குறைகூற முற்பட்டனர் என்றும் கூறினர். பீட்டர் வென்ட்வொர்த் இத்தகைய செய்தி களுக்குப் பற்றுறுதியோடு, ஆனால் தீவிரமான எதிர்ப்பினைக் கண் டித்தார். இவைகளுக்கு எதிராக வந்த அவரது பேச்சு 'சுதந்திரம் இனிமையானது' என்று தொடங்கியது. அவர் பிஷப்புகளிடம் கொள்கைபற்றிய பிரச்சினைகளை விடுவதில்லை. ஏனெனில், அவ்வாறு செய்தல் அவர்களைப் போப்பாக மாற்றுவதாகும் என எண்ணினர். பாராளுமன்றம் நாட்டு மக்களின் துன்பங்களைப் பற்றிச் சுதந்திரத்தோடு பேசுமிடமாகுமென்று அறிவித்தார். வேறெந்தக் கவுன்சிலும் சட்டத்தை இயற்றவோ, மாற்றவோ கூடாது என்றும், சபாநாயகர் காமன்ஸ் சபையின் பணியாளர் என்றும் அறிவித்தார். பலமுறை சிறையிடப்பெற்ற பிறகு, இறுதியாக 1593-ல் வாரிசுரிமை மசோதாவை ஆதரித்துப் பிரசாரம் செய்ததால் டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பப் பெற்றார். அங்கே நான்கு ஆண்டுகள் அவதியுற்றபின் இறந்தார்.

கவுன்சிலின் நடவடிக்கையினால் மற்ற நீதிமன்றங்களுக்கு எதிராகவும் கூக்குரல் எழுந்தது. அதிகாரத்திற்காக அரசருடைய தனிச்சிறப்புரிமையையும், தனிப்பட்ட ஆணையாளரையும் சார்ந் திருந்த கடற்படைத் தளகர்த்தர் நீதிமன்றம், வடக்குக் கவுன்சில், திருச்சபை நீதிமன்றங்கள், வேண்டுகோள் நீதிமன்றம் (Court of

Requests) ஆகியவைமீது வெறுப்பு வளர்ந்தது. மேலும், அதனுடைய நடவடிக்கைகள் தலைமையுரிமையுடைய ஆட்சி, பாராளுமன்ற ஆட்சியாக, பொதுச் சட்டத்தின் ஆட்சியாக இருக்கவேண்டுமென்று உரிமைகொண்டாடும் பெரும் பிரச்சினை ஒன்றைக் கிளப்பின. இப் பிரச்சினை சமயச்சார்பற்ற மற்ற துன்பங்களின் பயனாக வளர்ந்தது. போர் நிகழ்ந்த காலம் பொதுவாகப் பொருள் விரய காலம். 1589ஆம் ஆண்டிற்குப் பிறகு கொள்ளப்பெற்ற வரிகள் அதற்கு முன்பு முப்பது ஆண்டுகளாகக்கொண்ட வரிகளைப்போன்று மூன்று மடங்காகும். வெளிநாடுகளில் போர்ச் சேவை புரிதற்காகக் கவுன்டிகளில் (county) பயிற்சிபெற்ற குழுவினரும் அல்லது கார்னிஷ் (Cornish) சுரங்கத் தொழிலாளரும் கட்டாயமாகப் படையில் சேர்க்கப்பட்டனர். ஈஸ்டர் திருவிருந்தின்போதுகூடப் புதிய ஆட்களைப் பிடித்துச் சென்றனர். சில சமயங்களில் போரில் முடமான படைவீரரும், பாராளுமன்றத்தின் வாயிலைக் காத்து நின்றனர். கடற்கரை நகரங்கள் கப்பல்களை அளிக்கவேண்டுமென்று அரசாங்கம் ஆணையிட்டது. உள்நாட்டு நகரங்களும் உதவியளிக்கு மாறு வற்புறுத்தப்பெற்றன. உதாரணமாக, யார்க் நகரம் ஹல் லிற்கு (Hull) உதவியளிக்கவேண்டியிருந்தது. அன்னிய நாடுகளில் புரட்சியும் அங்காடிகளில் மாற்றமும் வேலையில்லாத் திண்டாட் டத்தை வளர்த்தன. வாணிபமும் வளமார் தொழிலும் கட்டுப் பாட்டு விதிகளை மீறின. யார்க்ஷயரைச் சார்ந்த துணி வியா பாரிகள் வடக்குக் கவுன்சிலைத் தாக்கினர். உரிமை ஏடு பெற்ற கம்பெனிகளின் தனி உரிமையைக் கள்ள வணிகர் கைப்பற்ற முனைந்தனர். வேலி எதிர்ப்புச் சட்டங்கள் (Anti-Enclosure Act) செல்லரித்தவை என்று காமன்ஸ் சபையினர் பேசினர். திருச்சபை அதிக வட்டிவாங்கும் பழக்கத்தைக் கண்டித்தபோது வணிகர்கள் மறுப்புரை தந்தனர். இப்போது வாழ்க்கைத் தொழிலாக மாறி வந்த பொதுப்பணி திருந்தா இளையோன் குறைகளால் சீர் குலைந்தது. சரியான ஊதியம் அளிக்கவேண்டுமெனும் நோக்கம் காணப்படவில்லை. பதவிகளையும், படைத் தலைமையையும் நாடி வந்தவர்கள் பெரும்பொருளீட்டுவதில் பெரிதும் ஈடுபட்டனர். உயர்மதிபடைத்த வால்ஷிங்காமும் சுங்கவரி திரட்டுவதில் அதிக லாபம் கொண்டார்.

புதிய தொழிலுக்காக அளிக்கும் உரிமையாகவோ, அதிகாரி களுக்கும் ஆதரவாளர்களுக்கும் கட்டுப்படுத்தும் உரிமைச் சீட்டைப் பரிசாக வழங்குவதன்மூலமாகவோ ராணியார் தனி உரிமைகள் வழங்குவதைக் காமன்ஸ் சபை கண்டித்தது. இவ்விதப் பொருளாதார இடரைப்பற்றிக் காமன்ஸ் சபையினர் பல கூட்டங் களில் குறைகூறினர். 1597-8 ஆண்டுகளில் கூடிய காமன்ஸ்

சபைக் கூட்டத் தொடரில் இக் குறைபாடு முதன்மை இடத்தைப் பெற்றிருந்தது. மிகுந்த சினங்கொண்ட அக் கூட்டத் தொடரில் ராணியார் பத்து மசோதாக்களைத் தள்ளுபடி செய்தார். 1601ஆம் ஆண்டில் கூடிய அடுத்த தொடர் மேலும் ஆத்திரங்கொண்டிருந்தது. அதில் உறுப்பினர் கூக்குரலிட்டனர். எச்சில் துப்பினர். அதனால், செசில், அது 'பாராளுமன்றத்தின் சபையாக இருப்பதைவிட ஆரம்பப் பள்ளியாக (Grammer School) இருக்கத் தகுதிபெற்றது' எனக் கூறினர். ராணியார் செசிலின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாது சில தனியுரிமைப் பத்திரங்களை வழங்கினர். வாக்களித்தவாறு அவைகளைச் 'சட்டமெனும் உரைக் கல்லில்' சோதனையிடத் தவறினர். அதே சமயத்தில் சில தனியுரிமைகள் உப்பு, நிலக்கரி அல்லது தோல் போன்ற இன்றியமையாப் பொருள்களைச் சார்ந்தும் இருந்தன. ராலே மட்டிலும் சீட்டுக் கட்டுகள் (playing-cards), தகரம், இனிப்பு மது ஆகியவற்றின் தனியுரிமையைப் பெற்றிருந்தார். இந்நிலையைக் கண்டிக்கும் வகையில் ஓர் உறுப்பினர் 'தனியுரிமை வழங்க ரொட்டிமட்டும் இல்லையா?' என்று கேட்டார். 'ராணியார் தம்முடைய தனிச் சிறப்புரிமையின் துணைகொண்டு, பாராளுமன்றச் சட்டத்தின் மூலமாகச் செய்யும் எதையும் அழிக்கும்போது அச் சட்டங்களினால் ஏற்படும் பயன் என்ன?' என்று மற்றோர் உறுப்பினர் வினவினர். இதனால் ராணியார் பின்வாங்கினர். இறுதி முறையாகக் காமன்ஸ் சபையில் பேசும்போது தாம் 'கைப்பற்றுபவர்' அன்றென்றும், 'விஞ்சுவோரும்' அன்று என்றும் உண்மை நிலையை எடுத்துரைத்தார். 'உண்மைத் தகவல் இல்லாததால்' அனுமதித்த தனிச் சிறப்புரிமைகளை நீக்கினர். எனினும், அரசத் தனிச்சிறப்புரிமையை வலியுறுத்தினர். ஆனால், அவர் கலைத்த பாராளுமன்றம் அவரால் கவரப்பெற்று கண்ணீரிடையே கலைந்தது. அது ராணியாரின் தனிச்சிறப்புரிமையை எதிர்க்கும் பயிற்சி பெற்றிருக்கவில்லை. எதிர்க்கட்சியோவெனின் 1601ஆம் ஆண்டில் கண்டவாறு பழைய, ஆனால், குறைந்த அளவே அரசியல் சட்ட முறை சார்ந்த உருக்கொண்டிருந்தது.

அக் காலச் செருக்கு, சண்டைகள், புகழ் ஆகியவை எஸ்ஸக்ஸிடம் ஒருங்கே காணப்பெற்றன. அவர் நோலிக்களின் பேரன்; லீசெஸ்டரின் மாற்றாள் மகன் (stepson); பிலிப் சிட்னியின் (Philip Sidney) விதவையாகிய வால்ஷிங்காம் மகளின் கணவர். அவர் பர்க்ளீயோடு பதவிப் போட்டியில் இறங்கினர். சட்பன் (Zutphen), ரோவன் (Rouen), லிஸ்பன் (Lisbon) ஆகிய இடங்களில் தீரத்துடன் போர்புரிந்தார். காடிஸ் துறைமுகத்தை அழித்த வீரர் எனும் முறையில் நாட்டு மக்களால் நேசிக்கப்பட்டார். இச்

சமயத்தில் பர்க்ளீ வயோதிகராஞர். எஸ்ஸக்ஸின் எதிரிகளில் ஒருவரான ராலே அவ் வாய்ப்பான திருமணத்திஞல் பெருமை கெட்டுப் புகழ்குன்றி இருந்தார். இளைய செசில் கூனராக இருந்ததோடு நாகரிக நடையாளருமல்லர். எஸ்ஸக்ஸ், அரசியல் ஆதிக்கத்தை அடையவேண்டுமென்ற ஆசை காரணமாக ராணியாரின் மதிப்பைப் பெறுவதற்கு ஐரோப்பாவில் துப்பறியும் திட்டத்திற்காக ஏராளமான பணம் செலவிட்டார். அதோடு தம்மைச் சுற்றிலும் அறிவாளிகளையும் படை வீரர்களையும் வைத்திருந்தார். அவர்கள், கிழ நரியான பர்க்ளீயை அழவைத்துப் பதுங்கச்செய்வர் என்று அந்தோணி பேகன் (Anthony Bacon) கூறிஞர். எஸ்ஸக்ஸ் மெதுவாக ராணியாரைச் சுற்றியுள்ள பதவிகளைத் தம்மிடம் குவித்துக்கொண்டார். சேனையையும், குதிரைப்படைத்தலைவர், ஏர்ல் மார்ஷல்(Earl-Marshall),போர்த் தளவாட உற்பத்தித்துறைத் தலைவர் ஆகியோரையும் கட்டுப்படுத்திஞர். ஆயின், அவருடைய நெருக்குதலையும் அதிகாரத் தனியுரிமையையும் ராணியார் வெறுத்தார். எனவே, அவர் இருமுறை சட்டப் பதவியை இளைய பேரஞகிய ஃபிரான்ஸுக்கு அளித்தார். பர்க்ளீ இறந்த பிறகு ராணியார் எஸ்ஸக்ஸின் மகன் ராபர்ட்டிடம் முழு நம்பிக்கை வைத்திருந்தார்.

துணிகரப் படைவீரரான எஸ்ஸக்ஸ், மனமகிழ்க் கலைகளிஞலும் அரசியாரின் ஆதரவிஞலும் தனி ஆதிக்கத்தை அடைந்தது, இங்கிலாந்திற்கு இன்பமூட்டும் நிகழ்ச்சியாக இல்லை. அவருடைய குறைகேடுகளே அவரை அழித்தன. ஒருசிலரைப்போல ராணியாரின் அவமதிப்பினைத் தாங்கும் ஆற்றல் அவரிடமில்லை. ராணியாரை ஏளனமாகப் பேசத் தொடங்கிஞர். பகைவர்மீது படை வலியைப் பயன்படுத்துவதாகப் பயமுறுத்திஞர். போரை விரும்பும் கட்சியின் தலைவராக இருந்த அவர், மற்றையோர் குறையுடையோர் என்ற தமது கூற்றை மெய்ப்பிக்கவேண்டி, 1599 ஆம் ஆண்டில் அயர்லாந்துப் போரின் தலைமையைத் தாமே ஏற்றுக்கொண்டார். அதற்காக ஏராளமான அதிகாரங்களைக் கேட்டார். தம்முடைய துணைவர்களைத் தாமே அமர்த்திக்கொண்டார். எனினும், அவரால் ஒன்றும் சாதிக்க முடியவில்லை. ஆயின் அறுபது வீரருக்கு நைட் (knight) பட்டம் வழங்கிஞர். மேலும், தம் சேனையைத் தவருக நடத்திச்சென்று அழித்தார். அதன் பிறகு, புரட்சிக்காரரோடு இரண்டகமான பேச்சுவார்த்தைகளைத் தொடங்கிஞர். தம்முடைய பகைவரை வீழ்த்துவதற்காக வேல்ஸ் நாட்டின் துறைமுகம் ஒன்றிலிருந்து அணிவகுத்துச் செல்லத் திட்டமிட்டார். ஆஞல், ராணியார் அவரைத் திருப்பி அழைத்துக்கொண்டார். அரசவைக்குத் திரும்பிவர அனுமதிக்கப்பெற்ருலும், அவர் வகித்து

வந்த பதவிகள் யாவும் பறிபோயின. ஆயினும், அவர் முதன்மை இடத்தைத் தவிர வேறெதையும் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. அவருடைய தங்கையாகிய ரிச் சீமாட்டியின் (Lady Rich) காதலரும், தற்போது அயர்லாந்தில் படைத்தலைவராக இருந்த வருமான மௌன்ட்ஜாயைத் (Mountjoy) தமக்கு உதவியாகத் துருப்புகளை அனுப்புமாறு வற்புறுத்தினார். மேலும், அவர் ஆறும் ஜேம்ஸுடன் தொடர்புகொண்டார். தங்களுடைய 'பெருந்தன்மையுள்ள பராக்'கிற்காகப் (noble Barak) பொதுத் துதிப்பாடல் பாடிய பியூரிட்டன்கள் ஆதரவைப்பெற்றார். மேலும், பின்னாளில் வெடிமருந்துச் சதியில் பங்குபெற்ற இளங் கத்தோலிக்கர் சிலரும் அவர் கட்சியில் சேர்ந்தனர். ஷேக்ஸ்பியரின் ஆதரவாளரான, சௌதாம்ப்டன் (Southampton), பெட்ஃபோர்டு (Bedford), ரட்லண்ட் (Rutland) போன்ற இளமையும், எழுச்சியும், பெயரும், பேரறிவாற்றலும் பெற்ற செல்வந்தரும், படைவீரர் கூட்டத்தினரும் அவருக்குத் துணையாக நின்றனர். மெர்மெய்டு (Mermaid) விடுதியினின்று வந்த தீவிரவாதிகள் இரவுநேரங்களில் தெருக்களில் கொடுவாளோடு தோன்றிக் கூக்குரலிட்டனர். அரசன் ஒருவனை அரியணையில் இருந்து நீக்குவதாகப் பேசும் கூத்தாகிய ஷேக்ஸ்பியரின் 'இரண்டாம் ரிச்சர்டு' (Richard II) நாடகத்தை குலோப் (Globe) மன்றத்தில் அரங்கேற்றினர். அரசவையைக் கைப்பற்றிச் செசிலைப் பதவிநீக்கம் செய்யுமாறு ராணியாரை வற்புறுத்துதல் அவர்தம் திட்டமாகும். 1601ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ஸ்பானியரின் சதிகளைப்பற்றிய பெருங் கூக்குரலோடு எஸ்ஸக்ஸ் சீப்சைடு (Cheapside) மூலமாகக் கலகம், விளைவித்தார். ஆனால், மக்கள் ராணியாருக்கு எதிராகக் கிளர்ந்தெழவில்லை. எனவே, எஸ்ஸக்ஸ் எளிதில் கைதானார். போரை விரும்பியவர்களுக்கெதிராக அவரை எச்சரித்த ஃபிரான்சிஸ் பேகனே (Francis Bacon) அவருக்கு எதிராக ராணியாரின் சார்பில் வழக்குரைஞராக வந்தார். பிரபுக்கள் எஸ்ஸக்ஸிற்கு மரண தண்டனை அளித்தனர்.

நாட்டுச் சிந்துகளும், அவரைக்காணச் சென்றோரின் எண்ணிக்கையும் எஸ்ஸக்ஸின் மரணத்தினால் மக்கள் எத்துணை தூரம் துயருற்றனர் என்பதை வெளிக்காட்டின. ஏனெனில், அவர் அரசத்துரோகியாக இருந்தபோதிலும் மக்களிடையே வளர்ந்துவரும் அமைதியின்மையின் அடையாளமாகத் திகழ்ந்தார். எவ்வாறெனினும், ராணியாரிடம் மக்கள்கொண்ட பற்றுச் சிறிதும் குறையவே இல்லை. பர்க்ளீ தம் மகனுக்கு விட்டுச்சென்ற "ராணியாருக்குச் செய்யும் தொண்டே, இறைவனுக்குச் செய்யும் தொண்டு' எனும் நெறியுரையை அவர்கள் மாற்றியமைக்க

வில்லை. ராணியார் எழுபதாவது வயதை எட்டும் வரையும் களிப்பும், செட்டான வாழ்க்கையினால் வந்த உடல் நலமும் குறையாமலிருந்தார். இவற்றோடு தாம் இறைவனின் கருவி என்ற அசையாத நம்பிக்கைகொண்டிருந்தார். அதை மக்களும் நம்பினர். அவர், 'திருச்சபையின்மீது மேலாதிக்கம் செலுத்த இறைவன் என்னை வைத்திருக்கின்றான்' என்றும் பேசினர். தமது நேர்மையான நோக்கத்தைக் காத்த இறைவனின்பேரால் வெற்றி தேடித் தருவதாகப் படைவீரர்களுக்கும், மாலுமிகளுக்கும் வாக்குறுதி அளித்தார். இந்த நம்பிக்கையில் தம்முடைய ஆட்சிக்கு எதிராக எவர் வந்தாலும் அவரை அழித்த ராணியார் தாம் காதலித்த எஸ்ஸக்ஸையே வீழ்த்தினர். தமது உடல் வலிமை நீடித்தவரை அதிகாரத்தைக் கைக்கொண்டிருந்தார். இங்ஙனம் அவரது ஆட்சியின் இறுதியாண்டுகள் ஒளிவிட்டன. அயர்லாந்தில் பெற்ற வெற்றியினாலும், ஆஸ்டண்டைக் காத்த நியூபோர்ட் (Nieuport) சண்டையில் டச்சுக்காரருக்குத் துணையாக நின்ற ஆங்கிலப்படை அடைந்த வெற்றியினாலும் ராணியாருடைய ஆட்சியின் இறுதியாண்டுகள் ஒளிவிட்டுப் பிரகாசித்தன.

ஆனால், புதுயுகம் ஒன்று தோன்றியதாக அனைவரும் உணர்ந்தனர். அரசவையினர், ஸ்காட்லாந்தின் அரசர் ராணியாரின் வாரிசாக வரவேண்டும் என்பதை இரகசியமாக ஒப்புக்கொண்டனர். எடின்பர்க் நகருக்குச் செல்லும் அஞ்சல் குதிரைகள் தயாராக நின்றன. தமது நினைவு இழக்கும் வரை விட்கிஃப்டைத் தமதருகிலிருந்து துதிபாடுமாறு செய்த ராணியார் 1603ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 24ஆம் நாள் இறைவனடி சேர்ந்தார்.

## சமகால நிகழ்ச்சிகள்

*1574-89* ஃபிரான்ஸ் நாட்டின் மூன்றாம் ஹென்றி.

*1575* அக்பர் வங்காளத்தை வெல்லுதல்.

*1576* கென்டைச் (Ghent) சமாதானப்படுத்துதல்.
லண்டன் நகரில் முதல் நாடக அரங்கம் தோன்றுதல்.
*—1612* பேரரசர் இரண்டாம் ருடால்ஃப் (Rudolf II).

*1578* தாழ் நாடுகளில் ஆஸ்திரியாவின் டான் ஜானுக்குப் பிறகு அலெக்சாண்டர் ஃபார்னஸ் (Alexander Farnese) பட்டத்திற்கு வருதல்.
லிலி (Lyly) எழுதிய 'Euphues'.

1579 டுப்ளிசிஸ் மோர்னே (Duplessis Mornay) எழுதிய 'Vindiciae contra Tyrannos'.
போலந்தில் சோசினஸ் (Socinus).

1580 ரஷ்ய புத்தாய்வாளர் சைபீரியாவில் (Siberia) புகுதல்.
ஸ்பானியர் போர்ச்சுகலைக் கைப்பற்றுதல்.

1581 நெதர்லாந்துகளின் ஆட்சியை ஆஞ்சு ஏற்றுக் கொள்ளுதல்.

1582 கிரிகோரியன் ஆண்டுக் குறிப்பேடு புகுத்தப் பெறல்.
ஹாக்லூட்ஸ் எழுதிய 'Voyages.'

1584 பேசா வில்லியம் (William the Silent) கொல்லப் படுதல்.

1585 ஸ்பானியரும் கைஸ்களும் நவரேயின் ஹென்றியைத் தாக்குதல்.
ஷேக்ஸ்பியர் லண்டனில் குடியேறுதல்.

1586 சட்ஃபனில் (Zutphen) சிட்னி கொல்லப்படல்.
காம்டன் (Camden) எழுதிய 'Brittannia'.

1589 ஃபிரான்சில் நான்காம் ஹென்றி பட்டத்திற்கு வருதல்.
ஆம்ஸ்டர்டாமில் ஆர்மீனியஸ் (Arminius) போதனை செய்தல்.

1590 ஸ்பென்சர் (Spencer) எழுதிய 'Faerie Queene'.

1592 மான்டெய்ன் (Montaigne) மறைவு.
கொரியாவின்மீது ஜப்பானியப் படையெடுப்பு.

1593 நவேரின் ஹென்றி மாஸுக்குச் (Mass) செல்லுதல்.
ஹூக்கர் எழுதிய 'Ecclesiastical Polity'.

1595 டாஸ்ஸோவின் (Tasso) மறைவு.
ஜாவாவில் டச்சுக்காரர் குடியேற்றம்.

1596 டெஸ்கார்ட் (Descartes) பிறத்தல்.

1597 நாஸ்ஸாவைச் (Nassau) சார்ந்த மாரிஸ் (Maurice) ஸ்பெயினை எதிர்த்தல்.
பேகன் எழுதிய முதல் 'Essays'.

1598 நான்ட்ஸ் ஆணைகள் (Edict of Nantes)
இரண்டாம் ஃபிலிப்பின் மறைவு.

1599 சல்லி (Sully) ஃபிரான்சின் நிதி நிலைமையைத் திருத்தி அமைத்தல்.

1600 கிழக்கிந்தியக் கம்பெனியின் தோற்றம்.

மின்சாரத்தைப்பற்றி கில்பர்ட் நூல் எழுதியது.

ஷேக்ஸ்பியர் எழுதிய 'Midsummer Night's Dream'.

1602 போட்லியன் (Bodleian) நூலகத் திறப்பு விழா.

1603 சாம்ப்லெயின் (Champlain) கனடாவிற்குப் பயணமாதல்.

ஷேக்ஸ்பியர் எழுதிய 'Hamlet'.

அல்தூசியஸ் (Althusius) அரசியல் கோட்பாடுகள் பற்றி எழுதுதல்.

# 6. ஸ்காட்லாந்து, 1370–1603

ஸ்காட்லாந்து நூறு ஆண்டுகள் போரின் விளைவாகப் புதிய பாதுகாப்பொன்றைப் பெற்றது. அதனுடைய சுதந்திர வாழ்வைப் பறித்துக்கொள்ளும் முயற்சியில் இடைக்கால இங்கிலாந்து தோல்விகண்டது. இவ்விரு நாட்டு மக்களும் ஒத்த பண்புகளைப் பெறும் வரையில் ஐக்கியம் ஏற்படாதிருத்தல் இருவருக்குமே நல்லதாக இருந்தது.

வளமற்று, வறுமை மிகுந்த நாடாகிய ஸ்காட்லாந்தில் 1500ஆம் ஆண்டில்கூட மக்களின் எண்ணிக்கை ஒரு மில்லியனுக்கும் குறைவாகவே காணப்பெற்றது. ஓநாய்கள் உலவும் காடுகள் நிறைந்த, இயற்கையாய் அமைந்த நான்கு பகுதிகளைக் கொண்டது அந் நாடு. அவற்றில் பிக்டுகளும் (Picts), ஆர்கைலும் (Argyll) ஆட்சிபுரிந்த மலைப்பாங்கான தீவுகள் ஒருபகுதியாகும். டால்ரியாடாவைச் (Dalriada) சார்ந்த ஸ்காட்டுகள் வாழ்ந்த தீவுகள் மற்றொரு பகுதியாகும். பிறிதொன்று ஸ்ட்ராத்கிளைட் என்றழைக்கப்பெற்ற குன்றுகள் நிறைந்த தென்மேற்குப் பகுதி. இன்னொன்று ஆங்கிள் (Angle) குடியேறிகளும், நார்மானியப் பிரபுக்களும் (Norman) நிறைந்த தென்கிழக்குச் சமவெளி. ஸ்காட்லாந்தியர் கம்பளம், தோல், மீன் ஆகியவைகளை ஏற்றுமதி செய்தனர். அவைகள் பெரும்பாலும் ஃப்ளஷிங் தீவிலுள்ள (Isle of Flushing) ஸ்டேபிலுக்குச் (Staple) சென்றன. மேலும், ஸ்காட்லாந்தியர் கப்பல் கட்டும் தொழிலில் தேர்ந்தவராகவும் மீன் பிடிக்கும் தொழிலில் வல்லவராகவும் விளங்கினர். ஆயினும் அவர்களது தொழிலும், வாணிபமும் திருத்தமுறாத நாட்டுப்புறம் சார்ந்த சமுதாயத்தையே நம்பி இருந்தன. அச் சமுதாயமோ தலத்தில் கிடைத்த ஓட்ஸ் (oats) தானியத்தைக்கொண்டு செய்த ரொட்டியைத் தின்று, ஏல் (ale) எனும் மாத்தேறலை அருந்தி உயிர் வாழ்ந்தது. வாழ்விற்காக மாட்டு மந்தைகளையும், ஆட்டு மந்தைகளையும், மீன்களையும் நம்பி இருந்தது. போர்க்காலந் தவிர, மற்றக் காலங்களில் ஒழுங்கமைதி பெறாத ஒரு சமுதாயமாக இருந்தது.

இத்தகைய பிளவுக்கான காரணங்களோடு எளிதில் இடர் விளை விக்கும் இங்கிலாந்தின் எல்லையும் சேர்ந்துகொண்டது. இவ் வெல்லை வடகிழக்குத் திசையில் சாய்வாக 70 மைல் நீளத்திற்குச் சதுப்பு நிலங்கள், ஆழமான சமவெளிகள் ஆகியவற்றின் வழியாக ஓடியது. அப் பகுதிகளில் மூடுபனியில் படைகள் மடிந்திருக் கின்றன. அங்கே விடுதியான ஆவினங்களும், நாடுகடத்தப் பெற்றோரும் பாதுகாப்பாக மறைந்துகொள்ளும் வாய்ப்பு மிகுதியாக உண்டு. அவ்வெல்லைப் பகுதியில் ஆம்ஸ்ட்ராங்கினர் (Amstrongs), எலியட்டினர் (Elliotts), ஃபென்விக்கினர் (Fenwicks), கிரீமினர் (Graemes) ஆகியோர்கள் முரட்டு வாழ்க்கை நடத்தினர். தலைக்குத் தலை, பழிக்குப் பழி என்னும் பண்போடு வாழ்ந்துவந்தனர். இரு நாடுகளின் எல்லைக் காவலரையும் எதிர்த்துத் தொல்லைகள் தந்தனர். அவ்விடத்தில் வீடுகள் கொளுத்தப்பட்டன. வேட்டை நாய்கள் விரட்டியடித்தன. கோல்டுஸ்ட்ரீம் (Coldstream) துறவிக் கன்னிகளும், ரிடஸ்டேல் (Redesdale) கொள்ளைக்காரரும் ஆங்கிலச் சேவையிலிருந்தனர். பெண் ஒற்றர் வேவு பார்த்தனர். இங்ஙனம் சால்வே (Solway), டிபேடபிள் லாண்ட் (Debatable Land) ஆகிய வற்றிற்கும் மேல் டைன் (Tyne) ஆற்றிற்கும் இடைப்பட்ட எல்லைப் பகுதி எப்போதும் குமுறிக்கொண்டிருந்தது. சில ஆண்டு களுக்கொருமுறை தீமை என்னுந் தீ, குன்றுகளைக் கடந்து எடின் பர்க்கையும் அடைந்தது.

இங்கிலாந்திலிருந்து கொண்டுவரப்பெற்ற லோதியனைச் (Lothian) சார்ந்த நிலமானியமுறை ஸ்காட்லாந்தை ஒன்று படுத்தவில்லை. அஃது இங்கிலாந்தில் இருந்ததைப்போல் பாராளு மன்றமுறை அரசாங்கமாகவும் வளரவில்லை. இராபர்ட் ப்ரூஸ் (Robert Bruce) தம்முடைய போர்களுக்குப் பணமளிக்க வணி கர்களை வரவழைத்தார். அவருடைய மகனுரின் ஆட்சி இறுதியில் மூன்று சபைகள் (Estates) ஏற்றுக்கொள்ளப்பெற்றன. எனினும், வரி வாங்குவது அநேகமாக இயலாமல் இருந்தது. பிரதிநிதிகள் சபைகளுக்கு ஒழுங்காக வருவதில்லை. பண்ணையாளருக்குப் (lairds) பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை. ஸ்காட்லாந்துப் பாராளுமன்றத்தின் வரலாறு ஸ்பானிய அல்லது ஃபிரெஞ்சுப் பாராளுமன்றங்களின் வரலாறுகளை ஒத்திருந்தது. அது வளர்ச்சி யின்றி இடைக்காலத்தைச் சார்ந்ததாகவே இருந்தது. ஒற்றைச் சபைப் பாராளுமன்றமாகிய அதில் பொதுமக்கள் சபை ஒழுங்கு முறையான வாழ்வையோ சபாநாயகரையோ பெற்றிருக்கவில்லை. மூன்று சபைகளும் பிரதம மானியதாரர்களைப் பகர்க்கும் நில மானியச் சபைகளாகவே இருந்தன. ஒவ்வொரு சபையிலும் உறுப்பினர் மாறுபட்ட உடைகளை அணிந்து தனித்தனியாகப்

பிரிந்திருந்தனர். தனித்தனியாகவே கூடி வரிகளுக்காக வாக்களித்தனர். அஃது இங்கிலாந்தின் பாராளுமன்றத்தைப்போலவே அரசருடைய விரிந்த கவுன்சிலாகத் தொடங்கியது. ஆனால், தொடக்ககாலத் தன்மையினை இழக்காமல் இருந்து வந்தது. பின்னாளில் கன்வென்ஷன் சபை (Conventions) என்று அழைக்கப் பெற்ற ஆரம்பகாலக் கவுன்சில் சபைகள் நீதி வழங்குவதைத் தவிர மற்றெல்லாப் பாராளுமன்ற வேலைகளையும் செய்தன. இத்தகைய சபைகளில் அரசர் வேண்டியவர்களைத் திணிப்பது எளிது. அதே சமயத்தில் எப்போதோ ஒருமுறை கூடும் பாராளுமன்றம் சட்டசபையாக இருந்ததைக்காட்டிலும், ஆவணக் களரியாகவும் (Court of Registration), பொது மன்றமாகவுமே காணப்பெற்றது. அரச பரோக்கள் தங்களுக்கென்றே ஒரு கன்வென்ஷன் சபையினைப் பெற்றிருந்தன. அச்சபை அவர்களுடைய தனி நலன்களைப்பொறுத்த ஆணைகளைத் தயார் செய்தது. அதே சமயத்தில் முதலிலிருந்தே ஆணையாளர் குழுக்களிடம் பணிகளை ஒப்படைப்பது வழக்கமாக இருந்தது. பதினைந்தாம் நூற்றாண்டில் இவர்கள் சட்டப் பிரபுக்களாக மாறினர் (Lords of the Articles). இக் குழு வழக்கமாகச் சட்டங்களை முதலிலேயே ஆராயும் அதிகாரிகள் அடங்கிய குழுவாக இருந்தது. அது பாராளுமன்றக் கூட்டங்களுக்கிடையில் பணியாற்றியது. இதற்கிடையில் டேவிட்டும் அவர் வழிவந்தோரும் மற்றொரு குழுவிலிருந்து குற்ற விசாரணை நீதிமன்றம் ஒன்றை (Court of Session) உருவாக்கினர். பாராளுமன்றம் உயர் நீதிமன்றமாகத் தொடர்ந்து பணியாற்றியது.

இராபர்ட் ப்ரூஸ் தம் கட்சியினருக்கு மானியம் வழங்குவதன் மூலமாகவும், டேவிட் விடுதலைப் பணம் அளிக்கும் சுமையைக் கொடுத்தும் நாட்டை வறியதாக்கினர். செல்வந்தர்களுக்கு மானியங்களையும் உரிமைகளையும் அளித்து வந்ததால் வறுமை தொடர்ந்து வந்தது. ஸ்காட்லாந்தியர் மெலிந்ததற்கு அவ் வாய்ப்பும் ஓரளவு காரணமாகும். டேவிட் இறந்ததும், முன்பே ஏற்பாடு செய்திருந்ததற்கிணங்க, அவருடைய சகோதரி மார்ஜோரி (Marjorie) யின் கணவராகிய இராபர்ட் (Robert) பட்டத்திற்கு வந்தார். அவர் நூறு ஆண்டுகளுக்கு ஸ்காட்லாந்தில் நிரந்தரமாக ஸ்டீவர்டு (Steward) பதவி வகித்துவந்த ஷ்ராப்ஷயரைச் சார்ந்த ஃபீட்ஸ் அலன்கள் (FitzAlans) பிரிவின் தலைவர். ஆனால், இரண்டாம் இராபர்ட்டும், மூன்றும் இராபர்ட்டும் வயோதிகத்தில், வலிமை குன்றிய நிலையில் ஆட்சிக்கு வந்தனர். அதன் பிறகு, பதின்மூன்று ஆண்டுகளே ஆட்சிபுரிந்த முதலாம் ஜேம்ஸ் பதினறு ஆண்டுகள் இங்கிலாந்தின் சிறையில் கழித்தார். அதன் பிறகு, ஆறும் ஜேம்ஸ்

ஆட்சிக்காலம் உட்பட ஒவ்வோர் ஆட்சியிலும் வயது முதிராதவர் பட்டத்திற்கு வந்தனர். இந் நிலை காரணமாக ஸ்காட்லாந்தில் வாழ்ந்த இருவித நிலமானிய முறைகள் உருவாவதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. உண்மையான நிலமானியமுறை சார்ந்த (feudalism) குறுநிலத் தலைவன் அல்லது பழங்குடியினரின் அதிகாரங்கள் தீவுகளிலும், வடக்கிலும் மேம்பட்டு இருந்தபோதிலும், அவைகள் அதிகக் கேடு பயப்பனவல்ல. ஆயின், ஃபிரெஞ்சுக்காரரால் 'இணைக்கப்பெற்ற' (appanaged) நிலமானிய முறைதான் பேரிடர் விளைப்பதாக இருந்தது. பழம்பெருங் குடிகளோடு மணவினைத் தொடர்புகொண்டு, பதவிகள், பண்ணைகள்மூலமாகத் தங்கள் வளத்தைப் பெருக்கிக்கொண்ட அரச குடும்பத்தினரின் அதிகாரமே இதன் உயிர்நாடியாகும். இவ் வழியில் தோன்றிய டக்லஸ் (Douglas), லென்னுக்ஸ் (Lennox), ஹாமில்டன் (Hamilton) ஆகிய பிரபுக்களின் குடும்பத்தினர் அரசருக்குத் தொல்லை தந்தனர். இதைத்தவிர, ஒருவிதமாக உவளக அரசியல் (harem) கேடு விளைவித்தது. உதாரணமாக முதல் மனைவியின் மக்கள் இரண்டாம் மனைவியின் மக்களோடு போராடினர். பேராசைகொண்ட பரத்தையர் மக்கள், பிரபுப் பதவிக்காகவும் மடத்தலைமைப் பதவிக்காகவும் சண்டை பிடித்தனர். மேலும் ஃபிரெஞ்சுப் படைகளிலும், ஸ்பானிய, பிரஷ்ய சமயச்சண்டைகளிலும் போரிட்டுப் பெரும் புகழ்பெற்றுப் போரையே விரும்பிய பிரபுக்களை அடக்கியாளுதல் கடினமாக இருந்தது.

மூன்றும் இராபர்ட் பெயருக்கு ஸ்காட்லாந்தை ஆண்டபோதும், முதலாம் ஜேம்ஸ் சிறைப்பட்டு இருந்தபோதும், இராபர்ட்டின் தம்பியாகிய ஆல்பனி (Albany) என்பவர், டக்ளஸ் ஏர்ல்களுடன் காப்பாளர் அதிகாரத்தைப் பகிர்ந்துகொண்டார். தம்முடைய உறவினரான ரோதிசே (Rothesay) என்பவரின் மர்ம மரணத்திற்கும், ஜேம்ஸின் நீண்ட சிறை வாழ்க்கைக்கும் அவர் பொறுப்பாளி என்பது நிரூபிக்கப்படவில்லை. ஆயினும், அவர் காலத்தில் ஸ்காட்லாந்தின் வலிமை குன்றவில்லை. ஆங்கில அரசர் இரண்டாம் ரிச்சர்டின் அமைதிக்கொள்கையும், லங்காஸ்டிரியர்களிடையே (Lancastrians) இருந்த இடர்ப்பாடுகளும், அக்காலை நடந்த ஃபிரெஞ்சுப்போரும் ஸ்காட்லாந்தியருக்கு வெற்றி கிடைக்குமாறு செய்தன. 1411ஆம் ஆண்டில் அபர்டீனுக்கு (Aberdeen) அருகே ஹார்லா என்னுமிடத்தில் ஆல்பனி பெற்ற வெற்றி தீவுகளின் வலிமை மிகுந்த பிரபுவின் அதிகாரத்தை அழித்தது. காப்பாளரின் மறைவிற்குப் பிறகு ஆண்ட, உண்மையிலேயே உரம் பெற்ற மன்னர் இருவர் பிரபுக்களின் அதிகாரத்தை அழிக்க முனைந்தனர். முதலாம் ஜேம்ஸ் இங்கிலாந்திலிருந்து தம்முடைய

ப்யூ∴போர்ட் (Beaufort) மனைவியோடும், சிறந்த ஆளும் திறமையோடும், பகைவரைப் பழிவாங்கும் உறுதியோடும் திரும்பிவந்தார். ஓராண்டுக் காலத்திற்குள் தம்முடைய உறவினரான இரண்டாம் ஆல்பனியைக் கொன்றார். பிரபுக்கள் பதவிகளை எவ்வாறு பெற்றனர் என்பதை அறிய குவோ வாரன்டோ (quo warranto) விசாரணை செய்யப் பாராளுமன்றத்தின் உதவியைப் பெற்றார். லென்னக்ஸ் ஏர்ல்டமை (earldom) அடக்கினார். அதைத் தொடர்ந்து மார்ச்சையும் (March), மாரையும் (Mar) அடக்கினார். பல சட்டங்களை இயற்றி, மக்களின் வாழ்க்கையைக் கடினமாக்கினார். பாராளுமன்றத்தை இன்வர்னஸில் (Inverness) கூட்டியதோடு, சட்டங்களை ஸ்காட்லாந்திய மொழியில் வெளியிட்டார். ஒருசில செல்வந்தரைப் பாராளுமன்றத்தில் மரபுரிமையாக வரும் பிரபுக்களாகச் செய்தார். பண்ணையாளரைப் பாராளுமன்றக் கூட்டங்களில் ஒழுங்காக வந்து கலந்துகொள்ளச் செய்யும் முயற்சியில் ஈடுபட்டார். 43 வயதே நிரம்பிய அவரை 1437-ல், சதிகாரர் பெர்த் என்னுமிடத்தில் கொன்றனர். அவருடைய உறவினரான அத்தோலும் (Athol), அரசரால் துன்புற்ற செல்வந்தரும் சதியில் சேர்ந்திருந்தனர்.

இரண்டாம் ஜேம்ஸ் ஏழு வயதுச் சிறுவனாகப் பட்டத்திற்கு வந்தார். அவர்தம் அமைச்சர்கள், அவருடைய பெயரைப் பயன் படுத்தித் தங்கள் அதிகாரத்தைப் பெருக்கிக்கொள்ள எண்ணினர். அதன் விளைவாக அவர்கள் முதலில் வலிமைமிக்க டக்ளாஸைத் தாக்கினர். தென்மேற்கு ஸ்காட்லாந்து முழுவதிலும் ∴போர்டரிலிருந்து ஜெட்பர்க்வரையிலும் பரவியிருந்த கரிய டக்ளாஸின் (Black Douglas) ஆதிக்கம் இராபர்ட் ப்ரூஸின் நண்பராக இருந்த மேன்மையான சர் ஜேம்ஸ் காலத்திலிருந்து வந்த ஒன்றாகும். இரண்டாவது ஏர்லாகிய ஜேம்ஸ் 1388-ல் புகழ்பெற்ற அட்டர்பர்ன் (Otterburn) இராச் சண்டையில் கொல்லப்பட்டார். அவர் பாடல்களால் பெருமை செய்யப்பெற்ற வீரர். மூன்றாவது ஏர்லான கொடூரமான ஆர்ச்சிபால்டு (Archibald the Grim), ஆல்பனிக்கு எதிராகப் போரிட்டார். நான்காவதாக வந்த டைனிமேனை (Tyneman) ஆர்ச்சிபால்டு பர்சிக்களுக்கு எதிராக ஹோமில்டனில் (Homildon) சண்டைசெய்யும்போது, ஒரு கண்ணை இழந்தார். ஷ்ரூஸ்பரியில் நான்காம் ஹென்றிக்கு எதிராக ∴பிரெஞ்சுக்காரர் பக்கமிருந்து போரிட்டு, ∴பிரெஞ்சு அரசரிடமிருந்து ஒரு டச்சு மாகாணத்தைப் பெற்றார். இளைஞரான அரசருக்காக ஆட்சிபுரிந்த லிவிங்ஸ்டன்கள் (Livingstones), கிரிச்டன்கள் (Crichtons) ஆகியோர் ஆறும் ஏர்லையும், அவருடைய சகோதரரையும் பிடித்துக் கொன்றனர். ஆனால், வெகு விரைவிலேயே வீரிய மிக்க புது டக்ளாஸ் தம் பகைவரைப்

பிரிக்கும் ஆற்றல் பெற்றிருந்தார். அரசியல் திருமணங்கள் மூலமாகவும், ஹெலந்தியருடன் நட்புறவுகொண்டும் பகைவரைப் பழிவாங்க முனைந்தார். இரண்டாம் ஜேம்ஸ் பருவமடைந்து, உள்ள உரங் கொண்ட பர்கண்டிய (Burgandian) இளவரசி ஒருவரை மணந்துகொண்டார். அரசாங்கத்திற்கு வந்த ஆபத்திற்கு எதிராக அறைகூவல் விட்டார். செயின்ட் ஆன்ட்ரூஸின் பிஷப்பும், அந் நகரப் பல்கலைக் கழகத்தின் ஆதரவாளருமான போற்றுதற்குரிய ஜேம்ஸ் கென்னடியின் துணைகொண்டு டக்ளாஸின் கோட்டைகளைத் தாக்கினர். கேட்டதைத் தர டக்ளாஸ் மறுத்ததால், ஜேம்ஸ் தம்முடைய கட்டாரியால் அவரைக் குத்தினர். அவரைத் தொடர்ந்து அவரது ஆட்களும் டக்ளாஸைக் குத்தி ஸ்டர்லிங் கோட்டையின் முற்றத்தில் வீழ்த்தினர். எனவே, டக்ளாசின் சகோதரரான ஒன்பதாவது ஏர்ல் இங்கிலாந்தோடு உடன்படிக்கை செய்துகொண்டார். அதனால் ஜேம்ஸ் அவரை இங்கிலாந்திற்கு நாடுகடத்தினர். அவரது கோட்டைகளைப் பீரங்கி கொண்டு தாக்கி அழித்தார். கரிய டக்ளாஸ்கள் இருந்த இடத்தில் செவ்விய டக்ளாஸ்களாகிய ஆங்கஸ் (Angus) ஏர்ல்கள் மேம்பாடடையுமாறு செய்தார். புத்தேற்புச் சட்டங்களினால் (Acts of resumption) பெருவாரியான நிலங்களை அரசருக்குச் சொந்தமாக்கினர். அதேசமயத்தில், ஆரும் ஹென்றியுடன் செய்து கொண்ட ஒப்பந்தம் நூறு ஆண்டுகளாக இழந்திருந்த ராக்ஸ்பர்க்கையும் (Roxburgh), பெர்விக்கையும் (Berwick) 1460-61ஆம் ஆண்டுகளில் மீட்டுத் தந்தது.

முற்றுகையின்போது பீரங்கியொன்றைச் சரிபார்த்துக்கொண்டிருந்தகாலை, பீரங்கி ஒன்று வெடித்ததால் இரண்டாம் ஜேம்ஸ் கொல்லப்பட்டார். பின்னாளில் மூன்றும் ஜேம்ஸாக வந்த இளைஞரின் ஆட்சி, ஸ்காட்லாந்து அரசாங்கம் வலிமையுற்று இருந்ததென்பதைத் தெளிவாக்கியது. அரச மாதாவும், பிஷப் கென்னடியும் இறந்தபோது, பாய்டு குடும்பத்தினர் (Boyds) மன்னர் மீதும் பாராளுமன்றத்தின்மீதும் ஆதிக்கம் செலுத்தினர். அரசர் தனித்து வளர்ந்தார். கலைகளில் ஆர்வம்மிக்கு இருந்தார். செல்வந்தர்களால் வெறுக்கப்பெற்று, தாழ்ந்த வகுப்பில் பிறந்த நண்பர்களைப் பெற்று வாழ்ந்தார். போர்ப்பண்பு மிகுந்த தமது சகோதரர்களிடமிருந்து மாறுபட்டு நின்றார். நல்வாய்ப்புப் பல ஆண்டுகளுக்கு அவரை நாடிவந்தது. லங்காஸ்ட்ரியச் சதிகளினாலும் ஃபிரெஞ்சுப் போர்களினாலும் நான்காம் இங்கிலாந்து மன்னரான எட்வர்டு அமைதியாக இருந்தார். மேலும், ஸ்காட்லாந்திய நாடுகடத்தப்பெற்ற டக்ளாஸை உள்ளே வரவொட்டாமல் தடுப்பதை அனுமதித்தார். அதே சமயத்தில் அவர் டேனிஷ் இளவரசியை மண

முடித்ததால், ஆர்க்கனிஸ்களையும், ஷெட்லாந்துகளையும் மீட்க முடிந்தது. ஆனால், 1479 ஆம் ஆண்டுமுதல் அவருக்குத்தொல்லைகள் தொடர்ந்து வந்தன. அவர்தம் ஆலோசகர்கள் அவருடைய சகோதரரைத் தாக்குமாறு ஊக்குவித்தனர். எனவே, அவருடன் பிறந்தாருள் ஒருவர் சிறையில் மடிந்தார். உயிர்தப்பிய ஆல்பனி நான்காம் எட்வர்டோடு இணைந்துகொண்டார். அவருக்கு எதிராக ஃபிரான்சின் பதினோராம் லூயி ஸ்காட்லாந்துப் போர் ஒன்றைக் கிளறினர். இங்ஙனம், ஆங்கிலப் படையெடுப்பும், அரசருடைய ஆத்ம நண்பர்களின் அகால மரணமும், பெர்விக்கின் இழப்பும் அடுத்தடுத்து வந்தன. ஆனால், இங்கிலாந்தில் எட்வர்டு மரணமடைந்தார். ஆல்பனி புதிதாக நாடுகடத்தப்பெற்றார். இங்கிலாந்தில் பூசல்கள் தோன்றின. இவைகளெல்லாம் ஸ்காட்லாந்து அரசரைச் சிறிது காலத்திற்கு அழியாமல் காத்தன. இருப்பினும் பிரபுக்களின்மீது அவர் காட்டிய வெறுப்பினால் அவருக்கு எதிராக ஒரு கூட்டிணைப்பு உருவாகியது. டக்ளாஸ் சிறையில் கிடந்து வாடியபோதிலும், தீவுகளின் பிரபு ஒடுக்கப்பெற்றபோதிலும், அவர்கள் இருந்த இடத்தை நிரப்பிய புதிய குடும்பத்தினரான ஆங்கஸ், ஆர்கைல், ஹெப்பர்ன்கள் (Hepburns) ஆகியோரும் பேராசை பிடித்தவர்களாக இருந்தனர். தூரத்தே இருந்த ஹென்றி டியூடரினால் ஊக்குவிக்கப்பெற்ற அவர்கள் மூன்றாம் ஜேம்ஸின் மகனாரைத் தந்தைக்கு எதிராகத் தூண்டினர். ஸ்டர்லிங் அருகில் நேர்ந்த கைகலப்பிற்குப் பிறகு, அரசரைப் பிடித்துக் கொன்றனர்.

நான்காம் ஜேம்ஸின் காலத்திலிருந்து ஐக்கியத்தை உருவாக்கிய புதிய யுகம் ஒன்றைக் காணமுடிகின்றது. இக் காலத்தில் ஸ்காட்லாந்து இங்கிலாந்தின்மீது கொண்ட வெறுப்பு வேறு எக்காலத்தும் இல்லாத அளவிற்கு இருந்தது. எனினும், இக் காலைப் புது நோக்குடைய தலைமுறை தோன்றுவதற்கான காரணங்களும் காணப்பெறுகின்றன. 15ஆம் நூற்றாண்டில் ஸ்காட்லாந்தின் நாகரிகம் வேகமாக முன்னேறியது. செயின்ட் ஆண்ட்ரூஸ் (1414), கிளாஸ்கோ (Glasgow) (1451), அபர்டீன் (Aberdeen) (1495) ஆகிய மூன்று பல்கலைக்கழகங்கள் தோன்றியதால் மாணவர்கள் பாரீஸ் நகருக்குப்போவது தேவையற்றதாகியது. நில்க்கிழார்களின் மக்கள் இலத்தீன் மொழியைக் கற்கவேண்டுமென்று நான்காம் ஜேம்ஸ் ஆணையிட்டார். அவரே ஸ்காட்லாந்தின் முதல் அச்சுக்கூடத்தை நிறுவினார். அவருடைய காலத்தில் டன்பார் (Dunbar), காவின் டக்ளாஸ் (Gavin Douglas) ஆகிய புலவர்கள் வாழ்ந்தனர். சாசர் (Chaucer) இங்கிலாந்திற்குச் செய்த இணையற்ற தொண்டினைப்போல் இவர்கள் ஸ்காட்லாந்

திற்குச் செய்தனர். போஸியும் (Boece), ஜான் மேஜரும் நாட்டுப் பற்று மிகுந்த வரலாற்று அறிஞராகத் திகழ்ந்தனர். போஸி அபர்டீன் பல்கலைக் கழகத்தின் முதல் தலைவராக இருந்தவர்.

நாட்டு வளத்திற்கு மற்றொரு சான்றாகக் கடற்கொள்ளை வணிகர்கள் விளங்கினர். ஆண்ட்ரூ உட்டும் (Andrew Wood), பார்ட்டன்களும் (Bartons) வடகடலைக் கலக்கினர். தம் அரசருடைய டென்மார்க் உறவினருக்கு ஸ்வீடன் நாட்டவருடன் போர்புரிய உதவும்பொருட்டுப் பல கப்பல்களைப் பிடித்துத் தந்தனர். மேலும், இங்கிலாந்திற்கும் அயர்லாந்திற்கும் இடையேயான போக்கு வரத்தினைத் துண்டிப்பதாக பயமுறுத்தினர். மீன் பிடிப்புச் சட்டங்களும் ஃபிளீமியர் குடியிறக்கமும் நாட்டின் செல்வத்தைப் பெருக்கின. இக் காலத் தொடக்கத்தில், இங்கிலாந்திலிருந்தும் பொஷ்மியாவிலிருந்தும் லாலார்டுகள் (Lollards) ஸ்காட்லாந்தை வந்து அடைந்தனர். அவர்களில் சிலர் தங்கள் உயிரைப் பணயம் வைத்துத் தம்முடைய சமயத்தை நிரூபித்தனர். 1494ஆம் ஆண்டில் புறச்சமயத்தார் (heretics) அயர்ஷயரில் (Ayrshire) பெருகி யிருந்தனர். இங்கேதான் பிற்காலத்தில் பிரஸ்பிடீரியன் சமயம் வெறிகொண்டு இருந்தது. இவைகளோடு ஸ்காட்லாந்தில் இங்கிலாந்துடன் போரிடுவதற்கு எதிராக ஓர் உணர்வு தோன் றியது. ஃபிரான்சுடன் கூட்டுச் சேருவதைக்காட்டிலும் மக்களின் மனம், வாணிபத்தையும் குறைந்த வரிவிதிப்பையும் நாடியது.

நான்காம் ஜேம்ஸ் பெண்களிடம்கொண்ட மையலில் சாலமனை ஒத்திருந்தாலும், அறிவாற்றலில் அவரைவிடத் தாழ்ந்திருந்தார். ஆனால், ஆர்வம் மிகுந்து சுறுசுறுப்புக்கொண்டவராக இருந்தார். அவர் அணிந்திருந்த இரும்புச் சங்கிலியும், அவர் பல திருக்கோயில் களுக்குச் சென்றுவந்ததும் தம்முடைய தந்தையாரைக் கொன்றது அவர் மனத்தை வேல்கொண்டறுத்தன என்பதைப் புலப்படுத்தும். ஆயின், அவரது ஆன்மா சுமையற்று இருந்தகாலை, அவர் செயல் வீரராகத் திகழ்ந்தார். பலமுறை படையெடுத்துச் சென்றபின், இறுதியாகத் தீவுகளில் வாழ்ந்த மக்களை முறியடித்தார். அவர் களின் பரந்துபட்ட நிலப்பரப்பின்மீதான ஆதிக்கத்தை ஹன்ட்லி (Huntly), ஆர்கைல் ஆகிய இரு குடும்பத்தார்க்கும் பகிர்ந்தளித்தார். கப்பல் கட்டும் தொழிலிலும், வெளிநாட்டு நடவடிக்கைகளிலும் அவருக்கு இருந்த ஆர்வம் ஐரோப்பாவில் ஸ்காட்லாந்தின் நிலையை உயர்த்தியது. அதே சமயத்தில் பொதுவாகச் செல்வந் தர்கள் அவரிடம் பற்றுறுதிகொண்டிருந்தனர். இவற்றிலிருந்து உறுதியான உள்ளம் படைத்த அரசர் நாட்டினை இணைக்கமுடியும் என்பது வெளிப்பட்டது.

இப் பொதுப்பணிவிற்கு விலக்காக வந்தவர் ஆங்கஸ் ஒருவர் தான். டக்ளாஸ்களின் ஆசைகளை அப்படியே பெற்றிருந்த அவர், டியூடரின் ஊடுருவல் கொள்கையை உருவாக்கிய ஏழாம் ஹென்றி யின் கையாளாக மாறினர். எனினும், ஹென்றி அமைதி வழியில் ஆக்கந்தேட முடியுமானல் அவ்வழியையே பின்பற்றுபவர். எனவே, ஆரம்பகாலத்தில் தம் மகள் மார்கரெட்டை (Margaret) ஜேம்ஸுக்கு மணமுடித்துவைக்க முன்வந்தார். இறுதியாக ஜேம்ஸ் வார்பெக்கைக் (Warbeck) கைவிட்டவுடன், 1503ஆம் ஆண்டு அம் மணவினை நடந்தேறியது. இங்ஙனம், ஸ்காட்லாந்து வாரிசுரிமையில் இங்கிலாந்திற்கு நேரடியான அக்கறை ஏற்பட்டது. ஆயின், ஃபிரான்ஸின்மீது எட்டாம் ஹென்றி நிகழ்த்திய வலுத் தாக்குதல், அவர் ஸ்காட்லாந்தின் கப்பல்களைத் தான்தோன்றித் தனமாக நடத்தியது, ஆங்கிலேயர் ஆண்ட்ரூ பார்டனைக் கொன்றது, நிரந்தரமான எல்லைப் பூசல்கள் ஆகியவை ஃபிரான்சோடு நெருங்கி யிருக்கவேண்டுமென்ற ஜேம்ஸின் எண்ணத்தை வலுப்படுத்தியது. அதன் விளைவாகத் தோன்றிய ஃபிளாடன் (Flodden) சண்டையில் பெருந்தோல்வி ஏற்பட்டது. இஃது இராணுவமுறை சார்ந்த தோல்விமட்டுமன்று. அதன் விளைவுகள் பயங்கரமானவை. போர்க்களத்தில் அரசரோடு பன்னிரண்டு ஏர்ல்களும், பதினன்கு பிரபுக்களும் வீழ்ந்தனர். 'கானக மலரும் கருகியது'. இச் சண்டையில் ஒரு தலைமுறை சார்ந்த செல்வந்தர் அழிந்தனர். இங்கி லாந்தின் இறுமாந்த சக்தி இங்கிலாந்துடன் மறுமுறையும் போரிடல் கூடாதுதென்று கூறியவரின் கட்சியைப் பலப்படுத்தியது. மேலும், ஸ்காட்லாந்து எதிர்காலத்தில் பன்னாட்டு அரசியலின் பகுதியாகியது.

ஐந்தாம் ஜேம்ஸின் இளமைக் காலத்தில் ஸ்காட்லாந்தில் அதிகாரமானது மாறுபட்ட கருத்தினரிடையே மாறிமாறிச் சென்றது, மூன்றாம் ஜேம்ஸின் சகோதரரின் மகனும் ஃபிரெஞ்சு ஆதரவாளருமான ஆல்பனி, அவருடைய எதிரியும் ஹமில்டன் குடியின் தலைவருமான அர்ரன் (Arran), அரசமாதாவாகிய மார்க்க ரெட் டியூடர் ஆகியோரிடையே மாறிமாறி வந்தது. மார்க்கரெட், ஃபிளாடன் போருக்குப்பின் ஓராண்டுக் காலத்திற்குள் ஆங்கசை மணந்துகொண்டார். அடுத்த பதினைந்து ஆண்டுகளில் குழப்பநிலை காணப்பெற்றது. அக் காலப் பகுதியில் ஆல்பனி அடிக்கடி ஃபிரான்சிற்குச் சென்றுவந்தார். இறுதியில் ஃபிரான்சுக்கே பின் வாங்கினர். மார்க்கரெட், ஆங்கஸோடு சண்டையிட்டுக்கொண் டார். டக்ளாஸ்களுக்கும் ஹாமில்டன்களுக்குமிடையே எடின்பர்க் கில் தெருச்சண்டைகள் நடந்தன. தெற்குப் பிரபுக்களில் பாதிப் பேருக்குமேல் ஆங்கிலேயரிடமிருந்து பணம்பெற்று அவர்களை

ஆதரித்தனர். தமது மைத்துனரான ஜேம்ஸைத் தம்வசப்படுத்து வதற்காக எட்டாம் ஹென்றி போர்டரைத் தாக்குதற்கு சர்ரே (Surrey) என்பவரை அனுப்பினர்.

ஹென்றியின் வன்முறைச் செயல் ஸ்காட்லாந்தியரைத் துன்பத்திற்குள்ளாக்கியது. 1528ஆம் ஆண்டில் டக்ளஸ், ஆங்கஸை விரட்டிவிட்டுத் தனியுரிமையைக் கைப்பற்றியது ஜேம்ஸிற்கு உதவியாக இருந்தது. ஆனால், அவர் ஆம்ஸ்ட்ராங்குகளைத் தாக்கியதும், போர்டர் தீவுகள், ஆர்கைல் ஆகியவற்றைத் துன்புறுத்தியதும், போர்டரைக் கொள்ளையிட்டதும், பிஷப்புகளைச் சார்ந்திருந்ததும், இரு ஃபிரெஞ்சு மனைவிகளைத் தொடர்புகொண்டிருந்ததும் செல்வந்தர்களுக்குச் சோதனையாக வந்துசேர்ந்தன. அதே சமயத்தில் ஸ்காட்லாந்தில் தோன்றிய சமயப்புரட்சி ஹென்றிக்குச் சாதகமாக அமைந்தது. ஏனெனில், அவர் அஞ்சியதெல்லாம் கத்தோலிக்கக் கூட்டிணைப்பிற்குத்தான். மேலும், அவர் ஸ்காட்லாந்தியர் முதலில் ஐரிஷ் மக்களுக்கு உதவியதை அறிவார். அவர் ஜேம்ஸிற்கு ஆங்கில அரியணையை அடையும் உரிமையினை அளிப்பதாகப் பசப்பியதும், அவரைப் போப்பிற்கு எதிராகச் செயற்படுமாறு தூண்டியதும் விழலுக்கிறைத்த நீராயின. ஜேம்ஸ் தம்முடைய இரண்டாவது மனைவியாகிய கைஸைச் சார்ந்த மேரி, கார்டினல் பீட்டன் (Cardinal Beaton) ஆகியோருடன் பழைய குறிக்கோள்களை நிறைவேற்றவே முனைந்தார். பிரபுக்களின் ஆலோசனையைப் புறக்கணித்துப் போரைத் தொடர்ந்தார். இங்ஙனம் சால்வே மோஸ் (Solway Moss) என்னுமிடத்தில் படுதோல்வி அடைந்தார். அவருடைய ஆதரவைப் பெற்றவரான ஆலிவர் சிங்கிளேர் (Oliver Sinclair) இறந்தது அவருக்கு ஆற்றொணாத் துயரை அளித்தது. ‘சிங்கிளேர் இறந்ததால் எல்லாம் அழிந்தது’ என்று ஜேம்ஸ் எண்ணியதாக ஜான் நாக்ஸ் (John Knox) கூறினர். இங்ஙனம் மனமொடிந்த ஜேம்ஸ் முப்பது வயது முடியுமுன்னே—போரிலே தோல்வி கண்ட ஒரு திங்களுக்குள் மடிந்தார். அவர் மறைவதற்கு ஒருவாரத்திற்குமுன் அவரது மகள் மேரி பிறந்தாள். அவரே பிற்காலத்தில் ஸ்காட்லாந்தின் ராணியானர். ஜேம்ஸின் இருபுதல்வரும் இறந்துவிடவே, ஒரு பெண்வழியாக ஸ்டூவர்டுகளுக்குக் கிடைத்த ஸ்காட்லாந்தின் அரசுரிமை பெண்வழியாகவே மற்றொரு குடும்பத்திற்குச் செல்லவேண்டுமென்று அறிவித்தார்.

இச் சமயம் மேரிக்கும் இங்கிலாந்தின் வாரிசான இளவரசர் எட்வர்டுக்கும் திருமணம் செய்வதன்மூலம் இரண்டு நாடுகளையும் ஐக்கியப்படுத்துவது இயற்கையாகவும், ஏற்கெனவே நிர்ணயித்ததாகவும் காணப்பெற்றது. ஆனல், எட்டாம் ஹென்றி ஸ்காட்

லாந்தின்மீது முழு உரிமை கொண்டாடியதும், அவருடைய படைகள் எடின்பர்க்கையும், ஹாலிரூடையும் (Holyrood) தீக்கிரையாக்கியதும் இங்கிலாந்திற்கு ஆதரவாக இருந்தவற்றை அநேகமாக அழித்தன எனலாம். ஆயினும், பக்லியூச் (Buccleuch) ஸைச் சார்ந்த பண்ணையாளர் ஒருவர், 'டெவியோட்டேல் (Teviot-dale) முழுவதையும் தீக்கிரையாக்கித் தரைமட்டமாக்கினாலும்' இங்கிலாந்து கூட்டுறவிற்கு உண்மையுடன் இருப்பதாக அறிவித்தார். ஹென்றியின் தூண்டுதலோடு பீட்டன் கொலை செய்யப்பட்டபோது, ஃபிரெஞ்சுப்படையொன்று ஸ்காட்லாந்திற்கு வந்தது. 1548-ல் மேரி ஃபிரான்சிற்குச் சென்றார். சாமர்செட்டினுடைய படையெடுப்பும், 1550 ஆம் ஆண்டில் நார்த்தம்பர்லாந்து செய்துகொண்ட இழிந்த சமாதானமும் ஸ்காட்லாந்தில் ஃபிரெஞ்சு ஆதிக்கம் வலுப்பெறுவதற்கு வாய்ப்பாக இருந்தன. கைஸைச் சார்ந்த மேரி காப்பாளராக நியமிக்கப்பெற்றார். 1559 ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்து மேரி ஃபிரான்சின் இராணியானார். அவருக்குப் பிறந்த வாரிசு இல்லாதவிடத்து, ஸ்காட்லாந்தின் சிங்காதனம் ஃபிரான்சிற்குக் கிடைக்கவேண்டுமென்னும் இரகசிய ஒப்பந்தமும் ஏற்பட்டது. இங்ஙனம் ஸ்காட்லாந்தில் ஃபிரான்சின் ஆதிக்கம் உச்சநிலையை எய்தியது. எலிசபெத் இராணியார் எவ்வாறு ஸ்காட்லாந்து பிராட்டஸ்டென்டுகளோடு இணைந்து இக் கூட்டினை அழித்தார் என்பதை முன்பே கண்டோம்.

சமயப் புரட்சிக்குமுன் ஸ்காட்டிஸ் சமயம் இங்கிலாந்தைக் காட்டிலும் ஜெர்மன் வகையை ஒத்திருந்தது. அங்கே பிஷப்புகள் பெருஞ் செல்வந்தராக இருந்தனர்; பீட்டன்களைப் போன்று அமைச்சர்களாக இருந்தனர்; டக்ளாஸ், ஹாமில்டன் போன்று பெருங்குடிப் பிறந்தவராகவும் இருந்தனர்; திருச்சபை நிலங்களிலும், பதவிகளிலும் செல்வந்தர் அக்கறைகொண்டிருந்தனர். நிதி பெருகுவதற்குத் திருச்சபை நேர்மையற்ற கொடிய வழிகளைக் கடைப்பிடித்தது. உழவர், கோவில் மகமையால் பெரிதும் துன்புற்றனர். விதவைகளிடமிருந்தும் அநாதையரிடமிருந்தும் பிணமனைக்காகப் (mortuary) பசுவும், படுக்கைவிரிப்பும் கூடப் பறிக்கப்பட்டன. திருச்சபையினர் ஒழுக்கங்கெட்டிருந்தனர். மோரேயின் பிஷப்பான ஹெப்பர்ன் பத்துப் பிள்ளைகளுக்குத் தந்தையாக விளங்கினார். 1520–29 ஆண்டுகளில் லூதரன் நூல்களும், டைண்டேலினுடைய (Tyndale) டெஸ்டமென்டும் ஸ்காட்லாந்திற்கு வந்தன. விட்டன்பர்கிலிருந்து புறச்சமயத்தைக் கொண்டுவந்ததற்காக, அரசகுடும்பத்தைச் சேர்ந்தவராக இருந்த போதிலும், பாட்ரிக் ஹாமில்டன் (Patrick Hamilton) 1528 ஆம் ஆண்டில் தீயிலிடப்பெற்றார். 1530–39 ஆண்டுகளில் திரிதுறவிகள்

(friars) பலர் துன்புற்றனர். அதே சமயத்தில் பல சீர்திருத்தக் காரர்கள் நாட்டைவிட்டோடினர். அவர்களோடு பின்னுளில் ஆறும் ஜேம்ஸின் ஆசிரியரான புக்கானனும் (Buchanan) ஓடினுர். டேவிட் லிண்ட்சே (David Lindsay) தாம் எழுதிய சட்டயர்ஸ் (Satires) எனும் நூலினுல் ஸ்காட்லாந்தின் ஏராஸ்மஸ் (Erasmus) போன்றோர் பற்று மதிப்பின்மை மிகுதியாகக் காணப்பெற்றது. இங்கிலாந்தின் உதாரணமும், ஸ்காட்டிஷ் மொழியில் வெளிவந்த பைபிளும் கிளர்ச்சியைத் துரிதப்படுத்தின. இவ்விதக் கிளர்ச்சி ஜார்ஜ் விஷார்ட் (George Wishart) என்னும் பிரசாரகரால் மேற்கிலும் டண்டியிலும் மேலோங்கியது. 1546-ல் அவர் செய்த தியாகமும், அதைத்தொடர்ந்து பீட்டன் கொல்லப்பட்டதும் கிளர்ச்சியை உச்சநிலைக்குக் கொண்டுசென்றன. விஷார்ட்டுடன், ஹாடிங்டனைச்சார்ந்த ஜான் நாக்ஸ் வேலை செய்தார். செயின்ட் ஆண்ட்ரூஸ் கோட்டையில் பீட்டனைக் கொன்றவர்களோடு இணைந்தார். அதன் காரணமாக ஃபிரெஞ்சுச் சிறைகளில் துன்புற்ருர்; வட இங்கிலாந்தில் பணிபுரிந்தார்; மேரி பட்டத்திற்கு வந்ததும் ஜெனீவாவிற்கு ஓடினுர். இத்தகைய அனுபவங்களும் கால்வினுடைய போதனைகளும் திருச்சபை ஆட்சியின் மாதிரியை அவருக்கு அறிவுறுத்தின என்ருலும், அவர் ஸ்காட்லாந்தின் லூதர் ஆனதற்கு அவரிடம் காணப்பெற்ற பண்புகளே காரணமாகும். ‘இருளும் ஒளியும் வாழ்கின்ற இடத்து’ சீர்திருத்த ஒளி ரோமனிசத் தூதுவரைத் தோற்கடிக்கும் என்ற உறுதி காணப்பெற்றது. அவரைப்பற்றி எலிசபெத் ராணியாரின் தூதர் ‘பரமபிதாவின் பிரிவி கவுன்சிலைப்போல்’ உறுதி அளித்தார் என்றும், அவரது குரல் ‘500 ஊதுகொம்புகளைவிட ஒருமணி நேரத்தில் அதிக உணர்ச்சியூட்டும் வல்லமை வாய்ந்தது’ என்றும் எழுதினுர்.

அவர் நாடு கடத்தப்படுவதற்கு முன் பிராட்டஸ்டென்ட் கதைப் பாடல்கள் ‘இரவு நீங்கியது’ என இசைத்தன. மேரி ராணியார் ஃபிரான்சிலிருந்து திரும்புவதற்குள் பிராட்டஸ்டென்ட் சமயம் அசைக்கமுடியாததாயிற்று. நாக்ஸ் 1555–6ஆம் ஆண்டுகளில் ஜேம்ஸ் ஸ்டுவர்ட் பிரபு, ஆர்கைல், லெதிங்டன் (Lethington), ஃபீப் (Fife)ஐச் சார்ந்த பண்ணையாளர் ஆகியோரின் அனுதாபத்தைப் பெற்ருர். மேலும், இங்கிலாந்திலும் ஸ்பெயினிலும் அச்சுறுத்தப்பெற்ற காப்பாளரின் ஃபிரெஞ்சு அரசாங்கம் உள்நாட்டில் சமய ஒறுத்தல் செய்யத் துணியவில்லை. இதனுல், அவர் ஓரளவு பயமின்றி இருந்தார். செல்வந்தரும் சீர்திருத்தவாதிகளும் இணைந்ததே பிராட்டஸ்டென்ட் வெற்றிக்குக் காரணமாகும். பண்ணையாளர் திருச்சபையின் நிலங்களின்மீது நாட்டங்கொண்டனர்.

இத்தகைய கூட்டு உண்மைச் சமயத்திற்கு உகந்தது அன்று ஆயினும், அஃது ஒன்றே சீர்திருத்தத்தினைக் காக்கும் வழியாக இருந்தது. இங்ஙனமாகத் திருக்கூட்டப் பிரபுக்கள் (Lords of the Congregation) தோன்றினர். திறமைசால் துடுக்குத்தனத்தின் வெற்றியே அவர்தம் வினையாள் முறையாகும். முதலில் வழிபாட்டுச் சுதந்திரத்தை வேண்டிநின்ற அவர்கள் வலிமையுற்று 1558ஆம் ஆண்டில் தங்களுடைய பிரசாரகர்களை அடக்குவதற்கும், சமய ஒப்பந்தம் ஒன்றினை நிறைவேற்றுவதற்கும் காப்பாளர் மேற்கொண்ட முயற்சியை முறியடித்தனர். அயர்ஷயர் மக்களைப் போன்றோருடைய சமய ஆர்வம் அவர்களுக்கு அரணாக அமைந்தது. அதனோடு, அவர்கள் அரசியல் அடிப்படையில் கத்தோலிக்கரின் அனுதாபத்தையும் பெற்றனர். இந்த அனுதாபம் ஃபிரெஞ்சுக்காரருக்கு அடிமையாக இருப்பதை எதிர்க்கும் உணர்ச்சியின் அடிப்படையில் எழுந்தது.

நாக்ஸின் வருகையோடும், பெர்த், செயின்ட் ஆண்ட்ரூஸ் ஆகிய இடங்களில் உள்ள திருக்கோயில்களின் அழிவோடும், 1559ஆம் ஆண்டு மே மாதம் ஆரம்பித்த புரட்சி 1560ஆம் ஆண்டு எடின்பர்க் உடன்படிக்கையையும், அதைத் தொடர்ந்து பாராளுமன்றத்தையும் கொண்டுவந்தது. ராணியாரின் அனுமதியின்றியே கூடிய இப் பாராளுமன்றத்தில் பண்ணையாளர் ஏராளமாகக் குவிந்திருந்தனர். அது நாக்ஸின் சமயக்கோட்பாட்டு அறிவிப்பினை ஏற்றுக்கொண்டது. போப்பின் அதிகார வரம்புகளை அழித்தது. ஒழுக்கங்கெட்டு, கிர்க் திருச்சபைக்குத் தீமை பயக்கும் தீயோராக இருந்த அவர்தம் பழக்கங்களையும் அழித்தது. மரண தண்டனை விதித்து மாஸ் தொழுகையைத் தடைசெய்தது. முதல் கட்டுப்பாட்டுநூல் நாக்ஸ் ஜெனீவாவில் பயன்படுத்திய வழிபாட்டு நூலை ஏற்றுக்கொண்டது. அதே சமயத்தில் பொதுச்சபை முதலாகக் கிர்க் குரு கூட்டம், பாரிஷ் திருச்சபைப் பணியாளர் ஆகியவை ஈருக உள்ள திருச்சபை ஆட்சிமுறையை அமைத்துத் தந்தது. ஆனால், மானியம் அளிக்கும் பிரச்சினையில்மட்டும் அது செல்வந்தர்களுக்கு விட்டுக்கொடுக்க வேண்டியதாயிற்று. திருச்சபையின் வருவாயில் மூன்றில் ஒரு பகுதியை அரசுக்கும், திருச்சபை குருமாருக்கும் ஒதுக்க ஏற்பாடாயிற்று. எஞ்சிய இரண்டு பங்கு பெயரளவில் பழைய கத்தோலிக்கர் நலன்களைப் பாதுகாக்க அளிக்கப்பட்டது. ஆனால், நடைமுறையில் அப் பங்கு திருச்சபைச் சொத்துகளைச் சூறையாடிய சமயம் சாரா மக்களுக்கே சென்றது.

இங்ஙனம்,காகிதத்தில்காணப்பெற்றபிராட்டஸ்டென்ட் சமய ஏற்பாடு அழியாமலிருக்க மற்றொரு இருபது ஆண்டுகள் போராட

வேண்டி இருந்தது. அந்த ஏற்பாட்டில் மூன்று குறைபாடுகள் காணப்பட்டன. இதனைக் காப்பதற்காக இங்கிலாந்தின் படை சார்ந்த தலையீடு தேவைப்படலாம். ஆனால், அது நாட்டுப்பற்று கொண்டவரின் உணர்விற்குப் பகையானது. அஃது எடின்பர்க் நகரமும், தென்னாட்டு நகரங்களும் நீங்கலாக உள்ள மற்றப்பகுதி களில் சிறுபான்மையினர் போற்றியதாக இருந்தது. மேலும், திருச்சபைக்கும் அரசுக்கும் இடையே தீவிரப் போராட்டம் தோன்றுவதற்கான கூறுகளைத் தன்னகத்தேகொண்டிருந்தது.

அனைத்து நாடுகளிலும் சீர்திருத்தம் அரசியற் போட்டிகளின் விளைவாகச் சமயத்தினைக் களங்கப்படுத்தியது கண்கூடானது. ஆயினும், 1562-90ஆம் ஆண்டுகளுக்கிடையில் இக் களங்கம் ஸ்காட்லாந்தில் மிக அதிகமாகக் காணப்படுகிறது. இங்கிலை மேரியின் நடத்தை, குழந்தை ஒன்றைச் சார்ந்திருந்த வாரிசுரிமை, இங்கிலாந்தின் கொள்கை, தனியார் ஆசை, குழுப்பூசல்கள் ஆகிய வற்றின் விளைவுகள் எனலாம். நாட்டுப்பற்றுகொண்டவர் இரு நாடுகளுக்குமிடையே அமைதியான முறையில் ஐக்கியம் ஏற்படு வதையும், சமயப்போரைத் தவிர்க்கவும் விரும்புவர். மேரி ராணி யாரின் ஆரம்பகால ஆலோசகர்களான பரத்தையின் மகனும், பிராட்டஸ்டென்ட் பற்று மிகுந்தவரும், ராணியாரின் இளையோரு மான ஜேம்ஸ் ஸ்டூவர்ட்டும் (பின்னாளில் காப்பாளர் மோரே) ஸ்காட்லாந்தின் அறிவு மலர் என்று எலிசபெத் ராணியாரால் ஏற்றப்பெற்ற லெதிங்டனைச் சார்ந்த மெய்ட்லண்டும் முதலில் இவ் வெண்ணததையேகொண்டிருந்தனர். ஆனால், எலிசபெத்தும் மேரியும் ஸ்காட்லாந்தின் அமைதியை அழித்தனர். எலிசபெத் தம்முடைய வாரிசை நியமிக்காததை ஆங்கிலேயர் தாப்பிலிருந்து பார்க்கும்போது புரிகின்றது. ஆயினும், அதுவே மேரியை நம்பிக்கையிழந்த செயல்களில் ஈடுபடத் தூண்டியது. மேரி சமயச் சீர்திருத்த எதிர் இயக்கத்தின் தியாகியாக உயிர்விட்டபோதிலும், அவரைத் 'தமது உணர்ச்சிகளுக்கு அடிமையானவர்' என்றே போப்பின் சமயத்தவர் குற்றஞ் சாட்டினர். அவர் முதல் நிலையில் பெண்ணாகவும், அதற்கடுத்த நிலையில் ராணியாகவும், இறுதியாகக் கத்தோலிக்கராகவும் இருந்தவர். 1568ஆம் ஆண்டில் அவர் இங்கிலாந்தை அடைந்ததும் தமது கூந்தல் ஒப்பனை செய்பவரை அழைத்தார். சிறையில் வதிந்தபோது கத்தோலிக்கச் சமயத்தோடு, புத்தாடைகளும் அவர்தம் மனதில் நிறைந்திருந்தன. அவர் நீலிக் கண்ணீர் வடிப்பதிலும், போர்வீரருடன் புரவிமீது செல்வதற்கான தீரத்திலும் நிகரற்றவர். சினங்கொண்ட டார்ன்லியை அவருடன் சேர்த்துச் சதிசெய்தவரைக் காட்டிக்கொடுக்கவைத்த ஆற்றலும், தம்மைச் சிறையிலிட்டுக் காத்தவரைக் கவரும் ஆற்றலும்

கொண்டிருந்தார். அதோடு உறுதியான உள்ளமும், பழி வாங்கும் பண்பும் பெற்றிருந்தார். டார்ன்லியின்மீது அவர் கொண்ட காதல் ஆறு மாதங்களில் மறைந்தது. அதைப்போலவே பாத்வெலை மறப்பதற்கு நீண்டகாலம் ஆகவில்லை. அரியணையைத் திரும்ப அடைவதற்காக மணமுறிவு செய்துகொள்ள முயன்றார். பாத்வெலின் பேழையிலிருந்து கைப்பற்றிய கடிதங்களும், பாடல்களும் தந்த, நிரூபிக்க முடியாத சான்றுகளின்மூலமாக இல்லை எனினும், மேரியினுடைய செயல்களின் சான்றுகள் அவர் எலிசபெத் ராணியாரைக் கொல்லச் சதி செய்தார் என்பதும், டார்ன்லியின் கொலைக்கு மறைமுக இணக்கம் அளித்திருக்க வேண்டுமென்பதும் உறுதியாகின்றன. உண்மையில் அவர், தம்முடைய மாமியாரும் எதிரியுமாகிய மெடிசியைச் சார்ந்த காதரைனைப்போன்ற ஒரு காரியவாதி. தொடக்க காலத்தில் தம்முடைய மாஸ் தொழுகையை வற்புறுத்தியபோதிலும், அவர் புரட்சியைக் கவிழ்க்க முயற்சி செய்யவில்லை. எனினும், வெளி நாடுகளில் இருந்துவந்த கத்தோலிக்க மருட்டுகள், ஹைலாந்து கத்தோலிக்கரின் பற்றுறுதி, கிர்க் திருச்சபையின் வெறிச் செயல்கள் ஆகிய பொதுக்காரணங்கள் அவர் மனத்தை மாற்றின. பிராட்டஸ்டென்ட் பிரபுக்களை அழிப்பதற்காகவும், கத்தோலிக்கச் சமயத்தை நிலைபெறச் செய்வதற்காகவும் டார்ன்லி திருமணத்தைப் பயன்படுத்திக்கொண்டார். அப்படி இருந்தும், டார்ன்லியை வீழ்த்துவதற்காகப் பிராட்டஸ்டென்ட்களைப் பயன்படுத்தினர். அதோடு பிராட்டஸ்டென்ட் சமயச் சடங்குகளோடு பாத்வெலை மணந்தார்.

ராணியாரின் உணர்ச்சிகளின் விளைவாக உருவாகிய நீர்ச் சுழியில் பொதுப்பண்பு நலம் அழிந்தது. ஸ்காட்லாந்தின் ஆட்சி யாளர் ஆப்கானியரின் கொலைப் பண்போடு, மறுமலர்ச்சிக் கால இத்தாலியின் வெறுப்பு மனப்பான்மையும் பெற்றிருந்தனர். கைஸைச் சார்ந்த மேரியை எதிர்த்த கத்தோலிக்கராகிய ஹன்ட்லி (Huntly), மேரி ராணியாரின் ஆட்சியை மீட்பதற்காக வடக்கின் மற்றொரு தலைவரும் பிராட்டஸ்டென்ட் சமயத்தவருமான ஆர்கைலோடு சேர்ந்தார். ரிஜியோவைக் கொல்வதற்காக டார்ன்லியுடன் இணைந்த பிராட்டஸ்டென்ட் பிரபுக்கள் அவரால் கைவிடப்பட்டபோது அவரைக் கொல்ல மேரியோடு சேர்ந்தனர். அதன்பிறகு மேரியை முடிதுறக்கச் செய்தனர். அதுவும் கொலைக் குற்றத்திற்காக அன்று. மாறாகப் பாத்வெலை மணந்ததற்காக அவ்வாறு செய்தனர். தம் மகன் டார்ன்லிக்குக் கத்தோலிக்க மேடைமீது முடிசூட்டிய லென்னக்ஸ் (Lennox), அதன்பிறகு தம் மகளையே பழிவாங்கப் பிராட்டஸ்டென்டுகளின் உதவியைப்

பெற்றார். அரசைக் கைப்பற்றும் தங்களுடைய ஆசையைக் கைவிடாத ஹாமில்டன்கள் முதலில் மேரியைக் கொல்லவேண்டு மென்றனர். பிறகு, தங்களுக்கு இடர் நேரும்போல் இருந்ததால் அவருக்கு உதவியாக வந்தனர். காப்பாளர் மோரேவை கொலை செய்தனர். மற்றொரு காப்பாளரான லென்னாக்ஸைப் போர்க்களத்தில் வீழ்த்தினர். அவர்கள் குடியின் மூளை என்று கூறத்தகும் ஆர்ச்பிஷப் ஹாமில்டன், சிறுவனாக இருக்கும்போது மடத் தலைவராக வாழ்க்கையைத் தொடங்கியவர். திருச்சபையின் மேலிந்த தன்மையை அறிந்து மெச்சத்தகுந்த வினாவிடை நூலொன்றை வரைந்தார். அவர் ஆர்ச்பிஷப்பானபோது அவருடைய காமக்கிழத்தி எடின்பர்க் நகரைவிட்டு வெளி யேற்றப்பெற்றார். இறுதியில் ஹாமில்டன், டார்ன்லி, மோரே ஆகியோரின் கொலையில் பங்குபெற்றதற்காகத் தூக்கில் தொங்கினார். இங்ஙனம் இருந்த வாழ்க்கைநிலையில் அக் கால ஸ்காட்லாந்தில் இருந்த தீமைகளும் முரண்பாடுகளும் தெள்ளிதின் புலனாகின்றன. எனவே, மேரி, பாத்வெலை மணந்ததிலிருந்தும், பிராட்டஸ்டென்ட் வெற்றியிலிருந்தும் தொடர்ந்த போராட்டம் சமயத்தைவிட அதிகமாக அரசியலைச் சார்ந்ததாக இருக்கின்றது.

நாக்ஸும் கிர்க் திருச்சபையும் மேரியைக் கொன்றிருக்கக் கூடும். ஆங்கில நெருக்கமும், ஸ்காட்டிஷ் அரசியல்வாதிகளும் ராணியாரைக் காத்தனர். 1567ஆம் ஆண்டில் ஆறும் ஜேம்ஸ் முடிசூட்டப்பெற்றார். பாராளுமன்றம் 1560ஆம் ஆண்டுச் சட்டங்களை வலியுறுத்தியது. ஆனால், மோரேவைக் காப்பாளராக நியமித்ததால் ஹாமில்டன்கள் லோச் லெவன் (Loch Leven) என்னுமிடத்தில் சிறைப்பட்டு இருந்த மேரி தப்பிச் செல்வதற்கான திட்டத்தையும், ராணியாரின் ஆட்சியை மீட்ப தற்கு ஐந்து ஆண்டுகளில் பல திட்டங்களையும் வகுத்தனர். இதன் காரணமாக ஸ்காட்லாந்தில் உள்நாட்டுப் போர் தோன்றியது. நடுத்தர வகுப்பினரில் பெரும்பான்மையோர் அரசரை ஆதரித்த போதிலும், பெரும்பான்மையான பிரபுக்கள் ராணியாரின் பக்க மிருந்தனர். அவர்களில் சிலர், இரத்த பாசத்தால் கட்டுண்டவர். சிலர், டார்னேயின் கொலைபற்றிய விசாரணையில் தங்கள் குற்றம் வெளிப்பட்டுவிடுமோ எனும் அச்சத்தால் சேர்ந்தனர். பலர் இங்கிலாந்தின்மீது கொண்ட வெறுப்பினால் இணைந்தனர். உதாரணமாக லெதிங்டன், எலிசபெத் ராணியாரை 'அவரது புடையர் குழுவோடமர்ந்து அழுமாறு' செய்வதாக வஞ்சினம் கூறினார். 1569ஆம் ஆண்டில் நெருக்கடி தோன்றியது. அதனால், செசிலும் மோரேயும் மேரியின் மீட்சியைத் தடைசெய்ய உறுதி பூண்டனர். 1570-ல் மோரே, ஹாமில்டன் குடும்பத்தைச் சேர்ந்த

ஒருவனால் கொலைசெய்யப்பெற்றபோது போர்டர் பகுதி கொந்தளிப்பில் மூழ்கியது. மறுமுறையும் ஆங்கிலச் சேனை வந்து லென்னுக்ஸைக் காப்பாளராக்கியதோடு கத்தோலிக்க மீட்சியையும் தடுத்தது. ஆனால், 1571ஆம் ஆண்டில் ரிடால்ஃபி (Ridolfi) சதி கண்டுபிடிக்கப்பட்டவரை ஒப்பந்தத்தின்மூலம் ஸ்காட்லாந்தில் முன்னிலை மீட்சி ஏற்படுத்தும் எண்ணத்தை எலிசபெத் ராணியார் கைவிடவில்லை. ஆயினும், இச் சமயத்தில் லென்னுக்ஸ் போர்க்களத்தில் மடிந்துவிட்டார்.

1571–2ஆம் ஆண்டுகளில் மார் பிரபுவின் காப்பாளர் ஆட்சியில் அரசர் கட்சி மெதுவாக வலுவடைந்தது. 1572ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் நாக்ஸ் இறந்தபோது பிராட்டஸ்டென்ட் வெற்றி உறுதியாகியது. அடுத்த காப்பாளர் தீய குறியுடைய மோர்ட்டன் என்பவர். அவர் 1573-ல் ஆங்கிலப் பீரங்கிகளின் துணையோடு எடின்பர்க் கோட்டையைப் பிடித்தார். அதோடு லெதிங்டனும் இறந்ததால், மேரி, ஆட்சியை மீட்பது என்பது முடியாததாகிவிட்டது. வெல்திறப் புரட்சி ஏற்பட்டதால், இங்கிலாந்திற்கும் ஃபிரான்சிற்கும் இடையேயான உறவுமுறை சீர்பட்டது. அது ஸ்காட்லாந்துப் புரட்சிக்கு உதவியாக இருந்தது. 1572 முதல் 1578 வரை இருந்த மோர்ட்டனின் காப்பாளர் ஆட்சி வெற்றிகரமாக நடந்தது. டக்ளாஸ் குடியைச் சேர்ந்த இத் தலைவர் மோரேவின் இதமான, ஆழ்ந்த சிந்தனையுடைய வெல்திறத்தை உருவாக்கியவர். முன்பு ஒருமுறை டார்ன்லியின் கொலைக்கு ஒப்புதல் தந்ததைப்போன்று எதிரிகளை வன்முறையில் அழிக்க இப்போதும் முற்பட்டார். போர்டர் பகுதியில் பிணையாக நிறுத்தப்பட்டவரைக் கொண்டும், நிலைப்படை ஒன்றை நிறுவியும் அமைதியின்மையை அழித்தார். வடபகுதியில் இருந்த குடிகளிடத்தும் இதே முறையைக் கையாண்டார். அவர் பியூரிட்டானியரைப் போலப் பேசியபோதிலும், திருச்சபைச் செல்வத்தைக்கொண்டு தம்முடைய கட்சியை வளர்த்துக்கொள்ளும் அரசியல் பிராட்டஸ்டென்டு சமயத்திற்காகப் பாடுபட்டார். தாம் இறக்கும்போது நாக்ஸ் மறுத்ததற்கு எதிராக பிஷப்பின் ஆட்சி எல்லைகளை அப்படியே வைத்துக்கொண்டார். ஏனெனில், அவைகளின் வருவாய் அரசியல்வாதிகளுக்குக் கிடைத்தது.

எனினும், 1579ஆம் ஆண்டில்இளைஞராகிய அரசரைச் சூழ்ந்து நின்ற கிர்க் திருச்சபைத் தலைவர்களும், உயிர்பிழைத்த மாரியன் பிரபுக்களும்ஒன்றாக இணைந்து மோர்ட்டனை வீழ்த்தினர். இத்தகைய இணைப்பு, பகவனும் பணப்பேயும் இணைந்தது போன்றது. மறுபடியும் ‘நகரத்திலுள்ள பேய்கள் யாவும்’ கட்டவிழ்த்துவிடப்

பட்டிருந்தன என்று அனுபவமிகுந்த ஆங்கிலத் தூதர் எழுதினர். இப்படிக் கழிந்த பத்து ஆண்டுகளில் இளையோரான அரசருக்கு ஆபத்தான ஆலோசகர்கள் இருந்தனர். அவர் எஸ்மி ஸ்டூவர்ட் என்பவரை ஃபிரான்சிலிருந்து அழைத்து லென்னக்ஸ் பிரபு என்ற பட்டத்தை அளித்தார். மற்றொருவர் சுயநலவாதியான ஜேம்ஸ் ஸ்டூவர்ட். அவருக்கு அர்ரன் ஏர்ல் பட்டம் மாற்றப் பட்டது. அவர் லென்னக்ஸைக் காட்டிக்கொடுத்தவர். பிறிதொருவர் கிரேயைச் (Gray) சார்ந்த இகழ்ச்சிக்குரிய மாஸ்டர் (Master) என்பவர். அவர் அர்ரனைக் காட்டிக்கொடுத்தார். இத்தகையோரின் அரசாங்கத்தில் சமயச் சீர்திருத்த எதிர்ப்பு இயக்கம் இறுதியாக ஒருமுறை முயன்றுபார்த்தது. பிரபுக்களில் மூன்றில் ஒரு பங்கினர் கத்தோலிக்கச் சமயத்தவர். வடபகுதி ஹன்ட்லிபோன்ற தலைவர்களின்கீழ் உறுதியாகக் கத்தோலிக்கப் பற்றுகொண்டிருந்தது. மாக்ஸ்வெல்கள் (Maxwells), கேர்கள் (Kers) ஆகியோரின் தலைமையில் போர்டரில் சில இடங்களில் இச் சமயம் செல்வாக்குப் பெற்றிருந்தது. வன்முறையில் அவர்களையெல்லாம் அடக்குவது ஜேம்ஸினால் ஆகாத ஒன்று. அஃது அவர் விருப்பமும் அன்று. அவரது தாயார் வாழ்ந்த காலத்தில் இங்கிலாந்தில் கத்தோலிக்கத் திட்டம் நிறைவேற்ற வாய்ப் பிருந்தது. எலிசபெத் ராணியார் ஜேம்ஸைத் தம்முடைய வாரிசு என்று ஏற்றுக்கொள்ளவுமில்லை. அவருக்கென்று நிரந்தர வரு மானம் அளிக்கவுமில்லை. கத்தோலிக்கரிடமிருந்து வந்த இடர் காரணமாக, கிர்க் திருச்சபையினர் மேன்மேலும் உரிமைகளைக் கொண்டாடினர். மேலும், பிரஸ்பிடர்களிடம் அவருக்கிருந்த வெறுப்புக் காரணமாகச் சமயங்களைப் பொறுத்தவரையில் நடு நிலைமை வகிக்கத் தீர்மானித்தார். அவர் எதையும் தீவிரமாகச் செய்ய முடியவில்லை. ஆனால், போப்பிற்கு ஆபத்தான முறையில் உறுதிமொழிகள் அளித்தார். பிராட்டஸ்டென்ட் சமயம் தன் வலிமையால் அன்றி இங்கிலாந்தின் தலையீட்டினாலும், ஃபிரெஞ்சு, ஸ்பானியப் பேராட்களுக்கிடையே இருந்த பூசல்களாலுமே காக்கப் பெற்றது.

இங்ஙனம், அருவருப்பான குற்றங்களும் அவைகளுக்கான எதிர்வினைகளும் மலிந்தன. 1581ஆம் ஆண்டில் மோர்ட்டன் மரண தண்டனை அடைந்தார். பிராட்டஸ்டென்ட் பிரபுக்கள் ஜேம்ஸைச் சிறைப்பிடித்து, லென்னக்ஸை நாடு கடத்தியபோது 1582-ல் ரூத்வென் கொள்ளையிடப்பெற்றது. அடுத்த ஆண்டில் ஜேம்ஸ் சிறையிலிருந்து தப்பினர். அர்ரன் மிகுந்த செல்வாக்குப்பெற்றார். ஆனால், 1585ஆம் ஆண்டில் மறுபடியும் இங்கிலாந்தினின்றும் திரும்பிய நாடுகடத்தப்பெற்ற பிராட்டஸ்டென்டுகளால் வீழ்த்தப்

பெற்றார். ஆயினும், இத்தகைய நிலையின்மை எலிசபெத் ராணியார் அளித்த நிரந்தர ஊதியத்தினாலும், ஜேம்ஸின் தாயார் தூக்கிலிடப்பெற்றதால் ஜேம்ஸ் தன் ஆதிக்கம்பெற்று விளங்கிய தாலும் குறையத் தொடங்கியது. அவர் இதயமற்றவர்; அதிலும் அரச உரிமையை ஸ்பெயினுக்கு அளிக்க முன்வந்த மேரியிடம் அவருக்குச் சிறிதும் பற்றில்லை. எனவே, மேரிக்கு மரண தண்டனை அளித்தபோது சிறிது எதிர்ப்பு காண்பித்ததோடு அமைந்தார். ஆர்மடா அழிக்கப்பட்டதால் அவரது நிலை உறுதிபெற்றது. அதனோடு பியூரிட்டானியரிடமிருந்து வரும் ஆபத்தைப் பயன்படுத்தி எலிசபெத்துடன் நட்புறவை வளர்த்துக்கொண்டார். கிர்க் சபையில் 'அண்டை நாட்டில் இருந்த பிஷப்புகளின் கொடுங் கோன்மைக்கு' எதிராகத் துதிபாடினர். அதே சமயத்தில், இங்கி லாந்திலிருந்த தீவிரவாதிகள் எடின்பர்க்கில் தஞ்சம் புகுந்தனர். 1600 ஆம் ஆண்டில் ஜேம்ஸ் இளைய செசிலோடு ஒப்பந்தம் செய்து கொண்டார். எனினும், அவருடைய மெலிந்த கால்களைப் பற்றியும் அவர் அறையைச் சுற்றி ஓயாது நடந்ததைப்பற்றியும் எழுதிய ஆங்கிலேயர் ஒருவர் குறிப்பிட்டதைப்போல் அவருடைய 'நடை எப்போதும் வட்டமாகவே இருந்தது'. 1590 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பிராட்டஸ்டென்ட் ஸ்காட்லாந்து போப்பின் ஆட்சிக்கு எதிராக இருந்தது. மேரியின் மரணத்திற்குப் பழிவாங்குமாறு கத்தோலிக்கரைத் தூண்டுவதற்கென ஸ்காட்டிஷ் ஜெசூட்டுகளும், போப்பிடமிருந்து வந்த தூதரும் தீவிரமாக வேலை செய்தனர். அதே சமயத்தில் ஸ்பானியப் படையெடுப்பிற்கான சதிகள் பல உருவாயின. கிர்க் திருச்சபை, கத்தோலிக்கரை அடி யோடு அழித்துவிடவேண்டுமென்றது. ஆனால், ஜேம்ஸ் கத்தோலிக் கருக்குப் பாதுகாப்பு அளித்தார். இறுதியாக, கத்தோலிக்கப் பிரபுக்களோடு சமாதானம் செய்துகொண்டார். உள்நாட்டுப்போர் ஏற்படுவதைத் தடுப்பதற்காகவும், கத்தோலிக்கரைக்காட்டிலும் கிர்க் திருச்சபையை வெறுத்ததாலும்மட்டுமே இத்தகைய சமா தானத்தைச் செய்துகொள்ளவில்லை. இங்கிலாந்தின் அரசிற்கு ஸ்பானிஷ் தேர்வாளர் வருவதையும், தம்முடைய உறவினரும் எதிரியுமான ஆரபெல்லா ஸ்டூவர்ட் கொண்டாடிய உரிமையைத் தகர்க்கவும் கத்தோலிக்கரின் உதவியைப்பெற விரும்பினார்.

இங்ஙனம் ஜேம்ஸ், தொட்டிலிலிருந்து தொல்லைகளை ஏற்று, பகைவரால் அழுத்தப்பெற்று, எதிரிக் கூட்டங்களினால் கண்ணீர் விடும் நிலைக்குக் கொண்டுவரப்பட்டார். அவரிடம் ரூத்வென் கூட்டத்தினர் 'வயது வந்தவரைவிடக் குழந்தைகள் வரவேற்பு அளிப்பது நல்லது' என்று கூறினர். அவர் பொய்மையின் அவதாரம். கூறமுடியாத அளவிற்குத் தருக்கு மிகுந்தவர். தம்

பிடியில் இருந்தோரைக் கொடுமை செய்வதில் பெயர்போனவர். இவ்வளவிருந்தும் அவர் உண்மையில் திறம் படைத்தவர். இங்கிலாந்தின் அரசுரிமையைப் பெறுவதற்குத் திட்டமிட்டார். இதற்காகக் கிர்க் திருச்சபையோடு ஒப்பந்தம் செய்துகொண்டார். அவர் கண்ட ஜனநாயகம், அவரது தாயாரையும் பாட்டியாரையும் எதிர்த்து நின்றது; ஸ்காட்லாந்தைப் பிரித்தது ; அந் நாட்டை ஆங்கிலிக இங்கிலாந்திலிருந்து பிரிக்கக்கூடும். இங்ஙனம், பிரஸ்பிடரியிடம் அவர் கொண்ட தோரணை அவருடைய அதிகாரத்தின் அளவையாகியது.

கத்தோலிக்கச் சதியாளரையும் இறுதியில் கட்டற்ற முடியாட்சியையும் வீழ்த்திய கிர்க் திருச்சபைக்கு ஸ்காட்லாந்து கடமைப்பட்டிருந்தது. இந்த வேலையில் நாக்ஸின் வாரிசான ஆண்ட்ரூ மெல்வில் (Andrew Melville) என்பாருக்குப் பெரும் பங்குண்டு. அவர், சிறந்த கல்வியறிவும் நெகிழாத நெஞ்சுறுதியும் கொண்டவர். புகழ்வாய்ந்த பேட்டியின்போது தாம் 'பரமபிதாவின் குழந்தைத்தனமுடைய பண்ணையாள்' என்று ஜேம்ஸிடம் கூறியவர். 'ஸ்காட்லாந்தில் இரண்டு அரசர்களும், இரண்டு அரசுகளும் உள்ளன' என்றும், 'கிறித்துவின் மேம்பட்ட அரசில் ஜேம்ஸ் ஒரு குடிமகனே' என்றும் கிர்க் சபை செய்த போதனையை வகுத்தவர். கிர்க் திருச்சபை, சுதந்திரத்தைக் கோரியது என்றாலும், உண்மையில் ஆதிக்கத்தை விரும்பியது என்பது வெளிப்படை. அதனுடைய குருமார் கிறித்துவின் அரசோடு தொடர்புகொண்ட யாவற்றைப்பற்றியும் பேசச் சுதந்திரம் வேண்டுமென்றது. அந்த உரிமையில் சமயம்சாரா நீதிமன்றத்தின் தலையீடு இருத்தல் கூடாது. ஆண்டவனிடம் பயபக்தியோடு இருப்பது குருமாரிடம் மரியாதை காட்டுவதேயாகும். அச் சபையின் சமய விலக்குத் தண்டனையை அரசாங்கம் நிறைவேற்றவேண்டும். அதனுடைய பொதுச்சபையின் அங்கம் ஒன்றில் பாராளுமன்றத்தைக் காட்டிலும் நடுத்தர வகுப்பினர் பிரதிநிதித்துவம் பெற்றிருந்தனர். அதனுடைய சமய மேடைகள் பத்திரிகைகள் செய்யவேண்டிய வேலையைச் செய்தன. அதே சமயத்தில் மோர்ட்டனுடைய திட்டத்தில் இருந்த குறைகளை நீக்க அது தீர்மானித்தது. 1580–81ஆம் ஆண்டுகளில் அது தனது உரிமைகளை நிலைநாட்டத் தொடங்கியது. பிரஸ்பிடர்களை நியமிப்பதன்மூலம் முறைமையின் அமைப்பையும், அதன்மீது கொண்ட அதிகாரத்தையும் முழுமையாக்கியது. இரண்டாவது கட்டுப்பாட்டு நூல் பிஷப்புகளாட்சியை நீக்கியது. அதனோடு கிர்க் திருச்சபையினுடைய சுதந்திரத்தை வலியுறுத்தியது. இங்ஙனம் வந்த அறைகூவலை ஜேம்ஸ் ஏற்றுக்கொண்டார். அவர் பதினைந்து ஆண்டுகள் போராடினர். அவரது முதல்

வெற்றிகளாக எண்ணக்கூடியவை 1584ஆம் ஆண்டில் நிறைவேறிய 'கறுப்புச் சட்டங்களாகும்' (Black Acts). அரசர் திருச்சபையின் தலைவர் என்று அவைகள் அறிவித்தன. அவருக்கு பிஷப்புகளை நியமிக்கும் அதிகாரத்தையும் வழங்கின. ஜேம்ஸ் 1592ஆம் ஆண்டில் போப்பிற்கு எதிரான உணர்ச்சி உச்ச நிலையில் இருந்தபோது, பிரஸ்பிடரிக்களை ஏற்றுக்கொள்ளும் 'தங்கச்' சட்டங்களை இயற்றினர். அவைகள் அவருடைய வெற்றிக்கு முட்டுக்கட்டையாக இல்லை.

இந்த வெற்றிக்குக் கிர்க் திருச்சபையின் கொடுங்கோன்மை காரணமாகும். மேலும், கிர்க் சபை ஸ்காட்லாந்து முழுவதற்குமான அல்லது மனித இயல்பிற்கேற்ற பிரதிநிதித்துவ சபையுமன்று. அதனுடைய மேடைகளில், அரசருடைய தூய்மையற்ற தன்மையையும், ராணியார், கொடுத்த வாக்கைக் காப்பாற்றத் தவறினர் என்றும் குற்றஞ்சாட்டினர். அரசியல் எதிரிகளை வெளிப்படையாகத் தங்களது செயல்களுக்காகப் பிராயச்சித்தம் பெறவேண்டுமென்று வற்புறுத்தியது. மேன்மேலும், சதிகளில் இறங்கியது. பேய்களைத் துரத்தத் தூண்டியது. அச் சமயம் ஒழுக்கக்கேடு, உறுதி மொழிகள் ஆகியவற்றிற்கு எதிராகக் கடுமையான சட்டங்களைப் பாராளுமன்றம் இயற்றியது. இவற்றிற்கெல்லாம் எதிர்வினைகள் தோன்றின. குறிப்பாக வடக்கில் இருந்த எடின்பர்க், செயின்ட் ஆண்ட்ரூஸ் ஆகியவற்றின் 'போப்புகள்' (Popes) வெறுப்பிற்குள்ளாயினர். இங்ஙனம், இருந்த பிளவைமட்டும் அரசர் பயன்படுத்திக்கொள்ளவில்லை. சட்டத்தின்மூலமாகத் திருச்சபையின் லௌகீகச் சொத்தினை அரசுக்கே எடுத்துக்கொண்டு திருச்சபை நிலங்களைக் கையூட்டாகப் பிரபுக்களுக்கு அளித்தார். அவர் டென்மார்க்கைச் சார்ந்த ஆன் என்பவரை மணத்தல், ஹென்றி இளவரசர் தோன்றுதல், 1600 ஆம் ஆண்டில் அவரது உயிருக்கு எதிராக எழுந்த கௌரி (Gowrie) சதியிலிருந்து தப்புதல் ஆகியவையும் அவரது வலியைப் பெருக்கின. 1597–8ஆம் ஆண்டுகளில் கிர்க்கின் வன்முறைச் செயல்கள் அவர் எதிர்நோக்கி இருந்த வாய்ப்பினை அளித்தன. பொதுச்சபைகளில் அரசருடைய ஆட்களைக்கொண்டு நிரப்பப்பெற்று, தலைநகருக்கு வெகு தொலைவில் கூடிய பொதுச் சபைகள் அரசரின் ஆணைக்குட்பட்ட திருச்சபை ஆணையாளர் குழுவினை நியமித்தன. பிஷப்புகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை அரசருக்கு அளித்தது. பிஷப்புகள் பாராளுமன்றத்தில் இடம் பெற்றனர்.

1603ஆம் ஆண்டிற்குப் பிறகு ஏற்பட்ட ஆங்கில அனுபவம் அவருடைய மேற்கோளுரையான 'பிஷப்பின்றேல் அரசருமில்லை'

என்பதை வலியுறுத்தியது. டவர் கோட்டைச் சிறையில் மூன்ருண்டுகள் அவதியுற்றபிறகு, மெல்வில், தமது வாழ்நாள் முழுவதற்கும் நாடு கடத்தப்பெற்ருர். அதே சமயத்தில் பொதுச்சபையின் மீது இருந்த அரச அதிகாரங்களை எதிர்க்கும் குருமார் ஹெப்ரிடஸுக்கு அனுப்பப்பெற்றனர். ஜேம்ஸ் படிப்படியாகப் பிரஸ்பிடீரியன் சமயத்தில் பிஷப்புகளாட்சி முறையைப் புகுத்திஞர். பொய்த் தோற்றங்கள் அகலும்வரை, பொதுச்சபையின் ஆணையாளர்களையும் பிஷப்புகளையும் ஒன்ருக இணைத்தார். 1606-ல் ஒவ்வொரு பிரஸ்பிடரிக்கு மேலும் 'நிரந்தர அமைதி நிறுவுவோரை' நியமித்தார். அவர்கள் அரசாங்கத்திடமிருந்து ஊதியம் பெற்றனர். இம் முறையைப் பின்னுளில் சபைகளுக்கும் விரிவுபடுத்திஞர்.

சமயச் சீர்திருத்த காலத்திற்கு முன்பிருந்த பிஷப்புகளின் நீதிமன்றங்களை மீட்டார். ஸ்காட்டிஷ் பிஷப்புகள் இங்கிலாந்திலேயே திருநிலைவாணராக்கப்பட்டனர் (consecrated). 1612-ல் ஸ்காட்லாந்துப் பாராளுமன்றம் 1592ஆம் ஆண்டின் 'தங்கமான' சட்டங்களைத் தள்ளுபடி செய்தது. சமயம்சாராத் திருச்சபைப் பணியாளரைத் தேர்ந்தெடுக்கும் பழக்கம், 1638ஆம் ஆண்டில் புரட்சி ஏற்படும்வரையில் வழக்கொழிந்திருந்தது. அதன்பிறகு அரசர் சமயச் சடங்குகளைச் சாடிஞர். அவர் ஸ்காட்லாந்திற்கு நேரடியாக வந்து பார்த்த பிறகு 1618ஆம் ஆண்டில் பெர்த் விதிகளை (Articles of Perth) வெளியிட்டார். அவைகளின்படி திருவிருந்தின்போது மண்டியிடவேண்டும் என்றும், தீக்கைச் சடங்கினை (confirmation) பிஷப்புகள்தான் செய்யவேண்டுமென்றும், திருவிழாக்களைச் சரியாகக் கொண்டாடவேண்டுமென்றும் வலியுறுத்தப்பெற்றது. ஏட்டளவில், ஒரே வழிபாடும் அரச திருச்சபையும் தோன்றின. கையூட்டி அளித்தல், சபைகளில் தமதாட்களைக் கொண்டு நிரப்புதல், அரசரின் அதிகாரம் ஆகியவைமட்டும் இவ்வித வெற்றிக்குக் காரணங்கள் என்று கூறமுடியாது. நிலமானிய முறையைப்போற்றிய ஸ்காட்டியரின் உணர்ச்சிக்கும், அவர்களுடைய லௌகிக நலன்களுக்கும் பிஷப்புகள் ஆட்சி முறை உகந்ததாக இருந்தது. மேலும், அப்போது இரு முறைகளுக்குமிடையே இணைக்கமுடியாத பிளவு இருந்தது என்று சொல்வதற்கில்லை, எலிசபெத் ராணியாரின் ஆரம்பகாலத் திருச்சபையில் நிறைய கால்வினிஸ்டுகள் இருந்தனர். நாக்ஸினுடைய இளைய மகன் ஆங்கிலிக ஊர் குருவாக இறந்தார், அதே சமயத்தில் ஜேம்ஸின் திட்டங்களைத் தயக்கத்தோடு செயலாற்றிய அவரது பிஷப்புகள் லாட் (Laud) பிரிவைச் சேர்ந்தவரல்லர். இங்ஙனம் ஜேம்ஸ் இறந்தபோது பேரிடர்கள் இருந்தபோதிலும், புரட்சி இன்றியமையாததாக இல்லை.

சமயப் புரட்சி தோன்ருமல் போனதற்கு மற்ருெரு காரணம், ஜேம்ஸினுடைய நீண்ட ஆட்சியில் நாடு முன்னேறி இருந்ததுதான். அவரது ஆட்சிக்காலத்தில் காட்டுமிராண்டிச் செயல்கள் சில காணப்பட்டன என்பது உண்மையே. ஹன்ட்லி, இளைய மோரே ஒருவரைக் கொலை செய்தார். லென்னுக்ஸில் இருந்த மக்கிரிகர்களும் (Macgregors), போர்டரைச் சார்ந்த கிரிம்களும் (Graemes), மக்களைக் கொன்று குவிப்பதில் பேர்போனவர்களாக இருந்ததால் அவர்களை ஒழிக்குமாறு அரசர் ஆணையிட்டார். அரசியலார் திருச்சபையில் அடித்த கொள்ளையின் விளைவாக அது மெலிந்தது. அதனுல், 400 பாரிஷ்கள் குருமாரின்றித் தவித்தன. ஆயின், அரசரது சீர்திருத்த முயற்சி ஓரளவு பயனளித்தது. அவர் குறுநிலத் தலைவர்களைத் தங்களுடைய கூட்டத்தினரின் நன்னடத்தைக்காகப் பத்திரங்கள் தருமாறு வற்புறுத்தினர். பிராட்டஸ்டென்டு குருமார்களையும் ஆங்கிலமொழியையும் ஏற்றுக்கொள்ளுமாறு மேற்குத் தீவுகளைத் தூண்டினர். ஆர்க்னே ஏர்லை ஒடுக்கினர். மேலும், இங்கிலாந்து மாதிரியில் மாஜிஸ்ட்ரேட்டுகளை நியமித்தார். இரு நாடுகளின் அரசியல் ஐக்கியம் காரணமாக போர்டர் மறையத் தொடங்கியது. அங்கிருந்த தனியார் படைகளின் போர்க்கலன்கள் பறிக்கப்பெற்றன. ஜேம்ஸ் தொடங்கிவைத்த பொருளாதார வளர்ச்சி ஐக்கியத்தினுல் தூண்டுதல் பெற்றது. துணியும் நிலக்கரியும் ஏற்றுமதியாவதில் விறுவிறுப்புத் தோன்றியது. பல துணிகர வீரர்கள் ஸ்வீடிய, ஜெர்மானியப் படைகளில் சேர்ந்து பணியாற்றினர். அல்ஸ்டர் மாகாணக் குடியேற்றத்தில் ஸ்காட்லாந்தியர் மூலதனமிட்டனர். ஒவ்வொரு பாரிஷிலும் ஒரு பள்ளிக்கூடம் அமையவேண்டும் என்ற கிர்க் திருச்சபையின் குறிக்கோள் நிறைவேறவில்லை யென்ருலும், ஜேம்ஸின் ஆட்சியில் எடின்பரோ பல்கலைக் கழகமும், உயர்நிலைப் பள்ளியும், மாரிஸ்சல் கல்லூரியும், அபர்டீன் கலாசாலையும் தோன்றின. ஐரோப்பா முழுவதிலும் புகழ் பரவிய ஸ்காட்லாந்து அறிஞர் பலர் வாழ்ந்தனர். அவர்களில் ஜேம்ஸ் மன்னரின் ஆசிரியர் புக்கானன், கணிதமேதையாகிய நேபியரைச் சார்ந்த மெர்சிஸ்டன் (Merchiston), ஹாவ்தார்ண்டனைச் (Hawthornden) சார்ந்த புலவர் ட்ரம்மாண்ட் (Drummond) ஆகியோர் சிலராவர். உள்நாட்டுப் போர்கள் நிகழ்ந்த காலத்தில், வாதமிட்டும் போர் புரிந்தும் வாழ்ந்த மான்ட்ரோசும் (Montrose), லாடர்டேலும் (Lauderdale), பிரஸ்பிடீரிய குருமாரும் எந்தக் கூட்டத்திலும் தங்களுடைய கருத்தினை நிலைநிறுத்தும் ஆற்றல்பெற்றிருந்தனர்.

எனவே, ஜேம்ஸ் மரபுரிமையால்பெற்ற கட்டற்ற வல்லாட்சியோடு ஸ்காட்லாந்து நீண்ட நாட்களுக்கு வாழ்வதற்கில்லை,

சட்டப் பிரபுக்களால் கேடுற்ற பாராளுமன்றம் ஒரு கேலிக் கூத்தாகவே இருந்தது. அது சரியாகக் கூடுவது இல்லை. உறுப்பினர் ஒழுங்காக வருவதுமில்லை. மேலும், அது நிர்வாகத்தின் மீது அதிகாரம்பெற்று இல்லை. பழஞ் செல்வந்தருள் பாதிக்கு மேற்பட்டோர் அழிக்கப்பெற்றும், மற்றையோர் திருச்சபைச் செல்வத்திற்கு அடிமையாகியும் இருந்ததால், நிலமானிய முறையின் வலிமை மறைந்தது. எனினும், அவ்விடத்தை நிரப்ப மக்கள் ஆதரவு பெற்ற அரசாங்கம் ஏதும் அமையவில்லை. ஏனெனில், ஜேம்ஸ், பண்ணையாளருக்குப் பிரதிநிதித்துவம் அளித்தபோதிலும், ஷயர் தேர்தல்களிலும், பரோ தேர்தல்களிலும், தம்முடைய ஆட்களைக்கொண்டே நிரப்பினர். இங்கிலாந்திற்குச் சென்ற ஸ்காட்டிஷ் பிரிவி கவுன்சிலர் வரம்பற்ற அதிகாரங்களோடு ஆட்சிபுரிந்தனர். 'இங்கே அமர்ந்து, பேனாவைக்கொண்டு ஆளுகிறேன்' என்று ஜேம்ஸ் பெருமையடித்துக்கொண்டார். இத் தற்புகழ்ச்சி பருவத்திற்கு முந்தியதாகும். அவரது அரசாங்கம் இன்னும் எதிர்ச் சக்திகளைச் சமநிலைப்படுத்தும் திட்டமாக இருந்தது. ஹைலாந்து போன்ற பகுதிகளில் ஆர்கைல் போன்ற பிரபுக்களின்மூலமாகத்தான் அரசாங்கம் செயல்பட்டது. அது பேனாவின் ஆணையைப் பொறுத்தே அமைந்தது. ஆயினும், வாளெடுத்த வன்முறைச் செயல்கள் வராது என்பது நிச்சயமில்லை.

# 7. அயர்லாந்து : பிரச்சினை எழுந்தது, 1460–1633

'இங்கிலாந்து மன்னர்களின் மனத்தை மற்றெதைக்காட்டிலும் மிகுதியாக வாட்டியது ஒன்று உண்டென்றால், அஃது அவர்கள் இந் நாட்டை முழுதும் வெற்றிகொள்ள முடியாததுதான்' என்று எலிச பெத்தின் அயர்லாந்து கவர்னர் ஒருவர் எழுதினர். உண்மையில் அயர்லாந்து ஆங்கில ஆதிக்கத்தின் களங்கமாக இருந்தது. அது பல நூற்றாண்டுகளாகத் தவறாக நடத்தப்பெற்றதன் விளைவாக, ஸ்பானி யரும் ஃபிரெஞ்சுக்காரரும் நுழைதற்கேற்ற தலைவாயிலாகியது. ஆங்கிலக் கட்சிப் பூசல்கள் அங்கே குடியேறி, மேலும் மோச மாயின. ஊழல்களும் கொடுஞ்செயல்களும் பொதுப்பண்பு இயல் பினைப் போக்கடித்தன. எனவே, சீரிய ஒழுக்கத்திற்கும் வீரத் திற்கும் பெயர்போன ஹம்ப்ரி கில்பர்ட், ஸ்பென்ஸர், கிராம்வெல் ஆகிய பெருந்தலைவர்கள் அயர்லாந்தில் அவமதிப்பிற்குள்ளாயினர்.

டியூடர்கள் ஆட்சிக்கு வருவதற்குமுன் ஒரு பிரச்சினைக்குத் தீர்வு காணப்பட்டது. அயர்லாந்தில் ஆங்கிலோ-நார்மானியப் படை யெடுப்பாளர் தோல்வியுற்றனர். அதனால், கன்னட் (Connaught), மேற்கு அல்ஸ்டர், லீன்ஸ்டர் (Leinster) குன்றுகள் ஆகியவை அயர்லாந்தியருக்கே திரும்பச் சென்றன. எனினும், கிழக்கு நகரங்களில் ஆங்கில வாணிபத்தை நம்பிய காவற்படை இருந்தது. பொதுவாகப் பேசுமிடத்து ஆர்மாண்டியினரைத் (Ormonds) தவிர அயர்லாந்து தலைவர்களும் ஆங்கிலோ-நார்மானியரும் ஒன்றாயினர். டெஸ்மாண்டையும் (Desmond) கில்டேரையும் (Kildare) சார்ந்த ஃபிட்ஸ்ஜிரால்டுகள் (FitzGeralds), ஒ'நீல்களுடனும் (O'neills), ஒ'டான்னல்களுடனும் (O'Donnells) மணவினைத் தொடர்புகொண்டு கூட்டாகச் சேர்ந்தனர். அவர்கள் நிலமானியமுறை அதிகாரத் தையும், படைகளைக் காப்பதற்காக அவைகளை நாட்டுப் பகுதிகளில் நிறுத்தி, மக்களிடமிருந்து அதற்கான உணவையும் ஊதியத்தையும் பெறும் ஐரிஷ் முறையையும் இணைத்தனர். டப்ளினில் பேசப் பெற்ற ஆங்கிலமொழி இங்கிலாந்து மக்களுக்கு அரைகுறையாகத் தான் விளங்கியது. அதே சமயத்தில் திருச்சபை—குறிப்பாகத் திரி

துறவிகள்—அயர்லாந்தைச் சார்ந்ததாகவே இருந்தது. இரண்டாம் ரிச்சர்டு காலத்திலிருந்து சிறிய பேல் (pale) என்னும் பகுதியைத் தங்களிடம் வைத்துக்கொள்வதே ஆங்கிலக் கவர்னர்களுடைய நோக்கமாக இருந்தது. அதையும் பணம் கொடுத்தே காத்தனர். அதுவும் லீன்ஸ்டர் குடும்பத்தினருக்கு அளித்த அச்சப் பணமாகும். அதே சமயத்தில், வடபகுதியினரும் மேற்குப் பகுதியினரும் உடன் படிக்கைகளின்மூலம் பெயரளவில்தான் மேலுரிமையை ஏற்றுக் கொண்டனர்.

போரும் சூழ்ச்சியும் ஏழாம் ஹென்றியை அயர்லாந்தில் தலையிடுமாறு செய்தன. பாய்னிங் சட்டங்களின்மூலமாக அவரது அதிகாரத்தை வலியுறுத்தவும் செய்தன. ஆனால், படையெடுப்பிற்குத் தேவையான பணத்தை அளிக்க அரசு தயாராக இல்லை. எனவே, நடைமுறையில் கில்டேரின் ஏர்ல்களே தொடர்ந்து அயர் லாந்தை ஆண்டனர். அவர்களுடைய அதிகாரத்தினால் எட்டாம் ஹென்றியின் வலிமைமிக்க கவர்னர் நார்ஃபோக் (Norfolk) என்பவர், பெரும்படையும், திட்டமிட்ட குடியேற்றங்களுமே வெற்றிக்குரிய வழிகள் என எண்ணினார். தீவுகளில் இருந்துவந்த ஸ்காட்லாந்தியர் நான்கு மணிநேரப் பயணத்தில் அடையக்கூடிய அன்ட்ரிமில் குடியேறினர். அதன் கலங்கரை விளக்கத்தைக் காத்தனர். அவர்கள் இருநூறு ஆண்டுகளுக்குச் சிறு குதிரை வீரர்களை அளித்தனர். ஒவ்வோர் அயர்லாந்துப் படையிலும், முக்கிய இடத்தைப்பெற்று இருந்த கையில் கோடரியோடுகூடிய படைவீரர்களையும் அளித்தனர். இங்ஙனம் வார்பெக்கின் (Warbeck) காலத்திலிருந்து ஃபிளாடன் (Flodden) போர் வரை ஸ்காட் லாந்தியரும் அல்ஸ்டரைச் சார்ந்த ஐரிஷ்காரரும் ஒன்றாக இணைந்து வேலை செய்தனர். எட்டாம் ஹென்றியின் மணமுறிவிற்குப் பிறகு புரட்சி விரும்பும் அயர்லாந்தியர், ஸ்பெயினிலும் ரோமிலும் ஆதரவைப் பெற்றனர். இதற்கு எதிராக ஆர்மண்டி ஏர்ல் பதவிக்கு உரிமைகொண்டாடிய பொலீன் (Boleyn) குடும்பத்தினர் செயல்பட ஆர்வங்கொண்டனர். கில்டேர் சிறைப்பட்டதும், டவர் கோட்டைச் சிறையில் இறந்ததும், அவரது மகன் 'பட்டுப்போன்ற தாமஸ்' (Silken Thomas) டப்ளின் நகரைக் கைப்பற்றியதும், அவரது குடும்பம் 1537ஆம் ஆண்டில் அழிவதற்குக் காரணங் களாக இருந்தன. மேலும், ஹென்றி இங்கிலாந்தில் செய்ததைப் போலவே, அயர்லாந்திற்கும் போப்பாண்டவருக்கு எதிரான சட்டங்களை நிறைவேற்றினார். எனினும், இவைகளெல்லாம் கொள்கையல்ல. ஐரிஷ் வில்லாளர்களையும், சேணமின்றிச் சவாரி செய்யும் குதிரை வீரர்களையும் சிதறடிக்கக்கூடிய அரசரின் பீரங்கிப் படையும், சில ஆயுதந்தாங்கிய படைகளும் நெறியற்ற நெடுங்

காடுகளிலும் சதுப்பு நிலங்களிலுமுள்ள அயர்லாந்தியரை அடைய முடியவில்லை. மேலும், இங்கிலாந்தின் படைத் தலைவர்கள் நல்ல ஊதியம்பெற்ற படைகள் இல்லாததால், அயர்லாந்தில் ஒரு கட்சிக் கும்பலுக்கு எதிராக மற்ருெரு கும்பலோடு சேர்ந்தனர். உதாரணமாக, லியோனுர்டு கிரே (Leonard Grey) அவ்வாறு செய்தார். அவர் யார்க் குலத்தைச் சார்ந்திருந்ததாலும், கில்டேர் களுக்கு ஆதரவு காட்டியதாலும் கொல்லப்பட்டார்.

இறுதியாகச் சிக்கனமும் அரசியல் வல்லமை சார்ந்த ஆராய்ச்சியும் ஹென்றியைப் பகுத்தறிவிற்குகந்த திட்டத்தைப் பயன் படுத்துமாறு தூண்டின. அவர் அயர்லாந்தின் அரசர் என்னும் பட்டத்தைக் கொண்டதன்மூலமாக, அயர்லாந்தியரை ஆங்கிலச் சட்டத்திலிருந்து நீக்கிய இடைக்காலத்து, இரு நாடுகளின் கொள்கையை அழித்தார். அயர்லாந்துத் தலைவர்களுக்கு உறுதியான பிரதம மானியதார் பட்டமும், மடத்து நிலங்களில் பங்கும் அளித்தார். வெற்றிக்குப் பதிலாக அவர்கள் பாராளுமன்றத் திலும் படையிலும் பணிபுரியவேண்டும். கறுப்பு குத்தகையைக் கைவிடவேண்டும். தங்களுடைய புதல்வருக்குக் கல்வியளிக்க வேண்டும் என்று எதிர்பார்த்தார். இத் திட்டம் சில ஆண்டுகள் நல்லமுறையில் செயல்பட்டது. ஓ'நீல்கள் (O'Neills) முதன் முறையாக இருட்கடலைக் கடந்து இங்கிலாந்து சென்று, டைரோன் (Tyrone) ஏர்ல் பட்டத்தைப் பெற்றனர். மாக்வில்லியம் பர்க் (MacWilliam Burke), க்ளான்ரிகார்டு (Clanrickarde) பட்டத் தையும்; ஓ'பிரைன், தோமாண்ட் (Thomond) பட்டத்தையும் பெற் றனர். ஐரிஷ் படைவீரர்கள் போலோன் (Boulogne) நகர முற்று கையின்போது போரிட்டனர். அயர்லாந்தின் துணைத் தலைவரான செயின்ட் லீகர் (St. Leger) என்பார் இத் திட்டம் 'இரு தலைமுறை களுக்கு நீடிக்குமானல் நிச்சயம் வெற்றிபெறும்' என்று விளக்கினுர்.

ஆனல், ஆரும் எட்வர்டு காலத்தில் இத் திட்டம் முறிந்தது. எட்வர்டின் அரசாங்கம் அயர்லாந்தைப் பிராட்டஸ்டென்ட் மயமாக்க முயன்றது. செயின்ட் பாட்ரிக்கின் (St. Patrick) பணியாளரையும், நினைவுச் சின்னங்களையும் தீக்கிரையாக்கியது. இவைகளெல்லாம் வெறுப்பைத் தூண்டின என்ருலும், இத் திட்டம் முறிவதற்குக் காரணங்களாக அமைந்தவையல்ல. ஏனெனில், சமயத்தைக்காட்டிலும் அதிகாரமும் நில உரிமையும் முதல் நிலையில் நின்றன. கத்தோலிக்கச் சமயத்தைச் சார்ந்த மேரி ராணியார் கலகம் விளைத்த ஓ'மோர்கள் (O'Mores), ஓ'கானர்கள் (O'Connors) ஆகியோரின் நிலங்களைப் பறிமுதல் செய்தார்.

இங்ஙனம் அரச மானியதாரர்களுக்காக அரசர் கவுன்டியையும் ராணியார் கவுன்டியையும் உருவாக்கியதன் விளைவாகக் குடியேற்றம் தொடங்கியது. ஆயினும், 18ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் நடந்ததைப்போன்று ஆங்கிலேயர் முற்றிலும் மாறுபட்ட சமுதாயத்தை அதனுடைய சிறு பகுதியினரைக் கொண்டு கட்டுப்படுத்த எண்ணியதுதான் தொல்லைக்கான அடிப்படைக் காரணமாகும். அதிலும் அப் பகுதியினரும் மிக முக்கியமானவர் அல்லர். அயர்லாந்தில் வாழ்ந்த தலைவர்கள் நிலமானியப் பிரபுக்கள் அல்லர். நிலம் குடிக்குச் சொந்தமாயிருந்தது. அதன் வருமானத்தைப் பிள்ளைகள் பகிர்ந்து கொள்ளும் கேவல்கைண்ட் (gavelkind) முறை இருந்தது. அதனால், நிலம் அவ்வப்போது மாற்றிமாற்றிப் பகிர்ந்து அளிக்கப் பெற்றது. தலைவனைத் தேர்ந்தெடுப்பதில் மூத்தமகன் வாரிசுரிமைகளைப் பின்பற்றப்படவில்லை. அதற்கு மாறாக, குடியைச் சார்ந்தவர் ஆண்வழியில் கிடைக்கும் வலிமைமிக்க ஒருவரை 'டானிஸ்டாக' (tanist) அல்லது வாரிசாகத் தேர்ந்தெடுத்தனர். எனவே, ஹென்றியின் திட்டத்தை ஐரிஷ் தலைவர் எவரும் நிறைவேற்ற முடியாத நிலை ஏற்பட்டது. மாறாக, எலிசபெத் ராணியார் குத்தகைக்காரரை நேரடியாக அணுகி, ஷயர்கள், சட்டங்கள் ஆகியவற்றின்மூலமாக ஆங்கிலத் தல ஆட்சியை ஏற்படுத்த முனைந்தது தலைவர்களின் அதிகாரத்திற்கு எதிராகவிட்ட அறைகூவலாக இருந்தது.

மேலும், எலிசபெத்தின் அயர்லாந்துக் கொள்கை தலத்தில் இல்லாத அரசாங்கத்தின் குறைகள் யாவற்றையும் பெற்றிருந்தது. அவர் தமது நாற்பத்திமூன்றாண்டுகால ஆட்சியில், குறுகிய காலத்திற்கே இருந்த மூன்று ஐரிஷ் பாராளுமன்றங்களைக் கூட்டினர். மோசமான கட்டாயத் தீர்வையை ஒத்த 'வரி' (Cess) ஒன்றை விதித்துப்பேல்பகுதியைக்கொடுமைசெய்தார். இங்ஙனம் அவரது கொள்கை ஒருதலை முடிவானதாக இருந்தது. அது நிலையற்றதாகவும், சமயத்திற்குத் தக்கவாறு மாறும் இயல்புடையதாகவும், நெறியற்றதாகவும் இருந்தது. அவரது துணைத் தலைவர்கள் கொலை செய்வதையும், மக்களைக் கடத்திச் செல்வதையும் ஆதரித்துப் பேசினர். அவர்களது அரசாங்கம் ஊழல் மிகுந்ததாக இருந்தது. இல்லாத சிப்பாய்களுக்கு ஊதியம் கோரிய படைத் தலைவர்களும் நிலத்தைக் கைப்பற்றுவோரும் மலிந்திருந்தனர். ஏராளமான குடும்பச் சண்டைகள் நடந்தன. வேண்டுமென்றே நாணயங்களின் மதிப்பைக் குறைத்ததால் பொருள் விலை உயர்வும், வாணிபத்தின் வீழ்ச்சியும் ஏற்பட்டன. அயர்லாந்துப் போர்கள் பயங்கரமானவை. அவைகள் 'ஆங்கிலேயரின் சவக்குழி' என்று தூதுவர்

எழுதியதைப்போன்றே இருந்தன. அதிலும், சிறையிலிருந்தும் தெருக்களில் இருந்தும் சேகரிக்கப்பெற்று அயர்லாந்திற்குக் கொண்டுசெல்லப்பெற்ற இழிவானவர் மிகுந்த துயர் அடைந்தனர். அவர்கள் ஊதியமின்றிப் போரிட்டனர். ஓர் ஆங்கிலேயர் எழுதியதைப்போல 'மனிதர் என்ன, வேட்டை நாய்களே பின் தொடர்ந்து செல்லமுடியாத' ஐரிஷ் பகைவரைப் பற்றியெரிந்த பயிர் வகையிடையேயும், பயங்கரமான சதுப்பு நிலங்களிலும் பின் தொடர்ந்து செல்லவேண்டும். அழுகிய இறைச்சியையும், பொடியான பிஸ்கெட்டையும், தாங்கள் கைப்பற்றிய பசுக்களிடமிருந்து கிடைக்கும் பாலையும் உட்கொண்டு உயிர்வாழவேண்டும். அதனால், சொறிநோயிலும், சீதபேதியிலும் ஆயிரக்கணக்கானோர் இறந்தனர். மன்ஸ்டரில் (Munster) குடியேறியவரான கவி ஸ்பென்சர் (Spenser) அயர்லாந்தியர் பட்ட துன்பங்களைப்பற்றி எழுதினர். பஞ்சத்தினல் பலர் மடிந்தனர் என்றும், காடுகளிலிருந்து வெளியேறிய அவர்கள் பிணங்களைப்போல் தோற்றமளித்தனர் என்றும் குறிப்பிட்டார். நேரடியாகப் பார்த்தவர் அளிக்கும் நம்பகமான செய்திகள் நெஞ்சைப் பிளப்பனவாக இருக்கின்றன. மனிதரை மனிதர் உண்ட கொடுமையும், பாசி தின்றதால் இறந்தவர் வாயில் பசுமை நிறமும், ஓநாய்களின் விருந்தும் ஒருசில வேதனைமிக்க காட்சிகளாகும். பல மைல் தூரத்திற்கு மாடுகள் எழுப்பும் குரல்கூடக் கேட்கவில்லை.

எலிசபெத் தொடுத்த முதல் போர் மரபுரிமையால் வந்தது. தம்முடைய கூட்டத்தினரால் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற ஷான் ஓ'நீல் (Shane O'Neill) என்பவர் ஆங்கிலேயர் நியமித்த வரை எதிர்த்துப் போராடினர். அவர்தம் எதிரியைக் கொன்று தமது நிலையை உறுதிசெய்துகொண்டார். எலிசபெத் இந்த அருவருப்பான பிரச்சினையைத் தள்ளிவைத்தார். எலிசபெத்தின் அரசவைக்கு வந்தபோது ஷான் மிகப் பணிவாக நடந்துகொண்ட போதிலும், அன்னிய நாடுகளுடன் இணைந்து சூழ்ச்சி செய்தார். அவர் 1565ஆம் ஆண்டில் அல்ஸ்டரின் தலைவரானர். ஆனல், அவர் இழைத்த கொடுமைகளே ஓ'டான்னல்களைத் (O'Donnells) தீவிரமான ஆங்கிலத் துணைத் தலைவரான ஹென்றி சிட்னியுடனும், ஸ்காட்லாந்தியருடனும் இணைத்தது. 1567ஆம் ஆண்டில் ஷான் தஞ்சம் புகுவதற்காக ஸ்காட்லாந்தியரிடம் சென்றபோது அவர்களால் கொல்லப்பெற்றார். அவரது தலையை மதுவிலிட்டு சிட்னியிடம் அனுப்பினர். இங்ஙனம், ஒரு தலைவர் இங்கிலாந்திற்கு இவ்வளவு இடர் விளைவிக்க முடிந்ததால் இரண்டாவது நெருக்கடி தோன்றியது. மேலும், 1569-83 ஆகிய ஆண்டுகளுக்கிடையே நிகழ்ந்த ஜிரால்டின் போரில் பல சக்திகள் ஒன்றாக இணைந்ததால் பேரிடர் தோன்றியது.

இப் போரின் முதல் மூலகாரணம் பன்னெடுங் காலமாக ஆங்கிலேயர் ஆர்மாண்டுகள்மீது அவர்களுக்கிருந்த பொறாமை யாகும். ஐரிஷ் தலைவர்கள் தங்கள் இனம் தோன்றிய நாடு என்று பெருமை பேசியதும், மேற்கு அயர்லாந்தும் தெற்கு அயர்லாந்தும் வாணிபத் தொடர்புகொண்டதுமான ஸ்பெயினுக்கும் இங்கி லாந்திற்குமிடையே புதிதாக ஏற்பட்ட பூசல் இரண்டாவது காரணமாக அமைந்தது. இதனால், மன்ஸ்டர் நகரங்களின் பழைய பற்றுறுதி குறைந்ததும் ஆபத்தான அறிகுறியாகும். அயர்லாந் தியரிடம் புதிய ஒற்றுமை உணர்ச்சிக்கான சான்றுகள் காணப் பெற்றது இதனைக்காட்டிலும் இடர் விளைவிப்பதாக இருந்தது. இவ்வித ஒற்றுமை உணர்ச்சிக்கு இரு காரணங்களைக் காட்டலாம். முதலாவது சமயம். அரச திருச்சபையின் நிலை கேவலமாக இருந்தது. அதிக அளவில் ஆங்கிலமயமாகிய பிஷப்பின் ஆட்சி எல்லையில் மீத் (Meath) பகுதியில் இருந்த 224 பாரிஷ்களில் 105-ல் ஊர் குருமார்கள் இல்லையென்றாலும், மற்றவைகளில் துணை குருமார் பட்டினியால் பரிதவித்தனர் என்றும், அவரில் மிகச் சிலரே ஆங்கிலம் பேசினர் என்றும் சிட்னி குறிப்பிட்டார்.

சில பிஷப்புகள் உண்மையற்றவராக இருந்தனர். மற்றை யோர் பல பதவி தாங்கும் முறைமை உடையவர்களாகக் காணப்பெற்றனர். நூற்றுக்கணக்கான திருக்கோயில்கள் அழிந்து கிடந்தன. எலிசபெத்தின் ஆட்சி இறுதிவரை வழிபாட்டு நூல்கள் ஐரிஷ் மொழியில் அச்சிடப்பெறவில்லை. ராணியார் இறந்த ஓராண்டிற்குப் பிறகு அயர்லாந்தின் சட்டத் தலைமைப் பணி முதல்வர் (Attorney-General) அயர்லாந்தின் சமய நிலையைப் பற்றிக் குறிப்பிடும்போது, அஃது அசுரர்கள், பிணம் தின்னிகள் ஆகியோரிடையே காணப்படும் சமய விளக்கத்தைவிட மேம்பட்டு இல்லை என்றார். இங்கு அரசாங்கச் சமய ஒறுப்பு காணப்பட வில்லை. ஏனெனில், அரசாங்கம் கத்தோலிக்கரை வாக்குறுதி எடுத்துக்கொள்ளுமாறு வற்புறுத்தவில்லை. ஆயின், அயர்லாந்து ஒரு சமயப் பாலை நிலமாக இருந்தது. 1561ஆம் ஆண்டிலிருந்து ஜெசூட் சமயப்பரப்பாளர், சமய ஆர்வம் மிகுந்த ஃபிரான்சிஸ்கர்கள் (Franciscans), தோய், சலமான்கா ஆகிய இடங்களில் புதிதாகத் தோன்றிய ஐரிஷ் கல்லூரிகளில் பயிற்சிபெற்ற குருமார்கள் ஆகியோர் இப் பாலை நிலத்தில் வாழத் தொடங்கினர். சாவிற்கும் சித்திரவதைக்கும் துணிந்த சமயப்பரப்பாளர், புறச்சமயம் சார்ந்த ராணியாருக்கு எதிராகக் கலகத்தைத் தோற்றுவிக்குமாறும், அயர் லாந்தின் உண்மை அரசரான போப்பாண்டவருக்குப் பணியுமாறும் போதனை செய்தனர். பள்ளத்தாக்குகளில் பெரிய கூட்டங்களை நடத்தினர். நகரங்களில் பல பள்ளிகளைத் தோற்றுவித்தனர்.

ஹென்றி சிட்னியின்கீழ் ஐரிஷ் மக்கள் புதிய நெருக்கத்தை உணர்ந்ததால், சமயப்பரப்பாளர் விரைவில் வெற்றி கண்டனர். சிட்னி டெஸ்மாண்டைச் சிறையிலிட்டார். ஷயர் முறையை அயர்லாந்தில் புகுத்தியதோடு, கன்னாட்டையும் மன்ஸ்டரையும் பிரசிடென்சிகளாக (Presidencies) (1567-9) அமைத்தார். இவையெல்லாம் அயர்லாந்தில் இருந்த தலைவர்களின் அதிகாரத்தை அழித்து அவர்களுடைய படை வீரர்களின் வாழ்வைப் பறிப்பதாகவும், ஆங்கிலேயரின் உண்மை ஆதிக்கத்தை ஏற்படுத்துவதாகவும் இருந்தன. புதிய பிரசிடென்டுகள் மக்கள் நாட்டுஉடையை அணிவதையும், நீண்ட கூந்தல் வளர்த்துக்கொள்வதையும் தடை செய்தனர். உழவரைச் சமாதானம் செய்வதற்காகக் குத்தகையை நிரந்தரமாக்கினர். அதற்குமுன் மக்கள் குத்தகையைப் பசுமாடுகளாக அளித்தனர். ஆங்கிலத் துப்பாக்கி ஒன்றிற்காகப் பத்துப் பசுக்களைக் கொடுத்தனர். டிவோன்ஷயர் செல்வந்தரும், காரியூக்களும் (Carews), கிரன்வில்களும் (Grenvilles) அயர்லாந்து நிலங்களின்மீது உரிமை கொண்டாட வந்தனர். ஆங்கிலச் சட்டமும், ஐரிஷ் பிரிஹோன் (Brehon) முறையும் ஒவ்வோரிடத்திலும் மோதின. பிரிஹோன் முறை என்பது மரபுரிமையில் வந்த வகுப்பினரால் நிர்வகிக்கப்பெற்ற நன்மதிப்பிற்குரிய பண்படாத சட்டத் தொகுப்பாகும். அதில், கொலைக்கும் கால்நடைக் கவர்தலுக்கும் எளிய தண்டமே தண்டனையாக வழங்கப்பெற்றது. அஃது அயர்லாந்தியரால் அதிகமாக மதிக்கப்பெற்ற பாணர்களைப் பொறியில் அடைத்து தண்டித்தது. ஒரு குடி சார்ந்தோரை அன்பு இழைகளால் ஒன்றாக இணைக்க உதவும் குழந்தைகளைச் சீராட்டும் பழக்கத்தைத் தடைசெய்தது.

டெஸ்மாண்ட் தலத்தில் இல்லாத சமயத்தில், அவருடைய உறவினரான ஜேம்ஸ் ஃபிட்ஸ்மாரிஸ் (James FitzMaurice) என்பவர் தெற்கில் ஒரு கிளர்ச்சியைத் தோற்றுவித்தார். கடுமையான போருக்குப்பிறகு கத்தோலிக்க ஐரோப்பாவின் ஆதரவைப் பெறுவதற்காக அயர்லாந்திலிருந்து சென்றார். 1579ஆம் ஆண்டில் சில அன்னியக் கூலிப்படைகளோடு திரும்பினார். போப்பாண்டவரின் தூதராக நிக்கோலஸ் சாண்டர்ஸ் (Nicholas Saunders) என்பவரும் அவருடன் வந்தார். அத் தூதுவர் கொல்லப்பட்டபோது, டெஸ்மாண்டே தலைமை தாங்கினார். 1580ஆம் ஆண்டில் பேலிலும் கத்தோலிக்கப் பிரபுக்கள் கிளர்ந்தெழுந்தனர். கெர்ரியில் (Kerry) ஸ்மெர்விக் (Smerwick) என்னுமிடத்தில் ஸ்பானியத் துருப்புகள் வந்திறங்கின. அவ்விடத்திலேயே அவர்கள் வளைத்துக்கொள்ளப்பெற்று ஒருவரும் மீதமின்றிப் படுகொலை செய்யப்பட்டனர். டெஸ்மாண்டும் கைதாகி உயிர் துறந்தார்.

அதனால், மன்ஸ்டரில் ஆங்கிலக் குடியேற்றம் தோன்ற வழி பிறந்தது.

அது கொள்கையளவில் அரண்மிகுந்த பிராட்டஸ்டென்ட் குடியேற்றமாக இருந்தது. அக் குடியேற்றத்தை ஏற்படுத்தும் வேலையை 'மேற்கொண்டவர்கள்' ஐரிஷ் குத்தகைக்காரர் எவரையும் அனுமதிப்பதில்லை யென்றும், கோட்டைகளைக் கட்டுவதென்றும், அங்கெல்லாம் காவற்படையை வைப்பது என்றும் உறுதி எடுத்துக் கொண்டனர். பரந்த நிலங்கள் பேர்பெற்றவர்களுக்கு அளிக்கப் பெற்றன. ராலேவுக்கு 4000 ஏக்கரும், ஸ்பென்சருக்கு 3000 ஏக்கரும் அளித்தனர். உண்மையில் சில குடியேறிகள் ஒன்றும் செய்யாது வாளாவிருந்தனர். பலர் நடத்தை கெட்டவராக இருந்தனர். அதே சமயத்தில் ஐரிஷ்காரர் நிலத்திற்காக ஏங்கி நின்றனர். உரிமை வழக்குத் தொடரவும் ஆர்வம் கொண்டனர். இங்ஙனம் பெருமளவில் குடியேற்றத்திற்கான விளம்பரம் இருந்த போதிலும் இக் குடியேற்றத்திற்கு நற்பெயர் இல்லை. இங்கே பெரும் இடைவெளிக்கு இடையே சில குடியேறிகள் வாழ்ந்தனர். எனவே, மலிவான ஐரிஷ் தொழிலாளரின் பணியின்றி அவர்கள் வாழமுடியாத நிலை ஏற்பட்டது. வெகு விரைவில் ஐரிஷ்காரர்கள் அளவுக்கதிகமான வாடகை அளிக்கும் குத்தகைக்காரராக வெற்றி முழக்கத்தோடு திரும்பிவந்தனர். எனினும், கன்னுட்டில் நிலையான வாடகை அடிப்படையில் திரும்ப நிலத்தை வழங்கும் கொள்கை அதிக வெற்றியடையவில்லை. அதனுடைய தலைவர்கள் இனி வரப் போகும் இருண்ட நாட்களில் பற்றுறுதியோடு இருந்ததற்கு இ:தொரு காரணமாகும்.

அயர்லாந்து மக்களின் நாகரிகம் பழைய நாகரிகமாகும். ஆங்கில அதிகாரிகள் அந் நாகரீகத்துடன் ஈடுபாடு கொள்ள வேண்டிய இக்கட்டான நிலையில் இருந்தனர். எல்லையற்ற நம்பிக்கைக் கேட்டோடு போராடினர். ஏரினைக் குதிரைவாலில் கட்டி உழுது, தம்முடைய மாடுகளோடு புகைமண்டிய குடிசைகளில் உறங்கும் உழவர்களைக் கண்டு ஒரு தவறான முடிவிற்குவந்தனர். அயர்லாந்தியரின் வாழ்க்கை அநாகரிகமானது; அதனை அழிக்க வேண்டுமென்று முடிவு செய்தனர். உண்மையில் நிகழ்ந்த மாறுதல்கள், வெட்டுக்கள் போன்றவற்றைத் தவிர வேறு எந்தத் தீர்வும் வெற்றி அளித்திருக்கும். அயர்லாந்தின் துணைத் தலைவர்கள் அரசவையில் செல்வாக்கற்று இருந்தனர். அவர்களுடைய செயல்கள் அரசாங்கத்தின் நடவடிக்கைகளினால் பாதிக்கப் பட்டன. அரசாங்கம் அவர்களுடைய துன்பங்களைத் துடைக்க ஒன்றும் செய்யாது வன்முறையைப் பயன்படுத்தியதால் மக்கள்

ஆத்திரமடைந்தனர். அது நிதியளிக்கத் தயங்கியதால் நம்பிக்கை இழந்த ஐரிஷ் துருப்புகள் கிளர்ச்சி செய்வதற்கு ஊக்கம் பெற்றனர் எனலாம். பேலில் வாழ்ந்த பழைய ஆங்கிலேயர் சுயநலம் மிக்கவர்களாக இருந்தனர். ஆங்கில் அதிகாரிகளோடு சண்டையிட்டனர். திருச்சபை நிலங்களின்மீதிருந்த தங்கள் பிடியினைத் தளர்த்த மறுத்தனர். கலகக்காரருக்குப் பீரங்கிகளை அளித்துப் பெருலாபமடைந்தனர். தீர்வையை எதிர்த்தனர். ஆனால், அதற்கு மாருன வரி எதையும் கொடுக்கவில்லை. பேல் பகுதியினருக்கும் ஐரிஷ்களுக்கும் இடையே உருவத்திலோ, உள்ளப் பண்பிலோ வேற்றுமை மிகுதியாக இல்லை. இன உணர்ச்சி ஆர்மண்டிகளையும் தங்கள் நாட்டவருடன் இணைந்துகொள்ளச் செய்தது. கலகக்காரர் டப்ளினில் இருந்து அண்டையிலுள்ள குன்றுகளை அடைந்தனர். அங்கிருந்து ஓ'கானர்கள் இரவில் இறங்கிவந்து கூரைகளைக் கொளுத்திக் கல் முற்றங்களில் இருந்து கால்நடைகளை அவிழ்த்துவிட்டனர். கத்தோலிக்கச் சமயப் பரப்பாளர் பேல் மக்களின்மீது செல்வாக்கு செலுத்தினர். மாஸ் தொழுகையைப் பொது இடத்தில் கேட்டனர். நாட்டுப்புற வீடுகளில் சமய குருமார் தங்கினர். மேலும், ஆர்மடா தோல்வியுற்றதற்கு நன்றி செலுத்தும் கூட்டத்திற்கு டப்ளின் தலைவர்கள் வரவில்லை.

ஆனல், அல்ஸ்டரில்தான் அரசாங்கத்திற்குப் பெரும் பிரச்சினை தோன்றியது. துணைத் தலைவரான பெர்ராட் (Perrott) 'அச் சாக்கடையை உடனே அடைக்கவேண்டு'மென்ருர். மூன்ருண்டுகள் படையெடுப்பு நிகழவேண்டுமென்று ஆலோசனை கூறினர். ஆனல், ஐரோப்பாவில் அதிக கவனம் செலுத்திய ஆங்கில அரசாங்கம், எளிதாகத் தெரிந்த அயர்லாந்துப் பிரச்சினையைத் தலையிட்டுக் கெடுத்தது. ஷானியின் வாரிசான துர்லோ (Turlough) கலகத்தில் இறங்கியபோது துணிகர வீரர் சிலரை அவர்கள் செலவிலேயே பகுதிகளைக் கைப்பற்ற அரசாங்கம் அனுமதித்தது. அவர்களில் விடாப்பிடியாக இருந்தவர் ராணியாரின் காதலருக்குத் தந்தையாகிய எஸ்ஸக்ஸ் என்பவர்தான். அன்ட்ரீமில் அவரது செயல்கள் ஸ்காட்லாந்தியரோடு மோதலை உண்டாக்கியது. அவர் தமது பகைவர் சிலரைப் படுகொலை செய்தபிறகு தாமே தோல்வியுற்ருர். அதனல் புறக்கணிக்கப்பட்டார் எனினும் 1580ஆம் ஆண்டு நெருக்கடியின்போது ஓ'நீல்களும் ஓ'டானல்களும் பிரிந்து நின்றதாலும், இங்கிலாந்தின் கொள்கை ஓ'நீல்களிடையேயும் பிளவினைத் தோற்றுவித்ததாலும் அல்ஸ்டர் அமைதியுடன் இருந்தது. துர்லோவின் சக்திக்கு எதிராக அவருடைய உறவினராகிய ஹூக் (Hugh) என்பவரை அவருக்குப் போட்டியாக ஆங்கி

லேயர் அர்மாக்கில் (Armagh) நிறுத்தினர். அவரது பற்றுறுதிக்கான பரிசாக டைரோன் (Tyrone) ஏர்ல் பட்டத்தையும் அவரது படைவீரருக்கு ஆயுதம் தாங்கும் உரிமையையும் தந்தனர். இத்தகைய ஆபத்தான விளையாட்டு, தெற்கைப்போல அல்ஸ்டரையும் ஆளவேண்டும் எனும் அவர்களுடைய எண்ணத்தை எடுத்துக்காட்டியது. எனவே, டைரோன் அவர்களை எதிர்க்கத் தீர்மானித்தார். அவர் மணவினைத் தொடர்புமூலம் ஓ'டானல்களுடன் சந்துசெய்துகொண்டார். அவருடைய மருமகனும் அக் குடியின் தலைவருமான ஹுக் ரோவை ஆங்கிலேயர் கடத்திச் சென்றனர். ஆயினும், 1591-ல் அவர் தப்பிச்சென்றார். டைரோனின் தலைவர் பதவியைத் துர்லோ துறந்தார். அதனோடு அயர்லாந்தில் ஆங்கிலேயருக்குப் பெருத்த சோதனைக்காலம் தொடங்கியது. ஓ'டானல் ஒரே குறிக்கோளைக்கொண்ட கத்தோலிக்கராக விளங்கினார். டைரோன் பிரபு திறமைமிக்க இராஜதந்திரி. கத்தோலிக்க பிஷப்புகளின் முழு ஆதரவும் ஸ்பெயினிடமிருந்து உறுதிமொழிகளும் அவர்களுக்குக் கிடைத்தன. 'கற்பனையுலகம்' என்று செசில் செருக்கோடு குறிப்பிட்ட அவர்களது கோரிக்கைகள் வெளிப்படையாக இங்கிலாந்திலிருந்து பிரிந்து செல்ல வேண்டுமென்று கூறவில்லை. ஆனால், வழிபாட்டு உரிமை, இங்கிலாந்து தனது காவல் படைகளைத் திரும்ப அழைத்துக்கொள்ளுதல், பண்ணையாட்கள்மீது முழு அதிகாரம் ஆகியவையே அக் கோரிக்கைகளில் அடங்கி இருந்தன. ஐரிஷ் மொழி பேசாதவரும், ஆங்கில உடை அணிந்தவரும் கொல்லப்பட்டனர். இதிலிருந்து அப்போதெழுந்த இனவெறி எளிதாகப் புலப்படுகின்றது. ஸ்பானியப் போர்த் தளவாடங்கள் வந்து குவிந்தன. அதே சமயத்தில் ஸ்பானிய அதிகாரிகள் ஐரிஷ் துறைமுகங்களில் உளவு பார்த்தனர்.

ஸ்பானியப் படையின் வருகைக்காகக் காத்திருந்த டைரோன், டப்ளின் அரசாங்கத்தோடு பேச்சு வார்த்தையில் இரண்டு ஆண்டுகளைக் கழித்தார். 1598ஆம் ஆண்டில் அர்மாக்கிற்கு அருகில் எல்லோ ஃபோர்டு (Yellow Ford) என்னுமிடத்தில் ஆங்கிலச் சேனையை அழித்தார். அயர்லாந்து முழுவதும் டெஸ்மாண்ட், ஓ'ப்ரயன், மாக்வில்லியம் (McWilliam) போன்ற புதிய தலைவர்களும் புரட்சியில் ஈடுபட்டனர். ஓ'மோர்களும் ஓ'கானர்களும் பேலில் நுழைந்தனர். மன்ஸ்டர் குடியேறிகள் சில சமயங்களில் நாக்கையும் மூக்கையும் இழந்தனர். அவர்கள் சிதறி யோகால் (Youghal), கார்க் (Cork) போன்ற இடங்களுக்குச் சென்றனர். தமது வீட்டையும் குழந்தையையும் இழந்த ஸ்பென்ஸரும் வெளியேறினார். 1599ஆம் ஆண்டில் எஸ்ஸக்ஸின் வலிமையற்ற படையெடுப்பும், படை நிறுத்த ஒப்பந்தத்தில் அவருக்கிருந்த

ஆர்வமும், டைரோனைக் கடுமையான நிபந்தனைகள் விதிக்கத் தூண்டின. இங்கிலாந்தின் குடியேற்றங்கள் அழிக்கப்படுதல் வேண்டுமென்றார். அடுத்த ஆண்டில் அவர் மன்ஸ்டரில் தோன்றினார்.

துணைத் தலைவர் மவுன்ட்ஜாய் ஆங்கிலக் குடியேற்றங்களைக் காத்தார். ஆங்கில அரசாங்கம் விழித்தெழுந்து அவருக்கு உதவியாகப் பெருஞ்சேனை ஒன்றை அனுப்பியதோடு, போதுமான நிதியையும் ஒதுக்கியது. இவைகளினால்மட்டும் வெற்றி கிட்டவில்லை. தடித்த மேலுறைகளையும் ஓயாது புகை பிடிக்கும் பழக்கத்தையும் கொண்ட மவுன்ட்ஜாய், மன உறுதியும் வெற்றிக்கான முறையையும் பெற்றிருந்தார். அவரே வெற்றிக்கு முக்கிய காரணம் என்றால் மிகையாகாது. அவர் சண்டை நிறுத்த ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தார். மாரிக்காலத்தில் போர்க்களத்திற்குச் சென்றார். அதனால், பகைவர் ஒளிந்துகொள்வதற்கான மறைவு இல்லாமற்போனதோடு, அவர்களுடைய கால்நடைகள் நகர்ந்துகொண்டே இருக்கச்செய்தார். கோட்டைகள் மூலமாக முற்றுகையிட்டார். லோக் ஃபாயில் (Lough Foyle) என்னுமிடத்திலிருந்து, பின்புறமிருந்து தாக்கி அல்ஸ்டரைக் கைப்பற்றினார். இங்ஙனம் 1601ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் ஸ்பானியப்படை கின்சேலை (Kinsale) அடைந்து ஆங்கிலேயரை மன்ஸ்டருக்கு இழுப்பதற்கு முன்பே டைரோனை வலிமைகுன்றச் செய்தார். கடலாதிக்கம் ஸ்பானியரை அங்கேயே மடக்கி வைத்தது. அவர்களுக்கு வரும் படைவலிப் பெருக்கத்தைத் துண்டித்தது. நீண்ட நாட்கள் முற்றுகையிட்டபின் மவுன்ட்ஜாய் டைரோனின் உதவிப்படையை முறியடித்து ஸ்பானியரைச் சரண்புகுமாறு செய்தார். விரைவிலேயே மன்ஸ்டரில் ஒழுங்கு நிலைநாட்டப்பெற்றது. ஓ'டானல் ஸ்பெயினுக்குத் தப்பிச்சென்று அங்கேயே மடிந்தார். 1603ஆம் ஆண்டில் டைரோன் மன்னிப்பு அளிக்க வேண்டினார். ஆனால், 1607-ல் புதிய சச்சரவுகளிலும் சதிகளிலும் இறங்கி இறுதியாக ஓ'டானலுடன் அயர்லாந்தை விட்டு நீங்கினார். இந்த வெற்றியைப் பெறுவதற்கு இங்கிலாந்தின் ஐந்து ஆண்டு நிதி செலவழிந்தது. ஆயினும், ஏர்ல்கள் ஓடிவிட்டதால் அல்ஸ்டர் ஆங்கிலேயருக்குச் சொந்தமாகியது.

இத்தகைய வெற்றியின் அடிப்படையில் எழுந்ததே பதினேழாம் நூற்றாண்டு அயர்லாந்து. அதன் தலைவர்களும், அவர்களுக்குப் புகழைத்தேடித்தந்த போர்களும் மறைந்தன. 'இனி இல்லை ; அவர்களது அகன்ற முதுகில் கேடயம் தொங்குவதைக் காணக்கூடவில்லை. கத்திபூணும் கச்சையும் அவர்தம் இடையில் காணப்

பெறுவது இல்லை' என அவர்களது யாழ்வாணர் இசைத்தனர். அல்ஸ்டரைச் சார்ந்த உழவரும் நீதிபதிகளை வரவேற்றனர். கதவு பக்கம் பார்த்துத் தூங்கும் தமது பழக்கத்தைக் கைவிட்டனர். சட்டங்களும் ஷயர்களும் நாட்டில் நிறைந்தன. பாதுகாப்புத் தோன்றியபிறகு ஆங்கிலப் பணமும் வந்தது. விலையுயர்ந்த வீடுகள், மரம், முரட்டுக் கம்பளம் போன்றவற்றின் ஏற்றுமதி ஆகியவைகள் கிழக்குத் துறைமுகங்களின் செல்வத்தைப் பெருக்கின. கார்க்கின் (Cork) முதல் ஏர்லான ரிச்சர்டு பாயில் (Richard Boyle), குடியேற்றங்களிலும், இரும்புத் தொழிலிலும், மீன் பிடிப்புத் தொழிலிலும் இருந்து பெற்ற ஏராளமான செல்வத்தைத் துறைமுகங்கள், நகரங்கள், கல்லூரிகள் முதலானவற்றைக் கட்டுவதில் செலவிட்டார். டப்ளினில், எலிசபெத் ராணியார் தோற்றுவித்த ட்ரினிடி கல்லூரியிலிருந்து உண்மையான ஆங்கிலிகச் சமயம் மெதுவாகப் பரவத் தொடங்கியது. ஐரிஷ் விண்மீன் மண்டபத்தோடும் (Star Chamber), மேலும் ஒருமுகப்பட்ட நீதிமன்றங்களோடும் அரசாங்கம் ஒன்றாக இணைக்கப்பட்டது. எனினும், அயர்லாந்திற்கும் இங்கிலாந்திற்கு மிடையேயுள்ள அரசியல் சட்டமுறையான பொருளாதார உறவுநிலை, அயர்லாந்திற்குள்ளேயே இருந்த இனப்பூசல் போன்ற அடிப்படையானவைகளுக்குத் தீர்வு காணவில்லை. பேலில் வாழ்ந்த ஐரிஷ் செல்வந்தர், அதனைச் சுற்றிப் பெருங்கூட்டமாக நின்ற அயர்லாந்தினர், காஸில் (Castle) அல்லது அதிகாரிகளின் நலன்கள் ஆகிய முக்கூறுகளும் முனைப்புடன் இருந்தன. இவற்றோடு நான்காவதாக அல்ஸ்டரில் வாழ்ந்த பிரஸ்பிடீரிய ஸ்காட்லாந்தியரும் சேர்ந்தனர்.

மவுன்ட்ஜாயிக்குப் பிறகு பதவிக்கு வந்த ஆர்த்தர் சிசெஸ்டர் (Arthur Chichester) பல போர்களைக் கண்டவர் எனினும் தயை மிகுந்தவர். அல்ஸ்டர் குடியேற்றங்களில் பெரும்பாலான ஐரிஷ்காரரின் ஆதரவைப்பெறவேண்டுமென்றும், அவர்களைச் சுதந்திர மானியம் பெற்றவர்களாகச் செய்யவேண்டுமென்றும் வற்புறுத்தினர். ஆனால், ஆங்கில அரசாங்கம் அவரது திட்டத்தை நிராகரித்தது. அல்ஸ்டரில் இருந்த வாள்வீரர்களை வெளியேற்றுமாறு ஆணையிட்டது. அதனால், ஆயிரக்கணக்கானோர் அயல் நாடுகளுக்குச் சென்று அந்நாட்டுப் படைகளைப் பலப்படுத்தினர். 'தொண்டராயினும்' (அதாவது அதிகாரிகள்) குடியேற்றத்தை 'மேற்கொண்டவராயினும்' ஆங்கிலேயர் அல்லது ஸ்காட்லாந்தியர் ஆகியோருக்கே முதன்மையிடம் தரவேண்டும் என்றது. அவர்களும் ஐரிஷ்காரரைப் பண்ணையாட்களாக வைத்துக்கொள்ளக் கூடாது. தனிப்பட்ட குடியேற்றங்களில் வெட்டுண்டு இறப்பதைவிட, தங்களுடைய பணத்திற்குப் போதிய மதிப்பினைப் பிற

இடங்களில் பெறலாம் என்று நினைந்த தகுதிபெற்ற குடியேறிகள் தயங்கினர். ஆனால், லண்டன் நகரம் 4,00,000 ஏக்கரை வாங்கியது. அதிலிருந்து லண்டன்டர்ரி (Londonderry) நகரம் தோன்றியது. 50,000 ஏக்கர் பரப்பில் அயர்லாந்தியர் குடியேற அனுமதிக்கப்பெற்றனர். மற்ற ஆறு கவுன்டிகளும் [டொனிகல் (Donegal), டைரோன், அர்மாக், கோலிரெய்ன் (Coleraine), ஃபர்மானக் (Fermanagh), காவன் (Cavan)] சிறிது சிறிதாக ஆங்கில ஸ்காட்டியக் குடியேற்றக்காரர்களுக்குச் சென்றன. எனினும், இத் திட்டத்தின் விளைவில் சிசெஸ்டர்கொண்ட ஐயப்பாடு உண்மை யாயிற்று. குடியேற்றத்தை மேற்கொண்டவர்கள் ஐரிஷ்காரர் இன்றி ஒன்றும் செய்யமுடியாது என்பதை உணர்ந்தனர். ஏனெனில், அவர்கள் எண்ணியவாறு நிறைய குடியேறிகள் வந்து சேரவில்லை. மற்றவர் பயிரிடுவதற்கு அளிக்கும் வாடகையைக் காட்டிலும் அதிகமாக ஐரிஷ்காரர் கால்நடைகளை மேய்க்கும் உரிமைக்காகக் கொடுக்க முன்வந்தனர். பாதுகாப்பைவிட லாபத் தையே குறிக்கோளாகக் கொண்ட ஆயிரக்கணக்கான பிரிட்டிஷ் குடும்பங்கள் சிதறிக்கிடந்தன. அவர்கள் ஐரிஷ் பணியாட்களை நம்பி வாழ்ந்தனர். காடுகளில் சிறு கலந் தாங்கிய ஐரிஷ் வீரர்களால் அச்சுறுத்தப்பெற்றனர். இங்ஙனம் நிலத்திலிருந்து நீக்கப்பெற்று, சட்ட முறைப்படி தாழ்ந்தோராகக் கருதப்பெற்ற அயர்லாந்தியர், இப் புதிய மாகாணத்தில் பேராபத்தாக இருந்தனர். அதே சமயத் தில் எதிர்நிலையிலிருந்து இடர் ஒன்று எழுந்தது. ஆங்கிலேயரைவிட வளம்பெற்ற ஸ்காட்லாந்தியர் அரசரின் கொள்கையால் விரட்டப் பெற்று அல்ஸ்டருக்கு வந்த பிரஸ்பிடீரிய குருமாரின் நாகரிகத்தை ஏற்றுக்கொண்டனர். இங்ஙனம் அயர்லாந்தியரால் வெறுக்கப் பெற்று, ஆனால் அதேசமயத்தில் ஆங்கில அரசுக்கு ஆபத்தாக வந்த புதிய வலிமைவாய்ந்த அல்ஸ்டர் தோன்றியது.

பேலின் பெருங் குடியினருக்கும் அயர்லாந்தியருக்கும் இடையே பெருக்கெடுத்து ஓடிய 'இரத்த வெள்ளத்தை'க் கத்தோலிக்கர் என்னும் பொதுவுணர்வு மறக்குமாறு செய்தது. சாத்வீக எதிர்ப்பு, கலகம் ஆகியவை தோன்றிய பிறகே சமயப் பிரச்சினையை நெருக் குதல் ஆகாது என்று மவுன்ட்ஜாய் விடுத்த எச்சரிக்கை உணரப் பெற்றது. ஓ'நீல்கள் அதிகாரத்திற்குத் திரும்புவதை எதிர் நோக்குமாறு குடியானவர்களுக்குப் போதித்தனர். துறவிகளும் திரிதுறவிகளும் (friars) டப்ளின் நகரில் வெளிப்படையாகவே வேலை செய்தனர். ஜேம்ஸின் ஆட்சிக் காலத்தில் கூடிய ஒரே பாராளுமன்றமாகிய 1613–15ஆம் ஆண்டுகளில் இருந்த பார்ாளு மன்றத்திலிருந்து கத்தோலிக்கச் சமயம் எவ்வாறு அயர்லாந்தை ஒன்றுபடுத்தியது என்பது தெளிவாகின்றது. இச் சமயத்தில்

அயர்லாந்து ஷயர்களாகப் பிரிக்கப்பெற்று இருந்ததாலும், 1560 ஆம் ஆண்டிற்கு அப்புறம் காமன்ஸ் சபை உறுப்பினர் 98-லிருந்து 232 ஆக உயர்ந்ததாலும், இதனை அயர்லாந்தின் முதல் உண்மையான பாராளுமன்றம் என்று கூறலாம். அரசாங்கம் கத்தோலிக்கப் பிரபுக்களுக்கு எதிராக 19 பிஷப்புகளை நியமித்த போதிலும், 39 புது பரோக்களை ஏற்படுத்தியபோதிலும், கத்தோலிக்கச் சமயம் சார்ந்த பிரபுக்களும் காமன்ஸ் சபையினரும், தங்களுக்கு ஆபத்தாக வரும் பிராட்டஸ்டென்ட் சட்டங்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்ய இணைந்தனர். அவர்கள் பாராளுமன்றத்திலிருந்து விலகி இருத்தல், இங்கிலாந்திற்குத் தூதுக் குழுக்களை அனுப்புதல், முட்டுக்கட்டையிடுதல் ஆகியவற்றால் அப்படிப்பட்ட சட்டங்கள் நிறைவேறுவதைத் தடுத்தனர்.

எனினும், தனிப்பட்ட கத்தோலிக்கர் தனிச் சிறப்புரிமைச் செயல்களினால் துன்புற்றனர். அதே சமயத்தில் கத்தோலிக்க நிலக்கிழார்மீது தொடுத்த சட்டமுறையான போராட்டம் நின்றபாடில்லை. வெக்ஸ்ஃபோர்டிலும் (Wexford), லீட்ரிம்மிலும் (Leitrim) நில உரிமைக்கான புதுக்கட்டுப்பாடுகள் சில அயர்லாந்துக் குடிகளை நிலமற்றவராகச் செய்தன அல்லது மனநிறைவற்றவராகச் செய்தன. இவ்விதக் கட்டுப்பாடுகள் ஜூரர்களைக் கட்டாயப்படுத்துவதன்மூலமாகத்தான் நிறைவேற்றி வைத்தனர். இவ்வாறு ஏற்பட்ட புதிய ஏற்பாடு சமூகத்திலிருந்து விலக்கப்பட்டோரின் எண்ணிக்கையைப் பெருக்கியது. அவர்கள் 'வேற்று நாடுகளில் நல்ல நிலங்களுக்குச் செல்வதைக் காட்டிலும், உமியைத் தின்று பட்டினி கிடப்பதானாலும், தாங்கள் வாழுமிடத்திலேயே உயிர் விடுதல் மேலானதாகக் கருதுவர்' என்று ஐரிஷ் பிஷப் ஒருவர் குறிப்பிட்டார். ஜேம்ஸ் ஆட்சியின் இறுதியாண்டில் கன்னட் பகுதியில் 40 ஆண்டுகளுக்கு முன்பு அளிக்கப்பெற்ற நில உரிமைகள் செல்லுபடியாகா என்று அறிவிக்கப்பட்டது. அதோடு அங்கே ஒரு பெரிய குடியேற்றம் தோன்றப்போவதாகவும் பேச்சு இருந்தது. எனினும், 1627ஆம் ஆண்டில் ஐரிஷ் பேராட்கள் அரசரோடு நேரடியான உடன்படிக்கை ஒன்றைச் செய்து கொண்டனர். அதன்படி ஐரிஷ் படைகளுக்குத் தேவையான 1,20,000 பவுன் மானியத்தை ஐரிஷ்காரர் அளிக்கவேண்டும். அதற்குப் பதிலாக அரசர் சில சலுகைகளை அளித்தார். அறுபது ஆண்டுகளுக்குமேல் ஒருவர் நிலத்தின்மீது உரிமை உடையவராக இருந்தால் அந்த நிலத்தின்மீது அரசாங்கம் உரிமை கொண்டாடுதல் கூடாது. கன்னட் நிலக்கிழாரின் உரிமைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆதிக்க உறுதிமொழி சில இடங்களில் எடுத்துக் கொள்ளத் தேவையில்லை. எனினும், அயர்லாந்தின் நிதிநிலைமை

மிக மோசமாக இருந்தது. படைகளுக்குச் சரிவர ஊதியம் அளிக்கவில்லை. அதனுடைய துறைமுகங்கள் கடற்கொள்ளைக் கூட்டத்தினரால் சூறையாடப்பெற்றன. குடியேற்றங்கள் அரைகுறையாக நின்றன. எனினும், அரசர் காட்டுவதாகக் கூறிய சலுகைகள் உண்மையில் அளிக்கப்பெற்று இருக்குமானால் அயர்லாந்தில் அமைதி ஏற்பட்டு இருக்கலாம். ஆனால், 1633ஆம் ஆண்டில் வென்ட்வொர்த் துணைப் பிரபுவாகப் பதவியேற்றார். அவர் அதிகாரம், நீதி, சீர்திருத்தம் ஆகியவற்றில் முனைப்பான கொள்கையைப் பின்பற்றத் தீர்மானித்தார்.

# 8. கடைசி நேரம், 1603–1629

பதினாறும் நூற்றாண்டு ஒரு புரட்சிக் காலமாகும். அக் காலத்தில் வெளிப்பட்ட சக்திகளின் செயல், எதிர்ச்செயல்கள், பதினேழாம் நூற்றாண்டில் சில பல முடிபுகளைக் கொண்டுவந்தன. அந்த முடிவுகளே, மொத்தமாக எடுத்துப் பார்க்குமிடத்து, 1789ஆம் ஆண்டுவரையிருந்த ஐரோப்பாவின் அமைப்பாக இருந்தது.

கிரேட் பிரிட்டனில் காணப்பெற்ற சமயம், பொருள் வாழ்வு, வெளிநாட்டுக் கொள்கை, அயர்லாந்து ஆகிய பிரச்சினைகள். எலிசபெத் ராணியாரின் அரசாங்கத்தினால் தவிர்க்கப்பட்ட அல்லது தள்ளிப்போடப்பெற்ற பிரச்சினைகளேயாகும். இவைகளின் சுருக்கமாக வந்த உரிமைப் பிரச்சினை ஏற்கெனவே பெரும் சிக்கலாகியது. எனினும், முதலாம் ஜேம்ஸ் இறந்தபோது இப் பிரச்சினை ஜெர்மனியில் நடைபெற்றதைப்போல, உள்நாட்டுப் போரின்மூலமாகத்தான் தீர்க்கப்படும் என்று எவரும் எண்ணவில்லை. மேலும், அவர் விட்டுச்சென்ற பரம்பரைச் சொத்து மோசமான நிலையில் இருந்தது எனினும், செப்பனிட இயலாத ஒன்றாக இல்லை.

பலவகையில், 1603ஆம் ஆண்டு ஓர் உண்மை யுகத்தைக் குறிப்பதாக இருக்கின்றது. பருவமடைந்து, பட்டத்திற்கு வந்த எந்த அரசரும் எலிசபெத்தைப்போன்று அறுபது ஆண்டுகள் அரியணையில் அமர்ந்ததில்லை. ஜேம்ஸ் தம்முடைய புதிய குடிகளிடத்துத் தாம் 'வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்த அரசர்' என்று கூறிக்கொள்ளத் தவறவுமில்லை. மேலும், அவர் அரசுகட்டில் ஏறியதால், ஸ்காட்லாந்திற்கும் இங்கிலாந்திற்கும் இடையே ஐக்கியம் ஏற்பட்டது. இடையே இருந்த பார்டர் மறைந்தது. மூன்றாவதாக அச் செயல் முடியாட்சியின் மாட்சிமையை மேன்மையடையச் செய்தது. அதற்குக் காரணம், அரசரே இரு நாடுகளையும் ஒன்று சேர்க்கும் இணைப்பாகை

இருந்தார் என்பதும், அவ்விரு நாடுகளில் உள்ள பொச்சாப்புகள், பிரபுக்கள், பாராளுமன்றங்கள் ஆகியவற்றை ஒன்றிற்கு எதிராக மற்றொன்றைப் பயன்படுத்திப் பலன் கண்டனர் என்பதுமட்டும் அன்று. இவற்றிற்கும் மேலாகப் பாராளுமன்றத்தின் பட்டம் ச.:ப்போக் குலவழியைவிட்டுச் சென்றதால் ஸ்டுவர்ட் அரசர் மரபாகவந்த உரிமையால் ஆட்சிபுரிந்தனர்.

இவ்விதச் சூழ்நிலைகள் அக் காலப் பிரச்சினையின் இயல்பை மாற்றின என்று சொன்னால், அதிலே அரசருடைய நடத்தை அதே அளவிற்குக் காரணமாக இருந்தது. தம்முடைய நூல்கள் தம் வாழ்நாளிலேயே அச்சிடப்பெறும் பேறுபெற்ற முதல் பிரிட்டிஷ் அரசரான ஜேம்ஸ், மெய்யுணர்வின் மேம்பாட்டில் மனமார்ந்த நம்பிக்கைக் கொண்டார். போர், சமயம் ஆகியவற்றைப் பொறுத்தவரை அமைதியே இன்பம் என்று உண்மையான உணர்வுகொண்டிருந்தார். அதே சமயத்தில், ஆங்கிலேயரது 'பிச்சைக்கார ஸ்காட்டியருக்கு' எதிரான ஓரவஞ்சகத்தைக் காட்டிலும், அவருடைய ஐக்கியக் கொள்கை சிறந்தது. ஆயினும், அவரது எண்ணங்கள் உயர்ந்தவையாக இருந்தபோதிலும், அவருடைய செயற்பழக்கம் எலிசபெத் ராணியாருடையதைக் காட்டிலும் இழிவானது. அவரது நடத்தை சிறுமையானது. 'ஒரு வில்லுக்கு இரண்டு நாண்கள் தேடுபவர் அம்பை வேகமாக எறியலாம். ஆனால், நேராக எறிய முடியாது' என்று ராணியார் ஜேம்ஸிற்கு எச்சரிக்கை செய்திருந்தார். ஜேம்ஸ் கொள்கையற்றவர். நீண்டநேரம் வீம்பு பேசியபின் எப்போதும் பணிந்துவிடும் பண்பு கொண்டவர். ராணியார் கவனமாக இருக்குமிடத்தில் ஜேம்ஸ் தாராளமாக இருந்தார். ராணியார் அறிவின் துணைகொண்டு ஆண்டார். ஜேம்ஸோ அன்பினால் ஆட்சிபுரிந்தார். ஆனால், இந்த அன்பு, பொதுப் பணியாளரிடமின்றி, சரளமாகப் பேசும் திறனும் அழகிய மேனியும் தவிர வேறெந்தத் தகுதியும் இல்லாத ஆதரவாளரிடமே காட்டப்பெற்றது. அவருடைய பயந்தாங்கொள்ளித்தனத்தினால் இடர்மிகுந்த எதிர்ப்பு ஏற்படாமற் போயிற்று என்றாலும், அவர் எதிர்ப்பினைத் தமக்கு கிடைக்கும் அவமதிப்பாகக் கருதி, முடியுமானால் எதிரிகளைக் கொடுமை செய்யத் தயங்கவில்லை. அவர் பரவலாகப் படித்தவர். எதிர்ப்பின்றி உருவான அவரது மன அரங்கில் எல்லாச் செய்திகளைப்பற்றியும் மாறாத கருத்துகளைக் கொண்டிருந்தார். கட்டுப்பாடற்ற துணிபாற்றல்முதல் புகையிலைவரையில் உள்ள பலசெய்திகளைப்பற்றி உறுதியான கருத்துகளைக் கொண்டிருந்தார். நூலாசிரியரின் தற்பெருமை அவரிடமிருந்து காணப்பெற்றது. 'நாட்டிலேயே தாம் ஒரு சிறந்த ஆசிரியர்' என்று காமன்ஸ்சபையில் பெருமை பேசினார்.

பாராளுமன்றப் பேச்சிலும் இதையேபோதித்தார். தெய்வீக உரிமைக் கொள்கையைப் (Divine Right Theory) பற்றிய கட்டுரையை அச்சிட்டு வெளியிட்டார். தெய்வீக உரிமைக் கொள்கை இடர்மிகுந்ததாயும், மக்களுக்குச் சினமூட்டுவதாயும் இருந்தபோதிலும் அதனைவிடாது காத்தார். அது சொற்பொருள் சார்ந்த முறையில் செயல்படுத்தப்படுமானால் சட்டத்தை எதிர்ப்பதாக இருந்தது. ஸ்காட்லாந்தின் கிர்க் திருச்சபையோடு சண்டையிட்டதிலிருந்தும், பிற்காலத்தில் போப்பின் பதவி விலக்கு அதிகாரத்தை ஆதரித்த கார்டினல் பெல்லார்மைன் (Bellarmine) போன்றோரை எதிர்த்ததிலிருந்தும் அக் கொள்கை உருவாகியது. எலிசபெத் ராணியார் திருச்சபைக்கு அனுப்பிய அறிவுரைகள் அரசருக்கு எதிர்ப்புத் தருவதைக் கண்டித்தன. ஆயினும், ஜேம்ஸ் அதைப்பற்றிய பகுத்தாய்வையே தடைசெய்தார். அவரது கொள்கையின்படி நல்ல அரசர் சட்டத்திற்கு உடன்படுவார் என்றாலும் 'அவர் சட்டத்திற்கப்பாற்பட்டவர்'. ஆண்டவரைப் போன்று அரசர்களும் தம்முடைய அடிப்படை அதிகாரங்கள் சிலவற்றை மானிடச் சட்டத்திற்கு அளிக்கின்றனர். கடவுளின் செயல்களை எதிர்ப்பது நாஸ்திகம் அல்லது தெய்வநிந்தனை ஆவது போல, அரசர் தம்முடைய அதிகாரத்தின் உச்சியில் இருக்கும் போது, அவர் செய்யும் செயல்களை எதிர்ப்பது அரசப் பகைமை யாகும். பாராளுமன்றம் அரசாங்கத்தின் முக்கியப் பணிகளில் தலையிடுவதை ஜேம்ஸ் தடுத்ததைப்போன்று, டியூடர்களும் தங்களுடைய தனிச் சிறப்புரிமையை வற்புறுத்தினர். ஆனால், ஜேம்ஸ் அவ்வதிகாரம் 'வரம்பற்றது' என்றும், மறைபொருளானது என்றும், வழக்கறிஞரின் வாதத்திற்கு உட்படாதது என்றும் வலியுறுத்தினார்.

இத்தகைய குறைபாடுடைய கொள்கையினால் அவர் பட்ட மேற்றபோது, மக்கள் கொண்ட மகிழ்ச்சி மறைந்தபோதிலும், அது வளமான வாழ்வுபெற்ற செல்வந்தரிடையே எதிர்ப் புணர்ச்சியை உடனே தோற்றுவிக்கவில்லை. அதற்கான வேறு சில காரணங்களும் உண்டு. அப்போது சாலிஸ்பரி ஏர்லாக வந்த இளைய செசில், 1612ஆம் ஆண்டில் தாம் இறக்கும் வரையிலும் பிரதம மந்திரியாக இருந்தார். அவர் தம்முடைய தந்தையாரைப் போன்றே குறுகிய உள்ளம் கொண்டவராக இருந்தபோதிலும், பாராளுமன்றம் சார்ந்த ஆட்சியில் நம்பிக்கை கொண்டவர். நாட்டு மக்களின் உணர்ச்சியை நன்கறிந்தவர். அவர் 1604ஆம் ஆண்டில் ஸ்பெயினோடு சமாதானத்தைப் பேசி முடித்தார். எனினும், ஸ்பானியர் மேற்கிந்தியத் தீவுகளுடன் கொண்ட வாணிபத்தைத் தொடர்ந்து தடைசெய்ததாலும், அவர்களின்

சமய நீதிமன்றங்கள் ஆங்கிலக் கடலோடிகளை ஒறுத்ததாலும், இவ்வுடன்படிக்கையை ஆங்கிலேயர் வெறுத்தனர். எனினும், நிதி நெருக்கடி காரணமாக இவ்வுடன்படிக்கை இன்றியமையாத தாயிற்று. மேலும், தங்களிடம் ஊதியத்திற்காகப் பணிபுரிந்த சில ஆங்கிலப் படையினரின் துணையோடு தனித்து வாணிபம் செய்யும் ஆற்றல் பெற்றிருந்த டச்சுக்காரரிடமிருந்து, ஆங்கில வாணிபத்திற்கு அனுகூலமாகச் சில கட்டுப்பாடுகள் கோரப் பெற்றன.

அரசர்மீது வளர்ந்துவந்த வெறுப்பினை அரச குடும்பத்தைச் சார்ந்த இருவர் குறைத்தனர். பட்டத்து இளவரசர் ஹென்றி, மற்ற ஸ்டுவர்டுகளைப்போலன்றி வீரமும் விடாப்பிடியும்கொண்டு, தீவிர பிராட்டஸ்டென்ட் உணர்வோடு வாழ்ந்தார். டைபாய்டு காய்ச்சலினால் அவர் மடிந்தபோது மக்கள் அவரது சகோதரி எலிசபெத்தின்மீது நம்பிக்கை வைத்தனர். அவர், வனப்பு காரணமாக நாட்டு மக்களின் முழு அன்பிற்குரியவரானார். அவரைப் புகழ்வதில் கெவலியரும் பியூரிட்டானியரும் ஒன்றாக இணைந்தனர். அவருடைய அவ்வாய்ப்புகளுக்காக மக்கள் மனம் வருந்தினர். இதைத் தவிர ஜேம்ஸின் ஆட்சியில் மக்களுடைய மனம், நோக்கம் ஆகியவற்றைப்போலவே, குழுக்களும் எலிசபெத் காலத்திலிருந்தவைபோன்றே காணப்பெற்றன. பழைய திருச் சபையினர் கொள்கையளவில் கால்வினியராக இருந்தனர். உதாரணமாக, 1611–33ஆம் ஆண்டுகளில் ஆர்ச்பிஷப்பாக இருந்த அப்பாட் (Abbott) இவ்வாறு காணப்பட்டார். அதனால், திருச்சபைக்கும் பியூரிட்டன்களுக்குமிடையே உள்ள உறவு நிலை வரையறுக்கப்பெறவில்லை. ஸ்பானியக் கத்தோலிக்கச் சமயத்தை நன்கு அறிந்தவராதலால், ஹென்றி வாட்டன் (Henry Wotton) போன்ற இராஜதந்திரிகளை ஹாலந்திற்கு ஆதரவு தரவும், ஒறுக்கப் பெற்ற வாடோய்ஸ் (Vaudois) என்பாருக்கு அனுதாபம் தெரி விக்கவும் தயங்கவில்லை. பேகன், தமது மாமன் பர்க்லீயைப் போலவே திருச்சபையைவிட நாட்டைப்பற்றியே பெரிதாக நினைந்தார். மேலும், பியூரிட்டன்களுக்குச் சலுகை காட்டவேண்டு மென்றார்.

ஜேம்ஸ் ஆட்சியின் ஆரம்ப ஆண்டுகளில் தோன்றிய சதிகள் இத்தகைய மனநிலை நீடித்து நிற்குமாறு செய்தன. 1603ஆம் ஆண்டில் 'முதன்மை'ச் சதிகளும் கிளைச்சதிகளும் பயனற்றுப் போனதால், ஏமாற்றமடைந்தோரும் துணிகர வீரரும், அரபெல்லா ஸ்டுவர்ட் சீமாட்டியின் (Arabella Stuart) உரிமையை நிலைநாட்டு தற்காக ஸ்பானியப் படைகளைப் பெற முயன்றுகொண்டிருந்தனர்.

ராலே குற்றமற்றவராக இருந்தபோதிலும் குற்றம் சாட்டப் பெற்றூர். பொருள் தரும் பதவிகளை இழந்து மனக்கசப்புற்றிருந்த அவரை டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பினர். வெடி மருந்துச் சதி வேறெந்தச் சதியைக்காட்டிலும் இடர் விளைப்பதாக இருந்தது. அரசாங்கம் பல ஆண்டுகளாகத் தீவிர ஜெசூட்டுக் குழுவினருக்கும், சாதாரண சமய குருமாருக்கிடையே வேறுபாடு கண்டறிந்தது. அவர்களுக்கிடையே இருந்த பூசல்கள், சிறையிலிருந்த கத்தோலிக்கரையும் வாடிகன் (Vatican) ஆலோசகர்களையும் பிளவுபடுத்தியது.

இங்கிலாந்து அரச உரிமையைப் பெறவேண்டுமென்ற ஆவல் மேலிட, கத்தோலிக்கருக்குச் சமயப்பொறை வழங்குவதாக ஜேம்ஸ் வாக்குறுதியளித்திருந்தார். ரோமும் ஸ்பெயினும், கத்தோலிக்கரை அமைதியாக வைத்திருக்கத் தயாராக இருந்ததால் கத்தோலிக்கரிடம் இருந்து வாங்கும் தண்டங்களைத் தள்ளி வைத்தார். எனினும், பல காரணங்களுக்காகச் சமய ஒறுப்பினை மேற்கொள்ளவேண்டியதாயிற்று. பாராளுமன்றத்தின் கூக்குரல், கத்தோலிக்கரின் பெருக்கம், இரகசியமாகச் சமயம் மாறிய ஜேம்ஸின் மனைவியார்மீது கத்தோலிக்கர்கொண்ட செல்வாக்கு, பற்றுறுதிகொண்ட கத்தோலிக்கர், பற்றுறுதி கொள்ளாதார் என்ற ஜேம்ஸின் பாகுபாட்டை ஏற்றுக்கொள்ள போப்பாண்டவர் காட்டிய தயக்கம் ஆகியவை இவ்வித மாற்றத்திற்குக் காரணங்களாக அமைந்தன. ஜேம்ஸின் கொள்கைமாற்றத்தினுல் நீண்டகாலமாக ஸ்பானியப் படையெடுப்பைப்பற்றிப் பேசிய கத்தோலிக்கர் தாமதிக்காது செயலாற்றத்தொடங்கினர். அவர்தம் தலைவர்களாகிய காடீஸ்பி (Catesby), ட்ரஷாம் (Tresham), வின்டர்ஸ் (Winters) போன்றோர் எஸ்ஸக்ஸோடு சூழ்ச்சிசெய்தனர். மேலும், ஃபிளாண்டர்ஸில் இருந்த ஸ்பானியப் படையில் பணிபுரிந்துவந்த ஆங்கிலக் கத்தோலிக்கரோடும் தொடர்புகொண்டனர். அத்தகையோரில் ஒருவனுன கைடோ ஃபாக்ஸ் (Guido Fawkes) யார்க்ஷயரைச் சார்ந்தவன். அவன் ஒருமுறை டச்சுக் காவற்படையைக் காட்டிக் கொடுத்த துரோகி ஸ்டான்லியிடம் பணிபுரிந்தவன். மன்னரையும் பாராளுமன்ற உறுப்பினரையும் கொல்வதற்காக எழுந்த இச் சதிக்கான விவரங்கள் அது நிகழ்வதற்குப் பதினெட்டு மாதங்களுக்கு முன்பே வகுக்கப்பெற்றன. பாராளுமன்றக் கட்டடத்தின் கீழ் உள்ள அறையில் வெடிமருந்தை நிரப்பினர். ஆங்கில ஜெசூட்டுகளின் தலைவரான கார்னெட் இச் சதிபற்றி அறிந்தபோதிலும், அதைப் பற்றிப் பேசாது மௌனமாக இருந்தார். கத்தோலிக்கப் பிரபுக்களாக இருந்த தமது உறவினர் அழிவதைப் பொருத ட்ரஷாம் இச் சதியைப்பற்றிய செய்தியை வெளியிட்டார். இதனுல், 1605ஆம்

ஆண்டு நவம்பர் மாதம் 5ஆம் நாள் பாராளுமன்றம் கூடுவதற்குச் சிலமணி நேரம் முன்னதாக ஃபாக்ஸ் கண்டுபிடிக்கப்பட்டான். மரண தண்டனை அடைந்தான். கார்னட்டும் அவனைப் பின்பற்றினர். அதே சமயத்தில் ஷெரிப்களின் (sheriff) படைகள் மற்றையோரை வேட்டையாடிச் சுட்டுக்கொன்றன. இங்ஙனம், நவம்பர் மாதம் 5ஆம் தேதி எப்போதைக்கும் நன்றியறிவிப்பு தினமாக அறிவிக்கப் பெற்றது. அதேசமயத்தில் புதிய சட்டங்கள் கத்தோலிக்கரைத் துன்புறுத்தின. அதன்படி, சமயச் சார்பற்ற கத்தோலிக்கர் ஆங்கிலிகச் சடங்கினை ஏற்காவிட்டால் தண்டமளிக்கவேண்டும். அவர்கள் தங்களுடைய வீட்டிலிருந்து ஐந்து மைல் தூரத்திற்கு மேல் செல்லக்கூடாது என்றாயிற்று. அவர்கள் பொதுப்பணித் துறையிலும், கல்வியறிவு சார்ந்த பணிகளில் இருந்தும் நீக்கப் பெற்றனர்.

காமன்ஸ் சபையோடு ஜேம்ஸின் ஆரம்பகால உறவு, பயனற்ற பாராளுமன்றம் (Addled Parliament) 1614ஆம் ஆண்டில் கலைக்கப்பெற்றதோடு முடிவடைந்தது. அக்காலத்தில் இரு தரப்பிலும் தவறுகளோடுகூடிய பயனற்ற பூசல்கள் காணப்பெறுகின்றன. ஜேம்ஸ், எலிசபெத்தைப்போலல்லாது காமன்ஸ் சபையில் முக்கிய அமைச்சர் எவரையும் வைத்திருக்கவில்லை.

இங்ஙனம், காமன்ஸ் சபையினர் தங்களுடைய தலைவர்களைத் தேர்ந்தெடுக்கவும், தங்களுடைய செயல் முறையை வகுத்துக் கொள்ளவும் சுதந்திரம்பெற்றிருந்தனர். உதாரணமாக, லண்டன் நகரத் தலைவராகிய எட்வின் சாண்டீஸ் (Edwin Sandys) காமன்ஸ் சபையினரால் தேர்ந்தெடுக்கப்பெற்றார். ஜேம்ஸின் சொற் பொழிவுகள் ஆத்திரமூட்டுவனவாக இருந்தன. அவர் குறிப்பாகக் காமன்ஸ் சபையின் உரிமைகள் தம்மிடமிருந்தே வந்தவை என்று கூறினர். தேர்தல் வழக்கை[1] சான்சரி நீதிமன்றம் தீர்க்கவேண்டுமென்றார். ஆயின், தமது உரிமைகளைப் பாதுகாக்க விரும்பிய காமன்ஸ் சபை 1604ஆம் ஆண்டில் வெளியிட்ட 'காப்புரைத் தாள்' (செய்ததற்கு இரங்கல்) (Apology), நீண்டகாலமாக எலிசபெத் ராணியாரால் அடக்கப்பெற்று இருந்த அவர்களின் மனநிலையை எடுத்துக்காட்டுகின்றது. அதனோடு அவர்கள் அரசரின் தனிச் சிறப்புரிமைகளை அழிப்பது என்றும், அன்னிய அரசராகிய ஜேம்ஸிற்கு ஒரு பாடம் கற்பிக்கவும் தீர்மானித்தனர். ராணியாரின் "வயதையும் பாலையும் (Sex) கருதியே" கொடும் அடக்குமுறை

[1] குட்வின் (Goodwin) என்பவருக்கும் ஃபோர்டஸ்க்யூ (Fortescue) என்பவருக்கும் இடையே எழுந்த வழக்கு.

களுக்கான 'பரிகாரத்தினை' அவரிடம் கேட்கவில்லையென்று ஜேம்ஸிடம் கூறினர். 'நேர்மையானவையும் மரபுரிமையால் வந்தவையுமான' சிறப்புரிமைகள் 'தடையேதுமின்றி மனதில் தோன்றியதைப் பேசலாம்' எனும் பொருளில்தான் உள்ளன என்று ஜேம்ஸ் வாதாடினர். சமயத்தைப் பொறுத்தவரையில் அந்த ஆண்டு கூடிய சமய குருமார் திருக்கூட்டம் பியூரிட்டன்களுக்கு எதிராகக் கொண்டுவந்த விதிகளை அவர்கள் ஏற்றுக்கொண்டனர். அரசருக்கு ஆலோசனை கூறுவோர் தவருகச் செய்திகளைத் தருவர் என்றும், அவர் லௌகிகச் செய்திகளுக்காகப் பாராளுமன்றத்தின் அனுமதியோடு சட்டங்கள் இயற்றுவதுபோன்று, சமயத்துறையிலும் சட்டங்கள் இயற்றவேண்டுமென்றும் வற்புறுத்தினர். இவ்வாறு எலிசபெத்திடம் பீட்டர் வென்ட்வொர்த்தைத் தவிர வேறு யாரும் பேசியதில்லை. ஜேம்ஸினுடைய ஐக்கியத் திட்டங்களைப் புறக்கணித்ததன்மூலமாக அவரை அவமதித்தனர். பிச்சைக்கார ஸ்காட்டியர் வாணிபத்தை அழித்துவிடுவர் என்றும், அல்லது இங்கிலாந்து ஏற்கெனவே ஜனநெருக்கம் மிகுந்திருந்தது என்றும் கூறி, இரு நாடுகளுக்குமிடையே தடையில்லா வாணிபம் நடைபெறவேண்டுமென்ற திட்டத்தைத் தகர்த்தனர். ஸ்காட்லாந்தியர் பல பதவிகளில் இருந்து நீக்கப்படுதல் வேண்டுமென்ற நிபந்தனையின்பேரிலேயே அவர்களுக்குக் குடியுரிமை வழங்கினர். பின்னர், வழக்கொன்றின் தீர்ப்பு[1] ஒன்றினல் ஜேம்ஸ் பட்டத்திற்கு வந்த 'பிறகு பிறந்த' (post-nati) ஸ்காட்டியர் (1603ஆம் ஆண்டிற்குப்பின் பிறந்த ஸ்காட்டியர்) அதன் காரணமாகவே (ipso facto) இங்கிலாந்து குடிகளின் உரிமைகளைப் பெறவேண்டுமென்று ஏற்பாடாயிற்று. அதன்பிறகு ஐக்கியத்தைப்பற்றிய பேச்சே எழவில்லை. ஆனல், பல நெருங்கிய வேற்றுமைகளினல் அரசருக்கும் பாராளுமன்றத்திற்கும் இடையே உள்ள பிளவு விரிந்துகொண்டே சென்றது.

அவைகளில் சமயம் முதலாவதும் முதன்மையிடத்தை வகிப்பதுமாகும். கத்தோலிக்கரைப்போன்றே மிகுந்த நம்பிக்கையோடு பியூரிட்டானியர் உடனடியாக ஜேம்ஸிடம் சென்று அநேகமாக எலிசபெத் ராணியார் தரமறுத்ததையெல்லாம் அளிக்குமாறு கோரினர். 1603ஆம் ஆண்டில் ஆயிரம் பியூரிட்டன்கள் கையெழுத்திட்டதாக எண்ணப்பெற்ற ஆயிரவர் விண்ணப்பம் (Millenary petition) என்ற குறைப் பத்திரத்தில் ஏற்கெனவே முப்பது ஆண்டுகளாகக் கேட்டு வந்த குருமார் வெண்ணிற நீள் அங்கி அணிவதில் பிரியம்போல் நடக்க அனுமதி, பதவி சார்ந்த பிரமாணம் எடுக்கவேண்டு

[1] 1607ஆம் ஆண்டில் கால்வின் (Calvin) என்பவரின் வழக்கு.

மென்பதை நீக்குதல் போன்ற ஒருசில மாற்றங்களேயன்றி வேறில்லே. ஆயினும், அவர்கள் மற்றச் சீர்திருத்தத் திருச்சபை களின் அமைப்பை ஆதரித்து எழுதிய சுற்றறிக்கைகளே விடுத்தனர். அதே சமயத்தில் அரசரோடும் பிரபுக்களோடும் கூடிய ஹாம்டன் கோர்ட் (Hampton Court) மாநாட்டில் அவர்களது பிரதிநிதிகள் வருமுன் உரைத்தலேப்பற்றிக் குறிப்பிட்டனர். பிஷப்புகள் பிரஸ் பிடீரியருடன் கூட்டம் நடத்தி அவர்களது யோசனேகளேக் கேட்க வேண்டுமென்றனர். இதனேக் கேட்டு வெகுண்டெழுந்த ஜேம்ஸ் 'பிரஸ்பிடீரியர்களுக்கும் குடியாட்சிக்கும் உள்ள உறவு, இறைவ னுக்கும் பிசாசுக்குமுள்ள தொடர்பை ஒத்தது' எனக் கூறினுர். திடுமெனக் கலேந்த இம் மாநாட்டினுல் பயன் ஏதும் விளேயவில்லே. ஆயினும், அது எடுத்துக்கொண்ட முயற்சியினுல் அதிகாரபூர்வமாய் ஒப்புக்கொள்ளப்பட்ட விவிலிய நூல் வெளிவந்தது. பியூரிட்டன் களுக்குத் தகுந்த தண்டனே அளித்துவிட்டதாக ஜேம்ஸ் இறுமாந் திருந்தபோதிலும், எப்போதும் மனநிறைவு பெருதவர் என்று அவர் களே ஏளனம் செய்தபோதிலும், அவர்களது நலன்களேப் பாது காக்கக் காமன்ஸ் சபையினர் முன்வந்தனர். 'பியூரிட்டன் உணர்வோ ப்ரௌனிய உணர்வோ தங்களுக்கு இல்லே' என்று உறுதியளித்து, அமைதியைக்காக்கவேண்டிச் சிலசிறப்பற்ற சடங்கு களில் விட்டுக்கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். அதே போன்று பியூரிட்டன்களே முப்பத்தொன்பது விதிகளில் கொள்கை சார்ந்தவற்றைத் தவிர, பிறவற்றை ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று வற்புறுத்தல் தகாது என்றும் விளக்கினர். அரசாங்கம் கவுன்டிகளில் இருந்து விண்ணப்பங்கள் வந்தபோதும், சில இணங்காதாரைப் பதவியிலிருந்து நீக்கியது. காமன்ஸ் சபை உறுப்பினர் ஒவ்வொரு கூட்டத்தொடரிலும் எலிசபெத் ராணியா ருடைய திருச்சபை ஏற்பாட்டின் முக்கியக்கூறுகளே ஒவ்வொன்ருகத் தகர்த்தெறிய முற்பட்டனர். திருச்சபை நீதிமன்றங்களில், அதிகா ரங்களேயும் சமயம் சாரா மக்களேயும் பிணேக்கும் சட்டங்களே அரசரும் குருமார் திருக்கூட்டத்தாரும் நிறைவேற்றும் உரிமை யையும் வன்மையாகத் தாக்கினர். சப்பத் நாளாகிய ஞாயிறைப் பற்றி மிகுதியாகப் பேசினர். மடங்களின் உடைகளே அணிய விரும்பாது வழிபாட்டிற்காக டெம்பிள் (Temple) கோயில் அல்லது செயின்ட் மார்க்கரெட்டின் கோயில் ஆகியவற்றிற்குச் சென்றனர்.

அவர்கள் சமயத்தின்மீது அரசருக்கிருந்த ஆதிக்கத்தை வெறுத்தனர். இந்த வெறுப்பே அவர்களே மற்றத் துறைகளில் அரசரின் ஆதிக்கத்தை எதிர்க்கத் தூண்டியது. இவ்வித எதிர்ப்பு அவர்களின் முன்னேர் காலத்திலேயே தோன்றியதாகும். பொதுச் சட்டத்தில் பேரார்வங்கொண்ட கோக் (Coke) என்னும் தலைமை

நீதிபதி தலைமை தாங்கி நடத்திச் சென்றார். நீதிமன்றங்கள் ஒருங்கிணைந்து உயர் ஆணை நீதிமன்றம், சான்சரி, வட கவுன்சில் ஆகியவற்றிற்கும் கடற்படைத் தலைமை வாணிப அதிகார வரம்பிற்கும் எதிராகத் 'தடைகள்' போராட்டத்தைத் தொடங்கின. புறச்சமயம், சமயப்பிளவு ஆகிய குற்றங்கள் தவிர, மற்றவற்றிற்காக உயராணை நீதிமன்றம் சிறைத் தண்டனை விதிக்கவோ அல்லது சொத்துக்களைப் பறிமுதல் செய்யவோ உரிமைபெற்றிருக்கவில்லை என்று முறையிட்டனர். அதைப்போலவே அரச ஆணையாளர் புதிய நீதிமன்றம் ஒன்றினை ஏற்படுத்துதல் தகாது என்றனர். ஆனால், பாராளுமன்றம்மட்டுமே சட்டத்தை மாற்றி அமைக்கலாம் என்றும் பொதுச் சட்ட நீதிபதிகளே பாராளுமன்றச் சட்டங்களை விளக்கிப் பொருள்கூறலாம் என்றும் அவர்கள் கொண்ட அடிப்படைக் கருத்திற்கு முன்னால், இவையனைத்தும் ஆதவன்முன் அகல்விளக்குப் போன்று மங்கி இருந்தன. இவ்வாறு சட்டத்தின்மீது ஆதிக்கம் செலுத்தும் உரிமைக்காக மன்னருக்கும் நீதிபதிகளுக்குமிடையே பல சச்சரவுகள் தோன்றின. இத்தகைய உரிமையை நீதிபதிகள் கொண்டாடியது டியூடர்களின் வாதத்திற்கு முற்றிலும் முரணானது. அவர்கள் தங்களுடைய முடிவே, ஒத்துழைக்கும் அதிகார வரம்புகள் பலவற்றிற்குமிடையே தீர்ப்பு செய்வதாகும் என வாதாடினர். 'நீதிமன்றங்களை அவற்றின் சரியான வரம்பிற்குள் வைத்திருக்கும் உரிமை தம்மைச் சார்ந்ததே' என்றும், சட்டத்தின் எவ்வழியைப் பயன்படுத்துவது என்பதைத் தாமே நிர்ணயிக்கவேண்டுமென்றும் ஜேம்ஸ் கூறினார்.

1610ஆம் ஆண்டில் நீதிபதிகள் அரசர் தமது தனியாணைப் பேரறிவிப்புமூலம் (proclamation) 'முன்பு இல்லாத குற்றங்களை ஏற்படுத்தக்கூடாது' என்று தீர்ப்பளித்து அவரை மேலும் கட்டுப்படுத்தினர். 'நாட்டுச் சட்டம் அனுமதிப்பதைக்காட்டிலும் வேறு தனிச் சிறப்புரிமை மன்னருக்குக் கிடையாது' என்று விளக்கினர். இவையெல்லாம், எலிசபெத் காலத்தில் கோக் கொண்டிருந்த கருத்துகளுக்கு மாறானவை என்றபோதிலும் இவற்றைக் காமன்ஸ் சபையினர் உறுதிப்படுத்தினர். ஆதிக்கச் சட்டம் 'ஆபத்தான அளவிற்குப் பரந்ததாக' இருந்தது என்று அறிவித்தனர். மேலும் 'பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்கு உரிய' நீதிமன்றங்கள்தான் குற்றங்களை நிர்ணயிக்கமுடியும் என்று கொண்டனர்.

அரசாங்கத்தின் இரண்டு அங்கங்களாக இருந்த பாராளுமன்றத்திற்கும், அரசருக்குமிடையே புது அதிகார உரிமைகள் பற்றிய போராட்டம், குறிப்பாகப் பொருளாதாரத் துறையில் நடைபெற்றது. ஜேம்ஸ் பட்டத்திற்கு வந்தபோது 4,00,000 பவுன்க

ளாக இருந்த நாட்டுக்கடன் 1608ஆம் ஆண்டளவில் 10,00,000 பவுன்களாக உயர்ந்தது. மோசமான அரசாங்கமே இதற்கு முக்கிய காரணமாகும். தமக்கு எதிராக விலைவாசிகள் உயர்ந்தன என்றாலும், எலிசபெத் ராணியார் ஏராளமான அரச நிலங்களை விற்றுவிட்டார் என்றாலும், ஜேம்ஸின் ஓராண்டு அமைதிக்காலச் செலவு, எலிசபெத்தின் ஓராண்டு போர்க்காலச் செலவினை ஒத்த தாக இருந்தது. இதில் பெரும்பகுதி அணிகலன்கள் வாங்குவ தற்கும் அரசவை விருந்துகளுக்கும் செலவானது. ஜேம்ஸ் தம்முடைய ஸ்காட்டிய ஆதரவாளர்களுக்கு 2,00,000 பவுன்களை நன்கொடையாக வழங்கினர். காமன்ஸ் சபையினர் தங்களுடைய் கோரிக்கைகளை அரசாங்கம் நிறைவேற்றும்வரை மானியம் வழங்க மறுத்ததால், அரசாங்கம் சுங்க வருமானத்தைப் பெருக்க முனைந்தது. இதனல், நாட்டுச்செல்வம் பெருகியது என்றாலும், சென்ற ஆட்சிக்காலத்தில் செய்ததைப்போல உரிமைப்பத்திரங்கள் பெற்ற கம்பெனிகளின் பகைவர்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். இதன் காரணமாக மற்றுமொரு போராட்டம் துவங்கியது.

இப் போராட்டம் பேட்ஸ் (Bates) வழக்கில் முக்கிய இடத்தைப் பெற்றது. லெவான்ட் கம்பெனி, எலிசபெத் ராணியாருக்கு நிறையப் பொருள்கொடுத்து, தனியுரிமையைப் பத்திரத்தின்மூலம் பெற்றிருந்தது. அக் கம்பெனி, தன்னுடைய உறுப்பினர் அல்லா தார் உலர்ந்த முந்திரிப்பழத்தை இறக்குமதி செய்தால் அவர்களிட மிருந்து தீர்வை வசூலிக்கும் உரிமையைப் பெற்றது. அத்தகைய உரிமைப் பத்திரத்தை அது திருப்பி அளித்துவிட்டபோதும், அரசாங்கம் வணிகர்களைக் கலந்தபின் அவ்விதத் தீர்வையைத் தொடர்ந்து விதித்தது. ஆனல், பேட்ஸ் அத் தீர்வையை அளிக்க மறுத்தார். 1606ஆம் ஆண்டில் அவர்மீது தொடர்ந்த வழக்கில் எக்ஸ்செக்கர் நீதிமன்றம் அத் தீர்வை சட்டமுறையானது என்று தீர்ப்பளித்தது. அத் தீர்ப்பினை கோக்கும் ஒப்புக்கொண்டார். சண்டை, சமாதானம் ஆகியவைபோன்று வெளிநாட்டு வாணிபமும் அரசரது அதிகார எல்லைக்குட்பட்டது என்றும், நாட்டின் துறை முகங்கள் அரசருக்குச் 'சொந்தமான வாயில்கள்' என்றும், டியூடர் கால முன்நிகழ்வுகளைக்காட்டி (precedents) வாதிட்டனர். அதோடு நில்லாது அத்தகைய தனிச் சிறப்புரிமை அரசரிடமிருந்து பிரிக்கமுடியாத ஒன்று என்று கூறினர். அரசருடைய அதிகா ரங்கள் இருவகைப்பட்டவை. அவைகளில் சாதாரண அதிகா ரங்கள், பொதுச் சட்டத்தின்மூலமாகவும் பாராளுமன்றச் சட்டங் களின்மூலமாகவும் செயல்படுபவை. மற்றென்று அரசரின் 'கொள்கை' அடிப்படையில் அமைந்த வரம்பற்ற அதிகாரம் என்றெல்லாம் அறிவித்தனர்.

இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, சாலிஸ்பரி (Salisbury), தம்முடைய செயலர் பதவியோடு கருவூலத் தலைமைப் பதவியையும் ஏற்றுக்கொண்டார். மறுபடியும் வணிகர்களைக் கலந்த பிறகு பேட்ஸ் வழக்கில் அளிக்கப்பெற்ற தீர்ப்பின் பலத்தைக்கொண்டு பல வரிகளை விதித்து, வரி விகிதப் புத்தகம் (Book of Rates) என்னும் நூலையும் வெளியிட்டார். சிக்கன முறைகளைக் கையாண்டு கடனைப் பர்தியாகக் குறைத்தபோதிலும் பற்றாக்குறை தொடர்ந்துவந்தது. எனவே, 1610ஆம் ஆண்டு பாராளுமன்றத்தை வருமானத்தில் நிரந்தர உயர்வு அளிக்குமாறு வேண்டினர். அவர் தமது 'பெரும் ஒப்பந்தம்' (great contract) எனும் திட்டத்தில் சில பழந் துன்பங்களைத் துடைப்பதாகக் கூறினர். குறிப்பாக 'நாட்டைக் கொள்ளையிட்டு ஒழுங்கீனப்படுத்திய' பர்வேயர்களையும் (purveyors), நிலமானிய முறைக் கட்டணங்களையும் நீக்கிவிடுவதாகக் கூறினர். அதற்கு மாறாகப் பாராளுமன்றம் ஆண்டொன்றிற்கு மற்றுமொரு 2,00,000 பவுன் மானியம் வழங்கவேண்டுமென்று வற்புறுத்தினர். ஆனல், காமன்ஸ் சபையினர் இவ் வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொண்டு தனிச் சிறப்புரிமைகளைப்பற்றி விவாதிக்கும் உரிமை தங்களுக்கு உண்டு என வாதிட்டனர். மேலும், தங்களுடைய அனுமதியின்றி வரிவிதித்தல் சட்டவிரோதமெனவும் வற்புறுத்தினர். பாராளுமன்ற விவாதங்களில் நிலையான தன்மையே சட்டத்தின் உயிர்நாடி என்பது வலியுறுத்தப்பெற்றது. தனியாணைப் பேரறிவிப்புகள் சட்டத்தினைத் தன்னிச்சையாகத் தீர்ப்பளிக்கும் நீதிமன்றங்களுக்கு உட்படுத்தின என்றும், கொள்கையின்பேரால் தொந்தரவு தரும் சட்டத்தைத் தவருன முறையில் திருத்துதல் தகாது என்றும் கூறினர். ஒய்ட்லாக் (Whitelocke) என்பவர் இடர்தரும் சொல்லைப் பயன்படுத்தி வரிவிதிக்கும் உரிமை இறைமைக்கே (Sovereign Power) உரியது என்றும், அந்த இறைமை அரசரிடம் இல்லையென்றும், பாராளுமன்றத்தில் இருக்கும் அரசருக்கே உரியது என்றும், அவரது பதவி ஒரு பொதுப் பொறுப்பாண்மை என்றும் குறிப்பிட்டார்.

இவ்வாறு 1610ஆம் ஆண்டில் சமயமும் வரிவிதிப்பும், அரசரையும் பாராளுமன்றத்தையும் அடிப்படைக்கே கொண்டு சென்றன. அரசர் பாராளுமன்றத்தின் அனுமதியின்றி வரி விதிப்பதில்லை என்பதை ஏற்றுக்கொண்டபோதிலும், ஒடுக்கப்பெற்ற பியூரிட்டன் குருமார்களை பழைய நிலைக்கே மீட்கவில்லை. உயராணை நீதிமன்றத்தை நீக்கவும் விரும்பவில்லை. அதே சமயத்தில் தம்முடைய கடனுக்காக, மேலும் மானியம் வழங்குமாறு கேட்டார். ஆனல், காமன்ஸ் சபையினர் தங்களுடைய முறையீடு

களுக்குத் தகுந்த கழுவாய்க் கிடைக்கும்வரை அரசருடைய கோரிக்கைக்குச் செவிசாய்ப்பதில்லை என்றிருந்தனர்.

1614ஆம் ஆண்டில் புதிய பாராளுமன்றம் கூடியது. இப் பாராளுமன்றத் தேர்தலில் அரசர் தலையிட்டு, தமக்கு வேண்டிய ஆட்களையே தேர்ந்தெடுக்க எல்லா முயற்சிகளையும் செய்தார். இச்சமயத்தில், சாலிஸ்பரியும் இளவரசர் ஹென்றியும் இறந்தனர். வெறுக்கத்தக்க சாமர்செட்டின் ஏர்லான கேர் (Ker) அரசாங்கத்தை நடத்தினர். பாராளுமன்றத்தின் பழைய குறைபாடுகளோடு ஜேம்ஸின் மற்றுமொரு நோக்கம் அச் சபையைக் கலைக்குமாறு தூண்டியது. இளவரசர் சார்லஸுக்கு ஸ்பானிய இளவரசியை மணமுடிக்கப் பேச்சு நடந்தது. அதனால், தோன்றிய போராட்டம் கவுன்சிலைப் பிளவுபடுத்தியது. ஸ்பானியத் தூதுவரான கோண்டோமார் (Gondomar) என்பவரிடம் உறுதிமொழி பெற்றபின்பே ஜேம்ஸ் செயலாற்றத் தொடங்கினர். அவரிடம் தம் முன்னோர்கள் காமன்ஸ் சபையை எவ்வாறு வளரவிட்டார்கள் என்பதாகத் தமது வியப்பைத் தெரிவித்தார். அப்போது அவர் டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பிய நான்கு உறுப்பினருள் ஒருவர் அன்னிய கொடுங்கோலரசரைப் பின்பற்றி நடத்தல் ஆபத்தாகும் என எச்சரித்தார்.

அடுத்த ஏழாண்டுகள் பாராளுமன்றம் இன்றியே கழிந்தன. அப்போது அரசர் இரண்டு திட்டங்களையும் இருவகைக் கொள்கைகளையும் கொண்டிருந்தார். சாலிஸ்பரி, ஃபிரான்சோடும் ஹாலந்தோடும் நட்புறவை வளர்த்திருந்தார். ஜேம்ஸ் தமது மகளை, பாலடைன் தேர்வாளரான வலிமைமிக்க பிராட்டஸ்டென்டாகிய பிரடரிக் என்பவருக்கு மணமுடித்தார். ஆனல், சாமர்செட் தம் பதவியைக் காத்துக்கொள்ளுதற்காக ஹோவர்டுகளுடன் (Howards) சேர்ந்துகொண்டார். அவர்களில் நாட்டிங்காம் [ஆர்மடாவைச் சார்ந்த எஃபிங்காமின் ஹோவர்டு (Howard of Effingham)] தள்ளாமைமேலிட்டிருந்தார். கப்பற்படையில் ஊழல் மலிந்து கிடக்க அனுமதித்தார். எலிசபெத்தினல் மரண தண்டனை விதிக்கப்பெற்ற நார்ஃபோக்கின் சகோதரரான நார்த்தாம்ப்டன் (Northampton) கத்தோலிக்கராக இருந்ததோடு, ஸ்பானியரின் கைக்கூலியாகவும் இருந்தார். அதே சமயத்தில் கிரன்விலோடு சண்டையிட்ட சஃப்போக் பிரபு, ஸ்பானியரின் கையாளான தமது மனைவியின் பிடியில் சிக்கி இருந்தார். இத்தகைய சூழ்நிலையில் ஜேம்ஸ் ஸ்பானியத் திருமணப் பேச்சை மீண்டும் தொடங்கினர். முதலிலிருந்தே தாம் வாழ்க்கையில் அமைதி தருவோர் என்ற எண்ணம் கொண்டிருந்தார். அதுவரையில், ரோமும் ஸ்பெயினும் இத்தகைய

புறச்சமயம் சார்ந்தவரோடு செய்துகொள்ளும் திருமண உறவை, அரசக் குழந்தைகள் கத்தோலிக்கக் கல்விபெறவேண்டும் என்பது போன்ற சில நிறைவேற்றவொண்ணு நிபந்தனையின்பேரிலன்றி, மறுத்தேவந்தன. எனினும், கோண்டோமார் தண்டனைச் சட்டங்களை ரத்துசெய்யுமாறு ஜேம்ஸை வற்புறுத்த முடியுமென்று நம்பி, குறைந்தது பிராட்டஸ்டென்டு ஐரோப்பாவைக் கலக்கக் கூடிய பேச்சு வார்த்தையை ஆதரித்தார். இங்ஙனம் ஜேம்ஸ், தம்முடைய குடிமக்களுக்கெதிராக அன்னியநாட்டுடன் ஒப்பந்தம் செய்துகொண்டார். இக் கொள்கையை அவருக்குப் பின்வந்த அவரது மரபினரும் பின்பற்றினர். பேகன் போன்றவர்கள் பாராளுமன்றத்திற்கு மற்றுமொரு வாய்ப்பளிக்குமாறு ஜேம்ஸை வற்புறுத்தினர். ஆனல், ஸ்பானிய ஆதரவுக் கும்பல் அவர்களை எதிர்த்து, ஸ்பெயினிலிருந்து ஏராளமான சீதனம் வருவதைச் சுட்டிக் காட்டி அரசரைத் தம் வயப்படுத்தியது. இதனல், எலிசபெத் ராணியார் காலத்திலிருந்த கூட்டுறவுகளில் இருந்து இங்கிலாந்து பிரிந்து வரவேண்டியதாயிற்று. ஸ்பெயின், வெனீஸுக்கும் செவாய்க்கும் எதிரான வன்முறைத் தாக்குதல்களில் இறங்கியது. ஆஸ்திரிய உறவினரோடு தொடர்புகொள்ள வசதியாக இருக்கும் ஆல்ப்ஸ் மலைக் கணவாய்களின்மீது கண்வைத்திருந்தது. அதே சமயத்தில் வியன்னவில் தோன்றிய சமய எதிர்வினையும் மோதல்களும், ஜெர்மனியில் மீண்டும் போர்மூளும் என்பதற்கு அறிகுறியாக இருந்தன. தம்மைச்சுற்றி வளைத்துக்கொண்ட ஹாப்ஸ்பர்கினரைத் தாக்கத் தொடங்குவதற்குச் சற்று முன்னதாக, 1610 ஆம் ஆண்டில் ஃபிரான்சின் நான்காம் ஹென்றி கொலை செய்யப்பட்டார். அவரது ராணியார் தம்முடைய புதல்வர்களுக்கு ஸ்பானியப் பெண்களை மணமுடித்துவைக்கும் திட்டத்தை வகுத்தார். எந்த நேரத்திலும் ஜேம்ஸ் இடர்தரும் முடிபினை எடுத்துவிடுவார் என்னும் அச்சம் இருந்தது. அவர், டச்சுக்களுக்கும் ஜெர்மன் பிராட்டஸ்டென்ட் ஐக்கிய நாடுகளுக்கும் உடன்படிக்கைகளின்மூலமாகக் கட்டுப்பட்டு இருந்தார். அவை இரண்டும் 1614ஆம் ஆண்டில் கீழ் ரைன் ஆற்றுப் பகுதிக்கு வாயிலாக அமைந்த க்ளீவ்ஸ் டச்சிக்காக (Duchy of Cleves) ஆஸ்திரியப்பேரரசோடு அநேகமாகப் போர்தொடுக்கவேண்டிய நிலையில் இருந்தன. இங்கிலாந்து, ஃபிரான்சு ஆகியவற்றின் சமாதான முயற்சிகளால் சண்டை சிறிது காலத்திற்குத் தள்ளிப் போடப்பெற்றது. இதற்கிடையில் நம்முடைய வணிகர், கிழக்கு நாடுகளுக்குச் செல்வதைத் தடைசெய்ய, டச்சுக்காரர் எடுத்துக் கொண்ட முயற்சிகளை ஜேம்ஸ் வன்மையாக எதிர்த்தார். மேலும், டச்சுக்காரர் ஆங்கிலேயருடைய மீன்பிடிப்புத் தளங்களில் திருட்டுத்தனமாக மீன்பிடித்தனர் என்று குற்றம் சாட்டினர்.

இவ்வாறு, தம்மை ஸ்பெயினின் செல்வாக்கிலிருந்து மீட்டுச் சுதந்திரமாக வைத்துக்கொள்ள உதவும் நட்பு நாடுகளில் இருந்து தம்மைப் பிரித்துக்கொண்ட ஜேம்ஸ், நிலையான கொள்கையின்றிக் காற்றடித்த பக்கமெல்லாம் சாய்ந்தார். அப்பட் (Abbott), பேகன் போன்ற சாமர்செட்டின் எதிரிகள் நாட்டுப்பற்று மிகுந்தவர் எனினும், சாமர்செட்டை ஒழிப்பதற்காக ஜார்ஜ் வில்லியர்ஸ் (George Villiers) என்பாரை ஆதரித்து முன்னுக்குக் கொண்டு வந்தனர். லீசெஸ்டர்ஷயர் குடும்பத்தில் ஏழ்மை நிலையில் இருந்த பலருள் ஒருவராகிய வில்லியர்ஸ், எட்டு ஆண்டுகளில் பக்கிங்காம் கோமகனுராகவும் பிரதம மந்திரியாகவும் ஆனுர். சாமர்செட்டின் உயர்விற்கு அவர் ஃப்போக் குடும்பத்தோடு மணவினைகொண்டது உதவியாக இருந்தது. எலிசபெத்தின் ஆதரவாளரின் மகனுகிய எஸ்ஸக்ஸின் மனைவி அரசரின் வற்புறுத்தலினுல் மணமுறிவு செய்துகொண்டாள். அவளையே சாமர்செட் மணந்துகொண்டார். பிற்காலத்தில் எஸ்ஸக்ஸ், பாராளுமன்றத் தலைவர்களுள் ஒருவரானுர். ஆனுல், தாமஸ் ஓவர்பரி என்பவரது கொலைவழக்கில் அவரும் அவரது சீமாட்டியும் சம்பந்தப்பட்டதாகத் தெரிந்ததால் 1616ஆம் ஆண்டில் சாமர்செட் பதவியிலிருந்து நீக்கப் பெற்றுர்.

ஆயின், ஹோவார்டுகளும் அவர்தம் ஆதரவாளரும் வீழ்ந்ததற்குப் பொதுக் காரணங்களைவிட பக்கிங்காமின் பதவி ஆசையே காரணம் எனலாம். இக்காலத்தில் ஸ்பானியருடைய செல்வாக்குச் சிறிதும் குறையாமல் இருந்துவந்தது. ராலே டவர் கோட்டைச் சிறையிலிருந்து விடுதலைபெற்றுர். வெளிவரும்போது புது நிதிக் குப்பைகளைக் கண்டுபிடித்து, மீண்டும் இழந்த செல்வாக்கைப் பெறவேண்டுமென்று கனவு கண்டார். இம் முயற்சி ஜேம்ஸை ஸ்பெயினேடு போருக்கு இழுப்பதாகவும், கவுன்சிலர்களில் ஒரு பகுதியினரின் அனுதாபத்தைப் பெறுவதாகவும், ராலேவுக்கு ஃபிரான்சில் அடைக்கலம் தருவதாகவும் இருந்தது. தம்முடைய ஆரம்பகாலப் பயணங்களின்போது கேட்டறிந்த சுரங்கங்களைக் கண்டுபிடிக்க ராலே செல்வதை ஜேம்ஸ் அனுமதித்தார். ஆனுல், வரவேற்புக்குரிய இச் செல்வம் ஸ்பானியரோடு மோதுதல் ஏதுமின்றிப் பெறுதல்வேண்டுமெனும் நிபந்தனை விடுத்தார். ஆனுல், அப்படிப்பட்ட மோதலைத் தவிர்க்க முடியாததாயிற்று. துன்பகரமான பயணத்திற்குப்பின் ராலே 1618ஆம் ஆண்டில் வெறுங் கையோடு திரும்பி வந்தபோது, கோண்டோமாரின் நெருக்கியதால், 1603ஆம் ஆண்டு சாட்டப்பெற்ற குற்றங்களுக்காகத் தூக்கிலிடப்பெற்றுர். இங்ஙனம், எலிசபெத் ராணியாரின் இறுதித் துணிகரவீரர் மறைந்து மண்ணுனர். அஃது ஓரளவு அவருக்கு

ஏற்றதாகும். எனினும், நாட்டுமக்கள் வெறுத்த ஒரு கொள்கைக் காகத் தமது உயிரைத் தியாகம்செய்தார் எனலாம்.

இதே சமயத்தில்தான் ஜெர்மனியில் முப்பதாண்டுப்போர் தொடங்கிற்று. பொஹீமியர் ஆஸ்திரியாவிற்கு எதிராகக் கலகம் விளைவித்தனர். அவர்களின் அழைப்பிற்கிணங்கப் பாலடீனின் தேர்வாளரும் ஜேம்ஸின் மருமகனுருமான ஃபிரடரிக், அவர்தம்நாட்டு அரச உரிமையை ஏற்றுக்கொள்ள ஒப்புக்கொண்டார். ஸ்பானியத் திருமணத்தையும், தம் மகளின் பாதுகாப்பையும், பிராட்டஸ்டென்டு களின் நலன்களையும் எவ்வாறு பொருத்துவார் என்பது விளங்க வில்லை. ஃபிரடரிக்கின் வன்முறைத் தாக்குதலை ஜேம்ஸ் எதிர்த்தது நேர்மையானது. ஆனால், அவர் அமைதியைவிட அமைதிக்காவலர் என்று தம்மைப் பிறர் அழைப்பதையே பெரிதும் விரும்பினர். இருதரப்பினருக்குமிடையே இணக்கத்தைத் தோற்றுவிக்க முயன்று, பல வெல்திற வினைஞரை அனுப்பிய அதே சமயத்தில் ஹாலந்தோடு கொண்ட பூசலினுல் எதிர்ப்பின் வலிமை குறைந்தது. அவர், ஸ்பானியர் ஆஸ்திரியரை அமைதியான முறையில் வற்புறுத்துவரென்று அசையாத நம்பிக்கைகொண்டிருந்தபோது, ஸ்பானியப் படைகள் பாலடினேட்டைக் கைப்பற்றின. 'மாரிக் கால மன்னர்' 1620ஆம் ஆண்டில் பிரேகுக்கு வெளியே வெள்ளை மலை (White Mountain) என்னுமிடத்தில் முறியடிக்கப்பெற்றார். அவரும் அவருடைய மனைவியாகிய இங்கிலாந்தின் மூத்தமகளும் தப்பியோடி, நீண்டதொரு, நாடுகடத்தப்பெற்றோர் வாழ்க்கையைத் தொடங்கினர். ஐரோப்பியத் தலைநகரங்களின் கடைகளில் ஜேம்ஸைப்பற்றிய கேலிச் சித்திரங்கள் நிறைந்திருந்தன. அவை களில் ஆங்கில அரசர் காலி சட்டைப் பைகளுடன் அல்லது வெறும் பையான வாளுறையைச் சுழற்றிக்கொண்டு இருப்பதாகவும் சித்திரிக்கப்பட்டு இருந்தார்.

சூதாட்டத்திலும் சூழ்ச்சியிலும் மூழ்கி இருந்த அரசவையிலும், புக்கிங்காமின் நன்மதிப்பை விலைகொடுத்து வாங்கும் இரண்டாந்தர செயலர்கள் நிறைந்த கவுன்சிலிலும், அறிவாற்றல்பெற்று விளங்கியவர் ஃபிரான்ஸிஸ் பேகன் ஒருவரே. அவர் அரசரைப் பற்றி மிக உயர்ந்த கருத்தைக்கொண்டிருந்தார். பாராளுமன்றத் திற்கு அஞ்சி நடுங்கவில்லை. ஆனால், சீர்திருத்தம் செய்வதில் சிறிதும் தயங்கவில்லை. நாட்டுப்புற உறுப்பினரிடமும், முன் நிகழ்வுகளால் முனைப்பிழந்த பொதுச்சட்ட வழக்கறிஞரிடமும் எதிர் பார்க்க முடியாத அறிவுத்திறத்திற்கு முதலிடம் தந்தார். தம்முடைய உறவினரான சாலிஸ்பரியிடமிருந்தும், வெறுக்கப் பெற்ற 'ஊனத்திலிருந்தும்' விடுபட்டுத் தம்முடைய திறமைகளுக்

கேற்ற பதவி கிடைக்குமென்று எதிர்பார்த்தார். அரச முத்திரைப் பிரபுவாக வந்தபோது அவர்தம் ஆசை நிறைவேறியது. ஆனால், காதல் வாழ்விலும் அரசியல் வாழ்விலும் தோற்கடித்த அவருடைய பழைய பகைவரான கோக் என்பவரே, மறுமுறையும் அவருடைய வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாக இருந்தார்.

இப் போராட்டம் 1616ஆம் ஆண்டில், கோக், தலைமை நீதிபதி பதவியிலிருந்து நீக்கப்பெறும்வரை நடைபெற்றது. வயது முதிர்ந்த சமய குரு, மன்பகைக் குற்றத்திற்காகக் கைது செய்யப்பெற்று, கொடுங்கோலரசிற்கு எதிராகத் தீவிரமாகப் போதனை செய்ததற்காகச் சித்திரவதை செய்யப்பெற்றபோது வந்த வழக்கில்[1] மன்னர் தனித்தனியாக நீதிபதிகளின் கருத்தினைக் கேட்டறிவதைக் கோக் கண்டித்தார். மற்றவற்றில்[2] பொதுச்சட்ட நீதிபதிகள் அரசரின் நலன்களையோ தனிச் சிறப்புரிமையையோ பாதிக்கும் வழக்குகளில், மன்னரையோ அல்லது 'முடியரசின் முதன்மையான ஆலோசகரும் கருவியுமான' சான்சலரையோ கலக்காமல் மேலே செல்லக்கூடாது என்று பேகன் வாதாடினர். அவரது கருத்தில் நீதிபதிகள் தனிச் சிறப்புரிமையின் பாதுகாவலர் என்பதுதான். அவர் தம்முடைய கட்டுரையில் நீதிபதிகள் சிங்கங்கள் என்றால், அவர்கள் அரியணையின்கீழுள்ள அரிமாக்கள் என்று குறிப்பிட்டார்.

மென்மையான பொன்னுடை போர்த்தி, மேலான வாழ்வு வாழ்வதில் விருப்பம் மிகுந்ததால், அறிவுக்கூர்மையும் நல்லதே விளையுமென்ற நம்பிக்கையும் தம்முடைய ஒழுக்க உணர்வை இழக்கச் செய்ததாலும், பேகன், பக்கிங்காமின் ஆதரவை நம்பி இருக்க வேண்டியதாயிற்று. அதைப்போலவே, வில்லியர்களில் (A Villiers) ஒருவருக்குத் தம் மகளை மணமுடித்து வைப்பதன்மூலமாக இழந்த செல்வாக்கை மீண்டும்பெற கோக் முயன்றார். ஆதரவாளரான பக்கிங்காம், முழுதும் மோசமான ரல்லர் கடற்படைப் பிரபுவாக (Lord Admiral) இருந்தபோது ஒப்படைத்த பொருளைக் கைக்கொள்ளும் ஊழலைத் தடுக்கவும், கப்பற்படையைப் புதுப்பிக்கவும் பணிகள் சில புரிந்தார். அவரது ஆதரவில் கருவூலத் தலைவராகவும் மிடில்செக்ஸ் ஏர்லாகவும் (Earl of Middlesex) உயர்ந்த லியோனல் கிரான்ஃபீல்டு (Lionel Cranfield) என்பவர் அரண்மனையைச் சீர்திருத்திக் கணக்குகளைச் சரிசெய்தார். ஆனால், அரசர் தமது ஆதரவாளருக்கு அடிமையானது பொதுவாழ்வையே பாழ்

[1] பீச்சாமின் (Peacham) வழக்கு.

[2] டி ரீஜி இன்கன்சல்டோஆணை (Writ de rege inconsulto); தற்காலிகத் திருக்கோயில் மானிய வழக்கு (case of commendams).

செய்தது. அவரைப்பற்றி ஜேம்ஸ் குறிப்பிடும்போது 'கிறிஸ்துவிற்கு ஜான் இருந்ததைப்போல எனக்கு ஜார்ஜ் இருக்கிறார்" என்று கூறினார். அவர்மூலமாகவும் அவருடைய பேராசை பிடித்த குடும்பத்தினர்மூலமாகவுமே அதிகாரமும் பதவிகளும் அளிக்கப்பெற்றன. அவர் பதவிக்கு வருவதற்குமுன்பே ஜேம்ஸ் பணம் பெற்றுப் பதவி அளிக்கும் பழக்கத்தைக் கொண்டிருந்தார். இதனால், பழைய செல்வந்தருடைய பகைமை தோன்றியது. மொத்தத்தில் சுமார் 2300 நைட் பதவிகளை ஏற்படுத்தினார். புது வகையான பேரன் (baron) பதவிகளை ஏற்படுத்தி அதனை விற்றதன் மூலமாக ஐரிஷ் படைக்கு அளிப்பதற்கென்று 90,000 பவுன்களைப் பெற்றார். பிரபுக்களின் எண்ணிக்கையை 59-லிருந்து 100 ஆக உயர்த்தினார். அரச அவையினர்மூலமாக, குறிப்பாக பக்கிங்காமின்மூலமாகப் பிரபுக்கள் பட்டத்தை விற்றார். இங்ஙனம், கார்ன்வாலைச் சேர்ந்த தகரத்தலைவர் (tin-master) ராபர்டஸ் (Robartes) என்பவர் 10,000 பவுன் கொடுத்து இப் பட்டத்தைப் பெற்றார்.

பாராளுமன்றத்தின் மானியம் கிடைக்காததும் அரசரது ஆதரவாளர்களின் ஆட்சியும், தொழில் உலகத்தையும் பெருஞ்செல்வந்தரையும் ஒருங்கே பகைமைகொள்ளுமாறு செய்தன. குறிப்பாக அரசாங்கம் 1615ஆம் ஆண்டில் தலையாய நாட்டுத்தொழிலில் தலையிட ஆரம்பித்தபோது இப் பகைமை முற்றியது. துணிகரச் செயல்புரியும் வணிகர்கள் சிறப்பிலாப் பொதுவுடைத் துணிகளையே ஏற்றுமதி செய்தனர். ஏனெனில், அன்னியநாடுகள், குறிப்பாக ஹாலந்து, துணிகளைப் பதம் செய்யும் இரகசியத்தைத் தம்மிடமே வைத்துக் காத்தன. நமது ஆடை வெளுப்போரும், சாயமிடுவோரும் இழந்த வாணிபத்தை மீண்டும்பெற விழைந்தனர். அதே சமயத்தில், டச்சுக்காரரின் போட்டி உள்நாட்டில் வேலைவாய்ப்புக்களை உயர்த்தலாம் எனும் வாதத்தைத் தூண்டியது.

எனவே, சிறப்பில்லாப் பொதுவுடைத் துணி ஏற்றுமதியை மன்னர் தடை செய்தார். துணிகரச் செயலாளரின் தனி உரிமையை லண்டன் குழு ஒன்றிற்கு மாற்றினார். அக் குழு, ஆண்டொன்றிற்கு 3,00,000 பவுன் அவருக்கு அளிப்பதாகவும், அரசவையோருக்கு கையூட்டி வழங்குவதாகவும் வாக்குறுதியளித்தது. இவைகளின் விளைவாக நாட்டிற்குப் பேரிழப்பு நேர்ந்தது. சாயமிட்ட துணிகளை ஐரோப்பிய நாடுகள் கொள்ள மறுத்ததால் வேலையில்லாத் திண்டாட்டம் தொடர்ந்து இருந்தது. சில அங்காடிகள் நிரந்தரமாக இழக்கப்பட்டன. இறுதியாக, மேலும் அதிகமான கையூட்டிகொண்டு துணிகரச் செயலாளரின் தனியுரிமை மீட்கப்பெற்றது.

துணியேற்றுமதி 1610ஆம் ஆண்டில் இருந்த அளவில் பாதியாகக் குறைந்த அதே சமயத்தில், தனியுரிமைப் பத்திரம் வழங்குவதற்கு எதிராக கிளர்ச்சி தோன்றியது. ஏனெனில், எலிசபெத் ராணியார் இவைகளைப் பொதுச் சட்டத்திற்கே விட்டுவிடுவதாக வாக்களித்திருந்தார். கிழக்கிந்தியக் கம்பெனி போன்ற தனியுரிமைக் குழுக்கள் மெச்சத்தகுந்த முறையில் பணியாற்றியிருக்கின்றன. அவைகள் வாணிபம் செய்வதோடு படைகொண்டு பாதுகாப்புச் செய்துகொள்ளவேண்டிய நிலையில், நாட்டு அரசாங்கம் ஏதும் செயல்படாத பகுதிகளை முன்னேற்றும் பொறுப்பினைத் திறம்பட வகித்துவந்தன. உரிமைச் சீட்டுகளின்மூலம் ஓரளவு அரசாங்கக் கட்டுப்பாடு இருப்பதற்குத் தீவிரமான எதிர்ப்புத் தோன்றவில்லை. உதாரணமாக, குற்றவாளிகள், கொலையாளிகள் ஆகியோரின் தலைமை அலுவலகமாக விளங்கிய நூற்றுக் கணக்கான மதுக்கடைகள், உரிமைச் சீட்டுகளின்மூலம் கட்டுப் படுத்தப்பெற்றது வரவேற்கக்கூடிய செயலாக இருந்தது.

அதேபோன்று கண்ணாடித் தொழிலில் நிலக்கரி ஊதுலைகளுக்கு அளிக்கப்பெற்ற உண்மையான உரிமைப் பத்திரங்களும் மக்களுடைய எதிர்ப்பிற்குள்ளாகவில்லை. பொருள்களின் விலையேற்றம், ஊழல், அரசாங்கத்தின் அச்சுறுத்தல் ஆகியவையே மக்களின் மனநிறைவின்மைக்குக் காரணங்களாக அமைந்தன. இங்ஙனம், வெளி நாடுகளில் இருந்து கண்ணாடி இறக்குமதியாவது தடை செய்யப்பெற்றது. வில்லியர்களின் உறவினனான மாம்பஸ்ஸன் (Mompesson), ஒயின் மதுக்கடைகளுக்கும் ஏல் விடுதிகளுக்கும் வழங்கும் உரிமைச் சீட்டுகளை, கட்டணங்கள் பறிப்பதற்கும் அவைகளைச் செலுத்த மறுத்தோரைச் சிறையிலிடவும் தவறாகப் பயன்படுத்திக்கொண்டார். பொன், வெள்ளி இழைகள் வாணிபத்தில் (ஜரிகை) தனியுரிமை அளித்து, அதிலிருந்து வரும் இலாபத்தில் ஒரு பகுதியை பக்கிங்காமின் சகோதரர்கள் பெற்றனர். ஐரிஷ் மீன் பிடிக்கும் தொழிலைக் கட்டுப்படுத்திய மற்றொரு கும்பல், தேம்ஸ் ஆற்றில் தங்களுக்குப் போட்டியாக வந்தவர்களை அழித்தது. தனிப்பட்டோர் வீடுகளைச் சோதனை செய்யவந்த உயர் ஆணையாளர் செய்கைகளினால் ஆத்திரமடைந்த வழக்கறிஞர், கவுன்டி மாஜிஸ்ட்ரேட்டுகள், துகில் வணிகர், நுகர்வோர் ஆகிய அத்துணைபேரும் ஒன்றாக இணைந்தனர். மேலும், காப்புவரிகளைக் கடுமையாக்கியதும், மேற்கிந்தியத் தீவுகளில் தோன்றிய போரும், திருப்பித்தராத கடனும் ஒரு நெருக்கடியின் அறிகுறிகளைத் தோற்றுவித்தன. குடியானவர் தம் பொருள்களுக்குக் குறைந்த விலையே பெற்றனர். நெசவாளருக்கு அரைப் பட்டினி அளவு ஊதியம் கிடைத்தது. அயல்நாட்டு நாணய

மாற்றத்தில் மந்தநிலை தோன்றியது. ஏற்றுமதியில் இருபத்தைந்து சதவீதம் குறைந்தது. இவைகளெல்லாம் அரசருக்குப் பெருமை தேடித் தருவன அல்ல.

இத்தகைய சூழ்நிலையில் பாலடினேட்டைக் காப்பதற்காக 1621ஆம் ஆண்டில் பாராளுமன்றத்தைக் கூட்டுமாறு ஜேம்ஸ் வற்புறுத்தப்பட்டார். அதுபோது, அவரும் பக்கிங்காமும் இரு துருவங்களுக்கிடையே ஊசலாடினர். ஹாலந்தைத் தாக்கு வதற்காக ஸ்பெயினேடு கலந்து ஆராய்வது, சார்லஸ் இள வரசருக்கு ஃபிரெஞ்சு இளவரசியை மணமுடிக்கும் முயற்சியை மறுத்தல் ஆகியவற்றிற்கும் நாட்டுப்பற்று மிகுந்தவர் ஜெர் மனிக்குத் தொண்டர் படை அனுப்பவேண்டும் என்று கோரிய தற்கும் இடையே முடிவெடுக்க முடியாமல் தவித்தனர். இப் போதிருந்து சார்லஸ், பக்கிங்காம் ஆகியோரின் ஆட்சி தொடங்கிய தெனலாம். அவர்கள் வயது முதிர்ந்த ஜேம்ஸைத் தங்களது மடமை யெனும் சிக்கல் நிறைந்த வழியில் இழுத்துச் சென்றனர்.

தம்மைக் காத்துக்கொள்ளவும், காமன்ஸ் சபையினரின் மானியங்களைப் பெறுதற்கும் பக்கிங்காம் கோமகனர் தனியுரிமை வாதிகளைக் கைவிட்டார். மிகுதியான வெறுப்பிற்குள்ளான உரிமைப் பத்திரங்களைத் திரும்பப் பெற்றுக்கொண்டார். மாம் பஸ்ஸன் அரசத் துரோகக் குற்றம் சாட்டப்பெற்ருர். இவ்விதக் குற்றச்சாட்டு ஆரும் எட்வர்டின் ஆட்சிக்குப் பிறகு முதல் தடவையாக எதிர்க் கட்சியினரால் வேண்டுமென்றே கொண்டு வரப்பெற்றது. இதனல், பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கு மிடையே தொடர்பு ஏற்படுமென்றும், பொதுச் சட்டத்திற்குப் புறம்பான எல்லா நீதிமன்றங்களின்மீதும் பிரபுக்கள் சபையின் மேம்பாடு வலியுறுத்தப்படுதல் வேண்டுமென்றும் நினைத்தனர். அவர்களுடைய விசாரணையில் பேகன் லஞ்சம் வாங்கினுர் என்று தற்செயலாகத் தெரியவந்தது. பணம் அவருடைய தீர்ப்புகளைப் பாதிக்கவில்லை. பக்கிங்காம் மறுபடியும் பின்வாங்கினர். அரச முத்திரைப் பிரபுவான பேகன் அரசத் துரோகக் குற்றஞ் சாட்டப் பெற்று பதவியிலிருந்து தள்ளப்பெற்ருர்.

மன்ற விவாதங்களில் காமன்ஸ் சபையினர் தங்கள் குறை களை எடுத்துக்கூறினர். பரோனெட் பட்டங்களை வாங்கிய ‘தாவும் பொம்மைகளை’ப்பற்றிய காமன்ஸ் சபையினரின் குறிப்புகள், தங்களுக்கு எதிராகக் கோள்சொல்வதையே தொழிலாகக் கொண் டோர் மீதான அவர்களது ஆத்திரம், குடியேற்ற நாட்டு வாணிபத் தின்மீது அரசருடைய கட்டுப்பாட்டினை எதிர்த்த வர்ஜீனியா

கம்பெனியின் நடவடிக்கை ஆகியவை அவர்களின் துன்பங்களை எடுத்துக் காட்டுவனவாக இருந்தன. ஆயினும், இக் குறைகளில் சமயம் முதலிடத்தைப் பெறுகின்றது. 'இப்போதிருப்பதைப் போன்று அரசாங்கம் எப்பேர்தும் போப்பினருடையதாகவும், துடுக்கானதாகவும் இருந்ததில்லை' என்று டார்செட்டைச் சார்ந்த ஃபிலிப்ஸ் (Phelips of Dorset) கொதித்துப்பேசினர். 'உலகில் இப் பகுதியைத் தம் சமயத்தை நிலைநிறுத்துதற்காகத் தேர்ந்தெடுத்த கடவுளை இப் பகுதியைக் காக்குமாறு வேண்டுகிறேன்' என்று பேசினர். மற்றொரு உறுப்பினர், பிராட்டஸ்டென்ட் சமயம் பொஹீமியாவில் அழிக்கப்பட்டது என்றும், ஃபிரான்சில் புண் பட்டது என்றும், ஜெர்மனியில் சிதறியது என்றும் வேதனையோடு வெளியிட்டார். பாலடீனின் தேர்வாளருடைய வன்முறைச் செயல்களையும், அவர்தம் கூலிப்படையின் கோரச் செயல்களையும், ஸ்பெயினின் அமைதிக் கொள்கையையும் அறியாத ஆங்கிலப் பியூரிட்டன்களுக்குத் துன்பம்மிகுந்த பொருள்களே தென்பட்டன. தொழிற்பயிற்சி பெறுவோர் கோண்டோமாரின் பணியாட்களுக் குத் தொல்லை தந்தனர். சமய குருமார் உபன்யாச மழை பொழிந் தனர். அதே சமயத்தில், காமன்ஸ் சபை உறுப்பினர் எவ்வித உரிமையும் இல்லாத நிலையில் தங்களில் ஒருவராக இல்லாதவரான கத்தோலிக்க வழக்கறிஞர் ஃப்ளாய்டு (Floyd) என்பவர்மீது பாய்ந்தனர். அவர் 'பரிதாபத்திற்குரிய வாலிபரைப்'பற்றியும், 'நல்லவரான பால்கிரே'வைப்பற்றியும் வெறுப்புடன் பேசியதை அடுத்து, காமன்ஸ் சபையினர் அவருக்குச் சூடுபோடவேண்டுமென்றும், அவரது நாவினைத் துண்டிக்கவேண்டுமென்றும் கூக்குரலிட்டனர். ஆனல், அவர்கள் தண்டனை அளிக்கும் உரிமையைப் பிரபுக்கள் சபைக்கு அளிக்க வேண்டியதர்யிற்று. பிரபுக்கள் ஃப்ளாய்டைக் கசைகொண்டு அடிக்குமாறும் சிறையிலிடுமாறும் கட்டளையிட்டனர்.

காமன்ஸ் சபையினர் மறுபடியும் இலையுதிர் காலத்தில் கூடிய போது பிராட்டஸ்டென்ட் ஐக்கியம் முறிந்தது என்றும், ஸ்பானியப் படைகள் பாலடினேட்டில் தங்கி இருந்தன என்றும் அறிந்தனர். இங்கிலாந்திற்கும் ஸ்பெயினுக்குமுள்ள உறவை அறுக்குமாறு அரசரைக் கேட்டுக்கொண்டனர். ஸ்பெயினைத் தாக்கவேண்டு மென்றும், சார்லஸுக்குப் பிராட்டஸ்டென்ட் பெண்ணை மண முடிக்க வேண்டுமென்றும் வேண்டிக்கொண்டனர். இத்தகைய செயல்களைக் கண்டிக்காது விடுவாராஞல், ஜேம்ஸ் உண்மையில் அரசரல்ல என்று கோண்டோமார் கூறினர். ஜேம்ஸும் 'ஆழ்ந்த அரசியல் செய்கைகளில்' தலையிட்ட 'மக்கள் ஆதரவைப் பெற்றதோடு' சினங்கொண்டிருந்த எதிரிகளைக் கண்டித்தார்.

தங்களின் தனி உரிமைகள், பழங்காலத்திலிருந்து பரம்பரையாக வந்த உரிமைகள் ஆகியவற்றைக்கொண்டு, சமயத்தைப்பற்றியும் நாட்டுக் காவல்பற்றியும் தடையேதுமின்றி ஆராயலாம் என்று காமன்ஸ் சபையினர் உரிமைகொண்டாடினர். ஆனால், அரசரோ அவர்களுடைய சிறப்புரிமைகள் யாவும் 'எம்மிடம் இருந்தும் எமது முன்னோரிடமிருந்தும் வந்தவையே' என்றார். தடையற்ற விவாதம் 'தங்களின் பிறப்புரிமை' என்று அவர்கள் திரும்பக் கூறியபோது மன்னர் பாராளுமன்றத்தைக் கலைத்தார். அவர்களுடைய குறிப்பேட்டிலிருந்து அவமதிப்புச் செய்திகள் அடங்கிய பக்கத்தைக் கிழித்தெறிந்தார். தாம் வெளியிட்ட பேரறிக்கை ஒன்றில் அரசரின் பிரிக்கமுடியாத உரிமைகளைப் பாராளுமன்றத்தினர் பறித்துக்கொள்வதைக் கண்டித்தார். அரசரை மதியாது தாக்கிய அவர்களுடைய செயலையும் கண்டித்தார். குடியேற்றங்களைப் பொறுத்த செயல்களில் தலைமைதாங்கி நடத்திய சாண்டீஸ் ஏற்கெனவே சிறையில் இருந்தார். கோக், ஃபிலிப்ஸ், பிம் (Pym) ஆகியோரும் அவரைப் பின்தொடர்ந்தனர். பிரதமராக இருந்த ஆக்ஸ்ஃபோர்டு ஏர்ல் அரசரின் கொள்கையை எதிர்த்துப் பேசியதற்காகச் சிறையிலிடப்பட்டார். அதன்பிறகு நன்கொடையை மறுக்கத் தூண்டியதற்காக சேயியும் (Saye), சீலியும் (Sele) சிறைத்தண்டனை அடைந்தனர்.

இவ்வாறு பாராளுமன்றம் கலைக்கப்பெற்றது. லூதர் புறச் சமயத்தைப் பரப்பத் தொடங்கிய காலந்தொட்டுக் கத்தோலிக்கச் சமயத்திற்காகச் செய்யப்பெற்ற காரியங்களில் மிகச் சிறந்தது என்று கோண்டோமார் எழுதினார். ஸ்பானியர் இங்கிலாந்துடன் மணவினைத் தொடர்புகொள்ளவேண்டுமென்ற ஆசையில் பாலடினேட்டைத் திருப்பித் தந்துவிடுமாறு ஆஸ்திரியரை வற்புறுத்துவார்கள் என்ற கனவோடு ஜேம்ஸ் மேலும் இரண்டாண்டுகளைக் கழித்தார். ஸ்பானியரும் போரைத் தவிர்க்கவேண்டி ஆலிவர்ஸ் (Olivarez) என்பவரின் தலைமையில் பேச்சுவார்த்தையை நீடித்தனர். இந்தப் புறச்சமயத் திருமணம் ரோமிலிருந்தோ, லண்டனிலிருந்தோ வரும் எதிர்ப்பினால் முறிந்துவிடும் என்று நடைபெற முடியாத ஒன்றில் நம்பிக்கை கொண்டிருந்தனர். ஆனால், அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு நிபந்தனைகளைக் கடுமையாக்கினார்களோ, அவ்வளவுக்கவ்வளவு ஜேம்ஸ் இத் திருமணத்தில் ஆர்வம் காட்டினார். 1623-ல் கதையாக எழுதத்தக்க தீரச்செயலைப் புரிந்து, சார்லஸும் பக்கிங்காமும் தாங்கள் மாறுவேடத்தில் மாட்ரிட் நகருக்குச் செல்ல மன்னரிடமிருந்து அனுமதிபெற்றனர். அங்கே சார்லஸ் ஸ்பானிய இளவரசிமீது தீராக் காதல் கொண்டார். ஸ்பானியர் அவரைக் கத்தோலிக்கராக மாற்றமுடியும் என நம்பினர். ஜேம்ஸ், 'ஸ்டீனி

யையும் (Steenie) குழந்தை சார்லஸையும்' பாதுகாப்போடு திரும்பப்பெற ஆர்வம் காட்டினர். இவைகளெல்லாம் இறுதியான இடரைக் கொணர்ந்தன. தம் நாட்டில், தனிப்பட்டோர் கத்தோலிக்க வழிபாட்டை அனுமதிப்பதாகவும், தண்டனைச் சட்டங்களை ரத்து செய்யுமாறு பாராளுமன்றத்தைக் கேட்பதாகவும் ஸ்பானியருக்கு வாக்குறுதி தந்தார். அதே சமயத்தில், மாட்ரிட் நகரில் இருந்த சார்லஸ் மூன்றாண்டுகளில் தண்டனைச் சட்டங்களைத் தள்ளுபடி செய்யுமாறு வற்புறுத்துவதாகவும், தம் குழந்தைகளுக்குக் கல்வியளிக்கும் பொறுப்பை அவர்களின் தாயாரிடமே விட்டுவிடுவதாகவும் வாக்குறுதி அளித்தார்.

நல்லகாலமாகச் சார்லஸின் செருக்கினை அழித்து, தம் நாடு திரும்பச்செய்த நிகழ்ச்சிகள் இரண்டு தோன்றின. அவருடைய வாக்குறுதிகளைச் சோதனை செய்வதேபோன்று ஸ்பானியர் அடுத்த ஆண்டில்தான் இளவரசியாரை அனுப்ப முடியும் என்றனர். அதோடு, பாலடினேட்டைத் திரும்பத் தந்துவிடுமாறு ஆஸ்திரியப் பேரரசரை வற்புறுத்த மறுத்தனர். சார்லஸும் பக்கிங்காமும் இறுதிநேரம் வரையிலும் ஸ்பானியருக்கு வாக்குறுதி அளித்துவிட்டுத் தாய்நாடு திரும்பினர். அவ்வித உறுதிமொழிகளை நிறைவேற்றுவதில்லையென்று தங்களுக்குள்ளே முடிவுசெய்துகொண்டனர். அவர்கள் பெரும் மகிழ்ச்சி ஆரவாரத்திற்கிடையே இங்கிலாந்தில் வந்திறங்கினர். வந்ததும் ஜேம்ஸைத் தம்முடைய வார்த்தையை மீறும்படி செய்து, பாலடினேட்டின் மீட்சியைத் திருமணத்திற்கான ஒரு நிபந்தனையாக வைக்கத் தூண்டினர். அதை அடுத்து, கவுன்சிலினுடைய எதிர்ப்பையும் புறக்கணித்து, ஸ்பெயின்மீது போர் தொடுப்பதற்காகப் பாராளுமன்றத்தைக் கூட்டினர். வருவதுணராத அவர்கள், தங்களுடைய கொள்கையை எதிர்த்ததற்காகக் கருவூலத் தலைவரான மிடில்செக்ஸைப் பதவியிலிருந்து நீக்கினர். ஜேம்ஸின் எச்சரிக்கைக்குச் செவி சாய்க்காது, ஊழல்களுக்காக மிடில்செக்ஸ்மீது அரசத்துரோகக் குற்றம் சாட்டப்பெற்றபோது அவரை ஆதரிக்காது கைவிட்டனர்.

இங்ஙனம், வயோதிக அரசருடைய வாழ்க்கை, புதிய வெல்திறம் போற்றப்பெற்ற நிலையில் 1625ஆம் ஆண்டு முடிவடைந்தது. அப்போது, பாலடினேட்டைப் பொறுத்த சமாதானப் பேச்சு முறிவுற்றதோடு ஐரோப்பாவில் சமயப்போரும் மூண்டது. கடலில் நாம் முழுமுயற்சியையும் எடுக்கவேண்டுமென்ற காமன்ஸ் சபையினரின் விருப்பை எதிர்த்த பக்கிங்காம் பிரபு, டென்மார்க்குடனும் ஜெர்மானியக் கூலிப்படைகளுடனும் ஒப்பந்தங்கள் செய்துகொள்வதில் ஆர்வமிக்கு இருந்தார். அதே சமயத்தில், சார்ல

ஸுக்கும், ஹென்றியிடா மேரியா என்னும் ஃபிரெஞ்சு இளவரசிக்கும் மணமுடித்து வைப்பதற்காக உடன்படிக்கையொன்றைச் செய்துகொண்டார். அதிலே இணைக்கப்பெற்ற இரகசியப் பகுதிகள் ஒரு காலத்தில் ஸ்பெயினுக்கு வாக்களித்தபடி உரிமைகளையும் சலுகைகளையும் கத்தோலிக்கருக்கு அளிப்பதாகக் குறிப்பிடப்பெற்றது.

மூன்றாண்டுகளுக்குள் இத்தகைய் திட்டங்கள் பயனற்றுப் போயின. படையெடுப்பு ஒவ்வொன்றும் தோல்வியுற்றது. மான்ஸ்ஃபெல்ட் (Mansfeldt)ஐச் சார்ந்த முரடரான எர்னஸ்ட் (Ernest) என்பவரின் தலைமையில் போரிடவேண்டி அனுப்பப் பெற்ற ஆங்கிலப்படையினர் ஃபிளஷிங் (Flushing) என்னுமிடத்தில் நோய்காரணமாக ஈக்களைப்போல் இறந்தனர். எட்வர்டு செசில், கட்டுப்பாடற்ற வீரர்கள் அடங்கிய படையொன்றைப் பாய்மரங்களைக்கொண்ட ஆர்மடாக்காலத்து அரசக் கப்பல்களிலும் வணிகக் கப்பல்கள் சிலவற்றிலும் ஏற்றி, அதனைத் தலைமைதாங்கி நடத்திச் சென்றார். ஆனால், அப் படை, காடிஸ் துறைமுகத்தில் இழிவான தோல்வி அடைந்தது. நம்முடைய நண்பர்களான டேனர், லட்டர் (Lutter) என்னுமிடத்தில் முறியடிக்கப் பட்டனர். யூக்நோக்கள் புரட்சிக்கலகம் செய்ததன் விளைவாக, ரிச்சிலியூ (Richelieu) ஸ்பெயினோடு சமாதானம் பேசவேண்டியதாயிற்று. மேலும், பிராட்டஸ்டென்ட் சமயப்போரில், ஃபிரான்சைப் பங்குகொள்ளச் செய்யக்கூடவில்லை. பக்கிம்காம், வழக்கம்போல் ஃபிரெஞ்சுக் காரரோடு இருந்த நட்புறவை விரைவில் மறந்து அவர்களுடன் போர் தொடுக்கத் தயாரானார். இத்தகைய மாற்றத்திற்குக் காரணங்கள் பல உண்டு. அவருடைய இராஜதந்திரம் பலிக்காதது ஒரு காரணம். மேலும், அவரால் திருமண உடன்படிக்கையில் இணைக்கப்பெற்ற, கத்தோலிக்க இரகசியப் பகுதிகளை பாராளுமன்றத்தை ஏற்றுக்கொள்ளுமாறு செய்ய முடியவில்லை. ஃபிரான்சையூக்நோக்களுக்குச் சலுகைகாட்டச்செய்யமுடியவில்லை. ஃபிரெஞ்சுக் கப்பல்களைப் பிடிக்கக்கூடவில்லை. தாமே ரீ தீவிற்கு (Isle of Rhe) இறுதியாகப் படையெடுத்துச்சென்று தோல்வியோடு திரும்பிவந்தார். வென்ட்வொர்த்தின் மைத்துனரான ஹோலஸ் (Holles) எழுதியதைப்போன்று ‘இங்கிலாந்து, இங்கிலாந்தாக ஆனதிலிருந்து இத்தகைய இழிவுதரும் பேரிடியைப் பெற்றதில்லை.’ பதவி உயர்வு கிடைக்காததால் ஏமாற்றமடைந்து, பக்கிங்காமிற்கு எதிராக எழுந்த கூக்குரலால் ஊக்குவிக்கப்பெற்று இருந்த ஜான் ஃபெல்டன் (John Felton) எனும் அதிகாரி 1628 ஆம் ஆண்டில் பக்கிங்காமைப் போர்ட்ஸ்மவுத் என்னுமிடத்தில் கொன்றார்.

பக்கிங்காம் மரபாக விட்டுச்சென்ற சொத்து, 60,000 பவுன் சொந்தக் கடன் தவிர, மன்னருக்கும் பாராளுமன்றத்திற்கு மிடையேயான இறுதிப் பிளவேயாகும். பாராளுமன்றம் ஜேம்ஸின் வெளிநாட்டுக்கொள்கையை மாற்றி யமைத்ததோடு, அரசரது தனி யுரிமைகளுக் கெதிராகச் சட்டங்களையும் இயற்றியது. சார்லஸின் முதலிரண்டு பாராளுமன்றங்கள் விசாரணையின்றியே போருக்குப் பணம் ஒதுக்க மறுத்தன. அதே சமயத்தில் கத்தோலிக்கச் சமயத் தின்மீது அவைகள் கொண்ட வெறுப்பு, சார்லஸின் திருமணத்தை எதிர்க்கும் குறிப்புகளாலும் கால்வினிசத்தைக் குறைகூறிய சமய குருமாரின்மீது கொண்ட கோபத்தினுலும் வெளிப்பட்டது. ஆனல், அவர்களெல்லாம் ஒருசேர பக்கிங்காமைச் சந்தேகித்தனர். கோக், ஃபிலிப்ஸ், வழக்கமாக இருக்கும் எதிர்க்கட்சியினர் ஆகியவர்களோடு இளைஞரான வென்ட்வொர்த்தும் இணைந்து கொண்டார். அவர்கள் சீர்திருத்தம் செய்யும் அரசரையும் அமைதியையும் அதிக ஆர்வத்தோடு விரும்பினர். 'அரசர் தம்முடைய குறிப்பேடுகளைப் படிக்குமாறு செய்யவேண்டும்; அதன் பிறகு, ஹாமன் (Haman) தம்மையே பார்த்துக்கொள்ள வேண்டும்.' அப்படிப்பட்ட நன்னளை எதிர்நோக்கி நின்றனர்.

1625ஆம் ஆண்டு காமன்ஸ் சபை முன்னிகழ்விற்கு முரணுக, டன் எடை வரியையும் (tonnage), பவுண்டுக் கட்டணம் (poundage) என்ற சுங்க வரிப் பணத்தையும் ஓராண்டு காலத் திற்குத்தான் வசூலிக்கலாம் என்று தீர்மானம் செய்தபிறகு கலைக்கப்பெற்றது. அடுத்த ஆண்டில் புதிய சபை கூடியபோது மேலைத் துறைமுகங்களில் செசிலின் ஆட்கள் பட்டினியால் பரித வித்து மாண்டுவந்தனர். கொள்ளைக்காரர்கள் கடலை ஆபத்து நிறைந்ததாக்கினர். மேலும் ஃபிரான்சோடு போர்மேகம் மூண்டது. பக்கிங்காம் தம்முடைய அதிகாரத்தை மூர்க்கமான வன்முறை களில் பயன்படுத்தினர். வென்ட்வொர்த் போன்ற சில உறுப் பினரை ஷெரிப்புகளாக நியமித்து வெளியே வைத்திருக்குமாறு சார்லஸை வற்புறுத்தினர். சில எதிர்க்கட்சியைச் சார்ந்த பிரபுக்கள் பாராளுமன்றத்திற்கு வருவதைத் தடைசெய்யுமாறு செய்தார். அரச முத்திரைப் பிரபுவாக இருந்த மிதவாத மந்திரி யாகிய வில்லியம்ஸ் என்பவரைப் பதவியிலிருந்து நீக்குமாறு செய்தார். ஆனல், ஒரு காலத்தில் அவருடைய கட்சிக்காரராக இருந்தவரும், முன்னுளில் சமாதானம் செய்துவைக்க முயன்ற வருமான எலியட் (Eliot) இப்போது அவருக்கு எதிராகத் தலைமை தாங்கினர். 'நமது மானம் பறிபோகியது; நமது கப்பல்கள் மூழ்குகின்றன, நமது மக்கள் மடிகின்றனர்; வாளினுல் அன்று, நாம் நம்பியிருப்பவரால்தான்' என்று எலியட் கூக்குரலிட்டார்.

அதற்கு, காமன்ஸ் சபை எம்முடைய பணியாளரை, அதிலும் எமக்கு மிகவும் நெருக்கமான ஒருவரை அதிகாரம்செய்ய அனுமதிக்கமாட்டேன்' என்று சார்லஸ் மறுமொழி அளித்தார். தோல்விக்கான பொறுப்பையும் தாமே ஏற்றுக்கொண்டார். எனினும், காமன்ஸ் சபையினர் பக்கிங்காமின்மீது அரசத் துரோகக் குற்றம் சாட்டினர். எலியட், நம்பமுடியாத அரசத் துரோகக் குற்றங்களை அவர்மீது சுமத்தினர். அதே சமயத்தில் உறுதியான அடிப்படையில் ஊழல், திறமை இன்மை ஆகிய குற்றங்களையும் கொண்டுவந்து தாக்கினர். இவைகளுக்கு மேலாக பக்கிங்காமை செஜனஸ் (Sejanus) எனும் ரோமானிய துன்மந்திரியுடன் ஒப்பிட்டுப் பேசினர். இதனால் மற்றுமொரு பாராளுமன்றம் கலைக்கப்பெற்றது. பிரபுக்கள் சபையினர் சிறிது பொறுத்திருக்கவேண்டுமென்று சார்லஸைக் கெஞ்சிய போது 'ஒரு நிமிடமும்' தாமதிக்க முடியாது என்று பதிலளித்துப் பாராளுமன்றத்தைக் கலைத்தார்.

காடிஸ் தோல்வியைத் தொடர்ந்து ரீ என்னுமிடத்தில் தோல்வி ஏற்பட்டது. ஆயினும், 1627ஆம் ஆண்டு முழுதும் அரசர் போரைத் தொடர்ந்து நடத்தினர். படைவீரர் இராணுவச் சட்டத்திற்கு உட்படுத்தப்பெற்றனர். கட்டாயக் கடன்களுக்கு (forced loans) எதிராக ஆலோசனை கூறிய தலைமை நீதிபதியைப் பதவியிலிருந்து விலக்கினர். இழிவான சமயச் சொற்பொழிவுகளை அனுமதிக்க மறுத்ததால் ஆர்ச்பிஷப் அப்பட் (Abbott) அவமானமடைந்தார். மாஜிஸ்ட்ரேட்டுகளின் நீதிமன்றத்தில் அரசருக்கு வேண்டாதவர் விலக்கப்பெற்றனர். கட்டாயக் கடனை அளிக்க மறுத்த 'ஐந்து நைட் வீரர்களின்' சோதனை வழக்கு நீதிமன்றங்களுக்கு வந்தது. சிறிது காலத்திற்கு ஒருவரைச் சிறையிலடைத்து வைக்க 'மன்னர் தனி ஆணை'யே போதும் என்பதை (எலிசபெத் கால வழக்குப்படி) ஒப்புக்கொண்ட நீதிமன்றங்கள், ஐந்து நைட் வீரர்களும் ஹேபியஸ் கார்பஸ் கட்டளை இடுமாறு வேண்டியபோது, ஜாமீனில் விடுதலை அளிக்க மறுத்தன.

1628ஆம் ஆண்டு கூடிய சார்லஸின் மூன்றும் பாராளுமன்றம் எலிசபெத் ராணியார் விட்டுச்சென்ற அரசியல் சட்டத்தை அமைதியான முறையில் திருத்துவதற்கான கடைசி வாய்ப்பாக அமைந்தது. பாராளுமன்றத்தின் அனுமதியின்றி வரி விதித்தல், இராணுவச் சட்டம், படைவீரர்களைச் சாதாரண மக்களின் வீடுகளில் திணித்தல் (billeting of troops), முறைசெய்யப்பெறாத சிறைப்படுத்தும் அதிகாரங்கள் போன்ற மிகுதியாகக் கண்டனத்திற்குள்ளான கேடுகளுக்கெதிராக யாவரும் ஒன்று சேர்ந்தனர்.

ஆனால் நெருக்கடி காலத்தில், அரசு அதிகாரமளிக்கும் ஒருவருடைய அதிகாரத்தைக் குறைக்காமலேயே தங்களுடைய நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ளுதல் எவ்வாறு என்ற ஐயம் அவர்களிடையே எழுந்தது. அதன்காரணமாகப் பிளவுபட்டனர். பிரபுக்களில் நடுப்பகுதியினர், மன்னரின் இறைமைக்கு இயல்பான தனிச் சிறப்புரிமையை அவருக்கு வழங்கவேண்டுமென்றனர். காமன்ஸ் சபையில் அவர்களின் பிரதிநிதிகள்போல் இருந்த பலருள், வென்ட்வொர்த் குறிப்பிடத்தகுந்தவர். அவர், அரசர் சட்டத்திற்கு மேம்பட்டவரா அல்லது சட்டம் அவருக்கு மேம்பட்டதா என்னும் பிரச்சினையைத் தள்ளிவைக்கும் நோக்கத்தோடு ஒரு மசோதாவைக் கொண்டுவரவேண்டுமென்றார். சட்டத்தை முறைப்படுத்திக் கூற வேண்டுமென்றும், ஹேபியஸ் கார்பஸைக் காக்கவேண்டுமென்றும், ஆனால், அரசரின் சிறையிடும் உரிமையைப் பறித்தல்கூடாது என்றும் அச் சட்டம் கூறியது. ‘ஆயினும் மிகுதிப்படுத்துதலோ, பொழிப்புரைகளோ, விளக்கங்களோ இன்றிச் சட்டத்தை வைத்திருப்பதாகக்கூறும் தமது வார்த்தையில் நம்பிக்கை வைக்கவேண்டுமென்று சார்லஸ் அனுப்பிய செய்திகள் வற்புறுத்தின. இவைகள் வென்ட்வொர்த்தின் முயற்சியை முறியடித்தன. கோக்கின் ஆலோசனையின்பேரில் காமன்ஸ் சபை உரிமைகளின் விண்ணப்பத்தை உருவாக்கியது. அரசரிடமிருந்து உடனே பதில்வேண்டுமென்று கோரியது. இதில் நான்கு முக்கியக் கூறுகளுக்கு முன்னால் துன்பப் பட்டியலொன்று இணைக்கப்பெற்றிருந்தது.

பிரபுக்கள் சபை மறுபடியும் ‘இறைமை அதிகாரத்தை’ ஒதுக்கீடு செய்யமுயன்றது. அதை மறுபடியும் காமன்ஸ் சபையினர் நிராகரித்தனர். வென்ட்வொர்த் கூறியதைப்போல, இவ் விண்ணப்பம் கண்டிப்பாகச் செயல்படுத்தப்பெறுமானால், ‘அரசாங்கத்திற்குப் பேரிடியாக’ இருக்கும் என்பதை உணர்ந்த போதிலும், பிரபுக்கள் இவ் விண்ணப்பத்தை மேலும் எதிர்க்க பக்கிங்காமிற்கு உதவ முன்வரவில்லை. அதன் பிறகு, அரசர் விண்ணப்பத்தை ஏற்றுக்கொண்டார். ஆனால், அது தம்முடைய பழங்காலந்தொட்டே வரும் அதிகாரத்தைப் பாதிக்காது என்றும், சில தனிப்பட்ட வழக்குகளில் கைதிகளைத் திரும்பவும் சிறைப்படுத்த ஒப்புக்கொள்வதாகவும் நீதிபதிகள் உறுதிமொழி அளித்த பிறகே அதனை ஏற்றுக்கொண்டார். அதற்கு முன்பே இரு சபைகளிலும் பக்கிங்காமிற்கு எதிராகக் கோஷங்கள் எழுந்தன. கோக், அவரைத் ‘துன்பத்திலெல்லாம் துன்பம்’ என்று தூற்றினர்.

இறைமைச் சிக்கலைக் கோமகனரின் கொலையோ அல்லது உரிமைகளின் விண்ணப்பமோ தீர்க்கவில்லை. பிம், எலியட்

போன்றவர் தலைமையில் காமன்ஸ் சபையினர், பாராளுமன்றத்தின் அனுமதியற்ற வரிவிதிப்பை ஆதரித்ததற்காக ஆர்மீனியாவைச் சார்ந்த மெயின்வாரிங் (Arminian Mainwaring) என்பவர்மீது துரோகக்குற்றம் சாட்டினர். மேலும், பாராளுமன்றத்தின் சம்மதமின்றி டன் எடை வரியும், பவுண்டுக் கட்டணமும், பிற விதிப்புகளும் விண்ணப்பத்தினுல் தடைசெய்யப்பெற்றன என்று துணிந்து கூறினர். இறுதியாகக் குறிப்பிடப்பெற்ற பாராளுமன்றத்தின் உரிமையைப் பொறுத்தவரையில் தாம் 'பன்னெடுங் காலமாக வழக்கிலிருந்த உரிமைகளையே உறுதிப்படுத்தியதாகவும், புதிதாக உரிமையேதும் வழங்கவில்லை' என்றும் சார்லஸ் அறிவித்தார். சமயத்தைப் பொறுத்தவரையில் எலிசபெத் ராணியாரின் தனிச் சிறப்புரிமையிலிருந்து தாம் பிறழப்போவதில்லை என்றும் அறிவித்தார். பிராட்டஸ்டென்டான லா ரோச்சல்லியின் வீழ்ச்சி, காமன்ஸ் சபையினரைத் தாழ்வின் ஓரத்திற்கே கொண்டுசென்றது. எலியட் பிரபுக்களிடமிருந்து பிரிந்து சென்று 1629ஆம் ஆண்டில் காமன்ஸ் சபையினரைத் தீவிரச் செயல்களில் ஈடுபடுத்தினர். டன் எடைவரி, பவுண்டுக் கட்டணம் ஆகியவற்றை வசூலிப்பதில் கண்டும் காணுதது போல் இருந்த சுங்க அதிகாரிகளைக் காமன்ஸ் சபையினர் தமது கழகத்திற்கிழுத்தனர். எலிசபெத் ராணியாரின் அவையில், போப்பின் சமயமும் கத்தோலிக்கரும் நிறைந்திருந்தனர் என்று குறை கூறினர். 'அர்மீனியப் பிரிவை' (Arminian) வன்மையாகக் கண்டித்தனர். முப்பத்தொன்பது விதிகளுக்கும் மேலாக எலிசபெத் ராணியார் சேர்த்த விதிகளை ஆதாரமாகக்கொண்டெழுந்த சமயச் சடங்குகளைச் சட்டவிரோதமானவை எனக் கண்டித்தனர். இப் பாராளுமன்ற விவாதத்தில்தான் உறுப்பினரான கிராம்வெல்லின் (Cromwell) குரல் முதன் முறையாக எழும்பியது. இறுதியாக மன்ற உறுப்பினர் பிப்ரவரி மாதம் 24ஆம் நாளன்று பாராளுமன்றத்தைத் தற்காலிகமாகத் தள்ளிப்போட சபாநாயகர் கொண்டுவந்த தீர்மானத்தை மறுத்து அவரை இருக்கையிலேயே இருக்குமாறு வற்புறுத்தினர். பாராளுமன்றத்தின் வாயில்களை அடைத்தனர். அவைகளைத் தகர்த்துத் திறப்பதற்காக அரசருடைய காவலர் வந்தபோது சில தீர்மானங்களை நிறைவேற்றினர். இங்கிலாந்தின் பிராட்டஸ்டென்டு சமய ஏற்பாட்டை மாற்ற முயற்சிப்பவர்களும், போப்பின் சமயத்தையும் ஆர்மீனியனிஸத்தையும் பரப்ப விரும்புவோரும், பாராளுமன்றத்தின் சம்மதமின்றி டன் எடைவரி, பவுண்டுக் கட்டணம்போன்ற வரிகளை வசூலிப்பவர்களும் அவ் வரிகளைக் கொடுப்பவர்களும் தேசத்துரோகிகளாக மதிக்கத்தக்கவர்கள் என்று அத் தீர்மானங்கள் கூறின. மார்ச் மாதத்தில் பாராளுமன்றம் கலைக்கப்பெற்றது. அதன் பிறகு பதினேரு ஆண்டுகளுக்கு அது கூடவேயில்லை. அதே

சமயத்தில். எலியட்டும், அவரோடு எட்டு உறுப்பினரும் டவர் கோட்டைச் சிறைக்குச் சென்றனர்.

இங்ஙனமாக இடைக்காலத்து அரசியல் சட்டம் முறிந்தது. ஒவ்வொரு தரப்பினரும் தாங்கள் புதியது எதற்கும் போராடவில்லை யென்று வீணுகக் கூறிக்கொண்டபோதிலும், பிம், இறைமை இருப்பதையே ஏற்க மறுத்தார். வென்ட்வொர்த் 'நம்முடைய பழங்கால, அமைதியான உயிர்நிலையான உரிமைகளையே' வேண்டினுர். இறுதிப் புகலிடமாக நிர்வாகத்தின்மீது நம்பிக்கை இருக்கவேண்டுமென்று உணர்ந்த வென்ட்வொர்த் எலியட்டிட மிருந்து பிரிந்துநின்றுர். உண்மையில் காமன்ஸ் சபையினர், மந்திரிகளைப் பதவிநீக்கம் செய்ய வற்புறுத்தவேண்டுமென்றும், நீதிமன்றங்களின் தீர்ப்புகளை நிராகரிக்கவேண்டுமென்றும் கோரிய சமயத்தில், பிம் என்டவருடைய 'சாக்ஸன்' தன்னுரிமை வேண்டும் என்ற பேச்சும், ஆரம்பகால முன்னிகழ்வுகளுக்காக முறை யிட்டதும், நிலைமையைக் குழப்பமடையச் செய்தன.

இவற்றிற்கு, அரசருடைய உரைகளிலும் அவர்தம் பேரறி விப்புகளிலும், சட்ட அதிகாரங்களின் வாதங்களில் இருந்ததைப் போன்று பதில்கள் இருந்தன. இவைகள் உயர்ந்த தோரணையில் இருந்தபோதிலும், டியூடர் காலநிலையையே நினைவூட்டுகின்றன. அரசர், அமரர் உலகில் அரசவையில் வீற்றிருக்கும் ஆண்டவரைத் தவிர வேறு யாருக்கும் அடங்கியவரல்லர். அவரே சமய ஏற்பாட்டிற்கும் தலைவர். அன்னுரின் ஆதிக்கத்தில் இருந்த நீதி பதிகளே சட்டத்தை விளக்கிக்கூறும் உரிமை கொண்டவர். மறைவான ஆதிக்கம் (arcana imperii) போன்ற மர்மங்கள் உண்டு என்பதை மக்கள் தெரிந்துகொள்ளவேண்டும். அவருடைய தனி யுரிமையில் இன்றியமையாத் தன்மையும் நாட்டின் பாதுகாப்பும் அடங்கின. அவர் தம்முடைய முன்னேரைப்போன்று டன் எடை வரியையும், பவுண்டுக் கட்டணத்தையும் பொது நலனைப் பேணுதற்கு இன்றியமையாதனவாகக் கொண்டார் (de bene esse). காமன்ஸ் சபையினருடைய தலையீடுகளும், சுற்றித்திரியும் குழுக்களின் குறுக்கீடும் 'முடியாட்சிக்கு முரணுனவை'. இவையும் இன்னேரன்ன பிறவும் இக்கால விடைகளாகக் கிடைத்தன.

## சமகால நிகழ்ச்சிகள்

1605 செர்வான்டஸ் (Cervantes) எழுதிய 'Don Quixote'.
–1621. போப் ஐந்தாம் பால் (Paul).

1606 துருக்கிக்கும் ஹாப்ஸ்பர்க்கினருக்கு மிடையே சீஸ்ட்வா சமாதானம்.
முகலாயருக்கு எதிராகச் சீக்கியரின் கலகம்.
வர்ஜீனியாவின் முதல் உரிமைப் பத்திரம்.

1608 ஆன்ட்வெர்ப்பில் (Antwerp) ரூபன்ஸ் (Rubens) ஓவியம்.
செயின்ட் ஃபிரான்சிஸ் டி சேல்ஸ் (St. Francois de Sales) எழுதிய 'Introduction a la vie devote'.

1609 கலிலியோ, கெப்ளர் போன்றோரின் அறிவியற் கண்டுபிடிப்புகள்.
போர்ட் ராயலில் முதல் சீர்திருத்தங்கள்.
க்ளீவ்ஸின் இறுதிக் கோமகன் இறத்தல்.

1610 நான்காம் ஹென்றியின் கொலை.
ஹென்றி ஹட்சன், ஹட்சன் வளைகுடாவைக் கண்டுபிடித்தல்.

1611-32 கஸ்டாவஸ் அடால்பசின் (Gustavus Adolphus) ஆட்சி.

1612 பர்த்தலோமியூ லிகேட்டின் (Bartholomew Legate) மறைவு; ஸ்மித்ஃபீல்டில் இறுதியாகப் புறச் சமயத்தவர் கொளுத்தப்படுதல்.

1613-45 ஜார் மைக்கேலின் ஆட்சி.

1614 ஃபிரெஞ்சுப் பாராளுமன்றமாகிய எஸ்டேட்ஸ் ஜெனரல் (Estates-General) கூட்டம்.
டச்சுக் குடியேறிகள் நியூ ஆம்ஸ்டர்டாமிற்குச் சென்றனர் (நியூயார்க்).

1615 பதின்மூன்றும் லூயி ஆஸ்திரிய நாட்டு ஆன் என்பவரை மணந்துகொள்ளல்.

1616 மஞ்சூக்கள் சீனாவைத் தாக்குதல்.

1618 முப்பதாண்டுப் போரின் தொடக்கம்.
The Synod of Dort.

1619 ஒல்டன்பார்னவெல்ட் (Oldenbarneveldt) மரண தண்டனை அடைதல்.

1620 வெள்ளைமலைப் போர் (White Mountain).
வால்டெல்லினில் (Valtelline) போர்.

1621-65 ஸ்பெயின் நாட்டில் நான்காம் ஃபிலிப்பின் ஆட்சி.

1622 ரிச்சிலியூவின் நிலையான மந்திரி சபைத் தொடக்கம்.

1623 ஃப்ரா பேலோ சார்பியின் (Fra Paolo Sarpi) மரணம்.

1625 டில்லியும் (Tilly), வாலன்ஸ்டீனும் (Wallenstein) சாக்சனியைத் தாக்குதல்.

ஃபிரான்சில் திரும்பவும் தோன்றிய யூக்நோக்களின் கலகம்.

குரோடியஸ் (Grotius) எழுதிய 'De jure belli'.

1626 லட்டர் (Battle of Lutter) சண்டை.

1627 லா ரோச்சல்லி (La Rochelle) முற்றுகை.

மண்டுவான் (Mantuan) வாரிசுரிமைப் போர்.

1628 வாலன்ஸ்டீன் பால்டிக் கடலுக்குச் செல்லுதல்.

தாஜ் மஹால் (Taj Mahal) கட்டப்பெறுதல்.

-1658. டெல்லியில் ஷா ஜஹானின் ஆட்சி.

1629 திருப்பிக்கொடுத்தல் ஆணை (Edict of Restitution).

அலேய்ஸ் உடன்படிக்கை (Alais).

ரோமில் செயின்ட் பீட்டர் கோயிலில் கட்டடக் கலைஞனை பர்னினி (Bernini).

# 9. தீர்மானம், 1629–1642

முதலாம் சார்லஸ், வெற்றியை ஒழுங்கமைக்கும் ஆற்றலோ விட்டுக்கொடுத்து வேலையை முடிக்கும் திறனோ அற்றவராக இருந்தார். சிறுவராக இருந்தபோது மெலிந்தும் மனவளர்ச்சி குன்றியுமிருந்த அவர், தம்முடைய விடாப்பிடியினுல் துணிவும், தூய நடத்தையும், உயர்ந்த எண்ணமும், உள்ளார்ந்த பற்றும், கலைத்திறமையும் கைவரப்பெற்று விளங்கினர். ஆயின், அவர் தப்பெண்ணங்களின் அடிப்படையில் அமைந்த கொள்கைகளைக் கடைப்பிடித்ததால் கேடுபயக்கும் கொடுங்கோலரானர். அடக்க நடையும் ஒதுங்கி நிற்கும் உளப்போக்கும் கொண்ட அவர், பக்கிங்காமை இழந்தபிறகு தம் மனைவியாரிடத்து ஆரு்க் காதல் கொண்டிருந்தார். இங்கிலாந்துத் திருச்சபையிடம் மாருப் பற்றுறுதியுடனிருந்தார். அரசாங்கக் காரியங்களிலும், அரசியல் வாதிகளைத் தேர்ந்தெடுப்பதிலும், நல்லது இது கெட்டது இது என்றும் நல்லார் இவர் தீயார் இவர் என்றும் நிதானித்தறிதலிலும் திறமை அவரிடம் சிறிதுமில்லை. அவைகளைத் தம்முடைய விருப்பு வெறுப்பு ஆகியவற்றின்மூலமே கண்டார். இங்ஙனம், ஐரோப்பியச் சக்திகளுடன் உறவுகொண்டவிடத்து, பாலடினேட்டில் தம்முடைய குடும்பத்திற்கு உதவி கிடைப்பதை அடிப்படையாகவைத்தே செயலாற்றினர். அமைச்சரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பைத் தம் அரசியாரிடம் விட்டார். திருச்சபையைக் குறைகூறுவோரைப் புரட்சிக் கலகக்காரர்களாகவே கொண்டார்.

பக்கிங்காமிற்குப் பதிலாகத் திறமை மிக்கவர் ஒருவரும் இல்லாதபோது, சார்லஸ், புகழற்ற கவுன்சிலுக்குத் தாமே தலைமை தாங்கினர். அவரது கவுன்சிலர்களிற் சிலர் கத்தோலிக்க அனுதாபிகள் அல்லது அச் சமயத்தில் இரகசிய ஈடுபாடு கொண்டிருந்தவர்கள் ஆவர். அவர்களில் போர்ட்லண்ட் ஏர்லான வெஸ்டன் (Weston, earl of Portland) திறமைமிக்க கருவூலத் தலைவராவர். அமைதியை விரும்பிய அவர், 1628–9ஆம் ஆண்டுகளில் ஃபிரான்சோடும் ஸ்பெயினேடும் சதாதானம் பேசி முடித்தார். இச்

சமாதானம், நாடு கடலில் மூழ்கி அழிவதைத் தடுத்தது என்றாலும், அடுத்த பத்து ஆண்டுகளில் இங்கிலாந்தின் நிலை இழிந்ததாகவே இருந்தது. சார்லஸ், பாராளுமன்றம் இல்லாதநிலையில் கதியற்று இருந்தார் என்பதை அறிந்திருந்த ஃபிரெஞ்சுக்காரர், பாலடீன் தேர்வாளரை மீட்கும் பேச்சிற்குச் செவிசாய்க்க மறுத்தனர். தங்களுடைய வாணிப நலன்களைக் கருதியும் பெல்ஜியத்தின் எதிர் காலத்தை மனத்தில் கொண்டும், ஃபிரெஞ்சுக்காரர் ஹாலந்துடன் நெருங்கிய உறவுகொள்ளத் தலைப்பட்டனர். இந்த உறவும் மேற்கிந்தியத் தீவுகளில் போட்டியும், சார்லஸை ஸ்பெயினோடு உறவு கொள்ள அல்லது டச்சுக்காரரைத் தாக்கத் தூண்டின. குறுங்கடல்களில் மற்ற நாட்டுக் கப்பற்படைகள் இங்கிலாந்திற்கு 'கொடிக்குச் செய்யும் மரியாதை'யை வழங்கவேண்டுமென்று சார்லஸ் விரும்பினார். ஆனால், அதேசமயத்தில் அவரால் ஆங்கிலக் கால்வாயிலிருந்து கொள்ளைக் கப்பல்களை முழுவதுமாக அகற்றக்கூடவில்லை. அதேபோன்று நம்முடைய நீரில் டச்சுக்காரரும் ஸ்பானியரும் போரிட்டதைத் தடைசெய்யவும் முடியவில்லை. இதற்கிடையில் ஆங்கிலப் பியூரிட்டன்கள், முப்பதாண்டுப் போரில் கஸ்டாவஸ் அடால்பினுடைய வெற்றிகளை ஆனந்தத்தோடும் அவரது மரணத்தைத் துயரத்தோடும் பார்த்திருந்தனர். பல தொண்டர்கள், குறிப்பாக ஸ்காட்லாந்திலிருந்து சென்றவர்கள், தங்களுடைய நாட்டில் பிராட்டஸ்டென்ட் சமயத்திற்குத் தொண்டுசெய்யக் கிடைக்காத வாய்ப்பை ஸ்வீடன் நாட்டுப் படையில் சேர்வதன் மூலமாகப் பெறலாம் என்றெண்ணிச் சென்றனர்.

வறுமைநிலை காரணமாக அரசர் எல்லா வகுப்பினரையும் பாதிக்கும் நேரடி நடவடிக்கைகளில் ஈடுபட்டார். அமைதி நிலவிய காரணத்தால் அயல்நாட்டு வாணிபம் வளரத்தொடங்கியது. நாடு வறுமையில் வாடவில்லை. அடுத்த பத்து ஆண்டுகளில் அமெரிக்காவிற்குக் குடியேறிகளை அனுப்புதற்கு 2,00,000 பவுன்கள் திரட்டப்பெற்றன. அத் தொகையில் பாதியளவு சதுப்பு நிலங்களைச் சீர்படுத்தச் செலவிடப்பெற்றது. எனினும், பாராளுமன்றத்தின் சம்மதமின்றியே அரசர் 6,00,000 பவுன்வரை வருமானம் உடையவராக இருந்தபோதிலும் பற்றாக்குறை இருந்துவந்தது. இதனால், நெருக்கடி வந்தபோது நிலைமை கட்டுக்கடங்காது இருந்தது. புது வருமான ஊற்றுகளைத் தேடியலைந்தது. இடைக்கால உரிமைகளைப் புதுக்கிய கருவூலம் 40 பவுன் வருமானமுள்ள நிலங்களை வைத்திருப்போர் நைட் பட்டத்தைப் பெறுதிருப்பதற்கு ஈடாக ஒரு தொகையை அபராதமாகச் செலுத்தவேண்டுமென்று வற்புறுத்தியது. நிலமானிய வார்டு நிர்வாகச் சபை (court of wards) கட்டணங்களை உயர்த்தியது. பதினைன்காம் நூற்றாண்டி

லிருந்து வழக்கொழிந்த கானக உரிமைகளை மீண்டும் வற்புறுத்தியது. ராக்கிங்காம் (Rockingham), வால்தாம் (Waltham), டீன் (Dean) ஆகிய பகுதிகளில் இருந்த காடுகளில் குடியானவரும் நிலப்பிரபுக்களும் மிகுதியான தண்டம் அளித்தனர். தங்களுக்குச் சொந்தமானவை என்று நெடுங்காலமாகக் கருதிவந்த நிலங்களில் 'எல்லை மீறியதாக' அரசாங்கம் அறிவித்ததால் சாலிஸ்பரி 20,000 பவுனும், அவரினும் தாழ்ந்தவர் தரத்திற்கேற்ற விகிதத்திலும் தண்டமளித்தனர். இவைகளைக்காட்டிலும் அரசர் சுங்க வரிகளை உயர்த்தியும், புதிய தனியுரிமைகளை வழங்கியும், வாணிபத்தில் தலையிட்டது மிகுந்த தொல்லை தருவதாக இருந்தது. வெடி மருந்து, புகையிலை ஆகியவற்றில் தனியுரிமை வழங்கியதை ஓரளவு பொறுத்துக்கொள்ளலாம். ஆனால், 1624ஆம் ஆண்டுச் சட்டம் தனிப்பட்டவர்களுக்கே தனியுரிமை வழங்குதல் தகாது என்றது. இச்சட்டத்தில் உள்ள தப்பிக்கும் வழியைப்பயன்படுத்திக்கொண்டு, உற்பத்தியைக் கட்டுப்படுத்தும் பெரிய கார்ப்பொரேஷன்களுக்குத் (corporations) தனியுரிமையைச் சார்லஸ் வழங்கினர். நிலக்கரி, உப்பு, சோப்பு ஆகிய அத்தியாவசியப் பொருள்களின் உற்பத்தி, விற்பனை ஆகியவற்றைக் கட்டுப்படுத்தும் கம்பெனிகளுக்குத் தனியுரிமை வழங்கப்பெற்றது. பல ஆதாயப்பங்கு பெறுவோரும் (royalty-holders), திட்டமிடுவோரும், அரசருக்கு வரும் வருமானத்தை இடைமறித்துத் தாமே பெற்றனர். அதே சமயத்தில் அமித விலையேற்றம் மக்களின் ஆத்திரத்தை அதிகரித்தது. கீழ்த்தரமான சோப்பு என்று முறையிட்ட துணி வெளுப்போர், நியூகாஸில் நிலக்கரிக் குழுவினரால் அதிக வரி விதிக்கப்பெற்ற லண்டன் நகரமக்கள் ஆகியோரின் துன்பங்கள் தொடர்ந்து வளர்ந்தன. புகையிலை வாணிபத்தில் தனியுரிமை கோரிப் போட்டியிடும் குடியேற்ற நாட்டுக் கம்பெனியின் நலன்களின் குறைகள் மிகுந்தன. அதைப்போலவே கிழக்கிந்தியக் கம்பெனியும், ஃபிளீமிய வணிகரான கோர்டீன் (Courteen) என்பவரின் தலைமையில் இருந்த கம்பெனியின் போட்டியினால் துன்புற்றது. அப் புதிய கம்பெனிக்கு உரிமைப்பத்திரம், வழங்குமாறு குறுக்குவழியில் பொருள்தேடும் அரசவையினர் சார்லஸைத் தூண்டினர். இவ்வாறான முதலீட்டுப் போட்டி சமய, அரசியல் சட்டமுறை சார்ந்த எதிர்ப்போடு இணைந்தது.

பியூரிட்டன் சமயத்தைச்சார்ந்த வணிகரும் கனவான்களும் அமெரிக்காவில் குடியேற விரும்புவோரைத் தலைவர்களாகக் கொண்டு நடத்திச் சென்றனர். பிற்காலத்தில், பாராளுமன்றத் தலைவர்களில் மிகச் சிறந்தவர்களாக விளங்கிய வார்விக், சேயி, சீலி, ஹாம்டன், கிராம்வெல் ஆகியோர் நியூ இங்கிலாந்து குடியேற

றங்களில் பங்குகள் வாங்கினுர்கள். அங்கே அரச ஆலோசகர் சிலர் எதிர்க்கத் தீர்மானித்த சுதந்திரத்தை உருவாக்கினர்.

இச் சமயத்தில் கவுன்சில் தீவிரமாகச் செயலாற்றியது. இரவலர் சட்டத்தையும் சம்பள விகிதத்தையும் பொறுத்தவரையில் நாட்டுப்புறச் சீமான்களையும், மாஜிஸ்டிரேட்டுகளையும் தூண்டியது. அதனுல், செல்வாக்கு மிகுந்த வகுப்பாருடன் மோதல் ஏற்பட்டது. அதே சமயத்தில், இத்தகைய பாராளுமன்றத்தின் சம்மதமின்றிப் பெற்ற வருமானம் சட்டத்திற்கு முரண்பட்டதாக இருந்தது. உண்மையில், உரிமைகள் மசோதா சாதித்ததொன்றுமில்லை என்பது தெளிவாகிறது. அரசர் சுங்க வரிகளின்மூலம் தம் வருமானத்தை வரம்பேதுமின்றிப் பெருக்கலாம் என்றும், எலியட்டை டவர் கோட்டைச் சிறையிலேயே வைத்திருக்கலாம் என்றும், பழைய சட்டத்திற்கு விளக்கம் அளித்த நீதிபதிகள் கூறினர். எலியட் சிறையிலேயே மாண்டார். இந் நிலையை உறுதி செய்வதே போன்று 1634-லிருந்து 1639ஆம் ஆண்டுவரை ஒவ்வோராண்டும் கப்பல்-பண ஆணைகள் வெளியிடப்பெற்றன. இவைகளில் முதல் ஆணை எலிசபெத் ராணியாரின் வழியைப் பின்பற்றி, கடற்கரைப் பட்டினங்கள் கப்பல்களை வழங்கவேண்டுமென்று கேட்டது. ஆனுல், கப்பற் பணம் வெகு சீக்கிரத்தில் நாடு முழுவதிலும் வசூலிக்கப்பெறும் வரிச்சுமையாக மாறியது. ‘கப்பற் பணம்’ உண்மையில் அரசாங்கத்திற்குத் தேவைப்பட்டது. ஏனெனில், அப்போது கடற்கொள்ளைக்காரர்கள் ஆங்கிலக் கால்வாயிலுள்ள நகரங்களுக்குத் தொல்லை தந்தனர். நியூகாசில் நிலக்கரிக் கப்பல்களைப் பிடித்து வைத்திருந்தனர். எனினும், வளர்ந்துவந்த எதிர்ப்பை நோக்குமிடத்து மக்களிடையே இத்தகைய எண்ணம் இருந்ததாகத் தெரியவில்லை. நாடு ஆபத்திற்குள்ளாகி இருக்கும்போது அரசர் கப்பற் பணம் வசூலிக்கலாம் என்றும், ஆபத்து இருக்கின்றதா இல்லையா என்பதைப்பற்றி முடிவு செய்யும் உரிமை அரசரைச் சார்ந்தது என்றும் தீர்ப்பளிக்குமாறு, சார்லஸ், தமது நீதிபதிகளை வற்புறுத்தினுர். அதுபோது, பக்கிங்காம்ஷயரைச் சார்ந்தவரும் செல்வமும் செல்வாக்கும் மிகுந்தவருமான ஜான் ஹாம்டன் (John Hampden) என்பவர் இத்தீர்ப்பினைச் சோதனைக்குள்ளாக்கினுர். முதலில் கப்பற் பணத்திற்கான எதிர்ப்பு அரைகுறையாக இருந்தது. ஆனுல், 1636ஆம் ஆண்டிலிருந்து அது நாடு முழுவதிலும் பரவிய எதிர்ப்பாக மாறியது. அதற்குக் காரணம் குறைந்த அளவு பெரும்பான்மையில் ஹாம்டனுக்குத் தண்டனை வழங்கிய நீதிபதிகள் பயன்படுத்திய சொற்கள் எனலாம். ஹாம்டனுக்காக வாதாடிய வழக்கறிஞர்கள், தெரிந்த வழிகளில் இருந்துதான் அரசரது அதிகா

ரங்கள் வரவேண்டுமென்றும், பொது நிலை கடந்த காலத்தும் பாராளுமன்றத்தின்மூலம் வரிகொள்வதே அளிப்பிற்கான இயல்பான வழியென்றும் கூறினர். அதற்குமாறாக, அரசரது வழக்கறிஞர்கள், கப்பற் பணத்தை ஒரு வரியாகக் கருதமுடியாதென்றனர். அரசர், மதுச் சட்டம் (lex loquens) போன்றவர் என்றும், நெருக்கடி காலத்தில் அவரே சட்டத்தின் திருவுரு என்றும் விளக்கினர். அதனோடு, மன்னரின் சிறப்புரிமைகளும் பொறுப்புகளும் பாராளுமன்றம் பறித்துக்கொள்ளக்கூடிய 'திருமுடி மலர்கள்' அல்லவென்றும், பாராளுமன்றத்தின் சட்டத்தினால் மாற்றமுடியாத அளவிற்கு அவரோடு ஒன்றிவிட்டவைகள் என்றும் வாதாடினர். இங்கே அரச ஆதரவாளரான கிளாரண்டன் எழுதியதைப்போல 'இவ்வித வாதத்தினால் யாரும் எதையும் தனக்குச் சொந்தமானது என்று கூறமுடியாது.' இங்ஙனம் எதிர்ப்புணர்ச்சி, பின்னாட்களில் கெவலியர் படைத்தலைவர்களாக வந்தவரிடையேயும் பரவியது.

முடியாட்சியைப்பற்றி மிகவுயர்ந்த நோக்கம் கொண்டிருந்தவர்கள் சார்லஸைப்பற்றிய மாயை எதிலும் மயங்கவில்லை. லாட் (Laud) என்பவர், 'நயமிக்க அரசர் மேன்மைமிக்கவராக இருக்க அறிந்துகொள்ளவில்லை. அவ்வாறே பிறரால் எவ்வாறு மேன்மை அடைவது என்பதையும் அறிந்திருக்கவில்லை' என்று கூறினார். எப்போதும் அரசருடன் கடிதத் தொடர்பு வைத்திருந்த வென்ட்வொர்த், 1628ஆம் ஆண்டின் இறுதியில் வட கவுன்சிலின் தலைவரானார். அடுத்த ஆண்டில் பிரிவி கவுன்சிலில் புகுந்தார். 1633-ல் துணைப் பிரபுவாக அயர்லாந்திற்குச் சென்றார். அவரது எதிரிகள் அழைத்ததைப்போல அவர் எப்போதும் 'கொள்கை துறந்த பெரியவர்' அல்லர். பக்கிங்காமின்மீது கொண்ட கோபத்திலும், உரிமைகள் விண்ணப்பத்தின்மீதான விவாதங்களின்போதும் வலிமைபெற்ற முடியாட்சியை வற்புறுத்தத் தவறியதில்லை. மன்னரும் மக்களும் மனமொத்து வாழும், டியூடர்கள் விட்டுச் சென்ற செப்பொழுங்காகிய அரசாங்கத்தோடு 'பழக்கமான பாதையில்' இன்பம் காணவேண்டுமென்றார். நெடுங்காலமாக வந்த சட்டத்தினால் ஆளப்பெறும் நாட்டோடு மிகச்சிறந்த கற்பனைகளினால் அரசரைப் பல நிலைகளில் வைத்துக்காட்டினார். உதாரணமாக, அரசர் நாட்டை இயக்கும் சக்தியென்றும், வளைவின் மையக் கல் என்றும், தாய்த் திரு நாட்டின் தந்தை (pater patriae) என்றும், இராக்காவலில் வழிகாட்டுவோர் என்றும் உருவகித்தார். அமைதியை விரும்பிய அவர், ஐரோப்பாவில் சில்லறைத் தலையீடு கூடாதென்று சார்லஸுக்கு ஆலோசனை கூறினார். சமுதாயக் கொடுங்கோலருக்கும் வறுமைக்கும் எதிராக மக்களுடைய நியாய

மான உரிமைகளைப் பாதுகாக்கும் அரசாங்கத்தை உருவாக்க விரும்பினர். ஆனால், அரசியல் அலைக்கழிப்பினால் வென்ட்வொர்த் 1628ஆம் ஆண்டில் பிம்மிடமிருந்தும், அவர்தம் நண்பர்களிட மிருந்தும் பிரிந்தார். அவர் பியூரிட்டன் சமயத்தவரல்லர். அதற்கு மாறாக அதிகப் பற்றுறுதிகொண்ட திருச்சபையாளர். அதிக ஈகை அவரிடம் ஒரு குறையாகவே இருந்தது. ஒருவித உணர்ச்சி யற்ற வெறுப்புத்தன்மை அவரிடம் காணப்பெற்றதால் பிறருடைய நற்குணங்களை அவரால் அறியமுடியவில்லை. அவர், யார்க்கிலும் டப்ளினுமாக இருமுறை கடினமான அரசாங்கப்பொறுப்பை ஏற்றதும், மோசமான உடல் நலமும் அவருடைய எதிர்கால நிலவ ரத்தை இருளடையச் செய்தன. ஆங்கில அரசாங்கம் தாழ்ந்து கொண்டே போகிறது என்று வாதித்தார். எதிர்க்கட்சியில் 'புரை யோடிய பகைமை உணர்ச்சி' இருந்தது என்றும், அதனை வேரறுக்கவேண்டுமென்றும் வாதாடினர். அவருக்குப் பியூரிட்டன்க ளெல்லாம் 'பிம்களாகவும், பீரின்னிகளாகவும் (Prynnes), பென் களாகவும் (Bens) காட்சியளித்தனர்'; 'புதுமைப் பெயர்க ளாகவும் புதுமை இயல்புகளாகவும்' தெரிந்தனர். ஹாம்ட னுக்குக் 'கசையடி தந்து அறிவு புகட்டவேண்டும்' என்றார். இங்ஙனம், அவர் பாராளுமன்றத்தோடு போராட விரும்பவில்லை யென்றாலும், வலி நிலையை மதிக்கும் மனம் படைத்தவர்களுள் அவரும் ஒருவர். அரசரின் தனியுரிமை அதிகாரத்தைக் கிண்டல் செய்த வழக்கறிஞரின்மீது வசை பாடினர். உண்மையில் தேவைப்படும்போது கப்பற் பணம் கேட்கப்பட்டால் அது 'இறை மைக்கு இன்றியமையாத பண்பாகும்' என்றும், அரசர் மக்களில் முதன்மையானவர் (salus populi) என்றும், நாட்டின் உயர் தனிச் சட்டம் (suprema lex) என்றும் வாதாடினர்.

அவருடைய கொள்கையின் நன்மை தீமைகள் அயர்லாந்தில் 1633-லிருந்து 1639ஆம் ஆண்டு வரையில் இருந்த அரசாங்கத் தினால் நிரூபணமாயின. அந்த அரசாங்கம், குழப்பத்திற்கு மாறாகச் சட்டமும் மாறுபட்ட சமயங்கள் மண்ணுக்காக நடத்தும் போராட்டமும் மலிந்த பண்டைக்காலப் பண்புகொண்ட சமுதாயத்தின் அரசாங்கமே. ஒருவழியில் அவரது உணர்வு ஒளி வல்லரசாங்கம், அயர்லாந்து கண்ட முதலாவது வல்லரசாங்க மாகும். அவர், அரசவையினரின் தில்லுமுல்லுகளை முறியடிக்கும் நோக்கத்தோடு அரசருடன் தமக்கு நேரடித் தொடர்பு இருக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். அயர்லாந்தை வலிமையான, மனநிறைவுகொண்ட, சுயநலத் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்ளும் நாடாகச் செய்வது அவரது கொள்கையாகும். அதன் விளைவாகப் போதிய வலிமைகொண்ட சேனையொன்றை உரு

வாக்கினர். கரையோரங்களைக் கடற்கொள்ளைக்காரர்களிட மிருந்து காத்தார். லினன் (linen) தொழிலை ஆரம்பித்தார். சுங்க வரியை இரட்டிப்பாக்கினர். தீவிர அரசாங்கத் தனியுரிமை களின்மூலமாகத்தான் உபரி நிதியைப் பெற்றார் என்றாலும், ஆங்கிலச் சுயநலச் சுரண்டல் கும்பல்களிடமிருந்து அயர்லாந்தைக் காத்தார். அந்த ஆங்கில நலன்கள் 18ஆம் நூற்றாண்டில் அயர் லாந்தை அடிமை நிலைக்குக் கொண்டுவந்தவையாகும். அவற்றிற் கெதிராக அயர்லாந்தின் கால்நடை வாணிபத்திற்கு இங்கிலாந்து அங்காடிகளில் நேர்மையான வாய்ப்பு அளிக்கவேண்டுமென்றார். கொடுங் கொள்ளையிட்ட சோப்புக் (soap) கார்ப்பொரேஷனை அயர் லாந்தின் அருகில் வரவொட்டாமல் தடுத்தார். காலப்போக்கில் பிராட்டஸ்டென்ட் அயர்லாந்துதான் பற்றுறுதியோடு இருக்குமென நம்பினர். ஆனால், அப்போதிருந்த ஐரிஷ் பாராளுமன்றம் அநேகமாகக் கத்தோலிக்கமயமாக இருந்தது. ஆங்கிலிகத் திருச் சபைக்குச் செல்லாததற்கு தண்டம் விதிக்கும் பழைய தீய முறையை அவர் ஏற்க மறுத்தார். அவருடைய கோபதாபங் களைக் காட்டிலும், முக்கியக் கவுன்சிலர்களின்மீது படை மன்ற நடவடிக்கை எடுப்பதாக அச்சுறுத்தியதைக் காட்டிலும் ஆபத்தான அறிகுறிகள், அவர் இங்கிலாந்தின் பேராளாக இருக்கத் தகுதி யற்றவர் என்பதை நிரூபிக்க என்றே தோன்றின. கன்னட் பிரபுவிற்கு அளிப்பதாக வாக்குறுதி செய்யப்பெற்ற சலுகைகளை அளிக்க மறுத்தது அவருடைய குறைந்த குற்றமாகும். ஆனால், இங்கே அறுபது ஆண்டுகளாக நிலத்தின்மீது சொந்தம் கொண்டாடிய உரிமையை ஒப்புக்கொண்டால், அஃது ஓர் ஒழுக்கக் கேடுற்ற அரசியல் கூட்டம் திருச்சபை நிலத்தைப் பறித்துக் கொண்டதை மன்னித்து விடுவதற்கு ஒப்பாகும். 'கருங் கழுகுகள்' என்று வென்ட்வொர்த்தினல் குறிப்பிடப்பெற்ற இக் கும்பலுக்குக் கார்க் (Cork) ஏர்ல் தலைவராக இருந்தார். அவர் லிஸ்மோர் (Lismore) சமய வட்டத்தின் வருமானத்தைத் தாமே கைக் கொண்டார். தமது இரண்டு உறவினரை பிஷப்புகளாக்கினர். பல சமயக் கல்வி நிலையங்களை நிறுவினர். வென்ட்வொர்த் இவ்விதப் பெருங்குடியினருக் கெதிராகவும், ஆங்கிலப் பிரபுக் களுக்காகச் செயலாற்றும் தரகர்களுக்கெதிராகவும் ஓயாது போராடினர். ஆனால், கன்னட்டில் நில உரிமைகளை ஏற்றுக் கொள்வதாக அரசர் அளித்த வாக்குறுதியையும் மறுத்தளித்தார். அங்கே வெற்றிகண்டதன்மூலமாகவும் மரபு வழியிலும் எல்லாம் அரசருக்கே சொந்தமானது என்று உரிமை கொண்டாடினர். கிலான்ரிக்கார்டி (Clanrickarde) அரசர்போல அப் பகுதியை ஆண்டுவந்தார். வாணிபத்தாலும் மரபு வழக்காலும் ஸ்பெயினேடு தொடர்பு கொண்ட இப் பகுதியில் கத்தோலிக்கர் நிறைந்

திருந்தனர். அதனால், இப் பகுதியில் ஆங்கிலப் பிராட்டஸ்டென்டு களுக்கு இணங்க புதிய மக்களைக்கொண்டு குடியேற்றம் ஏற்படுத்தவேண்டுமென்றார். ஜூரிகளை வற்புறுத்தி அரசரது உரிமையை நிலைநாட்டினார். கால்வேயில் (Galway) கட்டுப் பாட்டை மீறியவர்கள் தண்டம் செலுத்தினர் அல்லது சிறைப் பட்டனர்.

இங்ஙனம் வென்ட்வொர்த் அயர்லாந்தில் பல நிலங்களில் உள்ளோரை ஓர் அச்சில் வார்த்ததைப்போல் ஒன்றுபடுமாறு செய்துவிட்டார். அரசாங்கத்திற்கு நிரந்தர வருமானம் வேண்டு மென்றார். அயர்லாந்தின் பாராளுமன்றத்தில் பேசும்போது அரசர் ஒவ்வோராண்டும் 'கையில் கலன் ஏந்தி' (hat in hand) பிச்சையெடுக்கவேண்டுமென்று எதிர்பார்க்கவேண்டாமென்றார். குருமாரின் திருக்கூட்டத்தைச் 'சில இழிந்த கோயில் குருமார்' என்று தாக்கிப் பேசினார். ஆங்கிலேயருடைய முப்பத்தொன்பது விதிகளை வரவேற்கும் தம்முடைய திட்டத்தை அவர்கள் தடுக்கக் கூடாதென்றார். அவர் வருமானத்தை நாடி அலைந்தபோது லண்டன் நகரத்தோடு மோதவேண்டியதாயிற்று. பொறுப்புகளை நிறை வேற்றத் தவறியதால் டெர்ரி (Derry) என்னுமிடத்தில் அளிக்கப் பெற்ற உரிமைப் பத்திரத்தைப் பறிமுதல் செய்தார். டெர்ரியில் ஸ்காட்டியக் குடியேறிகளை ஒருமைப்படுத்தவேண்டி, கண்டிப்பு மிகுந்த ப்ராம்ஹாலை (Bramhall) பிஷப்பாக நியமித்தார். அங்கே ஸ்காட்லாந்தியருடைய குருமார் மண்டியிட்டுத் திருவிருந்து பெறுதல்கூடாது என்று போதித்திருந்தனர். 1638ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்தில் தோன்றிய ஒப்பந்தக்காரரின் புரட்சிக்கலகம் அல்ஸ்டரை உரைகல்லாக ஆக்கியபோது 'கறுப்புப் பிரமாணத்தை' (black oath) ஒப்பந்தக்காரர்மீது சுமத்தினார். மேலும் படைகளை வடக்கே கொண்டுசென்றார். அதன் பிறகு, கத்தோலிக்கர் தவிர மற்றையோர் படையில் சேரமாட்டார்கள் என்பதைத் தாமே கவலையுடன் கண்டார்.

இதற்கிடையில், லாடும் வென்ட்வொர்த்தும் தங்களுடைய கடிதங்களின்மூலம் நம்பிக்கை தெரிவித்த 'முழுநிறை'த் திட்டம் இங்கிலாந்தை மோசமான நிலைக்குக் கொண்டுவிட்டது. கடந்த நூறாண்டு காலமாகத் திருச்சபையைப் பிளவுசெய்த மாற்றுக் கொள்கைகளுக்கிடையே ஒப்பந்தம் ஏற்படமுடியாது. எனினும், பல காரணங்கள் பூசலை ஒத்திப்போட்டன. பிராட்டஸ்டென்டுகள் யாவரும் ஸ்பெயினுக்கெதிராக ஒன்றுபட்டு இருத்தல், எலிசபெத், செசில்கள் ஆகியோரின் அரசியல் நோக்கு, பாரிஷ் முறையில் சமயச் சார்பற்றோருடைய ஆதிக்கம், அதனால் பியூரிட்டன்

குருமாரை ஆதரவாளர் நியமித்தல், கால்வினிசக் கொள்கையின் பிடிப்பு ஆகியவையே அக் காரணங்களாகும். ஸ்டூவர்டுகள், பியூரிட்டன் சமயத்தைப் பதுங்குமாறு செய்தபோதும் கிளர்ச்சி தோன்றவில்லை. கிராம்வெல் காலத்தைச் சேர்ந்த இயல்பான குணம்படைத்த ரிச்சர்டு பாக்ஸ்டர் (Richard Baxter) தம்முடைய இளமைக்காலத்தில் திருச்சபையைவிட்டு நீங்கவேண்டுமென்ற பேச்சு இல்லையென்றும், பைபிள் படிப்பதும் இல்லையென்றும் கூறினர். சாமர்செட்டில் சமயப்பற்றுக் கொண்டவர்களுக்குக் குடியானவர் ஞாயிற்றுக்கிழமையன்று விழித்திருந்து வேலை செய்தது வருத்தத்தை அளித்தது. பென் ஜான்சன் (Ben Jonson) முதலாக உள்ள லண்டன் நகர நாடக ஆசிரியர்கள் நாடகங்களைப் பார்ப்பவர்கள் அனுபவிக்கவில்லை யென்றால் 'ஜீல்-ஆப்-தி-லாண்ட்-பிஸி' (Zeal-of-the-land-busy) என்னும் நாடகத்தை அரங்கேற்ற முடியாது. அதேபோன்று சேய்ஸ் பிரபுவின் நகரான பன்பரியை இகழ்ச்சிசெய்ய முடியாது. உயராணை மன்றத்திற்கு வரும் வழக்குகள் பெரும்பான்மை அரசருடைய நெருக்கத்தினுல் எழவில்லை. மாருக, தனிப்பட்டோர் திருமணம், மணமுறிவுபோன்ற சிக்கல்களைத் தீர்த்துக்கொள்ள கொண்டுவந்த வழக்குகளே அதிகம். பல குருமார் சடங்குகளை எதிர்த்த போதிலும், பதவியிலிருந்து நீக்கப்பட்டவரின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருந்தது.

இருந்தபோதிலும் இணைக்கமுடியாத பிரிவு ஒன்று இருந்ததோடு சமயம் சாராதாரில் பலர் தங்களுடைய திருச்சபைக்கு ஆபத்து நேரவிருக்கிறது என்று எண்ணுவதற்கு ஏராளமான காரணங்கள் இருந்தன. தேர்தல், அருள் ஆகியவைப்பற்றிய கால்வினிஸப் போதனையும், அச்சிடப்பெற்ற பொது பைபிளும் நாட்டை மிகுதியாகப் பாதித்தன. எலிசபெத் கால ஒறுத்தலுக்குத் தப்பிய சில சுதந்திரமான இரகசியச் சமயக் கூட்டத்தார் பணிவதைக்காட்டிலும் வரும் துன்பம் எதையும் ஏற்கத் தயாராக இருந்தனர். இவ்விதமாக இருந்த இரு பிரிவுகள் பின்னுளில் ஒன்ருக இணைந்தன. நாட்டிங்காம்ஷயரில், ஸ்க்ரூபி என்னுமிடத்தில் அரச அஞ்சல் பணியில் செயலராக இருந்த வில்லியம் ப்ரீவ்ஸ்டர் (William Brewster) என்பவர் அவர்களுக்குத் தலைவராக இருந்தார். இவைகளில் ஒரு கூட்டம் 1608ஆம் ஆண்டில் ஹாலந்திற்கு ஓடியது. பிற்காலத்தில் அவர்கள் இங்கிலாந்திலிருந்து வேறு சிலரையும் அழைத்துக்கொண்டு யாத்திரிகர் தந்தையராக, 1620ஆம் ஆண்டில் அமெரிக்காவிற்குப் பயணமாயினர். மற்ருெரு கூட்டத்தினர் ஜேம்ஸ் இறப்பதற்குமுன் பாப்டிஸ்ட் திருச்சபைகளை உருவாக்கினர், மேலும், 'அன்புக் குடும்பத்தினர்'

(Family of Love), 'அடைய முயற்சிப்பவர்' (Seekers) போன்ற பிரிவுகள் உள்ளொளிக் கொள்கையைப் பின்பற்றவோ அல்லது மறைபொருள் ஆராய்ச்சி செய்யவோ கால்வினிசத்திலிருந்து பிரிந்து சென்றன. ஃப்ரௌனிஸ்டுகளும் பாப்டிஸ்டுகளும் சமயப் பொறை வேண்டுமென்றனர். தனி மனித ஆன்மாவிற்காக எழும் எதிர்ப்பே பியூரிட்டன் சமயத்தின் உயிர்நாடியாக இருந்தது.

ஆனால், இந்த உணர்ச்சி சில தீயவழிகளில் பாய்ந்தோட ஆரம்பித்தது. பைபிளிடத்தில் மாருத பற்றுறுதிகொண்டு தாங்களே தேர்ந்து குறிப்பிடப்பெற்றவர் என்னும் உணர்வால் ஊக்குவிக்கப்பெற்ற தீவிரவாதிகள், கட்புலன் வழியேவரும் சிற்றின்பங்களையும் காமத்தையும் கண்டித்தனர். நெற்றியில் விழும் சுருள் கேசம், படிமங்கள் (images), அரங்குகள், மே விழா ஆட்டத்திற்கான நடுக் கம்பங்கள் ஆகியவை அனைத்தும் அவர்கள் கண்டனத்திற்குள்ளாயின. 1621ஆம் ஆண்டில் டேவிட் எவ்வாறு பேழைக்கு முன்னுல் நடனமாடினுர் என்பதை நினைவு படுத்தியதற்காகக் காமன்ஸ் சபையினர், உறுப்பினர் ஒருவரைச் சபையிலிருந்து விரட்டினர். மற்றுமோர் உறுப்பினரும் சாலிஸ் பரியின் பதிவாளருமான ஒருவர், தெய்வீகத் தந்தையைக் குறிப்பதாக இருந்த சாளத்தை உடைத்ததற்காக தண்டனை அடைந்தார். சேலம் குடியேற்றத்தைத் தோற்றுவித்தவர்களில் ஒருவரான ஜான் எண்டிகாட் (John Endicott) ஆங்கிலக் கொடியில் இருந்த போப்பின் சிலுவையைக் கத்தரித்தார். காமன்ஸ் சபை சப்பத் (Sabbath) விடுமுறையை வைத்துக்கொள்ளவேண்டி மசோதாக்களை விவாதித்தபோது ஜேம்ஸூம் சார்லஸூம் 'விளையாட்டுக்களின் அறிவிப்புகளை' வெளியிட்டுப் பியூரிட்டானியருடைய மனத்தைப் புண்படுத்தினர். இவைகள் கோயில் சொற்பொழிவு மேடையிலிருந்து குருமாரால் படிக்கப்பெற்றன. வில் வித்தை, நடனம், ஞாயிறுகளில் தொழுகைக் காலத்திற்குப்பின் ஊர் விருந்துகள் ஆகியவற்றை ஊக்குவித்தன. ஆனுல், பியூரிட்டன் சமயம் மேலும் பலவற்றைப் பாதித்தது.

உண்மைப் பொருளில் பியூரிட்டன் சமயம் இங்கிலாந்தை ஒழுக்கத்துறையில் கருத்தைச் செலுத்தத் தூண்டியது எனலாம். உள்நாட்டுப் போரின்போது பியூரிட்டன் கெவலிமர்கள் நிறைய இருந்தனர். அவர்கள் சமயத்தில் ஆழ்ந்த பற்றுகொண்டவர்கள். பிஷப்புகளைத் தங்களுடைய பகைவரைப்போல் தீவிரமாக எதிர்த்தனர். அதேசமயம் மறுபக்கத்தில் அரசரைக் கொன்ற கர்னல் ஹட்சின்சன் (Colonel Hutchinson) அல்லது அல்கர்னுன் சிட்னி (Algernon Sidney) போன்ற பியூரிட்டன் கனவான்க

ளிருந்தனர். ரூபர்ட்டைப் (Rupert) பின்தொடர்ந்த இளைஞனைப் போன்று மிகுதியான கல்வியறிவுபெற்றுப் பண்பட்டு இருந்த அவர்கள், மீன்பிடிப்பிலும் இன்னிசையிலும் பற்றுதல்கொண்ட வர்கள். இருதரப்பிலும் வாழ்ந்த மேலோர் ஒரே வகையான உயர்ந்த குறிக்கோளும், ஒரே வகையான சொந்தச் சமயமும், டியூடர் காலத்திற்குப் பிறகு அதிக மாறுதலடைந்த ஒழுக்கத் தையும் கொண்டு விளங்கினர். உண்மையான பியூரிட்டானியர் அரச ஆணைகள் குறிப்பிட்ட 'சரிநுட்ப அறிஞருக்கும்' (precisian) மேம்பட்டவர். அருளின் மறைபொருள்கள்மூலம் சமயத்தைக் காணவேண்டுமென்று போதிக்கப்பெற்றவர். எளியவனும் அருளைப்பெற விரும்பினால் உண்மையை உணரலாம் என்ற உறுதி மொழி அளிக்கப்பட்டது. ஒருவன் மற்றைய உலகிலே ஆண்ட வருடன் தனியாக இருக்கும்போது மனக் கலக்கம், ஐயங்கள், பலமுறை தான்செய்த அறங்கள் ஆகியவை ஆன்மத் தீயில் மறைந்துபோகும். இங்ஙனம், தாம் கெடர் (Kedar) கூடாரங் களில் வாழ்ந்ததாகவும், 'பாபிகளின் தலைவனாக' விளங்கியதாகவும், ஆனால், தமது மரணப்படுக்கையில் இருக்கும்போது, ஒருமுறை தாமும் அருளில் இருந்ததைத் தெரிந்துகொண்டு, எல்லாம் நன்மையாக முடியும் என அறிந்ததாகக் கிராம்வெல் கூறினார். இங்ஙனமும் புன்யனின் (Bunyan) எண்ணங்கள் அவரைப் பேயைப் போன்று துன்புறுத்தின. முதல் குவேக்கர் தலைவர்கள் ஒளியைப் பார்த்தனர் அல்லது தவிர்க்க முடியாத ஒலியைக் கேட்டனர். உதாரணமாக, ஜார்ஜ்ஃபாக்ஸ் (George Fox) என்பவர் லீச்ஃபீல்டில் ஒரு குரல் 'பழிகேடான நகரத்திற்குத் துன்பம் நேரும்' என்று ஒலித்ததைக் கேட்டார். ஜேம்ஸ் நெய்லர் (James Naylor) என்பவர் 'உன் தந்தையின் வீட்டிலிருந்து வெளியே சென்றுவிடு' என்பதைக் கேட்டார். இத்தகைய சிறுபான்மையோரே பியூரிட்டானியர் எதிர்ப்பைத் தீவிரமாக்கினர். அவர்களில் ஒருவர் கிராம்வெல்லின் படைவீரரோடு வாதம்புரியும்போது 'இஸ்ரேலை அவர்கள் தாக்காது இருந்தால் இந்நாளில் அரசரும், பாராளுமன்றமும், படைகளும் அமைதியாக வாழ்ந்திருக்கலாம்' என்று கூறினார். அதே சமயத்தில் ஒப்புயர்வற்ற அறிவுநலஞ் சார்ந்த பியூரிட்டன் மிதவாதி யான ஜான் ஷெல்டன் (John Selden) போருக்குரிய காரணத்தை 'scrutamini scripturas' என்கிற இந்த இரு சொற்களும் உலகை அழித்தன என்று கூறினார்.

இவ்வாறு, இன்னல்களுக்கிடையே இருந்த தனிப்பட்டார் சமயமாகிய பியூரிட்டன் சமயம் இங்கிலாந்தில் பலரைக் கவர்ந்த அதேசமயத்தில், அர்மீனிய இயக்கம், திருச்சபை அமைப்பைப் பெரிதும் பாதித்தது. தனியார் சமயத்திற்கு எதிர்வினையாக

இருந்த இவ்வியக்கம் இடர்மிகுந்த ஒன்றாகும். பலரைப் பாதித்த தலைவிதிக்கொள்கை அர்மீனியரின் மனத்தை வாட்டியது. சமயம் என்பது திடீரென்று மேன்மையை அடைந்துவிடுவது அன்று என்றனர். அறநிலையங்களாலும் சமயச் சடங்குகளாலும் ஒன்றாக இணைக்கப்பெற்று, ஊக்கமளிக்கப்பெற்ற, கட்புலனாகும் சமுதாயத்தில் தொடர்ந்து அங்கம் வகிப்பதே சமயமென்றனர்.

கொள்கை நோக்கில், அவர்கள் பியூரிட்டன்களைவிட தாராள வாதிகள். பியூரிட்டன்கள் ஒரு குறிப்பிட்ட கால்வினிஸப் பிரிவை வற்புறுத்தினர். அஃது இரண்டுவிதத்தில் அர்மீனியரின் சட்ட உணர்வைப் பாதித்தது. திருமறை ஒன்றையே அடிப்படையாகக் கொள்வது படைப்புத் திட்டத்தையே குறுகியதாக்கும் என அர்மீனியர் கருதினர். மெய்யுணர்வு, பல தலைமுறைகளில் தொடர்ந்துவந்த மரபு வழக்கு, கல்வி கற்கும் உரிமை, வாழ்கின்ற சமுதாயத்தின் வளர்ச்சி ஆகியவற்றைக் குறுகலாக்கும் என வாதாடினர். மேலும், பியூரிட்டன்கள் மறைபொருள்களை ஆராய முனைந்தது புறக்கணிக்கத்தக்க கடுகத்தனைப் பொருளை மலையத் தனையாக்கியது எனக் கண்டனர். அதே சமயத்தில், தவறு இழைக்கும் மக்கள் ஆன்ம ஐக்கியம்பெற உதவும் புறச்சடங்குகளைப் புறக்கணித்தனர் என்றும் கூறினர்.

உண்மையில், பதினேழாம் நூற்றாண்டைச் சார்ந்த ஆங்கிலத் திருச்சபையைப்போன்று வேறெந்த அமைப்பும் அவ்வளவு திருத் தூய்மையையும் அறிவாற்றலையும் படைத்ததில்லை. ஆங்கிலத் திருச்சபையில் உயர் திருச்சபையாளர்மட்டும் சேர்ந்திருக்கவில்லை. ஐரிஷ் தலைமை குருவான உஷர் (Usher), சில்லிங்வொர்த்தைச் (Chillingworth) சார்ந்த பகுத்தறிவும் பண்பும் கொண்ட பெரியோர்களும் அதில் இருந்தனர். படைவீரரும் புலமை படைத் தோருமான ஃபாக்லண்டும் (Falkland) சேர்ந்திருந்தார். அவர் ரோமிலிருந்தோ ஜெனிவாவிலிருந்தோ வரும் பிழையாமைக் கோட்பாட்டிற்கு (infallibility) எதிராகப் பகுத்தறிவின் செயல் நோக்கமாக இருக்கும் ஆங்கிலிகச் சமயத்தைப் பாதுகாத்தார். 'ரிலிஜியோ மெடிஸி' (Religio Medici) எனும் நூலின் ஆசிரியரான ப்ரௌனியும், புலவராகிய டோனும் ரோமின் பிடியில் சிக்காமல் தப்பினர். அர்மீனியச் சமயமும் சில திருத்தொண்டரைப் பெற்றிருந்தது. ஜார்ஜ் ஹெர்பர்ட் (George Herbert) போன்ற 'தெய்வீகக்' கட்சியைச் சார்ந்த புலவர்கள் அவர்களிற் சிலர். ஜார்ஜ் ஹெர்பர்ட், உள்துறைச் செயலாளராகப் பணியாற்றிய போதிலும், இறுதியில் வில்ட்ஷயரில் (Wiltshire) ஊர்ப் பாதிரியாக வாழ்ந்து இறந்தார். லிட்டில் கிட்டிங் (Little Gidding) என்னு

மிடத்தில் ஒரு சமூகத்தைத் தோற்றுவிப்பதற்காக வர்ஜீனியா கம்பெனியை விட்டுச்சென்ற நிக்கோலஸ் ஃபெர்ரர் (Nicholas Ferrar) என்பவர், தம்முடைய வாழ்க்கையை வழிபாட்டிலும் நற்பணிகளிலும் செலவிட்டார்.

பரந்த அடிப்படையைக்கொண்ட இச் சமயத்திட்டம் உச்சியில் குறுகிவிடுவதால், அர்மீனியரின் துரதிர்ஷ்டவசமாக வில்லியம் லாட் என்பவர் அவர்களின் அதிகாரம்பெற்ற தலைவராக இருந்தார். சார்லஸின் அந்தரங்கத் தோழராக இருந்த அவர், லண்டன் நகர பிஷப்பாகப் பணியாற்றியபிறகு 1633ஆம் ஆண்டில் அப்பட்டின் வாரிசாகக் கான்டர்பரி (Canterbury) ஆர்ச்பிஷப்பானார். அவர் சிறந்த குணநலன்களைப் பெற்றிருந்தார். செல்வாக்கு மிகுந்த தீவினையாளரையும் உயராணை நீதிமன்றங்களில் கொண்டுவந்து நிறுத்திய தீரர். எளியோரைக் காக்கும் ஏந்தல். ஆனால், தாம் ஆக்ஸ்ஃபோர்டு கல்லூரியை நிர்வகித்த காலந்தொட்டுக் கண்டிப் பாளராக இருந்தார். திருச்சபையில் ஒரு பிரிவினரைக் கொண்டு நிரப்பத் தமது அதிகாரத்தைப் பயன்படுத்தினார். குருமாரின் பதவி உயர்விற்கான பட்டியலை வைதீகர் என்றும் பியூரிட்டன் என்றும் [O. (Orthodox) அல்லது P. (Puritan)] பிரித்தார். நீதிமன்றங் களில் அர்மீனிய பிஷப்புகளை அதிகமாக நியமித்தார். தாம் வாழ்ந்த காலத்தைத் தவறாகப் புரிந்துகொண்டதால், பிஷப் ஜுக்ஸனைக் (Juxon) கருவூலப் பிரபுவாக நியமித்தார். அதே சமயத்தில் அமெரிக்காவில் குடியேறியவர்களிலும், வெளிநாடு களில் நிலைகொண்ட பிரிட்டிஷ் படையினருள்ளும் புறச்சமயத்தைச் சார்ந்தவர்களை ஒறுக்க முயன்றார். ஸ்டார் சேம்பர் நீதிமன்றத்தில் கடுமையான தண்டனை அளிக்கவேண்டுமென்று அவரது குரல் ஒலித்துக்கொண்டிருந்தது.

லாடின் மூன்று நடவடிக்கைகள் மக்களுடைய ஆத்திரத்தைப் பெருக்கின. முதலில் எதிர்ப்பை அடக்குவதற்காகக் கவுன்சில் பத்திரிகைகளைத் தணிக்கை செய்தது. பதிப்பிற்கான உரிமைச் சீட்டு வழங்குவதில் ஆர்ச்பிஷப் அதிகாரம் பெற்றிருந்தார். லண்டன் நகரத்தில் அச்சடித்தல் குறைக்கப்பட்டது. இவை களின் காரணமாக இழிவான் அவதூறுப் பத்திரிகைகள் பரவலாக விற்பனையாயின. சில தீவிரவாதிகள் ஹாலந்தில் அச்சிட்டனர். அடுத்தபடியாகப் பல ஆணைகள் சமயம் சார்ந்தோருக்குப் பொறுக்க முடியாத தொல்லைகளைத் தந்தன. தலைவிதியைப்பற்றியும், பியூரிட்டன் சமயத்தின் உயிர்நாடியாக இருந்த பிற ஆழ்ந்த கருத்து களையும் போதித்தல் தடைசெய்யப்பெற்றது. பிற்பகல் சமயச் சொற்பொழிவிற்குப் பதிலாக வினாவிடை இருக்கவேண்டுமென்

ருயிற்று. இத்தகைய ஆணைகள், பியூரிட்டன் நகரங்களும் பிரமுகர்களும் மானியம் வழங்கி ஆதரித்த சொற்பொழிவாளர்களுக்கு எதிராக எடுத்த நடவடிக்கைகளோடு இணைந்து செயல்பட்டன. ஆயினும், லாட், மக்கள் மனத்தில் பதியக்கூடிய வெளிப்புற அறிகுறிகளினால்தான் அவர்களின் வெறுப்பை வளர்த்தார். மக்களிடையே ப்ற்று மதிப்பின்மை மலிந்திருந்ததைக் கண்டார். கல்லறை வெளியில் நாட்டுப் படை பயிற்சிபெறுவதையும், திருவிருந்து மேசையின்மீது அவ்வழியாகச் செல்பவர் தங்களுடைய தொப்பிகளை வைப்பதையும் கண்டார். செயின்ட் பாலின் கோயில், தரகர்களும் காதலரும் கூடும் இடமாக இருந்ததையும், ஊர்த் திருக்கோயில்களில் கூடிய மக்கள் மதுக்கடையில் கூடும் இழிந்தவர்களைப் போன்று நடந்துகொண்டனர் என்பதையும் அறிந்திருந்தார். இவ்வித இழிநிலையைப் போக்கிக் கட்டுப்பாட்டினை ஏற்படுத்த முற்பட்டார். திருவிருந்து மேசையைக் கோயிலின் கிழக்குப் பகுதியில் வைப்பதை ஆதரித்ததோடு, அதற்கான ஆணையையும் பிறப்பித்தார். அதைச்சுற்றிலும் பலிபீடம்போன்று வேலி அமைக்க வேண்டுமென்றும் வற்புறுத்தினர். இங்ஙனம், அவரது செயல் வைதீக முறைகளைப் பின்பற்றிய புல பாரிஷ்களை அவமதிப்பதாகவும், எலிசபெத்தின் ஆணைகளை மீறுவதாகவும் இருந்தது. அவர் அனுப்பிய வட்டத் தலைமை குரு, சமய வட்டங்களைச் சென்று கண்டு அவைகளைப்பற்றிய செய்திகளை அறிவித்தார். விரும்பாத பிஷப்புகள் வற்புறுத்தப்பெற்றனர். பாரிஷ்களில் சமயப் பரப்பாளர் வாயடைக்கப்பெற்றனர். பலிபீட மாற்றத்தை எதிர்த்த திருச்சபையினர் சிறையிடப்பெற்றனர். நோன்புவிழாக் காலத்தில் இறைச்சியுண்ட குடியானவர் அபராதம் விதிக்கப்பெற்றனர். கிழக்குத்திசை நோக்கித் தலைவணங்க வேண்டுமென்ற ஆணை பிறந்தது. இவைகளெல்லாம் மக்களிடையே வெறுப்பையும் ஆத்திரத்தையும் வளர்த்தன.

லாடின் சமய ஆர்வத்திற்கும், அதற்குப் பலியானவர்களின் தீரத்திற்கும் எடுத்துக்காட்டாகச் சில வழக்குகள் காணப்படுகின்றன. கதீட்ரல் சடங்குகளின் மாற்றத்தை எதிர்த்ததற்காக டர்ஹாம் சமய குரு தம் பதவிகளை இழந்தார். ஸ்காட்டியரான லெய்ட்டன் என்பார் பியூரிட்டன் சமயத்தை ஆதரித்து 'ஜியான்ஸ் ப்ளீ அகெய்ன்ஸ்ட் ப்ரிலெஸி' (Zion's Plea against Prelacy) எனும் நூலை எழுதியதற்காகச் சவுக்காலடிபட்டு, சூடு போடப்பெற்று, சிறையிலடைக்கப்பட்டார். நல்ல படிப்பாளியும், நாட்டுப்பற்று மிக்கவரும், வெறிகொண்ட வழக்கறிஞருமான வில்லியம் பிரைன் என்பார், நாடகங்களைத் தாக்குவதன்மூலம் அரசியாரை மறைமுகமாகத் தாக்கினர் எனக் குற்றம் சாட்டப்பெற்று ஒரு

காதை இழந்தார். மேலும், அவர், பிஷப்புகளையும் விடுமுறை நாள் விதியை மீறியவர்களையும் கண்டித்ததால் மற்றொரு காதை இழந்ததோடு சூடுபோடப்பட்டார். 1637 ஆம் ஆண்டு தொடர்ந்த அதே வழக்கில் மற்றுமிருவர் பிரைனின் கதியையே அடைந்தனர். பர்ட்டன் (Burton) என்பார் பலிபீடத்தைத் தாக்கிப் பேசியதற் காகவும், பாஸ்ட்விக் (Bastwick) எனும் எஸ்ஸக்ஸ் பகுதியைச் சார்ந்த மருத்துவர் பிஷப்புகளைத் தாக்கிப் பேசியதற்காகவும் கடுந் தண்டனைகள் பெற்றனர். குற்றவாளிகளைப் பிணைக்கும் மரச் சட் டங்களைச் சுற்றி நின்ற இரக்கங்கொண்ட மக்கள், மனைவி மக்களைப் பிரிந்து சிசிலி அல்லது ஆங்கிலக் கால்வாய்த் தீவுகளில் உள்ள சிறைகளுக்குச் செல்லும் பரிதாபகரமானவரை மலர் தூவி, வாழ்த்தி வழியனுப்பினர்.

சமயம் சாராதவர்கள் இவ்விதப் படுகொலைகளினால் கடுஞ்சினம் கொண்டனர். அரசர்க்கரசருக்காக ஜார்ஜ் ஹெர்பர்ட் கோயில், நயம், இன்னிசை, பலவித வண்ணங்கள் ஆகியவற்றைக்கொண்டு அணிசெய்யப்பெற்றது உண்மை ஒளியை மறைக்கும் உலுத்தர் தம் வழிகள் என்று கண்டனர். ‘தொப்பியணிதல், குனிதல், நிற்றல், முழந்தாளிடல்’ என்று கூறி, பாஸ்ட்விக், கொதித்தெழுந்து குறை கூறினர். பல ஆண்டுகள் கழித்துக் கிராம்வெல் ‘உண்மைச் சமயத்தின் அடிப்படையை அரிக்கும் போப்பினரின் நஞ்சாம் சடங் குகள்’ இவை என்று குறிப்பிட்டார். 1604 ஆம் ஆண்டு காமன்ஸ் சபையினர் பியூரிட்டன் எனும் பெயரை வெறுத்ததைப்போலன்றி, லாட் காலச் சபையினர் அதில் ஒருவிதப் பெருமை கொண்டனர். விடுமுறை நாளைப் புனிதமாகக் கொண்டவர்களையும், வாக்குறுதி அளிப்பதையும், மது அருந்துவதை வெறுத்தவரையும், அரசவைக்கு எதிர்ப்புத் தெரிவித்தவரையும் கொண்டதில் நெறியென்று பெருமை கொண்டனர். அவர்களின்மீது குடிகாரர் வசை பாடினர் என்றும், நாடகச் சாலைகளும் மதுக் கடைகளும் ஏளனக் கணைகளைத் தொடுத்தன என்றும் ஹட்சின்சன் அம்மையார் (Mrs. Hutchinson) எழுதினர். எத்தனை மக்கள் அமெரிக்காவில் ஓலமிடும் காடு களுக்குத் துரத்தப்பட்டிருக்கின்றனர் என்று ஆலிவர் ஆத்திரத் தோடு கேட்டார்.

‘திருத் தொண்டர்களாக’ ஏற்றுக்கொள்ளப்படாதவர்கள், ஆனால், ‘திருத் தொண்டர்களின்’ வெற்றிக்கே காரணமானவர்கள், 1629 ஆம் ஆண்டு காமன்ஸ் சபையினர் ‘அர்மீனியப் பிரிவு’ என்று அழைத்த அரச ஆதரவாளர்கள் போப் சமயச் சடங்குகளை மீண்டும் கொண்டுவரவே சட்டத்தைக் கைக்கொண்டனர் என்று நம்பினர். இந்த எண்ணம் தவறான அடிப்படையில் எழுந்தது என்றாலும்

அதற்கும் ஒருசில காரணங்கள் உண்டு. 'நாம் சீர்திருந்திய திருச் சபையில் வாழ்கிறோம். புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டதில் அன்று' என்று லாட் கூறினர். ரோம் திருச்சபை பிழைபட்டு இருந் தாலும், அதுவே உண்மையானது என்று வற்புறுத்தப்பெற்றது. ஐரோப்பியப் பிராட்டஸ்டென்டுகள் பிளவுசெய்வோர் என்று தூற்றப்பெற்றனர். 'புதிய மாற்றங்கள் சமயச் சீர்திருத்தத்திற்கு உகந்தவை என்று விளக்கம் தரப்பட்டது. இவற்றின்மூலமாக அர்மீனியர்கள் அவர்கள் வாழ்ந்த காலத்திற்குமுன்பு இருந்ததைப் பற்றித் தமது தந்தையர் கூறியவற்றையெல்லாம் மறுத்தனர். நள்ளிரவில் நற்செய்தி ஒளி தோன்றியது. மில்ட்டன் கூறியதைப் போல ஆண்டவர் தம் தன்மைகளை ஆங்கிலேயருக்கே முதலில் காட்டினர். ஆனால், இப்போது பாதிக்குமேற்பட்ட பிஷப்புகள் ரோம் சமயத்தைப் பரப்புபவராகச் சந்தேகித்தனர். கத்தோ லிக்கர் உயர் பதவிகளை வகிக்கக் கண்டனர். போர்ட்லண்ட் கருவூலத் தலைவராகவும், காட்டிங்டன் (Cottington) எக்ஸ்சக்கரில் உயிர் பதவியும், விண்ட்பாங்க் (Windebank) உள்துறைச் செயலர் பதவியும் வகித்தனர். சாமர்செட் மாளிகையில் உள்ள ராணியா ருடைய கோயிலில் எல்லோரும் பணிபுரிய அனுமதிக்கப்பட்டனர். அவருடைய காபூசின் சமய குருமாராக யார் வேண்டுமானாலும் வரலாம் என்றிருந்தது. போப்பின் பிரதிநிதிகள் அரசவையில் தோன்றினர். அவர்களில், அரசர், 'ஜார்ஜ்' என்று அழைத்த ஸ்காட்லாந்தைச் சேர்ந்த கான் (Con) என்பவர் அதிக ஆதரவைப் பெற்றார். ரோமில் ஓர் ஆங்கில அயல்நாட்டு நிலைவரத்தூதர் இருந்தார். ஆங்கிலேயர் ஒருவரைக் கார்டினலாக்க அரசியார் முயன்றார். அதேசமயத்தில் ஆங்கில ஃபிரான்ஸிஸ்கன் சாங்க்டா கிளாரா (Franciscan Sancta Clara) என்பவர் (பின்னாளில் ப்ரகன் ஸாவின் காதரைன் தம் குற்றங்களை ஒப்புக்கொண்டதை ஏற்ற சமய குருவாக இருந்தவர்) சமய மறு ஐக்கியத்திற்காகப் பாடு பட்டார். கத்தோலிக்கச் சமயத்திற்கு மாறிய பலர் அரசரைச் சுற்றி இருந்தனர். பல ஆண்டுகளுக்கு ஹென்ரீட்டாவின் பேராளாக இருந்தவரும் பக்கிங்காமின் தாயாருமான வால்டர் மாண்டேகு (Walter Montagu), புகழ்பெற்ற லென்னக்ஸ் ஸ்டூவர்டு களில் சிலர், மறைமெய்ம்மை சார்ந்த கெனல்ம் டிக்பி (Kenelm Digby), ஒப்பற்ற கட்டடக் கலைஞரான இனிகோ ஜோன்ஸ் (Inigo Jones) போன்றவர் அவ்வகையைச் சேர்ந்தவராவர். திருக்கோயில் களுக்குச் செல்லவேண்டுமென்னும் சட்டங்கள் அநேகமாகத் தள்ளி வைக்கப்பெற்றன. இப்போது இளைஞரான மில்ட்டன் (Milton) தாம் எழுதிய லிஸிடாஸ் (Lycidas) என்னும் நூலில் 'கொடூரமான ஓநாய்' தினமும் 'ஒன்றும் பேசாமல்' விழுங்கியது என்று இதனைக் குறிப்பிட்டார். நம்முடைய பிராட்டஸ்டென்ட் கூட்டுறவுக

ளெல்லாம் அழிந்தன. பாலடீன் குடும்பத்தினர் சுற்றியலேயும் அகதிகளாயினர். ஐரிஷ் கடலுக்கப்பால் போப் ஆதரவாளர் படையொன்று தயாராக நின்றது.

இறுதியில் அரசாங்கத்தை எதிர்ப்பதற்கு, ஸ்காட்லாந்து, ஆங்கிலேயருக்கு ஒரு வாய்ப்பினை நல்கியது. ஸ்காட்லாந்தைப் பற்றியும், அங்கிருந்த பிரிவுகளைப்பற்றியும், தலைவர்களைப்பற்றியும் ஒன்றுமறியாத சார்லஸ், கிர்க் திருச்சபையை அடக்க ஜேம்ஸிற்கு அனுமதி தந்த உயர் குடியினருடன் இருந்த நட்புறவினை நாசம் செய்தார். பிஷப்புகளிடம் மிகுந்த நம்பிக்கை வைத்ததோடு, அரசியல் ஆதிக்கத்தையும் அவர்களிடமளித்தார். 1625 ஆம் ஆண்டில் அவர் கொண்டுவந்த தள்ளுபடிச் சட்டம் (Act of Revocation) அந்த ஆண்டிலிருந்து சமயம்சாராதாரிடம் சென்ற திருச்சபை நிலங்களையும், கோவில் மகிமையையும் திரும்ப எடுத்துக் கொண்டது. அவர் அளித்த இழப்பீட்டுப் பணம் நேர்மையானது என்றபோதிலும், அவர் திருத்தி அமைத்த கோவில் மகன்மை (மகமை)யினல் சமய குருமார்கள் ஓரளவு திறமைபெற்றனர் என்றபோதிலும், அச் சட்டம் ஆளுங் கூட்டத்தினரை அவமதிப்பதாக இருந்தது. மேலும், அவர்கள் தங்களுடைய நிலமானிய அதிகார வரம்புகள் பறிபோய்விடுமோ என்ற அச்சம்கொண்டிருந்தனர்.

சார்லஸ், குழந்தைப் பருவத்திற்குப் பிறகு 1633 ஆம் ஆண்டில் முதன்முறையாக ஸ்காட்லாந்து சென்ருர். 'சட்டப் பிரபுக்களின்' மூலமாக ஸ்காட்லாந்துப் பாராளுமன்றம் ஜேம்ஸினுடைய திருச்சபைச் சட்டங்களை வலியுறுத்துமாறு செய்தார். அவரை எதிர்த்த பெருங்குடியினரைக் குறித்துக்கொண்டார். லாடும் அவருடன் இருந்தார். அங்கிருந்த வழிபாடு ஒழுங்கற்ற நிலையில் இருந்ததைக் கண்டு இருவரும் துணுக்குற்றனர். முதலாவதாக, வெண்ணிற நீள் அங்கியை உடுத்தவேண்டுமென்று ஆணையிட்டனர். 1636 ஆம் ஆண்டில் புதிய சமயச் சட்ட நூலை வெளியிட்டனர். அது, அரசர் கிர்க் திருச்சபையின் தலைவர் என அறிவித்தது. திருவிருந்து மேசையை மேல்கோடியில் வைக்கவேண்டுமென்று ஆணையிட்டது. புதிதாகத் தயாராகிக்கொண்டிருந்த தொழுகை நூலை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றது. அடுத்த ஆண்டில் நாக்ஸின் நூலுக்குப் பதிலாக வந்த புதிய நூல் ஆங்கிலத் தொழுகை நூலைவிடக் கத்தோலிக்கச் சமயச் சடங்குகள் நிறைந்ததாக இருந்தது. இறுதியில் சமயச் சட்டங்களோ, புதுத் தொழுகை நூலோ பாராளுமன்றம் அல்லது ஸ்காட்லாந்துத் திருச்சபை ஆகியவற்றின் சம்மதத்திற்காக அவைகளிடம் ஒப்படைக்கப்பெறவில்லை.

1637 ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் எடின்பர்க் நகரிலுள்ள செயின்ட் கைல்ஸ் கோயிலில் கலகம் தோன்றியது. அப்போது பெண்கள் சமய குருமார்மீது நாற்காலிகளை வீசி யெறிந்தனர். திரண்ட மக்கள் பிஷப்பின் தோலை உயிருடன் உரிக்க முயன்றனர். அதிலிருந்து இரு தரப்பினரும் எதிர்த்து நின்றதால் புரட்சி தோன்றியது. உயர் ஆணையாளர் நியமிக்கப்பெற்றனர். ஸ்காட்லாந்தை ஆள எல்லா வகுப்பாரையும் கொண்ட 'டேபிள்ஸ்' (tables) உருவாயின. 1638 ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் மக்களனைவரும் ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்டனர். இவ்வொப்பந்தத்தில் அவர்களுடைய திருச்சபையின் கொள்கைகளையும், அவைகளைக் காக்கவந்த சட்டங்களையும் குறித்திருந்தனர். அதில் கையொப்பமிட்டவர் கடவுளின் பேரால் சட்டத்திற்கு மாறுன மாற்றத்தை எதிர்க்கக் கடமைப்பட்டனர். புரட்சிக்கலகம் சார்ந்த நேர்மையற்ற அவதூறு வருவதற்கு அஞ்சாது, அரச அதிகாரத்தையும் உண்மைச் சமயத்தையும் காக்கக் கடமைப்பட்டவர்கள். எடின்பர்க் நகரத்தில் உள்ள க்ரேபியர்களின் கல்லறை வெளியில் கையெழுத்திட்டவரில் தொடங்கி எல்லா நிலைகளிலும், எல்லாவித கருத்துகளையும்கொண்ட ஸ்காட்டியரில் பெரும்பகுதியினர் இவ்வொப்பந்தத்தில் கை நாட்டினர். 'சில பால்காரிகள்' (கையெழுத்திட்டனர்) என்று மடத்தனமாக லாட் பேசியபோது, ஸ்காட்லாந்து கவுன்சிலர், 40,000 படையினர் வந்தால்தான் தொழுகை நூலை மீட்கமுடியும் என்று சார்லஸுக்கு எச்சரிக்கை விடுத்தனர். மக்கள் 'இரத்தவெறிகொண்ட பிசாசு பிடித்தவர்போல்' காணப் பெற்றனர் என்று பிரஸ்பிடீரியச் சமய குரு ஒருவர் எழுதினுர். இங்கிலாந்தில் அரசாங்கம் எளிதிலே அழிக்கமுடியாத அளவிற்கு மதிப்பு மிகுந்திருந்தது. ஆனுல், ஸ்காட்லாந்தில் அவ்வாறு இல்லை. அங்கே இருந்தவையெல்லாம் ஒரு நிலமானியப் பெருங்குடியினரும், ஒறுப்பினுலும் சுயக் கட்டுப்பாட்டினுலும் கருங்கல் போன்ற திண்மையான திருச்சபையொன்றுமாகும். அவற்றேடு வறுமையும் வலிவும்கொண்ட மக்களும், ஜெர்மானிய, ஸ்வீடியப் (Swedish) படைகளில் பணிபுரிந்த படைவீரர்களும் நிறைந்திருந்தனர்.

தம்மை 'வெனிஸ் நகரத் தலைவரின்' நிலைக்குக் கொணரும் சலுகைகள் அளிப்பதற்கு எதிராகவும், பணப் பற்றுக்குறையினுல் இன்றியமையாததாகிய சலுகை அளிப்பதற்கும் இடையே ஊசலாடிய சார்லஸ், தொழுகை நூலைத் தள்ளுபடி செய்தார். மேலும், திருச்சபைக் கூட்டம் கூடுவதற்கு அனுமதியளித்தார். ஆனுல், ஸ்காட்லாந்தியர் அக் கூட்டத்திற்குத் திருச்சபைமீது முழு ஆதிக்கம் இருக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். அதன் அமைப்

பினையும் பிரஸ்பிடீரிய முறைக்கேற்ப வகுத்தனர். நிலக்கிழார்கள், சமயம்சாராத் திருச்சபைப் பணியாளரைத் தேர்ந்தெடுத்தனர். கலப்புற்ற கிர்க் சபைக் கூட்டத்தொடரில் சமய குருமார் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். நவம்பர் மாதத்தில் அரச ஆணையாளரான ஹாமில்டன் விடுத்த ஆணையை எதிர்த்தனர். பிஷப்புகளாட்சி நீக்கப்பெற்றது என்று அறிவித்தனர். 1639 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் ஸ்காட்டியர், பிஷப்புகள், போப் சமயத்தவர் ஆகியோருடன் போர் தொடுப்பதற்கென்று ஆங்கிலேயரை அழைத்தனர். மார்ச் திங்களில் எடின்பர்க் கோட்டையையும் பிற வலிமைமிக்க இடங்களையும் கைப்பற்றினர். மே மாதத்தில் சார்லஸ் தம்முடைய படையோடு பெர்விக் (Berwick) என்னுமிடத்தை வந்தடைந்தார்.

'முழு நிறைத்' திட்டத்தின் குறைபாடுகளைப் போரானது அம்பலப்படுத்தியது. தனியாட்சி அரசாங்கம், கவுன்சிலில் பிளவுகளை ஏற்படுத்தியது. வென்ட்வொர்த் தம்முடைய அயர்லாந்து அரசாங்கத்தைத் தாக்கி, அதன்மூலம் இலாபமடைய எண்ணியவர்களை 'ஆறுப் பசிகொண்ட அரசவையர்' என்றும் 'கயவர்' என்றும் கண்டித்தார். ஹென்ரீட்டா மேரியாவும் இத்தகைய இலாபத்தில் பங்குபெற்றார். அவருடைய செல்வாக்குக் காரணமாக ஹாலண்ட் பிரபு போன்ற தீய அரசவையாளர் பதவி உயர்வு பெற்றனர். மேலும், அரசியார் சுயநலக்காரரான மூத்த வேன் (Vane) உள்துறைச் செயலராக வருவதற்கு உதவி செய்தார். லண்டன் நகரம் பெரும் கடன் தொகை அளிக்க மறுத்த நிலையில், சார்லஸ் தம்முடைய பண்படாத, கலகம் விளைவிக்கும் படையினருக்கு ஊதியம் அளிப்பதற்காகச் சிறிய அளவில் வரும் கப்பல் பணத்தை, அல்லது அரசவையாரும் குருமாரும் அளிக்கும் நன்கொடையை எதிர்பார்க்கவேண்டியிருந்தது. வென்ட்வொர்த்தினுடைய சேனை ஸ்காட்டிய அல்ஸ்டரைக் காவல்புரியவேண்டி இருந்தது. அவர் ஸ்காட்லாந்தில் அமைதியை நிலைநாட்டும் வேலை இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு இருக்குமென்று ஆலோசனை கூறினார். இவையெல்லாம் டன்சி லா (Dunse Law) என்னுமிடத்தில் படைகொண்டு இருந்த ஸ்காட்டியச் சேனைக்கு முற்றிலும் மாறுபட்டதாக இருந்தன. ஸ்காட்டியப் படைகள் 'கிறிஸ்துவின் மணிமுடிக்காகவும் ஒப்பந்தத்திற்காகவும்' என்று பொறிக்கப்பெற்ற நீல நிறக் கொடியின்கீழ் வீறுகொண்டு நின்றனர். ஸ்வீடியப் போரில் அனுபவம்பெற்ற 'கோணல்புத்திகொண்ட கிழச் சிப்பாயான' அலெக்சாந்தர் லெஸ்லி என்பவரின் ஆர்வமிக்க தலைமையில் தயாராக இருந்தனர். முன்னாள் படைத் தலைவர்கள் அவர்களுக்குப் போர்ப்பயிற்சி அளித்தனர். பல குழுக்கள் பணம்

திரட்டின. எடின்பர்க் நகரத்து நங்கையரும் லீத்தில் அரண் அமைக்க அரும்பாடுபட்டனர்.

எனினும், படையெடுப்பினுல் இங்கிலாந்தில் எவ்வித எதிர் விளை தோன்றும் என்பது தெரியாத நிலையில் ஸ்காட்டியர் போரின்றியே தாம் விரும்பியதைப்பெற எண்ணினர். இங்ஙனம், ஜூன் மாதவாக்கில் பெர்விக் உடன்பாட்டைச் செய்து கொண்டனர். இது வஞ்சகமான போர்நிறுத்த ஒப்பந்தமாகவே இருந்தது. இருதரப்பினரும் இதனைப் பயன்படுத்தித் தங்களைப் பலப்படுத்திக்கொள்ள முயன்றனர். சார்லஸ் ஒருசில தெளிவற்ற சொற்றொடர்களைக் கூறுவதைத்தவிர, பிஷப்பின் ஆட்சியை ஒழிக்க ஏதும் முடிவாகக் கூறவில்லை. இஃது ஒன்றே ஹாமில்டன், அரச ஆதரவுக்கட்சியொன்றை அமைக்க மேற்கொண்ட முயற்சியைத் தோல்வியுறச் செய்தது. மேலும், ஆர்கைலுடைய ஆசையின்மீது ஐயங்கொண்டவரும் வன்முறைச் செயல்களால் வருத்தமுற்றோருமான மான்ட்ரோஸ் (Montrose) போன்றவர்களையும் ஒப்பந்தத்தை ஆதரிக்குமாறு செய்தது. ஆனுல், அடுத்த ஆண்டில் ஸ்காட்லாந்தியருடைய செயல், புரட்சியைக் கோடிட்டுக் காட்டியது. அவர்கள் எல்லாக் குடிமக்கள்மீதும் ஒப்பந்தத்தைத் திணித்தனர். சட்டப் பிரபுக்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பாராளுமன்றப் பிரிவுகளுக்கு அளித்தனர். அரசரது கோட்டைகளின் உத்தரவு உரிமை பாராளுமன்றத்திடமே இருக்கவேண்டுமென்று கோரினர். அரச மறுப்பாணை (royal veto) அதிகாரத்தை எதிர்த்துச் சட்டங்களியற்றினர்.

இவ்வாறு போர் நடந்துகொண்டிருந்தபோது சார்லஸ் அயர்லாந்திலிருந்த வென்ட்வொர்த்தை வரவழைத்து, ஸ்ட்ராஃபோர்ட் ஏர்ல் எனும் பட்டத்தை யளித்தார். பாராளுமன்றத்தைக் கூட்ட வேண்டும், கப்பற் பணத்தைக் கைவிடவேண்டும், ஸ்காட்லாந்தில் இறுதிவரை தீவிரமாகப் போர்புரியவேண்டுமென்ற வென்ட்வொர்த்தின் ஆலோசனையை ஏற்றுக்கொண்டார். குறுகிய பாராளுமன்றம் 1640 ஆம் ஆண்டு ஏப்ரல், மே மாதங்களில் மூன்று வாரங்களுக்குமட்டுமே நிலைத்தது. அயர்லாந்திலிருந்து தாராளமாக மானியங்களை ஸ்ட்ராஃபோர்டு எதிர்பார்த்தார். படையெடுப்பு நேர்ந்தால் ஆங்கிலேயரின் நாட்டுப்பற்று, அதிலும் ஸ்காட்டியர் ஃபிரான்சின் உதவியை நாடினர் என்று அறிந்தபோது, பேருதவியாக இருக்குமென்றும் எண்ணினுர். அவரது தவருன எண்ணம் கூடிய சீக்கிரத்திலேயே நீங்கியது. பிம் (Pym), பாராளுமன்றம் கூடிய உடனே முனைந்து செயலாற்றத் தொடங்கினுர். சென்ற பதினொன்று ஆண்டுகளில் நேர்ந்த துன்பங்களை வெளிப்

படுத்தினர். பாராளுமன்றத்தின் தனியுரிமை மீறப்பட்டதை வற்புறுத்திக் கூறினர். திருச்சபைக்கு, போப்சமயத்தின் தன்மையையும் உருவையும் அளிக்கக்கூடிய சமயச் சடங்குகள், பாராளுமன்றத்தின் சம்மதமின்றி விதிக்கப்பெற்ற வரிகள், பாராளுமன்றத்தைக் கூட்டாதிருத்தல் போன்றவற்றை வன்மையாகக் கண்டித்தார். குருமார் திருக்கூட்டம் அளித்த வரியும், பிரபுக்கள் சபையில் அரச ஆதரவாளர் பெரும்பான்மையாக இருந்ததும், காமன்ஸ் சபையினர் தீர்மானத்தை இறுக்கமடையச் செய்தன. மானியம் அளிப்பதற்குமுன் கப்பற் பணம், டன் எடைவரி, பவுண்டுக் கட்டணம், சேனைக்குக் கலன்கள் முதலியவை அளிப்பதற்காக வசூலிக்கப்பெற்ற ' அங்கி, நடத்தைப் ' பணம் ஆகிய குறைகள் நீக்கப்பெறுதல் வேண்டுமென்று தீர்மானித்தனர். சார்லஸ், ஸ்ட்ரா:ஃபோர்டின் யோசனைக்கு மாறாகப் பன்னிரண்டு உதவி மானியங்களைக் கோரினர். பாராளுமன்றம், ஸ்காட்டியர் துன்பங்களைபற்றி விவாதம் நடத்தத் தீர்மானித்தது என்பதை அறிந்தபோது அதனைக் கலைத்தார். இவ்வாறு ஏற்றுக்கொள்ளக் கூடிய இறுதி வாய்ப்பினைச் சார்லஸ் பயன்படுத்திக்கொள்ளாததைப்பற்றிப் பியூரிட்டன் தீவிரவாதிகள் மகிழ்ச்சியடைந்தனர். அவருள் ஒருவராகிய கிராம்வெலின் உறவினரான செயின்ட் ஜான் (St. John) என்பவர் ' நல்லதாவதற்கு முன்னம் மோசமாக இருக்க வேண்டும் ' என்று கருத்துத் தெரிவித்தார்.

நிலைமை வெகு சீக்கிரத்தில் மோசமாயிற்று. பாராளுமன்றம் மானியம் வழங்கத் தவறினல் மக்களுக்கு மன்னிப்பே கிடையாது என்று அரசாங்கத்தினர் வாதாடினர். காபினெட்டில் ஸ்ட்ரா:ஃபோர்டு, மன்னர் மீச்செயலில் இறங்கவேண்டுமென்றும், பாராளுமன்றம் அரசரை ஒரு நெருக்கடியான நிலைமைக்குக் கொண்டுவந்து விட்டதால், அவர் தம்மால் முடிந்ததையெல்லாம் செய்யவேண்டுமென்றும், ஸ்காட்லாந்தை அடக்குதற்கு ஐரிஷ் சேனையைப் பயன்படுத்தவேண்டுமென்றும் வேகத்தோடு பேசினர். அவர் இவ்வாறு பேசியதற்குத் தம் தலையையே அளிக்கவேண்டியதாயிற்று. நம்பிக்கை இழந்த நிலையில், கவுன்சில் கப்பற் பணத்தைக்கொள்ள முனைந்தது. நாணயத்தின் மதிப்பைக் குறைப்பதற்கான விவாதத்தில் ஈடுபட்டது. ரோமிலிருந்தும் ஸ்பெயினிலிருந்தும் உதவி கோரியது. அது லண்டன் நகர வணிகரை அச்சுறுத்திய போதிலும் கடன்கொள்ள முடியவில்லை. சார்லஸ், லாடின் எச்சரிக்கைக்கு விரோதமாக குருமார் திருக்கூட்டம், பாராளுமன்றம் கலைந்த பிறகும் தொடர்ந்து நிலைத்திருக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். அது கண்மூடித்தனமாக நிறைவேற்றிய சட்டங்கள் மக்களின் வெறுப்பைத் தூண்டின. அரசாங்கத்தினர்,

தமக்கு எதிராக எழும் மக்கள் அவர்களுடைய அழிவிற்கே அடிக்கல் நாட்டுகிறார்கள் என்பதை உணர்த்தினர். பலிபீடத்தைச் சுற்றியும் வேலியமைப்பது சரியானது என்றனர். 'பிஷப்புகள், டீன்கள், ஆர்ச்டீகன்கள் முதலானோரைக்'கொண்ட திருச்சபை முறையை எதிர்க்கும் முயற்சி எதிலும் இறங்காதவாறு குருமாரையும், சமயப் பரப்பாளரையும் கட்டுப்படுத்தும் புதிய உறுதிமொழி ஒன்றை உருவாக்கினர்.

எல்லா இடங்களிலிருந்தும் வந்த எதிர்ப்பு, அரசாங்கம் இத்தகைய மூர்க்கமான செயல்களில் இறங்காது தடுத்தது. தொழிற்பயிற்சி பெறுவோர் லாம்பத்தைச் (Lambeth) சூழ்ந்து கொண்டு தொல்லை தந்தனர். சுவரொட்டி விளம்பரங்கள் ராணியாரை அவமதித்தன. தென் கவுன்டிகளில் இருந்து கட்டாயமாகச் சேனையில் சேர்க்கப்பெற்ற சிப்பாய்கள் கலகம் செய்தனர். திவோனைச் சேர்ந்த மக்கள் கத்தோலிக்க அதிகாரி ஒருவரைக் கொலைசெய்தனர். பெர்க்ஷயரைச் சேர்ந்தவரோ எனின், 'நற்செய்திக்கு' (Gospel) எதிராகச் சண்டையிடுவதில்லை எனச் சூளுரைத்தனர். எஸ்ஸெக்ஸில் பலிபீடத்தைச் சுற்றி அமைந்த வேலியைப் பிய்த்து எறிந்தனர். ஊதியம் அளிக்கப்பெறாத நாட்டுப் படையினர் கொள்ளையிட்டனர். 'பெட்லாமிலும் (Bedlam) (பையித்தியக்கார விடுதியிலும்), பிரைட்வெல்லிலும் (Bridewell) (சிறையிலும்) இருக்கத் தகுதிபெற்றோரைப் பத்துக் கட்டளைகளைப் (ten commandments) போற்றுமாறு' போதிக்கவேண்டியிருக்கின்றது என்று உயர்பதவியில் இருந்த திருச்சபையாளர் ஒருவர் அறிவித்தார். யார்க்ஷயரில் சாதாரண மக்களுடைய வீடுகளில் படைவீரரை வைப்பது சட்டத்திற்கு முரணானது என்று எதிர்த்தனர். படையினருக்கு அங்கி முதலானவை அளிப்பதற்காக அரசாங்கம் கோரிய பணத்தைக் கொடுக்க மறுத்தவரைத் தண்டிக்க நீதிபதிகள் தயங்கினர். ஆகஸ்ட் மாதத்தில் சார்லஸ் வடக்கில் அடியெடுத்து வைத்ததும், டைனைக் (Tyne) காக்க நியூபர்ன் என்னுமிடத்தில் கைகலப்பு ஏற்பட்டவுடன் ஆங்கிலப் படையினர் பறந்தோடினர். ஸ்ட்ராஃபோர்டு தோல்வியைக் கண்டு துயருற்றார். போதிய பணம் இன்றி அயர்லாந்து சேனையை அழைத்து வரவும் இயலாது. ஆனால், அவர் அயர்லாந்தில் இல்லாததால் அங்கிருந்து வரும் வருமானமும் சுருங்கியது.

இங்ஙனம், லெஸ்லியின் படை வெற்றிபெற்றதற்கு அப் படை ஸ்காட்லாந்து முழுவதையும் வெற்றிகொண்டதோ அல்லது ஆங்கிலப்படை இழிந்த நிலையில் இருந்ததுமட்டுமோ காரணங்களல்ல. ஆங்கிலேயர் போரிட விரும்பாததுதான் முக்கியக் காரண

மாகும். ஸ்காட்லாந்தியரின் அறிக்கை இங்கிலாந்துப் பாராளு மன்றத்திற்கு வேண்டுதல் விடுத்தது. தலையாய பிரபுக்கள் பன்னிருவர் இரு சபைகளையும் கூட்டிச் சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்று அரசருக்கு விண்ணப்பம் விடுத்தனர். 10,000 லண்டன் நகர மக்கள் அவர்களுக்கு ஆதரவாக நின்றனர். அரசர் செப்டம்பர் மாதத்தில் யார்க்நகரில் பிரபுக்களின் சபையொன்றைக் கூட்டியபோது, பக்கிங்காமின் எதிரியான பிரிஸ்டல் என்பவர் பிரபுக்களுக்குத் தலைவராக வந்தார். அவர், மன்னர், மக்களுடைய ஆதரவை இழந்துவிட்டதாகவும், பாராளுமன்றத்தைக் கூட்டுவது தான் ஒரே வழியென்றும் கூறினர். ஸ்ட்ராஃபோர்டு ஒருவர்தான் விட்டுக்கொடுக்க விரும்பவில்லை. வடபகுதி மக்களை அவர்களின் பரம்பரைப் பகைவரான ஸ்காட்லாந்தியருக்கெதிராகத் தூண்டி விடவேண்டுமென்றும், அல்ஸ்டரில் உள்ள ஸ்காட்டியரை ஐரிஷ் கத்தோலிக்கரைக்கொண்டு விரட்டவேண்டுமென்றும் உறுதி கொண்டார். ஆனால், ஸ்காட்டியரின் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளவேண்டியதாயிற்று. உடன்படிக்கை ஏற்படும் வரையில் நார்த்தம்பர்லண்டையும், டர்ஹாமையும் வைத்திருக்க அவர்கள் அனுமதிக்கப்பெற்றனர். இதற்கிடையில் அவர்களுடைய படை களுக்காக நாளொன்றுக்கு 850 பவுன் ஆங்கிலேயர் அளிக்க வேண்டும். சார்லஸ், தாம் கூட்டுவதாக வாக்களித்த பாராளு மன்றத்திடம் இப் பணத்தை அளிப்பதற்காகச் சிபாரிசு செய்ய வேண்டும்.

நவம்பர் மாதம் மூன்றும்நாள் நீடித்த பாராளுமன்றம் கூடிய போது, ஆற்றல் குறைந்து அழிவுப் பாதையை நோக்கிநின்ற அரசாங்கம், பிரதிநிதித்துவம் மிகுந்து நன்கு அமைக்கப்பெற்ற எதிர்க்கட்சியைச் சந்திக்கவேண்டியிருந்தது. பிம், இக் கட்சியின் மையமாக விளங்கினர். அவரும் ஹாம்டனும் தங்கள் ஆதர வாளர்களையும், குறுகிய பாராளுமன்ற உறுப்பினரில் பெரும் பான்மையோரையும் தேர்ந்தெடுக்குமாறு வாக்காளரைத் தூண் டினர். அவர்கள் ஸ்காட்டிய அயர்லாந்திய எதிர்க்கட்சியினரோடு இணைந்து தங்களது திட்டத்தினை உருவாக்கினர். அதன்படி ‘எரி மூட்டுபவரை’ (incendiaries) தண்டிக்கவேண்டுமென்றும், சென்ற பத்து ஆண்டுகளில் நிகழ்ந்தவை திரும்ப நிகழாதுபோவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமென்றும் திட்டமிட் டனர். வெஸ்ட்மினிஸ்டர் மண்டபத்தின் பின்னல் இருந்த பிம்மின் விடுதியில், மனக்கொந்தளிப்பும் மனக்கசப்பும் மிகுந்த ஒப்பற்ற தலைவர் பலர் ஒன்ருக இணைந்திருந்தனர். அவர்களில், இறந்த எலியட்டிடம் பற்றுறுதிகொண்ட ஹாம்டன் அரசியல்வாதிகளை ஒன்றுபடுத்தும் ஒப்புயர்வற்ற திறனும், தமது பக்கிங்காம்ஷயர்

குடியானவர்களைத் தூண்டிவிடும் ஆற்றலும் ஒருங்கே பெற்றவர். ஒரு காலத்தில் கப்பற் பண வழக்கில் அவருடைய ஆலோசகராக இருந்த செயின்ட் ஜானும், எலியட்டுடன் துயருற்ற ஹேலஸ் என்பவரும் அங்கே இருந்தனர். அவர்களோடு நியூ இங்கிலாந்து ஜனநாயகத்தில் பங்குபெற்ற இளைய வேனும், பியூரிட்டன் நார்த் தாம்டன்ஷயரில் செல்வாக்கு மிகுந்த சேயி பிரபுவின் மகனுரான ஃபியன்னஸ் (Fiennes) என்பவரும் இருந்தனர். இவர்களேயன்றி, 1628ஆம் ஆண்டிலிருந்து அமைதியான உறுப்பினராக இருந்த கிராம்வெலும் பிம்மோடு இணைந்துகொண்டார். காமன்ஸ் சபையில் இருபதின்மர்க்கு மேற்பட்ட உறுப்பினர் அவரது உறவினர். மிட்லண்டில் பியூரிட்டன் குடியானவர்களுக்காக அடைப்புமுறையையும் லாடின் சமய குருமாரையும் எதிர்த்துப் போராடியதால், அவர்களிடையே மிகுந்த புகழும் செல்வாக்கும் பெற்றிருந்தார்.

அழிவு வேலை நீடிக்கும்வரை பிம்மைவிட மேலான தலைவரைக் காண்பது அரிது. அவர் வளர்ந்துவரும் காமன்ஸ் சபையின் அமைப்போடு வளர்ந்தவர். தம்முடைய புரட்சித் திட்டங்களைப் பழைமை சார்ந்தவை என்று பூசி மெழுகியபோதிலும், தீப்பொறி பரக்கும் சொற்பொழிவாற்றும் திறம்படைத்தவர். சூழ்ச்சிகளைக் கொள்கைபோன்று கையாளும் குணத்தினர். ஒரு வாழ்க்கைப் போராட்டத்தில் இறங்கியிருப்பதாக எண்ணிய அவரது பெரும் பான்மைக் கட்சியினர் எதிலும் விடாப்பற்று கொண்டிருக்கவில்லை. தங்களை எதிர்த்த உறுப்பினரைத் தனியுரிமையாளர் என்னும் சாக்கில் வெளியேற்றினர். திவோன், தொழில் வளமிக்க யார்க் ஷயர் போன்ற தமக்கு ஆதரவாக இருக்கும் பகுதிகளில் புதிய பரோ ஸ்தானங்களை உண்டாக்கினர். ஸ்ட்ரா:ஃபோர்டிற்குச் சாதகமாகச் சாட்சி சொல்லவந்த ஐரிஷ்காரரை அடைத்து வைத்தனர். காமன்ஸ் சபை உறுப்பினர் மக்களிடமிருந்து விண்ணப்பங்களை வரவேற்றனர். லாடின் கொடுமைக்குள்ளான பிரைன் போன்றவருக்கு வீரர்ந்த வரவேற்புகளை வழங்கினர். போப் சமயத்தவர் தங்கள் கழுத்தை வெட்டக் காத்திருந்தனர் எனும் கட்டுக்கதையை ஓயாது கூறிவந்தனர். லண்டன் நகரம் அளித்த படைக்கலந் தாங்கிய பாதுகாவற் படையினை யேற்றுக் கொண்டனர். தங்களுக்கு அவ்வித உரிமை இல்லாதவிடத்தும் 'கடமையில் தவறியவர்'களைத் தங்கள்முன் கொண்டுவரப்பட வேண்டுமென்றனர். டர்ஹாமில், போப் சமயச் சடங்குகளைப் புகுத்திய கோசின் (Cosin) போன்ற உயர் திருச்சபையினரைக் குறுக்குக் கேள்விகள் கேட்டுத் துன்புறுத்தினர். மாஜிஸ்ட்ரேட்டு களைப் பதவியிலிருந்து நீக்கினர். பியூரிட்டன்கள் நிறைந்த சாமர்

செட்டில் இருந்த பெக்கிங்டன் (Beckington) என்னுமிடத்தில் வாழ்ந்த மக்கள் முன்னாளில் எவ்வாறு தாங்கள் பலிபீடத்தை எதிர்த்தபோது சிறையிலடைக்கப்பெற்றனர் என்பதைப்பற்றிக் கூறினர். அதோடு தாங்கள் பாராளுமன்றத்தைப்பற்றிப் பேசிய போது பாத், வெல்ஸ் ஆகியவற்றின் பிஷப் 'வானம் வீழ்கின்ற போது வானம்பாடிகளைப் பிடிக்கலாம்' என்று கிண்டல் செய்ததைப்பற்றியும் கூறினர். ஆனால், இப்போது அத் 'தீய பாதிரியே' கடமையில் தவறியவராகக் காமன்ஸ் சபையினர்முன்னே கொண்டு நிறுத்தப்பெற்றார் என்று அச் சபையின் நாட்குறிப்பாளர் கூறுகின்றார்.

இவ்வாறு பாராளுமன்ற உறுப்பினர் பயன்படுத்திக்கொண்ட அச்சம் முழுதும் ஆதாரமற்றதன்று. ஏனெனில், வடக்கில் சம்பளம் சரிவரப்பெறாது ஸ்காட்டியரிடம் பகைமைகொண்டு இருந்த அரசர் படை இருந்தது. அதில் பல கத்தோலிக்க அதிகாரிகளும் இருந்தனர். ஐரிஷ் சேனை இன்னும் கலைக்கப்படவில்லை. அயல் நாடுகளிலிருந்து கூலிப்படைகளைக் கொள்ளவேண்டுமென்ற எண்ணம் சார்லஸிடம் காணக்கிடந்தது. ராணியாரின் வட்டாரத்தில் தீவிரத் திட்டங்கள் தீட்டப்பெற்றன. மேலும், இளைய வேன், தமது தந்தையார் மே மாத காபினெட் கூட்டத்தில் எடுத்த குறிப்புகளைக் கொண்டுவந்து பிம்மிடம் அளித்தார். அவைகளில் இருந்து ஸ்ட்ரா:ஃபோர்டைத் தாக்குவதற்கான செய்திகள் கிடைத்தன. உதாரணமாக, அவர் அக் கூட்டத்தில் அரசர் 'அரசாங்க விதிகளில் இருந்து விடுபட்டவர்' என்றும், நாட்டை அடக்குவதற்கு அயர்லாந்துப் படையைப் பயன்படுத்தலாம் என்றும் ஆலோசனை கூறினார். காமன்ஸ் சபையின் முதல் விவாதத்தில் பல துன்பங்கள் வெளியாயின. 'சட்டத்தையும் சமயத்தையும் மாற்றும்' சதி ஒன்று நடந்ததும் அம்பலமாகியது. இதற்கிடையில் எதிர்க்கட்சியினர் ஸ்காட்டியரோடு சூழ்ச்சிசெய்தனர் என்ற குற்றச்சாட்டினை ஸ்ட்ரா:ஃபோர்டு கொண்டுவந்தார். தற்செயலாக அம் முயற்சி தோல்வியுற்றது. அதைத்தொடர்ந்து பிம் தீவிர நடவடிக்கை எடுக்கத்தொடங்கினார். நவம்பர் மாதம் பதினோரும் தேதியன்றே காமன்ஸ் சபையினர் மூடிய கதவுகளுடன் ஸ்ட்ரா:ஃபோர்டு மீதான அரசத் துரோகக் குற்றச்சாட்டு ஒன்றைத் தயாரித்தனர்.

பிரபுக்கள் ஸ்ட்ரா:ஃபோர்டைப் பின்வாங்குமாறு ஆத்திரத்தோடு கூக்குரலிட்டதும், அவரைக் காவலில் வைத்ததும், ஒரு பேருண்மையை வெளிப்படுத்துவதாக இருந்தது. இந்தப் பாராளுமன்றம் பாதிக்குமேற்பட்ட திட்டங்களில் ஒருமுகமாக இருந்தது. எதிர்காலத்தில் அரசப் படைகளின் தலைவர்களாக வந்தவர்கள்

அடுத்த ஆறு மாதங்களில் கொண்டுவரப்பெற்ற சட்டங்கள் பல வற்றிற்கும் காரணமாக இருந்தனர். டிக்பி (Digby) என்பவர் ஸ்ட்ரா∴போர்டைக் 'கொள்கை துறந்த பெரியவர்' என்று குறிப் பிட்டார். கப்பற் பணத்தை ஒழிப்பதற்கு, ஹாப்டனும் (Hopton) ∴பாக்லண்டும் (Falkland) பாடுபட்டனர். ஸ்டார் சேம்பர், உயராணை நீதிமன்றம், வட கவுன்சில் ஆகியவற்றை அழிப்பதற் கான சட்டங்கள் கொண்டுவர ஹைடு (Hyde) உதவினர். மூவாண்டுச் சட்டம் எதிர்ப்பின்றியே ஏற்றுக்கொள்ளப்பெற்றது. அதன்படி, அரசர் சம்மதித்தாலும் சம்மதிக்காவிட்டாலும் மூன்றுண்டு இடைவெளிக்குப் பிறகு பாராளுமன்றம் கூட வேண்டும். டன் எடை வரி, பவுண்டுக் கட்டணம் ஆகியவற்றை ஒழிக்க வந்த மசோதாக்களும் நிறைவேறின. லாட், அரசத் துரோகக் குற்றம் சாட்டப்பெற்றதையும், உள்துறைச் செயலர் விண்ட்பாங்க் (Windebank) என்பவர் கடல் கடந்து ஓட்ட மெடுத்ததையும், அவரோடு கப்பற் பணத் தீர்ப்பு அளித்த அரச முத்திரைப் பிரபுவான ∴பிஞ்ச் (Finch) என்பவர் சென்றதையும் மிதவாதிகள் மகிழ்ச்சியோடு வரவேற்றனர்.

எனினும், இவ்வாறு நிறைவேறிய சட்டங்களின் தொகுப்பு உரிமைகள் விண்ணப்பத்தைப்போன்று எதிர்மறையானவையே. தனிச்சிறப்புரிமை தவருகப் பயன்படுத்தப்பெறுவதைத் தடுத்து, ஸ்டார் சேம்பர் நீதிமன்றத்தின் விரிவடைந்த அதிகார எல்லைக்கான காரணங்கள் 'இப்போது காணப்பெறவில்லை' என்று அறிவித் ததன்மூலமாக, சட்டத்தில் டியூடர்காலத் தலையீட்டினைத் திருத் தியது. ஆனல், அரசரை மூவாண்டு பாராளுமன்றத்திற்குக் கட்டுப்படுத்தியதைத் தவிர இறைமையை நிர்ணயிப்பதில் எவ்வித முன்னேற்றமும் காணவில்லை. மறுப்பாணை (veto), முதற்படி, அமைச்சரைத் தேர்ந்தெடுத்தல், படைகளின் தலைமை ஆகிய அனைத்தும் அரசரிடமே விடப்பட்டன.

தீர்வு காணுது விடப்பெற்ற ஒன்று ஸ்ட்ரா∴போர்டு வழக்கில் முன் நிறுத்தப்பெற்றது. 1641ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் தான் ஸ்ட்ரா∴போர்டின் வழக்கு வெஸ்ட்மினிஸ்டர் மண்டபத்தில் துவங்கியது. அணியணியாக இருக்கையில் அமர்ந்த மக்கள் வெள்ளத்திற்கு முன்னுல், உரையாடல், உணவுப்பொருள், மது பாட்டில்கள் ஆகியவற்றினிடையே ஸ்ட்ரா∴போர்டு தம்முயிருக்காக மூன்று வாரங்கள் போராடினுர். இதைப்போன்ற போலி வழக்கு வேறெதுவுமில்லை எனலாம். காமன்ஸ் சபையினர் சாட்சிகளையும், வழக்கறிஞரையும், பிரபுக்களையும் அச்சுறுத்தினர். அவர்மீது சாட்டப்பெற்ற குற்றங்கள் ஒன்றுக்கொன்று முரணுனவை;

குழப்பம் மிகுந்தவை. கார்க் பிரபுவைப்போன்ற ஐரிஷ் பிராட்டஸ்டென்ட் கழுகுகள் அல்லது ஐரிஷ் கத்தோலிக்கர் போன்ருேருடைய பேச்சுகளிலிருந்து கண்டபடி சேகரிக்கப்பெற்ற செய்திகளே அவைகள். ஆனுல், இவைகளில் எவையும் அரசத் துரோகக் குற்ற மல்ல. இக் குற்றச்சாட்டில் மிக முக்கியமானதாக இருந்தது அவர் இங்கிலாந்தை அடக்க ஐரிஷ் படையைக் கொண்டுவரத் திட்டமிட்டது என்பதுதான். இக் குற்றச்சாட்டு வேனைத் தவிர மற்ற எல்லாக் கவுன்சிலர்களாலும் மறுக்கப்பெற்றது. இந்த அரசத் துரோகக்குற்ற வழக்கில் அழைக்கப்பெற்ற இரு சாட்சிகளும் உண்மையில் ஒன்றே. அதாவது மூத்த வேனுடைய இடையே தடைபடும் ஞாபகமும், அவருடைய மகனுல் தூக்கிச்செல்லப் பெற்ற அவருடைய குறிப்புகளுமாகும். மூன்றும் எட்வர்டின் சட்டப்படி அரசத் துரோகம் என்பது அரசருக்கு எதிரானதாக இருக்கவேண்டும். அதனுல், சட்டமுறைப்படியான அரசத் துரோகக் குற்றத்தை நிரூபிக்க முடியவில்லை. எனவே, பிம் பாராளுமன்றத்தின் பெரும்பான்மையினர் விளக்கும் எக் குற்றமும் அரசத் துரோகக் குற்றமாகலாம் என்ருர். சிறுசிறு குற்றங்களும் ஒன்று திரண்டு அரசத் துரோகக் குற்றமாகலாம் என்று வாதாடினுர். சான்றிற்குப் பதிலாகத் 'தீய நோக்கை' (ill intent) எடுத்துக்கொள்ளவேண்டுமென்ருர். ஸ்ட்ரா:ஃபோர்டு பேராற்றல் மிகுந்த சொற்பொழிவுகளின் துணைகொண்டு இத் தகைய விளக்கங்களையெல்லாம் இருந்த இடம் தெரியாமலடித்தார்.

தன்னிச்சையானது என்று எண்ணப்பெற்ற சட்டத்தைக் காட்டிலும் ஒருதலை முடிவான அரசத் துரோகக் குற்றம் மோசமானது அல்லவா? என்று கேட்டார். 'கொல்லும் கலையில் உங்களுடைய முன்னேரைவிடத் திறமைகொண்டவராக ஆவதற்கு ஆசைகொள்ளவேண்டாமென்று' உறுப்பினரை எச்சரித்தார். கவுன்சிலர் வாக்குறுதியின்மீது தரப்படும் கருத்துகளைப் கட்டாயத்தின்பேரில் பெறுவதாலுல் 'நீங்களும், உங்களுடைய பண்ணைகளும், உமது மரபினரும் ஆபத்திற்குள்ளாவீர்கள்' என்று அனுதாபம்கொண்ட பிரபுக்களை எச்சரித்தார். அயர் லாந்தின் துணைத் தலைவருடைய அதிகாரத்தைக் குலைத்து அந் நாட்டை இழந்துவிடவேண்டாமென்று ஆங்கிலேயரை எச்சரித்தார். மறுபடியும், அரசரிடம் நம்பிக்கைவேண்டுமென்றும், அவர் நெருக்கடி காலத்தில் பொதுநிலைமீறிய வழிகளைப் பின் பற்றுவது நேர்மையானது என்றும் வாதாடினுர். அதேசமயத்தில் சாதாரண காலங்களில் தனிச் சிறப்புரிமையையும், சுதந்திரத்தையும் சமநிலையில் நிறுத்துதற்கும் பாராளுமன்றத்தைப் பயன் படுத்திக்கொள்ளவேண்டுமென்பதையும் ஏற்றுக்கொண்டார்.

சட்டமுறை சார்ந்த கழுவாய் கிடைக்கப்பெருத காமன்ஸ் சபையினர் தங்களுடைய அதிகாரத்தைப் பயன்படுத்தினர். ஏப்ரல் மாதத்தில் அரசியல் துரோக மரணதண்டனைச் சட்டத்தை (Act of Attainder) நிறைவேற்றினர். அரசியாரின் சேனையிலிருந்த நண்பர்கள் சதிசெய்ய முனைந்து இருந்தார்கள் என்றும், டவர் கோட்டைச் சிறையைக் கைப்பற்றும் திட்டம் இருந்தது என்றும் அறிந்த லண்டன் நகர மக்கள் பீதியடைந்தனர். பல்லாயிரக்கணக்கானவர்—பலர் படைக்கலம் ஏந்தியவர்—ஒயிட்ஹாலை வளைத்துக்கொண்டு 'நீதி நிலைநிறுத்தப்பெறுதல் வேண்டுமென்றும், ஸ்ட்ரா:ஃபோர்டின் மரணதண்டனை நிறைவேற வேண்டுமென்றும்' கூக்குரலிட்டனர். தங்கள் விருப்பத்திற்குகந்த உறுப்பினர்களைப் பார்த்து, 'உம்மைக் கடவுள் காப்பாற்றுவராக' என்று வாழ்த்தினர். ஆனால், அதேசமயத்தில் காமன்ஸ்.சபையின் சிறுபான்மை உறுப்பினரை 'ஸ்ட்ரா:ஃபோர்டியர்கள் நாட்டைக் காட்டிக்கொடுப்பவர்கள்' என்று தூற்றினர். அரசியார் :ஃபிரான்ஸிற்கு ஓடிவிட எண்ணியதாகவும், அங்கே படைகளின் நடமாட்டம் இருந்ததாகவும் தெரிந்தது. சார்லஸ் எல்லா முக்கிய மசோதாக்களுக்கும் இணங்கியபோதிலும், அயர்லாந்துச் சேனையைக் கலைக்கமறுத்தார். பிரபுக்கள் சபையில் தலையிட்டு ஸ்ட்ரா:ஃபோர்டிற்கு எதிராக இருந்த அரசியல் துரோக மரணதண்டனைச் சட்டத்தைத் தாம் ஏற்றுக்கொள்ளப்போவதில்லையென்று அறிவித்தார். சிறிது காலத்திற்கு எதிர்க்கட்சியினரிடையே பிளவை ஏற்படுத்த முயற்சி மேற்கொள்ளப்பெற்றது. ஸ்ட்ரா:ஃபோர்டைக் கொல்லாமல் வேறு தண்டனை அளிப்பது எனும் அடிப்படையில் சமாதான முயற்சியும் எழுந்தது. பிம்மிற்குப் பதவி அளிப்பதாகப் பேச்சும் இருந்தது.

ஆனால், பிம், ஸ்ட்ரா:ஃபோர்டின் உயிரை வாங்குவதென்று உறுதிபூண்டார். ஸ்ட்ரா:ஃபோர்டின் கொள்கை இங்கிலாந்தை அடிமை நாடாக்கியிருக்கும் என நம்பினர். அச்சமும் ஆத்திரமும் காமன்ஸ் சபையினரைத் தீவிரவாதிகளின் பிடியில் சிக்கவைத்தன. 'இறை ஆடுகள்' தலையிலடித்து வீழ்த்தப்படலாமென்று செயின்ட் ஜான் மூர்க்கமாக வாதாடினர். மரணதண்டனை மசோதா சபைக்கு வந்தபோது 200 உறுப்பினர்கள் வரவில்லை. வந்திருந்தோரில் 204 உறுப்பினர் அதனை ஆதரித்தும், 59 பேர் எதிர்த்தும் வாக்களித்தனர். அதனோடு நாட்டு மக்களுக்கு ஒரு வேண்டுகோளும் இணைக்கப்பெற்றது. மக்கள், பிராட்டஸ்டென்ட் சமயத்தைப் பேணுவதாக வாக்குறுதி அளிக்கவேண்டுமென்றது. மேலும், அப்போதிருந்த பாராளுமன்றத்தை அதனுடைய அனுமதியின்றிக் கலைக்கக்கூடாது என்பதற்கான ஒரு சட்டத்தையும் அதனோடு இணைத்தது. சார்லஸின் தலையீடும், படையினரின் சதிகளும்

பிரபுக்கள் சபையில் இருந்த நடுத்தரக் கட்சியைச் சிதைத்தன. கத்தோலிக்கப் பிரபுக்கள் பயமுறுத்தப்பெற்றனர். இச்சமயத்தில் செல்வாக்கு மிகுந்த மிதவாத பியூரிட்டரான பெட்ஃபோர்டும் இறந்தார். எஸ்ஸக்ஸ், 'செத்த கல்லிற்குச் சிநேகிதர் யாருமில்லை' எனும் தமது கருத்துரைக்கேற்ப வாளாவிருந்தார். நாட்டுப்பற்று, நம்பிக்கை இழந்த நிலை ஆகிய காரணங்களால், பிரபுக்கள் எதிர்க் கட்சியினரின் விருப்பத்திற்குப் பணிந்தனர். அரசரும் தம் மனைவி, மக்களின் பாதுகாப்பை எண்ணி விட்டுக்கொடுத்தார். ஏனெனில், அப்போது துறைமுகங்களெல்லாம் மூடப்பெற்றன. அதோடு இந்த மசோதாக்களைக் கொணர்ந்தபோது ஆயுதம் தாங்கிய மக்கள் கூட்டத்தினர் ஏராளமாக வந்திருந்தனர். மே மாதம் 10 ஆம் தேதி அரசர் இரு மசோதாக்களுக்கும் சம்மதம் தெரிவித்தார். 12ஆம் தேதி ஸ்ட்ராஃபோர்டின் தலை துணிக்கப்பெற்றது. மானிடப் பூசல்களில் மக்களுக்காக ஒருவன் இறக்கவேண்டுமெனும் நியதி நிறைவேறவேண்டுமாயின், பழைய அரசாங்கம் ஸ்ட்ராஃபோர்டைவிட மேலான பலியை அளித்திருக்கமுடியாது.

பாராளுமன்றம் புதிதாக இறைமைத் தன்மை பெற்று விளங்கியது என்பது மரணதண்டனைச் சட்டத்தில் இருந்து குறிப்பாக உணரப்பெற்றது. இப்படி இறைமைத் தன்மை வந்ததால் பாராளுமன்றத்தின் ஒற்றுமை குலைந்தது. மற்ற எல்லாவற்றையும்விட அதிகமாகப் போற்றிய சமயத்தில் பாராளுமன்ற உறுப்பினரிடையே ஒருவித ஒற்றுமை உணர்வு இருந்ததற்கு, போப் சமயச் சடங்குகள் வந்துவிடும் என்ற அச்சமும், பிஷப்புகளிடம் கொண்ட பகைமையும் காரணங்களாக இருந்தன. இங்ஙனம், லாட், நார்விச்சைச் சார்ந்த ரென் (Wren of Norwich), பலிபீட வேலிக்கு வராதவர்களுக்குத் திருவிருந்து அளிக்கமுடியாது என்ற குருமார்கள் ஆகியோருக்கு எதிராகக் குவிந்த விண்ணப்பங்களைக் காமன்ஸ் சபையினர் வரவேற்றனர். உயராணை நீதிமன்றங்கள் அழிக்கப்பட்டபோது, யாரும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. ஃபாக்லண்டும், மிதவாதிகள் பலரும் பிஷப்புகளின் நீதிமன்றங்களுமே, அரசியல் செல்வாக்கும் அற்றநிலையில் இருந்த பண்டைக்காலத்தைச் சார்ந்த பிரபுக்களாட்சிக்காக வாதாடினர்.

ஆயினும், கிறிஸ்துமஸ்ஸிற்கு முன்பு யாவரும் லாடின்மீது அரசத் துரோகக் குற்றம் சாட்டவேண்டுமென்று ஒப்புக்கொண்டனர். ஆனால், அதன்பிறகு பிஷப்புகளை நீக்கவேண்டுமென்று நீண்ட விண்ணப்பம் ஒன்று லண்டனிலிருந்து வந்தது. ஃப்ளீட் தெருவில் செல்வாக்குப்பெற்றிருந்த பார்பன் (Barbon) என்பவரைப்போன்ற சமயம் சாராதவர், மூர்க்கத்தனமான பிரசாரங்களில் ஈடுபட்டனர். ஸ்காட்லாந்திற்கு மிகுதியாகப்

பொருள் சென்றதால் நாட்டுமக்கள் சினங்கொண்டனர். ஸ்காட்டியர் பிரஸ்பிடீரியச் சமயத்தை இங்கிலாந்தின்மீது திணிக்க முயன்றது பல ஆங்கிலேயரிடம் வெறுப்பை உண்டாக்கியது. பாராளுமன்றச் சொற்போரும், கவுன்டிகளிலிருந்து வந்த விண்ணப்பங்களும், குருமாரையும் சமயம் சாராக் கோயில் பணியாளரையும் மக்கள் வெறுத்தனர் என்பதை வெளிப்படுத்தின. லாடிற்கு எதிரான அரச ஆதரவாளர் ஒருவர் 'திருச்சபையில் சமநிலை ஏற்படுத்துவோமானல், நாட்டிலும் சமநிலை ஏற்படவேண்டுமென்று' கூறியதை ஒத்த உணர்வையும் அவர்கள் வெறுத்தனர். செல்டனும் வழக்கறிஞரும் சமயம் சார்ந்தோரின் ஆதிக்கத்தை வெறுத்தனர். பிம்மும் ஹாம்ப்டனும் நுண்நயம் படைத்தவர் என்ற காரணத்தால் ஸ்ட்ரா:போர்டு இறக்கும் வரையில் பிஷப்புகள் ஆட்சியைப்பற்றிய பூசலை எழுப்பி, தங்களுடைய பெரும்பான்மைக் கட்சியைப் பிளந்துவிடக்கூடாது என நினைத்தனர். எனவே, பிஷப்புகளைப் பிரபுக்கள் சபையிலிருந்து நீக்கவும், சமயம் சார்ந்தவரைப் பொதுவாகச் சமயம் சாராப் பதவிகளினின்றும் நீக்கவும் ஒரு மசோதாவைக் கொண்டு வருவதைத்தவிர வேறு ஒன்றும் செய்யவில்லை.

லாடின் பரமவைரியும், முன்னாள் அரச முத்திரைக் காப்பாளருமான வில்லியம்ஸ் (Williams) என்பவரும், அர்மாக்கின் தலைமை குருவான கால்வினிஸச் சமயத்தைச்சார்ந்த உஷர் என்பவரும் சமாதான ஏற்பாடு ஒன்றை உருவாக்கினர். அதன்படி சமய குருமார், பிஷப்புகளுக்கு அவர்களுடைய பணிகளைச் செய்வதற்கு உதவியாக இருக்கவேண்டும். இந்த ஏற்பாட்டைப் பிரபுக்கள் சபையில் பெரும்பாலோர் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்தனர். ஆனல், அவர்கள் சமயப் பிரிவுகளின்மீது ஆத்திரங்கொண்டு, பிஷப்புகளைத் தங்கள் சபையிலிருந்து நீக்குதற்காக வந்த மசோதாவை நிராகரித்தனர். இதனல், வேன், கிராம்வெல், செயின்ட் ஜான் ஆகியோரின் தலைமையில் இயங்கிய 'வேரோடழிக்கும்' கட்சியினர், மாற்று மசோதா ஒன்றைக் கொண்டுவருவதற்கு ஊக்கம்பெற்றனர். அதன்மூலம், பிஷப்புகளாட்சியை அடியோடு ஒழிக்கவேண்டுமென்று விதித்தனர். அதேசமயத்தில் சார்லஸ் ஸ்காட்லாந்தில் தமக்கு ஆதரவான கட்சியொன்றைத் திரட்டும் திட்டத்தோடு அந் நாடு செல்லுகின்றார் என்பதைப் பிம் உணர்ந்தார். அதற்குமுன்பே ஸ்ட்ரா:போர்டின் மரணதண்டனையினலும், திருச்சபைமீது வந்த தாக்குதல்களினலும் மனம் மாறுபட்ட ஹைடையும், டிக்பியையும் அரசர் தமது பக்கத்திற்கு ஈர்த்துக்கொண்டார் என்பதையும் பிம் அறிவார். இங்ஙனம், இரு நாடுகளிலும் சமயம் போட்டிக் கட்சிகளைத் தோற்றுவித்தது.

ஆர்கைல் பிரிவினர் மான்ட்ரோஸைக் (Montrose) கைது செய்தனர். சேனையின் புதுச் சதியைப்பற்றிய வதந்தி வெஸ்ட் மினிஸ்டரை எட்டியது. அதேசமயம் பிம், வேரோடு அழிக்கும் மசோதாவைக் கொண்டுவந்தார். அஃது ஆங்கிலேயரின் உணர்ச் சிக்குப் பொருத்தமான முறையில் திருத்தி யமைக்கப்பெற்றது. திருச்சபையில் அதிகார வரம்பு ஒன்பது ஆணையாளரிடம் ஒப்படைக்கப்படுதல் வேண்டுமென்று விதித்தது. காமன்ஸ் சபையினர் 'தீய ஆலோசகரை' நீக்கவேண்டுமென்றும் கோரினர். நாட்டினர் யாவரும் 'மறுத்துரைத்தலில்' (Protestation) கையொப்ப மிடவேண்டுமென்று கூறினர். பிரபுக்கள் சபையினர் ஏற்க மறுத்தபோது அதனைத் தொகுதிகளுக்கு அனுப்பினர். அஃது உண்மை இஸ்ரேலியரைக் கண்டுபிடிக்க உதவும் சோதனைமுறை போன்றது (shibboleth) என்று கூறி அதனை ஆதரித்தனர். அரசரது ஸ்காட்லாந்துப் பயணத்தினாலும், அரசியாரின் செயல்களி னாலும், ஐயங்கொண்ட இரு சபையினரும் இராணுவப் பாதுகாப்பு முறைகளைப்பற்றி ஆராயத் தொடங்கினர்.

தாம் சம்மதமளித்த சட்டங்களைச் சார்லஸ் அழிக்க முயன்றார் என்பதற்குக் காரணமேதும் இல்லை. ஏனெனில், அவர் ஆங்கிலப் படையையும் ஐரிஷ் படையையும் கலைத்தார். போப்பின் தூதனை நீக்கினார். தெற்கில் படைத் தலைமையை எஸ்ஸக்ஸிடமே விட்டு வைத்தார். எனினும், அதற்குமேலும் சலுகைகளைக் கோரியதை எதிர்த்தார். ஆர்கைலின் இறுமாந்த அதிகாரத்தினால் வெறுப் படைந்த ஸ்காட்டியப் பெருங்குடியினரின் ஆதரவைப்பெற முடியும் என நம்பினார். அதைப்போலவே, ஸ்காட்டிய மக்களின் சமய ஏற்பாட்டினை ஏற்றுக்கொள்வதன்மூலமாக அவர்கள் பழங் காலத்தில் கொண்டிருந்த பற்றுறுதியைத் திரும்பப்பெறமுடியும் என்றும் நம்பினார். இங்கிலாந்தில் தோன்றிய உண்மையான எதிர்வினை அவரது நம்பிக்கையை வளர்த்தது. டியூடர் காலத்தில் வந்து சேர்ந்தவை நீங்கி, எஞ்சியிருந்த தனிச்சிறப்புரிமைகள் அசைக்கமுடியாதபடி சட்டத்தில் இருந்தன. பிரபுக்கள் சபையி லிருந்த பெரும்பான்மையினர், பிஷப்புகளையும் கத்தோலிக்கப் பிரபுக்களையும் நீக்கத் தயாராக இல்லை. செம்மான்களையும் (cobblers) பெண் பிரசாரகர்களையும் அடக்கம்மிகுந்த லண்டன் நகர மாந்தர் வெறுத்தனர். அதைப்போலவே மக்கள் கூட்டமாக வந்து, சமய குருவைக் கண்டபோது அவருடைய வெண்ணிற நீள் அங்கியைக் கிழித்தெறிந்து, 'கான்டர்பரியின் பையன்' என்று ஓலமிட்டதையும் விரும்பவில்லை. செப்டம்பர் மாதத்தில் சமயம் ஒரு முட்டு நிலையைத் தோற்றுவித்தது. எவ்வாறெனின், அப்போ திருந்த வழிபாட்டுமுறையைக் குலைக்கக்கூடாது என்று பிரபுக்கள்

சபையினர் ஆணைகள் பிறப்பித்தனர்; அதே சமயத்தில் காமன்ஸ் சபையினர் பலிபீடங்களை அகற்றவேண்டுமென்றும், விடுமுறை நாளன்று விளையாட்டுகள் நிறுத்தப்படவேண்டுமென்றும் உத்தர விட்டனர்.

ஒன்றற்கொன்று தொடர்பற்ற இரு நிகழ்ச்சிகளின் விளைவாக அச்சமும் அதன்வழி வலித்தாக்குதலும் தோன்றின. பழைமை சார்ந்த ஸ்காட்டிய அரசியல்வாதிகளில் ஏமாற்றமடைந்தோரும், படைவீரரும், கத்தோலிக்கரும் மிகுதியாக இருந்தனர். அவர்கள் ஆர்கைல், ஹாமில்டன் போன்றவர்கள். அரசரைப் பாராளு மன்றத்தின் ஆதிக்கத்திற்கும் பிரஸ்பிடீரிய ஆதிக்கத்திற்கும் கட்டுப்படுத்திவிட்டனர் என வாதித்து அவர்களுக்கெதிராக வன் முறைச் செயல்களில் ஈடுபடவும் தயாராக நின்றனர். 'இடை நிகழ்ச்சி' (incident) என்று குறிக்கப்பெற்ற அவர்களது சதியைப் பற்றிய உண்மைநிலை எதுவாக இருந்தபோதிலும், ஆங்கில எதிர்க் கட்சியினர் தங்களுக்கும் இத்தகைய ஆபத்து வரலாம் என்று நம்பியதை அஃது உறுதிசெய்தது. பாராளுமன்றத்தினர் மறு படியும் கூடியபோது அவர்கள் பிஷப்புகளை நீக்குதற்காக ஒரு மசோதாவைக் கொண்டுவருவதில் முனைந்தனர். ஆனால், பிரபுக்கள் சபை அதனை நிராகரித்தபோது ஒரு 'பெருங் கண்டனப் பத்தி ரத்தைத்' தயாரித்தனர். அதைப்பற்றிய விவாதம் தொடங்குவதற் கென்று குறிப்பிடப்பெற்ற நாளான நவம்பர் மாதம் முதல்தேதி யன்று ஐரிஷ் புரட்சிக் கலகச் செய்திகள் லண்டன் நகரை வந்தடைந்தன.

இப் புரட்சிக் கலகம் அயர்லாந்தில் ஐம்பது ஆண்டுகளாகக் கடைப்பிடித்துவந்த கொள்கையின் விளைவேயாகும். அக் கொள்கையின்படி பாதிக்குமேற்பட்ட ஐரிஷ்காரர் தங்கள் நிலங்களை இழந்திருந்தனர். இக் கலகத்தின் உடனடிக் காரணம் ஸ்ட்ராஃபோர்டிற்குப் பிறகு அயர்லாந்தை ஆட்சிபுரிந்தவர்கள் தான். அவர்கள் ஸ்ட்ராஃபோர்டு ஏற்படுத்திய அரசாங்கத்தின் தரத்தைக் குலைத்தனர். அவாது துணைவர்களைப் பதவியிலிருந்து நீக்கினர். கத்தோலிக்கரை ஒரு பகுதியாகக்கொண்டிருந்த ஐரிஷ் சேனையில் ஒரு பகுதியைப் போதுமான ஊதியம் அளிக்காது கலைத் தனர். இங்கிலாந்துக் காமன்ஸ் சபையினர் கொண்ட போப் சமயச்சடங்கு எதிர்ப்புவெறி, ஐரிஷ் குருமாரைப் புனிதப்போர் ஒன்றைப் போதிக்குமாறு தூண்டியது. இந்த வெறி கலகத் தீயை வளர்த்தது எனலாம். பழைய நொடித்த குடும்பங்களில் இருந்து வந்த வெறிபிடித்த ரோரி ஓ'மோரும் (Rory O'More), ஸ்பானியப் பணியில் பயிற்சிபெற்ற சிறந்த படைவீரரான ஓவன் ஓ'நீலும்

**(Owen O'Neill)** முதலில் கலகக்காரர்களின் தலைவர்களாக இருந்தனர். அஃது அல்ஸ்டரில் நிலம்சார்ந்த போராகத் தொடங்கியது. கொலை, தீயிட்டுக் கொளுத்துதல் ஆகியவற்றிலுைம் டப்ளினுக்கு ஓடும்போது துயருற்றும், எண்ணுயிரம் ஆங்கிலேயரும் ஸ்காட்டியரும் உயிர் துறந்தனர். ஆனல், கலகக்காரர் டப்ளினைக் கைப்பற்றுவதற்குச் செய்த சதி தோல்வியுற்றது. மன்ஸ்டரிலோ கன்னுட்டிலோ கலகம் தோன்றவில்லை. புத்தாண்டு தொடங்கும் வரையில் கத்தோலிக்கச் செல்வந்தர் அமைதியாக இருந்தனர். ஆனல், அதன்பிறகு டப்ளின் அரசாங்கத்தின் மோசமான குழப்ப நிலையினல் கத்தோலிக்கப் பெருங்குடியினர் கலகக்காரரோடு சேர்ந்துகொண்டனர்.

இக் கலகத்தின் விவரங்களோ, அயர்லாந்தில் வாழ்ந்த 200,000 ஆங்கிலேயர் படுகொலை செய்யப்பெற்றனர் என்னும் வதந்தியோ இங்கிலாந்தை அடைவதற்குமுன், பிம், தமக்குக் கிடைத்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொண்டார். காமன்ஸ் சபையில் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றினர். அது சார்லஸ், தங்களால் ஏற்றுக்கொள்ளப்படும் அமைச்சரை உடனே அமர்த்தவில்லையென்ருல், அயர்லாந்தைப் பாதுகாக்கக் காமன்ஸ் சபையினரே வழி கண்டுபிடிப்பர் என்று கூறியது. மேலும் பெருங் கண்டனப் பத்திரமும் கொண்டுவரப்பெற்றது.

அப் பத்திரம் அரசருக்கு எதிராகமட்டுமன்றிச் 'சீர்திருத்தத்திற்கான முயற்சிகளைத் தடைசெய்யும் பிஷப்புகளும் இழிவான பிரபுக்களும்' நிறைந்த பிரபுக்கள் சபைக்கு எதிராகவும் மக்களுக்கு விடுத்த ஒரு வேண்டுகோளாகும். மறுபடியும் சார்லஸின் ஆட்சி தொடங்கியதிலிருந்து நேர்ந்த துன்பங்கள் ஒவ்வொன்ருக விளக்கப்பெற்றன. நீண்டநாட்களாகப் போப்பினர் திட்டத்தின் நோக்கத்தினை நோட்டமிட்டது. ஸ்ட்ராஃபோர்டு இறக்கும் வரையில் திணறிய தீய சிந்தனையுடைய கத்தோலிக்கக் கட்சி அதன்பிறகு செயல்படத் தொடங்கியது. அதனுடைய செயல்களின் விளைவாகக் கலகமும், அதன்மூலமாகப் படுகொலைகளும் அயர்லாந்தில் ஏற்பட்டன. சேனைக் கலகங்கள் நிரூபித்ததைப்போன்று, ஆண்டவரின் அருள் இல்லாதிருந்தால் 'நாம் இந்தத் துன்பியல் நாடகத்தின் முன்னுரையாகியிருப்போம்' என்று கூறப்பெற்றது. பாராளுமன்றத்தினரை எலியட் சிந்திய இரத்தத்திற்குப் பழிவாங்கவேண்டும் என்றனர். அதைப்பற்றிய கசப்பான சுட்டுக் குறிப்புகளையும், ராணியாரின் தீய செல்வாக்கையும்வைத்து அன்னியுரையும் தன்னகத்தேகொண்ட சமயக் கூட்டம் வேண்டுமென்று கோரினர். தங்களுடைய

நம்பிக்கைக்குகந்தவர்களையே சார்லஸ் அமைச்சர்களாகத் தேர்ந் தெடுக்கவில்லையென்றால் மானியம் வழங்கமுடியாது என்று கூறினர்.

சூடான விவாதத்திற்குப் பிறகு இக் கண்டனப் பத்திரம் பதினொரு வாக்குகள் வித்தியாசத்தில் நிறைவேறியது. மார்கரெட் கோயில் மணிகள் காலையில் இரண்டுமுறை அடித்தபோது காமன்ஸ் சபை உறுப்பினர் வெளியே வந்தனர். அப்போது, கிராம்வெல் 'பெருங் கண்டனப் பத்திரம் நிறைவேறாது இருந் திருந்தால் தம்முடைய சொத்துக்களையெல்லாம் விற்றுவிட்டு அமெரிக்காவிற்குச் சென்றிருப்பேன்' என்று அறிவித்தார். பல உறுப்பினர் தங்கள் உடைவாளை உருவியவண்ணமிருந்தனர். சபை முழுதும் கூக்குரல் எழுந்தது. அதற்குக் காரணம் பீதி வெறியாக மாறியதுதான். குருமாரையும் ஃபிரெஞ்சுக்காரரையும் சார்ந்த வதந்திகளும், ஐரிஷ்காரர்கள் சார்லஸின் ஆணையின் படியே செயலாற்றினர் என்ற பொய்யான செய்தியும் காமன்ஸ் சபையினரைத் தாங்கள் பிரதிநிதித்துவம் மிகுந்த சபையினர் என்றும், 'தனிப்பட்ட மனிதர்களான' பிரபுக்களைச் சாராமல் தனித்து நின்றே செயலாற்றலாம் என்றும் அறிவிக்குமாறு தூண்டின. திரளான மக்கள் பாராளுமன்றத்தைச் சுற்றிலும் புரட்சி செய்தனர். 'பிஷப்புகள் ஒழிக' என்று கோஷமிட்டனர். சந்தேகத்திற்குள்ளான வண்டிகளில் விளக்கொளியைச் செலுத்தி ஆராய்ந்தனர். தங்களது ஆதரவாளரை 'நல்லவர்' என்று கூவி வரவேற்றனர். அப்படிப்பட்டவர்களைக் கண்டிக்கக் காமன்ஸ் சபை யினர் பிரபுக்களுடன் சேரவில்லை. 'தங்களுடைய நியாயமான விருப்புகளைப் பூர்த்திசெய்துகொள்ள விரும்பும் மக்களின் ஊக்கத்தைக் குலைக்கும் வேளையில், காமன்ஸ் சபை இறங்காமல் கடவுள் காப்பாற்றவேண்டும்' என்று பிம் கூறினார். அயர்லாந் திற்குப் படையனுப்பும் கட்டாயம் ஏற்பட்டதால் இராணுவச் சட்டம் ஒன்றைக் கொண்டுவந்தனர். அதன்படி படைத் தலைமையைப் பாராளுமன்றத்தினால் தேர்ந்தெடுக்கப்பெற்ற தளகர்த்தரிடம் ஒப்படைத்தனர். கத்தோலிக்க குருமாரைத் தூக்கிலிட வேண்டுமென்றனர். ஐரிஷ் கத்தோலிக்கரை எப்போதும் பொறுத்துக்கொள்ள முடியாதென்றனர். அதே சமயத்தில் பெருங் கண்டனப் பத்திரத்தை அச்சிட்டனர்.

வழக்கம்போல் சார்லஸ் இருதலைக் கொள்ளி எறும்பானார். திருச்சபையைக் காக்கவேண்டுமென்று உறுதிகொண்டபோதிலும், அவரால் இறுதியாக நியமிக்கப்பெற்ற பிஷப்புகள் லாடின் கொள்கைக்கு முரணானவர். மேலும் அவரது முழுநிறைத்

திட்டத்தைக் குலைப்பதில் முன்னணியில் நின்றவருக்குப் பதவிகள் வழங்கினார். அமைச்சர்களையும் படைத்தலைவர்களையும் நியமிக்கும் உரிமையை நிலைநாட்டுவதிலும், பிஷப்புகளின் சட்ட முறை சார்ந்த உளதாம் தன்மையிலும், அரசர் தற்காப்பு நிலையில் இருப்பதே சிறந்தது என்று ஹைடு, ஃபாக்லண்டு, கல்பெப்பர் (Culpepper), நிக்கோலஸ் ஆகியோர் ஆலோசனை கூறினர். ஆயின், மற்றொருபுறத்தில் ராணியார் கத்தோலிக்கர்மீதான தாக்குதல்களினால் கோபங்கொண்டும், ஒயிட்ஹாலைச் சுற்றி நின்று, 'போப் ஆதரவாளர்'களுக் கெதிராகவும் 'அரசஆதரவாளர்களுக்' கெதிராகவும் கூக்குரல் எழுப்பிய போக்கிரிகளிடம் அச்சமும் கொண்டிருந்தார். படையைச் சார்ந்தவர்களும் வழக்கறிஞர் மன்றங்களில் பரம்பரையாக மக்களின் பகைவராய் இருந்தவர்களும், 'அரசர் பிம்'மையும் (King Pym) அவரது கும்பலையும் எதிர்த்து நிற்குமாறு அரசரை ஊக்குவித்தனர்.

இத்தகையோர் செல்வாக்கினால் சார்லஸ் முதலில் டவர் கோட்டைச் சிறையை தமக்கு வேண்டிய பாதுகாப்பானவர் கையில் ஒப்படைக்க முயன்றார். பிறகு, அம் முயற்சியைக் கைவிட்டார். அதன்பிறகு மீளமுடியாத இரு தவறுகள் புரிந்தார். ராணியாரையும் செல்வந்தரையும் தீவிரமாக ஆதரித்த டிக்பியோடு சேர்ந்து பிஷப்புகளும், மக்கட் கூட்டங்களின் வற்புறுத்தல் காரணமாகப் பாராளுமன்றம் சுதந்திரத்தோடு இல்லையென்று எதிர்ப்பு தெரிவித்தனர். அதற்காகப் பாராளுமன்றம் அவர்களை உடனே அரசத் துரோகக் குற்றம்சாட்டிச் சிறையிலடைத்தது. பிம்மினுடைய கட்சி ராணியாரின்மீது அரசத் துரோகக் குற்றம்சாட்ட எண்ணி இருந்தது எனும் அச்சம் அரசரை ஆட்கொண்டது. அதற்கு ஆதாரமும் இருந்தது. இத்தகைய அச்சத்தினால் உந்தப்பெற்ற அரசர் திடீரென்று 1642ஆம் ஆண்டு ஜனவரி மாதம் மூன்றும் தேதி, தமது சட்டத் தலைமைப் பணிமுதல்வரைக்கொண்டு, பிம், ஹாம்ப்டன், ஹோலஸ், ஹாஸல்ரிஜ் (Haselrige), ஸ்ட்ரோட் (Strode) ஆகியோருடன் மாண்டிவில் (Mandiville) எனும் பிரபுவின்மீதும் [பிற்காலத்தில் பாராளுமன்றத் தளபதியான மான்செஸ்டர் (Manchester)] அரசத் துரோகக்குற்றம் சாட்டினார். நான்காம் தேதி அந்த ஐந்து உறுப்பினரையும் கைதுசெய்வதற்காக அரசர் பல நூற்றுக்கணக்கான படைவீரருடன் காமன்ஸ் சபைக்குச் சென்றார்.

குற்றம்சாட்டப்பெற்றோருக்கு லண்டன் நகரமாந்தர் அடைக்கலமளித்தனர். படைக்கலந்தாங்கிப் புறப்பட்டனர். சமாதானம் செய்துவைக்கக்கூடிய நிலையைப் பிரபுக்கள் சபையும் இழந்தது.

ஹாம்ப்டனுடைய பக்கிங்காம்ஷயரைச் சார்ந்த ஆயிரக்கணக்கான குடியானவர், ஜேம்ஸ் ஆற்றிலிருந்த கடலோடிகள், தொழில் பயிற்சி பெறுவோர் ஆகியவர்கள் கிளர்ச்சியிலீடுபட்டனர். அரசர் தமது அரசியாரை வெளிநாட்டிற்கு அனுப்புவதற்காகவும், வடக்கில் தமக்கு ஆதரவைத் தேடிக்கொள்வதற்கும் லண்டன் நகரைவிட்டு நீங்கினர். இங்கிலேயில் வாள்வலி மிகுந்தவரே வாழமுடியும் என்ருகியது. காமன்ஸ் சபையினர் ஹல் (Hull) வெடிமருந்துக் கிடங்கினைக் கைப்பற்றுவதற்காகத் தமது ஆட்களை அனுப்பினர். அதேசமயத்தில் பிரபுக்கள் (இப்போது எண்ணிக்கையில் குறைந்திருந்தனர்) காமன்ஸ் சபையினரோடு இணைந்து, துறைமுகங்களின் மீதும் ராணுவத்தின்மீதும் பாராளுமன்றத்தின் அதிகாரமே இருக்கவேண்டுமென்று கோரினர். பிப்ரவரி மாதக் கடைசியில் ராணியார் ஹாலந்திற்குச் சென்ருர். இளவரசர் பாதுகாப்பாக மன்னருடன் இருந்தார். அரசர் ஓராண்டிற்குமேல் படைத் தலைமை அளிக்க மறுத்தார். ஏப்ரல் மாதத்தில் பாராளுமன்றத்தின் தளகர்த்தர் ஒருவர் அரசரை ஹல் நகரத்தில் நுழையவிடாமல் தடுத்தார். காமன்ஸ் சபையினர், தொழுகை நூலை ஆதரித்து விண்ணப்பம் செய்துகொண்டோர் அனைவரையும் சிறையிலிடுமாறு கட்டளையிட்டனர். மேலும், தங்களுடைய ராணுவச் சட்டத்தினைச் செயல்படுத்தினர். தம்முடைய சம்மதமின்றிப் படை திரட்டுவதைச் சார்லஸ் தடுத்தபோது, தன்னிச்சையான சட்டத்தின்மூலம் முதன்மை யதிகாரத்தைச் செலுத்துவதைக்காட்டிலும் உயர் நீதிமன்றமும், உயர் ஆலோசனை சபையுமாகிய பாராளுமன்றம், மேன்மையான, விலக்க முடியாத தன்மையில் அதிகாரம் செலுத்துதல் சாலச் சிறந்தது எனக் காமன்ஸ் சபையினர் அறிவித்தனர். பத்தொன்பது முன்மொழிக் கூற்றுக்கள் (Nineteen Propositions) என்ற வேண்டுகோளை அரசருக்கு விடுத்தனர். அவ் வேண்டுகோளில் பாராளுமன்றம் அமைச்சர்களையும் நீதிபதிகளையும் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும், அரசரது புதல்வர்மீதும், கோட்டைகள், நாட்டுப் படை, திருச்சபை ஏற்பாடு ஆகியவற்றின்மீதும், கட்டுப்பாடு விதிக்கும் அதிகாரம் பெற்றிருக்கவேண்டுமென்றும் கோரினர். அதனோடு, கடமையில் தவறுவோரைத் தண்டிக்கும் உரிமையையும் கோரினர்.

இங்ஙனம், அரசரும் பாராளுமன்றத்தாரும் வெவ்வேறு குறிக்கோள்களை வற்புறுத்திவந்ததால் ரத்தவெள்ளம் பெருகவேண்டியிருந்தது. ஜூலைமாதத்தில் மான்செஸ்டரில் இருந்த நாட்டுப்படையினருக்கும் அரச ஆதரவாளரான ஸ்டான்லிகளுக்கும் (Stanleys) இடையே ஏற்பட்ட மோதல் ரத்தம் சிந்திய முதல் நிகழ்ச்சியாக

இருந்தது. அரசரும் பார்ாளுமன்றமும் அடிப்படைச் சட்டங்களையே சார்ந்து நின்றனர். ஒவ்வொரு கட்சியினரும் மாற்றுக் கட்சியினர் ஆணவமான ஆட்சியை அமைக்க முயலுவதாகக் குற்றஞ்சாட்டினர். பழைமைசார்ந்த பாதுகாப்பு வழியைப் பின்பற்றுவதாகக் கூறிக்கொண்டு, அதேசமயத்தில் இறைமைப் பிரச்சினைக்குத் தீர்வுகாண ஆயுதம்தாங்கி நின்றனர். ஆகஸ்ட் மாதம் 22ஆம் தேதி சார்லஸ் நாட்டிங்காமில் தமது கொடியை நாட்டினர்.

## சமகால நிகழ்ச்சிகள்

*1630* கஸ்டாவஸ் அடால்பஸ் ஜெர்மனியைத் தாக்குதல்.

*1631* டில்லி (Tilly) என்பவர் மாக்டிபர்க் (Magdeburg) என்னுமிடத்தைத் தாக்குதல்.

*1632* கஸ்டாவஸ், லட்ஸனில் (Lutzen) கொல்லப்படுதல்.
வான் டைக் (Van Dyck) இங்கிலாந்திற்கு வருதல்.
ஜான்லாக்கின் பிறப்பு.

*1633* சமய ஒறுப்பு நீதிமன்றம் கலிலியோவைக் கொள்கை மறுதலிப்பு செய்துகொள்ளுமாறு வற்புறுத்தியது.
ஜார்ஜ் ஹெர்பர்ட் (George Herbert) எழுதிய 'The Temple'.

*1634* வால்லன்ஸ்டீனின் (Wallenstein) கொலை.
மில்ட்டன் எழுதிய 'Comus' லட்லோவில் (Ludlow) நடிக்கப்பெறுதல்.

*1635* ப்ரேக் உடன்படிக்கை.
ஃபிரெஞ்சுக் கல்விக்கழகம் (Academie Francaise) நிறுவப் பெறுதல்.

*1636* ஹார்வார்டு (Harvard) பல்கலைக் கழகம் நிறுவப் பெறுதல்.
டச்சுக்காரர் இலங்கையை வெல்லுதல்.

*1637* டெகார்டஸ் எழுதிய 'Discourse sur la methode'.
*–1657.* பேரரசர் மூன்றாம் ஃபர்டினண்டின் ஆட்சி.

*1639* ட்ரோம்ப் (Tromp) ஸ்பானியக் கப்பற்படையை முறியடித்தல்.

மதராஸில் ஆங்கில வாணிகக் களம் அமைக்கப் பெறுதல்.

1640 ஸ்பெயினுக்கு எதிராகப் போர்ச்சுகலில் கலகங்கள்.

கார்னீலின் (Corneille) மூன்று நாடகங்கள்.

டாக்டர் புஸ்பி (Dr. Busby) வெஸ்ட்மினிஸ்டர் பள்ளியின் தலைமை ஆசிரியராதல்.

–1688. பிராண்டன்பர்க்கில் (Brandenburg) பெருந் தேர்வாளரின் ஆட்சி.

1642 டாஸ்மன் (Tasman) நியூசிலாந்தையும் (New Zealand) டாஸ்மேனியாவையும் (Tasmania) கண்டுபிடித்தல்.

ரிச்சிலியூவின் மறைவு.

ஐசாக் நியூட்டனின் (Isaac Newton) பிறப்பு.

# 10. உள்நாட்டுப் போர், 1642–1646

இங்கிலாந்தில் ஏற்பட்ட உள்நாட்டுப் போர் பகைவரில்லாத போர் என்று பாராளுமன்றத்தின் தளகர்த்தராயிருந்த வால்லர் (Waller) என்பவர் அரச ஆதரவாளரான ஹாப்டனுக்கு (Hopton) எழுதினர். ஆங்கிலேயர் வெறுப்போடுதான் இத்தகைய போரில் இறங்கினர். இது முடியும்வரையிலும் பலர் கலந்துகொள்ளாது புறம்பாகவே இருந்தனர். 'தடியேந்திய' குடியானவர் கொள்ளை யிட்ட இரு கட்சிப் படையினருக்கும் எதிராகக் கிளர்ச்சி செய்தனர். பியூரிட்டானியர் படையின் முக்கியப் பகுதியாக விளங்கிய 'புது மாதிரிப் படை' (New Model army) பெரும்பான்மை கட்டாய இராணுவச் சேவையாளரைக்கொண்டு விளங்கியது. இக் காரணங் களுக்காகமட்டுமன்றிப் பிராட்டஸ்டென்டுகளுக்கும் சக ஆங்கிலே யருக்கும் நடந்த சண்டை என்பதனுல் காண்பதற்கரிய கண்ணியத் தோடும் மனிதத் தன்மையோடும் போர் நடந்தது. எப்போதுமே நிலப் பகுதிகளுக்கிடையேயும், பகை வகுப்பாரிடையேயும் நிகழும் போராக மாறவில்லை. எனினும், பொதுப்படையாக மன்னரையும் பாராளுமன்றத்தையும் ஆதரித்த வகுப்பினரையும், நிலப்பகுதி களையும் நாம் ஒருவாறு தீர்மானிக்கலாம். ட்ரன்டிற்குத் (Trent) தெற்கேயும் செவர்னுக்குக் (Severn) கிழக்கேயும் உள்ள பகுதி களிலும், துணி வியாபாரத்திற்குப் பெயர்போன நகரங்கள், இப் பகுதிகளுக்குப் புறம்பாக உள்ள பிராட்ஃபோர்டு (Bradford), மான்செஸ்டர்போன்ற நகரங்களில் வாழ்ந்த நடுத்தர வகுப்பினர் ஆகியோர் பாராளுமன்றத்தினரை ஆதரித்தனர். பிரபுக்களில் ஏறக்குறைய மூன்றில் இரண்டு பகுதியினர் மன்னரைப் பின் பற்றினர். அதேசமயத்தில் ஜனநாயக உணர்ச்சித் துடிப்பு, யோமன்கள் (yeomen) எனும் சிறுநிலக்கிழாரையும் லண்டன் நகரில் தொழிற்பயிற்சி பெறுவோரையும் ஊக்குவித்தது. அக்கால அரசியல் தலைவர்களாக விளங்கிய கனவான்கள் பாராளுமன்றக் கட்சியை ஆதரித்தனர். இவ்வாறே பெர்ஸீக்கள் (Percies), ரஸ்ஸல்கள் (Russells), சிட்னிகள் போன்ற செல்வாக்கு மிகுந்த பழம்பெருங் குடிகளில் தோன்றிய பலரும், ஹெர்பர்ட்டுகளில்

# THE CIVIL WAR AT THE END OF 1643

English Miles

0 20 40 60 80

Districts held by the King at the end of 1643

Districts held by Parliament at the end of 1643

SCOTLAND
Firth of Forth
Dunbar
Edinburgh
Berwick
Clyde
Tweed
Teviot
Coquet
North Channel
IRELAND
Solway Firth
Carlisle
Tyne
Newcastle
Durham
Eden
Wear
Tees
Swale
Bolton Castle
Isle of Man
Lancaster
Marston Moor
York
IRISH SEA
NORTH SEA
Preston
Skipton
Hull
Bradford
Aire
Ouse
Ribble
Lathom
Wigan
Don
Humber
Anglesey
Liverpool
Mersey
Manchester
Gainsborough
Sheffield
Lincoln
Chester
Winceby
Rowton
Carnarvon
Nottingham
Trent
Newark
The Wash
Dee
Belvoir
Hopton Heath
Welland
King's Lynn
Shrewsbury
Lichfield
Leicester
Norwich
Cardigan Bay
WALES
Severn
Nen
Gt. Ouse
Coventry
Huntingdon
Ludlow
Avon
Naseby
EASTERN
Worcester
Cambridge
Bury St. Edmunds
Edge Hill
Ipswich
Teifi
Wye
Cropredy Bridge
ASSOCIATION
Haverfordwest
Towy
Usk
Gloucester
Colchester
St. Albans
Oxford
Chelmsford
Chalgrove Field
Pembroke
London
Roundway Down
Bristol
Thames
Lansdown
Newbury
Bristol Channel
Basing Ho.
Maidstone
Canterbury
Bridgwater
Wardour
Dover
Langport
Torrington
Taunton
Stour
Southampton
Exe
Exeter
Arundel
Lyme Regis
Launceston
Portsmouth
Braddock Down
I. of Wight
Lostwithiel
Corfe Castle
Plymouth
Falmouth
ENGLISH CHANNEL

6 4 2
56 54 52 50
4 West from 2 Greenwich 0

பாதிபேரும், பாராளுமன்றத்திற்குப் பக்கபலமாக இருந்தனர். இப் போரானது அடிப்படையில் மாறுபட்ட குறிக்கோள்களின் போட்டியாகும். இவ்வித மாறுபட்ட குறிக்கோள்கள், இயற்கையான தலைவர்கள் தங்களுடைய இயல்பான ஆதரவாளர் மூலமாக வெளிப்பட்டன. இதனால் இஃது ஒரு மாகாணம் சார்ந்ததும், ஒருவகையில் நிலமானியமுறை சார்ந்ததுமான போராகும். சாயியும் சிலியும் (Sele), மிட்லண்டில் பியூரிட்டன் மக்களைத் திரட்டினர். அதைப்போலவே, அரசரை ஆதரித்த கார்ன்வாலுக்கு வடக்கில் ராபர்ட்ஸ் (Robartes) என்பவரும், அரசரைச் சார்ந்து நின்ற யார்க்ஷயரில் ஃபேர்ஃபாக்ஸ்களும் (Fairfaxes) மக்களை ஒன்று திரட்டினர். ஒரே குடும்பத்தைச் சார்ந்தவர்களும் மாறுபட்ட நோக்கங்களுக்காகப் போராடினர். உதாரணமாக, கிராம்வெல்களும், ஃபிளீட்வுட்களும் (Fleetwoods) இருதரப்பிலும் நின்று போர் புரிந்தனர்.

மக்கள் பல்வேறுபட்ட நோக்கங்களோடு படைக்கலந் தாங்கியதால் காரண காரியத் தொடர்பு, சட்டம் ஆகியவை தவிர உணர்ச்சியாலும் உந்தப்பெற்றனர். மன்னரது படையில் பிஷப்புகளை வெறுத்த பலர் இருந்தனர். அவர்களில் எட்ஜ்ஹில் சண்டையில் அரசரது கொடியைத்தாங்கிய எட்மண்ட் வெர்னேயும் (Edmund Verney) ஒருவர். நீண்ட காலமாக மன்னரின் உப்பைத் தின்று உயிர் வாழ்ந்த அவர் இறுதிவரை மன்னரைக் கைவிடவில்லை. மன்னரது கட்சியில் இருந்தோரில், ஹைடு போன்ற ஆயிரக்கணக்கானோர் சட்டத்திற்காகப் போராடினர். ஃபாக்லண்டு எண்ணச் சுதந்திரம் அக் கட்சியில் இருப்பதாகக் கண்டார். நியூகாசில்போன்ற பிரபுக்கள் பழைய சமுதாய அமைப்பைப் பாதுகாக்க எண்ணினர். மேலும், பலர் மூர்க்கமான கட்சிப் பிரிவுகளை வெறுத்தனர். அவர்களுக்கெதிராக இருந்த மான்செஸ்டர்போன்ற பெருங்குடியினர் வீண் பேச்சாளரையும், ஜனநாயகத்தையும் வெறுத்தபோதிலும், அரசவையாளர்மீதும் அவநம்பிக்கை கொண்டனர். எலிசபெத் ராணியாரிடம் மிகுந்த பற்றுறுதிகொண்ட பெருநிலக்கிழார்கள் அன்றுருடைய முறையைத் தாங்கள் காப்பாற்றுவதாக நினைத்தனர். புதிய மேலுலகும், புதிய நிலஉலகும் தோன்றவேண்டுமென்று விரும்பிய வெறிபிடித்த பாதிரிமாரும் இருந்தனர். நாட்கள் செல்லச்செல்ல மற்றெல்லாவற்றையும்விட, சமய நோக்கம் தலைதூக்கியது. ஏனெனில், அக் காலத்தில் சமயமே மக்கள் மனத்தில் அதிக ஆதிக்கம்செலுத்தியது. மேலும், அந்த அடிப்படையில்தான் ஸ்காட்டியப் பிரஸ்பிடீயரும், ஐரிஷ் கத்தோலிக்கரும் இப் போரில் பங்குபெற்றனர். அதனோடு பிரமிடைப் (pyramid) போன்று

உணர்ச்சிகளை ஒருமுகப்படுத்தும் புரட்சிகளின் வெளிப்படையான நியதியும் இதையே வலியுறுத்துகின்றது.

பாராளுமன்றம் சில நலன்களைப் பெற்றிருந்தபோதிலும் மன்னர் உடனே பகைவரைத் தாக்கி அழிக்காவிட்டால் வெற்றி கிட்டுவது ஐயமே. மில்ட்டன் கூறியதைப்போல முதலில் லண்டன் நகரமே உரிமையின் உறைவிடமாகவும், பாராளு மன்றத்தினருக்கு அடைக்கலமளிக்கும் அரணாகவும் திகழ்ந்தது. அந் நகரில் படைகளைவைத்துப் பராமரிக்கும் பெரும் பணக்காரர் வாழ்ந்தனர். நாட்டு வாணிபத்தின் மையமாகத் திகழ்ந்த அந் நகரில்தான் சுங்கம் வசூலிக்கும் நிலையமும் இருந்தது. நாட்டு மக்களின் அபிப்பிராயங்களை உருவாக்கும் உலைக்களமாகிய அச்சு யந்திரசாலைகள் இருந்தன. அவைகளில் இருந்து இருபது வார இதழ்கள் வெளிவந்தன. இந்த இருபது ஆண்டுகளில் 30,000-க்கும் மேற்பட்ட துண்டுப் பிரசுரங்களும் வெளிவந்தன. லண்டன் நகரம் பியூரிட்டன்களின் கோட்டையாகத் திகழ்ந்தது. அதற்கு உண வளித்த கிழக்குப் பகுதிகளும் பியூரிட்டானியரை ஆதரித்தன. பயிற்சியளிக்கப்பெற்ற லண்டன் நகரக் காவல் வீரர்கள் (trained-bands) மற்றையோரைக்காட்டிலும் கட்டுப்பாடு மிகுந்திருந்தனர். மாநகர மக்களிடையே நற்செயலைப் புரிகின்றோம் எனும் உணர்ச்சி யும் நேர்மையான செருக்கும் காணப்பெற்றன. இந்த உணர்ச்சி காரணமாகத்தான் முன்னிலைமீட்சிக்குப் பிறகும் நியூபரியில் போரிட்டு உயிர் தப்பியவர்களைக் கௌரவிக்கும் வகையில் கொண்டாட்ட விருந்தினை நடத்தினர். லண்டன் பகுதியைப் பாராளுமன்றத்தினர் பெற்றிருந்தது மேலும் இருவழிகளில் அவர் களுக்கு நன்மையாக முடிந்தது. அந் நகரை மையமாகவைத்துச் சுற்றிலும் இருந்த அரசரைச் சார்ந்த இடங்களைத் தாக்குவது அவர்களுக்கு எளிதாக இருந்தது. மேலும், அது பாராளு மன்றத்தின்வசம் இருந்ததானது வெளிப்பார்வைக்குப் பாராளு மன்றமே சட்டப்படி நியாயமாகப் போரிடுவது போன்றும், அரசரே அநியாயமாக அந்நிய நாட்டின் உதவியையும் கலகக்காரரின் துணையையும்கொண்டு லண்டனைக் கைப்பற்ற முயற்சிப்பது போலவும் தோன்றுமாறு செய்தது.

பாராளுமன்றத்தினர் வெற்றியடைய லண்டன் மாநகரம் மற்றொரு வழியிலும் உதவியது. லண்டன் கப்பற்படை பாராளு மன்றத்திற்குக் கிடைத்தது. அவர்களுடைய தளகர்த்தராகிய வார்விக் (Warwick) என்பார், ராலேயின் இறுதிப்பயணத்தி லிருந்து ஒவ்வொரு கடல்சார்ந்த காரியத்திலும், குடியேற்ற முயற்சி யிலும் பங்குகொண்டவர். மேற்குத் துறைமுகங்கள் பியூரிட்

டானியரை ஆதரித்ததால் பாராளுமன்றம் நாட்டின் நடுப் பகுதியில்மட்டும் ஆதிக்கம்பெற்றிருக்கவில்லை; சுற்றுப்புறத்திலும் சில முக்கிய இடங்களைக்கொண்டிருந்தது எனலாம். இவற்றின் துணைகொண்டு, பாராளுமன்றம் அரசருக்கு வெளிநாட்டிலிருந்து தளவாட உதவியும், மற்ற உதவிகளும் வரமுடியாதவண்ணம் தடுக்கமுடிந்தது. மேலும், ஹல்லிலிருந்து லைம் ரிஜிஸ் (Lyme Regis) வரையிலுள்ள துறைமுகங்களைக் கைக்கொண்டு மன்னரைப் பின்னால் இருந்து தாக்க முடிந்தது.

இரு கட்சியினரும் ஆரம்பத்தில் படை சார்ாப் பண்புமிகுந்தவராகவும், பயிற்சியற்றவராகவும், ஒருமுகப்படுத்தப்பெறாதவராகவும் இருந்ததினால் போர் நீண்டது. கவுன்டிச் சங்கங்கள் தற்காப்பைப்பற்றிமட்டும் எண்ணின. தரைப்படைகள் பெரும் நிலக்கிழாருக்கு வரவேண்டிய குத்தகையைப் பெறுவதும், தலச் சந்தை தினத்தன்று தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைச் சேகரிக்கவேண்டுமென்பதும் குறிக்கோள்களாக இருந்தன. ஆரம்பகாலத்தில், லண்டன் நகருக்கு வெளியில், படைகள் அநேகமாக நிலமானியமுறை அடிப்படையிலேயே திரட்டப் பெற்றன. செல்வாக்கு மிகுந்தவர்கள் படைவீரர்களைத் திரட்டி, படைத் தலைவர்களையும் நியமித்தனர். இவ்வாறே, நியூகாசிலினுடைய 'வெள்ளை அங்கியினர்' (Whitecoats) எனும் படையும், கிராம்வெல்லின் கிழக்கு ஆங்கிலிய குதிரைப்படையும் (East Anglian horse) உருவாயின. தலப்படையினர் தங்களுடைய சொந்தக் கவுன்டிக்கு வெளியே போரிடச் செல்வதை வெறுத்தனர். குறிப்பாக, கார்னிஷ் பகுதியில் இருந்த அரசப் படையினர் வெளியில்வந்து போரிட மறுத்தனர். லண்டன் நகரத்து வீரரும் "வீடு, வீடு' என்று அழுததாக அப் படையின் முதல் தலைவர் அறிவித்தார்.

இத்தகைய போர்முறை அரசருக்கு அழிவினைத் தருவதாக இருந்தது. அதிலும் அவர், வடக்கிலிருந்தும் வேல்ஸிலிருந்தும் திரட்டிய படைகள் அதிகப்பயன்தரவில்லை. மேலும், அவர், லதோம் (Lathom) மாளிகை, ஸ்டான்லி கோட்டைபோன்ற மாளிகைகளைக் காக்க வேண்டியிருந்ததால் அவரது தாக்கும் சக்தி குறைந்தது. பேசிங் (Basing) என்னுமிடத்தில் இருந்த கத்தோலிக்கப் பிரபுவான வின்செஸ்டருக்காகக் காவற்படை யனுப்பியதாலும் அவருடைய தாக்கும் சக்தியோடு போர்திறச் சூழ்ச்சியும் பாழ்பட்டது.

இறுதியில் போரையே தொழிலாகக் கொண்ட வீரருக்கும், நிறைந்த நிதிபடைத்தோருக்குமே வெற்றி கிட்டும். இந்த

இரண்டிலும் பாராளுமன்றம் மேன்மையுற்றிருந்தது. நிரந்தரமான வருவாயற்ற சார்லஸ், பணம் பெறுவதற்காகத் தம்முடைய படைகளைப் பல இடங்களில் பிரித்துவைத்தார். பயிரிடும் குடியானவர்களிடமிருந்தும் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்திலிருந்தும், வரிகளிட்டும் கொள்ளையடித்தும் வருவாயினைப் பெருக்கிக்கொண்ட நியூகாஸில், வொர்செஸ்டர் போன்ற பெரும் பிரபுக்களின் சொந்த வருவாயை அரசர் நம்பியிருந்தார். தீரம் கொண்ட கார்னிஷ் வீரர்கள் ஃபிரான்ஸிற்குத் தகரம் விற்றுவரும் பொருளைக்கொண்டே வாழ்ந்துவந்தனர். இவ்வாறு அரசர் போதுமான நிதியின்றி வருந்திய அதேசமயத்தில், பாராளுமன்றம் செல்வம் கொழிக்கும் தொழிற் பகுதிகளையும் சுங்கவரி வருமானத்தையும் தன்வசம் வைத்திருந்தது. இறுதியாகப் பாராளுமன்றத்தினர் தங்களுடைய பகுதிகளில் வரிகளை மாதம் ஒன்றுக்கு 1,20,000 பவுனுக உயர்த்தினர். அதனுல், குதிரை வீரருக்கு நாளொன்றுக்கு 2 ஷில்லிங் ஊதியம் அளிக்கமுடிந்தது. அவர்கள் பெற்ற வெற்றியும், தவருது அளித்த ஊதியமும் போரையே தொழிலாகக்கொண்ட பலரை அவர்கள் கட்சியில் சேருமாறு தூண்டின. அப்படி வந்து சேர்ந்தவர்களில் மங்க் (Monck) போன்றவர்கள் முதலில் மன்னரிடம் பணிபுரிந்தவர்கள். அதே சமயத்தில் வெளிநாடுகளில் அனுபவம்பெற்ற அதிகாரிகள் பாராளுமன்றப் பணியிலிருந்தனர். தக்கசமயத்தில் இரு படையினரும் குறிப்பாகக் கிராம்வெல்லின் படையினர், இயங்கும் போருக்கான மேம்பட்ட முறைகளைக் கண்டுபிடித்தனர். ஈட்டிப் படையின் எண்ணிக்கை குறைக்கப்பெற்றது. பழைமையான, தீக் குச்சியைப் பயன்படுத்தும் துப்பாக்கிக்குப் பதிலாகக் கற்பொறித் துப்பாக்கி (flint-lock) பயன்படுத்தப்பெற்றது. குதிரைப் படையினர் பளுவான உடற்கவசம் அணிவதை விட்டனர். 'சாராயம் வடித்துக்கொடுப்போரையும், ஆற்றலிழந்த படைவீரரையும்' நீக்கிவிட்டு, உணர்ச்சியும் உரமும் கொண்டவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று கிராம்வெல் பாராளுமன்றத்தாரிடம் கூறினுர். அதோடு அவர், ரூபர்ட் இளவரசருடைய (Prince Rupert) குதிரைப்படையின் திறமுறைகளைப் பின்பற்றித் தம்முடைய வீரர்கள் துப்பாக்கிகளை அதிகம் பயன்படுத்தாது, வாளையே மிகுதியாக நம்பியிருக்கவேண்டுமென்றும், பகைவரைத் திடீரென்று தாக்கவேண்டுமென்றும் விளக்கினுர்.

1644ஆம் ஆண்டுவரையில் வடக்கு, மிட்லண்டு, மேற்கு ஆகிய மூன்று பக்கங்களிலிருந்தும் அணிவகுத்து முன்னேறும் சார்லஸின் போர்முறைத் திறம் அதிக வெற்றியளித்தது. எஸ்ஸக்ஸில் எட்ஜ்ஹில் என்னுமிடத்தில் (1642ஆம் ஆண்டு

அக்டோபர் மாதம்) முதன்முறையாகத் தீவிரப் போர் நடந்தது. அப் போரில் அரசரின் மைத்துனர் ரூபர்ட் (Rupert) என்பார் தம்முடைய குதிரைப் படையை, மூலப்படையிலிருந்து பிரித்துப் பகைவரைத் துரத்துவதில் ஈடுபட்டதால், கிடைக்கவேண்டிய வெற்றி வீணே கெட்டது. எனவே, இப் போர் வெற்றி தோல்வி இன்றி முடிந்தது. எப்போதையும்விடச் சார்லஸ் லண்டன் நகருள் ஊடுருவுவதற்கு மிக நெருங்கினர் என்றாலும், நகரக் காலாட்படையினர் அவரைப் ப்ரன்ட்ஃபோர்டிலும் (Brentford) கிங்ஸ்டனிலும் (Kingston) தடுத்து நிறுத்தினர். எனவே, சார்லஸ் பின்வாங்கி ஆக்ஸ்ஃபோர்டைத் தமது தலைமைத் தளமாக அமைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று.

ஆயினும், 1643ஆம் ஆண்டு அரசர் கட்சியை வெற்றித் திரு தழுவிய ஆண்டாகும். பெவில் க்ரென்வில் (Bevil Grenville), ஸ்லான்னிங்குகள் (Slannings), கொடால்பின்கள் (Godolphins) போன்ற சீரிய பண்பும் சிதையா உள்ளமும் கொண்டவர்களால் திரட்டப்பெற்று, ஹாப்டனின் திறமையான தலைமையில் செயலாற்றிய கார்னிஷ் படையினர் (ஜனவரியில்) ப்ரடாக் டௌன் (Bradock Down) என்னுமிடத்திலும், (மே மாதத்தில்) ஸ்ட்ராட்டன் (Stratton) என்னுமிடத்திலும் நின்ற பகைப் படைகளிரண்டையும் தோற்கடித்தனர். டிவோனில் முன்னேறி ஜூலை மாதத்தில் பாத்திற்குமேலே லான்ஸ்டௌனில் (Lansdown) நிலைகொண்டிருந்த வாலரை (Waller) வீழ்த்தினர். ஒரு வாரத்திற்குப் பின் ஆக்ஸ்ஃபோர்டிலிருந்து வந்த உதவிப்படைகளோடு சென்று மற்றொருமுறை வாலரை டேவீஸஸிற்கு (Devizes) அருகில் ரவுண்டவே டௌன் (Roundaway Down) என்னுமிடத்தில் முறியடித்தனர். இதற்கிடையில் ராணியார், தீ மூண்டிருந்த யார்க்ஷயரில் வெளிநாட்டுத் தளவாடங்களோடு வந்திறங்கினர். ஜூன் மாதத்தில் சால்குரோவ் (Chalgrove) என்ற இடத்தில் நடந்த கைகலப்பில் ஹாம்ப்டன் படுகாயமுற்றார். ஜூலையில் பிரிஸ்டல் நகரம் ரூபர்ட் இளவரசரிடம் சரணடைந்தது. ஆனல், எஸ்ஸக்ஸ், எதிர்ப்பிற்கிடையே லண்டன் படைகளை அணிவகுத்து முன்னேறி க்ளஃவ்செஸ்டரைக் காத்தார். மீண்டும், நியூபரியில் (Newbury) செப்டம்பர் மாதத்தில் நிகழ்ந்தபோரில் இருந்து வெற்றிகரமாகப் பின்வாங்கினர். இப் போர்க்களத்தில் ஃபாக்லண்டு கொல்லப்பட்டார். அரசரது படையினர் ரீடிங் (Reading) என்னுமிடத்தைக் கைப்பற்றினர். நியூகாஸில் பிராட்ஃபோர்டுக்கு (Bradford) அருகே அட்வால்டன் மூர் என்னுமிடத்தில் ஃபேர்ஃபாக்ஸுகளைப் புறங்கண்டார். அவரது படைப் பிரிவுகள் மிட்லண்டிலிருந்து வந்த படைப் பிரிவுகளோடு இணைந்து,

லிங்க்கனைக் கடந்து, கிங்ஸ் லின் (King's Lynn) என்னுமிடத்தை அடைந்தன.

அப்படியிருந்தும், சார்லஸுக்கு எதிராக எழுந்த விண்மீன்கள் வான்வெளியில் சுடர்விட்டுப் பிரகாசித்தன. கடல்வழியாகப் படை வலிப் பெருக்கம் பெறக்கூடிய ஹல் துறைமுகத்தைக் கைப்பற்றாத வரை மேலும் முன்னேற நியூகாசில் துணியவில்லை. ஃபேர்ஃபாக்ஸ், கிராம்வெல்லிற்கு உதவியாக இருக்கவேண்டித் தமது குதிரைப் படையைக் கப்பலேற்றிக் கடல்வழியாக அனுப்பினார். கிராம்வெல் ஈஸ்ட் ஆங்கிலியாவில் முதலில் சிறுசிறு வெற்றிகளைப்பெற்று, பிறகு அக்டோபரில் வின்ஸ்பி (Winceby) எனுமிடத்தில் குறிப்பிடத் தக்க வெற்றிபெற்றார். அதன் காரணமாக நியூகாசில், ஹல் துறைமுக முற்றுகையைக் கைவிட்டார். பிளைமவுத்தில் பாராளு மன்றத்தின் பிடி நிரந்தரமாக அச்சுறுத்துவதாக இருந்ததால், கார்னிஷ் படையினர் தம் வீடு திரும்பவேண்டுமென்று வற்புறுத் தினர். 1644ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் சார்லஸின் முதன்மை யான திட்டம் தோல்வியுற்றது. அணிவகுத்து முன்னேறிய ஹாப்டனின் படைகள் சஸ்ஸக்ஸிலும் (Sussex), ஹாம்ப்ஷயரிலும் (Hampshire) தடுத்து நிறுத்தப்பெற்றன.

தலப் படைகள் போரிட்டன. ரீடிங், லிங்க்கன்போன்ற சிறு சிறு இடங்கள் கை மாறின. ஆனால், இறுதி முடிவொன்றும் தோன்றவில்லை. இந் நிலையில் இரு தரப்பினரும் தங்கள் தங்கள் பலத்தைப் பெருக்கிக்கொள்ள முனைந்தனர். படைசார்ந்த தீர்வு ஒன்றைக் காண்பதற்காக அரசியல் நலன்களை விட்டுக்கொடுக்க பிம் முன்வந்தார். ஆகஸ்ட் மாதத்தில் ஸ்காட்லாந்தியரிடமிருந்து படை உதவி கோரினார். அதற்குப் பதிலாகத் 'திருமுறைக்கு ஏற்பவும், திருந்திய திருச்சபைகளின் முறையிலும் அமைந்த சமய ஏற்பாடு ஒன்றினை இரு நாடுகளிலும் நிறைவேற்றுவதாக' வாக் களித்தார். இவ் வாசகத்தை ஆங்கிலத் தலைமை ஆணையாளராக இருந்த வேன், சமயப் பிரிவுகள் பலவற்றைக் காக்கும் எண்ணத் தோடு கொண்டுவந்தார். எனினும், இதிலிருந்து ஸ்காட்டியர் தங்களுடைய பிரஸ்பிடீரியச் சமயத்தை இங்கிலாந்தில் பரப்பு தற்குக் கிடைத்த வாய்ப்பாகவே கருதினர். இரு நாடுகளுக்கு மிடையே புனிதக் கூட்டுறவும் ஒப்பந்தமும் (Solemn League and Covenant) எனும் உடன்படிக்கையைச் செய்துகொண்டன. இவ் உடன்படிக்கை நவம்பர் மாதத்தில் இறந்த பிம்மின் இறுதி வெற்றியாக இருந்தது. அதன்படி பாராளுமன்றத்தின் படைகளை வழிநடத்த 'இரு நாடுகளின் கமிட்டி' (A Committee of Both Kingdoms) எனும் குழு ஒன்று அமைக்கப்பெற்றது. இதற்கெதிராகச்

சார்லஸ், இரு நடவடிக்கைகள் மேற்கொண்டார். முதலில் கலகம் விளைவித்த ஐரிஷ் கத்தோலிக்கக் கூட்டுறவாளரோடு (செப்டம்பர் மாதத்தில்) அவர் ஓராண்டுப் போர் நிறுத்த ஒப்பந்தம் (Cessation) செய்துகொண்டார். இதன்மூலம் அயர்லாந்தில் போரிட்டுக் கொண்டிருந்த ஆங்கிலப் படையினரின் உதவி சார்லஸுக்குக் கிடைத்தது. அடுத்தபடியாக ஸ்காட்லாந்தை மேற்குத் தீவுகளின் வழியாக அன்ட்ரிம் (Antrim) தாக்குவதென்றும், அதே சமயத்தில் வடக்கிலிருந்து அந் நாட்டைத் தூண்டிவிட வேண்டுமென்றும், மான்ட்ரோஸ் (Montrose) வெகு நாட்களாக வற்புறுத்திவந்த திட்டத்தைச் சார்லஸ் ஏற்றுக்கொண்டார்.

இத் திட்டம் அநேகமாக இங்கிலாந்து முழுவதையும் அரசருக்கு எதிராகத் திரட்டியது. மேலும், இதை அறிந்த ஸ்காட்டியர் உடனடியாகப் பாராளுமன்றத்தோடு இணையத் தீர்மானித்தனர். இதன்மூலமாக அரசர் பெற்றதெல்லாம் ஒருசில ஐரிஷ் பிராட்டஸ்டென்ட் படைப்பிரிவுகளேயாகும். அவற்றிலும் முதல் படையினரை ஃபேர்ஃபாக்ஸ், நான்ட்விச் (Nantwich) என்னுமிடத்தில் முறியடித்தார். முறியடிக்கப்பட்டவர்கள் பாராளுமன்றக் கட்சியோடு சேர்ந்துகொண்டனர். ஆனால், அன்ட்ரிமின் படையினர் கத்தோலிக்கர்கள். அவர்கள் பல கொடுஞ்செயல்கள் புரிந்தனர். துருப்பினரைத் தொடர்ந்துவந்த ஐரிஷ் பெண்களைப் படுகொலை செய்தனர். அதேசமயத்தில் வேல்ஸ் கரையில் பிடிபட்ட ஐரிஷ் காரர் கடலில் மூழ்க்கடிக்கப்பட்டனர்.

இத்தகைய நடவடிக்கைகள் அரசரது ஆலோசகரிடம் ஒற்றுமை காணப்பெறவில்லையென்பதன் அறிகுறியாக விளங்கின. ஆக்ஸ்ஃபோர்டில் இருந்த எழுபது பிரபுக்களும், நூற்று எழுபது காமன்ஸ் சபை உறுப்பினரும் அமைதியை விரும்பினர். அதனோடு, போப் சமயத்துடன் எவ்விதத் தொடர்புகொள்வதையும் வெறுத்தனர். இத்தகைய ஆங்கிலப் பழைமைப் பண்பின் பிரதிநிதிகளாக விளங்கியவர்கள் ஹைடும் ஹாப்டன் போன்ற வீரர்களுமாவர். ஆனால், இவர்களுக்கு எதிராக எவ்வித அரசியல் கூட்டிற்கும் தயாராக இருந்த ராணியாரும் அவரது கூட்டத்தினரும் செல்வாக்குபெற்று விளங்கினர். அதைப்போலவே சூழ்ச்சிக்காரர்களான டிக்பியும் ஜெர்மினும் (Jermyn), ஹைடு போன்றவர்களுக்கு எதிராக இருந்தனர். கோரிங் (Goring) போன்ற தளபதிகளினால் படையினரின் மனவுறுதி குலைந்தது. அரசாது ஆணையைத்தவிர வேறெவர்க்கும் பணிய மறுத்த அவர்களுடைய அழிசெயல்களினால் மக்கள் மனக்கசப்படைந்தனர். மேலும், அவர்தம் கொள்ளையடிக்கும் படையினர், நடுநிலைமையாளர்களைப் பாராளுமன்றத்தின் பக்கம் சேருமாறு செய்தனர்.

1644ஆம் ஆண்டில் போரில் ஒரு புதுத்திருப்பம் தோன்றியது. லிவெனுடைய (Leven) முன்னேறிவரும் படைக்கும், ஹல் துறை முகத்திலிருந்து பாய்ந்துவரும் ஃபேர்ஃபாக்ஸ்களுக்கும் இடையில் அகப்பட்டுக்கொள்ளுவோம் என்னும் அச்சத்தினுல், நியூகாசில் டர்ஹாமைவிட்டு நீங்கினுர். வெகு விரைவிலேயே யார்க் நகரில் முற்றுகைக்குள்ளானுர். நகருக்கு வெளியில் ஸ்காட்லாந்துப் படைகளும், மான்செஸ்டருடைய கிழக்குப் படைகளுடன் இணைந்தன. யார்க் நகரைக் காக்கவேண்டி ரூபர்ட் வேகமாகத் தம் படையோடு வந்தார். பகைப் படைகளை மார்ஸ்டன் மூர் என்னுமிடத்தில் (Marston Moor) போருக்கிழுத்தார். ஆனுல், அவர் சிறிது அவசரப்பட்டுத் தவமுன இடத்தையும் காலத்தையும் தேர்ந்தெடுத்துவிட்டார். அவர்வசம் 17,000 வீரர்களே இருந்தனர். அதற்கு மாமுக, பாராளுமன்றத்தினர் தரப்பில் 27,000 போர்வீரர் இருந்தனர். கிராம்வெல்லின் படையினர் அரசரின் வலப்பகுதி அணிவகுப்பை முறியடித்தனர். அரசரது இடப்பகுதி அணிவகுப்பின் தளகர்த்தரான கோரிங், பாராளுமன்றத் தளபதியான ஃபேர்ஃபாக்ஸின் படைகளைத் தோற்கடித்தார். இடையில் பாராளுமன்றத்தின் நடு அணிவகுப்பும் முறியடிக்கப்பட்டது. எனினும், அவ்வணிவகுப்பி லிருந்த ஸ்காட்லாந்தியர் கலையாமல் உறுதியுடன் நின்றனர். கிராம்வெல் தமது படைகளைத் திருப்பி அரசரது படைகளைப் பக்க வாட்டில் தாக்கினுர். நியூகாஸிலின் படை அழிந்தது. கிராம்வெல், ஆண்டவர், அவர்களை நமது வாட்களுக்கு அரிதாள்களாக அனுப்பினுர் என்று எழுதினுர். நியூகாசிலும் வெளிநாட்டிற்கு ஓடிவிட்டார். யார்க் நகரம் வீழ்ந்தது. லங்காஷயரும் சில காவல் நிலையங்களும் தவிர, சார்லஸ் வட இங்கிலாந்து முழுவதையும் இழந்தார்.

ஒரு மாதம் கழித்து அயர்லாந்திலிருந்தும் தீவுகளிலிருந்தும் வந்த மக்டானல்களும் (McDonnells), மாக்டனல்டுகளும் (Macdonalds) தவிர, மற்றெவர் துணையுமின்றி, மான்ட்ரோஸ் அரசருக்கு ஆதரவாகப் படையெடுப்பைத் துவக்கினுர். பகைப்படையொன்றைத் திப்பர்மியூர் (Tippermuir) என்னுமிடத்தில் சிதறடித்தார். அபர்டீனைக் கொளுத்திச் சூறையாடினுர். 1645ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இன்வர்லாக்கி (Inverlochy) எனுமிடத்தில் ஆர்கைல், காம்பெல் ஆகியோரின் படைகளை முறியடித்தார். ஆனுல், இந்த வெற்றிகள் அவருக்கும் அரசருக்கும் இடையே வலிமிக்கு இருந்த லிவெனுடைய படைகளைக் கடந்து செல்வதற்குப் பயன்படவில்லை. அவரது ஐரிஷ் கத்தோலிக்கக் கூட்டாளிகளை ஸ்காட்லாந்தியர் வெறுத்தனர்: 'மக்களைக் கோழியைக் கொல்வது போன்று இரக்கம் ஏதும் இன்றி, அரக்கத்தனத்துடன் கொன்ற

வர்கள் அவர்கள்' என்று குற்றங்கூறினர். மேலும், ஒவ்வொரு படையெடுப்பிற்குப் பிறகும் ஹைலாந்தியர் தமது வீடுகளை நோக்கிச்சென்றதும், மான்ட்ரோசுக்குத் தலைவலியாக இருந்தது. போரையே தொழிலாகக்கொள்ளாத வீரர் எவரும் மான்ட்ரோசைப் போன்று போர்த்தன்மை பெற்றிருந்ததில்லை. கடல்போன்ற பகைப்படைகளுக்கெதிராக ஆயுதங்கள் அரைகுறையாக வைத் திருந்த காலாட் படையினரையும், விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிற்குக் குறைந்த எண்ணிக்கைகொண்ட குதிரை வீரர்களையும் கொண்டு செயலாற்றிய சிறந்த தலைவர் அவரைக் காட்டிலும் வேறெவருமில்லை. பாதையற்ற பனிப் பிரதேசத்தில் வெறுங் காலுடனே, பதஞ்செய்யாத தோலினாலான செருப்புடனே நெடுந் தூரம் நடந்து சென்று, எதையும் தாங்கும் இதயத்தோடு போரிடும் ஊக்கத்தைத் தமது படைவீரருக்கு அளித்தார். திடீர்த் தாக்குதல் நிகழ்த்துவதில் நிகரற்று விளங்கினார். ஆனால், அவர் புதுப்படை களைத் திரட்டுவதற்கு, வடபகுதியை நம்பி இருக்கவேண்டி யிருந்தது. ஹைலாந்தோ எனில் கூட்டங்களுக்கிடையேயான பூசல்களினால் குழப்பமடைந்திருந்தது. அவர் மாக்டனால்டுகளைச் சார்ந்திருந்ததால், மெக்கன்சிகளும் பிரேசர்களும் அவருக்குத் தடையாக நின்றனர். ஹன்ட்லி போன்ற கூட்டத் தலைவர்கள் வெற்றிப் பக்கத்தில்தான் சேர்ந்தனர். லோலண்டு போரும், அதன் வழி அரசரோடு இணைவதும் அவரது முயற்சிகளுக்கு வெற்றி தருவன என்றாலும், மாக்டனால்டுகளும், மெக்கன்ஸீக்களும் அதைக் காட்டிலும்,காம்பெல்களைத் துன்புறுத்துவதிலேயே அதிக அக்கறை காட்டினர்.

எனினும், 1644ஆம் ஆண்டில் பாராளுமன்றம் பெற்ற வெற்றி அதன் கட்சிகளிடையே காணப்பெற்ற திறமையின்மை யினால் ஓரளவு சிதைந்தது. கவுன்டிச் சங்கங்களை ஒன்று சேர்க்கும் இணைப்பு ஏதுமில்லை. படைத் தலைவர்களுக்குள்ளே ஏற்பட்ட பூசலின் விளைவாக, மார்ஸ்டன் மூர், அவர்கள் கையிலிருந்து நழுவியது. எஸ்ஸக்ஸ், வாலரின் படையைத் தனியாகப் பிரித்து, ஆக்ஸ்ஃபோர்டிற்கும் செவர்னுக்கும் இடையில் சூழ்ச்சித் திறமை யுடன் செயலாற்றிவந்த அரசரைப் பின்தொடருமாறு அனுப்பினார். ஆனால், சார்லஸ் அவரைச் செர்வெல் (Cherwell) ஆற்றங்கரையில் உள்ள கிராப்ரிடி பிரிட்ஜ் என்னுமிடத்தில் முறியடித்தார். மேலும், எஸ்ஸக்ஸ், டான்டனையும், மேற்கேயுள்ள பிற புறக்காவல் நிலையங்களையும் காப்பதற்கு அணிவகுத்துச் செல்லவேண்டு மென்று விடாப்பிடியாக வற்புறுத்தினர். ஆனால், சார்லஸ் அவரைப் பின்தொடர்ந்து சென்று, ஃபோவே தீபகற்பத்தில் முற்றுகையிட்டு, லாஸ்ட்விதியல் (Lostwithiel) என்னுமிடத்தில் ஒரு

பெரும் வெற்றியைப் பெற்ருர். அதனுல், எஸ்ஸக்ஸின் காலாட் படைகளெல்லாம் சரணடைந்தன.

இதேசமயத்தில் வடக்கில் வெற்றிபெற்ற பாராளுமன்றப் படையினரால் இத் தோல்வியை மாற்றியமைக்க முடியவில்லே. மான்ட்ரோசின் செயல்களினுல் துன்புறுத்தப்பெற்ற லிவென், ட்ரென்டிலும் மெர்சேயிலும் (Mersey) இருந்த பகைவரை வெளியேற்றித் தம் வலியைப் பெருக்கிக்கொள்ளவேண்டியிருந்தது. எனவே, அரசர் கார்ன்வாலிலிருந்து தடையேதுமின்றி நியூபரியை வந்தடைந்தார். அதன்பிறகும் அரசப் படையோடு போரிட்ட மான்செஸ்டரின் தடுமாற்றத்திற்குப் பிறகு சண்டை கைவிடப்பட்டது. அது தொடர்ந்து நடந்திருந்தால் அப்போதே ஒருமுடிவு தெரிந்திருக்கும். ஆனுல், அதைவிட்டுச் சார்லஸ் ஆக்ஸ்ஃபோர்டிற்குச் சென்று, அங்கேயும் அதற்கு வெளியேயும் இருந்த படையினரை ஒன்றுசேர்த்துத் தம்மை பலப்படுத்திக்கொள்வதில் ஈடுபட்டார். பாராளுமன்றத்தார் அடைந்த இவ்விதத் தோல்விகளுக்குப் படைத்தலேவர்களின் போர்த்திறமின்மைமட்டும் காரணமன்று. பாராளுமன்றத்தாரிடையே போட்டிகளும் பொருமைப் பூசல்களும் மிகுந்திருந்ததே காரணமாகும்.

வெற்றி தோல்வியின்றி மூன்ருண்டுகளுக்குச் சண்டை நிகழ்ந்ததால், பொதுவாகப் போரினுல் உண்டாகும் சோர்வு இங்கிலாந்து முழுவதிலும் பரவியிருந்தது. லண்டன் மாநகர மகளிர் அரண்மனே வெளியில் கூடி, 'பிம் எனும் நாயை எங்களிடம் தள்ளுங்கள்" என்று கூப்பாடு போட்டனர். அந் நகர வணிகர் பல சதிகளில் இறங்கினர். ஆக்ஸ்ஃபோர்டில் கூடியிருந்த 'பாராளுமன்றம்' அமைதியை ஆர்வத்தோடு வரவேற்றது. இருதரப்பாரிடையேயும் சமாதானத்திற்கான பேச்சுவார்த்தைகள் தொடர்ந்து நடைபெற்றன. பாராளுமன்றத்தினர், பியூரிட்டன் திருச்சபை வேண்டுமென்றும், அரசரது ஆலோசகரைத் தண்டனேக்குள்ளாக்க வேண்டுமென்றும் கோரினர். ஆனுல், அரசரோ 'இங்கிலாந்து திருச்சபை, எமது முடி, எமது நண்பர்' ஆகிய மூவரையும் விட்டுக்கொடுக்க முடியாதென்று சூளுரைத்தார். இத்தகைய இரு துருவங்களுக்கிடையே சமாதானம் ஏற்படுவது கடினமே என்ருலும், செல்வாக்கு மிகுந்த பாராளுமன்றப் பிரபுக்கள், வாள்கொண்டு வெற்றி பெறுவதில் நம்பிக்கை கொள்ளவில்லே. எஸ்ஸக்ஸும் மான்செஸ்டரும், பிரஸ்பிடீரியச் சமயத்தையும் சமாதானத்தையும் கொண்டுவரும் முயற்சியில், லிவெனேடும் ஸ்காட்டியரோடும் சேர்ந்தனர். இத் திட்டத்தின் இரு பகுதிகளேயுமே தீவிரமாக எதிர்த்த பலர், படையிலும் அதற்கு வெளியிலும் இருந்தனர். பிம் இறந்த பிறகு,

பாராளுமன்றப் போர்க் கட்சியின் தலைவரான வேன், அரசரை அரியணையிலிருந்து இறக்கவேண்டுமென்று பேச ஆரம்பித்து விட்டார். 1643ஆம் ஆண்டிலிருந்து வெஸ்ட்மினிஸ்டர் குருமார் சபை தொடர்ந்துகூடிச் சமய ஏற்பாடு ஒன்றைக் கொண்டு வருவதைப்பற்றி ஆராய்ந்துவந்தது. ஏனெனில், பிஷப்புகளின் ஆட்சி அழிந்தபோதிலும், பலிபீடங்களும் சாரளங்களும் தூள் தூளாக உடைத்தெறியப்பெற்றபோதிலும், கொள்கை, அமைப்பு என்று பார்க்கும்போது நிரம்பாத வெற்றிடம் ஒன்று காணப்பட்டது. அலெக்சாந்தர் ஹெண்டர்சன் (Alexander Henderson) தலைமையில், ஸ்காட்டிய உயர் ஆணையாளரும் சமய குருமாரும், முழு கிர்க் திருச்சபைத் திட்டத்தை வற்புறுத்தினர். அவர்கள் வெற்றி பெற்றபோதெல்லாம் இந்த வற்புறுத்தல் மிகுதியாகியது. ஆயினும் வேன், வழக்கறிஞரின் பிரதிநிதியாக வந்த செல்டன் (Selden) போன்றோரின் தலைமையில் இருந்த சுயேச்சையாளர், ஸ்காட்டியரின் ஒவ்வொரு வாதத்தையும் எதிர்த்தனர். குறிப்பாக ஒருமுகப்பட்ட திருச்சபையையும், சமயம்சாராக் கோயில் பணியாளர் முறையையும், சமயச் சடங்குகளிலிருந்து விலக்குதற்காகச் சமயவிலக்கைப் பயன்படுத்தும் பழக்கத்தையும் எதிர்த்தனர்.

இச் சமயத்தில் மக்களாட்சி மாருதம் வீசிக்கொண்டிருந்தது. மில்ட்டன், பிரஸ்பிடீரியர் மேற்கொண்ட பத்திரிகைத் தணிக்கையை எதிர்த்து ‘அரியோபகிடிகா’ (Areopagitica) எனும் நூலை வெளியிட்டார். படைசார்ந்த ஜனநாயகவாதிகள் வரிசையில் வைத்து எண்ணத்தக்க ஜான் லில்பர்ன் (John Lilburne) என்பவர், அரசருடைய கொடுங்கோன்மையாயினும், பாராளுமன்றத்தின் கொடுங்கோன்மையாயினும், பாதுகாப்பாளரின்கொடுங்கோன்மையாயினும் அதனை எதிர்த்து, மக்களின் முதன்மையான உரிமையைக் காக்கும் பணியில் கழிந்த தமது நீண்ட வாழ்க்கையைத் தொடங்கினார். இவையெல்லாம் 1644–5ஆம் ஆண்டு மாரிக்காலத்தில் சேனையில் தோன்றிய நெருக்கடியோடு தற்செயலாகப் பொருந்தின.

‘இரும்பு மனிதர்’ (Ironside) என்று ரூபர்ட் இளவரசரால் அழைக்கப்பெற்ற கிராம்வெல், பாராளுமன்றச் சேனையின் நடு நாயகமாக விளங்கினார். மக்கள் படைகளின் மலர் எனத் தகும் குதிரைப் படையை உருவாக்கினார். படை வீரரின் அன்புக்குரியராக இருந்தார். ஒருமுறை அரசரை ஆதரித்த உறுப்பினர் ஒருவர் கண்டதைப் போன்றே, நாட்டுப்புறத் தையல்காரர் தைத்த உடைகளை அணிந்து, ‘நாட்டுப்புறத்தான் நடையோடு’ இருந்தார். அவர், முரட்டுத்தனமும் குதிரை இறைச்சியில் விருப்பமும்

கொண்டவர். பண்புமிக்க பகைவனுக்கருளும் குணத்திற்காகப் பாமரவீரர் அவரைப் பெரிதும் போற்றினர். அவரது தலைமை 'வெறும் ஆம்ஸ்டர்டாம்' என்று பகைவர் தூற்றினர். புனிதர்கள் (பியூரிட்டன்கள்) அவரது படைகளின் கருவாக இருந்தனர். கடவுளிடம் பயங்கொண்டவர்கள், நல்ல கட்டுப்பாடு இருக்குமானல், 'எதற்காகப் போரிடுகிறோம் என்ற அறிவும், அவ்வாறு அறிந்தவற்றின் மீது அன்பும்' கொண்ட எந்தப் படைத்தலைவரையும் பின்பற்றுவர் என்று கிராம்வெல் குறிப்பிட்டார். அமைதிக்காகவும் சமயப் பிரிவுகளை எதிர்த்தும் எழுந்த கூக்குரலுக்கு விடையாக ஸ்காட்லாந்தியர்மீது சுடுசொற்களை வீசினர். அதே போன்று நிச்சயமான வெற்றிக்காகப் போரிடாதவர்களைச் சேனையில் இருந்து நீக்கினர். எனவே, அவரது படையில் அணிவகுத்துச் செல்லும் பாதையில் இருக்கும் பழத்தோட்டம் எதிலும் சமயச் சொற்பொழிவாற்றும் திறம்படைத்த நூற்றுக்கணக்கான அதிகாரிகளும் படை வீரர்களும் இருந்தனர். இவ்வாறு பின்னாளில் வெற்றிகொண்ட ஆக்ஸ்ஃபோர்டு நகரத்துக் கிறிஸ்து கோயில் மண்டபத்தின் (Christ Church Hall) படிகளில் நின்று, படை வீரரும் சமய போதகருமான ஒருவர் சொற்பொழிவை நூற்றுக்கணக்கானவர் கேட்டு மகிழ்ந்தனர். ஆனல், பாப்டிஸ்டுகளும் (Baptists), அனபாப்டிஸ்டுகளும் (Anabaptists), தேடுவோரும் (Seekers), கிறிஸ்து நேரடியாகத் தோன்றி அரசாங்கப் பொறுப்பை ஏற்றுக்கொள்வார் என்று நம்பிய வெறியரும் (Fifth Monarchy men), சுயேச்சையாளரோடு சேர்ந்து வேலை செய்தனர். சேனையினர், வெற்றி வீரர் வில்லியத்தின் தளகர்த்தர்களுடைய சந்ததியாரே செல்வந்தர்கள் என்றும், அரசர் கொடுங்கோலர் என்றும், நாட்டினைத் திருத்தி அமைக்க ஆண்டவர் தங்களை அனுப்பினர் என்றும் பேசிக்கொண்டனர்.

ஸ்காட்டியர், கிராம்வெல் 'தீயிடுபவர்' என்று குற்றம் சாட்டப்பெற வேண்டுமென்று கூறிய அதே சமயத்தில், கிராம்வெல், பாராளுமன்றத்தில் தம்மிடத்திலிருந்தே நியூபரிச் சண்டையில் மான்செஸ்டர் தகுதியற்று விளங்கினர் என்றும், அரசரை அடிமைப்படுத்த விரும்பவில்லை யென்றும் குற்றஞ் சாட்டினர். அதன் பிறகு தோன்றிய நிகழ்ச்சிகள் அவருக்கு அனுகூலமாகவே அமைந்தன. 1645ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அக்ஸ்பிரிட்ஜ் (Uxbridge) என்னுமிடத்தில் கூடிய மாநாட்டில், சார்லஸ் பாராளுமன்றத்தினரின் நிபந்தனைகளை ஏற்க மறுத்ததால், சமாதானக் கட்சி சரிந்தது. அக் கட்சியினர், லாடைத் தூக்கிலிட்டு, தொழுகை நூலிற்குப் பதிலாக ஒரு புதிய 'தகவல் தொகுதி' (Directory)யை வெளியிட்டுத் தங்கள் அழிவைத் தாங்களே தேடிக்கொண்டனர்.

சேனைச் சீர்திருத்தத்தைப் பொறுத்தவரையில் கிராம்வெல்லைப் போலவே, வாலரும் சீர்திருத்தம் வேண்டுமென்று வற்புறுத்தினர். கிராம்வெல் உறுப்பினரிடையே சொந்த முறையிலான பூசல்களை நீக்கி, 'இரத்தப் பெருக்கெடுத்து இறந்துகொண்டேயிருக்கும்' நாட்டினைக் காக்கும் நல்ல கொள்கையை உருவாக்குவதில் நாட்டம் கொண்டார். ஏப்ரல் மாதத்தில் அவரது கட்சியினர் 'தன் மறுப்புச்' சட்டத்தையும் (Self denying Ordinance) 'புது மாதிரிப்' படைக்கான சட்டத்தையும் (New Model army) நிறைவேற்றினர். பாராளுமன்ற உறுப்பினர் எவரும் படையில் பதவி வகிக்க லாகாதென விதிக்கப்பெற்றது. 22,000 வீரர்களைக் கொண்ட புதிய சேனையின் ஜெனரலாக ஃபேர்ஃபாக்சும், மேஜர் ஜெனரலாக ஸ்கிப்பனும் (Skippon) நியமிக்கப்பெற்றனர். அப் படையினரின் ஊதியம், வரிகளிலிருந்து தரப்படுதல்வேண்டு மென்று வற்புறுத்தப்பெற்றது. எனவே, அது தொழில்முறை சார்ந்த சேனையாக இருந்ததேயன்றிப் பிரஸ்பிடீயருக்கு எதிராக இல்லை. ஃபேர்ஃபாக்ஸ், படை அதிகாரிகளாகச் சுயேச்சையாளர் களை மிகுதியாக அமர்த்தினர். சமுதாயத்தில் அவர்களுடைய நிலையைப்பற்றி அக்கறை காட்டவில்லை. படையினரிடமிருந்து ஒப்பந்தத்தை ஆதரிக்கும் வாக்குறுதி பெறப்பட்டது என்றாலும், அது கீழ்நிலையில் உள்ளோரிடம் வற்புறுத்தப்பெறவில்லை. கீழைச்சங்கம் ஏற்கெனவே போற்றிய வழக்கத்திற்கிணங்கச் சேனைவீரர் செஞ்சட்டை அணிந்திருந்தனர். மக்களில் மூன்றில் ஒரு பகுதியினர் படையில் சேர வற்புறுத்தப்பெற்றனர். பலர் அரசருக்காகப் போரிட்டனர். ஒருமாத காலத்திற்குள் படையில் பொதுநிலையாளரின் கோரிக்கை காரணமாகக் குதிரைப்படைக்குத் தலைமைதாங்கும் லெப்டினென்ட்-ஜெனரல் (Lieutenant-General) பதவி கிராம்வெல்லிற்குக் கிடைத்தது.

மான்ட்ரோஸுடன் சென்று இணைந்துகொள்ள வேண்டுமென்று கூறப்பெற்ற ஆலோசனைக்கும் ஆக்ஸ்ஃபோர்டைக் காக்கவேண்டு மெனும் உணர்விற்குமிடையே, சார்லஸ் தத்தளித்து, பிறகு தமது சேனையை இரண்டாகப் பிரித்தார். வடக்கே சென்று லீசெஸ்டர் நகரைக் கைப்பற்றினர். ஆயினும், மேற்கில் கோரிங்கினுடைய தவறுகளால் மனம் தளர்ந்து, பீதி கொண்டு, மறுபடியும் தெற்கு நோக்கிப் புறப்பட்டார். வழியில் மார்க்கெட் ஹார்பரோ (Market Harborough) என்னுமிடத்தில் அவரது படையைக் காட்டிலும் இரு மடங்கான படையோடு ஃபேர்ஃபாக்ஸ் வழிமறித்தார். இங்கேதான் ஜூன் மாதம் 14ஆம் தேதி நேஸ்பி (Naseby) சண்டை நடந்தது. ரூபர்ட், மறுமுறையும் பகைவர் பலமாக நிலைகொள்ள வாய்ப் பளித்தார். தமக்கு எதிரிலிருந்த பாராளுமன்றப் படையைத்

தோற்கடித்தார். ஆனல், அவர்களை அழிப்பதற்காக வெகுதூரம் துரத்திச்சென்ருர். அவர் திரும்பி வருவதற்குள் கிராம்வெல் அரசரின் மற்ருெரு குதிரைப்படையைத்தோற்கடித்துவிட்டுத் தமது மூர்க்கம் நிறைந்த வெல்ஷ் வீரர்களை ஒன்றுசேர்த்து, மன்னரின் எஞ்சிய படைகளையும் முறியடித்தார். வெற்றியாளர், 5000 கைதிகளோடு மன்னரின் போர்த் தளவாடங்களையும், இரகசியக் கடிதங்களையும் கைப்பற்றினர். அவ்வாறு கிடைத்த கடிதங்களைப் பாராளுமன்றத்தார் உடனே அச்சிட்டு நாடெங்கிலும் பரப்பினர். அக் கடிதங்கள் கத்தோலிக்கச் சமயத்திற்கு எதிரான சட்டங்களை ரத்து செய்வதற்காகவும், ஐரிஷ் படையைக் கொண்டுவருவதற்காகவும், அயல்நாட்டுக் கூலிப்படைகளைக் கொணர்வதற்காகவுமான அரசரின் திட்டங்களை அம்பலப்படுத்தின.

ஆண்டு முடிவதற்குள் ஃபேர்ஃபாக்ஸ், கோரிங்கை லாங்போர்ட் (Langport) எனுமிடத்தில் முறியடித்தார். மேலும், பிரிட்ஜ் வாட்டர் (Bridgwater) என்ற இடத்தைக் கைப்பற்றினர். இடையிலிருந்த வில்ட்ஷயர் (Wiltshire) காவற்படைகளை முறியடித்து பேசிங்கில் (Basing) புகழ்பெற்ற 'லாயல்டி ஹௌஸ்' எனும் மாளிகையையும் கைப்பற்றினர். ரூபர்ட் இளவரசர் பிரிஸ்டல் நகரில் சரணடைந்தார். அவ்வாறு செய்வதற்கு முன், மேற்குப் பகுதியை இழந்ததால் வேல்ஸில் படை திரட்டுவது இயலாதாகையால் தமது குறிக்கோள் நிறைவேருது என்று அறிவித்தார். அதனைச் சார்லஸும் ஒப்புக்கொண்டார். ஆனல், 'கடவுள், கலகக்காரர்களையும் துரோகிகளையும் நீண்டகாலம் வாழவிடமாட்டார் என்பதைக் கிறித்தவ சமயத்தைச் சேர்ந்தவனுகிய நான் கூறுகிறேன்' என்று பதில் எழுதினர். அவர் பலமுறை தம்மைச் சுற்றி வளைத்து நின்ற பாராளுமன்றப் பகுதிகளின் எல்லையிலமைந்த டன்காஸ்டருக்கும் (Doncaster) ஹன்டிங்டனுக்கும் சென்றுவந்த போதிலும், பகைவர் படையினை ஊடுருவிச்சென்று மான்ட்ரோஸுடன் இணைந்துகொள்ள முடியவில்லை. செப்டம்பர் மாதத்தில் மான்ட்ரோசே தம் நிலை இழந்தார்.

இன்வர்லாக்கி (Inverlochy)யில் பெற்ற வெற்றியிலிருந்து, மான்ட்ரோஸ் அநேகமாக ஹைலாந்தின்மீது ஆதிக்கம் செலுத்தினர். இருமுறை வெஸ்லியின் சேனையிலிருந்து அவசரமாக அனுப்பப்பெற்ற படைப் பிரிவினரை முறியடித்தார். 1645ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் ஃபோர்த் (Forth) நதியைக் கடந்துவந்து ஸ்டர்லிங்கிற்கு அருகே கில்சித் (Kilsyth) என்னுமிடத்தில் ஒப்பந்தக்காரரை இருகூருக்கினர். அதன் பிறகு கிளாஸ்கோ நகரில் புகுந்தார். ஆனல், நேஸ்பி சண்டையில் அரசர் கட்சிக்கு ஏற்பட்ட

தோல்வியினால் அவர் கனவு கலைந்தது. அவருக்குத் தருவதாக வாக்களிக்கப்பெற்ற நாடு மறையத்தொடங்கியது. அவருடைய ஹைலாந்தியர், லோலண்டு குடியானவர்களைப் படையில்சேர்த்துக் கொண்டதை வெறுத்தனர். தென்பகுதியினரைத் திருப்தி செய்வதற்காகக் கொண்டுவந்த கட்டுப்பாட்டு விதிகளையும் வெறுத்தனர். அதனோடு தங்கள் வீடுகளை நோக்கிச் சென்றுவிட்டனர். இங்ஙனம் மான்ட்ரோஸ் ஒருசில வீரர்களுடன் போர்டரில் வைத்தவிழ் வாங்காது காத்துநின்ற குடும்பங்களின் உதவியைப் பெறுதற்காக ட்வீட்சைடிற்குச் (Tweedside) சென்றார். அவர், கெல்சோ (Kelso) அடைந்தபோது நகரங்களில் இருந்த நடுத்தர வகுப்பாரின் ஆதரவு கிடைக்காமற்போகவே நல்வாய்ப்பு கிடைக்கும் எனும் நம்பிக்கையோடு மேற்குப்பகுதிக்குத் திருமபி வந்தார். செப்டம்பர் மாதம் 13ஆம் தேதி செல்கிர்க் (Selkirk) எனும் நகருக்கு அருகில், ஃபிலிப்ஃபாக் (Philiphaugh) என்னுமிடத்தில் லிவெனின் சகோதரர் டேவிட் லெஸ்லி (David Leslie) என்பவரால் திடீரென்று தாக்கப்பெற்றார். அவருடைய படை அழிந்தது. அவரும் ஹைலாந்திற்கு ஓடினார். அங்கே கோர்டன்கள் அவர் விருப்பப்படி மறுபடியும் படையெடுத்துவரச் சம்மதிக்கவில்லை. அதே சமயத்தில் அவர் தமது நண்பர்களை ஈவிரக்கமின்றிப் படுகொலை செய்ததால், ஒப்பந்தக்காரர் அவரை எதிர்ப்பது என்று முடிவு செய்தனர். கடுமையான மாரிக்காலம் முழுதும் வீணே படை ஒன்றைத் திரட்டும் முயற்சியிலீடுபட்டார். வசந்தகாலம் வந்ததும் தாம் போரிட்டு வெற்றி கொண்டதையெல்லாம் சார்லஸ் அழித்துவிட்டார் என்பதைக் கேள்வியுற்றார்.

அயர்லாந்தினின்றும் அழிவு வந்தது. கத்தோலிக்கருக்கும் அரசருக்குமிடையே சமாதானம் ஏற்படுத்தும் மோசமான கொள்கை உருவாகியது. முதலில் நிலம் சார்ந்த கலகமாகவும் ஓரளவு சமய எதிர்வினையாகவும் தோன்றிய 1641ஆம் ஆண்டுக் கிளர்ச்சி, 1642ஆம் ஆண்டில் இன, அரசியல் அடிப்படையில் எழுந்த போராக மாறியது. ஆங்கிலப் பாராளுமன்றமும் அதிலிருந்த டப்ளின் பிரதிநிதிகளும் பேல் பகுதியில் வாழ்ந்த கனவான்களின் படைக்கலன் தாங்கும் உரிமையைப் பறித்தனர். ஐரிஷ் பாராளுமன்றத்தை அடக்கினர். கத்தோலிக்கருக்குச் சமயப் பொறை வழங்கமுடியாது என அறிவித்தனர். ஐரிஷ் போருக்காகப் பணம் அளித்தவர்களுக்கு மில்லியன் கணக்கான ஏக்கர் நிலங்களை ஒதுக்கினர். படுகொலை, கொள்ளை ஆகியவற்றோடு இப் போர் நடந்தது. சதுப்பு நிலங்களில் போரிட்ட ஆங்கிலத் தளகர்த்தர் ஒருவர் 'வாத்து வேட்டை, இதற்கிணையாகாது என்று எழுதினார்'. இப்போர் நடந்தபோது அரசுக்கேட்டின் ஐந்து கூறுகள் தோன்றின.

பாராளுமன்றத்திற்காக ஆட்சிபுரிந்த டப்ளின் அரசாங்கம், அல்ஸ்டரைக் காத்துநின்ற ஸ்காட்டியப்படை, சார்லஸுக்காகப் போரிட்ட ஆர்மாண்ட், ஐரிஷ் கூட்டிணைப்பு உறுப்பினர் ஆகியோர் அமைதியின்மைக்குக் காரணமாவர். ஐரிஷ் கூட்டிணைப்பு உறுப்பினர் தனித் தலைமைச் சபையைக் கொண்டிருந்தனர். நாணயங்களை வெளியிட்டு, வரிவசூலும் செய்தனர். ஆனால், அவர்கள் ஓவன் ரோ ஓ'நீல் (Owen Roe O'Neill) போன்ற தேசியவாதிகளாகவும், உரிமைக் கட்டுப்பாடுகள் மூலமாக அரசருக்கு ஆதரவு தரும் செல்வந்தர்களாகவும் பிரிந்திருந்தனர். அரசரது தேவை, நெருக்கடி நிலையை அடைந்தபோது அவ்வித உரிமைக் கட்டுப்பாடுகள் மாற்றியமைக்கப்பட்டன. 1643ஆம் ஆண்டு, போர் நிறுத்த ஒப்பந்தம் எதையும் தீர்மானிக்கவில்லை. இங்கிலாந்தின்மீதும் குடியேற்றக் கொள்கைமீதும் பற்றுறுதி கொண்டிருந்த ஆர்மாண்ட், ரோமானியத் திருச்சபையின் ஆதிக்கத்தை ஏற்க மறுத்தார். அதேபோன்று அல்ஸ்டரை அழிக்க, உதவி அளிக்கவும் அவர் ஒப்பவில்லை. 1645ஆம் ஆண்டில் சார்லஸின் கத்தோலிக்கப் பேராளரான கிளமார்கன் என்பவர் ராணியாரின் உதவியோடு போப்பின் பிரதிநிதியாகிய ரினூக்கினி (Rinuccini) என்பவரோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார். இவ்வொப்பந்தம் கத்தோலிக்க லார்டு-லெப்டினென்ட் என்ற கவர்னரையும், கத்தோலிக்கர் நிறைந்த பாராளுமன்றம், திருச்சபை, பல்கலைக் கழகம் ஆகியவற்றையும் தருவதாக வாக்குறுதி அளித்தது. கிளமார்கன், ஆர்மாண்டைச் சமாதானப் படுத்த முயன்று தோல்வி கண்டார். எனவே, ஆர்மாண்டை அரசர் தமது கட்சியினின்றும் நீக்கினர். 1646ஆம் ஆண்டில், செஸ்டர் வீழ்ச்சியுற்றபோது தளகர்த்தரான ஹாப்டன் சரணடைந்ததால் அயர்லாந்தின் படைகள் இங்கிலாந்திற்குள் புகமுடியவில்லை. செப்டம்பர் மாதத்தில் ஓ'நீல் ஸ்காட்லாந்துப் படைகளை பென்பெர்ப் (Benberb) என்னுமிடத்தில் செம்மையாகத் தோற்கடித்தார். போப்பின் தூதர் மிதவாத கூட்டிணைப்பாளரைக் கைது செய்தார். 1647ஆம் ஆண்டில் ஆர்மாண்ட் டப்ளினைப் பியூரிட்டன்களிடம் ஒப்படைத்ததால் பிராட்டஸ்டென்ட் அயர்லாந்து தப்பியது.

இத்தகைய உச்சநிலை தோன்றுமுன்னரே இங்கிலாந்தில் சார்லஸ், தமது போராட்டத்தைக் கைவிட்டார். பகைவர்கள் ஆக்ஸ்ஃபோர்டு நகரை நெருங்கியபோது அவர், ஒரு வேலைக்காரனைப்போன்று வேடமணிந்து அந் நகரிலிருந்து தப்பிச்சென்று 1646ஆம் ஆண்டு மே மாதம் நாட்டிங்காம்ஷயரில் இருந்த லிவெனின் பாசறையைச் சென்றடைந்தார். ஜூன் மாதத்தில் ஆக்ஸ்ஃபோர்டு நகரம் சரணடைந்தது. வேல்ஸ் இளவரசர்,

ஜெர்ஸியை (Jersey) அடைவதற்கு சிசிலியைவிட்டு நீங்கினர். இறுதியில் அவர் ஃபிரான்சிற்குச் சென்றுவிட்டார். யார்க் கோமகன் சிறைப்பட்டார். ஆகஸ்ட் மாதத்தில் அரசரின் கடைசிப் படை ராக்லனில் (Raglan) முறியடிக்கப்பெற்றது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, நார்வேயைச் சார்ந்த வேலைக்காரன் வேடத்தில் ஸ்காட்லாந்து திரும்பிய மான்ட்ரோஸ், இப்போது அமைச்சரின் பணியாளராக நார்வே கப்பலொன்றில் வெளியேறினர். அரசரின் கொடி இறங்கியது. முதல் உள்நாட்டுப் போரும் முடிவடைந்தது.

## சமகால நிகழ்ச்சிகள்

1643 சர் தாமஸ் ப்ரௌன் (Sir Thomas Browne) எழுதிய 'Religio Medici'.

ராக்ராய் (Rocroi) சண்டை.

மஸாரின் (Mazarin) என்பவரின் ஆதிக்கத் தொடக்கம்.

–1715. பதினான்காம் லூயியின் ஆட்சி.

1644 சைனாவில் மஞ்சூக்கள் (Manchus), மிங் (Ming) குலத்தினரை நீக்கித் தங்களுடைய குலத்தைத் தோற்றுவித்தல்.

மில்ட்டன் எழுதிய 'Areopagitica'.

1645–69 காண்டியாப் (Candia) போர்.

பிரேஸிலில் (Brazil) போர்ச்சுகீசியர், டச்சுக்காரர் ஆட்சியை அழித்தல்.

1646 டூரன்னி (Turenne) பவேரியாவைத் தாக்குதல்.

ஹென்றி வாகன் (Henry Vaughan) எழுதிய 'Poems'.

## 11. முடியரசின் விழ்ச்சி, 1646–1649

சார்லஸ் ஆக்ஸ்ஃபோர்டு நகரைவிட்டு நீங்கும்போது பிரஸ்பிடீரியர் அல்லது சுயேச்சையாளர் ஆகியோரில் ஒருவரைத் தம் பக்கம் ஈர்த்து மற்றவரை அழிக்கும் நம்பிக்கையோடு செல்வதாகவும், மீண்டும் உண்மையில் மன்னராக வரும் நம்பிக்கை தமக்கு உண்டென்றும் கூறினர். இவ் வார்த்தைகள், அவரது படைகள் விழ்ச்சியுற்றதற்கும், அவரது தலை துணிக்கப்பெற்றதற்கும் இடையே இருந்த காலத்தில் அவர்தம் கொள்கையில் காணப்பெற்ற நெளிவை உணர்த்துவனவாக இருக்கின்றன. அவர் நிவார்க்கிலிருந்து (Newark), ஹோல்டன்பியிலுள்ள (Holdenby) புதிய சிறைச்சாலைக்குச் சென்றபோது, வழியில் மணிகள் ஒலித்தன. பிணியாளர் 'கேட்டி'லிருந்து விடுபட அவரிடம் வந்தனர். இவையெல்லாம் அவரின்றி இங்கிலாந்து வாழமுடியாது எனும் அவர்தம் நிலையான கருத்தினை உறுதிசெய்தன. அம் முடிபினையெய்தவேண்டி முரண்பட்ட உறுதிமொழிகளைத் தந்து காலத்தைக் கடத்த முனைந்தார். எனினும், திருச்சபையைக் கைவிடுவதில்லை என்று வாக்குறுதி அளித்ததற்கு மாறுக எதையும் செய்யவில்லை. தமது ஆயுட்காலத்திலோ அல்லது தமது மகன் காலத்திலோ முழுதும் மீட்கமுடியாத அளவிற்குத் தமது முதன்மை அதிகாரத்தையோ, படை வலிவையோ இழந்துவிட அவர் துணியவில்லை.

1647 ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் ஸ்காட்லாந்துப் படையினர், தமது சம்பள பாக்கியைத் தீர்த்துக்கொள்வதற்காக 400,000 பவுன்களைப் பாராளுமன்றத்தினிடமிருந்து பெற்றுக்கொண்டு, அரசரை அவர்களிடம் ஒப்படைத்ததோடு முதல் சட்டம் முடிவுற்றது. ஸ்காட்டியரின் இச் செயல் கெவலியரின் பற்களைப் பொடியாக்கிய 'காட்டிக் கொடுக்கும்' (Judas) செய்கையன்று. ஏனெனில், அவர்கள் முதலில் சார்லஸின் வாக்குறுதியிலிருந்து பிரஸ்பிடீரியச் சமயத்திற்கு ஆதரவு கிடைக்கும் என நம்பினர். ஆனல், அந்த நம்பிக்கை நாசமாகியது என்று அறிந்து ஏமாற்ற

மடைந்தனர். அதுமட்டுமன்றி, சார்லஸ், சுயேச்சையாளரோடு கூட்டுசேர்ந்துவிடுவார் எனும் அச்சமும் அவர்களை ஆட்கொண்டது. திற நயமுடைய ஆர்கைல், கிராம்வெல்லியன்களோடு ஒப்பந்தம் செய்துகொள்ள முனைந்தார். மேலும், ஸ்காட்லாந்து உள்நாட்டுப் போருக்குத் தயாராக இல்லை. இங்கிலாந்திற்கும் ஸ்காட் லாந்திற்குமிடையே இருந்த மிகுதியான பகைமை உணர்ச்சி இங்கி லாந்தின் இரு கட்சிகளையும், தங்களுக்குள் இருந்த வேற்றுமைகளை மறந்து ஒன்றாக இணைந்து செயல்படுமாறு தூண்டியது. அவர்கள் 1646ஆம் ஆண்டில் நியூகாசில் ஆலோசனைகள் (Propositions of Newcastle) எனும் உடன்படிக்கைக்கான யோசனைகளைச் சார்லஸுக்கு அனுப்பினர். அதில் பழையபடியே விட்டுக் கொடுக்காத நிலையில், அரசர் தமது நண்பர்களைப் பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்றும், இருபது ஆண்டுகளுக்கு நாட்டுப்படையை வைத்திருக்கலாகாதென்றும், பிரஸ்பிடீரியத் திருச்சபையை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்றும் கோரினர்.

ஹைடு போன்ற கெவலியத் திருச்சபையினர், கொள்கை துறந்து பியூரிட்டானியரின் ஆதரவைப் பெறுவதைவிட, இறுதி வரை ஆக்ஸ்ஃபோர்டை வைத்திருத்தல்மேல் என்று உணர்ந்தனர். ராணியாரும், ஃபிரான்சில் அவருக்கு ஆலோசனை கூறிய நெறி பிறழும் புன்மதிவாணரும், அரசரை இங்கிலாந்துத் திருச்சபையைக் கைவிடுமாறு வற்புறுத்தினர். ஆனால், அரசரோ முன்பு ஸ்ட்ராஃபோர்டினைக் கொல்ல, மனச்சான்றிற்கு மாறாக அனுமதித்ததைப் போன்று இச் சமயத்தில் தம் மனச்சான்றினை மீறப்போவ தில்லை என்று கூறினர். மேலும், 'சேனை, சமயத்தை வெல்லு வதைவிட, சமயம் சேனையைச் சீக்கிரம் வென்றுவிடும்' என்று குறிப்பிட்டார். ஸ்காட்டியரைச் சில ஆங்கிலப் பிரஸ்பிடீரியர் களோடு இணைத்த ஃபிரஞ்சுக்காரரின் ஆலோசனையை ஏற்ற சார்லஸ், 1647ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் சிலவற்றை விட்டுக் கொடுத்துச் சமாதானம் பேச முன்வந்தார். மூன்று ஆண்டு களுக்குப் பிரஸ்பிடீரியத் திருச்சபையை இங்கிலாந்தில் நிலை நிறுத்துவது என்றும், அதன்பிறகு இரு கட்சியினரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய சமய ஏற்பாட்டினைக் கொண்டுவருவது என்றும், நாட்டுப் படைமீதான கட்டுப்பாட்டை 10 ஆண்டுகளுக்குக் கைவிடுவது என்றும் அறிவிக்கப்பட்டது. இரண்டாவது உள் நாட்டுப் போருக்கும், 1660ஆம் ஆண்டு முன்னிலைமீட்சிக்குமான வித்தினை இங்கே காணமுடிகிறது.

ஆங்கிலப் பிரஸ்பிடீரியன் சமயம், சமய குருமார் சபையை விட, நேரடியான ஸ்காட்டியர் செல்வாக்கிற்கு உட்பட்டோரைவிட,

பரந்ததாக இருந்தது. ஆக்கம் சார்ந்ததாக இருப்பதைவிட எதிர் மறையானதாக இருந்த பிரஸ்பிடீரியன் திருச்சபையில், சமன் செய்யும் புரட்சிக்குப் பயந்து, சமயப் பிரிவுகளை விரும்பாது, படையினர் ஆட்சியை வெறுத்து நின்ற பல்லாயிரக்கணக்கானவர் பற்றுகொண்டிருந்தனர். தாங்கமுடியாத வரிச்சுமையினுல் தத்தளித்து நின்ற நாட்டு மக்கள், சேனையைக் கலைக்கவேண்டு மென்று வற்புறுத்தினர். அப்போது எஸ்ஸக்ஸ் இறந்துவிட்டார். ஆயினும், மான்செஸ்டர், வாலர், ஸ்கிப்பன், மாஸி (Massey) போன்ற படைத்தலைவர்கள் பியூரிட்டானியர் பக்கமிருந்தனர். பியூரிட்டானிய அரசியல் கருப்பொருளுக்கும், பழைமை சார்ந்த பண்பினுக்கும் பிரதிநிதிகளாக இருந்த அவர்தம் பாராளுமன்றத் தலைவர்கள், விடாப்பிடியும் உறுதியும் கொண்டவர்கள். 'ஐந்து உறுப்பினரில் ஒருவராகி' இரண்டாம் சார்லசிற்கு எதிரான விக்குக் கட்சித் தலைவராக வாழ்ந்த ஹோலஸ் போன்ருேரும், மூன்ரும் வில்லியத்திற்கு வரவேற்பளித்த விக்குத் தலைவராக வந்த மேனர்ட் (Maynard) எனும் வழக்கறிஞர் போன்ருேரும் அவர்களிற் சிலராவர். போர் நின்றது. புதுப் பாராளுமன்றத்தில் பியூரிட்டானியர் பெரும்பான்மைக் கட்சியாயினர். பெயரளவில் அவர்களது திருச்சபை முறை நடைமுறையிலிருந்தது. திருச் சபையை நிர்வகிக்கச் சபைகள் தேர்ந்தெடுக்கப்பெற்றன. அவர் களால் வகுக்கப்பெற்ற தகவல் தொகுதி (Directory) அதிகாரம் பெற்ற தொழுகை நூலின் இடத்தைப்பெற்றது. அவர்கள் சுயேச்சையாளரின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாது சமயம் சாராதார் போதனையைத் தடை செய்தனர். திருமூர்த்தக் கொள்கையை எதிர்ப்பவர்களுக்கு மரணதண்டனை விதிக்க வேண்டுமென்றனர். கிராம்வெல்லின் பழைய படை திரட்டும் பகுதியாகிய கீழ் ஆங்கிலியாவிலிருந்தும் சமயப் பிரிவுகளுக் கெதிராக விண்ணப்பங்கள் வந்து குவிந்தன. அதே சமயத்தில் லண்டன் மாநகர மக்கள் தங்கள் தலைவர்களைக் காட்டிலும் பியூரிட்டன் பித்துமிகுந்து காணப்பெற்றனர். அவர்கள் வலிமை மிக்க நாட்டுப் படை ஒன்றை வைத்திருந்தனர். போதனை யாளருக்குப் பணிந்து நடந்தனர். அன்பிற்குரிய எஸ்ஸக்ஸின் நினைவைப் போற்றி வாழ்ந்தனர்.

ஆனுல், பிரஸ்பிடீரியர்கள் படைக்கலைப்புத் திட்டங்கள் மூலமாகத் தங்களின் நற்கூறுகளை இழந்தனர். அத் திட்டங்களில் அவர்களுடைய அரசியல் நோக்கம் வெளிப்படையாகத் தெரிந்தது. அவைகளின்படி சேனுதிபதியான ஃபேர்ஃபாக்ஸைத் தவிர மற்ற எல்லாத் தளபதிகளும் வேலையைவிட்டு நீக்கப்படவேண்டும், காமன்ஸ் சபை உறுப்பினர் எவரும் இங்கிலாந்தில் படைப்பதவி

வகிக்கக்கூடாது. நாட்டுப் படையைத் தவிர வேறெந்தக் காலாட் படையும் ஆங்கிலக் கோட்டைப் பாதுகாப்புப் படையில் பணிபுரியக்கூடாது. அயர்லாந்திற்கான புதிய படைக்கு ஸ்கிப்புன் என்பாரும், மாஸியும் தலைவர்களாக இருக்கவேண்டும். அப் படையில் எல்லா அதிகாரிகளும் ஒப்பந்தத்தைக் காப்பதாக உறுதி எடுத்துக்கொள்ளவேண்டும். பியூரிட்டானியர் செல்வாக்கு பெற்ற பாராளுமன்றம் இப் புதுப் படையில் தன்னிச்சையாக வந்துசேர விரும்பிய தொண்டர்களின் நம்பிக்கையை நேர்மையற்ற முறையில் நிராசையாக்கியது. பழைய படையைச் சார்ந்த எல்லோருடைய வெறுப்பையும் பெற்றது. படையினருக்கு அளிக்க வேண்டிய சம்பள பாக்கித்தொகை மிகுதியாக இருந்தது. குதிரைப் படையினருக்கு 43 வாரச் சம்பளம் கொடுக்கப்படவில்லை. பாராளுமன்றம் ஆறுவாரச் சம்பள பாக்கியே அளிக்க முன்வந்தது. மேலும், போர்ச்செயல்களின் விளைவாக ஏற்பட்ட சேதத்திற்கு இழப்பீடு அளிக்கவேண்டுமென்ற கோரிக்கையைப் புறக்கணித்தது. அவ்வாறு விண்ணப்பம் செய்பவர்களுக்கு 'நாட்டின் பகைவர்' என்று பட்டம் சூட்டியது.

இவற்றின் விளைவாக 1647ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் படையில் கலகம் தோன்றியது. அதனோடு பாராளுமன்றத்திற்குப் போட்டியாக எழுந்த படைப் பாராளுமன்றத்தைப் போன்ற சபை ஒன்றும் நிறுவப்பெற்றது. அதில் 'கிளர்ச்சியாளர்' (agitators) அல்லது ஒவ்வொரு படைப் பிரிவிலிருந்தும் (regiment) தேர்ந்தெடுத்து அனுப்பப்பெற்ற பேராட்கள் நிறைந்திருந்தனர். 'எல்லாம் அல்லது எதுவுமில்லை' என்பதே அவர்களது குறிக்கோளுரையாக இருந்தது. பாராளுமன்றம், தங்களைச் சிறிது சிறிதாகச் சிதைக்கத் திட்டமிட்டது என ஐயுற்ற அவர்கள், அதனைக் கைவிடுமாறு படைத் தலைவருக்கும் விண்ணப்பம் விடுத்தனர். தொண்டர்களையும் வேண்டிக்கொண்டனர். பிரபுக்கள், கோவில் மகன்மை (tithe), மற்றெல்லா நிலையான நிறுவனங்கள் ஆகியவற்றிற்கெதிரான மக்களாட்சிக் கருத்துக்கள் கொண்ட துண்டுப் பிரசுரங்கள் வெளியிடப்பெற்றன. அதே சமயத்தில் சேனை, அரசரைக் கைப்பற்ற வேண்டுமென்றும், பாராளுமன்றத்திருந்த 'கொடுங்கோலரிடம்' பயனுறுதியான முறையில் நடந்துகொள்ள வேண்டுமென்றும் வெளிப்படையாகவே விவாதித்தனர்.

இதற்கிடையில் பாராளுமன்றத்திற்குச் சார்லஸிடமிருந்து சமாதான விருப்பறிவிப்பு வந்தது. அதில் பாராளுமன்றத் தலைவர், சிலர் பங்கு பெற்றிருந்தனர். உதவியளிப்பதாக ஸ்காட்லாந்தியர் அளித்த வாக்குறுதியோடு லாடர்டேல் (Lauderdale) வந்து

சேர்ந்தார். மே மாதத்தில் ஹோல்டன்பியிலிருந்து சார்லஸை லண்டனுக்கோ ஸ்காட்லாந்திற்கோ கொண்டு போவது என்றும், வேல்ஸ் இளவரசரை ஃபிரான்ஸிலிருந்து வரவழைக்க வேண்டு மென்றும் பாராளுமன்றத்தினர் தீர்மானித்தனர். ஜூன் மாதம் முதல் தேதியிலிருந்து படைக்கலைப்பு தொடங்க வேண்டுமென்று உத்தரவு பிறப்பித்தனர். சேனையினர் எதிர்த்தால் சமாளிப்பதற் கென்று நம்பகமான படைகளைத் திரட்டினர்.

மிதவாதியான ஃபேர்ஃபாக்ஸ் சேனையின் குறைகளைத்தீர்க்காது அதனைக் கலைக்கும் பாராளுமன்றத்தின் எண்ணத்தை எதிர்த்தார். லெப்டினென்ட் ஜெனரலாகிய கிராம்வெல் பாராளுமன்றத்திற்குத் தமது எதிர்ப்பைத் திட்டவட்டமாக அறிவித்தார். அதுவரை, அவர் பாராளுமன்றத்தை ஆதரித்தவர்தான். 'பாராளுமன்றத்தின் அதிகாரம் வீழுமானல் நாட்டில் குழப்பத்தைத் தவிர வேறொன்றும் இருக்காது' என்று தம்முடைய அதிகாரிகளுக்கு அறிவுறுத்தியவர். அவருடைய ஆதரவு மிகுதியாக இருந்ததைக் கண்டு லில்பர்ன் (Lilburne) என்பவர், பாராளுமன்றம், பெருஞ்செல்வமும் பண்ணையு மளித்து அவரை விலைக்கு வாங்கிவிட்டது என்று முடிவு செய்தார். ஆனல், அவருடைய கடிதங்களில் 'சச்சரவு மிகுந்த காலத்தின்' சோர்வும், இரத்தம் சிந்தப்பட்டதை எளிதில் மறந்த மக்களின்மீது கொண்ட சீற்றமும் வெளிப்படுகின்றன. படையினரிடையே 'ஆழ்ந்த துன்ப உணர்வு' காணப்படுகின்றது என்று பாராளு மன்றத்தை எச்சரித்தார். இதனல் அவரைக் கைது செய்யுமாறு பல குரல்கள் காமன்ஸ் சபையில் எழுந்தன. ஸ்காட்டியர் படை யெடுத்து வரத் திட்டமிட்டு இருப்பதையும், அவர்களை எதிர்க்கக் 'கிளர்ச்சியாளர்' (agitators) ஆயத்தமாக இருந்தனர் என் பதையும் அவர் அறிந்தார். ஹோல்டன்பியிலிருந்து அரசரைப் பாராளுமன்றத்தினர் வெளியே கொண்டு செல்வதைத் தடுப்பதற் காகவும் ஆக்ஸ்ஃபோர்டிலிருந்த பீரங்கிப் படையைக் கைப்பற்றுதற் காகவும், மே மாதம் 31ஆம் தேதி கார்னெட் ஜாய்ஸ் (Cornet Joyce) என்பவரை அனுப்பினர். சில நாட்களில் சேனையுடன் சேர்ந்து கொள்வதற்காக நியூமார்க்கெட் என்னுமிடத்திற்குச் சென்றர். அதே சமயத்தில் அரசரைக் காக்கும் முயற்சி ஒன்று நடைபெற்றது என்ற வதந்தியினல் பீதியடைந்த ஜாய்ஸும் அரசரோடு அங்கு வந்து சேர்ந்தார்.

இவ்வாறு 1647 ஆம் ஆண்டு முடிய இருந்த மற்ெறாரு கட்டம் ஆரம்பமாகியது. இக் கட்டத்தில் சேனையினர் அரசரோடு பேச்சு வார்த்தை நடத்தினர். பாராளுமன்றத்தின்மீது பலாத்காரமாகத் தங்களது ஏற்பாட்டைத் திணிக்க முயன்றனர். கிராம்வெல்,

சேனையினர் படைவீரராக அன்றிச் சாதாரண குடிமக்களாகச் செயலாற்ற வேண்டுமென்று விவாதித்துக் 'கிளர்ச்சியாளரை'ச் சிறிது காலத்திற்கு அடக்கி வைத்திருந்தார். ஆனால், சேனையிலிருந்த பொதுநிலையாளர், பிரஸ்பிடீரியத் தலைவர்கள் காமன்ஸ் சபையிலிருந்து வெளியேற்றப்பட்டாலொழிய அச் சபையை நம்ப முடியாதென்றனர். கிராம்வெல்லினுடைய மருமகன் அயர்ட்டன் (Ireton) என்பவரின் தூண்டுதலின்பேரில் நீடித்த பாராளுமன்றத்தை உடனே கலைக்கவேண்டுமென்றும், குறுகிய காலப் பாராளுமன்றங்கள் வேண்டுமென்றும் கேட்டனர். அவர்கள், அரசரை அழைத்துக்கொண்டு நியூமார்க்கெட்டிலிருந்து ரீடிங்கிற்கும் (Reading) பெட்ஃபோர்டிற்கும் (Bedford) திரிந்துகொண்டு இருந்த காலத்தில் பாராளுமன்றத்தினர் தங்களுடைய போர்த்திட்டத்தினைக் கைவிடுவதாகத் தெரியவில்லை. ஹோலஸ், மாஸி, மேனர்டு, வாலர் போன்ற சேனையினால் கண்டிக்கப்பெற்ற பதினொரு உறுப்பினரும் வெளியேறுவதாகத் தெரியவில்லை. ஆனால், கிராம்வெல் மீண்டும் லண்டன் நகர்மீது படையெடுத்துச் செல்லவேண்டுமென்று தீவிரவாதிகள் கூறியபோது, பலவந்தமாகக் கொள்ளப் பெற்ற லண்டன் நகரம் பயனேதும் அளிக்காது என்று வாதாடி, அவர்களைத் தடுத்தார்.

கிராம்வெல்லின் வாதம் பாராளுமன்றத்தைப் பொறுத்தவரை யலித்தது. ஆனால், லண்டன் நகரைப் பொறுத்தவரையில் பிழைபட்டது. லண்டன் நகரப் பொதுச்சபை (Common Council) பழம்படைப் பிரிவுகளைச் சார்ந்த வீரர்களை வேலையினின்றும் நீக்கியது. தொழிற்பயிற்சியாளர் ஒப்பந்தம் வேண்டுமென்றும், நகரத்தின் தனிப்படை வேண்டுமென்றும் கிளர்ச்சி செய்தனர். மக்கள் கூட்டமாக வந்து காமன்ஸ் சபையைச் சுற்றி வளைத்துக் கொண்டு, சார்லஸை லண்டன் நகருக்கு அழைக்குமாறு அச் சபையைக் கட்டாயப்படுத்தினர். ஆனால், அவர்கள் பாதுகாப்புக் குழுவை (committee of safety) அமைத்து மாஸியைத் தளகர்த்தராக நியமித்தபோது சேனை அணிவகுத்து முன்னேறியது. தன்னிடம் தஞ்சம் புகுந்த ஏறக்குறைய 80 பாராளுமன்ற உறுப்பினர்களோடு வந்த சேனை ஆகஸ்ட் மாதம் 6ஆம் தேதி லண்டன் மாநகரில் நுழைந்தது. குதிரைப்படை, ஹைடு பார்க்கில் (Hyde Park) வந்து நிரம்பியபோது பிரஸ்பிடீரியத் தலைவர்கள் தலைமறைந்தனர் அல்லது வெளிநாட்டிற்குத் தலைதெறிக்க ஓடினர்.

இவ்வித நிகழ்ச்சிகள் இன்றியமையாதனவாயின. ஏனெனில், அரசர், சேனைக்கும் மாநகருக்கும் போர் மூட்டிவிடுவதில் தீவிரமாக

இருந்தார். அவரைச் சுற்றியிருந்த ஸ்காட்லாந்தியரின் ஆட்கள் மும்முரமாக வேலை செய்தனர். கோடைக்காலம் முழுதும் அரசருடன் சமாதானம் செய்துகொள்ள சேனைத்தலைவர்கள் அரும் பாடுபட்டனர். அரசர், தம்முடைய மக்களையும் சமய குரு மாரையும் பார்க்க அனுமதித்தனர். ஒளிவு மறைவு இன்றிப் பேசு மாறு வேண்டினர். தங்களுக்காக எதையும் கேட்கவில்லை என்று அவர் நம்ப வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அரசரின் யோசனைகளுக்கு ஏற்றவாறு சில திருத்தங்களைச் செய்து அவர்கள் கொண்டுவந்த முன்மொழித் தலைப்புகள் (Heads of the Proposals) எனும் திட்டம் அதுவரையில் வந்த திட்டங்களைவிடத் தாராள மானது. உடனடிப் பாதுகாப்பிற்கான துணைவாசகங்களில் ஒன்று, பத்து ஆண்டுகளுக்கு நாட்டுப்படையின்மீது பாராளு மன்றம் ஆதிக்கம் செலுத்த வேண்டுமென்றது. அரச ஆதர வாளர்களை ஐந்து ஆண்டுகளுக்குப் பதவியிலிருந்தும், பாராளு மன்றத்திலிருந்தும் நீக்கிவைக்க வேண்டும். இருப்பினும் மன்னிப்பு, மறப்புச் சட்டத்தில் (Act of Oblivion) 5 பேர்களே விலக்கப்பெற்று இருந்தனர். திருச்சபையில் பதவி வகிப்பவரோ, ஒப்பந்தக்காரரோ அடக்கும் அதிகாரம் பெற்றிருத்தல் கூடாது. எல்லாவிதப் பிராட்டஸ்டென்டுகளுக்கும் சமயப்பொறை வழங்கப் பெறுதல்வேண்டும். அயர்ட்டன், நியாயம் வழங்குதற்கும், கோயில் மக்கமையைத் திரும்ப ஆலோசனைக்குக் கொண்டு வருதற்குமான சீர்திருத்தக்காரர்களின் கருத்து சிலவற்றை அதில் புகுத்தினர். ஆனால், அவருடைய அடிப்படைக்கொள்கை, சரியான முறையில் அமைந்த தொகுதிகளிலிருந்து இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பாராளுமன்ற உறுப்பினர் தேர்ந் தெடுக்கப் பெறுதல்வேண்டும் என்பதே. மேலும், நாட்டில் உயர் பதவிகளில் உள்ளவர் பத்து ஆண்டுகளுக்கு நியமனம் பெறவேண்டு மென்றும் கருதினர்.

ஸ்காட்லாந்தியர் இதைவிடச் சாதகமான ஒப்பந்தத்தைச் செய்துகொள்ள முன்வருவர் என்ற நம்பிக்கையிலும், சேனை தமது பிடியில் இருந்தது எனும் எண்ணத்திலும், சார்லஸ் முன்மொழித் தலைப்புகளை ஏற்றெடுத்தும் பார்க்கவில்லை. அவரது எண்ணம் ஒரு விதத்தில் சரியானதே. மக்களிடையே காணப்பெற்ற அமைதி வேட்கை, அரசருக்கு ஆதரவு தரும் உணர்வைப் பெருக்கியது. அதே சமயத்தில் சேனைத் தலைவர்கள் பாராளுமன்றத்தை முழுவதுமாக நம்பி இருக்கமுடியவில்லை.

கிராம்வெல்லும், அயர்ட்டனும் தனிப்பட்ட முறையில் அரசரோடு சமாதானம் செய்துகொள்ள விரும்பினர் என்பதில்

சந்தேகம் ஏதுமில்லை. ஆனால் அவர்கள், அரசர், குறுகிய நோக்குடைய பிரஸ்பிடீரியர்கள் ஆகிய இருநிலையான துருவங்களுக்கிடையே செயல்படவேண்டியிருந்தது. சமரசப் பேச்சில் காலதாமதம் ஏற்பட்டதால் மூன்றாவது சக்தியை எதிர்த்துச் சமாளிக்க வேண்டியதாயிற்று. பாராளுமன்றத்திலிருந்த சுயேட்சைக் கட்சி இரண்டாகப் பிரிந்திருந்தது. ஒரு பிரிவு குடியரசை விரும்பிய படைவீரர்களாகிய சமநிலைவாதிகள் (Levellers) பக்கம் சாய்ந்தது. மற்றொரு பிரிவாகிய மிதவாதச் சுயேச்சையாளரைப் பிரஸ்பிடீரியரோடு இணைக்கும் முயற்சியில், கிராம்வெல் ஈடுபட்டார். ஆனால், அக்டோபர் மாதவாக்கில் அவர் மூன்றாவது கட்சியைநோக்கிச் சென்றுகொண்டிருந்தார் என்பதற்கான அறிகுறிகள் தோன்றின. புட்னி (Putney) திருக்கோயிலில் நடைபெற்ற விவாதங்களிலும் உள்ளத்தை ஆராயும் பேச்சுகளிலும், சேனையின் கவுன்சில், படையில் தோன்றிய பிரிவுகளைப் பற்றி ஆராய்ந்தது. சமநிலைவாதிகள் (Levellers), அரசரோடு கொண்ட ஆன்மிகமற்றப் பேச்சு வார்த்தைகள் மூலமாகப் பெரும் பாவம் செய்துவிட்டதாகக் காரணங்காட்டி விளக்கினர். தங்களுக்கான உதவி பெறுவதற்காக 'எகிப்து சென்றனர்'. தங்களுடைய 'சேனையின் வழக்கு' (Case of the Army), 'மக்களின் ஒப்பந்தம்' ஆகிய நூல்களில் ஜனநாயகக் குடியரசைப்பற்றி விளக்கினர். அக் குடியரசு அனைவருக்கும் வாக்குரிமை, அடிப்படைச் சட்டங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் எழவேண்டுமென்றனர். அது மக்களின் இறைமைத் தன்மையை நிலைநிறுத்தி, சமயப்பொறை, மற்றும் தவிர்க்க முடியாத உரிமைகளில் பாராளுமன்றம் தலையிடுவதைத் தடுத்து நிறுத்தவேண்டுமென்றனர்.

இத்தகைய விவாதங்களில் இரண்டு அரசியற் கருத்துகள் மோதின. சமநிலைவாதிகள் புரட்சிக் குறிக்கோள்களைப்பற்றிப் பேசினர். சொத்து, இயல்புரிமையைச் சார்ந்ததாகும் என்று வில்ட்மேன் (Wildman) கூறினார். ரெயின்ஸ்பரோ (Rainsborough) என்பவர் இங்கிலாந்தில் மேன்மையான நிலையில் உள்ள ஒருவரைப் போலவே, மிக ஏழ்மை நிலையிலிருப்பவரும் வாழும் உரிமை பெற்றவர் என்று கூறி, எல்லோருக்கும் வாக்குரிமை வேண்டுமென்று வாதாடினார். ஆனால், வழக்கறிஞரான அயர்ட்டன், ஒப்பந்தங்களின் புனிதத் தன்மையை வற்புறுத்தி, நிரந்தரமாக நிலைத்த நலன்களே வாக்குரிமைபெறத் தகுதியுடையவை என்று எதிர்வாதம் புரிந்தார். இந்த இரு துருவங்களுக்கிடையிலும் கிராம்வெல் நயத்தோடும் உறுதியோடும் நடுநிலைமையான தீர்ப்பு அளித்துக் கொண்டிருந்தார். சமய உணர்ச்சிகளைத் தூண்டுவது தம்மைத்

தாமே ஏமாற்றிக்கொள்வதாகுமென்றும், உலோகாயதப் பகுத்தறிவு வாதம் என்றும், அது பயனளிக்காது என்றும் உணர்ந்தார். இங்கிலாந்தை ஸ்விஸ் கான்டன்களாகப் (Swiss cantons) பிரித்துவிடக்கூடிய, தவறாதது என்று கூறப்பெற்ற கருத்தியலான வாய்வியலை (abstract logic) வெறுத்தார். 'கிறிஸ்துவோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது சக்கையாகவும் சாணம் போன்றும்' இருந்த அரசாங்க அமைப்புகளில் பற்றுதல்கொண்டோ, அவற்றோடு ஒட்டிக்கொண்டோ இருக்கவில்லை. எனினும் மக்கள்மீது கொண்ட மாறாத அன்பு அவரை முடியாட்சியை ஆதரிக்கத் தூண்டியது.

இருந்தபோதிலும் நவம்பர் மாதத்தில் அவரது கொள்கையில் மாற்றம் தோன்றியது. சேனைத் தலைவர்கள் இடப்பக்கமாகச் சாய்ந்தனர். (ஜனநாயகம்) வழக்குமீறிய முறைமை ஒன்றே தம்மைத் தீர்மானம்கொள்ளச் செய்யுமென்று கூறிய அவர் இப்போது 'சமநிலைவாதிகள் கடவுளின் தோற்றமென்று கருதாமல் இருக்க முடியவில்லை' என்று குறிப்பிட்டார். சேனைக் கவுன்சில் 'முன்மொழிகளை' விடாது வற்புறுத்தியபோதிலும் ஜனநாயகவாதிகளின் கோரிக்கைகளை இணைத்து அம் 'முன்மொழிகளை'ப் புரட்சிகரமானதாக்க முனைந்தது. ஜனநாயகவாதிகளின் கோரிக்கைகளாவன: பாராளுமன்றம் விரைவில் கலைக்கப்பெறுதல்வேண்டும். அரசரின் மறுப்பாணை நீங்கவேண்டும். மக்களின் அடிப்படை உரிமைகள் நிலைநாட்டப்பெறுதல்வேண்டும். சேனைக் கவுன்சில் அரசருக்கு எதிராகப் போரிடும் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கவும் ஆயத்தமாக இருந்தது. ஆனால், இத்தகைய முன்னேற்றங்களோடு சேனையில் கடுமையான கட்டுப்பாடுகளும் விதிக்கப்பெற்றன.

இங்ஙனம் சமநிலைவாதிகள் கிராம்வெல்லின்மீது செல்வாக்குப் பெற்றுவந்த சமயத்தில், அவர்களுடைய அச்சுறுத்தல் காரணமாக அரசர் ஹாம்ப்டன் கோர்ட்டிலிருந்து (Hampton Court) தப்பிச் சென்றார். அரசரின் ஆலோசகர்களில் பலர், நீண்டநாட்களாக ஸ்காட்டியரிடமிருந்தோ சேனையிடமிருந்தோ சாதகமான உரிமைக் கட்டுப்பாடுகளைப்பெற, அவர் ஹாம்ப்டன் கோர்ட்டை விட்டு வெளியேறவேண்டுமென்று வற்புறுத்திவந்தனர். அரசர், காரிஸ்புரூக்கின் (Carisbrooke) கவர்னரான ஹாம்மண்ட் (Hammond) என்பவரின் ஆதரவு கிடைக்குமெனும் நம்பிக்கையில் வைட் தீவிற்குச் (Isle of Wight) சென்றார். இங்கிலாந்து இருந்தநிலையில் இதைவிட இடர் விளைவிக்கக்கூடிய தவறு வேறெதுவுமில்லை. தங்களது வாழ்விற்கே இடர் வந்துவிட்டதென்று எண்ணிய சேனையினர் ஒன்றாக இணைந்தனர். ஏற்கெனவே, ஸ்காட்லாந்தியருடைய படையெடுப்பிற்கு

அஞ்சியிருந்த பாராளுமன்றத்தினரோடு ஒப்பந்தம் செய்து கொள்ளவும் முன்வந்தனர். என்றாலும் படைவலியைக் கொண்டு அச்சுறுத்தியே, உறுப்பினர் மிகக் குறைந்த அளவிலே இருந்த காமன்ஸ் சபையில் 'நான்கு மசோதாக்களை' நிறைவேற்றினர். அவைகளில் ஒன்று நாட்டுப் படையைக் கட்டுப்படுத்தும் உரிமையை அரசரிடமிருந்து பறித்தது. மற்றொன்று பிரஸ்பிடீரியச் செல்வாக்கு மிகுந்த லண்டன் மாநகருக்கு வெளியேகூட, பாராளு மன்றத்திற்கு அனுமதி வழங்கியது. அரசரது நேர்மையைச் சோதிப்பது போன்று அவை நான்கும் அவரிடம் அனுப்பப்பெற்றன. டிசம்பர்மாதம் 24 ஆம் தேதி அவைகளை நிராகரித்து, 26 ஆம் தேதி ஸ்காட்லாந்தியரோடு ஓர் உடன்படிக்கை (Engagement) செய்து கொண்டார். பதவிகள், போர்ச்செலவு, வாணிபம் ஆகியவற்றில் ஸ்காட்லாந்திற்குச் சலுகைகள் பல அளிக்கப்பெற்றதோடு, இங்கிலாந்தில் மூன்றாண்டுகளுக்குப் பிரஸ்பிடீரியச் சமயத்தை நிலை நிறுத்த வேண்டுமென்றும், சமயப் பிரிவுகளை ஒழிக்கவேண்டு மென்றும் ஏற்பாடாயிற்று. ஸ்காட்லாந்தியர் நாட்டுப் படையின் மீதும், மந்திரிகளைத் தேர்ந்தெடுப்பதிலும், அரசருக்கிருந்த தனிச் சிறப்புரிமைகளைக் காப்பதாக வாக்குறுதியளித்தனர். மேலும், அரசருடைய தள்ளுரிமை (மறுப்பாணை)யையும் நிலைநிறுத்துவ தாகக் கூறினர். அதனால் ஆத்திரமடைந்த பாராளுமன்றம், அரசரோடு எவ்விதப் பேச்சுவார்த்தையும் நடத்தக்கூடாது என்ற ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது.

இங்ஙனம் எதனைத் தவிர்க்க வேண்டுமென்று கிராம்வெல் ஆறு மாதங்களாக ஓயாது பாடுபட்டாரோ, அப் போர், தலைவர் களிடையே கருத்து ஒருமைப்பாடு இல்லாத காரணத்தால் தோன்றியது. இப்போதும் சேனைத் தலைவர்கள் சார்லஸுக்கு இரகசியமாக வாய்ப்பொன்று அளித்தனர். அவருடைய புதல்வரில் ஒருவரை அரசராக்கும் வாய்ப்புபற்றியும் ஆலோசித்தனர்.

ஆனால், இளவரசராகிய யார்க் கோமகன் பெண்வேடம் பூண்டு ஹாலந்திற்குத் தப்பிஓடியதால், இந்த யோசனை கைவிடப்பெற்றது. கவுன்டிகளிலிருந்து அரசரை ஆதரித்து விண்ணப்பங்கள் வந்து குவிந்தன. அவரது பிறந்த தினத்தன்று விழாப்பந்தங்கள் கொளுத்தப்பெற்றன. எஸ்ஸக்ஸிலிருந்து ஆயிரக்கணக்கானோர் விண்ணப்பங்களோடு வந்தனர். ஸ்ட்ராண்டில் (Strand) அரசருக்குச் சாதகமான கிளர்ச்சிகளைக் குதிரைப் படைகொண்டு அடக்கவேண்டியதாயிற்று. இவற்றையெல்லாம் பார்க்கும்போது வாக்கெடுப்பு நடந்திருக்குமானால் அரச ஆதரவாளர்களே பெரும் பான்மையில் இருந்தது தெரியவந்திருக்கும்.

தனது எதிரிகளிடையே பிளவுகளும் பூசல்களும் மலிந்திருந்ததால் சேனே வெற்றிபெற முடிந்தது. அதனுடைய எதிரிகள், மாநகர மக்களையும் பிரஸ்பிடீரியர்களையும் திருப்திசெய்ய முயன்றனர். மேலும், பல சுயேச்சையாளரும், அரசரும், இரு சபைகளும் கொண்ட 'அடிப்படை அரசாங்கத்தை' நிலை நிறுத்த வேண்டுமெனும் தீர்மானத்தை ஆதரித்தனர். மேலும், ஸ்காட்டியரோடு ஒப்பந்தம் செய்துகொள்ள பல பிரஸ்பிடீரியர்கள் ஒப்புதல் தந்தபோதிலும், கெவலியரைக் கண்டு அஞ்சினர். சில கட்டுப்பாடுகளோடு கூடிய அரச முன்னிலை மீட்சியை விரும்பினர். எங்குப் பார்க்கினும் இதே போன்று தயக்கமும் தளர்ச்சியும் நிறைந்திருந்தன. கடற்படையில் பாதிக்குமேல் கலகத்திலீடுபட்டது. பல இடங்களில் சிறு சிறு கிளர்ச்சிகள் தோன்றின. ஆனால், நாட்டுப்புற மக்களில் பலர் கெவலியரோடு சேர மறுத்தனர். அதே சமயத்தில் ஸ்காட்லாந்து மோசமான முறையில் பிளவுபட்டுநின்றது. கிர்க் திருச்சபையினர் (கிர்க் சபை 'கணவனை ஆட்டிவைக்கும் அடங்காப் பிடாரி' போன்றது என்று மான்ட்ரோஸ் எழுதினர்) தம்முடைய செல்வாக்கைப் பயன்படுத்தி, லாங்டேல் (Langdale), மஸ்கிரேவ் (Musgrave) ஆகியோருக்கு உதவியளிக்கும் படைகளைத் திரட்டமுடியவில்லை. திருச்சபைக்கும் மக்களுக்கும் மேலே அரசருடைய அதிகாரத்தை நிலைநாட்ட முயன்ற தமது பகைவரான ஹாமில்டனையும், அவர்போன்ற செல்வந்தர்களையும், ஆர்கைல் எதிர்த்தார். டேவிட் லெஸ்லி (David Leslie) படையில் பணிபுரிய மறுத்தார். ஸ்காட்லாந்துப் படையினர் ஆகஸ்ட் மாதத்தில்தான் போர்டரைக் கைப்பற்றிய பிறகு கெண்டாலை (Kendal) வந்தடைந்தனர். அங்கிருந்து லங்காஷயரை நோக்கிப் புறப்பட்டனர்.

அதுபோது ஃபேர்ஃபாக்ஸ் கோல்செஸ்டரில் (Colchester) முற்றுகையிடப்பெற்று இருந்தபோதிலும் இங்கிலாந்து கவுன்டிகளில் ஒழுங்கு நிலைநாட்டப்பெற்றது. வேல்ஸ் இளவரசருடைய கப்பற்படை தேம்ஸை முற்றுகையிட்டதினுல் பயன் ஒன்றும் விளையவில்லை. கிராம்வெல், தொல்லை மிகுந்த பெம்புரோக் முற்றுகைக்குப் பிறகு தெற்கு வேல்ஸைக் கைப்பற்றினுர். அங்கிருந்து எதிர்ப்புகளை முறியடித்துக்கொண்டு, யார்க்ஷயரிலிருந்த லாம்பர்ட்டோடு (Lambert) இணைந்துகொண்டார். அவர் ஆகஸ்ட் மாதம் 17 ஆம் தேதி குன்றுகளைக் கடந்துசென்று பிரஸ்டனில் (Preston) 'உடன்பாட்டினர்' படையைத் (ஸ்காட்லாந்தியர்) தாக்கினுர். ஹாமில்டன் நடத்திச்சென்ற அப் படை கிர்க்பி லான்ஸ்டேல் (Kirkby Lonsdale) என்னும் இடத்திலிருந்து 45 மைல் தொலைவிலுள்ள விகான் என்னுமிடத்தை அடைந்தது.

கிராம்வெல் மூன்று நாட்கள் நடந்த போரில் அதனைப் பலத்த சேதத்துடன் முறியடித்தார். தரைப்படை வாரிங்டனில் (Warrington) சரணடைந்தது. அதன் பிறகு அவர், ஹாமில்டனையும் சிதறிக்கிடந்த அவரது குதிரைப் படையையும் கைப்பற்றினர். தப்பியவர்களைத் துரத்திக்கொண்டு அவர் வடக்கே சென்றபோது மேற்கு ஸ்காட்லாந்திய ஒப்பந்தக்காரர்கள் எடின்பர்க்கிற்கு அணி வகுத்துச் சென்றனர். அவர்களுடன், ஆர்கைலும் வெலிஸ்களும் இணைந்து கிராம்வெல்லுடன் உடன்படிக்கை செய்துகொண்டனர். கிராம்வெல், அக்டோபர் மாத ஆரம்பத்தில் எடின்பர்க் நகரில் புகுந்தார். அங்கே அரசரோடு உடன்படிக்கை செய்துகொண்டவரைப் பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்ற உறுதி மொழியையும் பெற்றார்.

இரண்டு இணையற்ற வீரர்களான மைக்கேல் ஜோன்ஸும் (Michael Jones) ஜார்ஜ் மாங்க்கும் (George Monck) அயர்லாந்தில் பாராளுமன்றத்தின் சார்பில் டப்ளினையும், அல்ஸ்டரின் பெரும் பகுதியையும் கைப்பற்றி வைத்திருந்தனர். அக்டோபர் மாதத்தில்தான் ஆர்மாண்ட் திரும்பத்தோன்றி, போப்பின் தூதுவர் பகைத்துக்கொண்ட மிதவாத கத்தோலிக்கரோடு இணையும் முயற்சியிலீடுபட்டார். அதற்கு முந்திய ஆண்டைவிட, விரைவில் உரிமைக் கட்டுப்பாடுகளை ஏற்றுக்கொண்டார். அதன்படி, டப்ளின், பாராளுமன்றத்தினரிடம் ஒப்படைக்கப் பெற்றது. அதற்கு மாறாக, அயர்லாந்து அநேகமாகச் சுதந்திரம் பெற்ற பாராளுமன்றத்தையும் கத்தோலிக்கத் திருச்சபையையும் பெற்றது. ஆனால், ரினூக்கினி (Rinuccini) வெறுப்புடன் அயர்லாந்தை விட்டுச் சென்றபோதிலும், அங்கிருந்த பிளவுகள் மறையவில்லை. அல்ஸ்டரிலிருந்த கத்தோலிக்கரும் லீன்ஸ்டரிலிருந்த கத்தோலிக்கரும் ஒருவர்மீது ஒருவர் பொறாமைகொண்டு வெறுப்புற்று நின்றனர். அதே சமயத்தில் அந்த இருசாராரும் ஆர்மாண்டிற்கு உதவியாக இன்ச்குயின் (Inchiquin) என்பவரால் கொண்டுவரப்பெற்ற மன்ஸ்டர் பிராட்டஸ்டென்டுகளிடம் அச்சங்கொண்டிருந்தனர்.

இவ்வாறு சேனை போரிட்டுக்கொண்டிருந்தபோது, பாராளுமன்றத்தில் பெரும்பான்மையினரான பிரஸ்பிடீரியர்கள் புறச்சமயத்திற்கு எதிராக மூர்க்கமான சட்டமொன்றை இயற்றினர். 1647 ஆம் ஆண்டு வெளியேற்றப்பெற்ற உறுப்பினரைத் திரும்பச் சேர்த்துக்கொண்டனர். 'அரசருடன் பேச்சுவார்த்தை கொள்வதில்லை' எனும் தீர்மானத்தைத் தள்ளினர். வேன், சாயி போன்ற அரசியல் சுயேச்சையாளர் அவருடன் இணைந்துகொண்டனர்.

செப்டம்பர் மாதத்தில் வைட் தீவில் நியூபோர்ட் என்னுமிடத்தில் சார்லஸோடு மாநாடு நடத்தினர். அப்போது ஹோலஸ், பிரஸ்பிடீரியை ஏற்றுக்கொள்ளுமாறு சார்லஸிடம் முழந்தாளிட்டு வேண்டினர். வேன், சமயப்பொறை அளிக்குமாறு கோரினர். அப்போதும் சார்லஸ், வழக்கமாகச் செய்வதுபோல் சிறிது சிறிதாக விட்டுக்கொடுக்கும் வழியையே பின்பற்றினர். உள்ளபடி மனமாற விட்டுக்கொடுக்க முன்வரவில்லை. மூன்றுண்டுகளுக்குப் பிரஸ்பிடீரியை ஏற்றுக்கொள்வதாகவும், அதன் பிறகு பழைமையான எபிஸ்கோபலியச் சமயத்தைக் கொண்டுவருவது என்றும் ஒப்புக்கொண்டார். நாட்டுப் படையை இருபது ஆண்டுகளுக்கும், அதிகாரிகளைப் பத்து ஆண்டுகளுக்கும் கட்டுப்படுத்துவதில்லையென்று உறுதியளித்தார். இதற்கிடையில் இந்த 'நிபந்தனைகளிலிருந்து தப்பிச் செல்வதுதான் நேர்மையானது' என்று எழுதினர். அரசர் உறுதியாகச் செயலொன்றிலும் ஈடுபடாததைக் கண்டு அதிருப்தி அடைந்த காமன்ஸ் சபையினர், அவருடைய உரிமைக் கட்டுப்பாடுகளை ஏற்க மறுத்தனர். ஆனல், அதற்கு முன்பே அயர்ட்டன் பாராளுமன்றத்திலிருந்து கழிக்கும் யோசனையைக் கூறினர்.

சேனையில் சமய வெறி தாண்டவமாடியது. போருக்குப் புறப்படுமுன் விண்ட்சரில் கூடிய அவர்களுடைய தொழுகைக் கூட்டத்தில் இவ் வெறி வெளிப்பட்டது. 'ரத்த வெறி பிடித்த சார்லஸ் ஸ்டூவர்டை, பதில் கூற அழைக்க வேண்டு'மென்று அறிவித்தனர். சேனைத் தலைவர்களையும் இவ் வெறி ஆட்கொண்டது. கோல்செஸ்டரைக் கைப்பற்றியதும், ஃபேர்ஃபாக்ஸ் பலரைப் படுகொலை செய்து பழியேற்றூர். கிராம்வெல், தம்மிடம் கைதானவர்களை மேற்கிந்தியத் தீவுகளில் அடிமைகளாவதற்கு விற்றூர். இரண்டாவது உள்நாட்டுப் போர் மதிப்பு வாய்ந்த பகைவரோடு நடக்கும் போர் என்று அவர்கள் எண்ணவில்லை. 'நம்மை அந்நியருக்கு அடிமைப்படுத்த' எண்ணும் பாவிகளுடன் தொடுக்கும் போர் என்று கிராம்வெல் கடிதமொன்றில் குறிப்பிட்டார். அவர், வடக்கு நோக்கிச் சென்றபோது எழுதிய கடிதங்களில், எவ்வாறு இந்த வெறியின் வேகம் அவரது தலைக்கு ஏறியது என்பது தெளிவாகின்றது. 'வெறுக்கப்பட்டு, ஏளனம் செய்யப்பெற்ற திருத்தொண்டரைக்' காப்பதற்காகக் 'கொடூரமான, ஆனல், நேர்மை குணம் படைத்த இறைவன்', 'மிடியன் காலத்தில்' செய்ததைப் போன்று கொடுங்கோலரை வீழ்த்தினர் என்று எழுதினர். பாராளுமன்றம் 'அமைதிப்படுத்த முடியாதவரை' அழிக்கட்டும் என்றும், 'ஆண்டவரின் அன்புக்குரியவரை, அவர்களுக்காக அரசரையும் ஒறுக்கவேண்டிய அளவிற்கு மேன்மையடைந்த

மக்களை' வெறுக்காதிருக்கட்டும் என்றும் பிரஸ்டன் வெற்றிக்குப் பின் சபாநாயகரை ஆணையிட்டுக் கேட்டுக்கொண்டார். நவம்பர் மாதத்தில் முற்றுகையிடப்பெற்ற பான்டி.:.பிராக்ட் (Pontefract) என்னுமிடத்தருகில், ஒரு மாதம் தங்கியபோது அவரது வெறியின் வேகம் தணிந்து தீர்மானமாக வெளிப்பட்டது. சட்ட முறைமைப் படியும் சமுதாயத் தேவைக்கிணங்கவும் தமது கோரிக்கை நேர்மையானதன்று என்று சொன்னால், சமயம் இருக்கின்றது என்று குறிப்பிட்டார். அழிவுதரும் இரண்டகமான நியூபோர்ட் ஒப்பந்தத்தின்மூலமாகவும், 'ஆண்டவரே அவருக்கு எதிராகச் சாட்சி சொன்ன' அரசர்மூலமாகவே அமைதி ஏற்படாது என்று வெளிப்படையாகத் தோன்றும் ஊழ்வினைகளை நம்பாத வேனிடம் கண்டித்துக் கூறினர். வெறுக்கத்தக்க பிரஸ்பிடீரியச் சமயத்தில் தலையிடுவதைவிட எத்தகைய பியூரிட்டன் சமயத்தையும் ஏற்றுக் கொள்ளலாம் என்றார். மேலும், பிரஸ்பிடீரியன் சமயம் ஒரு பாடத்தினை அறிந்தது என்று அவர் நினைப்பதற்கு ஸ்காட்லாந்து ஊக்கமளித்தது. சமநிலைவாதிகளோடு தொடர்பு கொண்டு அரசரை விசாரணைக்குக் கொண்டுவர வேண்டுமெனும் அவர் களுடைய கருத்தை ஏற்றுக்கொள்ளுமாறு அயர்ட்டனுக்கு ஆலோசனை கூறினர்.

சேனை அதிகாரிகள் அனுப்பிய இறுதி எச்சரிக்கைக்குப் பதிலாகச் சார்லஸ் எழுதிய கடிதத்தால், அவரிடம் லண்டன் நகருக்குத் திரும்பும் நம்பிக்கை இருந்தது என்பதும், பாராளு மன்றத்தைப் படைக்கெதிராக ஏவிவிடும் எண்ணமும் கொண் டிருந்தார் என்பதும் புலனாயின. இவைகள், கற்பனையுலகில் மிதந்து கொண்டிருந்த, கிறித்துவே நேரில் வந்து ஆட்சிப்பொறுப்பை ஏற்பார் என்று நம்பிய ஜெனரல் ஹாரிஸன் (General Harrison) போன்றவர் அடங்கிய வெறியர்களின் கை மேலோங்குமாறு செய்தன. அயர்ட்டனும் கிராம்வெல்லின் மைத்துனருமான டெஸ் பரோவும் (Desborough) அவர்களோடு சேர்ந்தார். அவர்கள் .:.பேர்.:.பாக்சின் தயக்கத்தைப் போக்கினர். அவரது அதிகாரத் தைப் பயன்படுத்தி, சார்லஸைக் காவல்காத்த ஹாம்மண்டைக் கைது செய்தனர். அரசரைத் தனித்து நின்ற ஹர்ஸ்ட் எனும் அரண்மனைக்குக் கொண்டு சென்றனர். லண்டன் மாநகருக்குள் புகுந்து, சேனையினரின் சம்பளத்திற்கு வேண்டிய பணத்தைப் பெற்றனர். அதேசமயத்தில் பாராளுமன்றத்தைக் கலைக்க வேண்டுமென்றும், அரசரை விசாரணைக்குக் கொண்டுவரவேண்டு மென்றும் கோரி அறிக்கைகள் வெளிவந்தன.

பிரஸ்பிடீரியர் மட்டுமன்றிப் படைசாரா ஆங்கிலேயர் அனைவரும் சேனையை எதிர்த்தனர். .:.பியன்னஸ் போன்ற

சுயேச்சையாளர், சார்லஸின் நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றனர். வேனும் அல்கர்னுன் சிட்னியும், அரசரைக் கொல்லும் பேச்சை ஏற்க மறுத்தனர். பாராளுமன்றத்தினர் டிசம்பர் மாதம் 5ஆம் தேதி அரசருடைய பதிலைச் சமாதானத் திற்கான அடிப்படையாகக் கொள்ளவேண்டுமென்ற தீர்மானத்தை நிறைவேற்றினர். பாராளுமன்றம் இறுதியாகச் சுதந்திரத்துடன் நிறைவேற்றிய இத் தீர்மானத்தை ஆதரித்து 129 உறுப்பினரும் எதிர்த்து 83 உறுப்பினரும் வாக்களித்தனர். ஆனால், மறுநாள் விடியற்காலையில் 143 உறுப்பினர்களைக் கர்னல் பிரைட் (Pride) என்பவர் கைது செய்தார் அல்லது வெளியேற்றினார். அன்று இரவு புரட்சி முடிவடைந்தது. கிராம்வெல், லண்டன் நகர் வந் தடைந்தார்.

வெற்றி பெற்ற சேனையினர் அவ்வாண்டு முடியும்வரை தயங்கி நின்றனர். ஃபேர்ஃபாக்ஸ், பிரஸ்பிடீரிய குருமார், வழக்கறிஞர் ஆகிய அனைவரும் அவர்களை எதிர்த்தனர். ஆனால், விண்ட்சரில் வைக்கப்பெற்று இருந்த சார்லஸுடன் இறுதியாக நடத்திய பேச்சுவார்த்தை முறிந்தது. சார்லஸ் தம்முடைய தள்ளுரிமையைத் துறந்து எதிர்காலத்தை இழக்கத் தயாராக இல்லையென்றும், திருச்சபையின் நிலங்களை விற்க அனுமதிக்க முடியாதென்றும் அறிவித்தார். காமன்ஸ் சபையில் 'எஞ்சியிருந்த உறுப்பினர்' (rump) 1649ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் வாரத்தில் பிரபுக்கள் சபையின் சம்மதம் தேவையில்லையென்று கூறி, 135 ஆணையாளர் அடங்கிய உயர் நீதிமன்றம் ஒன்றை அமைத்தனர். அவர்களில் இறுதியாக 59 ஆணையாளர்களே வற்புறுத்தலின் பேரில் மன்னருக்கு மரணதண்டனை விதிக்கும் ஆணையில் கையொப்பமிட்டனர்.

எந்த நீதிபதியும் இந்த உயர் நீதிமன்றத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்க மறுத்ததால் சார்ஜென்ட் பிராட்ஷா (Sergeant Bradshaw) என்பவர் தலைமை நீதிபதியாக அமர்ந்தார். வெஸ்ட் மினிஸ்டர் ஹாலில் கூடிய இந் நீதிமன்றத்தில், வரம்பிற்குட்பட்ட அதிகாரம் செலுத்த அனுமதிபெற்ற அரசர், கொடுங்கோலாட் சியை ஏற்படுத்த முயன்று, நம்பிக்கைக்குக் கேடான முறையில் மக்கள்மீது போர் தொடுத்தார் என்று குற்றஞ் சாட்டினர். எந்த நீதிமன்றமும், குறிப்பாகக் காமன்ஸ் சபையினால் ஏற்படுத்தப் பெற்று வற்புறுத்தலுக்குட்பட்டு இருந்த ஒரு நீதிமன்றம், அரசரை விசாரணை செய்ய முடியாது என்று சார்லஸ் பதிலளித்தார். சட்டப்படி அவர் வாதத்தினை மறுக்கமுடியாது. தமது குடிமக்கள் யாவருடைய உண்மையான சுதந்திரத்தைக் காக்கவே தாம் பாடு

பதற்காகவும், சட்டமுறையில் அமையாத ஆட்சியாளர் சட்டங்கள் இயற்றினால் அச் சுதந்திரம் அழிந்துபடும் என்றும் கூறினர்.

நீதிமன்ற மண்டபத்தில் 'ஆண்டவர் அரசரைக் காக்கட்டும்' என்று எழுந்த கூக்குரல்களும், வீதிகளிலே மக்கள் விட்ட கண்ணீரும், தம்முடைய இடத்திலிருந்து ஃபேர்ஃபாக்ஸ் சீமாட்டி கிராம்வெல் ஒரு துரோகி என்று கூவியதும் இவ் விசாரணையின் போது மக்களின் மனநிலை என்ன என்பதை விளக்குவதாக இருக்கின்றன. ஸ்காட்டியர், குருமார் சபை, டச்சுப் பாராளு மன்றம் ஆகியோரின் மறுப்பிற்கு எதிராகவும், நீதிபதிகளில் பலர் தயங்கிய நிலையிலும், வேல்ஸ் இளவரசர் எந்தச் சலுகை வேண்டு மானாலும் அளிப்பதாகக் கூறியபோதிலும், கிராம்வெல்லையும் அயர்ட்டனையும் மையமாகக் கொண்ட சிறுபான்மையோர் அரசரின் தண்டனையை நிறைவேற்ற முனைந்தனர். சார்லஸ் ஜனவரி மாதம் 30ஆம் தேதி, பிஷப் ஜக்ஸன் (Juxon) மட்டும் பின்தொடர வெண்மாளிகையின் விருந்து மண்டபச் சாரளத் திலிருந்து எதிரிலேயே இருந்த தூக்கு மேடைக்குத் தாவிச்சென்றார். அவரைக் காண ஆயிரக்கணக்கான மக்கள் வளைத்துக் கொண் டிருந்தனர். மக்கள் அதிகம் நெருங்காதவாறு தடுப்பதற்காகப் படைவீரர்கள் ஈட்டிகளையும் துப்பாக்கிகளையும் அவர்கள் பக்கமாகப் பிடித்து நின்றிருந்தனர். அரசரின் வார்த்தைகள் எட்டியிருந்த மக்களின் காதுகளில் விழவில்லை. அப்போதும் ஸ்ட்ராஃபோர்டைக் கைவிட்டது மன்னரது மனத்தை அறுத்துக் கொண்டிருந்தது. அதனால், 'கடவுளுடைய தீர்ப்புகள் நேர்மை யானவை' யென்று கூறினார். மக்களுடைய சுதந்திரம் இறைமையில் கொள்ளும் பங்கில் இல்லையென்றும், அவர்களுடைய உயிரையும் உடமையையும் அவர்களுக்குச் சொந்தமாக்கும் சட்டங்களில்தான் உண்டு என்றும் கூறினார். மேலும், வாளின் வலிமைகொண்டு, மாற்றத்தைத் தடைசெய்ய முயன்றதால் தூக்கு மேடைக்கு வந்தாலும், தாமும் ஒரு தியாகியே என்றும் விளக்கினார். துண்டிக்கப்பெற்ற அவரது தலை மேலே தூக்கிக் காட்டப்பெற்ற போது 'கேட்ட புலம்பலைப்போன்று எப்போதும் கேட்டதில்லை என்றும், அதை மறுபடியும் கேட்கத் தாம் விரும்பவில்லையென்றும்' அக் காட்சியைக் கண்டவர் எடுத்துரைத்தார். அவ்வாறு துன்பமே வடிவாகி நின்ற மக்களைக் குதிரைவீரர்கள் சேரிங் கிராஸ் (Charing Cross) வழியாகவும் வெஸ்ட்மினிஸ்டர் வழியாகவும் விரட்டினர். ஒரு வாரம் கழித்து, சார்லஸின் சடலம் விண்ட்சரில் எட்டாம் ஹென்றியின் கல்லறையில் புதைக்கப்பட்டது. வழிபாட்டு நூலில் உள்ள சொற்கள் தடைசெய்யப்பெற்றிருந்ததால் சமயச் சடங்கு ஏதுமின்றி அடக்கம் செய்யப்பெற்றது.

இங்ஙனம் சேனைத் தலைவர்கள் நாட்டைக் கறைப்படுத்திய இரத்தத்தைக் கழிபேருவகையுடன் கழுவினர். அக் கறையானது நாட்டின் ஏதோ ஒரு மூலையில்மட்டும் படிந்ததன்று; 'ஆண்டவரின் திருமுகத்திலும் மக்களனைவரின் முகங்களிலும்' படிந்தது என்று பின்னுளில் காமன்ஸ் சபையில் ஓர் உறுப்பினர் குறிப்பிட்டார். சேனைத் தலைவர்கள் இத்தகைய நடவடிக்கையின் தேவைபற்றிய ஐயப்பாடு கொண்டிருக்கவில்லை. அதற்காக வருந்தவுமில்லை. 'ஆண்டவரின் செயல்தன்மையைக் கண்டு சீற்றங்கொள்ள வேண்டாமென்றும், அவ்வாறு செய்வதைத் தவிர வேறு வழியில்லை' என்றும் கிராம்வெல் எழுதினர்.

## சமகால நிகழ்ச்சிகள்

1647 நேபிள்சில் (Naples) மாஸ்ஸியானிலோவின் (Massianello) கலகம்.

ஹாலந்தில் ஆரஞ்சைச் சார்ந்த இரண்டாம் வில்லியம் பட்டமெய்துதல்.

1648 வெஸ்ட்பேலியா (Westphalia) உடன்படிக்கை.

ஃபிராண்டி (Fronde) போர் மூளுதல்.

ஜார்ஜ் ஃபாக்ஸ் (George Fox) குவேக்கர் நிறுவனத்தை அமைத்தல்.

காடன் (Gauden) எழுதிய 'Eikon Basilike'.

ஹெர்ரிக் (Herrick) எழுதிய 'Hespirides'.

1649 சார்போன் (Sorbonne), ஜான்சனிசத்தைக் (Jansenism) கண்டித்தல்.

மேரிலாந்தில் சமயப் பொறை வற்புறுத்தப்பெறுதல்.

–1687. துருக்கியில் நான்காம் முகமதுவின் ஆட்சி.

# 12. அழிவும் முன்னிலை மீட்சியும், 1649-1660

இங்ஙனம் புத்தம் புதிய பெரும் முத்திரையில் பொறிக்கப் பெற்றதைப்போல, ‘ஆண்டவரின் அருளால் சுதந்திர முதலாண்டு மீண்டும் வந்தது’. அரச பதவியும் பிரபுக்கள் சபையும் ‘பயனற்றவை; ஆனால், அபாயகரமானவை’ யென்று அறிவிக்கப் பெற்று அழிக்கப்பட்டன. இவ்விதச் ‘சுதந்திரம்’ பியூரிட்டன் ஜனநாயகமாக மலர்ந்து, எதிர்வினையால், ராணுவ ஏகாதிபத்திய மாக மாறி, இறுதியில் பிளவு எனும் புற்றுநோய் கண்டு மறைந்தது. எனினும், மரபுரிமைச் சொத்தாக ஒன்றை விட்டுச்சென்றது. பியூரிட்டன் ஆட்சியில் சமயச் சுதந்திரமும், வாழ்க்கையில் பல துறைகளில் தன்னுரிமையும், அதுவரையில் இங்கிலாந்து காணா இயக்குதிறமை ஆகியவையும் வெளிப்பட்டன. தொழிலடிப்படை யிலான கடற் படையையும் நிலைத்த நிலப் படையையும், அட்லான்டிக்கிலும் மத்தியதரைக் கடலிலும், ஆங்கிலேயரின் செல்வாக்கையும் ஏற்படுத்திச்சென்றது. ஸ்காட்லாந்துடனும் அயர்லாந்துடனும் ஐக்கியம் தோன்றுவதற்கு அயராது உழைத்தது அதனுடைய ஆட்சிமுறை சார்ந்த அமைப்பு, காபினெட்டைக் கோடிட்டுக் காட்டியது. அதனுடைய பொருளாதாரக்கொள்கை, அடுத்த இரு நூற்றாண்டுகளில் வாழ்ந்த முதலாளித்துவ பிரிட்டனை உருவாக்கியது.

எனினும், இவ்வாறு தோன்றிய பொதுநலக் குடியரசு (Commonwealth) தனது உயிருக்கே போராடவேண்டியிருந்தது. அரசரைக் கொன்ற ஆங்கிலேயரிடமிருந்து, ஆணவக்கார ரஷ்யா தனது உறவுகளை அறுத்துக்கொண்டது. மாட்ரிட் நகரிலும் ஹேக் நகரிலும், நாடு கடத்தப்பெற்ற கெவலியர் ஆங்கிலத் தூதுவரை ஆரவாரத்திற்கிடையே கொன்றனர். ஸ்காட்லாந்தில் இரண்டாம் சார்லஸுக்குச் சேவை செய்யப் படைகள் திரட்டப் பெற்றன. ஆர்மாண்ட், அயர்லாந்தையும் வர்ஜீனியாவையும் வென்றுகொண்டிருந்தார். எனினும், பார்படாஸ் (Barbados), பாராளுமன்றத்தின் ஆதிக்கத்தை எதிர்த்தது. உள் நாட்டில்

அரசாங்கத்தின் குறிக்கோள்மேலிருந்தோர் முதல் தாழ்ந்தவர்வரை பிளவுபட்டே நின்றது. ஃபேர்ஃபாக்ஸ் 'உடன்படிக்கை' சார்ந்த பற்றுறுதிப் பிரமாணம் அளிக்க மறுத்தார். லண்டன் மாநகரத்துள்ளும் வெளியிலும் பச்சைநிற நாடா தரித்த சமநிலைவாதிகள், புரட்சிகரமான பாராளுமன்றம் வேண்டுமென்றும், திருத் தொண்டர்களின் ஆட்சி அமைக்கப்பெறுதல் வேண்டுமென்றும் கூக்குரலிட்டனர். சேனையில் கலகத்தைத் தூண்டினர். மாநகரத்தை அதனுடைய பொதுச்சபையில் தனது ஆதரவாளர்களையே புகுத்தி ஓரளவு அந் நகரை அடக்கியது. நீடித்த பாராளுமன்றத்திலிருந்து கழிக்கப்பெற்றவர்போக மீதி இருந்தோரைக் கொண்ட எஞ்சிய பாராளுமன்றம், தானே சட்டமுறையிலான பாராளுமன்றமென்று அறிவித்துக்கொண்டது. நாட்டை ஆளும் தனித்த அதிகாரம் என்றும் அறிவித்தது. தனது அனுமதியின்றி, தன்னைக் கலைக்க யாருக்கும் உரிமையில்லையென்று தீர்மானம் நிறைவேற்றியது. நாட்டையாளும் நிர்வாகச் சபையான 'அரசுக் கவுன்சில்' (Council of State) ஆண்டுதோறும் அமைத்தது. உயர்நீதி மன்றத்தின் பொறுப்பைத் தானே ஏற்றது. இவ்வளவிருந்தும் அஃது ஒரு குறிப்பிட்ட கும்பலின் பிரதிநிதியாகவே யிருந்தது. அதில் லங்காஷயரின் உறுப்பினர் யாருமில்லை. லண்டன் மாநகரம் ஒரே உறுப்பினரைப் பெற்றிருந்தது. சாதாரணமாக நூற்றிற்கும் குறைந்த உறுப்பினர்களே கூட்டங்களில் கலந்துகொண்டனர். பாராளுமன்றம் கலைக்கப்பெறுதல் வேண்டுமென்றும், வாக்குரிமை, வாக்காளர் தொகுதிகள் ஆகியவற்றில் சீர்திருத்தம் வேண்டுமென்றும் வந்த கோரிக்கைகளுக்குச் செவிசாய்க்க மறுத்தது.

அயர்லாந்தில், ஆர்மாண்டின் நிலப்படையும் ரூபர்ட்டின் கடற்படையும் இரண்டாம் சார்லஸுடன் இணையும் ஆபத்து தோன்றியது. எனவே, 1649ஆம் ஆண்டு மார்ச் மாதம் கிராம்வெல் ஒருபெரும் படையுடன் நேரில் அயர்லாந்து சென்றார். ஆயின், ஏற்கெனவே நடந்த ஐரிஷ் போரின் நேரடி விளைவுகள் அரசருக்கு இருந்த ஆதரவை அழித்தன எனலாம். அப்போது பிரிந்த பிராட்டஸ்டென்டுகளும் கத்தோலிக்கரும் ஒன்றுசேர வழியில்லை. கிராம்வெல் தம்முடைய 12,000 போர்வீரர் அடங்கிய பெரும் படையுடன் வந்து இறங்குதற்கு முன்பே, மைக்கேல் ஜோன்ஸ், ராத்மைன்ஸ் (Rathmines) என்னுமிடத்தில் ஆர்மாண்டை முறியடித்தார். அரச ஆதரவாளரான பிராட்டஸ்டென்டுகள், பாராளுமன்றத்தின்பக்கம் சாயத் தொடங்கினர். கிராம்வெல், செப்டம்பர் மாதத்தில் ட்ரோகிடா என்னுமிடத்தைத் தாக்கி, அங்கிருந்த கோட்டைக்காவல் படையினரையும் குருமாரையும் கொன்று குவித்தார். அடுத்த

மாதம் வெக்ஸ்போர்டும் (Wexford) அதே கதியை அடைந்தது. இக் கொடிய செயல்களைப்பற்றிக் குறிப்பிடும்போது 'குற்ற மற்றவர், குருதியின் கறைபடிந்த கயவர்களுக்குக் கடவுளளித்த தீர்ப்பு' என்றும், 'ஆண்டவர் தமது திருச்சபையின் பகைவரை அவ்வாறு அழித்தார்' என்றும் கிராம்வெல் கூறினர். அவர் மன்ஸ்டரில் இருந்த உள்நாட்டுப் பகுதிகளை அடக்குதற்கு முன்னரே, அவசர வேலைக்காக இங்கிலாந்திற்கு அழைக்கப் பெற்றாலும், 1650 ஆண்டளவில் லண்டன்டெர்ரி (Londonderry) முதல் கார்க் (Cork) வரையுள்ள அயர்லாந்துக் கடற்கரை முழுவதையும் கைப்பற்றினர். கிராம்வெல் சென்ற பிறகும், அவரது துணைவர்களான அயர்ட்டனும், லட்லோவும் (Ludlow), ஃபிளீட்வுட்டும் (Fleetwood) பல இடங்களைத் தொடர்ந்து முற்றுகையிட்டுக் கைப்பற்றினர். அயர்ட்டன், லிமெரிக் (Limerick) எனுமிடத்தைக் கைப்பற்றிய பிறகு 1651ஆம் ஆண்டில் இறந்தார். அரசரைக் கொன்ற சேனையின் தளபதிகள் ஒவ்வொரு முனையிலும் போரிட்டனர். பயிர்வகைகளைத் தீயிட்டு அழித்தனர். ஆறுகளுக்குப் பாலம் அமைத்து முன்னேறினர். அவர்தம் குதிரைவீரர் ஒற்றையணியாகச் சதுப்பு நிலங்களிலும் ஊடுருவிச் சென்றனர். ஒப்பற்ற திறமையாளரான ஓ'நீல் எனும் கத்தோலிக்க வீரர் இறந்ததும் அவரது குறிக்கோளைக்காக்கும் பொறுப்பு வெறிபிடித்த குருமாரிடம் மாறியது. அவர்கள், ஆர்மாண்டை, வெறுப்புடன் அயர்லந்தை விட்டு வெளியேறுமாறு செய்தனர்.

கால்வே (Galway) எனும் கடைசி வலிவான கோட்டை வீழ்ந்ததும், அயர்லாந்து முழுதும் பியூரிட்டானியர் வசமாகியது. அவர்கள், 1652–3ஆம் ஆண்டுகளில் கொண்டுவந்த அரசியல் நிர்ணயச் சட்டமும் மனநிறைவுச் சட்டமும் (Act of Settlement and Act of Satisfaction) குடியேற்றக்கொள்கையை முடிவாக வகுத்தன.

புரட்சியாளருக்குத் துணைபுரிந்தவருக்கு மரணதண்டனை அளித்தனர். அவர்தம் உடைமைகளைப் பறித்தனர். பாராளுமன்றத்தை எதிர்த்தவர்கள், தங்களுடைய நிலங்களில் மூன்றில் இரண்டு பங்கினை இழந்தனர். அதனிடம் நிரந்தரமான அன்பு செலுத்தாதவர், மூன்றில் ஒரு பங்கு நிலத்தை இழந்தனர். அவர்கள் இழந்த பகுதிக்கு ஈடாக வறண்ட கன்னாட் பகுதியில் குடியேறும்படி கூறப்பெற்றனர். அதிகக் கடுமையாக உழைத்து இக் குடியேற்றம் விரிவடைந்தது, அஃது ஐரிஷ் குடியானவரின் உழைப்பைக்கொண்டு வளப்படுத்தப்பெற்றபோதிலும் கிராம்வெல் தம்முடைய படை வீரருக்கும் உள்நாட்டுப் போருக்காகப் பொருளுதவி அளித்த பணக்காரர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்தார். லின்ஸ்டர்,

மன்ஸ்டர் ஆகிய பகுதிகளில் வாழ்ந்த ஒரு குற்றமும் அறியாத ஆங்கில-ஐரிஷ் குடியானவர் வாய்ப்பற்று இருந்தனர்.

அயர்லாந்து 'ஒரு மாகாணமாக' இருக்கவேண்டுமென்றும் அதில் புதிதாகக் குடியேறியவர்கள், ஆதரவுபெற்ற காவல் படையினர் போன்று இருக்கவேண்டுமென்றும் வேன் குறிப்பிட்டார். கிராம்வெல் கொண்டுவந்த துரைத்தன அமைப்புப் பத்திரத்தின் படி (Instrument of Government) இங்கிலாந்துப் பாராளுமன்றத்திற்கு அயர்லாந்து உறுப்பினர்களை அனுப்பும் உரிமை பெற்றது. கத்தோலிக்கர்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படாததால் பாராளுமன்றத்திற்குச் சென்ற அனைவரும் பியூரிட்டானிய வீரர்கள் என்றபோதிலும், பொதுப் பழக்க வழக்கங்கள், நாவாய்ச் சட்டங்கள் ஆகியவற்றில் அயர்லாந்து சம அந்தஸ்து பெற்றது. பியூரிட்டானியப் போதகர்கள் அயர்லாந்திற்குக் கொண்டுவரப்பெற்றனர். டப்ளினிலிருந்த ட்ரினிடி கல்லூரி மிகுதியான மானியம் பெற்றது. கிராம்வெல்லின் இளைய மகனை ஹென்றி கிராம்வெல் இரக்க குணம் படைத்தவரானதால் பாப்டிஸ்ட்டாகிய ஃபிளீட்வுட்டின் கொடுங்கோலாட்சியைச் சிறிது தளர்த்தினர்.

அயர்லாந்திலிருந்து முப்பதாயிரம் வீரர்கள் நாடு கடத்தப்பெற்று ஐரோப்பாவிற்குச் சென்றுவிட்டபோதிலும், பெருங்குடியினரில் பெரும்பாலோர் கன்னட்டில் முடக்கப்பெற்று இருந்தபோதிலும், அயர்லாந்தில் ஆதிக்கத்தை நிலைநிறுத்துவதற்காகப் பியூரிட்டன் அரசாங்கத்தினர் ஏறக்குறைய மூவாயிரம் சிறு காவற் படைகளையும், பதினாறாயிரம் படை வீரரையும் அயர்லாந்தில் ஆயத்தமாக வைத்திருக்கவேண்டியிருந்தது. இராணுவ நீதி மன்றங்கள் பொதுச் சட்ட நீதி மன்றங்களைப் பின் தள்ளின. ஆங்கில நிலமளப்போர் அடிக்கடி கொலையுண்டனர். போரும் பஞ்சமும் நாட்டில் மூன்றில் ஒருபகுதி மக்களை அழித்தன. பல பகுதிகளில் மக்கள் நடமாட்டமே காணப்படவில்லையென்றும், நாய்களும் நரிகளும் உலாவின என்றும் அப் பகுதிகளில் சுற்றுப் பயணம் செய்த ஆங்கில அதிகாரிகள் குறிப்பிட்டனர். அதே சமயத்தில், குருமாரைப் பிடித்துத் தருபவருக்கும், 'டோரிகள்' (Tory) என்று பரிகாசப் பெயரிடப்பெற்ற மறைந்திருந்து தாக்கும் கொள்ளைக் கூட்டத்தினரைக் கொல்பவருக்கும் பரிசுகள் வழங்குவதாக அறிவிக்கப்பட்டது. ஐரிஷ் குடியானவருக்கு, பேரிடருக்கிடையே உலவும் குருமாரைத் தவிர தேற்றுவதற்கு ஆளில்லை. இக்காரணங்களினால் அயர்லாந்தியர் இங்கிலாந்தின்மீது கொண்ட வெறுப்பு வளர்ந்துகொண்டே போனது. பணிபுரியப் பல நாடு

களுக்குச் சென்றவரும், மேற்கிந்தியத் தீவுகளுக்கு நாடுகடத்தப் பெற்றோரும் இவ்வெறுப்புணர்ச்சியை மிகுதியாகப்பெற்றிருந்தனர். சட்டத்திற்கு முரணானவகையில் கிராம்வெல்லின் படைவீரருக்கும் ஐரிஷ் பெண்களுக்கும் பிறந்த குழந்தைகளிடமும் இவ்வுணர்ச்சி பெருகிநின்றது.

இரண்டாம் சார்லஸ் அயர்லாந்தில் அதிக ஆதரவுபெற முடியவில்லை. அதற்குப் பல காரணங்கள் உள. முக்கியமானதாக இருந்தது, 1650ஆம் ஆண்டில் அவர் ஸ்காட்டிய ஒப்பந்தக்காரருடன் செய்துகொண்ட உடன்படிக்கையே. அவர், தமது ஆலோசகரை மிகுதியாகக் கலந்து ஆய்ந்த பிறகே இவ்வித உடன்பாட்டிற்கு ஒப்பினர் என்றாலும், அது கெவலியருக்கு அவமானம் தேடித் தந்ததாகும். அதனால், ஆர்மாண்ட் மட்டும் கைவிடப்படவில்லை. அத்தோடு, அப்போதுதான் ஸ்வீடனில் இந்து ஆர்கனித் தீவுகளில் (Orkneys) வந்திறங்கிய மான்ட்ரோஸையும் கைவிடுவதாக இருந்தது. ஆனால், இவ்வாறு செய்வதைத் தவிர, சார்லஸிற்கு வேறுவழியில்லை. 1649-50ஆம் ஆண்டு மாரிக்காலத்தில் சார்லஸ், ஜெர்ஸில் தங்கி இருந்தார். அப்போது கிராம்வெல் பெற்ற வெற்றிகளைப்பற்றியும், பிளாக் (Black) எனும் கிராம்வெல்லின் தளகர்த்தர், ரூபர்ட் இளவரசரின் சிறு கப்பற்படையை டாகஸ் (Tagus) என்னுமிடத்தில் தஞ்சம் புகுமாறு செய்ததையும் கேட்டறிந்தார். அவர், ஹேக் நகருக்குத் திரும்பியபோது ஐரோப்பாவிலும் உதவி கிடைக்கும் என்ற உறுதியில்லை. எனவேதான் ஸ்காட்டியரோடு சமாதானம் செய்து கொண்டார். ஆர்கைல், மான்ட்ரோஸிற்கு ஆபத்து வராமல் பாதுகாப்பு அளிப்பதாக வாக்குறுதி அளித்தார். ஆனால், இந்த ஒப்பந்தத்தைப்பற்றி அறிவிக்கப்பட்டதுமே மான்ட்ரோஸிற்கு இருந்த சிறிது வாய்ப்பும் பாழாகியது. அவர், செய்த்னஸ் (Caithness) என்னுமிடத்திற்குச் சென்று, அங்கிருந்து டோர்னச்சிற்குப் (Dornoch) புறப்பட்டுச் சென்றுவிட்ட பிறகு, வடநாட்டுக் குடியினர் போரிட அஞ்சினர். ஏப்ரல் மாதத்தில் லெஸ்லியின் குதிரைப்படை கார்பீஸ்டேல் (Carbiesdale) என்னுமிடத்தில் மான்ட்ரோஸை முறியடித்தது. அவர் உயிருக்குப் பயந்து ஓடும் வழியில் காட்டிக்கொடுக்கப்பெற்று, மே மாதம் 21ஆம் தேதி எடின்பர்க்கில் கொடுங் குற்றவாளி என்று தூக்கிலிடப்பட்டார். எனினும், சார்லஸ் முன்வைத்த காலைப் பின்வைக்க முடியவில்லை. ஜூன் மாதத்தில் ஸ்காட்லாந்திற்கு வருவதற்குமுன் இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகிய தமது முந்நாடுகளிலும் பிரஸ்பிடீரியச் சமயத்தை நிலைநிறுத்துவதாக வாக்குறுதியளித்தார். பத்தில் ஒன்பது பிரிட்டானியர், அயர்லாந்தின் தலைவிதியை நிர்ண

யிப்பதில் ஒன்றுபட்டு நின்றனர். ஆனால், ஸ்காட்லாந்துப் பிரச்சினையைப் பொறுத்தவரையில் பியூரிட்டனியர் பிளவுபட்டிருந்தனர். இப் பிரச்சினை, பிரிட்டிஷாரின் எதிர்காலத்தையே மாற்றியமைக்கும் வலிமை பெற்றது. இங்கிலாந்தில் ஃபேர்ஃபாக்ஸ், ஸ்காட்லாந்தின்மீது படையெடுத்துச் செல்ல முடியாது என்று கூறி ராஜினாமா செய்துவிட்டதால் கிராம்வெல்லின் ஆதிக்கம் உச்சநிலை எய்தியது. ஸ்காட்லாந்திய ஆர்கைலின் தலைமையில் இயங்கிய ஆளுங் கட்சியினர், ஹாமில்டன்கள், லாடர்டேல் ஆகியோரைப் பின்பற்றிய உடன்படிக்கைக்காரர்களை அழிக்கமுனைந்தனர். அவர்களைப் பதவிகளிலிருந்தும் பாராளுமன்றத்திலிருந்தும் நீக்குவதற்காக 'வகுப்பினர் சட்டம்' (Act of Classes) ஒன்றை நிறைவேற்றினர். சார்லஸ் தூக்கிலிடப்பெற்றதால் எழுந்த மக்களின் உணர்ச்சி காரணமாக, கிராம்வெல்லுடன் கொண்டிருந்த ஒப்பந்தத்தைக் கைவிட்டனர். என்றாலும், பதவி ஆசையினால் உந்தப்பெற்று இரண்டாம் சார்லஸை ஸ்காட்லாந்தின் மன்னராக்க முடிவு செய்தனர். 1650ஆம் ஆண்டில் ஸ்காட்டியப் பிரச்சினையின் முதல் கட்டம் இங்ஙனம் இருந்தது. கெவலியரும் 'உடன்படிக்கையாளரும்' (Engagers), சார்லஸின் ஆலோசனைக் குழுவிலிருந்து நீக்கப்பெற்றனர். அதேசமயத்தில் சார்லஸ், தமது தந்தையாரின் குற்றத்தையும் தாயாரின் கத்தோலிக்கச் சமயப் பற்றையும் வெளிப்படையாக ஒப்புக்கொள்ளுமாறு வற்புறுத்தப்பெற்றார்.

ஸ்காட்டியருக்குக் கிராம்வெல் விடுத்த அறிக்கைகள் செவிடன் காதில் ஊதிய சங்காயின. அதனால், கிராம்வெல் ஸ்காட்லாந்தைத் தாக்க முனைந்தார். அவர் படையெடுத்துச் சென்ற ஒரு மாதத்திற்குள் அநேகமாகத் தோல்வியுறும் நிலையை அடைந்தார். லீத்(Leith) நகரைக் கைப்பற்றி ஃபோர்த் ஆற்றினைக் கடக்கவேண்டுமென்ற ஆங்கிலேயரின் திட்டத்தை முறியடித்த லெஸ்லி, கிராம்வெல்லை, கடற்படையை நாடி ஓடுமாறு செய்தார். போதிய உணவுப் பொருள்களின்றிக் களைப்படைந்திருந்த ஆங்கிலப் படையை டன்பாரில் (Dunbar) வளைத்துக்கொண்டார். அப் படையைப் போன்று இருமடங்கு பெரிதான தமது படையினைக்கொண்டு, அவர்கள் பெர்விக் (Berwick) என்னுமிடத்திற்குப் பின்வாங்குவதையும் தடைசெய்தார். ஆயினும், குருமார்களால் தூண்டப் பெற்று, ஆங்கிலேயர் டன்பாரிலிருந்து புறப்படுவதாக உறுதியாக எண்ணிய லெஸ்லி, லாம்மர் பள்ளத்தாக்குகளில் இருந்து டன்பாருக்குத் தெற்கேயுள்ள சமவெளிக்குச் செப்டம்பர் மாதம் 2ஆம் தேதி வந்து சேர்ந்தார். இவ்விடத்தில் 3ஆம் தேதி விடியற்காலையில் அவரது படைகளைக் கிராம்வெல் தாக்கினார். ஆலிவர்

கிராம்வெல் தமக்குப் பழக்கமான போர் முறையைக் கையாண்டு கடலுக்கு அருகில் இருந்த தமது படையின் வலப் பக்க அணியை முன்னேறச்செய்து, பிறகு அதனைப் பின்னுக்கிழுத்து, குன்றுகளுக் கெதிராக நெருக்கப்பெற்ற மூலப்படையைத் தாக்குமாறு செய்தார். கதிரவன் எழும் சமயத்தில் ‘கடவுள் தோன்றிப் பகைவரைச் சிதறடிக்கட்டும்’ என்று கிராம்வெல் கூறியதை அவரது அதிகாரி ஒருவர் கேட்டார். ஏறக்குறைய ஒருமணி நேரத்தில் ஸ்காட்டியர் தோற்றனர். அவர்களில் 3,000 பேர் கொல்லப் பட்டனர்; 10,000 பேர் கைதாயினர். கிராம்வெல்லின் படையினர் இதைப்போன்ற பெருவெற்றியை எப்போதும் பெற்ற தில்லை. இந்த வெற்றியின் அரசியல் விளைவுகளும் ஆழமானவை. ‘கிர்க் சபையினர் தங்கள் பங்கினைச் செய்துமுடித்து ஓய்ந்தனர்’ என்று கிராம்வெல் எழுதினர். வெற்றிபெற்றதற் கடையாளமாக வெஸ்ட்மினிஸ்டரில் ஸ்காட்டியக் கொடிகள் பறந்தன. சேனையில் முதல்முறையாக டன்பார் பதக்கம் வழங்கப்பெற்றது.

லெஸ்லி, மற்றொரு படையைத் திரட்டிக்கொண்டிருந்த காலத்தில் நீண்ட அமைதி நிலவியது. கிராம்வெல் நோய்வாய்ப் பட்டார். ஸ்காட்லாந்தில் போட்டிக் கும்பல்கள் மலிந்திருந்தன. ‘தீய சிந்தனையுள்ள’ அரசருக்குச் சேவை செய்ய மறுத்த மேலை ஒப்பந்தக்காரர்கள், கிராம்வெல்லுடனும் பேச்சுவார்த்தை நடத்த மறுத்தனர். இந்த ‘மறுப்பாளர்கள்’ (remonstrants) களத்திலே தோல்வியுற்றபோதிலும் கிர்க் சபையை மெலிவடையச் செய்தனர். தம்மைக் காத்துக்கொள்ளவேண்டி ஆர்கைல், சார்லஸையும் ‘உடன்பாட்டினரையும்’ நாடினர். அதேசமயத்தில் மேலைச்சமய வெறியருக்கு எதிராக இருந்த தீர்மானவாதிகள், எஸ்டேட்டுகள் (Estates) சபையில் செல்வாக்குப் பெற்றிருந்தனர். அவர்கள், ‘வகுப்பினர் சட்டத்தை’ ரத்து செய்தனர். சார்லஸுக்கு முடி சூட்டினர். இங்ஙனம் சர்ர்லஸ், பெருங்குடியினரில் பெரும் பான்மையோருடைய ஆதரவையும் ஹைலாந்தியருடைய உதவியையும் பெற்று, கிர்க்சபைமீது வெற்றி கொண்டார். ஆயின், இந்த வெற்றி பியூரிட்டானியரை ஒன்றுபடுத்த உதவியது. மேலும், இனி, சார்லஸ் இங்கிலாந்தில் நுழையும்போது, ஸ்காட் லாந்தின் அரசராக, அன்னிய அரசராகத்தான் நுழையமுடியும் என்ற நிலையை ஏற்படுத்தியது.

எடின்பர்க்கையும் கிளாஸ்கோவையும் கைப்பற்றிய கிராம் வெல், மற்றுமொரு மாரிக்காலப் படையெடுப்பு, தமது படை யினரையும் பாராளுமன்றத்தின் நிதி நிலைமையும் மிகுதியாகப் பாதிக்கும் என்று உணர்ந்து, லெஸ்லியை ஸ்டர்லிங்கிலிருந்து

விரட்ட முடிவு செய்தார். 1651ஆம் ஆண்டு ஜூலை மாதம் கடற் படையின் துணைகொண்டு ஃபோர்த் ஆற்றைக் கடந்து, பெர்த் நகருக்குச் சென்றார். இங்ஙனம் லெஸ்லியை ஹைலாந்தியரிட மிருந்து பிரித்தார். அதேசமயத்தில் வேண்டுமென்றே இங்கிலாந் திற்குச் செல்லும் வழியை அடைக்காது விட்டார். அரசரது படையினர், ஹாமில்டன் எழுதியதைப் போன்று 'நம்பிக்கை இழந்த நிலையில்' கிராம்வெல் எதிர்ப்பார்த்ததைப் போலவே கார்லைல் (Carlisle) வழியாகத் தெற்கு நோக்கிப் பாய்ந்தனர். லங்காஷயரைக் கடந்து வேல்ஸில் படை திரட்டலாம் எனும் நம்பிக்கையோடு தென்மேற்குத் திசையில் சென்றனர். ஆனால், லங்காஷயரில் இருந்த பிரஸ்பிடீரியர், கெவலியர்களுக்காகப் போரிட மறுத்தனர். எல்லாக் கவுன்டிகளிலும் மக்கட்படைகள் எழுந்ததிலிருந்து, ஆங்கிலேயர் எவ்வளவு தூரம் படையெடுப் பாளர்மீது வெறுப்புற்றிருந்தனர் என்பது தெளிவாகின்றது. அரசரின் படைகளை லாம்பர்ட், ஹாரிசன் என்ற பாராளுமன்றத் தளபதிகள் வழிமறித்துத் தாக்கினர். அரசர், ஆகஸ்ட் 22ஆம் தேதி ஒர்செஸ்டர் எனும் இடத்தை அடைந்தபோது அவரைக் கிராம்வெல் வேகமாகப் பின்தொடர்ந்து வந்தார். 2ஆம் தேதி பெர்த் நகரை விட்டுக் கிளம்பிய அவர், 27ஆம் தேதி 16,000 போர் வீரர்களுடன் ஒர்செஸ்டரில் இருந்த அரசரை, 30,000 போர் வீரர்களுடன் வளைத்துக்கொண்டார். லாம்பர்ட்டும் ஃபிளீட்வுட்டும், செவர்ன் (Severn) ஆற்றைக் கடந்து வேல்ஸி லிருந்து வந்த அரசர் கட்சியினரைத் தடுத்தனர். செவர்ன் ஆற்றின் மீதும், டீமி (Teme) ஆற்றின்மீதும் படகுப் பாலங்களை அமைத்து முற்றுகையை முழுமையாக்கினர். செப்டம்பர் மாதம் 3ஆம் தேதி கிராம்வெல், ஒர்செஸ்டருக்குள் புகுந்தார். கடுமையான சண்டைக்குப் பிறகு ஸ்காட்டியர் சிதறுண்டனர். துரத்திச் செல்லப்பட்ட டர்பி, மாஸி, ஹாமில்டன் ஆகியவர் வழியில் கொல்லப்பெற்றனர். அநேகமாக அரசரைத் தவிர மற்றெல்லாத் தலைவர்களும் உயிரிழந்தனர். அரச ஆதரவாளரிடமிருந்தும் கத்தோலிக்கரிடமிருந்தும் அடைக்கலம் பெற்ற சார்லஸ், பாஸ்கோபல் எனுமிடத்திலிருந்து சஸ்ஸக்ஸிற்குத் (Sussex) தப்பி யோடினார். அக்டோபர் மாதத்தில் பிரைட்டனில் (Brighton) கப்பலேறி ஃபிரான்ஸிற்குச் சென்றார்.

இராணுவ அடிப்படையில் பார்க்கும்போது, இவ்வெற்றியினால் பொதுநலக் குடியரசு பிழைத்தது எனலாம். ஒர்செஸ்டர் வெற்றி, 'முத்தாய்ப்பான பரிவு' என்று கிராம்வெல் குறிப்பிட்டார். இதற்கிடையில் மாங்க், ஸ்காட்லாந்தில் ஸ்டர்லிங்கைக் கைப்பற்றி, டண்டீயை அழித்து, எஸ்டேட்டுகள் சபையின் குழுவினைக்

கைக்கொண்டு, பல விநோதங்களை நிகழ்த்தினர். ஹைலாந்தில் கெவலியரான மிடில்டன் (Middleton) என்பாருடைய தலைமையில் கிளர்ச்சி எழுந்தது. அதை அடக்குதற்காக மாங்க், 1654ஆம் ஆண்டில் தம்முடைய படைகளை வேகமாக லோசபர் (Lochabar), இன்வர்னஸ் ஆகிய இடங்களுக்கு நடத்திச் சென்றார். அப்போது பெற்ற வெற்றியினால் அவரது வேலை பூர்த்தியடைந்தது. காவற் படையுடன்கூடிய கோட்டைகளும் மிகுதியான வரிப் பளுவும், எதிர்த்து நின்ற ஸ்காட்லாந்தை அடக்கப் பயன்பட்டன. பிரஸ் பிடீரிய முறை தொடர்ந்து வழக்கிலிருந்தபோதிலும், கிர்க்' சபை கூட அனுமதிக்கப்படவில்லை. சில சுயேச்சையான திருக் கூட்டங்கள் அமைக்கப்பெற்றன. உலோகாயதப் பொருள் களினால் ஸ்காட்லாந்தியர் மன நிறைவு பெற முடியுமென்றால் அவைகள் பெருமளவில் கிடைத்தன. இங்கிலாந்துடன் தடையில்லா வாணிபம் ஏற்பட்டது. நீதிமன்றங்கள் சீர்திருத்தப் பெற்றன. ஹைலாந்தின் அதிகார வரம்பு நீங்கியது. 30 ஸ்காட்டிய உறுப்பினர் ஆங்கிலப் பாராளுமன்றத்திற்குச் சென்றனர். ஆனால், கெவலியரும் உடன்படிக்கையாளரும் ஓட்டுரிமை மறுக்கப்பெற்றதால் பாராளுமன்ற 'உறுப்பினர் களாகச்' சென்றவர் பொதுவாக ஆங்கில அதிகாரிகளே. ஸ்காட் லாந்தியர் தேசிய சுதந்திரத்தை இழந்தனர். ஸ்காட்டிய அரச சின்னங்கள் பாரிஷ் திருக்கோயில் ஒன்றில் புதைக்கப்பெற்றன. போர்டர்கள் அமைதியின்றி யிருந்தனர். பெருங்குடியினரில் பாதிபேர் நாடுகடத்தப்பெற்றனர். இங்ஙனம், ஸ்காட்லாந்து புரட்சி செய்வதற்கு ஒரு டச்சுப் போரையோ அல்லது மற்றொரு வாய்ப்பையோ எதிர்நோக்கிநின்றது.

பொதுநலக் குடியரசு தோன்றியதிலிருந்து சோர்வின்றி, சுயநலமுமின்றி வாழ்ந்த பிளேக்கின் (Blake) தலைமையில் இயங்கிய கடற்படை நாட்டைக் காத்துநின்றது. ஸ்கிலீஸ், மான் தீவு (Isle of Man), ஆங்கிலக் கால்வாய்த் தீவுகள் ஆகிய இடங்களில் இருந்த அரசர் நம் காவற்படைகளை வெற்றி கொண்டது. மேலும், அமரிக்கக் குடியேறிகளைப் பணியவைத்தது. போர்ச்சுகல், ரூபர்ட் இளவரசருக்கு உதவி வந்ததைத் தடுத்தது. அதேசமயத்தில் ஆங்கிலக் கப்பற்படை முதன்முறையாக வணிகக் கப்பல்களை மத்தியதரைக் கடல் பகுதிக்கு வழிநடத்திச்சென்றது. குறிப்பாக, கப்பற் பணம் கொள்ளத்தொடங்கிய நாளில் உருவான கடற் படை, இப்போது பலமடங்காகப் பெருகி முன்னேறியது. முதலில் கடற்படை தலைமை, கடற்படை பிரபு ஒருவரிடம் இருந்தது. வரையறை செய்யப்பெறாத பாராளுமன்றத்தின் கட்டுப்பாடும் இருந்தது. ஆனால், கிராம்வெல் காலத்தில் அரசுக் கவுன்சில்,

வேனின் தலைமையில் கடற்படை நிர்வாகக் குழு ஒன்றை அமைத்தது. அதன்கீழ் நிபுணர்கள் அடங்கிய கடற்படை ஆணையாளர் சங்கம் செயலாற்றியது. 1652ஆம் ஆண்டிற்கு முன்னரே பொதுநலக் குடியரசு 41 போர்க் கப்பல்களைக் கட்டுவித்தது. 1660ஆம் ஆண்டில் அக் கப்பல்களின் எண்ணிக்கை 207 ஆக உயர்ந்தது. கடற்படையினருக்கு நல்ல ஊதியமும் உணவும் அளித்ததோடு நோய்வாய்ப்பட்டோரும் காயமுற்றோரும் ஓரளவு ஆதரவைப் பெற்றதனால், கடற்படையில் புதுமாதிரிப் படையின் உணர்வு காணப்பெற்றது.

இவ்வாறு அரசாங்கத்தின் பணியாளர் அரும் பெருங் காரியங்களைச் சாதித்த அதேசமயத்தில், அரசாங்கம் மேல் நிலையில் பாழடைந்துவந்தது. மக்களின் சிற்றின்ப ஆசைகளை அழிக்க வேண்டுமென்று கடுமையாக நடந்துகொண்டது. நாடக அரங்குகள் மூடப்பட்டன. ஞாயிற்றுக்கிழமைகளில் பயணம் செய்வோருக்கும், தூய்மையற்று இருப்போருக்கும் கடுந் தண்டனைகள் தரப்பெற்றன. கூடா ஒழுக்கத்திற்குச் சட்ட முறையாக மரணதண்டனை விதிக்கப்பட்டது. ஆனால், ஜூரிகள் அக் கொடிய தண்டனையை அளிக்க மறுத்தனர். மக்களின் வாழ்க்கைமீது பெருஞ்சுமை இருந்தது. ஆயத் தீர்வையோடு, ஒவ்வொரு மாதமும் 90,000 பவுன்கள் வசூலிக்கப்பெற்றன. கடற்படைக்காக அடிக்கடி பணம் தருமாறு அரசாங்கம் வற்புறுத்தியது. மக்கள், 50,000 வீரர்களைத் தங்களுடைய வீடுகளில் வைத்துப் பராமரிக்கவேண்டும். வாணிபமோ சீர்குலைந்தது. அரசராதரவாளரைச் சமாதானப்படுத்த அரசாங்கம் ஒன்றும் செய்யவில்லை. அவர்கள் கடமையிலிருந்து தவறியதற்காக ஈட்டுப் பணமாகத் தாங்க முடியாத தண்டங்களை அளித்தனர். அதன் காரணமாக அவர்கள் தமது தந்தையர் நிலங்களை விற்கவேண்டி வந்தது. அரசருடைய நிலங்களோடும், திருச்சபை நிலங்களோடும், அரசரை ஆதரித்த தலைவர்களுடைய நிலங்களும் பறிமுதல் செய்யப்பெற்றன. அரசரை ஆதரித்தவர்களின் குருமார் அடக்கப்பெற்றனர். கடமையில் தவறியவர் பதவி வகிக்கவோ, வாக்குரிமை பெறவோ தகுதியற்றவர்களாயினர். ஆயினும், பொதுநலக் குடியரசு எல்லாப் பியூரிட்டானியரையும் தழுவி நிற்கவில்லை. பல பிரஸ்பிடீரியர்கள் ‘உடன்படிக்கை’யை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். வெர்னிக்கள் (Verneys) போன்ற பியூரிட்டன் மிதவாதிகள் அரச ஆதரவாளர்களைப்போல் ஃபிரான்ஸ் அல்லது ஹாலந்திற்கு ஓடினர். அரசாங்கத்தினர் சமயப் பிரிவுகளை ஏற்க மறுத்தனர். ஆனால், எஞ்சிய பாராளுமன்றத்தின் மீது மிகுந்த வெறுப்புற்றவர், மயக்கம் நீங்கி தெளிவுபெற்ற

ஜனநாயகவாதிகளும் அப் பாராளுமன்றத்தை அமைத்த சேனையினரும்தான். பலாத்காரத்தின் துணைகொண்டே நிலைத்திருக்கும் இச் சிறுபான்மையினருக்கு 'மக்களின் தேசிய உரிமைகளின் உயிராகவும் உடலாகவும் அமைந்த' தேர்ந்தெடுக்கப்பெற்ற பாராளுமன்றத்தை நிலைகுலையச்செய்ய என்ன உரிமை இருக்கின்றது என்று, துவளாது துண்டுப் பிரசுரங்களை வெளியிட்ட லில்பர்ன் வினவினர். லண்டன் ஜூரி அவரைக் குற்றமற்றவர் என்று விடுதலை செய்தது, இங்கிலாந்து முழுவதும் எதிரொலித்தது. சட்டச் சீர்திருத்தம் வேண்டுமென்றும், அதனை வேகமாக நிறைவேற்ற வேண்டுமென்றும், பத்து ஆண்டுகளாக இருந்த கிளர்ச்சிகள், கலகங்கள் ஆகியவற்றின் விளைவாகத் தோன்றிய கேடுகளை அகற்ற வேண்டுமென்றும் கூக்குரல் கிளம்பியது. நாடோடிகள், ஏழைக் கடன்காரர்கள் ஆகியோருக்கு நிவாரணம் வேண்டுமென்றும், பல ஆண்டுகளாகக் காத்துக் கிடக்கும் ஆயிரக்கணக்கான வழக்குகளை விசாரிக்க வேண்டுமென்றும் கூக்குரல் எழுந்தது. அரசாங்கத்தின் பறிமுதல் கொள்கையினுல் சில உறுப்பினர் மிகுந்த லாபமடைந்தனர். லண்டன் மாநகரத்தினர் திருச்சபை நிலங்களில் 60 சதவீதத்திற்கு மேற்பட்ட நிலங்களை வாங்கினர். அதே சமயத்தில் கெவலியரின் பண்ணைகளில் படைவீரர்களுக்கு, அவர்களின் சம்பளத்திற்கீடாக அளிக்கப்பெற்ற உரிமைப் பத்திரங்களில் வாணிபம் செய்ய வணிகச் சூதாட்டக்காரர் முன்வந்தனர்.

சமயத்தைப் பொறுத்தவரையில், எல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது. நீடித்த பாராளுமன்றத்தினுல் நிறுவப்பெற்ற பிரஸ்பிடீரியன் சமயம் வேரூன்றவில்லை. சமயம்சாராக் கோயிற்பணியாளர் முறையின்மீது பொதுப்படையான வெறுப்பு மக்களிடையே காணப்பெற்றது. அமைதிக் காவலர் இம் முறைக்குத் தடையாக நின்றனர். பாரிஷ்களிலும், கவுன்டி குழுக்களும் ஆதரவாளரும் திருச்சபை மானியங்களுக்குப் போட்டியிட்டனர். சுதந்திரவாதிகள் கோவில் மகமையைத் தாக்கியபோதிலும், அதற்குப் பதிலாக வேறொன்றையும் அவர்கள் காட்டவில்லை. புதிய சமயப் பிரிவுகள் பெருகின. பழைய மெதாடிஸ்டுகள், சோசினியர்கள் (Socinian), அனபாப்டிஸ்டுகள், கிறிஸ்துவின் ஆட்டினை அவதாரமாகக் கருதவேண்டுமென்ற வெறியர்கள், அன்டினேமியன்கள் (Antinomians), கற்பனைவாதிகள் (Visionaries), பெண் போதகர் என்று பல பிரிவினர் வாழ்ந்தனர். ஜான் பன்யான் (John Bunyan), பெட்ஃபோர்டில் இருந்த பாப்டிஸ்ட் குருமார் கூட்டத்தினருடன் பணிபுரிந்தார். ஜார்ஜ் ஃபாக்ஸின் (George Fox) உள்ளொளிக் கொள்கையைப் பாப்டிஸ்டுகளும் 'தேடுவோரும்'

ஏற்றுக்கொண்டனர். அவருடைய குவேக்கர் இயக்கம், போர் முடிந்த பிறகு வடக்கிலிருந்தும் மிட்லண்டிலிருந்தும் வெகு தூரத்திற்குப் பரவியது. அவர்கள், சமய போதகரின் பணியில் தலையிட்டதனாலும், உறுதி மொழி எடுத்துக்கொள்ள மறுத்ததாலும் மாஜிஸ்ட்ரேட்டுகள் தண்டனை அளித்தனர். அவர்களுடைய அமைதிக்கொள்கை படையைப் பாதிப்பதாக இருந்தது. சமயப்பொறை அளிக்கவேண்டுமென்ற கொள்கை பியூரிட்டானியரிடையே பெரும் பிளவை உண்டுபண்ணியது. திருச்சபைக்கு வராதவர்களுக்கு அளிக்கும் தண்டனைகளை எஞ்சிய பாராளுமன்றம் தள்ளுபடி செய்தது. ஆனால், கத்தோலிக்கருக்குமட்டும் இச்சலுகை அளிக்கப்பெறவில்லை. தீவிரவாதிகளுக்கெதிராகத் தெய்வ நிந்தனைச் சட்டம் (blasphemy) ஒன்றை நிறைவேற்றியது. கிராம்வெலின் அன்பைப் பெற்ற குருவான ஜான் ஓவன் (John Owen) என்பார், நிலையான திருச்சபையை ஏற்படுத்தும் யோசனையை ஆதரித்தார். அதனோடு கிறித்தவ அடிப்படைவாதிகளைக் (Fundamentalists) கண்டிப்போர்க்கு தண்டனை வழங்க வேண்டுமென்றார். ஆனால், இத் திட்டத்தைச் சேனையில் பெரும்பாலோர் எதிர்த்தனர்.

இவ்வாறு பல கோணங்களிலிருந்தும், எஞ்சிய பாராளுமன்றத்திற்கு எதிர்ப்புத் தோன்றியது. குறிப்பாக, ஒர்செஸ்டர் வெற்றிக்குப் பிறகு இது பெருகி, பாராளுமன்றத்தைக் கலைக்க வேண்டுமென்ற கோரிக்கை வலுவடைந்தது. ஆனால், அது மூன்று ஆண்டுகளுக்கு முன்னரே கலைந்துவிடுவதாக ஒப்புக்கொண்டது. 1652ஆம் ஆண்டில் எஞ்சிய பாராளுமன்றத்தைக் கலைக்க வேண்டுமென்று சேனையினர் விண்ணப்பித்துக்கொண்டனர். பாராளுமன்றக் கழிப்பு, பூசலை விரைவுபடுத்தியது. ஏனெனில், கிராம்வெலும், வேனும், இங்கிலாந்தில் பாதிக்கு மேற்பட்ட மக்களும் வெறுத்த டச்சுப் போரில் பொதுநலக் குடியரசு அரசாங்கம் இறங்கியது.

கிராம்வெலும் பிளேக்கும் புரட்சியரசின் புகழை ஐரோப்பாவில் நிலைநாட்டியபோதிலும், அதனுடைய பன்னாட்டுக் கொள்கைகள், ஆரம்ப காலத்தில் பிராட்டஸ்டென்ட், கத்தோலிக்க நாடுகளிடையே உள்ள வேற்றுமை, அரசியல், பொருளாதாரக் காரணங்களுக்காகத் தெளிவாக வரையறுத்துக் கூறக்கூடிய நிலையில் இல்லாததால், கடினமானவையாகவும் இடர் மிகுந்தவையாகவும் இருந்தன. வெஸ்ட்பேலியா (Westphalia) உடன்படிக்கையுடன், உண்மையான முப்பதாண்டுப்போர், 1648ஆம் ஆண்டில் முடிவுற்றது. அப்போது ஆஸ்திரியர், கத்தோலிக்கக்

குறிக்கோளிலிருந்து பிறழ்ந்தனர். டச்சுக்காரர் தங்களுடைய பிராட்டஸ்டென்ட் கூட்டாளிகளைக் கைவிட்டனர். மேலும், இப்போது ஃபிரான்சிற்கும் ஸ்பெயினுக்குமிடையே எழுந்த பூசல் அரசியல் சார்ந்ததாகவே இருந்தது. ஃபிரான்சைச் சுற்றியிருந்த ஹாப்ஸ்பர்க்கினர் வலைவு முறிந்ததும், மஸாரின் (Mazarin) ஒரு பெருந்திட்டத்தோடு, ஃபிரெஞ்சுக் கொள்கையை வகுத்தார். அத் திட்டத்தில், ஸ்பானிய அரசகுலத்தில் தோன்றிய தளர்ச்சி காரணமாக எழக்கூடிய வாரிசுஉரிமைப் பிரச்சினையை ஃபிரான்சிற்குச் சாதகமாக்கிக்கொள்ள விரும்பினர். அதில் தாழ்நாடுகளின் எதிர் காலமும் மேற்கிந்தியத் தீவுகளின் எதிர்காலமும் இணைக்கப் பட்டன. இதற்கிடையில், வடக்கிலிருந்த பிராட்டஸ்டென்ட் நாடுகள் டென்மார்க்கிற்கும் ஸ்வீடனுக்குமிடையே இருந்த வெறுப்பினைக் கண்டும், பிரஷ்யாவின் பெருந்தேர்வாளரின் வருங்காலக் கூர்நோக் குடைய சுயநலத்தைக் கண்டும் அஞ்சின.

இச் சமயம் இங்கிலாந்தை ஆண்டவர்களான சமயவெறி பிடித்த பியூரிட்டானியரும், தீவிர வணிகரும் ஃபிரான்சுடன் போரி லிறங்க ஆர்வம் கொண்டனர். அதிலும் 1650ஆம் ஆண்டில் ஃபிராண்டே உள்நாட்டுப் போரினல் ஃபிரான்ஸ் மெலிந்திருந்தது. ஸ்பெயினும் இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்ள முனைந்தது. பொதுவில் ஃபிரான்சைத் தாக்கவேண்டும் எனும் உணர்வு இங்கிலாந்தில் பெருகியது. ஏனெனில், ஃபிரான்ஸ் எப்போதும் ஸ்காட்லாந்தியருக்கு ஆதரவு அளித்தது. இரண்டாம் சார்லஸுக்குப் பாரிஸ் நகரில் புகலிடம் தந்ததோடு நம்முடைய கப்பல்களைக் கைப்பற்றியது. மேலும், எந்த யூக்நோக்களுக்காகப் பியூரிட்டானியர் துதிபாடினரோ, அதே யூக்நோக்களைக் கொடுமைப் படுத்தியது. ஐரோப்பாவில் போட்டியிட்ட நாடுகளிலிருந்து இங்கிலாந்தின் துணையை நாடிப் பேராட்கள் வந்த சமயத்தில், கிராம்வெல் ஃபிரான்சோடு நட்புக்கொள்ள வேண்டுமென்ற கட்சி யின் தலைவராக இருந்தார். அவர்கள் யூக்நோக்களுக்கு அனுகூல மான ஏற்பாட்டின் அடிப்படையிலும், ஃபிரான்ஸ், டன்கிர்க்கை இங்கிலாந்திற்கு அளிக்கவேண்டும் எனும் நிபந்தனையின்பேரிலும் சமாதானம் ஏற்பாடு செய்யப்பெற வேண்டுமென்றனர். எனினும், மஸாரின், இதனை ஏற்றுக்கொள்ளத் தயங்கினர். ஃபிரான்சின் வாணிபக் கூட்டு நாடான ஹாலந்தை நாம் 1652ஆம் ஆண்டு தாக்கியபோது இச் சமாதானத் திட்டமும் வீழ்ந்தது.

எலிசபெத் ராணியாரால் காக்கப்பெற்ற ஹாலந்தின் நன்றி மறந்த தன்மையை இங்கிலாந்து பல ஆண்டுகளாகவே கண்டித்துக் கூக்குரலிட்டது. அதே சமயத்தில் எழுந்த பல பூசல்கள் பழைய

சமய ஒத்துணர்வினைப் போக்கின. இச்சமயத்தில் டச்சு நாகரிகம் உச்ச நிலையிலிருந்தது. போதிய இயற்கைவளம் இன்றி, கடல் வழி வாணிபத்தை நம்பியேயிருந்த அவர்கள் பொருளாதாரம், அறிவியல், பாங்கிகளமைத்தல், கப்பல் கட்டுதல், குடியேற்றக் கம்பெனிகளை நிறுவுதல் ஆகியவற்றில் நம்மையும் மிஞ்சினர். பிரிட்டிஷ் நீரிலுள்ள ஹெர்ரிங் மீன்பிடித்தல் இல்லையென்றால், தங்களால் வாழமுடியாது என்ற காரணத்தால் ஐரோப்பியக் கடல்கள் கட்டுப்பாடற்றவை என்று வாதிட்டனர். உலக வாணிபப் பொருள்களைத் தங்கள் கப்பல்களில் சுமந்து செல்பவர் என்ற முறையில் நடுநிலைமை நாட்டுக் கப்பலில் பகை நாட்டுப் பொருள்களையும் கொண்டு செல்லலாம் எனக் கோரினர். இங்ஙனம் டச்சுக்காரர், இங்கிலாந்தின் கடலாதிக்கத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். அதுவரையில் பிரிட்டன் குறுகிய கடல்களின்மீது முதலுரிமை கொண்டாடியது. திருட்டு வாணிபச் சட்டத்தின்மூலம் நமது பகைவருக்கு உணவுப் பொருள்களும், போர்த் தளவாடங்களும் கொண்டுசெல்வதைத் தடுக்கவும், நடுநிலைமை நாட்டுக் கப்பல்களைச் சோதனையிடவும் தனக்கு உரிமை உண்டென்றது. மற்றொரு புறத்தில், ஆசியாவில் டச்சுக்காரர் பொறாமைகொண்ட பேரரசுவாதிகளாக இருந்தனர். 1623ஆம் ஆண்டில் அம்பாய்னு என்னுமிடத்தில் ஆங்கிலக் கடலோடிகளை டச்சுக்காரர் கொன்றதற்காகவும், பண்டா தீவுகளில் (Banda Islands) புலோ ரன் (Pulo Run) னிலிருந்து ஆங்கிலேயரை வெளியேற்றியதற்காகவும் இழப்பீடு தரவேண்டுமென்று இங்கிலாந்து கோரிவந்தது. இந்தியாவில் டச்சுக்காரரின் வணிகக் களங்கள் நம்முடையனவற்றைவிட எண்ணிக்கையில் மிகுந்து இருந்தன. அவர்கள் போர்ச்சுகீசியப் பேரரசின் நினைவுச்சின்னங்களை வெற்றி கொண்டனர். மேலும், அண்மையில் அவர்கள் நன்னம்பிக்கை முனையையும் (Cape of Good Hope) கைப்பற்றினர். போர்ச்சுகீசியருக்குச் சொந்தமான பிரேசிலைக் கைக்கொண்டனர். மேற்கிந்தியத் தீவுகளில் ஆதிக்கம் செலுத்தினர். தங்களுடைய நியூ ஆம்ஸ்டர்டாம் குடியேற்றத்தின் மூலமாக நம்முடைய அமெரிக்கக் குடியேற்றங்களை இரண்டாகப் பிரித்தனர்.

எனினும், ஆரஞ்சுநாட்டு அரச குடும்பத்திற்கும், ஸ்டூவர்ட் அரச குலத்திற்கும் இடையே இருந்த உறவாகிய தளை இந்த இரு குடியரசு நாடுகளையும் ஒன்றாக இணைக்கலாம். 1650ஆம் ஆண்டில் இரண்டாம் சார்லஸின் மைத்துனரான, போரார்வம் மிக்க இரண்டாம் வில்லியம் இறந்தார். அவர் இறந்த பிறகு பிறந்த அவரது மகனும், பிற்காலத்தில் மூன்றாம் வில்லியம் எனப் பேர் பெற்றவருமான இளவரசரைப் புறக்கணித்து, அதிகாரத்தைக்

கைப்பற்றிய குடியரசுவாதிகள் ஸ்டார் ஹோல்டர் பதவியை ரத்து செய்தனர். ஆங்கிலக் கவுன்சில் டச்சுக்காரருடன் இணைந்தால், ஆரஞ்சு குலத்தையும் ஸ்டுவர்டு குலத்தையும் ஒருசேர அழித்துவிட முடியுமென்று எண்ணினர். ஆனால், பேச்சுவார்த்தைகள் நடந்த போது, மக்கள் ஆரஞ்சு இளவரசர்மீது இரக்கம் கொண்டிருந்தனர் என்பதும், ஹாலந்து, சமயத்தைவிட வாணிபத்தையே முக்கிய மாகக் கருதியது என்பதும் வெளியாயின. ஃபிரெஞ்சுக் கப்பல்களில் வந்த டச்சுக்காரருடைய பொருள்களை ஆங்கிலேயர் கைப்பற்றியது அவர்களுக்கு ஆத்திரத்தை ஊட்டியது. டச்சுக்காரரும் டேனரும் செய்துகொண்ட உடன்படிக்கையினால் சவுண்டில் (Sound) நமது வாணிபம் ஆபத்திற்குள்ளாகியது. உரிமைப் பத்திரங்கள் பெற்ற கம்பெனிகளின் தூண்டுதலின்பேரில், பாராளுமன்றம் 1651ஆம் ஆண்டில் முதல் நாவாய்ச் சட்டத்தை (Navigation Act) நிறை வேற்றியது. அதன்படி ஐரோப்பா தவிர மற்ற இடங்களிலிருந்து இறக்குமதியாகும் பொருள்கள் யாவும் பிரிட்டிஷ் கப்பல்களிலேயே வரவேண்டும். ஐரோப்பாவிலிருந்து வரும் பொருள்களையும், ஆங்கிலக் கப்பல்கள் அல்லது அப் பொருள்களை உற்பத்திசெய்த நாட்டுக் கப்பல்களில் கொண்டுவரவேண்டும். 1652ஆம் ஆண்டின் தொடக்கத்தில் தங்களுடைய கப்பல்களுக்குப் பிற நாட்டுக் கப்பல்கள் மரியாதை செலுத்தவேண்டுமென்று ஆங்கிலேயர் கோரியபோது மோதல் ஏற்படுவதற்கான வாய்ப்பு இருந்தது.

முடிவிலே இங்கிலாந்து சில நிலையான நன்மைகளைப் பெற் றிருந்தது. டச்சுக்காரரின் வாணிப வழிகளின் குறுக்கேநின்றது. மேலும் அஃது இறக்குமதியையே நம்பி வாழவில்லை. வணிகக் கப்பற் கூட்டங்கள் பாதுகாப்புப் பெற்றிருந்ததால், டச்சுக்காரர் அவைகளை எளிதில் தாக்கக்கூடவில்லை. அதனோடு ஆரஞ்சு இளவரசருக்கும், குடியரசுவாதிகளுக்குமிடையே இருந்த பூசல், தங்களது உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமென்று ஆர்வமுற்றிருந்த டச்சு மாகாணக் கடற்படை நிர்வாகக் குழுக்கள் ஆகியவை, ட்ராம்ப் (Tromp), ரூய்ட்டர் (Ruyter) போன்ற இணை யற்ற தலைவர்களின்கீழ் இயங்கிய கடலோடிகளின் திறத்தைப் பயனற்றதாக்கின. டச்சுக்காரர் ஏராளமான கப்பல்களை வைத் திருந்தபோதிலும், ஆங்கிலக் கப்பல்கள் பெரியவையாகவும் பீரங்கிகள் நிறைந்தவையாகவுமிருந்தன. நமது கடலாதிக்கம், பிளேக், டீன், மாங்க் போன்று படை வீரராகவும், அதே சமயத்தில் கடலோடிகளாகவும் இருந்தவரின் சேவையினால் மேலும் வளர்ந்தது. அவர்கள் ஒருசில அரசாங்கக் கப்பல்களோடு, அவசர அவசரமாகத் திரட்டப்பெற்ற வணிகக் கப்பல்களைக் கொண்ட ஒரு கப்பற் கூட்டத்திற்குப் பதிலாகக் கடற்படைச் சேவையை ஒரு வாழ்க்கைத்

தொழிலாகச் செய்தனர். போருக்கான விதி முறைகளும், சண்டை யிடுவதற்கான உத்திரவுகளும், கடற்படையில் ஒழுங்கையும் கட்டுப்பாட்டினையும் ஏற்படுத்தின. அதே சமயத்தில் கடற்படைப் பிரிவுகளின் அமைப்பு வருங்காலப் போர்த்திற முறைகளை வகுத்தது.

டச்சுப் போர் நடந்த முதலாண்டில், வெற்றி தோல்வி நிச்சயமாக ஏற்படவில்லை. லண்டன் மாநகருக்கு அளித்து வந்த நிலக்கரியின் அளவு குறைந்தது. வாணிபத்தில் பேரிழப்புகள் நேர்ந்தன. இவைகளெல்லாம் எஞ்சிய பாராளுமன்றத்தின் எமனாக வந்தன. 1653ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் போர்ட் லண்டிற்கும் (Portland) காப் கிரிஸ்-நெஸ்ஸிற்கும் (Cap Gris-Nez) நடுவில் நடந்த மூன்று நாள் போரில், பிளேக்கும் மாங்க்கும் வெற்றி பெற்று, ஆங்கிலக் கால்வாயின்மீதான ஆதிக்கத்தைத் திரும்பப் பெற்றதில் அப் பாராளுமன்றம் பெருமைகொண்டு துள்ளியது. அதனை அழித்து நாட்டிலே நல்லதோர் அரசாங்கத்தை அமைக்கும் வழிகளைப்பற்றிக் கிராம்வெல் பல வாரங்களுக்குத் தீவிரமாக ஆராய்ந்தார். இளைஞரான க்ளொசெஸ்டர் கோமகனுருக்கு ஓரளவு முடியாட்சி அதிகாரங்களை வழங்கலாம் என்ற கருத்து ஆராயப்பட்டது. நம்பிக்கை இழந்த நிலையில் கிராம்வெல் ‘யாராவது ஒருவர் அரசராக வந்தால் என்ன’ என்று வினவினுர். மாரிக்காலம் முழுதும், எஞ்சிய பாராளுமன்றத்தைப் படை கொண்டு கலைக்க வேண்டுமென்று விரும்பிய, தம்முடைய வீரர்களைத் தடுத்து நிறுத்தினுர். இறுதியில், பாராளுமன்றத் தலைவர்களை, மன்றம் கலைவதற்கு இணங்குமாறு செய்தார். எனினும் ஏப்ரல் மாதத்தில், வேன், ஓர் இயக்கம் நடத்தி ஒரு திட்டத்தைக் கொண்டுவந்தார். அதன்படி தேர்ந்தெடுக்கப் பெறும் புதிய பாராளுமன்றத்தில் பழைய எஞ்சிய பாராளுமன்ற உறுப்பினர் அனைவரும் அப்படியே இடம் பெற வேண்டுமெனவும், அவ்வாறு புதிதாக இடம்பெற வேண்டியவர் தகுதிகளைத் தீர்மானிக்கும் உரிமை எஞ்சிய பாராளுமன்றத்தினருக்கே இருக்க வேண்டுமென்றும் அறிவிக்கப்பட்டது. அவர்கள் ஃபேர்ஃபாக்ஸை மீண்டும் தளபதியாகக் கொண்டுவருவார்களென்றும், பிரஸ் பிடீரியர் அதிகாரத்தைக் கைப்பற்றுவர் என்றும் பொதுவாகக் கருத்து நிலவியது. இத் திட்டத்தை அவசரமாக நிறைவேற்றும் முயற்சி நடந்ததால், அதற்கெதிரான செயலில் கிராம்வெல் இறங்கினுர். துப்பாக்கி வீரர்களின் துணைகொண்டு பாராளு மன்றத்தை வளைத்துக்கொண்டார். உறுப்பினர்களின் கொடுஞ் செயல்களையும் தனிப்பட்டோரின் ஒழுக்கக் கேடுகளையும் கண்டித்துப் பேசினுர். அவர்கள் சமயத்தைப் புறக்கணித்தனர்

என்றும் பழி சுமத்தினர். பாராளுமன்ற உறுப்பினரையும் அரசுக் கவுன்சிலையும் பலாத்காரமாக வெளியேற்றினர். காமன்ஸ் சபையில் இருந்த அரச சின்னமாகிய தண்டனை பயனற்றது என்று கூறித் தம் வீரரை வெளியே கொண்டு செல்லுமாறு பணித்தார்.

இப்போது கிராம்வெல் படைத்தலைவர் எனும் அதிகாரத்தைத் தவிர, சட்ட முறையான வேறெந்த அதிகாரத்தையும் பெற்றிருக்க வில்லை. சேனையிலிருந்த தீவிரவாதிகள், தேர்ந்தெடுக்கப்பெற்ற 'திருத் தொண்டர்'கள் ஆட்சி வேண்டுமென்று, எப்போதும் போல் வற்புறுத்தினர். கிராம்வெல் பல வாரங்களுக்குச் சேனையினரோடு கலந்தபிறகு, அக் கோரிக்கையை ஒட்டிய திட்ட மொன்றை வகுத்தார். அதன்படி ஒவ்வொரு கவுன்டியிலும் இருந்த பியூரிட்டன் தொழுகைக் கூட்டத்தினர், பாராளுமன்ற உறுப்பினராக வருவதற்குத் தகுந்த பெயர்களை அனுப்பவேண்டும். அவ்வாறு அனுப்பப்பெற்ற பெயர்களில் கிராம்வெல், சேனை நிர்வாகச் சபையோடு கலந்து இங்கிலாந்திற்கென்று 129 உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கவேண்டும். அயர்லாந்திலிருந்தும் ஸ்காட்லாந்திலிருந்தும் சில உறுப்பினர் இதே முறையில் தேர்ந் தெடுக்கப்பட்டனர். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், ஜூலை மாதம் 'பார்போன் பாராளுமன்றம்' (Barebones Parliament) எனும் பெயரில் கூடினர். ஃபிளீட் தெருவில் (Fleet Street) தோல் வணிகராக இருந்த, தணியாத ஆர்வம் கொண்டோரான பார் போன் (Barbon) என்பவரின் பெயரையே இப் பாராளுமன்றத் திற்குச் சூட்டினர். உறுப்பினர் ஓராண்டிற்குப் பதவியிலிருக்க வேண்டுமென்றும், அதன்பிறகு அவர்களின் வாரிசினரைத் தேர்ந் தெடுக்கவேண்டும் என்றும் கூறினர். அதற்குள் மக்களெல்லாம் ஓர் உண்மைப் பர்ராளுமன்றத்தைத் தேர்ந்தெடுக்கும் தகுதி பெற்றுவிடுவார்கள் என்றும் குறிப்பிட்டார். 'இதற்கிடையில் ஆண்டவர் புதுமை வாய்ந்த நெளிவுகள், திருப்பங்கள் ஆகிய வற்றின்மூலமாகத் தெரிவு செய்யப்பெற்ற, பற்றுறுதி கொண்ட வரை அழைத்திருக்கிறார்' எனினும் 'அவர்கள் செயின்ட் பாலி னுடைய (Paul) உணர்ச்சியோடு' பியூரிட்டானியருக்காகமட்டு மன்றி மக்கள் அனைவருக்குமான நன்மையளிப்பவராக இருக்கட்டு மென்றார்.

இவ்வாறு நியமிக்கப்பெற்றப் பாராளுமன்றம் ஜூலைமாதத்தி லிருந்து டிசம்பர் வரை கூடியது. அஃது ஏதேதோ பெருந் திட்டங்களைத் தீட்டியதே ஒழிய நடைமுறையில் காரியங்களைச் செய்வதில் ஊக்கம் காட்டவில்லை. அதன் உறுப்பினர் திருமணப்

பதிவேடுகளையும், பாரிஷ் பதிவேடுகளையும் கொண்டுவந்தனர். ஏழைக் கடனாளிகளுக்கு உதவி செய்தனர். சட்டங்களைத் தொகுத்துச் சிறு நூலாக வெளியிட வேண்டுமென்று பேசினர். எனினும் அவர்களுடைய திட்டங்கள், நாடுகளுக்கு அச்சமூட்டுவதாகவே அமைந்தன. ஏனெனில், அவர்கள் மாற்று அமைப்பு ஏதும் ஏற்படுத்தாது, சான்சரி நீதிமன்றத்தை நீக்கினர். திருச்சபை மானியம் வழங்குதல் கூடாதென்றனர். கோவில் மகமையை நீக்க வேண்டுமென்றனர். போரும், அரசாங்கத்தைக் கவிழ்க்கும் சூழ்ச்சியும் பயமுறுத்திய நேரத்தில் எல்லா வரிகளையும் எதிர்த்தனர். உயர்நீதி மன்றத்தை நிறுவ மறுத்தனர். கருந் திரிதுறவியரிடையே குருமார், நான்காம் ரோமானிய முடியாட்சி அழிந்துவிடவில்லையென்றும், கிறித்துவின் பேரரசை நிலைநாட்டுதற்குச் சேனை போரிடவேண்டுமென்றும், ஆங்கிலச் சட்டத்திற்குப் பதில் மோசஸின் (Moses) விதிகளைக் கொண்டுவரவேண்டுமென்றும் கூறினர். அதோடு, பாபியாகிய கிராம்வெல்லிற்கு பதில் ஹாரிசன் பதவியேற்க வேண்டுமென்றும் கூறினர். லில்பர்னின் கூட்டத்தினர், வயது வந்தோருக்கு வாக்குரிமை வேண்டுமென்றனர். 'சுதந்திரத்தையும் சொத்துரிமை' யையும் மட்டும் தாங்கியோரிடம் தணியாத வெறுப்புக்கொண்ட கிராம்வெல், ஹாலந்தோடு சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தோடு, லாம்பர்ட்டுடனும் (Lambert) வலதுசாரி கட்சியினருடனும் சேர்ந்துகொண்டார். டிசம்பர் மாதத்தில் லாம்பர்ட்டின் ஆட்கள், சபையின் பெருவாரியான அங்கத்தினர் ராஜிநாமா செய்யுமாறு செய்தனர்.

இங்ஙனம் பியூரிட்டன் சமயம் புரட்சி இயக்கமாக இருந்த நிலைமாறியது. அது வெற்றிபெற்றதைக் காக்கும் வல்லமை பெற்று இருந்ததா என்பது போகப்போகத்தான் தெரியும். அறிகுறிகள் பலவற்றினின்றும் நாட்டில் செல்வாக்குப் பெற்ற நலன்கள் நிலையான அரசாங்கத்தை விரும்பின என்பது தெரிந்தது. சமயப் பரப்பாளர்களுக் கெதிராக எழுந்த லண்டன் மாநகரக் கிளர்ச்சியாளரிலிருந்து, தீவிரமாகக் குடியேற்றங்களைப் பெருக்கவேண்டும் என்று எண்ணியவர்கள்வரை இதே விருப்பம் காணப்பெற்றது. கிராம்வெல்லின் காப்பாளர் ஆட்சியில் அதற்கு முன்பும் பின்பும் இருந்த ஸ்டூவர்ட் அரசாங்கங்கள் அறியாத சுருசுருப்பான திறமை காணப்பெற்றது. இத் திறமை கடற்படை ஆணையாளரிடமும், மாங்க் நடத்திய ஸ்காட்லாந்து அரசாங்கத்திலும், பல்கலைக்கழகங்களிலும், கெவலியருடைய நிலங்களைச்செயலாட்சி செய்ததுபோலப் பல பிரச்சினைகளைக் கையாண்ட விதத்திலும் வெளிப்பட்டது. திறமைகொண்டோர் தகுந்த வாய்ப்புகளைப் பெற்றனர். அயர்லாந்தில் நில உரிமை நிர்ணயம் செய்வதில் வெற்றி கண்ட துணி

வியாபாரியின் மகனும், பொருளாதார அறிஞரும், லான்ஸ்டவுன் (Lansdowne) குடியைத் தோற்றுவித்தவருமான வில்லியம் பெட்டி (William Petty), ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தைச் சார்ந்த அறிவியல் மேதையான ரென் (Wren), நியூ இங்கிலாந்திலிருந்து வந்து ஹேக் நகருக்குத் தூதுவராகச் சென்ற சாரணர் தலைவர் டௌனிங் (Downing), எதிர்காலத்தில் கடற்படைச் செயலராக வந்த பெபீஸ் (Pepys) ஆகியோர் அவர்களிற் சிலர். பியூரிட்டன் சமயவெறியற்ற இவர்களைப்போன்றே மேலும் சிலர் கிராம்வெல்லை நெருங்கியிருந்தனர். உள்துறைச் செயலரான தர்லோ (Thurloe) தன்னடக்கம் மிகுந்து லண்டன் மாநகரத்து மக்களுடன் மிகநெருங்கிய தொடர்புகொண்டிருந்தவர். பெருஞ்செல்வந்தரான ஆஷ்லி கூப்பரும் (Ashley Cooper) மான்டேகுவும், ஷாப்ட்ஸ்பரி, சாண்ட்விச் ஆகியோரைப் போன்று பிற்காலத்தில் சார்லஸிடம் பணிபுரிந்தவர்கள். பேராசைபிடித்த லாம்பர்ட் போன்ற உண்மை வாதிகளும், அடக்கமும் நேர்மையும் மிகுந்த ஸ்கிப்பன் (Skippon) ஆகியோரும் கிராம்வெல்லின் துணைவர்களாக இருந்தனர்.

லாம்பர்ட்டின் கட்சியினரால் தயாரிக்கப்பெற்ற 'அரசாங்க அமைப்புப் பத்திரம்' (Instrument of Government) ஒருபடி பின்னோக்கிச் சென்றதெனலாம். கிராம்வெல், அரசர் பட்டத்தை ஏற்க மறுத்தார். ஆயினும், அவருடைய காப்பாளராட்சி வரம்பிற்குட்பட்ட முடியாட்சியானது. அது ஜனநாயக முதன்மையாதிக்கம் போன்ற கருத்துகளையெல்லாம் காற்றில் பறக்கவிட்டு, இவ்வரசாங்க அமைப்புப் பத்திரம், கவுன்டிகளில் ஆண்டுக்கு 200 பவுன் வரும்படி உள்ளவர்மட்டுமே வாக்குரிமை பெறவேண்டுமென்று விதித்தது. மூன்றாண்டுகளுக் கொருமுறை பாராளுமன்றம் கூடினால் போதுமென்றது. அதற்கு முரணான சட்டங்கள் வருவதைத் தடுத்தது. குறிப்பாக, போப் சமயத்தவருக்கும் பிரிலேட்டுகளுக்கும் (Prelate) தவிர, மற்றையோருக்கு வழிபாட்டு உரிமை வழங்குவதாக அளித்த அதனுடைய உறுதிமொழியைக் குலைக்கும்வகையில் பாராளுமன்றம் சட்டமியற்றுதல் கூடாது. இவ்வித வரம்புகட்குட்பட்டுப் பாராளுமன்றம் சட்டமியற்றலாம். அச்சட்டத்தைத் தள்ளுபடி செய்யும் உரிமை யாருக்கும் கிடையாது. ஆனால், முதன்மையான அதிகாரங்களையெல்லாம் காப்பாளரும் அரசுக் கவுன்சிலும் பகிர்ந்துகொண்டனர். முதலில் நியமிக்கப் பெற்ற கவுன்சிலர்கள் வாழ்நாள் முழுவதும் பதவி வகிக்கவேண்டும். காப்பாளர், அவர்களோடு இணைந்து ஆணைகள் பிறப்பிக்கலாம்; பணம் திரட்டலாம். மேலும் அவர், போரைத் துவக்கவும் சமாதானம் செய்துகொள்ளவும் அதிகாரம் பெற்றார். பாராளுமன்றக் கூட்டம் நடைபெறாத வேளையில் காப்பாளரும் கவுன்சிலும்,

ஒன்றாக இணைந்து சேனையையும் நாட்டுப் படையையும் கட்டுப் படுத்தவேண்டும். முப்பதாயிரம் போர்வீரர்களடங்கிய நிலைப் படையையும், ஒரு கப்பற் படையையும் வைத்துப் பராமரிக்கவும், சிவில் நிர்வாகத்தை நடத்தவும் ஆண்டு ஒன்றுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைப் பாராளுமன்றம் வழங்கவேண்டும். இறுதியாக, கிராம்வெல்லின் வாரிசைக் கவுன்சிலே நியமிக்கவேண்டும்.

மேலெழுந்தவாரியாக நோக்குமிடத்து, கிராம்வெல்லின் கொள்கை 1660 ஆம் ஆண்டில் அடிபட்டது என்று தோன்றினாலும், அதன் பயன் நிரந்தரமானது. அவருடைய பங்கு மகத்தானது. தாம் வகித்திருந்த இடத்திற்குத் தம்மைக் கடவுளும் மக்களும் அழைத்ததாக, அவர் எப்போதும் கூறுவதுண்டு. உண்மையில், பல கருத்துகள் இணைந்து அவ்விதச் சூழ்நிலையை ஏற்படுத்தி இருக்கின்றன. அவரது வலிமை, அரசியல் காரணங்களைச் சார்ந்து இருந்ததைவிட, அவரையே சார்ந்திருந்தது. அவர் திறமையை விடப் பண்பிலே சிறந்தவர். சேனையின்மீது நாட்டு மக்களின் செல்வாக்கு இருந்தபோதும், அவர், மேல் நிலைக்கு வந்தார் என்றால், அஃது அவரிடம் காணப்பெற்ற பண்பு நலன்களினாலே யாகும். அவர் நீள்நோக்குக் கொண்டவரல்லர் என்பது உண்மையே. எல்லாப் பியூரிட்டன்களைப் போன்றே கத்தோலிக்கரைப் பொறுத்தவரை கபோதியாக நடந்துகொண்டார். வெளிநாட்டு விவகாரங்களிலும் குறுகிய நோக்கும் சில சமயங்களில் மடமையான துணிச்சலும் கொண்டிருந்தார். ஆனால், முதலாவதாக மக்களிடத்துப் பேரன்பும், அக்காலத்து அவர் வகுப்பாரின் சுவைகளையும் பெற்ற சிறந்த மனிதராக விளங்கினார். தமது குதிரைகளையும், வேட்டையையும், இசையையும் பெரிதும் விரும்பினார். போர்க்களத்திலும் ஆலோசனைக் கூடத்திலும் அவர் தம் நகைச்சுவையும், நயமும், மக்களை ஊக்குவிக்கும் ஒப்பற்ற திறனும், இணக்கப்படுத்தும் இயல்பும் வெளிப்பட்டன. தாம் சேனைத் தளகர்த்தராக இருந்தபோதிலும் படை சாராதார் பண்பு பெற்று, அரசியலில் இராணுவத் தலையீட்டினைக் கூடிய வரை எதிர்த்தார். 'பலவந்தமாகப் பெறும் எதிலும் பலனில்லை' என்று நம்பினார். அரசியலில் புரையோடிய புண்ணை குணமாக்குவதும் ஒழுங்கினை நிலைநாட்டுவதும் அவர்களுடைய கடமையாகுமென்று முதல் பாராளுமன்ற உறுப்பினரிடம் கூறினார். தாம் 'ஒரு பாரிஷின் காவலர்' என்றும், 'மக்கள் குடும்பத்தின் தந்தை' யென்றும் கூறிக் கொண்டார். ஆப்ரஹாம் லிங்க்கன் (Abraham Lincoln) போன்று ஒழுங்குமுறையான சகிப்புத்தன்மை காட்டியதன் காரணமாகக் கெவலியர் முதல் குவேக்கர் வரையுள்ள மக்கள் அனைவரிடமிருந்தும் நன்மைகளைப் பெறத் தவறவில்லை. ஆயினும்,

அதற்கோர் எல்லை இருந்தது. கிராம்வெல் எலிசபெத் காலத்தைச் சேர்ந்த கனவான். அவர், சமநிலைவாதிகள் 'விலங்குகளை ஒத்தவர்' என்றும், அவர்கள் எதையும் 'கவிழ்ப்பதையே' தங்கள் தொழிலாகக் கொண்டவரென்றும் கூறினர். சொத்துரிமையும் சமமின்மையும் இல்லாத சுதந்திரத்தைப்பற்றி எண்ண முடியாத பெருஞ் செல்வந்தர் போன்றிருந்தார். ஆனால், அவரும் ஒரு தீவிரப் பியூரிட்டானியரே. பியூரிட்டானியருக்காகத் தாம் போரிட்ட தாகவும், அவர்களுக்காக மேலும் உழைக்கத் தயாராக இருப்ப தாகவும், மிகுந்த தவறிழைக்கும் கிறித்துவச் சமயத்தவரையும் தம்மால் திருத்த முடியும் என்றும் கூறினர். ஆங்கில வரலாற்றையும், பிராட்டஸ்டென்ட் சமய வரலாற்றையும் படித்தபோது 'நம் ஆண்டவரைப்போல் யாருளர்' என்று வினவினர். ஸ்பானியரிடம் இருந்த இந்தியத் தீவுகளைத் தாக்கிக் கொள்ளையிடுவது கிறித்துவிற்குச் செய்யும் சேவையாகக் கொண்டார்.

1654ஆம் ஆண்டு பாராளுமன்ற உறுப்பினரைச் சந்திப்ப தற்கு முன்பே கிராம்வெல்லின் கொள்கைகளும், அவர் கொண்டு வந்த சட்டங்களும் காப்பாளர் ஆட்சியின் போக்கை நன்கு அமைத் தன. அவர் எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்ற நிலை யேற்பட்டது. எனவே, அரசாங்கத்தின் குறிக்கோள், குறுகிய தாக இருந்தது. ஜனநாயகவாதியான லில்பர்ன் ஜெர்ஸி சிறை யில் வாடினர். ஹாரிசன், வேலையிலிருந்து நீக்கப்பெற்றார். லட்லோவும் வேனும் புதிய அரசாங்கத்தை ஏற்க மறுத்தனர். சமநிலைவாதிகளின் சதி, கிராம்வெல்லின் படைப்பிரிவையே சக்தி யிழக்குமாறு செய்தது. அரச கட்சியினருக்கு அளிக்கும் சலுகை யாக உடன்படிக்கைப் பிரமாணத்தைத் தள்ளியபோதிலும், அவர் களில் ஒருவரான போற்றுதற்குரிய மாத்யூ ஹேல் (Mathew Hale) என்பவரை நீதிபதியாக நியமித்தபோதிலும், அரசாங்க அமைப்புப் பத்திரம் உள்நாட்டுப் போர்களில் பாராளுமன்றத்திற்கு எதிராகப் போரிட்டவர்களுக்கு வாக்குரிமை அளிக்க மறுத்தது. எனவே, அவர்கள் 'மூடப்பெற்ற முடி' (Sealed Knot) என்ற இரகசியக் குழுவின் தலைமையில் சதிகள் புரிந்தனர். அவர்கள் பிரஸ்பிடீரி யரை வெல்லும் வாய்ப்பையும் வலியையும் பெற்றிருந்தனர்.

எவ்வாறெனினும், பாராளுமன்றமும் திருத்தொண்டர்களும் செய்யத் தவறியதைக் காப்பாளரான கிராம்வெல் செய்துமுடித் தார். நெடு நாட்களுக்கு நீடித்த பொருளாதார முற்றுகை டச்சு வாணிபத்தை அழித்தது. ட்ராம்ப், சண்டையில் கொல்லப்பட்டார். ஹாலந்துடன் நெருங்கிய ஐக்கியத்தை ஏற்படுத்த கிராம்வெல்

எண்ணியபோதிலும் டச்சுப்போரின்மீது கொண்ட வெறுப்பி ஞலும், நிதி நெருக்கடி காரணமாகவும், 1654ஆம் ஆண்டில் நேர்மையான நிபந்தனைகளுடன் டச்சுக்காரருடன் சமாதானம் செய்துகொண்டார். அந்த உடன்படிக்கையின்படி குறுங்கடல் களில் அந்நிய நாட்டுக் கப்பல்கள் நமது கப்பற்படைக்கு மரியாதை அளிக்க வேண்டுமென்ற நமது உரிமையை டச்சுக் காரர்கள் ஏற்றுக்கொண்டனர். நமது நாவாய்ச் சட்டங்களையும் ஏற்றுக்கொண்டனர். மேற்கிந்தியத் தீவுகளில் நடுநிலையாளர் ஒருவரின் தீர்ப்பை ஏற்க ஒப்புக்கொண்டனர். இங்கிலாந்து, ஆரஞ்சு இளவரசரை ஆதரிக்கக் கூடாதென்றும், ஹாலந்து, ஸ்டுவர்டுகளை ஆதரிக்கக் கூடாதென்றும் ஒப்பினர். அடுத்த படியாக, ஸ்வீடனுடனும் டென்மார்க்குடனும் செய்துகொண்ட வாணிப உடன்படிக்கைகளினல் சவுண்டில் (Sound) ஆங்கிலேயர் டச்சுக்காரருடன் சமமாக வாணிபம் செய்யும் உரிமையைப் பெற்ற னர். அதே சமயத்தில் போர்ச்சுகீசியருடன் ஏற்பட்ட உடன் படிக்கையினல் ஆங்கிலக் கப்பல்களுக்கு முதன்மையளிக்கப் பெற்றது. நமது வணிகர் சமய ஒறுப்பிலிருந்து மீண்டனர். ஒரு வழியில் இறுதியாகக் கூறப்பெற்ற பிரச்சினை, 1654ஆம் ஆண்டு இறுதியில் ஆலிவருக்கு ஆட்டங்கொடுத்தது. ஸ்பெயின், பிரான் ஸிற்கு எதிராகக் கிராம்வெல்லிற்கு பண உதவி செய்யமுடியாத நிலையில் இருந்தது. அது கத்தோலிக்க வெறி கொண்டிருந்ததால், கிராம்வெல் யூக்நோக்களிடம் காட்டிய பரிவிற்கு ஈடுகொடுக்க முடியவில்லை. தன்னுடைய துறைமுகங்களில் ஆங்கிலேயருக்கு வழிபாட்டுச் சுதந்திரம் அளிக்கவும், மேற்கிந்தியத் தீவுகளுடன் தடையில்லா வாணிப உரிமை வழங்கவும் மறுத்தது. இச் சூழ்நிலை யில் போர்ச்சுகலுடன் நீண்டநாள் தயக்கத்திற்குப் பிறகு உடன் படிக்கை ஏற்பட்டது.

இதற்கிடையில் கிராம்வெல்லின் கவுன்சில் கொண்டுவந்த ஆணைகளின்மூலமாகப் பியூரிட்டானியச் சமயத்தில் சீர்திருத்தம் தோன்றியது. அவைகள் குழப்பத்திற்கிடையே ஓர் ஒழுங்கினை ஏற்படுத்தின. கிராம்வெல், கெவ்லியரைக் கூட்டும் போட்டிப் பந்தயங்களை ஒழித்தார். கோழிச் சண்டைகள், மற்போர்கள் ஆகியவற்றைத் தடைசெய்தார். சான்சரியைச் சீர்திருத்தினர். சமய ஏற்பாட்டில், ஜான் ஓவனின் திட்டத்தைக் கடைப்பிடித்தார். கட்டுப்பாடுகள் புறக்கணிக்கப்பெற்றதால், பிரஸ்பிடரியே சட்டப் படியான அமைப்பாக இருந்தபோதிலும், அதன் வளர்ச்சி குன்றி யது. சில சமயங்களில் போட்டிச் சமயப் பிரிவினர் திருக்கோயில் களைப் பகிர்ந்துகொண்டனர். சில இடங்களில் பதவிக்காகப் போட்டியிட்டனர். ஆயினும், கிராம்வெல், அரசாங்க அமைப்புச்

சட்டத்தின் உள்நோக்கை நேர்மையுடன் கடைப்பிடித்தார். அதன்படி நல்ல திருச்சபை ஏற்பாடு தோன்றும்வரை, முக்கியமான சமயப் பிரிவினரைக்கொண்ட அமைப்புத் தோற்றுவிக்கப்பெற வேண்டும். அது கோவில் மகமையால் ஆதரவு பெறுதல் வேண்டும். அதே சமயத்தில் அதில் சேராதவர்களுக்கு அவர்கள் பொது அமைதியைக் குலைக்காதவரையில் சமயப்பொறை அளிக்கப்பெற வேண்டும். திருச்சபையில் தனிப்பட்டோர் ஆதரவு தொடர்ந்து வந்தது என்றாலும், கிராம்வெல், சோதகர்கள் (triers) எனும் அதிகாரிகளை நியமித்தார். அவர்கள் பிரஸ்பிடீரியர், பாப்டிஸ்டுகள், சுயேச்சைவாதிகள் ஆகியோரிடை இருந்து நியமிக்கப் பெற்றனர். குருமார் பதவிக்குத் தகுதியானவர்களா என்பதை இந்த அதிகாரிகள் நிர்ணயிக்கவேண்டும். அதனோடு ஒவ்வொரு கவுன்டியிலும் 'வெளித்தள்ளுவோர்' (ejectors) எனும் அதிகாரிகளையும் நியமித்தார். அவர்கள் திறமையற்ற அல்லது ஒழுக்கங்கெட்ட குருமார்மீது நடவடிக்கை எடுத்தனர். தன்னிச்சையாகத் தோன்றிய சங்கங்கள் பலவற்றின் ஆதரவைப் பெற்ற இந்த அமைப்பு இணங்காமைத் தன்மையை வளர்த்தது. சமயப் பொறையைப் பொறுத்தவரையில், மாஸ் தொழுகைக் கூட்டமும் வழிபாட்டு நூலும் சட்டப்படி தடைசெய்யப்பெற்றனவென்றாலும், லண்டன் நகரக் கோயில்கள் பலவற்றிலும், பல தனிப்பட்டோர் சமயக் கூட்டங்களிலும் ஆங்கிலிகத் திருச்சபை இறவாமல் வாழ்ந்தது. கத்தோலிக்கர், திருக்கோயிலுக்குச் செல்லாததால், தண்டம் கட்டத் தேவையில்லை. அதே சமயத்தில் தீவிரவாதிகளுக்கு தண்டனை அளிக்காது இருக்கக் காப்பாளர் தலையிட்டார். மேலும் அவர் குவேக்கர்கள் ஒறுக்கப்படுவதையும் தடுக்கப் பாடுபட்டார். 'நீங்களும் நானும் ஒரு நாளில் ஒரு மணி நேரம் ஒன்றாக இருந்தால் ஒருவருக்கொருவர் நெருங்கியவராகிவிடுவோம்' என்று, ஃபாக்ஸிடம் (Fox) கூறினார்.

ஆனால், கிராம்வெல், தமது முதல் பாராளுமன்றத்தைக் கூட்டியதும், அவரது அதிகாரங்கள் எத்துணைத் தூரம் உறுதியற்றதாக இருந்தது என்பது புலனானது. பாராளுமன்றம் கூடியவுடனே காமன்ஸ் சபையினர் பழைய உரிமைகள் யாவற்றையும் கோரினர். அவர்களில் நான்கில் ஒரு பகுதியினர் அரசாங்கத்தை மாற்றுவதில்லை என்ற உறுதிமொழி அளிக்க மறுத்ததால், சபையிலிருந்து விலக்கப் பெற்றனர். எஞ்சியிருந்தோர் மாற்ற முடியாத 'அடிப்படைகள்' எனும் கருத்தினைத் தாக்கினர். கவுன்சில் அங்கத்தினரைத் தாங்களே நியமிக்க வேண்டுமென்று கேட்டனர். பல மாதங்கள் விவாதித்த பிறகு, கிராம்வெல் முக்கியமாகக் கொண்டனவற்றையெல்லாம் எதிர்த்தனர். அவர் இறந்த பிறகு சேனையைக்

கட்டுப்படுத்தும் உரிமை தங்களிடமே இருக்க வேண்டுமென்றனர். மானியம் வழங்கும் அதிகாரத்தைக் கொண்டு சேனையைக் குறைக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். 'வெறுக்கத்தக்க புறச்சமயங்களின்' பட்டியல் ஒன்றைத் தயாரித்து, கிராம்வெல் கொண்டுவந்த சமயப்பொறைக் கொள்கையைக் குலைப்பதாக அச்சுறுத்தினர்.

முக்கியமானவைகளில் தாம் விட்டுக்கொடுக்கத் தயார் என்று அவர்களிடம் கிராம்வெல் கூறினர். ஆனல், கட்டுப்பாடற்ற சமயத்தையும், அவர்கள் உயிருக்கு மேலானதாகக் கருதிப் போராடிய அனைத்தையும் அழிக்கக்கூடிய நிரந்தரமான பாராளுமன்றத்திற்கெதிரான, அரணுக அமையும் பாராளுமன்றமும் காப்பாளரும் சேர்ந்த கலப்பு அரசாங்கம் இன்றியமையாதது என்றும், அதைவிட சேனைக்கு அளிக்கப்பெற்ற உறுதிமொழிகள் இன்றியமையாதவை என்றும் குறிப்பிட்டார். இங்ஙனம் இன்றியமையாததாக இருக்கின்ற அரசாங்கத்தை, அறிந்தே அழிப்பதைக் காட்டிலும் தாமே செத்துமடியலாமென்ருர். எனவே, அவர் சட்டமுறையிலான குறைந்த கால அளவான ஐந்து மாதங்கள் முடிந்ததும் பாராளுமன்றத்தைக் கலைத்தார்.

1655ஆம் ஆண்டில் பேரிடர் ஒன்று தோன்றியது. பாராளுமன்ற உறுப்பினர் அரச ஆதரவாளரின் முன்னேற்றப் பாதையின் குறுக்கே நின்ருல் ஆப்த்து வருமென்று கிராம்வெல் எச்சரித்தார். அந்த எச்சரிக்கை 1655ஆம் ஆண்டு உண்மையாயிற்று. அரச ஆதரவாளர் கிளர்ச்சியிலீடுபட்டனர். வில்ட்ஷயரில் நிலைமை மிக மோசமாகியது. அங்கே பென்ருட்டாக் (Penruddock) என்பவரின் தலைமையில் சூழ்ச்சியாளர்கள் சாலிஸ்பரியில் இருந்த சட்ட நீதிபதிகளைக் கைதுசெய்தனர். ஆனல், தர்லோவின் ஒற்றர் படையினர் அரச ஆதரவாளரின் எல்லா முயற்சிகளையும் முறியடித்தனர். 'மூடப்பெற்ற முடி'யைச் சார்ந்தவரும் சார்லஸின் அரசவையினரும்கூட அவரிடம் லஞ்சம் வாங்கி, அவர் விரித்த வலையில் வீழ்ந்தனர். கெவலியர்களும் சமநிலைவாதிகளும் சிறைச்சாலைகளை நிரப்பினர். அவர்களில் தாழ்ந்த நிலையில் இருந்தவர்கள் மேற்கிந்தியத் தோட்டங்களில் வேலை செய்வதற்காக ஏற்றுமதி செய்யப்பெற்றனர். சட்ட நுணுக்கம் தெரிந்த பலர் காப்பாளர் ஆட்சியின் அடிப்படையிலேயே ஐயங்கொண்டனர். அரசாங்கத்தின் ஆணைகள் பிறப்பிக்கும் அதிகாரத்தை எதிர்த்ததற்காக ஐந்து நீதிபதிகள் பதவியிலிருந்து நீக்கப்பெற்றனர். வணிகர் சில சமயங்களில் சட்டத்தின் அதிகாரம்பெருத சுங்கத் தீர்வைகளைத் தர மறுத்தனர். அதனல் அவர்களுடைய வழக்கறிஞர்கள் டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பப்பெற்றனர்.

உண்மையில் கிராம்வெல் மேற்கொண்ட ஒவ்வொரு நடவடிக்கையும், அவரது அதிகாரம் ஆயுதந்தாங்கிய சிறு பான்மையோரைச் சார்ந்து நின்றது என்பதை நிரூபித்தது. அவருக்கு இருந்த ஆதரவு மேன்மேலும் குறையத் தொடங்கியது. கடும் பத்திரிகைத் தணிக்கை காரணமாக, இரண்டு அரசாங்கப் பத்திரிகைகளே வெளியிடப்பெற்றன. நகராட்சி மன்ற உறுப்பினர் சபையிலிருந்து தாராளமாக நீக்கப்பெற்றனர். தலங்களில் பெரும்பான்மையினரின் ஆதரவைப் பெறுதற்காக அரசாங்கத்தினர் சில புதிய உரிமைப் பத்திரங்களை வெளிப்படையாகவே வகுத்தனர். இவ்வாறான வல்லாட்சியின் சிகரம் போன்று, மேஜர் ஜெனரல்களின் நியமனம் வந்து சேர்ந்தது. கிராம்வெல், இங்கிலாந்தையும் வேல்ஸையும் பதினொரு மாவட்டங்களாகப் பிரித்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு மேஜர் ஜெனரல் எனும் ராணுவ அதிகாரியை நியமித்தார். அவருக்குத் துணையாக கவுன்டி ஆணையாளர் பணிபுரிந்தனர். குதிரைப்படையும் உதவிக்காக இருந்தது. இவ்வாட்சிமுறை நடைபெறுவதற்காகும் செலவைச் சமாளிக்கவேண்டி அரசராதரவாளரின் வருமானத்தில் 10 சதவீதம் வரி விதிக்கப்பெற்றது. அரசராதரவாளர் பல வழிகளில் கொடுமைக்குள்ளாயினர். தனியாணைப் பேரறிக்கை ஒன்று, அவர்கள் ஆயுதங்களை வைத்திருத்தலாகாது எனவும், ஆங்கிலிக குருமார்களைக் குடும்பப் பாதிரிகளாகவும் (chaplain), ஆசிரியர்களாகவும் வைத்திருக்கக் கூடாதென்வும் வற்புறுத்தியது. மேஜர் ஜெனரல்கள் தனிப்பட்டவர்களின் வாழ்க்கையில் பெரிதும் குறுக்கிட்டனர். சாராயக் கிடங்குகள் மூடப்பெற்றன. பிச்சைக்காரர்களும் அரசராதரவாளர் எனச் சந்தேகிக்கப்பெற்றவரும் பிடிபட்டுச் சிறையில் தள்ளப்பெற்றனர். விளையாட்டுப் பந்தயங்களும் காளைப் போர் முதலியனவும் நிறுத்தப்பெற்றன. கிறிஸ்துமஸ் விழாக்கொண்டாட்டம் போன்ற மூடப்பழக்கங்களும் தடை செய்யப்பெற்றன.

மேலும், கிராம்வெல், சேனையைக் குறைத்தபோதிலும் செலவு மிகுந்த அயல்நாட்டுக் கொள்கையைப் பின்பற்றினர். லாம்பர்ட்டின் ஆலோசனைக்கு மாறாகப் பிராட்டஸ்டென்ட் சமயத்தைக் காக்கவும், தமது படையினருக்கு வேலையளிக்கவும் மேற்கிந்தியத் தீவுகளில் போரிட வேண்டுமென்று நினைத்தார். உண்மையில், அப்பகுதியில் ஸ்பானியர் நமது கடலோடிகளைத் துன்புறுத்தினர். மேலும், மேற்கிந்தியத் தீவுகளில் ஏற்படும் போர் ஐரோப்பாவில் போரை மூட்ட வேண்டுமெனும் நியதியில்லை. கிராம்வெல், தாம் பிறந்த எலிசபெத் ஆட்சிக்கால நினைவிலேயே வாழ்ந்திருந்தார். நம் உள்ளங்களைக் கவர்ந்த பெருமைவாய்ந்த எலிசபெத்

ராணியார்' என்று பாராளுமன்றத்தில் ஒரு முறை குறிப்பிட்டார். அதுவரையில் எந்த ஆங்கில அரசாங்கமும், போப்பினுடைய ஆணையை ஆதாரமாக வைத்து ஸ்பானியர் மேற்கிந்தியத் தீவு களில் ஆதிக்கம் செலுத்துவதை ஏற்றுக்கொண்டதில்லை. அதைப் போலவே மற்ற நாடுகளின் கைக்குச் செல்லாத பகுதிகளை நம் குடியேறிகள் கைப்பற்றுவதைப் பிறர் தடுக்கும் உரிமையையும் ஏற்றுக் கொண்டதில்லை என்றும் கூறினர். இந்த நோக்கங்களைக் காட்டிலும், ஆலிவர், ஸ்பெயினை இங்கிலாந்தின் 'இயற்கையான எதிரி' என்றும், வெறுக்கத்தக்க வல்லரசு என்றும் கொண்டு அதனை அழிக்க முனைந்தார். 'உன்னுடைய எதிரிகளாகிய ஸ்பானியர் கடவுளிடமே தகராறு கொண்டவர்கள்' என்று ஓர் ஆங்கில மாலுமியிடம் குறிப்பிட்டார். இங்ஙனமாக அல்வாய்ப் புற்ற படையெடுப்பு 1655ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பெற்றது. இப் படையெடுப்பிற்குத் தலைமை தாங்கி நடத்திச் சென்ற அட்மிரல் பென் (Admiral Penn) என்பவரும், ஜெனரல் வெனபில்ஸ் (General Venables) என்பவரும் தங்களுக்குள் சண்டை யிட்டுக்கொண்டனர். அவர்களின் படையில், கட்டுப்பாடற்ற படைப் பிரிவினரும், மேற்கிந்தியத் தீவுகளில் திரட்டப்பெற்ற மோசமான படையினருமே இருந்தனர். ஹிஸ்பானியோலாவைக் (Hispaniola) கைப்பற்ற வேண்டுமென்று அவர்கள் கொண்ட முயற்சி படுதோல்வியடைந்தது. அவர்கள் ஜமைக்காவைக் கைப்பற்றியபோதிலும், அது முதலில் பயனற்றதாகவும் இடர் மிகுந்ததாகவும் காணப்பெற்றது. சீதபேதி, மஞ்சள் காய்ச்சல் போன்ற கொடிய நோய்கள் மலிந்து இருந்த காரணத்தால், எதிர் பார்த்தபடி நியூ இங்கிலாந்து மக்கள் அங்கே குடியேறி வாழ் வதற்கான வாய்ப்பு இல்லை. அக்டோபர் மாதத்தில் ஸ்பெயின் போரை அறிவித்தது. எனினும், தாம் கத்தோலிக்கச் சமயத்தை அழிக்கும் வரை போரை நிறுத்தப்போவதில்லை என்று கிராம் வெல் அறிவித்தார்.

உண்மையில் ஆலிவர் ஐரோப்பாவில் பிராட்டஸ்டென்ட் நாடு களின் கூட்டுறவை ஏற்படுத்த எப்போதும் முயன்றுவந்தார். அக் கூட்டுறவில் சேருமாறு டச்சுக்காரரை வற்புறுத்திவந்தார். எனவே, அவ்வித முயற்சி நிறைவேறுவதற்கான வாய்ப்பு ஒன்று அப்போது கிடைத்ததாக எண்ணினர். ஏனெனில், அவர் தம்முடைய இளமைப் பருவத்தில் பெருமதிப்பு வைத்திருந்த கஸ்டாவஸ் என்பவரின் மைத்துனரான பத்தாம் சார்லஸ் ஸ்வீடனில் பட்டத்திற்கு வந்தார். சார்லஸ், கத்தோலிக்க நாடான போலந்துமீது படையெடுப்பதை வரவேற்றார். அவரை வியன்னாவின்மீது அணிவகுத்துச் செல்லத் தூண்டியதன்

விளைவாக முப்பதாண்டுப் போர் மீண்டும் தொடங்கியது. கிராம் வெல்லின் திட்டங்களும் புகழும் வளர்ந்துகொண்டேபோயின. பிளேக்கின் கப்பற்படை அல்ஜியர்ஸின் சிறைக் கப்பல்களில் இருந்து கைதானவர்களைக் காப்பாற்றியது. டுனிஸில் (Tunis) குண்டுமாரி பொழிந்தது. நிதிக் கப்பல்கள் ஸ்பெயினுக்கு வந்து சேராவண்ணம் துண்டித்தது. ஆனால், பிளேக்கின் ஒப்பற்ற இறுதியான வெற்றி 1657 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் கிடைத்தது. அவர் டெனிரிஃபில் (Teneriffe) சான்டா கிரஸ் (Santa Cruz) என்னுமிடத்தில் ஸ்பானியக் கப்பற்படையை அழித்தார். அதுபோது ஆலிவர், ஜிப்ரால்டரைக் கைப்பற்ற வேண்டுமென்று கூறினார். ப்ரிமென் (Bremen) என்னுமிடத்தை ஆங்கிலத் தளமாகச் செய்வதற்கு ஸ்வீடனிலிருந்து கேட்டார்.

இதேபோன்று திருத்தமற்ற வழிகளைக் கடைப்பிடித்து, இறுதியில் கிராம்வெல் ஃபிரான்ஸுடன் உடன்படிக்கை செய்து கொண்டார். அவர் முதலில் ஃபிரெஞ்சுக் குடியேற்றமாகிய அக் கேடியாவின்மீது (Acadia) நியூ இங்கிலாந்துக் குடியேற்றத்தை அமைப்பதற்காகப் படையை அனுப்பி ஃபிரெஞ்சு வணிகரைத் தாக்கத் தயங்கவில்லை. ஆனால், அதே சமயத்தில் யூக்நோக்களுக்கு உதவவும் முன்வந்தார். ஃபிரான்சினுடைய பாதுகாப்பைப் பெற்ற செவாய் அரசர், வாடாய்ஸ் (Vaudois) கிராமங்களில் இருந்த இவாஞ்சலிகல் (evangelical) சமயத்தவரை 1655ஆம் ஆண்டு படுகொலை செய்தபோது, கிராம்வெல் எதிர்ப்புத் தெரிவித்தார். இச் சமயத்தில் மாசரின் (Mazarin), தாழ் நாடுகளில் ஸ்பெயின் சலுகைகள் வழங்குமென நம்பியபோதிலும் ஆங்கிலேயருடன் சமாதானம் செய்துகொள்ள விரும்பினார். இங்ஙனம் 1655ஆம் ஆண்டு ஃபிரான்சிற்கும் இங்கிலாந்திற்கும் ஏற்பட்ட உடன் படிக்கை இரு நாடுகளுக்குமிடையே இருந்த வாணிபப் போராட்டத் தைத் தவிர்த்தது. நம்முடைய வாணிபத்தை அழிக்கக்கூடியதும், பெல்ஜியத்தைக் கூறுபோடக்கூடியதுமான ஃபிரெஞ்சுக்காரருக்கும் டச்சுக்காரருக்குமிடையே ஏற்பட இருந்த உடன்படிக்கை முயற்சி நிறைவேறாமல் செய்தது. அதனோடு ஸ்டுவர்டுகளை ஃபிரான்ஸி லிருந்து வெளியேற்றியது. அதன் காரணமாக இரண்டாம் சார்லஸ் ப்ரஸ்ஸல்ஸுக்கு வெளியேற்றப்பெற்றதாலும், அவர் ஸ்பானியரோடு உடன்படிக்கை செய்து கொண்டதாலும், பெல்ஜியக் கடற்கொள்ளைக்காரரின் தொல்லைகளாலும், ஆலிவர், ஃபிரான்சுடன் மேலும் நெருக்கமான தொடர்பு கொண்டார். 1657 ஆம் ஆண்டில் வன்முறைத் தாக்குதல் ஒப்பந்தம் செய்து கொள்ளப்பெற்றது. அதன்படி ஃபிரான்ஸ், டன்கிர்க்கையும் மார்டைக்கையும் அளிப்பதாக வாக்குறுதி தந்தது.

பாராளுமன்றத்தின் உதவியின்றி இவ்விதப்போர் நடவடிக்கைகளுக்கு நிதி பெறுதல் முடியாத ஒன்று. அதே சமயத்தில் இங்கிலாந்திலிருந்து பெற்ற வரும்படியைக் கொண்டு ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலும் அரசாங்கம் நடத்தவேண்டியிருந்தது. காப்பாளர் ஆட்சியில் முதலாம் சார்லஸ் காலத்தில் இருந்ததை விடச் செலவு அதிகமாயிற்று. அஃது ஆண்டொன்றிற்கு 2½ மில்லியனுகை உயர்ந்தது. ஆனல், கிராம்வெல்லினல் எப்போதும் 2 மில்லியனுக்குக் குறைவாகவே பெறமுடிந்தது. மாதந்தோறும் விதிக்கும் தீர்வையின் உயர்வை நிலக்கிழார்கள் எதிர்த்தனர். ஆயத் தீர்வை அதிக வெறுப்பிற்குள்ளாகியது. எனவே, 1656ஆம் ஆண்டில் கிராம்வெல் தமது இரண்டாம் பாராளுமன்றத்தைக் கூட்டியபோது நடந்த தேர்தல்களில் ஒரு சமயத்தில் பியூரிட்டன் கோட்டைகளாக இருந்த ஷயர்களிலும் அரசாங்கத்திற்கு எதிர்ப்பு அதிகமாக இருந்தது தெளிவாகியது. அஃது ஓரளவு குடியரசுக்கான எதிர்ப்பு என்ருலும், அதிகமாகப் பலாத்கார ஆட்சியின் எதிர்விளைவாகவே இருந்தது. அதிலும் அரசுக் கவுன்சில், நூறு உறுப்பினரை அனுமதிக்க மறுத்தது. அதன் காரணமாக, மேலும் ஏறக்குறைய 50 உறுப்பினர் விலகிச் சென்றனர். எனினும், எஞ்சிநின்ற லென்தால் (Lenthal) போன்ற அனுபவம் மிகுந்த அரசியல்வாதிகள், ஒயிட்லாக் (Whitelocke) போன்ற வழக்கறிஞர்கள், ஆன்ஸ்லோக்கள் (Onslows) போன்ற பெருநிலக்கிழார் போன்றவர்கள் மேஜர் ஜெனரல்களை எதிர்த்தனர். 'அன்பான சொற்களைக்காட்டிலும் அடிகளே' அமைதியை நிலைநாட்டும் என்று துடுக்குத்தனமாகப் பேசிய மேஜர் ஜெனரல் டெஸ்பரோ (Desborough) விற்கு பதிலளிப்பது போன்று, ராணுவ மசோதாவை நிறைவேற்ருது தள்ளிவிட்டனர். தம்முடைய சீடர்களினல் துதிப்பாடல்களுடன் புதிதாகத் தோன்றிய கிறிஸ்து என்று கொண்டாடப்பெற்ற நேலர் (Naylor) எனும் குவேக்கர் சமய வெறியரைப் பாராளுமன்றம் தண்டித்தபோது பெருத்த விவாதம் நடந்தது. ஏனெனில், இவ் வழக்கில் பாராளுமன்றமானது, பிரபுக்கள் சபையின் நீதி வழங்கும் அதிகாரத்தைத் தானே எடுத்துக்கொண்டது. அதனேடு பியூரிட்டன் அல்லாத மற்றச் சமயப் பிரிவுகளுக்கு வழங்கப்பெற்ற உரிமையையும் பறித்துக் கொண்டது. அதனல், 'இதுதான் சுதந்திரமென்ருல், அதிலிருந்து ஆண்டவர் என்னைக் காப்பாராக' என்று பிரஸ்பிடீரியரான ஸ்கிப்பன் (Skippon) மனம்நொந்து கூறினர்.

மிதவாதிகள், காப்பாளர் ஆட்சியைக் குறைகூறுவதை விடுத்துத் தர்லோ எழுதியதைப் போன்று 'சட்டமும் மக்களும் அறிந்த' அரச பதவியை ஆலிவருக்கு வழங்கி, அதன்மூலமாக

நிலைமையைச் சீர்செய்ய விழைந்தனர். இதை ஒரு பகுதியாக வைத்துத் 'தாழ்மையான விண்ணப்பமும் ஆலோசனையும்' (**Humble Petition and Advice**) என்ற அரசியல் அமைப்புச் சட்டத்தைக் கொண்டுவந்தனர். ஆலிவர், அவர்களிடம் அனுதாபம் காட்டினார். போதிய காலத்திற்குத் தாம் 'அவர்களுடைய ஊழிய வேலையாளாக' இருந்ததாகவும், 'தன்னிசையான நடவடிக்கைகளைத் தள்ளிப்போடக் காலம் நெருங்கிவிட்டது' என்றும், தம்முடைய படைத் தலைவர்களிடம் கூறினார். தடையேதும் இல்லாதிருந்தால் அளித்த அரச பதவியைக் கிராம்வெல் ஏற்றுக்கொண்டிருப்பார். ஏனெனில், இந்தத் தாழ்மையான விண்ணபத்தில், தம்முடைய தனித்த பாதுகாப்பில் இருந்த கடவுளின் மக்களான பியூரிட்டன்களையும், 'உலகத்திலே ஒப்பற்ற மக்கள்' என்று தம்மால் போற்றப் பெற்ற நாட்டு மக்கள் அனைவரையும் ஒருங்கிணைக்கும் வாய்ப்பு இருந்ததெனக் கண்டார். ஆயின், அவரோடு நெருங்கி இருந்த படைத்தலைவர்களாகிய லாம்பர்ட்டும் ஃப்ளீட்வுட்டும் அதனை எதிர்த்தனர். அதே சமயத்தில் பொது நிலையாளர் அதனைக் கொள்கைதுறத்தலுக்கு ஒப்பாகும் என்று கருதினர். அவர் சாதாரண மக்களின் மனநிலையை அவமதிக்க விரும்பவில்லை. பாராளுமன்றத்தில் அதைப்பற்றிக் குறிப்பிடும்போது, அவ்விதக் கொள்கையுடைய பொதுமக்கள் என்றுமே தோற்றதில்லை என்றார். கடவுளே முடியாட்சிக்கு எதிராக இருந்தார். எனவே, கிராம்வெல் 1657ஆம் ஆண்டு மே மாதம் இறுதியாக அரச பதவியை ஏற்க மறுத்துவிட்டார்.

இருப்பினும், இந்த விண்ணப்பம் படைசாரா அரசாங்கத்தை நோக்கி எடுத்த ஒரு படியாக அமைகின்றது. ஹென்றி கிராம்வெல் எழுதியதைப்போல 'தேசீய இனங்களின் சுதந்திரத்தை நோக்கிச்' சென்றதாகவும், முன்னிலை மீட்சிக்குற்ற முதல்படியாகவும் தோன்றியது. அது கிராம்வெல்லிற்குத் தமது வாரிசுயார் என்று நியமிக்கும் உரிமையை அளித்தது. காமன்ஸ் சபையினரின் வரம்புகடந்த அதிகாரத்தைக் கட்டுப்படுத்த மேல் சபை அமைக்கப்பெற்றது. 'அடிப்படை விதிகள்' பாராளுமன்றத்தைக் கட்டுப்படுத்தா. அதனுடைய பழைமையான, ஐயத்திற்கிடமின்றி இருந்த உரிமைகளுக்கேற்ப அதன் அனுமதியின்றி உறுப்பினர்களை வெளியேற்றுதல் கூடாது. கவுன்சில் அங்கத்தினரைத் தேர்ந்தெடுப்பதில் அதற்கும் பங்கு உண்டு. வரிவிதிப்பில் தனக்கு மரபுமுறையான அதிகாரம் உண்டென்று கோரிய பாராளுமன்றம் கிராம்வெல்லிற்கு 1,300,000 பவுன் மானியம் வழங்கியது. அவருடைய அவசர காலச் சட்டங்களையெல்லாம் ஏற்றுக்கொண்டது. இறுதியாக, இவ் விண்ணப்பம்

கோடிட்டுக் காட்டிய சமய ஏற்பாடு பழமைப் பண்பு கொண்டதாக இருந்தது. அது தேசீய சமயத்தை அளிப்பதாக உறுதி அளித்தது. பொது நிதியிலிருந்து பணம் பெறும் குருமார் அதனை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றது. பொது வழிபாட்டிற்கு ஊறு செய்த குவேக்கரை அச்சுறுத்தியது. போப் சமயத்தவரும் ஆங்கிலிகரும் மட்டுமன்றி, தெய்வ நிந்தனை அல்லது தெய்வத் தன்மையை இழிவு செய்வோரும் சமயப்பொறையின் நன்மைகளைத் துய்க்க முடியாதவாறு செய்தது.

ஆனால், 1658ஆம் ஆண்டுக் கூட்டம் நிரூபித்ததைப்போல, பாராளுமன்ற முறை அரசாங்கமோ, முடியாட்சியோ, காப்பாளர் ஆட்சிக்கு ஒத்ததாக இல்லை. அரசாதரவாளர்கள் தொடர்ந்து சதிகள் நடத்தினர். பலமுறை ஆலிவரைக் கொல்லச் சதிகள் தோன்றின. ஆனால், தங்களுக்குள்ளே இருந்த பிரிவுகளினாலும், ஸ்பானியரிடம் காணப்பெற்ற தயக்கத்தினாலும், சதிகாரர் தடுமாற்றமடைந்தனர். அரசாங்கத்தினர், இயேசுவின் சமயத்தோடு வாழ்வோம் அல்லது வீழ்வோம் என்று போதித்த சமயவெறி தலைக்கேறி இருந்தவர்களை அடக்குவதில் வெற்றி கண்டது. ஆனால், அரசாங்கத்திற்கு உண்மையான ஆபத்து, அரச ஆதரவாளர்களிடையேயும் ஃபேர்ஃபாக்ஸ், மான்செஸ்டர் உள்படப் பல பிரஸ்பிடீரியர்களுக்கு மிடையேயும் ஏற்பட்ட இணைப்பேயாகும். இங்கிலாந்தில் பெருஞ் செல்வந்தர்கள் அரசரை ஆதரிக்கத் தலைப்பட்டனர். பியூரிட்டன் பிரபுக்கள், புதிய பிரபுக்கள் சபைக்குச் செல்ல மறுத்தனர். ஆஷ்லி கூப்பர் போன்ற கனவான்கள், கர்னல் பிரைடையும் (Pride) கிராம்வெல்லின் 'பிரபுக்களையும்' ஏளனம் செய்தனர். மேலும், இவ்வாறு கிராம்வெல் தம்மிடம் மிகுந்த பற்றுறுதி கொண்டோருக்குப் பதவி உயர்வளித்து வெளியே அனுப்பியதால் காமன்ஸ் சபையில் அவருக்கு ஆதரவாக இருந்த பெரும்பான்மையினரின் எண்ணிக்கை குறைந்தது. தாழ்மையான விண்ணப்பத்தைக் 'கட்டாயப்படுத்தப்பெற்ற' பாராளுமன்றத்தின் செயல் என்றும், அதனால் ஏற்படுத்தப்பெற்ற மற்றொரு சபையைப் பிரபுக்கள் சபையென்றும் ஏற்றுக்கொள்ள முடியாதென்றும் கூறிய குடியரசுவாதிகளை நீக்கியதால் கிராம்வெல்லின் பெரும்பான்மை மேலும் குறைந்தது. எஞ்சியிருந்த பாராளுமன்ற உறுப்பினர்கள் சமயப் பிரிவுகளைக் கவர்வதற்காக விண்ணப்பங்கள் விட்டு மனநிறைவற்று இருந்த படைப்பிரிவினரோடு இணைந்துகொண்டபோது, ஆலிவர் அவர்களைக் கலைக்க உறுதி கொண்டார். 'மக்களின் பிரதிநிதிகளாகிய இவர்கள் ஸ்காட்டிய அரசர் விளையாட்டு ஆடுகிறார்கள்'; அது 'குழப்பத்திலும் ரத்தம்

சிந்துவதிலும்' கொண்டு விடும் என்று கிராம்வெல் குறிப்பிட்டார். ஆனால், அவர் 'எனக்கும் உங்களுக்குமிடையே ஆண்டவர் தீர்ப் பளிக்கட்டும்' என்று கூறி முடித்தபோது, 'அப்படியேயாகுக', என்று சில எதிர்க்குரல்கள் எழுந்தன.

பலர் கைதாயினர். பல படைப்பிரிவுகளில் வேண்டாதோர் கழிக்கப்பெற்றனர். கெவலியர்கள் தங்களுடைய வீட்டிலிருந்து ஐந்து மைல் எல்லைக்குள் தங்கவேண்டுமென்ற ஆணை பிறந்தது. இவையெல்லாம் நாட்டில் தோன்றிய நெருக்கடி நிலைமையை நிரூபிக்கின்றன. வெளிநாட்டிலும் காப்பாளருக்கு ஏமாற்றங்கள் காத்திருந்தன. டென்மார்க்கிற்கும் ஸ்வீடனுக்குமிடையே அவர் பேசி முடித்த ரோஸ்கில்டி (Roskilde) உடன்படிக்கை, பதினோரும் சார்லஸின் பேராசையினால் பயனற்றதாகியது. ஹாப்ஸ்பர்க்கினருக்கு எதிரான பிராட்டஸ்டென்டு கூட்டுறவு தோன்றும் எனும் நம்பிக்கை நாசமாகியது. அதே சமயத்தில் ஹாலந்து, டென்மார்க்கிற்கு உதவியளித்ததனாலும், அது போர்ச்சுகலிடம் காட்டிய பகைமையாலும், நடுநிலைமை நாட்டுக் கப்பல்களைச் சோதனையிடுவதை எதிர்த்ததாலும் அதனுடன் கொண்ட உறவு மோசமானதாகவே இருந்தது.

எனினும், கிராம்வெல் ஆட்சியின் இறுதி மாதங்கள் புகழ் பெற்று விளங்கின. ஃபிரான்ஸுடன் செய்துகொண்ட சமாதான உடன்படிக்கைக்கேற்ப, 6,000 செஞ்சட்டை வீரர்கள் ஃப்ளாண்டர்ஸுக்குச் சென்று (Flanders) மாாடைக்கைக் (Mardyke) கைப் பற்றினர். அதே சமயத்தில் நமது நாவாய்ப் படை பெல்ஜியக் கடற்கரையை முற்றுகையிட்டது. ஜூன் மாதத்தில் ஆங்கிலப் படையினர், டூரன்னேயின் தலைமையில் டன்கிர்க் நகருக்கு வடக்கே டன்ஸ் (Dunes) எனும் இடத்தில் பெற்ற வெற்றி மகத்தானது. டன்கிர்க்கை இங்கிலாந்து பெற்றது. அதே சமயத்தில் நமது படைகள் மெனின் (Menin), ஈப்ரஸ் (Ypres) ஆகிய இடங்களைத் தாக்கின. இங்ஙனம் அவரது வெளிநாட்டு விவகாரச் செயலர் கூறியதைப்போல 'ஐரோப்பியப் பெருநிலத்தின் திறவுகோல்களைத் தமது கச்சையில் வைத்திருந்த' கிராம்வெல் டச்சுக்காரரைத் தம் வழிக்குக் கொண்டுவர முடிந்தது. சேனையின்மீது அவர் கொண்ட பிடி எதனாலும் தளரவில்லை. இடர் மிகுந்த லாம்பர்ட்டைப் பதவியிலிருந்து நீக்கியபோது தீய விளைவுகள் ஏதும் தோன்றவில்லை. படைசாரார் பொதுமக்கள் அவருக்கு மீண்டும் அரச பதவி அளிக்க முன்வந்தனர். அவரும், இலையுதிர்காலத்தில் பாராளுமன்றம் கூடும்போது அதனை ஏற்றுக்கொள்வார் என்று நம்பப்பட்டது.

ஆனால், கோடைக்காலம் நோயுடன் வந்தது. கிராம்வெல், காய்ச்சலினாலும் சக்திக்குமீறிய கடும் உழைப்பினாலும் உருக் குலைந்து போனார். ஆகஸ்ட் மாதத்தில் அவர் ஹாம்ப்டன் கோர்ட்டைச்சுற்றி (Hampton Court) குதிரையில் வந்தபோது பார்த்த ஜார்ஜ் ஃபாக்ஸ் (George Fox) அவரிடம் 'சாவின் சைகையொன்றை'க் கண்டார். அவருக்கு வெற்றிகள் பல அளித்த நாளான செப்டம்பர் மூன்றும் தேதி, கிராம்வெல் இறந்தார். அவர் இறப்பதற்குச் சற்றுமுன், தீர்ப்பு நிலையமைதியும், ஒருமித்த உள்ளமும் ஒருவர்பால் மற்றவர் கொள்ளும் ஒப்பற்ற அன்பும் தம்முடைய மக்களுக்கு அளிக்குமாறு ஆண்டவரை வேண்டினார். உயிரோடிருந்த தமது மூத்த மகன் ரிச்சர்டைத் தமது வாரிசாக நியமித்தார். கிராம்வெலின் மறைவினால் இங்கிலாந்து நடுங் கியது. ஆனால், நாடுகடத்தப்பெற்று அந்நிய நாடுகளில் வாழ்ந்த வர்கள் ஆனந்தம் கொண்டனர். கிராம்வெலினுடைய வீட்டுப் பணியாளர் ஒருவர் 'மகாத்மா வாழ்ந்தது மண் வீடல்ல' என்று எழுதியது, அவர் இறந்த சில ஆண்டுகளுக்குள் உண்மை என்பது வெளிப்பட்டது. கிளாரண்டன் முதல், தெருவில் நின்ற சாதாரண மனிதன் வரையிலான அவரது எதிரிகளுக்கும், இம் மேம்பாடு சான்றாக அமைந்தது. அவருடைய தாக்குதலுக்குள்ளான முடியாட்சி, பிரபுக்கள் சபை, ஸ்காட்டிய கிர்க் சபை, ஐரிஷ் கத்தோலிக்கர் ஆகியவர் எவருமே பழைய முழு உருவினையெய்த வில்லை. ஆனால், அதே சமயத்தில் இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகியவற்றின் ஐக்கியம் (United Kingdom), பேரரசு, கடலாதிக்கம், சமயப்பொறை, ஜனநாயகம் ஆகியவற்றில் காப்பா ளரின் முத்திரை ஆழமாகப் பதிந்திருப்பது தெரிகின்றது. அவரிடம் ஒருமுகப்படுத்தப் பெற்றிருந்த ஆங்கில மறுமலர்ச்சி, சமயச் சீர்திருத்தம் அவரோடு முடிவுற்றன.

## சமகால நிகழ்ச்சிகள்

1650 ஆரஞ்சு நாட்டு இரண்டாம் வில்லியத்தின் மறைவு.

1651 ஃபிரான்ஸில் காண்டேவின் (Conde) புரட்சி.
ஹாப்ஸ் (Hobbes') எழுதிய 'Leviathan.'

1652 டச்சுக்காரர் நன்னம்பிக்கை முனையில் குடியேறுதல்.

1653 டி விட் (De Witt) ஹாலந்திடமிருந்து ஓய்வு ஊதியம் பெறுபவராதல்.
பாஸ்கல் (Pascal), போர்ட்-ராயலில் (Port-Royal) நுழைதல்.

மதாம் தி ஸ்கூதரி (Madame de Scudery) எழுதிய 'Le Grand Cyrus'.

1654 கிறிஸ்டினு (Christina), ஸ்வீடன் அரசு துறத்தல்.
அயர்லாந்தில் பெட்டி (Petty) கணக்கெடுத்தல்.

1655 வாடாய்ஸ் (Vaudois) படுகொலை.
ஸ்வீடனின் பத்தாம் சார்லஸ் போலந்தைத் தாக்குதல்.

1656 ஸ்வீடனுக்கெதிராக மாபெருந் தேர்வாளரையும் உள்ளடக்கிய கூட்டிணைப்பு.
துருக்கியில் க்யூப்ரிலி (Kiuprili) காலத்தொடக்கம்.
ஹாரிங்டன் எழுதிய 'Oceana'.

1657 மொகலாயப் பேரரசராக இருந்த அவுரங்கசீப் 1707 வரை தம் ஆதிக்கத்தை நிலைநிறுத்துதல்.

1658 மஸாரின் 'ரைன் சங்கத்தை' (League of the Rhine) அமைத்தல்.
-1705. பேரரசர் முதலாம் லியோபால்டின் (Leopold I) ஆட்சி.

1659 பிரனீஸ் (Pyrenees) உடன்படிக்கை.
மோலியர் (Moliere) எழுதிய 'Les Precieuses ridicules.'
பெபீஸ் (Pepys) நாட்குறிப்பு எழுதத் தொடங்குதல்.

1660 பத்தாம் சார்லஸின் மறைவும் ஒலீவியா (Olivia) உடன்படிக்கையும்.
பதினன்காம் லூயியிக்கும் ஸ்பானிய மேரியா தெரிஸாவிற்கும் (Maria Theresa) திருமணம்.

# 13. ஆங்கில நாகரிகம், 1540–1660

ஆங்கில மக்கள், எண்ணிக்கையில் குறைந்தவராயினும் ஏற்றம் மிக்கவர். 1640ஆம் ஆண்டில் இங்கிலாந்திலும் வேல்ஸிலும் வாழ்ந்த 4½ மில்லியன் மக்களோடு, ஸ்காட்லாந்தில் ஒரு மில்லியனும், வெளி நாடுகளில் இருந்த மற்றுமொரு 200,000 மக்களைச் சேர்த்தாலும், மக்கள் தொகைக்கும் அவர்களின் மகத்தான சக்திக்கும், மலைக்கும் மடுவிற்குமுள்ள பொருத்தம் காணப்படுகின்றது. இதற்கு முக்கியக் காரணம் அவர்களிடமிருந்த சமுதாய ஒற்றுமையாகும். பிரிட்டனில் உள்நாட்டுப்போர் உணர்த்தியதைப்போன்று, இருநூறு ஆண்டுகளாக ஏற்பட்ட மாற்றங்களின் விளைவாக எழுந்த சமநிலையில், உயர் குடியினருக்கும் நடுத்தர வகுப்பாருக்குமிடையே இருந்த ஊசலும், பணக்காரருக்கும் பரம ஏழைகளுக்குமிடையே இருந்த பகைமையும் மறைந்தன. அடிப்படைக் கருத்துகளில் உடன்பாடு கொண்ட இச் சமுதாயம், அடுத்து வந்த இருநூறு ஆண்டுகளில் ஏற்பட்ட தேவைகளை நிறைவு செய்யும் கொள்கைகளை வகுக்கும் திறமைபெற்றிருந்தது.

இச் சமுதாயம் திட்டமிட்ட முதலாளித்துவச் சமுதாயமாகும். இதுபோது இடைக்காலத்துத் திருந்தாத கருத்துகளிலிருந்து ஒரு புதிய 'வாணிபக்' கொள்கை உருவாகியது. அதன்படி நாடு தன்னிறைவு பெற்றிருக்கவேண்டும். காப்பு வரிகள், கட்டு திட்டங்கள் ஆகியவற்றின் துணைகொண்டு நாட்டு மக்களைப் படைக்கலம் தாங்கும் பக்குவம் அடையுமாறு செய்வதோடு, அவர்கள் அதிகமாக உழைக்கவும் ஊக்கமளிக்கவேண்டும். உணவுப் பொருள்களை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்து, தம் நாட்டுப் பண்டங்களைத் தமது கப்பல்களிலேயே ஏற்றிச்சென்று, பட்டணத்திற்கும் பட்டிக்காட்டிற்கும் இடையேயும், வளத்திற்கும் வலிமைக்குமிடையேயும் சமநிலையைத் தோற்றுவிக்கவேண்டும். வளத்தின் குறியீடு வாணிபக் கொடுப்பல்நிலையேயாகும் (balance of trade). அந்நிலை, மதிப்பு மிகுந்த கனிப்பொருள் ஏற்றுமதித்

தடையைக் கொண்டு கணக்கிடப்படுவதன்று. அதற்கு மாருக மொத்த இறக்குமதியைவிட ஏற்றுமதியின் மேம்பாட்டைப் பொறுத்திருந்தது.

இக் கொள்கை உண்மை நிலைக்கு ஒத்துமிருந்தது. இங்கிலாந்து, கிராமம் சார்ந்த நாடாக இல்லை. அநேகமாக 50 சதவீதத்திற்கும்மேற்பட்டவர் பயிர்த்தொழிலில் ஈடுபட்டிருக்கவில்லை. ஆனால், அது நிச்சயமாக மாகாணம் சார்ந்ததாகவும் சமநிலை கொண்டதாகவும் இருந்தது. அங்கிருந்த சிற்றளவு முதலாளித்துவ முறையின் இயல்பான பகுதியாக மார்க்கெட் பட்டணம் காணப்பெற்றது. அதில் பெரும் முதலாளியோ, ஊதியம் பெறும் தொழிலாளியோ முக்கிய இடத்தைப் பெறவில்லை. பெருநிலக்கிழாரும், யோமன்கள் என்ற குடியானவரும், சில தொழிற் பயிற்சியாளரைக் கொண்டு தொழில் நடத்திய வினைஞரும் அதன் மையமாக விளங்கினர். இக்காலப் பகுதியை முரண்பாடுகள் மிகுந்த யுகமாகச் செய்த பெருந்தொழில்களும் பெருங்கடல் வாணிபமும் ஏற்கெனவே ஏற்றமடைந்தன. இங்ஙனம் மேற்கு ரைடிங் (West Riding) நூற்பாளர், சொந்தமாகத் தறிகளை வைத்திருந்ததோடு, மூலப் பொருள்களையும் தாங்களே உற்பத்தி செய்து கொண்டனர். அவர்களுக்கு நேர்மாருக வில்ட்ஷயர் (Wiltshire) துணி வியாபாரிகள் தொழிலாளரைக் கொண்டே துணி நெய்தனர். சில சமயங்களில் ஆயிரம் தொழிலாளரைக்கூட அமர்த்தி வேலை வாங்கினர். அதேபோன்று பல்லாயிரக் கணக்கான குடியானவர்களுக்கும் வீட்டுத் தொழிலாளருக்கும் மாருக, கிழக்கிந்தியக் கம்பெனியும் பெருநிலப் பிரபுக்களும் இருந்தனர் எனலாம்.

அரசின் செயல்கள் இடைக்காலக் குறிக்கோளுக்கு அதிகம் மாறுபட்டதாக இல்லை. உண்மையான பொதுநலக் குடியரசு, சமுதாய நீதியை நிலைநிறுத்தப் பாடுபடும் சமயம் சார்ந்த நிறுவனம் என்ற கருத்து நிலவியது. எனவே, எலிசபெத் ராணியாரின் ஆட்சிக் காலத்தும், ஆரம்பக்கால ஸ்டூவர்ட் அரசர் ஆட்சிக் காலத்தும் இருந்த கவுன்சில் கழுகுக் கண்களையொத்த கூர்ந்த நோக்குடன், உழைப்பு ஊதியத்தையும் பொருள்களின் விலையையும் கட்டுப்படுத்தியது. வேலைவாங்கும் முதலாளிகள் தொழிலாளரை வேலையினின்றும் வெளியேற்றக் கூடாதென்று பலமுறை ஆணைகள் பிறப்பித்தது. 1622ஆம் ஆண்டில் பிறப்பித்த ஆணையில் சாதகமான சமயங்களில் லாபத்தில் பங்கு பெறுவோர், துன்பம் வரும் சமயங்களில் பொதுமக்களுக்காக இழப்பிலும் பங்குகொள்ள வேண்டும் என்று காரணங்காட்டி

விளக்கியது. பலதுறை நலன்களையும் கவனத்தோடு பார்த்து அவற்றிற்கு வேண்டியதைக் கொடுத்தது. உதாரணமாக, கென்ட் (Kent) பகுதியில் கப்பல் கட்டும் தொழிலுக்குப் பயன் படும் மரங்களைக் கொளுத்தி அழிக்கக்கூடிய இரும்பு ஆலைகளுக்குத் தடை விதித்தது. வேலையில்லாத் திண்டாட்டத்தைப் பெருக்கக் கூடிய புது இயந்திரங்கள் செய்வதற்கு உரிமைப் பத்திரங்கள் வழங்க மறுத்தது. கூலவணிகரை, ஓநாய்கள் என்றும் பேராசைக்காரர்களென்றும் தூற்றியது. கவுன்சில் நியமித்த மேற்பார்வையாளர், மோசமான பொருள்களைச் சோதனை யிட்டனர். முதலில் 'கில்டு' (gild) என்று அழைக்கப்பெற்ற வணிகச் சங்கங்களும், பின்னாட்களில் உரிமைப் பத்திரம் பெற்ற கம்பெனிகளும், அவைகள் விற்கும் பண்டங்களின் தரத்திற்குப் பொறுப்பேற்கவேண்டும்.

இவ்விதக் கருத்துகள், செல்வாக்கு மிகுந்திருந்தவரையில் பொருளாதாரச் சக்திக் கட்டுப்பாடின்றி இயங்கமுடியாது. எனவே, இக்காலப் பகுதியில் தோன்றிய மாற்றங்கள், நிலத்தையும் துணி வியாபாரத்தையும் மையமாகக் கொண்டிருந்த பழைய அமைப்பின் தன்மையில் ஏற்பட்ட மாறுதல்களேயாகும்.

பஞ்சம் வந்தபோது தவிர, மற்ற நாட்களில் நாட்டில் விளையும் உணவுப் பொருள்களே போதுமானவையாக இருந்தன. தானியங் களின் விலைகள் உள்நாட்டு விளைச்சலைப்பொறுத்திருந்தன. மோசமான அறுவடையென்றால் மக்கள் மிகுதியாகப் பார்லியையும், ரை (rye) ரொட்டியையும் உண்டனர். அரசாங்கம் பால்டிக் (Baltic) பகுதியிலிருந்து இறக்குமதியான தானியங்களை மக்களிடையே பகிர்ந்தளித்தது. நில அடைப்பு முறை (enclosure system) நின்ற பாடில்லை. லண்டன் நகர மக்களுக்கு இறைச்சி வழங்கவும், துணி வியாபாரிகளுக்குக் கம்பளம் அளிக்கவும் ஆடுகளை வளர்க்கவும் இந்த நில அடைப்பு முறை பயன்படுத்தப்பெற்றது. சில இடங் களில் கிழங்குவகைகளைப் பயிரிடவும் இம் முறை பயன்பட்டது. இதன் காரணமாக எப்போதும் கலகம் தோன்றியபடியே இருந்தது. சில சமயங்களில் ஹாட்ஃபீல்டில் (Hatfield) இருந்த செசில்களின் சொந்தப் பூங்காவைப் போன்றவற்றிற்கு எதிராகக் கலகங்கள் தோன்றின. நில அடைப்புச் சர்வசாதாரணமாக இருந்த மிட்லண்டில், வேலிகளை அழித்துச் சமன்படுத்துவோருக்கும் தோண்டுவோருக்கும் இடையேயான சமுதாயப் போராட்டமாக மாறியது. எலிசபெத் ராணியாரின் அமைச்சர்கள் நில அடைப்பிற்கு எதிராக இறுதிவரை வைத்திருந்த சட்டங்கள், 1624 ஆம் ஆண்டில் ரத்து செய்யப்பெற்றன. பெரும் பரப்புள்ள

நிலங்கள் வணிகர்கள் கைக்கு வந்தன. அவர்கள் வழக்கமாகத் தண்டும் குத்தகையும், சில சமயங்களில், பொருட் பெருக்கத்திற்கு ஏற்றதல்லாத குத்தகையும் கொண்டனர். நில உரிமைப் பத்திரம் பெற்றவரைக் குத்தகை முறையையும் ஒப்புக்கொள்ளு மாறு வற்புறுத்தினர். கருத்து மாறுபட்டதைப் பல துண்டுப் பிரசுரங்கள் வெளிப்படுத்தின. அவைகள் திறந்த புலன் திட்டத்தின் (open field system) தீமைகளை வற்புறுத்திக் கூறின. மோசமான குடியானவர் மெதுவாக முன்னேறுதல், மண்வள மிழத்தல், புதர் நிறைந்த தரிசு நிலங்களில் ஓரிரு மாடுகளை வைத்துக்கொண்டு ஓட்ஸ் கஞ்சியும் ஆட்டுப் பாலும் அருந்தி அல்லலுற்ற மக்களின் அவலநிலை ஆகியவை விளக்கப்பட்டன. மேலும், பெரிய மந்தைகளை வைத்துப் பராமரிப்பது முடியாத காரியம் என்பதும், இவ்வாறு துண்டாக்கப்பெற்ற நிலங்களில் முன்னேற்றம் காணமுடியாதென்றும் குறிப்பிட்டன. மற்றுமொரு காரணம் ஆரம்பகாலத்திருந்த தடைகளைக் குறைத்தது. முதலாம் ஜேம்ஸின் ஆட்சிக் காலத்திலிருந்து கம்பள ஏற்றுமதிக்குத் தடை விதிக்கப்பெற்றது. கம்பள வாணிபத்தில் கொள்ளை லாபம் அடிப்பது தடுக்கப்பெற்றது. அதே சமயத்தில் தானியங்களின் விலை உயர்வினால் பயிரிடுவதற்கான நிலங்களின் பரப்புப் பெருகியது. அதனால், குடியானவர்களை அதிகமாக வெளியேற்ருத நில அடைப்பு முறை ஏற்பட வாய்ப்பிருந்தது. மேலும், பல இடங்களில் குடியான வரும் நிலப் பிரபுக்களும் இணங்கியே இம் முறையைக் கையாண்டனர். எனினும், உள்நாட்டுப் போர் தொடங்கும் வரை விண்மீன் மண்டப நீதிமன்றம் (Star Chamber) குடியானவர்களை வயல்களிலிருந்து வெளியேற்றுவதைக் கடுமையாகக் கண்டித்தது. குறிப்பாக, 1630 ஆண்டிலிருந்து சார்லஸின் தனியாட்சியின் போது, இந் நீதிமன்றம் மிகக் கடுமையான நடவடிக்கைகளை எடுத்தது. உதாரணமாக, புல்வெளிகளை உழுது பயிரிடுமாறு ஆணையிட்டது. கம்பர்லாந்துக் குடியானவர்களின் குத்தகை உரிமையைப் பாதுகாத்தது. ஒருசில ஆண்டுகளில் நிலச் சட்டங்களை மீறிய பிரபுக்களிடமிருந்து 50,000 பவுன் தண்டமாக வசூலித்தது. மொத்தத்தில் பெருநிலக் கிழார்களின் ஆதிக்கம் இருந்தபோதிலும் குடியானவர் நிலைபெற்றிருந்தனர். பணம் தடையின்றிப் புழங்கியதால் வலிமைமிக்கோர் எளியாருக்குக் கூலி கொடுத்து அவர்தம் உரிமையைப் பறித்தனர். நெய்தல் தொழில் கில்டு சங்கங்களிடமே இருக்கவேண்டுமென்ற எலிசபெத் ராணியார் காலத்திய தொழிலாளர் சட்டம் தள்ளுபடி செய்யப் பெற்றதால் அத் தொழில் எல்லா ஊர்களிலும் பரவியது. பெண் களும் குழந்தைகளும் நூற்புத் தொழிலை மேற்கொண்டதால் குடியானவர் குடும்பங்களின் வருவாய் பெருகியது.

இத்தகைய இன்பம் பயக்கும் சமநிலையைக் குலைப்பதற்கென்று சில சக்திகள் வேலை செய்தபோதிலும், அப்போது தோன்றிய பல கூறுகள் நன்கு அமைந்த பொதுநலக் குடியரசைப் பேணி வந்தன.

எலிசபெத் ராணியாரின் காலத்து இருந்த நீள் அமைதியும், ஐரோப்பாவில் தோன்றியிருந்த கொந்தளிப்பும் இங்கிலாந்தை அதனுடைய பகைவரினும் மேன்மையுறச் செய்தன. ஆன்ட்வெர்ப் நகரத்தின் வாணிப ஆதிக்கம் ஒழிந்தது. துருக்கியரும் ஸ்பானியரும் நிலப்பகுதிகளைக் கைப்பற்றியதாலும், புதிய நன்னம்பிக்கை முனை வாணிப வழி கண்டுபிடிக்கப்பெற்றதாலும், சௌதாம்ப்டனில் (Southampton) வெனிஷியர், இத்தாலியர் ஆகியோரின் ஆதிக்கம் அழிந்தது. 1560 ஆம் ஆண்டு பர்க்ளி (Burghley), ஹான்ஸ் (Hanse) என்று குறிக்கப்பெற்ற டச்சு வணிகரும் ஆங்கிலேயரைப் போன்று காப்பு வரிகள் அளிக்க வேண்டுமென்றும், அவர்கள் நெதர்லாந்துகளுக்குத் துணிகளை எடுத்துச் செல்லக்கூடாதென்றும் விதித்தார். ஒரு காலத்தில் அவர்கள் பிற அயல்நாட்டு வணிகர் பெறாத சலுகைகளைப் பெற்றிருந்தனர். ஆனால், அவைகள் 1578 ஆம் ஆண்டு நீக்கப்பெற்றன. அதே சமயத்தில் ஸ்பானியருடைய ஆன்ட்வெர்ப் நகரிலிருந்து வெளியேற நேர்ந்த ஆங்கில வணிகர் ஸ்டேட் (Stade), ஹாம்பர்க் (Hamburg) ஆகிய துறைமுகங்களின் வழியாக ஜெர்மன் நாட்டு வாணிபத்தைக் கைப்பற்றினர்.

இதற்கிடையில் ஐரோப்பிய அகதிகள் பிரிட்டனின் பொருள் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவினர். டச்சுக்காரரும் ஃப்ளீமியரும் (Flemings), நார்விச்சிலும் (Norwich) எஸ்ஸக்ஸ் மாநிலம் முழுதும் ஆடையணிகள் கடை வைத்தனர். பெட்ஃபோர்டுஷயரில் சரிகைத் தொழிலை வளர்த்தனர். மேலும், லங்காஷயர் மக்கள் பெரிதும் விரும்பிய பருத்தியாலான கருநிற மணித் துவாலைத்துணி நெய்யும் தொழிலையும் வளர்த்தனர். குடியிறங்கியவர்கள் கண்ணாடித் தொழிலையும் காகிதம் செய்யும் தொழிலையும் உருவாக்கினர். ஜெர்மானியர் சுரங்கத் தொழிலையும் உலோக வேலையையும் கற்றுத் தந்தனர். ஃபிரெஞ்சுக்காரர் பட்டு நெசவிலும் எஃகுத் தொழிலிலும் புதிய முறைகளைப் புகுத்தினர். டச்சுப் பொறியியல் வல்லுநர்கள், சதுப்பு நிலங்களைச் சீர்படுத்தினர். வெளிநாட்டு வாணிப வளர்ச்சியை அப்படியே பின்பற்ற வேண்டுமென்ற அவாவும், அந் நாடுகளில் இருந்து வந்த வாணிபப் போட்டியைச் சமாளிப்பதற்கும் பன்னாட்டு மார்க்கெட்டுகளைக் (markets) கைப்பற்றவும் தேவையான வாணிபத் தொழில்வளத்திற்குப் பெரும் மூலதனம் தேவைப்பட்டது. உதாரணமாகத் துணி

உற்பத்தித் தொழிலில் பல கட்டங்களில், நாணய முன்பணம் தேவையாக இருந்தது. கூல வாணிபத்திலும் இ∴து இன்றியமையாததாயிற்று. எனவே, இடை மனிதரும், தரகரும் இன்றியமையாது தேவைப்பட்டனர். உண்மையில், பணமே பிரதானமாயிற்று. பெரும் துணி உற்பத்தியாளர், நூற்போரின் சார்பிலும் நெய்வோரின் சார்பிலும் விலைகளை நிர்ணயித்தனர். கார்னிஷில் உள்ள தகர உற்பத்தியாளர் சங்கங்களும் நார்த்தம்பர்லண்டு நிலக்கரிச் சுரங்கச் சொந்தக்காரரும், லண்டன் நகரிலிருந்து மூலதனம் பெற்றனர். அதைப்போலவே பிரிஸ்டல் நகரம், வேல்ஸ் பகுதிக்கு வேண்டிய பொருள்களை ஏற்றுமதி செய்யும் துறைமுகமாகவும், மெண்டிப்பிலுள்ள (Mendip) சுரங்கங்களுக்கு நிதியளிக்கும் நகரமாகவும் விளங்கியது. புதிய கப்பல்கள் பெரியவையாக இருந்த காரணம் ஒன்றே, பல சிறிய துறைமுகங்களைச் சீரழியச் செய்தது.

இவையெல்லாம் உள்நாட்டுஅமைப்பில் ஏற்கெனவே தோன்றிய, மாறுதல்களின் தொடர்ச்சியேயாகும். தலத் தொழிற்கலைகளில் பல சிதைந்தன. கட்டடப் பொருள்கள் உற்பத்தி போன்ற மற்றவை, போட்டி நெருக்கடியினால் ஒன்றாக இணைந்தன. ஸ்ரூஷ்பரி, நார்விச் போன்ற சுறுசுறுப்பான நகரங்களில் தலத் தொழில்கள், லண்டன் நகரப் பணக்காரர் போட்டியாகத் தலையிடுவதைத் தடுப்பதற்கான முயற்சியிலீடுபட்டன. இவ்வித முயற்சிகளுக்குச் சில சமயங்களில் புதிய உரிமைப் பத்திரங்கள்மூலம் அரசாங்கத்தின் உதவி கிடைத்தது. உதாரணமாகத் தொழிற் கலைஞர் குறிப்பிட்ட தல மார்க்கெட்டைக் கைப்பற்றுதற்கான உரிமைப் பத்திரங்கள் வழங்கப்பெற்றன. தொழிலைக் கற்றுக் கொண்டே ஊதியத்திற்குழைப்போர் சங்கத்தினருக்கு அவர்களின் பணி முதல்வருக்கு எதிராகவும் பத்திரங்கள் தரப்பட்டன. ஆனால், பணம் பழைய தொழில்களின் வரம்புகளைக் கடந்து சென்றது. சான்றாக, தோல் வாணிபம் செய்பவர், கம்பள வாணிபமும் செய்தனர். மேலும், ஒரு குறிப்பிட்ட தொழிலின் பல பிரிவுகளை ஒன்றிணைத்திருந்த இயல்பான தொழிற் கம்பெனி அல்லது முறை உருவாகியது. அது வழக்கமாகப் பெருநிதி படைத்த வணிகரின் ஆதிக்கத்தில் இருப்பவை என்றும், சிறு பணி முதல்வரான வேளாண் வீரர்வசம் இருப்பவை என்றும் இருவகைப்படும்.

இக் காரணங்களுக்காகவும் பாதுகாப்பிற்காகவும், அயல் நாட்டு வாணிபம், உரிமைப் பத்திரம் பெற்ற கம்பெனிகளிடமே ஒப்படைக்கப்பெற்றது. அக் கம்பெனிகள் தனிச் சிறப்புரிமைகள் மூலமாகச் சுங்கவரி விதிக்கவும், கப்பல்களில் படைக்கலங்கள்

வைத்துச்செல்லவும் உரிமைபெற்றிருந்தன. பெருங் கம்பெனிகள்[1] எல்லாம் அநேகமாக ஏற்கெனவே இருந்த ஒழுங்குபடுத்தப்பெற்ற கம்பெனி (regulated) வகையைச் சார்ந்தவையாகும். துணிகர வணிகர்களைக்கொண்ட இக் கம்பெனி ஒவ்வொன்றும் வணிகர்கள் தனித்தனியே வாணிபம் செய்யும் நிறுவனங்களாகும். ஆனால், அவர்கள் விலைகள், தொழிற்பயிற்சியாளர், மார்க்கெட்டுகள் ஆகியவற்றில் ஒரே வகையான சட்ட திட்டங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். பொதுக் கப்பல்களிலேயே பண்டங்களை ஏற்றிச்செல்ல வேண்டும். கிழக்கிந்தியக் கம்பெனியே முதன்முதலாக நிரந்தரமான முறையில் நிறுவப்பெற்ற கூட்டுப் பங்குக் கம்பெனியாகும் (Joint Stock Company). அஃது ஒரு கார்ப்பொரேஷனாக, வாணிபம் செய்து வரும் இலாபத்தைப் பங்குதாரர்களுக்குப் பகிர்ந்தளித்தது.

இக் கம்பெனியில் ஆரம்ப காலத்தில் ஒவ்வொரு பயணமும் முடிந்த பிறகு, இலாப ஈவு அளிக்கப்பெற்றது. ஆனால், காலப் போக்கில் அது நிரந்தர இருப்பு (permanent stock) அடிப்படையில் கொடுக்கப்பெற்றது. இவ்விதக் கம்பெனிகள் ஃப்ராபிஷரை (Frobisher) ஆதரித்த கதே (Cathay) கம்பெனி போன்ற வணிகக் குழுக்கள், டிரேக்குடன் பங்குகொண்ட பல அரசியல்வாதிகள் ஆகியோரின் நிறுவனங்களில் தப்பிப் பிழைத்தவையே. இங்கிலாந்தில் மேலும் பல தொழில் நிறுவனங்களும் கம்பெனி முறையைக் கையாண்டு எழுந்தவை. கனிப்பொருள், பீரங்கித் தொழில்கள், பித்தளை உற்பத்தித் தொழிலுக்காகக் கூட்டிருப்பு கொண்டிருந்தன. லண்டன் நகரக் குடி தண்ணீர் அளிப்பை மேம்படுத்துவதற்காக 1609ஆம் ஆண்டில் முதலாம் ஜேம்ஸிடம் உரிமைப் பத்திரம் பெற்ற நியூ ரிவர் கம்பெனி (New River Company) யின் பங்குகள் மார்க்கெட்டில் விற்பனையாயின. குளோப் நாடக அரங்கில் (Globe Theatre) ஷேக்ஸ்பியர் பெரும் பங்குகளைப் பெற்று இருந்தார்.

இப் புதிய வாணிபச் சக்தியின் மையமாக லண்டன் மாநகரம் விளங்கியது. இங்கேதான் துணி உற்பத்தித் தொழிலின் இயக்குநர்கள் செறிந்திருந்தனர். அந் நகரம் சுங்கவரியில் அநேகமாக ஐந்தில் நாலு பங்கினை அளித்தது. அதன் வணிக அரசர் நாட்டில் எல்லாப் பெரிய தொழில்களிலும் ஈடுபட்டு இருந்தனர். இங்ஙனம் சர் தாமஸ் ஸ்மித் (Sir Thomas Smyth) என்பார் கிழக்கிந்தியக்

[1] கினியா (Guinea) கம்பெனி, 1553; ரஷ்யா கம்பெனி, 1553; கீழ்நிலக் (Eastland) கம்பெனி, 1579; லெவான்ட் (Levant) கம்பெனி, 1581; கிழக்கிந்தியக் (East India) கம்பெனி, 1600; வர்ஜீனியா (Virginia) கம்பெனி, 1606.

கம்பெனி, ரஷ்யக் கம்பெனி ஆகியவற்றின் ஆளுநராக (Governor) இருந்தார். அதே சமயத்தில் வர்ஜீனியா கம்பெனியில் பொருளாளராகவும், லெவான்ட் கம்பெனியில் முக்கிய இடத்தைப் பெற்றவராகவும் இருந்தார். இத்தகையோர், கிரஷாமின் (Gresham) காலத்திலிருந்து அயல்நாட்டு நாணய மாற்றத்தைக் கட்டுப்படுத்தினர். அரசாங்கம் கடனுதவி பெறுதற்காக அவர்களை எதிர்நோக்கி நின்றது. அதே சமயத்தில் உண்டியல் தள்ளுபடி மனைகளும் கப்பல் காப்புறுதியும் முன்னேறின. மாநகரின் மக்கள் தொகை கட்டுக்கடங்காது பெருகியது. எனவே, நகர்ப்புற வீடுகளைக் கட்டுவதைத் தடை செய்யும்பேரறிக்கைகளும் பயனற்றதாயின. அந்நிய நாட்டுத் தொழிற்கலைஞர்கள் அந் நகரில் ஏராளமாக வாழ்ந்தனர். ஐரிஷ் பழ விற்பனையாளரும், செவாயிலும் இஸ்லிங்டன் (Islington) கற் சூளைகளிலும் பதுங்கி வாழ்ந்த போக்கிரிகளும் நிரம்பி இருந்தனர். தென் நாட்டிலிருந்து துணியும் உணவுப்பொருள்களும் கொண்டுவந்தவர்கள் லண்டன் நகரில் கூடினர். கனவான்களின் இளைய பிள்ளைகள் எல்லாம் வாணிபத்திலோ சட்டத்திலோ பயிற்சி பெற்றனர்.

ஆர்மடா போருக்குப்பிறகு வாணிபத்தின்மூலமாகப் பெருகிய வளத்தின் அளவு மிகப்பெரியது. 1560 ஆம் ஆண்டு 200,000 பவுனாக இருந்த பொது வருமானம் 1630 ஆம் ஆண்டில் மும்மடங்காகியது. சுங்கவரி மட்டிலும் 300,000 பவுனுக்கு மேலே கிடைத்தது. கிழக்கிந்தியக் கம்பெனி, முதல் பன்னிரண்டு ஆண்டுகளில் அரை மில்லியன் பவுன் முதலீடு செய்திருந்தது. பல ஆண்டுகளாக ரஷ்யா கம்பெனியின் இலாபம் 40 சதவீதத்திற்கும் உயர்ந்ததாக இருந்தது. மேலும் பெரு நிதி, அமெரிக்காவிற்கு அனுப்பப்பெற்றது. தரகர்களும் (brokers) பத்திரப் பதிவாளர்களும் (scriveners) ஆரம்ப நிலையிலுள்ள, ஆனால் சட்டத்திற்குப் புறம்பாகப் பணம் பறிக்கிற பாங்க் தொழிலை நடத்தினர். நிலக்கரி, ஏற்றுமதிப் பொருள்களில் சிறந்த இடத்தைப்பெற்றது. எலிசபெத் ராணியார் தம்முடைய அரண்மனையருகே புகை வருதல் கூடாது என்று தடைவிதித்தபோதிலும் நியூகாசிலில் இருந்து 200 கப்பல்கள் நிலக்கரி அளித்தவண்ணமிருந்தன. இயக்கும் சக்திக்கான பல கண்டுபிடிப்புகள் ஏற்பட்டன. ஸஸ்ஸக்ஸில் இரும்புத் தொழிலுக்கு ஊது உலைகள் பயன்பட்டன. காகித ஆலைகளில் நீர்ச்சக்தி பயன்பட்டது. சுரங்கங்களில் இறைக்கும் இயந்திரங்களில் இயங்கின. தொழிற்சாலை முறை (factory system) நிலக்கரிச் சுரங்கங்களிலும், துணி உற்பத்தித் தொழிலின் ஒரு பகுதியிலும், சாய ஆலைகளிலும், மார்ட்லேக்கில் (Mortlake) இருந்த திரைச் சீலைத் தொழிலிலும் ஏற்கெனவே வழக்கிலிருந்தவை.

சிறு தீவகமாகிய இங்கிலாந்து உலக வாணிபத்தின் அதிர்ச்சி களையும் நலன்களையும், பிற நாடுகளோடு பகிர்ந்துகொண்டது. விலைமட்ட உயர்வு 1540ஆம் ஆண்டிலிருந்ததைப்போல் 250 சத வீதம் இருந்தது. இங்கிலாந்தில் வேலையளிக்கும் வாய்ப்பு, எவ்வளவு தூரம் டச்சுக்காரரின் போட்டி நிலையையும், ஜெர்மனியில் அமைதியையும் நம்பியிருந்தது என்பது பல நெருக் கடியான காலங்கள் தெளிவாகக் காட்டின. இவ்வித நெருக்கடி களையும் வாணிபப் பொருளாதாரப் பிரச்சினைகளையும் தனியாட்சி அரசாங்கம் (personal government) கட்டுப்படுத்துவதால் ஏற்படும் சில தீய விளைவுகளும் தெற்றெனத் தெரிந்தன. அரசாங்கம் அளித்த தனி உரிமைகள் அரச அவையினர் தங்கள் சொந்த இலாபத்தைப் பெருக்கிக் கொள்ள உதவும் கருவிகளாக மாறின. அதேசமயத்தில் அரசரின் தனி ஆட்சியைச் சேர்ந்தவர்கள் அதிகாரத்தைத் தவறான வழிகளில் பயன்படுத்தினர். உதாரணமாக, நியூகாசில் 'கூட்டம்' நிலக்கரி விற்பனையைக் கட்டுப்படுத்தினர். துணிகர வணிகர்களின் (Merchant Adventurers) பங்கு வீதங்கள் துணி விலையை உயர்த்தின.

இருந்தபோதிலும் தன்னாட்சி அரசாங்கம் ஓரளவு வெற்றி யுடன் சமநிலையைப் பாதுகாத்தது. நாட்டு மக்களுக்கு வேலை வாய்ப்புகள் அளிக்க வேண்டுமென்ற ஒரே குறிக்கோளோடு தோல், பட்டு ஆடைகள் போன்ற அயல்நாட்டுப் பொருள்களின் இறக்குமதியின்மீது தடை விதித்தது. ஆர்வமுள்ள அமைச்சர் களின் குறிப்புகளும், அரசாங்கத்தினரின் செயல்களும், அவர்கள் எத்துணை தூரம் அமைதியற்ற நிலைக்கு அஞ்சியிருந்தார்கள் என்பதும், பொதுநல உணர்ச்சி பொங்கி வழிந்ததையும் காண முடிகின்றது. எலிசபெத் ராணியார் காலத்துச் சட்டங்கள் பல இந் நிலையைத் தெளிவாக்குகின்றன. படை வீரருக்கு ஓய்வு ஊதியம் அளிப்பதற்கான சட்டங்கள் நிறைவேறின. துன் புற்றோரின் துயர் துடைக்க வேண்டி, மானியங்கள் வழங்குவதில் பாராளுமன்றத்தின் இரு சபைகளும் ஒருமனதாகச் செயலாற்றின. நகராட்சி மன்றங்கள், ரொட்டியையும் நிலக்கரியையும் குறைந்த விலையில் பங்கிடு செய்தன. அதேபோன்று நுகர்வோரின் நன்மை கருதித் தானியங்களின் ஏற்றுமதிக்குத் தடை விதிக்கப்பெற்றது.

தொழிலாளர் நீண்டநேரம் வேலை செய்தனர். அவர்கள் எப்போதும் நாளொன்றிற்குப் பன்னிரண்டு மணியும், சில சமயங்களில் பதினான்கு மணியும் வேலை செய்தனர். சிறுவர்களை வேலை வாங்குதல், நாடு முழுதும் பரவியிருந்த ஒரு பழக்கமாகும். ஆனால், முறையீடுகள் ஒன்றும் வரவில்லை. 1563ஆம் ஆண்டுச்

சட்டத்தில் கண்டபடி அரசாங்கம் தொழிலாளர்களுக்கு நேர்மையான ஊதியம் அளிக்கப்பெறுதல்வேண்டுமென்ற கொள்கை கொண்டிருந்தது. 1604ஆம் ஆண்டுச் சட்டமொன்று தொழிலாளருக்கு நிலையான ஊதியம் மட்டுமன்றி, குறைந்த அளவு ஊதியத்தையும் மறைமுகமாகச் சுட்டிக்காட்டியது. மாஜிஸ்ட்ரேட்டுகளுக்குக் கவுன்சில் அனுப்பிய காரமான நினைவூட்டும் கடிதங்களும், ஊதியம் பெறுவோரின் விண்ணப்பங்களும், இந்நிலை உள்நாட்டுப் போர் தொடங்கும் வரையில் தொடர்ந்துவந்தது என்பதற்குச் சான்றாக அமைகின்றன. வேறு சில சட்டங்கள், ஓராண்டிற்குக் குறைவாக வேலையளித்தல் கூடாதென்றன. அதனால், பல தலைமுறைகளாகப் பண்ணைப் பணியாட்களும், சாட்டையேந்திச் சகடம் ஓட்டுபவரும், ஆடு மாடு மேய்ப்பவரும், பால் பண்ணைப் பெண்களும், ஆண்டிற்கொருமுறை நடக்கும் கூலியாட்கள் சந்தைக்குச் சென்றனர்.

சமயச் சீர்திருத்தத்திற்கு முன்பிருந்த ஐரோப்பா, கில்டு சங்கங்களையும், ஒத்த நோக்கங் கொண்டோரின் குழுக்களிடையே ஏழையெளியவருக்குச் செய்யவேண்டிய கடமையையும் புறக்கணிக்கவில்லை. ஆயின், அக்காலம் மறைவதற்குள் புதிய முதலாளித்துவம் தோன்றிய காரணத்தால் எல்லா நாடுகளிலும் எளியோரைப் பாதுகாக்கப் பெருமளவில் நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்பது இன்றியமையாததாயிற்று. ஆரம்பக் கால டியூடர் ஆட்சியில் தோன்றிய சட்டங்கள் தொழிலாளருக்கு நிலையான ஊதியம் அளிக்க வேண்டுமென்று வற்புறுத்தின. இயலாதவர் பிச்சையெடுக்க அனுமதி வழங்கின. உடல்வலிமை பெற்றிருந்தும், நாடோடியாகச் சுற்றித் திரிந்தவரைக் கடுமையாக தண்டிக்கவேண்டுமென்றன. எனினும், இவைகளெல்லாம் இரண்டாம் ரிச்சர்டு மன்னர் காலத்துச் சட்டங்களினின்றும் அதிக மாறுபட்டு முன்னேற்றமடைந்தவை என்று கூறுவதற்கில்லை. விலையேற்றத்தினாலும் நில அடைப்புமுறைத் தொல்லைகளாலும் பெருகிய இந்தத் தன்னிச்சையாகத் திரிந்த உடலுரங்கொண்டோர் நாடெங்கும் சுற்றி அரசாங்கத்திற்குத் தொல்லைதந்தனர். அவர்களுக்கு உணவளிப்பது அரசாங்கத்தின் பொறுப்பாக இருந்ததால், அதைச் சமாளிக்கப் பல இரவலர் சட்டங்கள் (poor laws) நிறைவேற்றப்பட்டன. 1531ஆம் ஆண்டுச் சட்டம் 'சோம்பலே தீமைகளின் வேர்' என்றும், உடலுரம் கொண்டோரை இரத்தம் கசியும்வரை கசையால் அடித்து உண்மையான குடிமகனைப் போன்று உழைப்பதற்கென்று அவரவருடைய ஊர்களுக்கே அனுப்ப வேண்டுமென்றும் வற்புறுத்தியது. ஆறும் எட்வர்டு காலத்தியத் தாற்காலிகச் சட்டம் ஒன்று, அவர்களுக்குச் சூடுபோட

வேண்டுமென்றும், அடிமைகளாகவும் செய்யப்பெறுதல் வேண்டு மென்றும் கூறியது.

டியூடர்கால இரவலர் சட்டங்கள் இத்தகைய கொடுஞ் செயல் களைக் கடந்து நல்ல பல நடவடிக்கைகளை எடுத்தன. அவை உடலுரம் படைத்த சோம்பேறிகளையும், உண்மையில் உழைக்கச் சக்தியற்ற பிச்சைக்காரரையும் வேறுபடுத்தின. அறமுறை உணவுப் பங்கீட்டை நிறுத்தின. ஒவ்வொரு பாரிஷும் அதனதன் பிச்சைக்காரருக்குத் துயருதவி (relief) அளிக்கவேண்டுமென்றன. ஊர்த் திருக்கோயில் காப்பாளர்களிடம் இருந்த பழைய வழக் கங்களை அடிப்படையாகக் கொண்டு பிச்சையிடுவதற்கான ஒழுங்கு முறை ஒன்றை உருவாக்கின. டியூடர் ஆட்சிக்காலத்தின் இடைப் பகுதியில் தன்னாட்சிபெற்ற நகரங்கள், அதிலும் குறிப்பாக லண்டன் மாநகரம், எதிர்பார்த்ததைப்போன்று இத் துறையில் வழிகாட்டியாக அமைந்ததைக் காண்கிறோம். அறச்செயல்களில் கத்தோலிக்கருக்கும் பிராட்டஸ்டென்டியருக்கும் முரண்பாடு இல்லை. அநாதையர் நிதி, ஏழைகளுக்குக் கடனுதவி, குறைந்த விலையில் ரொட்டி வழங்குதல் போன்ற அனைத்திலும் இரு பிரிவினரும் அக்கறை காட்டினர். செயின்ட் தாமஸ் போன்ற கத்தோலிக்க மருத்துவ மனைகள், பிராட்டஸ்டென்டியரால் பொது மனைகளாகப் புதுப்பிக்கப் பெற்றன. இவ்வாறான தல செய்முறைகளின் அடிப்படையில்தான், எலிசபெத் ராணியார் கால அரசியல் வல்லுநர், நாட்டுச் சட்டத் தொகுப்பு ஒன்றை உருவாக்கினர்.

பர்க்ளியின் சுறுசுறுப்பான தலைமையிலும், தல ஆட்சியில் அனுபவம்பெற்ற காமன்ஸ் சபை உறுப்பினரின் விவாதங்களைக் கொண்டும் அரசியல் வல்லுநர் செய்த சட்டங்கள், எல்லா முக்கியச் செய்திகளையும் தீர்மானித்தன. 1563 ஆம் ஆண்டில் இரவலருக்கு உதவிப் பணம் அளிக்கவேண்டுமென்று வற்புறுத்தப்பெற்றது. 1572 ஆம் ஆண்டில் கண்காணிப்பாளர் பாரிஷ் மக்களிடமிருந்து வறியோர் வரி (poor rate) கொள்ள வேண்டுமென்றாயிற்று. 1576 ஆம் ஆண்டில் ஒவ்வொரு ஷயரிலும், ஓர் ஒழுக்கத் திருத்த நிலையம் (house of correction) நிறுவப்பெற்றது. அங்கே உடலுரமிக்கோரும் உண்மை இரவலரும் வேலை செய்ய வேண்டும். நார்விச் போன்ற நகரங்களைப் பின்பற்றியும், பல வாணிப மந்தங்களின் கொடுமைகளை அறிந்த நிலையிலும், 1598 ஆம் ஆண்டில் பல வாரங்கள் நடந்த விவாதத்திற்குப் பிறகு பாராளுமன்றம் சட்டமொன்றை இயற்றியது. இச் சட்டம் அடுத்த இருநூறு ஆண்டில் ஏற்பட்ட இரவலர் சட்டங்களின் வித்தாக அமைந்தது. அதனுடைய கொள்கைகள் பழைய

ஆங்கிலேயர் வாழ்க்கையையும் பண்புகளையும் புரிந்துகொள் வதற்கு அடிப்படையாக இருப்பவையாகும்.

(1) துயருதவியைக் காட்டிலும் சுதந்திரமே மிகுதியாகப் போற்றப்பட்டது. பெற்றோரும் பிள்ளைகளும், கூடுமானால் ஒருவரை ஒருவர் ஆதரிக்கச் சட்டப்படி கட்டுப்பட்டவர்கள். அதே சமயத்தில் வேலை செய்ய மறுப்பதோ நேர்மையான ஊதியத்தை ஏற்க மறுப்பதோ நாடோடியாவதற் கொப்பாகும்.

(2) பிச்சையெடுத்தல் சட்டத்திற்கு முரணானது.

(3) உடலுரம் பெற்ற நாடோடிகள் ஒழுக்கத் திருத்த நிலையத் திலோ சிறையிலோ வேலை செய்யவேண்டும்.

(4) வயோதிகரும் வலியிழந்தோரும் துயருதவி பெற வேண்டும். அவ்வுதவி, நன்கொடையிலிருந்தும், சணல், கம்பளம் முதலிய தொழில்களில் வேலை செய்வதிலிருந்தும் கிடைத்தது. ஏழைச் சிறுவர் தொழிற் பயிற்சி பெறுவோராகப் பிணைக்கப் பெற்றனர். வேலை செய்ய முடியாத ஏதிலார்க்கு, இல்லம் கட்டித் தர பாரிஷ்கள் அனுமதி பெற்றிருந்தன.

(5) மாஜிஸ்ட்ரேட்டுகள்தான் பாரிஷ் கண்காணிப்பாளர் நியமனத்திற்கும் செயற்பாடுகளுக்கும் பொறுப்பானவர்கள் என்றாலும், பாரிஷ் கண்காணிப்பாளர்மீதே உடனடியான பொறுப்பு விழுந்தது. மேலும், பண்டைய குடியேற்றக்கொள்கை ஏற்றுகொள்ளப்பெற்றது. அதன்படி ஒருவருடைய சொந்த ஊரோ, அல்லது வேலைசெய்யும் இடமோ துயருதவி அளிப்ப தற்கான நிலப்பரப்பாக ஒப்புக்கொள்ளப்பெற்றது.

(6) ஆனால், நீதிபதிகள் ஒருவளமற்ற ஏழ்மையான பாரிஷிற்கு உதவியாக அண்டையிலுள்ள பகுதிகளில் வறுமைவரி விதித்தனர்.

தன்னாட்சி பெற்ற நகரசபைகளின் அனுபவத்தைக் கொண்டு, கீழிருந்து மேல்வரை ஒழுங்கு முறை உருவானது எலிசபெத் ராணியார் காலத்துச் சமுதாயத்தின் இணையிலா வெற்றியென்று கூறலாம். அடுத்துவந்த தலைமுறையினர் தங்களுடைய தகுதி யாற்றலைத் தெளிவாக வெளிப்படுத்தினர். ஆனால், கவுன்சிலின் தக்க செயல்கள் இல்லையென்றாலும், இம் முறை திறம்பட பணி புரிந்திருக்காது. ஸ்ட்ராஃபோர்டு, லாட் ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் கவுன்சிலின் நடவடிக்கை உச்சநிலையை அடைந் திருந்தது. அதனுடைய செயற்குழு ஒன்று, தல ஆணையாளர், ஏராளமான ஆணைகள், மாஜிஸ்ட்ரேட்டுகள் அனுப்பிய அறிக்கைகள் ஆகியவை ஊதிய வீதங்கள், உணவுப் பங்கீடு, துயருதவிப் பணியாளர் பயிற்சி ஆகியவைபற்றிய செய்திகளைச் சேகரித்த

தோடு குற்றங் கண்ட இடத்துக் கண்டிக்கவும் செய்தன. இவ்விதச் செயல் முறைகள் ஒரு குறிப்பிட்ட ஆட்சிமுறைத் திட்டத்தை உருவாக்கின எனலாம். அதில் தாழ்நிலையில், கண்காணிப்பாளரும் ஊர்க்காவலரும் பணிபுரிந்தனர். அவர்களுக்குமேலே அமைதி காண் நீதிபதிகள் இருந்தனர். அவர்களுக்கென்று தனியான மாவட்டங்கள் ஏற்பட்டன. அடுத்த நிலையில் குவார்ட்டர் ஸெஷன்ஸ் (quarter sessions) என்றழைக்கப்பெற்ற நீதிமன்றங்களும், அதற்கும் மேலே அஸைஸ் (assize) நீதிபதிகளும் செயலாற்றினர். அவர்களிடமிருந்து பெற்ற செய்திகளை வைத்துக்கொண்டு கவுன்சில் பணியாற்றியது. நாடோடியாகச் சோம்பித் திரிதல் ஒரே தலைமுறையில் அநேகமாக அழிக்கப்பெற்றது. இத் தீமையை ஒழிக்கும் திட்டத்தில் இரவலர் விடுதிகளும், உடைமைப் பத்திரம் பெற்ற அறநிலையங்களும் ஒருங்கிணைந்து முழுமூச்சுடன் பணியாற்றின. இத் தலைமுறையில் வாழ்ந்த மக்கள் தமக்கு முந்தியவர் விட்டுச்சென்ற அறநிலையங்களோடு மேலும் சில வற்றைத் தோற்றுவித்தனர். இவைகள் பெரியதிலிருந்து இரவலருக்காக என்று சில நேர்மையான குடியானவர் விட்டுச் சென்ற சிறிய ஆட்டுமந்தைவரை பலதரப்பட்டதாக இருந்தன.

ஏராளமான இரவலர் தங்களது வீடுகளில் இருந்துகொண்டே துயருதவி பெற்றனர். ஏழைச் சிறுவருக்காக ஏராளமான நூற்புப் பள்ளிகள் இயங்கிவந்தன. கிறிஸ்து மருத்துவமனை 700 சிறுவரைப் பாதுகாத்தது. எலிசபெத் ராணியார் காலத்து பெவர்லி (Beverley) பள்ளி 80 அனாதைச் சிறுவருக்கு அறிவு புகட்டும் அரும்பணி செய்துவந்தது. யாகோபியரை ஆதரித்த நார்ஃபோக் பகுதியில் ஆண்டுதோறும் 500 சிறுவர், பணிப்பயிற்சி பெற்றனர். துயருதவி அளிப்பதுமட்டும் பொதுமக்களின் கடமையாக இல்லை. முதன் முறையாக, சில நூற்றாண்டுகளுக்குக் கடைசி முறையாகவும், எப்படிச் செயலாற்றியபோதிலும் வேலை யற்றோருக்கு வேலையளிக்க வேண்டுமென்று அரசாங்கம் வற்புறுத்தியது. இங்ஙனம் அமைதியான முறையில் இருந்த எதிர்ப்பிற்கும் சுயநலத்திற்கும் எதிராகக் கவுன்சில் தனது வேலையில் முனைந்து முன்னேறியது. நாட்டிங்காம்ஷயர் கனவான்கள் தங்களுக்குச் சிறிது ஓய்வும் இல்லையென்று முறையிட்டனர். தானியங்களின் தட்டுப்பாடு ஏற்பட்டால் உடனே பார்லியைப் பயன்படுத்திய சாராயக் கிடங்குகளில் 50 சதவீதம் மூடவேண்டுமென்ற தீவிர ஆணை பிறப்பித்தனர். ஒர்செஸ்டரில் கொள்ளை நோய் வந்த காலை, அப் பகுதியைவிட்டு நீங்கிய பணக்காரர்களிடமிருந்து இரட்டிப்பு வறியோர் வரி வசூலித்தனர். முதலாம் ஜேம்ஸின் சான்ஸலர் மாஜிஸ்ட்ரேட்டுகளின் மனம் புண்படும்படி 'அவர்கள்

பொம்மை போன்று ஒன்றும் செய்யாதிருப்பதற்காக' நியமிக்கப் பெறவில்லை என்று கூறினர்.

எனினும், பொதுமக்களின் கருத்திற்கு மாருகச் சீரிய கொள்கைகளுடைய அரசாங்கமும் வேலைசெய்ய முடியாது. மேலே குறிப்பிடப்பெற்ற வாழ்க்கையின்மீதான கட்டுப்பாடு ஒரு வகையில் மக்களின் மனவளர்ச்சிக்கு மீறியதாக இருந்தது. மேலும் அஃது ஓரளவு சட்டத்திற்குப் புறம்பானதாக இருந்தது. வெற்றி பெருத கொள்கையோடும் சமய மனநிறைவின்மையோடும் கலப்புற்றிருந்தது. இக்காரணங்களினுல் அழிந்தது. இக் கட்டுப்பாட்டின் இயக்கும் சக்தி அரசர், கவுன்சிலர் போன்ற மேலிடத்திலிருந்து வந்தது. அஃதன்றி, வரி கொடுப்போர் தமது பங்கு நன்கொடையை அளிக்க மறுத்தனர். ஊர்க்காவலரும் அத்தகையோரைக் கண்டிக்காது விட்டனர். பணம் படைத்தோர் இத்தகைய திட்டமிடும் முறையை எதிர்த்தனர். உள்நாட்டு நகரங்களில் இருந்த நிறுவனங்கள் லண்டன் நகரத் துணிகரவணிகர் சங்கத்திற்கு (London Adventures) அளிக்கப்பெற்ற தனுரிமையை எதிர்த்தனர். கீழ்நிலக் கம்பெனியின் (Eastland Company) ஆதிக்கத்திலிருந்த பால்டிக் பகுதியில், கீழ் ஆங்கிலிய வணிகர் தலையிட்டுத் தொல்லைதந்தனர். கள்ள வாணிபம் செய்வோர் கிழக்கிந்தியக் கம்பெனியின் தனியுரிமையை மீறினர். உச்ச வரம்பு வட்டிவீதம் 10 சதவீதமாக இருக்கவேண்டுமென்று 1571 ஆம் ஆண்டுச் சட்டம் விதித்தது. அதனை 1623ஆம் ஆண்டுச் சட்டம் 8 சதவீதமாகக் குறைத்தது. ஆனல், அதனை மக்கள் எளிதாகத் தவிர்த்தனர். காமன்ஸ் சபையினர் இயற்கை உரிமைக்கு முரணுனது என்று தனியுரிமையைத் தாக்கினர். மாஜிஸ்ட்ரேட்டுகள், நேர்மையான ஐயப்பாடு காரணமாகவும் சுயநலங் காரணமாகவும் அரசாங்கத்தின் முழுக் கொள்கையையும் நடைமுறைக்குக் கொண்டுவரவில்லை. சில கவுன்டிகளில் அவர்கள் கட்டாயப்படுத்தப்பெறும் வரை ஊதிய மளிப்பதில் மாற்றம் செய்யவில்லை. அதே சமயத்தில் தானியங்களின் விலையை நிர்ணயித்ததால், அவைகள் அங்காடிகளுக்கு வரவில்லையென்று மக்கள் முறையிட்டனர். தம்முடைய மனசாட்சியைக் கட்டுப்படுத்தும் உரிமை அரசாங்கத்திற்குக் கிடையாது என்ற பியூரிட்டானியரின் சமய ஆர்வம், அரசாங்கம் ஒழுக்க நெறிகளை வகுக்கும் அதிகாரம் பெற்று இருந்ததை எதிர்த்தது. சமயம் என்பது, இவ்வுலகத்தைச் சாராது மேம்பட்டு விளங்கிய ஒன்று என்றும், மனிதன், தன்னுடைய வாழ்க்கையைத் தான் விரும்பியவாறு அமைத்துக்கொள்ளும் உரிமை பெற்றவன் என்றும், பியூரிட்டானியர் வாதிட ஆரம்பித்தனர்.

புதிய நாகரிகம் ஒன்றினை உருவாக்கிவந்த இதுபோன்ற புரட்சிகள் ஒற்றுமையற்ற நிலையிலிருந்த பிற்கால இங்கிலாந்தில் வெவ்வேறான வேகத்தில் வேலைசெய்ய ஆரம்பித்தன. நிலமானிய முறை சீர்குலைந்த பிறகு, உள்நாட்டுப் போர் தோன்றிய காலம் வரையிலும், நாடு, தன்னாட்சிபெற்ற சமூகங்களின் தொகுப்பாகவே இருந்தது. செல்வந்தர் அவைகளை இயக்கிவந்தனர். இன்றும் இயற்கையொன்றே மனிதரைப் பிரித்துவைக்கப் போதுமானதாக உள்ளது. 700,000 ஏக்கர் பரப்புள்ள சதுப்பு நிலங்களில், மாட்டு மந்தைகளை ஒன்று சேர்ப்பதற்காகக் குடியானவரும் குடியேறிகளும் படகுகளைப் பயன்படுத்தினர். அவர்கள் காட்டுப் பறவைகளைக் கொன்று தின்று உயிர்வாழ்ந்தனர். அவர் தம் கிராமங்கள் எழுந்த இடங்களில், கிடைத்த முற்றா நிலக்கரி (peat) யையும் பயன்படுத்தி வாழ்ந்தனர். எக்ஸ்மூரைப் (Exmoor) போலவே, நியூமார்க்கெட் (Newmarket) புதர்க் காடுகளில் பிரயாணிகள் வழி தவறிக் காணமற்போயினர். அப் பகுதிகளில் அரசர் ஆணைகளை மதியாத டூன்ஸ் (Doones) போன்ற கொள்ளைக் கூட்டத்தினர் நிரம்பி இருந்தனர். எல்லைப்புறக் கொள்ளைக்காரர் பயம் இருந்தது என்பதற்குக் கம்பர்லாந்தில் அரண் செய்யபெற்ற வீடுகளே சான்றாக அமைகின்றன. அதே சமயத்தில் இரண்டாம் சார்லஸின் அஸ்ஸைஸ் நீதிகளைக் காப்பதற்கு என்று உருவிய வாளுடன் காவலாளர் நின்றனர். இரும்பு வார்ப்படத் தொழில், கண்ணாடித்தொழில், உப்புத்தொழில் போன்ற எரிபொருள் தேடும் புதிய தொழில்களினாலும், அரசாங்கத்தின் குறுகிய நிதிக் கொள்கையினாலும் காடுகள் அழிந்தன என்றாலும், இன்னும் பெருங்காடுகள் சஸ்ஸக்ஸ் வீல்டு (Sussex Weald), நாட்டிங்காம்ஷயர், வடபகுதிகள் ஆகிய இடங்களில் வளர்ந்திருந்தன. அதே சமயத்தில் லோலண்டின் கடின மண்மீது, புறக்கணிக்கப் பெற்ற ஓடைகளிலிருந்து நீர் சாலைகளில் பாய்ந்தது. ஒருசில இடங்களில்மட்டும் அவைகளாற் பயனடைவோரும் நகரசபையாரும், பாலங்களையும் ஊடுபாதைகளையும் (causeway) அமைத்திருந்தனர். கனமான பொருள்கள் ஆறுகளின் வழியாகக் கொண்டுவரப் பெற்றன. காட்ஸ்வோல்டு (Cotswold) கற்கள், தேம்ஸ் நதியின் வழியாக லண்டனுக்கு வந்தன. கிழக்கிலிருந்து தானியங்கள் லீ (Lea) ஆற்றின் வழியாக வந்து சேர்ந்தன. கடலில் பிரயாணம் செய்யும் கப்பல்கள், செவர்ன் (Severn) ஆற்றில் டியூக்கஸ்பரி (Tewkesbury) வரையிலும், ஓஸ் (Ouse) ஆற்றில் யார்க் நகருக்கும் சென்றன.

இங்ஙனம் மக்கள் மாறியபோதும், அவர்தம் வாழ்க்கை, இடைக்காலப் பிரிவுகளிலேயே சென்றது. பழைய அமைப்பில்

சிரன்செஸ்டர் (Cirencester) குரு மட முதல்வர் கம்பளித் துணி வெளுக்கும் ஆலையைக் கட்டிக்கொடுத்தார். புதிய அமைப்பில் துணி வியாபாரியான ப்லண்டல் (Blundell) என்பவர் டைவர்டன் (Tiverton) நகருக்குப் பள்ளிக்கூடம் ஒன்றை நன்கொடையாக எழுதிவைத்தார். அதேபோன்று ஃபிரான்ஸிஸ் டிரேக், பிளிமவுத் நகரத்திற்குப் புதிதாகக் குடிதண்ணீர் வசதி அளித்தார். லங்கா ஷயரில் வாழ்ந்த பெருங்குடியைச் சார்ந்தவர்கள் நேஸ்பி சண்டை நேர்ந்த காலம் வரையிலும் ஸ்டான்லியின் (Stanley) அடையாள உடைப்பட்டியை அணிந்திருந்தனர். அதே சமயத்தில் தல அரசாங்கம் இடைக்கால வகுப்பிற்குரிய தன்மைபெற்றிருந்தது. பாரிஷ்களிலும் கவுன்டிகளிலும், நிலமானிய முறையிலிருந்து வந்த ஊதியமற்ற கட்டாயப் பணிகள் நடைமுறையிலிருந்தன. அதனால், ஜூரிகளின் வேலை, ஊர்க்காவலரின் பணி, குதிரைகளோடு சாலை களைப் பராமரிக்கும் செயல் ஆகியவற்றை அண்டையிலுள்ள ஆட்சிப்பகுதிகள் ஒன்றின்மீது மற்றொன்று விதித்தது. பாரிஷ் திருக்கோயில் கிராமத்தின் நடுநாயகமாக விளங்கியது. மணி யடிக்கும் போட்டிகளுக்கும், பியூரிட்டானியர் வெறுத்த ஞாயிற்றுக் கிழமைகளில் நடக்கும் விளையாட்டுப் பந்தயங்கள் ஆகியவற்றிற்கும் மையமாக இருந்தது. அதேபோன்று எண்ணிறந்த அறச்செயல் களுக்கும் ஆன்மா போன்றிருந்தது. உதாரணமாக, இரவலருக்கு உணவளித்தது. யூக்நோக்கள் துயருற்றிருந்தபோதும், மர வீடுகளை மிகுதியாகக்கொண்ட நகரம் தீக்கிரையாகியபோதும் பணம் திரட்டிக்கொடுத்தது. இக் காலத்தில் கத்தோலிக்கச் சமயம் கைவிட்ட மே தினம், அறுவடை வீடு போன்ற திருவிழாக் களை ஜேகோபியர் கொண்டாடினர்.

மக்களுடைய அன்புணர்ச்சிகளெல்லாம் பழைய அமைப்பில் அழுந்தியிருந்தன. இரத்த பாசமும் கட்டும் மிகுதியாக இருந்தன. அதனால்தான் குடும்பச்சொத்து நிலையாக ஒரு குடும்பத்தினரிடம் இருக்க முடிந்தது. ஆலிவர் கிராம்வெல், தமது மகன் ரிச்சர்டுக்குச் செய்ததைப்போல திருமணங்கள் பொதுவாகப் பெற்றோர்களால் நிர்ணயிக்கப்பெற்றன. தந்தையின் நல்லாசியைப் பெறுதற்காகப் பிள்ளைகள், தங்கள் தொப்பியைக் கழற்றினர். சான்ஸலராகிய தாமஸ் மூர், கீழ் நீதிமன்றத்தின் நடுவரான தமது தந்தையின் முன் முழந்தாளிட்டு நல்லாசி கோரினார். கிரான்மரின் (Cranmer) வழிபாட்டுப் பாசுரங்களையும் எலிசபெத் காலச் சமயச்சொற் பொழிவுகளையும் கேட்ட தலைமுறையினர், பழங்குடிப் பிறந் தோரையும் ஒழுங்கையும் மிகுதியாக மதித்தனர். இவ் வுணர்வு, ஷேக்ஸ்பியர் வெளியிட்ட அளவிற்குக் கிராம்வெல் காலத்தவரிடமும் வெளிப்பட்டது. அவர்களுடைய கருத்திலிருந்த குடியரசுகள்,

ப்ளூடார்க் (Plutarch) அமைத்ததைப் போன்ற, செல்வந்தர் குடியரசு வகையைச் சார்ந்தவை அல்லது அமைதியான வெனிஸ் நகரக் காயல் பகுதிகளில் நடைமுறையில் இருந்த குடியரசை ஒத்தவை. பிரபுக்கள், கனவான்கள், குடியானவர் ஆகியோரின் சிறந்த நலன்கள் எவை என்பதைக் கிராம்வெல் பாராளுமன்றத்திற்குத் தெளிவாக்கினர். அக் காலத்தின் மாதிரியாக இருந்த வழக்கறிஞர் ஒருவர் மறைந்த பெருங்குடியினரைப்பற்றிப் புலம்பினர்

மக்கள் தங்கள் பகுதியைச் சார்ந்தவரிடமே பற்றுறுதி கொண்டனர். யார்க்ஷயர் மக்களென்றும் கார்னிஷ் மக்களென்றும் தனித்தனியே பற்றுறுதி கொண்டிருந்தனர். சிறந்த இல்லறத்தோராக இருக்கவேண்டும், விருந்தோம்பவேண்டும் என்று பர்க்ளி போன்ற உயர்குணம் படைத்த பெற்றோர்கள் போதித்தனர். நாட்டுக் கனவான்களை லண்டன் மாநகரை விட்டு வெளியேறுமாறு ஆணையிட்ட அரசரின் தனிப் பேரறிக்கையும், ஏறக்குறைய இதுபோன்ற போதனைகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது. அதே சமயத்தில் கவுன்டியைச் சார்ந்த கனவான்களின் நகர விடுதிகளையும், அவர்களின் மனத்தைக் கவர்ந்த பந்தயங்களையும், கூட்டங்களையும் கொண்டிருந்த யார்க் அல்லது எக்ஸிடர் (Exeter) போன்றவையே உண்மைத் தலைநகரங்களாக விளங்கின. தலப் போட்டிகளும் பகைமையும், சவில்களையும் (Saviles) வேன்களையும் (Vanes) ஸ்ட்ரா:.போர்டைக் கொல்லவேண்டுமென்று கேட்கத் தூண்டின. ஹாம்ப்டன், கிராம்வெல், செயின்ட் ஜான் ஆகியோர் உறவுத்தளையினல் பிணைப்புண்டனர். அதே சமயத்தில் மேற்குப் பகுதியிலிருந்து வந்த உறுப்பினர் சமயத்தைப்பற்றியோ, அரசரைப்பற்றியோ எவ்விதக் கருத்துகள் கொண்டிருந்த போதிலும் தங்களுடைய கம்பளிப்பொருள்களின் நலன்களைப் பாதுகாக்க யாவரும் ஒருங்கிணைந்து வாக்களித்தனர். லண்டன் நகரில் வாழ்ந்த நாட்டுப்புறக் கனவான் தம்முடைய வீட்டிலிருந்து வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்கள் அனைத்தையும் பெற்ருர். அவருடைய நாட்டுப்புற வீடு அநேகமாகத் தன்னிறைவு பெற்றதாக இருந்தது. அங்கே தானியங்களும் மாட்டிறைச்சியும் கிடைத்தன. மீன் வளரும் குளங்களும் வேட்டை விலங்குகளும் இருந்தன. மாவும், கொழுப்புப் பொருள்களும், மதுவகைகளும், கைத்தறி கோட்டும் (coat), மெழுகுவத்திகளும் எளிதில் கிடைத்தன. மேலும் அவருடைய மனைவி, மூலிகைத் தோட்டத்திலிருந்தும் பழத்தோட்டத்திலிருந்தும் கிடைத்த பொருள்களைக் கொண்டு மருந்துகள் செய்தார். நாட்டுப்புற மக்கள் விலங்குகளைக் கொல்வதற்கே வேட்டையாடினர். வேட்டையாடுதல்

பெரும் இன்பத்திற்காகவோ புகழுக்காகவோ அன்று ; மான்களைக் கண்ணி வைத்துப் பிடித்தனர். குள்ளநரிகளைக் கொடிய நோய் போன்று வெறுத்தனர். அவைகளைக் கொல்வதற்கு ஊர்க்கோயில் காப்பாளர் பரிசுகள் வழங்கினர். ஸ்கொயர்களெனும் நாட்டுப்புறக் கனவான்கள் குடிப்பெருமை மிகுதியாகக் கொண்டிருந்தபோதிலும், பல்கலைக் கழகங்களிலோ வழக்கறிஞர் சங்கங்களிலோ ஓரளவு கல்வி கற்றிருந்தபோதிலும், மாகாணப் பண்பு கொண்டவர்களாக இருந்தனர். நீதிபதிகளாகச் சிறு அதிகாரம் பெற்றிருந்தனர். குடியானவர்கள் உண்ட அதே மாட்டிறைச்சியை உண்டனர் ; அவர்கள் குடித்த ஏல் மதுவையே பருகினர். குடியானவரின் மொழியிலேயே பேசினர். ஆனால், மரபுரிமைச் சின்னந்தாங்கிய மேலங்கியினாலும் (coat of arms), உயர்குடிப் பிறந்தோரின் பெண்களை மணந்ததனால் பெற்ற தலைமைப் பதவியினாலும், முளையடிப் பந்தாட்டப் புல்வெளியிலும் குவார்ட்டர் செஷன்ஸ் நீதிமன்றங்களின் நடைமுறையிலும் பங்கு கொண்டதனாலும் குடியானவரிடமிருந்து வேறுபட்டனர். அவர்களுடைய செல்வாக்குக் காரணமாகவும் திருச்சபை ஆதரவு காரணமாகவும் பல சமய குருமார் கனவான்களைப் போன்றே வாழ்ந்தனர். 1549 ஆம் ஆண்டு தூக்கிலிடப்பெற்ற, எக்ஸிடரைச் சார்ந்த பாதிரியான வெல்ஷ் (Welsh) என்பவர், வேட்டையாடுவதில் புகழ் பெற்றவர். வில் வித்தையில் வல்லவர். பிற்காலத்தில் வந்த பல பாதிரிகள் பயிரிடும் குடியானவர்களாக இருந்தனர். கோவில் மகமையாக வந்த காட்டில் உள்ள தானியங்களைச் சேகரித்தனர். தம் மனைவியரோடு சேர்ந்து ஏல் மது தயாரித்தனர்.

இத் திருத்தமடையாத, ஆனால், உண்மையான ஆங்கிலச் சமுதாயம் தன்னுடைய நாட்டிற்கு வெளியே உயர்ந்த தரத்தையும், உயரிய எண்ணங்களையும் போற்றிவந்தது. பல வகுப்பைச் சார்ந்த ஆங்கிலேயரின் இறைச்சியுணவை அந்நிய நாட்டவர் அறிந்தனர். வெளிநாடுகளில் இருந்த ஆங்கிலப் படை வீரருக்கு ஏற்றுமதியான பீர் மதுவகையும் கண்டனர். நல்ல உணவு விடுதிகளில் காணக்கிடக்கும் கோப்பைகளும் உணவு வகைகளும் வெளிநாடுகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. பழம்பொருள் ஆய்வாளரும் அரசியல்வாதிகளும் ஆங்கிலக் குடியானவரைப்பற்றிப் பெருமையாகப் பேசினர். எலிசபெத் ராணியார் காலத்துப் பாதிரியான ஹாரிஸன் என்பவர் ஆங்கிலக் குடியானவர்களைக் கண்டு 'பழங்காலத்தில் ஃபிரான்ஸ் அச்சமுற்றிருந்தது' என்று எழுதினர். அவர் காலத்தவரான உள்துறைச் செயலரான தாமஸ் ஸ்மித் என்பவர், சுதந்திரமும், நெஞ்சுரமும், வீராப்பும் மிகுந்த ஆங்கிலேயர் அடிமைத் தனத்தையோ சித்திரவதையையோ

பொறுக்கமாட்டார்கள் என்று குறிப்பிட்டார். ஆஞ்சூவினரின் (Angevin) காலத்திலிருந்து குடியானவர் ஆயுதம் வைத்திருக்க அனுமதிக்கப்பட்டனர். மேலும், சமீபகாலத்தில் அவர்கள் தங்களைச் சிறந்த வில்லாளிகளாகச் செய்துகொள்ளுமாறு ஆணையிடப்பெற்றனர். நீதிபதியான ஷால்லோஸ் (Shallows) என்பவருக்கு உதவியாக இருந்த நாட்டுப் படை வீரரும்தற்பெருமை மிக்க தலைவரின்கீழ் இருந்த ஊர்க்காவல் படையினரும், திறமை யற்றவர்களாக இருந்தபோதிலும் மக்களிடையே காணப்பெற்ற கட்டுப்பாடுடன்கூடிய சுதந்திரத்தைக் காத்துநின்றனர். நூற்றுக் கணக்கான தன்னாட்சி பெற்ற பாரிஷ்களும் மேனர்களும் (manor), திருச்சபைத் தீர்வைகளையும் உழவுப் பழக்க முறையையும் நிர்ண யித்தன. ஊர்க்காவலர், திருக்கோயில் காப்பாளர், திருக்கோயில் காவற்பணியாளர், மாடு மேய்ப்போன், அளவையாளர் ஆகியோரைத் தமது அன்றாட வாழ்க்கையைத் திறம்பட நடத்திச் செல்வதற்கென்று தேர்ந்தெடுத்தன. இத்தகைய குடியானவர் ஸ்பானிய மெயினிலோ ஆர்டிக் கடலிலோ பிரயாணம் செய்யும் போதும், தங்களுடைய வீட்டு வாழ்க்கை வெளிப்படுமாறு நடந்து கொண்டனர். உதாரணமாக, ஹாக்கின்ஸ் (Hawkins), தமது அடிமைக் கப்பலில் அந்திக்கால வழிபாட்டினைச் செய்தார். ட்ரேக்கின் ஆட்கள் குழிப்பந்து விளையாட்டுப் புல்வெளிகளை அமைத்தனர். டேவிஸ் (Davis) என்பவருடைய ஆட்கள் எஸ்கி மோக்களுடன் (Eskimos) கால்பந்து (football) விளையாடினர்.

கவிஞர்கள் எத்துணைதான் கூறியபோதிலும், குறுகிய வாழ்க்கை கொடியதாகவே காணப்படுகின்றது. அக்காலத்தில் ஆங்கிலேயரின் வாழ்க்கை குறுகியதாக இருந்தது. பிரசவ வேதனைப்படும் பெண்கள்மீதும், சிறு குழந்தைகள்மீதும், சிறைக் கைதிகள்மீதும் இரக்கம் காட்டுமாறு வழிபாட்டுப் பாசுரங்களில் வேண்டுதல் காணப்பெற்றது. ஏனெனில், இவர்களெல்லாம் சாவரக்கனால் எளிதாக வீழ்த்தப்பெற்றவர்கள். போரில் புண் ஏற்பட்டது என்றால், அது புரையோடிச் சாவினைக் கொணர்ந்தது. 1518ஆம் ஆண்டில் லினகர் (Linacre) மருத்துவக் கல்லூரி ஒன்றை நிறுவியபோதிலும், 1600ஆம் ஆண்டுவரை காலனும் (Galen) பழம் பள்ளிகளுமே மருத்துவத் துறையில் ஆதிக்கம் பெற்றிருந்தன. இத் துறை எளிதாக 'உடல் தாதுக்கள்' எனும் போலி மருத்துவ முறையாகவும், குறி நூலாகவும், மாக்பெத் நாடகத்தில் வரும் சூனியக்காரிகள் தயாரித்த ஊறு செய்யும் மருந்து களைப் போன்றும் இழிநிலையெய்தியது. முதலாம் ஜேம்ஸின் ஆட்சிக் காலத்தில்தான், நல்ல முறைகள் தோன்றலாயின. மருந்துக் கடைக்காரர் சங்கத்திற்கு (Society of Apothecaries) அளிக்கப்

பெற்ற உரிமைப் பத்திரத்திலும், புண்களுக்கான அறுவை மருத்துவத்திலும் அதற்காக உறுப்புக்களைத் துணிப்பதிலும் ஃபிரெஞ்சுக்காரரிடமிருந்து சில முறைகளைக் கடனாகக் கொண்டதாலும், வில்லியம் ஹார்வியின் (William Harvey) இரத்த ஓட்டத்தைப்பற்றிய கண்டு பிடிப்பினாலும் மருத்துவத்துறையில் ஓரளவு முன்னேற்றம் காணப்பெற்றது. இதற்கிடையில் ஆடவர் பல பெண்களை மணந்து குடும்பத்தைப் பெருக்கினர். டீன் கோலட் (Dean Colet) இருபத்தோரு உடன்பிறந்தாரைப் பெற்றிருந்தார். கொள்ளை நோய்களின் கொடுமையோ கூறத் தக்கதன்று. கொள்ளை நோய் பரவுவதற்கு முன் வெஸ்ட்மினிஸ்டர் பையன்கள் சிஸ்விக்கிற்கு அனுப்பப்பெற்றதைப் போன்று மக்கள் இடம் பெயர்ந்து ஓடியபோதிலும், நீதிமன்றங்களில் எத்துணைதான் இனிய மூலிகைகளைப் பரப்பியபோதிலும், அரசவையாளர் ஆரஞ்சுகளையும் நறுமண உருண்டைகளையும் கையிலெடுத்துச் சென்றபோதிலும் கொள்ளை நோய்களின் கொடுமை குறைய வில்லை. எட்டாம் ஹென்றியைக் கானக விடுதிகளுக்குத் துரத்திய வேர்வை-வியாதி (sweating-sickness), ஆறும் எட்வர்டின் அரசவையில் 9 மணிக்கு நடனமாடியவர் 11 மணிக்கு இறக்கும்படி செய்தது. அதனால் அது 'ஸ்டாப்-காலன்ட் (stop-gallant) என்று பெயர் பெற்றது. ஆக்ஸ்ஃபோர்டு வழக்கு மன்றம் ஒன்றில் சிறைக்காய்ச்சல், நீதிபதிகளையும் ஜூரிகளையும் மொத்தத்தில் 300 பேரைக் கொன்றது. எலிசபெத் ராணியார் இறந்த ஆண்டில், பிளேக் கொள்ளை நோயில் 38,000 லண்டன் மாநகர மாந்தர் மடிந்தனர். நியூகேட்டும் சிறைச்சாலைகளும் பயங்கரப் படுகுழிகளாக இருந்தன. அவைகள், மண் தரையும் வைக்கோல் படுக்கையும் கொண்டிருந்தன. அங்கே உணவுப் பிச்சைக்காக அவல ஒலிகள் எழுந்தன. மெலிந்த கைகள் நீண்டன.

இங்ஙனம் பல இன்னல்களுக்கிடையே வளர்ந்து, எதிர்பாரா மரணத்தினாலும் அரச எதிர்ப்பினாலும் அச்சுறுத்தப்பெற்ற ஆங்கிலச் சமுதாயம், பகைவரையும் பழியேந்தியவரையும் அழிக்க முனைந்தது. 'எகிப்தியர்' என்றழைக்கப்பெற்ற நாடோடிகள், வழிப்பறிக் கொள்ளைக்காரர் ஆகியோரையும், உணவு விடுதியாளரோடு இணைந்து, சாலைகளைப் பாதுகாப்பற்றதாகச் செய்த தலைவனில்லாத் தறுதலைகளையும், அவர்தம் காமக் கிழத்தியரையும் கசைகொண்டடித்துக் கடுமையான தண்டனைகளுக்குள்ளாகியது. பல குற்றவாளிகள் தூக்கில் தொங்கியதைக் கண்டு களித்தது. டைபர்னுக்குத் (Tyburn) துரத்தப்பெற்றோரின் கழிவிரக்கப் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தது. இச் சமுதாயத்தின் ஒழுக்க விதிகள் தாழ்ந்தவை ; எனினும் கடுமையானவை. லண்டன் நகர நாடக

அரங்குகள் அநேகமாகப் பரத்தையர் விடுதிகள்போன்று இருந்தன. அவைகளைப் பணிப் பயிற்சியாளர் அடிக்கடித் தாக்கி அழித்தனர். ஒழுங்கங்கெட்ட பெண்களைத் தண்டிப்பதற்கென்று நீரில் மூழ்க் கடிக்க உதவும் இருக்கை பயன்படுத்தப்பெற்றது. சிறு திருட்டு செய்வோருக்கும் கெட்ட ரொட்டி தயாரிப்பவருக்கும், தண்டனை வழங்கக் கழுமரமும் பிணைமரமும் பயன்பட்டன. அரசாங் கத்தின் எல்லாப் பணித்துறைகளிலும் ஊழல் மலிந்திருந்தது. கேவலமான ஊதியமும் ஏராளமான மேல் வரும்படிகளும் இருந்ததால், ராணுவக் குழுக்களிலும், பல்கலைக் கழகப் பதவி களிலும், ஊதியம் கிடைக்கும் எல்லா இடங்களிலும் ஊழல் மிகுதியாக இருந்தது. பெரும் பதவி வகித்தோர் ஆதிக்கம் நிறைந் தவர்களாக இருந்தனர். இவ்வாறு மனிதர் ஒருவரை ஒருவர் சித்திரவதை செய்துகொண்டபோது, விலங்குகளின் நிலை பற்றி நினைப்பதற்கு நேரமில்லை. அவர்கள் கோழிச் சண்டை பார்த்தல், டவர் கோட்டைச் சிறைச் சிங்கங்கள் கொடியினைக் கிழித்தெறிவதைக் காணுதல், காளைச் சண்டை மூட்டுதல் ஆகிய வற்றில் பெருவிருப்பு கொண்டனர். பாரீஸ் (Paris) பூங்காவில் இருந்த சிங்கங்களைக் கர்னல் பிரைட் (Colonel Pride) கொல்லும் வரையில் பல தலைமுறையினர் அவைகளின் பெயர்களோடு அவற்றைப்பற்றி அறிந்திருந்தனர். பழைய மூடப் பழக்கங் களும் அரைகுறை அறிவியலும் மக்களை இரசவாதிகளிடமும், காதலைத் தூண்டும் மருந்துகளிடமும், தாழ்ந்த உலோகங்களைப் பொன்னாக மாற்றும் சிந்தாமணியிடமும் சிக்கவைத்தன. மேலும், அவைகள் பொதுமக்களிடையே சூனியக்காரிகளின் பீதியை உண்டாக்கின. அதன் காரணமாக இரண்டாண்டுகள் நடை பெற்ற உள்நாட்டுப் போரின்போது கீழ் ஆங்கிலியாவில்மட்டும் ஏறக்குறைய 200 மாயக்காரிகள் கொல்லப்பட்டனர்.

எனினும், செல்வப் பெருக்கோடும் அமைதியோடும் மக்கள் வாழ்க்கையில் சில மாறுதல்கள் தோன்றின. சில புதிய கருத்து களும் ஆழமாகப் பதிந்தன. மக்கள் எளிய பழக்க வழக்கங்களைக் கொண்டிருந்தனர். கவுன்டிகளில் வளர்ந்தவர்கள் கோடை காலத்தில் காலை 7 மணிக்குக் குவார்ட்டர் செஷன்ஸ் நீதிமன்றம் நடத்தினர்; பகலுணவை நண்பகலுக்கு முன்பே உண்டனர். அவர்கள் உள்ளுடை தவிர இரவு உடை என்று வைத்திருக்க வில்லை. குளிக்கும் பழக்கம் அற்றிருந்தனர். பெரிய வீடுகளில்கூட துப்புரவு சிறிதும் இல்லை. மிக அமைதியானவரும் கத்தியோ கட்டாரியோ வைத்திருந்தனர். உடல் மெலிந்த அறிஞரும் அதிகமாகக் குதிரைமேல் பயணம் செய்யவேண்டியிருந்தது. ஏழைப் பல்கலைக் கழக மாணவர் விடிவதற்குள் எழுந்தனர். ஒரு

பென்னி மதிப்புள்ள மாட்டிறைச்சியும் ஓட்ஸ் கஞ்சியும் உண்டு உயிர் வாழ்ந்த அவர்கள், பொதுக்கூடத்தில் இருந்த தீயைத் தவிர வேறெங்கும் கண்டதில்லை. உண்மையிலேயே ஏழ்மைநிலையில் உள்ளவர்கள் பல நூற்றுண்டுகள் ஆகியும் மாருமலிருந்தனர். இப்போது உட்குடியாக (villeins) இல்லாது உரிமை பெற்ற குடிமக்களாக இருந்தபோதிலும் அவர்கள் அடிக்கடி கோதுமை ரொட்டியைவிடப் பார்லி, ரை (rye) போன்றவற்றினுல் ஆன ரொட்டியையே உண்டு வாழ்ந்தனர். அவர்தம் குடில்கள், மிலாறு களினுல் ஆன சுவரின்மீது மண் பூசப் பெற்று, கூரை வேய்ந் தனவாக இருந்தன. முதிராத நிலக்கரியையும் ஃபர்ஸ் (furze) எனும் முட்செடியையும் எரிபொருள்களாகப் பயன்படுத்தினர். மர முக்காலிகளும் மணைகளும் பயன்பட்டன. அவர்கள் பெரிய மரத் தட்டுகளில் உணவு கொண்டனர். சில கலப்பு ஈயச் சாமான்களும் பயன்பட்டன. இறகினுல் ஆன படுக்கையே பெருமதிப்பிற்குரிய பொருளாக இருந்தது. குடியானவருடைய உடை மேம்பட்ட துணியினுல் ஆனது என்றபோதிலும், அதை வெட்டியவிதத்தில் வேற்றுமை காணப்பெற்றபோதிலும், அஃது அவர்களுடைய சாக் ஸானிய முன்னோர் காலத்து உடையைப்போன்று இருந்தது. அவர்களில் வளம் பொருந்தியவனுகை இருப்பவன் கிராம்வெல் போன்ற கனவான்கள் அணிந்திருந்த முறுக்கிய கம்பளி நூலினுலான காலுறையை அணிந்திருந்தான். ஹுட் (hood) என்னும் தலையணிக்குப் பதிலாகக் கம்பளத் தொப்பி அணிந்தான். எனினும், அவனுடைய சட்டையும் மேலாடை போன்றே முரட்டுக் கித்தானுல் (canvas) ஆனது. அவனுடைய கோட்டு, வீட்டில் நெய்யப்பெற்ற செம்மை கலந்த மாநிறமாக அல்லது சாம்பல் நிறமாக இருந்தது. அவன் வேலை செய்யும்போது மரத்தினுலான மிதியடிக்கட்டையை அணிந்தான். ஆனுல், அவனுக்கு மேலே உள்ளவர்களிடத்தில் பழைய பழக்க வழக்கங்கள் மறைந்தன.

இக் காலப் பகுதியில் வாழ்வையும் சாவையும் பிரபுக்கள் நிர்ணயிக்கவில்லை. பதினைந்தாம் நூற்றுண்டில் சில வலிய அரண்கள் வார்க்வொர்த் (Warkworth), டாட்டர்ஷல் (Tattershall) போன்ற இடங்களில் எழுப்பப்பெற்றுலும் அவையெல்லாம் எஞ்சி யிருந்தவையே. ஹாடன் ஹாலில் (Haddon Hall) எழுப்பப் பெற்ற வெர்னுன் (Vernon) போன்ற கட்டடங்கள் பெரிய வீடு களே யன்றிக் கோட்டை மாளிகைகளல்ல. பல ஆண்டுகளுக்கு மண்டபமே வீட்டின் மையமாக இருந்தபோதிலும், வாயில் வீடு களும் அகழிகளும் பாதுகாப்பிற்கு உதவின. இங்ஙனம் பல கவுன்டி மாளிகைகள் உள்நாட்டுப் போரின்போது இடப்பெற்ற முற்றுகையைச் சமாளித்தன. உதாரணமாக, ப்ராம்ப்டன்

ப்ரையன் (Brampton Bryan) மாளிகையை ஹார்லி சீமாட்டியார் அரசக் கட்சியினருக்கெதிராகக் காத்தார். டர்பி (Derby) சீமாட்டியார் லதோம் (Lathom) மாளிகையைப் பியூரிட்டன்களிடமிருந்து காப்பாற்றினர். ஆயினும் பதினைந்தாம் நூற்றாண்டு முழுவதிலும் பதினாறும் நூற்றாண்டிலும் மண்டபத்தின் ஒரு பக்கத்திலிருந்த தனியறைக்கு பதிலாகக் கூடங்களும், ஓய்வெடுக்கும் அறைகளும், விருந்தினர் அறைகளும் தோன்றின. மற்றொரு புறத்தில் திரைகளுக்குப் பின்னால் மேலும் சில அறைகளும், படியரங்கமும், சமையலறையும், சரக்கறையும் மறைத்துநின்றன. புகை போக்கிக் குழலுடன்கூடிய கணப்படுப்புகள் அதிகமாகப் பயன் பட்டன. அதே சமயத்தில் கொம்பு அல்லது மர மூடிகளைக் கொண்ட சந்துகள் இருந்த இடத்தில், அம்புகள் நுழையு மென்பதைப் பொருட்படுத்தாது, கண்ணாடிச் சாரளங்களை மிகுதியாக அமைத்தனர். லண்டன் நகரத் துணி வியாபாரிகளின் பணமும், புதிய மார்க்கெட்டுகளில் வாணிபம் செய்வோருடைய செல்வமும் இங்கிலாந்தில் நிறைந்திருந்த மேனர்களிலும், பண்ணை வீடுகளிலும், திருக்கோயில்களிலும், பரோ கட்டடங்களிலும் மெதுவாகப் புகுந்தன. அதன் காரணமாக மரச் சட்டம் அமைப்பதிலும் மரத்தினால் மேல்தளம் அமைப்பதிலும், புதுமையும் நயமும் தோன்றின. சுண்ணாம்புச் சித்திர வேலை சிறந்திருந்தது. வீட்டின் முகப்புச் சாரளங்களும் மேலறைச் சாரளங்களும் அமைக்கப்பெற்றன. மண் தரையின் மீது கல் பாவும் கலை வளர்ந்தது.

கோதிக் (Gothic) கட்டடக் கலைமுறைகள் ஏழாம் ஹென்றியின் அரண்மனைக் கோயிலில் காணப்பெற்றதைப் போன்று, விசிறி போன்ற சரள மேல் முகப்பு வேலைப்பாட்டிலும், வில் வளைவுக் கூரைகளிலும் சக்தியைச் செலவிட்ட அதே சமயத்தில், புதிய செங்குத்தான பாணி (style), அழகற்ற, ஆனால், வலிமை பொருந்திய கட்டடங்கள் எழுவதற்கு வாய்ப்பளித்தது. சஃபோக்கில் உள்ள கோயில் கோபுரங்களும், வில்ட்ஷயர் அவான் (Wiltshire Avon), சாமர் செட் (Somerset) ஆகிய கோயில்களும், சட்டன் பிளேஸ் (Sutton Place), லேயர் மார்னி (Layer Marney) போன்ற செங்கல் மாளிகைகளும் இப் பாணியின் பிரதிநிதிகள் போன்று ஏற்பட்டவை. கட்டடங்களில், நேர்க் கோட்டமைப்பு (line), வெளிச்சம், பயன் ஆகியவை மொத்தை (mass), சமயப் பொருள் அல்லது பாதுகாப்பு ஆகியவற்றைக்காட்டிலும் மிக முக்கியமானவையாகக் கருதப்பெற்றன. எனவேதான் கோதிக் பாணியில் நீண்ட திருக்கோயில் சாரளங்கள் அமைக்கப்பெற்றன. நடுப் பகுதியின் மேலுள்ள படியரங்கு கைவிடப்பெற்றது.

கூரான வளைவுகள் தட்டையாக்கப்பெற்றன. அதே சமயத்தில் வளைந்து செல்லும் மேடைகளைவிட்டு நேரான அகன்ற படிகள் அமைக்கப்பெற்றன. சாரளத்தின் குறுக்கு விட்டமும் நேர் விட்டமும் நேர் கோட்டமைவாக இருந்து, தளமட்டமான கொத்தளத்தோடு (battlement) ஒருங்கியைந்து காணப்பெற்றன. இந் நேர்க்கோட்டமைப்பினை மீறும் சித்திர வேலைப்பாடுகள், முக மண்டபம், கோபுர உச்சி ஆகியவையும் ஒரு குறிப்பிட்ட அளவு வீதத்திலேயே அமைந்தன. உயரம், வெளிச்சம், சித்திர வேலைப்பாடு ஆகியவை தரக்கூடிய அழகினையும் கம்பீரத்தையும் கான்டர்பரியில் உள்ள பெல் ஹாரி (Bell Harry) கோபுரத்திலும், லேவன்ஹாம் (Lavenham) போன்ற கீழ் ஆங்கிலியத் திருக்கோயில்களிலும், கிங்ஸ் கல்லூரியிலும் (King's College), கேம்ப்ரிட்ஜிலும், எல்தாம் (Eltham), ஹாட்ஃபீல்டு (Hatfielid) ஆகிய இடங்களிலுள்ள மண்டபங்களிலும் காணலாம். கல்லையும், செங்கல்லையும், மரத்தையும் கொண்டு கட்டப்பெற்ற ஏராளமான வீடுகளில் தலைக் கட்டடக் கலைஞரும் சாரளங்கள், எழுதகம் (cornice), முக்கோணச் சுவர், புகைபோக்கி போன்றவற்றை அமைத்தனர்.

தொடக்கக் காலத்தில் இத்தாலியரிடமிருந்தும் ஃப்ளீமியரிடமிருந்தும் ஒப்பனையைக் கடன் வாங்கியபிறகு, எலிசபெத் ராணியாரின் பணியாளரும் ஜேம்ஸின் பணியாளரும் முறையான திட்ட அமைப்பிற்கேற்றவாறு கட்டடங்களை எழுப்பும் பழக்கத்தை ஏற்படுத்தினர். சில சமயங்களில் வெளி நாடுகளில் இருந்த மறுமலர்ச்சிக் கட்டட மாதிரிகளை நன்குக உணர்ந்த கட்டடக் கலைஞரைக்கொண்டும் உருவாக்கப்பெற்றன. ஹட்டன் (Hatton), ஹால்டன்பியில் (Holdenby) அரண்மனை ஒன்றைக் கட்டுவித்தார். செசில்கள் (Cecils), தியோபால்ட்ஸ் (Theobalds), ஹாட்ஃபீல்டு (Hatfield), கிரான்போர்ன் (Cranborne) ஆகிய மாளிகைகளை எழுப்பினர் அல்லது திருத்தியமைத்தனர். அதைப்போன்றே ஹோவர்ட்ஸ் ஆட்லி எண்ட் (Howards Audley End), சாக்வில்லீஸ் நோல் (Sackvilles Knole) ஆகியவையும் எழுந்தன. பிரபுக்களைப் பின்பற்றி, கனவான்களும் வணிகரும் பல கட்டடங்களைக் கட்டினர். உதாரணமாக, டார்செட் ஃபிலிப்ஸ் (Dorset Phelips) என்பவர், மான்டகூட் (Montacute) எனும் அழகிய கட்டடத்தை எழுப்பினார். கட்டடக் கலையில் மறுமலர்ச்சி, விட்ருவியஸின் (Vitruvius) செல்வாக்கிலிருந்து வந்தது. அக் கலை ஹென்றி வொட்டன் (Henry Wotton) போன்ற ஆங்கில மேதைகளால் கற்பிக்கப் பட்டது. இறுதியில், இனிகோ ஜோன்ஸின் (Inigo Jones) பெருந் திட்டத்தின் ஒரு சிறு பகுதியாக வெண் மாளிகையில் (White hall) பெருவிருந்து மண்டபம் (Bangueting Hall) அமைந்தது. இதில்

ஒன்றரை நூற்றாண்டிற்குச் செல்வாக்குப் பெற்றிருந்த பண்டைய பாணி உச்சநிலையெய்தியது. ஆயினும் கண்ணாடிச் சட்டமமைத்த சாரளங்கள், அகன்ற எழுமனைகள், சாய்கூரையில் செங்குத்தாக நிற்கும் பலகணிகள், தூண்கள், அளவு வீதத்திலமைந்த பக்கங்கள் ஆகியவை எண்ணங்கள் புதிய வழியில் சென்றன என்பதை வெளிக்காட்டுகின்றன.

இத்தகைய புதிய பொது வாழ்க்கை அமைப்பில், இடைக் காலச் சமுதாயத்தில் இருந்த உடை வேறுபாடும் ஆயுதங்களும் மறைந்தன. போர்க்கலையில் தோன்றிய மாறுதல்கள், வைகிங்குகளும் (Vikings) நார்மானியரும் (Normans) வெற்றிபெற உதவிய பலவகையான இரும்புச்சங்கிலிக் கவசங்கள் மறைந்தன. தாக்கும் படைக்கலன்களில் முன்னேற்றங் காணும்போதெல்லாம் கவசம் செய்வோர், உடம்பின் முக்கியப் பகுதிகளை மூடுதற்குத் தகட்டுத் துண்டுகளைத் தயாரித்தனர். இவ்வாறு முன்னேறி, பதினைன்காம் நூற்றாண்டில் உடல் முழுவதையும் மறைத்துக் காக்கும் தகட்டினாலான கவசத்தைச் செய்தனர். கவசத்தின் பளுவைப் பல பகுதிகளில் பகிர்ந்து வேலைப்பாடு மிகுந்ததாகச் செய்தனர். அது தனித்தனித் துண்டுகள், ஆணிகள், கீல்கள் ஆகியவற்றைக் கொண்டு, எளிதில் வளையக்கூடியதாக இருந்தது. ஆயினும், பாதுகாப்பு மிகுவதற்காகத் தகட்டின் பருமனை அதிகரிப்பதற்கும், தலைக் கவசத்தின் கனத்தைப் பெருக்குதற்கும், குதிரைக்கான முழு கவசம் செய்வதிலும் ஒரு வரம்பு இருந்தது. எனவே, தலைக் கவசத்திற்குப் பதிலாக பளு குறைந்ததும், காற்றோட்டம் மிகுந்ததுமான சில தகட்டுத் துண்டுகளை அணிந்து போரிட்டனர். வில்லாளரும், படையின் பொதுநிலையாளரும் உடலின் மேல்பகுதியை மட்டும் மறைக்கும் கவசத்தையும், இடையிடையே சிறு இரும்புத் துண்டுகள் வைத்துத் தைக்கப்பெற்ற பஞ்சுரைக் கோட்டு ஆகியவற்றையுமே அணிந்து போரிடவேண்டும். குறுக்கை வில்லின் வன்மைமிக்க குறுங்கணை (crossbow bolts) களைக் காட்டிலும், மிகுதியாக ஊடுருவிப் பாயும் குண்டுகள் இறுதி அடியாக வந்தன. எலிசபெத் ராணியார் இறந்தபோது, டவர் கோட்டைக் கிடங்குகளில் ஏராளமான வில்கள் இருந்தபோதிலும், ஜெர்மனியிலிருந்தும் டான்ஸிக்கிலிருந்தும் (Danzig) ஈவ் (yew) மரத்தின் வளைந்த பலகை இறக்குமதி செய்யப்பெற்றபோதிலும், வில்லாளரின் காலம் மாறிவிட்டது. நிலப்படை, இப்போது மழுப்படை (bills), துப்பாக்கி, பதினாறு அடி நீளமுள்ள ஈட்டி ஆகியவற்றையே நம்பியிருந்தது. வெடி குண்டு வீச்சும், ஒருங்கிணைந்து தாக்கும் போர்முறைத் திறனும், கவசமணிந்து தற்காப்புப் போர் புரியும் முறையை அழித்தன. மார்புத் தகடு,

முதுகுத் தகடு, தலைக் கவசம் ஆகியவை மறைந்து, மார்புக் கவசமும், முரட்டுக் கோட்டும், பதினேழாம் நூற்றாண்டில் பயன்பட்ட பெரும் பூட்டுகளும் பயன்பட்டன. அதேசமயத்தில் பளு குறைந்து வேகமாகப் பயன்படும் ஆயுதங்கள் பயன்பட்டன. கைத் துப்பாக்கிக்கும் (pistol), கனமான பழையவகைத் துப்பாக்கியான மஸ்கட்டிற்கும் (musket) பதிலாகச் சக்கிமுக்கியால் பொறியூட்டி இயக்கப்படும் துப்பாக்கி உபயோகத்திற்கு வந்தது. கூர் முனையுடைய வாளுக்குப் பதிலாக டோலிடோ (Toledo) பட்டாக் கத்தி பயன்பட்டது. இவையெல்லாம் போர்க்களங்களில் வேகமாக இயங்கும் தன்மையும், எண்ணிக்கைப் பெருக்கமும் வெற்றித் தேடித்தருவன என்பதற்குச் சான்றாக அமைந்தன.

இவற்றிற்கெல்லாம் தனித்துறைப் புலமைப்பேறு தேவைப் பட்டது. அப் புலமை, படை வீரரையும் படை சாராப் பாமரரையும் பிரித்து வைத்தது. படைசாரா மக்கள் பணத்தைத் தவிர, பிறவற்றால் பிரிந்து நிற்காது, நெகிழும் தன்மையுடைய சமுதாயத்தில் கலந்தனர். பதினாறும் நூற்றாண்டில் கொண்டு வரப்பெற்ற செலவைக் குறைக்கும் சட்டமெதுவும் உடையில் வகுப்புவேற்றுமையைப் புகுத்த முடியவில்லை. பணிப் பயிற்சி யாளரின் தட்டையான குல்லாயும், வெண்ணிறக் குறுங்கால் சட்டையும், பியூரிட்டன்களின் வெள்ளை இழைக் கச்சையும் ஒரு தொழிலையோ அல்லது சமயத்தையோ குறிப்பிடுவன. பொதுவாகப் பேசுமிடத்து நாகரிக உலகம் விரிந்தும் மிகுதியான ஒருமித்த தன்மையோடும் வளர்ந்திருந்தது. மேலும், நடை முறைக்கு ஒத்த முறையிலும், ஒத்துணர்வு காட்டும் பொது வுடைமைப் பண்பு கொண்டும் விளங்கியது. குட்டையான காலுறைகளும், உட்சட்டைகளும், குறுங்கால் சட்டையும், காலுறைகளும், பிளான்டஜெனட் (Plantagenets) காலத்தவர் அணிந்திருந்த நீண்ட மேலங்கி, இறுக்கமான உள் காற்சட்டை ஆகியவற்றிற்குப் பதிலாகப் பயன்படுத்தப்பெற்றன. சில சமயங்களில் ஆங்கிலேயர், சட்டைகளிலும் பகட்டாக உடையணி வதிலும் ஐரோப்பியரைப் பின்பற்றினர். எலிசபெத் ராணியாரின் காலத்தில் வாழ்ந்த பகட்டுக்காரன் காலரைப் (collar) பெருங் கழுத்து அணியாகச் செய்தான். அவன் ஜெர்மன் மேலங் கியையும் ஹாலந்து சட்டையையும் அணிந்தான். காலணியின் மீது ரோஜாப் பூவை வைத்திருந்தான். குறுங்கால் சட்டையோ அகலமாகப் புடைத்துநின்றது. அவன் காதில் நகை அணிந்தும், புகையிலைப் பெட்டியில் கண்ணாடியும் வைத்திருந்தான். நடுத்தரக் குடும்பத்துப் பெண்கள், மேலங்கி, முன்றானை, லினன் தலையணி, காய்ப் (coif) எனும் குல்லாய் ஆகியவை அணிந்தனர். அதே

சமயத்தில் எலிசபெத் ராணியாரின் அவைப் பாவையர், இரண்டாம் ரிச்சர்டு மன்னர் அரசவைப் பெண்களைப் போன்றே உடையில் ஊதாரித்தனமாக நடந்துகொண்டனர். கொம்பு வைத்த தலையணிகளுக்குப் பதிலாக ஃபிரான்ஸிலிருந்து வந்த குடைப் பாவாடை (farthingale), மணிகள் வைத்துத் தைக்கப் பெற்ற சட்டை, கம்பிகள் செறுகப்பெற்ற கழுத்தணி, விசிறிகள், முகமூடிகள் ஆகியவை பெண்களால் போற்றப்பெற்றன. எனினும் முதலாம் சார்லஸின் அரசவையில் இருந்த தடையும் பியூரிட்டானியரின் செல்வாக்கும் சேர்ந்து மக்களிடையே அடக்கமான மேம்பட்ட சுவை தோன்றியது. எலிசபெத்தின் கால வீடுகளில் இருந்த ஃப்ளீமிங்கியர், ஸ்பானியர் ஆகியோர் தீட்டிய பகட்டான ஓவியங்களுக்குப் பதிலாக வான் டைக்கின் (Van Dyck) மாதிரிகள் வந்தன.

சமுதாயத்தின் உயர்நிலையில் செல்வம் பெருகி, போலிப் பசப்பு மிகுந்திருந்தது. உயர் குடியினர் உணவிற்கும் பணியாளருக்கும் ஏராளமாகச் செலவிட்டனர். தங்களுடைய நோய்களைப் போக்க பாத் (Bath), பக்ஸ்டன் போன்ற இடங்களுக்குச் சென்றனர். அவர்களுக்காகக் கடல் கடந்த நாடுகளிலிருந்து புகையிலை, உருளைக் கிழங்கு போன்ற போகப் பொருள்கள் கொண்டுவரப்பெற்றன. டட்லீக்கள் (Dudleys), ஹோவர்டுகள் (Howards) போன்ற பெருங்குடித் தலைவர்கள் பலவிதத்திலும் ஊழல் மலிந்தவர்களாக இருந்தனர். அவர்களுடைய இலக்கியத்திலிருந்து, குறிப்பாக டான் (Donne) என்பவர் எழுதிய நையாண்டிகளிலிருந்து சுயநலப் பேராசை, சமயப் பற்று அழிதல், வெறுப்பு மனப்பான்மை, தகாதோர் கொண்டிருக்கும் ஏளனம் ஆகியவை தோன்றின. முரண்பாடுகளின் எதிர்வினைப் பயனாகவும், தளர்ச்சியினாலும் பலரிடம் பிராட்டஸ்டென்ட் சமயப்பற்று நீங்கியது. அதிக வட்டி வாங்குவோரும், நில அடைப்பு செய்வோரும், பேராசைக்காரரும் ஒழுங்கான அரசின் குறிக்கோளை அழித்தனர்.

புதிதாகப் பணம் கொடுத்துப் பிரபுக்கள் ஆனவரும், இழிந்த நிலையிலிருந்து வந்த நைட் (knight) வீரர்களும் அரசின் தரத்தைக் குறைத்தனர். இங்ஙனம் ஃபாஸ்டஸூம் (Faustus), இயாகோவும் (Iago), ஹாம்லெட்டும் (Hamlet), புரூட்டஸூம் (Brutus) மறுமலர்ச்சியின் ஆர்வமுனைப்புகளுக்கும் முன்னிலை மீட்சி பெற்ற இங்கிலாந்தின் நடுத்தரத்திற்கும் இடையே நாடக அரங்கினை இருளடித்தனர். போர்க்களத்தில் வீணே அமைதியைத் தேடிய ஃபாக்லண்டைப் போன்ற பெருங்குடியினர் இரண்டு உலகங்களுக்கிடையே ஊசலாடினர்.

தம்முடைய காலத்தில், ஆங்கிலேயரில் மூன்றில் இரண்டு பங்கினர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் என்று தாமஸ் மோர் கணக்கிட்டார். பிரிட்டிஷ் நாகரிகம், ஃபிரான்ஸ், இத்தாலி, ரைன்லாந்து ஆகியவற்றிற்குப் பின்னடைந்தே இருந்தது. அந்நிய நாடுகளிலிருந்து வந்த மக்கள் இங்கிலாந்தில் குடியிறங்கவில்லை யென்றால், ஆங்கில வாணிபம், கட்டடக்கலை, இலக்கியம் ஆகியவை அத்துணை வேகமாக வளர்ந்திருக்க முடியாது. பிராட்டஸ்டென்டுகள் தங்கள் அறைகளில் ஓவியத் திரைகளைத் தொங்கவிட்டிருந்த போதிலும், அவர்களில் பணிவு மிகுந்தோர், கிறித்துவ உலகில் வாழ்ந்த உயர்ந்தோரையும் லாசரஸின் (Lazarus) கதைகளையும் ஓவியங்களாகத் தீட்டியபோதிலும், பிராட்டஸ்டென்ட் சமயவெறி, காரை ஓவியங்களின்மீது (frescoes) வெள்ளையடிக்கச்செய்தது. எனவே, ஆங்கில ஓவியக்கலை 17 ஆம் நூற்றாண்டுவரை புத்துயிர் பெற்று எழவில்லை. எனினும், நாட்டுப் பண்பாடு வலிமைமிக்கதாக இருந்தது.

விக்ளிப்பின் (Wyclif) காலத்திலிருந்து கல்வி கற்பது ஒரு மன வெழுச்சியாக மாறியது. டியூடர் மன்னர்களின் ஆட்சியில் பல பள்ளிகள் நிறுவப்பெற்றன. பல பள்ளிகளுக்கு மீண்டும் மானியங்கள் வழங்கப்பட்டன. இவைகள் அரசாங்கத்தின் முயற்சியைவிடப் பொதுமக்களின் ஆர்வம் காரணமாகத் தோன்றிய நிலை. இக் காலத்தில் ஓரளவு செல்வம் படைத்தோருக்கென்றே ஹாரோ (Harrow), அப்பிங்காம் (Uppingham), செயின்ட் பால் (St. Paul), மர்சென்ட் டெய்லர் (Merchant Taylor), ரெப்டன் (Repton), கிறைஸ்ட் ஹாஸ்பிடல் (Christ's Hospital), ஸ்ரூஷ்பரி (Shrews-bury), வெஸ்ட்மினிஸ்டர் ஆகிய பள்ளிகள் தோன்றின. இவைகள் மட்டுமன்றிச் சிறு கிராமங்களிலும் இருந்த எண்ணிறந்த பள்ளிகள், பல்கலைக் கழகங்களுக்கு மாணவரை அனுப்புவதற்கான போதிய சாதனங்களைப் பெற்றிருந்தன. இத்தகைய மறுமலர்ச்சிக்கு மேலும் சான்றாக ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் ஆகிய புதிய கல்லூரிகளைக் குறிப்பிடலாம். இவற்றோடு லண்டன் மாநகரில் கிரஷாம் (Gresham) சொற்பொழிவுகளும், புதிய பாடத்துறைகள் அமைக்கப் பெற்றதும், போட்லியன் (Bodleian) நூல் நிலையமும் சான்று பகர்கின்றன. உள்நாட்டுப் போரின் தொடக்கத்தோடு முடிந்த நூற்றாண்டைப்போன்று பிரிட்டிஷ் வரலாற்றில் வேறு எந்தச் சமமான காலமும் நிச்சயமாக, அதிகக் கல்வியையோ அறிவாளிகளையோ அளிக்கவில்லை. இந்த நூற்றாண்டு மோர் (More), டைண்டேல் (Tyndale) ஆகியோருடன் தொடங்கியது. நிலநூல் வல்லுநரான ஜான் டீ (John Dee), பழம்பொருள் ஆய்வாளரான ஸ்டோ (Stow), காம்டன் (Camden), பொது வாழ்வில் இருந்த சிட்னி

(Sidney) போன்ற அறிவாளிகள், புதிய கண்டுபிடிப்புகளைக் கொண்டு குறிப்புகள் வரைந்த ஹாக்லூய்ட் (Hakluyt) போன்றவர்களைத் தோற்றுவித்தது. மேலும் பேகன் (Bacon), ஹாப்ஸ் போன்ற தத்துவ அறிஞரும், கோக், செல்டன், பிரைன் (Prynne) போன்ற வழக்கறிஞர் ஆகியோரும் இக் காலத்தில் வாழ்ந்திருந்தனர். ஹூக்கரிலிருந்து (Hooker) உஷர் (Ussher), ஜெரிமி டெய்லர் (Jeremy Taylor) போன்றோர்வரை இருந்த போற்றுதற்குரிய சமயத்துறை அறிஞரும், கலைப்பொருள் சேமிப்பாளர்களான தாமஸ் ப்ரௌன் (Thomas Browne), பர்டன் (Burton) ஆகியோரும் வாழ்ந்தனர். எழுத்தாளர்களான மில்ட்டன் (Milton), கௌலி (Cowley), ட்ரைடன் (Dryden) போன்றோருடன் இந்த நூற்றாண்டு முடிவுற்றது.

இங்கிலாந்தில் சீர்திருத்த இயக்கம் தோன்றியகாலை, 1551 ஆம் ஆண்டிற்கும் 1573ஆம் ஆண்டிற்குமிடையில் அரும்பெரும் அறிஞர்களான ஸ்பென்சர், ராலே, சிட்னி, ஷேக்ஸ்பியர், மார்லோ, பேகன், பென் ஜான்சன் (Ben Jonson), டான் (Donne) ஆகியோர் பிறந்தனர். அவர்கள் தோன்றுதற்குமுன் ஆங்கில மறுமலர்ச்சியில் கற்பனைச் சக்தி மிகுதியாக வளரவில்லை என்றாலும் ஏராளமான இலக்கியங்கள் எழுந்தன. மிகச் சிறந்த உரைநடை இலக்கியங்களிற் சில, சமயம் சார்ந்தவையாக இருந்தன. மோரிலிருந்து லாட்மர் வரையிலும் உள்ள அறிஞர் சமய இலக்கியங்களை உருவாக்கினர். அவர்களோடு ‘மார்ட்டையர்ஸ்’ (Martyrs) எனும் நூலை இயற்றிய ஃபாக்ஸைச் (Foxe) சேர்க்கலாம். நூறு ஆண்டுகளாக ஆங்கிலப் பியூரிட்டானியர் பாடிவந்த பாசுரங்களை, ஸ்ட்ரன்ஹோல்டும் (Strenhold) ஹாப்கின்ஸூம் (Hopkins) சீர் சார்ந்த செய்யுட்களாக ஆக்கித் தந்தனர். வரலாற்றிலும் பழம்பொருள்களிலும் பேரார்வம் இருந்ததால் பெர்னர் (Berner), ஃப்ராய்ஸார்ட் (Froissart) என்பவரின் நூலை மொழிபெயர்த்தார். லீலண்டு (Leland) எழுதிய ‘இடினிரரி’யும் (Itinerary) ஹால் (Hall), ஹாலின்ஷெட் (Holinshed) ஆகியோரின் காலவழிச் செய்திக் கோவைகளும் (chronicles), ‘தி மிர்ரர் ஃபார் மாஜிஸ்ட்ரேட்ஸ்’ (Mirror for Magistrates) எனும் நூலும், மக்கள் வரலாற்றிலும் பழம்பொருள்களிலும் கொண்டிருந்த அக்கறைக்குச் சான்றாக அமைந்தன. மக்களின் மனத்தைக் கவர்ந்த பொருள்களைப்பற்றி எல்லாம் எழுதிய இத்தகைய சிறந்த நூல்கள் வெளியிடப்பெற்றன. தாமஸ் வில்சன் இயற்றிய ‘டிஸ்கோர்ஸ் ஆன் யுஸூரி’ (Discourse on Usury), ஜேன் கிரேவின் (Jane Grey) ஆசிரியரான அஸ்சாம் (Ascham) எழுதிய ‘ஸ்கூல்மாஸ்டர்’ (Schoolmaster), ஹாக்கின்ஸின் பிரயாணக் குறிப்புகள் ஆகியவற்றோடு, நில இயல்,

கணித இயல் ஆகியவற்றிலும் முக்கிய நூல்கள் வெளிவந்தன. 1580ஆம் ஆண்டிற்குப் பின் இதே துறைகளில் இறவாத்தன்மை பெற்ற இலக்கியங்கள் தோன்றின. அவைகளில் ஹூக்கர் (Hooker) எழுதிய 'எக்ளிஷியாஸ்டிகல் பாலிடி' (Ecclesiastical Polity) எனும் சமய இலக்கியமும், காம்டனின் 'பிரிட்டானியா' வும் (Brittannia), ஸ்டோவின் (Stow) லண்டன் நகரக் கணக்கெடுப்புக் குறிப்புகளும், பேகனின் கட்டுரைகளும் குறிப்பிடத் தக்கன.

ஒருவிதத்தில் ஷேக்ஸ்பியர் கால இங்கிலாந்தின் இலக்கிய வலிமைக்கு அந் நாட்டில் மறுமலர்ச்சியும் சமயச் சீர்திருத்த இயக்கமும் கொண்ட உள்ளார்ந்த இயல்பு என்று கூறலாம். இவ்விரு மாபெரும் இயக்கங்களும் இடைக்கால இலக்கியங்களுக்கும் நவீன இலக்கியங்களுக்கும் இடையே பிளவினை ஏற்படுத்தி, வேற்றுமைகளை வளர்க்கவில்லை. மோர் (More), ரோல்லின் (Rolle) வழியிலும், ஆரம்ப காலச் சமய இலக்கியங்களின் மரபிலும் வந்தவர். பதினேழாம் நூற்றாண்டிலும் பரவலாகப் பயன்படுத்தப்பெற்ற பாட நூல்களில் கத்தோலிக்கச் சமயத்தைச் சார்ந்த மனிதத் தன்மைக் கோட்பாட்டினரான ஏராஸ்மஸ் (Erasmus), விவஸ் (Vives) ஆகியோருடைய நூல்களும், நார்மானியக் கால்வினிஸ்டான கார்டீரியஸ் என்பவரின் 'உரையாடல்களும்', காலெட்டின் (Colet) நண்பரான மான்டானஸ் (Mantuanus) என்பவரின் செய்யுட்களும் இருந்தன. பல்கலைக் கழகங்கள் பழைய வாக்குவாதங்களையும் அரிஸ்டாட்டிலின் (Aristotle) நூல்களையும் போற்றிவந்தன. பல பள்ளிகளில், மாணவர்கள் பள்ளி நேரங்களில் இலத்தீன் மொழியிலேயே உரையாட வேண்டுமென்று வற்புறுத்தின. அதேசமயத்தில் இரு செல்வாக்கிழைகள் இணைந்து, கல்வி அறிவை வளர்ப்பதற்காக வன்றி, ஒழுக்க நெறியையும் வளர்க்குமாறு செய்தன. இத்தகைய உயர்ந்த ஒழுக்கக் குறிக்கோளுடன் சிறந்த இத்தாலியர்களால் போதிக்கப்பெற்றன. அவர்களில் ஒருவரான காஸ்டிக்லியோன் (Castiglione) என்பவரின் நூலைத் தாமஸ் எலியட் (Thomas Elyot), 1531ஆம் ஆண்டில் மொழிபெயர்த்தார். வில் வித்தைப் பயிற்சியும், கிரேக்க மொழிப் பயிற்சியும் ஒருங்கே அளிக்கப் படுதல் வேண்டுமென்று வற்புறுத்திய ரோஜர் அஸ்சாமின் கொள்கையும் இதுவே. ஃபிலிப் சிட்னி (Philip Sidney) என்பார் இதனையே போர்க்களத்திலும் இலக்கியத்திலும் ஒருங்கே கண்டார். இதற்கிடையில் கத்தோலிக்கரைப் போலவே, ஜெனிவா சமயப் பிரிவினரும், பியூரிட்டானியரும் கல்வியைச் சமய அடிப்படையில் அமைத்தனர். இங்ஙனம் பொது வழிபாடு செய்தல், சமயச்

சொற்பொழிவுகளைக் கேட்டல், அவைகளுக்குக் குறிப்புரை தருதல், இடையருத ஒழுக்க சீலங்களைப் பின்பற்றுதல் ஆகியவை ஆங்கில இளைஞனின் தினக் கடன்களாக இருந்தன.

இப் பண்டைய இலக்கியப் பின்னணியிலும், சமயப் பழக்க வழக்கங்களின் நடுவிலும் மூன்றுவித நாட்டு இலக்கியப் பிரிவுகள் வளம்பெற்றிருந்தன. நாட்டில் கதைப் பாடல்கள் ஏராளமாக இருந்தன. அவைகள் கருத்துகளாலும், ஊர் சுற்றி விற்கும் வணிகர்களாலும் விலை கூவி விற்கப்பட்டன. அல்லது விடுதி களின் சுவர்களில் எழுதித் தொங்கவிடப்பெற்றிருந்தன. அவைகளிற் சில, ராபின் ஹூடிற்கும் (Robin Hood) வார்விக்கின் கை போன்ருேருக்கும் (Guy of Warwick) பொருந்துமாறு ஆங்கிலப்படுத்தப்பெற்ற 'சான்சன்ஸ் டி கெஸ்டி' (Chansons De Geste) யின் மிஞ்சியுள்ள எச்சமாகும். சில, சீவி சேஸ் (Chevy Chace) போன்ற பாணர் பொருளைக் கொண்டிருந்தன. அவைகள் ட்ரேக், எஸ்ஸக்ஸ் போன்ருேரின் புகழ் பாடுதற்காகப் புதுப் பிக்கப்பெற்றன. மற்றவை ஷேக்ஸ்பியர் விரும்பிய 'கிங் காபிடுவா' (King Copetua), 'க்ரீன் ஸ்லீவ்ஸ்' (Green sleeves) போன்ற பாட்டுகளாகும். இசையார்வத்தோடு ஒன்றிணைந்த இசைப் பாக்களும் ஏராளமாக வெளிவந்தன.

ஆரும் ஹென்றியின் காலத்து இசைப்பாடல் ஆக்குவோரில், ஜான் டன்ஸ்டபிள் (John Dunstable) என்பவர் ஐரோப்பா முழுவ திலும் புகழ் பெற்றவர். ப்ளீமியரிடம் செல்வாக்கு மிக்கவர். இத்தகையோரின் பாடல்களும், ஆனந்தச் சிந்துகளும், பண் நயங் களும், பதினைந்தாம் நூற்ருண்டில் பொன்ருப் புகழ் பெற்றவை. இம் மரபினை எட்டாம் ஹென்றியும், அவருடைய கோயில் குரு வாகிய கார்னிஷ் (Cornish) என்பவரும் தொடர்ந்து போற்றி வந்தனர். எலிசபெத் ராணியாரின் ஆட்சியிலும், ஜேம்ஸின் ஆட்சியிலும் தலைக்கோயில்களில் பயின்ற ஆங்கிலத் திருச்சபை இசையானது, டாலிஸ் (Tallis), பைர்ட் (Byrd), புல் (Bull) ஆர் லாண்டோ கிப்பன்ஸ் (Orlando Gibbons) போன்ற இசைவாணர் களினுல் உச்சநிலை எய்தியது. ஆரம்பகால டியூடர் இசை நூல் களில் காணப்பெற்ற பண்கள் 1580 ஆம் ஆண்டிற்குப் பின் காதல் கீதங்களாகவும், பல குரலெடுத்துப் பாடும் பாடல்களாகவும் பெருகின. செல்வந்தரும் கனவான்களும் பாடல் செய்வோரை ஆதரித்தனர். முதலாம் ஜேம்ஸின் யாழ் வல்லவரில் ஒருவர் 'டெம் பெஸ்ட்' (The Tempest) நாடகத்திற்குப் பண் அமைத்தார். இங்கிலாந்து முழுவதிலும் இசையொலி யெழுந்தது. கனவான்கள் கட்டாயமாக யாழோ, பிடிலையொத்த வியால் (viol) இசைக்

கருவியோ மீட்டவேண்டும். எலிசபெத் ராணியார் பியானேவை நிகர்த்த வர்ஜினல் (virginal) இசைக்கருவியை மீட்டினர். ஷேக்ஸ்பியரின் நாடகப் பாத்திரங்கள் இசையை வேண்டினர். சிலேடைப் பொருளோடு மூவர் சேர்ந்து பாடுதற்கமைந்த இசைப் பாடலாக இருப்பினும், லிங்கன்ஷயரைச் சார்ந்த பைக்குழல் இசைக்கருவியாயினும், அவைகளைக் கேட்க மக்கள் ஆவல் கொண்டனர். மில்ட்டன் தம்முடைய நூலாகிய 'கோமஸ்' (Comus)க்கு ஹென்றி லாவெஸ் (Henry Lawes) என்பவரின் இசையைப்பெற்ருர். கிராம்வெல்லின் படையினர் வெடுவெடுப்பான பாடல்களை முணுமுணுத்தனர்.

ஷேக்ஸ்பியர் வாழ்ந்த காலத்தில், வட ஐரோப்பாவில் சுற்றுப் பயணம்செய்த ஆங்கில இசைவாணர், நடிகர் ஆகியோரின் கம்பெனிகள் நாடகக்கலையின் கலப்படத் தோற்றத்திற்குச் சாட்சியாக நின்றன. நாடகக்கலை சமயத் திருவிழாக்களில் தோன்றி, பிறகு கில்டு சங்கம் அல்லது கிராம மக்களின் விருந்தாக இருந்த ஒழுக்கக் கதை, நாடகங்கள், மர்மக் கதை நாடகங்களில் இருந்து வளர்ந்தது. அதே போன்று வழக்கறிஞர் சங்கங்களிலும், மன்னரும் பெருங்குடி மக்களும் மகிழ்வதற்காக வேண்டி இருந்த சிறு நாடகங்கள், முகமூடியாட்டங்கள் ஆகியவற்றினின்றும் வந்தது. கிறிஸ்துமஸ் பண்டிகையின்போது ஊர் ஊராகச் சுற்றும் தாழ்ந்த முகமூடியணிந்த நடிகரிடமிருந்தும், கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் நடிக்கப் பெற்ற திருமுறைக் காட்சிகள், பண்டைய இலக்கியங்கள் ஆகியவற்றிலிருந்தும் எழுந்தது. இவ்வாறு பல பழைய மாறுபட்ட செல்வாக்குகள் ஒன்ருக இணைந்ததால், மோரின் கத்தோலிக்க நண்பராகிய ஹேவுட்டிற்கும் (Heywood), உடாலுக்கும் (Udall) இடையே வேற்றுமை அதிகமாகக் காணப்பெறவில்லை. ஈட்டன் (Eton), வின்செஸ்டர் (Winchester) ஆகிய பள்ளிகளின் தலைமை ஆசிரியராக இருந்த உடால், எழுதிய 'ரால்ஃப் ராய்ஸ்டர் டாய்ஸ்டர்' (Ralph Roister Doister) எனும் நாடகம் ஆங்கில இன்பியல் நாடகங்களின் தோற்றுவாயாக அமைந்தது.

ஆனுல், ஆங்கில இலக்கியம் உச்சநிலையெய்துதற்கு முன்னம், தேசிய மொழியைப் பிறமொழிகளுக்கீடானதாகச் செய்ய வேண்டுமென்னும் மனமார்ந்த ஒப்புதலும், ஆங்கில மொழியையும் அது தரும் செய்தியையும், நெகிழும் தன்மை கொண்டதாகவும், நன்கு அமைந்ததாகவும், ஆழமாகவும் செய்யவேண்டிப் பிற மொழிகளிலிருந்து கடன் வாங்கவேண்டுமென்பதும் உறுதியாயின. தாந்தே (Dante) இத்தாலிய மொழிக்காகப் பரிந்து பேசிய நாள்முதல் மறுமலர்ச்சிக் கால மொழிகள் அத்துணையிலும் காக்ஸ்டனும் (Caxton),

டைண்டேலும் (Tyndale), தங்களது ஆங்கில மொழியில் கொண்டிருந்த செருக்குக் காணப்பெற்றது. இவ்விதத் தாய்மொழிப்பற்று டாட்டல் (Tottel) வெளியிட்ட கதம்ப இலக்கியத்திலும், ஆங்கில மொழியின் புகழ்பாடும் வியாட் (Wyatt) போன்ற ஆரம்பகால நவீன எழுத்தாளர்களின் இலக்கியங்களிலும் வெளிப்பட்டது. இதற்கிடையில் எலிசபெத் ராணியார் ஆட்சிக்கு வருவதற்கு முன்பே இத்தாலியப் பேரிலக்கியங்கள் வெளிவந்தன. ராபிலேய்ஸ் (Rabelais) அச்சில் இருந்தது. ரான்சார்டின் (Ronsard) புதுக் கவிதையும் பிளியேடும் (Pleiade) வெளியிடப்பெற்றன. வியாட், சர்ரே ஸ்பென்சர், ஷேக்ஸ்பியர் ஆகியோரும், சானெட் (sonnet) எனும் பரிபாடல்வகைப் பாக்கள் இயற்றிய எண்ணிறந்த புலவரும், இவைகளில் இருந்து அமைப்பையும் கருத்தையும் கொண்டனர். பண்டைக்காலச் சிறந்த இலக்கியங்களனைத்தும் அவர்கள் காலத்தில் மொழிபெயர்க்கப்பெற்றன. இலத்தீன், கிரேக்கம், தற்கால ஐரோப்பிய மொழிகள் ஆகியவற்றிலிருந்த இலக்கியங்களை ஆங்கில அறிஞர் மொழிபெயர்த்தனர். நார்த்தின் (North) 'ப்ளூடார்க்' (Plutarch), சாப்மேனின் (Chapman) 'ஹோமர்' (Homer), ஃப்ளாரியோவின் 'மான்டெய்க்னி' (Florio's Montaigne) போன்ற மொழிபெயர்ப்பு நூல்கள் ஒப்பற்று விளங்கின. இதனால் அந்நிய நாட்டுச் செல்வாக்கினை எளிதாக அறிந்து கொள்ள முடிகின்றது. இத்தாலிய இலக்கியங்கள் மார்லோவை மயக்கின. பிற்காலத்தில் பல கெவலியரைச் சமய நம்பிக்கையற்றவராகச் செய்தன. பிளியேடின் இலக்கியம், எலிசபெத்தின் அரசவையில் செல்வாக்குப் பெற்றிருந்தது. ஸ்பானிய மறை மெய்மைச் சமயம், லாடின் (Laud) திருச்சபையினரின்மீது செல்வாக்குச் செலுத்தியது.

இவ்விதச் சக்திகளும், குறிப்பாக இலத்தீன் மொழியிலிருந்து கடன் பெற்றதும் தேசிய மொழியாகிய ஆங்கிலத்தை மாற்றின. அம் மொழியில் சொற்கள் பெருகின. அமைப்பு ஆழமானது. புலமைச் செருக்கைத் தோற்றுவிக்கும் அளவிற்கு அகன்றது. ஆனல், ஆற்றல் மிக்க ஆங்கில அறிஞர் கையில் அது மிகுந்த சக்தி வாய்ந்த ஒப்பற்ற கருவியாக விளங்கியது. தலைசிறந்த ஆங்கில ஆசிரியர்களாகிய அஸ்சமும், மல்காஸ்டரும் (Mulcaster), கிரேக்கமும் இலத்தீனும் ஒரு காலத்தில் அடைந்த உயர்நிலையை ஆங்கிலம் எட்டியது என்று இறுமாந்தனர். இலக்கியத்தின் பல துறைகளிலும் திறனாய்வு நிகழ்ந்தது. லிலி (Lyly) வெளியிட்ட 'யூபுவஸ்' (Euphues) (*1578*), சிட்னி எழுதிய 'டிபன்ஸ் ஆஃப் போசி' (Defence of Poesy), இலக்கியத் துறையில் ஆதிக்கம் கொண்டோருக்கும் கல்வியறிவில்லா நாடகாசிரியருக்கும் எதிராக

நாஷ் (Nash), க்ரீன் (Greene) போன்ற புலவர்கள் எழுதிய துண்டுப் பிரசுரங்களும், கலைக்கும் ஒழுக்க நெறிகளுக்கும் உள்ள எதிர் வழக்கைப் பிரதிபலிப்பனவாக இருக்கின்றன.

வளமும் வெற்றியும் நிறைந்த இக்காலப் பகுதியில் இலக்கியத்தின் பல துறைகளிலும் முன்னேற்றம் காணப்பெற்றது. எண்ணிறந்தவர் இயற்றிய நாடகங்களும் இசைப் பாடல்களும்; பேகன், ஏர்லி (Earle) ஆகியோரின் கட்டுரையும், 'பண்போவியமும்' (character); நையாண்டி இலக்கியமும், திறனாய்வும்; சிட்னியின் அழகிய 'ஆர்கேடியா' (Arcadia) எனும் நாவலும்; க்ரீன், டெக்கர் ஆகியோரின் இன்பியல் நாடகங்களும் பல துறைகளிலும் பெருக்கெடுத்து வழிந்த இலக்கிய வளத்திற்குச் சான்றுகளாகும். இலக்கியம் ஒரு தேசியச் சக்தியாக மாறியது. எழுத்தாளர்களை ஆதரிப்பதில் செல்வந்தர் ஒருவரோடு ஒருவர் போட்டியிட்டனர். உதாரணமாக, ராணியாரின் உறவினரான ஹன்ஸ்டன் (Hunsdon) என்பவர் நடத்திய நாடகக் கம்பெனியில் ஷேக்ஸ்பியர் பணியாற்றினார். புலவர்களாகிய லாட்ஜும் (Lodge) சாப்மேனும் (Chapman) எஸ்ஸெக்ஸ் பிரபுவினால் பெரிதும் ஆதரிக்கப்பெற்றனர். டாம்பர்லெய்ன் (Tamburlaine), ஃபாஸ்டஸ் (Faustus) போன்ற நாடகப் பாத்திரங்களைத் 'தோற்றுவித்த' அல்லீன் (Alleyn) எனும் நடிகர் போற்றப் பெற்ற பொதுமகனாராக இறந்தார். அவர் விட்டுச் சென்ற செல்வத்தைக்கொண்டு டல்விச் (Dulwich) கல்லூரியை நிறுவினர். நாடகம் எத்துணை வலிமை பெற்றிருந்தது என்பது, பியூரிட்டானியர் அதனைத் தாக்கிய விதத்திலிருந்து தெரிகின்றது. பேனுவின் பெருவலி, ஜான்சனுக்கு அளிக்கப்பெற்ற மரியாதையும், பொதுவாழ்வில் மில்ட்டன் வகித்திருந்த உயர்ந்த இடமும் தெளிவாக்குகின்றன.

நாடகம் சமுதாயத்தின் ஊக அடிப்படைகளைக்கொண்டிருந்ததோடு, அவற்றிற்கு வேண்டியவற்றை அளித்ததால் பியூரிட்டானியர் எதிர்ப்பு இருந்தும் வெற்றிபெற்றது. அஃது அரசர் ஆதரவை நம்பி இருந்தது. அரசவை வைபவங்களும், செல்வந்தரும், லண்டன் மாநகர ரசிகர்களும் இன்றி அதனுல் வாழ முடியாது. பொதுமக்களுக்கான தல மர்ம நாடகங்கள், திருந்தாத் செய்தி நாடகங்கள் ஆகியவையும், அறிஞருக்கான பல்கலைக் கழக நாடகங்களும் ஒன்றை ஒன்று மீறியும், ஒன்றிற்கொன்று உதவியாகவும் வளர்ந்தன. லண்டன் நகரில் நாடகங்கள் ஒளிவீசித் திகழ்ந்தன. ஷேக்ஸ்பியரைப் போலவே அவரது முன்னோர்களான க்ரீனும், கிட் (Kyd) என்பவரும் வாழ்விற்குப் பொருள்

தேடுவதற்காக நாடகங்களை வரைந்தனர். அதனால், சிட்னியும் பண்டைய தூய்மைக் கோட்பாட்டினரும் விதித்த மரபு ஒழுங்குகளை மீறினர். அவர்கள், ஆப்பிள் பழங்களையும் கொட்டைகளையும் கொரித்த, உண்மையான நாடகம் பார்க்கும் கூட்டங்களுக்காக, உண்மை வாழ்க்கையை வைத்து நாடகங்களை இயற்றினர். ரசிகர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் கொலைகள் நிறைந்த துன்பியல் நாடகங்களையும், இழிந்த இன்பியல் நாடகங்களையும், மறை குறிப்புகள் கொண்ட நாடகங்களையும் இயற்றி அளித்தனர். எனினும் அவர்கள் பண்டைய அறுசீர்ப் பா வகையையே தமது கருவியாகக்கொண்டனர். நாடக நிகழ்ச்சிகளுக்காகப் பல இலக்கியங்களைப் புரட்டினர். உரையாடலை உரைநடையில் அமைத்தனர். குறிப்பாக, லிலி (Lyly) அவர்கள் தொழிலின் திறவுகோல் போன்றிருந்த, வரம்பின்றிப் பாத்திரங்களின் விளக்கத்தையும் தந்தனர். மார்லோ, முப்பது வயது நிரம்புவதற்குள் 1593ஆம் ஆண்டில் குத்திக் கொலை செய்யப்பட்டார். ஆனால், அதற்குள் அவர் விட்டுச் சென்ற நாடகங்கள் மறுமலர்ச்சியின் சத்தியைக் காட்டுவதாக இருக்கின்றன. அவரது கற்பனையில் உருவான டாம்பர்லெய்ன், தாம் கைது செய்த அரசர்கள் தமது தேரை இழுக்க, வெற்றி கொண்ட பெர்ஸிபாலிஸ் நகர் வழியே சென்றார். அவர் உருவாக்கிய நாடகப் பாத்திரமாகிய ஃபாஸ்டஸுக்கும் 'சமயம், குழந்தையின் விளையாட்டுப் பொம்மை' போன்றது. ஃபாஸ்டஸ், பேரறிவிற்காகவும், ட்ராய் நகரத்தழகி ஹெலனின் முத்தம் ஒன்றிற்காகவும், தமது ஆன்மாவை விற்கத் துணிந்தவர். அதைப் போலவே கடவுளைப்பற்றிய சிந்தனையும், மனிதனிடம் இரக்கமும் இன்றி உயர்தனி அதிகாரம் வேண்டினர். எனினும் எல்லையில்லாத பேரறிவைப் பெற முனைந்த இவர்கள் பண்டைய வானிலிருந்து தாரைகளைப் பிய்த்தெரிந்தனர். மனித அறிவிற்கும் உடல் இன்பத்திற்கும் தடையாக இருந்தவற்றையெல்லாம் அழித்தனர்.

எண்ணிறந்த சாதாரண பெயர்கள் இலக்கியத்தின் பரப்பையும் ஆன்ம மூலங்களையும் அளவிடுவதாக இருந்தன. க்ரீன், மார்ஸ்டன், வெப்ஸ்டர் (Webster), மாஸ்ஸிங்கர் (Massinger), ஃபோர்டு (Ford), பீமான்ட் (Beaumont), ஃபிளட்சர், மிடில்டன், ஷர்லி (Shirley) போன்ற ஆச்சரியப்படுமளவிற்கு அணிவகுத்தாற் போன்றிருந்த பல நாடக ஆசிரியர்கள் இக் காலத்தில் வாழ்ந்தனர். பண்டைக்காலப் போக்குடையவராயும், குற்றங்காண்பவராயும், பகுத்தாய்பவராயும் இருந்த பென் ஜான்சன், தாமே தனி வகுப்பாகத் திகழ்ந்தார். பலபொருள்பற்றியும், பலவகைச் சீர்களிலும் பல்லாயிரக்கணக்கான பாக்களும் இசைப்பாடல்களும் எழுந்தன.

பெருமைசால் புலவர்களும், வியக்கத் தகுந்த திறமைபெற்ற காம்பியன் போன்ருேரும், பொதுப் பணியில் ஈடுபட்டிருந்த வோட்டன் (Wotton) போன்ருேரும், ஹென்றி கிங் (Henry King) போன்ற பிஷப்புகளும், விதர் (Wither) போன்ற பியூரிட்டானியப் பத்திரிகையாளரும் இவைகளை எழுதினர். பெட்ரார்க் (Petrarch), ஃபிரெஞ்சுக்காரர் ஆகியோரின் மாதிரியின் இடையில், மற்றபடி பெயர் தெரியாதிருந்த அறிஞரும் பங்கு கொண்டனர். பல கலை வல்லவரும் வாழ்ந்துவந்தனர். அவர்களில் சிறந்தவர் ட்ரேடன் (Drayton), டேனியல்கள், ஃபிளட்சர்கள் (Fletchers) போன்ருேராவர். ஜார்ஜ் ஹெர்பர்ட் (George Herbert), கிராஸ்ஷா (Crashaw), வாகன் (Vaughan) ஆகிய தெய்வத்தன்மையுள்ள புலவரும் வாழ்ந்தனர். பண்டைக்கால இலக்கியத்தைப்போன்றும் கெவலியர் கூட்டத்தில் காரூ (Carew), சக்லிங் (Suckling), லவ்லேஸ் (Lovelace), ஹெர்ரிக் (Herrick) போன்ற அனைவரும் முதலாம் சார்லஸின் அரசவையை அழகுபடுத்தினர் அல்லது அவருக்காகத் துன்புற்றனர். செய்யுட்களைப் போதனைக்குரியதாக்கியவரும், சொற்களைச் சிதைத்தவரும், செருக்கினை வடித்துக்கொடுத்தோரும், புலங்கடந்த நுண் பொருள் ஆராய்ச்சி நூலாகச் செய்தோரும் பல பிரிவினராக வாழ்ந்தனர். இத்தகையோரையெல்லாம் அறிந்துகொள்ளுதல் இயலாது எனினும் நான்கு பெயர்கள் பிரதிநிதிகள் போன்று விளங்குகின்றன.

எட்மண்ட் ஸ்பென்ஸர் (Edmund Spenser) என்பார் மேதையல்லவாயினும் எலிசபெத் ராணியாரின் காலத்திற்குப் பிரதிநிதியாக இருந்தவர். அவர் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்ருர். லண்டன் நகர எழுத்தாளர் குழுக்களிடமிருந்து அறிவையும் பெற்ருர். ஃபிரெஞ்சுக்காரரையும் டாஸோவையும் (Tasso) தமக்கு மாதிரியாகக் கொண்டிருந்தார். புகழார்வம் மிகுந்து, வேண்டுமென்றே வர்கிலின் (Vergil) நடையைப் பின்பற்றினுர். ராணியாரைக் க்ளோரியானு என்றும், பெல்ஃபோபி (Belphoebe) என்றும் அழைத்து அவரைக் கடவுளாகவே உருவகித்தார். ல, ர போன்ற ஒலியெழுத்து எதுகைச் சீர் கைவரப்பெற்று; சானெட், நையாண்டி, இரங்கற்பா (elegy), வீரகாதை ஆகிய அமைப்புகளையெல்லாம் நீக்கி, 'ஃபேரி குயின்' (Faerie Queene) எனும் ஒப்புயர்வற்ற நூலை இயற்றினுர். அது ராணியார் காலத்து இங்கிலாந்தை உண்மையாகப் பிரதிபலிப்பதாக இருந்தது. பிளேடோ காட்டிய ஒழுக்கநெறிகள், ஆர்த்தராலும் (Arthur) பிரிட்டிஷ் நைட் வீரராலும் மாதிரியாக அமைக்கப்பெற்றன. இடைக்காலப் புலவர்கள் பேசிய 'அன்பாதரவான காதல்' எலிசபெத் ராணியாரின் அரசவைக்கு மாறியது. கத்தோலிக்கக் கிறித்துவச் சமயம், பிளேட்டோ

வின் உயர்நோக்குடன் கலந்து பிராட்டஸ்டென்ட் சமயத்தாரிடம் சமாதானம் செய்துகொண்டது. இவற்றையெல்லாம் ஸ்பென்ஸர் தம்முடைய காலத்தில் இருந்த பல்வண்ணக் காட்சிபோன்ற அமைப்பிலிருந்து உருவாக்கினர். இக் காட்சியில் எலிசபெத் ராணியார் வகையைச்சேர்ந்த ப்ரிடோமார்ட் (Britomart) கற்பரசி கலந்துகொண்ட போரும், டுயஸ்ஸா (Duessa) அல்லது ஸ்காட்டிய மேரி, ஆர்ச்சிமாகோ (Archimago) என்று அவரால் குறிப்பிடப் பெற்ற போப்பாண்டவர் ஆகியோரின் குற்றங்களும் விளக்குவதாக இருந்தன. அடுத்த 50 ஆண்டுகளுக்கு, அவருடைய செல்வாக்கு மிகுந்திருந்தது. ஸ்பென்ஸரைப் பாமர மக்கள் மிகுதியாக அறிந்திருக்கவில்லை யென்றாலும், அவரை ஜான்சனைத் தவிர மற்றெல்லாப் புலவர்களும் சிறந்தவராகக் கொண்டாடினர். இவ்வாறு ஸ்பென்ஸர் துதி பாடுவோரில் இறுதியாக வந்தவரில் கடைசி ஆளான மில்ட்டனை, ட்ரைடன் என்பவர் ஸ்பென்ஸரின் இலக்கிய வாரிசு என்று கூறினர்.

ஷேக்ஸ்பியர் 1564ஆம் ஆண்டில் பிறந்தார். 1590ஆம் ஆண்டிற்கு முன்பே தமது வீட்டைவிட்டு லண்டன் மாநகர் ஏகினர். பத்தாண்டுகளில் பெரும் பெயர்பெற்றுப் பெரும் புலவர்களால் ஏற்றுக்கொள்ளப்பெற்று இருந்தபோதிலும், க்ரீன், அவரைத் 'திடீரென்று மேலுக்கு வந்த காகம்' (upstart crow) என்றார். பெரும்பொருள் ஈட்டி, தம்முடைய சொந்தப் பகுதியான ஸ்ட்ராஃபோர்டில் தலையாய சொத்துரிமையாளராக இருந்தார். 1594 ஆம் ஆண்டிலிருந்து சேம்பர்லெய்ன் பிரபுவுடன் (Lord Chamberlain) நட்புகொண்டு, அதை இறுதிவரை காத்தார். அறிந்தவர் அனைவரும் அவரை விரும்பி நேசித்தனர். அவர் தமது மனைவியாரான ஆன் ஹதாவே (Anne Hathaway)யன்றி, வேறொரு பெண்ணைக் காதலித்தது துன்பகரமானது. அவரது நாடகங்கள், நாடக அரங்குகளில் நிறைந்திருந்தன. ஃபால்ஸ்டாஃப் (Falstaff), ஷால்லோ (Shallow), சீசர் போன்றோர் சிறப்பு மிகுந்த பாத்திரங்கள். அவரது காலத்திலேயே அவர்தம் நாடகங்களை ஐரோப்பியக் கண்டத்தில் நடித்தனர். அவர் தமது ஐம்பத்தி இரண்டாம் வயதில் 1616ஆம் ஆண்டில் மறைந்தார். இத்தகைய செய்திகளுக்குமேல் அவரைப்பற்றி ஒன்றும் அறிந்துகொள்ள முடியவில்லை.

அவரது புகழையும் நூற் பொருளையும் பொறுத்தவரையில் எல்லா உயர்ந்த பொருள்களைப் போலவே அவர் சொல்ல நினைத்ததைக் காட்டிலும், பின்னோர் அவர் சொன்னதாக நினைத்தது அதிகம். எனினும், நிறுவய்வு அவர் ஓர் ஒப்பற்ற மேதை என்பதை

நிலைநாட்டியிருக்கின்றது. அவர் முதல் நிலையில், செயற்கையழகு மிகுந்த 'வீனஸ் அண்டு அடோனிஸ்' (Venus and Adonis) எனும் நாடகத்தையும், இரத்தவெறி கொண்ட 'டைட்டஸ் அண்ட்ரோனிகஸ்' (Titus Andronicus) எனும் நாடகத்தையும் உருவாக்கினர். அதே சமயத்தில் சமநிலையற்ற 'ஆறும் ஹென்றி'யை (Henry VI) உருவாக்கி, பிறருடைய இலக்கியத்தை ஒப்பேற்றி 'தி டேமிங் ஆஃப் தி ஷ்ரூ' (The Taming of the Shrew) என்ற நாடகத்தையும் எழுதினர். இரண்டாவது நிலையில், 1597 ஆம் ஆண்டிற்கும் 1606 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில், நாம் அறிந்த வரையில் சானெட்டுகள் சிலவற்றையும், ஃபால்ஸ்டாஃப் (Falstaff), ரோசலிண்ட் (Rosalind), மால்வோலியோ (Malvolio) போன்ற ஒப்பற்ற நாடகப் பாத்திரங்களை உருவாக்கியதோடு, இக் காலப் பகுதியில் ஏழு ஆண்டுகளுக்குள் 'ஜூலியஸ் சீஸர்' (Julius Caesar), 'ஹாம்லெட்' (Hamlet), 'மெஷர் ஃபார் மெஷர்' (Measure for Measure), 'ஒதெல்லோ' (Othello), 'லியர்' (Lear), 'மாக்பெத்' (Macbeth) போன்ற சிறந்த நாடகங்களை அரங்கேற்றினர். மூன்றாவது இறுதி நிலையில் 'சிம்பலின்' (Cymbeline), 'தி விண்டர்ஸ் டேல்' (The Winters Tale), 'தி டெம்பஸ்ட்' (The Tempest) ஆகியவற்றைப் புனைந்தார். அந்நிலையில் அவர் லண்டன் நகரை விட்டு நீங்கித் தம் ஊரடைந்து, தமது வாழ்க்கையிலடித்த புயலுக்குப்பின் அழியாத அமைதி எய்தினர்.

சான்றுடன்கூடிய உண்மைகள், ஷேக்ஸ்பியரின் கைத்திறனை விளக்குகின்றன. அவர் அநேகமாக நாடகங்கள் எழுதத் தொடங்கும் முன் நடித்திருக்கவேண்டும். ஸ்ட்ராஃபோர்டு பழம் பள்ளி, போதிய கல்வியறிவை யூட்டி இருக்கவேண்டும். அவருக்கு முன்பே உலவிய லியர் கதையைத் தழுவி தம்முடைய 'கிங் லியர்' நாடகத்தை எழுதியதைப்போன்று பழங்கால அறிஞரின் இலக்கியங்களைத் தாராளமாகத் தழுவி எழுதத் தயங்கவில்லை. நார்த் எழுதிய 'ப்ளூடார்க்', ஹாலின்ஷெட் எழுதிய 'கிரானிகில்ஸ்' (Chronicles) போன்ற ஆதார நூல்களில் இருந்து தாராளமாகக் கடன் வாங்கி எழுதினர். பொதுச் சூழ்நிலையில் தமது சமகால அறிஞரை ஒத்திருந்தார். நாட்டுப்புறச் சமுதாயத்தைப் பின்னனியாக அமைப்பதிலும் நாட்டு விளையாட்டுகளை அறிந்திருந்தார். அவர் தமது இறுதி நாட்களில் உரிமைகளைக் காத்துக்கொள்ளப் பயன்படுத்திய சட்ட அறிவும் நிரம்பப் பெற்றிருந்தார். ஆயினும், அவர் ஐரோப்பிய இலத்தீன் மொழிப் புதுமைக் கதைகளைப் பிறரைவிட அதிகமாகப் படித்ததில்லை. ஷால்லோஸிலும் (Shallows) டாக்பெர்ரியிலும் (Dogberries) அதிகத் தேர்ச்சி பெற்று இல்லை. சம காலத்தவரின் ஆழ்ந்த நம்பிக்கைகளைக்கொண்

டிருந்தார். நிலைத்த சமுதாய ஒழுங்கிலும், சமயத்தின் சக்தியி லும், விதி வலியிலும், மனிதனின் சிறுமையிலும் நம்பிக்கை கொண் டிருந்தார்.

ஆயின், அநுபவமோ உண்மை நிகழ்ச்சிகளோ, ஷேக்ஸ்பியர் மட்டும் எக் காலத்தும் ஆங்கிலேயரின் மன நிலையையும் உள்ளத் தின் உயர்வையும் பிரதிபலிக்கும் கண்ணாடியாக அமைந்ததற்கான காரணத்தை விளக்கவில்லை. அவரைப்போன்று வேறெந்த ஆங்கில அறிஞரும் உயர்தனிக் கவிதைகளின் எண்ணிக்கையைக் கூட்டவில்லை. அவர் நாடகப் பாத்திரங்களை உருவாக்கிக் கூர்ந்து ஆய்வதில், ஒப்பாரும் மிக்காருமின்றி இருந்தார். அதே போன்று கற்பனை உருவை உண்மை வாழ்க்கையோடு இணைப்பதில் இணை யற்று விளங்கினார். அவர் உருவாக்கிய பாத்திரங்கள் மக்களின் உள்ளத்தில் ஏற்கெனவே பதிந்திருந்த உருவங்களோடு ஒன்றறக் கலந்தன, 1623ஆம் ஆண்டு, அவருடைய நாடகங்களைத் தொகுத்து வெளியிட்ட முதல் பதிப்பில் அவர்தம் கூட்டாளிகள், 'அவர் இனிதாக இயற்கையைப் பின்பற்றி நடப்பவராதலால், அதனை நயம்பட விளக்கும் ஆற்றலும் பெற்றிருந்தார்' என்று எழுதினர். அவரிடம் காணப்பெற்ற இயற்கையாற்றல் பரந்து பட்டிருந்த காரணத்தினால், மில்ட்டன் அவரை வழிபட்டார். முதலாம் சார்லஸ் சிறையிலிருந்தபோது அவரது நூல்களை ஓயாது படித்தார்.

செயின்ட் பால் பள்ளியின் டீனாக இருந்த ஜான் டான், ஷேக்ஸ் பியருக்கும் மில்ட்டனுக்கும் இடையே வந்த ஒப்பற்ற எழுத்தாளர். அவர் 'சிலவற்றில் உலகிலேயே முதன்மையான புலவர்' என்று ஜான்சன் குறிப்பிடும் அளவிற்குப் பெருமை வாய்ந்தவர். இக் காலத்தின் சக்தியை ஜான்சனின் நையாண்டி நாடகத்திலும், திவோனில் பாதிரியாக இருந்த ஹெர்ரிக்கின் செய்யுட்களிலும் ஓரளவு காணமுடியும். ஆயின், டானுடைய திறமை பரந்ததாக இருந்தது. அவர் காரூவைப் போன்று சிற்றின்பத்தில் ஆழ்ந் திருந்தார். கிராஷாவைப் போன்று ரோமானியத் திருச்சபையில் அமைதி கண்டார். பேகனைப் போன்று பல தத்துவங்களை ஆராய்ந்தார். பேராசை மிகுந்து நாகரிகமற்று இருந்த சமுதாயத்தின் நிலையை விவரிப்பதில் திறமை மிக்கவராக இருந்தார். சமுதாயத்தின் அறிவாற்றல் வளர்ச்சியையும், அதனுடைய ஈனச்செயல்களையும், உணர்ச்சி யார்வத்தையும் ஒருங்கே விளக்குவதில் வல்லவர். அக் காலத்து அறிவியல்கள் இறப்பைப்பற்றிய ஓயாத சிந்தனை, அழகிய நினைவுச் சின்னத்தின் மீது சித்திரம் செதுக்கப்பெற்ற கபாலத்தை வைத்து, மலர்கின்ற

பூ முடிவதைப் பார்த்து நின்ற சமுதாயம், அதனுடைய வியப்பிற் குரிய கற்பனை, செல்வங்களையெல்லாம் பணிவினாலோ தளர்ச்சியினாலோ ஆண்டவர் முன்பு அளித்தல் ஆகிய அனைத்தும் டானின் செய்யுட்களிலும் உரைநடை நூல்களிலும் ஒன்று திரட்டப்பெற்று இருக்கின்றன. இதனால் யாகோபிய இங்கிலாந்தின் அழியாத பொருள்களின் பிரதிநிதியாக டான் விளங்குகிறார். இந் நிலையில் பியூரிட்டானியத் தலைவர்களைக் காட்டிலும் அவர் மேம்பட்டவராகத் தெரிகின்றார்.

டான் இறந்து ஏழாண்டுகளுக்குள் மில்ட்டன் 'கோமஸ்' (Comus)ஐயும் 'லிஸிடாஸை'யும் (Lycidas) வெளியிட்டார். ஆனால், 'பேரடைஸ் லாஸ்ட்'டும் (Paradise Lost) 'சாம்சன் 'அகோனிஸ்ட'ஸும் (Samson Agonistes) வெளிவருவதற்குள் போரும் புரட்சியும் நடந்த முப்பது ஆண்டுகள் குறுக்கிட்டன. மில்ட்டனின் ஆரம்பகாலப் பாடல்கள் பியூரிட்டன் சமயம் எத்துணை தூரம் நயமிக்க, ஆன்மசக்தியாக இருந்தது என்பதையும், எவ்வளவு தூரம் அறிவாற்றலும் கட்டுப்பாடும் கொண்டதாக இருந்தது என்பதையும் காட்டுகின்றன. பிரஸ்பிடீரியப் பாராளுமன்றத்திற்கெதிராக அச்சுச் சுதந்திரம் வேண்டிய அவர் எழுதிய 'அரியோபகிடிகா' வில் (Areopagitica) பகுத்தறிவு மிளிர்கின்றது. 1650ஆம் ஆண்டிற்கு முன்னால் அவர் எழுதிய நூலில், புதிய இங்கிலாந்து பெற்றிருந்த நயங்களும் பரந்த கொள்கையும் புலப்படுகின்றன. வீடுகளில் தோன்றிய அமைதி, பித்தளைப் பட்டயங்களில் பொறிக்கப்பெற்ற ஒழுக்க நெறிகள், திருக்கோயில்களில் இருந்த நினைவுச் சின்னங்கள், சுயமரியாதை ஆகியவை தெற்றென விளங்கின. பொதுநலக் குடியரசில் இலத்தீன் மொழிச் செயலாளராகப் பணிபுரிந்த மில்ட்டன், கண்பார்வையை இழந்து, சமய குருமாரையும் அரசர்களையும் கடுமையாகத் தாக்கி எழுதினார். முன்னிலை மீட்சியின்போது குருடரான மில்ட்டன் நீண்டகாலமாக நினைத்திருந்த 'பேரடைஸ் லாஸ்ட்' (Paradise Lost) 1667ஆம் ஆண்டிலும், அதைத் தொடர்ந்து வந்த 'பேரடைஸ் ரீகெய்ண்ட்' (Paradise Regained) 1671ஆம் ஆண்டிலும் வெளிவந்தன. அதே ஆண்டில் 'சாம்சன் அகோனிஸ்டஸ்' (Samson Agonistes) எனும் நூலையும் இயற்றினார். அந்நூலில், கிராம்வெல்லும் அவருடைய தொண்டர்களும், பேய்களின் வெறுக்கத்தக்க மக்களை முறியடிப்பதற்கு (அரச ஆதரவாளர்) உதவிய மனவலிமை புகழ்ந்து பாடப்பெற்றது. சுதந்திரத்திற்காகக் கொடுங்கோலாட்சியை எதிர்த்துப்போரிடுதல் போற்றப்பட்டது. ஆனால், 'பேரடைஸ் லாஸ்ட்' பியூரிட்டன் திட்டத்தை விளக்குவதோடு அமையாமல், வேறு சில சிறந்த

கொள்கைகளையும் வற்புறுத்தியது. இந்த நூலோடு இந் நூற்றாண்டின் தனித்தன்மை முடிவுற்றது. முறையான புலமை, பிராட்டஸ்டென்ட் சமயம் ஆகியவற்றின் கலவையும் அழிந்தது. அதனோடு எஞ்சியிருந்த இடைக்கால அறிவொளியும் அவிந்தது. அந் நூல் அநுபவங்கள் யாவற்றினின்றும், கல்வியிருந்தும் பேரின்பத்திற்கான ஒரு வழியைக்காண முயன்றது. கடவுளருள் வெளிப்பாட்டினைப் பகுத்தறிவுக் கோட்பாட்டால் விளக்கியது. கடவுள் மனிதனிடம் கையாண்ட வழிமுறைகளை நேர்மையானவையென்று வாதித்தது.

மில்ட்டனின் இலக்கியத்தில் கண்டதைப்போன்று, 1580 ஆம் ஆண்டிற்கும் 1660 ஆம் ஆண்டிற்குமிடையேயுள்ள காலத்தில் ஆங்கிலேயரின் உரைநடை மிகுதியாகச் செய்யுளின் தன்மை பெற்றிருந்தது. அவர்களது ஒழுக்கநோக்கு, கல்வி, பண்டைய இலக்கியப் பயிற்சி, தனிச் சார்பற்றவரின் செல்வாக்கு, இசைப்பற்று, ஒழுங்குணர்வு ஆகியவற்றினால் அவர்களது பேச்சுமொழியும் எழுத்து மொழியும் மறக்க முடியாதவையாயின. சிட்னி, ஹூக்கர் ஆகியோரின் நூல்களில் உரைநடை அழகாக விளங்கியது. பர்ட்டன் (Burton) எழுதிய 'அனடமி ஆ∴ப் மெலன்கலி' (Anatomy of Melancholy), ப்ரௌனி எழுதிய 'ரிலிஜியோ மெடிஸி' (Religio Medici), டான் எழுதிய 'சர்மென்ஸ்' (Sermons) ஆகியவற்றில் மிக உயர்ந்த நிலை யெய்தியது. அதிகாரபூர்வமாக வெளியிடப் பெற்ற பைபிளைப்போன்று, வேறெந்தத் தனிப்பட்ட நூலும் மக்களின் மனத்தை அவ்வளவு தூரம் கவரவில்லை. அங்ஙனமே ஆங்கில மொழியின் தரத்தை வெளிப்படுத்துவதாகவுமில்லை. அந்த பைபிள், டைண்டேலின் (Tyndale) பழைய பாட பேதத்தை அடிப்படையாகக்கொண்டு, இலத்தீன் மொழிக் கொள்கையிலிருந்து அநேகமாக விடுபட்டு, எளிய, பழமை சார்ந்த சொற்களைப் பயன்படுத்தி ஆக்கப்பெற்றது. ஆயின், உரைநடையின் வலிமையையும், ஆன்மீகக் கற்பனையையும் அலை போன்ற கருத்துகளின் மாற்றத்தையும், பாராளுமன்றப் பேச்சுகளிலும் பல துறைகளைச் சார்ந்த மக்களிடமும் காணமுடிந்தது; ஸ்ட்ரா∴போர்டின் கடிதங்கள், ∴புல்லர் (Fuller) எழுதிய 'வொர்த்தீஸ் ஆ∴ப் இங்கிலாந்து' (Worthies of England) ஆகியவற்றிலும் காணக்கிடக்கின்றது. உரைநடையின் மேன்மை, ராலேயின் 'ஹிஸ்டரி ஆ∴ப் தி வோர்ல்டு' (History of the World), கிளாரண்டனுடைய 'ஹிஸ்டரி ஆ∴ப் தி ரெபல்லியன்' (History of the Rebellion) ஆகிய வரலாற்று நூல்களில் மிளிர்ந்தது. மேன்மேலும் உயர்ந்துவந்த சரி நுட்பத்திறனும் நயமும், செல்டனுடைய 'டேபிள் டாக்' (Table Talk), ஐசாக் வால்ட்டனின் (Izaak Walton) 'லைவ்ஸ்'

(Lives), சாதாரணமாக எல்லோரும் படிக்கக்கூடிய பாக்ஸ்டரின் (Baxter) 'செயின்ட்ஸ் எவர்லாஸ்டிங் ரெஸ்ட்' (Saint's Everlasting Rest), போன்ற நூல்களிலும், பெயர் தெரியாத ஆசிரியர் இயற்றிய 'தி வோல் டுடி ஆ.:ப் மேன்' (The whole duty of Man) ஆகிய இலக்கியப் படைப்புகளிலும் காணப்படுகின்றன. நாம் இலக்கிய அமைப்பிலிருந்து பொருளுக்கு வருவோமானல், ஹூக்கர், மில்ட்டன் அல்லது பைபிளை மொழி பெயர்த்தவர் ஆகியோர் நீங்கலாக உள்ளவர்களின் நூல்களில் ஆங்கிலக் கல்வியின் பரப்பு தெரியவருகின்றது. திருச்சபையைச் சார்ந்த ஜெரிமி டெய்லரின் (Jeremy Taylor) நூல், ஆர்ச்பிஷப் உஷர் என்பவரின் (Ussher) காலவழிச் செய்திக்கோவை, 'கிரிசோஸ்டம்' (Chrysostom) எனும் நூலின் ஹென்றி செவில்லின் (Henry Seville) பதிப்பு, ஒன்பது மொழிகளில் வெளியான வால்ட்டனின் பாலிகிளாட் பைபிள் (Walton's Polyglot Bible) ஆகியவை இதற்குச் சான்று பகர்கின்றன. மேலும், பாராளுமன்றத்தைச் சார்ந்த பழம்பொருள் ஆய்வாளராகிய டி'ஈவ்ஸ் (D' Ewes), கோக் (Coke) பிரைன் (Prynne) போன்றோரின் கல்வியறிவும், உர்குஹார்ட் (Urquhart) என்பவரின் ராபிலேய்ஸ் (Rabelais) எனும் நூலின் மொழி பெயர்ப்பும் இதையே நிரூபிக்கின்றன. ஆயின், அக் காலத்தில் புலவரல்லாதாரும் எவ்வாறு எண்ணவும் எழுதவும் அறிந்திருந்தனர் என்பது, அவர்கள் தங்கள் குடும்பத்தினருக்காகவும் பின்னேருக்காகவும் எழுதியவற்றிலெல்லாம் புலப்படுகின்றது. செயல் வீரர்களான மான்ட்ரோஸ், .:பாக்லண்ட், பியூரிட்டானியராகிய ஒயிட்லாக் (Whitelock), லட்லோ (Ludlow) ஆகியவர்களிடமும், கடிதங்களிலும் கல்லறை வாசகங்களிலும் புலப்படுகின்றது.

அறிவியலும் தத்துவமும் வளர்ந்த இந் நூற்றுண்டு, புதிய உலகைக் கண்டது; வான் வெளியின் அமைதியைக் குலைத்தது. கோப்பர்னிகஸ் (Copernicus), கலிலியோ (Galileo) போன்றவர்களின் கண்டுபிடிப்புகளை ஏற்றுக்கொண்ட அறிஞர், எலிசபெத் ராணியாரின் காலத்தில் நில நூல், கணிதம் ஆகிய இயல்களில் ஏராளமான நூல்களை இயற்றினர். வில்லியம் கில்பர்ட் (William Gilbert), காந்தம், மின்சாரம் ஆகியவற்றில் புதியனவற்றைக் கண்டு பிடித்தார். ஸ்காட்டியக் குடியானவரான நேபியர் (Napier), ஆங்கிலப் பாதிரியான ஆட்ரட் (Oughtred), பல்கலைக்கழக ஆசிரியரான வாலிஸ் (Wallis) போன்றோர் விஞ்ஞானிகளுக்குத் துல்லிய கணிதம் தந்துதவினர். முதலில் அரசியல் கோட்பாடுகளில் நிலையான ஒழுங்கும், சமயச்சட்டமும், இயற்கை விதி எனும் கருத்தோடு கலந்திருந்தன. பிறகு அதற்குப் பணிந்தன. இந்த இயற்கை விதியில், மக்கள் அடிப்படையாகக் கருதியவை அத்

துணையும் இருப்பதாகக் கண்டனர். ஃபிரான்ஸிஸ் பேகன் தமது செல்வாக்கினாலும் ஊக்கத்தினாலும் கல்வியறிவினை வளர்த்தார். அரிஸ்டாட்டிலின்பேரிலோ, திருச்சபையின்பேரிலோ இருந்த விடாப்பிடிக் கொள்கை அறிவு வளர்ச்சிக்குத் தடையாக இருந்தது என்றும், செயலாய்வுமூலமாகவே அறிவினைப் பெருக்க முடியுமென்றும் வற்புறுத்திக் கூறினர். அவரிடம் செயலாளராகப் பணிபுரிந்தோரில் ஒருவரான ஹாப்ஸ் (Hobbes) என்பார், ஸ்பினோஸா (Spinoza), டெஸ்கார்டஸ் (Descartes) போன்றோரிடமிருந்து வந்த புதிய தத்துவக் கருத்துகளைத் தமது நீண்டகால வாழ்க்கையில் பரப்பினர். மனச்சாட்சியையும் ஒழுக்க நெறிகளையும், அநுபவத்திலிருந்தும் புற உணர்வுகளிலிருந்தும் பெற்ற அவரது இயந்திரம் போன்ற தத்துவம், பல தலைமுறைகளாக வழக்கிலிருந்த தெய்வ போதனையுடன் ஒத்துப்போகவில்லை. மேலும் பகுத்தறிவுள்ள, ஆராய்வதற்குப் பயன்படுகின்ற, அறிவியல் சார்ந்த, புதிய மனநிலை தோன்றியது என்பதைப் பல அறிகுறிகள் எடுத்துக் காட்டின. பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் புதிய கோயில் ஏதும் எழவில்லை. சமயம்சாரா இசை வளர்ந்தது. நாடகங்கள் ஒழுக்கசீலங்களைப் போதிக்கவில்லை. ஏராளமான பிரயாணிகளும் பயண நூல்களும், புதிய அறிவு ஆர்வத்திற்குச் சான்றாக அமைந்தன. வேதியியல் வல்லுநர், பழம்பொருள் ஆய்வாளர், பழம்பொருள்களைச் சேகரிப்போர் அறிவாளிகளாகக் கருதப்பெற்றனர். ஓர்செஸ்டரைச் சார்ந்த கெவலியப் பிரபு ஒருவர், நீராவியியல் செயலாய்வுகளைச் செய்தார். பியூரிட்டானியர் ஆக்ஸ்ஃபோர்டில் ஆட்சி நடத்தியபோது, காப்பாளரின் மைத்துனரான வில்கின்ஸ் (Wilkins), தமது இளம் நண்பர்களாகிய இராபர்ட் பாயில் (Robert Boyle), கிறிஸ்டோபர் ரென் (Christopher Wren) ஆகியோருடன் இணைந்து, ராயல் சொஸைடி (Royal Society) எனும் அறிவியல் ஆராய்ச்சிக் கழகத்திற்கு அடிக்கல் நாட்டினர்.

லண்டன் மாநகரம் பிரிட்டிஷ் பேரரசின் தளமாக விளங்கியது என்று காம்டன் எழுதினர். நாட்டிலிருந்த ஐந்து மில்லியன் மக்களில் 600,000 பேர் அந் நகரில் செறிந்திருந்தனர். அளவு மீறி அதிகமான செல்வங் குவிந்திருந்தது. அதுவே மாறுதல் தோன்றிய பல நூற்றாண்டுகளில் மையமாகவும், தேன்கூடு போன்றும் இருந்தது. அங்கே நீண்டகாலமாகத் திறந்த வெளிகள் நிறைய காணப்பெற்றன. பெயர்பெற்ற ஹாட்டன் (Hatton) பூங்காவும், அல்டர்ஸ் கேட்டிற்கு (Alders Gate) வெளியில் மில்ட்டன் பூங்கா விடுதியும் புகழ் மிக்கு விளங்கின. அதே சமயத்தில் மாணவர் விடுதிகளும் ஸ்ட்ராண்ட் (Strand) நெடுகிலும் உள்ள

அரண்மனைகளும், குருமடத் தலைவர், பிஷப்புகள் ஆகியோரிடமிருந்து கொள்ளப்பெற்றதால் அரசருக்கும் அவரது ஆதரவாளருக்கும் கிடைத்தன. தலைநகரில் பகட்டும் படாடோபமும் பழையபடியே இருந்தன. முக்கிய நாட்களில், செயின்ட் பால் கோயிலும் டெம்பிள் பார் (Temple Bar) எனும் நகரவாயிலும், கொடிகளாலும் தோரணங்களாலும் அழகு செய்யப்பெற்றன. ஃபின்ஸ்பரி பீரங்கிப் பூங்காவில் (Finsbury Artillery garden) பயிற்சி பெற்ற பாண்டு வாத்தியக் குழுவினர் இசை விருந்தளித்தனர். மாநகர மேயர் பிரபுவும் நகரமன்ற உறுப்பினரும் தங்களது படகுகளில் ஊர்வலமாகச் சென்றனர். நகர வணிகர் இடைக்காலத்தில் இருந்த இடங்களிலேயே குழுமி இருந்தனர். பொற்கொல்லர்கள் சீப்சைடிலும் (Cheapside), புத்தக வியாபாரிகள் பால் திருக்கோயில் வெளியிலும் வாணிகஞ் செய்தனர். தேம்ஸ் ஆறு நகரின் முக்கியப் போக்குவரவிற்கேற்ற வழியாகத் திகழ்ந்தது. அங்கே 'படகோட்டிகளின் துடுப்புகள்' என்று அடுத்தடுத்துக் கூவும் ஒலியையும், 'லண்டனுக்கு' என்ற கூக்குரலையும் டெக்கர் (Dekker) கேட்டார்.

ஆனால், காலமும் போக்குவரவுச் சாதனங்களும் மாநகரை மாற்றின. அதிலிருந்த மடங்கள் மறைந்தன. உரிமைப் பத்திர மாளிகை (Charter-house) சட்டனுடைய (Suttons) புதுப்பள்ளியாகியது. கருந் துறவிகளின் மனையில் நாடக அரங்கொன்றும் இருந்தது. நகரம் ஹால்போர்னையும் (Holborn) வளைத்துக்கொண்டது. கார்ன்ஹில்லில் (Cornhill) ஸ்டோ (Stow) அறிந்திருந்த திருக்கோயில் பசுமை வெளியும், பிஷப்ஸ்கேட்டில் இருந்த புதர்ச்செடி வேலியும் மறைந்தன. தெற்கில் ஜான் ஹார்வார்டு (John Harward) பிறந்த பகுதியாகிய சௌத்வார்க்கில் (South wark) மக்கட் செறிவு மிகுந்திருந்தது. லண்டனைச் சுற்றிலும் எழுந்த அரண்மனைகள் வாணிபத்தையும் நாகரிகத்தையும் நகருக்கு வெளிப்புறமாகக் கொண்டுசென்றன. உதாரணமாக, க்ரீன்விச் (Greenwich), ஓட்லாண்ட்ஸ் (Oatlands), நன்சச் (None-such) ஆகிய அரண்மனைகள் தோன்றின. அவைகளோடு ஆஸ்டர்லியில் (Osterley), கிரஷாம் (Gresham) போன்ற புதுப் பணக்காரரின் வீடுகளும் எழுந்தன. இங்கிலாந்து முழுவதையும் லண்டன் நோக்கிச் செலுத்தும் சாலைகளில் பாரவண்டிகள் ஊர்ந்து சென்றன. உருளைக் கற்களின்மீது கடகடவென்று முழங்கின. சார்லஸின் வண்டி புகைபோக்கிக்கு மேலே நின்ற கூண்டு வண்டிகள், ஹன்ஸ்லோ (Hounslow) அல்லது காட் மலை (Gad's Hill) வழிப்பறித் திருடர்களுக்கு அஞ்சியிருந்தன. ஆனால், உள்நாட்டுப் போரின்போது, அஞ்சல் குதிரை முறை முக்கிய நகரங்

களுக்கு வாரத்திற்கு ஒருமுறை கடிதங்கள் கிடைக்கச் செய்தது. ஸ்ட்ராண்டில் கோச் படகு ஒன்று நின்றது. முன்னிலை மீட்சி ஏற்படும் முன், சௌதாம்டனுக்கும் செஸ்டருக்கும் இடையே முறையான கோச் போக்குவரத்து ஏற்பட்டிருந்தது. லண்டன் மாநகர வளர்ச்சியைத் தடை செய்யவந்த அரசத் தனிப் பேரறி விப்புகள் பயனற்றுப்போயின. நாடக அரங்குகளையும், அவைகளோடு ஒழுக்கத்தில் குறைபாடுடைய ரசிகர்களையும், ஊதுகொம்புகளையும் நகரின் வெளிப்புறங்களுக்கோ அல்லது பேங்க்சைடிற்கோ (Bankside) துரத்தியடிக்க வேண்டுமென்ற பியூரிட்டன் நகரமன்ற உறுப்பினரின் முயற்சியும் பயனற்றுப் போனது. 'எட்டாம் ஹென்றி' (Henry VIII) நாடகம் நடந்து கொண்டிருந்தபோது, க்ளோப் (Globe) நாடக அரங்கின் கூரையில் தீப்பிடித்து அழிந்த இடத்தில், புதிய க்ளோப் அரங்கு அமைக்கப் பெற்றது. பாங்க்சைடில் 'ரோஸ்' (Rose), 'ஸ்வான்' (Swan), 'ஹோப்' (Hope) ஆகிய நாடகக் கொட்டகைகள் இருந்தன. கூடிய விரைவிலேயே கிளர்க்கன்வெல்லில் (Clerkenwell) 'ரெட் புல்' (Red Bull) எனும் கொட்டகையும், ட்ரூரி லேனில் (Drury Lane) 'போனிக்ஸ்' (Phoenix) அரங்கும் தோன்ற இருந்தன. திருடரும் பிச்சைக்காரரும், செல்வத்தின் இருப்பிடமான லண்டனை நோக்கி வந்து குவிந்தவண்ணமிருந்தனர். குறிப்பாக, செயின்ட் பால் கோயிலருகில் குழுமினர். பர்த்தலமியூ திருவிழாச் சந்தையின் போது எளிதில் ஏமாறுவோரைக் கொள்ளையிட்டனர்,

லண்டனிலும் வெஸ்ட்மினிஸ்டரிலும், நாகரிகத்தின் பல படிகளும் மொத்தமாகச் சேர்ந்திருந்தன. இங்கே முதலாம் ஜேம்ஸின் ஸ்காட்டிய உச்சரிப்பை நாடக மேடையில் ஏளனம் செய்வதிலிருந்து, அவருடைய கொள்கையைக் காமன்ஸ் உறுப் பினர் தாக்கியவரையுள்ள கண்டனக் குரல் அரசராதிக்கத்தைத் தாக்கியது. உயர் ஆணையாளர்களைத் தணிக்கை செய்யவேண்டு மென்று கோரிய துண்டுப்பிரசுரங்களை வெளியிட்ட அச்சிடுவோரும் இருந்தனர். ஜேம்ஸ் இறப்பதற்குமுன் துண்டுப் பிரசுரங்கள், ஒரு பக்கத்தில் அச்சடிக்கப்பெற்ற அகன்ற தாள் வெளியீட்டோடு ஸ்வீடன் போரைப்பற்றியும், ஜெர்மன் போரைப்பற்றியும் செய்தித்தாள்களும் வெளியிடப்பெற்றன. ஆனால், உள்நாட்டுப் போரின்போது வார வெளியீடு தோன்றியது. மந்திரிகளை ஆக்கவும் அழிக்கவும் ஆதரவு தரக்கூடிய முதலாளிகள் இங்கே வாழ்ந்தனர். உதாரணமாக, எலிசபெத் ராணியாருடைய தாமஸ் கிரஷாம், வர்ஜீனியா கம்பெனியில் எதிர்க்கட்சித் தலைவரான எட்வின் சாண்டீஸ் ஆகியோரைக் குறிக்கலாம். கிழக்கிந்தியக் கம்பெனி லேடன்ஹால் (Leadenhall) தெருவில் நிறுவப்பெற்றது. டெம்பிள்

பாரிலிருந்த (Temple Bar) 'பிசாசு சத்திரம்' (Devil Tavern), ப்ரெட் (Bread) தெருவில் இருந்த 'மெர்மெய்டு' (Mermaid) சத்திரம், 'சூரியன்' (Sun) அல்லது 'ட்ரிப்பில் டன்' (Triple Tun) போன்ற விடுதிகளில் ஷேக்ஸ்பியரும், ஜான்சனும், பீமான்டும், ஹெர்ரிக்கும் வாழ்க்கைபற்றியும் இலக்கியம்பற்றியும் பேசி வந்தனர். ஆனால், பொதுநலக் குடியரசுக் காலத்தில் இவைகளுக்குப் பதிலாகக் காபி விடுதிகள் தோன்றின. வழக்கறிஞர் சங்கங்கள் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தன. கோக்கினாலும் (Coke) கால்வினியப் போதகராலும் கட்டுப்பாடுடையராகச் செய்யப்பெற்ற இங்கிலாந்தின் தலைசிறந்த மனிதர்களைக் கொண்டிருந்தன. அரசவைக்காக இசை நாடகங்களை நடத்தின. பணிப் பயிற்சியாளரைக் கொண்டிருந்தன. லண்டன் நகரில்தான் நகர மாந்தரின் சிறந்த பள்ளிகளான 'கிறைஸ்ட் ஹாஸ்பிடலும், சார்டர் ஹவுஸும், மார்லோவிற்குக் கல்வி புகட்டிய 'மெர்சன்ட் டெய்லரும்' (Merchant Taylor), மில்ட்டன் படித்த செயின்ட் பாலும், காம்டன், பஸ்பி (Busby) ஆகிய இரண்டு இணையற்ற தலைமை ஆசிரியர்களின் கீழ் இருந்த வெஸ்ட்மினிஸ்டரும் மேன்மையுடன் விளங்கின. லண்டன்மாநகரில் மிக உயர்ந்த நிலையையும் மிகத்தாழ்ந்த நிலையையும் ஒருங்கே காணமுடிகின்றது. சிவப்புதட்டி கட்டிய விடுதிகளும் நகர்ப்புறங்களிலிருந்து வந்த வதக்கிய உணவுப் பொருள்களும் கிடைத்தன. டவர் கோட்டையில் இருந்த சிங்கங்களிலிருந்து, ப்ரைட்வெல்லில் உள்ள கிறுக்கர் வரையான பொதுக்கட்சிகள் யாவும் மலிந்திருந்தன. அதேபோன்று டெப்ட்ஃபோர்டில் (Deptford) டிரேக்கின் பொன்னிறப் பெண்மானும் அரிய காட்சியாக இருந்தது. அருண்டேல் பிரபு (Arundel) சேகரித்து வைத்த சலவைக்கல் சிற்பங்களும், பொதுநலக் குடியரசு விற்ற முதலாம் சார்லஸின் படங்களும், இராபர்ட் காட்டனின் (Robert Cotton) கையெழுத்துப் பிரதிகளும் பின்னாளில் பிரிட்டிஷ் பொருட்காட்சியின் வித்தாக அமைந்தன. இங்கேதான் நாட்டின் இதயம் இயங்கியது. மேற்கிலும் வடக்கிலும் இருந்த மூலைமுடுக்குகளில் எல்லாம் இரத்தம் பாய்ந்தோடியது. பேச்சு மொழியும், பழக்க வழக்கங்களும், மாருத பற்றுறுதிகளும் மற்றுமொரு நூற்றாண்டிற்குத் தொடர்ந்துவந்தன.

1660ஆம் ஆண்டில் இந் நவீன உலகின் நாயகனான இரண்டாம் சார்லஸ் திரும்பி வந்தபோது, பழைய அமைப்பை மாற்றியமைக்கும் மனம் படைத்தோர் வரவேற்கக் குழுமி இருந்தனர். அடிஸனும் ஸ்விப்டும் (Swift) பயன்படுத்திய ஆங்கில மொழியை உருவாக்கித் தந்த கௌலியும் ட்ரைடனும், மான்க்கிடம் பணிபுரிந்த பத்திரிகையாளரும், பிற்காலத்தில் 'கெஜெட்டை'

(Gazette) நிறுவிய முத்திமானும் (Muddiman), புதிய தலைநகரைத் தமது கலைத்திறனால் அழகுபடுத்திய ரென் (Wren) என்பாரும் வரவேற்பில் கலந்துகொண்டனர். இறுதியில் ஒன்றிணைக்கும் பசைகளான சமயம், அமைதி ஆகியவற்றோடு இடைக்காலம் மறைந்தது. சமயத்திற்கும் அமைதிக்கும் பதிலாக லண்டன் நகரத்து அறுபது அச்சகங்களும், சமயப்பொறையும், கட்டுப் பாடற்ற சமுதாயத்தை அமைக்கும் பெருமுயற்சிகளும் தோன்றின. இப் புதிய திட்டத்தை ஒன்றாக வைத்துக் காப்பது எது என்பதும், 'எப்படி வாழவேண்டுமென்று பிற நாடுகளுக்குப் போதிக்கும் முன்னுரிமையை இங்கிலாந்து மறந்துவிடலாகாது' எனும் மில்ட்டனின் வேண்டுதலை, எவ்வாறு நிறைவேற்றிவைக்கப் போகின்றது என்பதும் கேள்விக்குறிகளாக எழுந்தன.

மடல் V

# சமநிலை

## 1660–1760

### 1. இரண்டாம் சார்லஸ் மன்னரின் ஆட்சி: I. 1660–1667

ரிச்சர்டு கிராம்வெல்லின் ஆட்சியில் பிரிட்டன் நிலைபெற முடிந்தது என்றால், அது சட்டவரம்பிற்குட்பட்ட முடியாட்சியின் வெற்றியென்றே கூறவேண்டும். ஏனெனில், ரிச்சர்டு, ஓரளவு மதிப்பு வாய்ந்தவர்தான் என்றாலும், சிறந்த ஆளுமையோ படையினரிடம் செல்வாக்கோ பெற்றவர் அல்லர். போர்களில் அதிகமாக நேரடித் தொடர்பு கொண்டவரும் அல்லர். ஆயின், மிதவாத பிரஸ்பிடீரியரும், மான்க்கினல் (Monk) சிபாரிசு செய்யப் பெற்ற 'அமைதியான உயர் குடிமக்களும்' இக் காரணம்பற்றியே அவரை வரவேற்றனர். 1654ஆம் ஆண்டிற்கு முன்பிருந்த வாக்காளர் பட்டியல், வாக்குரிமை ஆகியவற்றின் அடிப்படையில், அவர் கூட்டிய பாராளுமன்றத்தில், படைவீரருக்குப் பதிலாக ஸ்டூவர்டு அரசர்களை விரும்பும் உறுப்பினர் பெரும்பான்மையிலிருந்தனர்.

ஏற்கெனவே இரண்டாம் சார்லஸின் பிரதம அமைச்சராக இருந்த எட்வர்டு ஹைடு (Edward Hyde), தனித்து நின்ற அரசக் கட்சியின் மூலமாகவோ, அழிவினைத் தரும் அந்நியப்படை உதவி கொண்டோ முன்னிலை மீட்சியைக் கொணர முடியாது என்பதைத் தெளிவாக உணர்ந்தார். பியூரிட்டன் உட்[illegible]கள் ஒன்றோடொன்று மோதி அழிந்தால்தான் முன்னிலை[illegible]தோன்றுவது சாத்தியமாகும் என்றும் உணர்ந்தார். [illegible] உணர்வு சரியானதே என்பது சிறிதுகாலத்திற்[illegible]து. காப்

பாளர் ஆட்சியைக் குடியரசுவாதிகள் ஏற்க மறுத்ததால், ரிச்சர்டு, படையினருக்குப் பலியானர். பின்னேயோரின் வன்முறையாட்சியை எதிர்த்ததன் காரணமாகக் குடியரசும் வீழ்ந்தது. 'பெரு மக்களுக்கும்' பொதுநிலேயாளருக்குமிடையே பிளவு ஏற்பட்ட தாலும், கடற்படையோடு, ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலு மிருந்த படைகளும் படைத்துறை சாராப் பொதுமக்களோடு இணைந்ததனுலும், படையினரும் இறுதியில் வீழ்ச்சியுற்றனர்.

இத்தகைய வீழ்ச்சிப் படலத்தின் முதல் கட்டம், ஆலிவரின் மரணத்திலிருந்து 1659ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் ரிச்சர்டின் பாராளுமன்றம் கலேக்கப்பட்டது வரை நீடித்தது. படையில் ஒழுங்கு, வேலே உயர்வு ஆகியவற்றைத் தங்களிடமே விட்டுவிட வேண்டுமென்று படைத் தலேவர் நெருக்கியபோது, ரிச்சர்டின் உறவினராகிய ஃபிளீட்வுட்டும் (Fleetwood), டெஸ்பரோவும் (Desborough) இணங்கியதன்மூலம் ரிச்சர்டின் அழிவைத் தேடினர். அவரது தனியுரிமையையும் பிரபுக்களேயும் தாக்கிய குடியரசுவாதிகள், ஸ்காட்லாந்து, அயர்லாந்து நாட்டு அங்கத் தினரை அரசரின் பேராட்கள் என்று கடுமையாகத் தாக்கித் தங்களது அழிவு வேலேயைத் தொடர்ந்து செய்தனர். அவர்களில் முதன்மையாக நின்றவர்கள் வேனும் (Vane) ஹேசல்ரிஜ்ஜுமே (Heselrige) ஆவர். கட்டுப்படுத்தப்பெற்ற பாராளுமன்றம் 'தாழ்மையான விண்ணப்பத்தினைச்' செய்தது என்ருல் பிரைடின் பாராளுமன்றக் களிப்பைப்பற்றி என்னென்பது. இந் நிலேயில் பாராளுமன்றமேதும் உரிமையோடு வாழாதவிடத்து, முடியாட்சியை மீட்பதே சாலச் சிறந்தது எனப் பல உறுப்பினர் உள்ளூர எண்ணினர். படையில் காணப்பெற்ற ஒழுங்கீனங்களேப் பெருவாரியானவர்கள் கண்டித்தனர். அவர்கள் சேனேயினரின் சம்பளத்தில் அக்கறை காட்டவில்லே. அவர்கள் பாராளு மன்றத்தின் அனுமதியின்றிப் படைத் தலேவர் சந்திப்பதைத் தடுத்தனர். அதன்பிறகு பெருங்குடி மக்களும், பொதுநிலே யாளரும் அரசாங்கத்தைக் கலேக்குமாறு ரிச்சர்டை வற்புறுத்தினர். உள்நாட்டுப்போர் திரும்பவும் ஏற்படுவதை விரும்பாத ரிச்சர்டு, அவர்களின் கோரிக்கைக்குப் பணிந்தார்.

ஆயினும், தங்களுக்கு அடங்கிய காப்பாளரின் ஆட்சியை எதிர் பார்த்த பெருங்குடியினர் ஏமாற்றமடைய வேண்டியதாயிற்று. பொதுநிலேய[illegible]மும் 'பழைய நன்னிலேயைப்' பறைசாற்றியவ ரிடமும் ஒரு[illegible] துணர்ச்சி பொங்கியெழுந்தது. இத்தகைய ட்ணர்ச்சி [illegible] லாம்பர்ட் கலந்திருந்தார். அவர்கள், எப்போது[illegible] க்குமேல் வராத எஞ்சிய பாராளு

மன்றத்தைக் கூட்டுமாறும், பொதுநலத் துரைத்தனத்தைப் புதுப்பிக்குமாறும் உயர் குடியினர் வற்புறுத்தினர். அடுத்தபடியாகப் படையினர் ஏமாற்றமடைந்தனர். எப்போதும் போல, எதையும் பொருட்படுத்தாதவர்களாகவும் ஒழுக்க மேம்பாடுடையவர்களாகவும் இருந்த வேன், ஹேசல்ரிஜ், லட்லோ (Ludlow) ஆகியோர், படையினரின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாது, தங்களுக்கு வேண்டியவர்களைக்கொண்டே கவுன்சில் சபையினை நிரப்பினர். நினைத்தவாறு அதிகாரிகளை நீக்குவதும், பதவி உயர்வளிப்பதும் போன்ற செயல்களில் ஈடுபட்டனர். 1660 ஆம் ஆண்டில் பாராளுமன்றம் கலைக்கப்பெறுதல் வேண்டுமென்ற படையினரின் கோரிக்கை ஒன்றைத் தவிர, அவர்கள் விரும்பிய மற்ற அடிப்படைகளைப் புறக்கணித்தனர். பலசமயப் பிரிவுகளுக்குப் பதிலாக ஒரே திருச்சபையை நிலைநாட்ட விரும்பினர். மேலும், 1649 ஆம் ஆண்டு இருந்த இறைமை கொண்ட பாராளுமன்றத்தை மீட்டுவிட முடியுமென்று நம்பினர்.

ஆயின், அரசக் கட்சியினர் இப் பொன்னான வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றலற்றிருந்தனர். பிரன்னீஸ் (Pyrennees) சமாதானத்தைச் செய்துக்கொள்வதில் முனைந்திருந்த ஃபிரான்ஸோ, ஸ்பெயினோ, நாடோடியாகத் திரிந்த ஸ்டுவர்டினருக்கு உதவிசெய்ய முன்வரவில்லை. அதனோடு நாட்டில் நம்பிக்கைக் கேடு மறையவில்லை. படையினருள், உடனடியாக மீட்பு வேலையைச் செய்ய வேண்டுமென்றோருக்கும், சேனையினர் சீரழியும்வரை பொறுத்திருக்கவேண்டுமென்ற 'நாட்டுகளு'க்கும் (The Knots) இடையே சச்சரவுகள் இருந்துவந்தன. எனவேதான், கெவலிய மன்னரின் வாக்குறுதிகளைச் சந்தேகித்த பிரஸ்பிடீரியர்கள், ஆகஸ்ட் மாதத்தில் செஷயரில், சர் ஜார்ஜ் பூத், கிளர்ச்சி செய்த போது அதில் சேர மறுத்தனர். ஆகையால், இக் கிளர்ச்சியினை லாம்பர்ட் விரைவில் ஒடுக்கினார். அழுமூஞ்சியாகவும், பிறருக்குப் பணியும் மனத்தினரான ஃபீளீட்வுட்டைப் போன்று அல்லாது துணிவும் கவர்ச்சியும் மிகுந்த சந்தர்ப்பவாதியான லாம்பர்ட் படைவீரர்களின் அபிமானத்திற்குரிய தலைவரானார்.

சுருங்கக் கூறுமிடத்து முன்னிலை மீட்சியை அரசர் கட்சியினர் கொண்டுவரவில்லை. சேனைதான் அவ்வேலையைச் செய்து முடித்தது. சேனைக்கு உரிமை வழங்க வேண்டுமென்றும், முழு அளவுச் சமயப் பொறை வழங்குதல் வேண்டுமென்றும், மாஜிஸ்ட்ரேட்டுகளைக் கழிக்க வேண்டுமென்றும் கோரிய சேனையினரின் விண்ணப்பங்கள் வந்து குவிந்தன. ஸ்காட்லாந்தில் இருந்த மான்க்கிடமிருந்து வந்த செய்திகளினால் ஊக்கம்பெற்ற பாராளுமன்றம் அக்டோபரில்

லாம்பர்ட்டைப் பதவியிலிருந்து நீக்கியது. அதனால் ஆத்திரங் கொண்ட லாம்பர்ட், படையுடன் வெஸ்ட்மினிஸ்டருக்குச் சென்று பாராளுமன்றத்தைக் கலைத்ததோடு நாட்டை ஆள்வதற்கென்று படையினரைக்கொண்ட பாதுகாப்புக் குழு ஒன்றினை அமைத்தார். இதன் காரணமாக நிலைமை உச்சநிலையை அடைந்தது. குடியரசு விரைவில் வீழ்ந்தது. வேன், லட்லோ போன்றோரின் தலைமையில் இருந்த ஒருசாரார், படையினரோடு அரசியல் அமைப்புகள் பலவற்றைப்பற்றி விவாதித்துவந்தனர். உறுதியுடன் நின்ற ஹெசல்ரிஜ்ஜின் தலைமையில் மற்றொரு கட்சியினர், கடற்படையினரையும் மாகாணப் படையினரையும் பாராளுமன்றத்திற்கு ஆதரவு தருமாறு செய்தனர். நகர மாந்தரும் அயர்லாந்துப் படையினரும் அவ்வாறே செய்தனர். இவ்வாறு இருந்த அனைவரையும் ஸ்காட்லாந்தின் தளகர்த்தர் ஒன்றாக இணைத்தார் எனலாம்.

ஸ்காட்லாந்தில் தளகர்த்தராக இருந்த ஜார்ஜ் மான்க் போரையே தொழிலாகக்கொண்ட படைவீரர். அவர் டச்சுக்காரர், மன்னர், காப்பாளர், பாராளுமன்றத்தினர் ஆகியோருக்காக அடுத்தடுத்துப் பணிபுரிந்தவர். வலிமைபெற்ற திவோன் (Devon) குடியைச் சார்ந்த அவர், படைசாராத பிற ஆங்கிலேயரைப் போன்றே சேனையாட்சியில் வெறுப்புக் கொண்டவர். எனினும் தம்மைச் சார்லஸ் அணுகியபோதிலும், சட்டப்படியான ஆட்சியையே ஆதரித்தார். எஞ்சிய பாராளுமன்றம் லாம்பர்ட்டினால் அச்சுறுத்தப்பெற்றபோது சபாநாயகருக்குக் 'கீழ்ப்படிதலே என்னுடைய சிறந்த கொள்கை' என்று எழுதினார். நவம்பர், டிசம்பர் மாதங்களைத் தம் போக்கிலே செலவிட்டு, பேச்சுவார்த்தைகள்மூலமாக லாம்பர்ட்டைச் சாந்தப்படுத்தினார். மேலும், தம்முடைய அதிகாரிகள் பலரைப் பதவியிலிருந்து நீக்கினார். விளம்பர வேலையைத் துரிதப்படுத்திய அதேசமயத்தில் ஸ்காட்டியரோடு அமைதியை நிலைநாட்டும் ஏற்பாடுகளைச் செய்தார். அயர்லாந்தில் இருந்த படைத்தலைவர்களுடனும், லண்டன் நகரச் சமயகுருமாருடனும், யார்க்ஷயரில் செல்வாக்கு மிகுந்து இருந்த ஃபேர்ஃபாக்ஸ் என்பாருடனும் தொடர்பு வைத்துக்கொண்டார்.

அவ்வாண்டு இறுதியில் சேனை சீரழிந்தது என்றும், எஞ்சிய பாராளுமன்றத்தை மறுபடியும் கூட்டியது என்றும் கேள்வியுற்ற மான்க், 1660 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் லண்டன் நகரை வந்தடைந்தார். அவர் எப் பக்கத்தில் பாய்வார் என்பதை அரசக் கட்சியினர் அறியக்கூடவில்லை. இதற்கிடையில் எஞ்சிய பாராளுமன்றம் தன்னுடைய எதிரிகளைச் சிறையிலிட்டது அல்லது பதவியிலிருந்து நீக்கியது. திருத்தவொண்ணு நிலையிலிருந்த அப் பாராளு

மன்றம், பிரைட் களிப்பினுல் ஒதுக்கப்பெற்ற உறுப்பினரைத் திரும்பச் சேர்த்துக்கொள்ள மறுத்தது. அரசர் கட்சியைச் சார்ந்தவரின் பிள்ளைகளின் தேர்தலைக்கூட ஏற்க மறுத்தது. தான் செய்ய நினைத்த இழிவான வேலையை மான்க் செய்யவேண்டு மென்று எதிர்பார்த்தது. இந் நிலையில் வாணிப மந்தத்தினுல் ஆத்திரமடைந்து படையினருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்த லண்டன் மாநகர மக்கள் ஒருபுறத்திலிருந்தனர். கட்டற்ற பாராளுமன்றம் வேண்டுமென்று வந்த விண்ணப்பங்கள், அவர் களுக்கு அரணுக அமைந்தன. மற்றொருபுறத்தில் முடியாட்சியை வெறுத்து நின்ற சேனையிருந்தது. இச் சூழ்நிலையில் உள்நாட்டுப் போரைத் தவிர்க்கவேண்டுமானுல் ஆட்சிப்பொறுப்பைக் கட்டற்ற பாராளுமன்றத்திடம் விடவேண்டும். அத்தகைய மன்றம் அமைய வேண்டுமானுல் 'ஒதுக்கப்பெற்ற' (secluded) உறுப்பினரைக் கொண்டு எஞ்சிய பாராளுமன்றத்தை நிரப்பவேண்டும். இங்ஙனம் ஒதுக்கப்பெற்ற உறுப்பினரையும் கொண்ட பழைய நீடித்த பாராளுமன்றம் கூடியது. இங்கிலாந்தின் உரிமைகளைப் பாது காப்பவர் எனும் பெயரில், அதன் உறுப்பினர் புதிய பாராளு மன்றத்தைக் கூட்டுதற்கான ஆணைகளை வெளியிட்ட பிறகு மார்ச் மாதம் 16ஆம் தேதி கலைந்து சென்றனர். மேலும், புதிய தேர்தலில் அரசர் கட்சியினர் வாக்களிக்க அனுமதிக்கப்பெற்றனர்.

அதன் பிறகுதான் மான்க், சார்லஸிடமிருந்து கடிதங்களைப் பெற ஒப்பினுர். அப்படியிருந்தும் முன்னிலை மீட்சிக்கான உரிமைக் கட்டுப்பாடுகள் நிலையற்றவையாகவே இருந்தன. பிரஸ்பிடீரிய குருமாரின் கை ஓங்குமாறு செய்ய ஒதுக்கப்பெற்ற உறுப்பினர் முனைந்த அதே சமயத்தில் ஹோல்ஸ் (Holles), ஆஷ்லி கூப்பர் (Ashley Cooper), கார்லைல் சீமாட்டி (Lady Carlyle) போன்ற செல்வாக்கு மிகுந்த பியூரிட்டன் அரசியல்வாதிகள் 1648ஆம் ஆண்டில் முதலாம் சார்லஸுக்கு அளித்த உரிமைக் கட்டுப்பாடு களைப் புதுப்பிப்பதைப்பற்றி விவாதித்தனர். பிரத்தியேகப் பாராளுமன்றம் கூடியபோதும் அரசர் கட்சியினரை வெளி யேற்றவும், பியூரிட்டன் அல்லாத அனைவரையும் விலக்கவுமான முயற்சியிலீடுபட்டனர். ஆனுல், புதுமை வெள்ளத்தில் அவர் களுடைய எதிர்ப்பு இருந்த இடம் தெரியாது போயிற்று. ஒருசில குடும்பத்தினருக்கே சொந்தமாக இருந்த தொகுதிகள் தவிர, மற்றத் தொகுதி வாக்காளர்கள் அரசக் கட்சிக்கு எதிராக இருந்த வேட் பாளரைத் தேர்ந்தெடுக்காது விட்டனர். அதேபோன்று டவர் கோட்டைச் சிறையினின்றும் தப்பிவந்த லாம்பர்ட்டுடன் ஆயிரம் பேர்கள்கூட சேரவில்லை. எனவே, அவரை எளிதாகக் கைது செய்யமுடிந்தது. இவற்றிலிருந்து படைசார்ந்த பொதுநலத்

துரைத்தனம் அழிந்தது என்பது தெளிவாகின்றது. எனினும், முன்னிலை மீட்சி தோன்றுவதில் ஏற்பட்ட ஒவ்வொரு நாள் தாமதமும் இடர் மிகுந்ததாக இருந்தது. இங்நிலையில் முன்னிலை மீட்சி விரைவாகத் தோன்றியதற்கு மான்க்கும், ஹைடு போற்றிய கொள்கையும் காரணங்களாக அமைந்தன.

அக் கொள்கையின்படி உறுதிமொழிகள் அளிப்பது விலக்கப் பெறுதல்வேண்டும். தனிப்பட்ட உறுப்பினருடன் பேரம் பேசுவதன்மூலமாக முன்னிலை மீட்சிக்கான வாய்ப்பு மிகுந்த போதிலும், பொறுப்புப் பாராளுமன்றத்திடமே ஒப்படைக்கப் பெற்றது. கிராம்வெல்லின் முன்னுள் தளகர்த்தரான சாண்விச் (Sandwich) பிரபுவான மான்டேகுவின் ஆதரவைப் பெற்றதால், கடற்படையின் உதவியைப் பெறமுடிந்தது. பிரஸ்பிடீரியச் செல்வந்தர்களுக்கு அதிகச் சலுகைகளை மான்க் விரும்பிய போதிலும், அவர்களது நிபந்தனைகளை நிராகரித்தார். பொது உடன்படிக்கை செய்துகொள்ள நேரும் காலதாமதத்தை விரும்பாத அவர், ஹைடினுடைய திட்டத்தை ஏற்றுக்கொண்டார். அவரது தூண்டுதலின்பேரில் ஏப்ரல் மாதம் 4ஆம் நாள் ப்ரெடா பிரகடனத்தைச் (Breda Declaration) சார்லஸ் வெளியிட்டார். பாராளுமன்றத்துடன் இணைந்து தம்மை எதிர்த்த அனைவருக்கும் மன்னிப்பு வழங்குவதாகவும், பாராளுமன்றம் விரும்பினுல் அவர்களிற் சிலருக்கு தண்டனை வழங்குவதாகவும், சேனுவீரர்களுக் குப் பாதுகாப்பு அளிப்பதாகவும், படையினருக்குக் கொடுக்கப் படாது இருந்த சம்பளத்தை அளிப்பதாகவும், தொல்லை மிகுந்த கெவலியரின் (Cavalier) நிலப் பிரச்சினையைத் தீர்ப்பதாகவும் கூறிய சார்லஸின் வாக்குறுதிகள் இப் பிரகடனத்தில் இடம்பெற்றன. இதனுல், கட்டற்ற பாராளுமன்றத்தில் இருந்த பகைக் கும்பல்கள் ஒழிந்தன.

இத்தகைய உரிமைக் கட்டுப்பாடுகளை ஏற்றுக்கொண்ட பாராளுமன்றம், பழைய அரசாங்கம் மீட்கப்பெற்றது என அறிவித்தது. சார்லஸின் 30ஆவது பிறந்த நாளான மே மாதம் 29ஆம் தேதி அவர் பிளாக்ஹீத் (Blackheath) என்னுமிடத்தில் தம்முடைய தந்தையாரின் உயிரைப் பறித்த படையினரின் பாசறையையும், ஆரவாரமிகுந்த தெருக்களையும் கடந்து சென்று ஒயிட்ஹாலை (Whitehall) அடைந்தார்.

இங்ஙனம் முன்னிலை மீட்சி என்பது அரச ஆதரவாளர்களும் பியூரிட்டானியரும், புரட்சிக்கும் படையினருக்கும் எதிராகச் செய்துகொண்ட ஏற்பாடேயாகும். எனவே, அரசரின் முன்னிலை

மீட்சி என்பதைவிட, பாராளுமன்றத்தின் முன்னிலை மீட்சி என்று கொள்வது பொருத்தமாகும். ஆலிவர் கிராம்வெல்லின் (Oliver Cromwell) வெளிநாட்டுக் கொள்கையையும், குடியேற்றக் கொள்கையையும் சார்லஸ் பின்பற்றினர். ஹைடு [இதுபோது கிளாரண்டன் பிரபு ஆனவர் (Lord Clarendon)] ஆர்மாண்ட் (Ormonde), பொருளாளரான சவுதாம்டன் (Southampton), முதலாம் சார்லஸின் செயலாளராக இருந்த நிகோலஸ் (Nicolas) ஆகியோர்மட்டுமன்றி, மான்க், மான்டேகு, ஆஷ்லி கூப்பர் போன்றோரும் அரசரின் கவுன்சிலில் இருந்தனர். வெளிநாட்டுக் கூட்டுகளில் கிளாரண்டனுக்குத் தர்லோ (Thurloe) ஆலோசனை வழங்கினர். கிராம்வெல்லினால் தி ஹேக்கில் (The Hague) தூதுவராக நியமிக்கப்பெற்று இருந்த ஜார்ஜ் டௌனிங் (Downing) தம் பதவியைத் தொடர்ந்து வகித்துவந்தார். இவ்வாறு பெரும் பதவிகளிலும் உள்நாட்டு ஆட்சி நிலையங்களிலும் பியூரிட்டானியரை அமர்த்துவதற்குத் தகுந்த காரணம் உண்டு. கிராம்வெல்லின் காலத்தில் அரசாங்கத்தை ஒருமுகப்படுத்தி அதிகாரம் செலுத்திய இவர்களுடைய ஆற்றலும் அனுபவமும், நாடு கடத்தப்பெற்று இருந்த அரச ஆதரவாளர்களிடமில்லை. ஒப்பந்தத்தை உருவாக்கிய மிதவாதிகள் தங்களது வலிமையைக் காட்டினர். ஹென்றி கிராம்வெல், எப்போதும்போல் பல அரச ஆதரவாளரிடம் செல்வாக்குப்பெற்று இடையூறு ஏதுமின்றி வாழ்ந்திருந்தார், ரிச்சர்டு கிராம்வெல் வெளியேற்றப்பெற்று இருந்தபோதிலும் சார்லஸின் ஆட்சிக்காலத்தில் திரும்பி வந்து, 1712ஆம் ஆண்டு வரை, ஆரவாரமற்றதும் அமைதியானதுமான வாழ்க்கையைப் பெற முடிந்தது.

எனவே, மீட்கப்பெற்றவை அரசரின் தனியுரிமைகள் அல்ல. மாறாக இயல்பான முடியாட்சியின் வளர்ச்சியே மீட்கப்பெற்றது. அரசரையோ, பிரபுக்களையோ, திருச்சபையையோ அவர்கள் நீக்கப்படுவதற்குப் பத்து ஆண்டுகளுக்கு முன்பு இருந்த நிலைக்குக் கொண்டுவர முடியாது. இதுபோது புதிய தொழிற்குழு நலன்கள் முன்னைவிட மிகுந்த வலிமைபெற்று விளங்கின. அவைகள் குடியேற்றங்களை அமைப்பதில் முனைப்பாய் இருந்தன. தொழில் துறையில் அங்காடிகள், காப்பு வரிகள்மூலமாக வெளிநாட்டுக் கொள்கையில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்திய அரசாங் கத்தின் கட்டுப்பாடுகளை வெறுத்தன.

அமைதியான முன்னிலை மீட்சியைக் கொண்டுவந்ததற்காகக் கிளாரண்டனுக்கு நாடு கடமைப்பட்டது. 'கண்ணுக்குக் கண் வாங்கவேண்டும்' என்றும், பியூரிட்டானியரனைவரையும்

வெளியேற்றவேண்டும் என்றும் கோரிய 'பற்றுறுதிக்குழு' என்று தங்களை அழைத்துக்கொண்ட கும்பலைக் காட்டிலும், எதைச் செய்யவேண்டும், எதைச் செய்ய முடியும் என்பதைக் கிளாரண்டன் நன்கு உணர்ந்திருந்தார். தாம் முற்போக்கு அரச ஆதரவாளராக இருந்தகாலத்தில் 1641ஆம் ஆண்டு இருந்த நிலைக்கே அரசாங்கத்தை மீட்கவேண்டுமென்பது அவர் குறிக்கோளாக இருந்தது. சுருங்கக்கூறுமிடத்து, ஸ்டார் சேம்பர், கப்பல் வரி போன்ற தீய வழக்கங்கள் நீங்கிய எலிஸபெத் கால முடியாட்சியை மீட்பதே அவரது நோக்கமாகும். என்றும் அவர் வளைந்து கொடுக்காத மனம் படைத்தவர். அளவுக்கு மீறிய வேலை அழுத்தத்தாலும் பாரிச நோயினாலும் மெலிந்திருந்த அவர், புதிய யுகத்தைப் புரிந்து கொள்ளும் திறம் படைத்தவராக இல்லை. பழமைப் பண்பு மிகுந்த அவர் அளவுகடந்து ஒருமுகப்படுத்தப்பெற்று, சீர்குலைந்திருந்த பிரிவி கவுன்சிலை அரசாங்கத்தின் மையமாகக் கண்டார். அச் செயல் வேலைகள் மிகுந்து, தனிப்பட்ட துறைகள் வளர்ந்து இருந்த அந் நாட்களில் குழப்பத்தையே விளைவித்தது. பொதுச் சட்டத்திற்குப் பாதுகாப்பு அளித்தால் போதுமென்று அவர் எண்ணினார். அதைப்போலவே பாரர்ளுமன்றம், வரி தண்டுவதற்கும் சட்டம் இயற்றுவதற்கும் இருந்தால் போதும் என்று நினைத்தார். ஆனால், அவர் பாராளுமன்றம், ஒரு தலைமுறையாகக் கவுன்சிலர்களை நியமித்து, கமிட்டிக்ளின்மூலமாகக் கொள்கைகளை வகுத்த இறைமைத்தன்மை பொருந்திய உறுப்பினர் நிறைந்து இருந்தது என்பதை மறந்துவிட்டார். அதேபோல் கருத்து வெளிப்படும் வழிகளான பத்திரிகைகள், காபி விடுதிகள் ஆகியவைகளையும் கவனியாது நின்றார். திறமை மிக்க அரசர் ஆதரவாளரான பிற்காலத்தில் ஹாலி∴பாக்ஸின் மார்குவிஸ் (Marquis of Halifax) ஆன ஜார்ஜ் செவில், பெபிகளின் (Pepy's) நட்பினரான வில்லியம் காவன்ட்ரி (William Coventry) போன்ற, அரசருக்கு ஆதரவளித்த இளைஞரையும் அவர் சந்தேகித்தார்.

ஆனால், தனித்து நின்று, பருவத்திற்கு முந்திய வயோதிகம் அடைந்து கிளாரண்டன் உயர்ந்த பண்புகளைப் பெற்று இருந்தார். வன்முறையை வெறுத்தார். சட்டத்தையும் கொடுத்த வாக்கையும் பெரிதும் மதித்து நடந்தார். நாடு கடத்தப்பெற்ற நாளிலிருந்து ஹென்ரியிட்டா மேரியா (Henrietta Maria)வின் குழந்தைகளைக் கத்தோலிக்கர்களாக்கி, இங்கிலாந்தின் சுதந்திரத்தை ∴பிரெஞ்சுப் பணத்திற்கு விற்கத் துணிந்த ஜெர்மின் என்பவரின் தலைமையில் இயங்கிய மேரியா கும்பலின் கேடான செல்வாக்கிற்குக் கிளாரண்டன் அடிமையாகவில்லை. அதைப்போலவே க்ளிப்பூட்டும் திறமையாலும், யார்க்ஷயர்

சொத்தினுலும் ஃபேர்ஃபாக்ஸின் மகளை மணந்துகொண்டதனுலும், பல கட்சிகளில் காலூன்றி நின்ற கீழோனை இரண்டாம் பக்கிங்ஹாம் கோமகனின் தூண்டுதலையும் புறக்கணித்தார். அவர் பெருஞ் செல்வத்தைச் சேர்த்தார் என்பது உண்மையே. யார்க் கோமகனுக்குத் தம் பெண்ணை மணம் முடித்து வைத்த பிறகு செருக்குற்று நின்ருர். தம்முடைய ஒழுக்கத்தைப் பற்றி மிகுந்த கர்வம் கொண்டிருந்தார். அவருடைய கனவெல்லாம், பழைய நலம் பயக்கும் அரசாங்கத்தைக் கொண்டு வருவதும், நாட்டுமக்களின் பழைய நல்ல உள்ள நிலையை மீட்ப தாகவுமே இருந்தது. இது கனவாகவே நின்றபோதும் நேர்மையான அவர்தம் குற்றங்களும் குணங்களும் இணைந்தே அவருடைய வீழ்ச்சிக்குக் காரணமாயின.

மன்னர் இவருக்கு நேர்மாருனவராக இருந்தார். அவர் ஆரம்ப காலத்தில் ஊழிய வேலைகளைத் தம் அமைச்சரிடம் விட்டு விட்டு, இறுதி முடிவெடுக்கும் உரிமையைத் தம்மிடமே வைத்துக் கொண்டார். கிளாரண்டனின் வீழ்ச்சிக்குப் பிறகு, நீண்ட காலத் திற்கு அவரது குணப் பண்புகளே நிர்ணயித்தன. போரும் நாடு கடத்தலும் அவரை அதிகமாக பாதித்துவிட்டன. இளமை யிலேயே ஒழுக்கம் கெட்டவராக இருந்த அவர், மான்ட்ரோஸ் போன்றவர்களின் பற்றுறுதியை இழந்துவிட்டார். பலமுறை காசின்றிக் கஷ்டப்பட்டார். நம்பிக்கை கெட்டவராகவும், நன்றி மறப்பவராகவும், சமயப் பற்று அற்றவராகவும் இருந்தார். ஆண்களின் தன்மதிப்பிலோ, பெண்களின் கற்பிலோ அவருக்கு நம்பிக்கை கிடையாது. இருந்தபோதிலும் நவரேயின் (Navarre) ஹென்றியினுடைய பேரனை அவர் அரசப் பண்புகள் சிலவற்றைப் பெற்று இருந்தார். அப் பண்புகள், அவர் பெருமையாகக் கூறிக் கொண்டதைப்போல, அவரை மக்களால் விரும்பப்பெற்றவராகச் செய்தன.

பிற்காலக் கவுன்சிலர்களில் ஒருவர் எழுதியுதைப்போலச் சார்லஸ் கேளிக்கை மிகுந்தவராகவும், இரக்கமுள்ளவராகவும் இருந்ததே இத்தகைய நிலைக்குக் காரணம். தாம் எவ்வாறு கட்டுப்பாடற்ற வாழ்க்கையை விரும்பி நின்ருரோ, அவ்வாறே பிறருடைய காரியங்களில் அவர் தலையிடவில்லை. சிற்றின்பத்தை நாடுதல் பாபமன்று என்று உறுதியாக நம்பினுர். குவேக்கர் போன்றவரிடம் சமயப் பொறையோடு அவர் நடந்துகொண்டது அவருக்குக் கத்தோலிக்க மதத்தில் இருந்த பற்றின் காரணமாக அன்று. அஃது அவருடைய உளப்போக்கையும் அரசியல் அறிவையும் விளக்குவதாக இருக்கின்றது. ஆங்கிலிகன் சமயத்

தவரைவிடக் கத்தோலிக்கரிடத்தும், சமயப் பற்றற்றவரிடத்தும் நேசமாக இருந்தபோதிலும், சமய மாற்றமடைந்தார் என்பதற்கு அவர் இறக்கும் வரையில் சான்றுகளேதும் இல்லை. எனினும், முடியாட்சிக்குக் கத்தோலிக்கச் சமயம் ஏற்றது என்று வெளிப் படையாகவே கூறிவந்தார். பொருள் கிடைக்குமானால் அப் பிரச்சினைபற்றி ஆலோசிக்கலாம் என்று பலமுறை 'போப்பிற்கே' எழுதி இருக்கிறார். அவரிடம் தீய குணங்கள் பல இருந்த போதிலும், அவர் எத்தகைய கூட்டத்திலும் தன் கருத்தினை நிலை நிறுத்தும் ஆற்றலும், கடும் உழைப்பும், குறிப்பாக வெளிநாட்டு விவகாரங்களில் செயலாற்றும் திறமும் பெற்று விளங்கினார். மற்ற எந்த அரசரைக்காட்டிலும் காட்சிக்கு எளியராக இருந்தார். கப்பல் கட்டும் தொழிலில் ஓரளவு ஆழ்ந்த அறிவு படைத்து, அதற்காக உண்மைத் தியாகங்கள் புரிந்த அவர், கடற்படையில் பேரார்வம் காட்டினார். வியாபாரத்திலும் குடியேற்றத்திலும் அக்கறை கொண்டதோடு வேதியியலை மேம்போக்காகப் பயின்று இருந்தார். சுருங்கக் கூறுமிடத்து அவர் ஒரு தற்கால மனிதன். தம்முடைய தனி உரிமைகளைப் பெரிதும் போற்றுபவர் எனினும், கிளாரண்டனைவிட வளைந்து கொடுக்கும் தன்மை பெற்றவ ராதலால், அவைகளுக்காகக் காமன்ஸ் சபைமூலம் வேலைசெய்ய முடிவெடுத்தார். பத்திரிகைகளின் இன்றியமையாத் தன்மையை யும் உணர்ந்தார். அவருடைய உறுதியிலிருந்து தளர்த்தக்கூடிய மற்றொரு நோக்கம் குடும்பப் பற்றேயாகும். அவர் தம்முடைய தம்பியாகிய ஜேம்ஸின் மடமையைத் தூற்றியபோதிலும் அவரை மிகுதியாக விரும்பினார். சகோதரி ஹென்ரியிட்டாவின் மீது கொண்ட நேசம் அழிவினைத் தேடும் அளவிற்கு அதிகமாக இருந்தது. பிற்காலத்தில் தம்முடைய திருமணத்தால் பிறக்காத மகனாகிய 'மான்மவுத்' (Monmouth)திற்கு அதிக இடம் கொடுத்தார். அவருடைய சூழ்ச்சித் திறனால் மக்களுக்குக் கேடு நேரவில்லை. அதற்கு மாறாக அவர்களுடைய எண்ணங்களை மதிக்காததும் அவர்களின் குறைந்த கோரிக்கைகளையும் நிறைவேற்றாது இருந்ததும்தான் அவர்களுக்குப் பேராபத்தாக இருந்தது.

உடனடியாகச் செய்யவேண்டிய செயல்களைச் செய்து முடிப்பதில் அரசரும் அவர்தம் அமைச்சரும் ஒத்துழைத்தனர். (Convention) பிரத்தியேகப் பாராளுமன்றம் சட்டபூர்வமான பாராளுமன்றமாக மாறிய பிறகு, ப்ரெடா உறுதிமொழிகளைப் பற்றி ஆராய ஆரம்பித்தது. பிரஸ்பிடீரியர்களும் கெவலியர்களும் அரசரைக் கொன்றவருக்கு எதிராக மனக் கசப்பு அடைந்திருந் தனர். அதனால் அறிவுக்குப் பொருத்தமான மறப்புச் சட்டத்தைக்

**(Oblivian)** கொண்டுவருவதற்கு அரசர் பெருமுயற்சி எடுக்க வேண்டி இருந்தது. இறுதியாக 1660-ல் அரசரைக் கொன்றவர் களில் பத்து பேர் தூக்கிலிடப்பட்டனர். மற்றும் மூன்று பேர் ஹாலந்திற்குக் கடத்திச் செல்லப்பட்டு 1662-ல் தூக்கிலிடப் பட்டனர். அதே ஆண்டில் அரசரைக் கொல்லாதவரெனினும் வாழவிடுவது ஆபத்தானது என்று சார்லஸினால் அறிவிக்கப்பட்ட சர் ஹென்ரி வேன் என்பாரும் அக் கதிக்கு ஆளானார். இந்தப் பதினான்கு உயிர்களும் இரண்டு உள்நாட்டுப் போர்களுக்குக் கைம்மாறாகக் கிடைத்தன. மற்றப் புரட்சிக் காலத் தலைவர்களில் லாம்பர்ட்டும், ஹேசல்ரிஜ்ஜும் ஆயுள் தண்டனை பெற்றுச் சிறையிலேயே மடிந்தனர். லட்லோவும் அரசரைக் கொன்ற கூட்டம் ஒன்றும் ஸ்விட்ஸர்லாந்தில் நடோடிகளாக வாழ்ந்தனர். மேலும் சிலர் நியூ இங்கிலாந்திற்குச் சென்றுவிட்டனர்.

பொது நலத் துரைத்தனத்தின் சட்டங்கள் செல்லுபடியாகா என்று கொள்ளப்பட்டபோதிலும், சட்ட முறைமையைக் கிளாரண்டன் உடைத்தெரியவில்லை. அவர் பல பியூரிட்டன் நீதிபதிகளை நீக்காமல் வைத்துக்கொண்டதோடு பொதுநலத் துரைத்தனத்தில் இருந்த வழக்கு மன்றச் செயல் முறைகளை உறுதிப்படுத்தும் சட்டம் ஒன்றையும் கொண்டுவந்தார். இத்தகைய நீதிமன்றங்கள் தொல்லை மிகுந்த நிலச் சிக்கலைத் தீர்ப்பதற்கு உதவின. அரசர் நிலங்கள், திருச்சபை நிலங்கள், நேரடியாகப் பறிமுதல் செய்யப்பெற்ற பண்ணைகள் யாவும் திரும்பத் தரப்பட்டன. ஆனால், அரசரை ஆதரித்த பலர் பாராளு மன்றம் தங்கள்மீது சுமத்திய வரிகளையும் அபராதங்களையும் செலுத்த இயலாது, தங்கள் நிலங்களை விற்றிருந்தால் அவர் களுக்கு மீண்டும் நிலம் கிடைக்க வழியில்லை. இங்ஙனம் பெருமளவினதான சொத்துகள் பியூரிட்டானியர் கைகளிலேயே தங்குமாறு விட்டது அவரது கட்சியைச் சேர்ந்தவர்களிடம் மிகுந்த கசப்பையும் ஆத்திரத்தையும் ஊட்டியது.

மிக முக்கியமான வேலையாக இருந்தது (ஒரு ராஜாங்கக் காரிய தரிசி எழுதியதைப்போல) 'நாட்டில் நிரந்தர நடுக்கத்தைத் தந்து' பொருள் விரயத்திற்குக் காரணமாக இருந்த சேனையைக் கலைப்பதுதான். 1661-ல் 35,000 படைவீரர்கள் சம்பள பாக்கியைப் பெற்றுக்கொண்டு ஒரு விதக் கிளர்ச்சியும் செய்யாமல் சேனையை விட்டு விலகினர். அவர்கள் தங்களிட மிருந்த கட்டுப்பாட்டினைப் பொது வாழ்க்கைக்குக் கொண்டு சென்றனர். அவர்கள் பிற்கால 'விக்' கட்சியால் வலிமை பொருந்திய பகுதியாக மாறினர்கள். வெளிநாட்டிலிருந்தபோது

சேர்த்துக்கொண்ட சில வீரர்களையும், மான்க்கின் சேனையில் கோல்டுஸ்டிரீம் படைகளையும், டன்கிர்க் நிலைப்படையோடு சார்லஸ் தம் காவற் படையாக வைத்துக்கொண்டார்.

பிரத்தியேகப் பாராளுமன்றம் இக் காவற்படைக்குப் பணம் ஒதுக்கிய பிறகு, சார்லஸின் வாழ்நாள் முழுதும் ஆண்டொன்றுக்கு, 1,200,000 பவுன்கள் மொத்த வரும்படி வருவதற்கான ஏற்பாட்டினைச் செய்தது. வார்டு நிர்வாகச் சபையினை ஒழிப்பதற்காக நீடித்த பாராளுமன்றம் கொண்டுவந்த மசோதாவை உறுதிப்படுத்தியதாலும், நிலமானிய முறைப்படி பிரபுவுக்குத் தரவேண்டிய கட்டணங்களை நீக்கிவிட்டதாலும், அரசர் நிலங்கள் பழைய நிலையை எய்தவில்லை யாதலாலும், இந்த வருமானம் சுங்க வரி, கலால் வரி இவற்றையே நம்பியிருந்தது. ஆனால், பல ஆண்டுகளுக்கு அரசரின் வருமானம் 800,000 பவுன்களுக்கு மேல் செல்லவில்லை. முதலாம் சார்லஸின் கடனைப்பற்றியோ, நாட்டை விட்டு வெளியேறியவர்களின் கடனைப்பற்றியோ, பாராளுமன்றம் எவ்வித ஏற்பாடும் செய்யவில்லை. போர்க் காலத்தின் நொடிப்பு என்று கூறுமளவிற்கு இருந்த அரசரின் ஏழ்மை நிலை சார்லஸின் ஆட்சி முழுவதையும் பாதிப்பதாக இருந்தது.

ப்ரெடாவில் அளிக்கப்பெற்ற மற்றொரு வாக்குறுதியைப் பிரத்தியேகப் பாராளுமன்றம் காப்பாற்றத் தவறியது. அது சமயப் பொறையைப்பற்றியதாகும். முன்னிலை மீட்சி ஒருவகை பிஷப்புகளின் ஆட்சியைக் குறிப்பாக உணர்த்தியபோதிலும், சார்லஸ் சமயப் பொறைக்கே முன்னுரிமை அளித்தார். காமன்ஸ் சபையில் பிரஸ்பிடீரியர் வலிமை பெற்று விளங்கினர். எனவே, உடனே பெறமுடியாத ஒன்றைக் காலப் போக்கில் சிறுகச் சிறுக அடையலாம் என்னும் நம்பிக்கையோடு திருச்சபை வாளாவிருப்பதைத் தவிர வேறொன்றும் செய்யவில்லை. சார்லஸ் தாற்காலிக நடவடிக்கையாக அக்டோபரில் ஒர்செஸ்டர் மாளிகைப் பிரகடனத்தை (Worchester House Declaration) வெளியிட்டார். அதன்படி பிரஸ்பிடர் சபைகள் பிஷப்புகளோடு தொடர்பு கொண்டன. சமயம் சார்ந்த வெண்ணிற அங்கியை அணிவது நிறுத்திவைக்கப்பட்டது. தொழுகை நூலைத் திருத்தி அமைப்பதற்காகச் சபை ஒன்றை அமைக்கத் திட்டம் தீட்டப்பெற்றது. பியூரிட்டானியத் தலைவர்களுக்கு பிஷப் பதவிகளும் டீன் (Dean) பதவிகளும் அளிக்கப்பட்டன. ரேனல்ட்ஸ் (Raynolds) என்பவர் நார்விச் சமயப் பிரிவின் தலைமையை ஏற்றார். பிரஸ்பிடீரியர்கள், சுயேச்சையாளர் (Independents) ஆகியவர்களிடையே

இருந்த பொருமைப் பூசல்களும், அவர்களிடம் காணப்பட்ட கத்தோலிக்கச் சமய எதிர்ப்பு உணர்ச்சியைக் கண்டு அரசர் கொண்ட அருவருப்பும், சமயச் சீர்திருத்தம் முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றத்திடம் ஒப்படைக்கப்படுதல் வேண்டும் என்ற உணர்வும் இந்த ஏற்பாட்டினை நிரந்தரமாகச் செய்ய எழுந்த முயற்சி தோல்வியுற்றதற்குக் காரணமாக இருந்தன.

1661-ல் புதிய ஆண்டு தோன்றியதோடு பிரத்தியேகப் பாராளுமன்றம் கலைக்கப்பட்ட பிறகு சூழ்நிலை மாறியது. ஆயிரக்கணக்கான மக்கள், அரசரைக் கொன்றவர்கள் இறப்பதையும், கிராம்வெல்லின் எலும்புகள் ஆப்பி (Abbey) ஆலயத்திலிருந்து வெளியேற்றப்படுவதையும் பார்த்திருந்தனர். பல்லாயிரக்கணக்கானவர் அரச குடும்பத்தினர் அனைவரும் திரும்பி வந்து முடிசூட்டு விழாவிற்கான ஏற்பாடுகளைச் செய்வதைக் கண்டனர். ஆயுதம் தாங்கிய அனபாப்டிஸ்டுகள் (Anabaptists), வென்னருடைய சூழ்ச்சியில் (Venner's plot) காவற்படையினைத் தாக்கிக் கிறிஸ்துவின் பேரரசைப் பறைசாற்றியதைக் கண்டு அச்சமுற்றனர். அத்தகைய பழிவாங்கும் சூழ்நிலையில் தேர்தல்கள் நடைபெற்றன. அத் தேர்தல்களின் விளைவாக 1678ஆம் ஆண்டு வரை நீடித்து இருந்த கெவலியர் பாராளுமன்றம் கூடியது.

கெவலியர் பாராளுமன்றம் முறையாகச் செயல்படு முன்னரே, பிஷப்புகளையும் பியூரிட்டானியரையும் கொண்ட செவாய் (Savoy) மகாநாடு கூடியது. ஆனல், அது விளைவேதும் இல்லாது கலைந்தது. விரைவிலேயே வயோதிகரான ஜக்ஸனுக்குப் (Juxon) பிறகு கான்டர்பரி ஆர்ச்பிஷப்பான ஷெல்டன் (Sheldon) எஃகு உள்ளமும், உறுதியான கட்சியையும் கொண்டவராக இருந்தார். ஆங்கிலிகன் திருச்சபை 1641ஆம் ஆண்டைப் போலவே சட்டத்தின் பாதுகாப்பைப் பெறமுடிந்தது. ஏற்கெனவே, அழையாது நுழைந்தவர்களை வெளியேற்றத் தொடங்கிவிட்ட கெவலிய ஆதரவாளர்கள், மாஜிஸ்டிரேட்டுகள் ஆகியோரின் உதவியைப் பெற முடிந்தது. புதிய பாராளுமன்றத்தில் ஐம்பது பியூரிட்டன் உறுப்பினர்கூட இல்லை. அரசரது சேவையில் உடல் உறுப்புகளையும், உறவினரையும், பொருள்களையும் இழந்தவர்களிடமிருந்து வந்த விண்ணப்பங்களினால் ஊக்குவிக்கப்பெற்று, கிராம்வெல்லின் படைவீரர்கள், குவேக்கர்கள், மறைவான சமயக் கூட்டத்தினர் (Conventicles) ஆகியவர்களுடைய கலகங்களைப்பற்றிய உண்மையும், பொய்யுமான வதந்திகளினால் சுரவேக நிலைக்குக் கொண்டு வரப்பட்டதன் விளைவாக அஃது உடனேயே எதிர்ச்செயல்களில் ஈடுபட ஆரம்பித்தது. 1661-ல் அரசரைச் சார்ந்த எதனையும்

கண்டிக்கும் வழக்கத்தைத் தடை செய்யும் அரசத் துரோகச் சட்டத்தையும் (Treason Act), நாட்டுப் படைகளின் அதிகாரத்தை அரசரிடமே ஒப்படைக்கும் சேனைச் சட்டத்தையும் (Militia Act), இருபதுக்கு மேற்பட்டவர்கள் கையெழுத்திட்ட விண்ணப்பங்களைத் தடைசெய்யும் சட்டத்தையும், நூல்களையும் அச்சுத் தொழிலையும் தணிக்கை செய்ய உதவும் அனுமதிச் சீட்டுச் சட்டத்தையும் (Licensing Act), பிஷப்புகளையும் திருச்சபை நீதி மன்றங்களையும் (ஹை கமிஷன் நீதி மன்றங்கள் இல்லை யென்றாலும்) திரும்பக் கொண்டு வருவதற்கான சட்டங்களையும் நிறைவேற்றினர். அவர்களுடைய மாநகராட்சிச் சட்டத்தினால் (Corporation Act) ஆங்கிலிகத் திருச்சபைச் சடங்குகளுக்கு இணங்குபவர்களே நகராட்சியில் பங்கு பெற முடியும் என்று வகுத்தனர். படைச் சட்டத்தினால் (Militia Act) அரசாங்கத்தை எதிர்ப்பதில்லை என்னும் வாக்குறுதி அளிக்க வேண்டும் எனவும் கட்டாயப்படுத்தினர்.

கிளாரண்டன் சட்டத் தொகுப்பு என்று அழைக்கப்பெற்ற சட்டங்களைக் கிளாரண்டனே கொண்டுவரவில்லை. பிரபுக்களும் காமன்ஸ் சபையினருமே அவைகளுக்குப் பொறுப்பானவர். ஒரே வழிபாட்டுமுறைச் சட்டம், திருத்தியமைக்கப்பட்ட வழிபாட்டு நூலைத் (Prayer book) திணித்தது. குருமார் கூட்டம் மேலும் கால்வினிசத்தை எதிர்ப்பதாகச் செய்தது. ஒவ்வொரு குருவும் பிஷப் ஒருவரிடமிருந்துதான் பட்டத்தைப் பெறவேண்டும் என்றும் பள்ளியாசிரியர்களோடு அவர்களும் மன்னரை எதிர்ப்பதில்லை என்னும் வாக்குறுதி தரவேண்டும் என்றும் வகுத்தது. கடுமையற்ற உரிமைக் கட்டுப்பாடுகளைப் புகுத்துமாறும், வெளியேற்றப் பட்டவர்களுக்குப் பண உதவி அளிக்குமாறும், மன்னரும் பிரபுக்களும் சொன்ன யோசனைகள் எடுபடவில்லை. ஆனால், அதே சமயத்தில் கலகங்கள் ஏற்படும் என பயந்த கிளாரண்டன், மான்க்குடன் சேர்ந்து இச் சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வராமல் நிறுத்திவைக்க முயன்றார். ஆகஸ்டு மாதத்தில் தூய பார்த்தலோமியூ கறுப்பு வெள்ளிக்கிழமை யென்று அழைக்கப் பட்ட நாளன்று 1500 குருமார்கள் ஆங்கிலிகத் திருச்சபை யினின்றும் வெளியேறினர். மற்றும் 400 பேர்களாவது அதற்கு முன்பே கட்டாயமாக வெளியேற்றப்பட்டிருக்கவேண்டும். கெவலியரை ஒன்றுபடுத்திய சக்தியாகிய ஆங்கிலிகத் திருச்சபை வெறி, விரைவிலேயே கிளாரண்டனுக்கும் அவருடைய எதிரிகளுக்கும் இடையே இருந்த பூசலோடு தொடர்புகொள்ள ஆரம்பித்தது. 1662-63ஆம் ஆண்டு மாரிக் காலத்தில் கத்தோலிக்கராகிய பிரிஸ்டல் (Bristol), ஆர்லிங்டன் (Arlington), முன்னாள் பியூரிட்டன் சமயத்தவரான ஆஷ்லி கூப்பர் (Ashly Cooper)

ஆகியவர்களினுல் உந்தப்பெற்ற சார்லஸ், அரசரிடம் இயற்கையாக அமைந்த, நாட்டின் அமைதிக்காக தண்டனைகளை ஒதுக்கிவைக்கும் அதிகாரத்தை ஒப்புக்கொள்ளுமாறு பாராளுமன்றத்தை வேண்டினர். அவர் கத்தோலிக்கரைப் பதவிகளிலிருந்து விலக்கிவைக்க முயன்ருலும், அவர்களுக்கு இடம் கொடுப்பதை இணங்காதவர் பலர் எதிர்த்தனர். ஷெல்டன் (Sheldon) என்பவர் 'பாபிலோனின் பரத்தை' என்று குறிப்பிட்ட இச் செயலை இணங்காதவர் ஆதரிக்கவில்லை. சார்லஸ் சமயப் பிரிவினை உருவாக்க முயல்வதாகக் கூறி, நிதி வழங்கும் தங்களது அதிகாரத்தைப் பயன்படுத்திக் காமன்ஸ் சபையையும் அம் மசோதாவைக் கைவிடுமாறு செய்தனர். அவர்களுடைய பகைமை அத்துடன் நின்றுவிடவில்லை. 1664-ல் இரகசியத் தொழுகைக் கூட்டச் சட்டம் கொண்டுவரப்பட்டது. அதன்படி பொது வழிபாட்டில் பங்கு கொள்ளாதவர்கள் ஒரே குடும்பத்தைச் சாராது இருந்தால் 5 பேர்களுக்கு மேற்பட்டவர்கள் தொழுகைக்குக் கூடுவது சட்ட விரோதமாக்கப்பட்டது. 1665-ல் நிறைவேறிய ஐந்து மைல் சட்டம் (Five Mile Act) திருச்சபையினின்றும் நீக்கப் பெற்ற குருமார்கள் எந்த நகருக்கும் ஐந்து மைல் எல்லைக்குள் வந்து குடியேறுவதைத் தடை செய்தது. ஆயினும் மாறுபட்ட திருச்சபையையும், அரசரையும் நாடுவது இல்லையென்று வாக்குறுதி அளித்தவருக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டது. இங்ஙனம் தியாகி சார்லஸுக்கு (Charles Martyr) திருக்கோயில்களை உரிமையாக்கிய உணர்வின் அடிப்படையில் சட்ட புத்தகம், உள்நாட்டுப் போரை நிரந்தரமாக்கியது. இதனுல் ஆத்திரமடைந்த திருச்சபையாளர் ஒருவர், அரசரைக் கொன்ற கறைபடிந்தவர் கையிலிருந்து மீட்பினைப் பெறமுடியாது என்று காமன்ஸ் சபையில் குறிப்பிட்டார்.

நல்ல வேளையாக இச் சட்டங்களை நடைமுறைக்குக் கொண்டு வந்தபோது அவை அவ்வளவு கேடு விளைவிப்பனவாக இல்லை. பொதுவாகச் சமய ஒறுப்பு இருந்தது. குறிப்பாகக் குவேக்கர்கள் தொல்லைக்குள்ளானுர்கள். பன்யான் (Bunyan) என்பார் 12 ஆண்டுகள் சிறையில் வாடினர். தண்டனைகள் மிகுதியாக விதிக்கப் பெற்றன. ஆங்கிலிகத் திருச்சபையைச் சேராதவரைக் காட்டிக் கொடுக்கும் கும்பல் நன்ருகப் பிழைத்தது. ஆனுல், இத்தகைய சமய ஒறுப்பு எல்லா டயோசீக்களிலும் (Diocese) ஒரே மாதிரியாக இல்லை. பல மாஜிஸ்டிரேட்டுகளும் சட்டங்களைப் பலவிதமாகக் கையாண்டனர். உணர்ச்சி வேகம் பொங்கிய காலத்தில் சமய ஒறுப்பு தலை தூக்கியது. பியூரிட்டன் பிரபுக்களும் செல்வந்தரும் தங்கள் குடும்ப குருமார்களை வைத்துக்கொள்வதற்கும், மாண்டன்

(Manton), கலமி (Calamy), ஹோ (Howe) போன்ற புகழ் வாய்ந்தவரின் போதனைகளைக் கேட்பதற்கும் உரிமை கொண்டாடினர். ஸ்டோக் நீவிங்டனில் ஜான் ஓவனே (John Owen) ஃபிளீட்வுட்டை குருவாக்கினன். நீதிபதிகளும் ஜூரர்களும் தண்டனை அளிக்க மாட்டார்கள் என்று பிஷப்புகள் ஷெல்டனிடம் கூறினர். கெவலியருடைய செல்வாக்கு மிகுந்த காலம் மறையவே சமய ஒறுப்பினைக் குறைக்கப் பல சக்திகள் ஒன்றாக இணைந்தன. மன்னரும் அவர்தம் மந்திரிகள் பலரும் சமய ஒறுப்பில் காட்டிய அக்கறையின்மையும், பரந்த நோக்கமுள்ள திருச்சபையினரின் செல்வாக்கும், பகுத்தறிவாளரின் பெருக்கமும், சமய ஒறுப்பு வியாபாரப் பெருக்கத்திற்கு இடையூறானது என்ற நம்பிக்கையும், எல்லாப் பிராட்டஸ்டென்டுகளும் பதினான்காம் லூயிக்குப் பகைவர் என்னும் உணர்வும்தான் இத்தகைய மாற்றத்திற்குப் பொறுப்பானவை.

நாட்டிலே தோன்றிய இவ்வாறான எண்ணங்கள் கெவலியர் பாராளுமன்றத்தையும் பாதித்தது. பியூரிட்டன்களை ஒறுப்பதில் தீவிரமாக இருந்தபோதிலும், அதற்குத் தன்னுடைய அதிகாரத்தைக் குறைத்துக்கொள்ளும் எண்ணம் சிறிதும் கிடையாது. மேலும், அஃது ஆட்சி புரிந்த 17 ஆண்டுகளில் 300 தொகுதிகள் உறுப்பினரை மாற்றிவிட்டன. அதற்கு முன்பிருந்த பாராளுமன்றங்களைப் போன்றே அதனுடைய அரசியல் நோக்கமும் மாற்றமின்றி இருந்தது. அதனுடைய குற்றச்சாட்டுப் பயமுறுத்தலுக்குப் பணிந்து, மூன்று அமைச்சரவைகள் தொடர்ச்சியாக வீழ்ந்தன. மன்னர் தன்னுரிமையாக இருமுறை கொணர்ந்த பொறுத்தலறிக்கைகளை (Declaration of Indulgence) அழித்தது. புதிய தொகுதிகளை ஏற்படுத்தும் அரசரின் 'உரிமையை'ச் சார்லஸுக்கு அளிக்க மறுத்தது. 1670–71-ல் நிறைவேறிய தீர்மானங்கள் பண மசோதாவைத் திருத்தும் உரிமையைப் பிரபுக்கள் சபையிடமிருந்து நிரந்தரமாகப் பறித்தன. 1641ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட மூன்றாண்டுச் சட்டம் (Triennial) தன்னியல்பாக எழும் நிறுவனத்தைப் பொறுத்தவரையில் ரத்து செய்யப்பட்டபோதிலும் 1664-ல் மேற்கொள்ளப்பெற்ற நடவடிக்கைகளினால் மூன்றாண்டுக் கொள்கையை அப்படியே மாற்றாமல் இருந்தது.

காமன்ஸ் சபை உறுப்பினர்கள் மன்னர்மீது கொண்ட அவநம்பிக்கை சார்லஸைப் பணத் தட்டுப்பாடு நிலையிலே வைத்து இருந்தது. அது கையாண்ட நிதியளிப்பு முறையும் போர்த்துறையின் கணக்குகளைப் பரிசீலிக்கும் வழக்கமும் மன்னர்மீது பாராளுமன்றத்தினர் கொண்ட நம்பிக்கையின்மையை வெளிப்படுத்துகின்றன.

இத்தகைய உரிமை மீறுதலை ஏற்றுக்கொள்ளாத கிளாரண்டன், கெவலியர் பாராளுமன்றத்தின் கூட்டங்களின் காலத்தைக் குறைத்துவந்த சமயத்தில், மற்றவர்கள் மந்திரிக் கட்சி ஒன்றை ஏற்படுத்தி அதன்மூலம் பாராளுமன்றத்தை அடக்கி ஆளவேண்டு மென்று உணர்ந்தனர். கிளாரண்டனின் செல்வாக்குச் சிறிது சிறி தாகக் குறைந்தது. அவர் தனியரானர். ஆர்மாண்டி, அயர் லாந்தை ஆட்சிபுரிவதற்காகத் திரும்பிச் சென்றுவிட்டார். சௌதாம்டன் நோய்வாய்ப்பட்டார். நிக்கோலஸ், தம்முடைய செயலாளர் பதவியை, அரசருடைய ஆளான ஆர்லிங்டனிடம் ஒப்படைக்கவேண்டியதாயிற்று. கிளாரண்டனல் வெறுக்கப்பட்ட வரும், பிரஸ்பிடீரிய அரசியல்வாதிகளின் தலைவருமாகிய லாடர் டேல் (Lauderdale) அவர் நியமித்த மிடில்டனை (Middleton) ஸ்காட்லாந்திலிருந்து வெளியேற்றினர். பக்கிங்ஹாம் பிரபுவின் கட்சியில் ஓஸ்போர்ன் (Osborne), சேமூர் (Saymour) போன்ற இளைய கெவலியர்கள் சேர்ந்துகொண்டனர். ஆர்லிங்டனின் கட்சிக்காரரான கிளிஃப்போர்டு போன்றவர்கள் மன்னர் பக்கத்தி லிருந்து கிளாரண்டனைத் தாக்கினர். மாறுபாட்டுச் சமயத்தினர் மீது கொண்ட பரிவினல், ஆஷ்லி போன்றவர்கள் அவரைத் தாக்கி னர். திறமை மிக்க வில்லியம் காவன்ட்ரி (Coventry) போன்ற மற்றையோர் அரசாங்கத்தின் சீரழிவினைக் கண்டித்தனர். இங்ஙனம் பிற்போக்காளர்களாலும் பியூரிட்டானியராலும் வெறுக்கப்பட்ட அவர் தமது பழம்போக்கான தன்மை காரண மாகக் காமன்ஸ் சபையினரோடு மோதினர். அப்போது ஸ்காட்லாந் தையும் அயர்லாந்தையும் குடியேற்ற நாட்டு வியாபாரத்திலிருந்து நீக்கிவிடவேண்டும் என வற்புறுத்திய வியாபாரிகளும், அயர் லாந்துக் கால்நடைகள் இங்கிலாந்துச் சந்தைகளுக்கு வருவதை அறவே ஒழிக்க க்கோரிய நிலப்பிரபுக்களும் அச் சபையில் நிறைந் திருந்தனர். இதுபோன்ற மோதல்களினலும், கிளாரண்டனின் சொற்பொழிவுகளினல் சோர்வடைந்த சார்லஸ் தம்முடைய காமக் கிழத்தியாகிய காஸில்மெயின் சீமாட்டியைக் கிளாரண்டன் மதிக் காததனலும், அவருடைய சமயப்பொறைத் திட்டங்கள் தோல்வி யுற்றதைக் கண்டும் கடுங்கோபம் கொண்டார். ஓர் அமைச்சர் எழுதியதைப்போல, கிளாரண்டனின் அமைச்சர் அவையில் இருந்த அனைவரும் எவ்வாறு அரசருக்கு எதிராகச் சார்லஸ் ஸ்டூவர்டுக்குக் கையூட்டி அளித்து நிலைமையைச் சமாளிக்க முடியுமென்று முயன் றனர். ஆனல், கிளாரண்டன் நீங்கினல்தான் மக்களிடையே ஒற்று மையும் போதிய வருமானமும் கிடைக்குமென்று சிறந்த அரசியல் வாதிகள் சார்லஸுக்கு எடுத்துரைத்தனர். கிளாரண்டனுடைய இறுதி வீழ்ச்சி அவர் வெளிநாட்டுக் கொள்கையில் கண்ட பெருந் தோல்வியின் விளைவாக வந்தது.

நிலைமையைச் சமாளிப்பதற்காக அவருடைய அரசாங்கம் அமைதியை விரும்பியது. வடக்கில் ஏற்பட்ட ஒலிவா (Oliva) உடன்படிக்கையும் போர்க் குணம் மிக்க பத்தாம் சார்லஸின் மறைவும், தெற்கிலே பிரன்னீஸ் சமாதானமும், கிளாரண்டன் விரும்பிய அமைதியை அளிப்பதுபோல் தோன்றின. என்றாலும் வெகு சீக்கிரத்திலேயே ஸ்பானிய இளவரசியை மணந்துகொண்ட பதினான்காம் லூயி, ஸ்பானிய வாரிசு உரிமையைக் கோரினர். போலந்து நாட்டில் தோன்றிய வாரிசு உரிமைப் போட்டி வடபகுதியில் முன் ஏற்பட்ட சண்டைகளை மீட்பதாக இருந்தது. சார்லஸும் ஐரோப்பாவுடன் தொடர்புகொள்ளாமல் தனித்து நிற்கவில்லை. அவர் திருமணம் செய்துகொள்ளவேண்டும்; ஒப்பந்தங்களின்மூலமாக இழந்த வாணிபத்தை மீட்கவேண்டும்; பியூரிட்டன் கலகக்காரருக்கு எதிராக ஐரோப்பிய நாடுகளின் ஆதரவைப் பெறவேண்டும் என்னும் காரணங்களினால் சார்லஸ் ஐரோப்பாவுடன் தொடர்புகொள்ளாமல் தனித்துநிற்க முடியாது. இந்த நிலையில் 1661ஆம் ஆண்டில் கிராம்வெல்லினால் விட்டுச் செல்லப்பட்ட கொள்கைகளையே போற்றவேண்டியதாயிற்று.

பேச்சு வார்த்தைகளிலிருந்து ஹாலந்துடன் நட்புரிமை கொண்டாடுவது கடினம் என்பது புரிந்தது. ஜெமைகா (Jamaica), டன்கிர்க் ஆகிய பகுதிகளின்மீது உரிமை கொண்டாடுவதையோ, நீண்ட காலமாகப் போர்ச்சுகலுடன் நிகழ்த்திய போரைக் கைவிடவோ, ஸ்பெயின் திட்டவட்டமாக மறுத்தது. அதற்கு மாறாகப் போர்த்துகீசியர் கவர்ச்சி மிகுந்த ஆசை காட்டினர். ப்ரகான்ஸாவைச் சேர்ந்த காதரைன் என்பவளைச் சார்லஸுக்கு மணம்முடித்து வைப்பதாகவும், வியாபாரச் சலுகைகள் வழங்கு வதாகவும், பம்பாய், டாஞ்ஜியர் (Tangier) போன்ற இடங்களைத் தருவதாகவும் ஆசை காட்டினர். இத்தகைய ஏற்பாட்டின்படி போர்ச்சுகலைக் காப்பதற்காக பிரிட்டன் தன் படைகளை அனுப்ப வேண்டி இருந்தாலும், ஏற்கெனவே, போர்த்துகீசியப் பேரரசில் பாதியைப் பிடித்துக்கொண்ட ஹாலந்து நாட்டோடு பகைமை வளரும் என்றாலும், பல நன்மைகளும் ஃபிரான்ஸிடமிருந்து மானியமும் கிடைத்தன. பதினான்காம் லூயியின் உடன் பிறந்த வரான ஆர்லியன்ஸுக்கும் (Orleans) சார்லஸின் சகோதரியான ஹென்ரியிட்டாவிற்கும் நடந்த திருமணத்தினாலும், 1662-ல் ஃபிரான்சுக்கு டன்கிர்க்கை விற்றதனாலும், இரண்டு நாடுகளுக் கிடையே தோன்றிய புதிய உடன்பாடு உறுதிப்பட்டது. இங்கி லாந்தின் ஏழ்மை நிலையும், பரிசாக வரும் ஐந்து மில்லியன் லிவர் களும் (Livres) இங்கிலாந்தை மறுபடியும் ஐரோப்பியப் போரில் ஈடுபடுத்தின. இதைக் கண்டு கிராம்வெல்லினர் ஆத்திரம்

கொண்டனர். பிராட்டஸ்டென்டு நாடுகள் கடுஞ்சினம் கொண்டன. செலவு மிகுந்த படையை வெளிநாடு அனுப்புவதற்கும், பயனற்ற துறைமுகத்தைத் தொலைப்பதற்கும், மான்க்கும் ஸரண்ட்விச்சும் ஒப்புதல் தந்தபோதிலும், கிளாரண்டனை மக்கள் மன்னிக்கத் தயாராக இல்லை. அவருடைய மாளிகையை 'டன்கிர்க் மாளிகை' என்று குறிப்பிட்ட மக்களுடைய பகுத்தறிவு பிழைபட்டதாக இருந்தபோதிலும் அவர்களுடைய உள்ளுணர்வு நியாயமானதே. பியூரிட்டானியர் புரட்சிபற்றிய பயமும், தம்முடைய நிலையைக் காத்துக்கொள்ளவேண்டும் எனும் ஆவலும் எப்படியாகிலும் ஃபிரான்சோடு உறவுகொண்டு, வேண்டும் காலத்தில் அந்நாட்டின் படை உதவி அளிப்பதாக இருந்த வாக்குறுதியும் கிளாரண்டனைத் தூண்டின.

ஃபிரெஞ்சுப் பேரரசின்மீது கொண்ட மதிப்பு, கத்தோலிக்கச் சமயப் பற்று, அவருடைய தாயார், சகோதரி ஹென்ரியிட்டா ஆகியோரின் செல்வாக்கு, டச்சுக் கடற்படையைக் காட்டிலும் ஃபிரெஞ்சு நிலப்படை அபாயமற்றது என்ற உணர்வு, அழிந்து கொண்டிருந்த ஸ்பானியப் பேரரசில் பங்கு பெறுவதில் பிரிட்டனின் நலன் பாதுகாக்கப்படும் என்னும் எண்ணம், இன்னோரன்ன காரணங்கள் இரண்டாம் சார்லஸை எப்போதும் ஃபிரான்சின் பக்கம் ஈர்த்தன. இவ்வளவு இருந்தும் ஃபிரான்சுடன் கூட்டுச் சேரும் முயற்சி அதிகப் பயனளிக்கவில்லை. கால்பர்ட்டினால் ஊக்குவிக்கப் பெற்ற ஃபிரெஞ்சுக்காரர் காப்பு வரிகளை உயர்த்தினர். வெளிநாட்டு நடவடிக்கைகளில் மேலும் தீவிரமாக இருந்தனர். கிராம் வெல்லினால் வெற்றிகொள்ளப்பெற்ற அகேடியாவைத் (Acadia) திரும்பத் தருமாறு கேட்டனர். மேற்கு இந்தியத் தீவுகளில் குடியேறி வாழ்ந்த பிரிட்டிஷ் மக்களைத் தாக்கினர். அதனோடு வடகடல் போன்ற குறுகிய கடல்களின்மீது சார்லஸ் போற்றிய உரிமையைப் புறக்கணிக்கும் வகையில் ஹாலந்துடன் உடன்படிக்கை செய்துகொண்டனர். 1662-ல் இருந்து 12 ஆண்டுகளுக்கு இங்கிலாந்தின் வெளிநாட்டுக் கொள்கையை வகுத்துச் செயல்படுத்தியவர் ஆர்லிங்டன் என்பவரே. பிறரைவிட ஐரோப்பாவைப்பற்றி அதிகமாக அறிந்திருந்த அவர் ஸ்பெயின் மீது அனுதாபம் காட்டினார். அவர் ஆரஞ்சு குடியைச் (Orange) சேர்ந்த மாதினை மணந்துகொண்டதன் விளைவாக ஒரு புதிய எதிர்காலம் தோன்றியது. ஆர்லிங்டனும் அவருடைய துணை அமைச்சராகிய வில்லியம்ஸனும் (Williamson) வெளிநாட்டு விவகார அமைச்சரவையைச் சீர்படுத்தி, ஆயப் பதிவேடுகளை ஒழுங்குபடுத்தி, அரசிதழை நிறுவினார்கள். மேலும் வில்லியம் டெம்பிள், சிட்னி கொடால்ஃபின் (Sidney Godolphin) போன்ற

திறமை மிக்கவர்களை வேலையில் அமர்த்திப் பயன்படுத்திக் கொண்டனர். அடுத்து வந்த பத்து ஆண்டுகளில் அவரைக் காட்டிலும் எதிர்மறையான செல்வாக்கினைப் பெற்றவர் யாரும் இல்லை. ஏனெனில், பதவியையும் பொருளையும் மிகுதியாக விரும்பியபோதிலும், சமயப் பற்றற்றவராக வாழ்ந்து, கத்தோலிக்கராக இருந்த அவர் நடுங்கும் சுபாவத்தினராக இருந்தார். பகுத்தறிவும் பயந்த தன்மையும் சேர்ந்து முதலில் அவரை அரசருடைய, அழிவுதரும் அண்டைய நாட்டுச் செயற்பாடுகளை எதிர்க்கவும் பிறகு அழிக்கவும் செய்தன.

ஃபிரான்சுக்கு எதிராகக் கூட்டு ஒப்பந்தம் செய்துகொள்வது கடினமான செயலாக இருந்தது. ஹாப்ஸ்பர்க்கினரிடையே வேற்றுமைகள் இருந்தன. ஸ்பெயின், போர்ச்சுகலை விட்டுக் கொடுத்துவிட விரும்பவில்லை. ஸ்பெயினின் நிதி நிலைமை சீரழிந்து இருந்தது. அதனுடையதாக இருந்த பெல்ஜிய மாகாணம் பாதுகாப்பு இன்றி இருந்தது. ஜெர்மனி ஃபிரான்ஸிடமிருந்து மிகுதியாகப் பொருள் பெற்று இருந்தபோதிலும் அந் நாட்டிலேயே பேரறிவு படைத்தவரான ப்ராண்டன்பர்கின் (Brandenburg) தேர்வாளர் ஹாப்ஸ்பர்கினரை வெறுத்தார். போலந்தில் தம்முடைய ஆதிக்கப் பெருக்கத்தை எதிர்த்த ஸ்வீடனுக்கு அஞ்சினர். நீண்ட காலமாக ஃபிரான்ஸின் கட்சியில் இருந்த ஸ்வீடன் டென்மார்க்கின்மீது தீவிரமான வெறுப்பை வளர்த்து வந்தது. ஐரோப்பாவில் பேரரசர் லியோபால்டு (Leopold), அவருடைய சிறந்த இராஜதந்திரியாகிய லிசோலா (Lisola), பெருந் தேர்வாளர் போன்றவர்கள் ஃபிரான்ஸிற்கு எதிராக இருந்தது என்னவோ உண்மை. ஆனால், பலதிறப்பட்ட பூசல்கள் அவர்களைப் பிரித்துவைத்தன. கத்தோலிக்கர், பிராட்டஸ்டென்டு ஆகியவரிடையே காணப்பெற்ற நெருக்கடி நிலையைப்பற்றிக் கூறத் தேவையில்லை. இறுதியாக, இன்றியமையாத நாடாகிய ஹாலந்து கூட்டில் சேராது தனித்து நின்றது. அந் நாட்டிற்கும் பிரிட்டனுக்குமிடையே 1664ம் ஆண்டில் நீண்ட நாட்களாக எதிர்பார்த்து இருந்த கடும்போர் மூண்டது.

முதலில் சார்லஸ் இப் போரினை விரும்பவில்லை. தம்முடைய அழிவிற்கே காரணமாக இருந்த இப் போரைக் கிளாரண்டனும் எதிர்த்தார். ஆனால், அதனுடைய காரணங்கள் தனி மனிதருடைய விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டவையாக இருந்தன. ஒரு குறிப்பிட்ட மக்களுடைய விருப்போடு அஃது அமைந்துவிடவில்லை. பிரிட்டிஷாரைப் பொறுத்தவகையில் ஆரஞ்சு விவகாரம் முக்கியமானது. 1660ஆம் ஆண்டில் தம்முடைய மகனாகிய இளைய

மூன்றும் வில்லியத்தைச் சார்லஸின் பாதுகாப்பில் விட்டு அவருடைய சகோதரியான மேரி இறந்தார். அதே சமயத்தில் டச்சுக்காரர் ஒதுக்கிவைக்கும் சட்டத்தை (Seclusion Act) ரத்து செய்தனர். வில்லியம் பட்டத்திற்கு வரும் பிரச்சினை பல ஆண்டுகளுக்கு எழப்போவதில்லை. குடியரசு உணர்வு மிக்க டச்சுக்காரர்கள் ஆரஞ்சு நாட்டின் முன்னிலை மீட்சி தங்களுடைய அதிகாரத்தை அழிக்கும் என்று அஞ்சினர். குடியரசு உணர்ச்சியின் அவதாரமாக இருந்தவர் ஹாலந்தின் பழம்பெரும் ஓய்வு ஊதியம் பெறுபவரான ஜான் டி விட் (John de Witt) என்பவரே. அவர் இங்கிலாந்தின் கொள்கைகளையும் செயல்களையும் சந்தேகக் கண்களோடு பார்த்ததோடு அவற்றை வெறுக்கவும் செய்தார். ஆரஞ்சு நாட்டிற்கு எதிராக ஃபிரெஞ்சு உதவியை எதிர் நோக்கினர். ஃபிரான்ஸே தம்முடைய நாட்டுப் பொருள்களுக்குச் சிறந்த அங்காடியாகும் என்பதை உணர்ந்தார். ஃபிரான்சோடு செய்து கொள்ளுகின்ற ஏற்பாட்டின்மூலமாகத்தான் ஸ்பானிய நெதர்லாந்தின் வருங்காலத்தை நிர்ணயிக்கமுடியும் என்பதனையும் அறிந்திருந்தார்.

ஆயின், இப் போரின் அடிப்படைக் காரணங்கள் ஏற்கெனவே கிராம்வெல்லோடு தொடங்கிய போரின் காரணங்களாகவே இருந்தன. 1654ஆம் ஆண்டு உடன்படிக்கை, அடிப்படையான எதையும் தீர்த்துவைக்கவில்லை. ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியும் டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனியும் தங்களுக்கிடையே மோதிக்கொள்வதை நிறுத்தவில்லை. புலோ ரன்னை (Pulo Run) டச்சுக்காரர் விட்டுக்கொடுக்கவும் இல்லை. நீயூ ஆம்ஸ்டர்டாமில் இங்கிலாந்திலிருந்து வந்து குடியேறிவர்களின் எண்ணிக்கை பெருகியது. கிராம்வெல் காலத்திலேயே இரண்டாம் முறையாகப் போர் மூண்டுவிடும்போல் இருந்தது. பிரத்தியேகப் பாராளுமன்றம் அவருடைய நாவாய்ச் சட்டத்தைத் (Navigation Act) திரும்பக் கொண்டுவந்தது. அதே சமயத்தில் முன்னாள் இராஜாங்க மந்திரியாக இருந்த தர்லோ, தம்முடைய கெவலியர் வாரிசுக்கு, டச்சு வணிகக் கொள்கையும், வணிகத் தனியுரிமையும் இங்கிலாந்தை அழித்துவிடும் எனும் குறிப்பினை விட்டுச் சென்றிருந்தார். 1662-ல் டச்சுக்காரரோடு புதிய உடன்படிக்கை ஒன்று செய்து கொள்ளப்பெற்றது. இதனால் மறுபடியும் ஆழமான சிக்கல்கள் தீர்வின்றி ஒதுக்கிவைக்கப்பெற்றன. எனவே, இங்கிலாந்தின் மீன் பிடிக்கும் நிலையங்களைக் காக்கப் போர் வேண்டுமென்று வாணிபச் சங்கத்தினர் கூக்குரலிட்டனர். கிழக்கு நாடுகளில் டச்சுக்காரர் அரசர்களோடு செய்துகொண்ட ஒப்பந்தங்களினால் ஆங்கில வாணிபம் நடைபெற முடியவில்லை. உரிமைபெற்ற

கம்பெனிகளும் காமன்ஸ் சபையினரும் கண்டனம் தெரிவித்தனர். அப்போது நாடு கடத்தப்பட்ட பியூரிட்டானியர் ஹாலந்தில் இருந்துகொண்டு சூழ்ச்சி செய்தனர் என்ற வதந்திகள் பரவின. டச்சுக்காரரின் முறைகேடான வணிகப் போட்டியைப்பற்றிய குற்றச்சாட்டுகள் குவிந்தவண்ணம் இருந்தன. பேரரசுப் போட்டியின் விதைகள் முளைவிட ஆரம்பித்தன. மேற்கு இந்தியாவில் கோவா தவிர மற்ற இடங்களில் இருந்த போர்த்துகீஸிய வணிகக் களங்களை டச்சுக்காரர் அழித்தனர். நியூ இங்கிலாந்து குடியேற்றம் தன்னையும் தென் குடியேற்றங்களையும் பிரித்து வைத்து, நாவாய்ச் சட்டங்களை நடைமுறைக்குக் கொண்டுவரத் தடையாக இருந்த நியூ ஆம்ஸ்டர்டாமைத் தாக்கவேண்டுமென்றது. 1664ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் நியூ ஆம்ஸ்டர்டாமைக் கைப்பற்றி அதற்கு நியூயார்க் என்னும் பெயரிட்டது. இத்தகைய வன்முறைத் தாக்குதல்கள் கோல்டு கோஸ்டில் (Gold Coast) மிகுதியாக ஏற்பட்டன. அங்கே ஒவ்வொரு வணிகக் களத்தின் உரிமைப் பத்திரமும் சர்ச்சைக்கு இடமானது. அரசாங்கமோ, அடிமைகளை விற்கும் கூட்டத்தினரின் போட்டிப்பொருளாக இருந்தது. பல கைகலப்புகளுக்குப் பிறகு டச்சுக்காரர் அட்மிரல் ரூய்ட்டர் (Admiral Ruyter) என்பவரை அனுப்பினர். அவர் ஏறக்குறைய கோல்டு கோஸ்டு முழுவதையும் திரும்பக் கைப்பற்றிக் கொண்டு, நியூயார்க்கைக் கைப்பற்றுவதற்காக அட்லான்டிக் மாகடலைக் கடந்து சென்றார். மற்ற போர்களைப்போலவே பகை நாடு பணிந்துவிடும் என்று இங்கிலாந்தும் ஹாலந்தும் எதிர்பார்த்தன. டச்சுக்காரர் பணிந்துவிடுவார்கள் என்னும் எண்ணம் கொண்ட தி ஹேக்கில் (The Hague) இங்கிலாந்தின் தூதுவராக இருந்த டௌனிங் (Downing) கிராம்வெல்லின் காலத்தில் வெற்றி கிடைத்ததைப் போலவே இப்போதும் வெற்றி கிட்டும் என உறுதியாக நம்பினர்.

இப் போர் இங்கிலாந்தில் கடல் சார்ந்த மக்களிடையே பேரார்வம் ஊட்டிய பொது விருப்பான போராகத் தொடங்கியது. பொதுவாக இங்கிலாந்தின் கடற்படை வலிமை மிக்கதாகக் காணப்பட்டது. 1665-ல் பெர்கன் என்னும் நார்வேயின் நடுநிலைமைத் துறைமுகத்தில் இருந்த டச்சுக்கப்பல் கூட்டத்தைப் பிடிப்பதில் சாண்ட்விச் படுதோல்வியடைந்தார். எனினும், லோவஸ்டாஃப்ட் என்னுமிடத்திற்கருகில் யார்க் பிரபு டச்சுக் கடற்படை ஒன்றை முறியடித்துப் பெருஞ்சேதம் விளைவித்தார். 1666ஆம் ஆண்டில் தவறான அடிப்படையில் பிரிட்டிஷ் கடற்படை பிரிக்கப்பட்டதனால், குறைந்த அளவுள்ள கப்பல்களை வைத்துக் கொண்டு, டௌன்ஸ் என்னுமிடத்தில் ஜூன் மாதத்தில் மான்க்கு

நான்கு நாட்களுக்குக் கடுமையாகப் போராடவேண்டி இருந்தது. ஆயினும், ஜூலையிலும் ஆகஸ்டிலும், அவர், ரூபர்ட்டோடு (Rupert) சேர்ந்து பகைவரைத் துறைமுகங்களில் சென்று அடையுமாறு செய்தார். இவ்வாறு சம வலிமையுள்ள இரண்டு கடற்படைகளுக்கிடையே நிகழ்ந்த கடுமையான சண்டையில் பதினெட்டு மாதங்களில் இங்கிலாந்து 39 கடற்படைப் பிரிவு அதிகாரிகளை இழந்தது. என்றாலும் பொதுவர்கக் கடற்படைத் தலைமை திறமை மிக்கதாக இருந்தது. நுண் நய முறைகள், பீரங்கிகள், பாய்மரம் இழுத்துக் கட்டப்பெற்ற கப்பல்களின் முன்னனி, முதற்படி ஆகியவை பிரிட்டிஷ் கடற்படை எத்துணை தூரம் முன்னேறியிருந்தது என்பதற்குச் சான்றாக அமைந்தன. ஆனால், வெற்றியும், உறுதி தளர்ந்த மக்களையும், மதிப்பிழந்த மந்திரி சபையையும் காக்க முடியவில்லை.

பேரிழப்பிற்குக் காரணமான இடர் இருமுறை இங்கிலாந்திற்கு ஏற்பட்டது. 1665 மே மாதம் தோன்றிய பெருங்கொள்ளை நோய் (Great Plague), அவ்வாண்டில், லண்டன் நகரத்தில்மட்டும் 68,000 பேரைக் கொன்று, அடுத்த ஆண்டில் பிற மாநிலங்களிலும் பரவியது. அதனால், கோல்செஸ்டரில் (Colchester) 5,000-க்கு மேற்பட்டவர் மடிந்தனர். போர்ட்ஸ்மவுத்தில் (Portsmouth) கப்பல் துறைக்கு வெளியில் உள்ள சவக்குழிகளில் பிணங்களைக் காக்கைகள் கொத்தின. பாராளுமன்றம் ஆக்ஸ்ஃபோர்டில் கூடியது. அரசவை சாலிஸ்பரிக்குச் சென்றது. ஆனால், மான்க்கும் ஆர்ச்பிஷப் ஷெல்டனும் லண்டனிலேயே தங்கினர். லண்டன் நகரம், கதவடைத்த வீடுகளைக்கொண்ட மயானமாகவே காட்சி அளித்தது. கதவுகளில் சிவப்புச் சிலுவையிட்டு 'கர்த்தரே எம் மீது கருணை கொள்ளவேண்டும்' என்னும் வாக்கியத்தைப் பொறித்திருந்தனர். பிணங்களைத் தூக்கிச்செல்லும் வண்டிகளுக்காக மணிகள் ஒலித்துக்கொண்டே இருந்தன. சடங்குகளற்ற சவ அடக்கங்கள் நடைபெற்றன. பெருங் கொள்ளை நோயினால் சீர் குலைந்து, போரின் விளைவாகப் பாதிக்குமேல் அழிந்த வாணிபம் தலையெடுக்கவில்லை. அதுபோது 1666ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் பெருந் தீ லண்டன் மாநகரத்தை அழித்தது. நீண்ட வறட்சிக்குப் பிறகு, ஒரு நாள் சிறு காலைப்போதில், லண்டன் மேம் பாலத்திற்குக் கிழக்கில் புட்டிங் சந்தில் (Pudding Lane) தீப் பிடித்தது. அத் தீ, கிழக்குத் திசையிலிருந்து வந்த புயற்காற்றினால் வீசப்பெற்று மரச் சட்டங்களும் மரத் துண்டுகளும் கொண்டு கட்டப்பெற்ற வீடுகளும், முக்கோணச் சுவர் முகடுகளினால் கவியப்பெற்று, வண்டிகள் போகமுடியாத அளவிற்குக் குறுகிய தெருக்களும் நிறைந்த நகரத்திற்குள் பரவியது. நான்கு நாட்களுக்கு நீடித்த

பெருந் தீ, முதலில் ஆற்றங் கரையையும் மேம்பாலங்களையும் அழித்தது. வடக்கில் கார்ன்ஹில், ராயல் எக்ஸ்சேஞ்சு (Royal Exchange) வரையிலும், மேற்கில் பிளாக்:ப்ரியர்ஸ் (Blackfriars) வரையிலும் எரித்தது. மூன்ருவது நாளில் சீப்சைடு (Cheapside) ஸெயின்ட் பால், :ப்ளீட் தெரு ஆகியவற்றைத் தரை மட்டமாக்கி, இன்னர் டெம்பிள் (Inner Temple), நியூகேட் (Newgate) வரை அழிவு வேலையைச் செய்தது. பேரோசையோடு இடிந்துவிழும் சுவர்களுக்கும் கோயில்களுக்கும் இடையே, ஆக்ஸ்:போர்டிலேயே கதிரவன் மறைவைக் களங்கப்படுத்திய புகைப் புழுதிமண்டலத்தின் நடுவே லண்டன் நகர மாந்தர் படகுகளில் தப்பி ஓடினர். பலர் மூர் நிலங்களிலும் (Moorfields) ஹைகேட் குன்றுகளிலும் (Highgate hills) சென்று தங்கினர். இத் தீ விபத்தில் பதின்மூன்ருயிரம் வீடுகளும் எண்பத்தி நான்கு கோயில்களும் அழிக்கப்பட்டன. அவைகளோடு சுங்கத் துறையும், அஞ்சல் நிலையமும், ஜவுளி வியாபாரத்திற்காக வைக்கப்பெற்று இருந்த இருப்பும் அழிந்தன. காப்பீடு செய்யப்பெற்ற கப்பல் தொழில், வாடகையில் 60,000 பவுன்கள் ஆகியவை தவிர மற்றவையெல்லாம் மறைந்தன. சீப்ஸைடில் நின்றுகொண்டு ஆற்றினைக் காணும் அளவிற்கு அழிந்து, போர்டர்ஸில் (Borders) இருந்து வந்த ஒருவரால் வெஸ்ட்மோர்லண்ட் சதுப்பு நிலத்தில் காணப்படும் பழுப்பு நிறக் கற்குவியல்களோடு ஒப்பிடப்பட்ட சீரழிந்த லண்டன் நகரச் சூடான புழுதியைக் கடந்து, பாராளுமன்றத்தினர் வெஸ்ட்மினிஸ்டரை அடைந்தனர். அப்போது கத்தோலிக்கரும் :பிரெஞ்சுக்காரரும் செய்த சூழ்ச்சியைப்பற்றிப் பெரிதாகப் பேச்சு எழுந்தது.

பாராளுமன்ற உறுப்பினர் உள்ளங்களிலும் தணல் கொந்தளித்தது. போர் தொடங்கியபோது மூன்ருண்டுகளுக்கு அவர்கள் அளித்த இரண்டரை மில்லியன் பவுன்கள் ஓராண்டிலேயே மறைந்துவிட்டது. மனக்கசப்போடு மேலும் ஒன்றேகால் மில்லியன் பவுன்களைப் போருக்காக ஒதுக்கினர். பெருந் தீக்குப் பிறகு மறுபடியும் இரண்டு மில்லியன் பவுன்களை அளித்து, வரிகளின் வரம்பினைக் கிராம்வெல்காலத்து உச்ச அளவிற்குக் கொண்டு சென்றனர். ஆனல், அரசாங்கம் எல்லாக் கணக்குகளையும் பாராளுமன்றத்திடம் காட்டவேண்டுமென்று வற்புறுத்தினர். சார்லஸ் இக் கோரிக்கைக்கு இணங்காமல் பாராளுமன்றக் கூட்டத்தைத் தள்ளிவைத்தார். எதிர்க்கட்சியின் தலைவராகிய பக்கிங்ஹாமைப் பதவிலிருந்து விலக்கினர். அப்பொழுது நாணயக் கடன் கிடைப்பது அரிதாக இருந்தது. கப்பல் ஊழியர்களுக்குப் பல மாத ஊதியம் பாக்கியாக நின்றது. தேம்ஸ் ஆறு பனி உறைந்து இருந்ததாலும், வியாபாரக் கப்பல்கள் கிடைக்காததனல் லண்டன் நகரம் நிலக்கரி

இன்றி அல்லலுற்றது. பத்திரிகைக் குழுதான் தம்முடைய கப்பல் ஊழியரைக் கட்டுப்படுத்தி வைத்திருந்தது. பலர் தங்கள் தொழில்களை விட்டு விலகிச் சென்றனர். பியூரிட்டானியர் டச்சுக் காரரிடம் அனுதாபம் காட்டினர். இவைகளைக் காட்டிலும், ஸ்காட்லாந்தில் ஒப்பந்தக்காரர்கள் செய்த புரட்சியைச் சேனை கொண்டு அடக்கவேண்டி இருந்தது. ஹாலந்தோடு இணைந்து கொண்ட ஃபிரெஞ்சுக்காரர் கத்தோலிக்க அயர்லாந்தில் கொந் தளிப்பை உண்டாக்கினர்.

நம்முடைய வெல்திறம் தோல்விகண்டது. ஸ்பெயினுக்கும் போர்ச்சுகலுக்கும் இடையே சமாதானம் ஏற்படுத்தும் முயற்சியில் எந்தவித முன்னேற்றமும் காணமுடியவில்லை. டேனர்கள், டச்சுக்காரருடன் செய்துகொண்ட ஒப்பந்தத்திற்கு மாருக நடந்துகொள்ளவில்லை. ஸ்வீடன் நடுநிலைமை வகிப்பதைத் தவிர, நமக்கு உதவியேதும் புரியவில்லை. நம்முடைய நண்பராகிய முன்ஸ்டரின் (Munster) பிஷப், பணம் பெறுவதைத் தவிர வேறு ஒன்றும் செய்தாரில்லை. குறிப்பாக, மகா தேர்வாளரால் சரணடையும் நிலைக்குக் கொண்டுவரப்பட்டார். மகா தேர்வாளர் தம்முடைய மனதிற்கு வந்த நலன்களாகிய பிராட்டஸ்டென்டு சமய வளர்ச்சி, ஃபிரான்சுக்கு மறுப்பு ஆகியவற்றின் கொத்தளமாக ஹாலந்து அமையவேண்டுமென்று எண்ணினர். பதினன்காம் லூயி இரண்டு நாடுகளுக்குமிடையே பிளவு உண்டாக்க முயன்ருர்.

ஆனல், இரு தரப்பினரும் விடாப்பிடியாக இருந்தபோது ஹாலந்திற்கு முன்னுள் செய்துகொண்ட உடன்படிக்கையின்படி உதவ முன்வந்தார். அந்த உதவியை ஏற்றுக்கொள்வதில் ஹாலந்து ஆர்வம் காட்டவில்லையென்ருலும், இரண்டு கடலாதிக்க நாடுகளிடையே நடக்கும் நீண்டகாலப் போர் அவைகளை வலிமை யற்றவைகளாகச் செய்துவிடுமென்று உணர்ந்தார். அவருடைய கடற்படை ஹாலந்திற்கு ஓரளவு உதவி செய்தது. ஆனல், அவருக்குப் பயந்து பல நட்பு நாடுகள் இங்கிலாந்தோடு சேரவில்லை. பிராட்டஸ்டென்டு உணர்வு, ஆரஞ்சு சூழ்ச்சி ஆகியவற்றை ஃபிரான்சுக்கு எதிராகப் பயன்படுத்தி, அந் நாட்டோடு போர் தொடுக்க வேண்டுமென்று ஆர்லிங்டன் செய்த முயற்சிகள் பயனற்றுப்போயின. டி விட்டை (De Witt) ஃபிரான்சிடமிருந்து பிரிக்க முடியவில்லை. கயானவில் நம்முடைய குடியேற்றத்தை டச்சுக்காரர் பிடித்துக்கொண்டனர். அதே சமயத்தில் செயின்ட் கிட்ஸ் (St. Kitts), ஆன்டிகுவா (Antigua), மான்ட்செர்ராட் (Montserrat) ஆகிய இடங்களை ஃபிரெஞ்சுக்காரர் கைப்பற்றிக் கொண்டனர்.

பாராளுமன்றத்தின் முன் கிளாரண்டன் வரத் துணிய மாட்டார் என்று பலர் கூறியதால் திவாலாகி, பிளவுபட்டு, நண்பர்கள் யாருமின்றி இருந்த மன்னரும், கேபினெட்டும் எந்த நிபந்தனையிலாவது சமாதானம் செய்துகொள்ள உறுதி பூண்டனர். கிளாரண்டன் உட்பட ஃபிரெஞ்சு ஆதரவாளர் பதினான்காம் லூயியோடு இணைந்துகொள்ளுமாறு சார்லஸுக்கு ஆலோசனை கூறினர். 1667 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஃபிரான்சோடு ஓர் உடன்படிக்கை கையெழுத்தாகியது. அதன்படி ஃபிரான்ஸ் ஸ்பெயினோடு மேற்கொண்ட போரில் ஓராண்டு காலத்திற்கு நடுநிலைமை வகிப்பதாக நாம் அளித்த வாக்குறுதிக்குப் பதிலாக, ஃபிரான்ஸ் மேற்கிந்தியப் பகுதிகளைத் திருப்பித் தர ஒப்புக் கொண்டது. ஹாலந்தைச் சமாதானப்படுத்தி வழிக்குக் கொண்டு வரமுடியும் என்று ஃபிரான்ஸ் தந்த உறுதிமொழியினாலும், நிதி நெருக்கடி காரணமாகவும், போர்க் கப்பல்களைப் பயன் படுத்தாது இருப்பது, வாணிபத்தைக் காப்பதற்குமட்டுமே போரை நடத்துவது என்ற கேடு பயக்கும் முடிவினை எடுத்தனர்.

பெருங்கேடு தொடர்ந்து வந்தது. மே மாதத்தில் சமாதான மாநாடு கூடியபோது ஃபிரெஞ்சுப் படைகள் பெல்ஜியத்தைத் தாக்கின. ஆனால், எஃகு உள்ளம் படைத்த டிவிட் அதனை அதிகம் பொருட்படுத்தாது இங்கிலாந்தின்மீது சமாதானத்தைத் திணிப் பதிலேயே அதிக அக்கறை காட்டினார். ஜூன் மாதத்தில் டச்சுக் கடற்படையொன்று தேம்ஸ் ஆற்றில் புகுந்து ஷீர்னஸ் (Sheerness) மீது குண்டுகளை வீசி, சாத்தாம் நகர் (Chatham) வரை சென்றது.

அவர்களுடைய தீக் கப்பல்கள் இங்கிலாந்துக் கடற்படையில் பாதியை அழித்தன. ராயல் சார்லஸ் (Royal Charles) என்னும் ஆங்கிலக் கொடிக் கப்பலைப் பரிசுப் பொருளாகக் கொண்டு சென்றனர். மறுபடியும் ஆபத்து நிறைந்த பகுதிக்கு மான்க்கு அழைக்கப்பட்டார். ஆனால், ஆட்களில்லாத பீரங்கிகள், ஊழல் மலிந்த கப்பல் தளங்கள் ஆகியவற்றைக்கொண்டு வெடிமருந்து இல்லாமல் ஒன்றையும் அவர் சாதிக்கவில்லை. மக்கள் வருத்தத் தோடு ஆலிவர் கிராம்வெல்லின் நாட்களைப்பற்றிப் பேசினர். பகை பீரங்கிகள் லண்டன் மேம்பாலத்தில் ஒலித்துக்கொண்டு இருந்தன. அச் சமயத்தில் பாங்குகளில் நெருக்கடி தோன்றியது. கிளாரண்டன், 'டன்கிர்க், டான்ஜியர், பயனற்ற ராணி' ஆகிய வருக்கு எதிராகச் சுவரொட்டிகள் எழுதப்பட்டன. கத்தோலிக்க முற்றமைக்கும் பியூரிட்டன் பிரபுக்களின் கூட்டத்திற்கும் எதிராகக் கூக்குரலெழுந்தது.

ஜூலை மாதத்தில் ப்ரெடா (Breda) என்னுமிடத்தில் சமாதான உடன்படிக்கை கையெழுத்தாகியது. ஃபிரான்ஸ் அக்கேடியாவைப் பெற்றுக்கொண்டு, தன்னுடைய மேற்கு இந்தியத் தீவுகளில், வெற்றி கொண்ட பகுதிகளைத் திரும்பத் தந்தது. நியூயார்க், நியூ ஜெர்ஸி (New Jersey), டிலாவேர் (Delaware) ஆகிய இடங்களை இங்கிலாந்து தன்னிடமே வைத்துக்கொண்டது. டச்சுக்காரர்கள் கேப் கோஸ்ட் காஸில் (Cape Coast Castle), புலோ ரன், கயானா முதலிய இடங்கள் தவிர, மேற்கு ஆப்பிரிக்காவைத் தங்களிடமே வைத்துக்கொண்டனர். கொடி வணக்கப் பிரச்சினையில் நாம் நம்முடைய உரிமையை ஆங்கிலக் கால்வாய் வரையில் வைத்துக்கொண்டோம். ஜெர்மனி, பெல்ஜியம் ஆகிய நாட்டுப் பொருள்களைத் திரும்ப ஏற்றுமதி செய்ய ஹாலந்திற்கு அனுமதி அளிக்கும் வகையில் நாவாய்ச் சட்டம் திருத்தப்பட்டது.

இந்த உடன்படிக்கை இழிவைத் தரும் ஒன்றாகும். அதற்காக பலியாக ஒருவரை நாடு கேட்டது. கிளாரண்டனே அந்தப் பலியாக இருந்தார். ஒருவிதத்தில் அது சரியாகவே இருந்தது. ஏனெனில், டக்சுக்காரர் மெட்வேயில் (Medway) இருந்தபொழுது, அவர் பாராளுமன்றத்தைக் கூட்டுவதை எதிர்த்தார். அவரைக் காமன்ஸ் சபைத் தலைவர்களின் தூண்டுதலால், ஆகஸ்டில், சார்லஸ் பதவியிலிருந்து விலக்கினார். அதுசமயம் அப்படிக் கிளாரண்டனை விலக்கவில்லை என்றால், பாராளுமன்றத்தோடு சேர்ந்து 'செய்ய வேண்டிய காரியங்களைச் செய்ய முடியாமலே போய்விடும்' என்று சார்லஸ் ஆர்மாண்டிடம் கூறினார். அடுத்த இலையுதிர் காலத்தில் பொருந்தாத பொய் விளக்கங்களைக் கொண்ட குற்றங்களின் அடிப்படையில், கிளாரண்டன்மீது குற்றம் சாட்டப்பட்டது.

ஆனால், அநேகமாக ஏகமனதாக இருந்த பாராளுமன்றத்தின் ஆதரவும், ஃபிரான்சுக்கு எதிராக இருந்த நாடுகளின் ஆதரவும் இக் குற்றச் சாட்டிற்குக் கிடைத்தன. மன்னருடைய கட்டாயத்தின்பேரில், கிளாரண்டன் நாட்டை விட்டு ஓடினார். அதைத் தொடர்ந்து அவரை ஆயுட்காலம் முழுதும் நாடு கடத்தும் மசோதா ஒன்று நிறைவேற்றப்பெற்றது. தாம் 1674-ல் இறக்கும் வரையில் கிளாரண்டன் வெளிநாட்டிலேயே வாழ்ந்தார். அக் காலத்தில் சிறந்த வரலாற்று நூலினைத் திருத்தி அமைத்து முடித்தார். அந் நூலில் பிற்போக்கான இங்கிலாந்தின் பல தலைமுறையினருக்கும், தம்முடைய வெற்றியைப்பற்றிய செய்திகளைத் தந்தார். குறிப்பாக, தாராள முன்னிலை மீட்சியினால் திருச்சபையையும் சட்டத்தின் அடிப்படையில் அமைந்த அரசையும் மீட்டதைப்பற்றி நன்கு விளக்கினார்.

## சமகால நிகழ்ச்சிகள்

1661 மாஸரின் (Mazarin) என்பவருடைய மறைவு ; பதினன்காம் லூயியின் கவுன்சில்களில் லியோன் (Lionne), லோவாய்ஸ் (Louvois), கால்பர்ட் (Colbert) ஆகியோரின் தோற்றம்.

1662 வெர்ஸெயில்ஸில் கட்டட வேலை துவக்கம்.

1664 ஸெயின்ட் கோத்தார்டில் (St. Gotthard) துருக்கியர் தோல்வி.

1665 லண்டன் கெஜட் டின் (London Gazette) தோற்றம்.

1666 நியூட்டன் புவிஈர்ப்பு விதியைக் கண்டறிந்தார்.

1667 மில்ட்டனுடைய 'பேரடைஸ் லாஸ்ட்' (Paradise Lost), ரேஸின் (Racine), லீப்நிஸ் (Leibniz) ஆகியோருடைய முதல் முக்கிய நூல்கள் எழுதப்படுதல்.

1668 எய்க்ஸ்-லாசேப்பல் உடன்படிக்கை (Peace of Aix-la-Chapelle'); ஃபிரான்சுக்கும் பேரரசர் லியோபால்டுக்குமிடையே இரகசிய ஒப்பந்தம்.

1669 கிரீட் (Crete) துருக்கியர் கையில் வீழ்தல்.

ரெம்பிராண்ட் என்பவரின் மறைவு.

1670 ஹாப்ஸ்பர்க்கினருக்கு எதிராக ஹங்கேரியரின் சூழ்ச்சி.

லாக் (Locke) கரோலினவிற்கு அரசியல் சட்டத்தினை எழுதுதல்.

1672 ஜான் டி விட் கொலேசெய்யப்படுதல்.

1673 ஹாப்ஸ்பர்க்கினர் ஃபிரான்ஸை எதிர்க்க, டச்சுக்காரரோடு சேர்தல்.

ஃபிரான்டினக் (Frontenac) கியூபெக்கின் கவர்னராதல்.

1674 சிவாஜியின் தலைமையில் மராத்தியர், மொகலாயர் (Moguls) ஆதிக்கத்திலிருந்து நீங்கி உரிமை பெற்றவராக அறிவித்தல்.

செவில் என்னுமிடத்தில் முரில்லோவின் (Murillo) ஓவியம்.

–1696. போலந்தில் ஜான் ஸொபேயஸ்க்கியின் (John Sobieski) ஆட்சி.

1675 ரைன் ஆற்றில் டூரின் (Turenne) என்பவர் கொல்லப் படுதல்.
ஃபெர்பில்லின் (Fehrbellin) என்னுமிடத்தில் ஸ்வீடன் மக்கள்மீது பிரஷ்யர் பெற்ற வெற்றி.

1676 ஃபிரெஞ்சுக்காரரோடு ஏற்பட்ட போரில் ரூய்ட்டர் இறத்தல்.

1677 ஸ்பிநோஸாவின் 'எதிக்ஸ்' (Ethics) வெளியிடப் படுதல் ; அவர்தம் மறைவு.
ரேஸினின் 'பீட்ரே' (Phedre) வெளிவரல்.

1678 நீம்விகன் உடன்படிக்கை (Peace of Nimwegen).
பன்யனுடைய 'பில்கிரிம்ஸ் பிராக்ரஸ்' (Pilgrim' Progress) வெளிவருதல்.
லா சால் (La Salle) பெரிய ஏரியைக்கண்டுபிடித்தல்.

1679-1726 பவேரியாவின் இரண்டாம் மாக்ஸிமிலியன் (Maximilian) ஆட்சி.

1680 அரசவை ஓவியராக நெல்லருக்குப் (Kneller) பிறகு லீலி (Lely) வருதல்.

1681 ஸ்டிராஸ்பர்கை ஃபிரெஞ்சுக்காரர் கைப்பற்றுதல்.
பென்சில்வேனியாவை (Pennsylvania) நிறுவுதல்.
டிரைடன் என்பவர் 'அப்சலம் அண்ட் அச்சிடோபல்' (Absalom and Achitophel) எனும் நூலை வெளியிட்டார்.

1682 ரோமிற்கு எதிராக கால் நகரத்தினர் உரிமைகளைப் பிரகடனம் செய்தல்.

1683 வியன்னா (Vienna) என்னுமிடத்தை சோபோயிஸ்கி விடுவித்தல்.
பதினான்காம் லூயி மதாம் டி மெய்ன்டினன் (Madame de Maintenon) என்பவரை மணத்தல்.
டேம்பியர் (Dampier) பிரயாணத் தொடக்கம்.

1684 லாக் ஆக்ஸ்ஃபோர்டில் இருந்து துரத்தப்படுதல்.
ரேடிஸ்பன் (Ratisbon) உடன்பாடு; லக்ஸம்பர்க்கை ஃபிரான்ஸ் வைத்துக்கொள்ளுதல்.

1685 நான்ட்ஸ் ஆணைகள் (Edict of Nantes) நீக்கப்படுதல்.

# 2. இரண்டாம் சார்லஸ் மன்னரின் ஆட்சி : II. 1667–1685

கிளாரண்டனின் வீழ்ச்சிக்குப் பிறகு காமன்ஸ் சபையை மன்னர் நேருக்கு நேர் சந்தித்தார். அச் சந்திப்பின் விளைவு குறிப்பிடத்தக்கதாக இருந்தது. மன்னரின் தனியாட்சி உச்ச நிலையை எய்திய ஆறு ஆண்டுக்காலம், 1673-ல் பாராளுமன்றத்தின் வெற்றியில் முடிந்தது. அக் காலப் பகுதியில் கட்டுப்பாடான அரசியல் கட்சியின் தோற்றத்தினால், பொறுப்புள்ள அரசாங்கம் ஆழமாக வேரூன்றியது.

அந்த ஆறு ஆண்டுகள் இழிவானவை; இடர் மிகுந்தவை. மன்னர் ஒழுக்கக்கேட்டின் உச்ச வரம்பையே எட்டிவிட்டார். 1669-ல் கத்தோலிக்கராக மாறிய யார்க் கோமானும் அவ்வாறே இருந்தார். காபினெட் அல்லது கெபால் (Cabal) மந்திரி சபையில் (முதன்மையான ஐந்து அமைச்சரது ஆங்கிலப் பெயர்களின் முதல் எழுத்துக்களைச் சேர்த்தால் வருகின்ற பெயர்) பக்கிங்காம் போன்ற ஒரு மூடருக்கு வேறெந்த அரசரும் அத்துணைச் செல்வாக்கினை அளித்திருக்கமாட்டார். மற்றும் இருவர் தம்முடைய செயல்களின் மூலம் அதிகாரமும் பழிவாங்கும் பண்பும் தங்களைக் குற்றவாளிகளாக்கிவிடும் என்பதை நிரூபித்துக் காட்டினர். மன்னர் கடைப்பிடிக்கும் எந்த வழியையும் பின்பற்றத் தயாராக இருந்த லாடர்டேல் (Lauderdale), ஸ்காட்லாந்தியர் போற்றியவை அனைத்தையும் அழிக்கத் தயங்கவில்லை. இப்போது ஷாஃப்ட்ஸ்பரி (Shaftesbury) பிரபுவான ஆஷ்லி (Ashley) மிகுந்த திறமையாளர். சமயப் பொறையில் அசையாத நம்பிக்கை கொண்டவர். ஆட்சி முறையை, குறிப்பாகப் பொருளாதாரக் கூறுகளை எளிதில் புரிந்து கொள்ளும் ஆற்றல் பெற்றவர். எனினும், வெற்றி பெறும் பக்கத்தில் சாயும் பச்சோந்திப் பண்பினைப் பெற்றவராக இருந்து, மன்னரின் திருமண முறிவுத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கும்,

மக்களின் மனப்போக்கிற்கு ஏற்றவாறு ஒழுகவும் தயாராக இருந்தார். கிளி.:போர்ட் (Clifford) என்பவரோ துடிதுடிப்புடைய கெவலியராக இருந்தார். பாராளுமன்றத்திற்குரிய திறமைகள் அற்றவராக இருந்தபோதிலும், நேர்மைக் குணம் படைத்தவர். சமயத்தில் ஆர்வம் மிக்கவர். அவர் மற்றுமொரு டச்சுப்போர் ஏற்படவேண்டுமென்பதில் உறுதியாக இருந்தார். ஆர்லிங்டன் என்பவர்மட்டும் தாராள உள்ளம்கொண்ட அரசியல் வல்லுநராக விளங்கினுர். ஐரோப்பாவில் இங்கிலாந்து எதனைச் செய்யமுடியும் என்பதனையும், அரசியலில், மன்னர் எதைச்செய்யத் துணிய மாட்டார் என்பதனையும் ஓரளவு உணர்ந்து இருந்தார். சாதாரண அமைச்சர்களில் பெரும்பாலோர் ஆங்கிலேயரின் உண்மையான பிரதிநிதிகளாக இருந்தனர். அவர்களில் பலர் முன்னுள் கிராம்வெல் கட்சியைச் சார்ந்தவர்கள். எனினும், வலிமையற்ற மன்னராலும், அவர் தம்முடைய சகோதரரோடு கொண்ட விரோதம் காரணமாகவும், ஆர்லிங்டன், பக்கிங்காம் ஆகியோரிடையே தணியாத வெறுப்பு வளர்வதற்கு வாய்ப்பு அளித்ததனுலும் அரசாங்கத்தின் அடித்தளமே ஆட்டம் கண்டது.

கிளாரண்டன் ஆட்சிக்குத் துணை புரிந்தவர் அவருடனே அல்லது அவருக்குப் பிறகோ வீழ்ச்சியுற்றனர். மான்க்கின் மறைவு, ஒரு பெரும் நாட்டுத் தலைவரை நீக்கியது. ஆர்மாண்டு அயர்லாந்தில் துணைவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். சமயப்பொறைக் கொள்கையை மன்னர் வற்புறுத்தியதால் ஷெல்டனும் பிஷப்புக்களும் செல்வாக்கிழந்தனர். காமன்ஸ் சபை உறுப்பினர்மட்டும் மாருமல் இருந்தனர். அவர்கள் திருச்சபையில் யாவரையும் அங்கம் வகிக்கச்செய்யும் (comprehension) மசோதாவை ஆத்திரத்தோடு எதிர்த்தனர். மேலும், கடுமையான இரகசியத் தொழுகைக் கூட்டச் சட்டத்தினை (Conventicle Act) நிறைவேற்றினர். போப் சமயத்தவர் (Papist) மீது அவர்களுக்கு இருந்த சந்தேகம் வளர்ந்தது. இந்தக் கெவலியர்கள் பியூரிட்டன் எதிரிகளை ஒறுத்தனர் என்ருலும், அரசவையை எதிர்த்து ஆழ்ந்த கருத்து அரசியலில் உருவாகி இருந்தது. பாராளுமன்றத்தின் கூட்டம் ஒவ்வொன்றிலும் கடற்படை பிளவுபடுத்தப்பட்டதைப்பற்றியும், சாத்தாம் பாதுகாப்பின்றி விடப்பட்டதைப்பற்றியும் விசாரணை செய்தனர். காமன்ஸ் சபையின் அதிகாரிகளை நீக்கினர். அரசரது கணக்குகளைப் பரிசோதிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். மன்னருடைய கடன்கள் 2 மில்லியன் பவுனை உயர்ந்திருந்தது. எனினும், மன்ற உறுப்பினர் தங்களுடைய உரிமைகளை நிலைநாட்டுவதிலேயே முனைந்து, நிதி அளிப்பதில் தயக்கம் காட்டினர். எனவே, அவர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து நின்றபோதிலும்,

தனிப்பட்டவர்கள் கையூட்டு (லஞ்சம்) வாங்கியபோதிலும், அவர்களைக் கண்டு அமைச்சர்கள் அஞ்சினர். கூடுமானவரை குறைந்த அளவில் அவர்களைக் கூட்டினர். 1671ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் இரண்டு ஆண்டுகளுக்குப் பாராளுமன்றக் கூட்டம் தள்ளி வைக்கப்பட்டது. அதற்குக் காரணம் காபினெட்டை மன்னர் ஓர் இரகசியத் திட்டத்தில் ஈடுபடுத்தியதுதான்.

ப்ரெடா உடன்படிக்கை ஏற்பட்ட ஓராண்டிற்குள் ஆர்லிங்டனின் வெல்திறம் பல வெற்றிகளை அளித்ததாகத் தெரிந்தது. ஸ்பெயினோடு ஒரு முக்கிய வாணிப உடன்பாடு ஏற்பட்டது. ஸ்பெயினுக்கும் போர்ச்சுகலுக்கும் இடையே சமாதானம், பிரிட்டன், ஹாலந்து, ஸ்வீடன் ஆகியவற்றிற்கிடையே புகழ்வாய்ந்த முக்கூட்டு ஒப்பந்தம், ஸ்பெயினுக்கு எதிராகப் பதினான்காம் லூயி தொடுத்த போரை நிறுத்திய எய்க்ஸ்-லா-சேப்பல் உடன்படிக்கை போன்றவையும் உருவாயின. ஆனால், இந்த வெற்றி ஏமாற்றும் இயல்புடையதாக இருந்த ஒன்று. 1668ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் வில்லியம் டெம்பிளை முக்கூட்டு ஒப்பந்தம் செய்து கொள்ளுமாறு காபினெட் சொன்னதற்குக் காரணம், ஹாலந்திடம் அதற்கு இருந்த அன்பு அன்று. அதற்கு மாறாகத் தம்முடைய வாணிபத்தை அழித்து, ஸ்பானியத் தாழ்நிலங்களிலும்(Spanish Low Countries) குடியேற்றங்களிலும் தம் பகைவரின் ஆதிக்கத்தை வலிவடையச் செய்யக்கூடிய ஃபிரெஞ்சு-டச்சு உடன்பாடு ஏற்பட்டுவிடும் எனும் அச்சமே அதற்குக் காரணம். அதுமட்டுமன்றி, ஹாலந்தோடு தொடுக்கும் போருக்கு ஸ்பெயின் பண உதவி அளிக்காது என்பதனையும், இங்கிலாந்தும் ஃபிரான்சும் கூட்டாக இணைந்து ஹாலந்தோடு போர் புரிவதற்குப் பதினான்காம் லூயி அளிப்பதாகச் சொன்ன உரிமைக் கட்டுப்பாடுகள் குறைவாக இருந்தன என்பதனையும் தெரிந்துகொண்ட பிறகே இவ்வொப்பந்தத்தினைச் செய்து கொண்டனர். டி விட் ஃபிரெஞ்சுக்காரரிடம் அச்சங்கொண்டிருந்தாலும், ஆரஞ்சு இளவரசரை அதிகாரத்திற்கு வரவொட்டாமல் தடுக்கும் தம்முடைய திட்டத்திற்கு அவர்களின் உதவி விலைமதிப்பற்றதாக இருக்குமென்பதை உணர்ந்திருந்தார். அவர் இங்கிலாந்தை இதயபூர்வமாக நம்பவேயில்லை. வடக்கில் ஸ்பானிய ஆதிக்கம் அழிந்துவிடும் என்று எண்ணினார். பெல்ஜியத்தின் சிறு பகுதியைக்கொண்டு திருப்திகொள்வதாகக் கூறிய பதினான்காம் லூயியின் வழி எளியது என்றும் நினைத்தார். எனவே, அவர் முக்கூட்டு ஒப்பந்தத்தைச் செய்துகொண்டபோது அதனை ஐரோப்பாவில் சக்திச் சமநிலையைத் திருத்தும் கருவியாகவே கருதினார். அநேகமாகச் சிக்கலான கள்ளக்கடத்தல் பிரச்சினையில் ஆங்கிலேயர் அளித்த சலுகைகள் அவரை வெகுவாகக் கவர்ந்திருக்கவேண்டும்.

இந்த உடன்படிக்கையின் முதல் பகுதி பாதுகாப்பு ஒப்பந்த-மாகவே இருந்தது. ஆயின், இரண்டாம் பகுதியில் நட்பு நாடுகள் ஒருகாலத்தில் லூயி அளித்த உரிமைக்கட்டுப்பாடுகளை பிரான்சும் ஸ்பெயினும் ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தவேண்டும் என்று ஒப்புக்கொண்டனர். தம்முடைய மனைவியாரின் ஸ்பானிய அரசு வாரிசு உரிமையைக் கைவிடப்போவதாக அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்கான பேச்செதுவும் லூயியிடம் காணப்படவில்லை. பெல்ஜியத்தைப் பாதிக்காத வரையில் ஸ்பெயினுக்கு எது நேர்ந்தாலும் தமக்குக் கவலையில்லை என்பதை அவர் தெளிவாக்கினார். இவ்வாறு வலிமைமிக்க பெல்ஜியக் கோட்டைகளைப் பெற்ற லூயி ஏப்ரல் மாதத்தில் சமாதானம் செய்துகொண்டார். ஏற்கெனவே, குழந்தையாக இருந்த ஸ்பானிய மன்னர் இறந்தால், அந் நாட்டுப் பகுதிகளைப் பிரித்துக்கொள்வதென்று (ஆஸ்திரிய) பேரரசரோடு உடன்படிக்கையைச் செய்துகொண்டார். சுருங்கக் கூறுவதானால் முக்கூட்டு ஒப்பந்தம் வெற்றுச் சட்டமாகும். ஏனெனில், மூன்றாம் கூட்டாளியான ஸ்வீடனை மானியங்கள் அளித்துச் சமாதானப்படுத்தவேண்டியிருந்தது. மறுபுறத்தில் நொடித்திருந்த ஸ்பெயினிடமிருந்து மானியம் கொள்ள முடியவில்லை. எனினும், ஆர்லிங்டனின் திட்டப்படி இரண்டாம் சார்லஸும் டச்சுக்காரரும் நடந்துகொண்டிருந்தால் அந்த ஒப்பந்தம் ஓரளவு பயனுடையதாக இருந்திருக்கும்.

அவ்வாறு நிகழவில்லை. இரண்டு ஆண்டுகளுக்குள் மூன்றும் டச்சுப் போருக்கான திட்டங்கள் வகுக்கப்பெற்றன. அதற்கான காரணங்கள் ஏராளமாக இருந்தன. டெம்பிளின் வாணிப ஒப்பந்தப் பேச்சுகளை நமது கிழக்கு இந்தியக் கம்பெனி ஏற்க மறுத்தது. வாணிபத் தடை, கொடி ஆகியவைபற்றிய பழைய பேச்சுகள் மீண்டும் தொடர்ந்தன. சாத்தாம் நகரில் ஏற்பட்ட இழிவிற்குப் பழிவாங்கவேண்டும் என்ற எண்ணம் பல அரசியல்வாதிகளை ஆட்கொண்டது. அது மன்னரையும் மயக்கியது. டச்சுக்காரர் தங்களுடைய நோக்கில் உறுதியாக நின்றனர். ஹாப்ஸ்பர்கினரைப் பரந்த கூட்டமைப்பில் கொண்டுவரும் ஆசையும் அவர்களிடம் காணப்படவில்லை. இங்கிலாந்தில் டச்சு ஆதரவாளரான காபினெட் அமைச்சர் ஒருவர் அரசர் எவரிடத்தும் பயன்படுத்தாத மருட்சியை இங்கிலாந்து கடக்கவேண்டியிருந்தது என்று எழுதினர். பதினான்காம் லூயி, தம்முடைய வருங்காலத் திட்டங்களுக்காக நட்புறவினைக் காட்டிக்கொடுத்த ஹாலந்தை அழிக்கவேண்டுமென்று உறுதிபூண்டார். சார்லஸை அனுப்பித் தன்வசம் ஈர்ப்பதற்காகவும், ஆர்லிங்டன் மனதை மாற்றுவதற்காகவும் திறமை வாய்ந்த தூதுவரை வைத்தார்.

இரண்டாம் சார்லஸ் மரணப் படுக்கையில் கிடக்கும் வரை கத்தோலிக்கச் சமயப் பற்று இன்றியே வாழ்ந்தார் எனினும், அவருடைய அன்பையும் அரசியல் ஆசைகளையும் அச் சமயம் பாதித்தது. அவரது சகோதரியான ஹென்ரீட்டா, சகோதரரும் வாரிசுமான ஜேம்ஸ், காஸில் மெய்பின் சீமாட்டி, அரசி ஆகிய அத்துணைபேரும் கத்தோலிக்கர்கள். அப்போது அஃது அரசர் பலரின் சமயமாகவும், மேன்மேலும் செல்வாக்கு மிகுந்து வரும் சமயமாகவும் காணப்பட்டது. உதாரணமாக, ஹூக்னோ சமயத்தில் தோன்றியவரான டூரென் (Turenne) என்பவர் தம் சமயத்தைத் துறந்து கத்தோலிக்கரானார். மேலும், ஜெர்மானியப் பிராட்டஸ்டான்டிஸம் வீழ்ச்சியுறுவதுபோல் காணப்பட்டது. சார்லஸிடம் பற்றுறுதி மிகுதியாகக் கொண்ட குடிமக்களில் சிலர் கத்தோலிக்கச் சமயத்தினராக இருந்தனர். இந்நிலையில் இங்கிலாந்தில் சமய ஒற்றுமை, பணநெருக்கடியைத் தீர்த்துக்கொள்ள ஃபிரெஞ்சு உதவி, டச்சுக்காரருக்கு தண்டனை, அதேசமயத்தில் தம்முடைய உறவினரான ஆரஞ்சு இளவரசருக்குப் பாதுகாப்பு, குடியேற்ற நாடுகளுடன் வாணிபம், பெல்ஜியத்தின் பாதுகாப்பு ஆகியவற்றைப் பெற வாய்ப்பான கொள்கை ஒன்றை வகுக்கச் சார்லஸ் முன் வந்ததில் வியப்பொன்றும் இல்லை. தம்முடைய சகோதரியால் தூண்டப்பெற்ற அவர், 1668-ல் ரகசிய கடிதப் போக்குவரத்தினைத் தொடர்ந்தார். ஏஜென்டுகளைத் தவிர யார்க் என்னும் ஒரே கத்தோலிக்கருக்குத்தான் தன் உள்ளக் கிடக்கையை வெளியிட்டார். கிளு·போர்டோ, ஆர்லிங்டனோ அது வரையில் அவரது வழிக்குத் திரும்பவில்லை.

ஆர்லிங்டனிடம் அரசியல் கொள்கை மாற்றம் காண்பது மிகக் கடினமாக இருந்தது. பல மாதங்களுக்குப் பேச்சுவார்த்தை தொடர்ந்தது. அவைகளில் ஆங்கிலேயர் ஃபிரெஞ்சுக் கடலாதிக்கத்தின்மீது கொண்டிருந்த பொறாமையை வெளியிட்டனர். உண்மையில் ஸ்பானிய அரசர் இறந்து ஃபிரான்சுக்குக் கிடைக்கின்ற பகுதிகளில் ஆஸ்டண்டு (Ostend), மைனார்க்கா, ஸ்பானிய அமெரிக்கா ஆகியவற்றைத் தாங்கள் பெறவேண்டுமென்று ஆங்கிலேயர் வற்புறுத்தினர். தாம் திடீரென இறப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்பே மதாம் (Madame) (ஹென்ரீட்டா) 1670 ஆம் ஆண்டு மே மாதத்தில் மறக்கமுடியாத டோவர் உடன்படிக்கை கையெழுத்து ஆவதை நேரில் காண இங்கிலாந்திற்கு வந்தார். அந்த உடன்படிக்கையின் உரிமைக் கட்டுப்பாடுகள் சார்லஸின் தயக்கத்தையும், குறைந்த அளவினதான குறிக்கோள்களையும் வெளிப்படுத்துவதாக இருக்கின்றன. அதன்படி சார்லஸ் தாம் குறிப்பிடும் ஒரு நாளில் உண்மைத் திருச்சபைக்கு (கத்தோலிக்கச் சமயத்திற்கு) மாறுவது

என்றும், அதற்காக ஆறு மாத காலத்திற்குள் ஃபிரான்ஸ் 2 மில்லியன் லிவர்களும், தேவைப்பட்டால் 6000 துருப்புக்களையும் அளிக்கவேண்டும் என்றும் விதிக்கப்பட்டது. சார்லஸின் சமய மாற்றத்திற்குப் பிறகுதான், ஃபிரான்ஸ் ஹாலந்தின்மீது போர் தொடுக்கும் நாளைக் குறிப்பிடுவது என்றும், அப் படையெடுப்பில் நேசக் கடற்படையை யார்க் கோமகன் தலைமை தாங்கி நடத்திச் செல்லவேண்டுமென்றும், இங்கிலாந்து ஆண்டொன்றுக்கு 3 மில்லியன் லிவர்கள் மானியமாகப் பெறவேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. இப் போரில் வெற்றிபெற்ற பகுதிகளில் வால்ச்செரன் (Walcheren) என்னுமிடத்தையும், ஷெல்ட் (Scheldt) பகுதியை நோக்கி இருந்த துறைமுகங்களையும் இங்கிலாந்து பெற வேண்டுமென்பதும், ஆரஞ்சின் நலன் பாதுகாக்கப்பெறவேண்டும் என்பதும் உடன்படிக்கையில் காணப்பட்டன. ஸ்பெயினைத் தாக்குவது இல்லை என்று லூயி வாக்குறுதி அளித்தார். ஆனால், ஸ்பெயினின் மன்னர் இறந்து, லூயிக்குப்புதிய உரிமைகள் கிடைக்குமானல் இங்கிலாந்து அவரோடு ஒத்துழைக்கவேண்டும். அத்தகைய ஒத்துழைப்பிற்கர்க, ஆஸ்டண்டும் இந்தியத் தீவுகளும் தரப்படுதல்வேண்டும் என்று சார்லஸ் தெரிவித்தார்.

ஆனல், ஜூன் மாதத்தில் எலும்புருக்கி நோயினல் மதாம் இறந்தார். சமகாலத்தவர் அவரோடு தொடர்புபடுத்திய முழுத் திட்டமும் அழிந்தது. கவுன்சிலைத் தன்வயப்படுத்துவதற்காக, கத்தோலிக்கச் சமயத்தைப்பற்றி இருந்த பகுதியைத் தவிர்த்து, ஃபிரான்ஸ் எப்போதும் விரும்பியதுபோலப் பரந்த நோக்கத்திற்கன்றிப் போருக்கு முதன்மை கொடுப்பதாக இருந்த இரகசிய உடன்படிக்கையைப்பற்றிப் பிராட்டஸ்டென்ட் அமைச்சர்களிடம் அறிவித்தார். பக்கிங்காம், ஆஷ்லி ஆகியவருடைய நன்மைக்காக டிசம்பர் மாதத்தில் செய்துகொள்ளப்பெற்ற இரண்டாவது உடன்படிக்கையின்படி 1672ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தில் போர் தொடங்குவது என்றும், இங்கிலாந்திற்குக் கொடுப்பதாக வாக்குறுதியளிக்கப்பட்ட இடங்களோடு மேலும் இரண்டு துறைமுகங்களைச் சேர்ப்பது என்றும் முடிவாயிற்று. கத்தோலிக்க மானியமாக அளிக்கப்பெற்ற தொகையை ஃபிரான்ஸ் போருக்கு வழங்கியது என்று சார்லஸ் திரித்துக் கூறினர். எப்போதாகிலும் அவர் கத்தோலிக்கத் திட்டத்தைச் செயல்படுத்த நினைத்து இருந்தாலும் இப்போது அதனைக் கைவிட்டார். ஃபிரான்ஸ் தூண்டியதும், தீவிரமாகக் கிளிஃப்போர்டு வற்புறுத்தியதுமான கத்தோலிக்கத் திருச்சபைக்குச் செய்யவேண்டிய விண்ணப்பங்களைப் பல பொய்க் காரணங்களைக் காட்டித் தள்ளிக்கொண்டே வந்தார். படையின் துணைகொண்டு நாட்டினைக் கத்தோலிக்க மயமாக்கவேண்டும்

என்ற எண்ணம் அவருடைய ஆலோசகரில் வெறி கொண்டவர்களுக்கும் தோன்றவில்லை. காமன்ஸ் சபையின் தீவிரக் கத்தோலிக்க எதிர்ப்புணர்ச்சித் திட்டம் முழுவதும் தவறானது என்பதை அவருக்கு உணர்த்தியது.

எனினும், இங்கிலாந்து அரசர்மீது பெரும்பழியைச் சுமத்திய இந்த இரகசிய உடன்படிக்கை, சார்லஸை, பதினான்காம் லூயி, எதிர்க்கட்சி விக்குகள் ஆகிய இருவராலும் அழிவிற்கு உள்ளாக்கக் கூடிய நிலைக்குக் கொண்டுவந்து அவரது வாழ்க்கையைப் பழிவாங்குவதாக அமைந்தது. அந்நிய நாட்டுத் தூதர்களிடமிருந்து இதனைச் சினங்கொண்ட செல்வந்தர் அறிந்துகொண்டதனாலும், இரகசிய உடன்படிக்கைப்பற்றி பக்கிங்காமின் உளறலும், ஃபிரெஞ்சுத் துருப்புகளைப்பற்றியும் போப்பாண்டவரைச் சார்ந்தவைபற்றியும் எழுந்த வதந்திகளும், 1671-ல் இந்த உடன்படிக்கையைத் தன்னுடைய இரகசியத்தை இழக்குமாறு செய்தன.

ஸ்பெயின் நேசமாக நடந்துகொண்டிருந்தால், ஹாலந்தைப் பார்வையினாலேயே பணியவைத்திருந்தால், அப்போதும் சார்லஸும் ஆர்லிங்டனும் பின்வாங்கியிருப்பர். மேலும், அவர்கள் ஸ்பெயினுக்குப் பாதுகாப்பு அளிக்கப்படும் என்பதை அந் நாடு நம்புமாறு செய்ய முயன்றனர். ஆனால், யார்க், கிளி.ஃப்போர்டு, ஆஷ்லி (இப்போது ஷாப்ட்ஸ்பரியின் ஏர்ல்) ஆகியவர்களைக் கொண்ட போரை விரும்பும் கட்சி வெற்றிபெற்றது. அதே சமயத்தில் ஃபிரெஞ்சுக்காரரின் உறுதியும், தம்முடைய மைத்துனரின் நலனுக்கு இடையூறாக ஃபிரெஞ்சு–டச்சு உடன்பாடு ஏற்பட்டுவிடுமே என்னும் அச்சமும் மன்னரை உந்தியது. 1672ஆம் ஆண்டு, மார்ச் மாதத்தில் முன்னறிவிப்பேதுமின்றி டச்சுக் கப்பற்கூட்டம் ஒன்று தாக்கப்பெற்றது. இவ்வாறு ஆர்லிங்டன் "குறுகியகாலப்" போராக இருக்கும் என நம்பியே சண்டை துவங்கியது.

அது குறுகியகாலப்போராகத்தான் முடிந்தது. ஆனால், அவர் நினைத்த பொருளில் அன்று. புறச்சமய குருமாருடன் பேச்சுவார்த்தை நடத்தியபிறகு, போர் அறிக்கையையும் பொறுத்தல் அறிக்கையையும் (Declaration of Indulgence) ஒன்றாக இணைத்தார். திருச்சபையின்மீது கொண்ட தனி அதிகாரத்தின் துணைகொண்டு பிராட்டஸ்டென்டு மாறுபாட்டுச் சமயத்தவருக்கு அளிக்கப்படும் தண்டனைகளைத் தள்ளிவைத்தார். தங்களுடைய வீடுகளில் தொழுகை நடத்திக்கொள்ள கத்தோலிக்கருக்கு அனுமதி வழங்கினார். ஓராண்டுக் காலத்திற்குள் பதினைந்தாயிரம் புறச்சமய குருக்கள் அனுமதிச்சீட்டுப் பெற்றனர். பல குவேக்கர்கள்

விடுதலை பெற்றனர். எனினும், புறச்சமயத்தவர் பலர் போப்பின ருக்கு அளிக்கப்பெற்ற உரிமையைக் கண்டு அஞ்சினர். பொறுத்தல் அறிக்கை கெவலியரை அச்சுறுத்தியது. இது பாராளுமன்றத்தின் பல சட்டங்களுக்கு அறைகூவல் விடுவதாக இருந்தது. இதற் கிடையில் கருவூலத்திற்கு ஏற்படுத்தப்பெற்ற தடை, பாங்கர்கள் அரசாங்கத்திற்குக் கொடுக்கும் முன் பணத்திற்கான வட்டி கொடுப்பதைத் தள்ளிவைத்ததால், நாணயக் கடன் ஆட்டம் கண்டது. ஸ்காட்லாந்தில் லாடர்டேல் ஒரு புதிய படையினை எழுப்பி, கிர்க்கின்மேல் மண்ணின் ஆதிக்கத்தை நிலைநாட்டினர். மற்றொரு பொறுத்தலறிக்கையையும் வெளியிட்டார். ஆர்மாண்டி னுடைய வீழ்ச்சியிலிருந்து அயர்லாந்தில் அரசாங்கம் கத்தோ லிக்கச் சமயத்தை ஆதரித்தது என்ற ஐயப்பாடு தோன்றியிருந்தது. பாராளுமன்றம் கூடுவதற்கு அனுமதி கொடுக்கவில்லையென்றாலும், ஃபிரெஞ்சுப் பணம் டவர் மாளிகையில் குவிக்கப்பெற்று வருகிறது என்பதையும், முக்கூட்டு ஒப்பந்தம் முறிந்தது என்பதையும், யார்க் கோமகன் திருச்சபைக்குப் போவதை நிறுத்திக்கொண்டார் என்ப தையும், அவருடைய மனைவியாகிய ஆன் ஹைடு (Anne Hyde) கத்தோலிக்கராக இறந்தார் என்பதையும் எல்லா இடங்களிலும் மக்கள் கேள்வியுற்றனர்.

போரில் பெறும் வெற்றியைத் தவிர வேறெதுவும் அரசாங் கத்தைக் காப்பாற்ற முடியாது. ஆனால், அதிலேயும் தோல்வி கண்டனர். ரூய்ட்டர், தாக்குதலை முதலில் தொடங்கி சோல் வளை குடாவில் (Sole Bay) இருந்த யார்க்கின் கடற்படையைத் திடுக்கிடச் செய்தார். கடுமையான போருக்குப் பின் ஜீலந்தில் (Zeeland) தங்களுடைய படையினைத் தரை சேர்க்கவேண்டும் எனும் ஆங்கி லேயருடைய திட்டத்தை முறியடித்தார். இப் போரில் சாண்ட்விச் கொல்லப்பட்டார். ரூய்ட்டருடைய தற்காப்பு முறையும், அடித்த புயற்காற்றுக்களும் அந்த ஆண்டு முழுதும் ஆங்கிலேயர் திட்டத்தில் வெற்றி பெறாமல் தடுத்தன. ஃபிரான்சின் வெற்றி இதைக் காட்டி லும் அச்சமூட்டுவதாக இருந்தது. பெரும் படைகளோடு வந்த டூரன்னும் கோண்டே (Conde)யும், மியூஸ் (Meuse), ரைன் ஆகிய பகுதிகளைத் தாக்கி வென்றனர். ஐந்து மாநிலங்களைக் கைப்பற்றி உட்ரக்டிற்குச் (Utrecht) சென்றனர். தி ஹேக் அச்சுறுத்தப் பெற்றது. அதனால், ஹாலந்தின் எஸ்டேட்ஸ் ஜெனரல் சபை (Estates General) சமாதானம் செய்துகொள்ளத் துடித்தது. இதற்கிடையில் அங்கே புரட்சி தோன்றி, ஆரஞ்சு நாட்டின் வில்லி யம் ஹாலந்தின் ஸ்டாத்ஹோல்டராக (Stadtholder) நியமிக்கப் பட்டார். டி விட் கொலை செய்யப்பெற்றார். ஃபிரெஞ்சுக்காரர் ஹாலந்து நாடு முழுவதையும் கைப்பற்றிக் கொள்ளுவதைத் தடை

செய்யவும், தம்முடைய மைத்துனரான வில்லியத்துடன் உடன்பாடு மூலமாகப் போர்நிறுத்தம் செய்துகொள்வதற்கும் சார்லஸ் முக்கிய அமைச்சர்களை ஹாலந்திற்கு அனுப்பினர். வில்லியம் ஒருசில டச்சுத் துறைமுகங்களை ஒருசில ஆண்டுகளுக்காவது அளிக்கவும், பெருந்தொகையை இழப்பீடாகத் தருவதற்கும், இந்தியாவில் ஆங்கிலேயருக்குத் திருப்தியை அளிக்கவும் ஒப்புக்கொண்டால் அவருக்குத் தனி உரிமை அளிப்பதாகக் கூறப்பட்டது. ஆனல், மூன்றும் வில்லியம் இந்த நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ளாது தம்முடைய குணத்தின் மேன்மையைக் காட்டினர். அவருக்குப் பண்ணையாளர் பதவி அளிப்பதாக ஃபிரெஞ்சுக்காரர் கூறியபோது அதை ஏற்றுக்கொள்வதைக்காட்டிலும் 'இறுதி மதகில் விழுந்து இறப்பேன்' என்று கூறி நிராகரித்தார். மாரிக்காலத்தில் கெபால் மந்திரி சபை, பயனற்ற பெரிதும் வெறுப்பிற்குள்ளான போரினைச் சுமந்துகொண்டு இருந்தது. காலியான கருவூலத்தினல் கலங்கி இருந்த வேளையில் கத்தோலிக்கமயமாக்குவதற்காக மேலும் ஒரு மில்லியன் மானியத்திற்கு விடுத்த விண்ணப்பங்களை லூயி நிராகரித்துவிட்டார்.

1673ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் ஆரஞ்சின் தூதுவர்களாலும், அவருடைய நலனுக்காகப் பரிந்து பேசும் துண்டுப் பிரசுரங்களினாலும் தாக்கப்பெற்று, அச்சம் விளைவிக்கும் பாராளுமன்றத்தை அமைச்சர்கள் சந்தித்தனர். சார்லஸ், ஆர்லிங்டனுடைய எச்சரிக்கையைப் புறக்கணித்துப் பொறுத்தலறிக்கையைக் கடைபிடிக்கப் போவதாக அறிவித்தார். ஷாஃப்ட்ஸ்பரியின் வாசகப்படி 'கார்த்தேஜை அழிக்கவேண்டும்' (delenda est Carthago) என்னும் உணர்வில் மதிப்புவாய்ந்த சமாதானத்தை ஏற்படுத்துவதற்காக மானியம் வழங்குமாறு கோரினர். பற்றுறுதி கொண்ட காமன்ஸ் சபை, சார்லஸ் பொறுத்தலறிக்கையை வாபஸ் பெறுவதானல், சட்டத்தைத் திருத்தும் உரிமையை விட்டுக் கொடுப்பதானல், நிறைய மானியம் வழங்குவதாகக் கூறியது. லாடர்டேலும் பக்கிம்ஹாமும், படையினைப் பயன்படுத்துவதாகக் கவலையின்றிப் பேசினர். ஷாஃப்ட்ஸ்பரியோ, பாராளுமன்றத்தைக் கலைத்துவிடுவதாகப் பயமுறுத்தினர். யார்க்கும் கிளிஃப்போர்டும் எதிர்க்கப்போவதாகக் கூறினர். ஆனல், இறுதியில் ஆர்லிங்டனும் ஃபிரெஞ்சுக்காரரும் நினைத்ததைப்போலச் சமயத்தைவிடப் பணம் முக்கியம் என்பதை உணர்ந்த சார்லஸ் பொறுத்தலறிக்கையை ரத்துசெய்தார். ஆயினும், காமன்ஸ் சபை தன்னுடைய கோரிக்கையைத் தொடர்ந்து வற்புறுத்தியது. பிராட்டஸ்டென்டு கருத்து வேறுபாட்டினரின் (Dissenters) நிலையினைத் தளர்த்த ஒரு மசோதாவை நிறைவேற்றியது. அதன்பிறகு சோதனைச் சட்டத்தைக் (Test

act) கொண்டுவந்து அதன்மூலம் ஆங்கில முடியாட்சியின்கீழ் பதவி வகிக்கும் அதிகாரிகள் அனைவரும் முதன்மை வாக்குறுதி (Oath of Supremacy) எடுத்துக்கொள்ளவேண்டும். ஆங்கிலத் திருச்சபைச் சடங்குகளை ஏற்கவேண்டும் என்பனவற்றைத் தவிர, புனிதப் பொருள் மாறுபாட்டுக் கொள்கையை (transubstantiation) நம்புவதில்லை என வாக்குறுதி எடுத்துக்கொள்ளும்படியும் வற்புறுத்துப் பட்டனர். கடற்படை தளகர்த்தர் பதவியைவிட்டு யார்க் கோமகன் விலகினர். கிளி∴ப்போர்டு ராஜினுமா செய்தார். ஆனால், ஒருசில மாதங்களுக்குள் இறந்தார். அவருக்குப் பதிலாக வெகு விரைவிலேயே டான்பி பிரபுவான ஓஸ்போர்ன் (Osborne) கருவூலத் தலைவராகப் பதவியேற்றார். அவர் ∴பிரான்ஸை வெறுத்த பிராட்டஸ்டென்ட் கெவலியர். அவரைப் போன்று இருந்த எட்வர்டு சேமூரும் (Edward Seymour) பழைய ஆர்மாண்டியும் கவுன்சிலில் புகுந்தனர். எல்லாம் முரிந்தது. ஆர்லிங்டன் ‘பொருள் திட்டத்தைக்’ கை விட்டுச் சமாதானம் செய்துகொள்ள உறுதி பூண்டார். ஷா∴ப்ட்ஸ்பரி சோதனை சட்டத்தை ஆதரித்துப் பேசினர். ஏற்கெனவே, சார்லஸின் சட்டப்படி செல்லாத மகனாகிய மான்மவுத்தைச் சட்டப்படி ஏற்றுக்கொள்வதன்மூலம் பிராட்டஸ்டென்டிற்கு அரச உரிமை கிடைக்குமாறு செய்யவேண்டும் என்ற எண்ணம் அவருக்குத் தோன்ற ஆரம்பித்தது.

1673ஆம் ஆண்டுப் படையெடுப்பு கெபால் மந்திரி சபையின் அழிவைக் கொண்டுவந்தது. இரு ஹாப்ஸ்பர்க் அரசுகளும் ஹாலந்தோடு சேர்ந்துகொண்டன. டச்சுக்காரர் நியூயார்க்கைத் திரும்பக் கைப்பற்றிக்கொண்டனர். ஆரஞ்சு இளவரசர் ∴பிரஞ்சுக்காரரை ரைன் பகுதிக்குத் துரத்தினர். ∴பிளஷ்ஷிங்கில் கடுமையாகப் போரிட்ட பிறகு ரூபர்ட் (Rupert), ஆகஸ்டு மாதத்தில் ரூய்ட்டரை, டெக்ஸல் (Texel) என்னுமிடத்தில் சந்தித்துப் போரிட்டார். ஆனால், ∴பிரெஞ்சுக் கடற்படை உதவிக்கு வரத் தவறியதால் வெற்றிபெறும் நம்பிக்கை மறைந்தது. ஆரஞ்சு இளவரசர் நம்மைத் தனியாக உடன்படிக்கை செய்துகொள்ளும் நிலைக்குக் கொண்டுவர எண்ணினர். நாம் உரிமைக் கட்டுப்பாடுகளை ஏற்க மறுத்தால் போர் தொடுப்பதாக ஸ்பெயின் அச்சுறுத்தியது. அச் சமயத்தில் அறிவுக்குப் பொருந்தாத முறையில் ∴பிரான்சின் துணையோடு யார்க் மாடனாவின் மேரி (Mary of Modena) என்னும் கத்தோலிக்க மாதை மணந்துகொண்டார்.

1673–4 மாரிக் காலத்தில் பாராளுமன்றம் தன்னுடைய வேலையை முடித்துக்கொண்டது. யார்க் கோமகனின் திருமணத்திற்கும் நிலைப்படை வைத்திருப்பதற்கும் எதிர்ப்புத் தெரிவித்தது.

டோவர் உடன்படிக்கைபற்றிய குறிப்புப் பொருள்கள் தரப் பட்டன. சமாதானம் செய்துகொள்ளவில்லையென்றால் அளிப்பு மறுக்கப்படும் என்று தெளிவுபடுத்தப்பட்டது. இவைகளைத் தொடர்ந்து, தவறிழைத்த மந்திரிகளின்மீது குற்றச்சாட்டு கொண்டுவரும் முயற்சி நடைபெற்றது. அதோடு கத்தோலிக்கர் அரச வாரிசாக வராமல் விலக்குவதற்கான முதல் குறிப்பு வெளி யிடப்பெற்றது. பாராளுமன்றத்தின் உரிமை காப்பவராகவும் சமாதானத்தை விரும்புபவராகவும் தம்மை மாற்றிக்கொண்ட ஷாப்ட்ஸ்பரி பதவியிலிருந்து விலக்கப்பட்டார். பக்கிங்காமும் தன் வீழ்ச்சியைத் தடுக்க எவ்வளவு முயன்றும் முடியவில்லை. அவரும் பதவி நீக்கம் பெற்றார். ஆர்லிங்டன் குற்றச்சாட்டிலிருந்து வெற்றி கரமாகத் தன்னைக் காத்துக்கொண்டார். ஃபிரெஞ்சுக் கூட்டுறவினைக் குலைப்பதற்கு வேண்டுவனவற்றையெல்லாம் செய்தபிறகு பாது காப்பான உள்படு கருமத்தலைவர் (Lord Chamberlain) பதவியை ஏற்றார். டான்பியை அவர் அதிகமாக வெறுத்தபோதிலும், அவர்கள் இருவரும் ஒத்துப்போயினர். எனவே, 1674ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் வெஸ்ட்மினிஸ்டர் உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. அதன்படி டச்சுக்காரர் சிறு இழப்பீடு அளித்தனர். நியூயார்க்கைத் திருப்பித் தந்தனர். ஃபினிஸ்டர் முனைக்கு (Cape Finisterre) வடக்கே நமது கொடியின் உரிமையை ஏற்றுக்கொண்டனர். அவ் வாய்ப்புக் காரணமாகச் சார்லஸின் வெளிநாட்டுக் கொள்கையில் நினைத்த பயன் கிட்டாதபோதிலும் இந்த உடன்படிக்கையினால் உண்மையான முடிவு ஏற்பட்டது.

1678ஆம் ஆண்டு வரை டான்பி பதவியிலிருந்த நான்கு ஆண்டுகளும் சார்லஸின் ஆட்சியில் பயனுள்ள பகுதியாகும். கட்சிப் பிரிவுகளுக்கு இடையே மூன்றே சக்திகள் வளர்வதை எடுத்துக்காட்டுவதாக இருந்தன. அவரும் அவரோடு நெருங்கி இருந்த சகாக்களும் குறுகிய உள்ளம் கொண்ட கெவலியர்தான் என்றாலும், திறமை வாய்ந்தவர்கள். டான்பி, நல்ல வணிகச் சுழற் சியின் (Trade Cycle) துணைகொண்டு பெயரளவில் 1,200,000 பவுனை இருந்த அரசரின் நிரந்தர வருமானத்தை அதற்கு மேலும் உயர்த்தினார். சுங்கத்துறையோடு மற்றத் துணைகளையும் ஒழுங்கு படுத்தினார். வட்டி கொடுப்பதை 'நிறுத்தியதனால்' (Stop) இழந்த நாணயக் கடன் மதிப்பைப் பகுதியாகச் செலுத்தி மீட்க முயன்றார். 1677 ஆம் ஆண்டுப் பாராளுமன்றத்தின் மானியம் பெறுதபோதும் வலிமைமிக்க கடற்படை ஒன்றை நிறுவினார். பங்குகளில் அவருக்கு இருந்த ஊக்கம் புதுயுகத்தின் பண்பாக இருந்தது, அடுத்த நூற்றாண்டில் இங்கிலாந்தைத் திண்மை பொருந்திய நாடாகச் செய்த இப் பண்பு தோன்றியதன் காரணமாகத்தான்

சார்லஸின் ஆட்சிக்குச் சிறப்பு ஏற்பட்டது. அது செயலாய்வு, சீர்திருத்தம், துணிகரச் செயல் ஆகியவை மலிந்த காலம். பியூரிட்டானிஸம் பரந்த கத்தோலிக்க முறை, பகுத்தறிவு ஆகியவற்றின் பயனாக வந்த யுகம். அதனுடைய பருப்பொருள் தொடர்பான வெற்றிகளில் குறிப்பிடத் தகுந்தது, குடியேற்ற நாடுகளின் ஆட்சியாகும். அந்த ஆட்சி இப்போது வாணிபம், குடியேற்றக் கமிட்டியின்கீழ் ஒழுங்காக நிறுவப்பெற்றது. இதே சமயத்தில் பிற்காலத்தில் மூன்றும் வில்லியத்திற்காகப் பாடுபட்ட வில்லியம் பிளாத்வைட் (William Blathwayt) போன்ற கணக்கர் தலைமையில் சிவில் அலுவலகத் துறைக்கு வித்திடப்பட்டது. நாட்டில் மிகுந்த திறமை உடையவர்களை இத் துறை ஈர்த்தது. நாட்குறிப்பு எழுதுபவரான எவலின் (Evelyn), குடியேற்ற நாடுகளின் செய்திகளில் தத்துவ அறிஞராக இருந்த லாக் (Locke), வெல்திறத்திற்குப் பெயர்போன டெம்பிள் (Temple), கொடால்ஃபின் (Godolphin), பொருளாதார வல்லுநரும், பொதுப் புள்ளியியலை நிறுவியவரும், ராயல் சொஸைடியை (Royal Society) வளர்த்தவருமான பெட்டி (Petty) ஆகியோர் அவர்களில் சிலராவர்.

தரைப் படையிலும் கடற் படையிலும் எடுக்கப்பெற்ற நடவடிக்கைகள் நிரந்தரமான படைவலிமை வேண்டுமென்பதை அரசு உணர்ந்தது என்பதற்குச் சான்றாக விளங்கின. கடற் படை வல்லுநரான அந்தோனி டீன் (Anthony Deane) என்பவராலும் கடற்படைத் தலைமையின் செயலராக இருந்த பேராற்றல் படைத்த பெப்பீஸ் (Pepys) என்பவராலும் இயக்கப்பெற்ற கடற்படை, திருத்தி அமைக்கப்பெற்று வலிமை பொருந்தியதாக இருந்தது. சார்லஸும் 1677ஆம் ஆண்டின் முப்பது கப்பல் திட்டத்திற்கு அவருக்கு ஒதுக்கப்பட்ட பணத்திலிருந்து பெருந்தொகை கொடுத்து உதவினார். கிறிஸ்துவின் மருத்துவமனை (Christ's Hospital) கடற்படைப் பயிற்சிப்பள்ளி, பதவி உயர்வு பெற்ற அதிகாரிகளுக்கான தேர்வுகள், அரை ஊதியம், ஓய்வுக்கால ஊதியம், ஆகியவற்றிற்கான தொடக்கம் ஆகிய கடற்படையின் நிரந்தரமான மரபுகள் தோன்றின. தரைப்படையில் ஆட்களைச் சேர்த்தலும் படையினைக் கலைத்தலும் முறையாக இன்றி, விட்டு விட்டுச் செய்யப்பெற்றது என்றாலும், டாஞ்ஜியர் காவற்படை (Tangier Garrison) யில் உள்ள சூழ்நிலைகளும், நிரந்தரமாக இருந்த போர்ப்பயமும் படையின் பங்குபற்றிய முழுப் பிரச்சினையும் படை சார்பற்ற மக்களிடையே எழுந்தது. கட்டுப்பாடு இன்றியமையாதது என்ற உணர்ச்சி, அடிப்படையான ராணுவச் சட்டம் ஏற்படுவதற்குக் காரணமாக அமைந்தது. வயது முதிர்ந்த படைவீரருக்கும், நோய்வாய்ப்பட்ட வீரருக்குமான செல்ஸீ

மருத்துவமனை (Chelsea Hospital) நிலைப்படையின் சேவைகளை நாடு உணர்ந்தற்குச் சான்ருக விளங்கியது.

பெப்பீஸூம் அவருடைய தலைமுறையைச் சார்ந்தவரும் எழுதிய நாட்குறிப்புகளைப் படிப்பவர் சோதனைச் சாலைகளிலும், கப்பல் நிலையங்களிலும் மிகுந்த ஆர்வம் காட்டிய அரசர் வாழ்ந்த புது யுகத்தில் இருப்பது போன்ற உணர்வு தோன்றும். அடுத்தடுத்து வந்த இரு கருவூலத் தலைவர்களாகிய ஃபிஞ்சும் (Finch) நார்த்தும் (North) நேர்மைச் சட்டத்தை உறுதி செய்தனர். வேதியியல் வல்லுநரான இராபர்ட் பாயிலும் (Robert Boyle), வான இயற் புலவரான ஹால்லியும் (Halley), ஐசக் நியூட்டனும் (Isaac Newton) மக்கள் அறிவின் அடிப்படையையே மாற்றியமைத்தனர். தீயினுல் அழிந்த நகரத்தைக் கடுமையான விதிகளின்மூலம் புதுப்பித்தனர். லண்டனில் கிறிஸ்டோபர் ரென் (Christopher Wren) ஐம்பது கோயில்களைக் கட்டி முடித்தார்.

சுருங்கக் கூறுமிடத்து டான்பி மந்திரி சபையின் காலத்தில் நாம் 1688ஆம் ஆண்டுப் புரட்சியின்போது இருந்த நிலையை உணர முடிந்தது. மூன்ரும் ஜார்ஜ் ஆட்சிக்கு வரும்வரையில் நம்முடைய அரசாங்கத்தில் காணப்பெற்ற கூறுகள் அத்துணையும் இருந்தன. அவைகளின் தராதர வலிமையில் மாறுபாடு காணப்பெற்றது உண்மையே. இப்போது சமயத்திலும் கொள்கையிலும் மாறு பட்ட இரு கட்சிகளைச் சார்ந்த யார்க்கும், ஆரஞ்சு நாட்டின் வில்லியமும் போட்டியிடுவதற்கான அங்கம் தயாராக இருந்தது. அவர் களுக்கு இடையே, இரண்டாம் சார்லஸ், தன்னுரிமையைக் காத்து, ஆனுல், அதே சமயத்தில் ஓர் அளவோடு நிறுத்தி, வருகின்ற ஊழி தனக்குப் பிறகுதான் வரவேண்டும் என்றும் உறுதியோடு இருந்தார். சாதாரணமாக மனிதர் வயது முதிரமுதிர பயங் கொள்ளிகளாவார்கள். ஆனுல், தாம் அதற்கு நேர்மாருனவர் என்று ஷாப்ட்ஸ்பரியிடம் கூறினுர்.

இடைமாறுபாட்டு நிலையாகிய அரசியல் சட்டவரம்பிற்கு உட்பட்ட அரசாங்கத்தின் நிலையை அநேகமாகப் பாராளுமன்றம் அடைந்துவிட்டது. ஆனுல், உண்மையில் அது பிரதிநிதித்துவ அரசாங்கம் அன்று. எப்போதும் சந்தேகத் தணலில் கருகிய காமன்ஸ் சபை உறுப்பினர் இப்போது செலவுகளைக் கட்டுப் படுத்தும் உரிமையைக் கோரினர். வெளிநாட்டுக் கொள்கையிலும் சபாநாயகரை நியமனம்செய்வதிலும் அரசருடைய அதிகாரத்தைக் கண்டித்தனர். இறுதியாக, கெபால் மந்திரி சபையை ஒழித்ததைப் போலவே, டான்பியையும் அதிகாரத்தினின்றும் துரத்தினர்.

அவர்கள் நிலைப்படையைத் தாக்கியதும், பத்வி வகித்த அரசரது ஆதரவாளர்களைச் சபையிலிருந்து வெளியேற்றுவதற்குக் கொண்டு வந்த திட்டங்களும் எழுப்பிய பிரச்சினைகள் மூன்றும் வில்லியம் காலத்தில்தான் தீர்க்கப்பெற்றன. 'பாராளுமன்றத்தில் அரசர்' என்பதற்கு ஆழ்ந்த பொருள் பெறப்பட்டது. ஒருவிதத்தில் மன்னருடைய செல்வாக்கு, பாராளுமன்றத்தில் அவருக்கு வேண்டிய உறுப்பினரைப் பெறுவதை அல்லது துறைமுக நகரங் களிலிருந்தும், கார்னிஷ் கோமக நாட்டிலும் 'அரசரது நண்பர் களை'த் (King's friends) தேர்ந்தெடுக்கச் செய்வதைப்பொறுத்து இருந்தது. மன்னர் மந்திரிகளைத் தேர்ந்தெடுத்தார். ஆனால், அவர் களும் பாராளுமன்றக் குழுக்களின்மூலமாகத்தான் பணிபுரிய முடியும். இறுதி முடிவு பொதுமக்களின் கருத்தைப்பொறுத்து இருந்தது. செய்தித் தாள்களையும், பெருந்தனக்காரர் பொழுது போக்குச் சங்கங்கள், காபி விடுதிகள் ஆகியவை அடங்கிய சிறிய உலகத்தில் விளம்பரச் சாதனமாகிய ஷா:ப்ட்ஸ்பரி, மார்வெல் (Marvell), ஹாலி:பாக்ஸ் (Halifax) போன்றவருடைய துண்டுப் பிரசுரங்களையும் தணிக்கை செய்யும் முறையிலிருந்து இந் நிலை தெளிவாகத் தெரிகின்றது.

இங்ஙனம் பிற்காலத்தில், ஓரளவு மாறியநிலையில் வால்போல் நின்றதைப்போல டான்பியும் இரண்டு அரசியல் உலகங்களுக்கு இடையே நின்றார். அவரது கொள்கையை மன்னர் மறுக்கலாம்; யார்க் கோமகனாரோ, லாடர்டேலோ அல்லது செல்வாக்கு மிகுந்த போர்ட்ஸ்மவுத் கோமகளோ (Duchess of Portsmouth) அவருடைய நியமனங்களை எதிர்க்கலாம். ஆனால், அவர் அடிப் படையில் பாராளுமன்றத்தையும் மக்களின் கருத்தையும் நம்பி இருந்தார். பதவிகளையும் ஆதரவையும் விநியோகித்துப் பெரும் பான்மைக் கட்சியை வளர்த்துக்கொள்வதையே தம்முடைய தொழிலாகக்கொண்டிருந்தார். அவருக்கு முன்னால் இருந்த கெபால் மந்திரி சபையினரும், அந்நிய நாட்டுத் தூதுவரும் பயன் படுத்திய கையூட்டு அளிக்கும் வழியைப் பின்பற்றாது, கட்சியின் நிகழ்ச்சி முறையை வகுப்பதன்மூலம் பெரும்பான்மைக் கட்சியை உருவாக்க முனைந்தார். அந்த முறைகளில் 1675ஆம் ஆண்டில் இணங்காதவரில் முதன்மையாக இருந்த பலரைக் கைது செய்தல், உறுப்பினரும் பதவி வகிப்போரும், சாத்வீகப் பணிவு (passive obedience) உறுதிமொழி எடுத்துக்கொள்ளவேண்டும் என்னும் மசோதா ஆகியவை அடங்கும். இம் முயற்சி ஷா:ப்ட்ஸ்பரியின் சூழ்ச்சியினால் தோல்வியுற்றது. அவர் கெவலியர் பாராளு மன்றத்தைக் கட்டாயமாகக் கலைக்க வற்புறுத்தக்கூடிய எதிர்க் கட்சி ஒன்றை நிறுவுவதில் வேகம் மிகுந்த தமது சக்தி முழுமையும்

ஈடுபடுத்தினர். இங்ஙனம் நம்முடைய இரு கட்சி அரசியல் திட்டத்தின் மூலக் கோட்பாடுகள் தோன்றின. 1680ஆம் ஆண்டில் இந்த இரண்டு கட்சிகளும் பழிச்சொற்களின் அடிப் படையிலெழுந்த வரலாற்றுச் சிறப்புப் பெயர்களைப் பெற்றன. யார்க் கோமகனரும், தனிச் சிறப்புரிமைக்காகப் பரிந்து பேசிய வரும் அயர்லாந்துக் கத்தோலிக்க (பேபிஸ்டுகள்)ரைச் சார்ந்து இருந்ததாகக் கருதப்பட்டதால், 'டோரி' (Tory) அல்லது நாடு கடத்தப்பெற்ற அயர்லாந்தியர் என்று அழைக்கப்பட்டனர். அரசாதரவாளர்கள், ஷாஃப்ட்ஸ்பரியைப் பின்பற்றுவோர் தங்க ளுடைய அரசியலை ஒப்பந்தக்காரரிடமும், 1641ஆம் ஆண்டுக் கொள்கைகளில் இருந்தும் பெற்றதனுல் அவர்களை 'விக்' (Whig) அல்லது ஸ்காட்லாந்து ஒப்பந்தக்காரர் என்று அழைத்தனர். அச்சிட்ட அறிக்கைகள், கட்சித் தலைமை இடத்திலிருந்து தேர்வாளரைப் பொறுக்கும் பழக்கம், டோரிகளுக்கான சிவப்பு அணிகள், விக்குகளுக்கான நில அணிகள், நகரத்தில் ஷாஃப்ட்ஸ் பரியின் 'பச்சை நாடா' (Green Ribbon) சங்கம், அதற்கு மாருக எழுந்த 'பற்றுறுதி கொண்டோர் சங்கங்கள்' (Loyal Societies), போட்டிப் பத்திரிகைகள் போன்ற கட்சித் துணைக்கலத் தொகுதிகள் உருவாகின.

விக்கு கட்சி உருவாவதற்குத் தம்முடைய மரபுகளில் செருக்கு மிகுந்த செல்வந்தரின் மறுப்புமட்டும் அல்லது கத்தோலிக்கர் என்பதனுலும், வாணிபத்துறையில் போட்டியிடுபவர் என்பதனுல் ஃபிரெஞ்சுக்காரர்மீது ஆங்கில வணிகர் கொண்ட வெறுப்புமட்டும் விக்கு கட்சி உருவாவதற்குக் காரணமல்ல. சமய ஒறுத்தல் இருந்தும், பிராட்டஸ்டென்டு புறச் சமயம் 1672ஆம் ஆண்டுப் பொறுத்தலறிக்கையினின்றும் பின்னடையவில்லை. சட்ட முறைத் தண்டனைகட்கும், மாஜிஸ்டிரேட்டுகளின் கட்டுப் பாட்டிற்கும் அப்பாற்பட்டு, சட்டரீதியான பரோக்களாக இல்லாது இருந்த பர்மிங்காம் போன்ற வளரும் தொழில் நகரங் களில் அது தழைத்தோங்கியது. புறச்சமயத்தவர் மிகுதியாக வாழ்ந்த யார்மௌத் (Yarmouth) போன்ற பட்டினங்கள் சட்டத்தை எதிர்த்தன. புறச்சமயிகள் சில சமயங்களில் ஆங்கிலிகத் திருச்சபைக்கு இணக்கம் தெரிவித்தனர். உதாரண மாகப் பதவியேற்கும்போது சிலர் ஆங்கிலிகத் திருச்சபை சடங்குகளைச் சில சமயங்களில் ஏற்றுக்கொண்டனர். வேறு சிலர் ஆங்கிலிகரின் பாரிஷ் கோயிலில் தொழுகை நடத்தினர். எனினும், பெரும்பான்மையானவர் திரும்பவும் ஆங்கிலிகரோடு இணையும் எண்ணத்தை அறவே ஒழித்தனர். செல்வம் மிகுந்த லண்டன் நகரத் தொழுகைக் கூட்டங்களில் சொற்பொழிவுகள் தொடர்ந்து

நிகழ்ந்தன. பாப்டிஸ்டுகள் (Baptists) முறையாகப் பொதுக் கூட்டங்களை நடத்தினர். ஃபாக்ஸ், பர்க்ளே (Barclay), பென் (Penn) போன்றவர்களால், ஒன்று திரட்டப்பெற்ற குவேக்கர்களும் சமய ஒறுத்தலுக்கு மிகுதியாக ஆளாகி இருந்தபோதிலும் பொதுக்கூட்டங்களை நடத்தினர். புறச்சமயத்தவர் பள்ளிகளும், கலைக் கழகங்களும் மிகுதியாகத் தோன்றிச் சிறந்த கல்வி புகட்டின. அவைகளினால் பயனடைந்த பலரில் ராபர்ட் ஹார்லியும் (Robert Harley), டேனியல் டிஃபோவும் (Daniel Defoe) அடங்குவர். மொத்தத்தில் ஒருமுகமாக எழுந்த மறுப்போ, வாணிப வளத்திற்காகச் சமயப்பொறை சாலச் சிறந்தது என்னும் உணர்வோ, சில வேளைகளில் பென் என்பவர் அரசரைப் பேட்டி கண்டதோ, அல்லது பல இடங்களில் சமய ஒறுத்தலைத் தடை செய்ய உள்துறைச் செயலர் அனுப்பிய கடிதங்களோ, டான்பியினுடைய அதிகாரபூர்வமான கொள்கையினைக் குலைத்தன.

டான்பி ஆபத்தான அரசியல் சுழலில் சிக்கி இருந்தார். ஏனென்றால், பாராளுமன்றத்தின் மானியத்தைப் பெறாமல் மன்னர் மீது செல்வாக்குச் செலுத்த முடியாது. ஆனால், பாராளுமன்றமோ அரசருடைய கொள்கையில் ஐயம் கொண்டு இருந்ததால் மானியத்தைக் குறைத்தது. அரசருக்குத் தாம் அடிக்கடி அனுப்பிய அறிக்கைகளில் மன்னரின் தனியுரிமைகள் பாராளுமன்றத்தின் ஒத்துழைப்பின்றிப் பணம் தரமாட்டா என்றும், பாராளுமன்றத்தின் ஆதரவைப் பெறவேண்டுமானால் ஃபிரான்ஸை எதிர்க்க வேண்டும் என்றும் டான்பி வற்புறுத்தினார். ஐரோப்பாவை அடிமைத்தளத்திலிருந்து காப்பாற்றுவதன்மூலமாக அரசின் நிலையை உயர்த்த வேண்டுமென்றார். இரண்டாம் சார்லஸ் ஏற்றுக்கொண்ட கையூட்டுகளைக் கண்டித்தார். ஒரு சமயம் ஃபிரெஞ்சுத் தூதுவரிடம் 'கிராம்வெல் உயிருடன் இருந்தால் நிலைமை வேறுவிதமாக இருக்கும் எனக் கூறினார். ஆரஞ்சு இளவரசரை மிகுதியாகப் போற்றும் டெம்பிள் (Temple) என்பவரை உள்துறைச்செயலாளராகக் கொண்டுவர முனைந்ததிலிருந்து இங்கிலாந்தின் எதிர்காலம் ஆரஞ்சு இளவரசர் கையில்தான் இருந்தது என்பதை அவர் உணர்ந்திருந்தார் என்பது வெளிப்படுகின்றது.

இங்கிலாந்து தனியாகச் சமாதானம் செய்துகொண்டபோதிலும், ஃபிரான்ஸும் ஹாலந்தும் தங்களுடைய ஹாப்ஸ்பர்க் நண்பர்களோடு தொடர்ந்து போர் புரிந்தனர். மற்றப் போர்களைப் போலவே இதுவும் பரவும் ஆபத்து இருந்தது. ஃபிரான்ஸுக்கு உதவியாக இருந்த சிறு ஆங்கிலப் படையைத் திரும்ப அழைத்துக் கொள்ளுமாறு பாராளுமன்றம் அரசரைக் கேட்டுக்கொண்டது.

இச் சிறு படையில்தான் இளைய ஜான் சர்ச்சில் (John Churchill) தொண்டாற்றினர். மேலும், நாம் நேச நாடுகளோடு சேர்ந்து கொள்ள வேண்டுமென்றும் பாராளுமன்றம் வற்புறுத்தியது. இங்ஙனம் ஆங்கிலக் காபினெட்டையும் பாராளுமன்றத்தையும், ஐரோப்பிய நாடுகள் ஒவ்வொன்றும் தம்முடைய செல்வாக்கிற்கு உட்படுத்தவேண்டும் என்று விழைந்ததன் விளைவாக, எல்லையிறந்த சிக்கல்களை ஏற்படுத்திய பலமுனைப் போராட்டம் தொடங்கியது. ஆயின், மன்னர் நேச நாடுகளோடு சேராதிருப்பதற்குச் சில தகுந்த காரணங்கள் இருந்தன. காமன்ஸ் சபை போதுமான பணம் ஒதுக்காது என்றும், போரில் சிக்கிய பிறகு மன்னருடைய தனிச் சிறப்புரிமையைத் தாக்கும் என்றும் சார்லஸ் அஞ்சினர். அதற்கு மாருக நடுநிலைமை வகிப்பதற்கே அதிக மானியம் வழங்க லூயி தயாராக இருந்தார். மேலும், அத்தகைய நடுநிலைமைக் கொள்கை வாணிபத்திற்கு உகந்ததாகவும் இருக்கும். அதுமட்டுமன்றி அவர் ஆரஞ்சு இளவரசருக்கும் விக்குகளுக்குமிடையே இருந்த தொடர்புகளைச் சந்தேகக் கண்களோடு நோக்கினர். நேசக் கூட்டுறவில் இருந்த பிளவுகள், ஸ்பெயினின் வறுமை, ஹாலந்து ஸ்பானியத் தாழ்நிலங்களில் ஊடுருவுவதை ஹாப்ஸ்பர்க்கினர் விரும்பாத நிலை, குடியரசு ஆம்ஸ்டர்டாமில் தோன்றிய சமாதானக்கட்சி ஆகியவற்றின் உண்மை நிலையினை நன்கு உணர்ந்து இருந்தார். எந்தக் கொள்கை தம்முடைய சகோதரருடைய வாரிசு உரிமையைப் பாதிக்கும்? தமது பணக் கவலையைப் போக்கி பிரிட்டிஷ் கடற்படையின் வலிமையைப் பெருக்கும்? இவ்வித வினைக்களுக்கு விடை காணு நிலையில் மேன்மேலும் தயக்கம் கொண்டு ஒன்றிற்கொன்றைச் சமநிலைப்படுத்திக்கொண்டே சென்ருர்.

இங்ஙனம் புதிய இரகசிய உடன்படிக்கைகளைச் செய்து கொண்டார். அவைகளில் கத்தோலிக்கச் சமயத்தைப்பற்றிய குறிப்பேதும் இல்லை. ஃபிரெஞ்சுக்காரரிடமிருந்து வந்த முதற்படி, யார் உண்மையான பகைவர் என்பதைக் காட்டியது. பண உதவிக்குப் பதிலாகப் பாராளுமன்றத்தை அடக்கவேண்டுமென்றும் அதனைப் பதினைந்து மாத காலத்திற்குத் தள்ளிப்போட வேண்டுமென்றும் ஃபிரெஞ்சுக்காரர் நிபந்தனைகள் விதித்தனர். ஆனல், சார்லஸினுடைய சொந்தக் கொள்கைகளில் எப்போதும் ஒரு பொது நோக்கின் கீறல் காணப்படுவதுண்டு. 1677ஆம் ஆண்டில் பாராளுமன்றம் கூடியபோது டான்பி அம் மன்னரை நாட்டு நலனைக் காக்கும் பணியில் ஈடுபடச் சம்மதிக்கவைத்தார். ஃபிரெஞ்சுக்காரர், யார்க் கோமகன், ஷாஃப்ட்ஸ்பரியைச் சார்ந்த விக்குகள் ஆகியோருக்கு எதிராகப் பாராளுமன்றம் கலைக்கப்படு

வதைத் தவிர்க்கப் போராடினார். அதற்காக அவர் நேர்மையற்ற வழிமுறைகளைப் பின்பற்றியபோதிலும் உறுதியோடு நின்றார்.

அந்த ஆண்டு கோடையில் மற்றொரு முறை பாராளுமன் றத்தைக் கலைப்பதற்காக ஃபிரெஞ்சு மானியத்தை ஏற்றுக்கொள்ள மன்னர் முடிவு செய்ததைக் கண்டார். 'இத்தகைய செயலுக்கு எப் பணமும் ஈடு செய்யாது' என்று அறிவித்தார். என்றாலும் ஏற்கெனவே மன்னர் முடிவு செய்துவிட்டபடியால், குறைந்தது ஃபிரான்ஸிடமிருந்து மிகுதியாகப் பணத்தைக் கறக்கலாம் என எண்ணினார். இச் சமயத்தில் ஃபிளாண்டர்ஸைத் (Flanders) தாக்கு வதாக லூயி பயமுறுத்தியதாலும், ஃபிரான்ஸிலும் ஹாலந்திலும் இருந்த குடியரசுவாதிகள் தனியாக ஒப்பந்தம் செய்துகொள்வார் களோ என்னும் அச்சத்தாலும் ஓரளவு பகுத்தறிவுக்கு ஒத்த முறை யில் சமாதானத்தை ஏற்படுத்தக்கூடிய ஆரஞ்சு இளவரசருக்கும் ஜேம்ஸின் மகளாகிய மேரிக்கும் மணமுடித்துவைக்கச் சம்மதித் தார். இத் திருமணம் சில ஆண்டுகட்கு முன்னரே ஆர்லிங்டன் முடிக்க முயன்றதுதான். இதில் சார்லஸ் இரு நன்மைகளைக் கண்டார். ஒன்று, பாராளுமன்றத்திற்குத் திருப்தி அளித்து மானியம் பெறுவது. இரண்டாவது, லூயியைத் தன்வழிக்குக் கொண்டு வருவது. நவம்பர் மாதத்தில் நடந்தேறிய திருமணத் தோடு சார்லஸும் ஆரஞ்சு இளவரசரும் இணைந்து சமாதான உரிமைக் கட்டுப்பாடுகளைக் கொண்டுவந்தனர். ஆனால், லூயி இதற்கு மறுப்புத் தெரிவிக்கவே, சார்லஸ் பாராளுமன்றத்தைக் கூட்டி ஹாலந்தோடு வலித்தாக்குதல் உடன்படிக்கை செய்து கொண்டார். பிரிட்டிஷ் படைகள் ஆஸ்டெண்டிற்கு அனுப்பப் பட்டன. 1678ஆம் ஆண்டின் பாராளுமன்றக் கூட்டத்தொடர் பிற்காலத்தைப்பற்றிய முடிவுகள் அனைத்தையும் எடுப்பதாக வாக்குறுதி அளித்தது.

ஆனால், டான்பியின் முயற்சி விழலுக்கிறைத்த நீராகியது. லூயி, இத் தொல்லைதரும் அமைச்சரையும் ஆபத்தான ஆரஞ்சு இளவரசரையும் அழித்துவிடத் துணிந்தார். அவர் தாம் எண்ணிய வாறே அவர்களுடைய நாடுகளில் அவர்களின் செல்வாக்கினை அழித்தார். சார்லஸ் மறுபடியும் தங்களை ஏமாற்றிவிடுவார் என்று நம்பிய விக்குகள் உள்நாட்டில் பயன்படுத்தக் கூடும் நிலையில் இருந்த சேனையைக் கலைத்துவிடுமாறு வற்புறுத்தினர். ஷாஃப்ட்ஸ் பரியும், ரஸ்ஸலும், ஃபிரெஞ்சுச் சார்பாளர்களோடு கூட்டுச்சேர்ந்து கொண்டனர். ஃபிரான்ஸின் பணத்தைக்கொண்டு ஓட்டுகளைப் பெற்றனர். காமன்ஸ் சபை அரசருடைய போர்க்கால, அமைதிக் காலத் தனிச் சிறப்புரிமைகளைக் கண்டித்தது. மேலும், அமைச்சர்

களைப் பதவியிலிருந்து நீக்குமாறு கோரியது. இதற்கிடையில் ஆரஞ்சு இளவரசரின் ஆத்திரத்தைக் கிளரும் வகையில் லூயியின் நிபந்தனைகளை டச்சுக்காரர் ஏற்றுக்கொண்டனர். அவர்களோடு தனியாகச் செய்துகொள்ளப்பெற்ற நிம்விகன் (Nimwegen) உடன்படிக்கையின்மூலமாக ஃபிராஞ்சி காம்டி (Franche Comte) என்னுமிடத்தை ஆரஞ்சு இளவரசர் பெற்றார் எனினும், சார்லஸ் வற்புறுத்தியவாறு ஃபிளாண்டர்ஸில் (Flanders) தடை ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இருந்தபோதிலும் அப்போது தம்முடைய இரண்டகச் செய்கையினால் பாராளுமன்றத்தின் அளிப்பையும் ஃபிரெஞ்சு மானியத்தையும் சார்லஸ் இழந்தார். ஃபிரான்சுக்கு எதிராக இருந்த கூட்டுப் பிளவுபட்டது. காமன்ஸ் சபையில் டான்பிக்கு இருந்த பெரும்பான்மை ஆதரவு மறைந்தது.

1678ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் வந்த ஒரு நிகழ்ச்சி விக்குகளும் ஃபிரான்ஸும் தொடங்கிவைத்த அழிவினை முடிவுபெறச் செய்தது. ஃபிரெஞ்சுப் படையெடுப்புப் போர்வையின்கீழ்அரசரைக் கொன்று, அவருக்குப் பதிலாக யார்க் கோமகனாரைப் பதவிக்குக் கொண்டுவருவதற்காகச் செய்யப்பெற்ற 'கத்தோலிக்கர் சதி' அம்பலமாகியது. இதைப்பற்றிய புரளியைக் கிளப்பியவன் டைடஸ் ஓட்ஸ் (Titus Oates) என்பவன். துணிகரமாகச் செயல் புரியும் அவன் ஏற்கெனவே ஒழுக்கக் கேட்டினால் ஆங்கிலிகப் பதவி ஒன்றில் இருந்தும், ஜெசூட் கல்லூரியில் இருந்தும் வெளியேறியவன். அரசர் உணர்ந்து, வலியுறுத்தியதைப் போலவே இப் புரளி முழுக்கற்பனை என்றாலும் அவனுக்கு ஒரு சில உண்மைத் தடையங்கள் கிடைத்தன. உதாரணமாக, ஆங்கில ஜெசூட்டுகள் லண்டனில் கூடிய தேதியும், (புனித ஜேம்ஸ் மாளிகை என்ற இடம் அல்லவாயினும்) யார்க்கோமகனுடைய செயலாளரான கோல்மான் (Colemon) அரசத் துரோகக் கடிதங்களை ஃபிரெஞ்சுக் கத்தோலிக்கருக்கு வரைந்ததும் உண்மை. கோல்மானைக் கைது செய்து அவருடைய கடிதங்களைப் பறிமுதல் செய்ததில் மக்களுடைய பீதி உறுதிப்படுத்தப்பட்டது. ஓட்ஸின் வாக்குமூலத்தைப் பெற்ற காட்ஃபிரே (Godfrey) என்னும் மாஜிஸ்டிரேட்டின் கொலையோ, தற்கொலையே இங்கிலாந்து மக்களைச் சதிப் பித்தம் கொள்ளுமாறு செய்தது.

இத்தகைய பரபரப்பான சூழ்நிலையில் பாராளுமன்றம் கூடிய போது எதிர்க்கட்சித் தலைவர்கள் இச் சதியைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள முடிவுசெய்தனர். சிலர் தங்களுடைய நலன்களைக் காத்துக்கொள்ளக் கிடைத்த வாய்ப்பாகக் கருதினர். டைடஸ் ஓட்ஸ் நாட்டின் முன்னறிவுடையோனாகக் கருதப்

பட்டதோடு, பெரும் பொருளும் பெற்றான். அதேசமயத்தில், கோல் மனும் வேறு சில ஜெசூட்டுகளும் தூக்குமேடைக்குச் சென்றனர். பாராளுமன்றம் கத்தோலிக்கப் பிரபுக்களின்மீது துரோகக் குற்ற விசாரணை கொண்டுவந்தது. பாராளுமன்றத்தின் இரு சபை களிலிருந்து கத்தோலிக்கரை விலக்கும் சட்டத்தினை நிறை வேற்றியது. சேனையைக் கலைத்துவிட்டு நாட்டுப் படையை அழைக்கும் கோரிக்கையைக் கொண்டுவந்தது. அரசாது ஆலோசனைக் குழுக்களிலிருந்து யார்க் கோமகனாரை நீக்கும்படி கேட்டுக்கொண்டது. ராணியாரை விவாக ரத்துச் செய்வதற்கு ஷாஃப்ட்ஸ்பரி கொண்டுவந்த திட்டத்தோடு ராணியாரின்மீது ஓட்ஸ் அரசத் துரோகக் குற்றத்தைச் சாட்டினான். முதலில் வாரிசு உரிமை தொடர்பான உறுதிமொழி எதையும் தருவதில்லை என்று சார்லஸை அறிவிக்குமாறு செய்வதன்மூலம் தனக்கு எதிராக வந்த புயலைச் சமாளித்துக்கொள்ளலாம் என்று டான்பி எண்ணினார். ஆனால், பதினான்காம் லூயி, விக்குகளின் உதவிக்கு வந்தார். லூயியிட மிருந்து பணம் பெற்று, அவரால் தூண்டப்பெற்ற பாரிஸ் நகரத்தில் இருந்த நம்முடைய அரசியல் தூதுவராகிய மான்டேகு (Montague) லூயியின் தூண்டுதலினால் டான்பி எழுதிய இரகசியக் கடிதங்களை வெளிப்படுத்தினார். உடனே டான்பியின்மீது குற்றவிசாரணை கொண்டுவரப்பட்டது. ஆனால், டான்பியின் ஆலோசனையின் பேரில் அரசர் பாராளுமன்றத்தைக் கலைத்தார்.

அடுத்த இரண்டு ஆண்டுகளில் அரசியல் குழப்பம், முறைகேடு, பீதி ஆகியவை மலிந்து கிடந்தன. ஓட்ஸ், போட்டி அரசராகவே மாறினான். அவனுடைய லாபத்தையும் புகழையும் பங்கிட்டுக் கொள்ள மேலும் பல புரளி செய்வோர் தோன்றினர். அவர்கள் லிஸ்பன், செயின்ட் ஓமர் (St. Omer) போன்ற இடங்களில் தோன்றிய வம்புப் பேச்சுக்களை ஆதாரங்களாகக் காட்டினர். லண்டன் நகர சாலைவிடுதிகளில் கொலைகள் நடந்ததாகக் கற்பனை செய்து காட்டினர். ஓட்ஸின் கூற்றுகளைப்பற்றிய ஐயப்பாடு தெரிவித்தவர்களும், கத்தோலிக்கர் (பாப்பிஸ்டுகள்) லண்டன் நகருக்குத் தீயிட்டனர் என்பதை மறுத்தவரும் உடனடியாகச் சிறையிலடைக்கப்பட்டனர். நடுக்கமடைந்த குடிமக்கள் தங்களைக் காத்துக்கொள்ள வேண்டி, 'பிராட்டஸ்டென்ட் சாட்டை' (Protestant flial) என்று அழைக்கப்பெற்ற இழிந்த ஆயுதத்தைப் பயன் படுத்தினர். காமன்ஸ் சபையின் ஆட்சி, அச்சம் காரணமாகக் கொடுங்கோல் ஆட்சியாக மாறியது. மானமிழந்து, நிலையழியும் அளவிற்கு புகைபோக்கித் துடைப்பவர், எலி பிடிப்பவர் ஆகியோ ருடைய சான்றுகளைக்கேட்டது. சந்தேகம் கொண்ட உறுப்பினரை வெளியேற்றியது. 'கடமையில் தவறுபவரை'ப் பிடித்து வருவதற்

காகச் சட்ட விரோதமான முறையில் பாராளுமன்றத்தின் சார்ஜென்ட்டைப் (Sergeant) பல இடங்களுக்கும் அனுப்பியது. நேர்மையாக இருக்க முயன்ற நீதிபதிகள் சிலரின்மீது குற்ற விசாரணை தொடர்ந்தது. கப்பற்படையை உருவாக்கிய பெபீஸ், டீன் (Deane) ஆகியோரை டவர் (Tower) சிறைக் கோட்டைக்கு அனுப்பியது. உள்நாட்டுப் போர் நிகழ்ந்த காலத்தில் இருந்த கொள்கைகள் காமன்ஸ் சபையில் மீண்டும் தலைகாட்டின. கிராம் வெல் காலத்துப் பெயர்களும் மறுப்டியும் ஒலித்தன. மற்றுமொரு ஹாம்டன் (Hampden), லெவல்லராகிய வைல்டுமேன் (the Leveller Wildman), செருக்கு மிகுந்த குடியாட்சியை விரும்பிய செல்வந் தரான அல்கர்னுன் சிட்னி (Algernon Sidney) ஆகியவருடைய பெயர்கள் அடிபட்டன.

1679ஆம் ஆண்டில் கூடிய பாராளுமன்றம், யார்க் கோமகனை இங்கிலாந்திலிருந்து வெளியேற்றுவதன்மூலமாக, அழிவு வெள்ளத் திற்கு அணை போடலாம் என்னும் நம்பிக்கையை நாசமாக்கியது. அமைச்சராகிய டான்பிக்கு அரசர் அளித்த மன்னிப்பினுல் ஆத்திரம்கொண்ட காமன்ஸ் சபை, முன்னவரை டவர் சிறைக் கோட்டைக்கு அனுப்பியது. டான்பி ஐந்து ஆண்டுகளை அங்கே கழித்தார். அதன் பிறகு மான்மவுத், ஷா:ப்ட்ஸ்பரி மற்றும் எதிர்க் கட்சித் தலைவர்களைக் கொண்டு ஒரு புதிய கௌன்சில் சபையை அரசர் வீணே நிறுவினுர். அதைப்போலவே கத்தோ லிக்க அரசர் பல அதிகாரங்களை இழக்கச் செய்யும் 'கட்டுப்பாடு' (limitations) திட்டமும் வீணுயிற்று. இதற்கு மாருகக் காமன்ஸ் சபை ஜேம்ஸை அரசு உரிமையிலிருந்து நீக்க மசோதா ஒன்று கொண்டுவந்தது. கத்தோலிக்கர்மீது பழி தீர்த்துக் கொள் வதற்காக 1585ஆம் ஆண்டில் இருந்ததைப் போன்ற சங்கம் அமைப்பதைப்பற்றிப் பேச்சு எழுந்தது. டான்பியைக் குற்ற விசாரணைக்குக் கொண்டுவருமாறு காமன்ஸ் சபை வற்புறுத்தியது. எனவே, ஜூலை மாதத்தில் அச் சபையைச் சார்லஸ் கலைத்தார்.

மிகுந்த ஆபத்தான நிலையில், தனியாக இருந்த சார்லஸ் தம்முடைய மதி நுட்பத்தையும் மன உறுதியினையும் வெளிப்படுத் தினுர். எதிர்க் கட்சியினருக்குப் போதுமான அளவு விட்டுக் கொடுத்தார். ஓட்ஸை விருந்திற்கு அழைத்திருந்தார். அப்பாவி களான பலருக்கு மரண தண்டனை அளிக்கச் சம்மதித்தார். அவ்வாறு மரண தண்டனை அடைந்தவர்களில், எலிஸபெத் காலத்திய சட்டம் ஒன்றுக்கு விரோதமாக இங்கிலாந்தில் தங்கியிருந்த ஒரே குற்றத்திற்காக தண்டிக்கப்பெற்ற பாதிரிமார் எண்மரும் இருந் தனர். ஆனுல், இரு செய்திகள் மன்னருக்கு ஊக்கமளிப்பதாக

இருந்தன. ஓட்ஸினுடைய வன்முறைச் செயல்களுக்கு எதிர் விளைவுகள் எழுந்தன. மற்றும் எதிர்க்கட்சி இரண்டு பிரிவுகளாகப் பிரிந்தது.

ஜேம்ஸை விலக்கிய பிறகு, அரசரது மணமுறிவினை ஏற்படுத்தி, மான்மவுத்தினைப் பட்டவாரிசாக ஏற்றுக்கொள்வதென்று ஷா∴ப்ட்ஸ்பரி தீர்மானித்தார். கோடையில் ஸ்காட்லாந்தில் ஒப்பந்தக்காரர்கள் கலகம் விளைவித்தனர். மான்மவுத் படையினை நடத்திச் சென்று கலகக்காரரை அடக்கினர். பாத்வெல் பிரிக் (Bothwell Brig) என்னுமிடத்தில் அவரடைந்த வெற்றியும் அதன் பிறகு அவர் காட்டிய பரிவும் அவரை முன் எப்போதைக் காட்டிலும் அதிக வலிமைபெற்ற பட்டத்தின் தேர்வாளராகச் செய்தன. இறுமாப்பும் சமயவெறியும் கொண்டு, யார்க் கோமகனுரைக் குற்றக் கூண்டில் நிறுத்த ஆர்வம் காட்டிய ரஸ்ஸலும் (Russell), காமன்ஸ் சபையின் பெரும்பகுதியினரும், லண்டன் நகரமும் அவருடைய கட்சியில் இருந்தனர். லண்டன் நகராட்சி மன்றம், ஷா∴ப்ட்ஸ்பரியின் விண்ணப்பங்களை ஆதரித்தது. 'யார்க்குகள் கூடாது', 'கத்தோலிக்கர் கூடாது' என்னும் கூக்குரலுக்கேற்ப, ஷெரீ∴ப்புகளையும் (sheriffs) ஜூரர்களையும் (jurors) தேர்ந்து எடுப்பதில் சூழ்ச்சிகளைக் கையாண்டது. அதுமட்டுமன்றி, வாப்பிங் (Wapping) சந்துகள் அல்லது சௌத்வார்க் சந்துகள் ஆகியவற்றில் ஆயிரக்கணக்கான 'சுருசுருப்பான பையன்கள்' (brisk boys) என்றழைக்கப்பட்ட கலகக்காரர்களும் புரட்சியைச் செய்யத் தயாராக இருந்தனர்.

புதிய கவுன்சிலில், மிதவாதியும் பயந்த சுபாவமும் படைத்த டெம்பிள், தாராள கெவலியர் பிரிவைச் சேர்ந்த எஸ்ஸக்ஸ் (Essex), சிறப்பாக ஹாலி∴பாக்ஸ் பிரபு என்னும் ஜார்ஜ் செவெல் ஆகியவருடைய ஆதரவினைச் சார்லஸ் பெற்றுர். அக் காலத்தில் தலைசிறந்த அரசியல் தலைவராகிய ஹாலி∴பாக்ஸ், பிற்காலத்தில் 'டிரிம்மர்' (Trimmer) என்று பெயரிடப் பெற்ற துண்டுப் பிரசுரத்தின் தலைவராக இருந்தார். ஸ்ட்ரா∴போர்ட்டின் மைத்துனராகிய அவர், அக்காலத்தில் தலைசிறந்த பொது மகனாக இருந்த வில்லியம் காவென்டிரியினல் (William Coventry) அறிவு புகட்டப் பெற்றுர். இளைய அரசராதரவாளராக இருந்த அவரைக் கிளாரண்டன் பகைத்துக்கொண்டார். அவர் சமயப்பற்ற அற்றவர். ஆசை அதிகம் கொண்டவர். அறிவு[illegible] கூர்மை[illegible] நாவன்மையும் மிகுதியாகப் பெற்று இருந்தவர். [illegible] செ[illegible] மந்திரி சபைக்கும், டான்பிக்கும் எதிராக 'நா[illegible] ('Country' Party) மாருமல் அங்கம் வகித்து வ[illegible]

தற்போதுள்ள இடதுசாரிக் கட்சியின் அழிக்கும் கொள்கை அவருக்கு அச்சத்தை ஊட்டியது. உண்மை உயர்குடியைச் சேர்ந்த அவருக்கு, அறிவுக் கூர்மை அற்றவரும் முறை கேடாகப் பிறந்தவருமான மான்மவுத் அரச வாரிசாக ஏற்றுக்கொள்ளப் படுவது அவமானத்தை விளைவிப்பதாக இருந்தது. அதே சமயத்தில் ஆரஞ்சு இளவரசரிடம்தான் இங்கிலாந்தின் எதிர் காலம் இருந்தது என்ற நம்பிக்கையை அவருடைய உள்ளுணர்வு ஊட்டியது. சிட்னிக்கள் (Sidneys), ஸ்பென்ஸர்கள் (Spencers) உள்பட பாதிக்கு மேற்பட்ட அரசியல் தலைவர்கள் குருதி அடிப் படையில் அவரது உறவினர்களாக இருந்தனர். ஸ்பென்ஸர் குடியின் தலைவரான சண்டர்லண்டு (Sunderland) அவருடைய மைத்துனர். அவரைத்தான் சார்லஸ் உள்துறைச் செயலாளராக நியமித்தார்.

காட்டைச் சூழ்ந்து நின்ற பேராபத்து எத்துணைக் கொடியது என்பது 1679ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தில் மன்னர் மிகுந்த நோய்வாய்ப்பட்டு இருந்தபோதுதான் தெரியவந்தது. மிதவாதிகள் நாடு கடத்தப்பெற்று ப்ரஸல்ஸில் (Brussels) தங்கி இருந்த யார்க் கோமகனைத் திரும்ப அழைத்தனர். ஆனால், சார்லஸ் குணமடைந்தபோது அவரை மறுபடியும் வெளி நாட்டிற்கு அனுப்பிய அதேசமயத்தில் மான்மவுத்தையும் நாடு கடத்தினர். ஆனால், யார்க் கோமகனர் தம்முடைய இருப் பிடத்தை ப்ரஸல்ஸிலிருந்து ஸ்காட்லாந்திற்கு மாற்றுமாறு சார்லஸைச் செய்ததனால், அவர்களுடைய சமயக் கொள்கை தோல்வி அடைந்தது. ஆர்லிங்டன் செய்த தவறுகளைத் திரும்பச் செய்வதுபோல் அரசர் மேலும் சலுகை வழங்குவது அவரை வெளிஸ் நகர மன்றத் தலைவரினும் இழிந்தவராகச் செய்துவிடும் என்று ஓயாது அறிவுறுத்தினர். உறுதியாக இருக்கவேண்டு மென்று அவர் வற்புறுத்தியது பல கெவலியரின் ஆதரவினை அவருக்குத் தேடித்தந்தது. 1680-ல் சார்லஸ் ஷா:ப்ட்ஸ்பரியைப் பதவியிலிருந்து நீக்கி, அப்போதுதான் தேர்ந்து எடுக்கப்பெற்ற பாராளுமன்றத்தைத் தள்ளிவைத்தார். மான்மவுத் அனுமதி யின்றித் திரும்பித் தாய்நாடு வந்தபோது அவரிடமிருந்து படைத் தலைமைப் பதவி பறிக்கப்பட்டது. காபினெட்டும் சுக்கு நூறாகியது. எஸ்ஸெக்ஸும் டெம்பிளும் பதவியிலிருந்து விலகிக்கொண்டனர். மனமுடைந்த ஹாலி:பாக்ஸ் லண்டன் நகரைவிட்டுச் சென்றார். யார்க் கோமகன் மீண்டும் மன்னரிடம் செல்வாக்கு மிகுந்து காணப்பெற்றார். 'சிறு குழந்தைகள்' (the Chits) என்ற கேலிப் பெயர் பெற்ற வலிமையற்ற மந்திரிசபை அமைக்கப் பட்டது. அதில் ஸண்டர்லண்டவின் இரண்டாம் மகனும், சமயவெறி

மிருந்த டோரி திருச்சபையினருமான லாரன்ஸ் ஹைடு (Laurence Hyde) [பிற்காலத்தில் ரோசெஸ்டர் (Rochester) பிரபுவாக வந்தவர்], பதவியில் இருப்பதற்காக எதையும் செய்யக்கூடிய சண்டர்லண்டு, அரண்மனையில் இருந்து வந்த அறிவுள்ள சிட்னி கொடால்ஃபின் (Sidney Godolphin) ஆகியோர் அங்கம் வகித்தனர்.

அந்த ஆண்டு முழுதும் இரு கட்சிகளும் பகைத்து நின்றன. மான்மவுத் தனக்குக் கேட்டினை விளைவிக்கும் அளவிற்கு அரசரைப் போன்று நாட்டைச் சுற்றிவந்தார். நாட்டுப்புறத்தாரோடு பந்தயங்களில் பங்குகொண்டு பலரது உள்ளங்களைக் கவர்ந்தார். அவ்வாறு அவர் இருக்கையில் அவருடைய தாயாராகிய லூஸி வால்டர்ஸை (Lucy Walters) மன்னர் உண்மையில் மணந்திருந்தார் என்றும் வதந்தி பரவியது. ஒன்றைத் தொடர்ந்து மற்றொரு மானக்கேடு ஷாஃப்ட்ஸ்பரிக்கும் ஏற்பட்டது. அவருடைய சீடர்கள் ஒருமுறை யார்க் கோமகனுரை ஆங்கிலிகத் திருச்சபையை ஏற்காதவர் என்று லண்டன் நகர ஜூரர்கள் முன்னிலையில் கொண்டு நிறுத்தினர். அவ்வாறே தொல்லை விளைவிப்பவர் என்று சொல்லி போர்ட்ஸ்மவுத் கோமகளையும் கொண்டு நிறுத்தினர். அவர் கத்தோலிக்கச் சதியினை அயர்லாந்திலும் பரப்பி அங்கேயும் உள்நாட்டுப் போரைத் துவக்கத் தயாராக இருந்தார். அவரிடம் கோள் சொல்பவர்கள் ஒன்றுமறியாத அர்மாகின் (Armagh) ஆர்ச்பிஷப் ஆலிவர் பிளங்கெட்டைத் (Oliver Plunket) துன்பத்துக்குள்ளாக்கினர். வயது முதிர்ந்த அப்பாவியான ஸ்ட்ராஃபோர்டு பிரபு கொல்லப்பட்டதற்கும் அவர்களே காரணம். ஃபிளீட் தெருவில் உள்ள (Fleet Street) ஷாஃப்ட்ஸ்பரியினுடைய 'பச்சை நாடா' சங்கம் கீழ்த்தரமான பத்திரிகையைப் பயன்படுத்திக்கொண்டதோடு பாராளுமன்றத்தை விரைவில் கூட்டவேண்டுமென்று கோரும் விண்ணப்பங்களையும் சேகரித்து அனுப்பியது. இவ் விண்ணப்பங்களுக்கு எதிராக டோரிகள் வெறுப்பைத் தெரிவித்துக் கடிதங்கள் எழுதினர். உள்நாட்டுப் போர் வரலாம் என்று ஹாலிஃபாக்ஸ் தம்முடைய நண்பர்களிடம் கூறினர். '41ஆம் ஆண்டு மறுபடியும் வந்துவிட்டது' என்பது பொதுப்பேச்சாக இருந்தது.

ஃபிரெஞ்சு எதிர்ப்புக் கொள்கையோடு இளைய மந்திரிகள் ஒரு சிறிது விளையாடியபோதிலும், சண்டர்லண்டும் கொடால்ஃபினும் மனம் தளர்ந்து விலக்கு மசோதாவின் பக்கம் சாய்ந்தனர். எஸ்ஸக்ஸும், போர்ட்ஸ்மவுத்தின் கோமகனும், தன்னைப் 'பிராட்டஸ்டென்ட் விலைமகள்' என்று கூறிக்கொண்ட நெல்லி குவைன் (Nelly Gwynne) எனும் மாதும் அவ்வாறே செய்தனர். ஐரோப்பியராகிய வில்லியத்தை அவர்கள் ஆதரித்தனர். இங்கிலாந்தின்

அரசுரிமையை ஏற்றுக்கொள்ளுமாறு ஆரஞ்சு இளவரசர் மிகுதி யான வற்புறுத்தலுக்குட்பட்டார். டச்சுச் சட்டசபையும், ஆஸ்தி ரிய அமைச்சர்களும் பாராளுமன்றத்தின் விருப்பத்தை நிறை வேற்றிவைக்குமாறு சார்லஸை வேண்டினர்.

1680ஆம் ஆண்டு நவம்பரில் காமன்ஸ் சபை இரண்டாவது விலக்கு மசோதாவை நிறைவேற்றியது. பிரபுக்கள் சபையில் இம் மசோதா ஏழு மணி நேரம் விவாதிக்கப்பெற்றது. அப்போது உறுப்பினர் கைகள் வாள் பிடிகளின்மேல் இருந்தன. சிறப்பாக, ஹாலிஃபாக்ஸினுடைய சொற்பெருக்கின்மூலமாக இம் மசோதா அங்கே தோல்வியுற்றது. ஆத்திரமடைந்த காமன்ஸ் சபை, அன்னரைப் பதவியிலிருந்து நீக்கவேண்டும் என்று கோரியது. விலக்கு மசோதாவோடு, ஆங்கிலிகத் திருச்சபையை வெளிப்படை யாக ஆதரிக்கும் பிராட்டஸ்டென்டுகளுக்கே எல்லாப் பதவிகளையும் ஒதுக்கி வைப்பதற்காக ஒரு சங்கம் அமைக்கப்படுதல்வேண்டும் என்பதனையும் இணைத்தது. சில நகரங்களைப் பாராளுமன்றம் உத்திரவாதமாக வைத்துக்கொள்ளவேண்டுமென்றும் குறிப்பிடப் பட்டது. சார்லஸ் அதனுடைய கோரிக்கைகளை ஏற்க மறுத்து அதனைக் கலைத்தார். அதன் பிறகு கட்டுப்பாடு இன்றி, மன்ன ரிடம் மிகுதியாகப் பற்றுறுதிகொண்டு இருந்த ஆக்ஸ்ஃபோர்டு நகரத்தில் 1681ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் காமன்ஸ் சபை கூடுமாறு அழைத்தார்.

பாராளுமன்றம் கூடுவதற்கு முன்பே சண்டர்லண்டைப் பதவி யிலிருந்து நீக்கித் தன்னுடைய உறுதியைக் காண்பித்தார். தன் நிலையை உறுதிசெய்துகொள்வதற்காகப் பதினான்காம் லூயியுடன் புதிய உடன்படிக்கை செய்துகொண்டார். நீண்டகாலத் தயக்கத் திற்குப் பிறகு, லூயி, யார்க் கோமகனரை ஆதரிப்பது என்று முடிவு செய்தார். கத்தோலிக்க முடியாட்சியின் ஆதரவாளராக ஜேம்ஸ் இருப்பார் என்ற நம்பிக்கையின்பேரிலும், இங்கிலாந்தில் பிளவுகளை நிரந்தரமாக்கும் சிறந்த வழி அஃது ஒன்றே என்ற உணர் வினாலும் அவ்வாறு செய்யத் துணிந்தார். ஆக்ஸ்ஃபோர்டு நகரம் பாசறைபோன்று காட்சி அளித்தது. மன்னரின் குதிரைவீரர்கள் விண்ட்சர் (Windsor) சாலையில் வரிசையாக நின்று காவல் புரிந் தனர். விக்கு செல்வத்தர் தங்களுடைய கலன் தாங்கிய காவற் படைகளோடு சில கல்லூரிகளில் தங்கியிருந்தனர். லண்டன் நகர உறுப்பினர் 'போப்பைச் சார்ந்தவை கூடாது' (No Popery). 'அடிமைத்தனம் கூடாது' என்று எழுதிய தொப்பி நாடாவை அணிந்துவந்தனர். மன்னருடைய இசைவோடு, தீவிரமான தீர்வு ஒன்றை மிதவாதிகள் கொண்டுவந்தனர். அதன்படி அரசர் எனும்

பட்டத்தோடு யார்க் கோமகன் நாடு கடத்தப்படுதல் வேண்டுமென்றும், அவருடைய ஆட்சிக் காலத்தில் ஆரஞ்சு இளவரசரும் இளவரசியும் காப்பாளராக ஆட்சிபுரியவேண்டுமென்றும் கூறப்பட்டது. ஆனால், அத் திட்டம் மறுக்கப்பட்டது. ஷா∴ப்ட்ஸ்பரி அரசரிடம் நேரில் சென்று மான்மவுத்தை வாரிசாக அமர்த்தவேண்டுமென்றும், திருச்சபையை ஆதரிப்பதைக் கைவிட வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். மிதவாதிகள் தங்களுக்குக்கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவவிட்டனர். அடுத்த பதினைந்து நாட்களில் சார்லஸ் ∴பிரெஞ்சு உடன்படிக்கையைச் செய்து முடித்தார். அதோடு தம்முடைய இறுதிப் பாராளுமன்றத்தையும் கலைத்தார்.

நாட்டுமக்கள் உள்நாட்டுப் போரை அறவே வெறுத்தனர் என்னும் சார்லஸின் உள்ளுணர்வு சரியாக இருந்தது. 'ஐந்நூறு ஆட்சியாளரைவிட ஓர் அரசன்' ஆட்சி சிறந்தது என்ற அவருடைய கருத்தினையே மக்களும் கொண்டு இருந்தனர். எதிர்வினை மிகுதியாக இருந்ததனால் கோடையில் சார்லஸ், ஷா∴ப்ட்ஸ்பரியைச் சிறையிலடைத்தார். சில நாட்களில் லண்டன் நகர ஜூரிகள் அவரைக் குற்றமற்றவர் என்று கூறி விடுதலை செய்தனர். ஷா∴ப்ட்ஸ்பரியின்கையாட்கள் சிலருக்குத் தூக்குதண்டனை அளித்தார். அடுத்த ஆண்டு யார்க் கோமகன் ஸ்காட்லாந்திலிருந்து திரும்பிவந்தார். அப்போதிருந்தே நெகிழும் தன்மையுள்ள சார்லஸை உறுதியாக இருக்குமாறு செய்தார். லண்டன் நகரத்தில் டோரி ஷெரீ∴ப்களையே நியமித்து அதன்மூலமாக அந் நகர ஜூரிகளை நிரப்பி எதிர்க்கட்சியைச் சிதைப்பது என்றும், அந் நகருக்கு அளிக்கப்பெற்று இருந்தஉரிமைப் பத்திரத்தைக் குவோ வாரன்டோ கட்டளையின்மூலம் (Writ of Quo warranto) அழிப்பது என்றும் தீர்மானிக்கப்பட்டது. இதை அடுத்துப் பல நகரங்களில் ஆட்சியை, அரசரை ஆதரிப்பவர் கைக்குக் கொண்டுவருவதற்காகப் பல பரோக்களின் உரிமைப் பத்திரங்கள் திருத்தி அமைக்கப்பெற்றன. கத்தோலிக்கர் சூழ்ச்சிக்கும் விக்கு கொள்கைகளுக்கும் எதிராக எழுந்த இலக்கியங்களில் டிரைடனுடைய 'அப்சலோம் அண்டு அச்சிடோபல்' (Absalom and Achitophel) எனும் நூல் முதலிடத்தைப் பெற்றது. இழிந்த பத்திரிகை தண்டிக்கத் தக்கதாக இருந்தது. உபன்னியாசங்களும் துண்டு அறிக்கைகளும் அரசன் எதிர்க்கும் உரிமையை மறுத்தன. சாத்வீகப் பணிவு (passive obedience) என்ற கொள்கையைத் திருச்சபை மறுபடியும் பிரசாரம் செய்தது.

இவ்வாறு கடுமையான சூழ்நிலையில் பல விக்குகளும், அவர்களிடையே இருந்த கிராம்வெல் காலத்து அதிகாரிகளும் சூழ்ச்சியி

லீடுபட்டனர். வெறிகொண்ட ஸ்காட் ஃபெர்குஸன் போன்ற தீவிரவாதிகள் அரச சகோதரரைக் கொலைசெய்ய சதி நடத்தினர். அதே சமயத்தில் மான்மவுத்தும், ரஸ்ஸலும் கிளர்ச்சி செய்வதற்கான வாய்ப்புகளை ஆராய்ந்தனர். 1683ஆம் ஆண்டில் இச் சதிகள் அம்பலப்படுத்தப்பெற்று அதன் காரணமாக அவர்களுடைய அழிவு நெருங்கியது. ஷாஃப்ட்ஸ்பரி வெளிநாட்டிற்கு ஓடிவிட்டார். விரைவிலேயே ஆம்ஸ்டர்டாமில் அவர் இறந்தார். அரசரும் யார்க் கோமகனும், நியூமார்க்கெட் (Newmarket) என்னுமிடத்தில் இருந்து ஹாட்டஸ்டன் (Hoddesden) என்னுமிடத்திலுள்ள ரை மாளிகைக்கு (Rye-house) வரும்போது அவர்களைக் கொல்லவேண்டும் என்ற சதி கண்டு பிடிக்கப்பட்டது. அதனால் அரசருக்கு எதிராகப் பேசிய செல்வந்தரும் சிறையிடப்பெற்றனர். எஸ்ஸக்ஸ் டவர் கோட்டைச் சிறையில் தற்கொலை செய்துகொண்டார். 'எனக்கு எப்போதும் இடங்கொடுத்திருக்க மாட்டார்' என்று கூறி, சார்லஸ், ரஸ்ஸலைத் தூக்கிலிடுமாறு பணித்தார். ஆர்லிங்டன் சிட்னியோ போலியான குற்றச் சாட்டிற்குப் பலியானார். ஆனால், அவர் 'பழம்பெரும் குறிக்கோளு'க்காக உயிர் துறந்த பெருமையோடு மடிந்தார். சூழ்ச்சியாளருடைய கைப்பாவையாக இருந்த மான்மவுத் ஹாலந்தில் அடைக்கலம் புகுந்தார்.

இவ்வித வன்முறைச் செயல்களில் அநேகமாக எல்லாக் கவுன்சிலர்களும் பங்கு பெற்றனர் என்றாலும், பல மூலக்கூறுகள் முதன்மையாக இருந்தன. வெகு சீக்கிரத்திலேயே தம்முடைய சபையை அமைத்த சண்டர்லண்டு போன்ற இழிந்த, ஆனால், உயர்ந்து வருபவர்கள் எதிர்வினையிலும் கத்தோலிக்க அரசரிடம் பணிபுரிவதிலும் தங்களுடைய முன்னேற்றம் இருந்தது என்றுணர்ந்த, குடிவெறி மிகுந்த பிரதம நீதிபதிகளாக வேலை பார்த்த ஜெஃப்ரேக்கள் (Jeffreys) முக்கியமானவர்கள். இவர்களைத் தவிர செல்வாக்கு மிகுந்த கெலியர் கும்பல் ஒன்று இருந்தது. யார்க் கோமகனுடைய மைத்துனரான ஹைடு (Hyde), மேற்குப் பகுதியில் டோரி கட்சித் தலைவராக இருந்த சேமூர் (Seymour), வயது முதிர்ந்த ஆர்மாண்ட் ஆகியோர் அவர்களிற் சிலராவர். அவர்கள், அவரையும் திருச்சபையையும் உறுதியாகப் பற்றிநின்ற போதிலும் கத்தோலிக்கச் சமய வளர்ச்சியினையும், பாராளுமன்றம் தள்ளிப்போடப்படுவதையும் கண்டு மன உலைச்சல் அடைந்தனர். இதற்கு மாறாக, ரஸ்ஸலுக்காக வாதாடியவரும் அடுத்துவரும் ஆட்சிக்கு அஞ்சியவருமான ஹாலிஃபாக்ஸ் இருந்தார்.

அவர்களுடைய போட்டிகள் ஐரோப்பாவின் அரசியலோடு இணைந்து இருந்தன. 1681ஆம் ஆண்டில் லூயி ஸ்டிராஸ்பர்க்கை

(Strasbourg), ஆல்ஸாஸின் (Alsace) பெரும் பகுதியோடு இணைத்து ஃபிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமான பகுதிகள் என்று கருதப் பட்டனவற்றைத் திரும்ப இணைக்கும் வேலையைப் பூர்த்திசெய்தார். 1684-ல் தம்முடைய படைவலியைக் கொண்டு போர் அறிவிக்கப் படாத சூழ்நிலையில் லக்ஸம்பர்க்கின் (Luxemburg)மீது தமக் கிருந்த உரிமையினை நிலைநாட்டிக்கொண்டார். இத்தாலியின்மீது அவர் கொண்ட பிடி மேலும் இறுகியது. அவருடைய நெடுநாளைய சமய ஒறுத்தல் கொள்கை 1685ஆம் ஆண்டில் நான்ட்ஸ் கட்டளையைத் (Edict of Nantes) தள்ளுபடி செய்வதில் முடிந்தது. ஐரோப்பிய நேசக் கூட்டத்தைத் தவிர வேறெதுவும் இத்தகைய வலிமை மிகுந்த லூயியைத் தடுத்து நிறுத்த முடியாத நிலை தோன்றியது. ஆனால், பாராளுமன்றத்தைச் சார்லஸ் கூட்ட வேண்டுமென்று ஹாலிஃபாக்ஸும், சேமூரும் நிகழ்த்திய எதிர் வாதங்கள் பயனற்றுப்போயின. ஏனெனில், அத்தகைய செயல் பிராட்டஸ்டென்ட் பட்ட உரிமை பெறுவதில் முடியும் என்பதை அவர் உணர்ந்து இருந்தார். தமக்கு அவமானத்தை உண்டு பண்ணிய ஆண்டுகளைத் திரும்பக்கொண்டுவர அவர் விரும்பவில்லை. பேரரசைக் காப்பது தம்மால் முடியாது என்பதைக் குறிப்பால் உணர்த்தினர். தம் மைத்துனியாகிய ஆன் (Anne) என்பவளை ஃபிரான்ஸின் நண்பரான டென்மார்க் (Denmark) நாட்டு அரசர் ஜார்ஜுக்கு மணமுடித்து வைத்தார். மத்திய தரைக்கடலில் நம்முடைய வெளிக்காவல் நிலையமாக இருந்த டாஞ்சியரை (Tangier) இழிவான நிலையில் கைவிட்டார். அதனுடைய அரண்களை அழிப்பதற்காகப் பெப்பீஸை அனுப்பினர். ஐரோப்பாவில் பிராட் டஸ்டென்ட் நாடுகளுக்கிடையே இருந்த பூசல்களும் கத்தோலிக்கர் களுக்கிடையே பிரஷ்யாவிற்கும் ஸ்வீடனுக்கும் இருந்த கொடிய பகைமையும், ஆஸ்திரியாவிற்கும் ஹாலந்திற்கும் இடையே இருந்த மனக் கசப்பும் அவருக்கு நொண்டிச் சமாதானங்களாகக் கிடைத்தன.

சூழ்ச்சிக் காலத்தில் காணப்பெற்ற உள்நாட்டுப் போர் அபாயத்திற்கும், அதற்குப் பிறகு எழுந்த எதிர்வினைகளுக்கும், காரணமாக இருந்தவைகளில் ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலும் இருந்த சூழ்நிலைகள் முதலிடத்தைப் பெறுகின்றன. அந்த நாடுகள் ஒவ்வொன்றிலும் பயங்கரமான மரபுரிமை வளர்ந்தது. இங்கி லாந்தில் விக்கு, டோரி வாதங்களுக்குக் காரணமான வேற்றுமைகள் பழைமைக்காலச் சமுதாயங்களில் போர்ப்பூசல்களாக மாறின. ஸ்காட்லாந்தில் முன்னிலை மீட்சியை மக்கள் வரவேற்றனர். அதற்குக் காரணம் அது கிராம்வெல்லினுடைய ஐக்கியத்தையும் காவற்படையையும் நீக்கியது. மேலும், அது ஸ்காட்லாந்துப்

பாராளுமன்றத்தை மீட்டுத்தந்தது. கிராம்வெல்லிற்கு எதிராக எழுந்த கிளர்ச்சிகளை நடத்திச்சென்ற மிடில்டன் (Middleton) என்பவரை அரசாங்கத்தின் தலைவராகிய கிளாரண்டன் ஸ்காட்லாந்தின் உயர் ஆணைப் பிரபுவாகத் தேர்தெடுத்தார். பிரஸ்பிடீரிய அரசியல்வாதிகளின் மூளையாக இருந்தவரும், இறுதியில் காப்பாளருக்குப் பணிந்தவருமான ஆர்கைல் தூக்குமேடைக்கு அனுப்பப் பட்டார். 'தள்ளுபடிச் சட்டம்' (Rescissory Act) ஒன்று 1633ஆம் ஆண்டுக்குப் பின், ஸ்காட்லாந்தில் இயற்றப்பெற்ற சட்டங்கள் யாவற்றையும் தள்ளுபடி செய்தது. பிற சட்டங்கள் அரசருக்கு வாழ்நாள் முழுவதற்கும் பணம் ஒதுக்கித் திருச்சபையின்மீதும் அரசின்மீதும் அவரது தனியுரிமையை வலியுறுத்துவனவாக இருந்தன. எபிஸ்கோபல் திருச்சபை ஸ்காட்லாந்தில் ஏற்படுத்தப் பட்டது. அதனோடு திருச்சபைப் பதவிகளில் தனியார் ஆதரவு செல்வாக்குப் பெற்றது. முன்னிலை மீட்சிக் காலத்தில் பிரஸ் பிடீரியரின் பேராளாக இருந்த ஜேம்ஸ் ஷார்ப் (James Sharp) என்பவர் செயின்ட் ஆண்ட்ரூஸ் நகர் ஆர்ச்பிஷப் பதவியை ஏற்றுக்கொண்டதனால் மக்களின் மாறாத வெறுப்பிற் குள்ளானார்.

இவ்வாறான எதிர்வினைகளில் மிடில்டன் கூட்டத்தினர், தங்களுடைய இழிந்த தன்மை, பழிவாங்கும் பண்பு, திறமையின்மை ஆகியவற்றை வெளிப்படுத்தினர். மேலும், உள்நாட்டுப் போரின் போது சார்லஸின் நட்பைப்பெற்று அதனை இழக்காமல் இருந்த லாடர்டேலோடு மோதினர். அவர் இளையவராய் இருந்த காலத்தில் சமயக் கல்வியில் ஆழ்ந்த அறிவுடையவராகவும், பாக்ஸ்டரின் (Baxter) நிர்வாகியாகவும் இருந்தார். அப்போது கிர்க் (Kirk) என்னும் ஸ்காட்லாந்தின் திருச்சபை உயர்ந்துவரும் விடிவெள்ளி என அவரை நம்பியது. ஆனால், ஆண்டுகள் செல்லச்செல்ல அவர் சீர்கேடுற்றார். தம்முடைய இழிந்த ஆசைகளுக்கு எதிராக வரும் எதையும் அவர் அனுமதிக்கவில்லை. அரசரை வரம்பற்றவராகச் செய்து தம் பதவியைக் காத்துக்கொள்வதே அவருடைய அரசியல் விதியாக இருந்தது. அவரிடமிருந்த சிடுசிடுக்கும் குணமும் வலிமை வாய்ந்த சொல்நயமும் சார்லஸை மிகுதியாகக் கவர்ந்தன. அதே சமயத்தில் அவருடைய உயர் திறமைகள், டுவீட்டேல் (Tweeddale), கின்கார்டைன் (Kincardine), சிறப்பாக லண்டனில் அவரது பேராளராக இருந்தவரும் பல்வகைப் பண்புகளைப் பெற்றவருமான ராபர்ட் மெரே (Robert Moray) ஆகியவரை அவரைப் பின்பற்றுவோராகச் செய்தன. அவருடைய கொள்கை நாட்டு கௌரவத்தோடு இணைந்திருந்தது. இங்கிலாந்தின் ஆலோசனைச் சபைகளின்மூலம் ஸ்காட்லாந்துப் பிரச்

சினைகளைத் தீர்க்கும் கிளாரண்டனுடைய முறையை வெறுத்தார். பிஷப்புகளைத் திரும்ப நியமிக்கக்கூடாது என்று வற்புறுத்தினர்.

அவருடைய ஆதிக்கம் 1663ஆம் ஆண்டில் துவங்கியது. அப்போது அவர் மன்னர் ஸ்காட்லாந்திற்கு வெளியிலும் பயன் படுத்தக்கூடிய நாட்டுப்படையினை நிறுவுமாறு பாராளுமன்றத்தைத் தூண்டினர். அதனேடு சட்டமியற்றுவதில் அரசருக்கு முதற்படி அளிக்க முதலாம் சார்லஸினுல் உருவாக்கப்பெற்ற சட்டப் பிரபுக் களைத் தேர்தெடுக்கும் முறையினைப் புதுப்பிக்குமாறு செய்தார். இங்ஙனம் அவர் மேன்மேலும் செல்வாக்குப் பெற்று, சார்லஸிடம் 'எளிய, பழைய ஸ்காட்லாந்தில் உம்மைப்போன்று வரம்பற்ற அதிகாரம் கொண்ட மன்னர் எப்போதும் இருந்ததில்லை' என்று கூறுமளவிற்கு நிலைமையினை மாற்றியமைத்தார். ஆனுல், அவர் சற்று அவசரப்பட்டுப் பேசிவிட்டார்.

கிர்க் திருச்சபை பல செல்வந்தர்களுடைய ஆதரவைப்பெற்று இல்லையென்ருலும், வெறிச் செய்ல்களால் மிதவாதிகள் பலர்மீது கொண்ட செல்வாக்கினை இழந்தபோதிலும், அதனுடைய பிடிப்பு சாதாரணப் பொதுமக்களிடம் மிகுதியாக இருந்தது. சமய ஒப்பந் தத்தை (Covenant) அணையிட்டு மறுப்பதற்கும், ஒப்பந்தக் காரருடைய சமயக் கூட்டத்தை அழித்து, ஆர்ச்பிஷப் ஷார்ப்பின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளச் செய்யும் முயற்சியைத் தடுக்க உயிரைக் கொடுத்துப் போவதற்கும் சிலர் இருந்தனர். சமய குருமார்களில் மூன்றில் ஒரு பகுதியினர் மிடில்டனுடைய ஏற் பாட்டை ஏற்க மறுத்து, தங்களுடைய விடுதிகளைத் துறந்தனர். தண்டங்கள் விதிப்பதாலும் துருப்புகளைக் கொணர்ந்து நிறுத்துவ தாலும் 'ஒப்பந்தக்காரர்களைத்' திருச்சபைக்கு கொண்டுவர முடிய வில்லை. தென்மேற்குப் பகுதியில் லானுர்க்கிலிருந்து (Lanark), அயர் (Ayr) வரையில் உள்ள குறும் பள்ளத்தாக்குகளில் அவர்கள் இரகசியக் கூட்டங்களைக் கூட்டினர். அங்கே மாறுவேடத்தில் வந்த குருமார்கள் கூட்டங்களை நடத்திவைத்தனர். அவ்வமயங் களில் படை வருவதைப் பார்த்துச் சொல்ல காவற்காரரை நிறுத் தினர்.

மிடில்டனின் கொடுமை மிக்க அடக்குமுறையினுல், 1666ஆம் ஆண்டில் டச்சுப் போர் ஸ்காட்லாந்தின் வாணிபத் திற்கு முக்கியமாக இருந்த இடத்தினை இழக்குமாறு செய்த போது கலகம் தோன்றியது. பலருடைய ஆலோசனைக்கு மாருக சில ஆயிரம் வெறியர்கள் டம்ஃபிரீஸ் (Dumfries) நகரத்தில் இருந்து எடின்பரோ நகரத்தைச் சென்றடைந்தனர். அவர்கள் பின் வாங்கி வந்தபோது பென்ட்லாண்ட் (Pentland) மலைப் பகுதிகளில்

ருல்லியன் கிரீன் (Rullion Green) என்னுமிடத்தில் முறியடிக்கப் பட்டனர். ரோதஸ் (Rothes) என்பவராலும், ஷார்ப்பினுலும் நடத்திச் செல்லப்பெற்று, பீதியடைந்த கவுன்சில் தன் கையில் சிக்கியவரைத் துன்புறுத்தியது. பலரைத் தூக்கிலிட்டது. மேற்குப் பகுதியைத் தாமஸ் டால்யல் (Thomas Dalyell) போன்ற படையினரின் அட்டூழியங்களுக்கு இரையாக்கியது. அவர்கள் ரஷ்யப் படையினரின் பயங்கர முறைகளை நன்கு அறிந்தனர். உதாரணமாகக் கணவனையும் மனைவியையும் ஒருவருக்கொருவரைப் பொறுப்பாக்கிக் கொள்ளப்படும் தண்டங்கள், தொழுவத்திலிருந்து மாடுகளைக் கவர்ந்து செல்லல், குற்றம் சாட்டப்பெற்றவரை வீடுகளில் இருந்தும் மனைகளில் இருந்தும் வெளிக் கொணரும் படையைப் பயன்படுத்தல், அவர்களைப் பேசவைப்பதற்காக விரல் களுக்கிடையே தீக்குச்சியை எரித்தல் போன்ற கொடுமைகள் செய்யப்பட்டன. அது சமயம் பிரசாரகனுக இருந்த ஹியூ மெக்கெயில் (Hugh McKail) என்னும் சிறுவன் போன்ற தியாகி களின் புகழ் ஓங்கியது. மெக்கெயில் சித்திரவதை செய்யப் பெற்று 'கழிபேருவகையில்' மடிந்தான்.

இவ்விதக் குழப்பங்களுக்கு முடிவு காண்பதற்காக அமர்த்தப் பெற்ற லாடர்டேல், முதலில் நஷ்ட ஈடு தந்து, சேனையைக் குறைத்தார். 1669ஆம் ஆண்டில் பொறுத்தல் அறிக்கையை விடுத்தார். அரசியலில் ஓர் அங்கமாகக் கருதிய பிஷப்புகளை அடியோடு கவிழ்த்துவிட அவரால் முடியவில்லை. அதேசமயத்தில் ஒப்பந்தக்காரர்களும், பிஷப்புகளை ஓர் அரசியல் அங்கமாகக் கருதவேண்டுமென்று எதிர்பார்த்தார். லாட் (Laud) காலத்தில் செய்யப்பட்டதைப் போல ஆங்கில வழிபாட்டுச் சுவடி ஒன்றையும் கிர்க் திருச்சபைமீது திணிக்கவில்லை. சமய குருக்கள் தங்க ளுடைய பிரஸ்பிடீரிக்களில்கூட அனுமதிக்கப்பட்டனர். பதவியி லிருந்து ஒரு காலத்தில் விலக்கப்பட்டவர், அப் பதவி காலியாக இருக்குமானுல் திருச்சபை கட்சியையும், அரசரின் மேலாதிக்கத் தையும் ஏற்றுக்கொள்ள ஒப்புதல் தருவதாலேயே திரும்பவும் அடைய அனுமதிக்கப்பட்டனர். ஆனுல், உண்மை 'ஒப்பந்தக் காரர்' அரசரின் ஆன்ம மருத்துவராக (King's curate) இருக் கவோ, ஏசு கிறிஸ்துவுக்குமேல் அரசரது ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ளவோ விரும்பாததனுல் பொறுத்தலறிக்கையும் திருச் சபையில் புறம்பானவரையும் சேர்த்துக் கொள்ளச்செய்ய மேற் கொண்ட முயற்சியும் உயர்மதி படைத்தவருக்கு ஆறுதல் தர வில்லை. எனவே, ஒழுக்க சீலரான பிஷப் லெய்டனும் (Leighton) தயவு காட்டவேண்டும் எனக் கூறிய இளைஞரான பர்னெட்டும் (Burnet), லாடர்டேலும் நூதனமான ஒறுத்தலை ஆரம்பித்தனர்.

லாடர்டேலின் உருவில் வந்த உலகமே 'ஒப்பந்த உணர்வை' அழிக்க முடியவில்லை. மற்றொரு வலியதான காரணம் அவருடைய கொள்கையைக் குலைப்பதாக இருந்தது. இங்கிலாந்தையும் ஸ்காட்லாந்தையும் இரு பிரிவுகளாக ஆட்சிசெய்ய முடியாது என்பதுதான் அக் காரணம். ஒரு மில்லியனுக்கும் குறைந்த மக்கள் தொகையைப்பெற்றிருந்த ஸ்காட்லாந்து ஏழ்மை நாடு; அளவுக்கு மீறிய வரி செலுத்திய நாடு. அதே சமயத்தில் ஆங்கிலச் சட்டங்கள் ஸ்காட்லாந்தை நாவாய்த் திட்டத்திலிருந்து ஒதுக்கி வைத்தன. பொதுநலத் துரைத்தனக் காலத்தில் ஸ்காட்லாந்து தானியம், கால்நடை ஆகியவற்றில் கட்டுப்பாடற்ற வாணிபம் செய்வதற்காகப் பெற்று இருந்த உரிமையை நீக்கின. எனவே, ஸ்காட்லாந்தில் பல அறிஞர்கள் பழைய ஐக்கியத்தைத் திரும்பப் பெற எண்ணினர். 1670 ஆம் ஆண்டில் நிகழ்ந்த பேச்சு வார்த்தைகள் ஆங்கில வணிகருடைய எதிர்ப்பினாலும் ஸ்காட்லாந்தியர் செருக்கினாலும் முரிந்தது. என்றாலும், ஸ்காட்லாந்தில் எதிர்க்கட்சியினர் ஆங்கிலேயரோடு தொடர்புகொண்டு சில ஆங்கிலக் கொள்கைகளைக் கடன் வாங்கிக்கொண்டனர். லாடர்டேல் தம்முடைய நாட்டில் செய்த கொடுங்கோல் ஆட்சி, இங்கிலாந்தில் கெபால் மந்திரிசபை இழைத்த கொடுமைகளுக்கு ஈடு செய்வதாக இருந்தது. லாடர்டேல் பாராளுமன்றத்தின்மீது கொண்ட முறையற்ற பிடிப்பினைத் தாக்க ஓர் எதிர்க்கட்சி உருவாகியது. 1673-ல் இருந்து ஷாஃப்ட்ஸ்பரியின் செல்வாக்கிற்குட்பட்ட இந்த எதிர்க்கட்சியில் ஹாமில்டன் (Hamilton) இளைஞரான ஆர்கைல் (Argyll) போன்ற புகழ்மிக்கவர் சேர்ந்து இருந்தனர்.

இவ்வாறு லோலண்டு மக்களின் மனத்திலிருந்து வெகுதூரம் விலகிச்சென்ற ஓர் அமைச்சர், போர் முதல் மதிப்பு வாய்ந்த தொழிலாகக் கருதப்பட்டு, கத்தோலிக்கரும் எபிஸ்கோபலியரும் (Episcopalians) செல்வாக்குப் பெற்றிருந்த ஹைலாந்திற்கப்பால் ஆதரவைத் தேடுவது எப்போதும் நிகழ்வது. அப்படிப்பட்ட ஹைலாந்துப் படையின் கொள்ளையீட்டினால் கொதிப்படைந்த தெற்கு ஸ்காட்லாந்து மக்கள் கலகம் விளைவித்தனர். ஒரு வெறி பிடித்த கூட்டத்தினர் செயின்ட் ஆண்ட்ரூஸ்-க்கு மேற்கில் உள்ள சதுப்பு நிலத்தில் தற்செயலாக ஷார்ப்பைச் சந்தித்துத் தங்களுடைய வாள்களால் வெட்டிக் கொன்றனர். மேற்கில் மற்றொரு கூட்டம் வடக்கில் இருந்த அரசரின் தலைசிறந்த படைவீரராகிய கிளேவர்ஹௌஸ் (Claverhouse) என்பவரை டிரம்கிளாக் (Drum-clog) என்னுமிடத்தில் முறியடித்தது. சார்ல்ஸ் புத்திசாலித்தனமாக மான்மவுத்தைப் படைத்தலைவராக அனுப்பினார். அவர் அரச குடும்பத்தைச் சார்ந்தவர் என்பதனாலும் பக்லியூச்சின் (Buccleuch)

வாரிசை மணந்து இருந்ததனுலும் வலிமை பெற்று விளங்கினர். கலகக்காரர்களும் தங்களுக்குள்ளே ஏற்பட்ட பூசல்களினுல் வலிமை இழந்த நிலையில் வெடிமருந்து இல்லாததால், பாத்வெல் பிரிக்கில், கிளைடைக் (Clyde) காப்பாற்றுவதில் தோல்வியுற்றனர். ஆடு களைப்போன்று நான்கு திசைகளிலும் சிதறி ஓடினர்.

இவைகளனைத்தும் கத்தோலிக்கர் சதியையும் லாடர்டேலு டைய வீழ்ச்சியையும் கொணர்ந்தன. வெகு விரைவிலேயே மான் மவுத்தும் வீழ்ச்சியுற்ருர். 1680ஆம் ஆண்டிலிருந்து யார்க் கோமகன் உண்மை ஆட்சியாளரானுர். எதிர்ப்புத் தொடர்ந்து இருந்துவந்தது. காமிரான் (Cameron) என்னும் சமய குருவின் பெயரை வைத்துக்கொண்ட 'கர்மிரானியன்' என்னும் தீவிர வாதிகள், சார்லஸை, சமய விலக்குச் செய்யப்பெற்றவர் என்று அறிவித்து அவருடைய அரசாங்கத்தை மறுத்தனர். சதுப்பு நிலங் களிலும் பாசி படர்ந்த மலைப்பகுதிகளிலும் கோரமான போர் நடந் தது. கிளேவர்ஹௌசின் குதிரைப்படை ராணுவச் சட்டத்தைநிறை வேற்றிய அதே சமயத்தில், பேர்பெற்ற சர் ஜார்ஜ் (Sir George) [அல்லது புளூய்டி (Bluidy)] மெக்கன்சி (Mackenzie) அரசருக் காகச் சமய ஒறுத்தலில் ஈடுபட்டார். சிறிது சிறிதாக எதிர்க்கட்சித் தலைவர்கள் ஷா∴ப்ட்ஸ்பரியுடனும் மான்மவுத்துடனும் சேர்ந்து கொள்வதற்கு நாட்டைவிட்டுச் சென்றனர். ஹாலந்தில் இருந்த ஆர்கைலோடு மான்மவுத்தைக் கெடுத்தவரான ∴பெர்குஸன் (Fer- guson)போய்ச்சேர்ந்தார். எடின்பரோவில் சித்திரவதைக்குட்பட்டு அங்கிருந்து தப்பிச் சென்றபிறகு, ஆரஞ்சு இளவரசரின் ஸ்காட் லாந்து ஆலோசகராக இருந்த அறிவு படைத்த புனித வில்லியம் கார்ஸ்டாரஸ் (Carstares) என்பவரும், வரலாற்று அறிஞரான பர்னட்டும் (Burnet), பெஞ்ச் நீதிமன்றத் தலைவரான ஸ்டேரும் (Stair) அவரோடு இணைந்தனர்.

இங்ஙனம் உள்நாட்டுப் போருக்குரிய குறிக்கோளோடும், அடக்கி வைக்கப்பெற்ற கிர்க் திருச்சபையோடும், அடிமையான பாராளுமன்றத்தோடும் சார்லஸின் ஆட்சி முடிவடைந்தது. இது வரையில் இங்கிலாந்திற்கும் ஸ்காட்லாந்திற்கும் இடையே இருந்த தொடர்பு இரு நாடுகளுக்கும் ஒரு சாபக்கேடாக இருந்துவந்தது. அத் தொடர்பு இங்கிலாந்தில் வரம்பற்ற ஆட்சியின் உச்சநிலையைக் கொண்டுவந்தது. ஸ்காட்லாந்தில் சமயத்தையும் உரிமையையும் அழிப்பதாக இருந்தது.

இங்கிலாந்தின் தொடர்பு அயர்லாந்திற்கும் சொல்லுதற்கரிய தீமைகளைத் தந்தது. ஆனல், இங்கே அரசருடைய செயல்களின்

மூலமாக இருந்ததைக் காட்டிலும் இங்கிலாந்துப் பாராளுமன்றம், பிரிட்டிஷ் குடியேற்றக்காரர் ஆகியவர்மூலமாகத்தான் அதிகக் கெடுதல்கள் தோன்றின. சார்லஸின் ஆட்சிக்காலத்தின் பெரும் பகுதியில் அவருடைய துணைவராக இருந்தவர், போற்றத்தகுந்த குணங்களைப்பெற்று அனுபவமிகுந்து இருந்த ஆர்மாண்ட் என்பவர். அவர் ஐரிஷ் பிராட்டெஸ்டென்டாக இருந்தபோதிலும் சமய ஒறுத்தலைவிட, ஆங்கில வாணிப லாபத்தைவிட, அயர்லாந்தின் நன்மைகளைப் பெரிதாக மதித்தார். அரசரும், ஆர்மாண்டும், கிளாரண்டனும் எதைச் செய்ய விரும்பியபோதிலும் அயர்லாந்தில் கிராம்வெல்லினுடைய திட்டத்தையோ குடியேறிய படைவீரரையோ ஒழிக்க முடியவில்லை. அயர்லாந்து நிலத்தின்மேல் இங்கிலாந்தையும் அயர்லாந்தையும் சார்ந்தவருடைய கோரிக்கைகளைப் பூர்த்திசெய்ய அந் நாட்டில் எல்லா நிலங்களுமே போதாது. எனவே, அவர்கள் செய்ததெல்லாம் நீண்ட விசாரணைக்குப் பிறகு 1665ஆம் ஆண்டுச் சட்டப்படி ஒரு சில 'அப்பாவி கத்தோலிக்கருக்கு' அவர்களுடைய சொத்துகளைத் திரும்பத் தந்ததுதான்.

அயர்லாந்திலும் கிராம்வெல் தோற்றுவித்த ஐக்கியம் குலைந்ததனால் அந் நாட்டுப் பாராளுமன்றத்தின் ஆட்சி ஏற்பட்டது. அப்படிப்பட்ட ஆட்சி, முழுதும் படைசார்ந்ததாக இருந்தால் ஒழிய, கத்தோலிக்கருக்கு ஓரளவு சமயப் பொறை அளிப்பதாக இருந்தது. அதற்கு முன்னால் அனுபவித்ததைவிட அடுத்து வரும் நூறு ஆண்டுகளில் அனுபவிக்கப்போவதைக் காட்டிலும் அதிக உரிமையை இந்த ஆட்சியில் அவர்கள் பெற்றனர். சோதனைச் சட்டம் எதுவும் கத்தோலிக்கரைப் பதவியிலிருந்து விலக்கிவைக்கவில்லை. சாதாரண சமய குருமார்கள் அமைதியாகத் தங்களுடைய வேலைகளைச் செய்ய அனுமதிக்கப்பட்டனர். எனினும், ஆர்மாண்ட் பல புரட்சிப் பொறிகளையும், இரு கூட்டத்தினரின் வெறுப்பையும் சமாளிக்கவேண்டி இருந்தது. தீவிரக் கத்தோலிக்கக் கட்சியின் தலைவனாக இருந்தவன் 'வெறிபிடித்த டிக் டால்போட்' (mad Dick Talbot); பிற்காலத்தில் டயர்கான்னலின் கோமகனாக (Duke of Tyrconnel) வந்தவன். நில நிர்ணயத் திட்டத்தை அழிப்பதே அவனுடைய குறிக்கோளாக இருந்தது. பிரிட்டிஷ் குடியேற்றக்காரர் இதற்கு மாறாக இருந்தனர். அவர்களில் டியூடர் குடியினைச் சேர்ந்த பாயில்கள் (Boyles) மட்டுமன்றி, அல்ஸ்டரில் (Ulster) வாழ்ந்த ஸ்காட்லாந்தியரும் கிராம்வெல்லின் படையினரும் இருந்தனர். அவர்கள் ஆர்மாண்டின் இரக்க குணத்தைக் குறை கூறினர். அல்ஸ்டரில் சதிகள் தோன்றின. அத்தகையோரிடமிருந்து நாட்டுப் படையை உருவாக்குவது நல்லதன்று. அயர்லாந்து அமைச்சரின் தொல்லைகள் இதனோடு தீர்ந்துவிடவில்லை. காசில்மெயின் சீமாட்டி போன்ற

தம் மனத்திற்கிசைந்தவருக்கு மானியம் வழங்குவதற்காக அயர் லாந்து நீதியினைக் 'கவரச் செய்த அரசரின் முயற்சிகளையும், கத்தோலிக்கரை நகராட்சி மன்றங்களில் புகுத்துவதற்காக தண்டனையை ரத்துசெய்யும் அதிகாரத்தைப் பயன்படுத்தியதையும் அவர் பொறுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. இங்கிலாந்தின் பாராளுமன்றம் இதைவிட மோசமாக இருந்தது. அஃது அயர் லாந்தைக் குடியேற்ற நாடுகளோடு தொடர்புகொள்ள முடியாத வாறு செய்தது. மேலும், சுயநலம் மிகுந்த பல சட்டங்களின் மூலமாக அயர்லாந்துக் கால்நடைகளும் வெண்ணெயும் இங்கிலாந் திற்கு வருவதைத் தடுத்தது. அயர்லாந்து ஏற்றுமதி செய்யும் கம்பளம் முழுவதும் இங்கிலாந்திற்கே அனுப்பவேண்டும் என்றும் விதிக்கப்பட்டது.

அதன்பிறகு, ஷாஃப்ட்ஸ்பரி மடத்தில் துணிச்சலோடு அயர் லாந்தைச் சூழ்ச்சிச் சுரத்தில் மூழ்கடித்தார். அயர்லாந்தைப்பற்றிக் குறிப்பிடும்போது, 'அது நாம் வளர்த்த பாம்பு' என்று கூறினர். ஆர்மாண்டை 'மற்றொரு ஸ்ட்ராஃபோர்டா'க நடத்தத் துணிந்தார். அவருடைய புரளியாட்கள் சூழ்ச்சிகளை ஜோடனைசெய்து இழிந்த முறையில் பொருளீட்டினர். ஜெசூட்டுகளும் சமயப் பள்ளிகளும் ஒடுக்கப்பட்டன. பொய்க் குற்றச்சாட்டின்பேரில் ஆர்ச் பிஷப் பிளங்கட் (Plunket) என்பவரைத் தூக்கிலிட்டனர். இருந்த போதிலும் ஆர்மாண்டினுடைய மாறாத நேர்மைத்தன்மை நாட்டினை இப் புயலிலிருந்து காப்பாற்றிக் கரை சேர்த்தது. பிற திசைகளில் வாணிபம் திருப்பப்பெற்றது. அவருடைய ஆட்சிக் காலத்தில் வருவாய் இரட்டித்தது. டப்ளின் (Dublin) 50,000 மக்களைக் கொண்ட ஓர் அழகிய நகரமாக விளங்கியது. நிலத்தை அடிப் படையாகக் கொண்டு எழுந்த குமுறல்கள், ஏறக்குறைய எல்லாக் குடும்பங்களையும் பாதித்தன என்றாலும், பெருமளவு 'டோரி' கொள்ளைச் செயல் தொடர்ந்து வந்தது என்றாலும், மற்றொரு தலைமுறைக்கு நேர்மையான அரசாங்கம் இருந்திருக்குமானால் அஃது அயர்லாந்தை மீட்டிருக்கக்கூடும்.

அவ்வாறு ஒன்றும் நடைபெறவில்லை. ஷாஃப்ட்ஸ்பரியும், யார்க் கோமகனும் நாட்டில் எல்லாப் பகுதிகளிலும் புரட்சித் தீயை மூட்டினர். 1666ஆம் ஆண்டிலிருந்து பாராளுமன்றம் கூட்டப் படவில்லை. அப்படியே அது கூடியிருந்தாலும் உண்மைப் பிரதி நிதித்துவம் உடையதாக இருந்திருக்காது. சுருசுருப்பான திரிதுறவி களும் (friars) ரோமானிய அறிவுரைகளும், அரசாங்கத்தையும் மக்களையும் பிரித்துவைத்தன. அச் சமயத்தில் கத்தோலிக்க அயர்லாந்து ஃபிரான்ஸின் உதவியை நாடியது. சார்லஸ் இறப்

பதற்கு முன் ஆர்மாண்ட் திரும்ப அழைக்கப்பட்டார். யார்க் கோமகனுடைய செல்வாக்கினுல் படையில் மேலும் கத்தோலிக்கரை நுழைப்பதற்காக அயர்லாந்தின் துணைப் பிரபு (lord-deputyship) விடமிருந்து படைத்தலைமை பிரிக்கப்பெற்றது. மற்றொருபுறத்தில் தல ஆட்சியில் பங்கு மறுக்கபெற்ற பிராட்டஸ்டென்ட் இணங்காதவர் பலர் நியூ இங்கிலாந்தில் குடியேறினர். கத்தோலிக்க அயர்லாந்தைப் பிராட்டஸ்டென்டு இங்கிலாந்துடன் பற்றுறுதி கொண்டதாக வைத்துக்கொள்ளமுடியும் என்று யார்க் கோமகன் நம்பினுர் என்ருல், அஃது அவர் உண்மையை உணராதவர் என்பதைக் காட்டுகின்றது. பிராட்டஸ்டென்டு அயர்லாந்தாக இருந்தாலும் அதைக் கட்டுப்படுத்துவது என்பது நிச்சயமான ஒன்றன்று.

சார்லஸினுடைய இறுதி ஆண்டு மூன்று நாடுகளிலும் ஏதோ ஒன்றை எதிர்பார்த்துக் காத்திருக்கும் சூழ்நிலையை உண்டாக்கியது. கடைசியாக டான்பி விடுதலை பெற்ருர். அவர் தமது செல்வாக்கை ஹாலிஃபாக்ஸிற்கு அளித்தார். அரசரைச் சார்ந்து இருந்தவரிலும், கொடால்ஃபின் போன்ற சிலர் ஆரஞ்சு இளவரசரோடு நல்ல உறவுகொண்டிருந்தனர். அரசர் மறுபடியும் மாற்றம் ஒன்றை நாடினுர் என்பதற்கான அறிகுறிகள் தென்பட்டன. அவர் செய்துகொண்ட ஃபிரெஞ்சு உடன்படிக்கை காலங் கடந்துவிட்டது. கருவூலம் ரோசெஸ்டரிடமிருந்து நீக்கப்பெற்றது. மான்மவுத் தம்முடைய தந்தையாரை இரகசியமாக வந்து சந்தித்தார். யார்க் கோமகனுர் மறுபடியும் நாடு கடத்தப்படுவார் என்ற எண்ணம் இருந்தது.

ஆயின், 1685ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் அரசர் வலிப்பு நோயால் (apoplexy) தாக்குண்டு நைந்தார். ஒரு சமயம், ஒர்செஸ்டர் என்னுமிடத்திலிருந்து தப்பிச்செல்லத் தமக்கு உதவி செய்த ஹட்டில்ஸ்டன் (Huddleston) என்ற பாதிரியாரைக் கொண்டு இறுதிச் சடங்குகளை ரோமன் கத்தோலிக்க முறையில் செய்தபிறகு, சார்லஸ், பிப்ரவரி மாதம் ஆரும் தேதி உயிர் நீத்தார். லண்டன் நகர மக்கள் அவருடைய மறைவுக்காக உளமார்ந்த துக்கம் கொண்டாடினர். அநேகமாக, சார்லஸ் அடிக்கடி குறிப்பிட்டதைப் போல அவருக்குப் பின் வாரிசாக வருபவர் கொந்தளிப்பைக் கொண்டுவருவார் என்பதை உணர்ந்ததனுல் அவர்கள் மேலும் கலங்கினர்.

## 3. இரண்டாம் ஜேம்ஸ், 1685–1688

ஐரோப்பியப் போராட்டமோ இங்கிலாந்தின் எதிர்காலமோ பிரிட்டிஷ் முடிதரித்தவருக்காகக் காத்திருப்பதற்கில்லை. சார்லஸாக இருந்தால் சிறிது சிறிதாக விட்டுக்கொடுத்து முடிவொன்றும் எடுக்காமலேயே காலத்தைக் கடத்தி இருப்பார். ஆனால், ஜேம்ஸோ, மூன்றாண்டுகளுக்குள் ஒரு புரட்சி உருவாவதற்குக் காரணமாக இருந்தார்.

எந்த இரு சகோதரர்களும் இவர்களைக் காட்டிலும் மாறுபட்டு இருக்க முடியாது. சார்லஸின் அறிவாற்றலையோ கவர்ச்சியையோ ஜேம்ஸ் பெற்றிருக்கவில்லை. அவருடைய கத்தோலிக்கச் சமய மாற்றம் உள்ள ஒழுங்கினை உயர்த்தவோ தம்முடைய குணக் கூறுகளைப் பயன்படுத்தவோ செய்யவில்லை. தம்முடைய தந்தையின் வீழ்ச்சிக்கும், தமயனின் தொல்லைகளுக்கும் காரணம் அவர்கள் காட்டிய சலுகைகளே என்று அவர் எண்ணினார். பர்னெட் என்பவர் குறிப்பிட்டதைப் போல, அவர் மன்னிப்பளிக்கும் தோளின்கீழ் பிறக்கவில்லை. அவர் சூழ்ச்சிக்காரர்களுக்கு இடமளித்தல் கூடாது என்று வற்புறுத்தினார். ஸ்காட்லாந்தில் கடுமையாக ஆட்சி புரிந்தார். ஓட்ஸைத் தொழுமரத்திலிட்டு, ரிச்சர்டு பாக்ஸ்டரைச் (Richard Baxter) சிறையிலிட்டு, தம்முடைய ஆட்சியைத் தொடங்கினார். எனினும், அவர் சார்லஸைவிடக் காரியவாதி. கடற்படைத் தலைமையை நன்கு இயக்கினார். அவருடைய சமயக் கொள்கையை மக்கள் எத்துணைதான் குறை கூறியபோதிலும் அவர் சொல் தவறாதவர் என நம்பினர்.

அவரது வருவாயை நிர்ணயிப்பதற்காகக் கூட்டப்பெற்ற காமன்ஸ் சபை, நவீன முறையில் அமைந்த பரோக்களினாலும், தேர்தலில் அரசாங்கத்தின் செல்வாக்குப் பயன்படுத்தப்பட்டதாலும், அரசரை ஆதரிக்கும் பெரும்பான்மையோரைக்

கொண்டிருந்தது. இந்தப் புதிய காமன்ஸ் சபையில், சட்டத்தையும் திருச்சபையையும் பாதுகாப்பதாகக் கூறி, ஜேம்ஸ் உறுதிமொழி எடுத்துக்கொண்டார். இத்தகைய மக்கள் ஆதரவு கோடையில் நிகழ்ந்த இரு படையெடுப்புகளினால் இரட்டித்தது. அதுபோது குளறுபடியான தோல்வியுறும் புரட்சிக் கலகங்கள் ஏதும் தோன்றவில்லை. நாடு கடத்தப்பெற்ற ஸ்காட்லாந்தியரும் ஆங்கிலேயரும், தாங்கள் கொண்ட குறிக்கோளிலும் காலத்திலும் ஒத்து வராததால் ஹாலந்திற்குச் சென்றனர். ஆர்கைலோ ஆர்க்னீஸில் (Orkneys) பல வாரங்களை வீணாகக் கழித்துவிட்டார். தமது இன்வரரே (Inveraray) நாடு, அதால் (Atholl) என்பவரால் கைப்பற்றப்பட்டது என்று கண்டார். காமரானியன்களும் ஹைலாந்துத் தலைவருக்காகக் கிளர்ச்சி செய்யவில்லை. அவரைப் பின்பற்றுபவரிடம் காணப்பெற்ற பூசல்கள் அவர்களை வேட்டையாடி அழிப்பதற்குப் போதுமான காலத்தை அரசாங்கத்திற்கு அளித்தன. ஆர்கைல், கிளைட்மீது நம்பிக்கையற்ற தாக்குதலை மேற்கொண்டபோது கைது செய்யப்பெற்றார். பழைய தண்டனையின்பேரில் தூக்கு மேடைக்குச் சென்றார்.

ஆர்கைல் இறப்பதற்கு முன் ஜூன் மாதம் பதினோராம் தேதி லைம் ரிஜிஸ் (Lyme Regis) என்னுமிடத்தில் மான்மவுத் வந்து இறங்கினார். ஜூலை பதினைந்தாம் தேதி அவரும் தூக்கில் தொங்கினார். இங்கிலாந்து 1649ஆம் ஆண்டினை மறந்துவிட்டது என்பதற்கோ, 1688ஆம் ஆண்டுப் புரட்சிக்கு ஆயத்தமாக இருந்தது என்பதற்கோ ஒருவித அறிகுறியும் காணப்படவில்லை. டோரி செல்வாக்கு மிகுந்த ஆக்ஸ்ஃபோர்டு நகரம் பற்றுறுதி கொண்ட தொண்டர்களை அனுப்பியது. ஆரஞ்சு இளவரசர், தம்முடைய மாமனுக்கு உதவுவதற்கென்று பிரிட்டிஷ் துணைப் படைகளை அனுப்பினார். மான்மவுத்தினுடைய துணை வந்ததும், கிராம்வெல் காலத்துப் படைத் தலைவர்களாகவோ, ரை மாளிகைச் சதியில் பங்கு பெற்ற துணிகரச் செயலாளர்களாகவோதான் இருந்தனர். அவர்களோடு இங்கொன்றும் அங்கொன்றுமாக சால்டோன் (Saltoun) நகரத்தைச் சார்ந்த ஸ்காட்லாந்துக் குடியரசுவாதியான ஃபிளட்சர் (Fletcher) போன்ற முடக்கு லட்சியவாதிகளும் இருந்தனர்.

அப்படி இருந்தபோதிலும், வேறு தலைவர்களாக இருந்தால் 'பழைய குறிக்கோளை' வைத்து அதிகப் பயன் அடைந்திருப்பர். லைம் என்னுமிடத்திலிருந்து வில்ட்ஷயர் (Wiltshire) எல்லை வரை விரிந்து கிடந்த பியூரிட்டானியர் நாட்டுப் பகுதியில், வேலையில்லாத் திண்டாட்டத்தினால் அவதியுற்ற ஆலைத் தொழிலாளர்களும்

மெண்டிப் (Mendip) சுரங்கத் தொழிலாலர்களும் நிறைந்திருந்தனர். அங்கே கோமகனுரின் எளிய ஆதரவாளர்கள் இறுதி வரை நிரூபித்துக் காட்டியவாறு, இவாஞ்சலிகள் பிராட்டஸ்டென்ட் சமயம் வாழும் சமயமாக இருந்தது என்றாலும், 'கிர்க்கினுடைய ஆடுகள்' என்று அழைக்கப்பட்டு, டாஞ்சியரில் இருந்து கொண்டு வரப்பட்ட பயங்கரமான படை வீரர்களுக்கும் சர்ச்சிலினுடைய குதிரை வீரர்களுக்கும், அவர்களுடைய அரிவாள்களும் பறவை வேட்டைத் துப்பாக்கிகளும் ஈடு கொடுக்க முடியாது. நம்பிக்கை இழந்தநிலையில் மன்னர் பட்டத்தை மான்மவுத் சூட்டிக் கொண்ட போது பிரிஸ்டல் (Bristol) நகரமக்களிடமிருந்தோ, வில்ட்ஷயர் ஆடை விற்பவரிடமிருந்தோ ஒருவித எதிர்ச்செயலும் தோன்றவில்லை. மான்மவுத் வெல்ஸ் தலைக்கோயிலில் (Wells cathedral) குதிரைகளைக் கட்டி வைத்துவிட்டு பிரிட்ஜ்வாடரின் (Bridgwater) மீது பின்வாங்கினுர். ஜூலை மாதம் ஐந்தாம் நாளிரவு அங்கிருந்து புறப்பட்டு செட்ஜ்மூர் (Sedgemoor) நதியின்மேலிருந்த அரசரது படையைத் தாக்கச் சென்றார். அங்கே ஆழமான இடங்களில் மூடுபனியினால் முன்னேற முடியாமல் தடுக்கப்பட்டார். வெடிமருந்து தீர்ந்து விட்டது. பொழுது புலரும் தருணத்தில் அவரது வீரர்கள் துண்டு துண்டாக வெட்டப்பட்டனர். உயிருக்காக ஓடிய அவரைக் கிரான் போர்ன் சேஸ் (Cranborne Chase) என்னுமிடத்தில் கைது செய்தனர். இரங்கத்தக்க நிலையில் அரசரைப் பேட்டி கண்ட பிறகு அவர் கொல்லப்பட்டார்.

இவைகளெல்லாம் ஜேம்ஸுக்குக் கிடைத்த அதிர்ஷ்ட தேவதையின் அன்பளிப்புகள் எனலாம். ஆனால், அவர் இத்தகைய நல்வாய்ப்புகளைப் பயன்படுத்திக்கொள்ளாது தமக்குப் பேராதரவு தந்து, வாழ்நாள் முழுதிற்கும் பெரும் பொருள் ஒதுக்கிய இரு நாட்டுப் பாராளுமன்றங்களையும் பகைத்துக்கொள்ள முற்பட்டார். வெற்றியைப் பயன்படுத்திய அவரது முறைகள் மிதவாதிகளைச் சோர்வடையச் செய்தன. அவருடைய 'இரத்த வெறி பிடித்த' சட்டங்களை, ஜெஃப்ரீஸ் என்னும் பிரதம நீதிபதி செயல்படுத்தினர். அதன் விளைவாக மேற்குப்பகுதி கொலைக்களமாக மாறியது. அங்கே 300 கைதிகள் கொல்லப்பட்டனர். அதற்கு மேலும் நூற்றுக் கணக்கானவர் மேற்கு இந்தியத் தீவுகளுக்கு அனுப்பப்பட்டனர். இத்தகைய சமயப் போர், சென்ற ஆட்சியில் ஐயத்திற்குரியராக இருந்த விக்குகளைக் கொல்வதற்கும், பலரைச் சிறையிடுவதற்கும் பயன்பெற்றது, காண்ட் எலிசபெத் (Gaunt Elizabeth) என்னும் வயோதிக அம்மையாரைக் கலகக்காரருக்குத் தஞ்சம் அளித்த குற்றத்திற்காக, டைபர்ன் (Tyburn) என்னுமிடத்தில் உயிரோடு கொளுத்தினர். அதே குற்றத்திற்காக அரசரைக் கொன்ற

ஒருவனுடைய விதவையாகிய அலைஸ் லிஸ்லி (Alice Lisle) என்பவருடைய தலையை வின்செஸ்டர் கடைதெருவில் கொய்தனர்.

இத்தகைய கொடுமைகளைப்பற்றியும் சாமர்செட் (Somerset) சதுப்பு நிலங்களில் தூக்கு மேடைகளில் தொங்கிய சிதைந்த சடலங்களைப்பற்றியும் செய்திகளை அறிந்த நிலையில் காமன்ஸ் சபை கூடியது. அச் சபை நிலைப்படையைப் பெருக்கவேண்டு மென்றும், ஜேம்ஸின் கோரிக்கையையும், சட்டத்திற்கு விரோதமாக அவரால் நியமிக்கப்பெற்ற கத்தோலிக்க அதிகாரிகளைத் தொடர்ந்து வைத்துக்கொள்ள வேண்டுமென்ற வாதத்தையும், சோதனைச் சட்டத்தையும் ஹேபியஸ் கார்பஸ் சட்டத்தையும் ரத்து செய்யவேண்டும் என்ற கோரிக்கையையும் தோல்விடையச் செய்தது. போப்பின் சமயம், அவர்களுடைய தலைவாயிலில் நின்றதைப் போன்று இருந்தது. தம்மோடு அமைச்சரும் மாஸ் (Mass) தொழுகைக்கு வரவேண்டுமென்று அரசர் எதிர்பார்த்தார். போப்பாண்டவரின் தூதர் (nuncio) ஒருவர் லண்டனுக்கு வந்தார். ஹியூக்நோ அகதிகள் இங்கிலாந்தில் வந்து குவிந்தனர். ஹாலிஃபாக்ஸைப் பதவியிலிருந்து விலக்கியும், இரு சபைகளிலும் ஒளிவு மறைவின்றிப் பேசியும், பாராளுமன்றத்தைத் தள்ளிவைத்தும்—அஃது அவருடைய ஆட்சியில் மறுபடியும் கூடவில்லை—ஜேம்ஸ் தமக்கே குழி பறித்துக்கொண்டார்.

நமக்குக் கிடைக்கும் அடுத்த சில ஆண்டு நிகழ்ச்சிகளை வைத்து, ஜேம்ஸ் கத்தோலிக்கருக்குச் சமயப் பொறை அளிக்க முயன்றார் என்று கூறமுடியவில்லை. அவர் அவ்வாறு நினைத்து இருந்தால் ஓரளவு வெற்றி பெற்றிருக்கமுடியும். ஏனென்றால், கத்தோலிக்கரும் கத்தோலிக்கத் திருச்சபையும் கேட்டது தண்டனைச் சட்டங்களின் நீக்கம்தான். எவ்வாறெனினும், ஜேம்ஸ் கோரியது உரிமையன்று; அதிகாரம். அயர்லாந்தில் டிர்கான்னல் என்பவரைப் படைத்தலைவராக நியமித்த பிறகு பிராட்டஸ் டென்டு சிப்பாய்கள் படையிலிருந்து தள்ளப்பட்டனர். மேலும், கத்தோலிக்க நீதிபதிகளும் கவுன்சிலர்களும் நியமிக்கப்பெற்றனர். ஸ்காட்லாந்தில் கத்தோலிக்கராகிய கோர்டனின் பிரபு எடின்பரோ கோட்டையை வைத்திருந்தார். சமயம் மாறிய சகோதரர்களான பெர்த்தும் (Perth) மெல்ஃபோர்ட்டும் (Melfort) மந்திரி சபையை ஆட்டிவைத்தனர். இங்கிலாந்தில் அரண்மனையிலும் சேனையிலும் பிராட்டஸ்டென்டுகள் வெளியேற்றப்பட்டனர். ஆயின், 1686ஆம் ஆண்டு காட்டன் (Godden) என்பவருக்கும் ஹேல்ஸ் (Hales) என்பவருக்குமிடையே மோசடியாக எழுந்த வழக்கில் அரசரது ஆதரவாளர்கள் நிறைந்த நீதிமன்றம் பாராளுமன்றச் சட்டங்

களைத் தள்ளிவைக்கும் அரசரது உரிமையைச் சட்டப்படியானது என்று ஏற்றுக்கொண்டது.

அந்தத் தீர்ப்பின் துணைகொண்டு டோவர் இரகசிய உடன் படிக்கையில் பங்கு பெற்றவர் உள்பட, நான்கு கத்தோலிக்கப் பிரபுக்களை ஜேம்ஸ் கவுன்சிலில் சேர்த்துக்கொண்டார். இரு ஆக்ஸ்ஃபோர்டு கல்லூரிகளின் முதல்வர்களாகக் கத்தோலிக்கரை நியமித்தார். பல சட்டங்களுக்கு மாருக ஒரு புதிய ஹைகமிஷனர் நீதிமன்றம் நிறுவப்பெற்றது. சமய குருமார்களை அடக்க முடியா திருந்த லண்டன் நகர பிஷப்பான காம்ப்டனைப் (Compton) பதவியி லிருந்து தள்ளிவைத்தலே அதன் முதல் வேலையாக இருந்தது. லண்டன் நகருக்கு வெளியே ஹௌன்ஸ்லோ ஹீத்தில் (Hounslow Heath) பெரும்படை ஒன்று நிறுத்தப்பட்டது. கத்தோலிக்கச் சிறு கோயில்களும் பள்ளிகளும் லண்டன் நகரத்தில் ஆரம்பிக்கப் பெற்றன. அரசருடைய ஆதரவைப்பெற்ற பெட்ரே (Petre) என்னும் ஜெசூட்டிற்கு பிஷப் பதவியைப் பெற்றுத் தருவதற்காக ஒரு தூதுக் குழு ரோமிற்குச் சென்றது.

மேலும், ஜேம்ஸ் அடைய முயன்றது உரிமை அன்று என்பது அவர் கையாண்ட வெளிப்படையான செயல்முறைகளில் இருந்து நன்கு புலனுகின்றது. அவருடைய காபினெட் இரு கூறுகளைப் பெற்று இருந்தது. ஒன்று, ஜேம்ஸின் மைத்துனர்களாகிய ரோசெஸ்டர், கிளாரண்டன் ஆகியோர் தலைமையில் இருந்தது. மற்றென்று, அவரது அரசியல் ஊழியர்களான சண்டர்லண்டி லும் கொடால்ஃபினுலும் நடத்திச் செல்லப்பெற்றது. சண்டர் லண்டு திறமை மிக்கவர். பின்னுளில் மூன்ரும் வில்லியம் அவரது திறமையை இன்றியமையாது தேவைப்படுவது என்று கண்டார். ஒருசில போலிக் கொள்கைகளுக்காகத் தம்முடைய பதவியை இழக்க அவர் விரும்பவில்லை. பதவி வேட்டையில் இருந்த அவர் தம்முடைய எதிரிகளை மிஞ்சுவதற்குப் பெயரளவில் கத்தோலிக்க ராக மாறுவதற்குக்கூடத் தயங்கி இருக்கமாட்டார். ஜேம்ஸைக் காட்டிக் கொடுப்பார் என்று நினைப்பதற்குக் காரணம் ஏதுமில்லை என்ருலும், அவர் தம்முடைய தலையை இழக்க விரும்பவில்லை. இவைகளில் பெரும்பான்மையானவை கொடால்ஃபினுக்கும் பொருந்தும். சிறுவனுக இருந்தபோதே அரசரின் வேலையாளாக இருந்த அவர், ஸ்டூவர்டுகளின் ஊழியர்; மிகத் திறமைவாய்ந்த பொது ஊழியர்; மாடனுவின் மேரியிடம் அதிகப் பற்றுக் கொண்டவர். எனினும் தம்முடைய எதிர்காலம் ஆரஞ்சு இளவர சரோடு இணைந்திருந்தது என்பதை உணருவதற்குப் போதுமான அறிவினைப் பெற்றிருந்தார். உள்வட்டத்திலிருந்த மற்றையோரும்

அவ்வாறே நினைத்தனர். சில ஆண்டுகளுக்கு முன் 'எப்போதாவது நாமெல்லாம் அழிந்துவிடுவோம்' என்று எழுதிய ஜான் சர்ச்சில் (John Churchill) அவர்களில் குறிப்பிடத்தக்கவர்.

இப்போது தம்முடைய திட்டத்தை டோரி கட்சியைச் சார்ந்த ஆங்கிலிகச் சமய நிலையத்தவரைக்கொண்டே நிறைவேற்றிக் கொள்ளுவது அரசருடைய முதல் நம்பிக்கையாக இருந்தது. இணங்காதவரை ஒறுத்தல் என்பது அத் திட்டத்தின் ஒரு பகுதி யாகும். தமது அமைச்சர்களின்மூலமாகவோ, அப்போதிருந்த வாக்காளர் அல்லது பாராளுமன்றம் ஆகியவற்றின்மூலமாகவோ கத்தோலிக்கச் சமயத்திற்குத் தாம் அளிக்க விரும்பிய பாது காப்பினைத் தம்முடைய வாழ்நாளிலோ, அதன் பிறகோ, தர இயலாது என்று அறிந்ததனுல், 1678ஆம் ஆண்டில் அரசர் அத் திட்டத்தைக் கைவிட்டார். புதிய திட்டத்தின் கூறுகள் ஒவ்வொன்ருக விரைவில் செயல்படுத்தப்பெற்றன. பதவியி லிருந்து ரோசெஸ்டர் நீக்கப்பெற்ருர். அயர்லாந்தில் கிளாரண் டனுக்குப் பதிலாக ட்ரிகான்னலை நியமித்தார். இங்கிலாந்தில் டோரி பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. அதே சமயத்தில் இங்கி லாந்திலும் ஸ்காட்லாந்திலும், எல்லாச் சோதனைகளையும் தீவிரமான பொறுத்தலறிக்கை நீக்கியதோடு கத்தோலிக்கப் பொதுத் தொழு கைக்கு அனுமதி தந்தது. புறச் சமயத்தவர், கத்தோலிக்கர், அரச ஆதரவாளர் கொண்ட சக்திவாய்ந்த பிரிவு ஒன்றினை ஏற்படுத்தி விடமுடியும் என்றும், அவர்களைக்கொண்டு நிரப்பிய பாராளு மன்றத்தின்மூலமாக எல்லாச் சோதனைச் சட்டங்களையும் நீக்கிவிட முடியுமென்றும் நம்பினுர். முடியாட்சியை மீட்டு, விலக்கு மசோ தாவை முறியடித்த டோரிகளைப் பதவிகளிலிருந்து நீக்கினுர். பாராளுமன்றத்திலும் போர்க்களத்திலும் அரசருக்காகப் போராடிய ஃபிஞ்ச் (Finch), பெர்டீஸ் (Berties), பெகாட் (Bagot) போன்ற குடும்பத்தினரும், பற்றுறுதிகொண்ட லண்டன் நகரத் தலைவர்களும், துணைத் தளகர்த்தராக இருந்த ஹெர்பர்ட்டும் (Herbert) பதவிகளிலிருந்து நீக்கப்பெற்றனர். ஷெரீப்புகள், டோரி நகராட்சி மன்றங்களைத் திருத்தி அமைக்க முற்பட்டனர். எல்லா அமைதிக் காப்பு நீதிபதிகளும், சோதனைகளை நீக்க வாக் களிக்குமாறு வற்புறுத்தப்பட்டனர். அதற்கு இணங்காத பலர் பதவி இழந்தனர். நாட்டில் பெரும் பிரபுக்களாக இருந்த ஆக்ஸ் ஃபோர்டின் கடைசி ஏர்ல் பிரபுவான விரே (Vere), டர்பி (Derby), சாமர்செட் ஆகியவர்கள் லெப்டினன்ட் பிரபுப் பதவிகளையும், படை களையும் துறக்குமாறு வற்புறுத்தப்பட்டனர். அயர்லாந்தில் ட்ரி கான்னல் இதைப்போன்றே செயல்பட்டார். டப்ளினில் இருந்து பிராட்டஸ்டென்டுகள் பயந்து ஓடினர். ஜேம்ஸின் கவுன்ஸிலில்

பெட்ரே பாதிரியாரை உள்ளிட்ட கத்தோலிக்கர் பெரும்பான்மை யினராக விளங்கினர். போலிக் கத்தோலிக்கர் ஒருவரை ஆக்ஸ் ஃபோர்டு நகரத்திலிருந்த மக்தலேன் கல்லூரியின் (Magdalen College) தலைவராக நியமித்தார். கல்லூரி அத்தகைய போலிக் கத்தோலிக்கரை ஏற்க மறுத்ததன் விளைவாக அரசரே விரைந்து வந்து குதிரைப் படையின் துணைகொண்டு கல்லூரியின் கதவுகளை உடைத்துத் தம் விருப்பத்தை நிறைவேற்றிக்கொண்டார். 1687ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் ராணியார் கருவுற்றிருப் பதாக அறிவிக்கப்பட்டது. தீவிர கத்தோலிக்கர் தங்களுடைய திருச்சபையை ஆதரிக்கும் ஜேம்ஸை வாழ்த்தும் வகையில் மகன் பிறப்பான் என்று முன் உணர்ந்து கூறினர்.

எப்போதாவது எதிர்ப்புத்தோன்றுவது நிச்சயமாக இருந்தது. ஆனல், அதனுடைய அமைப்பும் காலமும் ஐரோப்பிய நிகழ்ச்சி களால் நிர்ணயிக்கப்பட்டன. பதினான்காம் லூயியின் கொடுங் கோல் ஆட்சியும், அறிவிக்கப்பெருத போரும், அளவுக்கு மீறி வளர்ந்துவிட்டன. சமயச் சீர்திருத்தத்திற்குப் பிறகு எப்போதும் காணுத அளவிற்குக் கத்தோலிக்க நாடுகளும், பிராட்டஸ்டென்டு நாடுகளும் ஃபிரான்சுக்கு எதிராகக் கூட்டுச் சேர்ந்தன. ஃபிரெஞ் சுத் திருச்சபைமீது லூயியின் தன்னிச்சையான ஆட்சியையும், அவரிடமிருந்து ரோமிற்கே வந்த அபாயத்தினையும், கத்தோலிக்க ஜெர்மனிக்கு அவரால் நேர்ந்த இடரினையும், போப் பதினென்ரும் இன்னேசென்ட் தடை செய்தார். பயமுறுத்தலினுலும், லஞ்சம் கொடுத்தும் ஐம்பது ஆண்டுகளாக வளர்க்கப்பெற்ற தேசீய உணர்வு வலிமை குன்றியது. வடபகுதியில் வாழ்ந்த பிராட்டஸ் டென்டுகளுக்கும், மெத்தனமான கத்தோலிக்கப் பேரரசர் லியோபால்டிற்கும் நட்புறவு ஏற்பட்டது. ஜெர்மனிக்குப் பின்னல் பகைவர்களைத் தோற்றுவிக்கும், பலகாலமாக மதிக்கப்பட்ட ஃபிரான்சின் திட்டம் குலைந்தது. 1683ஆம் ஆண்டில் துருக்கியிட மிருந்து வியன்னுவைக் காத்து மங்காப் புகழ் எய்திய போலந்தின் மன்னரான ஜான் சோபியிஸ்க்கி (John Sobieski) ஃபிரெஞ்சுக் கூட்டுறவைக் கைவிட்டார். லூயியினல் தூண்டப்பெற்ற ஹங்கேரியப் புரட்சியாளர் ஒடுக்கப்பட்டனர். ஆஸ்திரியர் துருக்கியரிடமிருந்த புதாபெஸ்த் நகரத்தை மீட்டனர். கிழக்கில் பாதுகாப்பு ஏற்பட்டுவிட்டதால் ஆஸ்திரியர் பேரரசு மேற்கில் ஃபிரான்சின்மீது திரும்பும் என்பது தெளிவான செய்தியாக இருந்தது. 1686ஆம் ஆண்டில் ரைனின் (Rhine) பாதுகாப் பிற்காக எழுந்த ஆக்ஸ்பர்க் சங்கம் (League of Augsburg), ஹாப்ஸ் பர்க்குகளையும், பவேரியாவையும், ஸ்வீடனும் ஸ்பெயினும் வைத்திருந்த ஜெர்மன் பகுதிகளையும் சேர்த்துவைத்தது. பெருங்

தேர்வாளருடைய சுயநலத்திற்கான தயக்கமும் கத்தோலிக்க எதிர் உணர்ச்சியும் அவருடைய ஜெர்மன் நாட்டுப்பற்றினால் நீங்கின. அதே சமயத்தில் முதன்மையான நோக்கமாகிய ஸ்பானிய வாரிசு உரிமையில் லியோபால்டு இறுதியாக வெற்றி பெற்றார். அவருடைய மகள், துருக்கியப் போரில் புகழ் மிக்க தலைவர்களில் ஒருவராகிய பவேரியாவின் தேர்வாளரை மணந்துகொண்டாள். மாமனாரும் மருமகனும் தங்களுக்கு ஸ்பெயின் நாட்டின்மீது இருந்த உரிமைகளைப்பற்றி முடிவு எடுக்கவில்லை. என்றாலும், தற்காலிகமாக ஃபிரான்சுக்கு எதிராக ஒன்றுபட்டு நின்றனர்.

பிரிட்டிஷ் அரசரைக் கைப்பற்றுவதற்குத் தம்மை அர்ப்பணித்துக்கொண்ட ஆரஞ்சு நாட்டின் வில்லியம் இச் சுழலின் நடுவில் இருந்தார். அவருடைய மனைவி பிரிட்டிஷ் பட்டத்திற்குரிய வாரிசாவார். இரண்டுவித நெருக்கங்கள் அவரைத் தூண்டின. உள்நாட்டுப் போரை நோக்கி இங்கிலாந்து விரைந்ததாகக் காணப்பட்டது. அவ்வித உள்நாட்டுப்போர் மற்றொரு அரசருக்கும், டச்சுப் காரருக்கும் பகையாக மறுமுறையும் பொது நலத் துரைத்தனத்தை உருவாக்கக்கூடும். அல்லது ஜேம்ஸ் இளவரசி ஆன் (Anne) என்பவரைக் கத்தோலிக்கராக மாற்றி, மேரியைப் (Mary) புறக்கணிக்கக்கூடும். ஆங்கிலேயர் குறைந்தது நடுநிலைமை வகிக்கவில்லையென்றால் ஐரோப்பாவில் வில்லியம் ஒன்றும் செய்ய முடியாது. 1672ஆம் ஆண்டில் நிகழ்ந்ததைப் போலவே இங்கிலாந்தும் ஃபிரான்சும் இணைந்து திடீர்த்தாக்குதல் செய்யுமென டச்சுக்காரர் பயந்தனர்.

உண்மையில் அத்தகைய அச்சம் காரணமற்றது. ஏனென்றால், போரைத் தவிர்க்கவே ஜேம்ஸ் முயன்றார். சண்டை வருமானால் பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டிய அவசியத்தை ஏற்படுத்தி அவருடைய கத்தோலிக்கத் திட்டத்தை அழித்துவிடும். முதலில் லூயி தானமாக அளித்த சிறு தொகைகளை மனமுவந்து பெற்றுக் கொண்டபோதிலும், லூயி போப்பாண்டவரோடு மேற்கொண்ட சச்சரவினையும், நெதர்லாந்துடன் நடத்திய போரையும் ஜேம்ஸ் விரும்பவில்லை. அவர் செருக்கு மிக்கவராக இருந்த காரணத்தால் தாம் ஒரு சாதாரண ஜெர்மன் இளவரசரைப் போல நடத்தப் பட்டதை வெறுத்தார்.

இவ்வாறு இங்கிலாந்திற்கும் ஐரோப்பாவிற்கும் இடையே இடைவிடாது இருந்த எதிர்ச்செயல்கள் 1687ஆம் ஆண்டு உச்ச நிலைக்கு வந்தன. அப்போது ஜேம்ஸிடம் இருந்து வந்த கேள்விக்கு, தம்மால் சோதனைச் சட்டத்தை ரத்து செய்வதற்காக உதவி அளிக்க

முடியாது என்று வில்லியம் பதிலளித்தார். அதனோடு ஆங்கிலத் தலைவர்களின் எண்ணங்களை அறிவதற்குத் தமது பேராட்களை அனுப்பிவைத்தார். அவர்களுடைய பதில்கள் பலதிறப்பட்டவை களாகும். ஹைடுகள் பட்டும் படாமலும் இருந்தனர். ஹாலி ∴பாக்ஸ், ஜேம்ஸுக்குப் போதுமான இடம் கொடுத்துப் பார்க்க வேண்டுமென்று எண்ணினர். ஆனால், டான்பி, தீவிர நடவடிக் கையை வரவேற்றார். அரசர் வெற்றிகரமாகக்காமன்ஸ் சபையைத் தம்முடைய ஆட்களைக்கொண்டே வெற்றிகரமாக நிரப்புவார் என்றும், கத்தோலிக்கப் படைத் தலைவரால் நடத்திச் செல்லப்பட்ட சேனையின் துணையால் உறுதியுடன் நிற்பார் என்றும் செல்வாக்கு மிகுந்த கூட்டம் ஒன்று கூறியது. 1688ஆம் ஆண்டில் ஆரஞ்சு இளவரசரின் நோக்கத்தை அறிந்துவர எட்வர்டு ரஸ்ஸல் என்பவரை அக் கூட்டத்தினர் அனுப்பிவைத்தனர்.

வில்லியத்தைப் பொறுத்தவரை, அவர் டச்சுக்காரரிடம் கூறியதைப்போல "இப்போதில்லையென்றால் எப்போதும் இல்லை." டச்சுச் சேவையில் உள்ள ஸ்காட்லாந்தியர் படைகள் திரும்ப வேண்டுமென்று ஜேம்ஸ் கோரினர். தம்முடைய கடற்படைக்குத் துணைக் கலன்கள் பொருத்துவதற்காக ∴பிரான்ஸிடமிருந்து பொருள் பெற்றார். கோலோன் (Cologne) ஆர்ச்பிஷப் பதவிக்கு ∴பிரெஞ்சுத் தேர்வாளர் ஒருவர் வந்ததும், யூக்நோக்கள் தீவிரமாக அடக்கப்பட்டதும், பழிவாங்கும் நோக்கத்தோடு விதிக்கப்பட்ட காப்பு வரியும், ஆம்ஸ்டர்டாம் நகரத்தில் இருந்த ஆரஞ்சுக் கட்சி யினர், சமாதானத்தையும் வாணிபத்தையும் விரும்பிய கட்சியினர் ஆகியோருக்கிடையே இருந்த போட்டிப் பூசல்களை அழித்தன. பெரிய தேர்வாளரும், பிரஷ்யாவின் சேவையில் இருந்த யூக்நோக் களின் தலைவராகிய ஸ்கோம்பர்க்கும் (Schomberg) வில்லியத்தைச் செயலில் இறங்குமாறு ஊக்கினர். கிழக்கில் அமைதி நிலவும் என்றும், அதனால் ஆஸ்திரியாவின் உதவி கிட்டும் என்றும் அவர் நம்பினர். மே மாதத்தில் இங்கிலாந்தில் மிகுதியாக மதிக்கப் பெற்றவர், தம்மை முறையாக அழைத்தால், அவர்களுக்குத் துணை யாகச் செப்டம்பரில் வரக்கூடுமென்று தம்மைச் சந்தித்த ஆங்கி லேயரிடம் கூறினர்.

அதே மே மாதத்தில் இரண்டாவது பொறுத்தலறிக்கையை ஜேம்ஸ் வெளியிட்டு, செல்வந்தர்களின் இரகசியச் சூழ்ச்சியாக இருந்த ஒன்றை நாட்டு மக்களின் குறிக்கோளாக மாற்றினர். பொறுத்தலறிக்கையோடு பாராளுமன்றத்தைக் கூட்டும் உறுதி மொழியும் இணைக்கப்பெற்று இருந்தாலும், அந்த அறிக்கையானது எல்லாக் கிறித்துவக் கோயில்களிலும் படிக்கப்படவேண்டுமெனக்

கட்டளையிட்டதனால் மக்கள் வெறுப்படைந்தனர். உறுதியான கேடயமாக இருந்த கெவலியர், டோரிகள் ஆகியவருடைய ஆதரவும், ஆங்கிலிகத் திருச்சபையும் இந்த வெறுப்பிற்கு மாற்றாகா. நூறு ஆண்டுகளாக இருந்த தங்களுடைய போதனைக்கு மாறாக, ஆர்ச்பிஷப் சான்கிராஃப்டும் (Sancroft) ஆறு பிஷப்புகளும்[1] பொறுத்தலறிக்கை, சட்டத்திற்கு முரணானது என்று கூறி விண்ணப்பம் செய்தனர். அதனால், அவர்கள் டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பப்பட்டனர். அரச அவதூறுக்காக விசாரணைக்குக் கொண்டுசெல்லப்பட்டனர். அவர்கள் தரப்பிலிருந்து அரசர் பாராளுமன்றத்தின்மூலமாகத்தான் சட்டம் இயற்றலாமென்று கூறப்பட்டது. மந்திரிகளுடைய சட்ட முரண்பாடான செயல்களைக் கண்டிக்கலாம் என்பதும் வற்புறுத்தப்பட்டது. வியப்படையச் செய்யும் அளவிற்கு இருந்த மகிழ்ச்சிக் கடலுக்கிடையே, அவர்கள் குற்றமற்றவர் என விடுவிக்கப்பட்டனர். அவர்கள் சென்ற வழியில் மக்கள் மண்டியிட்டுத் தொழுதனர். ஹவுன்ஸ்லோ பாசறையில் இருந்த வீரரும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். இங்கிலாந்து முழுவதும் அவர்களுடைய விடுதலையை வாண வேடிக்கைகளோடு கொண்டாடப்பெற்றது.

அவர்களுடைய வழக்கு முடிவதற்குள் ஜூன் மாதம் பத்தாம் நாள் வாரிசாக எதிர்பார்க்கப்பெற்ற மகனை அரசியார் ஈன்றெடுத்தார். குற்றவாளிகள் விடுதலையான அன்று மாலையில் டோரிகளான டான்பி, பிஷப் காம்ப்டன், லம்லி (Lumley), விக்குகளில் மிட்லாந்தின் ஒப்பற்ற செல்வந்தரான டிவோன்ஷயர் (Devonshire), கத்தோலிக்கச் சமயத்திலிருந்து மாறிய இளைஞரான ஷ்ரூஸ்பரி (Shrewsbury), பழம்பெரும் குடும்பங்களில் தோன்றிச் செல்வாக்கு மிகுந்தவர்களில் மறைந்த அல்கர்னனின் (Algernon) சகோதரரான ஹென்றி சிட்னி (Henry Sidney), தியாகம் செய்த பிரபுவின் மைத்துனரும் மாலுமியுமான எட்வர்டு ரஸ்ஸல் ஆகிய எழுவரும், ஆரஞ்சு இளவரசர் கேட்டதற்கிணங்க, அழைப்பிதழில் கையெழுத்திட்டனர். ஓரிரு மாதங்களுக்கு இங்கிலாந்தின் அரசியல் சக்திகள் ஒரே நோக்கத்தோடு இருந்தன. பித்துக்கொள்ளியான வில்லியம் பென் (William Penn) போன்ற சிலரைத் தவிர, புறச் சமயத்தவர் பொறுத்தலறிக்கையினால் ஏமாந்துவிடவில்லை. அவர்களைத் திருப்தி செய்வதற்காகத் தொழுகை நூலைத் திருத்தி அமைப்

[1] இலை என்னுமிடத்தைச் சார்ந்த டர்னரும் (Turner), பாத்தைச் சார்ந்த கென்னும் வெல்ஸும் (Ken and Wells), ஸெயின்ட் அஸாப்பின் லாய்டு (Lloyd), சிசெஸ்டரின் லேக் (Lake), பீட்டர்பரோவைச் சேர்ந்த ஒய்ட், பிரிஸ்டலைச் சார்ந்த ட்ரிலானி (Trellawney) என்பவர்கள்.

பதற்கான சூழ்நிலையை ஆராய மாநாடுகள் கூடின. எல்லாப் பிராட்டஸ்டென்டுகளையும் ஒன்றாக இணைக்க எழுந்த ஏராளமான துண்டுப் பிரசுரங்களுக்கு ஹாலிஃபாக்ஸ் முன்னோடியாக இருந்தார். கார்ன்வால் மாநிலத்திலிருந்து 'ட்ரிலானி இறப்பாரா?' என்னும் பாடல் வந்தது. அதே சமயத்தில் இங்கிலாந்து மக்கள், மூர்க்கமான விக்கு கட்சியினரான தாமஸ் வார்ட்டன் (Thomas Wharton) என்பவரால் இயற்றப்பெற்று, பர்ஸல் (Purcell) என்பவரால் பண் அமைக்கப்பெற்ற 'லில்லிபுலெரோ' (Lillibulero) என்னும் பாட்டை முணுமுணுத்தனர். பிஷப்புகளுக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்த நீதிபதிகளைத் தண்டித்தல், அயர்லாந்தில் தேர்ந்தெடுக்கப்பட்டவரைக்கொண்டு சேனையை நிரப்புதல் ஆகிய மூடச்செய்கைகளைத் தொடர்ந்து செய்ய ஜேம்ஸ் உறுதிகொண்டு இருந்த சமயத்தில் சூழ்ச்சிக்காரர் வேலைசெய்ய ஆரம்பித்தனர். படையினரான சர்ச்சிலும் கிர்க்கியும் (Kirke), டோரி கட்சியின் தூண்களில் ஒருவரான இளைஞராகிய ஆர்மாண்ட், போர்டர் (Border) நகரத்து வீரரான லோதர் (Lowther), இரண்டாம் சார்லஸுடைய மாலுமியின் மகனாகிய கிராஃப்டன் (Grafton) பிரபு, கடற்படைத் தலைவர்கள் ஆகியவரிடமிருந்து உதவிக்கான வாக்குறுதிகள் அவர்களுக்குக் கிடைத்தன. பிரஷ்யா, ஹெஸ்ஸே (Hesse), ஹனோவர் ஆகிய நாடுகளின் துருப்புகள் வில்லியம் இல்லாத சமயத்தில் ஹாலந்தைக் காக்கும் என்னும் உறுதிமொழி தரப்பட்டது. அவரும் ஜேம்ஸைப் பட்டத்திலிருந்து நீக்கும் எண்ணமோ, கத்தோலிக்கரை ஒடுக்கும் எண்ணமோ, தமக்கு இல்லை என்று பேரரசருக்கு உறுதிமொழி அளித்தார்.

ஃபிரான்சிடமிருந்தும் தம்முடைய கவுன்சிலில் இருந்த மிதவாதிகளிடமிருந்தும் வந்த எச்சரிக்கைகளின் விளைவாகவும், பின்வாங்குமாறு சண்டர்லண்டு அளித்த ஆலோசனையின் விளைவாகவும், இறுதியாக ஜேம்ஸ் இங்கிலாந்தின் திருச்சபையின் ஆதரவை நாடினார். சமய உயர் ஆணை நீதிமன்றத்தை (Ecclesiastical Commission) ஒழித்தார். சில நகரங்களின் பழைய உரிமைச் சாசனங்களைத் திரும்ப அளித்தார். நீக்கப்பட்ட மக்தலேன் கல்லூரி உறுப்பினரை மீண்டும் அமர்த்தினார். எனினும், அவர் அளவுக்கு மீறிய தயக்கம் காட்டினார். அதிகக் காலம் தாழ்த்தினார். வஞ்சகம் நிறைந்தவராக இருந்தார். பயத்தினால் அளிக்கப்பெற்ற சலுகைகளின்மூலமாக டோரி செல்வந்தரும், மாஜிஸ்டிரேட்டுகளும் திரும்பப் பதவிக்கு வரவில்லை. ஜேம்ஸ் வெளிநாட்டுப் படையெடுப்பு அச்சம் நீங்கும்வரை பாராளுமன்றத்தைக் கூப்பிட மறுத்தார். ஆரஞ்சு இளவரசர் வர இருந்த கடற்படை புயற்காற்றினால் சிதறுண்டபோது, சண்டர்லண்டைப் பதவியிலிருந்து நீக்கினார்.

இதிலிருந்து தீவிரவாதிகள் மறுபடியும் செல்வாக்குப் பெற்று இருந்தனர் என்பது தெளிவாகியது. இறுதியாக ஃபிரெஞ்சுக் கடற்படையின் உதவியை ஏற்க மறுத்தது அவருடைய அழிவினைக் கொணர்ந்தது. பதினான்காம் லூயிக்கு இங்கிலாந்தைக் காட்டிலும் ரைன் பகுதிதான் முக்கியம். அதனால், அதுவரையில் கையாண்ட கொள்கையையே மேலும் கடைப்பிடிக்கலாம் என்று நினைத்தார். மேலும், இங்கிலாந்தின் உள்நாட்டுப் போர், மாரிக்காலம் முழுதும் ஆங்கிலேயரையும் டச்சுக்காரரையும் பிணிக்கும் என்றும் எண்ணினார். செப்டம்பர் மாதத்தில் படைகள் பாலடினேட் (Palatinate) பகுதியின்மீது திரும்பியபொழுது, ஆரஞ்சு இளவரசரின் திட்டங்களை ஏற்றுக்கொள்வதுதான் சிறந்தது என்று டச்சுக்காரர் உணர்ந்தனர். சுயேச்சையான பாராளுமன்றத்தைக் கூட்டுவதாகவும், சட்டங்களைக் காப்பதாகவும், வேல்ஸ் இளவரசர் முறைப்படி பிறந்தவரா என்பதைப்பற்றிய சர்ச்சையைப்பற்றி ஒரு முடிவு எடுப்பதாகவும் வாக்களித்து, பல திறப்பட்ட 24,000 படை வீரர்களுடன் வில்லியம், டோர்பே துறைமுகத்தில் 1688ஆம் ஆண்டில் நவம்பர் மாதம் ஐந்தாம் நாள் இறங்கினார்.

அவருடைய கடற்பயணம் சூதாட்டம் போன்றதாக இருந்தது. வழியில்தான் காற்றின் போக்கினால், டான்பி வற்புறுத்தியதைப் போல் வடக்கில் செல்லாமல், மேற்கில் பயணமாக வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அவருக்கு வரவேற்பு கிடைக்குமென்பது உறுதியாக இல்லை. அவருடைய மனதிலேயே முடிவைப்பற்றிய தெளிவான கருத்து இல்லை. நல்லகாலமாக அவருக்கு அழிவினைத் தேடித் தந்திருக்கக்கூடிய கடற்போர் நிகழவில்லை. அவருடைய கப்பல்களை மேற்குத் திசையில் கொண்டுசென்ற சுழற்காற்று, ஆங்கிலத் தளகர்த்தரான டார்ட்மௌத் (Dartmouth) என்பவரையும் அவரது கப்பல்களையும் எஸ்ஸக்ஸிலுள்ள (Essex) கன்ஃபிளீட் (Gunfleet) என்னுமிடத்திற்கு இழுத்துச்சென்றது. அதே சமயத்தில் வில்லியம் கரை சேர்ந்த உடனே சுழற்காற்றின் திசை மாறி, பின்தொடர்ந்து வந்த டார்ட்மௌத்தைப் போர்ட்ஸ்மவுத் துறைமுகத்திற்குள் செலுத்தியது.

இவ்வாறு இருந்தபோதிலும், தம்மிடம் பற்றுறுதிகொண்ட டோரிகளும் பிஷப்புகளும் அளித்த ஆலோசனையைக் கேட்டு, தம்முடைய குறிக்கோளினைக் கைவிடாது ஜேம்ஸ் இருந்திருந்தால் அவருக்கு அழிவு நேர்ந்திருக்காது. பாராளுமன்றத்தைக் கூட்டுவதற்கும் பேச்சு வார்த்தை தொடர்வதற்கும் மறுத்ததால் அவருடைய ஆதரவாளர்கள் வலி இழந்தனர். அவர் போரிடுவதா அல்லது தப்பி ஓடுவதா என்று அலைபாய்ந்துகொண்டிருந்தது

சேனையின் உறுதியினைக் குலைத்தது. அவர் படையெடுப்பாளரான வில்லியத்தைச் சந்திப்பதற்காக சாலிஸ்பரி சமவெளிக்குச் (Salisbury Plain) செல்வதற்கு முன்பே மேற்கில் பாதி செல்வந்தர்கள் வில்லியத்தின் பக்கத்தில் சேர்ந்துகொண்டனர். அதோடு சுதந்திரமான பாராளுமன்றத்திற்காக ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டனர். ஜேம்ஸ் பின்வாங்கத் தீர்மானித்தபோது, சர்ச்சிலும், கிரா:ப்டனும், டென்மார்க்கின் ஜார்ஜும் வில்லியத்தோடு இணைந்தனர். மெதுவாக, பாராளுமன்றம், பிராட்டஸ்டென்ட் சமயம் ஆகியவற்றைப் பொறுத்தவரையில் நாட்டு மக்களின் அரசியல் கருத்து மெதுவாக, ஆனால் இயல்பான முறையில் தெளிவடைந்தது. டான்பியும் அவருடைய நண்பர்களும், யார்க் நகரையும் ஹல் (Hull) நகரையும் கைப்பற்றினர். இளவரசி ஆன் என்பவரை, காம்ப்டன் வழித்துணையாக இருந்து அழைத்துச் சென்ற மிட்லண்டில், டிவோன்ஷயர் என்பார் மக்களைத் தட்டி எழுப்பினர். மன்னரிடம் பற்றுறுதி கொண்ட கடல் தளகர்த்தர் டார்ட்மௌத்தும், குழந்தையான இளவரசரை :.பிரான்சுக்கு எடுத்துச் செல்ல வேண்டுமென்ற கட்டளையை மீறியதோடு புரட்சியாளருக்கு உதவியும் செய்தார்.

இங்கிலையில் டிசம்பர் மாத முதலில் பிரபுக்கள் நெருக்கியதால், பாராளுமன்றத்தைக் கூட்டுவதாகவும் பேச்சுவார்த்தை தொடங்குவதாகவும், ஜேம்ஸ் வாக்குறுதி அளித்தார். ஆனால், அவர் திடீரெனப் பொறுமை இழந்தார். ஒன்பதாம் தேதி தம்முடைய மனைவியையும் மகனையும் :.பிரான்சுக்கு அனுப்பினர். பாராளுமன்றம் கூடுவதற்காகப் பிறப்பித்த ஆணைகளை அழித்து, சேனையைக் கலைக்குமாறு கட்டளையிட்டு, கடற்படையை அயர்லாந்திற்குக் கொண்டு செல்லுமாறு டார்ட்மௌத்தைப் பணித்து, பதினேரும் தேதி ஷீர்னஸ் (Sheerness) என்னுமிடத்திலிருந்து கப்பலில் தானும் புறப்பட்டார். இப்படியாக, ஜேம்ஸ் தமக்கு ஆதரவுதர முயன்ற மக்களைக் கைவிட்டு அரசுக் குழப்பம் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தார். லண்டன் நகர மக்கட் கூட்டம் கத்தோலிக்கரைக் கொள்ளையிட்டது. படையிலிருந்து விலக்கப்பெற்ற சிப்பாய்கள், மிட்லண்டு பகுதியைச் சூறையாடினர். பிரபுக்கள் உடனடியாக மேற்கொண்ட நடவடிக்கையே நாட்டைக் காக்க உதவியது. சுதந்திரமான பாராளுமன்றத்தை ஏற்படுத்துவதற்காக ஆரஞ்சு இளவரசரோடு பேச்சுவார்த்தை நடத்துவதற்கு யாவரும் ஒப்பினர். ஈவர்ஷாம் என்னுமிடத்தில் மீன் பிடிப்பவன் ஒருவன் தப்பியோடிய ஜேம்ஸை இடைமறித்து, அவரை அரண்மனைக்குக் கொண்டு வருவதற்கு உதவியாக இருந்தான். அப்போது மன உணர்ச்சியும், சட்டப்படியான நேர்மையும் ஒருவகையான அரச முன்னிலை மீட்சியை ஏற்படுத்தி இருக்கக்கூடும். அநேகமாக ஜேம்ஸின் முதல் ஓட்டம், ஆரஞ்சு

இளவரசர் இங்கிலாந்தின் அரசர் என்பதை நிர்ணயித்தது. அவருடைய விக்கு ஆதரவாளர் ஜேம்ஸின் ஓட்டம் முடிதுறப்பதற்கு ஒப்பாகும் என வற்புறுத்தினர். ஹாலி∴பாக்ஸ் ஜேம்ஸைக் கைவிட்டார். ஆரஞ்சு இளவரசரும் ஜேம்ஸ் லண்டனைவிட்டுச் செல்ல வேண்டுமென்பதை வற்புறுத்திக் கூறினர். ஆனல், உண்மையில் அரசர் பேரச்சம் கொண்டார். அவருடைய தந்தையின் முடிவை எண்ணி தம்முடைய அரசியுடன் சேர்ந்து கொள்ள முடிவு செய்தார். டிசம்பர் மாதம் பதின்மூன்றும் தேதி ரோசெஸ்டரிலிருந்து கடல் வழியாகப் புறப்பட்டுச் சென்று, கிறிஸ்துமஸ் நாளன்று மாஸ் (Mass) பூஜையை ∴பிரான்ஸில் கேட்டார். பிரபுக்கள், இரண்டாம் சார்லஸ் கால காமன்ஸ் சபைக் கூட்டம், லண்டன் நகரசபை ஆகியவர்களின் வேண்டுதலின்பேரில், பிரத்தியேகப் பாராளுமன்றம் கூடும்வரை, ஆரஞ்சு இளவரசர் ஆட்சியை ஏற்று நடத்தினர்.

இதனல் புரட்சி தோன்றியது. ஏனெனில், அரசரைத் தவிர வேறெருவரும் சட்டப்படி பாராளுமன்றத்தைக் கூட்ட முடியாது. மேலும், சட்டப்படியான அரச துரோகத்தை மக்கள் அனைவரும் செய்ததனல் பொறுப்புக்களை முன்னும் பின்னும் தள்ளிப் பார்ப்பதில் லாபமில்லை. மறுப்பு எல்லா நிலைகளிலும் இருந்தது. பொறுத்தலறிக்கையை ஏற்க மறுத்த, ஆனல், அதே சமயத்தில் சமயப் பிரபுக்களைப் பதவி நீக்கம் செய்வதைக் கண்டு வெறுப் படைந்த புனித கென் (Ken) போன்ற உயர் திருச்சபையினருடைய எதிர்ப்புத் தோன்றியது. ஜேம்ஸ் நாட்டைவிட்டு ஓடக்கூடாது என்றும், அப்படி ஓடிய பிறகு நாடு திரும்ப வேண்டுமென்றும் யோசனை கூறிய கொடால்∴பின், மேற்குச் சங்கத்தை உருவாக்கி, அதே சமயத்தில், மான்மவுத்திற்கு எதிராக அரசருக்காகப் போராடிய டோரி செல்வந்தர், 1680ஆம் ஆண்டைப்பற்றியே நினைத்துக்கொண்டு, மன்னர் மக்களோடு செய்துகொண்ட ஒப்பந்தத்தை முறித்துவிட்டார் என எண்ணிய தீவிரமான விக்குகள் ஆகியோரும் எதிர்ப்புத் தெரிவித்தவராவர்.

வாக்காளர் பல மாதங்களாகப் பாராளுமன்றத்தை எதிர் பார்த்து நின்றனர். 1689ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் பிரத்தியேகப் பாராளுமன்றம் கூடியபோது, காமன்ஸ் சபையில் பெருவாரியான உறுப்பினர் ஜேம்ஸை மறந்தனர் என்பதை வெளிப்படுத்தினர். ஒரு சிறிய சமய குருமார் கூட்டத்திடம் தவிரப் பிறரிடத்தில் முன்னிலை மீட்சி என்ற பேச்சு மறைந்தது. ஆனல், டோரிகள் தங்களுடைய நம்பிக்கைகளைத் திடீரென்று மாற்றிக்கொள்வார்கள் என்றே, அல்லது அரசரை முடி துறக்கச்

செய்யும் கொள்கையை ஒப்புக்கொள்வார்களென்றே எதிர் பார்ப்பது தவறாகும். பிஷப்புகளினாலும், நாட்டிங்ஹாம் (Notting-ham) போன்ற திருச்சபையைப் போற்றி, ஆனால், சமயம் சாராத சிலராலும் கொண்டுசெல்லப்பெற்ற அவர்கள் 1681ஆம் ஆண்டு திட்டப்படி ஏற்படும் காப்பாளர் ஆட்சி, முறைப்படியான வாரிசினையும் தங்களுடைய உறுதிமொழியினையும் காக்கும் என்று நினைத்து, அதையே முதல் விடை காணியாகத் தந்தனர். அது பிரபுக்கள் சபையில் இரண்டு ஓட்டு வித்தியாசத்தில் தோற்றது. தம்முடைய வாரிசோடு வேற்று நாட்டு அரசர் கையில் இருந்த மன்னருக்குக் காப்பாளராக இருப்பது என்பது முடியாததொன்று. இதுவே டோரிகள் காட்டிய வழிக்குப் பெருந்தடையாக இருந்தது. ஆனால், தோல்வி ஏற்பட்டதற்கு ஒரு காரணம் அக் கட்சியின் பொதுநிலையாளரிடம் காணப்பட்ட பிளவுதான். வேல்ஸ் இளவரசர், இளவரசர் அல்லர் என்று பாவனை செய்துகொண்டு, ஜேம்ஸ், நாட்டைத் துறந்து சென்றதால், தலைவர் பற்றிலிருந்து மக்களுக்கு விடுதலை கிடைத்தது என்பதை ஏற்றுக்கொண்ட டான்பி, பிஷப் காம்ப்டன் ஆகியோர் தலைமையிலிருந்த ஒரு சாரார் மரபுரிமையால் மேரி ஏற்கெனவே அரசியாகிவிட்டார் என்று வாதித்தனர்.

அவர்கள் இவ்விடத்தில் காமன்ஸ் சபையின் தீர்மானத்துடன் மோதினர். அந்தத் தீர்மானத்தில், ஜேம்ஸ் முடிதுறந்தார். அதனால், அரியணை காலியாயிற்று என்று கூறப்பட்டது. ஐந்து ஓட்டுகளில் பிரபுக்கள் சபை இத் தீர்மானத்தை மறுத்தது. காமன்ஸ் சபை 131 ஓட்டுகள் வித்தியாசத்தில் தன்னுடைய தீர்மானத்தை நிறைவேற்றியது. இதனால் ஏற்பட்ட முட்டுநிலை (deadlock) இளவரசர், இளவரசி ஆகியோருடைய செல்வாக்கும், ஒரு குறையுள்ள அரசாங்கம், அரசாங்கமே இல்லாதிருப்பதைவிட மேலானது என்ற நாட்டு மக்களின் உணர்வைத் தளர்த்தின. தாம் காப்பாளராகப் பணிபுரிய முடியாது என்றும், தமது மனைவி அரசியாக இருக்கத் தாம் அன்னாருக்கு வெறும் வாழ்க்கைத் துணைவராக (consort) இருக்க முடியாது என்றும் வில்லியம் வெளிப்படையாகவே அறிவித்தார். இங்கிலாந்து மக்களின் ஆத்திரத்தை மூட்டுவதைப் போன்று வில்லியத்தின் உயிர்த்தோழரான பெண்டிங்க் (Bentinck) என்பவர் ஹாலிஃபாக்ஸைப் போலவே வில்லியம் தனியாக ஆட்சிபுரிய வேண்டுமென்ற கருத்தை வெளியிட்டார். காதலும் சமயமும் கணவருக்குப் பணியவேண்டுமென்று தூண்டுவதால், தம்முடைய கணவருக்கு மேலாக இருந்து அரசாள முடியாது என்று மேரியும், ஹாலந்திலிருந்து செய்தி அனுப்பினர். மேலும், சர்ச்சில்கள், வில்லியத்தின் வாழ்நாள்

முடியும் வரை தமது உரிமையை ஒத்திப்போட வேண்டுமென்பதற்கு ஆன் ராணியாரை இணங்கவைத்தனர். பொதுநலத் துரைத்தனத்தை ஆதரிக்கும் மக்கள், கலகம் செய்வார்கள் எனும் அச்சம் இருந்தது. வாணிபமும் அங்காடிகளும் ஸ்தம்பித்து நின்றன. அதே சமயத்தில் நாட்டிங்காமின் தலைமையில் புரட்சிக்கு உதவி செய்ய மனச்சாட்சி இடங்கொடுக்காது என்று நினைத்த திருச்சபைக் கிளையினர் கடவுளால் நியமிக்கப்பட்ட ஆட்சி அதிகாரம் எதுவாக இருந்தாலும் ஏற்றுக்கொண்டனர்.

எனவே, பல பிரபுக்கள் இரத்தம் சிந்துவதைத் தடுப்பதற்காகக் கூட்டத்திற்கு வராதிருந்து வழிவிட்டனர். மாற்றுக் கோணங்களில் இருந்து வந்த டோரிகளும் விக்குகளும் ஒன்றுக இணைந்து, வில்லியமும் மேரியும் இணையரசர்கள் என்றும், இணையரசர்களாக அறிவிக்கப்பெறுதல் வேண்டும் என்றும் வாக்களித்தனர். அப்படியே, அரசுரிமை அவர்களில் உயிர் வாழ்பவருக்குச் செல்லவேண்டுமென்றும், அதன் பிறகு மேரியின் குழந்தைக்கும், பிறகு ஆன் அரசிக்கும் அவருடைய வாரிசுகளுக்கும் கிடைக்க வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. சட்ட முறையான உரிமையைப்பற்றிக் குறிப்பிடாது, நடைமுறை அதிகாரத்தை ஆதரித்த டோரி பிரிவினர் ஏற்றுக்கொள்ளும் வகையில் ஒரு புதிய பற்றுறுதிப் பிரமாணத்தினை வரைந்தனர். நாட்டு ஆட்சி உரிமையை அளிப்பதோடு, உரிமைகள் அறிவிப்பையும் இணைத்தனர். பின்னர் இது மசோதாவாக விரிவடைந்தது. அதன்படி கத்தோலிக்கரும் கத்தோலிக்கரை மணந்தவரும் இங்கிலாந்தின் அரசராவதற்கு அருகதையற்றவர்கள் என்று கூறப்பட்டது.

அரசர் திரு மாறுபாட்டுக் கோட்பாட்டை மறுத்து அறிக்கை விடவேண்டுமென்று கட்டாயப்படுத்தியது. ஆனல், இரண்டாம் ஜேம்ஸின் முக்கியக் குற்றங்களை அவர்கள் ஒரு நெருக்கடியின்கீழ் செயல்பட்டதால் குழப்பமான நிலையிலும், அரைகுறையாகவும் வெள்ளோட்டம்விட்டது. அப்போதிருந்து தள்ளிவைக்கும் அதிகாரமும் (suspending power) நீக்கிவைக்கும் அதிகாரமும் (dispensing power), அமைதிக்காலத்தில் சேனையை வைத்திருப்பதும் உயர் ஆணை நீதிமன்றமும் சட்ட விரோதமானவை என்று அறிவித்தது. இதைச் செய்த பிறகு மன்ற உறுப்பினர் பிரத்தியேகப் பாராளுமன்றத்தைச் சட்டரீதியான பாராளுமன்றமாக மாற்றும் சட்டம் ஒன்றை நிறைவேற்றினர். 1689ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் வில்லியமும் மேரியும் முடிசூட்டப்பெற்றனர். அப்போது ஹாலந்து, ஸ்பெயின் ஆகியவற்றேடு ஃபிரான்ஸ் போரிட்டது. ஃபிரெஞ்சு அதிகாரிகளோடு அயர்லாந்தை நோக்கி

வந்துகொண்டிருந்த ஜேம்ஸிற்கு ஆதரவாகக் கிளாவர்ஹௌஸ் (Claverhouse) என்பவர் ஹைலாந்தினரைத் தூண்டிவிட்டார்.

## சமகால நிகழ்ச்சிகள்

1686 ஃபிரான்சுக்கு எதிராக எழுந்த ஆக்ஸ்பர்க் கலகம்.

துருக்கியரிடமிருந்து புதாபெஸ்டைக் கைப்பற்றுதல்.

பேய்லி (Bayle) என்பவருடைய பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட கோட்பாட்டுச் செயல் தொடக்கம்.

1687 பார்த்தனுனை (Parthenon) வெனிஸ் நகர மக்கள் அழித்தல்.

நியூடன் (Newton) எழுதிய 'Principia'.

1688 ஹாலந்தின்மீதும் பேரரசின்மீதும் ஃபிரான்ஸ் போர் தொடுத்தல்.

பெருந்தேர்வாளரின் மறைவு.

ஹாலிஃபாக்ஸ் எழுதிய 'Character of a Trimmer.'

# 4. மூன்றும் வில்லியம், 1689–1702

1641ஆம் ஆண்டின் நிகழ்ச்சிகளை 1688ஆம் ஆண்டு பொருளற்றதாக்கியது என்பதற்குச் சான்றாகப் பிரத்தியேகப் பாராளுமன்றத்தின் பழைய உறுப்பினரில் ஒருவரும், ஸ்ட்ராஃபோர்டிற்கு எதிரான ஆலோசனை கூறியவருமான மேனார்டு (Maynard) என்பவர் விளங்கினர். அப்போதிருந்த இரண்டாம் சார்லஸ் ஒரு முறை வாக்குறுதி அளித்ததைப்போல 'எந்த ஓர் அரசனும்' 'மக்களின் தலைவனாக இருக்கவேண்டும்'. அதன் எதிராக மக்கள் வெறுக்கும் கொள்கையையோ சமயத்தையோ கடைப்பிடித்து ஒழுகமுடியாது. இறுதியாக, வருங்காலத்தில் பெரும் பயன்களை விளைவிக்கும்வகையில் பிரிட்டன், அரசியல் சட்ட வரம்பிற்குட்பட்ட பிராட்டஸ்டென்ட் அரசு என அறிவிக்கப்பட்டது. இத்தகைய உண்மைகளை வற்புறுத்தியதன்மூலம் புதிய எண்ணங்களும், புதுப் பணமும் கொஞ்சங் கொஞ்சமாக எவற்றை அழித்து வலுவிழக்கச்செய்துவந்தனவோ அவற்றையே இப் புரட்சி ஒருவாறு அழித்துவிட்டது. உதாரணமாக, சாத்வீகப் பணிவுக் கோட்பாட்டையும், தெய்வீகக் கட்டளையின் அடிப்படையில் இருந்த அரசாங்கத்தையும் அழித்தது. அதனோடு மரபுவழியாக வந்த டனுரிதமான தனிச் சிறப்புரிமைகளைப் பெற்று, திருமுழுக்காட்டப் பெற்றவர் என்று தனியாக ஒதுங்கியிருந்த அரசர்களை உருவாக்கி, அரசையும் திருச்சபையையும் ஓர் ஐக்கியத்தின் இரு கூறுகளாகச் செய்த காலத்திலிருந்து வாழ்ந்து வந்த எண்ணங்களையும் அழித்தது. இவ்வெண்ணங்கள் சார்லிமாக்னே (Charlemagne) காலத்திலேயே இருந்துவந்தன. மூன்றும் வில்லியம் கெடுதல் விளைப்பனவற்றைச் செய்யாது விடுத்தார். அவரை அரசரெனப் பாராளுமன்றம் அறிவித்தது. அவர் பிரஸ்பிடீரியன் சமயத்தை ஸ்காட்லாந்து நாட்டுச் சமயமாகச் செய்து, இங்கிலாந்தில் சமயப் பொறையைச் சட்டமுறையானதாக்கினர். எனவே, பிளான்டாஜெனெட் (Plantagenet), டியூடர் (Tudor) காலத்து அரசியல் கொள்கைகள் அடிபட்டுப்போயின.

அஃது ஒரு புரட்சி என்றாலும், அதற்கு முன்பிருந்த ஐம்பது ஆண்டுகளில் காணப்பெற்ற காரண காரியங்களை உறுதிப் படுத்தியது என்ற வகையில் ஒரு பழைமை சார்ந்த புரட்சியாகவே காணப்படுகிறது. இரண்டாம் சார்லஸ் காலத்துப் பாராளு மன்றங்கள் வற்புறுத்திய செய்திகளை ஒரு முடிவிற்குக் கொண்டு வந்த உரிமைகள் மசோதாவைத் தவிர (Bill of Rights) இங்கி லாந்தின் புற அமைப்பில் எவ்வித மாறுதலையும் செய்யவில்லை. அநேகமாக, சார்லஸின் முறைகளையே வில்லியம் கையாண்டார். மூன்றும் ஜார்ஜ், வில்லியத்தின் முறைகளையே பின்பற்றினர். அவர் உண்மையில் டான்பி, ஹாலிஃபாக்ஸ், சண்டர்லண்டு, கொடால்ஃபின் ஆகிய ஸ்டூவர்ட் கால முக்கிய அமைச்சர்களையே பதவில் அமர்த்திக்கொண்டார். இப் புரட்சி புதியனவற்றைப் புகுத்தவில்லை; என்றாலும் பழையனவற்றைக் களைந்தது. சக்திகளை அழிக்கவில்லை; அதற்கு மாறாக அரசியல் சட்டத்தை உள்ளிருந்தே மாற்றியமைத்து, நெடுங்காலமாகச் சேர்ந்து வந்த சக்திகளை வெளிப்படுத்தியது.

இந்தப் பாராளுமன்றத்தின் அமைப்பு அரசியல் செய லாண்மைத்திறப் புரட்சியைப் புகுத்துவதாக இருந்தது. எலிஸபெத்தினால் உருவாக்கப்பெற்று, கிராம்வெல்லினால் கையாளப்பெற்ற பொதுவான கொள்கைத் திட்டம், பதினான்காம் லூயியின் பேராசைக்குமுன் நிற்க முடியவில்லை. எனவே, ஆர் லிங்டன் காலத்தில் தயக்கத்தோடும், வில்லியத்தின்கீழ்த் தீவிர மாகவும் ஃபிரான்சோடு போர்புரியும் நூற்றாண்டை பிரிட்டன் தொடங்கியது. அதன் முதல் படியிலேயே கடல் ஆதிக்கத்தையும், சேனையையும் வலிமையுறச் செய்யும் புதிய நடவடிக்கைகளின் மூலம், பேரரசை விரிவுபடுத்தி உறுதிப்படுத்தவேண்டி இருந்தது.

தலையாய அதிகாரம் எங்குள்ளது என்பதைப்பற்றிய ஐய பாடு அனுமதிக்கப்படுதல் கூடாது. ஆகையினால், பாராளுமன்றத் தின் இறைமை விரிவடையவேண்டியிருந்தது. அயர்லாந்து, ஸ்காட் லாந்துக் குடியேற்றங்கள் யாவும் ஒன்றாக இணைக்கப்படுதல் வேண்டும். வில்லியத்தினுடைய போர்களின் சுமையும், இரண்டாம் சார்லஸின் காலத்தில் இருந்ததைப்போல் நான்கு மடங்கினதான வரவு செலவு திட்டமும், காமன்ஸ் சபையின் மேம்பாட்டினை வளர்த்தன. மேலும், பணம் படைத்தவரின் பலத்தைப் பெருக்கி, புதிய தொழில் ஊக்கத்தினை அளித்த அரசாங்கக் கடன்முறைத் திட்டமொன்றும் வகுக்கப்பட்டது. பின் நோக்கில், இவை களெல்லாம் பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்து முறையாக அடுத் தடுத்து வந்தவை என்பதை நாம் காணலாம். ஆனால், இப்போது

அவைகளுடைய வெற்றி நமது வரலாற்றின் அடுத்தபடிக்கு ஒரு தொடர்ச்சியான தன்மையை அளித்தது.

புரட்சியின் அதிர்ச்சி ஏற்பட்ட காலத்தில், இங்கிலாந்தை ஆளுவதற்கு மூன்றும் வில்லியத்தைப்போன்று தலைசிறந்த ஒருவர் கிடைத்தது அந்நாடு செய்த நற்பயனேயாகும். அவர் மக்களுடைய அன்பைப் பெருமலே ஆண்டார் என்பது உண்மை. அவருடைய மறைவுக்காக மக்கள் மிகுதியாகக் கலங்கவில்லை என்பதும் உண்மையே. ஆயின், அதனை நேர்மையற்ற செயல் என்று கூறுவதற்கில்லை. அவருடைய எண்ணமெல்லாம் தி ஹேக்கிலும் அவரால் பாதுகாக்கப்பெற்ற மதகுகளிலுமே இருந்தது. இங்கிலாந்து எப்போதும் அவருடைய தந்தையர் நாடாக இருந்ததில்லை. பணமும் படையும் தந்துதவும் களஞ்சியமாகவே அது கருதப்பட்டது. 1690ஆம் ஆண்டிற்குப் பிறகு அவர் ஒவ்வோர் ஆண்டும் ஆறுமாத காலத்திற்குப் போர் நடந்த பகுதிகளுக்குச் சென்றுர். போர் நின்ற பிறகும் நாட்டைவிட்டுப் போவது நிற்கவில்லை. அவர் பிரிட்டிஷ் கட்சிகளை வெறுத்தார். பிரிட்டிஷ்காரரின் சூழ்ச்சியின் கசப்பான அநுபவம் அவருக்கு இருந்ததனுல், பெண்டிங் என்பவரையும், இளைய ஆதரவாளரான கெப்பல் (Keppel) என்பவரையும் நம்பியதைப்போன்று வேறு எந்த ஆங்கிலேயரையும் அவர் நம்பவில்லை. ஆங்கிலேயரின் உணர்ச்சியோடு அவரால் ஒன்றுசேர முடியவில்லை. மூர்க்கமான வேட்டையைத் தவிர வேறெந்தப் பொழுதுபோக்கிலும் அவர் நாட்டம் செலுத்தவில்லை. அவருடைய சமயம் பிடிவாதக் கொள்கையற்றதாகவும், சமய ஒறுப்பை வெறுப்பதாகவும் இருந்தது. பூங்காக்களில் ஓரளவு பற்றுதல்கொண்டு இருந்தாரே தவிர, கலைகளும் நயங்களும் அவரிடம் காணப்படவில்லை. அவருடைய காசநோய் இருமல் ஒயிட்ஹாலிலிருந்து (Whitehall) கென்சிங்டனுக்கும் (Kensington) ஹாம்ப்டன் கோர்ட் (Hampton Court) டுக்கும் அவரைத் துரத்தியது. ஸ்டுவர்டு அரசர்களைப்போன்று பூங்காவிலும், டென்னிஸ் மைதானத்திலும் (tennis court), நாடக அரங்குகளிலும் அவர் காணப்படுவதில்லை. 1694ஆம் ஆண்டு மேரி அரசியார் அம்மை நோயினுல் இறக்கும் வரையில், தம்முடைய கணவரின் செல்வாக்கற்ற நிலையை ஈடுசெய்து வந்தார். இங்கிலாந்துத் திருச்சபையின்மீது அவருக்கிருந்த பற்றுதல், தயாள குணம், அவருடைய தந்தை நடத்தப்பெற்ற முறைபற்றிய ஒரு வகையான வருத்தம், துணிவு ஆகியவை புதிய அரசாங்கத்திற்குச் சிலருடைய ஆதரவைத் தேடித்தந்தன. டச்சுக்காரரையும் அவர்களுடைய கொள்கையையும் வெறுத்தவர்களில்கூடச் சிலர் அவருக்கு ஆதரவு காட்டினர்.

எனினும், வில்லியத்தின் குறைபாடுகளும் வெளி நாட்டுப் பற்றும் அவர்தம் பெரும் குணங்களினுல் ஓரளவு மங்கின. மங்காத வீரமும், கடல் போன்ற பொறுமையும், மனித எல்லையை மீறிய பெருந்தன்மையும் அவரிடம் காணப்பெற்றன. நம்பிக்கை இழந்த சண்டையிலும், ஒதுங்கியகரையில் புயல் வீசியபோதும், கொலை பயமுறுத்தல் இருந்தபோதும் சிறிதும் கலங்காது நின்ருர். தம்முடைய சதி ஆலோசனையாளரைக் குற்றச்சாட்டிற்கு இலக்காக்கும் பத்திரங்களைத் தீயிலிட்டார். பணிபுரிவதற்குத் தகுதியானவர் என்று முடிவு செய்துவிட்டதால் நேர்மையற்றவரையும் தேர்ந்தெடுத்தார். போர்க்களத்தில் மிக உற்சாகத்துடன் இருந்த போதிலும் அவர் தம்முடைய வீரர்கள் உயிரையும்விடத் தயாராக இருக்குமளவிற்கு உணர்ச்சி ஊட்டுவதைத் தவிர வேறுவகையில் சிறந்த படைத் தலைவர் என்று கூறுவதற்கில்லை. ஆனுல், போருக்காகச் செய்யவேண்டிய அரசியல் ஆயத்தங்களைச் செய்வதில் நிகரற்றவர். பொறுமை கொண்டு பகையாக இருந்த நாடுகளை இணைத்துவைத்திருத்தல், கத்தோலிக்கச் சக்திகளையும், பிராட்டஸ்டென்ட் சக்திகளையும் ஒன்ருக இணைத்தல், எட்டு ஆண்டுப் போரின் விளைவாகப் பதினன்காம் லூயியின் வளர்ச்சியைத் தடை செய்தல், அதன் பிறகு இரண்டாவது பெரும் போருக்காகத் திட்டங்களை வகுத்து ஆயுதங்களைக் குவித்தல் ஆகியவை மூன்றும் வில்லியத்தின் வெற்றிகளாக அமைந்தன.

இந்தப் போராட்டம் நடப்பதற்கு முன்னும், நடக்கும்போதும், இங்கிலாந்தில் செய்யவேண்டிய வேலைகள் சில இருந்தன. அங்கே விக்கு கட்சியினரையும், டோரி கட்சியினரையும் அமைதிப்படுத்த வேண்டி இருந்தது. மூன்று நாடுகளையும் ஒழுங்கு படுத்தும் வேலையும் இருந்தது. அரசியல் கட்சிகளின் மனஎழுச்சியைப் புரட்சி தூண்டியது. முழு அதிகாரத்தையும் பெற விக்குகள் துடித்தனர். ஜேம்ஸைச் சார்ந்தவர்களைமட்டுமன்றி, விலக்கு மசோதாவை எதிர்த்த அனைவரையும், புறச்சமயத்தவரை ஒறுத்தவரையும் பழி வாங்க வேண்டுமென்று கருதினர். மறுபடியும் தீயகுறியான ஓட்ஸின் உருவம் வெஸ்ட்மினிஸ்டரில் நடமாடியது. மறுபக்கத்தில் டோரிகளின் உறுதிமொழிகள் பாழ்பட்டதனுலும், அவர்களுடைய திருச்சபை அச்சுறுத்தப்பெற்றதாலும், சேனை சீர்குலைந்து சிறுசிறு அணிகளாகப் பிரிந்ததனுலும், லண்டன் நகரத்தையும் அதன் அரண்மனைகளையும் நீலச்சட்டை அணிந்த டச்சுக்காரர் வைத்திருந்ததாலும் அவர்கள் மனக்கசப்புற்றுக் காணப்பெற்றனர். வில்லியமும் மேரியும் முடிசூடிக்கொண்டவுடனே, அரசரின் ஸ்காட்லாந்துக் காவற்படையினர் கலகம் செய்தனர். ஆனுல், அவர்கள் டச்சுப் படையினரால் அடக்கப்பட்டனர்.

ஆயின், வில்லியம், விக்குகளின் அரசராக இருக்கத் திட்டமிடவில்லை. அவர் இங்கிலாந்தில் இருந்த கட்சிகளில், பொதுநலத் துரைத்தனக் கட்சியிடம் தேவையற்ற அச்சம்கொண்டிருந்தார். தமது அதிகாரங்களில் ஒரு சிறிதும் விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. கட்சிகளுக்கப்பாற்பட்டுப் பொதுத்துறை ஊழியராக இருந்த கொடால்ஃபின் போன்றவர்களையே அமைச்சராக நியமிக்க விரும்பினர். அரசாங்கம், பிரதிநிதித்துவ அரசாங்கமாக இருந்தும், நம்முடைய நவீனப் பொருளில் பொறுப்புள்ளதாக இல்லாத நிலையில், உறுதியற்றதாக இருந்த அரசியல் படியில் பாராளுமன்றத்தின் மேலாளராக, தீவினை அஞ்சாத சண்டர்லண்டைப் பயன்படுத்திக்கொண்டார். இத்தகைய குறிக்கோளோடு, டோரிகளும் புரட்சியில் பங்கு பெற்றதனல் வில்லியம் உருவாக்கிய அமைச்சரவை கட்சிகளுக்கிடையே பகிர்ந்துகொள்ளப்பட்டது. ஹாலிஃபாக்சுக்கு ஈடாக டான்பி இருந்தார். நல்லிணக்கமான விக்கு கட்சியைச் சார்ந்த ஷ்ரூஸ்பரி ஓர் உள்துறைச் செயலராகப் பணிபுரிந்தார் ஆனல், உயர் திருச்சபையாளரான நாட்டிங்காம் மற்றொரு செயலராக இருந்தார். விக்கு கட்சியைச் சேர்ந்த பர்னெட் இந்த நியமனத்தைப்பற்றிக் குறிப்பிடுகையில் அது திருச்சபையையும், அதன் மூலமாக நாட்டையும் காத்தது என்று கூறினர்.

சமய அடிப்படையில் கட்சிகள் தோன்றி, அந்த அடிப்படையிலேயே கசப்பான எண்ணங்களும் தோன்றி இருந்ததால், திருச்சபை ஏற்பாடு மிகவும் முக்கியமானதாயிற்று. சமயப் பொறைக் குறிக்கோள் அநேகமாக வெற்றி பெற்றுவிட்டது. அந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில்தான் பிஷப்புகள் அரசருக்கு எதிராகக் கருத்து மாறுபாட்டினரின் ஆதரவைப் பெற்றனர். 1689ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பெற்ற சமயப் பொறைச் சட்டம் ஒரு வரம்பிற்குட்பட்ட சட்டமாகும். அது புதிய கொள்கை எதனையும் ஏற்றுக்கொள்ளாது, பிராட்டஸ்டென்ட் கருத்து மாறுபாட்டினரைப் பல பழைய தண்டனைகளில் இருந்து விடுவித்தது. அவர்களில் சாதாரண மக்கள் தனிவுரிமைப் பிரமாணமும் விசுவாசப் பிரமாணமும் எடுத்துக்கொள்வதானல், திருச்சபைக்கு வரவேண்டும் என்பதைப்பற்றியும் ரகசியத் தொழுகைக் கூட்டங்களைப்பற்றியும் இருந்த, நீண்டு வரிசையாக உள்ள சட்டங்களிலிருந்து அவர்களுக்கு விலக்கு அளித்தது. அவர்களுடைய குருமார்களும் பிரசாரகர்களும் அதே பிரமாணங்களை எடுத்துக்கொண்டு, சடங்குகளையும் திருச்சபைப் பதவி ஏற்பதைப் பற்றியும் இருக்கும் கட்டளைகள் நீங்கலாக முப்பத்தொன்பது கட்டளைகளையும் (Thirtynine Articles) ஏற்றுக்

கொண்டதால் விலக்கு அளிக்கப்பெற்றனர். அதைப் போலவே பாப்டிஸ்டுகளும் குழந்தைப் பெயர்ச்சூட்டு விழாவினை (Baptism) வற்புறுத்தும் கட்டளையில் இருந்து விலக்குப் பெற்றனர். குவேக்கர்கள் கிறித்துவச் சமயத்தில் நம்பிக்கைக் கொள்வதாக உறுதியளித்தால் விலக்களிக்கப்பட்டனர். கத்தோலிக்கருக்கும் மும்மூர்த்திக் கொள்கையை எதிர்த்தவருக்கும் (Anti-Trinitarians) இச் சட்டம் வெளிப்படையாகப் பொருந்துவதாக இல்லை. ஆனால், அநேகமாக எல்லா நடைமுறைக் குறைகளையும் நீக்கியது. அதே சமயத்தில் அதற்கு இணையாக 1641 ஆம் ஆண்டிலும், மறுபடியும் 1661 ஆம் ஆண்டில் செவாய் மாநாட்டிலும், முயன்ற வழியிலேயே திருச்சபைக்குப் புறம்பானவர்களை அகங்கொள்வதற்காகக் கொண்டு வரப்பெற்ற மசோதா தோல்வியுற்றது. சமயப் பட்டம் அளிப்பதைப் பொறுத்தவரை, போருக்கு முன்பு இருந்ததைவிட இப்போது திருச்சபையினர் விடாப்பிடியாக இருந்தனர். நியாயமான உரிமை உறுதிப்பட்டதாலும், செல்வமிக்க கூட்டங்களினால் பணம் அளிக்கப்பெற்றமையாலும் இணங்காதவர் திருச்சபைப் பதவிகளைப் பெறவேண்டுமென்று விரும்பவில்லை. எனவே, மேலே குறிப்பிடப்பெற்ற மசோதா, காலத்திற்கு ஒவ்வாததாக இருந்தது.

வழிபாட்டுரிமையைக் காட்டிலும் அரசியலில் அதிகாரம் பற்றிய எண்ணமே இருதரப்பினர் மனத்திலும் நிறைந்து இருந்தது. சோதனைச் சட்டம் ஆங்கிலிகன் சமயத்தின் அரணாக வந்துவிட்டதனால் விக்கு அரசியல்வாதிகளும் எதிர்க்கட்சியினரைக் கிளறுவதை வெறுத்தனர். இதற்கு மாறாக விசுவாசப் பிரமாணத்தைப் பயன்படுத்தி யாகோபியரைத் திருச்சபையிலிருந்து நீக்க உறுதி பூண்டனர். அதனால், இரண்டு தரப்பினருக்குமிடையே சமாதானம் செய்துவைக்க அரசர் கொண்டுவந்த தீர்மானத்தை மறுத்தனர். திருச்சபை சோதனைகளை நீக்காது வைத்திருந்தது. அதனால் பதவிகள், ஆங்கிலிகத் திருச்சபை முறைப்படி சமயவினை செய்தவர்களின் தனிச் சிறப்புரிமையாகவே இருந்தன. அதே சமயத்தில், ஜேம்ஸுக்கும் அவரது சந்ததியாருக்கும் கீழ்ப்படிவதாக விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொண்டவர்கள், அவைகளை மாற்றிக்கொள்ளவில்லையென்றால் காடுகளுக்குத் துரத்தப்பட்டனர். சான்கிராஃப்ட் (Sancraft)டும், நான்கு பிஷப்புக்களும், 400 சமய குருமார்களும் விசுவாசப் பிரமாணம் மறுப்போர் (Non-jurors) பிரிவினைத் தோற்றுவித்தனர். இப் பிரிவு, பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலும் ஒரு திருச்சபையாக வாழ்ந்திருந்தது. அச் சபை, அப் பிரிவினர் தேசீயக் கொள்கை துறத்தல் என்று கருதியதற்கு மறுப்பாக இருந்துவந்தது.

1689ஆம் ஆண்டு மயக்கம் நிறைந்ததாக இருந்தது. ஸ்காட்லாந்து போர் தொடுத்தது. அயர்லாந்தில் ஜேம்ஸ் வெற்றி பெறுபவர் போல் காணப்பெற்றூர். எண்ணிறந்த சதிகள் தோன்றின. ஹேபியஸ்கார்பஸ் தள்ளி வைக்கப்பட்டது. முன்னேறிய விக்குகளுக்கு அவ்வாண்டு மிகுந்த துன்பகரமானதாக இருந்தது. ரஸ்ஸலேயும் சிட்னியையும் கொன்றவரைப் பதவிக்குக் கொண்டு வருவதற்காகவா அவர்கள் போர்புரிந்தனர்? எனவே, அவர்கள் கண்மூடிக் கோபத்தோடு செயலாற்றத் தொடங்கினர். ஓர் ஆண்டிற்குமேல் அரசருக்கு மானியம் வழங்க மறுத்தனர். மறப்புச் சட்டத்திலிருந்து விலக்குகளுக்காக நீண்ட பட்டியல்களைத் தயாரித்தனர். 1690ஆம் ஆண்டின் தொடக்கத்தில் கடைசி இரண்டு அரசர் ஆட்சிக்காலத்தில் வலிமைபடுத்தப்பெற்ற பரோ ஆட்சி மன்றங்களை மீட்பதற்காக ஒரு மசோதாவைக் கொண்டுவந்தனர். அவர்களில் ஒருவராகிய வில்லியம் சாக்சிவரல் (William Sacheverell) என்பவர் இம் மசோதாவில் உரிமைச் சாசனங்களை ஒப்படைப்பதில் பங்கு கொண்டவர்களுக்கு 7 ஆண்டுகளுக்கு வாக்குரிமையை மறுக்கவேண்டும் என்னும் திருத்தம் வேண்டுமென்று கூறினர். சுருங்கக் கூறுமிடத்து அக் காலப் பகுதியில் வாக்களிக்கும் அதிகாரத்தின் தனிச்சிறப்புரிமையை விக்கு கட்சியினருக்கு வழங்கவேண்டுமென்றூர்.

இத்தகைய சோர்வடைந்த பழிதீர்க்கும் எண்ணத்தைக் கண்ட அரசர் பொறுமை இழந்தார். டான்பி, நாட்டிங்காம் ஆகியோரின் ஆதரவுரை கேட்டு டோரிகளின் பக்கம் திரும்பினர். பாராளுமன்றத்தைக் கலைத்தார். தேர்தல்களில் திருச்சபையினர் கட்சி வெற்றியடைந்தது. ஹாலி:பாக்ஸும் ஸ்ரூஷ்பரியும் ராஜினமா செய்தனர். அடுத்த மூன்றுண்டுகளில் டோரிகள் முதன்மையாக இருந்த மந்திரி சபையின் தலைவராகிய டான்பி, பழைமை விரும்பிய இங்கிலாந்து, புரட்சியை அழித்தது என்பதற்குச் சான்ருக இருந்தார்.

இங்கிலாந்தில் புரட்சிக்கான அறிகுறி தோன்றும் வரையிலும் ஜேம்ஸினுடைய படை புறப்படும் வரை ஸ்காட்லாந்தில் கிளர்ச்சியேதும் இல்லை. ஆனல், புரட்சி வந்தபோது அது இங்கிலாந்தில் தோன்றியதைவிட அதிக உண்மையானதாகவும், வன்முறையானதாகவும் இருந்தது. அங்கே ஏற்பட்டது வெறும் அரசருடைய மாற்றம்மட்டுமில்லை. ஆனல், ஓர் அரசாங்கத்தின் தலைகீழ் மாற்றமாகும். ஏனெனில், ஸ்காட்லாந்தியரில் பெரும்பான்மையோர் திருப்தியடையவேண்டுமானல் குறைந்தது தலைமக்கள் ஆட்சியையும், கவுன்சிலின் வல்லாட்சியையும், அரசர் ஆதரவாளர்

களால் நிரப்பப்பெற்ற பாராளுமன்றத்தையும் அழித்தாக வேண்டும். மேலும், ஸ்காட்லாந்து அரசியல் பழைமையான ஆங்கிலேயரின் விட்டுக் கொடுக்கும் நெறியற்ற சமுதாயத்தில் அமிழ்ந்து கிடந்தது. பெரும்பான்மையோர் அத்தகைய மிதமான கொள்கையை அறியும் வரை—லாடர்டேலுக்குப் பிறகு இருபது ஆண்டுகளில் அதனை அறிந்திருக்கமாட்டார்கள்—தோல்வியுற்ற சிறுபான்மையினர் சதியில் இறங்குவது இன்றியமையாததாக இருந்தது.

'இங்கிலாந்தைப்போலவே பிரத்தியேகப் பாராளுமன்றத்தைக் கூட்டுமாறு வில்லியத்தைச் செல்வந்தர் கூட்டம் கேட்டது. ஆனால், அப் பாராளுமன்றம் கூடுவதற்குள் கத்தோலிக்கருக்கு' எதிராக எழுந்த கலகங்களினாலும், சமயத் தலைமை குருமார்களைக் கொடுமைப்படுத்திய விதத்திலிருந்தும் . மேற்கிலிருந்து கலம் தாங்கிய ஒப்பந்தக்காரர் எடின்பரோ நகரத்திற்குள் புகுந்ததிலிருந்தும் நாட்டு மக்களின் உணர்வு எவ்வாறு இருந்தது என்பது நிரூபிக்கப்பட்டது. இத்தகைய வன்முறைச் செயல்கள், தேர்தல்களில் அரசாதரவாளர் தோல்வி கண்டது, அயர்லாந்தில் ஜேம்ஸின் வருகை ஆகியவை அரசர் கட்சியினரின் உணர்வைத் தூண்டின. கிளேவர்ஹெளஸ், [விரைவில் அரசரால் விஸ்கௌன்ட் டண்டி (Viscount Dundee) ஆக்கப்பெற்றார்.] ஹைலாந்தியரைக் கிளர்ந்தெழச் செய்வதற்காகச் சென்றார். அதுவரையில் டச்சுக்காரர்சேவையில் இருந்த ஸ்காட்லாந்துத் துருப்புகளோடு ஜெனரல் மெக்கே பின்தொடர்ந்துவர, அவர் இன்வர்னஸை அடைந்தார். பெர்த் நகரத்தைக் கொள்ளையடிப்பதற்காகத் தெற்கில் சென்று வந்தார். 1689ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் லோசாபர் (Lochaber) என்னுமிடத்தில் பல குடும்பத்தினரைக் கூட்டினார்.

எனினும், ஹைலாந்து தளத்திலிருந்துகொண்டு, லோலாந்தியரைத் தம் பக்கம் இழுப்பதில் மான்ட்ரோஸ் தோல்வியுற்றார். டண்டியும் வெற்றி பெறுவதற்கில்லை. 'அயர்லாந்திலிருந்த ஜேம்ஸின் கணிசமான உதவியைத் தவிர வேறெதுவும் அக் காரியத்தைச் செய்ய முடியாது. வடக்கில் கத்தோலிக்கரும் எபிஸ்கோபிலியரும் (episcopalians) எண்ணிக்கையில் மிகுதியாக இருந்தார்கள் என்றால், கூட்டங்களினிடையே தோன்றும் பூசல்களைக் காட்டிலும் குறைந்த அளவில்தான் இத்தகைய கொள்கை ஹைலாந்தியரைத் தூண்டியது. ஏனென்றால், ஆர்கைல் குடும்பத்தின் முன்னிலை மீட்சி புரட்சியினால் தோன்றியிருந்தது. காம்ப்பெல்களை (Campbells) அதிகமாக வெறுத்தவர்களும், அவர்களிடம் அச்சம் கொண்டவரும்தான், டண்டியுடன் இணைந்தனர்.

லோச்சியலின் (Lochiel) கேமரான் (Cameron), மெக்டனுல்டின் (Macdonald) பல கிளைகள், அப்பினைச்சார்ந்த (Appin) ஸ்டுவர்ட், ஐல் தீவுகளிலிருந்து வந்த மெக்ளீன்ஸ் (Macleans) ஆகியவர் அவர்களிற் சிலர். கட்டுப்பாடற்று இருந்த சக்திகளை ஒன்ருக இணைக்கச் செயல்படவேண்டும். லோலாந்தின் திறவுகோலாக இருந்த பெர்த்ஷயரின்மீது (Perthshire) உரிமை ஏற்படுத்த, செயல் மேற்கொள்ளுதல் உடனடித் தேவையாக இருந்தது. அச்சமயத்தில் பெர்த்ஷயரின் இயல்பான தலைவராக இருந்த அதால் என்பவர் இரண்டு அரசர்க்கும் இடையே ஊசலாடிக்கொண்டிருந்தார். இங்ஙனம் ஜூலை மாதம் 27ஆம் தேதி இருண்ட கில்லிகிராங்கி (Killiecrankie) கணவாய்க்கு வடக்கே குறுகிய காலத்திற்குக் கோரமான சண்டை நிகழ்ந்தது. அதில் ஹைலாந்தியரின் இரு முனை வாள்கள், மெக்கேஸினுடைய காலாட்படையைக் கொன்று குவித்தன. ஆனல், வெற்றியாளர் கொள்ளையடிப்பதற்காகத் தங்கியதால் பகைவரைப் பின் தொடர்ந்து செல்லவில்லை. அதே சமயத்தில் முதல் தாக்குதலில் டண்டி சுட்டுக் கொல்லப்பட்டார். ஒரு மாத காலத்திற்குள் 'கேமரானியன்'களுக்கு முன்ஞேருக விளங்கிய புதிதாக அமைக்கப்பெற்ற ஒப்பந்தப்படை டன்கெல்டு (Dunkeld) என்னுமிடத்திலிருந்து வந்த ஹைலாந்தின் பெரும் படையினை முறியடித்தது. கூட்டங்கள் கலைந்து சென்றன. ஓர் ஆண்டு கழிந்த பிறகு இன்வர்னஸ் நகரத்தின்மீது அரசாங்கம் இறுக்கமான பிடி வைத்திருந்தது. அதே சமயத்தில் மேற்குப் பகுதியை அடக்குவதற்காக இன்வர்லோச்சி என்னுமிடத்தில் கோட்டை ஒன்று கட்டப்பெற்றது.

பிரஸ்பிடீரியன் சமயத்தை ஏற்றுக்கொள்வதன்மூலமாகத் தான் அரசினைக் காப்பாற்ற முடியுமென்று வில்லியம் நிச்சயமாக உணர்ந்தார். ஏனெனில், ஸ்காட்லாந்தின் அரசியல், மக்களிடையே ஆழப்பதிந்திருந்தது. 200 குருமார்கள் விசுவாசப் பிரமாணம் எடுக்க மறுத்ததிலிருந்து பிஷப்புகள் ஆட்சி (episcopacy) யாகோபிய சமயமாக மாறி வாழ முற்பட்டது என்பது தெரிந்தது. எனினும், முன்னைய வரலாறு எடுத்துக் காட்டியதைப்போல் பிரஸ்பிடிரியன் சமயம், பல மாறுபட்ட பொருள்களைக் குறிப்பதாக இருந்தது. தாராளமான, அரசுக்குக் கட்டுப்பட்ட வகையை வில்லியம் ஆதரித்தார். குறிப்பாக ஸ்காட்லாந்தில் பிஷப்புகளின் ஆட்சிக்குச் சலுகை காட்டினுல்தான் இங்கிலாந்தில் இருந்த கருத்து வேறுபாட்டினருக்கு உரிமை வழங்க முடியும். இந்தச் செய்திகளைப் பொறுத்தவரையில் அவருடைய ஆலோசகர்களாக இருந்தவர்கள் தாராள திருச்சபையைச் சார்ந்து இப்போது சாலிஸ்பரியின் பிஷப்பாக இருந்த, ஸ்காட்லாந்தின் வரலாற்

றறிஞரான பர்னெட்டும், போற்றுதற்குரியவராகவும் அறிவு மிக்கவராகவும் விளங்கிய மெல்வில்லியின் (Melville) ஏர்ல் பிரபுவாக இருந்த வில்லியம் கார்ஸ்டரஸ் என்பவரும், ஸ்டேர் என்னுமிடத்தைச் சார்ந்த சர் ஜான் டார்லிம்பிலும் ஆவர். சர் ஜான் டார்லிம்பிலினுடைய உயர்ந்த திறமைகளும் ஒப்பந்தக்காரர் களுக்கெதிராக ஸ்டுவர்டினருக்குச் செய்த பணியும், கவர்ச்சியற்ற தன்மையும் அவரை ஸ்காட்லாந்தின் டான்பி என்று கருதும்படி செய்தன.

ஆனல், அப்போது கூடியிருந்த பாராளுமன்றம் கடுமையான எதிர்ப்பினைக் காட்டியது. பிஷப்புகள் ஆட்சியை ஒழிப்பதற்காகக் கொண்டுவரப்பட்ட சட்டத்தினல் திருப்தியடையாத திருச்சபையினர், பிஷப்புகளைப் பதவியிலிருந்து தள்ளவேண்டுமென்று கோரினர். அதிருப்தி அடைந்த விக்குகளுக்கு சர் ஜேம்ஸ் மான்ட்கோமரி (Sir James Montgomery)யும், ஃபிளட்சர் சால்டனும் தலைமை தாங்கினர். கட்டளைப் பிரபுக்களை நீக்கவேண்டுமென்று அவர்கள் கூறினர். அதனோடு அதிகாரிகளெல்லாம் பாராளுமன்றத்தினல் நியமிக்கப்படவேண்டும் என்றும் வற்புறுத்தினர். 'சங்கத்தினை'ச் சார்ந்த (The Club) தீவிரவாதிகள், யாகோபியருக்கு விடுத்த அறிவிப்பின்மூலமாகத் தங்களுடைய திட்டத்தைச் செயல்படுத்துவதில் விடாப்பிடியாக இருக்க முடியவில்லை.

1690ஆம் ஆண்டில் வில்லியம் மனமின்றி விட்டுக் கொடுத்தார். அதன்மூலமாகக் கிறிஸ்துவைத் தவிர வேறு எந்த அரசரையும் ஏற்றுக்கொள்ளாத வெறியர் அன்றி, மற்றெல்லாப் பிரஸ்பிடீரியர்களுடைய ஆதரவைப் பெறமுடியும் என நம்பினர். கிர்க் திருச்சபைமீது அரசரது ஆதிக்கத்தை ஏற்படுத்தும் சட்டங்கள் ரத்து செய்யப்பெற்றன. 1592ஆம் ஆண்டு இருந்த மாதிரியில் 1646ஆம் ஆண்டு தோன்றிய வெஸ்ட்மினிஸ்டர் சமய வாக்குறுதியினைத் தன்னுடைய முறை மரபாகக்கொண்டு பிரஸ்பிடீரிய நீதி மன்றம் மறுபடியும் அமைக்கப்பெற்றது. பதவிகளை வழங்குவதில் தனியார் ஆதரவு ஒழிக்கப்பட்டது. இஃது ஒரு சாராரின் நிர்ணயத் திட்டமாக இருந்தபோதிலும் மீட்கப்பெற்ற கிர்க் திருச்சபை, உள்நாட்டுப் போருக்குப் பிறகு வெற்றியுடன் வெளிவந்த திருச்சபையினின்றும் மிகவும் மாறுபட்டு நின்றது. ஏனெனில், ஒப்பந்தமே மீட்கப்படவில்லை. சமயத்தொடர்பில்லாச் சாதாரண மக்கள் முழு இணைவிணக்கத்தைத் துய்த்தனர். அடுத்த சில ஆண்டுகளில் நியாயமான நிபந்தனைகளின்பேரில் நீக்கப்பெற்ற எபிஸ்கோபலிய குருமார்களை ஏற்றுக்கொள்ளுமாறு கிர்க் திருச்

சபையை வில்லியம் வற்புறுத்தினர். இறுதியாக, ஒருவிதத் தீவினை மன்னிப்பைக் கொணர்ந்து அதன்மூலமாக நடப்பு நிலையில் வில்லியத்தை அரசர் என்று ஏற்றுக்கொண்டவர்களுக்குத் திருச்சபைப் பதவி அளிக்க எண்ணினர்.

1690ஆம் ஆண்டு அளிக்கப்பெற்ற மற்ருெரு சலுகை, தீய பயன்களை விளைவித்தது. ஆங்கிலப் பிரபுக்கள் ஸ்காட்லாந்துக் கவுன்சிலில் இருந்து வெளியேற்றப்பட்டமையினல் ஒற்றைச் சபை கொண்ட பாராளுமன்றம் கட்டுப்பாடின்றித் தன்னுடைய செயற் குழுக்களை (committees) அமைத்துக்கொள்ள முடிந்தது. அவைகளில் அரசர் தம் அமைச்சர்களுடைய செல்வாக்கு இருந்த போதிலும், அவர்களுக்கு வாக்குரிமை இல்லை. இப்போது கிரேட் பிரிட்டனின் (Great Britain) இரு பாராளுமன்றங்களையும் அரசியல் சட்டரீதியில் தொடர்புபடுத்த அரசரைத் தவிர வேறு இணைப்பு இல்லை. ஸ்காட்லாந்தின் பாராளுமன்றம் இங்கிலாந்தின் போரில் நடுநிலைமை வகிக்க விரும்பினலும், வேருெரு வாரிசை நியமித்தாலும், அதைத் தடைசெய்ய அரசரது தள்ளுரிமையைத் தவிர வேறெந்த அதிகாரமும் இல்லை. அத்தகைய ஆபத்துத் தோன்றுமாஞல் அடக்கப்பெருது இருந்த ஹைலாந்தின் ஆதரவு அவர்களுக்குக் கிடைக்கும். அப் பகுதியில் வில்லியத்தின் ஆட்சியில் பயங்கரமான குற்றம் ஒன்று நிகழ்ந்தது. ஆட்சியாளரில் ஒரு சாரார் தாராள மனப்பான்மையினலும் லஞ்சம் கொடுப்பதாலும் ஹைலாந்துக் குடியானவரைச் சமாதானமாக வைத்திருக்கமுடியும் என எண்ணினர். ஸ்டேரும் சில படைவீரரும், வாளைத் தவிர வேருென்றும் அவர்களைவழிக்குக் கொண்டுவராது என்று நம்பினர். இந்த நம்பிக்கை அடிப்படையில் அடங்காத காமிரான்கள், மெக்லியன்கள், மாக்டனல்டுகள் ஆகியோரை அழித்துவிட எண்ணினர். இரண்டு முறைகளையும் செயல் தேர்வு செய்த அரசாங்கம், பெரும் பொருளை விநியோகித்தது. ஆனல், அதே சமயத்தில் 1692ஆம் ஆண்டு தொடங்கும்போது எல்லாத் தலைவர்களும் விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற ஆணை பிறந்தது. ஒருவேளை அவர்கள் பிரமாணம் எடுத்துக் கொள்ள மறுத்தால், அவர்களை முற்றிலும் அழிப்பதற்கான ஏற்பாடுகளை ஸ்டேர் முன்கூட்டியே செய்திருந்தார். ஆனல், குறிப்பிட்ட நாள் வந்தபோது கிளன்கோவைச் (Glencoe) சார்ந்த மெக்டெனல்டைத் தவிர மற்ற யாவரும் பிரமாணம் எடுத்துக் கொண்டனர். அவரும் ஆறு நாட்கள் கழித்துப் பிரமாணம் எடுத்துக்கொண்டார். தற்செயலான இத் தாமதத்தை அரசர்க்கு அறிவிக்காமலே ஆட்சியாளர் இருட்டடித்துவிட்டனர். எனவே, எதிரிகளை அடியோடு அழிப்பதற்கு வழக்கமாக அனுப்பும் 'தீயும்

வாளும் என்னும் கடிதத்தை அரசர் அனுப்பினார். அதனோடு அழிக்கும் வேலை ரகசியமாக இருக்கவேண்டும் என்றும், மெக்டனால்டுகளை அடியோடு அழித்துவிடவேண்டும் என்றும், ஸ்டேரி ஆணைகளைப் பிறப்பித்தார். இங்ஙனம் பிப்ரவரி மாதம் 13ஆம் தேதி அதிகாலையில் காம்ப்பெல் ஒருவரால் நடத்திச் செல்லப்பெற்றஆர்கைலின் படை மெக்டனால்டுகளைப் படுகொலை செய்தது. மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு உண்மை வெளியான போது, ஸ்டேர் பதவியிலிருந்து விலக்கப்பட்டதைத் தவிர வேறு தண்டனை ஏதும் பெறவில்லை. இந்தப் படுகொலையில் பங்கு பெற்ற சிப்பாய்களுக்கு தண்டனையேதும் அளிக்கப்படவில்லை.

ஸ்காட்லாந்தில் பழிவாங்குதல் மெதுவாக நடைபெற்றது. ஆனால், அயர்லாந்தில் புரட்சி, போர், தண்டனைகள் ஆகியவை அனைத்துமேவேகமாகச் சுழன்றுவந்தன. ஐரோப்பியர் ஒருவரை உடனே அனுப்ப இயலாததாலும், டிரிகான்னலோடு பேச்சு வார்த்தையில் ஈடுபடுத்தப்பட்டதாலும், அயர்லாந்துப் பிரச்சினையைத் தீர்க்க 1689ஆம் ஆண்டுவரை வில்லியம் தீவிர முயற்சியேதும் செய்யவில்லை. அந்த ஆண்டில் ஃபிரெஞ்சு அதிகாரிகளோடும் பணத்தோடும் ஜேம்ஸ் டப்ளினை வந்தடைந்தார். அதன் காரணமாக லீன்ஸ்டரிலும், மன்ஸ்டரிலும் இருந்த பிராட்டஸ்டென்டுகள் இங்கிலாந்திற்கு ஓடினர், அல்லது தலைமறைந்து வாழ்ந்தனர். அல்ஸ்டரைச் சேர்ந்தவர்கள் லண்டன்டர்ரி (Londonderry), என்னிஸ்கில்லன் (Ennis killen) போன்ற நகரங்களில் தஞ்சம் புகுந்தனர். 50,000 வீரரைக்கொண்ட சேனை ஒன்றை, ட்ரிகான்னல் உருவாக்கினார். போதிய படைக்கலன்களும் கட்டுப்பாடும் இருந்திருந்தால் அஃது ஒரு வெல்லுதற்கரிய படையாக இருந்திருக்கும். ஏப்ரல் மாதத்தில் டெர்ரி (Derry) என்னுமிடத்தை ட்ரிகான்னல் முற்றுகையிட்டார். இந்த முற்றுகை 105 நாட்கள் நீடித்தது. அப்போது அங்கிருந்த காவற்படையினர் ஓட்ஸ் மாவையும், குதிரைக் கறியையும் உண்ண வேண்டிய நிலைக்குக் கொண்டுவரப்பட்டனர். அவ்விடத்துத் தன்னுடைய குடிமக்களின் ஆற்றலினாலும், ஸ்காட் (Scot) காலத்தைச் சார்ந்த அயர்லாந்தும் கிராம்வெல் காலத்தைச் சார்ந்த அயர்லாந்தும் இறுதிப் போராட்டம் செய்தபோதுதான் அல்ஸ்டர் மக்களுடைய ஆளுமை உருவாகிச் சோதனைக்குட்பட்டது. வயது முதிர்ந்த ஆங்கிலிக குருவான ஜார்ஜ் வாக்கர் (George Walker) என்பவரால் உணர்ச்சியூட்டப்பெற்ற அவர்கள், வஞ்சகத்தையும் ஃபிரெஞ்சுப் படையினரின் வரம்புமீறிய கொடுமைகளையும், வாட்டும் பசியையும் எதிர்த்துப் போராடினர். அவர்களுடைய சாதனைகளைக் கண்டு விழித்துக்கொண்ட ஆங்கிலப்

பாராளுமன்றம், ஜூலை மாதத்தில் அனுப்பிய உதவிக் கப்பல்கள் ஃபாயில் (Foyle) ஆற்றில் சங்கோசை எழுப்பும் வரை இத்தகைய போராட்டம் நடந்தது. அதே மாதத்தில் என்னிஸ்கில்லனில் இருந்த வீரர்கள், நியூடவுன் பட்லர் (Newtown Butler) என்னுமிடத்தில் நடந்த சண்டையில் கத்தோலிக்கரை முறியடித்தனர். ஆகஸ்ட் மாதத்தில் டார்பேயில் (Torbay) வில்லியத்தின் படைகளை நடத்திச் சென்ற வயது முதிர்ந்த யூக்நோவாகிய ஷோம்பர்க் (Schomberg) தம்முடைய சேனையோடு அன்ட்ரீம் (Antrim) என்னுமிடத்தில் வந்திறங்கினர். ஆனால், அந்த ஆண்டில் ஒரு முடிவும் ஏற்படவில்லை. அவருடைய படையினர் பெரும்பாலும் புதிதாகச் சேர்க்கப்பட்டவர்கள். சரியான பாதுகாப்பும் ஊதியமும் இன்றிப் போர்க்களத்திற்கு அனுப்பப்பட்டனர். அதே சமயத்தில் தளவாடங்களும் உணவுப் பொருள்களும் சரியாக அனுப்பப்படவில்லை. அதனோடு அடாத மழையும் பெய்துகொண்டிருந்தது. தலைசிறந்த ஐரிஷ் படைத்தலைவராகிய சார்ஸ்ஃபீல்டு (Sarsfield), கன்னட் (Connaught) என்னுமிடத்தில் வெற்றிகளைத் தேடித் தந்த போதிலும் சிறந்த முறையில் போரிடும் நிலையில் ஜேம்ஸ் இல்லை.

இந்தப் படையெடுப்பு ஜேம்ஸின் வாழ்க்கையில் பல வழிகளில் இழிந்த ஒன்ருக இருந்தது. அவருடைய மனவுறுதி குலைந்து விட்டதாகத் தெரிந்தது. ட்ரிகான்னல் நைந்தார். அவருடைய ஸ்காட்லாந்தைச் சேர்ந்த ஆலோசகரான மெல்ஃபோர்ட் (Melfort) எல்லோராலும் வெறுக்கப்பட்டார். மேலும் அவர் இறுதலைக் கொள்ளி எறும்பின் நிலையில் இருந்தார். எவ்வளவுக்கெவ்வளவு ஐரிஷ் கத்தோலிக்கரை நம்பி இருக்கின்ருரோ அவ்வளவுக்கவ்வளவு இங்கிலாந்தைத் திரும்பப் பெறும் வாய்ப்பு மோசமாகிவிடும் நிலை இருந்தது. அவரது ஆலோசகர்கள் பிளவுபட்டு நின்றனர். இங்கிலாந்தை அடைவதற்கு அயர்லாந்து முதற்படியாகும் என்று அவர் நினைத்தார். ஐரிஷ்காரர்கள் தங்களுடைய தேசீய உரிமைகளில் குறியாக இருந்தனர். ஃபிரெஞ்சு ஆலோசகர்கள் ஒரு நீண்ட ஐரிஷ் போர் வில்லியத்திற்கு ஊறு செய்யும் சிறந்த வழி என்று கண்டனர்.

லண்டன்டர்ரி விடுபடுவதற்கு முன்பே ஐரிஷ் பாராளுமன்றத்தினர் ஜேம்ஸைத் தங்களிடம் சிக்கிய கைதி என்பதைக் காட்டினர். நகராட்சி மன்றங்களில் தமக்கு வேண்டாதவர்களையெல்லாம் ட்ரிகான்னல் வெளியேற்றினர். அதே அடிப்படையில் பாராளுமன்றம் கத்தோலிக்கரைப் பிரதிபலிப்பதாக இருந்தது. பாராளுமன்ற உறுப்பினர் கிராம்வெல் காலத்திற்கு முந்திய காலத்தியதும் எலிசபெத் காலத்தியதுமான அயர்லாந்திற்குத் திரும்பச் செல்ல

வேண்டும் எனும் திட்டத்தை உடையவர்களாக இருந்தனர். இங்கிலாந்தின் பாராளுமன்றம் கொண்டாடிய மேலுரிமையைத் தள்ளுபடி செய்தனர். அரசர்மட்டும் இல்லையென்றால், பாய்னிங் குடைய சட்டத்தையே (Poynings' Act) ரத்து செய்திருப்பார்கள். சமயப் பொறையைப்பற்றி அவர்கள் அளித்த வாக்குறுதி பொய்த்தது. முழு நிலஉரிமை நிர்ணயத் திட்டத்தை ரத்து செய்தபோது, 1641ஆம் ஆண்டில் இருந்ததைப் போன்று நிலங்களைச் சொந்தக்காரருக்குத் திருப்பி அளிக்கவேண்டும் என்று கூறப்பட்டது. அந் நிலங்களில் இருந்து வெளியேற்றப்பட்ட பிராட்டஸ்டெண்டுகளுக்கு இழப்பீடு தரவில்லை. தங்களுடைய குற்ற மற்றத் தன்மையை நிரூபிக்க முடியாத சூழ்நிலையில், 2000 நிலச் சொந்தக்காரர்கள் மரண தண்டனைக்காகப் பெயர் குறிக்கப் பட்டனர். சென்ற நூறு ஆண்டுகளைப் பாராளுமன்றத்தினர் மறக்க முடியாது என்றாலும் அவர்களைப்பற்றிய கசப்பான நினைவு, வருகின்ற நூறு ஆண்டுகளில் அவர்களது நாட்டைவிட்டு நீங்காம லிருந்தது.

1690ஆம் ஆண்டில் இருதரப்பினரும் ஒரு முடிவுகான ஆயத்தம் செய்தனர். மாடன்னுவின் மேரி தப்பியோடியபோது, அவருக்குத் துணையாகச் சென்ற லாசன் (Lauzun) 7000 ஃபிரெஞ்சுத் துருப்புகளைக் கொண்டுவந்தார். ஜூன் மாதத்தில் வில்லியம் 36,000 வீரர்களுடனும், தலை சிறந்த டச்சுப்படைத் தலைவர் களுடனும் அல்ஸ்டரில் வந்து இறங்கினர். ஆங்கிலக் கால்வாயில் ஃபிரெஞ்சுக் கடற்படையின் ஆதிக்கம் இருந்ததால்தம்முடைய காபி னெட்டின் எதிர்ப்பினை மீறி வில்லியம் செயல்படத் தொடங்கினர்.

ஆனால், ஃபிளாண்டர்ஸ் பிரதான முனையில் வெற்றி கிடைக்க வேண்டுமானல் அயர்லாந்தில் இருந்த ஃபிரெஞ்சுக்காரரை முதலில் முறியடிக்கவேண்டும். வில்லியம் வந்து இறங்கிய பதினைந்து நாட்களுக்குள் பாய்னே (Boyne) என்னுமிடத்தை அடைந்தார். ட்ரோகிடா (Drogheda)விற்கும் ஸ்லேனுக்கும் (Slane) இடையில் ஆறுனது இருமுறை வளைந்து செல்லுமிடத்தில் ஜூலை மாதம் முதல் தேதி தாக்குதலைத் தொடங்கினர். வலப்புறத்தில் இருந்த குறுக்குவழி அவரை ஐரிஷ் படையினரின் மையத்திற்கு அழைத்துச் சென்றது. அந்த வழி மிக அருமையானதாகவும் நம்பிக்கை இழக்கச் செய்யக்கூடியதாகவும் இருந்தபோதிலும், ஷாம்பர்க் கொல்லப்பெற்று இருந்தபோதிலும் டச்சுக்காரர் ஃபிரெஞ்சுக் காரரைப் போலன்றி, போர்க்களத்தைவிட்டு ஓடினர். வில்லியம் பல தாக்குதல்களை நடத்தி அவர்களுடைய இடப்பக்க அணியையும் புறமுதுகிடுமாறு செய்தார்.

ஒருவார காலத்திற்குள் டப்ளின் வீழ்ந்தது. ஜேம்ஸ் ஃபிரான்சுக்கு ஓடினர். தென்மேற்குத் துறைமுகங்கள் நீங்கலாகக் கடற்கரையின்மீது வில்லியம் தனது ஆதிக்கத்தை ஏற்படுத்தினர். மேலும், அவர் லிமரிக்கை (Limerick) நோக்கி முன்னேறினர். இங்கே கோட்டையை அழிக்கும் வேலையை முடிக்கவொட்டாமல் அவரைச் சார்ஸ்ஃபீல்டு தடுத்தார். அதுபோது வில்லியம் இங்கிலாந்து திரும்பவேண்டி இருந்தது. எனினும், தம்முடைய தவருத ஆற்றலினல் கார்க்கையும் (Cork) கின்சேலேயும் (Kinsale), மார்ல்பரோ கைப்பற்றினர். 1691ஆம் ஆண்டுப் போர் முடிவுக்கு வந்தது. கின்கெல் (Ginkel), அத்லோனைக் (Athlone) கைப்பற்றியதன்மூலம் ஷன்னன் போர் முனையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டார். அக்ரிம் (Aghrim) என்னுமிடத்தில் நடந்த சண்டைக்குப் பிறகு, கன்னட்டைத் தம்முடைய கட்டுப்பாட்டில் கொண்டுவந்தார். சார்ஸ்ஃபீல்டு ஆகஸ்ட் மாதத்தில் லிமரிக்கை ஒப்படைக்கவேண்டியதாயிற்று. ஆயின், அந் நகர மக்களுக்குச் சமய உரிமையும் சொத்துரிமையும் வழங்குவதாக வாக்களிக்கப் பெற்றது.

எனினும், இங்கிலாந்தின் பாராளுமன்றமும், அயர்லாந்துப் பிராட்டஸ்டென்டுகளும் மிதவாத மனநிலையில் இல்லை. கத்தோலிக்கரைப் பதவியிலிருந்தும் பாராளுமன்றத்திலிருந்தும் விலக்குவதற்காக ஆங்கிலப் பாராளுமன்றம் சட்டமியற்றியது. பிறகு தொடர்ந்து வந்த பல ஆண்டுகளுக்கு டப்ளினில் இருந்த அதனுடைய இரட்டையாகிய ஐரிஷ் பாராளுமன்றம் குற்றச் சட்டத்தைத் தொகுத்தது. பிற்காலத்தில் ஹனேவிரிய அரசர்கள் அத் தொகுப்பினை விரிவுபடுத்தினர். அவைகள் பிஷப்புகளையும், சமயத் துறவிகளையும் (monks) நாடு கடத்தின. கத்தோலிக்கர் பிரசாரம் செய்வதையும், ஆயுதம் தாங்கிச் செல்வதையும், பிராட்டஸ்டென்டுகளை மணந்துகொள்வதையும் தடை செய்தன. நில உரிமை நிர்ணயத் திட்டத்தை எதிர்த்துவரும் வழக்குகளை நீதிமன்றங்கள் விசாரிக்கக் கூடாது என்றன. இங்ஙனம் கையில் வாளேந்தி வெற்றிகொண்ட சிறுபான்மையினர், மக்களைத் துன்புறுத்தினர். அங்கே விக்கு கும்பலும், டோரி கும்பலும் வெஸ்ட்மினிஸ்டரில் காணப்பெற்ற சச்சரவுகளைப் பழைமையான முறையில் நடத்தினர். மறுபடியும் அயர்லாந்தில் இருந்துகொண்டு இங்கிலாந்தை வெல்லவேண்டும் என்னும் ஸ்டூவர்டுகளின் முயற்சி அவர்களுக்கும், ஐரிஷ் மக்களுக்கும் பெருந் தீங்காக முடிந்தது.

இங்கிலாந்து மக்கள் எல்லோராலும் வெறுக்கப்பெ
அயர்லாந்து, வில்லியத்தின் ஆட்சி ஆட்டங்காணுமாறு செ

வில்லை. வில்லியத்தின் ஆட்சிக்காலத் தொடக்கத்தில் டார்ட் மௌத்தும், இளாரண்டனும், முன்னுள் உள்துறைச் செயலராக இருந்த பிரஸ்டனும் (Preston), குவேக்கராகிய பென்னும், விசுவாசப் பிரமாணத்தை மறுக்காத (non-juror) பிஷப் டர்னரும் உள்ளிட்ட ஜேம்ஸின் பழைய ஆதரவாளர்கள் சில சதிகளில் ஈடுபட்டனர். எனினும், இத்தகைய தடுமாறும் சதிகள், டோரிகளை நிலைகுலையச் செய்ததால்மட்டுமே ஆபத்தானவையாக இருந்தன. டோரிகளுடைய உணர்வு அவர்களைத் திருச்சபைக்கும் அரசருக்கும் ஆதரவாளராக மாற்றியது. அவர்களில் பலருடைய உறவினர்கள் நாடு கடத்தப்பெற்று இருந்தனர். உண்மையில் மிகுந்த செல்வாக்குடைய சிலர் செயின்ட் ஜெர்மெய்ன் அரசவையோடு கடிதத் தொடர்பு வைத்திருந்ததுதான் அதிகக் கவலை அளிப்பதாக இருந்தது. சேனையில் சூழ்ச்சிசெய்ய மார்ல்பரோ இணங்கியதற்கும், ஆன் அரசியார் தம்முடைய தந்தையாரின் மன்னிப்பைக் கோரியதற்கும், கொடால்ஃபினை நம்பிக்கை யூட்டுமாறு செய்ததற்கும், ஷ்ரூஸ்பரி பதவி ஏற்க மறுத்தற்கும், ரஸ்ஸலைக் கடற்படை உதவி அளிப்பதாக வாக்குறுதி அளிக்கத் தூண்டியதற்கும் பல்வேறுபட்ட நோக்கங்கள் வேலை செய்தன. சில சமயங்களில் மதிக்கப்படாததனுல் ஏற்பட்ட ஏமாற்றம் காணப்பட்டது. சில சமயங்களில் பழைய பிணைப்புகளும், சில சமயங்களில் முன்னிலை மீட்சிக்கு எதிரான காப்புறுதியும், அத்தகைய நோக்கங்களாக இருந்தன. ஆனுல், இவைகளெல்லாம் மிக முக்கியமானவை என்று கருத முடியாது. முதலாம் ஜார்ஜ் இறக்கும் வரையில் எழுந்த ஒவ்வொரு நெருக்கடியின்போதும் இந் நிலையைக் காண முடிகின்றது. நயமான வார்த்தைகளையும் சிறிதளவு பணத்தையும் தவிர இவைகளில் அதிகமாக ஒன்றுமில்லை. 1692ஆம் ஆண்டில் மார்ல்பரோ படைத்தலைமைப் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். 1694-ல் அவரும் கொடால்ஃபினும் ப்ரஸ்ட் (Brest) நகரத்தின்மீது வரப்போகும் தாக்குதலைப்பற்றி யாகோபியரிடம் காவடக்கமின்றிப் பேசி இருக்கலாம். ஆனுல், அஃது ஊரறிந்த ரகசியம். அறிவற்ற செயலாகிய இப் படையெடுப்பினை நம்முடைய படைத்தலைவர் தால்மாஷ் (Talmash) நடத்திச் சென்றுர். அதில் அவரும் வேறு பலரும் உயிரிழந்தனர். ஆனுல், சர்ச்சில்களின் நோக்கம், மேரியினுல் இழிவாக நடத்தப்பெற்ற ஆன் இளவரசியின் நலனைப் பாதுகாப்பதாக இருந்தது. அரசியார் இறந்த பிறகு தம்முடைய வாரிசாகிய ஆன் இளவரசியாரோடு வில்லியம் சமாதானம் செய்துகொண்டார். மார்ல்பரோவை மன்னித்து மறுபடியும் பதவியில் அமர்த்தினுர். ஃபிரெஞ்சுக்காரரால் தூண்டப்பெற்று மனமுறிந்தவர்களைக் கொண்ட மற்றொரு வகையான யாகோபிய இயக்கம் காணப்பெற்றது. 1696ஆம் ஆண்டில்

ரிச்மாண்ட் வனத்தில் (Richmond Park) வேட்டையாடிவிட்டுத் திரும்பிய வில்லியத்தைக் கொலைசெய்ய இவ்வியக்கத்தினர் சதி செய்தனர். ஜேம்ஸின் மகனுகிய (மார்ல்பரோவின் மைத்துனனும் ஆன) பெர்விக் (Berwick) அச் சதிபற்றி அறிந்தார்.

யாகோபியர் இயக்கம் அரசியலின்மீது மேகத்தைப் போன்று கவிந்திருந்தது. சமயத்தைத் துறந்த இவ்வுலகையும், வெற்றிகரமாக அல்லது சமயப்பொறை காரணமாக விளங்கிய சமயங்களையும் டோரிகள் வெறுத்தனர். அதே சமயத்தில் விக்குகள் ஜேம்ஸினுடைய அரச உரிமையை மறுத்துப் பிரமாணம் செய்யுமாறு டோரிகளை வற்புறுத்துவதன்மூலம் கிடைக்கின்ற வாய்ப்புகள் அனைத்தையும் அவர்கள் யாகோபியர் என்று நிரூபிக்கப் பயன்படுத்தினர். நடைமுறையில் மிகச் சில ஆங்கில டோரிகளே யாகோபியராக இருந்தனர். ஜேம்ஸின் புதல்வர் பிராட்டஸ்டென்ட் என்று அறிவிக்கப்பட்டு இருந்தால் என்ன நடந்திருக்கும் என்று கூறுவதற்கில்லை. தற்போதைக்கு இந்தச் சதிகள் இங்கிலாந்தில் ஃபிரான்சின்மீதும் 'போப்பின் சமயத்தின்'மீதும் மக்கள் கொண்ட வெறுப்பை உறுதிப்படுத்தின. 1696ஆம் ஆண்டு வில்லியத்தைக் கொல்லச் சதி செய்தவருக்கு எதிராக உருவாகிய சங்கம் இதற்குச் சான்றுக விளங்குகின்றது. நாடு கடத்தப்பெற்றவருடைய நலனைக் காக்கும் குறிக்கோள் ஏற்கெனவே சிதைந்துகொண்டிருந்தது. ஸ்காட்லாந்தியரான மிடில்டன் போன்ற பிராட்டஸ்டென்டுகளிடையேயும், மெல்ஃபோர்ட் போன்ற கத்தோலிக்கரிடையேயும் அல்லது ஐரிஷ் தீவிரவாதிகளுக்குமிடையேயும், சமயத்தையும் உரிமையையும் தருவதன்மூலமாக ஜேம்ஸ் 'ஈடு' செய்யவேண்டுமென்று வாதிட்டவர்களுக்குமிடையே செயின்ட் ஜெர்மெய்ன் பிளவுபட்டு நின்றது.

எனவே, அரச உரிமை குறித்து எழுந்த போட்டி இத்தகைய தீவிரப் பூசல்களுக்குக் காரணம் அன்று என்பது தெளிவு. வில்லியத்தின் அதிகாரத்திற்கும் கொள்கைக்கும் எதிர்ப்பு இருந்ததே அவற்றிற்குக் காரணம். அவைகளில் பெரும்பான்மை கட்சிப் பூசல்களுமல்ல. ஏனெனில், மரபாக வந்த உணர்வினுலும் ஷாப்ஃட்ஸ்பரியும் டான்பியும் ஏற்படுத்திய அமைப்பினுலும் கட்சிகள் வேரூன்றி இருந்தன என்றுலும், அவைகள் இன்னும் ஒருமுகப் படுத்தப்பெற்றதும், பலவற்றைத் தம்மகத்தே கொண்டவையுமான தற்கால அரசியல் கட்சிகளைப் போன்று இல்லை. அப்பொருளில் அரசியல் கட்சியானது தம்முடைய விருப்பப்படி தேர்ந்தெடுத்த அமைச்சரைக் கொண்டு நிர்வாகத் துறையைக் கட்டுப்படுத்தி, திருச்சபை, படைகள், அதிகாரவர்க்கம் ஆகியவற்றின்

மீது செல்வாக்குச் செலுத்திய அரசரோடு இணைந்திருக்க இயலாது. மேலும், பிரதிநிதித்துவ அரசாங்கம் உறுதியாக வேரூன்றி விட்டது என்றாலும், பொறுப்புள்ள அரசாங்கம் நெடுந்தொலைவில் இருந்தது. அக் காலக் கருத்துகளின்படி அரசியல் அமைப்பு அரச அதிகாரப் பங்கீடாகக் காட்சியளித்தது. அங்கே அரசரது நிர்வாகம், உறுதி அளிக்கப்பெற்ற வேலைகளையும் நிகழ்ச்சிக் காலத்தையும் கொண்ட ஒரு பாராளுமன்றம்; அடிப்படைச் சட்டத்தை வழங்கும் முறைமன்றம் ஆகியவற்றிற்கிடையே அவ்வதிகாரம் பங்கீடு செய்யப்பெற்றது. அத்தகைய எண்ணத்திற்குக் காபினெட் அரசாங்கத்தின் ஆணிவேராக இருக்கும் நிர்வாக அதிகாரம், இறைமைபெற்ற சட்ட மன்றத்தோடு இணைவது புறம்பானதாகும். சட்ட முறைப்படி இருந்த அங்கம் கவுன்சில் என்பதை அவர்களறிவர். ஆனால், இரகசியமான சட்டமுறைக்குப் புறம்பான அமைப்புகளாகவும், அரசருடைய பதவியாளர் மூலமாகப் பாராளுமன்றத்தைக் கெடுப்பனவாகவும் உள்ள காபினெட்டுகளையும் 'கெபால்களையும்' வெறுத்தனர். உயர் குடியினர் இயல்புடையதும் நாட்டுப்புறத்தன்மை உடையதுமான சமுதாயம், அரசியல் கட்சிகளில் கட்டுப்பாடு ஏற்படுவதைத் தடுத்த இரண்டாவது காரணமாக அமைந்தது. தொகுதிகளில் சொத்துகள் யாவற்றையும் கட்டுப்படுத்தித் தல நீதிமன்றத்தை அடக்கி, தந்தைக்குப் பின் மகனைப் பாராளுமன்றத்தில் அங்கம் வகித்த குடும்பங்கள் பரந்த வாக்காளருக்குக் கடமைப்பட்டு இருப்பதையோ, அமைச்சருக்குக் கீழ்ப்படிவதையோ ஒப்புக் கொள்ளமாட்டா. எனவே, அமைச்சுகளுக்கும் காமன்ஸ் சபையின் பெரும்பான்மைக் கட்சிகளுக்கும் தொடர்பில்லாமலேயே இருந்தது. தேர்தல் மந்திரி சபையை அமைக்கவில்லை. அதற்கு மாறாக, தேர்தலில் அமைச்சர்கள் அரசரின் செல்வாக்கைப் பயன்படுத்தித் தங்களுடைய பெரும்பான்மைக் கட்சிகளை அமைத்துக்கொண்டனர். இப்படியாக, 1690 முதல் 1695 வரையில் கூடிய காமன்ஸ் சபையில் அரசர் டான்பியின் மந்திரி சபையோடு தொடங்கினர். ஆனால், 1694ஆம் ஆண்டுவாக்கில் அதனை விக்கு ஜன்டோ (Whig Junto) வாக மாற்றினர். அதே சமயத்தில் அவருடைய ஆட்சியின் முடிவில், பெரும்பான்மை ஒருநிலையில் இல்லாதிருந்தது. அரசியல் கட்சிகளின் ஐயத்திற்குரிய போக்கினை நிரூபிப்பதாக இருந்தது. தவிர, பகைவர்களாக இருந்த இரு கட்சியினரும் சீரழிந்தனர். நிலைப் படையையும் அரசரது தன்னுரிமையையும் தாக்குவதிலேயே தங்கள் வாழ்நாட்களைக் கழித்த விக்குகள், ஸ்டூவர்ட் அரசர் ஒருவரைப் போலவே, தங்களுடைய 'விடுதலையாளர்' (liberator) அவைகளைத் தீவிரமாகப் பயன்படுத்துவதைக் கண்டனர். அதேசமயத்தில் எதிர்ப்புத்

தந்து தங்களது வேந்தரைத் தப்பி ஓடும் நிலேக்குக் கொண்டுவந்த டோரிகள் தங்களுடைய திருச்சபையின் வைரி என்று கருதப் பெற்ற வில்லியத்தின் தனிச்சிறப்பு உரிமைகளை ஏற்றுக்கொள்ள வேண்டி இருந்தது.

அத்தகைய மாற்றுக்காலத்தில் மந்திரி சபையும் எதிர்க் கட்சியும், கூட்டிணைப்புக்களாலேயே உருவாயின. அந்த அரசியல் கட்சிகளுக்கிடையே வரையறை செய்யப்படுமாளுல், அது பழையவழியில் 'அரசர் கட்சி' (Court), 'நாட்டுக் கட்சி' (Country) எனப் பிரியும். போர், வெளிநாட்டுக் கொள்கை ஆகிய இரண்டையும் அரசர் முழுமையாகக் கட்டுப்படுத்திஞர். அவர் இங்கிலாந்து அமைச்சர் எவரையும் வெளிநாட்டிற்குக் கொண்டு செல்லவில்லை. காமன்ஸ் சபையில் அரசரால் நியமிக்கப்பட்ட பதவியாளர் குறைந்தது 100 பேர்களாவது இருந்தனர். செலவையன்றி வேறென்றையும் பாராளுமன்றம் அறியாத ஒரு கொள்கைக்காக 100,000 படை வீரரை வைத்திருந்தார். உரிமைகள் மசோதா பல பொள்ளல்களைக் கொண்டிருந்தது என்றும், தேவைக்கு அதிகமான பரபரப்பில் கையெழுத்திடப் பட்டது என்றும் ஒருவகையான உணர்வு வளர்ந்துவந்தது.

அதன் பிறகு பல நோக்கங்களால் மேலும் பல உரிமை களுக்காக வற்புறுத்தப் பெரும்பான்மைக் கட்சி காமன்ஸ் சபையில் காணப்பட்டது. அவ்வுரிமைகளைப் பெறுவதற்காக மானியம் வழங்கும் அதிகாரம் பயன்படுத்தப்பெற்றது. போருக்குத் தேவையான பொருளாகிய அரசாங்கத்தின் நாணயக் கடன் பாராளுமன்ற உறுப்பினர் அடிக்கடி கூடுவதைப்பொறுத் திருந்தது. அதேசமயத்தில் ஆண்டுதோறும் நிறைவேற்றப்படும் 'கலகச் சட்டம்' தான் (Mutiny Act) ராணுவக் கட்டுப்பாட்டினைச் சட்ட முறையாக்க முடியும். காமன்ஸ் சபையினர், முன் நிகழ்வு களிலிருந்து பிறழ்ந்து சென்று காப்புவரிகளை மானியமாக அளிக்கும்போது ஒருமுறை குறுகியகால அளவிற்குத்தான் அளித் தனர். அரசரின் செலவுப் பணமும் (civil list) குறைக்கப் பட்டது. அவர்கள் கடற்படை அடைந்த தோல்விகளைப் பற்றியோ, அல்லது டச்சுப் படைத் தலைவர்கள் பிரிட்டிஷ் துருப்பு களை அநியாயமாகப் பலி கொடுத்ததாகக் குறைகூறப்பட்டதைப் பற்றியோ, விசாரணைகளில் இறங்கிக் காபினெட்டைக் கட்டுப்படுத் தினர். முறையாக வரவு செலவு கணக்குகளைச் சோதனை செய்வதற்காகக் கமிட்டியைக் நியமித்தனர். மற்றொரு முயற் சியில், வாணிபத்தையும் குடியேற்ற நாடுகளையும் சரிவர நடத்து வதற்கென்று வாணிபக் குழு ஒன்றை அமைக்கவேண்டுமென்று

வில்லியத்தை வற்புறுத்தினர். அவர் தம்முடைய ஆளான போர்ட் லண்டிற்கு அளித்த நிலமானியத்தை ரத்து செய்யுமாறு வற்புறுத்தினர். அவருடைய விருப்பத்திற்கு மாருகத் தங்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற ஒருவரையே சபாநாயகராக (Speaker) நியமித்தனர். அதுவரையில் அரசருக்கென்றே ஒதுக்கப்பெற்ற, கிழக்கு இந்தியக் கம்பெனி போன்றவற்றில் தங்களுடைய அதிகாரத்தை விரிவுபடுத்தினர்.

இச் செயலை வில்லியம், நேரடியாகவும் தன் செல்வாக்கு மூலமாகவும் பலமுறை எதிர்த்தார். பதவியாளரைப் பாராளுமன்றத்திலிருந்து விலக்குவதற்காகக் கொண்டுவரப்பெற்ற மசோதாவை இருமுறை நிராகரித்தார். பாராளுமன்றம் மூன்ருண்டுகளுக்குமேல் கூடுவதைத் தடைசெய்யக் கொண்டுவரப்பெற்ற மூவாண்டுச் சட்டத்தைக் (Triennial Act) ஒருமுறை ரத்து செய்தார். நீதிபதிகளின் சம்பளம் அரசரை நம்பி இராது செய்வதற்காகக் கொண்டுவரப்பட்ட மசோதா ஒன்றையும் நிராகரித்தார். அரசத் துரோக வழக்குகளில் இரண்டு சாட்சிகள் இருக்கவேண்டும் என்று வற்புறுத்தும் முக்கியமான சட்டம், அரசருடைய செல்வாக்கினுல் மூன்று முறை தோற்றபிறகு இறுதியாக 1696ஆம் ஆண்டில் நிறைவேறியது.

விக்கு ஜன்டோ ஆட்சிக்காலமாகிய 1694–8-க்குள் வில்லியத்தின் அதிகார வளைகோடு (curve) ஓர் உயரத்திற்கு எழுந்து பிறகு தாழ்ந்துவிட்டது. பொதுவாக அமைச்சரைத் தேர்ந்தெடுத்தது, நாட்டுநலனேடு தங்கள் நலனையும் பொருத்திய திறமையாளரின் யோசனைக்குப் பொருத்தமாக இருந்தது. எந்த மந்திரி சபையாலும் கொடால்ஃபின் வழக்கமாக நிதித்துறையின் தலைவராக இருந்தார். விக்கு மந்திரி சபையை அமைக்குமாறு சண்டர்லண்டு ஆலோசனை கூறினர். மார்ல்பரோ ஆன் இளவரசியோடு நட்புறவை ஏற்படுத்தினர். டோரி அரசாங்கம் குறிப்பாக நாட்டிங்காம் தலைமையில் இருந்த கடற்படை நிர்வாகம் வெற்றியளிக்கவில்லை. டான்பி [இப்போது லீட்ஸ் (Leeds) பிரபு] எப்போதும் மக்களால் வெறுக்கப்பட்டார். அதே சமயத்தில் கட்சி என்ற முறையில் விக்குகள் அதிக ஒற்றுமையுடன் இருந்தனர். லண்டன் நகர மக்களுடனும் வெளிநாட்டு வணிகருடனும் நெருங்கிய தொடர்புகொண்டிருந்தனர். மேலும், அரசருடைய கண்டப் போர்களை (Continental wars) ஆதரிக்கத் தயாராக இருந்தனர். எனவே, வில்லியம் 1693–4-ல் நாட்டிங்காமையும் சேமூரையும் நீக்கினர். அதே சமயத்தில் லீட்ஸ் பிரபு கையூட்டு வாங்கியதாகக் கண்டுபிடிக்கப்பட்டுச் செல்வாக்கு முழுமையும் இழந்தார்.

இங்ஙனம் விக்கு ஜன்டோ அதிகாரத்திற்குவந்தது. அரசியலில் ஒரு கட்சியாளராக இருந்தாலும் அறிவொளிபெற்று கவர்ச்சி மிகுந்து இருந்த சாமர்ஸ் (Somers) என்பவர் அரச முத்திரைக் காப்பாளராக (Lord Keeper) நியமிக்கப்பெற்ருர். கருவூலத்தில் இருந்த சார்லஸ் மான்டேகு (Charles Montagu) திறமைகொண்ட மேதையாகவும், அதே சமயத்தில் செருக்கு மிகுந்தவராகவும் காணப்பெற்ருர். இப்போது ஆர்ஃபோர்டு (Orford) பிரபுவாக இருந்த ரஸ்ஸல், கடற்படைத்துறையின் தலைவராக விளங்கினர். அவர் வீராப்பும், உறுதியும், சுயநலமும் மிகுந்தவர். விக்கு கட்சி நிர்வாகியாக இருந்தவர், மூர்க்கமான சமயக்கொள்கை அற்றவரான 'டாம் வார்ட்டன்' (Tom Wharton) ஆகும். அவர் தம்முடைய பக்கிங்காம்ஷயரை விக்குகளின் கோட்டையாக்கினர். அக்காலத்தில் அவர் ஆலோசனை கூறுவதில் வல்லவராக இருந்ததைப் போலவே, அவர்தம் குதிரைகளும் தலைசிறந்து விளங்கின. இத்தகையோரே, வால்போலுக்கு மரபுரிமையாக அளிக்கப்பெற்ற விக்கு கட்சியை இருபது ஆண்டுகளுக்கு நடத்திச்சென்றனர். ஸ்ரூஷ்பரி அவர்களில் ஒருவராக இல்லையெனினும், அவர்களோடு இருந்தார். சண்டர்லண்டு பின்னணியில் நின்ருர். அவர்கள் மூவாண்டுச் சட்டத்தையும் (Triennial Act), அரசத் துரோகச் சட்டத்தையும் நிறைவேற்றுமாறு வில்லியத்தை வற்புறுத்தினர். ஆனல், பதவியாளரைக் குறித்து வந்த மற்றொரு மசோதாவை முறியடித்து அவருக்கு மன நிறைவு உண்டாக்கினர். டோரிகளையும் யாகோபியரையும் ஒன்ருக இணைத்துக் குற்றம் சாட்டுவதற்கு அப்போது நடந்த சதிகளைத் தகுந்த முறையில் பயன்படுத்திக்கொண்டனர். அரசர் இறக்கும்போது இருந்த பாராளுமன்றம் அதன்பிறகு ஆறு மாதங்களுக்குத் தொடர்ந்து கூடவேண்டும் என்ற முக்கியமான சட்டத்தை 1696ஆம் ஆண்டு நிறைவேற்றினர்.

யாவற்றையும்விட போருக்கான முன்னேற்பாடுகளைப் பெரிய அளவிலும் தொடர்ந்தும் செய்து புகழ் தேடிக்கொண்டார். எதையும் எளிதில் புரிந்துகொள்ளும் திறனுடைய மான்டேகு காலத்திலிருந்துதான் உண்மையான பொது நிதி தோன்றியது. மற்றொரு நூற்ருண்டிற்கு நீடித்திருந்ததும், பொது நிதியின் மூலப் பகுதியுமான நிலவரி அவரிடம் இருந்து வந்ததுதான். ஒவ்வோராண்டும் வருமானத்தில் ஒரு பவுனுக்கு நான்கு ஷில்லிங் நிலவரியாக விதித்தார். அதனேடு பயன் மிகுந்த கருவியாகிய அரசாங்க உண்டியல்களையும் (Exchequer bills) வெளியிட்டார். முன்னிலை மீட்சியிலிருந்து பொது நாணயக்கடன் பிரச்சினை ஒவ்வொரு மந்திரி சபைக்கும் இருந்தது. ஆனல், ஸ்டூவர்டு அரசர்கள் பர்க்ளீ (Burghley), கிரஷாம் (Gresham) ஆகியவர்

களுடைய முறைகளை மாற்றவில்லை. அவர்கள் பொற்கொல்லர் களிடமிருந்து அதிக வட்டிக்குக் கடன் வாங்கினர்; அல்லது அரசுரிமை பதிவுபெற்ற கம்பெனிகளிடமிருந்து கட்டாயமாகக் கடனைக் கறந்தனர். ஹாலந்து, ஜினோவா, வெனிஸ் ஆகிய இடங்களில் செல்வத்தைத் திரட்ட மேற்கொண்ட வழிகளின் அடிப்படையில் பாங்கு ஒன்றை நிறுவுமாறு சீர்திருத்தக்காரர்கள் முப்பது ஆண்டுகளாகச் சிபாரிசு செய்தனர். இப்போது ஒவ்வோ ராண்டும் பல மில்லியன்களைத் திரட்டவேண்டிய கட்டாயம் ஏற் பட்டதனால், மான்டேகு சில நடவடிக்கைகளை மேற்கொண்டார். இவைகள் 1694ஆம் ஆண்டில் இங்கிலாந்து பாங்குத் தோன்று வதற்குக் காரணங்களாக அமைந்தன. ஸ்காட்லாந்தைச் சேர்ந்த பொருளாதார நிபுணரான வில்லியம் பாடர்சன் (William Paterson) என்பவருடைய ஆலோசனைப்படி 8 சதவிகித வட்டிவீதத் திற்கு 1,200,000 பவுன் கடனுக்குப் பணம் போட்டவர்களைக் கொண்ட பங்கு முதலீட்டுப் பாங்கியினை (joint-stock bank) நிறுவும் சட்டத்தை நிறைவேற்றினர். இத்தகைய தற்காலிக வரம்பிற்குட்பட்ட ஆரம்பத்திலிருந்து அந்த பாங்கு வெகுதூரம் முன்னேறிச் செல்லவேண்டி இருந்தது. 1709ஆம் ஆண்டுவரை அது தனியுரிமை அளிக்கப்படவில்லை. அதனுடைய நோட்டுகள் சட்டமுறையான செலாவணிப் (Legal Tender) பொருளாக இல்லை. அது பகைக் குழுக்களோடு போராட வேண்டியிருந்தது. டோரி செல்வந்தரின் காழ்ப்பினையும் சமாளிக்க வேண்டியிருந்தது. நகர பாங்குகள் குடியரசைச் சார்ந்தவை என்று கருதிய அவர்கள், நில பாங்கினை ஏற்படுத்த முயற்சி செய்தனர். இந்தப் பங்கு முதலீட்டு பாங்கின் வெற்றி நீதியைப் புரட்சியோடு இணைத்தது. லண்டன் நகரத்தை விக்கு கட்சியோடு இணைத்தது.

எனினும், உடனடியாக எழுந்த நெருக்கடி ஒன்று அதனை அநேகமாக அழித்தது. நம்முடைய வெள்ளி நாணய முறை குழப்பம் மிகுந்ததாக இருந்தது. பண்படாத முறையில் கையினால் செய்யப்பட்ட நாணயங்கள், துண்டுத் துணுக்குகளால் மிகுதி யாகத் தேய்ந்ததாலும் கள்ள நாணயங்கள் மலிந்து கிடந்ததாலும் நாணயங்களின் மதிப்பு நிலையற்றதாக இருந்தது. ஓரத்தில் வரியமைத்துத் திருந்திய நாணயங்களை இரண்டாம் சார்லஸின் அரசாங்கம் வெளியிட்டபோதிலும், கெட்ட நாணயங்கள் நல்ல நாணயங்களை விரட்டின. இஃது ஒருவகையில் தங்கத்தோடு ஒப்பிடும்போது வெள்ளியின் மதிப்பைக் குறைத்தது இதற்குக் காரணமாக அமைந்தது. நாணயங்கள் ஏறக்குறைய பாதி எடையினை இழந்தன என்பது சோதனைகள்மூலமாகத் தெரிய வந்தது. ஜான் லாக்கினுடைய (John Locke) உதவியையும்,

ஐஸக் நியூட்டன் (Isaac Newton) உதவியையும் பெற்று மான்டேகு 1696ஆம் ஆண்டில் உடனடியாக நாணய முறையை முழுமையாக மாற்றினர். அதனல் ஏற்பட்ட இழப்பினை அரசாங்கக் கருவூலம் ஏற்றுக்கொண்டது. ஆனல், மற்றுமோர் ஆண்டிற்கு நாணயத்தட்டு (currency shortage) இருந்தது. அதனல் உள்நாட்டு வாணிபம் பண்டமாற்று முறையைக் கையாள வேண்டியதாயிற்று. வெளி நாடுகளிலிருந்த நம்முடைய படைகளுக்குப் பணம் அனுப்புவது கடினமாயிற்று. அதே சமயத்தில் நோட்டுகளை அளவுக்குமீறி வெளியிட்டதனல் பாங்கு வீழாமல் சமாளித்தது.

நாமூர் (Namur) என்னுமிடத்தைக் கைப்பற்றியதால் எழுந்த உணர்ச்சியூக்கத்திற்கிடையே 1695ஆம் ஆண்டில் முதல் மூவாண்டுப் பாராளுமன்றம் தேர்ந்தெடுக்கப்பட்டு இருந்தாலும், விக்கு அரசாங்கம் சீர்குலையத் தொடங்கியது. அஃது அதிகாரத்தை மூர்க்கத்தனமாகத் தவருன வழியில் பயன்படுத்தியது. சமய குருமார் கூட்டத்திற்கு அனுமதியளிக்க மறுத்தது. மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றங்களில் இருந்து டோரிகளை நீக்க முயன்றது. விக்கு வாணிபக் குழு ஒன்றின் நலனுக்காகக் கிழக்கு இந்தியக் கம்பெனியை அதனுடைய உரிமைச் சீட்டை ஒப்படைத்துவிடச் செய்ய முயன்றது. மேலும், அவர்களிடையே எப்போதும் தூய்மையான விக்குகளுக்கும், ஓரளவு யாகோபிய உணர்வு கொண்ட பெருஞ்செயல் வீரர்களாகிய ஸ்ரூஷ்பரி, சண்டர்லண்டு, கொடால்ஃபின் போன்றவர்களுக்கும் இடையே பிளவு இருந்தது. இப்பிளவு யாகோபியச் சதிகாரரான சர் ஜான் ஃபென்விக் (Sir John Fenwick) என்பவரைக் கைது செய்ததை அடுத்து வந்த உணர்ச்சி வேகத்தினல் மிகுதியாக வெளிப்பட்டது. ஃபென்விக், யகோபிய வாசனைகொண்ட விக்குகள் நாடு கடத்தப்பட்ட அரச குலத் தினரோடு தொடர்புகொண்டு இருந்ததாகக் கூறினர். அதனல், ஸ்ரூஷ்பரி பீதியடைந்தார். கொடால்ஃபின் பதவியிலிருந்து விலகிக் கொண்டபோது விக்குகள் மகிழ்ச்சியடைந்தனர். சாதாரணச் சான்றுமுறைகள் தோல்வியுறவே அட்டெய்ண்டர் சட்டத்தைக் கொண்டு ஃபென்விக்கிற்கு மரணதண்டனை அளித்தனர். ஆனல், போரின் சுமையும் அதன் பின் நிகழ்வுகளும் அவர்களை இறுதியாக அழித்தது.

1689-97ஆம் ஆண்டுகளில் நிகழ்ந்த போர் நாட்டிற்கு 40 மில்லியன் பவுன் செலவு வைத்தது. சேனையினை 90,000 வீரர் களைக் கொண்டதாகப் பெருக்கியும், இழிவானதாகவும் முடிவு பெறாததாகவும் இருந்தது. 1697ஆம் ஆண்டின் நிலைக்கு ஐரோப்பாவை மீட்கவேண்டும் என்ற அதனுடைய வெளிப்

படையான நோக்கம் நிறைவேறுவதற்கான வாய்ப்பு எப்போதும் இருந்ததில்லை. ஒரு விரிந்த வட்டத்திற்குள் இருந்த நாடுகள் ஒருமுகப்படுத்தப்பெற்ற அரசுக்கு எதிராக அமைக்கப்படும் கூட்டிணைப்புக் குறைபாடோடுதான் தொடங்கமுடியும். மேலும், தீவிர வேற்றுமைகளால் பிளவுபட்டு இருந்த கூட்டிணைப்பினை ஃபிரெஞ்சுப் போர் இயந்திரம் எதிர்த்தது. ஸ்பெயினில் ஆஸ்திரிய வாரிசினை ஆதரிப்பதாக ஸ்பெயினும் ஹாலந்தும் உறுதிமொழி யளித்தன. இந்த உண்மை ஸ்பானியருக்கும், இதனால் பாதிக்கப் பட்டவரும் லியோபால்டின் மருமகனுருமான பவேரியாவின் தேர்வாளருக்கும் தெரியாமல் இருக்கவேண்டும். துருக்கியப் போரில் கவனம் செலுத்திய ஆஸ்திரியா இத்தாலியைத் தவிர வேறெதிலும் அக்கறை காட்டவில்லை. ஸ்பெயினோ எப்போதும் போல மெலிந்திருந்தது. கேடலோனியாவை (Catalonia) ஃபிரெஞ்சுப்படை ஒன்று விரைவாகக் கைப்பற்றியது. அதே சமயத்தில்வேறொரு ஃபிரெஞ்சுப்படை செவாய் நகரைக் கைப்பற்றி அதனுடைய டியூக் பிரபு பீட்மான்ட்டை (Piedmont) விட்டு நகர முடியாமல் செய்தது. ஏற்கெனவே, சைலீஷயாவைக் குறித்து, பிரஷ்யா ஆஸ்திரியாவோடு பகைமை கொண்டிருந்தது. அது ஹனோவர் தேர்வாளர் பட்டத்தைக் கோரியது. தனிப்பட்ட நலன்கள் படைத்தலைமையில் இருந்த ஒற்றுமையைக் குலைத்தன.

எனவே, பிரிட்டனும் ஹாலந்தும், ஃபிளாண்டர்ஸிலும் கடலி லும் செய்யப்போகும் காரியங்களைப்பொறுத்தே போர்பற்றிய முடிவு செய்தல் அமைந்தது. இரண்டு ஆண்டுகளுக்கு பிரிட்டனின் கவனத்தை ஐரோப்பிய முனையில் இருந்து திருப்பிய ஐரிஷ் 'துணைக்காட்சி' ஃபிரெஞ்சுக் கடற்படையினால் தோற்றுவிக்கப் பெற்றது. 1690ஆம் ஆண்டு ப்ரஸ்ட், டோலோன் (Toulon) ஆகிய இடங்களில் இருந்து வந்த கப்பல் அணிகள், ஒன்றாக இணைந்து ஆங்கிலக் கால்வாயைப் (Channel) பிடித்து வைத்துக் கொண்டன. அதனால் பீச்சி ஹெட் (Beachy Head) என்னுமிடத் திற்கருகே நேசநாடுகள் சண்டை போடவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இச் சண்டையில் பிரிட்டிஷ் தளகர்த்தரான டாரிங்டன் (Torrington) கலந்துகொண்டார். அதில் அடைந்த தோல்விக்காக அவர் அநியாயமாகப் பதவியிலிருந்து விலக்கப் பட்டார். 1692-ல் ரஸ்ஸல், லா ஹோக் (La Hogue) என்னு மிடத்தில் பெற்ற வெற்றியினால் ஃபிரெஞ்சுப் படையெடுப்பின் அச்சம் நீங்கியது. அப்போது ஆறு நாட்களாக நடந்த சண்டையில் அவர் பதினைந்து ஃபிரெஞ்சுக் கப்பல்களை அழித்தார். 1694ஆம் ஆண்டில் ஆங்கிலக் கடற்படை மத்தியதரைக் கடலுக்கு அனுப்பப்பெற்றது. அதன்விளைவாக செவாய் நகரத்திற்கு

ஊக்கம் பிறந்தது. பார்சிலோனு (Barcelona) தற்காலிகமாகக் காப்பாற்றப்பட்டது. ஃபிரெஞ்சுத் தனிமனிதர் போர்க்கப்பல்கள் பெருத்த சேதத்தினை விளைவித்தாலும், நாம் அவர்களுடைய நாட்டுப் போர்க்கப்பல்களைத் துறைமுகங்களில் தஞ்சம் புகுமாறு செய்தோம். இருந்தபோதிலும் இந்தக் கடலாதிக்கம் முழுமையானதன்று. ஏனென்ருல், நடுநிலைமை நாடுகளின் எதிர்ப்பினுலும், அதைவிட ஃபிரெஞ்சுக்காரருடன் தாங்கள் கொண்ட வாணிபத் தொடர்பினை அனுப்புதற்கான முயற்சிகளை முறியடிக்க டச்சுக்காரர்கள் எழுப்பிய தடைகளினுலும் ஃபிரான்சின்மீது வாணிபத் தடை விதிக்கும் நமது முயற்சி முறிந்தது, விக்கு, டோரி பூசல்களினுல் கடற்படையும் மெலிந்திருந்தது. அது சரியான முறையில் அமையாமலும் மோசமான நிதி நிலைமையோடும் காணப்பெற்றது.

நிலத்தில் தேர்ச்சிபெற்ற துருப்புகள், லக்ஸம்பர்க் (Luxemburg) என்னும் தலைசிறந்த படைத்தலைவர், போர்முறைத் திறம் வாய்ந்த நிலை ஆகிய நற்கூறுகளைக்கொண்டு பகைவர் போரினைத் தொடங்கினர். இந்த நிலை முப்பது ஆண்டுகளாகப்பெற்ற வெற்றிகளின் பயனுகும். ஷெல்ட் (Scheldt), சாம்பர் (Sambre) மியூஸ் (Meuse) ஆகிய ஆறுகளின் மேல்புறத்தைக் கட்டுப்படுத்தியதும், தாழ் நாடுகளை (Low Countries) எளிதாகத் தாக்குவதற்கு வழி வகுப்பதுமான மெனின் (Menin) என்னுமிடத்திலிருந்து, டினுண்ட் (Dinant) என்னும் இடம் வரையில் வரிசையாக இருந்த கோட்டைகளை அடிப்படையாகக்கொண்டிருந்தது. அந் நிலையில் மதில் சூழ்ந்த நகரங்களும், மரக் காடுகளும், அருவிகளும் நிறைந்த அந்தச் சிறப்புவாய்ந்த அரங்கில் திறமையான பாதுகாப்பு முறை ஒன்றே வெற்றி தேடித்தரும். வில்லியத்தையும் அவருடைய டச்சுப் படைத்தலைவர்களையும்விட லக்ஸம்பர்க் இவ்வாறு பாதுகாப்பு அளிப்பதில் மிகச்சிறந்து விளங்கினுர். இப் போரில் 1691 ஆம் ஆண்டுக்குப் பிறகு மார்ல்பரோ பயன்படுத்தப்பெறவில்லை. அந்த ஆண்டில் மான்ஸ் (Mons) என்னுமிடத்தை ஃபிரெஞ்சுக்காரர் கைப்பற்றினர். 1692-ல் நாமூரும் வீழ்ந்தது. காலங்கடந்து வந்ததனுல் வில்லியத்தால் அத்தனைக் காக்க முடியவில்லை. அதன் பிறகு பிரஸ்ஸல்ஸை நோக்கிச்சென்ற அவர், ஸ்டீன்கிர்க் (Steenkirk) என்னுமிடத்தில் முடியடிக்கப்பெற்ருர். இவ்விடத்தில்தான் டச்சுக்காரரான சோம்ஸ் (Solms) மாருத வெறுப்பைப் பெற்ருர். உதவியேதும் இல்லாத நிலையில் பிரிட்டிஷ் தரைப்படை பெருத்த சேதத்தை அடையுமாறு விட்டுச்சென்ருர். அதில் ஏறக்குறைய 7000 பேர் மடிந்தனர். 1693 ஆம் ஆண்டும் அதேபோன்று இடர் மிகுந்து இருந்தது. வில்லியம் தமது படையின் பகுதிகள் சில

வற்றைப் பிரித்து வேறு இடத்திற்கு அனுப்பவேண்டியதாயிற்று. அதனுல், எண்ணிக்கை குறைந்த நிலையில் இருந்த அவர், தவருகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடமாகிய லேண்டனில் பகைவரோடு மோத வேண்டி நேரிட்டது. அதனுல் அவ்விடத்தில் மேலும் 12,000 படை வீரரை வில்லியம் பறிகொடுத்தார். மியூஸ் ஆற்றங்கரையில் இருந்த ஹூய் (Huy) என்னுமிடமும், சார்லிராயும் (Charleroi) சாம்பர் ஆற்றுமுனையும் பறிபோயின.

1694ஆம் ஆண்டில் நேசநாட்டுப் படையின் எண்ணிக்கை கூடுதலாகவே, நிலைமையில் மாற்றம் தோன்றியது. 1695-ல் லக்ஸம்பர்க் இறந்ததனுலும், நாமூரில் தமது ஒரே வெற்றியை வில்லியம் அடைந்ததாலும் நிலைமை மேலும் திருந்தியது. எனினும், போர் முழுவதையும் வைத்துப் பார்க்கும்போது இச் சமயம் இங்கி லாந்திற்குத் தோல்வி என்றுதான் கூறவேண்டும். போப்போடு சொண்டிருந்த வேற்றுமைகளை லூயி கைவிட்டார். அவருக்குக் கத்தோலிக்கருடைய ஆதரவு பெருகியது. அவர் தாராளமான உரிமைக் கட்டுப்பாடுகள்மூலமாக செவாயைத் தனியாகப் பிரித் தார். இத்தாலியப் போர்முனையில் இரு ஹாப்ஸ்பர்க் நாடுகளும் நடுநிலைமை வகிக்க ஒப்புக்கொண்டன. நிதி நெருக்கடி காரண மாக மத்தியதரைக் கடலில் இருந்த பிரிட்டிஷ் கடற்படை திரும்ப அழைக்கப்பட்டது. அதே சமயத்தில் டச்சுக்காரர், தங்களுக்குப் பாதுகாப்புக் கிடைத்துவிடுமானுல் ஸ்பெயினுக்காகவோ, ஆஸ்திரி யாவிற்காகவோ மேலும் போரிடமாட்டார்கள். எப்போதையும் போல ஸ்பானிய வாரிசுரிமையில் கண் வைத்திருந்த லூயி, பார்சி லோனுவைக் கைப்பற்றியதன்மூலமாக ஸ்பெயினைச் சமாதானத்தை நாடுமாறு செய்தார். அவருடைய அரசியல் செயலாண்மைத்திற வெல்திறம், 1697ஆம் ஆண்டில் பிளவுபட்ட கூட்டாளிகளைச் சமாதானம் செய்துகொள்ளத் தூண்டுவதாக இருந்தது.

இப்போது போர்ட்லண்டின் ஏர்ல் பிரபுவாக இருக்கும் பென் டிக்குக்கும், மார்ஷல் ப.:ப்ளர்ஸ் (Marshal Boufflers) என்ற .:பிரெஞ்சுக்காரருக்கும் இடையே உடன்பாடு ஏற்படும் வரையில், ரிஸ்விக் (Ryswick) உடன்படிக்கையின் உரிமைக் கட்டுப்பாடுகள், காபினெட்டிடமிருந்தும் பல நேச நாடுகளிடமிருந்தும் மறைத்து வைக்கப்பட்டன. அதனுல், பிரிட்டனின் அண்மைக்கால நோக் கங்கள் நிறைவேறின. எனினும், அவைகள் அண்மைக்காலச் சமாதானத்திற்காக எதிர்காலத்தை பலியிட்டனர் என்று குறை கூறுவதில் ஓரளவு நியாயம் இருக்கின்றது. கேடலோனியாவைத் தவிர, லக்ஸம்பர்க் நகரையும், 1678ஆம் ஆண்டிலிருந்து நெதர் லாந்தில் கைப்பற்றிய இடங்களையும், லூயி, ஸ்பெயினுக்கு அளித்

தார். அவர் ஹாலந்தோடு சமாதானம் செய்துகொண்டார். அதன்படி ஹெர்ரிங் (herring) என்னும் மீன்களையும் உப்பையும் ஃபிரான்சுக்குக் கொண்டுசெல்ல அனுமதி வழங்கப்பெற்றது. மேலும், பெல்ஜிய எல்லையில் உள்ள 'தடுப்புக்' (barrier) கோட்டைகள் சிலவற்றைக் காவல்படை வைத்துக்காக்கும் உரிமையும் அளிக்கப்பெற்றது. அவர் வில்லியத்தை இங்கிலாந்தின் அரசர் என ஒப்புக்கொண்டார். வில்லியத்தின் பகைவருக்கு உதவி அளிப்பதில்லையென்று வாக்குறுதியும் அளித்தார். பரப்பில் குறைந்திருந்தாலும் லோரைன் (Loraine) அதனுடைய கோமகனுருக்கே திரும்ப அளிக்கப்பட்டது. ஆஸ்திரியர் சிலர் ரைன் ஆற்றுப் பகுதியில் இருந்த கோட்டைகளை மீட்டனர். ஆனால், அவர்களுடைய ஆத்திரத்தைக் கிளரும் வகையில் ஸ்ட்ராஸ்பர்க்கை (Strasbourg) ஃபிரான்சே வைத்துக்கொள்ள அனுமதிக்குமாறு நேச நாடுகள் வற்புறுத்தின. இங்ஙனம் சமாதானம் செய்துகொள்வதிலும், குறிப்பாக ஸ்பெயினிடம் தாராளமாக நடந்துகொண்டலூயி நேச நாடுகளை மேலும் பிரித்தார்.

1697ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் சமாதான உடன்படிக்கை கையெழுத்தானதும் பிரிட்டிஷ் மக்கள் போரினை ஆவலோடு பின்னணியில் தள்ளினர். சிவப்புச் சட்டையினருக்கும் அந்நியருக்கும் எதிராகத் துண்டுப் பிரசாரங்கள் வெளிவந்த வெறுப்பான சூழ்நிலையில், அரசருடைய எச்சரிக்கையைப் பொருட்படுத்தாத காமன்ஸ் சபையினர் அரசர் கட்சிக்கு எதிராக நாட்டுக் கட்சி கொண்டிருக்கும் திட்டத்திற்கு ஆதரவளித்தனர். அவர்களுடைய சீற்றத்தைக் கண்டுதான், பயந்த சுபாவமுள்ள சண்டர்லண்டு ஓய்வு எடுத்துக்கொண்டார். சமாதான காலத்தில் படைகள் வைத்திருப்பது உரிமைகள் மசோதாவிற்கு முரண்பட்டதாகும் என்று காமன்ஸ் சபையினர் வாதாடினர். ஆங்கில மரபினை மனதிற்கொண்டு, சேனையின் சம்பளத்தில் 2 மில்லியன் பவுன் நிலுவை இருந்ததையும் உணர்ந்து, ஐரிஷ் நிர்வாகத்திற்காக மானியம் வழங்குவதோடு இங்கிலாந்தில் 10,000 படையினருக்காக மானியம் வழங்குவதில் தவறில்லை என எண்ணினர். அவர்கள் 10,000 மாலுமிகளுக்கு அளித்த மானியமும், வில்லியத்திற்கு வாழ்நாள் முழுவதிலும் சிவில் அலுவலர் பட்டியலுக்காக அளித்த 7,00,000 பவுனும் காமன்ஸ சபையினரின் கஞ்சத்தனத்தைக் காட்டுவதாக இல்லை.

1698ஆம் ஆண்டு தேர்தலுக்குப் பிறகு இத்தகைய எதிர்வினை உச்சநிலையை அடைந்தது. ஸ்ரூஷ்பரி ராஜினமா செய்துவிட்டார். மான்டேகு தமக்காக வருமானம் மிகுதியாக வரக்கூடிய பதவிகளை

உண்டாக்கினர். அரசரோ ஆண்டில் பாதியை ஹாலந்திலேயே கழித்தார். இங்கிலாந்தில் 15,000 படைவீரரை வைத்துக் கொண்டதன்மூலம் பாராளுமன்றத்தை எதிர்த்தார். டேரியனில் (Darien) குடியேற்றம் அமைக்க இருந்த ஸ்காட்டிஷ் திட்டங்களினல் லண்டன் நகரம் ஆத்திரமடைந்தது. ஏனெனில், அவை கிழக் கிந்தியக் கம்பெனிக்குப் போட்டியாக இருக்குமென்று பயந்தனர். மேலும், அதனல் டச்சுப்போர் நிகழும் என்ற எண்ணமும் இருந்தது. அரசரும் சண்டர்லண்டும் பகைத்த, மதிப்பிழந்த மந்திரி சபைக்கு எதிராக மேலிருந்துவரும் இயக்கம் ஏதும் இல்லாத நிலையில், காமன்ஸ் சபை ஒரு புதிய கட்சிக்குழுவைப் பின்பற்றி ஒழுகியது. அக் குழு இரண்டு பிரிவுகளைக் கொண்டிருந்தது. பழைய பாணி கொண்ட டோரி செல்வந்தர்களான முஸ்கிரேவ்களும் (Musgraves), கோவர்களும் (Gowers), பாகிங்டன்களும் (Pakingtons) ஒரு பிரி வில் இருந்தனர். அவர்கள் டச்சுக்காரரைச் சார்ந்தவற்றையும் புறச் சமயத்தவரைச் சார்ந்தவற்றையும் புதியன யாவற்றையும் வெறுத்து எதிர்த்தனர். மற்ருெரு பிரிவு தங்களைச் சில சமயங் களில் ‘புது நாட்டுக் கட்சி’ (new Country party) என்றும், சில சமயங்களில் ‘பழைய விக்குகள்’ (old Whigs) என்றும் அழைத்துக் கொண்ட கூட்டமாகும். இரண்டாவது குழுவின் முதல் தலைவராக விளங்கியவர் மாங்க்கின் மைத்துனரான தாமஸ் கிளார்கஸ் (Thomas Clarges) என்பவரே. அவர் இறந்ததும் இளைஞரான பால் ஃபோலேயும் (PaulFoley), அதன் பிறகு ராபர்ட் ஹார்லியும் (Robert Harley) தலைவர்களாக வந்தனர். இருவரும் பியூரிட்டன் சமயத் தவர். விரைவாக முன்னேறி, விக்குகளாக மாறி, புகழ்பெற்ற புரட்சியில் பங்கு பெற்றவர்கள். ஆனல், பழைய ‘நாட்டுக் கட்சி’ கருத்து அடிப்படையில், ஜன்டோவிடமிருந்து பிரிந்து நின்றனர். மூவாண்டுச் சட்டத்தையும் பதவியாளர் மசோதாக்களையும் ஆதரித்தனர். நிலைப்படையையும் அரசரதிகாரத்தையும் எதிர்த் தனர். இதுவரையில் பதவிகளை அளித்து அவர்களது எதிர்ப் பினைத் தவிர்க்க எழுந்த முயற்சிகள் தோல்வியுற்றன. அவர் களுடைய கடிதங்கள் ‘வெளிநாட்டு நலம்’ நாட்டைச் சூரையாடியது என்று கூறின. மேலும், அரசியல் சட்டத்தை அரசர் மீறுவதாகக் கண்டித்தன.

1698–9ஆம் ஆண்டு பாராளுமன்றக் கூட்டத் தொடரில் ஹார்லி, தம்முடைய கட்சியினரை வெற்றிப்பாதையில் அழைத்துச் சென்ருர். ஆங்கிலப் படைகள் 7,000 ஆகக் குறைக்கப்படுதல் வேண்டுமென்றும், அவர்கள் அனைவரும் இங்கிலாந்தில் பிறந்தவர் களாக (அயர்லாந்திற்காக இருந்த 12,000 தவிர) இருக்கவேண்டு மென்றும் தீர்மானங்களை நிறைவேற்றினர். தம்முடைய டச்சுக்

காவற்படையை வைத்துக்கொள்ள வேண்டுமென்ற வில்லியத்தின் கோரிக்கையைக்கூட அவர் கட்சியினர் நிராகரித்தனர். இதனால், வில்லியம் முடிதுறப்பதாகச் சூளுரை விடும் நிலைக்கு வந்தார். மேலும், ஐரிஷ் நிலங்களை வில்லியம் மானியமாக வழங்கியதைக் குறித்து விசாரணையைத் தொடங்கினர். இவ்விடத்தில் வில்லியத்தின் வழக்கு வலியிழந்து இருந்தது. புரட்சிக்காரரிடமிருந்து பறிமுதல் செய்யப்பெற்ற நிலங்களைப் பாராளுமன்றத்தோடு இணைத்து ஒழுங்குபடுத்துவதாக இருந்த ஒப்பந்தத்திற்கு மாறாகப் பெரும் நிலங்களைத் தம்முடைய நாட்டைச்சார்ந்த ஊழியர்களான போர்ட்லண்டு, கெப்பல், ருவிக்னி (Ruvigny) ஆகியோருக்கும் தமது காமக்கிழத்தியாகிய ஆர்க்னே சீமாட்டியாருக்கும் பகிர்ந்தளித்தார். 1699–1700 ஆம் ஆண்டுகளில் தீவிரமான வாக்குவாதங்கள் நடைபெற்றன. அதன் பிறகு காமன்ஸ் சபையினர், தங்கள் வாக்குகளைப் பண மசோதாவோடு இணைத்து, அயர்லாந்தில் உள்ள அரசின் சொத்துக்களைப் பொதுப் பொறுப்பாளர் கையில் ஒப்படைக்குமாறு வற்புறுத்தினர். மேலும், அந்நியரைப் பிரிவி கவுன்சிலில் இருந்து நீக்கவும் உறுதி பூண்டனர். இதற்கிடையில் கெட்டவழியில் பெயர்பெற்ற காப்டன் கிட் (Captain Kidd) என்பவனின் நலனுக்காக எழுந்த ஒரு செயலாட்சிக் கழகத்தினை அமைக்க சாமர்ஸும், ஆர்ஃபோர்டும் உதவினர்கள் என்றும், அவன் கடற்கொள்ளைக்காரர்களை அழிக்கும் அதிகாரம் அளிக்கப்பட்டான் என்றும், கொள்ளைப்பொருளில் அவர்களுக்கு ஒரு பங்கு உண்டு என்றும் தெரியவந்தது. அவர்களின் துரதிருஷ்டத்தைப் போன்று கிட் கொள்ளைக்காரனாக மாறினான்.

1700 ஆம் ஆண்டில் ஜன்டோ முழுதும் விழும் வரையில் வில்லியம் படிப்படியாக விட்டுக்கொடுத்தார். ஆனால், பாராளுமன்றத்தின் அமைதி மிகவும் தாமதித்து வந்தது எனலாம். மார்ல்பரோ காபினெட்டில் சேர்ந்தார். அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் கொடால்ஃபின் கருவூலத்திற்குத் திரும்பினார். ரோசெஸ்டரும் பதவியேற்றார். அதைப்போலவே ஒருமுறை பாராளுமன்றம் கலைக்கப்பெற்ற பிறகு, ஹார்லி சபாநாயகராக வந்தார். இத்தகைய புதிய அமைப்போடு ஆன் அரசியாரின் ஆட்சி பயனுறுதி உடையதாகத் தொடங்கியது.

ஓர் அரசாங்கத்திற்கு இருக்கக்கூடிய மிகக் கடினமான பிரச்சினைகளை—ஆங்கில வாரிசுரிமையும் ஐரோப்பியச் சமாதானமும்—புதிய அமைச்சர்கள் சமாளிக்கவேண்டி இருந்தது. முந்தைய ஆண்டுகள் ஆத்திரமூட்டியவையாக இருந்தபோதிலும், இரண்டு பிரச்சினைகளிலும் குறிப்பிடத்தக்க நாட்டு ஒற்றுமையை ஏற்படுத்

தினர். ஆன் இளவரசியாருக்குப் பிறந்த பதினெட்டுக் குழந்தை-களில் இறுதியாக உயிர் வாழ்ந்த பதினொரு வயதுடைய கிளௌசெஸ்டர் கோமகனும் 1700 ஆம் ஆண்டு ஜூலை மாதம் இறந்தான். எனினும், 1689 ஆம் ஆண்டு பாராளுமன்றம் ஆனுடைய குழந்தைகளுக்கப்பால் வாரிசினைத் தேட மறுத்தது. ஒரு சமயம் இரண்டாம் சார்லஸின் சகோதரியான ஹென்ரீட்டாவின் வழித் தோன்றல்களான செவாய் கோமகனரின் குழந்தைகளைப்பற்றி வில்லியம் எண்ணினர். ஆனல், அக் கோமகன் நேசநாடுகளைக் கைவிட்ட போது வில்லியத்தின் இத் திட்டமும் கைவிடப்பெற்றது. அதே சமயத்தில் இரண்டாம் ஜேம்ஸ் வாழ்ந்த காலத்தில் அவருடைய மகனைப் பிராட்டஸ்டெண்ட் வாரிசாகக் கொண்டுவரும் திட்டம் வாதத்திற்குவந்தபோதிலும் அதனை யாரும் தொடர்ந்துசெயலாற்ற முற்படவில்லை. எனவே, பத்து ஆண்டுகளுக்கு முன்னரே குறிப்பிடப்பெற்ற மற்றொரு தீர்வுக்கு எல்லாக் கட்சியாளரும் திரும்ப வந்தனர். அதன்படி ஆன் அரசியரின் சந்ததியாருக்குப் பின் முதலாம் ஜேம்ஸின் பேர்த்தியும், பொஹிமிய நாட்டு எலிஸபெத்தின் மகளும், ஹனோவரின் தேர்வாளருமான சோபியா (Sophia) விற்கு வாரிசுரிமை செல்லவேண்டும். பிராட்டஸ்டெண்ட் அரச மரபினருக்கு அளிக்கவேண்டிய உறுதிப்பாடு 1701 ஆம் ஆண்டு அரசியல் நிர்ணயச் சட்டத்தின் முதற்பகுதியாக இருந்தது. ஆனல், 'நாட்டுக் கட்சியினரின்' கண்டனங்களின் சாரத்தை உள்ளடக்கிய வாசகங்களையும் எதிர்ப்பு ஏதும் இன்றிப் புதிய அமைச்சர்கள் நிறைவேற்றினர். அவைகளின்படி வருங்கால அரசர் இங்கிலாந்துத் திருச்சபைத் தொழுகைக் கூட்டத்தில்தான் சேரவேண்டும். தலத்தில் பிறக்காத எந்த அரசரும் வெளிநாட்டுப் பகுதிகளைக் காப்பதற்காக இங்கிலாந்தைப் போர்களில் ஈடுபடுத்தக்கூடாது. பாராளுமன்றத்தின் அனுமதியின்றி நாட்டை விட்டுச் செல்லுதல் கூடாது. ஹனோவர் பட்டத்திற்கு வந்த பிறகு, அந்நியர் எவரும் குடிமைப்பேறு (Naturalized) அடைந்தவராயினும் பிரிவி கவுன்சிலராகவோ, பாராளுமன்றத்தின் இரு சபைகளின் உறுப்பினராகவோ இருக்க முடியாது. பதவியில் இருப்பவரும் அரசரிடமிருந்து உதவிப் பணம் பெறுபவரும் காமன்ஸ் சபையில் உறுப்பினராக இருக்க முடியாது. முறையாகத் தெரிந்துகொள்ளக்கூடிய செய்திகள் யாவும் பிரிவி கவுன்சிலில் விவாதிக்கப்பெறுதல் வேண்டும். அதனுடைய தீர்மானங்கள் இசைவு தரும் கவுன்சிலர்களால் கையெழுத்திடப்பெறுதல் வேண்டும். பாராளுமன்றத்தின் இரு சபைகளும் சேர்ந்து மனுச் செய்துகொண்டாலன்றி நீதிபதிகளைப் பதவியிலிருந்து விலக்க முடியாது. அரசர் தமது இறுதி மன்னிப்பு வழங்கும் அதிகாரத்தால் அரசியல் துரோகக் குற்ற விசாரணையைத் தடை

செய்தல் கூடாது. ஹார்லியின் வார்த்தைகளில் 'அத்தகையதே இங்கிலாந்தின் பழைய அரசாங்கம்'. அதனை ரகசியக் காபினெட்டுகளை நீக்கி, இறைமையுற்ற காமன்ஸ் சபையினால் வரம்பிடப் பெற்று, பதவியாளரிடமிருந்து விடுதலையடைந்து, பதவிக்காலப் பாதுகாப்புப்பெற்ற நீதிபதிகளால் விளக்கிப் பொருள் கூறப்பட்ட சட்டத்திற்குக் கட்டுப்பட்டு இருந்த நிர்வாகம் என 'நாட்டுக் கட்சி' கண்டது. இங்கே வில்லியத்தின் வெளிநாட்டு நலன்களின்மீதும், அவருடைய தான்தோன்றித்தனமான முறைகளின்மீதும் கண்டன வாக்கு எழுந்தது. அந்நிய அரசர் எவரையும் மறுபடியும் காமன்ஸ் சபையில் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்பதற்கான எச்சரிக்கையும் காணப்பெற்றது.

இங்ஙனம் சிறப்பு மிக்க அரசியல் நிர்ணயச் சட்டம் அமைதியாக நிறைவேற்றப்பட்ட அதே சமயத்தில், ஸ்பானிய அரசர் இறந்ததும் அவருடைய நாட்டைப் பங்குபோட்டுக் கொள்ளவேண்டி ஃபிரெஞ்சுக்காரரோடு இரண்டு உடன்படிக்கைகளை வில்லியம் அடுத்தடுத்துச் செய்துகொண்டார் என்பதும் வெளியாகியது. போர்ட்லண்டும் டச்சு அமைச்சரான ஹின்சியஸும் (Heinsius) முதல் உடன்படிக்கையைப் பேசிமுடித்தனர். சாமர்ஸ், வெத்து ஆணையில் அரசமுத்திரையைப் பதித்தார். இரண்டாவது உடன்படிக்கையினைப் போர்ட்லண்டும் ஜெர்ஸியும் (Jersey) பேசிமுடித்தனர். ஆனால், இவற்றில் ஒன்றுகூடப் பாராளுமன்ற விவாதத்திற்கு வரவில்லை. வேகம் மிகுந்த தேர்தலில் வெற்றியடைந்த டோரி பெரும்பான்மையினர் தங்களது தலைவர்களுடைய சொல்லை மீறி சாமர்ஸ், போர்ட்லண்ட், ஆர்ஃபோர்ட், மான்டேகு ஆகியோர்மீது துரோகக் குற்ற விசாரணை கொண்டு வந்தனர். இருந்தபோதிலும் பிரபுக்கள் சபையில் வலிமை பெற்று விளங்கிய விக்குகளோடு அவர்கள் போட்டியிடவேண்டியிருந்தது. அவர்கள் தங்களுடைய எதிரிகளை அழிக்க இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டனர். அதே சமயத்தில் உண்மை நிலையின் உணர்வு காரணமாக, மார்ல்பரோ, கொடால்ஃபின், ஹார்லி ஆகியோருடைய ஒருமித்த தலைமையில் வெளிநாட்டுக் கொள்கையில் வில்லியத்தோடு ஒப்பந்தம் செய்துகொண்டனர்.

அதுபோது ஃபிரான்சு களைப்புற்றிருந்தது. லூயி அறுபது வயதை எட்டினார். இங்கிலாந்தின் கவனம் உள்நோக்கி இருந்தது. வில்லியமோ தம்முடைய ஆட்டமெல்லாம் தீர்ந்தது என எண்ணி எல்லையில்லாச் சோர்வடைந்திருந்தார். எனினும், சிறிது சிறிதாகச் சிதைந்து, சாகாமல் செத்துக்கொண்டிருந்த இரண்டாம் சார்லஸ் இறப்பதற்குள், ஸ்பானிய வாரிசுரிமை அமைதியாகத் தீர்க்கப்பட

வில்லையென்றால் போர் வருவது திண்ணம். அப் போருடன் சற்று முன்புதான் ஓய்ந்த போரினை ஒப்பிட்டால் இது குழந்தை விளை யாட்டைப் போன்றதாகும்.

1668ஆம் ஆண்டு லூயியும், பேரரசர் லியோபால்டும் ஸ்பெயின் நாட்டைத் துண்டாடுவதைக் குறித்து ரகசிய ஒப்பந்தம் செய்துகொண்டதில் இருந்து, எல்லா வெளிநாட்டுத் தொடர்பு அலுவலகங்களிலும் ஸ்பானிய வாரிசுரிமைபற்றிய பத்திரங்கள் குவிந்திருந்தன. ஆயினும், அடிப்படை உண்மைகள் ஒன்றாகவே இருந்தன. இரண்டாம் சார்லஸுக்குக் குழந்தை இல்லாததனால் வாரிசுரிமை அவருடைய சகோதரிகளின் குழந்தை களுக்குச் சென்றது. ஆனால், மூத்த சகோதரியும் லூயியின் ராணியுமான மரியா தெரேசா (Maria Theresa) தம்முடைய உரிமையை முறையாகக் கைவிட்டார். ஆரம்பத்திலேயே இதை மறுப்பதற்காக ஃபிரெஞ்சுக்காரர் பல பொய்க்காரணங்களைக் கற் பித்தனர் என்பது உண்மையே. இரண்டாவது சகோதரி லியோ பால்டின் ராணியான மார்கரெட் (Margaret) என்பவராவார். அவர் தம்முடைய உரிமையைக் கைவிடாததனால், அவர் இறந்த போது அவ்வுரிமை பவேரியாவின் தேர்வாளரை மணந்து இருந்த அன்னாரது மகளுக்குச் சென்றது. இங்ஙனம் அவருடைய குழந்தை யாகிய தேர்வாள இளவரசருக்குச் சென்றது. லியோபால்டு, தம்முடைய இரண்டாவது திருமணத்தில் தோன்றிய மகனாகிய ஆர்ச்டியூக் சார்லசுக்கு வாரிசுரிமை கிடைக்கும் என்ற நம் பிக்கையில் தம்முடைய மகளைத் தனிப்பட்ட முறையில் உரிமையைக் கைவிடுமாறு செய்தார். ஆனால், இதற்கு ஸ்பெயினோ, பவேரி யாவோ சம்மதிக்கவில்லை. எனவே, இப் பிரச்சினையின் பரந்த உரிமைகள், ஃபிரான்சும் ஆஸ்திரியாவும் போரிடாமல் முழு மர புரிமை பெறுவதை விட்டுக்கொடுக்கமாட்டா என்னும் பரந்த அரசியல் உண்மையை ஒத்து இருந்தன.

இப்படியாக 1698ஆம் ஆண்டில் முதல் பங்கீட்டு உடன் படிக்கை ஏற்பட்டது. அதன்படி ஸ்பெயின், அதனுடைய குடியேற்ற நாடுகள், நெதர்லாந்து ஆகியவை பவேரிய இளவரசருக் கென்றும் ; நேபிள்ஸ், சிசிலி, டஸ்கன் துறைமுகங்களில் (Tuscan ports) சில, பிஸ்கே வளைகுடாவில் கைபுஸ்கோ (Guipuscoa) மாகாணம் முதலானவை ஃபிரான்சுக்கென்றும்; மிலான் ஆஸ்திரிய ஆர்ச்டியூக்கிற்கென்றும் முடிவு செய்யப்பெற்றது. இதைத் தொடர்ந்து பவேரிய இளவரசர் ஸ்பானியரால் தத்து (adoption) எடுத்துக்கொள்ளப்பட்டதால் ஸ்பெயின் முழுமைக்கும் உரிய வரானார். பிரிட்டனும் ஃபிரான்சும் ஒன்றாக இருந்திருந்தால்

இத்தாலியில் ஃபிரான்சுக்கும் ஆஸ்திரியாவிற்கும் இடையே ஏற்படும் தலச் சண்டையைத் தவிர வேறெந்தக் கெடுதலும் இல்லாமல் சமாளித்திருக்கலாம். ஆனால், 1669ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் பவேரியா இளவரசர் இறந்துபோனார்.

அதிலிருந்து ஒரு பெரும் போரைத் தடுக்கும் வாய்ப்பு மிகுதியாகக் குறைந்துவிட்டது. மற்றவர்கள் ஸ்பானியப் பேரரசைப் பங்கிடத் துணிந்ததைக் கண்டு கோபமடைந்த காஸ்டிலியர்கள் (Castilian) செருக்குக் காரணமாகப் பேரரசு முழுவதும் ஹாப்ஸ் பர்கினரின் கீழ் ஒன்றாக இணைந்துவிடும் என்று நம்பினர். கார்லோவிட்ஸ் (Carlowitz) உடன்படிக்கை, துருக்கியப் போரை வெற்றிகரமாக முடித்துவைத்தது, பேரரசரின் நம்பிக்கையை வளர்த்தது. ஆயின், கடலாதிக்கம் பெற்றநாடுகளை ஆஸ்திரியா பகைத்து இருந்ததாலும், பிரிட்டிஷ் படை கலைக்கப்பட்டு விட்டதைப்போல் இருந்ததாலும், லூயியின் நிலை உறுதியாக இருந்தது. அவருடைய குறிக்கோள் மிதமாக இருந்தபோதிலும் உறுதியோடு நின்றது. ஸ்பெயின், மேற்கிந்தியத் தீவுகள், நெதர்லாந்து ஆகியவற்றை ஆர்ச்டியூக் அடைவதற்கு லூயி ஒப்புக்கொண்டார். முதல் பங்கீட்டு உடன்படிக்கையின்படி கிடைக்கும் இடங்களோடு மிலானும் ஃபிரான்சுக்குக் கிடைக்க வேண்டும். எனினும், ஃபிரான்ஸ் இப் பகுதியைக் கொடுத்து லோரைனைப் பெற விருப்போடு இருந்தது. இங்ஙனம் வில்லியத்துடன் ஏற்பட்ட இரண்டாவது உடன்படிக்கை 1700ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் கையெழுத்தாகியது.

இத்தாலியில் ஒன்றையும் விட்டுக்கொடுக்க ஆஸ்திரியர் மறுத்தபோதிலும் போரின் இறுதிக் காரணம் ஸ்பெயினிலிருந்தே வந்தது. இரண்டாம் சார்லஸ் பங்கீட்டு வழியை ஏற்க மறுத்தார். ஃபிரான்சின் இராணுவ ஆயத்தத்தினால் கவரப்பெற்றார். போப் பாண்டவர், சமய குருமார்கள், ஒருசில கவுன்சிலர்கள் ஆகியவர்களின் செல்வாக்குக் காரணமாகவும், பொதுமக்கள் கிளர்ச்சி செய்ததினாலும், சார்லஸ், உயிலின் (will) மூலமாக ஸ்பெயின் பேரரசு முழுவதையும் லூயியின் பேரனை ஃபிலிப்பிற்கே (Philip) எழுதிவைத்தார். அப்படியே இந்த ஏற்பாட்டை ஏற்க ஃபிலிப் மறுத்தால், தமது நாடுகள் அனைத்தும் ஆர்ச்டியூக்கிற்கே அளிக்கப்பெற வேண்டுமென்ற நிபந்தனையும் விதித்தார். அவர் உயில் எழுதி ஒரு மாதம் கழித்து நவம்பரில் இறந்தார். பதினான்காம் லூயி உயிலை ஏற்றுக்கொண்டார். இதனால், எப்படியும் ஆஸ்திரியாவுடன் போர் ஏற்படுவது திண்ணமாகியது. ஆனால், உயிலின் உள் உணர்வுப்படி நடந்து, தம்முடைய பேரனை உரிமைபெற்ற

அரசராக ஆள லூயி அனுமதித்திருந்தால், பிரிட்டனும் ஹாலந்தும் அவருக்கு எதிராகப் போரில் இறங்கி இருக்கும் என்பதே ஐயத்திற்குரிய செய்தியாகும். லூயியினுடைய செயல்திறமை நிலை வீறுகொண்டதாக இருந்தது. மேலும், அவர் திருமணத்தின் மூலமாக செவாயின் ஆதரவு, புதிய ஸ்பானிய அரசருக்குக் கிடைக்குமாறு செய்தார். ஸ்பானிய நெதர்லாந்தின் கவர்னரும், தம்முடைய மாமனாராகிய லியோபால்டைப் பகைத்துக்கொண்ட வருமான பவேரியாவின் தேர்வாளர் இப்போது ஃபிரான்சுக்கு நண்பரானார். அதனோடு கோலோன் (Cologne), லீஜ் (Liege) ஆகிய நகரங்களின் ஆர்ச்பிஷப்பாக இருந்த அவருடைய சகோதரரின் ஆதரவு கிடைத்தது. ஆனால், சில டச்சுக்காரரும் பிரிட்டானியரில் பெரும்பாலோரும் பங்கீட்டைக்காட்டிலும் உயிலை வரவேற்றனர். ஃபிரெஞ்சுக் கடற்படையும், காப்பு வரிகளும், மத்தியதரைக் கடலைப் பிறருக்குப் பயன்படாத நிலையை ஏற்படுத்தக்கூடிய வகையில் இத்தாலி முழுவதையும் ஃபிரான்சின் கையில் ஒப்படைப்பதைவிட, ஒரு ஃபிரெஞ்சு இளவரசர் ஸ்பெயின் நாட்டு அரசராக வருவது சிறந்தது என வாதித்தனர். மேலும், அத்தகைய அரசர் வெகுவிரைவிலேயே ஸ்பானிய நாட்டுப் பற்றினால் ஆட்கொள்ளப்படுவார் என்றும் நம்பினர்.

மூன்று மாதங்களுக்குள் இத்தகைய கனவினை லூயி கலைத்தார். எக்காலத்திலும் ஃபிரான்சும் ஸ்பெயினும் ஓர் அரசரின்கீழ் இணைக்கப்படமாட்டா என்பதற்கான உறுதிமொழி எதையும் அவர் அளிக்கவில்லை. பவேரியாவின் தேர்வாளரோடு ஒப்பந்தம் செய்துகொண்டு, ஆஸ்டண்டிற்கும் நாமூருக்கும் இடையே டச்சுப் படைகள் வைக்கப்பெற்று இருந்த தடைக்கோட்டைகளைத் தம் படைகொண்டு கைப்பற்றினர். அஸ்ஸியன்டோவை (Assiento) அல்லது ஸ்பெயினின் அடிமை வியாபாரத் தனி உரிமையை ஒரு ஃபிரெஞ்சுக் கம்பெனிக்கு மாற்றினர். மேலும், இங்கிலாந்துத் துணிகள் ஸ்பெயின் நாட்டு அங்காடிகளுக்கு வரவொட்டாமல் செய்துவிட்டார். பேரரசருக்கு இழப்பீடு அளிக்கவேண்டுமென்ற கருத்தினை விடுத்து இத்தாலியில் இருந்த இளவரசர் யூஜினையும் (Eugene) ஆஸ்திரியரையும் எதிர்ப்பதற்காக ஒரு படையினை அனுப்பினர். அங்கேதான் 1701ஆம் ஆண்டு மே மாதம் போர் தொடங்கியது.

இத்தகைய வலித்தாக்குதலுக்கு எதிராக வில்லியத்தின் கருத்தினை டோரிகள் சிறிது சிறிதாக ஆதரிக்கத்தொடங்கினர். முதலில், ஹாலந்து தாக்கப்பட்டால் அதற்கு உதவியளிப்பதாக உறுதி கூறினர். அடுத்தபடியாக, ஃபிரான்சினுடைய அளவுகடந்த

வலிமையைக் குறைப்பதற்காக ஹாலந்துடனும் ஆஸ்திரியர் வுடனும் சேர அரசருக்கு அனுமதி தந்தனர். தங்களுடைய குறிக்கோள் 'அழியாத அமைதி' அல்லது 'இன்றியமையாத போர்' என்று ஹார்லி குறிப்பிட்டார். கட்சி நலன்களும் போர்க்கொள்கையைப் பின்பற்றுமாறு டோரிகளைத் தூண்டின. ஏனெனில், தங்களுடைய தலைவர்கள் தாக்கப்பட்டமையினால் ஆத்திரமடைந்த விக்குகள், டோரிகளை ஃபிரான்சுக்கும் 'போலிக்கும்' கையாட்கள் எனக் கண்டித்தனர். மேலும், புதிய பாராளுமன்றத்தைக் கூட்டுவதற்காக விண்ணப்பங்களை அனுப்பினர். போருக்கு ஆதரவாக இயல்பான கூக்குரல் எழுந்தது. லண்டன் நகரமும் போரை ஆதரித்தது. கென்ட் பகுதியைச் சார்ந்த ஜூரர்கள் 'காலங் கடப்பதற்கு முன்னால்' போர் மானியம் வழங்கும் தீர்மானங்களைக் கொண்டுவர வேண்டுமென்று பாராளுமன்றத்திற்கு விண்ணப்பித்துக்கொண்டனர். அதற்காகக் காமன்ஸ் சபை அவர்களுடைய பேராட்களைச் சிறையிலிட்டது.

பொதுமக்களுடைய உணர்ச்சிவெள்ளத்தில் மிதந்துகொண்டிருந்த வில்லியம், இளவரசர் யூஜின் வெற்றிகளால் ஊக்கமடைந்து, செப்டம்பர் மாதத்தில் தி ஹேக் என்னுமிடத்தில் ஐரோப்பிய நாடுகளின் பெருங்கூட்டுறவு ஒன்றினைப் பேசி முடித்தார். இதில் மார்ல்பரோ, முழு உரிமைபெற்ற அரசியல் தூதராகவும், பிரிட்டிஷ் துருப்புகளின் தலைவராகவும் இருந்து செயலாற்றினார். ஐந்தாம் ஃபிலிப்பை (Philip V) ஸ்பெயின் நாட்டு வேந்தரென பிரிட்டனும் ஹாலந்தும் ஏற்றுக்கொண்டன. உண்மையில், இந்தக் கூட்டுறவின் உரிமைக் கட்டுப்பாடுகள் மற்றொரு பங்கீட்டினை மனதில் கொண்டதாக இருந்தன. போரைப்பற்றிய ஆஸ்திரியரின் வேகத்திற்கும், டச்சுக்காரரின் விருப்பமின்மைக்குமிடையே நடுப்பாதையை பிரிட்டன் பற்றியது. அவருடைய உரிமை கோரிக்கைகளை நிறைவு செய்யும் வகையில் ஸ்பெயினுக்குச் சொந்தமான எல்லா இத்தாலிய மாகாணங்களும் மத்தியதரைக் கடல் தீவுகளும் பேரரசருக்கு அளிக்கப்பெறுதல்வேண்டும். ஸ்பானிய நெதர்லாந்து, ஹாலந்திற்கு அரணாக அமையவேண்டும். ஆனால், இப் பகுதிகளை டச்சுக்காரர் ஆளுவதா அல்லது ஆஸ்திரியர் ஆளுவதா என்ற சிக்கலான பிரச்சினையைப்பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. பிரிட்டனும் ஹாலந்தும் முந்தைய ஆட்சியில் இருந்ததைப் போலவே ஸ்பெயினுடைய நாடுகளில் வாணிபச் சலுகைகளைப் பெறவேண்டும். போர் ஏற்படுமானால் மேற்கிந்தியத் தீவுகளில் அவரவர் கைப்பற்றும் பகுதிகளை அவரவர்களே வைத்துக் கொள்ளலாம். ஃபிரெஞ்சு அரசும் ஸ்பானிய அரசும் ஒன்றாக இணைவதைத் தடுக்கவேண்டும்.

ஒப்பந்தம் செய்துகொள்ள வாய்ப்பு அளிக்கும் முறையில் லூயிக்கு அளிக்கப்பெற்ற இரண்டுமாத காலம் கழிவதற்காகக் காத்திருக்கவேண்டியதில்லை என்பது தெளிவாகியது. ஏனென்றால், லூயி, பிரிட்டிஷ் பொருள்களை ஃபிரான்சில் இறக்குமதி செய்வ தைத் தடுத்ததோடு நில்லாது, செப்டம்பர் மாதத்தில் இரண்டாம் ஜேம்ஸ் இறந்தபோது ரிஸ்விக் உடன்படிக்கையை மீறும்வகையில் ஜேம்ஸ் எட்வர்டை மூன்றும் எட்வர்டு என அறிவித்தார். ஆங்கி லேயர் ஆத்திரமடைந்த நிலையில் சாமர்ஸும் தம்முடைய வெளி விவகார ஆலோசகர்களும் பாராளுமன்றத்தைக் கலைக்கவேண்டு மென்று கூறிய யோசனையை வில்லியம் ஏற்றுக்கொண்டார். இச் செயல் மார்ல்பரோ, கொடால்ஃபின் ஆகியோரின் உள்ளுணர் விற்கு மாறுனது. வில்லியம் உயிருடன் இருந்திருந்தால் அதற்காக அவர் மிகுதியாக வருந்தக்கூடிய பிழையாகவும் காணப்பெற்றது. ஏனெனில், அதனுல் டோரிகள் அவரிடம் மிகுந்த வெறுப்படைந் தனர். மேலும், நாட்டைக் கீழ்த்தரமான சூடேறிய தேர்தல் சுழலில் சிக்கவைத்தது. மேலும், அச்செயல் வெற்றியளிப்பதாயும் இல்லை. தேர்தலில் இரு கட்சிகளுக்கும் சமமான இடங்களே கிடைத்தன. மறுமுறையும் ஹார்லியே சபாநாயகராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். டோரிகள் தங்கள்மீது படிந்திருந்த யாகோபியக் கறையைக் கழுவுவதில் ஆர்வங்கொண்டு இருந்தனர். எனவே, கூட்டுறவு ஒப்பந்தத்தில் மூன்றும் ஜேம்ஸை இங்கிலாந்தின் மன்னரென ஒப்புகொண்டதற்கு மாற்றுக ஃபிரான்சு ஏதும் செய்யாத வரையில் அதனோடு சமாதானம் செய்துகொள்ளக் கூடாது என்னும் வாசகத்தையும் பாராளுமன்றம் இணைத்தது. பாராளுமன்ற உறுப்பினரும் பதவி வகிப்போரும், போலியைக் கைவிட வேண்டும் என்னும் கொள்கையை வலியுறுத்துவதற்கான சட்டம் ஒன்றினை டோரிகள் கொண்டுவந்தனர். மார்ல்பரோ, பகுத்தறிவு மிகுந்தவராக இருந்தபடியால் உடன்படிக்கையை நிறைவேற்றுவதில் அவர்களுக்கு முழு மதிப்பு அளித்தார். அவர்கள் 80,000 படைவீரருக்கும் மாலுமிகளுக்கும் மானியம் வழங்கினர். டோரி மந்திரிகளைப் பதவியிலிருந்து நீக்கியபோதி லும், கொடால்ஃபின் ராஜிஞமா செய்துவிட்டபோதிலும் வில்லியம், விக்கு ஜன்டோவைத் திரும்ப அழைக்கவில்லை. மாருகச் சில நடுத்தர டோரி செல்வந்தருக்குப் பதவிகளை அளித்தார்.

அவருடைய வேலை முடிந்தது. உண்மையில், அவர் இல்லாம லிருந்தால் அவரது திட்டத்தை நிறைவேற்ற பிரிட்டிஷ் மக்கள் மேலும் ஒற்றுமையோடு நின்றிருப்பார்கள். 1702ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ஹாம்ப்டன் கோர்ட் என்னுமிடத்தில் அக ழெலிப்புற்று (mole hill) தடுக்கித் தடுமாறிய குதிரையின்மேலிருந்து

தூக்கியெறியப்பட்டார். இது 'கரும்பட்டு அணிந்த சிறு பண்பாளர்' எனும் யாகோபியரின் இழிவான வாழ்த்துரைக்கு அடிப்படையாக இருந்தது. எலும்புருக்கி நோயுற்ற தமது மெலிந்த உடலில் தடுப்புச் சக்தி இல்லாததனுல் மார்ச் மாதம் எட்டாம் தேதி வில்லியம் இறந்தார். நாட்டையும் தம்முடைய பணிகளையும் வெளிப்படையாக ஆன் ராணியாரிடம் விட்டுச் சென்ருர். ஆனுல், உண்மையில் பொறுப்புகள் ஏற்கெனவே ராணியாரின் 'பெருமைக்குரிய அமைச்சர்' என்று குறிப்பிடப்பெற்ற மார்ல் பரோவிடம்தான் ஒப்படைக்கப்பட்டன.

## சமகால நிகழ்ச்சிகள்

*1689* லாக்கினுடைய 'Civil Government'.
 *–1725.* மாமன்னர் பீட்டரின் ஆட்சி.

*1690* கல்கத்தாவில் ஆங்கிலக் குடியேற்றம்.

*1691* முஸ்தஃபா கியூப்ரிலி (Mustafa Kiuprili) கொல்லப்படுதல்; துருக்கியர் டிரான்சில்வேனியாவை (Transylvania) இழத்தல்.

*1692* எர்னஸ்ட் அகஸ்டஸ் (Ernest Augustus) ஹனேவரின் முதல் தேர்வாளராக வருதல்.
 லாய்டுகள் (Lloyds) கப்பல் இன்ஷ்யூரன்ஸ் (Marine Insurance) தொடங்குதல்.

*1693* வீனஸின் (Venus) இடப் பெயர்ச்சியை ஹால்லி (Halley) என்பவர் கண்டுபிடித்தல்.
 சர்வதேச அரசியலைப்பற்றி லிப்நிஸ் (Leibniz) எழுதுதல்.

*1694* போஸட்டிற்கும் (Bossuet) ஃபெனிலனுக்கும் (Fenelon) இடையே கருத்து மாறுபாடு.
 வால்டேரின் (Voltaire) பிறப்பு.
 *–1733.* சாக்சனியின் (Saxony) தேர்வாளரான அகஸ்டஸின் ஆட்சி.

*1695* பர்சல் (Purcell) இறத்தல்.

*1697* மாமன்னர் பீட்டர் மேற்கு ஐரோப்பாவைச் சென்று காணல்.
 யூஜின், ஃசென்டா (Zenta) என்னுமிடத்தில் துருக்கியரை முறியடித்தல்.

1698 கிறித்துவச் சமய அறிவைப் பரப்புதற்காகச் சங்கத்தைத் தோற்றுவித்தல்.

ஸ்ட்ராடிவாரியஸ் (Stradivarius) தம்முடைய புகழ் ஏணியின் உச்சியில் இருந்தார்.

1699 கார்லோவிட்ஸ் சமாதானம்.

1700 வடதிசைப் போர் தொடங்கியது; நார்வா (Narva) என்னுமிடத்தில் பன்னிரண்டாம் சார்லஸ் ரஷ்யரைத் தோற்கடித்தார்.

ட்ரைடனின் (Dryden) மறைவு.

1701 ப்ராண்டன்பர்கின் (Brandenburg) ஃபிரடரிக் (Frederick) பிரஷ்யாவின் முதல் மன்னராதல்.

1702 ஹீன்சியஸ் (Hiensius) ஹாலந்தின் ஊதியம் பெறுபவரானர்.

கிளாரண்டனுடைய 'புரட்சியின் வரலாறு' (History of the Rebellion) வெளியிடப்பட்டது.

டிபோவின் (Defoe) 'புறச்சமயத்தவரின் குறுக்குவழி' (The Shortest Way with the Dissenters).

## 5. ஆன் ராணியாரின் ஆட்சி, 1702–1714

மறுமலர்ச்சிக் கட்டத்தில் இருந்த ஆங்கில நாகரிகம் ஆன் ராணியாரின் ஆட்சிக் காலத்தில் உச்சநிலையை அடைந்தது. மாறுபட்ட கருத்துகளின் போட்டியில் பிறந்து, உள்நாட்டு வெளி நாட்டுக் கூறுகளால் ஊடுருவப்பெற்றுச் சமநிலை அடைந்திருந்தது. இத்தகைய நிலை, உண்மை நிலையிலன்றிக் காட்சியளவில் பதினெட்டாம் நூற்றாண்டின் முதல் பாதி முழுதும் தொடர்ந்துவந்தது. ஆன் ராணியாரின் ஆட்சியில், மேதைகளான ரென் (Wren), லாக் (Locke), நியூட்டன் (Newton) போன்றவர்கள் அமைதியான, மன நிறைவு தரும் அரிய வெற்றிகளைப் பெற்றுத்தந்தனர். புதிய இலக்கியத்தின் தலைவராக விளங்கிய ட்ரைன் அப்போதுதான் இறந்தார். எனினும் காங்கிரீவும் (Congreve), ஃபார்குஹாரும் (Farquhar) அவரது பணியைத் தொடர்ந்து செய்தனர். அதே சமயத்தில் ஸ்விப்ட்டும் (Swift), போப்பும் (Pope), அடிசனும் (Addison), ஸ்டீலும் (Steele) தனிப்பட்ட சிறிய சமூகத்திற்காக எழுதிவந்தனர். தெளிவான கருத்துகளுக்கும் எளிய நடைக்கும், அக்கால உரைநடையும் செய்யுளும் ஒப்பற்று விளங்கின. இத் துறையில் பழமை மனப்பான்மை சில இடங்களில் போட்டியிட்டது. உதாரணமாகக் கருத்துவேறுபாட்டினரான டிஃபோ (Defoe) என்பவரின் துண்டுப் பிரசுரங்களோடு, போதிய விசுவாசப் பிரமாண மறுப்பினருக்கு எதிரானவர்களின் இலக்கியம் எழுந்தது. இப்போதுதான் கிளாரண்டனின் புதல்வர் அவருடைய 'புரட்சியின் வரலாறு' (History of the Rebellion) என்னும் நூலைப் பதிப்பித்தனர். புதிய அறிவொளி, இலக்கிய வான்வெளியை நிரப்ப ஆரம்பித்தது. மாறுபாட்டுச் சமயத்தைச் சார்ந்து, விக்கு கட்சியில் பிறந்த ஹார்லி, டோரிகளின் தலைவராக மாறினர். வால்போல் விக்கு கட்சியின் எதிர்கால நம்பிக்கையூட்டுபவராகத் திகழ்ந்தார். மேலும், இவ்வாட்சிக் காலத்தில் பெப்பீஸ், எவலின் (Evelyn), லாக், டான்பி, ரிச்சர்டு கிராம்வெல் போன்றவர் மறைந்ததால் உண்டான இடத்தை நிரப்புவதற்காக, ஜான் வெஸ்லி (John Wesley),

சாமுவேல் ஜான்சன் (**Samuel Johnson**), பெஞ்சமின் ஃபிராங்லின் (**Benjamin Franklin**), ஃபீல்டிங் (**Fielding**), ஸ்டெர்ன் (**Sterne**), ஹியூம் (**Hume**) போன்றவர்கள் தோன்றினார்கள். நீடித்து நிலைப் பதற்காகவே ஏற்பட்டதைப்போல் காணப்பெற்ற இக் காலம் வெற்றிகள்மூலம் மரபுரிமையாகப் பெற்றவற்றினை உறுதிப் படுத்திக்கொண்டது. அக் காலத்தில்தான் செயின்ட் பால் (**St. Paul**) வளைமாடம் (**dome**) எழுந்தது. பிளன்ஹீமில் (**Blenheim**) பதினான்காம் லூயியின் முடியாட்சி சிதைந்தது. யுட்ரக்ட் (**Utrecht**) உடன்படிக்கையினால் புதையுண்டது. ஜிப்ரால்டரும் ஹட்சன் விரிகுடாவும் ஆங்கிலப் பேரரசோடு இணைக்கப்பெற்றன. ஐக்கியம் இறுதியில் கிரேட் பிரிட்டனை உருவாக்கியது.

எலிஸபெத் ராணியாருக்குப் பின் வந்த முதல் பெண்ணரசி யாகிய ஆன் முன்னவரின் திறமையைப் பெற்றிருக்கவில்லை. இங்ஙனம் திறமை மிகுதியாக இல்லாத பெண்ணரசி அரியணையில் அமர்ந்தது, நம்முடைய பாராளுமன்றத் திட்டம் வளர்வதற்கு வாய்ப்பாக இருந்தது. சம்பிரதாயப்படி அமைந்த காபினெட்டில் அடிக்கடி அவர் அமர்ந்தபோதிலும், மூன்றாம் வில்லியம் ஏற்றிருந்த தலைமை இடத்தை இப்போது அமைச்சரின் உள்வட்டம் ஒன்று நிரப்பியது. எனினும் ராணியார் முக்கியமில்லாதவரல்லர். அவர், வில்லியத்தின் நினைவையும் ஹனோவிரியர் பட்டத்திற்கு வருவதையும் வெறுத்தார். போருக்கு 100,000 பவுனை நன் கொடையாக அளித்தார். இறுதியில் சமாதானத்திற்காகப் பாடு பட்டார். மார்ல்பரோவை மிகுதியாக நம்பினார். ஆனாலும், மார்ல் பரோ கோமகளோடு சண்டையிட்டுக்கொண்டார். இவற்றால் அவருடைய ஆட்சியின் வழிமுறை தெரிவதுடன் அதில் நெருக்கடி களும் தோன்றின என்பதும் தெரிகிறது. ஆன் ராணியார் பல குழந்தைகளைப் பெற்றெடுத்தார். எனினும், அவையனைத்தும் இறந்து மண்ணில் புதையுண்டன. அவர் தமது கணவராகிய டென்மார்க் நாட்டின் ஜார்ஜை மிகுதியாகக் காதலித்தார். 'அவர் மதுமயக்கத்தில் இருக்கும்போது சோதித்துப் பார்த்தேன். சுய நினைவோடு இருக்கும்போதும் சோதித்துப் பார்த்தேன். புகழ்வ தற்கு அவரிடம் ஒன்றும் இல்லை' என்று இரண்டாம் சார்லஸ், ஜார்ஜைப்பற்றிக் கூறினார். இருப்பினும், ராணியார் தம்முடைய கணவருக்கு வாழ்நாள் முழுதும் ஆண்டொன்றுக்கு 100,000 பவுன் மானியம் பெற்றுத்தந்து, குடிகளை அதிர்ச்சிக்குள்ளாக்கினார். தம் கணவரை இழந்ததும் அவருடைய கடற்படை நிர்வாகத்தைத் தாக்கிய விக்குகளை என்றும் மன்னிப்பதில்லை என்று உறுதி பூண்டார். அவர் ஸ்டுவர்ட் குல இளவரசி என்றாலும், புரட்சிப் பாவத்தை எண்ணி மன உலைவுகொண்டார். எனினும் 'ஃபிரான்ஸில்

இருந்த இளையோன்' என்று குறிப்பிடப்பெற்ற தமது இளவலிடம் ஒருவகையான பரிவு கொண்டிருந்தபோதிலும், கென் (Ken) என்பவரை பிஷப்பாகத் திரும்பக் கொண்டுவரவேண்டுமென்று கருதிய உயர் திருச்சபையாளராக இருந்தபோதிலும் போப்பின் சமயத்தை வெறுத்தார். மேலும், அரசியல் சட்ட வரம்பிற்குட்பட்ட அரசியாக நடந்துகொண்டார். அவரை 'அடிமை செய்தல்' இயலாது. இரு கட்சிகளிலும் இருந்த 'இரக்கமற்றவரை' அவர் வெறுத்தார். மந்திரிகளைத் தேர்ந்தெடுப்பதில் தமக்கு முழு உரிமை வேண்டுமென்று வற்புறுத்தினர். பொதுவாகப் போர், ஐக்கியம், சமாதானம் போன்றவற்றில் மக்களுடைய மன உணர்ச்சிகளை மதித்து நடந்தார். அமைதியை நிலைநாட்டப் பயன்படுவோரையே அதிகமாகச் சார்ந்திருந்தார்.

மார்ல்பரோ, தம்முடைய 52ஆம் வயதில் முதன்மை அதிகாரத்தைப் பெற்ருர். இளவயதிலிருந்து ஸ்டூவர்டுகளின் பணியாளராக இருந்தார். எனவே, ஒருவழியில் டோரியாக இருந்தபோதிலும் உண்மையில் அவரிடம் கட்சிகள் தோன்றுதற்கு முன்னுல் இருந்த எதிர்கால நோக்கு இருந்தது. அவருடைய வாழ்க்கையில் பல இழிவான நிலைகள் காணப்படுகின்றன. அவர், காசில்மெய்ன் சீமாட்டியின் காதலர்களில் ஒருவராகவும் இரண்டாம் ஜேம்ஸின் காமக்கிழத்தியான அரபெல்லா (Arabella) சீமாட்டியின் காதலராகவும் இருந்தார். எனினும், கடினமான வாழ்க்கையை மேற்கொண்டார். இளமையில் மான்மவுத்துடன் ஃபிளாண்டர்சில் இருந்த டாஞ்சியரிலும், டூரன் என்பவரின்கீழ் ஆல்காசிலும் காவல் வீரராகப் பணிபுரிந்தார். இறுதியாக, வில்லியத்தின்கீழ் உயர் படைத் தலைவராக அயர்லாந்திலும் மறுபடியும் ஃபிளாண்டர்ஸிலும் பதவி வகித்தார். அவர்தம் மனைவியாகிய சாரா ஜென்னிங்ஸ் (Sarah Jennings) என்பவர்மீது கொண்ட காதல் ஒன்றுதான் அவரது திரண்ட அறிவினைத் தடுமாறச் செய்தது. அவர் ராணியாரோடு கொண்ட உறவிற்கு அவரது மனைவி மூல காரணமாக இருந்தார். ஏனெனில், வில்லியமும் மேரியும், ஆன் இளவரசியாரிடம் கடுமையாக நடந்துகொண்டபோது வெல்ல முடியாத சாராவின் கணவரான மார்ல்பரோ மேலும் சில குறைபாடுகளைக் கொண்டவராக இருந்தார். சொந்தமாகச் சேர்த்த பணத்தைத் தவிர வேறொன்றும் இல்லாத அவர் இறக்கும்போது லட்சாதிபதியாக இருந்தார். வாரன் ஹேஸ்டிங்ஸைப் (Warren Hastings) போல அவருடைய நாட்டு ஆர்வம் பணம் சேர்ப்பதற்குத் தடையாக இருக்கவில்லை. எனவே, ராமில்லீஸ் (Ramillies) போர்க்களத்திற்குப் பிறகு வேண்டாம் என்று மறுத்த பெரிய கையூட்டுத்தொகையை, சமாதானம் உறுதி என்று தெரிந்தவுடன்

ஃபிரெஞ்சுக்காரரிடமிருந்து பெற்றுக்கொண்டார். மேலும் அவர் தாம் இறக்கும்வரை நாடு கடத்தப்பெற்று இருந்த ஸ்டூவர்ட்களோடு கடிதத் தொடர்பு வைத்துக்கொள்வதைக் கைவிடவில்லை. பிந்திய காலத்தில் அவருடைய மைத்துனரான பெர்விக்கின் மூலமாக இத் தொடர்பினைக் கொண்டிருந்தார். ஒருவேளை அது அவரது உள்ள உணர்ச்சி காரணமாக இருக்கலாம். ஆயினும், அதனை ஓர் அரசியல் காப்பீடாகவே கருதினரோ என்ற ஐயம் தோன்றுகின்றது.

தலைசிறந்த போர்வீரர்கள் முதல் அறுவரில் சேர்க்கக்கூடிய திறமைகளோடு மார்ல்பரோ போற்றுதற்குரிய பண்புகளைப் பெற்றிருந்தார். சந்தேகம் கொண்ட டச்சுக்காரர், பேராவலுள்ள ஜெர்மன் இளவரசர்கள், ஸ்வீடன் நாட்டு நாகரிகமற்ற பன்னிரண்டாம் சார்லஸ் ஆகியோரை உண்மையிலேயே இணைப்பை யேற்படுத்தும் மனத்திறனால் ஒருங்கே கவர்ந்தார். தளரா மனவுறுதியினாலும் பிரிட்டிஷ் பொதுநிலையாளரின் உணவு, பொதுநலன் ஆகியவற்றில் காட்டிய அயராத அக்கறையினாலும் அவர்களின் ஆதரவைப் பெற்றார். ஒருவேளை அவர் திறமை படைத்தவராகக் காட்சியளித்தாலும், தேவையற்ற ரத்தம் சிந்துவதை வெறுத்தார் என்று அறிந்ததாலும், கடுந்தாக்குதல்களைத் தலைமை தாங்கி நடத்தியதாலும் மக்கள் அவரை ஆதரித்து இருக்கலாம். 'ஏழை ராணியாரான' ஆன் ராணியாரிடம் அன்பாக இருந்தார். அவருடைய வெறுப்பிற்குரிய விக்கு, டோரி கட்சியினர் பெயர்களைக் காட்டிலும் இங்கிலாந்து ஒளிவிட்டுப் பிரகாசித்தது எனினும், வம்புச் சண்டை இடுபவராகவும், சமய குருமாரின் எதிரியாகவும், கட்சிச் சார்புடையவராகவும் இருந்த சாராவுடன் மோதினர். சாரா, போரின் விளைவாக மார்ல்பரோ டோரி கட்சியிலிருந்து பிரிந்து வருவதை சாரா கோமகள் உறுதி செய்ததோடு விரைவுபடுத்தினர். மேலும், அவர்களுடைய மருமகனாகிய மூன்றும் சண்டர்லண்டு சாராவிற்குப் பக்கபலமாக இருந்தார்.

மற்றொரு மகளைக் கொடால்ஃபினின் மகனுக்கு மணமுடித்து வைத்ததனால் தலைசிறந்த அரசியல் துணைவரோடு மார்ல்பரோ தம்பதிகளுக்கு நெருங்கிய உறவு ஏற்பட்டது. அதனால் 1702ஆம் ஆண்டில் மார்ல்பரோ கோமகனார், போர்க்களத்திற்குச் சென்றபோது உள்நாட்டில் கொடால்ஃபினைக் கருவூலத் தலைவராக நியமிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். கார்னிஷ் கெவலியரான கொடால்ஃபின் விக்கு ஜன்டோவிடம் மார்ல்பரோவைக் காட்டிலும் அதிகமான பற்றுக் கொண்டிருக்கவில்லை. எனினும், டோரி காமன்ஸ் சபைமூலமாக விக்குகளின் பணத்திற்குப் போராட

வேண்டி இருந்ததால் விக்கு கட்சியினரோடு கூட்டுறவு இல்லாது போனால், போரில் வெற்றி பெறமுடியாது என்று மார்ல்பரோவைக் காட்டிலும் முன்னதாக உணர்ந்தார்.

இங்ஙனம் பல ஆண்டுகளில் அடக்குமுறையின் சோதனைக்குட்பட்ட உள் ஆட்சிக் குழு அமைந்தது. ஒருமுறை ஆன் ராணியார் " இறப்பு தன்னுடைய நடுநிலையான கரங்களால் வெட்டி வீழ்த்தும் வரை நாம் நால்வரும் பிரிதல் கூடாது' என்று சாராவிற்கு எழுதினர்.

டச்சு அரசருக்கு எதிராக எழுந்த எதிர்வினையின் விளைவாகத் தோன்றிய கட்சியின் புத்துயிர்ப்பினால் அவருடைய ஆட்சி இருளடைந்தது. மேலும், விக்கு செல்வந்தவர்களும், பிரபுக்கள் சபையில் இருந்த பிஷப்புகளும் ஆட்சியைச் சரிவர நடத்தத் தடையாக இருந்தனர். ராணியார் தம்முடைய பாராளுமன்றப் பேச்சில் தம்மை முழுமையாக ஆங்கில மனம் என்று அறிவித்ததை டோரிகள் அளவு கடந்த மகிழ்ச்சியோடு கேட்டனர். அதே சமயத்தில் அவருடைய முதல் காபினெட் அமைப்பு அவருடைய ஆதரவு யாருக்குக் கிடைத்தது என்பதைக் காட்டியது. 'மூவர் ஆட்சி' (Triumvirate) நடுத்தரவாதிகளான மார்ல்பரோ, கொடால்ஃபின், ஹார்லி ஆகியோர் காபினெட்டின் மூலப்பகுதியாக இருந்தனர். ராணியாரின் உறவினரான ரோசெஸ்டர், நாட்டிங்காம், சேமூர், ஜெர்சி டோரி திருச்சபையினரில் வலதுசாரிக் கட்சியைச் சார்ந்தவர்களைப் போன்றவர்களே பெரும்பான்மையினராக விளங்கினர். 1702ஆம் ஆண்டு தேர்தலினால் வலுவடைந்த டோரிகள் டச்சு, விக்கு கூறுகள் யாவற்றையும் அழிக்க விரைந்தனர். மான்டேகுவின் கணக்குகளைத் திரும்ப ஆரம்பித்தனர். வில்லியத்தின் மானியங்களைக் கண்டித்தனர். விக்கு மாஜிஸ்டிரேட்டுகளைப் பதவியிலிருந்து நீக்கினர்.

கோயில்கள், அநேகமாகச் சமய குருமார்களின் கல்விச்சாலைகளாக இருந்த கலாசாலைகள், பாரிஷ் சொற்பொழிவு மேடைகள் அல்லது கருத்து வேறுபாட்டினரின் கூட்டங்கள் போன்றவற்றின் மூலமாகக் கட்சி உணர்ச்சி மேலும் கரைபுரண்டு ஓடியது. புரட்சி காரணமாகத் தங்களுடைய கருத்துகள் கைவிடப்பெற்றமையினாலும், சமயப் பொறுமைச் சட்டம், கொள்கை மறுப்புச் சட்டம் ஆகியவற்றினாலும் மனக் கசப்புற்ற உயர் திருச்சபையினர் தாங்கள் இழந்த இடத்தைத் திரும்பப் பெறமுயன்றனர். அரசத்தியாகியின் பேர்த்தியான ராணியார் தம்பக்கம் இருப்பார் என அவர்கள் நம்பினர். அவர் கேடு பயக்கும் வழக்கத்தைத் திரும்பக்

கொண்டுவந்தார். அதே சமயத்தில் 1704ஆம் ஆண்டில் அவர் தோற்றுவித்த 'ஆன் ராணியாரின் கொடை' (Queen Anne's bounty) யின்மூலமாக எட்டாம் ஹென்றியினுல் நீக்கப்பெற்ற கோவில் மகமையையும் (tithes) திருச்சபைக்களிக்கப்படும் பருவ காலப் பயனையும் மீட்டு, திருச்சபையில் சிறுபதவி வகிப்போரின் வருவாயை உயர்த்தினர். ஆர்ச்பிஷப்பாகிய டெனிசனும் (Tenison) வில்லியத்தினுல் நியமிக்கப்பெற்ற பர்னெட், மற்றுமுள்ள பிஷப்பு களும் பரந்த நோக்கமுடையவராகச் சாதாரண குருமார்களுக்குக் காட்சியளித்தனர். அவர்களுடைய பிடிவாதமற்ற கொள்கை யினுல் நம்பிக்கைக் கேடு தோன்றியதாகவும் கண்டனர். அச்சம் காரணமாக உள்நாட்டுப் போரைப்பற்றியும், தெய்வீக உரிமைக் கோட்பாடுபற்றியும், தவருன சகோதரர்களிடமிருந்து திருச் சபைக்கு வரும் ஆபத்துபற்றியும் கூக்குரலிட்டனர். பின்னுளில் ரோசெஸ்டரின் பிஷப்பாக வந்த ஃபிரான்சிஸ் அட்டர்பரி (Francis Atterbury) என்பவர் அவர்களுடைய தீவிரத் தலைவராக இருந்தார். அவர் பிஷப்புகளைத் தாக்குமாறும், திருச்சபையில் தங்களுடைய கூட்டமே ஆதிக்கம் செலுத்தவேண்டும்; பாராளுமன்றமன்று என்று கோருமாறும் குருமாரைத் தூண்டினர்.

நடைமுறைச் சமுதாயத்திற்குச் சட்டம் ஒத்தாக இல்லை எனும் உண்மை இத்தகைய உணர்ச்சியின் அடித்தளத்தில் காண முடி கின்றது. சோதனைச் சட்டங்களும் மாநகராட்சிச் சட்டங்களும், வளம் மிகுந்து பெருங் கூட்டத்தினராக இருந்த கருத்து வேறு பாட்டினரை அரசாங்கத்தின் பல்வேறு துறைகளினின்றும் நீக்கி வைக்க முடியவில்லை. அவர்கள் எப்படியோ சுற்றி வளைத்துப் பதவிகளைப் பெற்றனர். தங்களைப் பதவிக்குத் தகுதி உள்ளவர் களாகச் செய்துகொள்ளவே திருச்சபைச் சடங்குகளை ஏற்றுக் கொண்டனர். அதே சமயத்தில் தங்களுடைய வீட்டுக் கோயில் களுக்கே சென்றனர். அக்காலத்தும் இணங்காதவர் ஆங்கிலி கரை மணக்கக்கூடாது என்ரு பாரிஷ் கோயில்களில் பிணங்களைப் புதைத்தல் கூடாதென்ரு தடைவிதிக்கப்படவில்லை. இங்ஙனம் சிலவேளை திருச்சபைக்கு இணக்கம் தெரிவித்தல், அதனை அவ மதிப்பதாக இருந்தது. காவலர் பதவிபெறத் தகுதியை ஏற் படுத்திக்கொள்ளும் கருவியாகப் புனிதச் சடங்கினைப் பயன்படுத்து வதைச் சமயப்பற்று மிக்கவர் தெய்வ நிந்தனையாகக் கருதினர். அதே சமயத்தில் அரசியல்வாதிகள் இக் கூக்குரலை விக்கு கட்சியை அழிக்கப் பயன்படும் கருவியாகக் கருதினர். ஆக்ஸ் ஃபோர்டு பல்கலைக் கழகத்தின் சமய உறுப்பினரான வில்லியம் ப்ராம்லி (William Bromley) மூடநம்பிக்கையற்ற டோரி கட்சி யினரான ஹென்றி செயின்ட் ஜான் (Henry St. John) போன்ருேர்

தலைமையில் இயங்கிய காமன்ஸ் சபையினர் 'சில வேளை இணக்க மசோதாவை' (Occasional Conformity Act) 1702–3ஆம் ஆண்டுகளில் இருமுறை நிறைவேற்றினர். அந்த இருமுறையும் விக்கு பிரபுக்கள் அதனை முறியடித்தனர். இத்தகைய வாத எதிர் வாதம் நாட்டில் கொதிப்புணர்ச்சியை உண்டாக்கியது. தம்முடைய துண்டுப் பிரசுரமாகிய 'புறச்சமயத்தவரின் குறுக்கு வழி'யில் (The Shortest Way with the Dissenters) டிஃபோ (Defoe) வேடிக்கையாகத் தீயினையும் வாளினையும் பயன்படுத்துமாறு கூறியதற்காகச் சிறையிலடைக்கப்பட்டனர். டோரி உறுப்பினர் ஸ்காட்லாந்தோடு ஐக்கியத்தை ஏற்படுத்தக் கொண்டுவந்த தீர்மானத்திற்கு எதிராக வாக்களித்தனர். ஏனெனில், ஐக்கியம் ஏற்படுமானால் அவர்களுடைய சபையில் பிரஸ்பிடீரியர்களும் வந்து அமர்வார்கள் என்ற எண்ணம்தான்.

டோரிகளின் போரைப்பற்றிய போக்கு முதன்மையான மந்திரிகளுக்குத் தொல்லையாக இருந்தது. போரில் பிரிட்டன் முதன்மையாக இல்லாமல் துணை நாடாகப் போரிடவேண்டும் என்று ரோசெஸ்டர் வற்புறுத்தினர். பிரிட்டிஷாரின் நலனுக்குக் கடற்போர்தான் உகந்தது என்பதனால் நம்முடைய முயற்சியினை ஸ்பெயினுக்கும் மேற்கிந்தியத் தீவுகளுக்கும் திருப்பவேண்டு மென்று நாட்டிங்காம் விரும்பினர். காபினெட்டில் இருந்த இத்தகைய மோதல் பிரபுக்கள் சபைக்கும் காமன்ஸ் சபைக்கும் இடையே ஒரு முட்டுநிலையைத் தோற்றுவித்தது. வில்லியத்தின் கொள்கையைப் பிரபுக்கள் மனமார ஆதரித்தனர். நாட்டிங்காம், யாகோபியச் சதிகளை மறைக்க முயல்வதாகக் குற்றம் சாட்டினர். ஆஷ்பி (Ashby), ஒயிட் (White) என்பவரோடு தொடுத்த பெயர் பெற்ற வழக்கில் அய்லஸ்பரியில் (Aylesbury) 'உள்ள வார்ட்டனுடைய (Wharton) பரோவில் சில வாக்காளர்களுக்கு ஓட்டுரிமை அளிக்கப்படாததில் பிரபுக்கள் கவனம் செலுத்தினர். அச்செயல் தங்களுடைய உரிமையை மீறுவதாகும் என்று காமன்ஸ் சபையினர் கூறி எதிர்த்தனர்.

காபினெட்டின் இரகசியம் வெளிப்படுவதையும், போர் மானியத்திற்கு ஒவ்வோராண்டும் வரும் இடர்ப்பாட்டினையும் பொறுத மார்ல்பரோவும் கொடால்ஃபினும், வலதுசாரிக் கட்சியினரிட மிருந்து பிரிந்தனர். 1703ஆம் ஆண்டில் ரோசெஸ்டர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். அடுத்த ஆண்டு சேமூருக்கும் ஜெர்ஸிக்கும் அதே கதி நேர்ந்தது. நாட்டிங்காம் அதிருப்தியோடு ராஜினமா செய்தார். அதனால் அமைச்சரவை திருத்தி அமைக்கப் பெற்றது. ஹார்லி உள்துறைச் செயலரானர். அதே சமயத்தில்

25 வயதிலேயே தலைசிறந்த சபாநாயகர் என்று புகழ்பெற்ற செயின்ட் ஜான், போர் அமைச்சராகக் கொண்டுவரப்பட்டார். இரு தரப்பிலும் இருந்த தீவிரவாதிகளுக்கும் இக் கூட்டிணைப்பு ஆறுதல் அளிப்பதாக இல்லை. அதே சமயத்தில் நாட்டைப் பேராபத்துச் சூழ்ந்தது. 1703ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் வீசிய பெரும் புயற்காற்று, பதினைந்து போர்க்கப்பல்களை அழித்தது. எட்டிஸ்டோன் (Eddystone) கலங்கரை விளக்கத்தை அழித்தது. பாத் (Bath), வெல்ஸ் (Wells) ஆகிய பகுதிகளின் பிஷப்பை அவர்தம் அரண்மனையிலேயே கொன்றது. லண்டன் நகருக்கு ஒரு மில்லியன் பவுன் பெறுமான நஷ்டத்தை ஏற்படுத்தியது. ஸ்காட்லாந்தோ அநேகமாகப் புரட்சியில் இறங்கியது. ஃபிரெஞ்சுப் படைகள் வியன்னாவை அச்சுறுத்தின. இச் சூழ்நிலையில் போர்க்களத்தில் வெற்றி பெற்றால் ஒழிய அரசாங்கம் மீளுவதற்கு வழியில்லை.

1701ஆம் ஆண்டு தாம் மேற்கொண்ட நடவடிக்கைகளினால் முதற்படியில் எல்லா நலன்களையும் லூயி பெற்று இருந்ததனால், போரின் முதல் இரண்டு ஆண்டுகள் ஏமாற்றமளிப்பவையாக இருந்தன. தாழ் நாடுகளுக்குச் செல்லும் வழிகளை லூயியின் படைகள் கட்டுப்படுத்தி வைத்திருந்தன. அவர் கோலோன் நகரத்தோடு உறவுகொண்டு ரைன் ஆற்றின் கீழ்ப்பகுதியில் ஆதிக்கம் செலுத்தினார். டூலோனில் இருந்த அவரது கடற்படை மத்திய தரைக் கடலில் ஆதிக்கம் செலுத்தியது. நேபிள்ஸ் நகரத்தில் ஒரு காவற்படையினை வைத்திருந்தார். இளவரசர் யூஜின் வட இத்தாலியில் நெருக்கப்பட்டார். ஆல்ப்ஸ் மலையின் ஒரு பக்கத்தை செவாய் லூயிக்கு அளித்தது. பவேரியாவோடு செய்துகொண்ட கூட்டு மற்றொரு பக்கத்தை உறுதி செய்தது. ஸ்பெயின் நாடு முழுவதும் அவருடையதாக இருந்தது. போர்ச்சுகலும் அவருக்கு வருமென்று நம்பப்பட்டது.

இவ்வாறு ஒருங்கு திரட்டப்பெற்ற திண்மையான நிலபரப்பின் சுற்றுவெளியில் கூட்டிணைப்புச் சிதறிக்கிடந்தது. போர் உச்சக் கட்டத்தில் இருந்தபோது எல்லா அரங்குகளிலும் இருந்த பிரிட்டிஷ் படையின் எண்ணிக்கை 70,000-க்குமேல் இல்லை. பிளன்ஹீமில் மார்ல்பரோவிடம் 8,000 படையினரே இருந்தனர். அவர் தனித்துறை மரபுப்படி (technically) டச்சுப்படையின் தலைவராக இருந்தபோதிலும், டச்சுத் தளபதிகளோடு அவர்களுடைய படையினரை மேற்பார்வை செய்ய நியமிக்கப்பட்டு இருந்த துணைத் தளகர்த்தர்களுக்கும் விளக்கம் தந்து நம்பவைக்கவேண்டி இருந்தது. அவருடைய மற்ற அணிகள் டென்மார்க்கிலிருந்தும், ஜெர்மன்

நாடுகளில் குறிப்பாக, பிரஷ்யா, ஹனேவர் ஆகியவற்றினின்றும் வந்தன. இங்ஙனம் படைத்தலைமையின் ஐக்கியம் தனிப்பட்ட உடன்படிக்கைகளையும் மானியங்களையும் சார்ந்திருந்தது. இது மாறுபட்ட அரசர்களிடையே விவாதிக்கவேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்தியது. மார்ல்பரோ, இளவரசர் யூஜினேடு பற்றுறுதி கொண்ட தோழமை பூண்டு இருந்தபோதிலும் ஆஸ்திரியாவோடு சமாதானத்தைக் காப்பதும் அதனுடைய பொறுமையைக் காப்பதும் மிகக் கடினமான செயல்களாக இருந்தன. ஏனெனில், நெடுந்தொலைவில் உள்ள கடல்சார்ந்த நாடுகளிடமிருந்து ஆஸ்திரியா பிரிந்து நின்றது. அதனேடு ஆஸ்திரியப் படைகள் எப்போதும் சம்பளப் பாக்கியோடு இருந்தன. மேலும் இத்தாலியில் முதலில் தங்களுடைய குறிக்கோளை நிறைவேற்றிக்கொள்ளவே ஆஸ்திரியர் முயன்றனர். அவர்களுடைய கொடுங்கோலாட்சியின் காரணமாக ஹங்கேரியில் புரட்சி தோன்றியது. அதனல், அவர்கள் ஆற்றல் குறைந்து இருந்தது. மிலான் நகரத்தைப்பற்றி செவாயோடு மோதினர். பிரஷ்யாவுடன் மற்ருெரு பூசல் இருந்தது. மூன்ருவதாக, பெல்ஜியத்தின் எதிர்காலத்தைப்பற்றிய பூசல் ஹாலந்தோடு எழுந்தது. இந்த இறுதிப்பூசல் எப்போதும் இடர்மிகுந்ததாக இருந்தது.

நம்முடைய வெற்றி ஹாலந்தோடு கொள்ளும் நல்லுறவைப் பொறுத்திருந்தது. இங்கே பென்ஷனரி (Pensionary) யான ஹின்சியஸுடன் தீவிரமாக ஒத்துழைப்பதன்மூலமாக, மார்ல்பரோ இன்றியமையாதவரானர். எனினும், நல்லுறவைக் காப்பது மிகக் கடினமான ஒன்ருகும். டச்சுக்காரரின் போர் முயற்சி போற்றத் தகுந்த அளவிற்குச் சிறந்ததாக இருந்தது. அவர்கள் கடற்படை ஒன்றையும், 100,000 படைவீரரையும் அளித்தனர். ஆனல், இப் போரானது வேறெந்த நாட்டின் பொருளாதாரத்திற்கும் இல்லாத அளவிற்கு ஹாலந்திற்கு இடர் விளைத்தது. உண்மையில், பகைவரோடு அவர்கள் வாணிபம் செய்வதைத் தடைசெய்ய முடியவில்லை. அதனல், நேசநாடுகள் ஃபிரான்சின்மீது விதித்த பொருளாதார முற்றுகை முழு வெற்றியடையவில்லை. மேலும், போரானது ஹாலந்தின் தலைவாயிலில் நின்றபோது, கசப்பான அநுபவம் பெற்ற டச்சுக்காரர் ஸ்பெயின் நாட்டிற்கு நேருவன பற்றி அக்கறை காட்டவில்லை. அதே சமயத்தில் அவர்கள் ஆஸ்திரியாவிடம் அதிகப் பகைமைகொண்டிருந்தனர். அவர்கள் பெல்ஜியத்தின் வாணிபத்தைக் கைப்பற்றுவதற்காக ஷெல்ட்டை (Scheldt) மூடத் தீர்மானித்தனர். தங்களுடைய எல்லையை விரிவு செய்யவும், பெல்ஜியத்தின் அரசுரிமையைக் கத்தோலிக்கர்களான ஹாப்ஸ்பர்குகளிடம் ஒப்படைப்பதை எதிர்க்கவும் துணிந்தனர்.

பிரிட்டனுடன் கொண்ட வாணிபப் போட்டி அவர்களுடைய இரத்தத்தில் கலந்திருந்தது. ஸ்பெயின் நாட்டின்மீது உரிமை கொண்டாடிய ஆஸ்திரிய அரசரை வற்புறுத்தி, பிரிட்டன் பெற்ற சில பொருளாதாரச் சலுகைகளை, டச்சுக்காரர் குறை கூறியதில் ஓரளவு நியாயம் இருந்தது. இறுதியாக, தாழ்நாடுகள் மீட்கப்பட்டவுடன் ஃபிரெஞ்சு அங்காடிகளோடு தொடர்புகொண்ட ஆம்ஸ்டர்டாம் நகரத்தின் நலனுக்காகப் பரிந்து பேசுவதாக இருந்த வலிமை மிக்க சமாதானக் கட்சி அயராத அரசியல்வாதியான பைஸ் (Buys) என்பவர் தலைமையில் கண்டனக் குரலை எழுப்பியது.

இவ்வாறு தாறுமாறுகப் பிளவுபட்டு நின்ற இக் கூட்டுறவின் விளிம்பிலிருந்து, அதனைப் பல முறை அழிப்பதாகப் பயமுறுத்திய ஆபத்துத் தோன்றியது. அது பல ஆண்டுகளாக நடைபெற்றுவந்த வடக்குப் போர் உருவில் வந்தது. இப் போரில் ஸ்வீடன் நாட்டு அரசர் பன்னிரண்டாம் சார்லஸ், ரஷ்யர், போலந்தியர் (Poles), டேனர் (Danes), சாக்சானியர் (Saxons) ஆகியோரை எதிர்த்தார். இப் போர்ப் புயல் டேனிஷ் படைகளை அழித்துவிடாமல் காப்பது மார்ல்பரோவின் முதல் வேலையாக இருந்தது. மறுபடியும் 1707 ஆம் ஆண்டில் பேரரசின்மீது படையெடுப்பதாகச் சார்லஸ் பயமுறுத்தியபோது விடாப்பிடியரான அவரைத் தன் வழிக்குக் கொண்டு வரத் தம்முடைய தலைசிறந்த ஆற்றலை மார்ல்பரோ பயன்படுத்தினர். இங்ஙனம் அவர் அரசர்களைச் சாந்தப்படுத்தி அமைதியைக் காக்க பத்து ஆண்டுகளுக்கு ஹேக், வியன்ன, பெர்லின் ஆகிய நகரங்களிடையே எப்போதும் அலைந்துகொண்டே இருந்தார். அப்போது தமது திறமைகள் அனைத்தையும் பயன்படுத்தினர். அத் திறமைகளை உணர்ந்த பாலிங்புரோக் பல ஆண்டுகள் கழித்துக் கீழ்வருமாறு எழுதினர். 'நம்முடைய நாடும் அநேகமாக எந்த நாடும் தோற்றுவித்தவர்களிலெல்லாம் தலைசிறந்த படைத் தலைவராகவும் ஒப்பற்ற அமைச்சராகவும் விளங்கினர்.'

அக் கால ராணுவச் சூழ்நிலைகளும் மார்ல்பரோவை மிக முக்கியமானவராகச் செய்தன. மால்பிளாக்கே (Malplaquet) என்னுமிடத்தில் அவர் நடத்திச்சென்ற 90,000 படை வீரருக்கு மேல் அதிக எண்ணிக்கைகொண்ட படைக்கு அவர் தலைமை தாங்கியதில்லை. அப் படையினை ஒருவரே இயக்க முடியும். கோயில் கோபுரத்தின்மீது நின்று தொலைநோக்கியின் உதவியால் போர்முறை சார்ந்த இயக்கங்களைச் செய்ய முடியும். பீரங்கிப் படையைத் தம்முடைய பார்வையில் வைத்துக்கொள்ளவும் அதனுல் போர்க்களத்தில் எளிதாக வெற்றி பெறவும் முடிந்தது. சிறிய கூலிப் படைகளை மிகுந்த அக்கறையோடு பராமரித்தனர். தெளி

வான படைப்பரவல் நிலையில் முன்னேறிய தரைப்படை அணிகள் (platoons) மொத்தமாக ஒரே சமயத்தில் சுடப் பழக்கப்பட்டு இருந்தது. குதிரைப் படை எஃகு கனத்தோடு தாக்கவேண்டியிருந்தது. அருகிலிருந்து சண்டையிட்டால்தான் பயன் தரும். பீரங்கிகள்தான் பயன்படுத்தப்பட்டன என்றாலும் துப்பாக்கி முனை (bayonet), கையெறி பீரங்கி (grenade) ஆகிய பயங்கர ஆயுதங்கள் பயன்பட்டன. உதவிப் படைகள் இல்லாமலிருந்தும் ஆறுகள், காடு முரடான சாலைகளைத் தவிர வேகமாகச் செல்லும் போக்குவரவுச் சாதனங்கள் இல்லையென்றாலும் தகுந்த சமயத்தில் தம் படைகளைச் சிதையாது கொண்டு நிறுத்தியதால், மார்ல்பரோ வெற்றிபெற்றார். ஆனால், அவருடைய படைக்குப் பிரதியாக மற்றொரு படையைக் கொண்டு வர முடியவில்லை. மேலும், போரில் இறந்தவர்களின் விதம் தற்காலப் போர்களைக் காட்டிலும் அதிகமாக இருந்தது.

பல ஆண்டுகளாக இருந்த அவ் விளையினாலும் மனக் கலக்கத்தினாலும் அவருடைய போர் முறை சார்ந்த கருத்துத் தேங்கிநின்றது. முதலில் வடக்கிலிருந்த ஃபிரெஞ்சுக்காரரை நெதர்லாந்தினின்றும் வெளியேற்றவேண்டும். அதன் பிறகு பாரீஸ் நகரத்திற்கு வழியேற்படுத்த அவர்களைப் போருக்கிழுக்கவேண்டும். ஆனால், அதே சமயத்தில் தெற்கிலிருந்தும் தாக்குதல் நடைபெறவேண்டும். அதன்மூலமாக ஸ்பானிய வணிகக் கப்பல்களைத் துண்டிப்பதோடு நம்முடைய ஏற்றுமதியைப் பெருக்கமுடியும். அதனோடு ஜிப்ரால்டர் நீர்ச் சந்தியில் புகுவதற்கும் டூலானை அடக்குவதற்கும், ஆஸ்திரியர், இத்தாலியர் ஆகியவரோடு இணைந்து ரெவீராவிலிருந்து (Riviera) பகைவரை விரட்டவும் அது பயன்படும். இதுதான் இன்றியமையாத் திட்டமாகும். ஆயின், நாட்கள் செல்லச் செல்ல ஆஸ்திரிய இளவரசரை ஸ்பெயின் நாட்டு மன்னராகச் செய்யும் குறிக்கோளும் அதனோடு இணைக்கப்பட்டது. ஆனால், அந்தக் குறிக்கோள் நிறைவேறுவது கடினமாக இருந்தது. தலைமைத் தளகர்த்தராகவும், படைக்கலப் பணித்துறையின் தலைவராகவும், கடற்படையில் இருந்த தம்முடைய சகோதரராகிய ஜார்ஜின்மூலமாகக் கடற்படைத் தலைமையில் செல்வாக்குப் பெற்றவராகவும் இருந்த மார்ல்பரோ ஒருவரால்தான் கொள்கையையும் போரையும் ஒருமுகப்படுத்தமுடியும்.

1702ஆம் ஆண்டு நிகழ்ந்த கடற் சண்டைகள் பயனற்றவையாகும். ஸ்பானிய வாணிபக் கப்பல்கள் தப்பிச் சென்றுவிட்டன. மெயின் (Main)மீது நடந்த சண்டையில் புகழ்பெற்று, விடுதிக்குறிகளிலும் நாட்டுப்பாடல்களிலும் போற்றப்பெறும் வீராக

பென்போ (Benbow) விளங்கினர் என்றாலும் அவருடைய துணைவர் இருவர் கோழைகளென்று சுட்டுக்கொல்லப்பட்டனர். காடிஸ் (Cadiz)மீது மேற்கொண்ட பெரும் படையெடுப்பு இழிவான தோல்வியில் முடிந்தது. படைத் தலைவரான ஆர்மாண்டினுல் கட்டுப்பாட்டை நிலைநாட்ட முடியவில்லை. அதே சமயத்தில் அட்மிரல் ரூக் (Rooke) போலிக் காரணங்காட்டி வீடு திரும்பினர். அப்போது நல்வாய்ப்பு காரணமாகவே விகோ விரிகுடாவில் (Vigo Bay) ஸ்பானியக் கடற்படை ஒன்றினை அழித்தார்.

அடுத்த ஆண்டில் நெதர்லாந்தில் ஒருசில வீச்சுக்களினுல் தம்முடைய மேதைத் தன்மையையும், தமக்கிருந்த ஏராளமான இடையூறுகளையும் மார்ல்பரோ வெளிப்படுத்தினர். அவருடைய நண்பர்கள் கெய்ஸர்ஸ்வெர்த் (Kaiserswerth) என்னுமிடத்தைக் கைப்பற்றி ரைன் ஆற்றுப் பகுதியில் ஒரு திறப்பினை ஏற்படுத்திய சமயத்தில், மார்ல்பரோ ∴பிரெஞ்சுக்காரருடைய செய்திப் போக்குவரத்தினைத் துண்டிப்பதாகப் பயமுறுத்தி, ரைன் ஆற்றிற்கும் மியூசுக்கும் இடையில் உள்ள பகுதியிலிருந்து அவர்களைப் பின்வாங்குமாறு செய்தார். ப்ரபான்ட் (Brabant) என்னும் பகுதிக்கு ∴பிரெஞ்சுக்காரரை விரட்டிய பிறகு அவர்களைத் தாக்கவேண்டுமென்று கருதினர். ஆனுல், டச்சுப் படைத்தலைவர்களும் துணைத் தலைவர்களும் கிடைத்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்ளத் தவறினர். அப்படி இருந்தும் மார்ல்பரோ மியூஸ் பகுதியை விடுவித்து, லீஜ் நகரத்தைக் கைப்பற்றினர்.

1703ஆம் ஆண்டில் இரண்டு அரங்குகளிலும் அதிக மாற்றம் ஒன்றும் இல்லை. ரூக்கும் டச்சுக்காரரும் ஆங்கிலக் கால்வாயில் ஏதையும் சாதிக்கவில்லை. ஷோவெல் (Shovell) என்பவர் தலைமையில் இருந்த கடற்படை ∴பிரெஞ்சுக் கப்பல்களை டூலானிலேயே அடைந்து கிடக்குமாறு செய்தது. ஆனுல், செவன்னஸ் (Cevennes) என்னுமிடத்தைச் சார்ந்த யூக்னோ புரட்சியாளரோடு தொடர்பு கொள்வதில் தோல்வி கண்டது. இதற்கிடையில் மார்ல்பரோ, 'பெரிய திட்டம்' என்று அழைக்கப்பட்ட ஆன்ட்வெர்ப்பையும் (Antwerp) ஆஸ்டண்டையும் (Ostend) அடைவதற்காக எடுக்கும் கூட்டு நடவடிக்கையைத் தொடங்கினர். ஆனுல், அதற்குச் சரியான காலமும் டச்சுக்காரரின் நல்லெண்ணமும் தேவைப்பட்டன. அந்த நல்லெண்ணம் அவருக்குக் கிடைக்கவில்லை. கால்வாய்களின்மூலமாகவும் பதுங்குக் குழிகளைக் கொண்டும் காக்கப்பெற்ற பாசறைகளுக்கு ∴பிரெஞ்சுக்காரர் பின்வாங்கினர். நேச நாடுகள் கைப்பற்றியவைகளெல்லாம் பான் (Bonn) நகரமும் லிம்பர்க் (Limburg) நகரமும்தான். மார்ல்பரோ 'மறுபடியும் இதைப்

பேரின்றவற்றைச் சகித்துக் கொள்வதைவிட இறப்பேன்' என்று ஷீன்சியஸிடம் கூறினர்.

அந்த ஆண்டு இறுதியில் பேரரசு தேக்க நிலையை அடைந்தது. ஃபிரெஞ்சுக்காரர் இத்தாலியில் ஆஸ்திரியரை ப்ரன்னருக்கே (Brenner) பின்வாங்குமாறு செய்தனர். மத்திய ரைன் ஆற்றுப் பகுதியில் லாண்டாவை (Landau) மீட்டனர். மேல் பகுதியில் கெல் (Khel)ஐக் கைப்பற்றி, அதன் பிறகு பவேரியரோடு சேர்ந்து கொண்டனர். ஆக்ஸ்பர்க் (Augsburg), ராடிஸ்பன் (Ratisbon), டான்யூப்பின் மேல் பகுதி ஆகியவை அவர்கள்வசம் வீழ்ந்தன. அங்கிருந்து ஏற்கெனவே ஹங்கேரியப் புரட்சிக்காரரால் அச்சுறுத்தப்பெற்ற வியன்னு வரை அவர்களது படை எளிதாகத் தாக்கி முன்னேறியது. பிரஷ்யா நடுக்கங்கொண்டது. பேரரசின் படைத்தலேவராகிய பேடனேச் (Baden) சேர்ந்த லிவிஸ் (Lewis) நம்பிக்கை இழந்த நிலேயிலிருந்தார். இங்ஙனம் எல்லாம் நிலேயற்ற தாகவே இருந்தன.

மற்ற நிகழ்ச்சிகள் போரின் தன்மையை மாற்றிவிட்ட காரணத்தால் உண்மையில் இக் கட்டத்தில்தான் பெரும்போர் தொடங்கியது. செவாய் கோமகனுரான விக்டர் அமாதியஸ் (Victor Amadeus) சக்திச் சமநிலேயை ஏற்படுத்தத் தம் வாழ்நாள் முழுதும் செலவிட்டார். பிரிட்டிஷ் தூதர் ஒருவர் அவரைப்பற்றி அறிவிக்கையில் 'அவர் தம்மைத் தவிர ஆண்டவன் படைத்த உலகத்தில் எதன்மீதும் அக்கறை காட்டவில்லே' என்று குறிப் பிட்டார். ஆனுல், மிலானீஸில் (Milanese) உள்ள 'முள்ளியினச் செடியின் (artichoke) இலேயை'த் தாம் பெறுவதைத் தடைசெய்யக் கூடிய எந்த அதிகாரத்தையும் எதிர்த்துச் செயல்பட்டார். ஆகலின், ஃபிரெஞ்சுக்காரர்களின் மதிப்புக் குறைவான ஆதரவைக் கண்டு ஆத்திரம் அடைந்தார். எனவே, பிரிட்டிஷார் பணமும் படையும் தருவதாக உறுதிமொழி கூறியவுடன் 1703ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் நேசநாடுகளுடன் சேர்ந்தார்.

போர்ச்சுகலின் அரசர் பெட்ரோவும் (Pedro), தாம் ஃபிரெஞ்சு அரசரின் பண்ணேயாளராக ஆகக்கூடும் என்று அஞ்சினர். மேலும், தம்முடைய குடியேற்றங்களே நடுநிலேமைக் கொள்கை நேசநாடுகளின் கடலாதிக்கத்தினின்றும் காக்காது என்பதையும் நன்குணர்ந்தார். நாம் விகோவில் பெற்ற வெற்றி நம்முடைய தூதராகிய மெதுவன் (Methuen) அவரிடம் நடத்திய வாதங்களே நிரூபிப்பதுபோல் இருந்தது. அதே சமயத்தில் ஹெஸ்ஸி-டார்ம்ஸ்டாட்டைச் (Hesse-Darmstadt) சார்ந்த இளவரசர் ஜார்ஜிட

மிருந்து இதைவிட அதிகமான செல்வாக்கு இருந்தது. அவர் கேடலோனியா (Catalonia) வை ஆட்சிபுரிந்த சிறந்த போர் வீரர். அவருக்கு மக்களிடமிருந்த ஆதரவு ஸ்பெயினில் ஆஸ்திரிய வேட்பாளருக்குப் பேருதவியாக இருக்கும். பணத்தையும் படையையும் பொறுத்தவரையில் கடுமையான நிபந்தனைகளை விதித்தது. மேலும், ஆர்ச்டியூக் சார்லஸ் ஸ்பெயினின் அரசர் என அறிவிக்கப்பெறுதல் வேண்டுமென்றும் அவர் நேரில் வர வேண்டுமென்றும் கூறியது. பெருந் தயக்கத்திற்குப் பிறகு மிலான் நகரைத் தம்மிடமே வைத்துக்கொள்ள நினைத்தபோதிலும் ஸ்பெயின்மீது கொண்டாடிய உரிமையைப் பேரரசர் விட்டுக் கொடுத்தார். 1704ஆம் ஆண்டு தொடக்கத்தில் தம் தனிப் பற்றுதலுக்குரிய மகனை லிஸ்பனுக்கு அனுப்ப ஒப்புக்கொண்டார். மெதுவனுடைய இரண்டாவது உடன்படிக்கை பிரிட்டிஷ் துணிகளுக்குப் போர்ச்சுகலின் அங்காடிகளில் தனியுரிமை பெற்றுத் தந்தது. அதற்குப் பதிலாகப் போர்ச்சுகலிலிருந்து இங்கிலாந்திற்கு வரும் மதுவகைகள், ஃபிரெஞ்சு மதுவகைகள் செலுத்துவதில் மூன்றில் ஒரு பங்கு குறைவாக வரி செலுத்தவேண்டுமென்று ஏற்பாடாயிற்று. இங்ஙனம் போர்ட்டும் (port) மெடீராவும் (madeira) பதினெட்டாம் நூற்றாண்டின் ஆங்கிலச் சமுதாயத்தின் விருப்பப் பொருள்களாயின.

இத்தகைய உடன்படிக்கைகளின் ராணுவப்பயன் பெருங்கேடு விளைவிப்பதாக இருந்தது. தாங்கள் நம்பிக்கைவைத்த கடற் போருக்கு ஏற்றதாக இருக்குமென்று இந்த உடன்படிக்கைகளுக்காக நாட்டிங்காமும் டோரிகளும் வேலை செய்தனர். மத்திய தரைக் கடலை வைத்திருக்கவேண்டுமானால் அதற்குப் பெருந் துறைமுகமாகிய லிஸ்பனின் துணை அவசியமாகும். எனினும், அவர்கள் பழைய போரின் நோக்கமாகிய பங்கீட்டிலிருந்து விலகிச் சென்றனர். மேலும், 'ஸ்பெயினின்றிச் சமாதானம் இல்லை' என்னும் திட்டம் தொல்லை தரும் சுமையாக மாறியது.

1704ஆம் ஆண்டில் போச்சுகலில் நம்முடைய தலையீட்டினால் ஒன்றையும் சாதிக்க முடியவில்லை. ரூக்கின் கடற்படை ஆர்ச்டியூக்கைக் கரைசேர்த்த பிறகு ஜிப்ரால்டர் இடைக்கழியினைக் கடந்தது. செவாய் ஒத்துழைக்க முடியாதநிலையில் இருந்தது. பார்சிலோனாவில் வாக்குறுதி அளிக்கப்பெற்ற கிளர்ச்சியின் அறிகுறி ஏதும் காணப்பெறவில்லை. ப்ரஸ்டினுடைய (Brest) கடற்படை டுலானை அடைவதை ரூக்கினால் தடுக்க முடியவில்லை. அவர் மைனர்க்காவையோ காடிஸையோ கைப்பற்ற மறுத்த போதிலும் இறுதியில் ஜிப்ரால்டரைத் தாக்க இணங்கினர்.

கிராம்வெல்லின் காலத்திருந்தே அத்துறைமுகத்தின் மீது நம்முடைய கடலோடிகள் கண் வைத்திருந்தனர், அது சிதைந்த அரண்களோடும் சிறிய காவற்படையோடும் இருந்ததனல் எளிதில் இரையாகக் கூடியதாக இருந்தது. ஆகஸ்டு மாதத்தில் ஒருநாள் அங்கே வந்து இறங்கிய நம் படையின் கையில் சிக்கியது. அதனை ஆஸ்திரிய இளவரசர் சார்லஸின்பேரால் வைத்திருக்கவேண்டும். பத்து நாட்களுக்குப் பிறகு அதனை மீட்க டூலானில் இருந்து வெளிப்பட்ட ஃபிரெஞ்சுக்காரர் மலாகாவை (Malaga) அடுத்து ராக்கிற்கும் (Rock) ரூக்கிற்கும் (Rooke) இடையே வந்தனர். நீண்ட நாட்கள் சுற்றித்திரிந்ததால் பிரிட்டிஷ் கப்பல்கள் அழுக்கேறி இருந்தன. அவைகளிடம் போதுமான வெடிமருந்தும் இல்லை. எனினும், ஃபிரெஞ்சுக் கப்பற்படை சிதைந்து பின்வாங்கியது. பிரிட்டிஷ் கடற்படை வெற்றி பெற்றதைக் காத்து, அடுத்த மாரிக் காலத்தில் அட்மிரல் லீக் (Admiral Leake) லிஸ்பனுக்கு இருமுறை உதவிப்படைகளைக் கொண்டுவந்தார். அதனல், முற்றுகையிட்ட ஃபிரெஞ்சுக்காரரும் ஸ்பானியரும் முறியடிக்கப்பட்டனர். ஆனல், ஜிப்ரால்டரின் முழுமதிப்புப் பிற்காலத்தில்தான் தெரியவந்தது. அதனைக் கைப்பற்றிய பதினைந்து நாட்களில் மார்ல்பரோ ஃபிரெஞ்சு ஆதிக்கத்தை அழித்தார்.

1703ஆம் ஆண்டில் மோசெல் (Moselle) வழியாக, மெட்ஸ் (Metz) வரை தாக்கவேண்டும் என்னும் தமது விருப்பத்திற்குகந்த திட்டத்திற்காக, அடுத்த ஆண்டு படையெடுப்பிற்காகச் சூழ்ச்சி செய்தார். எனினும் 1704ஆம் ஆண்டு ஜனவரி மாதம் வரையில் ரைன் ஆற்றுப்பகுதியின்மீது படையெடுப்பதைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். ஆனல், ஆஸ்திரியாவின் வற்புறுத்தல் காரணமாகப் படைகளை டான்யூப் பகுதிக்குக் கொண்டுசெல்வதாக அவரும் கொடால்ஃபினும் ராணியாரோடு ஒப்புக்கொண்டனர். இத் திட்டத்தில் பொறுப்புகளும் இடர்ப்பாடுகளும் ஏராளம். இது பாராளுமன்றத்திடமிருந்து மறைக்கப்பட்டது. அவர்கள் இன்றியே போர் தொடுப்பதாக அச்சுறுத்தி டச்சுக்காரரின் ஒப்புதலைப் பெற்றர். ஆனல், அவர் உறுதியுடன் இருந்தார். அந்த உறுதி 'வெற்றி அல்லது வீர மரணம்' என்பது அவரது கடிதத்திலிருந்து வெளிப்பட்டது. ஆஸ்திரியரிடமிருந்து இரு பொருள்களை வேண்டினர். ஒன்று பவேரியாவை அழிப்பதற்காக ஆஸ்திரியப் படைக்குவிப்பு. இரண்டாவது இளவரசர் யூஜினைக் கட்ளைகத் தருகிறது.

மார்ல்பரோவின் முன்னேற்றம், ஒரு துணிகரமான நுட்பத் திறத்தின் தலைசிறந்த படைப்பாகும். ஒவ்வொரு கட்டத்திலும்

உணவும் பணமும், புதிய ஷீக்களும், படகுப் பாலங்களும் ஆயத்த மாக இருந்தன. டான்யூப்பைத் தாக்குதற்கு ஏற்ற முனையும் அவர் மனத்தில் தயாராக இருந்தது. மே மாதம் 19ஆம் தேதி மேஸ்ட்ரிட்சுக்கு (Maestricht) கிழக்கே இடத்திலிருந்து 40,000 வீரரோடு புறப்பட்டார். ரைன் ஆற்றங்கரையில் பான் என்னுமிடத்தை அடைந்தார். ஆனால், 29ஆம் தேதி காப் லென்ஸில் (Coblenz) இருந்த அவர், மோசெல் ஆற்றில் திரும்பு வதற்குப் பதிலாக இடப்புறமாகத் திரும்பி ரைன் நதியின்மேல் சென்றார். பிறகு ஃபிராங்ஃபர்டிலிருந்து (Frankfurt) மெய்ன் (Main) ஆற்றின்மீது பயணமானார். ஜூன் மாதம் 3ஆம் நாளன்று நெக்கர் ஆற்றின்மீது சென்றார். தென் கிழக்காக ஸ்வாபியன் (Swabian) குன்றுகளைக் கடந்து முன்னேறி, 22ஆம் தேதி அல்ம் (Ulm) என்னுமிடத்திற்கு வடக்கில் பேடனையும் பேரரசுப் படைகளையும் சென்றடைந்தார். இந்த ஆறு வார காலத்திலும் நாளொன்றிற்குப் பத்து மைல் வேகத்தில் வந்த அவருடைய வீரர்கள் நல்ல ஓய்வு பெற்று மனவுறுதியோடு இருந் தனர். ஃபிரெஞ்சுக்காரர்கள் அவருடைய முன்னேற்றத்தைப் பற்றித் தெளிவாக அறிந்துகொள்ள முடியாது திண்டாடியதால் மார்ல்பரோ போரில் தொடக்ககால நன்மையைப் பெற்றார். ஆனால், இப்போது நெதர்லாந்திலிருந்த வில்லிராயின் (Villeroy) படை மத்திய ரைன் பகுதியை நோக்கி விரைந்தது. டல்லார்டு (Tallard) ஜூலை மாதம் முதல் தேதி ஸ்ட்ராஸ்பர்க் என்னு மிடத்தில் கடந்து சென்றார்.

ஆனால், அவர் காலங்கடந்து வந்தார். யூஜின், ரைன் பகுதியைக் காத்து நிற்க வேண்டுமெனவும், மார்ல்பரோவும் பேடனும் உடனடியாக பவேரியரைத் தாக்க வேண்டுமென்றும் நேச நாடுகளின் படைத் தலைவர்கள் தீர்மானித்தனர். டொனு வொர்த்தின் (Donauworth) மேல் கவிந்திருந்த மலைக் கோட்டை யாகிய ஷெல்லன்பர்கைத் (Schellenberg) தாக்கவேண்டும் என்பதை ஏற்றுக்கொள்ளுமாறு பேடனை மார்ல்பரோ வற்புறுத் தினார். ஏனெனில், அங்கிருந்து டான்யூப்பைக் கடந்து செல்லலாம்; தேவைப்பட்டால், நல்ல செய்திப் போக்குவரத்தின் உதவியால் நூரம்பர்கிற்குத் திரும்ப வேண்டுமென்றும் திட்டமிட்டார். எப்படியாவது ஃபிரெஞ்சுக்காரர், தேர்வாளரோடு இணைவதற்கு முன் தாக்குதல் நிகழவேண்டும்.

ஜூலை மாதம் 2ஆம் தேதி கொடூரமான மாலைச் சண்டையில் ஷெல்லன்பர்கை நேச நாடுகள் கைப்பற்றின. அதன் பிறகு பேராற்றைக் கடந்து பவேரியாவினுள் புகுந்தன. 10,000

பகைவரை வெட்டி வீழ்தித்தியபோதும் மார்ல்பரோ வெற்றி பெறுவது நிச்சயமாக இல்லை. ஏனெனில், மியூனிச்சை முற்றுகை இடக்கூடிய பீரங்கிகள் அவரிடம் இல்லை. டல்லார்டு கருங் கானகத்தின் (Black Forest) வழியே வந்துகொண்டிருந்தார். மார்ல்பரோவைப் பின்பற்றிய இளவரசர் யூஜின் இசைவிணைத்திற்காக இன்கால்ஸ்டட்டை (Ingolstadt) முற்றுகையிட படையைப் பிரித்து, எண்ணிக்கை மேம்பாட்டை விட்டுக்கொடுக்க ஒப்புக்கொண்டார். அவர்கள் எதிர்பார்த்ததைப் போலவே ஃபிரெஞ்சுக்காரர் யூஜினைத் தாக்குவதற்காக மறுபடியும் ஆற்றைக் கடந்தனர். ஆகஸ்ட் மாதம் 10 ஆம் தேதி மார்ல்பரோ கோமகனுர் டொனுவொர்த் என்னுமிடத்திற்கு மேற்கில் யூஜினுடன் சேர்வதற்காக முன்னேறிச் சென்றார்.

நேச நாட்டுப் படைகள் நூரம்பர்க்கை நோக்கிப் பின்னடைந்தன என்று திடமாக நம்பி, அவைகளைத் துரத்திச் செல்லுமாறு டல்லார்டை பவேரியாவின் தேர்வாளர் இணங்கச் செய்தார். 12ஆம் தேதி ஃபிரெஞ்சுக்காரர் உறுதியான நிலை கொண்டனர். அந்நிலையில் டான்யூபையும் ப்ளன்ஹீம் என்னும் கிராமத்தையும் வலப்புறத்திலும், நெபெல் (Nebel) ஆற்றின் சதுப்பு நிலத்தை நேர் எதிரிலும், காடுகளடர்ந்த குன்றுகளை இடப்புறத்திலும் கொண்டிருந்தனர். அந்நிலையில் 13ஆம் தேதி அதிகாலையில் தாங்கள் தாக்கப்பட்டதைக் கண்டு வியப்புற்றனர். நேச நாடுகள் தாங்கள் பின்வாங்கும் வழியை வில்லிராயும் மற்றொரு ஃபிரெஞ்சுப் படையும் துண்டிப்பதற்குமுன் சண்டையிடவேண்டி இருந்தது. எனவே, மார்ல்பரோ, சமயவினை செய்த பிறகு, சிவப்பு நிறக் கோட்டும், கால் நாடாவும் அணிந்து வெள்ளைப் புரவியேறி வெஞ்சமர் நோக்கி வெளிப்பட்டார்.

படை வீரரின் எண்ணிக்கையைப் பொறுத்தவரையில் இரு தரப்பினரும் ஏறக்குறைய சமமான நிலையில் காணப்பெற்றனர். ஒவ்வொன்றிலும் சுமார் 56,000 வீரர்கள் இருந்தனர் ஆயினும் ஃபிரெஞ்சு பீரங்கிப்படை மேம்பட்டதாக இருந்தது. மேலும் அங்கு நான்கு மைல் நீளப் போர் அரங்கத்தில் நேருக்கு நேராகக் கைகலப்பதை மார்ல்பரோவினுல் தவிர்க்க முடியவில்லை. காலை எட்டு மணிக்கே பீரங்கிகள் முழங்க ஆரம்பித்துவிட்டபோதிலும் நடுப்பகலில்தான் இளவரசர் யூஜின் வலதுசாரிப் படைகளை காடுகளடர்ந்த மலைச்சரிவுகள் வரை பரவலாக்கினுர். அதன் பின்னர்தான் ஃபிரெஞ்சு பீரங்கிகளைத் தாக்கிய பிறகு இடப்புறத்தில் கட்ஸ் (Cutts) என்பவரின் தலைமையின்கீழிருந்த பிரிட்டிஷ் காலாட்படை அரணுடைய ப்ளன்ஹீம் என்னும் ஊரினைத் தாக்கியது. இரு

பக்கங்களிலும் இருந்து வந்த அவர்களுடைய தாக்குதல்கள் தடுத்து நிறுத்தப்பட்டன. மூன்று மணி வரையில் போரில் தேக்க நிலை காணப்பட்டது. இளவரசர் யூஜின் பகைவரைப் பரவாமற் செய்ய தன்னலமற்ற சமர்புரிந்தார் என்றால், மார்ல்பரோவின் போர் முறை சார்ந்த பேரறிவுதான் தோல்வியை வெற்றியாக மாற்றியது. பகைவர் இழைத்த தவறுகளும் தக்க சமயத்தில் உதவி அளித்தன. பகைப் படைத் தலைவர் டல்லார்ட், தேவைக்கு மேற்பட்ட தரைப்படையினரை ப்ளன்ஹீமில் கொண்டு நிரப்பினர். மேலும், நேசப் படையினர் படகுப் பாலங்கள், சிறு க்ாட்டுச்சுள்ளிக் கட்டுகள் ஆகியவற்றின் துணை கொண்டு, நெபெல் ஆற்றைக் கடந்தபோது அவர்களைத் தாக்காது விட்டார். மார்ல்பரோ, ப்ளன்ஹீமைக் கடுமையாகக் தாக்கு வதை விடுத்துப் பாதுகாப்பு முறையைக் கைப்பற்றினர். இதனால், ஃபிரெஞ்சுக்காரர் இடுக்கியில் அகப்பட்டவர்போல் கலங்கினர். மார்ல்பரோவிற்கும் இளவரசர் யூஜினுக்குமிடையே ஒரு பிளவு ஏற்படுத்தப்பட்டு, நெருக்கடி தோன்றியபோது இடப்புற அணியின் மையத்தலைமையைத் தாமே ஏற்றார். அதன் பிறகு தம்முடைய மூலப் படைகளைச் சதுப்பு நிலங்கள்வழியே கொண்டு வந்து பொதுத் தாக்குதலைத் தொடங்கினர். இத் தாக்குதலில் டல்லார்டின் எல்லாவிதப் படைகளும் நேசப்படையினரைவிடத் தாழ்ந்தே காணப்பெற்றன. அவருடைய மையப்படை சிதறடிக்கப் பெற்றது. தம்முடைய துணைவராகிய மார்ஸின் என்பவரோடு அல்ம் என்னுமிடத்திற்குத் தேர்வாளர் பின்வாங்கினர். அதே சமயத்தில் டல்லார்டும், அவரோடு 10,000 வீரர்களும் சிறை பிடிக்கப்பட்டனர். போர்க்களத்திலும், புறமுதுகிட்டு ஓடும் போதும் 30,000 பேர்கள் கொல்லப்பட்டோ, காயமடைந்தோ இருந்ததனல் பகைவருக்குப் பேரிழப்பு ஏற்பட்டது. இங்ஙனம் நேசநாட்டினர் 2,200 பிரிட்டிஷ்காரரை உள்ளடக்கிய 12,000 பேரை இழந்து வியன்னவைக் காத்தனர். அஜின்கோர்ட் (Agincourt) சண்டைக்குப்பிறகு இல்லாத அளவிற்கு ஃபிரெஞ்சுககாரர் தோற்கடிக்கப்பட்டனர்.

மார்ல்பரோ திரும்பவும் ரைன் ஆற்றைக் கடந்து வோஸ்கஸ் (Vosges) மூலமாகச் சென்று, டிரிவசைக் (Treves) கைப்பற்றித் தாம் கனவு கண்ட படையெடுப்பிற்குத் தயாரானர். மிண்டல் ஹீமின் (Mindelheim) இளவரசர் தற்போது பேரரசில் இருந்தார். அந்த ஆண்டின் இறுதியில் பிரஷ்யாவிற்கும் ஸ்வீடனுக்கும் இடையே போர் மூளுவதைத் தடுப்பதற்காக மார்ல்பரோ பெர்லி னுக்குச் சென்றார். அங்கிருந்து தம் நாடு திரும்பினர். அரச ருக்குச் சொந்தமான உட்ஸ்டாக் (Woodstock) பண்ணை (manor)

அவருக்கு அளிக்கப்பெற்றது. ப்ளன்ஹீம் வெற்றியை எப்போதும் கொண்டாடும் வகையில் ஓர் அரண்மனை தருவதாகவும் வாக்குறுதி அளிக்கப்பட்டது.

இங்ஙனம் நாட்டில், ஒரு புத்துணர்ச்சி தோன்றியதன் விளைவாகக் கூட்டிணைப்பு அரசாங்கம் பிழைத்தது. வெஸ்ட்மினிஸ்டர் ஹாலில் ஃபிரெஞ்சுப் படைச் சின்னங்கள் தொங்குவதை லண்டன் நகரம் கண்டது. அதே சமயத்தில் பிரபுக்கள் சபையில் பெருமை முழுதும் தமது வீரர்களின் ஒப்புயுர்வற்று விளங்கிய தீரச் செயல்களுக்கே தரப்படுதல்வேண்டுமென்று மார்ல்பரோ கோமகனுர் குறிப்பிட்டார். ஆனல், வலதுசாரி டோரிகள் தங்களுடைய எதிரிகளின் வெற்றிகளைப் பொருது மறுபடியும் திருச்சபை 'கைவிடப்பட்டது' என்று குறைகூறத் தொடங்கினர். சிலவேளை இணக்க மசோதாவை நிலவரியோடு இணைக்கும் அளவிற்கு அவர்களது ஆத்திரம் மிகுந்திருந்தது. இத்தகைய 'இணைப்போர்' (tackers) வெற்றி பெறவில்லை. அவர்கள்மீது ராணியார் கடுஞ்சினம் கொண்டார். 1705ஆம் ஆண்டு நடந்த தேர்தலில் அரசாங்கத்தினர் செல்வாக்குத் திருச்சபையினருக்கு எதிராக இருந்தது. அதன் விளைவாகப் பாராளுமன்றத்தில் டோரிகளைவிட 'ராணியாரின் சேவகரும், சுயேச்சையாளரும், விக்குகளும் நிறைந்திருந்தனர். காபினெட்டில் ஏற்பட்ட மாற்றங்கள் நாட்டில் அரசியல் காற்று எப் பக்கம் வீசுகின்றது என்பதைக் காட்டின. பெருஞ் செல்வந் தரும் விக்கு கட்சியைச் சார்ந்தவருமான நியூகாஸில் பிரபு பதவியேற்ருர். அதே கட்சியைச் சேர்ந்த கூப்பர் (Cowper) சான்ஸலரானுர். மேலும், நார்ஃபோக்கின் செல்வந்தரான வால்போல், அந்த ஆண்டின் வெற்றிப் பாடலாகிய ப்ளன்ஹீம் போரைப் பற்றிய பாடலை எழுதிய ஜோசப் அடிசன் (Joseph Addison) ஆகிய விக்குகளும் சிறு பதவிகளைப் பெற்றனர்.

அப் புதிய பாராளுமன்றம் 1708ஆம் ஆண்டு முடிவுறுவதற்குள் ஆட்சியிலும் போரிலும் பெருந் திருப்பங்கள் தோன்றின. மார்ல்பரோ சந்திக்கும் எப் படையையும் மார்ல்பரோவினுல் வெல்லமுடியும். என்ருலும், ஆஸ்திரியர் போலி நண்பர்கள் என்பதும் டச்சுக்காரர் சமாதானத்தை விழைந்தனர் என்பதும் நிரூபிக்கப்பட்டன. ஆஸ்திரிய இளவரசரை ஸ்பெயின் அரியணையில் அமர்த்த ஏற்பட்ட இரண்டாந்தரப் போர் வெற்றி பெறுவதற்கில்லை. பிரிட்டனின் ஐக்கியம்தான் பிராட்டஸ்டென்டு வாரிசுரிமையைக் காக்கமுடியும் என்ற நிலை தோன்றியது. விக்குகளுக்கும் டோரிகளுக்கும் இடையேயான கூட்டிணைப்பு ஏதும் நிலைத்திருக்காது என்பதும் தெளிவாகியது. டச்சுக்காரரும் பேரரசுப் படை

களும் ஆயத்தமாக இல்லாததால் மோஸெலுக்கு முன்னேறிச் செல்ல முடியும் என்ற மார்ல்பரோவின் நம்பிக்கை 1705ஆம் ஆண்டில் நாசமாகியது. மேலும், லீஜ் நகரத்தின்மீது வரும் தாக்குதலைத் தடுத்து நிறுத்துவதற்காக சார் (Saar) பகுதியில் இருந்து அவரைத் திரும்ப அழைத்தனர். மார்ல்பரோ பொறுமை யுடன் ஆணைக்குப் பணிந்தார். லோவெய்ன் (Louvain) என்னு மிடத்திற்குத் தென்கிழக்கில் இருந்த ப்ராபன்ட் (Brabant) படைகளை முறியடித்து ப்ரஸ்ஸல்ஸில் (Brussels) இருந்த ஃபிரெஞ்சுப் படைகளுக்கும் ஃபிரான்சின் எல்லையில் இருந்த படைகளுக்கும் இடையே ஊடுருவிச் சென்று பிற்காலப் போர்க்களமாகிய வாட்டர்லூவிற்கு அருகில் அதிக எண்ணிக்கையுள்ள ஃபிரெஞ்சுப் படையைச் சந்தித்தார். ஆனால், டச்சுக்காரர் அவருடன் தாக்குதல் செய்ய மறுத்துவிட்டனர்.

பேரரசர் லியோபால்டு இந்த ஆண்டில் இறந்தார். ஆயினும், அவருடைய வாரிசான ஜோசப், சுயநலக் கொள்கையையே தொடர்ந்து பின்பற்றினர். ஹங்கேரிக்கு எதிராகப் படைகளைக் குவித்தார். அதே சமயத்தில் இத்தாலியில் இருந்த அவருடைய படைகள் ஆல்ப்ஸ் மலைக்குத் துரத்தப்பட்டன. எந்தச் சமாதானத் திற்காக ஃபிரெஞ்சுக்காரர் மார்ல்பரோவிற்கு 2 மில்லியன் லிவ்ரிகள் கையூட்டாக அளிக்க முன் வந்தனரோ, அதே சமாதானத்திற்கு டச்சுக்காரர் செவிசாய்த்தனர். மார்ல்பரோ பண்பமைவுடைய முறையில் அதனைப் புறக்கணித்துவிட்டுப் பிரஷ்யா தள்ளாடியதால் பெர்லினுக்கும், ஆஸ்திரியாவிற்குப் பணநெருக்கடி ஏற்பட்டதனல் வியன்னவிற்கும் சென்றார். இவைகளைக் காட்டிலும் அவர் தமது மூலப்படைகளை இத்தாலிக்கு மாற்றித் தெற்கிலிருந்து ஃபிரான் சைத் தாக்கும் திட்டத்திற்குக் கால்கோள் நாட்டினர்.

நாம் ஸ்பெயினை வெற்றி கொள்ளாது சமாதானம் செய்து கொள்ள முடியாது என்பதை டச்சுக்காரருக்கு பிரிட்டிஷ் அரசாங்கம் திருத்தமாக எடுத்துரைத்தது. இலையுதிர்க்காலத்தில் பார்சிலோனு கைப்பற்றப்பட்டது அந்தக் கனவிற்கு உருவம் தருவதுபோல் இருந்தது. இதுவரையில் போர்ச்சுகீசிய அரங்கில் இழிந்த தோல்விகளே ஏற்பட்டன. நம் படைத் தலைவரான கால்வே (Galway) பல நாடுகளைச் சேர்ந்த படையினரின் நம்பிக் கையைப் பெறவில்லை. ஆனல், ஹெஸ்ஸே (Hesse) மட்டும் கேடலோனியாவைப்பற்றி முழு நம்பிக்கைகொண்டிருந்தார். ஜூன் மாதத்தில் படை ஒன்று லிஸ்பனை அடைந்தது. செவாய்க்கு உதவியளிக்கும் வாய்ப்பினை ஆராயவோ, அல்லது ஸ்பெயினின் கீழ்க்கரையைக் கைப்பற்ற முயலவோ செய்யலாம் என்னும்

ஆணைகளோடு அப் படை வந்தது. 1688ஆம் ஆண்டில் துணிகர மாகச் செயலாற்றிய விக்கு கட்சியைச் சேர்ந்தவரான பீட்டர் பரோ, படைத்தலைவராக அனுப்பப்பெற்ருர். பிரிவு மனப் பான்மையையும் மனம்போன போக்கையும் கொண்ட அவர், போர் அநுபவம் இல்லாதவர். அவருடைய அறிவு நயம், சாரா கோமகளாரைக் கவர்ந்து இருந்தது என்பதைத் தவிர அவருக்கு எதனுல் இப் பதவி அளிக்கப்பட்டது என்பது இன்னும் புரியாத புதிராகவே இருக்கின்றது. அப் படையின் திட்டம் பலமுறை மாற்றப்பெற்று இறுதியாக பார்சிலோனவில் இறங்குவது என்று தீர்மானமாகியது.

ஷோவெல்லினுடைய கப்பல்கள் அவர்களை பார்னுசிலோ நகருக்கு வடக்கே கரையில் இறக்கிய பிறகு, இத்தாலியைத் தாக்குவதா அல்லது ஸ்பெயினைத் தாக்குவதா என்ற வாதத்திலும், ஜெர்மானியருக்கும் பீட்டர்பரோவுக்கும் இடையே நடந்த பூசல் களாலும் மற்றுமொரு முறை செயலின்றிக் காலம் கழிக்கப்பட்டது. இறுதியில் நகரத்தின் தெற்கேயுள்ள மான்ட்ஜூச் (Montjuich) என்னும் கோட்டையைத் தாக்க யாவரும் ஒப்பினர். தாக்குதலில் ஹெஸ்ஸே கொல்லப்பட்டபோதிலும் மான்ட்ஜூச் கைப்பற்றப் பட்டது. அக்டோபர் மாதத்தில் பார்சிலோனவும் பணிந்தது. மாரிக் காலத்தில் நேசநாட்டினர் அரகானிலும் (Aragon) வேலன் ஷியாவிலும் (Valencia) தங்களுடைய அதிகாரத்தை நிலைநாட்டிக் கொண்டனர். இங்ஙனம் நேசப்படைகள் பிரிந்து இருந்ததைக் கண்டு, ஃபிரெஞ்சுப் படையொன்று 1706ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் பார்ஸிலோனவை முற்றுகையிட்டது. ஆனுல், லீக் (Leake) இந் நகரைக் கடல் வழியாகக் காத்தார். ஐந்தாம் ஃபிலிப், பிரன்னீஸூக்குப் (Pyrenees) பின்வாங்கினுர். கால்வேயின் (Galway) போர்ச்சுகீசியப் படை பெர்விக்கினுடைய படைகளைத் தீபகற்ப களங்களிலிருந்து பின்னடையுமாறு செய்தது. இக் களங் களில்தான் பின்னர் பிரிட்டிஷ் படையும் ஃபிரெஞ்சுப் படையும் மறு முறை போரிட்டன. ஜூன் மாதத்தில் கிழக்குமுகமாக மாட்ரிட் (Madrid) நகரை நோக்கிக் கால்வே சென்ருர்.

இதற்கிடையில் மார்ல்பரோவின் இத்தாலியத் திட்டம் தோல்வியுற்றது. டச்சுக்காரர் தங்கள் துருப்புகளை அனுப்பத் தவறியதாலோ, பிரிட்டிஷ் காபினெட் நடுக்கம் கொண்டதாலோ இத் தோல்வி ஏற்படவில்லை. ஆயின், இத்தாலியிலும் ஆல்சா ஸிலும் ஆஸ்திரியருடைய வீழ்ச்சியே இதற்குக் காரணம். மார்ல் பரோ, மனவருத்தத்தோடு கோட்டைகளைக் கைப்பற்றும் போர் முறையைத் தொடங்கினுர். ஆனுல், களைப்படைந்த தமது நாடு

பெரிதும் விரும்பிய சமாதானம், பகைவர்மீது ஒரு வெற்றி பெறுவதால் கிட்டும் என்று பதினன்காம் லூயி நம்பினர். எனவே, போரில் ஒரு முடிவு காணுமாறு வில்லிராய்க்கு ஆணை யிட்டார். மே மாதத்தில், லோவெய்னுக்கும் நாமூருக்கும் நடுவே ராமில்லீஸ் (Ramillies) என்னுமிடத்தில் ஃபிரெஞ்சுப் படைகள் நிலை கொண்டன. அவர்களது வலப்பக்க முன்னணி, மிஹெய்க்னி (Mehaigne) ஆற்றைச் சார்ந்திருந்தது. இடப்புற அணி கீடீ (Geete) ஆற்றின் ஆரம்ப இடத்தில் உள்ள சதுப்பு நிலத்தினல் காக்கப்பட்டிருந்தது. இடையில் குதிரைப் படைக்கு ஏற்றதான சிறந்த சமவெளி காணப்பட்டது. எண்ணிக்கையில் ஏறக்குறைய ஒன்ருக இருந்தபோதிலும் பீரங்கிப் படையில் ஃபிரெஞ்சுக்காரர் மேம்பாடுற்று இருந்தனர். ஓர் இரவில் தம் படைகளை நடத்திச் சென்று மே மாதம் 23ஆம் தேதி மிக உற்சாகத்தோடு மார்ல் பரோ தாக்குதலை ஆரம்பித்தார். அவர் ஒருமுறை குதிரையில் இருந்து கீழே தள்ளப்பட்டு அநேகமாகக் கொல்லப்பட்டு இருக்க வேண்டும். அவருடைய வாழ்க்கையிலேயே மிகுந்த மகிழ்ச்சி யூட்டிய அந்த நாளில் இதைத் தவிர வேறு இடர் ஒன்றும் ஏற்பட வில்லை. அவருடைய எளிய திட்டங்கள் கொண்ட முடிவுகளின் ஒளி ஆகியவற்றையும், பிரிட்டிஷ்காரர், டேனர், டச்சுக்காரர் போன்றவருடைய போர்த்திறமை ஆகியவற்றையும்விடச் சிறந்தனவற்றைக் காணுதல் அரிது. போர்க்களத்தில் முதல் பீரங்கி 2-30 மணிக்கு முழங்கியது. 6 மணிக்கு இறுதித் தாக்கு தலுக்குத் தயாராக இருந்தனர். டச்சு வீரர்கள் பகைவரை இடப்பக்கத்திலிருந்து பிடிவாதமாகத் தாக்கினர். டேனிஷ் குதிரைப்படை பெருவெற்றிபெற்றுப் பகைப்படையில் பிளவொன்றை ஏற்படுத்தி, அதன் பின்னர் ஒரு முழு அணியையும் சிதறடித்தது. அதே சமயத்தில் ஆர்க்னேயின் (Orkney) பிரிட்டிஷ் தரைப்படையோடு சென்ற மார்ல்பரோ, போலித் தாக்குதல் நடத் தினர். இத் தாக்குதலைப் பிரதான தாக்குதல் என்று பகைவர்கள் நம்பிய சமயத்தில் காற்றினும் கடிதே 39 குதிரைப்படை அணிகளையும், சில காலாட் படைகளையும் நடுமுனைக்கு அனுப் பினர். அதனல் ஃபிரெஞ்சுக்காரர் சிதறுண்டனர். அன்று நள்ளிரவில் போர்க்களத்திலிருந்து பன்னிரண்டு மைல்களுக் கப்பால் அழியாப் புகழ்பெற்ற மார்ல்பரோ கோடைகாலத் தளர் மேலங்கியோடு தரையில் படுத்துறங்கினர். வில்லிராய் 13,000 வீரரைப் போர்களில் இழந்தார். பல்லாயிரக்கணக்கான வீரர்கள் அவரைக் கைவிட்டுச் சென்றனர். பதினைந்து நாட்களுக்குள் ப்ராபன்ட்டும், கென்ட் (Ghent) வரையிலுள்ள ஃபிளாண்டர்சும் நேச நாடுகளிடம் சிக்கின. அக்டோபரில் படையெடுப்பு முடிந் ததும், மெனின் (Menin) நகரத்தையும் ஆஸ்டண்டையும் மார்ல்

பரோ தம்வசம் வைத்திருந்தார். தாழ் நாடுகள் அநேகமாக முழுதும் விடுதலை அடைந்தன. இப்போதும் பெருமை மிக்க இவ்வாண்டு வெறுமையாகிவிடவில்லை. தலைசிறந்த ஃபிரெஞ்சு வீரரான வெண்டோம் (Vendome) என்பவர் ஃபிளாண்டர்சைக் காக்க இத்தாலியிலிருந்து திரும்ப அழைக்கப்பட்டார். செப்டம்பர் மாதத்தில் இளவரசர் யூஜின் வியக்கத்தக்க வகையில் கார்டா ஏரியிலிருந்து (Lake Garda) அணிவகுத்து வந்து டூரின் என்னு மிடத்தில் பகைவரை அழித்தார். ஜூன் மாதத்தில் கால்வே, மாட்ரிட் நகரத்திற்குள் புகுந்தார். சமாதானத்திற்கு அடிப்படையாக இருப்பது ஸ்பெயின் முழுதும் கைப்பற்றுவது என்னும் பிரிட்டிஷாரின் கொள்கையை டச்சுக்காரர்கள் வெளிப்படையாக ஒப்புக் கொண்டனர். ராணியார் மார்ல்பரோவிற்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டதைப் போல அவர் அழியாத அமைதியைக் கொடுக்க வல்ல கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறந்த கருவியாக விளங்கினார். ஆனால், மேலும் வாள்கொண்டு பெற்ற வெற்றிகள் சிலவற்றைத் தவிர புகழார்ந்த ஆண்டுகள் முன்பே முடிவுற்றன. மேலும், 1707ஆம் ஆண்டிலிருந்து கூட்டிணைப்பும், பிரிட்டிஷ் காபினெட்டும் கலைய ஆரம்பித்தன.

திரும்பவும் கைப்பற்றப்பட்ட பெல்ஜியம், வெற்றியாளரிடையே' விரைவில் பிளவினை ஏற்படுத்தியது. டச்சுக்காரர் அங்கே ஆர்ச்டியூக்கின் உரிமையினை ஏற்றுக்கொண்டபோதிலும், பெரியதொரு 'தடை'ப் பகுதியை அமைக்க வேண்டுமென்றனர். மேலும் அப் பகுதியை அவர்கள் வெற்றிகொண்ட பகுதியாக நடத்தினர். இதனல், தங்களுடைய அரசுரிமையை நிறைவேற்ற முடியாத ஆஸ்திரியர், வேற்றுமை விதையினைத் தூவினர். அப் பகுதியின் கவர்னர் பதவியை மார்ல்பரோவிற்கு அளிப்பதாகக் கூறினர். அவரும் அதில் மயங்கினர். எனவே, அதற்குப் பிறகு டச்சுக்காரர் அவரை முழுதும் நம்பவில்லை. இங்ஙனம் ஆஸ்திரியர் தங்கள் எண்ணத்தில் ஓரளவு வெற்றிபெற்றனர் என்று கூறலாம். டச்சுக்காரருடைய விருப்பத்தை மதிக்கும் வகையில் மார்ல்பரோ பதவியேற்க மறுத்துவிட்டார் என்ருலும், போர் முடியும் வரை அப் பகுதியின்மீது கூட்டாதிக்கம் ஏற்படுத்தும் திட்டத்தினல் அவர்களுக்கு அமைதி கிட்டவில்லை. அதே போல் அவர்கள் கோரிய 'தடை'ப் பகுதியின் எல்லையை நாம் ஏற்றுக்கொள்ளவும் முடியாது.

போரில் அடிபட்டு, மேன்மேலும் வற்புறுத்திப் பொருளைப் பெறுபவராக டச்சுக்காரர்கள் விளங்கினர்கள் என்ருல், ஆஸ்திரியர்கள் மோசமான சுயநலவாதிகளாக இருந்தனர். பொறுமையுள்ள

கொடால்ஃபின் குறிப்பிட்டதைப் போல 'நாட்டின் நலனுக்கு நேர் எதிராக இல்லாத எண்ணம் எதையும்' அவர்கள் கொண்டிருக்க வில்லை. இங்கிலாந்திடமிருந்து பெற்ற கடன் உதவிகொண்டு தான் டூரினில் அவர்கள் வெற்றிபெற முடிந்தது. எனினும், 1707 ஆம் ஆண்டு தொடக்கத்திலேயே இத்தாலியை நடுநிலைமை நாடாகச் செய்யும் உடன்படிக்கையைச் செய்துகொண்டனர். அதன் விளைவாகப் பிற போர்முனைகளில் பயன்படுவதற்காக 20,000 ஃபிரெஞ்சுக்காரர் விடுவிக்கப்பெற்றனர். அடுத்தபடியாக கோமகனுரின் அந்த ஆண்டுக்கான திட்டத்தை ஆஸ்திரியர் சிதைத்தனர். அத் திட்டத்தின்படி, யூஜினும் செவாயும், பிரிட்டிஷ் கடற்படையின் துணையோடு டூலான்மீது அணிவகுத்துச் செல்ல வேண்டும். அதன் விளைவாக, நேச நாடுகளின் நிலை மிகவும் மோசமாக இருந்த ஸ்பெயின் நாட்டில் உள்ள ஃபிரெஞ்சுப் படைகள் திரும்ப அழைக்கப்பட்டுவிடும் என்று எண்ணினர். செவாய் மக்கள் இத்தாலியின்மீது உரிமை கொண்டாடியதைப் பொறுத ஆஸ்திரியர், மறுப்புக்கிடையே காலந்தாழ்ந்து செயலில் இறங் கினர். அதனால் டூலான் முற்றுகை பயனற்றதாயிற்று.

உண்மையில், ஸ்பெயினில் நடந்த நிகழ்ச்சிகள் டூலானில் திட்டமிட்ட நலன்களையெல்லாம் ஏற்கெனவே அழித்துவிட்டன. ஆஸ்திரியரையும் அவர்தம் கேடலான் (Catalan) நண்பர்களையும், புறச்சமயக் கூட்டாளிகளையும் காஸில் (Castile) மாகாண மக்கள் வெறுத்தனர். மேலும், போர்ச்சுகீசியரையும் மனதார வெறுத் தனர். அதுமட்டுமன்றி ஆஸ்திரியருடைய குறிக்கோள் வெற்றி பெறாத அளவிற்கு இழிந்ததேயாகும். உட்பகை சார்ந்த பூசல் களுக்குப் பிறகு 1706ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில்தான் அரகானில் இருந்து சார்லசும், வேலன்ஷயாவிலிருந்து பீட்டர் பரோவும், மாட்ரிட் நகருக்குக் கிழக்கே கால்வேயோடு சேர்ந்தனர். அதற்குள்பெர்விக், தம்முடைய சேனையினைச் சீர்திருத்தி அமைத்துக் கொண்டார். அவர் தலைநகரை திரும்பக் கைப்பற்றினர். மேலும், பிரிட்டிஷ்காரர் போர்ச்சுகலோடு தொடர்புகொள்ள முடியாதவாறு தடுத்தார். நேசப் படைகள், களைப்போடு வேலன்ஷியாவிற்குப் பின்வாங்கின. இத்துணைத் தொல்லைகளுக்கிடையே அவர்களுடைய நற்பயனால் பீட்டர்பரோ பதவியிலிருந்து நீக்கப்பெற்றார். மார்ல் பரோ அவரைப்பற்றி எழுதும்போது, 'அவர் நாடு முழுவதையும் இழக்கக்கூடிய ஆபத்தினைக் கொண்டுவந்தார்' எனக் குறிப் பிட்டார். 1707ஆம் ஆண்டில் நேச நாட்டினர் தங்களுக்குக் கிடைத்த இறுதிவாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளத் தவறினர். தங்களுடைய படைகளைக் கலைத்தனர். சார்லஸும் ஸ்டான் ஹோப்பும் (Stanhope) கேடலோனியாவிற்குச் சென்றனர்.

அதே சமயத்தில் மாட்ரிட் நகரத்தைத் திரும்பக் கைப்பற்றுவதற்காக கால்வே புறப்பட்டார். ஏப்ரல் மாதம் 24ஆம் தேதி அல்மான்ஸா (Almanza) என்னுமிடத்தில் உறுதியாக நிலை கொண்டிருந்த பெர்விக்கைத் தாக்கினர். அங்கே பெருஞ் சேதத்தோடு தோல்வியுற்றார். அவர் வெற்றிகரமாகப் பின் வாங்கினர் என்றாலும் வேலன்ஷியாவும், பிரிட்டிஷ் கப்பல்கள் செல்லக்கூடிய சில நகரங்களும் நீங்கலாக ஸ்பெயின் நாடு இழக்கப்பட்டது. எனினும், அதுவரையில் அதற்காக இங்கிலாந்து ஒவ்வோர் ஆண்டும் ஒரு மில்லியன் செலவிட்டுவந்தது.

இத் தொகை இத்தாலியிலிருந்து விடுபட்ட சக்தியை ஹங்கேரி நாட்டுப் புரட்சியில் தொடர்ந்து பயன்படுத்திய ஹாப்ஸ்பர்கினருக்கு நாம் அளிக்கவேண்டிய தண்டத்தில் பாதியாகத்தான் காணப்படுகின்றது. ஹாப்ஸ்பர்கினர் ஸ்வீடனின் அரசரோடு பகைமை பூண்டு இருந்தனர். இப்போது அவர்களுடைய சேனை லீப்ஸிக்கிற்கு (Leipzig) அருகில் இருந்தது. இத்தகைய போர் மேகத்தைக் கலைப்பதற்காக மார்ல்பரோ சார்லஸிடம் செல்லவேண்டி இருந்தது. மே மாதத்தில் அவர் சார்லஸிடமிருந்து வந்தவுடன். வில்லார்ஸின் (Villars) படை கருங்கானகத்தைக் காத்து நின்ற நமது அணிகளைத் தாக்கியது எனவும், ஜெர்மனிக்குள் புகுந்து டான்யூப் வரையில் கொள்ளையிட்டுச் சென்றனர் எனவும் கேட்டறிந்தார்.

ஆயின், எதனாலும் டச்சுக்காரரைச் சண்டையிடத் தூண்ட முடியவில்லை. தங்களுக்குத் தேவையான யாவற்றையும் அநேகமாக அடைந்துவிட்ட அவர்கள் வெறுப்பிற்குள்ளான ஆஸ்திரியருக்காகவோ அல்லது வாணிபச் செல்வாக்கு மிகுந்து தங்களுக்குத் தடைப்பகுதியைத் தரத் தயங்கிய பிரிட்டிஷ்காரருக்காகவோ மேலும் உயிர்களை இழக்கத் தயாராக இல்லை. எனவே, 1707 ஆம் ஆண்டு கோடைக்காலம் முழுதும் மார்ல்பரோ வெண்டோமிற்கு எதிராக ப்ரபான்டைக் காத்து நின்றார். ரைன் ஆற்று உரிமை பற்றி எழுந்த பிளவினைச் சமாதானம் செய்துவைத்தார். அதே சமயத்தில் அவருடைய கவனம் ஸ்வீடன் நாட்டு மக்கள்மீதும், வியன்னாமீதும், டூலான்மீதும் இருந்தது. அதைவிட அவர் லண்டன் மீது தமது விழிகளை ஆர்வத்தோடு செலுத்தினர். அங்கே நன்மை பயக்கும் சமாதானம் ஏற்படவேண்டுமானால், நாம் மற்றுமோர் ஆண்டிற்குப் போர்புரிய வேண்டுமென்று கூறிய அவருடைய ஆலோசனைக்கே ஆபத்தைத் தேடித்தரும் வகையில் கட்சிப்பூசல்கள் தீவிரமாக இருந்தன.

இதுவரையில் அரசாங்கத்தை ஒன்றுபடுத்தி வைத்திருந்த அனைவரும் பல வழிகளில் கட்சி ஆட்சியை வெறுத்தனர். ராணியார்

'நாட்டின் நலனைத் தவிர வேறெந்தக் கருத்தும் கொள்ளாத நான், ஒரு குறிப்பிட்ட கூட்டத்தினரின் அதிகாரத்தின்கீழ் அவதியுற வேண்டுமா'? என்று பொருமினார். எல்லாக் கட்சிகளும் ஒரே மாதிரியாகத்தான் இருந்தன என்று கோமகனார் எப்போதும் தம் மனைவியாரிடம் கூறுவது வழக்கம். மேலும், 'எந்தக் கட்சியாலும் ஆளப்பெறுதல் கூடாது. ஆனால், இங்கிலாந்திற்கு எது நன்மை என்று கருதுகிறேனோ அதைச் செய்வது' என்பது அவருடைய குறிக்கோளாக இருந்தது. கொடால்ஃபினும் அவ்வாறே பேசினார். காமன்ஸ் சபையில் மிகுதியான நம்பிக்கைக்கு உரியவராக இருந்த ஹார்லியைப் பொறுத்தவரையில், இத்தகைய எண்ணம் அறிவுக்குகந்த கருத்தாகவும், பயந்த மனப்பாங்கின் செயலாகவும் இருந்தது. அவருடைய வாழ்நாள் முழுதும் கூட்டிணைப்புகளை ஏற்படுத்துவதிலும், மூன்றும் வில்லியம் அரசியல் திட்டத்தினைப் பழுதாக்குவதைத் தடுப்பதற்காக 'நாட்டு' விக்கினரையும் டோரிகளையும் ஒன்றாக இணைப்பதிலும், அரசுரிமை நிர்ணயச் சட்டத்தை நிறைவேற்றுவதிலும் அல்லது 1703-4ஆம் ஆண்டுகளைச் சார்ந்த வன்முறைச் செயல்புரியும் டோரிகளை அழிப்பதிலும் செலவிடப்பட்டது. 'உங்கள் நம்பிக்கைக்குரிய ஹாரி (Harry)' என்று கையெழுத்திடும் நுண்ணறிவு பெற்ற சீடரான செயின்ட் ஜான் என்பவர் அவருடைய துணையாக இருந்தார். கட்சி வேற்றுமைகள் நீக்கப்பெறுதல் வேண்டுமென்று ஜான் பிரசாரம் செய்தார்.

இவர்கள் எல்லாம் 'கட்சி' என்று எழுதியபோது, டோரிகளைக் காட்டிலும் நன்கு வரையறுக்கப்பெற்ற கூட்டமாக இருந்த விக்குகளைத்தான் குறித்தனர். ஏனெனில், அவர்கள் சோதனைச் சட்டங்களினால் பதவியிலிருந்து விலக்கப்பெற்ற புறச்சமயத்தார் போன்றவர்களின் குரலாக இருந்தனர். மேலும், நகர ஆதரவாளர்களின் நெருங்கிய அமைப்பின்மூலமாகவும் உறுதிப்பட்டுநின்றனர். இவையே தவிர வேறு காரணங்களும் இருந்தன, சாமர்ஸ், ஹாலிஃபாக்ஸ், வார்ட்டன் போன்ற அவர்களது தலைவர்கள் மிகுந்த திறமைசாலிகள். எதிர்காலச் சக்திகளை உருவாக்குவதில் பங்குபெற்று, அச் சக்திகளின்மூலமாகப் பயனடைந்தவர்கள். பிராட்டஸ்டென்டு வாரிசு உரிமைக்கும், பணக்காரர் நலன்களுக்கும், சமயப் பொறைக்கும் தொண்டாற்றி, ஃபிரான்ஸைவிட இங்கிலாந்தை உயர்த்தினர். அவர்களிடம் கட்சிக் கும்பலின் திண்மையும் தீமைகளும் ஒருங்கே காணப்பெற்றன. அவர்களிற் சிலர் பதவிகளைத் தங்களுக்குள்ளே பகிர்ந்துகொள்ள விரும்பினர். ஆயின், எல்லோரும் அதிகாரத்தின்மீது ஆசைவைத்தனர். சாமர்ஸும் சண்டர்லண்டும் தங்கள் ஆட்சிக் காலங்களில்

டோரிகளை யாகோபியர் என்று தாக்கினர். இக் குற்றச்சாட்டினை நாம் அப்படியே உண்மை என்று ஏற்றுக்கொள்ள முடியாத போதிலும் அவர்களிடம் காணப்பெற்ற பொருள்களைப் புரிந்து கொள்ளும் தன்மையும் மன்வுறுதியும், ரோசெஸ்டருடைய வன்முறைச் செயல்கள் அல்லது நாட்டிங்காமின் பித்துக்கொள்ளித் தனம் ஆகியவற்றிற்கு எதிர்மாறானவையாகத் திகழ்ந்தன.

டோரிகளுடைய தவறுகள்தான் விக்குகளுக்குப் பெரிதும் உதவின. அவர்களுடைய பத்திரிகைகளும் கவர்ச்சியற்ற சொற்போர்களும், ஸ்காட்லாந்தியர், புறச் சமயத்தார், டச்சுக்காரர் ஆகிய எல்லோரையும் தாக்கிக்கொண்டே இருந்தன. 'திருச்சபைக்கு ஆபத்து வந்துவிட்டது' என்ற அவர்தம் கூக்குரல், உயர் திருச்சபையைச் சார்ந்தவரான ராணியாரின் விரோதத்தைத் தேடித் தந்தது. அவர்கள் 1706ஆம் ஆண்டு கண்மூடித்தனமான ஆத்திரம்கொண்டிருந்தனர். அதன் காரணமாகப் பெருந்தவறு செய்துவிட்டனர். ராணியாரின் பகைமையும் அவருடை உடல் நலம் சீர்குலைவதையும் கண்ட டோரிகள் ஹனோவரின் தேர்வாளரான சோபியாவை இங்கிலாந்திற்கு வரவழைக்கவேண்டுமென்று தீர்மானித்தனர். எலிசபெத் தம்முடைய வாரிசைப்பற்றிச் சொல்லக் கேட்டபோது, எலிசபெத் ராணியார் கடுஞ்சினங் கொண்டதைப் போல ஆன் ராணியாரும் இத் தீர்மானத்தை அறிந்து ஆத்திரமடைந்தார். விக்குகள் கொடால்ஃபினோடு இணைந்து டோரியினரைச் சூழ்ச்சித் திறத்தால் வென்றனர். அவர்கள் காப்பாளர் சட்டத்தினை (Regency Act) நிறைவேற்றினர். அதன்படி முக்கிய பதவிகளில் இருப்பவர்கள் தொடர்ந்து அதிகாரத்தில் இருந்தனர். அதே சமயத்தில் ராணியார் இறந்த பிறகு அமைதியான முறையில் வாரிசு உரிமையை அளிப்பதற்காக அப்போது இருக்கும் பாராளுமன்றத் தொடர் நீடிக்கவேண்டும். பிரிவி கவுன்சிலைக் காபினெட்டிற்கும் மேலானதாக ஆக்கக்கூடியதும், காமன்ஸ் சபையினரை அமைச்சர் பதவியிலிருந்து விலக்கக்கூடியதுமான அரசியல் நிர்ணயச் சட்டத்தின் துணை வாசகங்களை ரத்து-செய்யவும் இவ் வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொண்டனர்.

வாரிசு உரிமை, ஸ்காட்லாந்துப்போர் ஆகியவற்றிற்கு அளித்த உதவிக்குப் பிரதியாக சண்டர்லண்டிற்குக் காபினெட்டில் இடம் அளிக்கவேண்டுமென்று கோரினர். சண்டர்லண்டின் மாமியாரான சாரா கோமகள் முதலில் தம் கணவரின் மனத்தை மாற்றினார். அவரும் மனமின்றி ஒப்புக்கொண்டார். பிறகு கொடால்ஃபின் ராஜினமா செய்துவிடுவதாக அச்சுறுத்தியதன் விளைவாக ராணியாரும் சம்மதித்தார், இங்ஙனம் சண்டர்லண்டு உள்துறைச்

செயலராகப் பதவியேற்ருர். இது சுயேச்சை உறுப்பினரை மன முறிவு கொண்டவர்களாகச் செய்யும் என்று ஹார்லி அறிவித்தார். ஆனல், ஐரோப்பாவில் தோன்றிய போரினுலும் உள்நாட்டுப் போரின் அச்சத்திஞலும் கொடால்ஃபின் முன்னேறிஞர்.

வில்லியத்தின் நிர்ணயத் திட்டம் ஸ்காட்லாந்து மக்களால் ஏற்றுக்கொள்ளப்பெறவில்லை. அரசியிஞல் கட்டுப்படுத்தப் பெற்ற பிரஸ்பிடீரியன் கொள்கை கிர்க் திருச்சபையைத் திருப்தி செய்வதாக இல்லை. கிளன்கோ காலத்திற்குப் பிறகு எப்போதைக் காட்டிலும் ஹைலாந்துப் பகுதிகள் அதிக அளவு மன நிறைவற்று இருந்தன. அதே சமயத்தில் டேரியன் (Darien) விவகாரம் நாட்டு மக்களைக் கொதிப்படையச் செய்தது. இத் திட்டத்தில் மேற்கிந் தியத் தீவுகளோடு வாணிபத்தைப் பெருக்குவதற்காக ஸ்காட் லாந்துக் கம்பெனி ஒன்றை நிறுவுவதற்காக எழுந்தது. அது 1698 ஆம் ஆண்டில் பனமா (Panama) நீர்ச்சந்திக்குத் தெற்கே டேரியன் நில இடுக்கில் (Darien Isthmus) குடியேற்றம் ஒன்றினை ஏற்படுத் தியது. இங்கிலாந்து பாங்கு உருவாவதற்குப் பெரிதும் பாடுபட்ட வில்லியம் பேட்டர்சன் (William Paterson) இத் திட்டத்திற்கு உதவியாக இருந்தார். இக் குடியேற்றத்திற்காகத் தேர்ந்தெடுக் கப் பெற்ற இடம் மிக மோசமானது. இத் திட்டத்தைப் பாராளு மன்றம் ஏற்றுக்கொள்ளாததால் ஆங்கிலேயர் தங்கள் முதலீட்டுப் பணத்தை திரும்ப எடுத்துக்கொண்டனர். வலித்தாக்குதல் என்று கூறி ஸ்பானியர் அதனை எதிர்த்தனர். பங்கீட்டு உடன்படிக்கை களில் அதிக அக்கறை காட்டிய வில்லியம், குடியேற்ற நாடுகளின் கவர்னர்கள் அத் திட்டத்திற்கு உதவியளிக்கக்கூடாது என்று தடுத்தார். மூன்று முறை எடுக்கப்பெற்ற வாணிப முயற்சிகள் கேலிக் கூத்தாகவும் துன்பியல் நாடகங்களாகவும் முடிந்தன. கொள்ளை நோய்களும் மனக்கசப்பும் மலிந்திருந்தன. போலி மயிர்க் குல்லாய்களும் பைபிள்களும், ஆடையற்ற அநாகரிகர் களுக்காகக் கொண்டு செல்லப்பட்டன. எஞ்சியிருந்தவர்கள் ஸ்பானியர் படையெடுத்துவருவர் என்ற அச்சத்திஞல் அங்கிருந்து ஓடிவிட்டனர். பல நூற்றுக்கணக்கான ஸ்காட்டிஷ் குடும்பத் தினரின் முதலை இழந்த பிறகு, இக் கம்பெனி மூடப்பெற்றது. அதே சமயத்தில் பல ஆண்டுகளாக அறுவடைகள் மோசமாக இருந்தன. அதிலிருந்து வில்லியம் எழுதியதைப் போல ஸ்காட் லாந்தியர் 'சீற்றமுற்ற வெறியர்'களாக மாறினர். எனவே, தாம் இறக்கும்போது வில்லியம் ஸ்காட்லாந்துஐக்கியத்திற்காகப்பரிந்து பேசிஞர். சமயம், இனம், ஏழ்மை ஆகிய மூன்றும் ஸ்காட்லாந்தின் கூறுகளாகும். ஒரு மில்லியன் அளவே இருந்த அதனுடைய மக்கள் உயிர் வாழ்வதற்கான தாழ்ந்த வரம்பினை உடைய வாழ்க்கையையே

பெற்று இருந்தனர். அதனுடைய நில குத்தகை முறை இடைக்காலத்தைச் சார்ந்ததாகவும், குறுகிய காலநிலேயற்ற முறையாகவும் இருந்தது. நில அடைப்புமுறை அவர்கள் அறியாத ஒன்று. நிலத்தைச் செம்மைப்படுத்துதல் முடியாத செயல். நிலச் சொந்தக்காரர் கொடுமைமிக்க தலேவராக இருந்தார். வலிய கோட்டையில் வாழ்ந்த அவர் நிலமானியமுறை வருவாய், புறக் கூண்டுப் பொருள்கள், சாலமன் மீன், பண்ணேயாளர் கொன்ற விலங்குகள் ஆகியவற்றைப் பெற்று வாழ்ந்தார். இவற்ருேடு காளேகளேப் பூட்டி மலேச்சரிவுகளேப் பண்படுத்திப் பயிர்விளேத்த காட்டியர்களிடமிருந்து (cottiers) நிலவரியைப் பொருள் வாயிலாகப் பெற்ருர். ஸ்காட்லாந்தில் பள்ளத்தாக்குகளே வடியச் செய்வதற்குப் பணம் இல்லே. அநேகமாகக் கோதுமை விளேவ தில்லே. ஆடைக்காகக் கம்பளம் பயன்படுத்தப்பெற்றது. சுருங்கக்கூறின் ஸ்காட்லாந்தின் பொருளாதார வாழ்வு பதினுன்காம் நூற்ருண்டு இங்கிலாந்தை ஒத்திருந்தது. அவர் களுடைய பரபரப்பு மிகுந்த நகரமாகிய கிளாஸ்கோவில் (Glasgow) 12,000 மக்கள்தான் வாழ்ந்திருந்தனர். இருபதுக்கும் குறைவான கப்பல்களே இருந்தன. முரட்டுத் துணி, மீன், போர்டருக்கு (Border) அனுப்பிய சிறு கரிய கால்நடைகள் ஆகியவையே முக்கிய ஏற்றுமதிப் பொருள்களாகும். நாட்டு வருமானம் 160,000 பவுன்கள்தான். ஆங்கிலேயருடைய வணிகப் போட்டி ஸ்காட் லாந்தியரைக் குடியேற்றங்களிலிருந்து விலக்கியது. அதே சமயத்தில் இடைக்காலக் கட்டுத் திட்டங்களினுலும், அரச பரோக் களுக்கு அளிக்கப்பெற்ற சலுகைகளினுலும் உள்நாட்டு வாணிபம் தடைசெய்யப்பட்டது. ஹைலாந்து எல்லேக்கப்பால் வறுமை மேலும் கொடியதாக இருந்தது. இந்த வறுமைநிலே அநேகமாகப் பண்டைக்கால அமைப்பின் பகுதியாகவே காணப்பெற்றது. இவ்விடங்களில் தலேவனுடைய கட்டளேக்குப் பணிந்து இருமுனே வாள்களேயும் கட்டாரிகளேயும் சுமந்த வீரர்கள் வருவர். பாணர் களும் குழலூதுபவரும் அவர்களுடைய உணர்ச்சியைத் தூண்டினர். அவர்களே அடைவதற்குச் சாலேகள் ஏதுமில்லே.

1688ஆம் ஆண்டுப் புரட்சி இத்தகைய பயங்கரமான நாட்டினேத் தடவிச்சென்றது. கிர்க் திருச்சபை ஏற்றுக்கொள்ளப் பெற்றபோதிலும், சமயப்பொறைச் சட்டம் ஏதும் இல்லே எனினும், ஆறில் ஒரு பங்கினதான பாரிஷ்களில் எபிஸ்கோபிய குருமார் களின் ஆதிக்கம் இருந்தது. இவர்கள் அதிகமாக அபர்டீனிலும் ஹைலாந்து எல்லேயிலும் குவிந்திருந்தனர். தாங்கள் இறந்த பிறகு பிரஸ்பிடீரியரே குருமார்களாக வருவார்கள் என்று உணர்ந் ததால் அவர்கள் மிகுந்த மனக்கசப்புடன் வாழ்ந்தனர். இங்ஙனம்

இங்கிலாந்தில் டோரிகளாக இருக்கக்கூடியவர்கள் ஸ்காட்லாந்தில் யாகோபியராக இருந்தனர். செல்வந்தர்களிடையேயும் இந்த நிலை காணப்பட்டது. புரட்சியின் பலனாக ஆர்கைல் முதன்மையான வரானார். அதனால், அதோலும் வடமேற்கிலிருந்த பகைக்குடும்பங் களும் ஸ்டுவர்டு அரச மீட்சியை ஆவலோடு எதிர்நோக்கினர். ஸ்டேர் என்பவரின் குயின்ஸ்பரியின் ஏர்ல் பிரபுவான டக்ளாஸ் (Douglas of Queensberry) வில்லியத்தின் பேராளாக இருந்தார். அவருடைய பகைவரான ஹாமில்டன் (Hamilton) டக்ளாஸ் குடும் பத்தைச் சேர்ந்தவரானபோதிலும் ஸ்டுவர்டு குடும்பத்தோடு நெருங்கிய இனத்தொடர்பு உடையவர். எனவே, அவரும் சதியில் இறங்கினர். தென்மேற்கில் வாழ்ந்த காமிரோனியர்கள் முழுதும் அடக்கப்பெறுமல் இருந்தனர். ஏராஸ்டியன்கள் (Erastians) ஆங்கிலேயர், கத்தோலிக்கர் ஆகியோருக்கு எதிராகக் கலகங்களை விளைவித்த அவர்கள் எடின்பரோவைத் தாக்க எப்போதும் ஆயத்தமாக இருந்தனர்.

எளிதாகப் பயன்படுத்திக்கொள்ளக்கூடிய 'ஆணைப் பிரபுக்கள்' புரட்சியின் விளைவாக நீக்கப்பெற்றனர். அதனல், தன்னுடைய அதிகாரத்தைத் திடீரென்று அறிந்த ஒற்றைச்சபைப் பாராளுமன்றத்தை அரசர் நேருக்குநேர் சந்திக்கவேண்டி யிருந்தது. இதன் காரணமாக ஆட்சிபுரிவது கடினமாகியது. எனவே, கவுன்சிலர்களின் அதிகாரம், பதவி ஆசை, ஊழல் ஆகிய வற்றின் அடிப்படையில் அரசர் ஆதரவுக் கட்சி ஒன்று தோன்றி யது. இதனை நாட்டுப்பற்று மிக்கவர் தாக்கினர். எனினும், அவர்கள் இங்கிலாந்தோடு தொடர்பு கொண்டால்தான் ஸ்டுவர்டு அரச மீட்சியைத் தடுக்க முடியும்; பிரஸ்பிடீரியைக் காக்க முடியும் என்னும் இறுதி உண்மையில் உறுதியாக நின்றனர். அதற்கு எதிராக 'நாட்டு'க் கட்சி தோன்றியது. அஃது அடிப்படையில் தேசிய எதிர்க்கட்சியாக இருந்தது. ஆனல், பிரஸ்பிடீரியருக்கும் யாகோபியரைச் சார்ந்தவருக்கும் இடையே குறுக்கும் நெடுக்கு மான பிரிவு காணப்பட்டது. சால்டோனைச் (Saltoun) சார்ந்த ஃபிளட்சர் (Fletcher) போன்ற நடைமுறைக்கொவ்வாத கருத்து நிலையாளர்களும், ஏமாற்றமடைந்த அதிகாரிகளும், நாட்டுப்பற்று மிகுந்த நிலக்கிழார்களும், ஹாமில்டன் போன்ற ஐயத்திற்குரியவர் களும், அவர்களையன்றிப் பிராட்டஸ்டென்ட், கத்தோலிக்கச் சமயங்களைச் சார்ந்த யாகோபியரும் இக் கட்சியில் இருந்தனர்.

ஆன் ராணியார் அரியணையேறியபோது டேரியன் விவகாரத்தை மறக்காத ஸ்காட்லாந்தியர், அரசுரிமை நிர்ணயச் சட்டத்திஞலும் போர் அறிவிப்பினலும் மேலும் ஆத்திரமடைந்

தனர். எபிஸ்கோபியச் சமயத்தை மீட்க முடியும் என்ற டோரி களின் நம்பிக்கையினுல் கிர்க் திருச்சபை பீதி அடைந்தது. அதே சமயத்தில் ஸ்காட்லாந்தில் மூவாண்டுச்சட்டம் இல்லாத காரணத் தால் 1689ஆம் ஆண்டில் தோன்றிய பிரத்தியேகப் பாராளு மன்றம் கலையாமல் தொடர்ந்து பணியாற்றியது. அதனுல், 'நாட்டு'க் கட்சி பாராளுமன்றத்தினின்றும் பிரிந்து சென்றது. மேலும், அந்த எஞ்சிய பாராளுமன்றமும் ஐக்கியத்திற்காக ஆணை யாளர்களை நியமித்தபோதிலும் வாரிசு உரிமையை நிர்ணயிக்க வில்லை. அவ்வாறு அனுப்பப்பெற்ற ஆணையாளர் 1702-3-ல் வெஸ்ட்மினிஸ்டரில் கூடியபோது ஆங்கிலக் காமன்ஸ் சபையில் டோரி கட்சியினர் செல்வாக்குச் செலுத்தினர். டோரியின் விவகாரத்தைப்பற்றியும் வரிவீதங்களைப்பற்றியும் வேற்றுமைகள் தோன்றின. இங்ஙனம் அந்த மாநாடு முறிந்தது.

ஆனுல், 1703ஆம் ஆண்டு புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்காட்லாந்துப் பாராளுமன்றம் நிகழ்ச்சிகளின் போக்கை மாற்றியது. மந்திரி சபையில் மாறுதல் தோன்றியது. அறிவுக் கூர்மையுள்ள குயின்ஸ்பரி பிரபுவோடும் சீ:பீல்டோடும் (Seafield), அதோலும் சில கெவலியரும் அமைச்சராகச் சேர்ந்தனர். இந்த மாற்றம் அரச ஆதரவாளர்களை வசப்படுத்துவதற்காக ஏற்பட்டது. என்றுலும் அவர்கள் தப்புக் கணக்குப் போட்டுவிட்டனர் என்பதைத் தேர்தல்கள் நிரூபித்தன. 'நாட்டு'க் கட்சி வலுவடைந்தது. பாராளு மன்றக் கூட்டமோ கேடு பயப்பதாக இருந்தது, 'நாட்டு'க் கட்சி யினரும் யாகோபியரும் ஒன்றுக இணைந்து, பிற்காலத்தில் அரசர்கள் பாராளுமன்றத்தின் அனுமதியின்றிப் போரில் இறங்கு வதைத் தடுக்கும் சட்டம் ஒன்றை நிறைவேற்றினர். மேலும், ஹனேவிரிய வாரிசுரிமையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற அரசாங்கத்தின் கோரிக்கையை நிராகரித்தனர். சில சமயங்களில் உறுப்பினர் கத்தியின்மீது கையைக் கொண்டுசெல்லுமளவிற்கு பலத்த வாக்குவாதங்கள் நடந்தன. பல மாதங்களுக்குப் பிறகு பாதுகாப்புச் சட்டம் உருவாக்கப்பெற்றது. அதன்படி ஸ்காட் லாந்து அரசுக்கு வாரிசாக வருபவர் ஸ்டுவர்டு குடியைச் சார்ந்த பிராட்டஸ்டென்ட் சமயத்தவராக இருக்கவேண்டும். அதே சமயத்தில் இங்கிலாந்தின் வாரிசாக நியமிக்கப்படுபவராக இருத்தல் கூடாது. அப்படியே இதற்கு மாருக நடக்கவேண்டு மாஞல் 'அரசினுடையதும்' நாட்டினுடையதுமான மானத்தையும் உரிமையையும் காப்பதற்கான நிபந்தனைகளைப் பாராளுமன்றம் அவரிடமிருந்து பெற்ற பிறகே அது நடக்கமுடியும். அந்த நிபந் தனைகளில் ஸ்காட்லாந்தின் சமயம், அடிக்கடி கூடும் பாராளு மன்றங்கள், தடையற்ற வாணிபம் ஆகியவை அடங்கும். அதே

சட்டம் உடல் திறமுடையவர் அனைவரும் போர்ப்படை தாங்க வேண்டுமென்று விதித்தது. ராணியார் அதனை ஏற்க மறுத்த போது 'உரிமை வேண்டும், மானியம் கிடையாது' என்ற கூக்குரல்களுக்கிடையே ஸ்காட்டியப் பாராளுமன்றம் ஒத்தி வைக்கப்பட்டது.

1704ஆம் ஆண்டில் யாகோபியச் சதிகளும் அவைபற்றிய வதந்திகளும் ஸ்காட்லாந்தில் மிகுந்திருந்தன. இந்த நிலை குயின்ஸ்பரிக்கும் அவரது கெவலிய நண்பர்களுக்குமிடையே பிளவினைத் தோற்றுவித்தது. அதனால், குயின்ஸ்பரியை நீக்கிவிட்ட கொடால்ஃபின் 'நாட்டு'க் கட்சியில் இருந்த மிதவாதிகளான டுவீட்டேல் (Tweeddale), ராக்ஸ்பர்க் (Roxburgh) போன்றோரைக் கொண்டு ஆட்சி செலுத்த முயன்றார். ஸ்காட்லாந்திற்குச் சில உரிமைகளை வழங்குவதென்றும், அதற்காக அவர்கள், வாரிசுரிமையை ஏற்றுக் கொள்வது என்றும் ஒப்பந்தம் ஆகியது. எனினும், அதிருப்தி அடைந்த குயின்ஸ்பரியைச் சார்ந்தவர்களை உள்ளடக்கி இருந்த பெரும்பான்மையினர், பாதுகாப்புச் சட்டம் ஏற்றுக்கொள்ளப் பெறவில்லையென்றால் மானியம் வழங்க முடியாது என்றனர். ப்ளன்ஹிம் சண்டை தொடங்கும்போது இருந்த சூழ்நிலை இதுவே. ஊதியம் பெறாத சேனை ஒன்றைத் தவிர ஸ்காட்லாந்து, பாதுகாப்பு இன்றி இருந்தது. அச் சேனைக்கு இங்கிலாந்திலிருந்து பணம் அளிக்கப்படுமானால் புரட்சிக் கலகமே தோன்றிவிடும். அதே சமயத்தில் மார்ல்பரோ வெற்றியடையவில்லையென்றால் பகைவர் ஸ்காட்லாந்தின்மீது படையெடுத்து வரக்கூடும். எனவே, குறைந்த கேட்டினை விளைவிக்கக்கூடிய பாதுகாப்புச் சட்டத்தை ஏற்றுக்கொள்ளுமாறு ஆன் ராணியாருக்குக் கொடால்ஃபின் ஆலோசனை கூறினார். இச் சட்டம் ராணியார் இறப்பதற்கு முன் திருத்தப்படவில்லையென்றால் பிரிட்டிஷ் தீவினை இரு நாடுகளாகப் பிரித்துவிடும்.

கொடால்ஃபின் விக்குகளோடு இணைந்ததில் இத்தகைய நிலையற்ற கொள்கை மாறியது. ப்ளன்ஹிம் வெற்றியினால் டோரிகளை அவரால் எதிர்க்க முடிந்தது. ஸ்காட்லாந்திற்கான ஓர் ஏற்பாட்டைச் செய்யவேண்டியது இன்றியமையாததாக இருந்தது. இந்த இரண்டுக்காகவும் விக்கு ஜன்டோவுடன் கொடால்ஃபின் ஒப்பந்தம் செய்துகொண்டார். சாமர்ஸ் அளித்த ஊக்கத்தினால் ஆங்கிலப் பாராளுமன்றம், ஐக்கிய ஆணையாளரை நியமிக்கும் அதிகாரத்தை ராணியாருக்கு வழங்கிய அந்நியர் சட்டத்தை 1705-ல் நிறைவேற்றியது. ஆனால், அதே சட்டம் 'ஐக்கியம் ஏற்படாவிட்டாலோ அல்லது இங்கிலாந்தைப்போல்

வாரிசு உரிமை நிர்ணயிக்கப்பெறுவிட்டாலோ' அடுத்த கிறிஸ்துமஸ் நாளிலிருந்து ஸ்காட்லாந்தியர் அந்நியர்போல் நடத்தப்பெறுதல் வேண்டுமென்று அறிவித்தது. மேலும், அவர்களுடைய கால்நடை, நிலக்கரி, லினன் துணி ஆகியவற்றின் இறக்குமதியை நிறுத்தவேண்டும் என்றும், அவர்களுக்கு ஏற்றுமதி செய்யப்பெறும் ஆங்கிலக் கம்பளத்தைத் தடை செய்யவேண்டுமென்றும் குறிப்பிட்டது.

ஸ்காட்டிஷ் மக்களுடைய வெறுப்பு எத்துணை ஆழமானது என்பது இளவேனிற் காலத்தில் ஆங்கில மாலுமியான கேப்டன் கிரீனுக்கும் (Captain Green), அவருடைய இரு கப்பலோட்டிகளுக்கும் அநியாயமாக மரண தண்டனை அளித்தமையிலிருந்து தெரியவருகின்றது. அந்த மாலுமிகள் டோரியன் கம்பெனிக்கு எதிராகக் கடற்கொள்ளை நடத்தினர் என்ற குற்றம் சாட்டப்பெற்றது. ராணியார் ஒறுப்புக் குறை (reprieve) ஆணையை விடுத்த போதிலும் மக்கள் கூட்டத்தின் அச்சுறுத்தலுக்குப் பணிந்த நீதிபதிகள் அவர்களுக்கு மரண தண்டனை வழங்கினர். இத் துயர நிகழ்ச்சியும் விக்குகளின் வற்புறுத்தலும் ஸ்காட்லாந்தில் 'புதிய கட்சி' மந்திரி சபையை நீக்கி மார்ல்பரோவுடன் தீரத்துடன் பணியாற்றிய ஆர்கைல், அநுபவம் மிகுந்த குயின்ஸ்பரி, சீ:ஃபீல்டு ஆகியவர்களின் தலைமையில் இருந்த பிரஸ்பிடீரிய விக்குகளின்மூலமாக உறுதியுடன் செயலாற்றுவது கொடால்:ஃபினின் கடமை என்பதை அத் துயர நிகழ்ச்சியும் விக்குகளின் தூண்டுதலும் வற்புறுத்தின. அவர்களுக்கு வந்த கட்டளைகளில் வாரிசு உரிமையை நிர்ணயிக்க முயலவேண்டுமென்றும், அது முடியவில்லையென்றால் ஐக்கியத்தை ஏற்படுத்தக்கூடிய ஒப்பந்தத்திற்காகப் பாடுபடவேண்டுமென்றும் குறிப்பிடப்பெற்றது.

இவையிரண்டில் ஒன்று இருந்து மற்றொன்று இல்லையென்றால் தங்களது நாடு முதலில் அழிக்கப்பெறும்; அதன் பிறகு திரும்பக் கைப்பற்றப்படும் என்பதை அவர்கள் நன்குணர்ந்தனர். 'புதுக் கட்சியினர்' எத்துணைதான் தேசியவாதிகளாக இருப்பினும் இதனைத் தெளிவாக உணர்ந்தனர். தம் திறமையையும் அமைதியையும் காப்பதற்காக மீண்டும் ஸ்டேர் தோன்றினர். அதுபோது எடின்பரோ பல்கலைக் கழகத்தின் முதல்வராக இருந்த கார்ஸ்டாரஸ் மிதப்படுத்தும் தமது பகுத்தறிவினை, கிர்க் திருச்சபையைத் திரும்பப் பயன்படுத்தினர். அப்படி இருந்தும் யாவற்றையும் பேசித் தீர்த்து, முனைப்பான செயலாட்சியின்மூலந்தான் ஆங்கிலேயர் அந்நியர் சட்டத்தை ரத்து செய்ய ஒப்புக்கொண்டதன் அடிப்படையில் ஓர் உடன்பாடு தோன்றலாயிற்று.

1706ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் காக்பிட் (Cockpit) என்னுமிடத்தில் கூடிய ஆங்கில ஆணையாளர்களில், விக்குகளும் மந்திரி சபையை நம்பி இருந்த நடுத்தர டோரிகளும் இருந்தனர். கொடால்ஃபினும், சாமர்ஸ், கூப்பர், ஹார்லி ஆகியவர்களும் அவர்களுக்காக எடின்பரோவில் இருந்த அறிவுமிக்க பேரறிஞரும் தலைசிறந்தவருமான டிஃபோவும் (Defoe) இங்கிலாந்தின் தரப்பில் சென்றனர். இதற்கு மாருக ஸ்காட்லாந்தின் ஆணையாளர் முக்கியமாகப் பிரஸ்பிடீரிய விக்குக் கட்சியின் பிரதிநிதிகளாகவே வந்திருந்தனர். பிரதிநிதிகள் அநேகமாக நேரிடையாகச் சந்திக்கவில்லை. ஒன்பது வாரங்களாக நடந்த மரபு சார்ந்த பேச்சுவார்த்தைகளின் பயனாக பிரிட்டிஷாரின் உயிர்ப்பொருளான ஐக்கியங்களில் மிகுந்த வெற்றி தோன்றியது. எவ்விதக் கூட்டாட்சி ஏற்பாட்டினையும் ஏற்க மறுத்த ஆங்கிலேயர், முதலிலிருந்தே ஒரு பாராளுமன்றத்தோடு 'ஒன்றியைந்த ஐக்கியத்தையே' வற்புறுத்தி வந்தனர். அந்த ஐக்கியம் ஒரே அரச வாரிசுரிமை, ஒரே நாணயமுறை ஆகியவற்றைக்கொண்டு இருக்கவேண்டும். ஒரே 'யூனியன் ஜாக்' (Union Jack) கொடியில் செயின்ட் ஆண்ட்ரூஸ் சிலுவை, செயின்ட் ஜார்ஜ் சிலுவையோடு இணைந்திருக்க வேண்டும். அதே சமயத்தில் தடையில்லா வாணிபம் ஒப்புக்கொள்ளப்பெற்றது. இப்படியாக விவாதமானது, நுணுக்கப் பிரிவுகளை எவ்வாறு நடைமுறைக்குக் கொண்டுவருவது என்பதைப் பற்றியதாகத் திரும்பியது. இங்கிலாந்தின் மக்கள் தொகையில் ஆறில் ஒரு பங்கினைப் பெற்று இருந்த ஸ்காட்லாந்து, இங்கிலாந்தின் வரிவிதிப்பில் நாற்பதில் ஒரு பங்கினைத்தான் கொடுத்து வந்தது. இதனால் சம்மான அடிப்படையைக் காண்பது கடினமாக இருந்தது. பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் தங்களுடைய உறுப்பினர் 45 பேர்கள் மட்டுமே இருக்கவேண்டுமென்பதை ஸ்காட்லாந்தியர் விருப்பமின்றி ஒப்புக்கொண்டனர். பிரபுக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற பதினாறு பிரபுக்களை அனுப்பவேண்டும். அதற்கு மாருகப் பிரபுக்கள் சபையின் மேல்முறையீட்டிற்குட்பட்டு ஸ்காட்லாந்து நீதிமன்றங்களும் நாட்டுச் சட்டமும் அப்படியே வைத்துக்கொள்ளப்பெற்றன. அதே சமயத்தில் ஹைலாந்துத் தலைவர்களின் நிலமானிய உரிமைகள் ஏற்றுக்கொள்ளப்பெற்றன. ஸ்காட்லாந்திற்குச் சில சலுகைகள் அளிக்கப்பெற்று இருந்தாலும் காப்புவரிகளும் வரிவிதிப்பும் ஒன்ருக இணைக்கப்பெற்றன. மிகுதியான ஆங்கிலக் கடனில் ஒரு பகுதியை ஸ்காட்லாந்து அடைக்க வேண்டும் என்பதை உணர்ந்து 'இணைமாற்ருக' (equivalent) என்று குறிக்கப்பெற்ற 398,000 பவுனை ஸ்காட்லாந்து பணமாகப் பெற்றது. அதில் ஒரு பகுதி டேரியன் திட்டத்தினால் நஷ்டமடைந்தவர்களுக்கு ஈட்டுப் பணமாக அளிக்கப்பெற்றது.

இந்த உடன்படிக்கையை ஸ்காட்டிஷ் பாராளுமன்றத்தில் முதலில் கொண்டுவந்தனர். அதனுடைய இறுதிக் கூட்டத்தில் 1706–7 ஆம் ஆண்டு மாரிக்காலம் முழுதும் இவ்வுடன்படிக்கையை நிறைவேற்றக் கடுமையாகப் பாடுபட்டனர். ஏனெனில், ஸ்காட்லாந்தில் ஐக்கியம் என்பது ஜனநாயகத்தின் வேலையன்று. பெரும்பாலான நடுத்தர வகுப்பாரும், தாழ்ந்த வகுப்பாரும் அதனைத் தீவிரமாக எதிர்த்தனர். விண்ணப்பங்களும் துண்டுப் பிரசுரங்களும் பாராளுமன்றத்தின்மீது படைதொடுத்தன. கிர்க் திருச்சபை அழிந்துவிடும் என்று பிரஸ்பிடீரியர் பயந்தனர். யாகோபியர் தங்களுடைய அரசுரிமையை மீட்பதற்கான இறுதி நம்பிக்கையும் நாசமாகிவிடும் என நினைத்தனர். காமரோனியன்கள் தங்களுடைய சமயம் சீர்குலையும் என்று அஞ்சினர். வியாபாரி வேடத்தில் எடின்பரோவின் ஹை தெருவை (High Street) டி∴போ கடந்து செல்லும்போது, அவரைப் பார்த்து 'ஆங்கில நாய்' என்று மக்கள் உறுமுவதைக் கேட்டார். மேலும், அவர் கிளாஸ்கோ நகரத்தில் புகுவதற்கே அஞ்சினர். அதே சமயத்தில் தினந்தோறும் ஹோலிரூட் (Holyrood) என்னுமிடத்திலிருந்து பாராளுமன்றத்திற்கு வரும் வழியில் குயின்ஸ்பரியினுடைய கோச் வண்டியைச் சூழ்ந்து கொண்டனர்.

ஆனால், உறுதி பூண்ட அவரது குழாம், பல நலன்களைப் பெற்றிருந்தது. அவர்கள் செல்வந்தர்களிடையே பெரும்பான்மையினராக இருந்தனர். குறிப்பாக, ஆர்கைல், சீ∴பீல்டு, ஸ்டேர், மார் (Mar) ஆகியோரின் ஆதரவு அவர்களுக்குக் கிடைத்தது, 'புதுக் கட்சி'யினரோ அல்லது குதிரைப் படையினரோ (Squadron) வேறு மாற்றுக் கிடையாது என்பதைப் பகுத்தாய்வதன்மூலமாக நன்குணர்ந்தனர். அதற்கு நேர்மாறாக அவர்களுடைய எதிரிகள் ஒற்றுமையின்றியும், உகந்த தலைவர் இன்றியும் அவதியுற்றனர். பிரஸ்பிடரியின்மீது தங்களுக்கு மிகுந்த அக்கறை உண்டு என்று யாகோபியர் சொன்னது, கேலிக்கூத்தாக இருந்தது. அதே சமயத்தில் அதோலையும், தயக்கம் கொண்ட ஹாமில்ட்டனையும் அவர்களிடையே இருந்த நிரந்தரமான பூசல் பிரித்துவைத்தது. ஹாமில்ட்டன் ஆங்கிலப் பண்ணைகளைப்பற்றி எண்ணி ஒருவித முடிவும் செய்யாமல் இருந்தார். மேலும், சில வரிச்சலுகைகள் வணிகருடைய ஆதரவைப் பெற்றுத்தந்தன. இவைகளைக் காட்டிலும் மிக முக்கியமானது. கார்ஸ்டாரஸின் செல்வாக்கினால் கிர்க் திருச்சபையினர், யாகோபியக் கொள்கைதான் தம்முடைய உண்மையான பகை என்பதை ஏற்றுக்கொண்டதுதான். ஆங்கிலேயர் தம்முடைய சோதனைச் சட்டங்களைத் தொடர்ந்து வைத்திருந்தது அவர்களுக்கு மனவருத்தத்தைத் தந்தது என்னினும், உடன்

படிக்கையில் இணைக்கப்பெற்ற பாதுகாப்புச்சட்டம் அவர்களுக்கு ஆறுதல் அளித்தது. அதன்படி ஸ்காட்லாந்தில் பிரஸ்பிடீரிய அமைப்பினை வருகின்ற 'தலைமுறைகளிலெல்லாம்' தொடர்ந்து வைத்து இருக்கவேண்டும். அநேகமாக வன்முறைச் செயலுக்கு எதிராக விடுத்த கொள்கை அறிவிப்பினால் ஐக்கியம் தோன்றுவது சாத்தியமாகியது.

1707ஆம் ஆண்டு ஜனவரி மாதம் ஐக்கியச் சட்டம் ஸ்காட்லாந்தில் நிறைவேறியது. மார்ச் மாதத்தில் ஆங்கிலத் திருச்சபையைக் காக்கும் வாசகம் சேர்க்கப்பட்டதைத் தவிர வேறெந்த மாறுதலும் இன்றி இங்கிலாந்திலும் அது சட்டமாகியது. ஆயின், டோரி பெரும்பான்மையினர் மனக்கசப்படைந்த நிலையிலோ அல்லது ஸ்காட்லாந்தின் மேம்பாட்டிற்காக அளிக்கபெற்ற வாக்குறுதி நிறைவேற்றப்பெறாததாலோ ஐக்கியத்திற்கு ஏற்படுகின்ற சோதனைக் காலம் இனிமேல்தான் தோன்ற இருந்தது. ஆனால், முதல் ஆங்கிலப் பாராளுமன்றத்திலேயே ஐக்கியத்தின் உடனடியான பலன் ஏற்பட்டது. அதுதான் ஸ்காட்டிஷ் உறுப்பினர் விக்கு கட்சியை வலுப்படுத்தியது. வாரிசுரிமையைப் பொறுத்தமட்டில், ஜன்டோவினர் ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்தனர். அவர்களுடைய ஸ்காட்லாந்துக் கொள்கையின் நோக்கமும், டச்சுக் கூட்டினைத் தொடர்ந்து வைத்திருக்கவேண்டுமென்ற விருப்பமும் டோரி கட்சியினரிடமும் காணப்பெற்றது. அதே சமயத்தில் அவர்கள் டோரிகளுக்கு எதிராக ஹனோவிரிய வாரிசுரிமையினை வற்புறுத்தினர்.

ராணியாருக்கும் சாரா கோமகளுக்குமிடையே ஏற்பட்ட முரண்பாடு உள்வட்டத்தை உடைத்தெறிந்தது. மேலும், அந்த ஆண்டில் மாஷாம் என்பவரின் மனைவியாராகிய அபிகெய்ல் ஹில் (Abigail Hill) என்னும் மாதிற்கு ராணியாரின் ஆதரவு கிடைத்தது. அவர் 'குப்பையிலிருந்து கோபுரத்திற்குக் கொண்டுவரப்பெற்றவர்' என்று குறிப்பிடப்பெற்றவர். சாரா கோமகளின் உறவினர் அந்த ஆண்டில் மாஷாம் என்பவரை மணந்துகொண்டார். உடல் நலக்குறைவும், முடக்குவாதத்தின் தாக்குதல்களும் ஆன் ராணியாரைத் தம்முடைய உரிமையை வற்புறுத்தச் செய்திருக்க வேண்டும். உதாரணமாக, அவர் கொடால்ஃபினைக் கலக்காமலேயே உயர்திருச்சபை பிஷப்புக்களை நியமித்தார். டென்மார்க்கைச் சேர்ந்த ஜார்ஜிடம் இருந்த கடற்படைத் துறையில் உண்மையில் அதிகாரம் செலுத்திய ஜார்ஜ் சர்ச்சிலை விக்குகள் தாக்கினர். அவர்களது தலைவர்களின் ஆசை நிறைவேறாமல் இருந்தது. சுருங்கக் கூறுமிடத்துக் கொடால்ஃபின் கூறியதைப்

போல 'நினைத்தபடி நடக்கவில்லையென்றால், அவர்கள் எதையும் அழிக்கச் சித்தமாயிருந்தனர். இதற்கிடையில் விக்கு மிதவாதிகளோடு தொடர்பு வைத்துக்கொள்ளவேண்டியது அவசியம் என்றாலும், விக்கு ஜன்டோவின் ஆதிக்கம் பெருகும் என எண்ணிய ஹார்லி அச்சங்கொண்டார். ஏற்கெனவே, முந்தைய மந்திரி சபையில் விக்கு ஜன்டோவினர்மீது அரசத் துரோகக் குற்ற விசாரணை கொண்டுவர அவரும் உடந்தையாக இருந்தார். இங்ஙனம் முக்கிய மந்திரிகள் இருவரும் கட்சியை வெறுத்ததோடு, ஜன்டோவை விரும்பாத காரணத்தால் தயங்கினர். ஆனால், 1707–8ஆம் ஆண்டு பாராளுமன்றக் கூட்டத்தொடர் ஆரம்பித்த போது அவர்கள் ஒரு முடிவிற்கு வந்தாகவேண்டும். ஏனெனில், இரண்டு கட்சிகளும் கடற்படைத் துறையைத் தாக்கின. ஹனேவரில் தனித்தனியாகச் சூழ்ச்சியிலிறங்கின. அவைகள் ஒன்றாக இணைந்து வாக்களித்ததால் அல்மான்சா (Almanza)வில் ஏற்பட்ட தோல்வியைப்பற்றிய விசாரணை நடத்த அமைச்சர்கள் இணங்கவேண்டியிருந்தது. டச்சுச் சமாதான இயக்கம் ஒன்று வளர்ந்துவந்தது. அதனுடன் டோரிகள் சேர்ந்துகொள்ளக்கூடிய அறிகுறிகள் தென்பட்டன. சில உறுப்பினர் மார்ல்பரோவைக் கண்டிக்கும் வகையில் பீட்டர்பரோவிற்கு ஆதரவு காட்டினர். மேலும் மார்ல்பரோவின் ஆத்திரத்தைக் கிளரும்வகையில் பிரிட்டிஷ் படைகளை ஸ்பெயினுக்கு மாற்றுமாறு கேட்டனர். ஹார்லியின் அலுவலகத்தில் உள்ள குமாஸ்தா ஒருவன் ஃபிரெஞ்சுக்காரருக்கு ரகசியங்களை விற்றுவந்தான் என்பது தக்க சமயத்தில் வெளியாகியது. இதனால், அதிகப் பரபரப்புத் தோன்றியது. கொடால்ஃபினைத் தள்ளிவிட்டு மார்ல்பரோவை ஹார்லியோடு இணைக்கும் எதிர்த்திட்டம் உருவாகியது. ஆனால், 1708ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இரு பிரதான மந்திரிகளும் 'ராஜினாமா செய்ததனாலும்' அவர்கள் இன்றித் தாங்கள் தொடர்ந்து பதவி வகிக்க முடியாது என்று மிதவாத விக்குகளாகிய நியூகாசிலும், சாமர்செட்டும் (Somerset) மறுத்ததனாலும் இத் திட்டம் முறிந்தது. எனவே, ஹார்லி ஓய்வெடுத்துக்கொண்டார். செயின்ட் ஜானும் ஹார்கோர்ட்டும் (Harcourt) அவரைத் தொடர்ந்தனர், அவர்களுடைய பதவிகளை வால்போல், ஹென்றி பாய்ல் (Henry Boyle) ஆகிய விக்குகள் நிரப்பினர்.

நல்வாய்ப்பு ஜன்டோவினரைத் தொடர்ந்துவந்தது. ஐக்கியத்தை அழிக்க முடியாத காலத்தில், ஃபிரெஞ்சுக்காரர், யாகோபியர் கேட்டதற்கிணங்க ஒரு படையை மார்ச் மாதத்தில் அனுப்பி வைத்தனர். போலியையும் 6000 வீரரையும் சுமந்து வந்த கப்பற்படை, முற்றுகையிட்ட நமது கடற்படையைப் புயற்காற்று

துரத்தியபோது, டன்கிர்க்கை விட்டு வெளிவந்தது. ஆனால், பகைவர் ஃபோர்த் ஆற்றுப் பகுதியில் நுழைவதற்கு முன்னமே, பிங் (Byng) என்னும் தளகர்த்தர் அவர்களைப் பிடித்து வடக்குத் திசையில் விரட்டினர். அங்கிருந்து அவர்கள் மிகுந்த சோர்வுடன் ராத் முனை (Cape Wrath) வழியாக அயர்லாந்தை (Ireland) அடைந்தனர். இந் நிகழ்ச்சி தேர்தல் முடிவுகளை நிர்ணயித்தது. 'போப்பின் சமயத்தைச் சேர்ந்த போலிக்கு' எதிராக விடுத்த ராணியாரின் அறிக்கையினால் ஊக்குவிக்கப்பெற்ற மக்கள் விக்கு கட்சியினரை பெரும்பான்மைக் கட்சியினராகத் தேர்ந்தெடுத்தனர். அதே சமயத்தில், விக்கு–கொடால்ஃபின் கூட்டிணைப்பிற்கு வாய்ப்பாக மற்றொரு பெரு வெற்றி கிடைத்தது.

போர்க்களத்தில் பகைவருக்குப் பேரிடி தருவதே மார்ல் பரோவின் குறிக்கோளாக இருந்தது. இக் குறிக்கோளினை அடைவதற்காக ஹனோவிரியத் தேர்வாளரை ரைன் ஆற்றங்கரையிலேயே விடுத்து, யூஜின், மோசெலில் இருந்த சேனையுடன் வந்து பிரஸ்ஸல்ஸ் நகருக்கு அருகில் தம்மோடு இணைந்துகொள்ள வேண்டுமென்ற ஏற்பாட்டைச் செய்தார். ஆனால், ஒரு முடிவினைக் காணவிரும்பிய ஃபிரெஞ்சுக்காரர் தங்கள் வெறுப்பிற்குரிய டச்சுக்காரருக்கு எதிராகச் சூழ்ச்சி ஒன்றினை ஃபிளாண்டர்ஸில் உருவாக்கினர். அதன்மூலமாக நம்முடைய கூட்டுறவினை அழிக்கத் திட்டமிட்டனர். ஜூலை மாதத்தில் கெண்ட்டையும் (Ghent) ப்ரகஸ்ஸையும் (Bruges) கைப்பற்றுவதற்காக வெண்டோம் காற்றினும் கடிது சென்றார். அதன் பிறகு ஷெல்ட்டையும் அச்சுறுத்தினர். இப்போது ஃபிரெஞ்சுப் படைகள் மார்ல்பரோவிற்கும் ஆங்கிலக் கால்வாய்க்கு உள்ள செய்தித் தொடர்பிற்கும் இடையே இருந்தன. அதே சமயத்தில் கிழக்கில் பெர்விக் யூஜினைப் பின் தொடர்ந்தார். மார்ல்பரோ வழக்கு மீறிய வேகத்துடன் முன்னேறி, வெண்டோமை ஃபிரெஞ்சுப் படைகளிடமிருந்து துண்டிப்பதற்காக ஓடனார்டில் (Oudenarde) இருந்த ஷெல்டிற்குத் தம்முடைய முன்னணிப் படையினை ஏவினர். அப்போது யூஜின் வந்து சேர்ந்தார் என்றாலும் அவர்தம் படையுடன் வரவில்லை. அப்போது எல்லையாய் அமைந்துள்ள ஆற்றின் குறுக்கே உள்ள பாலங்களுக்காகப் போட்டி நடந்தது. அரண் அமைப்பதற்கோ, பீரங்கிப்படையை வைத்துக்கொள்வதற்கோ இயலாத வறுமை நிலை காரணமாக எதிர் நின்று சண்டை செய்யும் இப் போர்க்களத்தில் சாதாரண வீரர்களே மிகுதியாகப் போரிட்டனர். இச் சண்டையில் எதிர்காலத்தில் இரண்டாம் ஜார்ஜ் மன்னராக வந்த வரும் போலியும் பங்கெடுத்துக்கொண்டனர். 20,000 பகை வீரர்களைப் போரில் பங்குகொள்ள முடியாதவாறு நேச நாடுகள்

செய்தன. இருள் சூழ்ந்ததால் ஃபிரெஞ்சுக்காரர் அழிவிலிருந்து தப்பினர்.

மார்ல்பரோ லில்லியைச் (Lille) சூழ்ந்துகொள்ளவும், சோம் (Somme) ஆற்றிற்குக் கடல் வழியாகப் படைவலிப் பெருக்கம் கொண்டுவர வேண்டுமென்றும், ஃபிரான்சின்மீது படையெடுக்க வேண்டுமென்றும் விரும்பினர். ஆனல், இது ஆபத்து மிகுந்தது என்று யூஜின் நிராகரித்ததனல், கடுமையான வேலையாகிய லில்லியை முற்றுகையிடுவதில் முனைந்தனர். டிசம்பர் மாதத்தில் தான் லில்லி கோட்டை வீழ்ந்தது. அதற்குள் நேச நாடுகள் 15,000 வீரரை இழந்தன. கெண்ட்டும் ப்ருக்ஸ்ஸும், ஃபிரெஞ்சுக் காரரிடமிருந்து மீட்கப்பட்டபோதிலும் ஃபிரெஞ்சுக்காரரின் ஆதிக்கம் அதிகம் குலையாமல் இருந்தது.

மற்ற இடங்களில் போரில் தேக்கநிலை காணப்பெற்றது. ஆஸ்திரியாவிற்கும் சேவாய்க்கும் இடையே பூசல் இருந்த காரணத்தால் தெற்கிலிருந்து ஃபிரான்சின்மீது படையெடுத்துச் செல்லும் முயற்சி பாழ்பட்டது. ஸ்பெயின் கடற்கரையில் இருந்த கோட்டைகளை ஒவ்வொன்றாக ஐந்தாம் ஃபிலிப் கைப் பற்றினர். பார்சிலோனமட்டும் விழாது சார்லசிடமே இருந்தது. எனினும், நம்முடைய கடலாதிக்கம் உறுதியான வெற்றிகளைத் தேடித் தந்தது. 1708ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் சார்டினி யாவை லீக் கைக்கொண்டார். செப்டம்பரில் மைனர்க்காவைப் பிடிப்பதற்காக ஸ்டான்ஹோப்பைக் (Stanhope) கப்பல்களில் அனுப்பினர். இந்த வெற்றி முக்கியமான மஹான் (Mahon) துறைமுகத்தை நமக்கு அளித்தது. மத்தியதரைக்கடல் நேச நாடுகளின் கட்டுப்பாட்டில் இருந்தது. தொலைவிலுள்ள மேற்கிந் தியத் தீவுகளில், ஸ்பானிய நிதிக்கப்பல்களை வேகர் (Wager) அழித்துக்கொண்டிருந்தார்.

வருத்தமான நிலை காரணமாக பிரிட்டிஷ் அரசாங்கம் குழப் பத்தில் இருந்தது. சாமர்சைக் காபினட்டில் சேர்க்கவேண்டு மென்று தேர்தலுக்கு முன்பே விக்குகள் வேண்டினர். தேர்தலின் போது கட்டுப்படுத்த முடியாத சண்டர்லண்டு, கொடால்ஃபினுக்கு எதிராக ஸ்காட்டிஷ் தேர்வாளர்களோடு சேர்ந்தார். அவர், கொடால்ஃபினும் மார்ல்பரோவும் ரகசிய யாகோபியர் என்று கூறினர். இறுதியாக, ஜன்டோவினர் டென்மார்க்கின் ஜார்ஜைத் தாக்கினர். மறுபடியும் கொடால்ஃபினும் மார்ல்பரோவும் பணிந் தனர். அவ்விருவரும் ராஜினமா செய்துவிடுவதாகக்கூறி ராணி யாரைப் பயமுறுத்தினர். ஆனல், விக்குகளைப் பொறுத்தவரையில்,

மார்ல்பரோவின் கருத்தையே கொண்டிருந்த ராணியார் இக் 'கொடுமைப்படுத்தும் பிரபுக்களுக்குப்' பணியவில்லை. ஆனால், அவருடைய கணவரின் மறைவினால் அவர் பணிய வேண்டிய தாயிற்று. சாமர்ஸ் கவுன்சிலின் தலைமைப் பிரபுவாகவும் (Lord President), வார்ட்டன் அயர்லாந்தின் லார்டு லெப்டினென்ட் பிரபுவாகவும் பதவியேற்றனர். ஓராண்டு கழித்து ஆர்ஃபோர்டு பிரபு படைத்துறையை ஏற்றதனால் விக்குகளின் வெற்றி முழுமை அடைந்தது. ராணியாரை மறுமணம் புரிந்துகொள்ளுமாறு வற்புறுத்தும் அளவிற்கு அவர்கள் கபோதிகளாக இருந்தனர். கைக்கொண்ட கொள்கையும் அவர்களது பழைய பண்புகளைப் பிரதிபலிப்பதாக இருந்தது. அந்நியப் பிராட்டஸ்டென்டுகளுக்கு ஆதரவாகக் கொண்டுவரப்பெற்ற குடிமை அளிக்கும் மசோதா ஒன்றின் விளைவாக வெளிநாடுகளிலிருந்து பலர் வந்து குவிந்தனர். இதனால் பல வழிகளில் தொழிலாளர், குருமார், மாஜிஸ்டிரேட்டுகள் ஆகியவர் ஆத்திரமடைந்தனர். விக்குகளின் நோக்கங்கள் மட்டுமன்றி, அவர்களின் நண்பர்களும் திருச்சபையை அச்சுறுத்துபவர்களாக இருந்தனர். அயர்லாந்தில் சோதனைச் சட்டங்களை ரத்து செய்வதற்காகக் கிளர்ச்சி ஒன்றை வார்ட்டர் தொடங்கினர். ஸ்காட்லாந்தியரோ ஜப புத்தகங்களைப் பயன்படுத்தியதற்காக எபிஸ்கோபிலியரை ஒறுத்தனர். அதிகச் சம்பளமளிப்பதன் மூலமாக சாமர்ஸ் தம் நிலையை உயர்த்திக்கொண்டார். சமாதான உடன்படிக்கைகளின் பொறுப்பினை ஹாலிஃபாக்ஸுக்கு அளிக்குமாறு விக்குகள் கோரினர். யாவற்றையும்விட நாடே சமாதானத்தை வேண்டிநின்றபோது அவர்களுடைய கொள்கை சமாதானத்திற்கு ஊறு செய்வதாக இருந்தது.

போரின் சுமை அதிகரித்தது. 1709-10ஆம் ஆண்டுப் போர்ச் செலவுமட்டும் 13 மில்லியன் பவுனாகும். நீண்டகாலத்திற்கு இருந்த நல்ல அறுவடைகள் 1709ஆம் ஆண்டோடு முடிவடைந்தன. அந்த ஆண்டில் ஒரு குவார்ட்டர் (quarter) கோதுமையின் விலை 72 ஷில்லிங்காக உயர்ந்தது. தன் விருப்பாக முன்வரும் (volunteers) தொண்டர்களுக்கு வள்ளன்மை அளிக்கப் பெற்றபோதிலும் படைக்கு ஆள் கிடைப்பது அரிதாகியது. கட்டாய ராணுவச் சேவை திட்டத்தை ஏற்கப் பாராளுமன்றம் மறுத்தபோதிலும், வேலையற்று இருந்தவர்களைப் பாரிஷ் காவல் துறைத் தலைவர்கள் நெருக்கினர். கொடால்ஃபின், நகரத்தில் இருந்து ஏராளமான கடன்களைப் பெற்றார். அதேசமயத்தில் நேசநாட்டுப் படையினருக்குச் சம்பள நிலுவை இருந்துவந்தது. நீண்டகாலத்திற்குப் பிறகு ஸ்ரூஷ்பரி இங்கிலாந்து திரும்பினார். அவருடைய மிகுதியான தளர்நோக்கு அரசியல் அறிவினை மங்கச்

செய்துவிடவில்லை. சமாதானத்தின் இன்றியமையாமையை ஹார் லிக்கு வற்புறுத்தினர். செயின்ட் ஜான் அவருக்கு எழுதிய கடிதங்களில் 'ஒருமுறையாவது ஸ்பெயினைவிட்டு வெளி யேறுவோம்' என்னும் கோஷத்தைத் தந்ததோடு, தங்களுடைய வலிமையைப் பெருக்கிக் கொள்வதற்காக டோரிகளோடு மீண்டும் சேர்ந்துகொள்ள வேண்டுமென்றும் கூறினர்.

1709ஆம் ஆண்டின் தொடக்கத்தில், பதினான்காம் லூயி அது வரையில் டச்சுக்காரருக்கு ஆசை காட்டிவந்த சமாதானத்திற் காகப் பெருமுயற்சி செய்தார். அதற்குக் காரணம் அப்போது அவருடைய படைகள் முறியடிக்கப்பெற்று இருந்தன. மேலும், மிகக் கடுமையான மாரிக் காலத்தில் ஃபிரெஞ்சு மக்கள் பசியால் பரிதவித்தனர். ஆனால், விக்குகளின் அரசியலின் செயலாண்மைத் திறம் இழிவான மாற்று வழிகளை ஒன்றாக இணைப்பதாக இருந்தது. உதாரணமாக, ஸ்பானியப் பேரரசு முழுதும் ஆர்ச்டியூக்கிற்கு கிடைக்கச் செய்வதே தங்களுடைய சமாதானத்தின் நோக்கம் என்று ஆஸ்திரியர் கருதினர். இந்தச் சமாதானத்தின் நோக்கங் களை வெறுத்த டச்சுக்காரரின் ஆதரவைப் பெறுவதற்காகப் பெரும் பொருளை ஹாலந்திற்கு லஞ்சமாகத் தரவேண்டும் என்றனர். மே மாதத்தில் ஃபிரெஞ்சுக்காரரிடம் ஒப்படைத்த முன்னுரைகளின் படி ஸ்பெயின் முழுதும் சார்லஸ் பெறவேண்டும்; லூயி பிரிட்டிஷ் அரசரை ஏற்றுக்கொள்ளவேண்டும்; நியூபவுண்டுலந்தை அளிக்க வேண்டும். டன்கிர்க் அரண்களை அழிக்கவேண்டும். டச்சுக் காரருக்குத் 'தடை நிலமாக' இருப்பதற்கென லில்லி, டோர்னை (Tournai), ஒய்ப்ரஸ் (Ypres) ஆகியவற்றோடு, பிற கோட்டைகளை யும் அளிக்கவேண்டும். ஸ்ட்ராஸ்பர்க், கெல் (Kehl) ஆகிய இடங் களையும், ஆல்ஸாஸில் பல உரிமைகளையும் பேரரசுக்குத் தர வேண்டும். இவைகளுக்கெல்லாம் ஃபிரெஞ்சுக்காரர் ஒப்புதல் தந்தனர். ஸ்பெயினிலிருந்து, ஃபிலிப்பை வெளியேற்ற ஒத்துழைப் பதாக வாக்குறுதிகூட அளித்தனர். ஆனால், நேசநாடுகள் மேலும் சிலவற்றைக் கோரின. தாம் வாக்களித்த இடங்களை லூயி உடனே அளித்துவிடவேண்டுமென்றனர். ஸ்பானியப் பகுதிகள் இரண்டு மாதங்களில் காலிசெய்யப் பெறாவிட்டால் போர் நிறுத்தம் முடிவுறும் என்றும், லூயியே தம்முடைய பேரனை வற்புறுத்த நேரிடும் என்றும் அறிவித்தனர்.

இத்தகைய சமாதான முடிவு மார்ல்பரோவின் கருத்திற்கு மாறாக எடுக்கப்பட்டது. ஆயின், வயது முதிர்ந்த அவர் தனியாக விடப்பட்டதாக உணர்ந்தார். தாம் நம்பாத உடன்படிக்கையின் உரிமைக் கட்டுபாடுகளைத் தீவிரமாக எதிர்க்கவில்லை.

ஸ்பெயின் இன்றிச் சமாதானமும் இல்லை எனும் கொள்கையில் விக்குகள் திடமான உறுதி பூண்டு இருந்தனர். டச்சுக்காரர் தனியாக ஃபிரெஞ்சுக்காரருடன் உடன்படிக்கை செய்துகொண்டு விடுவார்களோ என அஞ்சினர். ஹனேவர் நாட்டைச் சார்ந்த ஒருவர் இங்கிலாந்தின் அரசராவதை டச்சுக்காரர் ஏற்றுக்கொள்ளுமாறு செய்ய உறுதிகொண்டனர். இங்ஙனம் டச்சுக்காரரின் ஆதரவைப் பெறுவதற்காகத் 'தடை நிலத்தை' விரிவாக்கினர். எனவே, இப் பேச்சுவார்த்தைகளில் டச்சுக்காரரின் கை மேலோங்கி இருந்தது. அதற்குக் காரணம் ஃபிரெஞ்சுக்காரர் அவர்களோடு பேசிப் பல சலுகைகளை வழங்குவதாகக் கூறியதுமட்டுமன்று. அதைவிடப் பெருங் கூட்டுறவுக்கு முரணாக, மைனர்க்காவைப் பெறுவதற்காக வும், மேற்கிந்தியத் தீவுகளில் வாணிபச் சலுகைகளுக்காவும், ஆர்ச்டியூக்குடன் பிரிட்டிஷ்காரர் ரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டனர் என்பதை டச்சுக்காரர் அறிந்ததுதான் முக்கியக் காரணமாகும். இதுவரையில் மார்ல்பரோவும் கொடால்ஃபினும் டச்சுக்காரர் கோரிய 'தடை நிலத்தைப்' பொதுச்சமாதானத்தோடு இணைக்கவேண்டுமென்ற நோக்கம் கொண்டவராக இருந்தனர். அதனல் பரிசுபெறும் டச்சுக்காரரைப் பற்றுறுதியோடு இருக்கச் செய்ய முடியுமென்று நம்பினர். ஆனல், அக்டோபர் மாதத்தில் ஏற்பட்ட உடன்படிக்கையில் ஸ்பெயினைப்பற்றிய பேச்சே காணேம். இக்காரணத்திற்காக உடன்படிக்கையில் கையெழுத்திட மார்ல்பரோ மறுத்தார். மேலும், அந்த உடன்படிக்கை நம்முடைய நலன்களையெல்லாம் புறக்கணிப்பதாக இருந்ததோடு, கூட்டுறவை யும் குலைத்தது.

டச்சுக்காரருக்கு ஒதுக்கப்பெற்ற 'தடைநிலத்தில்' ஃபிரெஞ்சு எல்லையில் உள்ள கோட்டைகள்மட்டும் அடங்கவில்லை. அவை களோடு பெல்ஜியம் நாட்டில் டெண்டர்மாண்ட் (Dendermonde), ப்ருகஸ் (Bruges), கெண்ட் ஆகிய சிறந்த நகரங்களும் அடங்கின. போர்க்காலத்தில் பெல்ஜியத்தில் எந்தக் கோட்டையில் வேண்டு மானலும் டச்சுக்காரர் தங்கள் காவற்படைகளை வைத்துக் கொள்வதற்கும் நிதி திரட்டுவதற்கும் அதிகாரம் பெற்றனர். மேலும், பேரரசின் நகரங்களான லீஜிலும் பானிலும், காவற் படையை அவர்கள் வைத்துக்கொள்ளலாம். பிரஷ்யா உரிமை கொண்டாடிய மேல் குயல்டர்ஸ் (Guelders) பகுதியைக் கைப் பற்றிக்கொள்ளலாம். ஃபிளீமியத் துறைமுகங்களில் காப்பு வரிகளை நிர்ணயிக்க ஸ்பானியப் பகுதிகளில் தான் பெற்ற உரிமை களையும் சலுகைகளையும் ஹாலந்தும் அடையுமாறு பிரிட்டன் கவனித்துக்கொள்ளவேண்டும். மைனர்க்காவைப் பெறுவதற் காக ஏற்பட்ட உடன்படிக்கையை அது மறந்துவிடவேண்டும்.

அமைச்சர்களும் அவர்களுடைய பேராளான டவுன்ஷண்டும், பேச்சுவார்த்தைகள் நடத்திக்கொண்டிருந்த சமயத்தில், மார்ல் பரோ ராணுவரீதியான முடிவினைப் பெற முயன்றார். ஆனால், பேச்சுவார்த்தைகள் நடைபெற்று இருந்த காரணத்தால் காலந் தாழ்ந்தே செயலில் இறங்கினர். ஃபிரெஞ்சுக்காரரின் நாட்டுணர்ச்சி ஒன்று திரண்டது. கடைசிச் சேனையை உருவாக்க வில்லர்ஸ் (Villars) தம் திறமை முழுவதையும் பயன்படுத்தினர். லா பஸ்ஸீயி லிருந்து (La Bassee) தோவாய் (Douai) வரை உள்ள படை அணிகளை வலுப்படுத்தினர். எதிரிலிருந்து தாக்குவது இயலாது என்று உணர்ந்த மார்ல்பரோ ஆங்கிலக் கால்வாய்த் துறைமுகங் களின் வழியாகத் தாக்க விரும்பினர். ஆனல், நேசநாடுகள் அதனை மறுத்துவிட்டன. அதற்கு மாருக டோர்னே வேண்டுமென்றனர். அந்த இடம் செப்டம்பர் மாதத்தில் பிடிபட்டது. அதற்குப் பிறகு புற அணி முன்னேற்ற முறையைத் தொடர்ந்து செயலாற்றி, மான்ஸ் (Mons) என்னுமிடத்தை மார்ல்பரோ முற்றுகையிட்டார். இந்த இடத்தினைக் காக்க, வில்லர்ஸ் மேற்கொண்ட முயற்சிதான் பயங்கரமான மால்பிளக்கட் (Malplaquet) சண்டையினைக் கொணர்ந்தது. ஃபிரெஞ்சுக்காரர்களுக்குப் போதிய காலம் கிடைத்ததால், தங்களுக்கு வேண்டிய பாதுகாப்பு அகழிகளைத் தோண்டிக்கொண்டனர். அதனல், காலையில் இருந்து பிற்பகல் வரை நடந்த கடுமையான சண்டைக்குப் பிறகே பகைவர் படையின் நடு அணியை நேசநாடுகளின் படை ஊடுருவ முடிந்தது. ஆனல், நேசநாடுகள் 20,000 வீரரை இழந்தன. இந்த ஆண்டில் வேறெந்த திட்டத்தையும் நிறைவேற்ற முடியவில்லை. மற்ற இடங் களில் பார்க்கும்போது, ஹனேவிரியர் ஆல்ஸாவைவிட்டு வெளி யேற்றப்பெற்றனர். போர்ச்சுகலில் கால்வே முறியடிக்கப் பட்டார். ஸ்வீடன் நாட்டு அரசரான பன்னிரெண்டாம் சார்லஸை ரஷ்யர்கள் தோற்கடித்தனர். ஜெர்மானியருடைய கவனம் இவ்வாறு பின்புறமிருந்து வரும் பேரிடரைப்பற்றியதாக இருந்தது. மாரிக்காலம் முழுதும் பிரிட்டிஷ்காரரும் ஆஸ்திரியரும் விருப்ப மில்லாத டச்சுக்காரரை, உரிமைக் கட்டுப்பாடுகளைப் பெறுமாறு தூண்டினர். 1710 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் முறிந்த கெர்ட் ரூய்டன்பர்க் (Gertruydenburg) மாநாட்டில், ஃபிலிப்பிற்கு ஸ்பெயி னில் துளியிடமும் அளிக்கக்கூடாது என்று வாதிட்டனர். ஃபிலிப் பிற்கு எதிராக ஃபிரெஞ்சுப் படைகளை லூயி அனுப்பவேண்டும் என்றும் கோரினர்.

வருந்தத்தக்க நிலையில் இருந்த ஆங்கில மந்திரிசபை உள் நாட்டில் தன்னையே அழித்துக்கொள்ளும் வேலையைத் தொடர்ந்து செய்துவந்தது. கொடால்ஃபினுடைய பதவியைக் கைப்பற்றலாம்

என சாமர்ஸ் நம்பினர். நிரந்தரமாகக் காப்டன் ஜெனரல் பதவியை அளிக்குமாறு கோரி, மார்ல்பரோ பெருந்தவறிழைத்தார். இதில் ஜன்டோவினர் ஆதரவு தரவில்லே. காபினெட்டிற்குள் நியூகாஸிலும் சாமர்செட்டும் திரும்பவும் ஹார்லியோடு தொடர்பு கொண்டனர். அவர்களுடைய தூண்டுதலின்பேரில் ராணியார், மார்ல்பரோவிற்குத் தெரியாமலேயே அவருடைய அதிகாரிகளுக்குப் பதவி உயர்வு அளிக்க ஆரம்பித்தார். ஆர்கைலும் மற்றப் படைத் தலைவர்களும் மார்ல்பரோவின் பகைவர்களாக இருந்தனர். 'படுக்கையறைத் தாதியின் வன்மத்தை' எதிர்த்து, ஒன்று திருமதி மாஷாமைப் (Mrs. Masham) பதவியிலிருந்து நீக்கவேண்டும் அல்லது தன்னுடைய ராஜினமாவை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று மார்ல்பரோ ராணியாரிடம் கூறினர். மறுபடியும் ஜன்டோ அவரைக் கைவிட்டது.

ஆயின், டாக்டர் சாக்கிவெரல்மீது அரசியல் துரோகக் குற்றச் சாட்டு விசாரணையைக் கொண்டுவரும் பெருந்தவற்றினைச் செய் வதில் விக்குகள் ஒன்றுபட்டனர். டாக்டர் சாக்கிவெரல் கருத்து வேறுபாட்டினருக்கு எதிராகப் பிரசாரம் செய்த டோரி கட்சி யினர். அவர் இந்த மாரிக்காலத்தில் ஒரு சமயச் சொற்பொழிவினை 1688ஆம் ஆண்டுப் புரட்சியைத் தாக்குவதற்தாகப் பயன்படுத் தினர். சிறந்த விக்கு கட்சி வழக்கறிஞர்கள், சாத்வீகப் பணிவின் பயனற்ற தன்மையை வெளிப்படுத்தியது பயனற்றுப்போயிற்று. ஆனல், ராணியார் வெஸ்ட்மினிஸ்டர் ஹாலுக்கு வந்ததும், 'சாக்கி வெரலும் சமாதானமும்' என்று மக்களெழுப்பிய கூக்குரலும், அவர்கள் கருத்து வேறுபாட்டினர் கோயில்களைச் சூறையாடியதும் முக்கியமானவையாக இருந்தன. இங்ஙனம் சாக்கிவெரலுடைய விசாரணை வாக்காளர் கிளர்ச்சியாக மாறியது. ஸ்ரூஷ்பரி, ஆர் கைல், சாமர்செட், செல்வாக்கு மிகுந்த விக்கு பிரபுக்களில் சிலர் ஆகியோர் டோரிகளுடன் இணைந்து சாக்கிவெரலுக்கு மிகக் குறைந்த தண்டனையே வாங்கித் தந்தனர்.

இதுவே விக்கு ஜன்டோவின் முடிவு. நாட்டு மக்களின் எதிர்வினை தோன்றும் என்ற நம்பிக்கையாலும் காபினெட்டிற் குள்ளேயே இருந்த பூசல்களை நன்கு அறிந்ததனுலும், ஹார்லியும் ஸ்ரூஷ்பரியும் அரசாங்கத்தைச் சிறிது சிறிதாக மாற்றி அமைக்கு மாறு ராணியாருக்கு ஆலோசனை கூறினர். இந்த மாற்றத்தில் ஒவ்வொரு படியும் முன்னதில் இருந்ததைக் காட்டிலும் நயமிக்க தாகவும், நன்கு சீர்தூக்கிப் பார்க்கப்பெற்றதாகவும், முடிவான தாகவும் இருந்தது. ஏப்ரல் மாதத்தில் ஸ்ரூஷ்பரி சேம்பர்லேன் பிரபுவாக நியமிக்கப்பெற்ருர். ஜூனில் சண்டர்லண்டு பதவி இழந்தார். ஆகஸ்டில் கருவூலத் தலைமைப் பதவியைக் கொடால் பின் பறிகொடுத்தார். ஜன்டோவின் பெரும் பகுதியினர்

ஹார்லியினுடைய மிதவாதக் கட்சியில் தங்களுக்கான இடங்களைப் பெற முயல்வதைத் தவிர வேறெதுவும் செய்யவில்லை. அவருடைய பழைய செயல்களும், கூப்பரையும் வால்போலையும் பதவியில் இருக்குமாறு அவர் வேண்டிக்கொண்டதும், புறச் சமயத்தாருக்கு அவரளித்த வாக்குறுதியும் அவருடைய மனத்திலிருந்த கொள்கையை வெளிப்படுத்துவனவாக இருந்தன. ஆனால், கட்சி உணர்ச்சி ஹார்லியை வீழ்த்தியது. வார்ட்டனும் வால்போலும் விட்டுக்கொடுக்கும் கொள்கையை வன்மையாகக் கண்டித்தனர். மேலும், பாராளுமன்றம் கலைக்கப்பெறுவதற்கு எதிராக அந்நிய நாடுகளின் துணையை மார்ல்பரோ நாடினார். இந்நிலையில் நாணயக் கடன் கொடுப்பதை நிறுத்தப்போவதாக இங்கிலாந்து பாங்கு பயமுறுத்தியது. மற்றொருபுறத்தில் டோரிகள் மாஜிஸ்ட்ரேட்டுகளை மாற்றவேண்டுமென்றனர். தேர்தலில் தாங்கள் வெற்றி பெறுவதை உறுதியாக்கினர். சூழ்ச்சி செய்யும் ராபினுக்கு (Robin) எதிராக முணுமுணுத்தனர். திருச்சபையினரைவிட மிதவாதிக்கு பதவி வகிப்பது மேலென்று கருதினர். பாராளுமன்றம் செப்டம்பர் மாதத்தில் கலைக்கப்பெற்றது. டோரிகள், ஓக் மர இலையை (oak-leaf) அணிந்துகொண்டனர். இரண்டாம் சார்லஸுக்கு நிழலளித்த மரத்தின்மீது நம்பிக்கை தெரிவித்தனர். அவருடைய தந்தையாரின் சிலைக்கு மலர் வழங்கினர். இவைகளெல்லாம் டோரியினரின் எதிர்வினைக்குச் சான்றாக அமைகின்றன. கட்டுப்பாடில்லாத தேர்தல்களில் வெற்றி ஒருபுறம் மிகுதியாகச் சாய்ந்தது. நான்கு நகரங்களில் எல்லாத் தொகுதிகளிலும் டோரிகள் வெற்றியடைந்தனர். இங்கிலாந்திலும் வேல்ஸிலும் தொண்ணூற்றிரண்டு இடங்களில் எண்பது இடங்களை அவர்கள் கைப்பற்றினர். மொத்த இடங்களில் மூன்றில் இரண்டு பங்கு பெற்ற பெருவாரி கட்சியாக வெளிவந்தனர்.

அந்த ஆண்டிலும் அதற்கடுத்த ஆண்டிலும் அவர்களுடைய அமைதிக்கொள்கை உறுதிப்படுத்தப்பெற்றது. இன்னும் போர்முறை சூழ்ச்சித்திறத்தில் வல்லவராக மார்ல்பரோ திகழ்ந்தபோதிலும் அவரே குறிப்பிட்டதைப்போல் நம்பிக்கையோடு வருவதுணரும் உணர்ச்சியை இழந்திருந்தார். தமக்குச் சரியான ஆதரவு இல்லையென்றும், தம்முடைய சேனையிலேயே கட்சிப்பிளவு தோன்றியது என்றும் உணர்ந்தார். லா பஸ்ஸீ என்னுமிடத்தில் இருந்த பகைவர் அணியை யூஜினுடன் அணிவகுத்துச் சென்று தகர்த்தார். ஆனால், அரண் மிகுந்த இவ்வரங்கில் மெதுவாகத்தான் முன்னேற முடிந்தது. ரைன் ஆற்றங்கரையில் குறிப்பிடத்தக்கதாக ஒன்றும் நிகழவில்லை. அங்கே இருந்த ஆஸ்திரியப் படையினரின் கையாலாகாத்தனத்தினால் வெறுப்படைந்த ஹனோவரின் தேர்வாளர்

படைத் தலைமையிலிருந்து விலகினர். ஸ்பெயினில் யாவும் போயின. அந்நியப் படையெடுப்பாளர், புரட்சியாளர் ஆகியோருக்கு எதிராக எழுந்த நாட்டுணர்ச்சி நேசநாடுகளை வீழ்த்தியது.

1710ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஆர்ச்டியூக்கின் பன்னாட்டுப் படை, அரகான்மீது படையெடுத்துச் செல்லவேண்டுமென்று ஸ்டான்ஹோப் ஊக்குவித்தார். அப்படை சாராகோஸ்ஸா (Saragossa)விற்கு விரைந்து சென்றது. அதன் பிறகு அவர் காஸில் (Castile) நாட்டின்மீது படையெடுக்குமாறு ஆர்ச்டியூக்கைத் தூண்டினர். ஆனால், அவர்கள் சென்றபோது மாட்ரீட் நகரம் காலியாகக் கிடந்தது. போர்ச்சுகீசிய உதவிப்படைகள் வந்து சேரவில்லை. தளவாடங்களும் உணவுப் பொருள்களும் வருவதை மறைந்திருந்து தாக்குவோர் துண்டித்தனர். எனவே, கேடலோனியாவிற்குத் திரும்புவது என நேசப்படையினர் முடிவு செய்தனர். ஆயினும், டிசம்பர் மாதத்தில் வெண்டோம், ஸ்டான்ஹோப்பையும் அவருடைய பிரிட்டிஷ் பின்னணியும் பிரிஹூய்கா (Brihugea)வில் திடீரெனத் தாக்கினர். மறுமுறையும் ஆஸ்திரிய அரசருடைய ஆதிக்கம் பார்ஸிலோனவைச் சுற்றியிருந்த ஒரு சிறு பகுதியில்மட்டும் இருந்தது.

அவர் அங்கேயும் நீண்டகாலம் தங்கவில்லை. ஏனெனில், 1711ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் அவருடைய சகோதரரான ஜோசப் இறந்தபோது, அவர் ஆரும் சார்லஸ் என்னும் பட்டத்தோடு ஆஸ்திரியப் பேரரசரானர். இங்ஙனம் ஏற்கெனவே ஆஸ்திரியா, இத்தாலி, பெல்ஜியம் ஆகிய நாடுகளை ஆண்டுவந்த ஓர் அரசருக்கு ஸ்பானிஷ் முடியையும் அளிக்க பிரிட்டிஷ்காரர்கள் நிச்சயமாக இணங்கமாட்டார்கள். அப்படிப்பட்ட சூழ்நிலையில், சமாதானப் பேச்சுவார்த்தைகள் நடப்பது தெரிந்திருந்தும், மார்ல்பரோ துயர்மிகுந்த இறுதிப் படையெடுப்பினை மேற்கொண்டார். அவருடைய படைபலம் வெகுவாகக் குறைந்திருந்தது. ஆறுகளையும் மண்சுவர்களையும் பயன்படுத்தி மாண்ட்ரியூலில் (Montrueil) இருந்து நாமூர் வரை அரண்களமைத்த வலிமைமிக்க வில்லியர்ஸ் அவருக்கு எதிராக நின்றார். மார்ல்பரோ பகைவரைச் சூழ்ச்சித்திறத்தால் வென்று, தம்முடைய படைகளை அரண்களுக்கப்பால் கொண்டு சென்று, ஷெல்டின்மீதிருந்த பௌசெயின் (Bouchain) என்னுமிடத்தைக் கைப்பற்றினர். அடுத்த ஆண்டில் ஃபிரான்சின்மீது படையெடுப்பதற்கான கடைக்கால் நாட்ட எண்ணினர். ஆனால், அவருடைய அரசாங்கமும் டச்சுக்காரரும் தளவாடங்களைச் சீராக அனுப்பவில்லை. சமாதானம் ஏற்பட்டதும் கூட்டுறவு கலைக்கப்பெற்றதும்தான் இதற்கான காரணங்கள்.

1710–14ஆம் ஆண்டுகளில் இருந்த ஹார்லி மந்திரி சபையின் செயல்களில் ஒன்றோடொன்று இணைந்த மூன்று இழைகள் காணப்பெறுகின்றன. முதலில் சமாதானம் செய்து கொள்ளும் பொறுப்பு இருந்தது. இதில் 'ஸ்பெயினின்றிச் சமாதானம் இல்லை' யென்ற நோக்கத்தைக் கைவிட வேண்டியதாயிற்று. இரண்டாவதாக, தடைநில உடன்படிக்கையைத் திருத்தவேண்டி இருந்தது. காமன்ஸ் சபையில் உணர்ச்சிப் படபடப்புடைய டோரி பெரும்பான்மையினரை நம்பியிருந்த மிதவாத டோரிகளாலும், மிதவாத விக்குகளாலும் நடத்தப்பெற்ற அரசாங்கம், இவ்விரு வேலைகளையும் செய்யவேண்டும். மூன்றாவதாக, இவை ஒவ்வொன்றும் ராணியார் உயிருடன் வாழ்வதைப் பொறுத்து இருந்தன. ராணியார் ஹனோவிரிய வாரிசை வெறுத்தார். அவர் முதல் நிலையில் இருந்த டோரிகளைச் சார்ந்திருந்த நிலை, ஹனோவரின்மீது மிகுந்த வெறுப்பினை உண்டாக்கி அதனால் மந்திரி சபையே யாகோபியருக்கு ஆதரவாக இருக்குமாறு செய்ய வல்லதாக இருந்தது. அதனால் நல்லெண்ணமும், நல்வாய்ப்பும், நற்பண்புகளும் பெற்றிருந்தும்கூட மந்திரிகள் பேராபத்திற்குள்ளாயினர். சமாதானம், கட்சி, வாரிசுரிமை ஆகிய யாவற்றையுமே அழிக்கும் ஆபத்து நேர்ந்தது.

இத்தகைய இடருக்குத் தலைவர்களே பெருமளவில் காரணமாக இருந்தனர். மந்திரி சபை வீழ்ச்சியில் ஒவ்வொரு படியின் வேகமும் பெரும்பாலும் ராணியாரால் நிர்ணயிக்கப்பெற்றது. அவருடைய வெறுப்புகள், தயக்கங்கள் ஆகியவற்றின்மூலமாக அவர் ஓர் உண்மையான ஸ்டுவர்டு என்பது தெரிந்தது. பெருத்த அவமதிப்பைப் பொறுத்துக்கொண்ட பிறகு சாரா கோமகளாருக்கு இறுதியான வெறுக்கத்தக்க பேட்டி அளித்தார். ஆனால், மாஷாம் சீமாட்டி ராணியாரின் ஆதரவைப் பெறுவதற்குப் போட்டியாக, விக்கு கட்சியைச் சார்ந்த சாமர்செட்டின் கோமகள் வந்தார். விக்குகளைப் பதவியிலிருந்தும் அரண்மனையிலிருந்தும் நீக்குவதில் வேகம் காட்டாததால் டோரிகள் ஆத்திரமடைந்தனர். அதற்கு மாறாக, ராணியார் தம்முடைய ஆட்சியின் இறுதியில் ஹார்லிக்கு எதிராக மாஷாம் சீமாட்டியையும் செயின்ட் ஜானையும் சார்ந்து, ஹனோவருக்கு எதிரான அவமதிப்புச் செயல்களைப் புரிந்து அரசாங்கம் வீழுமாறு செய்தார்.

விக்கு ஜன்டோவை இருமுறை வீழ்த்தியவரும், காமன்ஸ் சபையின்மூலமாக அரசியல் நிர்ணயச் சட்டத்தையும் நிறைவேற்றியவருமான ஹார்லி, சாதாரண அமைச்சர் அல்லர். அவர் பதவிக்கு வரும்போது நாட்டுக்கடன் மிகுதியாக இருந்தது.

லண்டன் நகரம் அவருக்கு எதிராக நின்றது. எனினும், அவர் பொது நாணயக் கடனை மீட்டார். 1711ஆம் ஆண்டில் தாம் நோய்வாய்ப்படும் வரையில் சமாதானப் பேச்சுவார்த்தைகளை நடத்தினார். மேலும், 1712-ல் மார்ல்பரோவின் அதிகாரத்தை ஒழித்தார். பொதுமக்களின் ஆதரவைத் தம் அரசாங்கத்திற்குப் பெறுவதற்காக ஸ்விப்ட் (Swift) அற்புத்நாட் (Arbuthnot), பிரீயர் (Prior,) டி.:போ (Defoe) போன்ற திறமைசாலிகளைப் பதவியில் அமர்த்தினார். 'பழைய விக்காகத் தமது வாழ்வைத் துவங்கிய அவர் அந்த உணர்ச்சியுடன் இறுதிவரை வாழ்ந்தார். தம் கட்சியினர், கருத்து வேறுபாட்டிரைத் தாக்குவதைக் குறைத்தார். ஹாலி.:பாக்ஸோடு நெருங்கிய தொடர்புகொண்டு, நிதி சம்பந்தமான அவரது ஆலோசனைகளைக் கேட்டறிந்தார். எப்போதும் மிதவாதிகளையே பதவியில் அமர்த்த முயன்றார். இரக்கம் மிகுந்தவராகவும் ஊழலற்றவராகவும் வாழ்ந்தார். ஆயினும், ஸ்விப்ட் கூறியதைப்போல அவரிடம், யாரிடமும் இல்லாத அளவிற்கு மிகுதியான ஒப்பின்மைகள் காணப்பெற்றன. பதவி வேட்கை கொண்டவராக இருந்ததாலும், தீவிரமாக எதிர்க்கும் தன்மை கொண்டிருந்ததாலும், எல்லோருடைய ஐயத்திற்கும் காரணமாக இருந்து, ஆனால், நிரூபிக்க முடியாத சில ரகசிய வழிகளை மறைத்ததாலும், அவர் பல நண்பர்களைப்பெற்று இருந்தபோதிலும் பற்றுதிகொண்ட பொதுமக்கள் ஆதரவினைப் பெற்றிருக்கவில்லை. ஐம்பது வயதை அடையுமுன்னே உயர் அதிகாரத்தைப் பெற்ற அவர், நீண்ட நேரம் கண்விழித்திருந்ததாலும் அமைதியாகக் குடித்ததாலும் உடல் நலம் குன்றினார். மேலும் ஓரளவு திசைமாறி, தம்மையே அழிக்கக்கூடிய யாகோபிய வாக்காளர் போன்றவர்களின் பாதுகாப்பை நாடினார்.

அவருடைய சீடரும் உடன் பணிபுரிந்தவருமான ஹென்றி செயின்ட் ஜான் என்பவரை உள்துறைச் செயலராக டார்ட்மவுத்திற்கு (Dartmouth) அளித்தார். ஹென்றி பதினேழு ஆண்டுகளுக்கு ஹார்லியின் துணைவராக இருந்தவர். அவருடைய நாவன்மையும் சக்தியும், தீய ஒழுக்கத்தினாலும் தளராத அவரது உடல் வலிமையைச் சார்ந்தும் இருந்தன. இக் குணங்களினால் விலங்குகளை அடக்கும் வேட்டைக்காரனிடம் வேட்டை நாய்கள் காட்டும் அன்பைப்போல, அவரிடம் காமன்ஸ் சபையினர் அன்பு பாராட்டினர். ஹார்லியிடம் காணப்பெற்ற நன்மை தீமை அச்சத் தயக்கமோ, மறைக்கும் குணமோ, மிதவாதத் தன்மையோ அவரிடம் சிறிதுமில்லை. அவர் மார்ல்பரோவைப் போற்றினார். அரியாசனமும் அவர்தம் அகத்திலிருந்தது. அதுவே தம்முடைய முன்னேற்றத்தின் வழிகாட்டி என நினைத்தார். நாட்டுப்புற

உறுப்பினரைப்பற்றித்தான் அவரது நினைவு இருந்தது. தனித்து நின்று வெற்றி நடைபோடும் பிரிட்டனே அவருடைய குறிக்கோள். உள்துறைச் செயலர் வெறியாட்டங்களில் ஈடுபடுவதைப்போல, அவர் கிறித்தவச் சமயத்தில் நம்பிக்கையற்றவராகவும், கட்சியினை வெறுப்பவர்போல் பாசாங்கு செய்பவராகவும் இருந்தபோதிலும், அதிகாரத்தைப் பெறுவதற்காகத் தெய்வீக உரிமைக் கொள்கையில் நம்பிக்கைகொண்ட வலதுசாரியினருக்கும் யாகோபியருக்கும் தலைவரானார். இதனால் அவர் டோரி கட்சியை இரண்டாகப் பிரித்து விக்கு கட்சியினரின் வெற்றிக்கு வழி வகுத்தார்.

டோரி கட்சியில் செல்வாக்குப்பெற்ற மற்றொருவர் ஜோனதான் ஸ்விப்ட் (Jonathan Swift) என்பவர். அவர் அரசியல்வாதியல்லர். ஆயின், மேதையாகவும் மத குருவாகவும் இருந்தவர். விக்கு குடும்பத்தில் தோன்றிய அவர், சர் வில்லியம் டெம்பிளின் சேவையில் வளர்ந்து வந்தார். தெய்வீக அரச உரிமைக் கோட்பாட்டினரிடமிருந்து மாறுபட்டு இருந்தார். அதே சமயத்தில் பற்றுறுதிகொண்ட திருச்சபையினராக விளங்கினார். அயர்லாந்தில் திருச்சபைக்கு அளிக்கப்படும் முதல் விளைவுப் பங்கினைக் கொண்டுவர மறுத்ததாலும் சோதனைச் சட்டங்களை ரத்து செய்ய முயன்றதாலும், விக்கு கட்சியினர் அவருடைய பகைமையைத் தேடிக்கொண்டனர். நட்பு நாடுகளுக்காக இங்கிலாந்தின் நலன்கள் துறக்கப்பட்டன என்று அவரும் நினைத்தார். படை வீரரின் அரசாங்கத்தை வெறுத்தார். அவர் சமய குருவின் இலக்கணத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்கவில்லையென்றாலும் அதன் காரணமாக 'டேல் ஆஃப் எ டப்' (Tale of a Tub), எனும் நூலை எழுதிய அவருக்கு பிஷப் பதவியளிக்க ராணியார் மறுத்துவிட்டார் என்றாலும், விக்கு ஜன்டோவினுடைய உலோகாயதம் அவருடைய ஆன்மஉணர்வினைப் புண்படுத்துவதாக இருந்தது. எப்படி இருந்தபோதிலும் ஹார்லியும் செயின்ட் ஜானும் அவரைத் தங்களுள் ஒருவராகவே நடத்தினர். ராணியாரின் மருத்துவரான அற்புத்நாட், பீட்டர்பரோ, பிரீயர் ஆகியோர் கலந்துகொள்ளும் அவர்களுடைய 'உடன் பிறந்தார் நிலை' (brotherhood) விருந்துகளில் டோகேயின் (Tokay) நன்மைகள் அல்லது செயின்ட் பாட்ரிக்கின் (St. Patrick) தலைமைப் பதவி ஆகியவை தவிர, பிற பொருள்களைப்பற்றிய முடிவுகளும் எடுக்கப்பெற்றன.

1710-11ஆம் ஆண்டுகளில் கூட்டிணைப்பு அரசாங்கம் நடைபெற்றது. ஹார்லி, செயின்ட் ஜான், அரச முத்திரை காக்கும் பிரபுவான ஹார்கோர்ட் (Harcourt) ஆகியோர் 1705ஆம்

ஆண்டு கொடால்ஃபினுடைய கூட்டிணைப்பு மந்திரி சபையில் இருந்தனர். அவ்வமைச்சரவையில் இருந்த ஸ்ரூஷ்பரி, சாமர்செட், நியூகாஸில் போன்றவர்கள் விக்கு கட்சியினர். வயோதிக ரோசெஸ்டரும் ஆர்மாண்டும் உயர் திருச்சபையைச் சார்ந்த டோரிகள். ஆயின், ராணியாரும் ஹார்லியும் உயர் திருச்சபை யினரின் தலைவரான நாட்டிங்காமைச் சேர்த்துக்கொள்ளவில்லை. 1711-ல் ரோசெஸ்டரும் நியூகாஸிலும் இறந்தபோது, அவர் களுடைய இடங்கள் ஹார்லியின் ஆட்கள் அல்லது பிரிஸ்டல் நகர பிஷப்பான ராபின்ஸன் போன்ற திருச்சபை அதிகாரிகளைக் கொண்டு நிரப்பப்பெற்றன. ராபின்ஸன்தான் காபினெட்டில் அமர்ந்த கடைசி தலைமை குரு (prelate) ஆவார்.

ஆயின், ஆக்ஸ்ஃபோர்டு திருச்சபையாளரான சபாநாயகர் ப்ராம்லி (Bromley), வெறி பிடித்த காமன்ஸ் சபையின் தலைவராக விளங்கினர். லண்டன் நகரத்தையும் நேச நாடுகளையும் சமாதானம் செய்வதற்கு 'மிதவாதக் கொள்கை' (moderation) இன்றியமையாததாக இருந்த அதே சமயத்தில் காமன்ஸ் சபை யினர் தங்களுக்கு எல்லாம் தெரியும் என்பது போலவும் எதையும் தாங்கள் மறக்கவில்லை என்பதையும் காட்டிக்கொண்டனர். எளிதில் அடக்கமுடியாத அளவிற்கு பெரும்பான்மைக் கட்சியாக இருந்த டோரிகள், இடதுசாரியாகவும் வலதுசாரியாகவும் பிரிந் திருந்தனர். யாகோபியரும் தீவிரவாதிகளும் 'அக்டோபர் சங்கமாக' (October Club) இணைந்தனர். அவர்கள் ஒன்றுகக் கூடி அக்டோபர் மாத இன் தேறலோடு (October ale) விருந்துண்டு ஹார்லியின்மீதும் சமயப்பொறைமீதும் கடுஞ்சினம் கொண்டனர். பலரைப் பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்று கூக்குரலிட்டனர். பதவி மசோதா ஒன்றைக் கொண்டுவந்ததோடு, பொதுக்கணக்குக் குழு ஒன்றை அமைத்தனர். மில்லியன் கணக்கில் பணம் கையாடப்பெற்றிருந்தது என்று அக் குழு அறிவித்தது. அக்டோபர் சங்கத்தினரை, வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் ஹார்லி எதிர்த்தார். அதே சமயத்தில் செயின்ட் ஜான் அவர்களிடம் பரிவு காட்டினர். தாங்கள் விரும்பிய பழைய மசோதாக்களில் ஒன்றுன சொத்துத்தகுதி நிர்ணய மசோதாவை (property qualifications) சட்டமாக கொண்டுவந்தனர். அதன்படி கவுன்டி உறுப் பினர் 600 பவுன் வருமானமுள்ள நிலம் வைத்திருக்கவேண்டு மென்றும், வணிகர்கள் 300 பவுன் வருமானமுள்ளவராக இருக்க வேண்டுமென்றும் விதிக்கப்பெற்றது. இச் சட்டம் கொள்கை நிலையில் நிரந்தரமாக நிலச்சுவான்தாரர்களின் பாராளுமன்றம் ஏற்படுவதை உறுதி செய்வதாக இருந்தது. ஆனல், உண்மையில் இச் சட்டத்தை வழக்கறிஞர் தந்திரமாகத் தவிர்த்தனர்.

1711ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் ஃபிரான்ஸிலிருந்து நாடு கடத்தப்பெற்ற கய்ஸ்கார்டு (Guiscard) என்பவன் ஹார்லியைக் கத்தியால் குத்தினன். அவன் தன்னுடைய ரகசிய சேவைக்குத் தகுந்த பரிசு தரப்படவில்லையென்று எண்ணியவன். நீண்ட நாட்களுக்குப் பிறகு ஹார்லி நோய் நீங்கி மீளும் காலத்தில், காமன்ஸ் சபையின்மீதும் செயின்ட் ஜான் ஆதிக்கம் செலுத்தினர். அவர் தமக்கென்று ஆதரவாளர் கூட்டம் ஒன்றைத் தேடிகொள்ள சூழ்ச்சிச் செய்தார். ஃபிரெஞ்சுக் கனடாவின்மீது படையெடுப்பு ஒன்று நிகழ்த்தவேண்டுமென்று காபினெட்டை வற்புறுத்தினர். அப் படையினை மாஷாம் சீமாட்டியின் சகோதரர் தலைமை தாங்கி நடத்திச் சென்றார். அப் படையெடுப்பு ஒரு கேலிக்கூத்தாக முடிவடைந்தது என்றாலும், செயின் ஜான் கான்ட்ராக்டுகளின் (contract) மூலமாக அதிக லாபமடைந்தார் என்று நம்பப்பெற்றது. ஹார்லி, ஆக்ஸ்ஃபோர்டு ஏர்ல் பிரபு பட்டத்தோடும், கருவூலப் பிரபுவாகவும் திரும்பிவந்ததால் பூசல்கள் மிகுதியாயின. அவரை, ஒவ்வொரு கட்சியும் தன்னைச் சார்ந்தவர் என்று உரிமை கொண்டாட முயன்றது. ஆனால், சமாதானம் செய்துகொள்ள வேண்டும் என்பதில்மட்டும் டோரி கட்சியினர் ஓரளவு ஒன்றுபட்டு இருந்தனர். ஏனெனில், அக் கட்சியின் வாழ்வே அச் சமாதானத்தை நம்பி இருந்தது.

1706ஆம் ஆண்டிலிருந்தே 'அழிவு தரும் இந்தப் போரிலிருந்து' விலகவேண்டுமென்று ஹார்லி விரும்பினர். எனினும் அவ்வாறு போரிலிருந்து வெளியேறுவது மிகக் கடினமாக இருந்தது. ஹாப்ஸ்பர்கினர், ஸ்பெயினை விட்டுக் கொடுப்பதற்கோ, இத்தாலியைப்பற்றிய ஒப்பந்தம் ஒன்றை செவாயுடன் செய்துகொள்வதற்கோ வாய்ப்பொன்றும் இல்லை. அதே போன்று டச்சுக்காரர் தங்களுடைய 'தடை நிலத்தை' ஒப்படைக்கும் அறிகுறி ஏதும் காணப்பெறவில்லை. எனவே, ரிஸ்விக் சமாதானம் செய்துகொள்ள மூன்றும் வில்லியம் கைக்கொண்ட முறையையே பின்பற்ற ஹார்லியும் ஸ்ரூஷ்பரியும் தீர்மானித்தனர். அதன்படி முதலில் பகைவரோடு தனியாகப் பேசிப் பொதுவாக உள்ள சில உரிமைக் கட்டுப்பாடுகளை நிர்ணயித்த பிறகு, அந்த உரிமைக் கட்டுப்பாடுகளை நேசநாடுகள் ஏற்றுக்கொள்ளுமாறு செய்ய வேண்டும். இம் முறையில் ஃபிரெஞ்சுக்காரர் முதலில் நெருங்கியதால் இது மேலும் உறுதிப்பட்டது. 1711ஆம் ஆண்டு ஏப்ரலில் நடைபெற்ற ரகசியப் பேச்சுகளின் பயனாக ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி ஸ்பெயினையும் மேற்கிந்தியத் தீவுகளையும் ஃபிலிப் வைத்துக்கொள்ளவேண்டும். அதிகமான வணிக நலன்களை பிரிட்டன் பெறவேண்டும். டச்சுக்காரர் 'தடை நிலம்' பெறலாம்.

ஆனல், அது இங்கிலாந்து ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்க வேண்டும். இந்த உரிமைக் கட்டுப்பாடுகள் முதலில் ஃபிரான்ஸிட மிருந்து வந்ததாக நினைக்கக்கூடிய வகையில் அமைக்கப்பட வில்லை. பிறகு ஸ்ரூஷ்பரியின் வற்புறுத்தலின்பேரில், காபி னெட்டிற்கும் டச்சுக்காரருக்கும் அவைகள் வெளியிடப்பெற்றன. இந்நிலையில் ஹார்லி நோய்வாய்ப்பட்டதனல் செயின்ட் ஜானே முழுப்பொறுப்பேற்றார். கோடை முழுதும் தம்முடைய தூதரான மாத்யூபிரீயர் (Matthew Prior) மூலமாக உரிமைக் கட்டுப்பாடுகளை முழுமையாக்குமாறு ஃபிரெஞ்சுக்காரரை நெருங்கினர். சமாதானப் பேச்சுகளை முறிக்காமலேயே போர் நிலையை நீடிக்கவேண்டும். ஹாலந்தோடு சண்டை இடாமலே, டச்சுக்காரரை விட்டுக் கொடுக்குமாறு செய்யவேண்டும். ஸ்பெயினை, ஃபிரான்ஸுக்கு எதிராகப் பேரம் பேசும் பொருளாக வைத்துக்கொண்டே ஆஸ்திரியரை, அவர்கள் ஸ்பெயின்மீது கொண்டாடிய உரிமையை விட்டுவிடுமாறு செய்யவேண்டும். இங்ஙனம் சாமாதானப் பேச்சு எனும் விளையாட்டு இடர்மிகுந்ததாக இருந்தது.

1711 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் சமாதானத்தின் முன்னு ரைகள் கையெழுத்தாயின. நேசநாடுகளுக்கு (அவைகளின் மூலம் பத்திரிகைகளுக்கு) உரைகளில் நம்முடைய பிராட்டஸ்டென்ட் வாரிசுரிமையை ஃபிரான்ஸ் ஒப்புக்கொள்ளவேண்டும் என்றும், ஹாலந்திற்குத் 'தடை நிலம்' இருக்கவேண்டுமென்றும், ஆஸ்திரியா வும் செவாயும் சில வரையறுக்கப்பெருத நன்மைகளைப் பெற வேண்டுமென்றும், டன்கிர்க் அரண்களின்றியே இருக்கவேண்டு மென்றும் குறிப்பிடப்பெற்றிருந்தது. ஆனல், மற்றத் துணை வாசகங்கள் தனிப்பட்ட முறையில் பிரிட்டனுக்குப் பல நலன்களைத் தேடித்தந்தன. ஜிப்ரால்டர், மைனர்க்கா, செயின்ட் கிட்ஸ் (St. Kitts), அகேடியா (Acadia), ஹட்சன் விரிகுடா (Hudson Bay) ஆகிய இடங்கள் பிரிட்டனுக்குக் கிடைத்தன. ஃபிரெஞ்சு மீன் பிடிப்போருக்குச் சில சலுகைகள் வழங்கப்பெற்றாலும், நியூஃபௌன்ட்லாண்டு தீவு பிரிட்டனுக்குக் கிடைத்தது. மேலும், அஸ்ஸியன்டோ அல்லது ஸ்பானிய அமெரிக்காவிற்கு அடிமைகளை அளிக்கும் தனி உரிமையும் வழங்கப்பெற்றது. அதனேடு ஸ்பெயினில், மிகுதியான ஆதரவைப்பெற்ற நாடு என்னும் வகை யில் பல உரிமைகளையும் இங்கிலாந்து பெற்றது.

நேச நாடுகளுக்கு எல்லா நிபந்தனைகளும் தெரியாதபோதிலும் அவை உடன்படிக்கையை எதிர்க்கத் தயாராயின. ஆனல், அவை களுக்கிடையே இருந்த ஒற்றுமையின்மை அவர்களைக் குலைத்தது. ஃபிலிப் ஸ்பெயினை வைத்துக்கொள்வதை டச்சுக்காரர்கள் ஒப்புக்

கொண்டனர். ஆனால், பெல்ஜியத்தைப் பொறுத்தவரையில் ஆஸ்திரியாவின் உரிமையை ஏற்க அவர்கள் மறுத்துவிட்டனர். மேலும், தங்களுடைய நிபந்தனைகளை ஃபிரான்ஸ் ஏற்க மறுத்ததால் இங்கிலாந்திடமிருந்து தம்மைப் பிரித்துக்கொள்ளத் துணியவில்லை.

இங்ஙனம் ஐரோப்பிய பீரங்கிகளும் கட்சி பீரங்கிகளும் பாராளுமன்றத்தில் எதிரொலித்தன. செயின்ட் ஜான் கலப்பற்ற டோரி அரசாங்கம் வேண்டுமென்றார். அதே சமயத்தில் ஆக்ஸ்ஃபோர்டு சமாதான உரிமைக் கட்டுப்பாடுகளை மாற்றி அமைப்பதால் அவருடன் கூட்டுச் சேருவதற்கு விக்குகள் முன் வந்தனர். அவ்வாறு செய்ய அவர் மறுத்துவிடவே டோரிக் கட்சியைச் சேர்ந்த நாட்டிங்காமுடன் பேரம் பேசினர். முன்னால் பதவியிலிருந்து நீக்கப்பெற்ற நாட்டிங்காம் தம்முடைய போர்பற்றிய நோக்கங்கள் முறியடிக்கப்பெற்றமையால் மிகுந்த சினம் கொண்டிருந்தவர். சமாதானம் செய்துகொள்வதற்கு அவர் அளித்த உதவிக்கு மாறாக, விக்குகள் அவர் கொண்டுவந்த சிலவேளை இணக்க மசோதாவை ஆதரித்தனர். இதற்கிடையில் பேரரசர், இளவரசர் யூஜினை, மார்ல்பரோவுக்கு உதவி புரிவதற்கென்று இங்கிலாந்திற்கு அனுப்பினார். அதே சமயத்தில் டச்சு வாணிபத்தைக் காப்பதற்காக பைஸ் (Buys) வந்து சேர்ந்தார்.

மார்ல்பரோவுக்கும் காபினெட்டிற்கும் வெளிப்படையான பூசல் தோன்றதிருக்கப் பல காரணங்கள் உண்டு. மார்ல்பரோ தொடர்ந்து படைத்தலைமை வகிக்கவேண்டுமென்று நேசநாடுகள் வேண்டிக்கொண்டன. தம் வேலையினை முடிக்கவேண்டுமென்ற நினைவும், ப்ளன்ஹிமை வலுப்படுத்த ஹார்லியின் உதவி இன்றியமையாதது என்ற உணர்வும், தமது கோமகளைக் காக்கவேண்டுமென்ற ஆர்வமும் மார்ல்பரோவை காபினெட்டுடன் சண்டையிடாதவாறு செய்தன. மார்ல்பரோவை நீக்குவதால் எழக்கூடிய புயலுக்கு அமைச்சர்களும் அஞ்சினர். ஆனால், இதற்காக மார்ல்பரோ பலவற்றைப் பொறுத்துக்கொள்ளவேண்டியிருந்தது. ஆன் ராணியாருக்கு அவர் பணிந்தபோதிலும், அவரது கோமகளான சாரா அரண்மனைப் பதவியிலிருந்து நீக்கப்பெற்றார். ராணியாரின் கடிதங்களை அச்சிட்டு வெளியிடப்போவதாக அச்சுறுத்தி அதனால் பூசல் மேலும் வளருமாறு செய்தார். அவருடைய படைத்தலைவர்களில் சிலர் கிளர்ச்சி செய்யுமாறு தூண்டப்பெற்றனர். அதே சமயத்தில் ‘எக்ஸாமினரும்’ (Examiner), பிற டோரிப் பத்திரிகைகளும் அவர் போரை நீடிக்க முயன்றதாகத் தாக்கின. இவ்வகை ‘இடிகள்’ நூறு போர்க்களங்களைவிடக் கொடுமையானவை என அவர் உணர்ந்தார்.

அநேகமாக மூன்று பொருள்கள் அவருடைய முடிவினை நிர்ணயித்தன. சமாதானத்தினுல் அவருக்கு அத்துணை இடரில்லை. முன்பு ஒரு முறை சமாதானம் இன்றியமையாதது என்று கொடால்ஃபினிடம் அவரே கூறியிருக்கின்றூர். அதே போன்று இப்போதும், 'நம்முடைய நண்பர்கள் போர்ச்சுமையை மெல்ல மெல்ல நம் மீதே சுமத்துகின்றனர்; அவர்கள் செல்லும் வேகத்தைப் பார்த்தால் இறுதியில் முழுப்பொறுப்பும் இங்கிலாந்தின் தலைமீதே விழும்' என்று ஆக்ஸ்ஃபோர்டிடம் கூறினர். ஆனுல், அவர் பழிவாங்கப் பட்டார். அதிலும் சாராவிற்காகப் பழிவாங்கப்பெற்றூர். அவர் சாராவிடம் கூறியதைப் போல, 'சிலருடைய மனம் துடிக்குமாறு' செய்தார். ப்ாராளுமன்றம் அநேகமாக யாகோபிய மயமாக இருந்தது என்று ஹனேவரிடம் ஓயாது கூறிவந்தார். அவர் நினைத்தவாறே ஹனேவரின் தேர்வாளரும் அவரது வாதங்களுக்குச் செவி சாய்த்தார். அதே சமயத்தில் காமன்ஸ் சபையின் பொதுக் கணக்கு ஆய்வுக்குழு, சேனைக்கு ரொட்டியளிக்கும் கான்ட்ராக்டர், மார்ல்பரோவுக்கு 63,000 பவுன் அளித்திருப்பதாக வெளியிட்ட அறிக்கையைப்பற்றி கேள்வியுற்றூர். அப்போதும் அவர் பெல்ஜியத்தில் கவர்னராக வரும் நம்பிக்கையை இழந்துவிடவில்லை. இங்ஙனம் ஒருபுறம் தன்னலம் மிக்கவராகவும், மறுபுறம் தலைசிறந்த ஐரோப்பியராகவும் மார்ல்பரோ விளங்கினர்.

அரசாங்கத்தின் சமாதானக்கொள்கையைத் தம்முடைய நூலாகிய 'நேச நாடுகளின் நடத்தை' (Conduct of the Allies) என்பதில் ஸ்விப்ட் விளக்கினர். எனினும், ஸ்பெயினையும் மேற்கிந்தியத் தீவுகளையும், போர்பன் அரசர் ஒருவரிடம் ஒப்படைக்கும் சமாதானம் எதுவும் பாதுகாப்பானது அன்று என்று கூறிய பிரபுக்கள் சபை டிசம்பர் மாதத்தில் 12 வாக்குகள் வித்தியாசத்தில் தீர்மானம் ஒன்றை மேற்கொண்டது. அதுபோது ஸ்ரூஷ்பரி தள்ளாடினர். செயின்ட் ஜான் நம்பிக்கை இழந்தார். அதே சமயத்தில் ஆக்ஸ்ஃபோர்டும் ராணியாரும் தங்களது இறுதி வேலையைச் செய்தனர். சமாதான முன்னுரைகளுக்குக் காமன்ஸ் சபையில் 232 உறுப்பினர் ஆதரவு கிடைத்தது. அதற்கு எதிராக 106 உறுப்பினரே வாக்களித்தனர். இச் சூழ்நிலையைப் பயன்படுத்தி, மார்ல்பரோவுக்கு எதிராக இருந்த அறிக்கை ஒன்றினை வெளிப்படுத்திப் அவரைப் பதவிகளின்று நீக்கினர். சாமர்செட்டும் பதவியிலிருந்து விலக்கப்பெற்றூர். அவர்கள் 12 புதிய பிரபுக்களை நியமித்தனர். ஊழல்கள் மிகுந்தவர் என்று தாக்கி, வால்போலை காமன்ஸ் சபையிலிருந்து துரத்தினர். மார்ல்பரோக்கள், தாழ் நாடுகளுக்கு ஓய்வுபெற்றுச்சென்றதும், கொடால்ஃபினின் மறைவும் ஆன் ராணியாரின் ஆட்சியின் முதற்பகுதி வரலாற்றை முடிவுறச்

செய்கின்றன. உடன்படிக்கையைக் கொண்டுவருவதற்காக ஆக்ஸ்ஃபோர்டு உயர் டோரியினரைச் சாரவேண்டியிருந்தது. அது அவர்களுடைய புகழ் ஓங்கிய காலம். விக்கு கட்சியினர் நிறைவேற்றிய அந்நியப் பிராட்டஸ்டென்டுகளுக்குக் குடியுரிமை அளிக்கும் சட்டத்தை அவர்கள் ரத்து செய்தனர். ஸ்காட்லாந்தியருக்கு மிகுந்த வெறுப்பைத் தரும் இரு சட்டங்களைக் கொண்டு வந்தனர்.

ஆயின், இந்த ஆண்டின் நெருக்கடி 'உட்ரெக்ட்' (Utrecht) மாநாட்டில்தான் தோன்றியது. அங்கே செயின்ட் ஜான் தம் திறமை முழுவதையும் வெளிப்படுத்தினர். பிளவுபட்ட கூட்டுறவைப் பயன்படுத்திக்கொண்டு ஃபிரான்ஸ் நலமடையாதிருக்கச் செய்து, அதே சமயத்தில் அதனோடு இணைந்து செயலாற்றவேண்டியிருந்தது அவருக்குப் பெரும் பிரச்சினையாக இருந்தது. அதுபோது திடீரெனப் பேரிடர் ஒன்று வந்தது. 1712ஆம் ஆண்டில் பர்கண்டியின் கோமகனும், அவருடைய மூத்த மகனும் இறந்தனர். அதனால், ஃபிரான்ஸின் அரியணைக்கும் ஸ்பெயின் நாட்டு ஃபிலிப்பிற்கும் இடையில் பிற்காலத்தில் பதினைந்தாம் லூயியாகப் பட்டமேற்ற குழந்தையே இருந்தது. எனவே, ஆக்ஸ்ஃபோர்டும் செயின்ட் ஜானும் இரு மாற்றுத் திட்டங்களை உருவாக்கினர். ஒன்று ஸ்பெயினை ஃபிலிப் வைத்துக்கொண்டு ஃபிரான்ஸின்மீது பெற்ற உரிமையை விட்டுக்கொடுக்கவேண்டும். அல்லது ஸ்பெயினை செவாய் அரசருக்கு அளித்துவிட்டு, அதற்குப் பதிலாக செவாய் நாட்டுப் பகுதிகளையும் சிசிலியையும் பெற்றுக்கொள்ளவேண்டுமென்றனர். அவர்கள் ஃபிலிப், ஸ்பெயினை விட்டுவிடுவார் என்று நம்பினர். அதனால், செவாய் நாட்டு யூஜினையும் விக்குகளையும் திருப்தி செய்யலாமென்று கனவு கண்டனர். ஆனால், ஸ்பெயினைத் தம்மிடமே வைத்துக்கொள்ள ஃபிலிப் தீர்மானித்தபோது நெருக்கடி தோன்றியது. மனக்கசப்புற்ற ஆஸ்திரியர், போரிட உறுதி கொண்டனர். டச்சுக்காரரும் தங்களது 'தடை நிலத்தை' விரிவு படுத்தும் நம்பிக்கையில் அவர்களுடன் சேரத் தீர்மானித்தனர்.

தம்முடைய கூட்டாளிகளுக்கும் கூறாமல் நம்முடைய புதிய படைத் தலைவரான ஆர்மாண்டியைச் சண்டையைத் தவிர்க்குமாறு செயின்ட் ஜான் ஆணையிட்டார். பல ஆண்டுகளாக ஒன்றாக இருந்து போரில் புகழ்பெற்ற நேசநாடுகளின் படைகளிடமிருந்து நம்முடைய படைகள் பேரவமானத்தோடு திரும்பின. அதே சமயத்தில் போர் நிறுத்தத்தினாலும் ஃபிரெஞ்சுக்காரர் டன்கிர்க்கை ஒப்படைத்ததாலும், ஒப்பந்தம் செய்து முடிக்கப்பெற்றது. ஹாலந்தோடு முழு அறிவு ஏற்படுவதை ஆக்ஸ்ஃபோர்டும், ஸ்ரூஷ்

பரியும் ஒருவகையில் தடுத்தனர். எனினும், வேறு சில நிகழ்ச்சிகளும் ஹாலந்தை இங்கிலாந்தின் விருப்பத்திற்கு இணங்குமாறு செய்தன. ஜூலை மாதத்தில் வில்லர்ஸ் டினெய்ன் (Denain) என்னுமிடத்தில் யூஜினை முறியடித்தார். மேலும் அவர் மார்ல்பரோவால் வெல்லப்பெற்ற சில பகுதிகளை மீட்டுக்கொண்டார். பாலிங்புரோக் பிரபு (Bolingbroke) பட்டத்தைப் பெற்ற செயின்ட் ஜான், ஆகஸ்டு மாதத்தில் பாரீஸ் நகரத்தில் பேச்சுவார்த்தை நடத்தினர். இறுதி எச்சரிக்கை விடுத்து ஃபிரெஞ்சுக்காரரை நெருக்கினர். 1713ஆம் ஆண்டு பிப்ரவரியில்தான் உடன்படிக்கை கையொப்பம் பெற்றது.

இவ்வுடன்படிக்கை, பிரிட்டனுக்கும் ஐரோப்பாவுக்கும் நன்மை அளித்தது. இத்தாலியில் நேர்ந்த சில சிறு மாறுதல்களைத் தவிர அரை நூற்றாண்டுக்காலத்திற்கு சக்திச் சமநிலையை அளித்தது. 1701ஆம் ஆண்டு தோன்றிய ஆதிக் கூட்டுறவின் நோக்கங்களையெல்லாம் அநேகமாக நிறைவேற்றிவைத்தது. ஐந்தாம் ஃபிலிப், ஸ்பெயினையும் மேற்கிந்தியத் தீவுகளையும் வைத்துக்கொண்டார். அதே சமயத்தில் ஸ்பானிய நெதர்லாந்து, மிலான், நேபிள்ஸ் ஆகிய இடங்களை ஆஸ்திரியா பெற்றது. சிசிலியும், முன்னைவிட மேலான ஆல்பைன் எல்லையும், செவாய்க்கு அளிக்கப்பெற்றன. டச்சுத் 'தடை நிலம்' 1709ஆம் ஆண்டில் இருந்ததைக் காட்டிலும் மிகுதியாகக் குறைக்கப்பட்டது. ஆனல், அது ஃபிரான்ஸுக்கு எதிராக 1701ஆம் ஆண்டு இருந்ததைவிட வலிமைபெற்ற நாடாக இருந்தது. மேலும், பர்னஸிலிருந்து ஈப்ரஸ் வரையிலும், சார்லிராயி (Charleroi) லிருந்து நாமூர் வரையிலும், உள்ள எல்லையில் தம் காவற் படைகளை வைத்துக்கொள்ளும் உரிமையை டச்சுக்காரர் பெற்றனர். 1714ஆம் ஆண்டில்தான் ஹாப்ஸ்பர்கினர் கையெழுத்திடுமாறு வற்புறுத்தப்பட்டனர், அப்போது ஃபிரான்ஸ் கேலைக் (Khel) கைவிட்டது. ஆனல். லாண்டாவையும் (Landau) ஸ்ட்ராஸ்பர்கையும் வைத்துக்கொண்டது. ஆன் ராணியார் இறந்தபிறகுதான் கேடலான் மாகாணத்தவர், காஸ்டில் மாகாணத்தவருக்குப் பணிந்தனர். முன்பு இந்தக் கேடலான் மாகாண மக்களின் உரிமையைக் காப்பதாக பிரிட்டன் அவசரப்பட்டு உறுதிமொழி அளித்தது. ஆனல், இப்போது அவர்களைக் கைவிட்டது.

இங்ஙனம் இறுதியில் 'இந்த அழிவு தரும் போரில்' இருந்து பிரிட்டன் வெளியேறியது. பாலிங்புரோக்கின் வழிகளைவிடச் சிறந்தவை அநேகமாக இல்லையென்ருலும் அவை ஒழுக்கக்கேடு விளைவிப்பனவாக இருந்தன. மேலும் வலிமைமிக்க பகைவரைத்

தேடித் தந்தன: ஒன்றுபட்ட முயற்சிதான் அப் பகைவரை வீழ்த்த முடியும்.

எவ்வாறெனினும் இச் சமயத்தில் ஆக்ஸ்ஃபோர்டுக்கும், பாலிங்புரோக்கிற்கும் இடையே இருந்த பூசல் தீர்க்கமுடியாததாயிற்று. பாலிங்புரோக் ஏர்ல் பிரபுவாக வேண்டுமென்று கோரினர், ஆனல், வைகவுன்ட் பிரபு பட்டந்தான் கிடைத்தது. முன்பு இல்லாத கார்ட்டர் (Garter) பட்டத்தை ஆக்ஸ்ஃபோர்டு பெற்றுர். சாதாரண நாட்களிலேயே ஆக்ஸ்ஃபோர்டின் கொள்கைகளை, 'அக்டோபர் சங்கத்தின்' கொள்கைகளோடு இணைப்பது இடர் மிகுந்த செயல். ஆயின், இப்போது இத்தகைய மோதல், தனிப்பட்டவரின் பூசலோடு இணைந்து மற்றப் பிரிவுகளையும் பாதித்தது. ஆக்ஸ்ஃபோர்டு தம்முடைய விக்கு நண்பரான ஹாலிஃபாக்ஸோடு பேச்சுவார்த்தை தொடங்கினர். அதேசமயத்தில் பாலிங்புரோக்கும் ஹார்கோர்ட்டும், சமயவெறி கொண்ட சாக்கிவெரலையும் அட்டர்பரியையும் பிஷப்புகளாக நியமிக்கவேண்டுமென்று கேட்டனர். சமாதானத்தைப்பற்றிய வேற்றுமைகள் கட்சியை மேலும் சீர்குலைத்தன. அந்த உடன்படிக்கை செய்துகொண்டவிதம் மட்டும், ஆக்ஸ்ஃபோர்டு அதிகாரத்திற்கு வர உதவியாக இருந்த செல்வந்தர்கள் ஸ்ரூஷ்பரி, ஆர்க்கைல் ஆகியோருக்கு வெறுப்பூட்டியது என்பதில்லை. 'மனம் போன போக்கினர்' (Whimsicals) என்ற சாட்டுப் பெயர் கொண்ட தனியான கட்சியொன்று அமைக்கப்பெற்றது. இக் கட்சியில் இருந்தவர் டோரிகள் என்ருலும் அவர்கள் ஹனேவரை ஆதரித்தவர்கள். ஃபிரெஞ்சுக்காரருக்கு எதிரானவர்கள். அவர்களிற் சிலர் நாட்டிங்காமின் ஆதரவாளர்கள். ஆயின், பிற்காலத்தில் சபாநாயகராக வந்த ஹான்மர் (Hanmer), ஐரிஷ் பிராட்டஸ்டென்டாகிய ஆங்கில்சே (Anglesey), நாவன்மை மிக்க இளைஞரான கார்ட்டரட் பிரபு (Carteret) ஆகிய செல்வாக்கு மிகுந்த சுயேச்சையாளரையும் தன்னுள் அடக்கியிருந்தது. 1713ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தில் இக் கட்சியினர் விக்குகளோடும் வணிகரோடும் இணைந்து ஃபிரெஞ்சு உடன்படிக்கையில் சேர்க்கப்பட்டிருந்த வாணிபத் துணைவாசகங்களை நீக்குவதற்கு முயன்றனர். இந்தத் துணை நிபந்தனைகளால் நம்முடைய போர்ச்சுகல் வாணிபமும், கம்பள ஏற்றுமதியும் அழிந்துவிடும் என்று கூறப்பெற்றது. ஆக்ஸ்ஃபோர்டுதான் இக் கலகத்தைத் தூண்டியவர் என்று பாலிங்புரோக் கும்பல் குற்றம் சாட்டியது.

இப்போதும் ஆக்ஸ்ஃபோர்டின் கை மேலோங்கியே இருந்தது. அவர் அயர்லாந்தில் வளர்ந்து வந்த சமயச் சண்டைகளைச் சமாதானப்படுத்துவதற்காக ஸ்ரூஷ்பரியை அனுப்பினர். மார்

(Mar) என்பவரை ஸ்காட்லாந்து அமைச்சராக நியமித்துத் தம் எதிரிகளில் ஒருவரைத் தம்வழிக்குக் கொண்டுவந்தார். டோரிக் கட்சியைச் சார்ந்த ப்ராம்லேவுக்கு உள்துறைச் செயலாளர் பதவி அளித்தார். பொதுத்தேர்தலில் அவரது அரசாங்கம் வெற்றி பெற்றது. லண்டன் நகரத்தில்கூட அவரது கட்சி அதிக இடங்களை இழக்கவில்லை. சமாதான உடன்படிக்கையும் உறுதியுடன் இருந்தது. ஆனால், 1714ஆம் ஆண்டு மார்ச் மாதம் வரையில் புதிய பாராளுமன்றம் கூடவில்லை. ஏனெனில், கிறிஸ்துமஸின் போது ராணியார் அதிக நோய்வாய்ப்பட்டார். அதன் பிறகு இங்கிலாந்து வாரிசுரிமை எவ்வாறு மூன்று நாடுகளின் அரசியலைப் பாதித்தது என்பது தெளிவாகியது.

ஸ்காட்லாந்து மிகுந்த இடர் விளைப்பதாகக் காணப்பெற்றது. கிளாஸ்கோ நகரும் மேற்குத் துறைமுகங்களும் குடியேற்ற நாட்டு வாணிபத்தில் லாபமடைய ஆரம்பித்தபோதிலும், ஆங்கிலச் சுங்க அதிகாரிகளின்மீது கொண்ட வெறுப்பு, பரவலான கள்ள வாணிபம், உள்நாட்டுத் தொழில்களின் சிதைவு ஆகியவையே ஐக்கியத்தின் உடனடிப் பயன்களாக இருந்தன. பிரிட்டிஷ் அரசியல் கட்சிகள் இரண்டும், ஸ்காட்லாந்தியருடைய குறைபாடுகளைக் கவனியாது ஒருவிதத் தயக்கத்தோடு நடந்துகொண்டன. பலமுறை ஐக்கியத்தின் உணர்ச்சிக்கு முரணாகவும் நடந்து கொண்டன. சிலமுறை ஐக்கியச் சட்டத்திற்கு விரோதமாகச் சென்றன. 1711ஆம் ஆண்டில் கிர்க் திருச்சபையினர் தொழுகைப் புத்தகத்தைப் பயன்படுத்தியதற்காகச் சிறையிலிட்ட ஓர் எபிஸ்கோபிலியச் சமய குருவைப் பிரபுக்கள் சபை ஆதரித்தது. மேலும், ஸ்காட்லாந்திலிருந்து மேல் முறையாக வரும் வழக்குகளை விசாரிக்கும் உரிமை தனக்கு உண்டு என்றும் அச் சபை கூறியது. அடுத்த ஆண்டு பாராளுமன்றம் சமயப்பொறைச் சட்டத்தை நிறைவேற்றியது. அதனோடு திருச்சபை நியமனங்களில் இருந்து தனியார் ஆதரவையும் மீட்டது.

ஸ்காட்லாந்தைக் காட்டிலும் அயர்லாந்தில் கட்சிப் பிளவுகள் கடுமையாக இருந்தன. மூன்றாம் வில்லியத்தின் வெற்றியும், கத்தோலிக்க எதிர்ச்சட்டங்களும், அயர்லாந்தில் பெரும் பாலோராகவிருந்த கத்தோலிக்கரை நெருக்கின. ஒவ்வொரு பாரிஷிலும் ஒரு சமய குரு அனுமதிக்கப்பெற்றாலும் சமயப் பதவியேற்றல் தடை செய்யப்பெற்றது. அதே சமயத்தில் கத்தோலிக்கர் பல பதவிகளைப் பெறுவதற்கும், நிலச் சொந்தக்காரராக இருப்பதற்கும் சட்டங்கள் தடை விதித்தன. இங்ஙனம் பெரும்பான்மையினரை ஒடுக்கியது, ஐரிஷ் பிராட்டஸ்டென்டுகளின்

சமயப்பற்றினை மிகுதியாக்கியது என்று கூறலாம். அயர்லாந்தி லிருந்த ஆங்கிலச் சமயத்தவர் இங்கிலாந்தில் இருந்தவர்களைவிட விக்கு கட்சி உணர்வு மிகுந்தவர்களாக இருந்தனர். அதேசமயத்தில் அல்ஸ்டரில் விளங்கிய பிரஸ்பிடீரியன் சமயம், டோரிகளுக்கு நிரந்தரமான ஓர் அறைகூவலாகவே இருந்தது.

எவ்வாறெனினும், அயர்லாந்து ஆட்சியில் இரு கூறுகள் காணப்பெறுகின்றன. பொருளாதாரத்துறையில் அயர்லாந்து மக்கள், ஆங்கில வாணிபச் சட்டங்களினால் ஒடுக்கப்பெற்றனர். குடியேற்ற நாடுகளுடன் வாணிபமும், கால்நடைகளின் வியாபாரமும் ஏற்கெனவே அழிக்கப்பெற்றுவிட்டன. 1699ஆம் ஆண்டில் அயர்லாந்துத் துணி ஃபிரான்ஸுக்கு ஏற்றுமதி ஆவதை ஆங்கிலப் பாராளுமன்றம் தடை செய்தது. அரசியல் சட்ட முறையில், அயர்லாந்தினர் பண்ணையாட்களைப்போல் நடத்தப் பெற்றனர். பாய்னிங்ஸ் சட்டம் (Poynings' Act) நடைமுறையில் இருந்ததன் காரணமாக அவர்களுடைய சட்டங்கள் யாவும் ஆங்கிலக் கவுன்சிலினால் ஆராயப்பெற்று வடிகட்டப்பெற்றன. திருச்சபையிலும் அரசாங்கத்திலும் ஆங்கிலேயரே உயர் பதவிகளைப் பெற்றனர். இத்தகைய தாழ்ந்தநிலையினை அயர்லாந்தினர் வெறுத்தனர். 1703ஆம் ஆண்டில் ஐரிஷ் காமன்ஸ் சபையினர் தங்களுடைய இழந்த உரிமைகளை மீட்டுத்தரவேண்டும் அல்லது அயர்லாந்து ஐக்கியத்தை ஏற்படுத்தவேண்டுமென்று ராணியாருக்கு விண்ணப்பித்துக்கொண்டனர்.

ஆங்கிலக் கட்சிப் பிளவுகள் அயர்லாந்தில் சமய வேற்றுமைகளைத் தூண்டின. 1704ஆம் ஆண்டில் நாட்டிங்காம், சோதனைச் சட்டத்தை அயர்லாந்திற்கும் கொண்டுசென்றார். பிற்காலத்தில் விக்கு கட்சியைச் சேர்ந்த வார்ட்டன் அச் சட்டத்தை ரத்து செய்தார். ஆர்மாண்டின் தலைமையில் இருந்த டோரிகளின் அரசாங்கம் பிளவினை உச்சநிலைக்குக் கொண்டுசென்றது. இங்ஙனம் 1713–14-ல் டோரிகள், யாகோபியரைச் சார்ந்தவர்கள், பாலிங்புரோக்கினால் ஆதரிக்கப்பெற்ற சமய குருமார்கள், விக்கு கட்சியினர் செல்வாக்கு மிகுந்திருந்த டப்ளின் நகரம் என்று அயர்லாந்து பிளவுபட்டுக் கிடந்தது. ஸ்ரூஷ்பரியும் ஆக்ஸ்ஃபோர்டும்தான் மிதவாதக் கொள்கையின்மூலமாக நிலைமையைச் சமாளிக்கவேண்டியிருந்தது.

வாரிசுரிமை எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தது. ஆன் ராணியார் தமது சகோதரருக்குப் பட்டத்தை மீட்டுத்தரத் தீர்மானித்துவிட்டார் என்று ஹனோவர் குடும்பத்தினர் நம்பினர். அவர்களுடைய பகர ஆட்களும் மார்ல்பரோவும், அரசாங்கம்,

ஃபிரெஞ்சு உதவியோடு போலியை மீட்பதற்குத் திட்டங்களை வகுத்திருந்தது என்று அறிவித்தனர். இந்த இரண்டு கூற்றுகளுமே உண்மைக்குப் புறம்பானவை. 1712ஆம் ஆண்டிலேயே 'போலி' ராணியாருக்குக் கடிதம் எழுதினர். ஆனால், அதற்கான பதிலொன்றும் பெறவில்லை. மூன்றாண்டுகளுக்குத் தம்முடைய ஆட்கள் சதி செய்வதை நிறுத்தியதற்கு பதிலாகக் கவர்ச்சியான சொற்கள் தான் தமக்குக் கிடைத்தன என்று அவர் குறைபட்டுக்கொண்டார். ஹைலாந்துப் பகுதிகளிலும், ஐரிஷ் கத்தோலிக்கரிடையேயும் யாகோபியர் இருந்தனர். ஆனால், இங்கிலாந்தில் பெரும்பாலோர் வெறும் டோரிகள்தாம். அவர்கள் ஆங்கிலத் திருச்சபையை விரும்பினர். அமைதியில் ஆனந்தம் கொண்டனர். அந்நிய அரசரை அறவே வெறுத்தனர். ஆனால், அதே சமயத்தில் இறுதியான பிராட்டஸ்டென்டுகளாகவும், ஃபிரெஞ்சு எதிரிகளாகவும் விளங்கினர்.

அக்காலத்தே லண்டன் நகரத்திலும், காபி விடுதிகளில் உள்ள படித்த வகுப்பினரிடையேயும், கேளிக்கைச் சங்கங்களிலும் பொது மக்கள் கருத்து உருவாகியது. அது சிறந்த முறையில் வெளியிடப்பட்டது. வழக்கமாக வாரத்திற்கு இரண்டு மூன்று முறை வெளிவரும் பல செய்தித்தாள்கள் மிகுதியான மக்களால் விரும்பிப் படிக்கப்பெற்றன. ஒவ்வொரு கட்சியினரும் சிறந்த அறிவாற்றல் படைத்தவர்களைப் பயன்படுத்திக்கொண்டனர். உடன்படிக்கைக்கு ஆதரவு தேடுவதற்காக ஸ்விப்ட் என்பவரை ஆக்ஸ்ஃபோர்டு பயன்படுத்தினர். டிஃபோவின், ரிவ்யூ (Review) எனும் பத்திரிகை மிதவாதக் கொள்கையைப் பரப்புவதற்குப் பயன்படுத்தப்பெற்றது. அடிஸன், ஜன்டோவில் ஒரு துணைச் செயலாளராக இருந்தார். ஸ்டீலும் (Steele) பிராட்டஸ்டென்டு சமயத்தைத் தீவிரமாக ஆதரிக்கும் விக்கு கட்சி உறுப்பினர். 'சாரா' கோமகளும் தமக்குக் கட்டுப்பட்ட பத்திரிகையாளரைப் பயன்படுத்திக்கொண்டார். பாலிங்புரோக், முத்திரை வரி கொண்டுவந்ததிலிருந்தும் பல பத்திரிகையாளர் சிறையிடப் பெற்றதினின்றும், பத்திரிகை எவ்வளவு தூரம் வலிமை பெற்றிருந்தது என்பதை அறியலாம்.

இத்தகைய பொதுமக்கள் கருத்து காலப்போக்கில் செல்வாக்கடைய ஆரம்பித்ததென்றாலும் அக்காலத்தில் மேலிடத் தயாராகிய ராணியார், தேர்வாளர், போலி போன்றவரிடமிருந்துதான் அரசியலில் முனைப்பு வந்தது. அவர்களுடைய விருப்பங்கள் நிறைவேறுவது உறுதியாக இருக்கும் வரையில் பேராசைகொண்ட அரசியல்வாதிகள் தங்களுடைய நலனைப் பாதுகாத்துக்கொள்ள

முடிந்தது. உதாரணமாக, மார்ல்பரோ, செயின்ட் ஜெர்மெய்னில் (St. Germain) மன்னிப்புப் பெறுவதில் முனைந்ததோடு, ஹாலந்தில் பணத்தை முதலீடு செய்யவும் முயற்சி செய்தார்.

இவ் வுணர்ச்சியை ஹனேவர் மேலும் தூண்டினர். ஆங்கில மொழி பேசி, ஆங்கில அரசியாரைப் போல (சிறந்த அரசியாராகத் திகழ்ந்திருப்பர்) ஆப்பியில் (Abbey) புதைக்கப்பெறுதல்வேண்டு மென்று நினைத்த, தமது தாயாராகிய சோபியாவைப் போலன்றி, தேர்வாளரான ஜார்ஜ் லீவிஸ் (George Lewis) இங்கிலாந்தில் சிறு அக்கறையுங் காட்டவில்லை. ஆனல், அவர் ஃபிரெஞ்சுக்காரரை வன்மையாக எதிர்த்த ஜெர்மன் இளவரசர் ஃபிரான்சோடு செய்து கொள்ளும் உடன்படிக்கை அவர்களுடைய ஆதிக்கத்தையும் கத்தோலிக்கரின் செல்வாக்கையும் நிலைநிறுத்தும் என எண்ணிக் கடுஞ்சினத்தோடு ஆர்மண்டியிடமிருந்து தம்முடைய படைகளைத் திரும்ப அழைத்துக்கொண்டார். சமாதானம் ஏற்படுவதற்குக் காரணமானவர்களை இறுதிவரை அவர் மறக்கவும் இல்லை; மன்னிக்கவுமில்லை. உடன்படிக்கைகளில் வாரிசுரிமைபற்றியிருந்த துணை வாசகங்களினல் மன நிறைவு பெருத அவர் மேலும் சில உறுதி மொழிகளைக் கோரினர். ஃபிரான்ஸிலிருந்து போலி, லோர்ரைனுக்கு விரட்டப்பெற்றபோது, அவரை மேலும் துரத்தவேண்டு மென்ருர். பாராளுமன்றம் தமது தாயாருக்கு மானியம் வழங்க வேண்டுமென்ருர். நெடுநாட்களாக விக்குகள் வற்புறுத்தி வந்ததற்கிணங்க 1714ஆம் ஆண்டில் தன் மகன் இங்கிலாந்திலேயே வாழவேண்டுமென்பதை ஏற்றுக்கொண்டார். ராணியார் உறுதி மொழி ஒன்றும் அளிக்க மறுத்ததால் ஆக்ஸ்ஃபோர்டு கூறியதைப் போல அவரை எதிர்ப்பின் எல்லைக்கே கொண்டுசென்றது. அப்போது பொருமைக் குணமும், தவருன வழியைப் பின்பற்றும் பண்பும், காலம் தாழ்த்தும் தன்மையும் கொண்ட ஆக்ஸ்ஃபோர்டு, ஃபிரெஞ்சுப் போராட்டக்காரரோடு இரகசியப் பேச்சு வார்த்தையை மேற்கொண்டார். அவர் ஹனேவரிய வாரிசுரிமையை நிலைநாட்டியவர்; யாகோபியரல்லர் என்பதை ஹனேவரியரே ஏற்றுக் கொண்டனர். இவ்வாறு முரண்பட்ட செயல்களில் ஈடுபட்டு இருந்தது விந்தையே. போலி, இத்தாலியில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருக்கவேண்டுமென்றும், இரண்டாம் சார்லஸைப் போன்று தம் நாட்டிற்கு அழைக்கப்படும் வரை பொறுத்திருக்க வேண்டுமென்றும் கூறினர். உடன்படிக்கையினை ஏற்படுத்துவதற்கு யாகோபியர் வாக்கையும் பயன்படுத்திக்கொண்டார். யாகோபியரை அமைதியாக இருக்கச்செய்ய ஃபிரெஞ்சுச் செல்வாக்கினை உபயோகித்தார். எப்படியும் சூழ்ச்சியினை முறியடித்தார். முதலில் போலியை, மார்ல்பரோவின் திட்டங்களை ஏற்றுக்கொள்ள

ஊக்கினர். ஆனால், பிறகு அவர்களை ஹனேவரியருக்குக் காட்டிக் கொடுத்தார். பிராட்டஸ்டென்டு சமயத்தைத் தழுவ போலி மறுத்ததுதான் அதற்குக் காரணம். 1688ஆம் ஆண்டின் சண்டர்லண்டைப் போலவே ஆக்ஸ்ஃபோர்டும் 'பெரும் போக்கிரி' என்று மார்ஷல் பெர்விக் (Marshal Berwick) கூறினர்.

இந்த ரக்சியப் பேச்சுவார்த்தைகளைப்பற்றி அறிவிக்கப் படாத பாலிங்புரோக், தன்னலமே உருவானவர். அவர் ஃபிரெஞ்சுக் காரரிடம் செல்வாக்குப்பெற்றிருந்தார். ஹனேவரை அவமதித்தார். அதே சமயத்தில் அவருடைய திட்டம் பிரிட்டன், ஃபிரான்ஸ், ஸ்பெயின், செவாய் ஆகிய நாடுகளை ஜெர்மனியருக்கு எதிராக நிறுத்துவதாக இருந்தது. போலி, பிராட்டஸ்டென்டாக மாறி விட்டால், அரசராக வருவதற்கு வாய்ப்பில்லை என்பதை அவரும் நம்பினர். ஆனால், அவர் அரசரைப்பற்றியோ, திருச்சபையைப் பற்றியோ கவலை கொண்டவரல்லர். தன்னலமும், கட்சியின் முன்னேற்றமும்தான் அவரது குறிக்கோள்களாக இருந்தன. மிகச் சிறிய பதவிகள் உட்பட அரசாங்கப் பதவிகள் அனைத்தும் டோரிகளே வகிக்கவேண்டுமென்றும், ராணியார் மறைந்த பிறகு பதவியில் இருப்பவரை விக்குகளின் விரோதம் நெருங்க முடியாதவாறு செய்வதும் அவருடைய திட்டங்களாக இருந்தன. இதற்கிணங்க ஸ்காட்லாந்தியருக்கும் புறச்சமயத்தவருக்கும் எதிராகக் காமன்ஸ் சபையினரைத் தூண்டிவிட்டார். அத்துடன் ஆர்மாண்ட் செய்ததைப் போன்று சேனையில் இருந்த மிதவாதிகளைக் களைந்தார். ஆயின், அவரைச் சார்ந்திருந்த அனைவரும் யாகோபியர் அல்லர். உதாரணமாக, மார், அட்டர்பரி, ஆர்மாண்ட், விண்டாம் ஆகியோரைக் குறிப்பிடலாம். ஆனால், அவர்களில் சிலர் திறமையற்றவர்; மற்றவர் பழி வாங்கும் பண்பினர். ஆக்ஸ்ஃபோர்டு, தாமதம் செய்வதை எல்லோருமே வெறுத்தனர். அதனோடு விக்குகளிடம் ஆதரவாக இருந்தனர்.

1713–14ஆம் ஆண்டிலிருந்து பாலிங்புரோக் ஆக்ஸ்ஃபோர்டுடன் மேற்கொண்ட போராட்டத்தின் ஒரு பகுதியாகவே வாரிசுரிமைத் திகழ்ந்தது. போலி, தம்முடைய சமயத்தில் விடாப்பிடியாக இருந்ததைக் காட்டிலும் இந் நிலை ஹனேவரியருக்குப் பேருதவி அளிப்பதாக இருந்தது. மாஷாம் சீமாட்டியையும், அவர்மூலமாக, ஆன் ராணியாரையும் பாலிங்புரோக் தம் வயப்படுத்தினர். ஆக்ஸ்ஃபோர்டின் நிலை வேகமாக வீழ்ச்சியுற ஆரம்பித்தது. எனினும் அவர் ஹனேவரை அதிகமாக ஆதரித்ததால் வீழ்ச்சி விரைவில் வந்தது. பிரபுக்கள் சபை கூடுவதற்காக அனுப்பப்படும் ஆணையை, ஹனேவரின் தேர்வாளருக்கும் அனுப்பவேண்டுமென்று

அந்நாட்டவர் கேட்டதற்கு இணங்க ராணியாருக்கும், பாலிங்புரோக்கிற்கும் எதிராகக் காபினெட்டை வற்புறுத்தினர். பாராளுமன்றத்திலும் பெரும்பான்மையினர் அவர் கருத்தையே ஆதரித்தனர். 'மனம் போன போக்கினரும்' (Whimsicals) பெரும்பான்மையான பிஷப்புகளும் விக்குகளோடு சேர்ந்துகொண்டனர். ஆக்ஸ்ஃபோர்டு, தெளிவான நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டிருந்தால் தமது எதிரியை வீழ்த்தியிருக்கலாம். ஆனால், அவர் அதிகாரத்தைப் பிறரோடு பங்கிட்டுக்கொள்ள விரும்பவில்லை. ஜூன் மாதத்தில் தேர்வாளர் சோபியா இறந்தார். ஆக்ஸ்ஃபோர்டின் எதிர்ப்பினைப் பொருட்படுத்தாது சமயப் பிளவுச் சட்டத்தை பாலிங்புரோக் நிறைவேற்றினர். அச் சட்டம் ஆங்கிலிகன் சமய போதனையைத் தவிர பிறவற்றினைத் தடை செய்வதன்மூலமாகக் கருத்து வேறுபட்டனர். அனைவரையும் அழிவுபடுத்துவதாக இருந்தது. இது அயர்லாந்திற்கும் பொருந்தும் எனக் கூறப்பட்டது. இது அல்ஸ்டரில் அமல்செய்யப்பெற்றிருக்குமானல் அப்பொழுதே அங்கு இரத்த ஆறு பெருகியிருக்கும். ஆக்ஸ்ஃபோர்டும் 'மனம் போன போக்கின'ரும் ஊழல் வழக்கு ஒன்றை அவருக்கு எதிராகக் கொண்டு வர இருந்ததால் அவர் தமது வேலையை விரைவுபடுத்தவேண்டியிருந்தது.

நெருக்கடி நிலைமை வேகமாக உருவாகியது. ஜூலை மாதம் ஒன்பதாம் தேதி பாராளுமன்றம் தள்ளிப்போடப்பெற்றது. 27 ஆம் தேதி ராணியார் ஆக்ஸ்ஃபோர்டைப் பதவியிலிருந்து நீக்கினர். அவர் ராணியாரை விட்டு நீங்கும்பொழுது, பாலிங்புரோக்கின்மீது குற்றச்சாட்டுகளை அடுக்கி, மார்ல்பரோ மீண்டும் பதவிக்கு வருவதைக் கண்டித்து எச்சரிக்கைகளை விடுத்தார். ஆனால், அவரிடம் மாற்றுத்திட்டம் ஏதும் தயாராக இல்லை. அன்று இரவே ஸ்டான்ஹோப், மற்ற விக்குகள் ஆகியோரின் ஆதரவை நாடினர். முதலில் மார்ல்பரோவுடன் ஒருவித ஏற்பாட்டைச் செய்துகொள்ள விரும்பினர். பிறகு ஆர்மாண்ட், அட்டர்பரி போன்றவரின் தலைமையில் யாகோபியரைச் சார்ந்த மந்திரிசபை அமைப்பதைப் பற்றி எண்ணினர். சில சமயங்களில் ஹனேவருக்கு இதமான வார்த்தைகளைக் கூறினர். சில சமயங்களில் போலி மட்டும் பிராட்டஸ்டென்ட் சமயத்தவராகிவிட்டால் அரசு கிடைக்குமென்று ஃபிரெஞ்சுக்காரருக்கு அறிவித்தார். ஆனல், அவருடைய திட்டங்களுக்காக ஊழ் காத்திருக்கவில்லை. ராணியாருடைய முடக்குவாதம் தலைக்கு ஏறியது. ஜூலை மாதம் 30 ஆம் தேதி அவரது நிலை கவலைக்கிடமாகியது.

விக்கு கட்சியினர் தாங்கள் சேகரித்த துருப்புகளைப் பயன்படுத்தவேண்டிய தேவையில்லாமல் போயிற்று. சட்டமும்,

ஆங்கில அரசியல் உணர்வும் தங்களுடைய செல்வாக்கைச் செலுத்தின. கவுன்சிலில் ஸ்ரூஷ்பரியின் கை ஓங்குமாறு செய்வதற்காக விக்கு பிரபுக்கள் கென்சிங்டனுக்கு வந்து சேர்ந்தனர். அவர்களுடைய ஆலோசனையின்பேரில் ராணியார் ஸ்ரூஷ்பரியைக் கருவூலத் தலைவராக நியமித்தார். ஆகஸ்ட் மாதம் முதல்தேதி ராணியார் இறந்தார். அவருடைய மறைவைப்பற்றிக் குறிப்பிடுகையில் அற்புத்நாட் என்பவர், 'களைப்புற்ற வழிப்போக்கனுக்குத் தூக்கம் எவ்வாறு வரவேற்றற்குரியதாக இருக்கின்றதோ, அதைவிட ராணியாருக்கு இறப்பு வரவேற்கத்தக்கதாக் இருந்தது' என்று எழுதினர்.

புதிய அரசரால் நியமிக்கப்பெற்ற பகர ஆட்சியாளரின் (regents) பெயர்களடங்கிய பேழை திறக்கப்பெற்றபோது அதில் பெரும்பான்மையினர் விக்கு கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். ஐயத்திற்குரிய மார்ல்பரோவின் பெயர் அதில் காணப்படவில்லை. அரசர் ஆணையின்பேரில் பாலிங்புரோக் பதவியிலிருந்து விலகினர். அவரது அலுவலகம் மூடப்பெற்றது. செப்டம்பர் மாதத்தில் முதலாம் ஜார்ஜ், தம்முடைய நாடாகிய இங்கிலாந்திற்கு வந்தார். அங்கு முழுதும் விக்குகளைக் கொண்ட மந்திரி சபையை அமைத்தார். அதற்கு டவுன்ஷெண்ட் (Townshend) தலைவரானர். ஸ்டான்ஹோப், கூப்பர், வால்போல் போன்றவர்களும் அதில் அடங்கியிருந்தனர். அவர்கள் முதல் வேலையாகச் சமாதானம் பேசி முடிப்பதற்காக அனுப்பப்பெற்ற தூதர்களாகிய ஸ்ட்ரா∴போர்டையும் பிரீயரையும் திரும்ப அழைத்தனர். அடுத்த வேலையாக 1715ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் பாராளுமன்றத்தைக் கலைத்தனர். அதனேடு ஜார்ஜின் வாரிசுரிமை ஆபத்தில் இருந்தபோது அவரை ஆதரித்தவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புமாறு விடுத்த அரசரது அறிக்கையும் வெளிவந்தது. பிளவுபட்டு அவமதிப்பிற்குள்ளாகி, அரசாங்கத்தின் அதிகாரத்தில் உள்ள அத்துணையும் தங்களுக்கு எதிராகப்பெற்றிருந்த டோரிகள் தேர்தலில் முறியடிக்கப்பெற்றனர்.

இங்ஙனம் நம்முடைய வரலாற்றில் குறிப்பிடத்தக்க பகுதியொன்று சில வெற்றிகளோடும் சில தோல்விகளோடும் முடிவடைந்தது. நாட்டு மக்களின் விருப்பம், ஸ்டுவர்டுகளுக்கும் அவர்களுடைய சமயத்திற்கும் எதிராக எழுந்தது. அத்தகைய விருப்பம் நிலைத்து நிற்கச் செய்வதற்குச் சட்ட வரம்பிற்குட்பட்ட அரசாங்கத்தின் கருவிகளும் உருவாயின. புதிய யுகத்தில் சமயப்பொறையற்ற திருச்சபையும், பாராளுமன்றத்தின் அதிகாரத்திற்கு அடங்காத நிர்வாகமும் தொடர்ந்து வாழ்வதற்கில்லை. சட்டத்

திற்கு மதிப்பு மிகுதியாகத் தரும் பரந்த வாழ்க்கை ஹனோவரியர் பட்டத்திற்கு வந்ததால் வெற்றியடைந்தது. ஆனால், அதிகாரத்தின் கருவிகளைக் கையாண்டவர்கள் தங்கள் தங்கள் உருவத்திலேயே அவைகளை அமைத்தனர். புதுப் பணக்காரர் வகுப்பொன்று தோன்றியது. தொழில் நலன்கள் செல்வாக்குபெற்றன. விடாப் பிடியாக இருந்த சமயம் தளர்ந்தது. உலோகாயதம் பெருகியது. பிரிட்டனுக்கும் ஜெர்மானிய இளவரசர் நாட்டிற்கும் இணைப்பு ஏற்பட்டது. கத்தோலிக்க அயர்லாந்தும் முதிர்ச்சியடையாத குடியேற்ற நாடுகளும் கொடுமைக்குள்ளாயின. இவைகளிடமிருந் தெல்லாம் நாட்டிற்கும் (Commonwealth), அதனுடைய ஆன்மா வுக்கும் ஆபத்துத் தோன்றியது.

## சமகால நிகழ்ச்சிகள்

1703 செயின்ட் பீட்டர்ஸ்பர்க் ஆலயத்திற்கு அடிக்கல் நாட்டுதல்.
பெப்பீஸின் மறைவு.

1704 நியூகோமனின் (Newcomen) நீராவி இயந்திரம்.
பாத்தில் (Bath), பியூ நாஷ் (Beau Nash) என்பவரின் அதிகாரம் ஏற்படல்.

1705 வான்புரூக் (Vanbrugh) ப்ளென்ஹிமைக் கட்டுதல்.
முதலாம் லியோபால்டின் மறைவு.

1706 பாட்கல் (Patkul) தூக்கிலிடப்படல்.

1707 பன்னிரண்டாம் சார்லஸ் மாசப்பாவுடன் (Mazeppa) இணைதல்.
ஔரங்கசீப்பின் மறைவு.
ஐசக் வாட் (Isaac Waat) என்பவருடைய 'Hymns' வெளிவரல்.

1709 போல்டோவா (Poltowa) போர்க்களம்.
போப் எழுதிய 'Pastorals'.

1710 தென்கடல் கம்பெனி நிறுவப்பெறல்.
ஸ்விப்ட் ஸ்டெல்லா சஞ்சிகையைத் தொடங்குதல்.
ஹாண்டல் (Handel) லண்டனை அடைதல்.

1711 ஸ்டீலும், அடிஸனும் 'Spectator' எனும் பத்திரிகை யைப் பதிப்பித்தல்.
ஸ்விப்ட் எழுதிய 'Conduct of the Allies'.
—1740. பேரரசர் ஆறும் சார்லஸின் ஆட்சி.

*1712* பர்கண்டி கோமகனின் மறைவு.
ரூஸோவின் பிறப்பு (Rousseau).

*1713* உட்ரக்ட் உடன்படிக்கை.
'யூனிஜெனிடஸ்' (Unigenitus).
பர்கிலி எழுதிய 'Dialogues'.

*1714* பன்னிரண்டாம் சார்லஸ், துருக்கியிலிருந்து தம் நாடு திரும்புதல்.
ராஸ்டாட் (Rastatt) உடன்படிக்கை.
ஸ்பெயின் நாட்டு அரசர், எலிஸபெத் ஃபார்னெஸ் (Elizabeth Farnese) என்பவரை மணத்தல்.

# 6. பிரிட்டிஷ் பேரரசு, 1714 வரை

1600ஆம் ஆண்டிற்கும் 1660ஆம் ஆண்டிற்குமிடையே நிலை நாட்டப்பெற்று, 1660ஆம் ஆண்டிற்கும் 1714ஆம் ஆண்டிற்கு மிடையே நன்கு அமைக்கப்பெற்ற முதல் பிரிட்டிஷ் பேரரசு, ஒன்றோடொன்று தொடர்புகொண்ட இரு காரணங்களின் விளைவாக எழுந்தது. அவை பொருட்பெருக்கமும், அது மாற்றிப் பங்கிடப்பெற்ற முறையும், ஸ்பெயினோடு தொடர்ந்த போரும் ஆகும். எலிசபெத் ஆட்சிக்காலத்தில் நடைபெற்ற துணிகரச் செயல்கள் அத்துணையிலும் இக் காரணங்கள் வெவ்வேறு விதங் களில் வேலை செய்தன. மெயின் ஆற்றின்மீது ட்ரேக் அமைத்த போர்முறை சார்ந்த பாசறை, கில்பர்டினுடைய (Gilbert) பயணங்கள், அயர்லாந்திலும் அமெரிக்கா ஆகிய இடங்களிலும் ராலே (Raleigh) பொருளைத்தேடி அலைதல், நியூபவுண்ட்லாந்துக் கருகில் நீர் ஆழமற்ற இடங்களில் மீன் பிடிப்புக் கப்பல்களை வைத்திருத்தல், கிழக்கிந்திய வாசனைப் பொருள்களிலும், ஒரினோகோவில் (Orinoco) எல் டொராடோ (El Dorado) வைத் தேடியலையும் முயற்சி ஆகியவை அத்தகைய துணிகரச் செயல்களில் சிலவாகும். கடல் கடந்த நாடுகளில் குடியேற்றங்களை ஏற்படுத்து வதன்மூலமாக ஸ்பானிய ஆதிக்கத்தை வேரோடு அழிக்கவேண்டு மென்று பிரிட்டிஷார் உறுதிபூண்டனர். உள்நாட்டில் பொருளாதார மனநிறைவின்மை இப் புதிய நூற்றாண்டில் தோன்றியது. அதன் விளைவாகத் தோன்றிய புதிய தலைமுறை யினர் வளமான வாழ்க்கையினை விரும்பினர். தமது தாய் நாட்டின் மக்கள் பெருக்கம் தேவைக்கு மேற்பட்டதாக இருந்தது எனச் சிந்தனையாளர் உணர்ந்தனர். இவைகள் ஸ்பானிய ஆதிக் கத்தை அழிக்கவேண்டுமென்னும் திட நம்பிக்கையை உறுதிப் படுத்தின. இத்தகைய வெளிப்படையான எழுச்சியைச் சமய ஆர்வம் இரட்டிப்பாக்கியது. புறச்சமயிகளிடம் கிறித்துவச் சமயத்தைப் பரப்பவேண்டுமென்பதும், தங்களுடைய சமயம் அமைதியான சூழ்நிலையில் வாழ்வதற்காகப் புதிய நாடுகளைக்

கண்டுபிடிக்கவேண்டுமென்பதும் இச் சமய ஆர்வத்திலடங்கும். இத்தகைய முயற்சிகளே ஸ்பெயினிலும், அதனுடைய சார்பு நாடான போர்ச்சுகலிலும், தனி உரிமை கொண்டாடிய பகுதிகளிலும் பரவிய எலிசபெத் ராணியாரின் காலத்துப் போர்களை உருவாக்கின.

நீண்ட நெடுங்காலமாக உள்நாட்டுக் கடல்களையே அறிந்திருந்த ஐரோப்பியர் பெருங்கடல்களைக் கண்டுபிடித்தனர். பிரிட்டிஷ்காரருடைய முன்னேற்றத்தை யடுத்து, விலை உயர்ந்த உலோகங்களுக்காகவும் மூலப் பொருள்களுக்காகவும் உலகெங்கும் தேடும் முயற்சி காணப்பெற்றது. முதன்முதலில் சென்ற நம்முடைய குடியேறிகள் நிலைகொள்ளுவதற்கே போராடிக் கொண்டிருந்தவேளையில், 1608ஆம் ஆண்டில் சாம்ப்ளெய்ன் (Champlain) என்பவர் ஃபிரான்சின் சார்பில் கியூபெக்கைக் கைப் பற்றினர். டச்சுச்சேவையில் இருந்த ஹென்றி ஹட்சன் (Henry Hudson), 1609ஆம் ஆண்டில் ஹட்சன் ஆற்றைக் கண்டு பிடித்தார். 1611ஆம் ஆண்டில் சொந்த நாட்டுச்சேவையில் இருந்தபோது ஹட்சன் விரிகுடாவில் இறந்தார். 1621ஆம் ஆண்டில் டச்சுக்காரர் மேற்கு இந்தியர் கம்பெனியை நிறுவினர். ஹட்சன் விரிகுடாவில் உள்ள நியூ ஆம்ஸ்டர்டாம் நகரத்தைக் கட்டுப்படுத்தும் உரிமை அக் கம்பெனியிடம் ஒப்படைக்கப் பெற்றது. 1642ஆம் ஆண்டில் டாஸ்மன் (Tasman) என்பவர் கப்பலில் ஆஸ்திரேலியாவைச் சுற்றி வந்தார். கஸ்டாவஸ் அடால்பஸ் (Gustavus Adolphus), ஸ்வீடன் மக்களை டிலாவேருக்கு (Delaware) அனுப்பினர். கோல்ட் கோஸ்டில் (Gold Coast) எல்லா நாடுகளும் தீவிரமாகப் போட்டியிட்டன. 1714ஆம் ஆண்டிற்கு முன்பே ஸ்பானிய, போர்ச்சுகீசியப் பேரரசுகளின் பெரும் பகுதி அட்லான்டிக் நாடுகளினுல் கைப்பற்றப்பட்டது. முதல் குடியேற்றம் ஏற்பட்டதிலிருந்து நூறு ஆண்டுகளுக்குள் பிரிட்டிஷ் பேரரசு பிற்காலத்தில் இருந்த அமெரிக்க அரசுகளில் பதின்மூன்றைப் பெற்றிருந்தது. நியூபவுண்ட்லாந்து, நோவா ஸ்கோஷியா (Nova Scotia), ஹட்சன் விரிகுடா ஆகியவையும் ஆங்கிலேயருக்கு அடங்கி இருந்தன. பெர்முடா (Bermuda), பஹாமாஸ் (Bahamas), பார்படாஸ் (Barbados), ஜமெய்க்கா (Jamaica), லீவர்டுகளில் (Leewards) சில, டிரினிடாட் (Trinidad), ஹாண்டுராஸ் (Honduras) குடியேற்றத்தில் பாதி ஆகிய தீவுக்கூட்டத்தினையும் உள்ளடக்கி இருந்தன. இத் தீவுகள் வட அமெரிக்காவின் தெற்கிலும் மெய்ன் ஆற்றின்மீதும் இருந்த துறைமுகங்களைக் காத்து நிற்பதாக இருந்தன. இவைகளோடு மேற்கு ஆப்பிரிக்காவில் காம்பியா (Gambia) ஆற்றின்மீதும், கோஸ்ட் காஸில் முனை

யிலும் (Cape Coast Castle), ஸியர்ரா லியோனிலும் (Sierra Leone) உள்ள துறைமுகங்களும், செயின்ட் ஹெலினு தீவும் (St. Helena), சூரத் (Surat), பம்பாய் (Bombay), மதராஸ் (Madras), கல்கத்தா (Calcutta) ஆகிய நகரங்களும் பேரரசில் சேர்ந்திருந்தன. மேலும், பந்தர் அப்பாஸிலும் (Bandar Abbas), ஆர்முஸிலும் (Ormuz), பாரசீக வளைகுடாவில் மற்ற இடங்களிலும் வணிகக் களங்கள் அமைக்கப்பெற்றன.

பிரிட்டிஷ்காரர் குடியேற்றங்களைப்பற்றி கொண்ட எண்ணம் அவர்களுடைய எதிரிகளின் எண்ணங்களைப் போன்று, வாணிபக் கொள்கையின் அடிப்படையில் எழுந்தது. அதன்படி குடியேற்ற நாடுகள் தாய் நாட்டிற்குக் கட்டுப்பட்டு இருக்கவேண்டும். குடியேற்ற நாட்டு மக்களின் நலனைக் காட்டிலும் அதிகாரம் பெறுவதே முக்கியம் என்று கருதப்பெற்றது. ஆனல், முதலிலிருந்தே இரண்டு உண்மைகள் பிரிட்டிஷ் பேரரசிற்கு வேறுவிதத் தன்மையை அளித்தன. முதலாவதாக, ஒருமுகப்படுத்தப்பெற்ற நியூ ஃபிரான்ஸ் அரசாங்கத்திற்கும், ஃபிரெஞ்சு இந்திய அரசாங்கத்திற்கும் மாருக, பிரிட்டிஷ் குடியேற்றம் எதுவும் அரசாங்கத்தினல் தோற்றுவிக்கப்பெறவில்லை. தனிப்பட்டவர்களோ அல்லது கம்பெனிகளோ நிதி அளித்து அவர்களுடைய முயற்சியின் வழியாகத் தோன்றிய குடியேற்றங்களின் தொகுப்பே பிரிட்டிஷ் பேரரசாகும். அது டச்சுப் பேரரசைப் போன்று வணிகக் களங்களின் வட்டமாகவும் இல்லை. ஆனல், பல சுய ஆட்சிபெற்ற குடியேற்றங்களின் தொகுப்பேயாகும். ஆங்கிலேயர் தாங்கள் செல்லும் இடங்களுக்கு ஆங்கிலச் சட்டத்தைமட்டும் எடுத்துச் செல்லவேண்டுமென்று அச் சட்டம் போதனை செய்யவில்லை. வர்ஜீனியா புகையிலைத்தோட்டக்காரர்களிடையேயும், சிறு தீவுகளிலும், கயானுவில் குடியேற்றம் அமைக்க முயன்று அதிகப் பயன்பெருதவர்கள், யூதர்கள் ஆகியோரிடையேயும் ஒருசில ஆண்டுகளில் தாய் நாட்டின் அனுமதியின்றிகூட, தேர்ந்தெடுக்கப்பெற்றவர்களைக் கொண்ட மன்றங்கள் தோன்றின. அக்கறையின்மை, உள்நாட்டுப் போர், மூன்ரும் வில்லியம் ஐரோப்பாவிலேயே முழு கவனத்தையும் செலுத்திய நிலை போன்றவைகள் இத்தகைய சுய ஆட்சி மலர்வதற்கு வாய்ப்பினை அளித்தன. இந்த ஆட்சி எளிதில் அழிக்க முடியாத ஒன்ருக மாறியது. இங்ஙனம் பழைய இங்கிலாந்து பிற்கால ஆங்கில அதிகாரிகள் நெருக்கமான ஐக்கியத்தைத் தோற்றுவிக்கச் செய்த முயற்சியை எதிர்த்ததுபோன்றிருந்தது.

உள்நாட்டுப் போருக்கு முந்திய கட்டத்தில், எலிசபெத் ராணியார் ஆட்சிக் காலத்தில் அநுபவம் பெற்றவர்கள் குடியேறி

களுக்கு ஊக்கமளித்தனர். உதாரணமாக, லண்டன் நகர நிதி யாளரும் கிழக்கு இந்தியக் கம்பெனி, லிவான்ட் (Levant) கம்பெனி ஆகியவற்றின் கவர்னராக இருந்தவருமான சர் தாமஸ் ஸ்மித் (Smyth), எஸ்ஸெக்ஸுடன் (Essex) சேர்ந்து சதி செய்த சௌதாம்ப்டன் (Southampton), நில இயல் நிபுணரான ஹாக்லூட் Hakluyt), பியூரிட்டன் தளகர்த்தரான வார்விக்கின் ஏர்ல் பிரபு ரிச் (Rich) போன்றவர்கள் ஊக்குவித்தனர். இக் கூட்டத்தினர் முதலில் தாங்கள் மேற்கொண்ட பயணங்களில் இருந்து சில அரிய பாடங்களை அறிந்திருந்தனர். ஸ்பெயினோடு ஏற்பட்ட சமாதானத் தினால் தங்களுடைய பழைய் வழி அடைபட்டதைக் கண்டனர். எனவே, ராலே செய்ய மறுத்த வேலையைச் செய்வதற்காக, 1606 ஆம் ஆண்டில் வர்ஜினியா கம்பெனியை நிறுவினார்கள். தங்கம் கண்டெடுத்தலும், 'கத்தே'வுக்குக் (Cathay) குறுக்குவழி கண்டு பிடிப்பதும் அவர்களுடைய நோக்கங்களாகும். ஜேம்ஸ்டவுன் (Jamestown) என்ற அவர்களது குடியேற்றம் பல ஆண்டுகள் துன்புற்ற பிறகு நிலைகொள்ளத் தொடங்கியது. ஜான் ஸ்மித்தி னுடைய திறனும், டச்சுப் போர்களில் பயிற்சி பெற்ற கவர்னர் களும் அதனைக் காத்தனர். அவர்களுடைய பிரதிநிதிகள் கூட்டம் 1619ஆம் ஆண்டில் கூடியது. ஆங்கிலப் பாராளுமன்றத்தின் முன்னாள் உறுப்பினர் ஒருவர், அதன் சபாநாயகராக இருந்தார். ஆனால் 1624-ல் சிவப்பு இந்தியரால் படுகொலை செய்யப்பெற்றும், கட்சிப்பிளவினால் சீர்குலைந்தும் இருந்த அவர்கள் தங்கள் உரிமைப் பத்திரத்தை ஒப்படைத்துவிட்டு அதனை அரசர் குடியேற்றமாக மாற்றினர். அதனால் விரைவிலேயே வளம் பெற்றனர். புகையிலை யினால் பெரும்பொருள் ஈட்டினர். நார்ஃபோக்கைச் (Norfolk) சார்ந்த ஜான் ரால்ப் (John Rolfe) என்பவர்தான் முதலில் புகையிலையின் மூலம் வளத்தைப் பெருக்கினார். போகஹொன்டாஸ் (Pocahontas) என்னும் மேற்கிந்திய இளவரசியை மணந்துகொண்டார். அதே கூட்ட நலன்கள் பெர்முடாவைக் கைக்கொண்டன. 1684ஆம் ஆண்டு வரையில் பெர்முடா ஓர் உரிமைப் பத்திரம் பெற்ற கம்பெனியின் கையில் இருந்தது.

கப்பலோட்டிகள், படை வீரர், மென் மயிர் வணிகர்கள், மீன் பிடி கம்பெனிகள் பியூரிட்டானியர் ஆகியவருடைய அரைகுறை யான ஆரம்பங்களும் சோதனைகளும் இந்த ஆண்டில் கண்டனர். ஜான் ஸ்மித்தினால் (John Smith) நியூ இங்கிலாந்து (New England) என்று பெயரிடப்பெற்ற பகுதியின் நில உரிமையை 1620ஆம் ஆண்டு யாத்திரிகர் தந்தையருக்கு (Pilgrim Fathers) பக்கிங்காமின் தலைமையில் அமைந்த கவுன்சில் அளித்தது. யாத்திரிகர் தந்தை யர், அந்த ஆண்டில் 180 டன் எடையுள்ள 'வசந்த மலர்' (May

flower) என்னும் கப்பலில் 'காட் முனைக்கு'ச் (Cape Cod) சென்றனர். ஹாலந்தில் தஞ்சம் புகுந்த நாட்டிங்காம்ஷயரைச் சார்ந்த பியூரிட்டன்கள் பிளைமவுத்தில் (Plymouth) குடியேறினர். அவர்களைத் தொடர்ந்து மேலும் பல பியூரிட்டன் சமயத்தவர் பிளைமவுத்தைச்சுற்றிக் குடியேற ஆரம்பித்தனர். இச் சிறிய குடியேற்றம் வரலாற்றுச் சிறப்புடையது. அதிலிருந்து ஆங்கிலக் கொடியின் கீழ் தனிநாட்டை அமைக்கவேண்டுமென்ற சமயப்பற்று கொண்டவரின் புதிய நோக்கம் வெளிப்பட்டது. மேலும், குடியேறிகள் தங்களுக்கென்றே ஒருவகையான அரசாங்கத்தை அமைத்துக் கொண்டனர். மேலும், வடக்கே 1630ஆம் ஆண்டிற்கு முன்பே அனுமதி பெற்ற பலர் குடியேற்றங்களை அமைத்தனர். இவைகள் பிற்காலத்தில் எழுந்த மெய்ன், நியூ ஹாம்ப்ஷயர் (New Hampshire) ஆகிய அரசுகளுக்கு அடிகோலின. நியூ பவுண்ட்லாந்தின் கில்பெர்ட் (Gilbert) காலந்தொட்டு குடியேற்ற முயற்சிகள் காணப்பெறுகின்றன. இருந்தபோதிலும் அவைகளெல்லாம் மீன் பிடிக்கும் கப்பல் கூட்டங்களோடு மோதி வெற்றியடையாமலே போயின. ஆனால், 1621ஆம் ஆண்டில் முதலாம் ஜேம்ஸ், சர் வில்லியம் அலெக்சாந்தர் (Sir William Alexander) என்பவரிடம் நோவா ஸ்கோஷியாவை ஒப்படைத்தார். அவர் பரோனெட் பதவிகளை விற்று, அப் பொருளைக்கொண்டு குடியேற்றத்தை ஏற்படுத்துவார் என்று எதிர்பார்க்கப்பெற்றது. 1629ஆம் ஆண்டில் அலெக்சாந்தருடைய பகர ஆட்கள் ஃபிரெஞ்சு அகேடியாவைக் (French Acadia) கைப்பற்றினர். டேவிட் கிர்க்கி (David Kirke) என்பவர் கியூபெக்கைக் (Quebec) கைப்பற்றினர். ஃபிரெஞ்சுப் போர் முடிவடைந்ததும், வெற்றி பெற்ற பகுதிகளை முதலாம் சார்லஸ் திருப்பிக் கொடுத்தார். எனினும் சில ஆண்டுகள் கழித்து நியூ பவுண்லாந்தில் நிரந்தரமான குடியேற்றத்தை கிர்க்கி ஏற்படுத்தினர். நியூபவுண்லாந்து, மீன் பிடிக்கும் தொழிலினல் சிறப்புற்றது. மேற்கு இங்கிலாந்திலிருந்து வந்த 10,000-க்கு மேற்பட்டவர்களுக்கு இத் தொழிலில் வேலை கிடைத்தது. அது காமன்வெல்த் கப்பற் படைக்கான ஆள் திரட்டும் இடங்களில் ஒன்றாகியது. அங்கே பிடிபட்ட மீன், தெற்கு ஐரோப்பாவுடன் கொண்ட வாணிபத்தில் முக்கியப் பொருளாக இருந்தது.

நியூ இங்கிலாந்திற்கும் வர்ஜீனியாவிற்குமிடையில் மற்றொரு 'தனியுரிமைக்' குடியேற்றம் தோன்றியது. ராணியாரின் நினைவாக மேரிலாந்து (Maryland) என்று பெயரிடப்பெற்ற இக் குடியேற்றத்தைப் பிற்காலத்தில் பால்டிமோர் பிரபு (Baltimore) என்று அழைக்கப்பெற்ற சர் ஜார்ஜ் கால்வர்ட் (Sir George Calvert) என்பவர் நிறுவினர். பிராட்டஸ்டென்டுகள் நிறைந்த இக்

குடியேற்றத்தின் உரிமையாளர் ஒரு கத்தோலிக்கராக இருந்ததால் சமயப் பொறைக்கு வாய்ப்பு மிகுதியாக இருந்தது. இக் குடியேற்றத்தின் உரிமைப் பத்திரம், டர்ஹாம் ஆட்சியுரிமைப் பகுதியினுடையதைப் போன்றே (Palatinate of Durham) இருந்தாலும், குடியேற்ற வாழ்க்கை முறை, தேர்ந்தெடுக்கப்பெற்ற சபையின் மூலம் நின்ற நிலப்பிரபுக்கள் சிலருடைய ஆட்சியாகவே இருந்தது. மொஸ்கிடோ கரைக்கருகில் (Mosquito) பிராவிடன்ஸ் தீவில் (Providence) குடியேறுவதற்காக மற்றொரு கூட்டத்தினர் கம்பெனி ஒன்றை 1630ஆம் ஆண்டில் நிறுவினர். இக் கம்பெனியில் வார்விக் (Warwick) தலைவராகவும், ஜான் பிம் (John Pym) நிதியாளராகவும் இருந்தனர். இதனை ஸ்பானியர் அழித்தபோதிலும் இது கிராம்வெல் காலத்து 'மேற்குத் திட்டத்தின்' வித்தாக அமைந்தது.

இவ்வித முயற்சிகளுக்கிடையே மிகச் சிறப்பு வாய்ந்த மெசாசுசெட்ஸ் விரிகுடா கம்பெனி 1629ஆம் ஆண்டு நிறுவப்பெற்றது. டோர்செஸ்டரின் (Dorchester) பியூரிட்டன் சமய குருவான ஜான் ஒயிட் (John White) என்பவரின் தூண்டுதலின் பேரில் முதலில் சிறு குடியேற்றம் ஒன்று தோன்றியது. அவர் கிறிஸ்துவுக்குப் பகையாக உள்ள நாட்டிற்கெதிராகப் பாதுகாப்புத் தேடிக்கொள்ள வேண்டுமென்று எண்ணியவர். அதே சமயத்தில் குடியேறும் பியூரிட்டன்களின் முதல் தலைவரான சஃபோக்கைச் சார்ந்த செல்வந்தரும் மாஜிஸ்ட்ரேட்டுமான ஜான் வின்த்ராப் (John Winthrop) என்பவர் தமது குடியேற்றத்தின் அரசாங்கத்தை அமெரிக்காவிற்குக் கொண்டுசெல்லவேண்டுமென்பதைத் தம் நண்பர்களோடு பேசித் தீர்மானித்தார். அவர்கள் பெருமளவில் செயல்படத் தொடங்கினர். 1630ஆம் ஆண்டில் 1500 குடியேறிகள் கடலைக் கடந்து அமெரிக்காவை அடைந்தனர். அவர்கள் பத்து ஆண்டுகளுக்குள் 10,000 ஆகப் பெருகினர். அவர்களில் ஒருவர் எழுதியதைப்போல, அங்கே ஓநாய்கள் போன்ற சமய குருமாரிடமிருந்து தப்பினர். ஆயத்தீர்வை என்ன என்பதை அவர்கள் அறியவில்லை. திருச்சபைக்கு அளிக்கப்பெறும் மானியம் என்ன என்பதையும் மறந்தனர். ஜனநாயகத்தை அமைப்பது அவர்களது தலைவர்களின் குறிக்கோள் அன்று. அதற்கு மாறாகக் கட்டுப்பாடு கொண்ட சமயம் சார்ந்த பொதுஅரசை அமைக்கவே எண்ணினர். அங்கே ஏற்றுக்கொள்ளப்பெற்ற திருச்சபைகளைச் சார்ந்தவருக்கு வாக்குரிமை அளிக்கப்பெற்றது. இங்ஙனம் அமைந்த சமுதாயம், ஒருமுறை கவர்னராக இருந்த சர் ஹென்றி வேன் (Sir Henry Vane) என்பவருடைய இளமை ஆர்வத்தை அழித்ததோடு, தீவிரவாதியான ரோஜர் வில்லியம்ஸ் (Rojer Williams) என்பவரை வெளியேற்றியது. அவர் சொந்த

முறையில் கிறித்துவிற்காகப் பொது அரசினை அமைத்தார். அது பிற்காலத்தில் ரோட் தீவு (Rhode Island) அரசாக வளர்ந்தது. நீர் நின்ற பக்கத்தில் நெருக்கமாக இருந்ததாலும், கடினமான நிலத்தோடு போராடவேண்டி இருந்ததாலும், அவர்களுடைய அரசு சுய ஆட்சி பெற்ற நகரத்தின் அடிப்படையில் அமைக்கப் பெற்றது. அதேசமயத்தில் பெருகிவரும் மக்கள் கூட்டம், தெற்குநோக்கிச் சென்று பிற்காலத்தில் கன்னக்டிகட் (Connecticut) என்று அழைக்கப்பெற்ற பகுதியில் குடியேறி வாழ்ந்தது. அக் கூட்டத்தினர் அங்கிருந்து டச்சுக்காரர் எல்லைக்குள்ளும் புகுந்தனர். சமயப்பற்று கொண்டவரும் அப் பற்று இல்லாதவரும் குடியேற்றங்களில் ஒருங்கே துன்புற்றனர். அவர்கள் மரக்குடிசைகளில் வாழத் தொடங்கினர். குடிசைகளைச் சுற்றிக் கழிகளால் ஆன வேலியிட்டனர். சன்னல்களுக்கு எண்ணெய் பூசிய துணியையும், விளக்கிற்குப் பருத்தி நூலையும் பயன்படுத்தினர். கடல் மீன்களையும் காட்டுப் பறவைகளையும் உண்டு வாழ்ந்தனர். வில்லை வாயில் வைத்துக்கொண்டு, காடுகளில் இருந்துவந்து நுழையும் சிவப்பு இந்தியரிடமிருந்து தங்களைக் காத்துக்கொள்வதற்காக எப்போதும் எச்சரிக்கையாகவே இருந்தனர்: மது வகைகளையும் ஆயுதங்களையும் சிவப்பிந்தியருக்கு விற்கவந்த துணிகரமிக்க வணிகரோடு அவர்கள் போட்டியிடவேண்டியிருந்தது. மேலும், நாடு கடத்தப்பெற்ற கொடுங்குற்றவாளிகளோடும் லண்டன் நகரத்திலிருந்து வந்த இழிந்தவர்களோடும் போராடவேண்டி இருந்தது. ஆயின், அவர்கள் தங்களுடைய கால்நடைகளை முன்னே ஓட்டிக்கொண்டு காடுகளை அழித்து முன்னேறினர். அவ்வாறு சென்றபோது ஆங்கில வாழ்க்கை முறை, ஆங்கில பைபிள் பொதுச்சட்டம், பாரிஷ் முறை, ஜூரி முறை, ஆயுதங்களைப்பற்றிய நோக்கு ஆகியவற்றைத் தங்களோடு கொண்டு சென்றனர். நியூ இங்கிலாந்தில் குடியேறியவர்கள் விரைவிலேயே பள்ளிகளை நிறுவினர். பல்கலைக்கழகப் பட்டம் பெற்றவர் பலர் மெஸாசுசட்ஸுக்கு வந்தனர். புதிய கேம்பிரிட்ஜ் நகரத்தில் 1638ஆம் ஆண்டில் ஹார்வர்டு கலாசாலை நிறுவப்பெற்றது. முதலில் அக் கலாசாலையில் பயின்று பட்டம் பெற்றவர்களில் வின்திராப்பின் மைத்துனராகிய ஜார்ஜ் டௌனிங் (George Downing) என்பவரும் ஒருவர். அவர் பொதுநல அரசாங்கத்தில் தன் வளத்தைப் பெருக்கிக்கொள்வதற்காகத் தாய்நாடு திரும்பினர். அவர் வாங்கிய வீட்டின் பெயர் ஆங்கிலப் பேரரசின் தலைமைப் பீடத்திற்கு உரிய பெயராக (10 Downing Street) அமைந்தது.

இதற்கிடையில் மற்றக் குடியேறிகள் தங்களால் முடிந்த வரையில் மேற்கிந்தியத் தீவுகளைக் கைப்பற்றினர். கயானாவில் தாங்கள்

செய்த முயற்சிகள் தோல்வியுறவே, ஒரு கூட்டத்தினர் செயின்ட் கிட்ஸ் (St. Kitts), ஆன்டிகுவா (Antigua) ஆகியவற்றைப் பிடித்தனர். லீவாட்ஸ் தீவுகளில் உள்ள மற்ற நகரங்களையும் கைப்பற்றினர். ஒரு குழுவினர் 1625ஆம் ஆண்டில் பார்படாஸைக் (Barbados) கைக்கொண்டனர். அங்கே கரும்பு, புகையிலை, பருத்தி ஆகியவற்றைப் பயிரிட்டனர். அதனால் 1640ஆம் ஆண்டில் மக்கள் தொகை 18,000 ஆகப் பெருகியது. செல்வந்தர்கள் அடங்கிய சபை அப் பகுதியை ஆட்சிபுரிந்தது. அடிமைகளை இறக்குமதி செய்வது அப் பகுதி மக்களின் பொருள் வாழ்வின் அடிப்படையாக இருந்தது. அதிலிருந்து முதலாளிகளின் செயலாட்சியில் இருந்த பண்ணைகள் தோன்றலாயின. அத்தகைய பண்ணைகள் முதலில் வர்ஜினியாவில்தான் தோன்றின. முதல் அரை நூற்றுண்டில் நடைபெற்ற வாணிபத்தில், பார்படாஸில் இருந்து 1700ஆம் ஆண்டில் ஏற்றுமதியான பொருள்களின் மதிப்பு, பிரிட்டிஷ் வட அமெரிக்கா முழுவதிலிருந்து ஏற்றுமதியான பொருள்களின் மதிப்பைக்காட்டிலும் அதிகமாக இருந்தது. இவ்வாறு மேற்கிந்தியத் தீவுகளில் இருந்து வந்த செல்வம், பேரரசுத்திட்டத்தில் இன்றியமையாத பகுதியாகக் காணப்பெற்றது. உள்நாட்டுப் பகுதிகளிலிருந்து ஒட்டகங்களின் துணைகொண்டு கோல்டு கோஸ்ட் அல்லது காம்பியாவிற்கு நீக்ரோக்கள் கொண்டுவரப்பெற்றனர். பிரிஸ்டல் அல்லது லிவர்பூல் போன்ற நகரங்களைச் சார்ந்த அடிமை வியாபாரிகள் அப்படிக் கொண்டு வரப்பெற்ற நீக்ரோக்களை வாங்கினர். போதுமான அளவிற்கு அடிமைகளைக் கோட்டை மதில்களுக்குள் வைத்திருந்தனர். அங்கிருந்து ஆண்டுதோறும் 5,000 அடிமைகளை மேற்கிந்தியத் தீவுகளுக்குக் கொண்டுசென்றனர். ஒவ்வொரு நீக்ரோவிற்கும் 10 பவுனுவது லாபமாகக் கிடைத்தது.

அமெரிக்காவில் எழுந்த எல்லைப்பூசல்கள், குடியேற்றத்தின் அளவு, பியூரிட்டானியரின் சுயேச்சை ஆகியவற்றைக் கண்டு முதலாம் சார்லஸின் முதுகெலும்பில்லா அரசாங்கம் நடுங்கியது. ஆயினும், அமெரிக்கக் குடியேற்றங்களில் கவர்னர் ஜெனரலை நியமிக்கும் திட்டங்களோடு, லாடின் தலைமையில் நிறுவப்பெற்ற குடியேற்ற நாட்டுச் செயற்குழு, உள்நாட்டுப் போரின் விளைவாக உரிமை இழந்தது. அடுத்த பத்து ஆண்டுகளுக்குக் குடியேறிகள் தடையேதுமின்றித் தங்கள் வழியே வாழ்ந்தனர். மெஸ்ஸாசுசட்ஸ், பிளைமவுத், கன்னக்டிகட், நியூ ஹெவன் (New Haven)[இறுதியாகத் தரப்பெற்ற பகுதிக்குத் தெற்கே சிறிய சமயநூல் சார்ந்த பொது நல அரசு நிறுவப்பெற்றது] ஆகிய பகுதிகள், ஆங்கிலச் சட்டங்கள் தங்களைக் கட்டுப்படுத்தா என்று எதிர்த்தன. தற்காப்

பிற்காக ஒரு கூட்டரசு அமைக்கப்பெற்றது. பாராளுமன்றத்தில் தனக்குப் பிரதிநிதித்துவம் இல்லை என்ற காரணத்தால் பார்படாஸ் நாவாய்ச் சட்டத்தை எதிர்த்தது. வர்ஜினியாவிலும், மேரிலாந்திலும் உள்ள அரசாதரவாளர் கட்சிகள் கலகம் செய்ய முற்பட்டன.

இக் கலகத்தை அடக்குதற்காகப் பியூரிட்டன்கள் வழக்கமான உறுதியோடு ஒரு கடற்படையை அனுப்பினர். அதே சமயத்தில் 1650–60ஆம் ஆண்டுகளில் இருந்த அரசுக் கவுன்சிலில் இருந்து (Council of State) பேரரசு அமைப்பு ஒன்று வெளிப்பட்டது. அதில் குடியேற்றங்களுக்காக அமைந்த நிரந்தரமான சபையும், குடியேற்றங்களோடு தொடர்புகொண்ட பெருவணிகரையும் உள்ளடக்கி நின்ற குழுக்களும் இருந்தன. முன்னிலை மீட்சிக்குப் பிறகு இவ்வமைப்புச் சில மாறுதல்களோடு தொடர்ந்து பணியாற்றியது. இறுதியாக, 'வாணிபப் பிரபுக்கள்' (Lords of trade) என்னும் பெயருடன் பிரிவி கன்சிலின் குழுவாக உருவெடுத்தது. எவலின் (Evelyn), லாக் (Locke), வில்லியம் பிளாத்வைட் (William Blathwayt) போன்ற தலைசிறந்த அதிகாரிகள் அதில் பணிபுரிந்தனர். அம் மரபினை அவர்கள் மூன்றும் வில்லியத்தின் ஆட்சிக் காலத்திற்குக் கொண்டுசென்றனர். அதே சமயத்தில் வேன், டௌனிங், டான்பி, ஷா.ப்ட்ஸ்பரி போன்ற பல கட்சிகளைச் சார்ந்த பெரும் அரசியல்வாதிகள், பேரரசு வளர்ச்சியில் பங்குகொண்டனர்.

கிராம்வெல்லின் ஆட்சியில் சிறிது காலத்திற்கே நிலைத்திருந்த குடியேற்றங்கள் சுரிநமிலும் (கயானாவின் ஒரு பகுதி) அகேடியாவிலும் தோன்றின. 1667ஆம் ஆண்டு உடன்படிக்கையின்படி சுரிநம் குடியேற்றங்கள் ஹாலந்திடமும், அகேடியா குடியேற்றங்கள் ஃபிரான்சிடமும் ஒப்படைக்கப்பெற்றன. இவைகள் நீங்கலாக ஜமைக்கா மட்டிலும் பேரரசோடு இணைக்கப்பெற்றது. முதலில் அங்கே குடியேறியவர்கள் தரக் குறைவானவர்கள். அதனால் அவர்கள் தோல்வி கண்டனர். நியூ இங்கிலாந்தியர் அங்கே செல்ல மறுத்துவிட்டனர். எனவே, முன்னிலை மீட்சிக்குப் பிறகே பார்படாஸிலிருந்து மக்கள் வந்து குடியேறியதாலும் அடிமைகள் இறக்குமதி செய்யப்பெற்றதாலும் அக் குடியேற்றம் நிலைபெறத் தொடங்கியது.

முன்னிலை மீட்சி அரசாங்கத்தின் குடியேற்றக் கொள்கை பிறவற்றைப் போலவே தாராளமானதாகவும், உணர்வு ஒளிர்வுடையதாகவும் இருந்தது. ஜமைக்காவில் மக்கள் சபை தோன்றியது. லீவர்ட்ஸ், கன்னக்டிகட், ரோட் தீவு முதலானவையாக உருவெடுத்த பிற குடியேற்றங்கள் தாராள உரிமைக் கட்டுப்பாடுகளைக்

கொண்ட உரிமைப் பத்திரங்களின்வாயிலாக ஒழுங்கு செய்யப் பெற்றன. தங்களுடைய கவர்னரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமைகூட அவைகளுக்கு அளிக்கப்பெற்றது. 1663ஆம் ஆண்டில் வர்ஜினியாவிற்குத் தெற்கே உள்ள பெருநிலப் பகுதி ஒன்று சில தனி உரிமையாளருக்கு வழங்கப்பெற்றது. அவர்களில் ஷா∴ப்ட்ஸ்பரி அதிக ஊக்கம் காட்டினர். மேலும், ரோட் தீவைப் போல இங்கேயும் சமயப்பொறை உறுதியளிக்கப் பெற்றது. பிரதிநிதிகள் சபை ஒன்று ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. அதிகமாகப் பிரிந்து நின்ற வட கரோலின (North Carolina), தென் கரோலின குடியேற்றங்கள் மெல்ல மெல்ல தலை தூக்கின. வட கரோலின குடியேற்றங்கள் வடக்கிலிருந்து பெயர்ந்து வந்தவர்களால் உருவானவை. சார்லஸ்டனைச் (Charleston) சுற்றி எழுந்த மற்றக் குடியேற்றங்கள் ஐரோப்பாவிலிருந்தும் மேற்கிந்தியத் தீவுகளிலிருந்தும் வந்த மக்களுடையவை. இவ்வாண்டுகளில் மேற்கு இந்தியத் தீவுகளுக்குத் தடையாயிருந்த தனி உரிமையாளர் நலன்கள் அழிக்கப்பெற்றதனல் பார்படாஸும், பெர்முடாவும் அரச குடியேற்றங்களாக மாறின. மேலும், வடக்கே, பெருந் தயக்கத்திற்கும் பிறகு, நியூ பவுண்ட்லாந்து ∴பிரெஞ்சுக்காரருக்கு எதிராகப் பாதுகாப்பு அளிக்கப்பெற்றது. 1670ஆம் ஆண்டில் ரூபர்ட் இளவரசரின் தூண்டுதலின்மேல் ஹட்சன் விரிகுடா கம்பெனி நிறுவப்பெற்ற காரணத்தால், ∴பிரெஞ்சுக்காரரோடு புதிய பூசல் தொடங்கியது. அக் கம்பெனியார், மென்மயிர் வாணிபத்தின் காரணமாக மேற்கொண்ட பிரயாணங்கள் அவர்களைப் பெரிய ஏரிகளுக்கு அழைத்துச்சென்றன. அதனல் அவர்கள் செவ்விந்தியரோடு நேரடித் தொடர்புகொண்டனர். இந்நிலை ∴பிரெஞ்சு கனடாவிற்கு விடுத்த அறைகூவலாக இருந்தது. அதே சமயத்தில் தெற்கிலிருந்த விரிகுடா குடியேற்றத்திலிருந்தவர் நியூ ஆம்ஸ்டர்டாமில் இருந்த டச்சுக்காரருடன் ஏற்பட்ட மோதல் காரணமாக வெளியேற்றப்பெற்றனர்.

கிராம்வெலின் கவனம் குடியேற்றங்களின்மீது சென்றது. அங்கிருந்த சூழ்நிலையில் காலந்தாழ்த்துதல் இயலாத ஒன்று. டச்சு எல்லையைக் கடந்து செல்லும் பிரிட்டிஷ் குடியேறிகளின் எண்ணிக்கை மிகுதியாகப் பெருகியதால் ஓர் ஆங்கிலச் செயலரை டச்சுக்காரர் நியமிக்கவேண்டி இருந்தது. நியூ இங்கிலாந்தையும் வர்ஜினியாவையும் பிரித்த டச்சுக்காரர் தம்முடைய தலைசிறந்த துறைமுகத்தின்மூலமாகப் பொருள்களைப் பகிர்ந்து அளித்ததால், நாவாய்ச் சட்டத்தினை நிர்வாகம் செய்ய முடியவில்லை. 1664ஆம் ஆண்டு இவ்விடைப் பகுதி மன்னரின் சகோதரருக்கு அளிக்கப் பெற்றது. இங்ஙனம் நியூ ஆம்ஸ்டர்டாம் எளிதாகக் கொள்ளப்

பெற்றது. அது நியூயார்க் என்னும் மறுபெயரைக் கொண்டது. 1673ஆம் ஆண்டுப் போரின்போது சிறிது காலத்திற்கு டச்சு ஆதிக்கத்தில் இருந்த இந்த பல நாட்டாரைக்கொண்ட குடியேற்றம் அதன் பிறகு ஆங்கிலத் திட்டத்தோடு இணைந்தது. ஹட்சன் ஆறு இரோகொய்ஸ் (Iroquois) நாட்டில் தோன்றி அநேகமாகக் கனடாவின் ஏரிகளைத் தொட்டுச் செல்வதால் இக் குடியேற்றம் போர்த்திறம் சார்ந்த சிறப்பு மிக்கது.

நியூயார்க்கின் பின்னிலத்தில் (hinterland) இருந்து அல்லது அதன் எல்லைப்புறத்திலிருந்து மூன்று பிற்காலக் குடியேற்றங்கள் உருவாயின. டிலாவேருக்குத் தென்மேற்காக அமைந்துள்ள நியூ ஜெர்ஸி (New Jersey)யை யார்க் கோமகனர், தமது ஆதரவாளர் சிலருக்கு அளித்தார். அதனை அவர்கள் பென் (Penn) என்பவருடைய தலைமையில் இருந்த குவேக்கர் குழுவிடம் விற்றுவிட்டு மற்றொரு பேரத்தின் பயனாக ஆற்றின்மேல் இருந்த பகுதி ஒன்றைப் பெற்றனர். அப் பகுதி 1702ஆம் ஆண்டு டிலாவேர் அரசாக மாறியது. ஆனால், 1681ஆம் ஆண்டில்தான் பென்னிற்குப் பெரும் பகுதி கிடைத்தது. அப் பகுதி டிலாவேருக்கு மேற்கிலும் மேரிலாந்திற்கு வடக்கிலும் உள்ளது. அதற்கு இரண்டாம் சார்லஸ், பென்சில்வேனியா என்று (Pennsylvania) பெயரிட்டார். அங்கே இரண்டு ஆண்டுகளைக் கழித்த பென் (Penn) தம்முடைய பிரசாரத் திறமையின் துணைகொண்டு குவேக்கர், ஸ்வீடன் நாட்டவர், ஜெர்மானியர், ஸ்விஸ் மக்கள் ஆகியோரைக் கொண்ட கலப்புக் குடியேற்றம் ஒன்றை நிறுவினர். அங்கே மக்கள் முழுச் சமய உரிமை பெற்று வளமாக வாழ்ந்தனர். அவர்கள் விரைவிலேயே பென்னுடைய போலிச் செருக்கினுக்கெதிராகத் தங்கள் உரிமையினை நிலைநாட்டினர்.

இங்ஙனம் இரண்டாம் ஜார்ஜின் காலத்தில் சேர்க்கப்பெற்ற ஜார்ஜியாவைத் தவிர நம்முடைய பழைய டொமினியனில் (dominion) இருந்த கரையோரக் குடியேற்றங்கள் உருவாயின. 1660ஆம் ஆண்டில் அவைகளின் மக்கள் தொகை 63,000 ஆக இருந்தது. 1713ஆம் ஆண்டில் 350,000 எனப் பெருகியது. மேற்கிந்தியத் தீவுகளில் மற்றொரு 200,000 மக்கள் வாழ்ந்தனர். அவர்களில் மூன்றில் இரண்டு பங்கினர் நீக்கிரோக்கள். இவர்கள் அட்லான்டிக் பேரரசை முழுமையாக்கினர்.

எனினும், பேரரசு என்ற பெயர் அதுபோது பொருத்தமாக இல்லை. ஏனெனில், வரையறுக்கும்போதெல்லாம் பேரரசுத்திட்டம் முறிந்தது. 1650–73ஆம் ஆண்டுகளில் கொண்டுவரப்பெற்ற

சட்டங்கள்தான் அதனுடைய மூலக்கூறுகளை முதலில் ஒன்று படுத்தின. இச் சட்டங்கள் அக் காலக் கருத்துகளைப் பிரதிபலிப்பனவாக இருக்கின்றன. சாதகமான வாணிபநிலையே நாட்டின் வலிமைக்கு அறிகுறி; வாணிபம் கடலாதிக்கத்தை நம்பி இருந்த ஒன்று. கப்பல் தொழிலையும் கடலோடும் மக்களையும் பெருக்கும் வகையில் குடியேற்றங்கள் பயன்படுத்தப்பெறுதல் வேண்டும்; தாய்நாடு எப் பொருள்களில் குறைபட்டு இருக்கின்றதோ அப் பொருளை அளிக்கும்வகையிலும், சுங்க வருவாயைப் பெருக்கும் வகையிலும் அவைகளைக் கட்டுப்படுத்தவேண்டும் என்பன போன்றவை அக் காலக் கருத்துகளில் சில. 1651ஆம் ஆண்டு காமன்வெல்த் அரசராணையை விரிவுபடுத்தி 1660ஆம் ஆண்டு நாவாய்ச் சட்டமாக ஆங்கிலேயர் வெளியிட்டனர். அதன்படி (1) ஆங்கிலக் கப்பல்களிலோ அல்லது குடியேற்ற நாடுகளின் கப்பல்களிலோதான் குடியேற்ற நாடுகளுக்கோ, அவைகளில் இருந்தோ பொருள்களை ஏற்றிச் செல்லவேண்டும். மேலும், குடியேற்ற நாட்டுக் கப்பலோட்டிகளில் நான்கில் மூன்று பங்கினர் ஆங்கிலேயராக இருத்தல்வேண்டும். (2) சர்க்கரை, புகையிலை, நீலம், பதம் செய்யப்படாத பஞ்சு, வண்ண மரங்கள் போன்ற 'குறிப்பிடப்பெற்ற' குடியேற்ற நாட்டுப் பொருள்களை நேரடியாக இங்கிலாந்திற்கோ அல்லது அதனுடைய குடியேற்றங்களுக்கோ ஏற்றுமதி செய்யவேண்டும். 1663ஆம் ஆண்டு நிறைவேறிய 'முக்கியப் பொருள்' சட்டம் ('Staple' Act) மூன்றுவது கொள்கையினை இணைத்தது. அதன்படி குடியேற்ற நாடுகளுக்குச் செல்லும் பொருள்கள் முதலில் இங்கிலாந்தில் வந்திறங்க வேண்டும். அங்கிருந்து திரும்பக் கப்பலில் ஏற்றிச்செல்லப் பெறுதல்வேண்டும். இறுதியாக, இங்கிலாந்திலும் குடியேற்ற நாடுகளிலும் விலைகளை ஒரே நிலைக்குக் கொண்டுவரவும், கள்ளக் கடத்தலைத் தடுப்பதற்கும் ஆன ஒரு சட்டம் 1673-ல் இயற்றப் பெற்றது. அது ஏற்றுமதிகளின்மீது தோட்டப் பயிர் தீர்வையை வசூலிக்க வழிவகுத்தது. சட்டங்களைப் பின்பற்றுவதாக வாக்குறுதி தரும் பத்திரங்களைக் குடியேற்ற நாடுகளில் இருந்து வற்புறுத்திப் பெற்றது.

பிற்காலத்தில் 'குறிப்பிடப் பெற்ற' பொருள்களின் பட்டியல் மிகுதியாக விரிவடைந்தது. உதாரணமாக, கரோலினாவின் அரிசி இப் பட்டியலில் சேர்க்கப்பெற்றது. எனினும், குடியேற்ற நாடுகள் மிகுதியாகத் துன்புற்றன எனக் கொள்ளுதல் தவறாகும். புகையிலை உற்பத்தியாளர்மட்டுமே பாதிக்கப்பெற்றனர். நியூ இங்கிலாந்தின் மீனும் மாமும் தாராளமாக ஏற்றுமதியாயின. மேலும், இவ்வாறு 'குறிப்பிடப் பெற்ற' பொருள்களுக்கு இங்கி

லாந்து அங்காடிகளில் தனியுரிமை அளித்தனர். உதாரணமாக, குடியேற்ற நாடுகளின் நன்மைக்காக இங்கிலாந்தில் புகையிலை உற்பத்தி வன்முறையில் தடைசெய்யப்பெற்றது. அதே சமயத்தில் குடியேற்ற நாட்டுப் பொருள்கள் குறைந்த காப்பு வரிகளையே தந்தன. குறிப்பாக, மேற்கிந்திய சர்க்கரை மற்ற நாடுகள் தரும் சுங்கத்தில் மூன்றின் ஒரு பங்கைத்தான் தந்தது. தாய் நாட்டின் நலன் மேலோங்கி இருந்தது உண்மையே. ஆங்கிலேயரின் அதிக ஆதரவைப் பெற்றவை வெப்ப மண்டலக் குடியேற்றங்களாகும். அவைகளினால் வெள்ளையருக்கு ஆட்சேதம் அதிகம் இல்லை. அங்கிருந்து வந்த பொருள்களும் ஆங்கிலப் பொருள்களோடு போட்டியிடுவனவாக இல்லை. ஆனால், இக் குடியேற்றங்களின் பாதுகாப்பிற்காக ஏற்படும் செலவுமட்டுமன்றி வெளிப்படையாக உறுதியானதாகத் தெரியும் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் கடுமை சில சமயங்களில் குறைந்திருந்தது. உதாரணமாக, குடியேற்ற நாடுகளில் மீன்பிடிக்கும் தொழிலுக்குத் தேவைப்படும் உப்பு, நேராக அமெரிக்காவிற்குச் செல்ல அனுமதிக்கப்பெற்றது. வடக்கிலுள்ள குடியேற்றங்கள் மேற்கு இந்தியத் தீவுகளுக்கு உணவு அளிக்கும் முக்கியப் பணியைச் செய்தன என்பது உணரப்பெற்றது. பால்டிக் (Baltic) பகுதியில் இருந்து வரும் மிக முக்கியமான கடற்படைச் சாதனங்களாகிய பாய்மரம், கயிறு, கீல் போன்றவை தட்டுப் படவே, அவைகள் 1705ஆம் ஆண்டில் 'குறிப்பிடப்பெற்ற' பட்டியலில் சேர்க்கப்பெற்றன. நன்கொடையின்மூலம் அவைகளுக்கு உதவி அளிக்கப்பெற்றது. நியூ இங்கிலாந்தில் உள்ள பல மரங்களில் குறியிட்டனர். இங்கிலாந்தின் நாவாய்ப்படை பெருகியது. நாட்டின் பாதுகாப்பில் முக்கியமானதாக இருக்கும் கப்பற்படைக்கு ஊக்கமளிப்பது நியாயமானது என்று காமன் வெல்த் சட்டம் குறித்தது. கடைசி இரண்டு ஸ்டுவர்ட் அரசர்களாட்சியில் கப்பலில் ஏற்றிச்செல்லும் பாரத்தின் அளவு (tonnage) இரட்டிப்பாகியது. 1700ஆம் ஆண்டில் அமெரிக்க வாணிபம் நம்முடைய மொத்த வாணிபத்தில் ஏழில் ஒரு பங்காக உயர்ந்தது. இந்த வாணிபத்தில் 80 சதவீதம் சர்க்கரையும், புகையிலையும் உற்பத்தியாகும் குடியேற்றங்களோடு நடைபெற்றது.

எனினும் குடியேற்றங்களில், குறிப்பாக நியூ இங்கிலாந்தில் மக்கள் வாணிபச் சட்டங்களை முழுவதுமாக மீறினர். பாழாகிக் கொண்டிருந்த பேரரசை உறுதிசெய்ய வேண்டுமென்னும் விருப்பு தாய் நாட்டில் வளர்ந்ததற்கான அறிகுறிகள் தென்பட்டன. குடியேற்ற நாடுகளில் நிலையான வருமானத்தைப் பெறும் நோக்கத்தோடு வாணிபப் பிரபுக்கள் கவர்னர்களுக்குப் பற்பல கட்டளைகளை

அனுப்பினர். அரசாங்க அமைப்புகளும், சம்பளமும், பிரதி நிதிகள் சபைகளின் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டவையாக இருக்கவேண்டுமென்பதும் இவ்விதக் கட்டளைகளின் நோக்கமாகும்.

வர்ஜினியாவில் ஆங்கிலேயர் மானிய நிலத்தீர்வை கொண்டனர். ஜமைக்காவைப் பாய்னிங்ஸ் சட்டத்தைப் போன்ற ஒன்றினல் கட்டுப்படுத்த முயன்று தோல்விகண்டனர். சுங்க அதிகாரிகள் இங்கிலாந்திலிருந்து நியமிக்கப்பெற்றனர். அதே சமயத்தில் கடற்படையைச் சார்ந்த படகுகள் சீசாபீக் விரிகுடாவில் இருந்த சிறு ஓடைகளிலும் (Creeks of Chesapeake Bay) கரோலினுவிலும் பெருகி இருந்த கள்ளக் கடத்தலேயும், ஃபிரெஞ்சுத் தீவுகளுக்கும் பிரிட்டிஷ் குடியேற்றங்களுக்குமிடையே கொண்டுசெல்லப்பெற்ற நீக்கிரோக்களேயும், சர்க்கரையையும் தடுத்து நிறுத்தப் போராடின. ஆனல், இதில் தலைமைக் குற்றவாளியாக இருந்தது, மெசாச்சுசட்ஸ் குடியேற்றம்தான். அங்கே ஜூரிகள் குற்றவாளிகளுக்குத் தண்டனை அளிக்க மறுத்தனர். அதனல், பலமுறை எச்சரிக்கை செய்தபிறகு 1684ஆம் ஆண்டில் அதனுடைய உரிமைச் சாசனம் பறிமுதல் செய்யப்பெற்றது. எல்லைகளைத் திருத்தி அமைப்பதற்கும், சிவப்பிந்தியரைக் தடுத்து நிறுத்துதற்கும், ஏற்ற வலிமை மிக்க அரசாங்கம் தேவை என்று உணர்ந்ததால், நியூ இங்கிலாந்து நியூஜெர்ஸி, நியூயார்க் ஆகிய குடியேற்றங்களை ஆட்சிபுரிவதற்காக கவர்னர்-ஜெனரல் ஒருவரை இரண்டாம் ஜேம்ஸ் நியமித்தார். அந்த கவர்னர்-ஜெனரல் சிவப்பு உடை தரித்த அதிகாரிகளுடனும், வெள்ளை அங்கி உடுத்திய சமய குருமாருடனும் தன்முனைப்பால் ஆட்சியைத் துவக்கினர்.

ஆயின், ஜேம்ஸ் வீழ்ச்சியுற்றபோது அவருடைய 'நியூ இங்கிலாந்து டொமினியனும்' வீழ்ந்தது. போப்பினர் (Popish) சதிக்கும், ஃபிரெஞ்சுச் சதிகளுக்கும் எதிராக அமெரிக்காவில் கூக்குரல் கிளம்பியது. அரச அதிகாரிகளுக்கு எதிராகக் கிளர்ச்சிகள் தோன்றின. பிரிட்டிஷ் நலன்களும் அமெரிக்க நலன்களும் ஒருமித்து இருந்த தேசியப் போர் ஒன்று மூண்டது. ஃபிரெஞ்சுக்காரர் நியூ இங்கிலாந்தைத் தொடர்ந்து தாக்கினர். ஹட்சன் விரிகுடாவில் கடும் சண்டை நடந்தது. மசாச்சுசட்ஸ் நாட்டுப்படை அக்கேடியாவில் உள்ள போர்ட் ராயலை (Port Royal) இருமுறை கைப்பற்றியது. இருமுறை நிகழ்ந்த பிரிட்டிஷ் படையெடுப்புகள் செயின்ட் லாரன்ஸ் (St. Lawrence) ஆற்றில் புகுந்து வெற்றி பெருமல் திரும்பின. இறுதியாக, மார்ல்பரோவும், பிரிட்டிஷ்காரரின் கடலாதிக்கமும் அமெரிக்கரை ஐரோப்பாவில் காப்பாற்ற முடிந்தது. 1713ஆம் ஆண்டு ஏற்பட்ட யுட்ரக்ட் உடன்படிக்கையின்

மூலம் பிரிட்டன் நோவா ஸ்கோஷியா, நியூபவுண்ட்லாந்து ஹட்சன் விரிகுடா ஆகிய இடங்களைப் பெற்றது. மேலும், இரோகாய்ஸ் மக்கள் ஆங்கிலக் குடிமக்களாக ஏற்றுக்கொள்ளப் பெற்றனர். இருப்பினும் கனடா, பிரிட்டன் முனை ஆகியவற்றோடு நியூபவுண்ட்லாந்தில் மீன் பிடிக்கும் உரிமையும் ஃபிரெஞ்சுக்காரரிடம் இருந்தன. இப்படிப்பட்ட சூழ்நிலையில் அமெரிக்கர் தங்களது தாய் நாட்டுடன் இணைத்திருக்க வேண்டியதாயிற்று.

1688ஆம் ஆண்டில் ஏற்பட்ட நம்முடைய நாட்டுப் புரட்சியினால் குடியேற்றங்களில் ஸ்டூவர்ட் திட்டத்திற்கு மாறான எதிர்ச் செயல்கள் தோன்றின. ரோட் தீவும், கன்னக்டிகட்டும் தங்களுடைய பழைய உரிமைகளைத் திரும்பப்பெற்றன. மசாச்சுசட்ஸ், கவர்னர் ஆட்சியையும் பரந்த வாக்குரிமையையும் 1691ஆம் ஆண்டில் பெற்றது. பிளைமவுத்தையும் மெய்னையும் இணைத்துக் கொள்ள அனுமதிபெற்றது. மேரிலாந்தும் பென்சில்வேனியாவும் தனியுரிமையாளர் அரசாங்கத்தையே தொடர்ந்துபெற்றிருந்தன. இந்த இரண்டையும் தவிர நியூ ஹாம்ப்ஷயர், நியூயார்க், நியூ ஜெர்சி ஆகியவை 1702ஆம் ஆண்டிற்கு முன் அரசுக் குடியேற்றங்களாக மாறின. தென், வட கரோலினாக்கள் முதலாம் ஜார்ஜ் காலத்தில் இந்நிலையெய்தின. ஆனால், பல அடிப்படைக் காரணங்கள் பிரிட்டிஷ், அமெரிக்க உறவில் கடினமான நிலையைத் தோற்றுவித்தன.

இரு நாடுகளிலும் ஒரு புதிய சகாப்தம் தோன்றியது. உரிமை பெற்ற பாராளுமன்றம் உரிமைபெற்ற அரசரைக்காட்டிலும் தொல்லை மிகுந்த எஜமானராகும். ஏற்கெனவே, வெஸ்ட்மினிஸ்டரில் உள்ள தொழில்நலன்கள் நியூ இங்கிலாந்தின் கம்பெனியைத் தாய் நாட்டு அங்காடிகளில் இருந்து விலக்கின. பிரதிநிதிகள் சபை ஆட்சி அமெரிக்காவில் நன்கு காலூன்றி இருந்தபோதிலும் நிர்வாகத் தலைவரை பிரிட்டிஷ் அரசாங்கமே நியமித்தது. வில்லியமும், ஆன் ராணியாரும் அமெரிக்க மசோதாக்களைத் தயக்கமோ, தடையோ இன்றி நிராகரித்துவந்தனர். பேரரசு அஞ்சல் திட்டம் போன்றவற்றிற்காகச் சட்டமியற்றப் பாராளுமன்றம் பெற்றிருந்த உரிமை எதிர்ப்பின்றி இருந்தது. இத்தகைய இரட்டை ஆட்சி எப்போது வேண்டுமானாலும் கடின நிலையை உண்டாக்கக்கூடும். அதிலும் அமெரிக்கா இங்கிலாந்திலிருந்து வேறுபட்டு வளர்ந்து வந்திருக்கின்றது. வர்ஜினியாவில் தோட்ட முதலாளிகளை எதிர்த்து எழுந்த கிளர்ச்சியும், மேரிலாந்தில் தலத்தில் தங்கி வாழ்ந்த செல்வந்தருக்கு எதிராக எழுந்த இயக்கமும், ஜெர்மானியரோடு மற்ற பிரிட்டிஷ் அல்லாதவரின் பெருக்கமும், அமெரிக்

காவில் புதிய சமுதாயம் உருவானதற்கு அறிகுறிகளாகும். இந்தியக் காடுகளில் மேற்கு நோக்கி முன்னோடிகள் எவ்வளவு வேகமாகச் சென்றார்களோ அவ்வளவு வேகமாக மாற்றம் ஏற்பட்டது. அப் புதிய பகுதிகளில் பண்படாத மண், கடன்கள், கொடூரமான போர் ஆகியவைதான் பின்னணியில் இருந்தன. மேலும், யாத்திரிகத் தந்தையரிடம் இருந்த 'மதிப்பு வாய்ந்த இங்கிலாந்தின்' நினைவுகள் பிற்காலத்தே மறைந்தன.

அதே சமயத்தில் தாய்நாட்டிலிருந்த வாணிப நலன்கள் செயல் முனைப்புடையனவாகவும் விழிப்புடனும் இருந்தன. 1696ஆம் ஆண்டில் ஊதியம் பெற்ற புதிய வாணிபக் குழு (Board of Trade) தோன்றியது. ஆலோசனை கூறி காரியங்களை முனைந்து செய்த அக் குழு, பழைய பேரரசு மறையும்வரை இருந்தது. அதே ஆண்டில் புதிய நாவாய்ச் சட்டம், பிரிட்டிஷ் சுங்கத்துறையின் அதிகாரங்களைப் பெருக்கியது. மேலும், அமெரிக்கக் கப்பல்களை இங்கிலாந்தில் பதிவு செய்யவேண்டுமென அச் சட்டம் விதித்தது. சில ஆண்டுகளுக்குள் மெசாச்சுசட்ஸிலிருந்து, பார்படாஸ் வரையில் பன்னிரண்டு கடற்படைத்துறை நீதிமன்றங்கள் அநேக தடவைகளில் வாணிபச் சட்டங்களை மீறியவர்களை ஜூரிகள் இன்றி தண்டித்தன. எஞ்சி இருந்த உரிமைப் பத்திரங்கள் பெற்ற குடியேற்றங்களை அடக்குவதற்காகச் செய்யப்பெற்ற முயற்சிகளும், குடியேற்ற நாட்டு நீதி மன்றங்களோடு ஏற்பட்ட மோதலும், குடியேற்றங்கள் பாராளுமன்ற அரசாங்கங்கள் அல்ல; தாழ்ந்த அமைப்புகள்தான் எனும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கருத்துகளுக்குச் சான்றுகளாக அமைகின்றன. குடியேற்றங்கள் ஆங்கில நகர சபைகளைப் போன்று கட்டுப்பட்டவை என்றும், அவைகள் பேரரசுப் பாராளுமன்றத்திற்கும், (Imperial Council) கவுன்சிலுக்கும் அடங்கி இருக்கவேண்டுமென்றும் கருதப்பெற்றது.

யுட்ரக்ட் உடன்படிக்கை மேற்கு இந்தியத் தீவுகளிலும் சென்ற காலத்தில் இருந்த பகுதிகளை நீக்கி எல்லையை நிர்ணயித்தது. ஃபிரான்ஸிடமிருந்து பெற்ற செயின்ட் கிட்ஸ் மட்டிலுமே புதிதாக பிரிட்டிஷ் பேரரசோடு சேர்க்கப்பெற்றது. ஆயின், 'அஸ்ஸியன்டோ' எனும் ஸ்பானியக் குடியேற்றங்களுக்கு நீக்கிரோக்களை அளிப்பதற்கான கவர்ச்சி மிகுந்த ஒப்பந்தம் (contract) பிரிட்டனுக்கு மாற்றப்பெற்றது. அதற்கு முன் இவ் வொப்பந்தம் போர்ச்சுகீசிய வாணிபக் குழுக்களிடமும், ஃபிரெஞ்சு கயானா கம்பெனியிடமும் இருந்தது. இதனோடு ஒவ்வோராண்டும் போர்டோ பெல்லோ (Porto Bello) சந்தைக்கு ஒரு கப்பலை அனுப்பும் உரிமையும் பிரிட்டனுக்குக் கிடைத்தது. கரிபியன்

(Caribbean) தீவுகளை அநீதிச் சாக்கடையாகச்செய்த குழம்பிய நிலை முடிவடைந்தது. ஹென்றி மோர்கன், 1671ஆம் ஆண்டில் பனமாவைச் (Panama) சூறையிட்டு அதன்பிறகு ஜமைக்காவின் கவர்னராக வந்தபோது கடற்கொள்ளைக்காரர்களின் ஆதிக்கம் உச்சநிலையில் இருந்தது. எனினும், ஒருசில கொள்ளைக்காரர்கள் மூன்றும் வில்லியத்தின் போர்கள் நிகழ்ந்தகாலத்தும் உலவி வந்தனர். உதாரணமாக, கரோலினாவைத் தளமாகக்கொண்ட 'கருந்தாடி' (Blackbeard), முதலில் நியூ இங்கிலாந்தில் பெயரெடுத்த காப்டன் கிட் (Captain Kidd) போன்றவரைக் குறிப்பிடலாம்.

மேற்கிந்தியத் தீவுகளின் செல்வ வளம் மாறும் தன்மை பெற்றது எனினும் மிகுதியானது. அத் தீவுகளோடு பிரிட்டன் கொண்ட உறவு அமெரிக்காவோடு கொண்ட உறவினின்றும் மாறுபட்டது. பிரிட்டிஷ் மூலதனமும் கடலாதிக்கமும் இன்றி, அவை வாழ முடியாது. தனி உரிமையாளருடைய அதிகாரிகளின் கொடுங்கோன்மை, ஃபிரெஞ்சுக்காரர், ஸ்பானியர் ஆகியோரின் பகைமை, ஆபத்தான ஆதிகுடிகளாகிய கரீப்கள் (Caribs) ஆகியவர்களோடு ஆரம்ப நாட்களில் அவை போராட வேண்டியிருந்தது. அவை வளர்ச்சியுறுவதற்குப் பார்ஹாமைச் (Parham) சார்ந்த வீரம் மிகுந்த வில்லோபி பிரபுக்கள் (Lords Willoughby) இருவர் பெரிதும் பாடுபட்டனர். அதைப்போலவே லீவர்ட்ஸின் போற்றுதற்குரிய கவர்னரான சர் வில்லியம் ஸ்டேபில்டன் (Sir William Stapleton) என்பவரும் பெருந் தொண்டாற்றினர். ஆனல், 1666–7ஆம் ஆண்டுப் போர் காட்டியதைப் போல, கடல் ஆதிக்கம்பெற்ற ஒரு கடற்படை அவைகளை அழிக்க முடியும். இங்ஙனம் ஆபத்தான சூழ்நிலையில்தான் அவை பெருஞ்செல்வத்துடன் வாழ முடிந்தது. பார்படாஸ், ஆரம்ப காலத்தில் மிகவேகமாக வளம்பெற்றது. எரிமலையின் மண் நிறைந்த அதனுடைய நிலங்கள் முழுவதும் பயிராயின. ஆனல், அது வைட் தீவை (Isle of Wight) விட அளவில் சிறியது. அதனுடைய உபரியான மக்கள் சர்க்கரையின் விலை குறைந்தபோது வேறு இடங்களில் குடியேற வேண்டியிருந்தது. வாணிபச் சட்டங்கள் தங்களுடைய வாணிபத்தைத் தாய் நாட்டு அங்காடிகளுக்கு மட்டுமே கட்டுப்படுத்தின என்று தோட்டத் தொழிலதிபர்களும், அவர்தம் பகர ஆட்களும் குறை கூறினர். ஆனல், உண்மையில் மிதமிஞ்சிய உற்பத்தி, மண்வளமிழத்தல், செல்வங்கொழிக்கும் ஃபிரெஞ்சுத் தீவுகளிடமிருந்து வந்த போட்டி ஆகியவைகளே இதற்குக் காரணங்களாக இருந்தன. பதினெட்டாம் நூற்றுண்டின் தொடக்ககாலத்தில் அங்கிருந்த வெள்ளையரின்

எண்ணிக்கை மாருமல் இருந்தது. பல தொழிற்சாலைகளைக் கொண்ட பெரும் பண்ணைகள் சிறு தோட்டங்களை அழித்தன. அப்போது அங்கே தொழிலாளர் எண்ணிக்கையும் குறைவாகவே இருந்தது. நீக்கிரோ அடிமைகளைவிட ஒப்பந்தத் தொழிலாளர் முறைப்படி வந்த வெள்ளையரே மிகுந்திருந்தனர்.

வேல்ஸில் பாதி அளவினதாக இருந்த ஜமைக்கா மூலப் பொருள்களைப் பெருமளவில் பெற்றிருந்தது. அது கரும்பு ஒன்றையே நம்பி இருக்கவில்லை. தனி மனிதரின் போர்க் கப்பல்களுக்குத் தகுதியான இடமாக விளங்கியது. ஏனெனில், ஹண்டுராஸுடன் மர வாணிபத்திற்கும் ஸ்பானிய மெயினில் கள்ளக் கடத்தல் செய்வதற்கும் வாய்ப்பு மிகுதியாக இருந்தது. சிறிய லீவர்ட்ஸ் தீவுகள் [செயின்ட் கிட்ஸ், ஆன்டிகுவா, நெவிஸ் (Nevis), மான்ட்சிர்ராட் (Montserrat)] கலப்புப் பயிர்களை இட்டும், அமெரிக்கரோடு வாணிபம் செய்தும் தங்கள் வழியே சென்றன. ஸ்டேபில்டன், குறுகிய காலத்திற்குக் கூட்டாட்சி சபையை அமைக்குமாறு செய்தார். ஆனால், பிரதேசப் பூசல்கள் காரணமாக அக் கூட்டாட்சி நிலைத்திருக்கவில்லை. ஆயின், பிற தீவுகளைப் போன்று அவைகளுடைய தலைவிதியும் லண்டனிலும் ஐரோப்பாவிலும் நடைபெறும் நிகழ்ச்சிகளால் நிர்ணயிக்கப்பெற்றது. லண்டனில் இருந்த தோட்டத் தொழிலதிபர் குழு, காமன்ஸ் சபையில் அவர்களுடைய 'நவாப்' களுடைய ஆதிக்கம், பிரிட்டனுக்கும் ஃபிரான்சுக்கும் இடையே இருக்கும் உறவு நிலை போன்றவை இத் தீவுகளைப் பெரிதும் பாதித்தன. காம்பியாவிலும், கோல்டு கோஸ்டிலும் அவர்கள் கொண்டிருந்த வாணிபத் தொடர்புதான் பிரிட்டிஷாரின் குடியேற்றங்களை வாழவைத்தது. பல முயற்சிகள் பயனற்றுப்போன பிறகு 1672ஆம் ஆண்டில் 'ராயல் ஆப்பிரிக்க கம்பெனி' (Royal African Company) நிறுவப் பெற்றது. ஆனால், முதலிலிருந்தே அடிமை வாணிபத்தில் கள்ளக் கடத்தல்காரர்கள் அதற்குத் தொல்லை தந்தனர். 1697ஆம் ஆண்டில் அவ் வாணிபத்தில் யாவரும் பங்கு பெறலாம் என அறிவிக்கப்பெற்றது. இக் கம்பெனி அடிமை வாணிபம் அழிக்கப்படும் வரை வாழ்ந்தது என்றாலும் பாராளுமன்றம் அளித்த மானியங்களும் கடற்படையுமே மேற்கு ஆப்பிரிக்காவில் ஓரளவு பிடி கொள்வதற்குக் காரணங்களாக இருந்தன.

ஆன் ராணியார் இறந்தபோது கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவில் சிறு பகுதியைக் கூட ஆட்சி புரியவில்லை. ஆனால், சூரத் (Surat) (1612), பம்பாய் (1668), மதராஸ் (1639), கல்கத்தா (1686) ஆகிய இடங்களில் இருந்த அவர்களுடைய வணிகக்

களங்கள் பிற்காலத்தில் தோன்றிய மாகாணங்களுக்கு வித்தாக அமைந்தன. ஜாவாவிலும் (Java) மொலூக்காசிலும் (Moluccas) டச்சுக்காரர் நிகழ்த்திய வாணிபத்தில் பங்கு பெறவேண்டுமெனும் பிரிட்டிஷ் முயற்சி தோல்வியுற்ற பிறகே, இந்தியாவில் அவர்களுடைய முன்னேற்றம் தோன்றியது. அத் தீவுகளில் டச்சுக்காரர் நல்லமுறையில் வாணிபத்தைத் தொடங்கினர். அவர்களுடைய கப்பல்கள் வலிமை வாய்ந்தவையாகும். அவர்கள் கம்பெனியோ அநேகமாக அரசாங்கத்தின் ஒரு துறையாகவே இருந்தது. அவர்கள் கையாண்ட முறைகள் கொடூரமானவையாக இருந்தன. 1623ஆம் ஆண்டில் அம்பாய்னவில் (Amboyna) நமது வணிகர்கள் படுகொலை செய்யப்பெற்றனர். அது இத் தீவுகளில் ஆங்கிலேயர் செல்வாக்கு அழிந்தது என்பதைக் குறிக்கின்றது. மேலும், தூரக் கிழக்கிலிருந்து மற்ற ஐரோப்பியரையும் டச்சுக்காரர் வெளியேற்றியதால், ஆங்கிலக் கம்பெனி எளிதில் வெற்றி பெறக்கூடிய செயலில் இறங்கியது. போர்ச்சுகீசியருடைய ஆதிக்கம் குறைந்து வந்த இந்தியாவில் தங்களுடைய வாணிபத்தைப் பெருக்க ஆங்கிலேயர் முனைந்தனர். இத் திட்டத்தின் ஒரு பகுதியாக இரண்டாம் சார்லஸ் தம்முடைய அரசியாருக்கு அளிக்கும் சீதனத்தில் பம்பாயையும் சேர்க்குமாறு வற்புறுத்தினர். அவ்விடத்தினைத் தாமே பாதுகாக்க முடியாத நிலையில் ஆங்கிலக் கம்பெனிக்கு அளித்தார். அங்கேயும் டச்சுப்போட்டியினால் தொல்லை மிகுந்திருந்தது. இந்தியாவின் இரு கரையோரங்களிலும் இருந்த ஆங்கில டச்சு வணிகக் களங்களுக்கு இடையே பூசல்கள் எழுந்தன. இப் பூசல்கள் கிராம்வெல் ஆட்சிக் காலத்திலும், முன்னிலை மீட்சிக் காலத்திலும் தோன்றிய போர்களாக உருவெடுத்தன.

ஆங்கிலக் கம்பெனி நாடாளும் அமைப்பாக வளர்வதற்கு இரு தடைகள் காணப்பெற்றன. முகலாயப் பேரரசு சீர்குலைந்த போதிலும், ஏற்கெனவே வளர்ந்து வரும் மராத்தியரிடமிருந்து தங்களுடைய பம்பாய் வணிகக் களத்தினை தாங்களே காத்துக் கொள்ளவேண்டிய நிலையில் கம்பெனியார் இருந்தாலும், இறுதி முகலாயப் பேரரசரான அவுரங்கசீப் 1707ஆம் ஆண்டில் இறக்கும் வரையில், பிற்காலத்தில் பிரிட்டனும் ஃபிரான்சும், அவர்களது செல்வாக்கினை வளர்த்துக்கொள்ளச் சாதகமாக இருந்த குழப்பநிலை இந்தியாவில் ஏற்படவில்லை. மேலும், இங்கிலாந்தில் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் நிலை உறுதி செய்யப் பெறாமல் இருந்தது.

அக் கம்பெனியின் மூலதனம் அக்காலச் சூழ்நிலையில் மிகவும் அதிகமானதாகும். 1601 முதல் 1612 வரை வணிகப் பயணங்

களுக்காக அளிக்கப்பெற்ற மூலதனம் ½ மில்லியனுக்கு மேல் இருந்தது. மிளகு, அவுரி (Indigo) ஆகியவைகளிலிருந்தும், பிறபொருள்களில் இருந்தும் சராசரி 20 சதவீதம் லாபம் கிடைத்தது. எனினும், இக் கம்பெனி தொடர்ந்து வாழும் என்ற உறுதி இல்லை. ஒவ்வொரு பயணமும் தனித்தனியாக முற்றுப் பெற்ற கூட்டுப் பங்குச் செயலாகும் (joint stock). அரசாங்கம் 'கள்ள வாணிபம் செய்பவரி'டமிருந்தும் (interlopers), போட்டி வணிகக் குழுக்களிடமிருந்தும் நிதிபெற்றது. கிழக்கிந்தியக்கம்பெனி தங்கம் ஏற்றுமதி செய்வதையும் அதனுடைய கள்ளிக்கோட்டைத் துணி இறக்குமதியாவதையும் எதிர்த்துக் கூக்குரல்கள் எழுந்தன. காப்பாளர்தான் 1657 ஆம் ஆண்டில் அதனை அழிவினின்றும் காப்பாற்றினர். அதனுடைய தனி உரிமையை நிலைநாட்டினர். பங்குதாரர் அடிப்படையை விரிவுபடுத்தினர். கூட்டுப் பங்கினை நிரந்தரச் சொத்தாக மாற்றினர். இரண்டாம் சார்லஸ் காலத்தில் மற்றொரு நெருக்கடி தோன்றியது. ஆற்றல் மிகுந்த ஜோசய்யா சைல்டின் (Josiah Child) தலைமையில் இக் கம்பெனி அரசியலில் தலையிட்டு, அரசர்கட்சியை ஆதரிக்கத் தொடங்கியது. இதனுடைய தனி உரிமையால் ஆத்திரமடைந்திருந்த விக்கு கட்சியைச் சார்ந்த வணிகர்களுக்கு அரசியல் கூப்பாடு உதவியாக இருந்தது. கையூட்டு வழங்குவதில் போட்டி, பாராளுமன்றத்தில் பிளவு, போட்டிக் கம்பெனியின் தோற்றம் ஆகியவை அன்றாட நிகழ்ச்சிகளாயின. இறுதியில் போட்டியிட்ட இரு கம்பெனிகளையும் இணைத்து 1708 ஆம் ஆண்டில் 'ஐக்கியக் கம்பெனியை' (United Company) கொடால்ஃபின் உருவாக்கினர்.

இந்த ஐக்கியக் கம்பெனியின் தனியுரிமை 1733 ஆம் ஆண்டு வரை உறுதியுடன் இருந்தது. அது ஆண்டுதோறும் ½ மில்லியன் அளவிற்குப் பொருள்களாகவும் வாசனைத் திரவியங்களாகவும் ஏற்றுமதி செய்தது. இருப்பினும் இந்தியாவில் அதனுடைய எதிர்காலம் நிச்சயமற்றதாகவே இருந்தது. மேலும், விரைவிலே அழிந்த குடியேற்றங்களுக்கும் அதற்கும் அதிக வேற்றுமை காணப் படவில்லை. இந்தியாவில் நடைபெற்ற போர்களும், இந்திய அதிகாரிகள் வற்புறுத்தி மிகுதியாகப் பொருள் பறிக்கும் முறையும், முறைப்படியான அதிகாரத்தைப் பயன்படுத்திப் படைகளைத் திரட்டவும், வணிகக் களங்களை அரண் செய்யவும் கம்பெனியாரைத் தூண்டின. ஆனால், கல்கத்தாவில் உள்ள வில்லியம் கோட்டையும், மதராஸில் உள்ள செயின்ட் ஜார்ஜ் கோட்டையும், பம்பாயும் தனித்தனியே பிரிந்துநின்றன. ஒவ்வொன்றிலும் தனித்தனியான சிறு ஆங்கிலச் சமுதாயம், தன்னுடைய திருச்சபை நகராட்சி, மாஜிஸ்டிரேட்டுகள் ஆகியவற்றோடு வாழ்ந்துவந்தது.

லாபம் தேடுவதே அவர்களின் வாழ்க்கைக் குறிக்கோளாக இருந்தது. எனவே, கம்பெனியின் பணியாட்கள் தனி வாணிபம் செய்வதைத் தடுப்பதே மிகக் கடினமான செயலாக இருந்தது.

எனினும் கிழக்கிந்தியக் கம்பெனி இங்கிலாந்தில் பொருள்களை இறக்குமதி செய்வதோடு ஏற்கெனவே பல வழிகளில் பிறவற்றில் மிகுதியாக ஈடுபட்டது. அது இறக்குமதி செய்த பொருள்களில் துணி, வண்ணப்பொருள்கள், பட்டு, அவுரி, வங்காளத்தினின்று வந்த உப்பு ஆகியவை முக்கியமானவை. கடலாதிக்கம் அதற்குப் பெரிதும் பயன்பட்டது. ஏனெனில், பாரசீக வளைகுடாவோடு முகலாயர் மேற்கொண்ட வாணிபத்தைக் கடற்படை துணை கொண்டு அழிப்பதோடு அரேபியாவிற்குச் செல்லும் சமய யாத்திரிகர்களைத் தடுப்பதோடு, இந்தியக் கரையோர வாணிபத்தைக் கைப்பற்ற முடிந்தது. இக் கரையோர வாணிபத்தின் பயனை இந்தியாவில் வாங்கும் பொருள்களுக்கு விலை கொடுப்பதற்கும், தாய்நாட்டிற்கு அனுப்பும் பொருள்களை இரட்டிப்பதற்கும் போதிய பணம் கிடைத்தது. இப்படிச் சுற்றி வளைத்துச் செய்யும் வாணிபத்தில் மோச்சா காபியும் (Mocha coffee), சீனத் தேயிலையும் இரு முக்கியமான பொருள்களாகும். கிழக்கிந்தியக் கம்பெனியின் பொருட்பெருக்கம் அதனைப் பாராளுமன்ற அரங்கிற்குக் கொண்டு சென்றது. பாராளுமன்றம் கம்பெனியினுடைய உரிமைப் பத்திரத்தைத் திருத்தி அமைத்தது. அதனிடமிருந்து கடன்களைப் பெற்றது. இலங்கையைத் தவிர மற்றப் பகுதிகளில் டச்சுக்காரரின் குடியேற்றங்கள் குறைந்துகொண்டு வந்தபோதிலும் பாண்டிச்சேரியிலும், சந்திரநாகூரிலும் இருந்த ஃபிரெஞ்சு வணிகக் களங்கள் ஆங்கிலப் போர்த்தளவாடங்கள் கிழக்கிலேயே துண்டிக்கப்படும் என்று, லேடன்ஹால் தெருவிற்கு எச்சரிக்கை விடுத்தன.

# 7. ஹனேவிரியர், விக்கு கட்சியினர் ஆதிக்கம் 1714-1724

ஏறக்குறைய நூறு ஆண்டுகளாக இருந்த அரசியல் வேகம் ஆன் ராணியார் இறந்த பிறகு நாற்பது ஆண்டுகளுக்கு இயல்பான நிலையை அடைந்தது. அந்த அமைதி நிலவுவதற்குள் இங்கிலாந்திற்கு ஓரளவு இழப்பு நேர்ந்தது. ஹைலாந்துகளில் கிளர்ச்சி தோன்றியது. ஆனால், 1715ஆம் ஆண்டு தோன்றிய இப் புரட்சிக்குப் பொதுவில் புதிய அரசாங்கத்தின் கடுமையே காரணமாக அமைந்தது.

ஹனேவிரியர், பிராட்டஸ்டென்ட் வாரிசு உரிமையை நிலை நாட்டுபவர் என்பதைத் தவிர மற்ற விதத்தில் பிரிட்டிஷ் மக்களைக் கவரவில்லை. ஐம்பத்து நான்கு வயதினரான முதலாம் ஜார்ஜ் ஜெர்மானிய வீரனின் உளப்பாங்கை உறுதியாகப் பெற்றிருந்தார். அவரிடம் ஒரு ஜெர்மானிய இளவரசருக்கு இயல்பாக இருக்கக் கூடிய தானென்ற அகம்பாவம் குடிகொண்டிருந்தது. தம்முடைய குடும்பத்தில் தோன்றிய எல்லோரையும் போலவே தீரம் மிக்கவர் என்பது அவருடைய வியன்ன முற்றுகையிலிருந்து எழுந்த பேரரசுப் போர்கள் யாவற்றிலும் விளங்கியது. ஆனால், போக்கிரிக்கு எதிராக இருக்கும் ஓர் அறிவுணர்ச்சியைத் தவிர, பிரிட்டிஷ் அரசராவதற்குரிய தகுதி அவர்பால் சிறிதும் இல்லை. அவர் ஆங்கில மொழியைக் கற்றுக்கொள்ளவில்லை. அதனால், அமைச்சரோடு ஃபிரெஞ்சு மொழியிலோ பழைய லத்தீன் மொழியிலோதான் உரையாடுதல் வழக்கம். அதே சமயத்தில் வார வழிபாட்டிற்குச் சரியாகச் செல்லாதிருந்தது திருச்சபையில் அவருக்கு உற்சாகம் குறைவாக இருந்தது என்பதை எடுத்துக்காட்டியது. எப்போதும் அரசவைதான் மக்களின் வாழ்க்கைக்கும் அரசாங்கத்திற்கும் மையமாக அமைந்திருந்தது. ஆனால், இப்போது பயனை வைத்துப் பார்க்கும்போது அரசவை என்ற ஒன்று அங்கில்லை. இழிவான

முறையில் செயின்ட் ஜேம்ஸில் சில அறைகளில் ஜார்ஜ் வாழ்ந்து வந்தார். அவரது மனைவியார் சோபியா டாரோதி (Sophia Dorothea) என்பவர் விபசாரக்குற்றம் சாட்டப்பெற்றுக் கடந்த இருபது ஆண்டுகளாக ஹனேவரில் சிறைவைக்கப்பெற்றிருந்தார். அவர் இறக்கும்வரை கைதியாகவே இருந்தார். அவருடைய இடத்தில் ஜார்ஜ் இரு காமக்கிழத்தியரைத் தம்முடன் இங்கிலாந்திற்குக் கொண்டுவந்தார். அவர்களில் ஒருவர் கெண்டால் கோமகள் (Duchess of Kendal) என்ற பட்டம் பெற்று அரசியலிலும் அவ்வப்போது சிறிது பங்கு கொண்டார். அரசியலில் ஜெர்மானியரிடமே அதிக நம்பிக்கை வைத்திருந்த ஜார்ஜ் யூக்னோ சமயத்தவரான ராபித்தான் (Robethon) என்பவரைத் தமது அந்தரங்கச் செயலராக அமர்த்திக்கொண்டார். ஜார்ஜ் தேர்வாளராக இருந்த போது அவரது அமைச்சராக இருந்த பெர்ன்ஸ்டார்ஃப் (Bernsdorff) என்பவரும், ஹனேவருக்கும் இங்கிலாந்திற்குமிடையே பேச்சுவார்த்தை நடத்திவந்த பாத்மார் (Bothmar) என்பவரும் அவரது நம்பிக்கைக்குரியவர்கள். இந் நண்பர்களும், காமக்கிழத்தியரும் அரசாங்கத்தில் பல ஊழல்களுக்குக் காரணமாக இருந்தனர் என்ற குற்றச்சாட்டு காணப்பெற்றது. இந்த அந்நிய அரசமரபு புதிய வெளிநாட்டுக் கொள்கை ஒன்று உருவாவதற்கு வாய்ப்பளித்தது. ஸ்வீடனுக்கும் ஹனேவருக்கும் இடையே மூளும் போர் இங்கிலாந்தையும் பாதிக்கும் எனத் தெரிந்தது. ஸ்டான் ஹோப், ஃபிரான்ஸிற்கு எதிராக அமைந்த நேசக் கூட்டுறவை புதுப்பிக்க முனைந்தது, புது ஜன்டோவினர் புதிய போர்களைக் கொண்டு வருவர் என்ற டோரிகளுடைய கூப்பாடு நியாயமானது என்பதை எடுத்துக்காட்டுகின்றது.

இம் முயற்சி மக்களின் வெறுப்பைத் தூண்டியது என்றாலும் அரசாங்கத்தினர் மக்களில் பாதிக்கு மேற்பட்டவர்களுடன் தொடர்புகொள்ளக்கூடாது என்று அவர்கள் கொண்ட நோக்கந்தான் புரட்சிக்கு அடிப்படையாக இருந்தது. நுனியிலிருந்து அடிவரையிலும் தலைமைப் படைத்தலைவர் ஆர்மாண்ட் அல்லது ஸ்காட்லாந்துச் செயலரான மார் என்பவரில் இருந்து சாதாரண ஆயத்தீர்வை கொள்ளும் பணியாள்வரை கீழான ஆதரவளிக்கும் முறையின்மூலம் ஒவ்வொரு டோரியையும் அரசாங்கம் பதவியிலிருந்து நீக்கியது. காமன்ஸ் சபை இரகசியக் குழு ஒன்றை ஏற்படுத்தியது. அதனுடைய அறிக்கையின்பேரில் ஆக்ஸ்ஃபோர்டு, பாலிங்புரோக், ஆர்மாண்ட், ஸ்ட்ராஃபோர்டு ஆகியோர்மீது அவர்கள் சமாதானம் செய்துகொள்வதில் பங்கு பெற்றதற்காக அரசியல் துரோகக் குற்றம் சாட்டப்பெற்றது. அரசாங்கத்தினர் முழு உண்மைகளையும் கண்டுபிடிக்கவில்லை. மேலும், அவர்களிடம்

இருந்த உண்மைகளை வைத்துக்கொண்டு குற்றச்சாட்டுகளை நிரூபிக்கவும் முடியாது. ஆனால், இதன் விளைவாக 1715ஆம் ஆண்டு மார்ச் மாதம் தம் உயிருக்கு பயந்த பாலிங்புரோக், மாறு வேடத்தில் ஃபிரான்ஸிற்குத் தப்பிச் சென்றார். அவர் மார்ல்பரோ அனுப்பிய செய்திகளை அறிந்து நடுக்கம்கொண்டார். ஆனால், ஆக்ஸ்ஃபோர்டு மட்டும் அசையாமல் நின்றார். அதனால் டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பப்பெற்றார். சென்ற அரசாட்சியில் இருந்ததைக் காட்டிலும் ஆறு மாதங்களில் நாடு யாகோபியரை ஆதரிக்க ஆரம்பித்தது என்று அந்நிய நாட்டுத் தூதர்களே ஒப்புக்கொண்டனர். லண்டன் நகரத்திலும் வேல்ஸ் மாகாணத்திலும் சிறுசிறு கலகங்கள் தோன்றின. மக்களுடைய வெறுப்பைப் பெற்ற மார்ல்பரோவிற்கு எதிராக ஆர்மாண்டை ஆதரித்து ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. கருத்து வேறுபாட்டினர் கோயில்கள் தாக்கப் பெற்றன. இதனால் கலகச்சட்டம் ஒன்று நிறைவேற்றுவது இன்றியமையாததாயிற்று. அதன்படி பன்னிரண்டுபேருக்குமேல் கூட்டம் கூடுவது சட்ட விரோதமெனவும், அங்ஙனம் கூடுபவர்கள், கலைந்து போகச் சொன்ன பின்பும் கலையாமல் இருந்தால் மரண தண்டனை விதிக்கப்பெறுவர் எனவும் அறிவிக்கப்பட்டது. மார்ல்பரோவும் ஸ்ரூஷ்பரியும் மறுமுறையும் செயின்ட் ஜெர்மெய்னுக்கு ஆதரவான செய்திகளை அனுப்பியதிலிருந்து ஜார்ஜின் ஆட்சி எவ்வளவு தூரம் நிலையற்றது என்ற எண்ணம் இருந்தது என்பது தெரியவரும்.

யாகோபியர் ஃபிரான்ஸையே நம்பி இருந்தனர். ஃபிரான்ஸ், மார்டைக் (Mardyke) என்னுமிடத்தில் கப்பல்தளம் அமைக்கும் வேலையில் ஈடுபட்டும் யாகோபியரைப் படைக்கலந்திரட்ட அனுமதி வழங்கியும் உடன்படிக்கை நிபந்தனைகள் பயனற்றுப்போகுமாறு செய்தது. ஆனால், 1715ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் பதினான்காம் லூயி இறந்தார். பாதுகாப்பாளராக இருந்த ஆர்லியன்ஸ் ஸ்பெயின் நாட்டு ஃபிலிப்பிற்கும் அரச குடும்பத்தைச் சேர்ந்த மற்றையோருக்கும் எதிராக தம் நிலையை உறுதிசெய்து கொள்ளும் பொருட்டு இங்கிலாந்துடன் நட்புடன் இருக்க விரும்பினார். எவ்வாறெனினும் யாகோபியரின் குறிக்கோள் சரிவர கொண்டுசெல்லப்படவில்லை. யாகோபியருக்கு ஆதரவாக இங்கிலாந்தில் கிளர்ச்சி தோன்றும் என்னும் நம்பிக்கை ஜூலை மாதத்தில் ஆர்மாண்ட் ஃபிரான்சுக்கு ஓடியதால் நாசமாகியது. போலியின் உள்துறைச் செயலராக இருந்த பாலிங்புரோக், ஸ்காட்லாந்தில் எழும் எந்த இயக்கமும் இங்கிலாந்தை அடைய வழி செய்யாது என நம்பினார். மேலும், போலி, திருச்சபைக்கு ஆதரவு தருவதாகவும் சில உரிமைகளை வழங்குவதாகவும் டோரிகளுக்கு வாக்குறுதி

தந்து. அவர்களின் தலைவராக இருந்து இங்கிலாந்தை வெல்ல வேண்டுமென்று அறிவுறுத்தினர். ஆனல், அவரது அறிவுரை இளவரசருக்குச் செவிடன் காதில் ஊதிய சங்காகியது. அவர் 'காபுசின்' (Capuchin) உணர்வைப்பெற்று இருந்தார் என்று பாலிங்புரோக் குறிப்பிட்டார். ரகசியங்களெல்லாம் வெளியிடப் பெற்றன. ஆர்மாண்ட் டார்பேயில் (Torbay) நோட்டம்பார்த்தார். ஆனல், மக்களிடமிருந்து ஆதரவு கிடைக்கவில்லை. விண்ட்ஹாமும் (Wyndham) வேறு ஐந்து பாராளுமன்ற உறுப்பினர்களும் கைது செய்யப்பெற்றனர். இறுதியாக இங்கிலாந்தில் என்ன நடக்கிறது என்பதைக் காணக் காத்திருக்காமல், பாலிங்புரோக்குக்கும் தெரியாமல் ஸ்காட்லாந்தியரைக் கலகத்தில் இறங்கும்படி போலீ உத்தரவிட்டார்.

ஆகஸ்ட் மாதத்தில் ப்ரேமார் (Braemar) என்னுமிடத்தில் கலகத்தை ஆரம்பித்த மார் (Mar) முதலில் ஐக்கியத்தின் முக்கியப் பேராளாக இருந்தவர். ஆனல், பின்னளில் பதவியிலிருந்து விலக்கப்பெற்று மனமொடிந்த அவர் ஸ்காட்லாந்துச் செல்வந்தர் வழக்கமாகச் செய்யும் சூழ்ச்சியில் இறங்கினர். 'சஞ்சல புத்தியுடைய ஜான்' (Bobbing John) என்று அழைக்கப்பெற்ற அவரிடம் எளிதில் ஒரு முடிவிற்கு வரும் ஆற்றல் இல்லை. அதே சமயத்தில் அவரைக் கண்டு பொருமைப்பட்ட மிகப்பெரிய ஹைலாந்துப் பிரமுகராகிய (potentate) அத்தோல் என்பவர் அவருக்கு எதிராக இருந்தார். மான்ட்ரோசையும், டண்டீயையும் அழித்த பழைய இரண்டக நிலையில் அவரும் இருந்தார். கேம்ப்பெல் குடும்பத்தைச் சார்ந்த ஆர்கைல் என்பவரின் அதிகாரத்தை எதிர்த்து ஹைலாந்தில் படை திரட்டவேண்டும்; லோலாந்துப் பிரஸ்பிடீரிய உணர்ச்சிக்கும் ஆங்கிலக் கடலாதிக்கத்திற்கெதிராக ஃபோர்த் ஆற்றைக் கடந்து எடின்பர்க்கைக் கைப்பற்றவேண்டும். நார்த்தம்பர்லாந்தின் (Northumberland) செல்வந்தரான ஃபார்ஸ்டர் (Forster), டர்வென்ட்வாட்டர் (Derwentwater) பிரபு போன்றவர்களின் தலைமையில் எல்லையில் கலகம் விளைவித்த ஆங்கிலச் சதிகாரர்களோடு விரைவில் தொடர்பு கொள்ளவேண்டும். இப்படி இரண்டக நிலையில் இருந்த அவரோடு செல்வந்தர்களில் பலர் இணைந்தனர். அத்தோலும் கோர்டனும் சேரவில்லை. ஆனல், அவர்களின் மூத்த மக்கள் சேர்ந்துகொண்டனர். அவர்களோடு மாரிஸ்சல் (Marischal) ஏர்ல், ட்ரம்மாண்டுகள் (Drummonds), ஆகில்விகள் (Ogilvies), வடக்கிலிருந்து வந்த மக்கின்டாஷ்கள் (Mackintosh), இன்வர்கால்டுகள் (Invercauld), கிரான்டுகள் (Grants), கேமிரான்கள் ஆகியோரும் இணைந்திருந்தனர். அக்டோபர் மாதத்தில் பெர்த் நகரை மார் கைக்கொண்டார்;

ஃபைஃபில் (Fife) புகுந்தார். கிழ்க்கடற்கரைத் துறைமுகங்களைக் கைப்பற்றினர். லீத் (Leith) நகரைக் கைப்பற்றப் பின்னணிப்படை ஒன்றை முன்னதாகவே அனுப்பினர். ஒருசிறு அரசர்படையோடு ஸ்டர்லிங் (Stirling) கில் இருந்த ஆர்கைலைச் சூழ்ந்து கொள்வதற் கான வாய்ப்பும் இருந்தது.

ஆயினும், அந்த ஐயத்திற்கிடமான வெற்றியைக்கூட அடைய முடியாதவாறு தடைகள் எழுந்தன. புரட்சியாளரிடம் பீரங்கிப் படையில்லை. ஒவ்வொரு நகரத்திலும் அவர்களுக்கு பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. அவர்கள் எடின்பர்க் கோட்டையைப் பிடிப் பதில் தோல்வியுற்றதால் லீத்திலிருந்து அந் நகரத்தைத் தாக்க அஞ்சினர். லோலாந்தியர் படையினை டம்ஃப்ரீஸ் (Dumfries) எதிர்த்துப் பேராடியது. வில்லியம் கோட்டை (Fort William) ஹைலாந்தியரை எதிர்த்தது. ஆர்கைலினுடைய இன்வெராரே (Inveraray) வைத் தாக்க விரைந்தபோது அவர்கள் முறியடிக்கப் பெற்றனர். போலி வந்து தம்மோடு இணைந்து கொள்வாரென மார் பிரபு ஒரு மாதம் எதிர்ப்பார்த்தார். மேலும், அவருக்குப் பகையாக இருந்த வடபகுதி பின்புறத்திலிருந்து கிளர்ச்சி செய்யாது என்ற உறுதி இல்லை. ஏனெனில், சதர்லண்ட் (Sutherland) ஜார்ஜின் ஆதரவாளராக இருந்தவர். மேலும், லோவாட் (Lovat) என்பவர் ஃபிரேசர்களில் (Frasers) சிலரை அரச ஆதரவாள ராகச் செய்தார். இங்ஙனம் புரட்சிக்கலகம் இரு தனிப்பட்ட படையெடுப்புகளாகப் பிரிந்தது.

அக்டோபர் மாதத்தில் கெல்சோ (Kelso) என்னுமிடத்தில் மூன்று படைகள் ஒன்று சேர்ந்தன. ஃபோர்த் ஆற்றிற்கப்பால் இருந்து ஹைலாந்தியர் படை வந்தது. கென்மூர் என்பவரின் தலைமையில் லோலாந்துப் படை ஒன்றும், நார்த்தம்பர்லாந்து உயர் குடிப்பிறந்தோர் படையும் வந்து சேர்ந்தன. அவர்கள் மொத் தத்தில் இரண்டாயிரம்பேர் இருந்தனர். மாரின் ஆலோசனைக்கு மாறாக ஆங்கிலேயர் போர்டரைக் கடக்கத் தீர்மானித்தனர். சில ஹைலாந்தியர் கைவிட்டுச் சென்றபோதிலும் அவர்கள் 'பென்ரித்' (Penrith) வழியாகக் கெண்டாலுக்குச் (Kendal) சென்றனர். அப்படியே 1648ஆம் ஆண்டில் பயன்பட்ட வழியிலே சென்று லங்காஷயரை அடைந்தனர். அங்கே ஒருசில கத்தோலிக்கரைத் தவிர யாரும் அவர்களோடு சேரவில்லை. நவம்பர் மாதம் 13ஆம் தேதி பிரெஸ்டன் (Preston) என்னுமிடத்தில் சரணடைந்தனர்.

அதே தினத்தில் மார் தம்முடைய முடிவை அடைந்தார். அதிக கால விரயத்திற்குப்பின் ஃபோர்த்திற்குச் செல்ல முதல் முயற்சி

யாக டன்பிளேன் (Dunblane) என்னும் நகரத்தைக் கைப்பற்று வதற்காகப் படைகொண்டு சென்ருர். ஆனுல், அந்த நகரத்திற்கு வடக்கே ஷெரீஃப் மியூர் என்னுமிடத்தில் இருந்த உயர்நிலத்தைக் கைப்பற்றிய ஆர்கைல், மார் பிரபுவை விஞ்சினுர். சிறு போருக்குப் பின் மார் பிரபு பின்வாங்கினுர். இத் தடையும் பிரெஸ்டனில் இருந்து வந்த செய்திகளும் பல ஹைலாந்தியரை வீடு நோக்கிச் செல்லவைத்தன. 1716ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் ஜேம்ஸ் எட்வர்டு வந்து இறங்கி பெர்த் நகரில் மார் பிரபுவோடு சேர்ந்தபோது ஏற்கெனவே யாவும் பாழாகி இருந்தன. ஏனென்ருல், அதேசமயத்தில் டச்சுப் படைகளோடு கரடொகன் (Cadogan) ஸ்காட்லாந்தை வந்தடைந்தார். ஸ்காட்லாந்தியர், இளவரசர் சிரிப்பதைப் பார்க்காததால் அவர் 'மந்தமானவர்' (heavy) எனக் கொண்டனர். பனிமூடிய டே (Tay) ஆற்றைக் கடந்து டண்டீ நகரத்திற்குப் பின்வாங்குமாறு அவருடைய ஆலோசகர்கள் வற்புறுத்தினர். மார் பிரபுவும் இனி வெற்றியேதும் கிட்டாது எனத் திட்டவட்டமாகக் கூறினுர். இங்ஙனம் ஒருமாத காலத்திற்குள் ஜேம்ஸ் ஃபிரான்சிற்குப் பயணமாக வேண்டியிருந்தது. ஹைலாந்தியர்படை சிதறுண்டது. அதனை டச்சுப் படையினர் துரத்திச் சென்று பல வீரர்களைக் கொன்றனர்.

கலகத்தில் ஈடுபட்டவர்களுக்கு அளிக்கப்பெற்ற தண்டனைகள் கடுமையானவை என்று கூறுவதற்கில்லை. குற்றம் சாட்டப் பெற்றவர்களில் கென்மியூரும், டெர்வென்ட்வாட்டரும் தலைகளை இழந்தனர். அவர்களோடு முப்பதிற்கும் குறைவான பொது நிலையாளர்களின் தலைகளும் கொய்யப்பெற்றன. பல நூற்றுக் கணக்கானவர்கள் மேற்கிந்தியத் தீவுகளுக்கு அனுப்பப்பெற்றனர். ஆயின், ஸ்காட்லாந்தில் வெறுப்பு மிகுந்திருந்தது. ஆர்கைலும் மனக்கசப்புற்றிருந்தார். ஜூரிகள் தண்டனை வழங்க முடியாததாலும் பறிமுதல் செய்யப்பெற்ற சொத்துக்களினுல் ஸ்காட்டியர் பயன்பெற முடியாததாலும் இச்சொத்துக்கள் வாணிகச் சூதாடும் ஆங்கிலேயர் கைக்கு மாறின. ஆனுல், சிற்சில சமயங்களில் போலி, அன்னிய நாடுகளின் தூண்டுதல் பெற்றதைத் தவிர, அரசியல் ரீதியில் யாகோபியக் கொள்கை மறைந்தது. அதற்கு மேலும் கத்தோலிக்க ஆலோசகரின் தூண்டுதலின்பேரில் போலியாகிய எட்வர்டு பாலிங்புரோக்கைப் பதவியிலிருந்து நீக்கினுர். மறுமுறையும் யாகோபியருக்காக எழுவதற்குமுன் தமது கை அழுகிவிடவேண்டுமென்று பாலிங்புரோக் சூளுரைத்தார். மேலும் அவர் உடனே பிரிட்டிஷ் அரசாங்கத்தை அணுகி விண்ட்ஹாம் போன்ற தம்முடைய நண்பர்களையும் அழியும் அரசமரபைக் கைவிடுமாறு வற்புறுத்தினுர். ஆங்கிலேயருக்கும்

ஐரிஷ்காரருக்கும் இடையேயும், கத்தோலிக்க ஆலோசகருக்கும் பிராட்டஸ்டென்ட் ஆலோசகருக்கும் இடையேயும் அலைகழிக்கப் பெற்ற யாகோபியர் நாடு கடத்தப்பெற்ற சிறுசிறு கும்பல் களாகச் சிதறினர். அதேசமயத்தில் இங்கிலாந்தின் தூண்டுதல் காரணமாக ஜேம்ஸ் எட்வர்டு முதலில் ஃபிரான்சிலிருந்து அவிக்னு னுக்கும் (Avignon) பிறகு இத்தாலிக்கும் துரத்தப்பட்டார். டவர் கோட்டைச் சிறையிலிருந்து விடுதலை அடைந்ததும் பழைய பொருளற்ற உறுதிமொழிகளில் ஆக்ஸ்ஃபோர்டு விளையாடினுர் என்றாலும், உக்கிரமான அட்டர்பரி மட்டும் ஸ்காட்லாந்தில் சதிகாரர் குழுவிற்குத் தலைவராக இருந்துவந்தார்.

இக் கலகத்தினுல் இன்னெரு முக்கியமான பலன் விளைந்தது. இரண்டு ஆண்டுகளில் வரவிருந்த தேர்தலை நடத்துவதற்கு மாருக அரசாங்கம் 1716ஆம் ஆண்டில் ஏழாண்டுச் சட்டத்தைக் (Septennial Act) கொண்டு வந்தது. அதன்படி எதிர்காலத்தில் வரப்போகும் பாராளுமன்றங்களோடு அப்போதிருந்த பாராளு மன்றத்தின் ஆயுட்காலம் மூன்ருண்டுகளில் இருந்து ஏழு ஆண்டு களுக்கு நீடிக்கப்பட்டது. அதேசமயத்தில் கைதிகளின்மீது வெளிப்படையாக இரக்கம் காட்டியதால் நாட்டிங்காமைப் பதவி யிலிருந்து நீக்கினர். அதனுல் மந்திரி சபையில் இருந்த ஒரே டோரியும் பதவி இழந்தார். எனினும் அந்த ஆண்டு முடிவதற்குள் மந்திரிசபை முறிந்தது.

இதற்கான ஒரு காரணம் ஹனேவிரியர் ஆட்சிக்காலம் முழுதும் பல வடிவங்களில் பாதித்தது. அரசருக்கும் அவர்தம் மூத்த மகனுருக்கும் இடையே இருந்த சண்டையாகும். வேல்ஸ் இளவரசர், ஓடினுர்டு (Oudenarde) போர்க்களத்தில் பெரு வீரத்தோடு சண்டையிட்டவர். தம்முடைய தந்தையைக் காட்டிலும் மனித உணர்ச்சியை அவரிடம் மிகுதியாகக் காண முடிந்தது. அதேசமயத்தில் அறிவு நுட்பமும், தெளிந்த நோக்கும் கொண்ட அவரது மனைவியாரான ஆன்ஸ்பாச் (Ansbach)சின் கரோலைன் (Caroline) அரசவையின் அணிகலனுகத் திகழ்ந்தார். இளவரசர் தமது தாயாரைப் பெரிதும் ஆதரித்தார். ஆங்கிலே யருக்குக் காட்சிக்கெளியராக இருந்தார். டோரிகள் அவர்மீது அதிக நம்பிக்கை வைத்தனர். மார்ல்பரோ பெருங்கோமகனுர் நோய்வாய்ப்பட்டு படுத்தபடுக்கையாய் இருந்தபோதிலும் ஹாலி ஃபாக்ஸ், வார்ட்டன் போன்றவர் அப்போதுதான் இறந்தனர். என்றாலும், மார்ல்பரோவிற்கும் விக்கு ஜன்டோவினருக்கும் இடையே இருந்த பூசல் மீண்டும் துளிர்த்தது. ஆயின், அவரது கோமகள் எப்போதும்போல் விஷமென வாழ்ந்திருந்தார்.

அவரோடு அவர்தம் மருமகனுரான சண்டர்லண்டு, பின்னவரின் படைத்தலைவரான கடோகன், பழைய பேராட்களான தந்தையும் மகனுமாகிய கிராக்கள் (Craggs), கார்ட்டரட் போன்ற டோரிகள் ஆகியோர் ஓர் அரசியல் கட்சியின் நடுப்பகுதியாக விளங்கினர். எனினும் பிரிட்டிஷ் நலன்களுக்கும் ஹனேவிரிய நலன்களுக்கு மிடையே ஏற்பட்ட மோதலே காபினெட் முறிவிற்கான உடனடிக் காரணமாகும்.

வெளிநாட்டு விவகாரங்கள் ஸ்டான்ஹோப்பிடம் ஒப்படைக்கப் பெற்று இருந்தன. அவருடைய நீண்டகால ஸ்பானிய அனுபவம் 'ஆஸ்திரிய'ரை ஆதரிப்பவராகச் செய்தது. 1714ஆம் ஆண்டில் யுட்ரக்ட் உடன்படிக்கையை மாற்றி அமைப்பதற்காகத் திரும்பப் போரிட வேண்டுமென்று ஆலோசனை கூறினர். எனினும் எல்லா விக்குகளைப் போலவே அவரும் 'பழைய திட்டத்தை' மீட்கவேண்டு மென்று எண்ணியபோதிலும் ஆக்ஸ்ஃபோர்டும் பாலிங்புரோக்கும் செய்த காரியங்கள் ஓரளவு நியாயமானவை என்பதை விரை விலேயே உணர்ந்தார். 1709ஆம் ஆண்டில் இருந்த 'தடை நிலத்தை' விழுங்க டச்சுக்கரரர் காத்திருந்தனர். அவர்களுக்கும் ஆஸ்திரியருக்குமிடையே சமாதானம் செய்து வைக்கவேண்டு மானல் அது வன்முறைச் செயலாகவே முடியும். ஃபிலிப்பை ஸ்பெயின் அரசர் என்று ஏற்றுக்கொள்ள ஆரும் சார்லஸ் மறுத்தார். முன்பு இருந்ததைப்போலவே, பிரிட்டிஷ் வாணிபம், பரந்த ஸ்பானியப் பேரரசில் நிலவும் அமைதியை நம்பியிருந்தது. மேலும் ஃபிரெஞ்சுக் காப்பாளருக்குத் தேவைப்பட்ட உதவி நமக்குச் சமநிலையை அளித்தது. இது பாலிங்புரோக் திட்டமிட்டபடி ஆஸ்திரியச் செருக்கிற்கும் ஸ்பானிய ஆத்திரத்திற்கும் இடையே யான சமநிலையாகும்.

1715-16ஆம் ஆண்டுகளில் ஸ்டான்ஹோப்பின் சேவையினுல் அமைதி நிலைபெற்றது. இச் சேவையின் பெரும்பகுதி அவர் வெளி நாடுகளுக்குச் சென்று செய்ததாகும்; ஜன்டோ முறை முழுதும், மீட்கப்பெற்றதால் அன்று. இப்படியாக மூன்றும் 'தடை நில' உடன்படிக்கையினுல் ஷெல்டின்மீது டச்சுக்காரரர் அதிகாரம் செலுத்த முடிந்தது என்றாலும், அவர்கள் சில முக்கியமான கோட்டைகளை இழக்கவேண்டியதாயிற்று. 1716ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் பிரிட்டனும் ஃபிரான்சும், அப்பி டுபாய்ஸுடன் (Abbe Dubois) பேச்சுவார்த்தை நடத்தியபின், உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டன. அடுத்த ஜனவரியில் டச்சுக் காரரும் இந்த உடன்படிக்கையில் கையெழுத்திட்டனர். இங்ஙனம் முக்கூட்டு உடன்படிக்கை (triple alliance)

தோன்றியது. இது யுட்ரெக்ட்டில் தீர்மானித்தைப்போல பிரிட்டிஷ் ஃபிரெஞ்சு வாரிசுரிமைகளை உறுதிப்படுத்தியது. டன்கிர்க், மார்டைக் என்னுமிடங்களில் இருந்த கோட்டைகள் உண்மையிலேயே தகர்த்தெறியப்பெறுதல்வேண்டும் என்பதையும் வலியுறுத்தியது. போலியை ஆல்ப்ஸ் மலைக்கப்பால் துரத்து வதற்கும் வழி வகுத்தது. இப்படிப்பட்ட மையச் சமநிலையில் ஒரு தலைமுறைக்குச் சமாதானம் நிலைத்து நின்றது.

ஆயின், ஹனேவரின் நன்மைக்காக வேண்டி முதலாம் ஜார்ஜ் இவ்வுடன்படிக்கையைத் துரிதப்படுத்தினர். ஸ்வீடன் வடக்குப் போரில் வீழ்ந்தபோது, தேர்வாளர் என்ற முறையில் ப்ரெமென் (Bremen), வெர்டன் (Verden) ஆகிய இடங்களை ஜார்ஜ் தமது பங்காகப் பெற்ருர். அதே சமயத்தில் சிதைந்த ஸ்வீடிஷ் பேரரசில் ரஷ்யாவும், பிரஷ்யாவும், போலண்டும், டென்மார்க்கும் கிடைத்ததைச் சுருட்ட முயன்றன. பன்னிரண்டாம் சார்லஸ் 1714ஆம் ஆண்டில் போரிடுவதற்காகத் துருக்கியில் இருந்து திரும்பிவந்தார். ஸ்வீடனேடு சமாதான உறவு கொண்டிருந்த போதிலும் ஹனேவரின் நலன்களைப் பாதுகாப்பதற்காக பிரிட்டன் ஒவ்வோராண்டும் ஒரு கடற்படையை பால்டிக் பகுதிக்கு அனுப் பியது. யாகோபியச் சூழ்ச்சிகளுக்கு ஸ்வீடன் ஆதரவு தந்தது என்ருலும் ஹனேவருக்குப் பெயரளவில் நட்பு நாடான ரஷ்யாதான் அச்சம் விளைவிப்பதாக இருந்தது. எனவே, ஃபிரான்சை விரைவில் நம் பக்கம் இழுப்பது இன்றியமையாததாயிற்று. 1716ஆம் ஆண்டில் ஜார்ஜ் மன்னர் நீண்டநாட்கள் ஹனேவரில் தங்கிய போது பேச்சுவார்த்தைகள் நடந்தன. அரசர் நாட்டைவிட்டு வெளியே செல்லக்கூடாது என்னும் அரசுரிமை நிர்ணயச் சட்டத்தின் துணைவாசகம் அந்த ஆண்டில் ரத்து செய்யப்பெற்ற தால் ஜார்ஜ் ஹனேவரில் தங்கமுடிந்தது. ஸ்டான்ஹோப்பும் அவருடன் சென்றிருந்தார். அப்போது நடந்த பேச்சு வார்த்தைகள், ஹனேவரிய ஆலோசகரான பெர்ன்ஸ்டார்ஃப்பின் (Bernsdorff) வெற்றியைக் குறிப்பதாக இருக்கின்றன.

அரசர் வெளி நாட்டில் தங்கியிருப்பதையும் இங்கிலாந்தின் கப்பற்படையை ஹனேவர் நாட்டிற்காகப் பயன்படுத்துவதையும் மைத்துனர்களான டவுன்ஷெண்டும் வால்போலும் கண்டித்துப் பேசினர். மேலும், வேல்ஸ் இளவரசருக்கு அதிக அதிகாரம் தர வேண்டுமென்று கோரி, அரசரின் ஆத்திரத்தை அதிகரித்தனர். இவ் வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொண்ட சண்டர்லண்டு ஹனேவர் கட்சியில் சேர்ந்து, அவர்களுக்கு எதிராக வேலை செய்தார். 1717ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் டவுன்ஷண்டை

ஜார்ஜ் பதவியிலிருந்து நீக்கினர். அதைத் தொடர்ந்து புல்டினி (Pulteney) போன்ற பிற விக்கு மந்திரிகளோடு வால்போலும் ராஜினமா செய்தார். அதனல் ஸ்டான்ஹோப், சண்டர்லண்டு, கிராக்ஸ் (Craggs) போன்றவர்கள் பலமற்ற ஆட்சி நடத்தினர்.

அவர்கள் விக்கு கொள்கையைப் பின்பற்ற முயற்சி செய்த போது இத்தன்மை வெளிப்பட்டது. வழக்கம்போல கட்சிப் பிளவுகள், சமயப் பிரிவுகளுக்குமிடையே தோன்றிய பூசல்களாக வெளிவந்தன. ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகம் யாகோபியருக்குப் பேராதரவு தந்தது. விசுவாச மறுப்புச் செய்யாதவருடைய நூல்கள், தெய்வீக உரிமைக் கோட்பாடுகளை வலியுறுத்தின. மற்ருெருபுறத்தில் சமயம் சாரா இலக்கியங்கள் ஏராளமாக எழுந்தன. அடிசன், 'ஸ்பெக்டேடர்' (Spectator) எனும் சஞ்சிகையில் ஒழுக்க நெறிபற்றி எழுதினர். அத்துடன் கிறிஸ்துவின் தெய்வீகம், மும்மூர்த்திக் கொள்கை, தெய்வீகங்கள் ஆகியவற்றை வேறுசில நூல்கள் கடுமையாகத் தாக்கின. இவை 'டீயிஸ்டுகளின்' பிடிவாதக் கொள்கையற்ற யுகத்தை அறிவிப்பனவாகும். டீயிஸ்டுகள் (Deists) கிறித்தவச் சமயத்தை இயற்கைத் தத்துவத்தின் பின்சேர்க்கையாகக் கொண்டனர். மேலும், கடவுள் அருள் வெளிப்படுதல் அறிவின் பயனற்ற விளைவாகும் என்றும் குறிப்பிட்டனர். எனவே, தாராளத் திருச்சபையினரே பதவியில் அமர்த்தப்பெற்றனர். புதிய ஆர்ச்பிஷப்பான வேக் (Wake), அட்டர்பரிக்கும் குருமார் கூட்டத்திற்கும் எதிராக அரசின் அதிகாரத்தை ஆதரிக்கத் தமது பேரறிவைப் பயன்படுத்தினர்.

பிற்காலத்தில் 'வால்போலின் போப்' என்று அழைக்கப்பெற்ற லண்டனைச் சார்ந்த கிப்சன் (Gibson) உறுதியான விக்காவார். ஆனல், ஒரு காலத்தில் சாக்கிவெரலின் எதிரியாகவும், இப்போது பேங்காரின் பிஷப்பாகவும் இருந்த ஹோட்லி (Hoadley) யிடமிருந்துதான் பெருங் கூப்பாடு கிளம்பியது. அவர்தம் இகழார்ந்த கோயில் மேடைப்பேச்சின் விளைவாகத் திருச்சபையில் 'பேங்கோரியன்' வாத எதிர்வாதம் தீவிரமாக இருந்தது. திருச்சபை இவ்வுலகத்தைச் சேர்ந்ததன்று என்று அவர் கருதினர். முறையாக வரும் திரு மாணவரைச் சார்ந்து கட்புலனகும் சங்கமன்று என்றும் சோதனைகளின்மூலமாகத் தன்னுடைய அதிகாரத்தை நிலைநாட்டிக் கொள்ளும் அமைப்பும் அன்று என்றும், ஆனல், சமயப்பற்று கொண்டவரின் கூட்டமே என்றும் எண்ணினர். 1717 ஆம் ஆண்டில் அவரை குருமார் கூட்டம் கண்டித்தது. அதனல், அரசாங்கம் அக் கூட்டத்தைக் கலைத்தது. அதன் பிறகு நூறு ஆண்டுகளுக்கு அக் கூட்டம்கூட அனுமதி தரப்படவில்லை.

இத்தகைய வெறுப்பு மிகுந்த சூழ்நிலையில் கருத்து வேறுபாட்டினருக்குத் தான் கொடுத்திருந்த வாக்குறுதியை நிறைவேற்ற அரசாங்கம் விரும்பியது. பிராட்டஸ்டென்டுகளுக்காகச் சமயப் பொறைச் சட்டமொன்றை அயர்லாந்தில் நிறைவேற்றியது. மூன்றும் வில்லியத்தின் காலத்தில் நிறைவேறிய மற்றொரு சட்டத்தை நிரந்தரமானதாக்கி அதன்மூலம் குவேக்கர்கள், நீதி மன்றங்களில் பிரமாணம் எடுத்துக்கொள்வதற்குப் பதிலாக 'உறுதிமொழி' எடுத்துக்கொள்ள அனுமதி பெற்றனர். சோதனைச் சட்டத்தையும், மாநகராட்சிச் சட்டத்தையும் ஸ்டான்ஹோப் ரத்து செய்ய விரும்பினர். ஆனால், பாராளுமன்றத்தில் எதிர்க் கட்சியில் இருந்த வால்போலின் ஆதரவாளர் சோதனைச் சட்டங்களை வைத்திருக்கத் தீர்மானித்தனர். எனவே, அம் முயற்சி கைவிடப் பெற்றது. முன்னிருந்த ஆட்சியில் கொண்டுவரப்பெற்ற சில வேளை இணக்கச்சட்டத்தையும், பிளவுச்சட்டத்தையும் 1719ஆம் ஆண்டில் மிகுந்த தொல்லைக்குப் பிறகு ஸ்டான்ஹோப் ரத்து செய்தார்.

ஸடான்ஹோப் மந்திரிசபை உள்நாட்டில் வலியிழந்து இருந்த போதிலும் ஐரோப்பாவில் சில முக்கிய வெற்றிகளை அடைந்தது. ஆஸ்திரியாவிற்கும் ஸ்பெயினுக்குமிடையே இருந்த பிளவு மறைந்தாலொழிய முக்கூட்டுறவு நிலைத்திருப்பதற்கில்லை. இதை உணர்ந்த ஸ்டான்ஹோப் ஒப்பந்த திட்டம் முழுவதையும் மாற்றியமைக்க எண்ணினர். அதன்படி நான்காம் சார்லஸ், ஸ்பெயின் அரச பதவிக்கு உரிமை கொண்டாடக்கூடாது. ஆனால், அவர் நேபிள்ஸ்மீது கொண்ட ஆதிக்கத்தை வலுப்படுத்துவதற்காக சிசிலியை அடையவேண்டும். செவாய் கோமகன் சிசிலியை அளிப்பதற்குப் பதிலாக சார்டீனியாவைப் பெறவேண்டும். ஸ்பெயின் தான் இழந்த பகுதிகளின்மீது உரிமை கொண்டாடக் கூடாது. அவைகளுக்கு ஈடாக வலிமைமிக்க ஸ்பானிய அரசி, எலிசபெத் பார்னஸ் என்பவருடைய மகனை, அவருடைய மூதாதையருடைய பர்மா மாகாணத்திற்கும் டஸ்கனிக்கும் வாரிசாக ஏற்றுக் கொள்ளவேண்டும். ஸ்டான்ஹோப் எல்லையற்ற பொறுமையோடு இவற்றையெல்லாம் இணைத்து 1718ஆம் ஆண்டில் நால்வர் உடன்பாட்டினை (Quadruple alliance) உருவாக்கினர். இக்கூட்டில் உண்மையில் ஹாலந்து இங்கிலாந்தோடு சேரவில்லை. ஆஸ்திரியாவும் ஃபிரான்சும் இதனை முழுமனதோடு ஏற்றுக்கொள்ளவில்லை என்பது உண்மையே.

ஆனல், அவருக்கிருந்த தொல்லைகள் ஏராளம். தங்களுடைய ஸ்பெயின் நாட்டு வாணிபத்தை டச்சுக்காரர் விடத் தயாராக

இல்லை. பேரரசரோ, இத்தாலிய மாகாணங்களைப் போர்போன் இளவரசருக்களித்து இவ்வுடன்படிக்கையைத் தவிர்க்க எண்ணினர். பிரிட்டிஷாரின் உதவிதான் டூபாய்ஸை, காப்பாளரின் ஆதரவைப் பெறுமாறு செய்தது. இதற்கு மாறாக ஸ்பெயினை ஆதரித்த வலிமைமிக்க கட்சியொன்று இருந்தது. ஃபிரான்சின் நிதி நிலைமையைச் சீர்திருத்தித் தம்முடைய மிஸ்ஸிஸிப்பி கம்பெனியின் (Mississippi) மூலமாகப் பிரிட்டிஷ் ஆதிக்கத்தைக் குறைக்க எண்ணிய ஸ்காட் ஜான் லா (Scot JohnLaw) என்பவர் அக்கட்சியை மேலும் பலப்படுத்தினர். ராணியாரைப் போன்றே பார்மாவைச் சார்ந்த கார்டினல் அல்பரோனி (Cardinal Alberoni) என்பவர் இத்தாலிய மாகாணங்களை மீட்கப் பயன்படும் நாட்டுணர்ச்சியைப் ஸ்பெயினில் பெருக்கினர்.

ஃபிலிப்பும் எலிசபெத்தும் அல்பரோனியை அவர் நினைத்த காலத்திற்கு முன்பே செயல்படத் தூண்டினர். 1717 ஆம் ஆண்டில் ஸ்பானியர் சார்டீனியாவைக் கைப்பற்றினர். 1718 ஆம் ஆண்டு ஜூலை மாதம் சிசிலியைத் தாக்கினர். ஸ்டான்ஹோப் மாட்ரிட் நகருக்கு நேரில் சென்று ஜிப்ரால்டரைத் திரும்பத் தந்து விடுவதாகக் கூறியும் போரை நிறுத்த முடியவில்லை. ஆகஸ்ட் மாதத்தில் இங்கிலாந்தின் கடல் தளகர்த்தரான பிங் (Byng) என்பவர் ஸ்பானியக் கப்பற்படையை சிசிலித் தீவின் தென்கிழக்கிலுள்ள பஸ்ஸாரோ முனைக்கருகில் தோற்கடித்தார். அதே சமயத்தில் நம்முடைய தலையீட்டின் விளைவாகத் துருக்கிக்கும் ஆஸ்திரியாவிற்கும் பஸ்ஸாரோவிட்ஸ் (Passarowitz) உடன்படிக்கை ஏற்பட்டது. இதன்படி போர், ஆஸ்திரியாவிற்குச் சாதகமாக முடிந்தது. அதேசமயத்தில் ஸ்டான்ஹோப்பின் வற்புறுத்தலின்பேரில் ஃபிரெஞ்சுப் படை ஒன்று பிரன்னிசைக் கடந்து வந்தது. இதனால் அல்பரோனியின் வெல்திற வலை அறுந்தது. ஃபிரெஞ்சுக் காப்பாளரைக் கவிழ்ப்பதற்காகத் தோன்றிய ஸ்பானியச் சதியும் வீழ்ந்தது. ரஷ்யாவும் ஸ்வீடனும் ஒன்றிச் செயலாற்ற முடியவில்லை. பன்னிரண்டாம் சார்லஸ் மறைந்ததால், ஸ்வீடன் நாட்டவரும் யாகோபியரும் இணைந்து இங்கிலாந்தின்மீது படையெடுத்துச் செல்லும் திட்டம் பாழாகியது. போலி மாட்ரிட் நகரை அடைந்தபோதிலும் ஆர்மாண்டினுடைய படைகளைச் சுமந்துசென்ற கப்பல்களைப் புயல் அழித்தது. சில நூறு ஸ்பானியரே மாரிஸ்செல் (Marischal) ஏர்லின் தலைமையில், லீவிஸ் தீவினை அடைந்தனர். அவர்கள் 1719 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் கின்டெய்லுக்குக் (Kintail) கடந்து சென்றனர். ஹைலாந்தியரில் மிகச் சிலரே அவருடன் சேர்ந்தனர். வெகுவிரைவிலேயே க்லென் ஷீல் (Glenshiel) சமவெளியில் ஸ்பானியர் சிறைபிடிக்கப்பட்டனர்.

இவ்வாறு எல்லாப் பக்கங்களிலும் ஏற்பட்ட தோல்வியிலும், ஃபிரான்ஸ் தங்களுக்கு ஆதரவான உரிமைக் கட்டுப்பாடுகளைப் பெற்றுத் தரும் என்னும் எண்ணத்திலும் ஸ்பானிய ஆட்சியாளர் அல்பரோனியைப் பலியாடாக்கினர். அவரை டிசம்பர் மாதத்தில் பதவியில் இருந்து நீக்கினர். 1720ஆம் ஆண்டு பிப்ரவரியில் ஸ்பெயின் நால்வர் உடன்படிக்கையின் நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டது. இங்ஙனம் ஸ்டான்ஹோப்பின் முயற்சியினாலும், பிரிட்டிஷ் கடலாதிக்கத்தினாலும் மற்றுமோர் அமைதிக்காலம் தோன்றியது. ஆயின் போரினை மக்கள் மிகுதியாக வெறுத்தனர். கூட்டுறவில் தோன்றிய பிளவுகளும் மறையவில்லை.

பன்னிரண்டாம் சார்லஸ் இறந்த பிறகு ஸ்டான்ஹோப் ஸ்வீடனுக்குப் பகையாக இருந்த நாடுகளை ஒன்றுதிரட்ட வேண்டுமென்று கருதினார். அந்த ஒற்றுமை பால்டிக் பகுதியில் ரஷ்ய ஆதிக்கம் ஏற்படுவதைத் தடுக்க உதவும் என்றும் கருதினார். ஆனால், இங்கே முதலாம் ஜார்ஜ் தம்முடைய பிரஷ்ய மருமகன்மீது கொண்ட வெறுப்புடன் ஸ்டான்ஹோப் போராடவேண்டி இருந்தது. பிரிட்டிஷ் வாணிபத்திற்கு இன்றியமையாததாக இருக்கும் சமாதானத்தைக் குலைக்கக்கூடிய பெர்ன்ஸ்டார்ஃபின் ஹனோவிரியக் கொள்கையைத் தடுக்கவேண்டும். அதேசமயத்தில் ஜெர்மானியப் பேரரசுக்குள் வழக்கமாகத் தன்னுடைய கருவியாக ஸ்பெயினைப் பயன்படுத்திக்கொள்ளும் ஃபிரெஞ்சுத் திட்டத்திற்கு எதிராகவும் போராடவேண்டும். ஆயின், அவர் ஹனோவிரியக் கவுன்சிலரைத் தம் வழிக்குக் கொண்டுவந்தார். பிரஷ்யாவுடன் புதிய உடன்படிக்கை தோன்றியது. கார்ட்டரட் தலைமையில் ஆற்றல் மிகுந்த தூதுக் குழு ஒன்று ஸ்டாக்ஹோமிற்குச் (Stockholm) சென்றது. 1720ஆம் ஆண்டில் ஸ்வீடன் அளிக்கவேண்டிய சலுகைகளை பிரிட்டிஷ் கடற்படை நிர்ணயித்தது. அதுவே ப்ரிமென்னையும் வெர்டனையும் ஹனோவருக்கும், ஸ்டெட்டினைப் (Stettin) பிரஷ்யாவிற்கும் அளித்தது. டென்மார்க்கிற்கும் சில பகுதிகளைப் பெற்றுத் தந்தது. ஆயினும், ரஷ்யா எதிர்த்துநின்றது. அதனோடு புதிய போர் ஒன்றினைத் தொடங்க வேண்டுமென்று ஸ்டான்ஹோப் வற்புறுத்தியும் அதனைத் துருக்கியோ மற்ற நாடுகளோ ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே, ஸ்வீடனுக்கு நாம் அளித்த வாக்குறுதிகள் காற்றில் பறந்தன. மேலும், 1721ஆம் ஆண்டில் ஏற்பட்ட நீஸ்டாட் உடன்படிக்கை (Peace of Nystad) எஸ்தோனியாவையும் (Esthonia) கிழக்கு பால்டிக் பகுதியில் ஸ்வீடன் கைப்பற்றிய பகுதிகளையும் ரஷ்யாவிற்கு அளித்தது. அதனால் ரஷ்யா ரீகா (Riga), ரிவால் (Reval), நார்வா (Narva) போன்ற துறைமுகங்களின் மூலமாக பால்டிக் கடலில் ஆதிக்கம் பெற்றது.

இக்காலப் பகுதியில் உள்நாட்டு அரசியல் இழிந்ததாகவும் பழிவாங்கும் எண்ணத்துடன் கூடியதாகவும் இருந்தது. அரச குடும்பத்திலிருந்த பூசல் மிகக்கேவலமானதாக இருந்தது. இளவரசரும் இளவரசியாரும் அரண்மனையிலிருந்து துரத்தப்பெற்றனர். அதனல் அவர்கள் தங்கள் அவையை லீசெஸ்டர் மாளிகையில் (Leicester House) அமைத்துக்கொண்டனர். மேலும், அவர்களிடமிருந்து அவர்களுடைய குழந்தைகள் பிரிக்கப்பட்டன. பிரிட்டனை ஹனேவரிலிருந்து பிரிக்கும் சட்டம் ஒன்றைக் கொண்டுவரும் எண்ணங்கூட மன்னருக்கு இருந்தது. அவ்வாறே உயில் ஒன்றையும் விட்டுச்சென்ருர். ஆனல், அந்த உயிலைப் பிற்காலத்தில் இரண்டாம் ஜார்ஜ் மறைத்துவிட்டார். இப் பிளவில் கட்சிக் கொள்கைகள் மறைந்தன. இளவரசரின் நண்பரான ஆர்கைலோடும், ஆக்ஸ்:ஃபோர்டோடும் டோரி கட்சியைச்சார்ந்த திருச்சபையினரோடும் வால்போல் சேர்ந்துகொண்டார். ஸ்டான்ஹோப் கூட்டம் பாலிங்புரோக்கின் உதவியை நாடியது. ஸ்டான்ஹோப்பும் சண்டர்லண்டும் தங்களுடைய அதிகாரம் நிலைத்திருக்கச் செய்வதற்காகப் பொல்லாச்செயல் பல புரியத் திட்டமிட்டனர். பல்கலைக்கழகங்களை நேரில் சென்று பார்க்கவேண்டுமென்பதைப் பற்றியும், அவைகளில் நியமன உரிமை அரசாங்கத்திற்கு இருக்க வேண்டுமென்பதைப்பற்றியும் ஆராய்ந்தனர். அதனேடு பாராளுமன்றத்தை ஏழாண்டுகளுக்கு மேலும் நீடிக்கவேண்டுமென்னும் திட்டத்தையும் கொண்டுவந்தனர். தம்முடன் இணைந்து பணிபுரிவோர் எதிர்த்ததால் அத் திட்டத்தைக் கைவிட்டனர். ஆனல், பிரபுத்துவ மசோதா அவர்களுடைய திறமையற்ற தன்மையை வெளிப்படுத்தியது. அம் மசோதா 1712ஆம் ஆண்டில் பன்னிரண்டு 'யுட்ரெக்ட்' பிரபுக்களை ஆன் ராணியார் நியமித்தபொழுது அதற்கு ஏற்பட்ட எதிர்ப்பை இப்பொழுது எடுத்துக்கூறி இதைத் தடுக்க முயன்றனர் என்றும் வெளிப்படையாகக் கூறப்பெற்றது. ஆனல், அவர்களது உண்மை நோக்கம் தங்களுடைய பகைவரான இளவரசர், மன்னரானவுடன் இத்தகைய தனிச்சிறப்புரிமையைப் பயன்படுத்தாமல் இருக்கச்செய்வதுதான். இப்போது பிரபுக்கள் சபையில் இருக்கும் எண்ணிக்கையைவிட ஆறு பேர்களுக்குமேல் மன்னர் சேர்க்கக்கூடாது என்று அம் மசோதா கூறியது. அதே சமயத்தில் ஸ்காட்லாந்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்று, பிரபுக்கள் சபையில் இருந்த பதினறு உறுப்பினருக்குப் பதிலாக இருபத்தைந்து பரம்பரைப் பிரபுக்களை நியமிக்கலாம் என்றது. தற்கால வாதங்கள் அப்போது எழவில்லை என்றுலும் காப்புக்கு தவாகிய புதிய பிரபுக்களை நியமிக்கும் பழக்கம் தடை செய்யப்படுமானல் பிரபுக்கள் சபைக்கும் காமன்ஸ் சபைக்கும் இடையே போராட்டம் எழுவது நிச்சயம். பிரபுக்கள் சபையில்

செல்வாக்கைப் பயன்படுத்தி இம் மசோதா நிறைவேற்றப் பெற்றது. அங்கேயும், ஆக்ஸ்ஃபோர்டும், கூப்பரும் அரசருடைய தனிச்சிறப்புரிமையைக் கட்டுப்படுத்தும் முயற்சியைக் கண்டித் தனர். நெருக்கமாக இணைந்த செல்வந்தர்கள் மீது வெளியிலிருந்த ஸ்டீல் தாக்குதலைத் தொடர்ந்தார். வால்போல், அரசியல் சட்டத் தில் முக்கிய மாறுதலைக் கொண்டுவந்தார். அவர் தமது பேச்சு வன்மையால் காமன்ஸ் சபையில் பிரபுத்துவ மசோதா தோல்வி யுறுமாறு செய்தார்.

இப்படி அடுக்கடுக்காக வந்த தோல்விகள், தங்களது வெளி நாட்டுக் கொள்கைக்கு வந்த ஆபத்துகள், பெர்ன்ஸ்டார்ஃபின் சூழ்ச்சிகள் ஆகியவை, வால்போலுடனும் இளவரசருடனும் சமாதானம் செய்துகொள்ளாவிடில் தாங்கள் பிழைக்க முடியாது என்று அமைச்சர்கள் உணருமாறு செய்தன. வால்போலும் டவுன்ஷெண்டும் 1720ஆம் ஆண்டில் அரசாங்கத்தில் திரும்பப் பதவியேற்றபோது இதில் பாதி நிறைவேறியது. அப்போதுதான் தென்கடல் குமிழி வெடிப்பதற்கிருந்தது என்பதனால் இத்தகைய சமாதானம் தக்க சமயத்தில் ஏற்பட்டது.

பிரிட்டிஷ் பொது நிதியியல் வளராத நிலையில் இருந்த காரணத்தால் 1689ஆம் ஆண்டிலிருந்து போருக்கு அளிக்கப் பெற்ற மானியங்கள் முறைமைப்படாதனவாகவும் அளவுக்குமீறி யனவாகவும் இருந்தன. பிற்காலத்தில் வெளியிடப்பெற்ற கருவூல உண்டியலுக்கு (Treasury bills) ஒப்பான 'டால்லீஸ்' (tallies) அதிகக் கழிவோடு வெளியிடப்பெற்றது. ஆண்டு வருவாய் தரும் உடைமைத் திட்டமாகக் கடன்கள் வசூக்கப்பெற்றன. வட்டி வீதமும் மிக உயர்ந்து இருந்தது. பாங்குகளில் இருந்தும் மற்ற வணிகக் குழுக்களிடமிருந்தும் அரசாங்கம் நிறையக் கடன் கொண்டது. போர் முடிவடைந்தபோது பொதுக்கடன் 54 மில்லியன் பவுனுக உயர்ந்தது அச்சமூட்டுவதாக இருந்தது. மேலும் கடனில் பெரும்பகுதி மீட்கமுடியாத கடனுக இருந்ததோடு, வட்டி 9 சதவீதம் வரை உயர்ந்திருந்தது. பாங்கிலிருந்தும் தென் கடல் கம்பெனியிலிருந்தும் ஸ்டான்ஹோப் கூடுதலாகக் கடன்களை எழுப்பியபோதிலும், வால்போல், ஓர் கடன்கழிவு நிதியையும் (sinking fund) புதுக்கடன்களுக்கு 5 சதவீதம்தான் வட்டி தரவேண்டுமென்பதையும் பாராளுமன்றம் ஏற்றுக்கொள்ளுமாறு செய்து ஒரு புதிய பழக்கத்தினைத் தொடங்கிவைத்தார்.

1711ஆம் ஆண்டு ஹார்லி (Harley) என்பவர் நிலையாக்கம் பெருத கடன்களைத் திருப்பிக் கொடுத்துவிடுவதற்காகத் தென் கடல் கம்பெனி தோற்றுவிக்கப்பெற்றது. ஸ்பானிய அமெரிக்கா

வுடன் செய்யும் வாணிபத்தின் தனி உரிமை அக் கம்பெனியிடம் ஒப்படைக்கப்பெற்றது. எனினும் இந்த வாணிப முயற்சி வெற்றி பெறவில்லை. முதலிலிருந்தே இக் கம்பெனியில் அமித மூலதனம் காணப்பெற்றது. லா (Law) என்பவரின், வெற்றி பெறுவதுபோல் தோன்றிய வணிக ஊகங்களின் அடிப்படையில் இழந்த பொருள்களைத் திரும்பப்பெற ஒரு திட்டத்தைக் கம்பெனி வகுத்தது. அதன்படி அக் கம்பெனி நாட்டுக் கடனில் 31 மில்லியன் பவுனை எடுத்துக் கொள்ளவேண்டும். அதனுடைய வட்டிவீதமும் காலங்கடந்த ஆண்டுக் கடன்களை மாற்றுவதாக அளித்த நம்பிக்கையும் அரசாங்கத்தைக் கவர்ந்தன. அதே சமயத்தில் அக் கம்பெனி 7½ மில்லியன் பவுன்களை அரசாங்கத்திடம் ஒப்படைத்தது. ஆனால், அக் கம்பெனியின் கற்பனையான இருப்பினை மூத்த கிரேஸ், உள்துறைச் செயலரான அவரது மகன், அரசருடைய காமக்கிழத்தியர், கருவூலத் தலைவராகிய எய்ஸ்லபி (Aislabie) போன்றவர்களிடையே பகிர்ந்தளிப்பதில் கையூட்டுத் தாண்டவமாடியது.

வால்போல் எதிர்த்தபோதிலும் காமன்ஸ் சபை இங்கிலாந்து பாங்கின் உறுதியளிக்கப்பெற்ற திட்டத்தைத் தள்ளிவிட்டுத் தென் கடல் கம்பெனியின் திட்டத்தை ஏற்றுக்கொண்டது. கம்பெனியின் இருப்பினுடைய விலை மதிப்பை உச்சமாக வைத்திருப்பதில் தான் அத் திட்டத்தின் வெற்றி இருந்தது. விலை மதிப்பினை உயர்த்துவதற்காகக் கம்பெனியின் நெறியாளர்கள் ஏமாற்று வழிகளைக் கையாண்டனர். பிப்ரவரி மாதத்தில் 130 பவுனாக இருந்த பங்கின் மதிப்பானது, ஜூன் மாதத்தில் 1050 பவுனாக உயர்ந்தது. ஒருவிதச் சூதாட்டப் பயித்தியம் மக்களைப் பிடித்தது. ஆகஸ்ட் மாதத்தில் ஒரே வாரத்தில்மட்டும் 36,000 பங்கு மாற்றங்கள் நிகழ்ந்தன. ஏராளமான குமிழிக் கம்பெனிகள் முளைத்தன. இவைகளில் 'ஸ்பெயினிலிருந்து ஆண் கழுதைகளை இறக்குமதி செய்யும்' கம்பெனியும் ஒன்று. இதில் மில்லியன் கணக்கில் முதலீடு செய்யப்பெற்றது. ஆனால், நெறியாளர், அளவுக்கு மீறிய செயல்களில் ஈடுபட்டனர். சொத்துக்களால் ஈடு செய்யப்பெறாத இருப்பினை, எப்போதும் உச்சவிலை மதிப்பிலேயே வைத்திருப்பது என்பது முடியாத ஒன்றாகலின் அக் கம்பெனியார் அங்காடியில் அளவுக்கு மீறிய சுமையைத் திணித்தனர். மேலும், எண்பது போட்டிக் கம்பெனிகள் சட்ட விரோதமானவை என்று அறிவிக்குமாறு அரசாங்கத்தை வற்புறுத்தினர். இதுவே அவர்களுடைய கம்பெனியின் பாதுகாப்பிற்கு முதலடியாக வந்தது. சட்ட விரோதம் என்று அறிவிக்கப்பெற்ற கம்பெனிகளின் மதிப்பிழந்த பங்குகளை விற்க நெருக்கடி தோன்றியது. இப் பீதி தென்கடல் கம்பெனியையும் பாதித்தது. அதன் பங்குகளின் மதிப்பு விரை

வாக இறங்கியது. ஜூலை மாதத்திலிருந்து செப்டம்பர் மாதத்திற்குள் 1000 பவுனுக இருந்தது 400 பவுனுகக் குறைந்தது. நவம்பரில் திரும்பவும் 135 பவுனுக்கே வந்தது.

தென்கடல் கம்பெனியின் முறிவு மந்திரி சபையை வீழ்த்தியது. ஆனால், வால்போலின் செல்வாக்கை வளர்த்தது. ஒரு ரகசியக் குழுவினுல் துரத்தப்பெற்ற காமன்ஸ் சபை, எய்ஸ்லபியை டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பியது. கம்பெனியின் நெறியாளர்களுடைய சொத்துக்களைப் பறிமுதல் செய்தது. சண்டர்லண்டு தமது கட்சி அளித்த வாக்குகள்மூலமாகத்தான் தப்பினர். மூத்த கிரேக்ஸ் தற்கொலை செய்துகொண்டார். இளைய கிரேக்ஸ் அம்மை நோயில் இறக்கும் பேறு பெற்றார். ஸ்டான்ஹோப்போ 1721ஆம் ஆண்டு வலிப்பு நோயில் இறந்தார். அவருடைய இடத்தில் டவுன்ஷெண்ட் உள்துறைச் செயலராக வந்தார். கார்ட்டரட் கிராக்ஸ் என்பவரின் வாரிசாகப் பதவியிலமர்ந்தார். இப்போது கருவூல முதற் பிரபுவான வால்போல் நாட்டின் பொருளாதாரச் சீர்குலைவைச் செம்மை செய்ய முனைந்தார். தென்கடல் கம்பெனி உருப்படியாகச் செய்த காரியம் மீட்கமுடியாத இருப்பை மாற்றியதுதான். வால்போல் அதனைக் கைவிடாமல் ஏற்றுக்கொண்டார். பொறுப்பினை ஏற்றுக்கொள்ளுமாறு இங்கிலாந்து பாங்கை வற்புறுத்தினர். அவர் செயல்படுத்திய திட்டம் முதலாளிகளுக்கு ஏறக்குறைய 30 சதவீதம் இழப்பினைத் தந்தபோதிலும் குறைந்தது பொதுக்கடனில் இருந்து அரசாங்கத்தைக் காப்பாற்ற உதவியது.

வால்போலின் அதிகாரம் தடையற்று விளங்குவதற்கு முன், அவர் பல இடர்ப்பாடுகளைக் கடக்கவேண்டியிருந்தது. ஆனால், நல்வாய்ப்பும் தளராத மனவுறுதியும் அவரை மேன்மேலும் உயர்த்திச்சென்றன. சண்டர்லண்டும் மார்ல்பரோவும், 1722ஆம் ஆண்டில் இறந்ததால் அவரது கை மேலும் உயர்ந்தது. ஸ்டான்ஹோப்பின் ஆதரவாளரான கார்ட்டரட், மன்னரின் காமக்கிழத்தியரோடும் மந்திரிகளோடும் வேலை செய்யச் சித்தமாக இருந்தார். டோரிகளின் ஆதரவைப் பெறவும் தயாராக இருந்தார். 1724ஆம் ஆண்டில் அவரை அயர்லாந்தின் கவர்னராக அனுப்பியது, வால்போலின் சிறந்த வெற்றி எனலாம். கார்ட்டரட்டின் இடத்தில் நியூகாசில் கோமகனுன ஒரு பணக்கார வாலிபர் மந்திரி சபையில் சேர்ந்தார். அவரும் அவருடைய சகோதரரான ஹென்றி பெல்ஹாமும் வால்போலிடம் பற்றுறுதி கொண்ட ஆதரவாளராக இருந்தனர். அவர் டோரிகளுக்கு அஞ்ச வேண்டிய அவசியமில்லை. 1722ஆம் ஆண்டுத் தேர்தல்களில்

டோரிகளும் யாகோபியரும் ஒருவரோடொருவர் அடிக்கடி போட்டி யிட்டனர். அதே ஆண்டில் சதிக்குற்றத்திற்காக அட்டர்பரி சிறையிலிடப்பட்டார். இதனை எல்லா டோரிகளும் யாகோபியர் எனக் கண்டிக்க வால்போல் பயன்படுத்திக்கொண்டார். கத்தோ லிக்கரும் விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ளாதவர்களும் தங்களது வரும்படியில் பவுன் ஒன்றுக்கு 5 ஷில்லிங் வீதம் தனிப் பட்டவரி செலுத்தவேண்டியிருந்ததால், கத்தோலிக்கரும் விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ளாதவரும் ஒடுங்கினர். கையூட்டுப் பெற்ற கெண்டால் கோமகளின் தூண்டுதலின்பேரில் பாலிங் புரோக்கை விடுவிக்க அரசர் விரும்பினர். அவருடைய வற்புறுத் தலுக்கு இணங்கி வால்போலும் பாலிங்புரோக் பிரபுவிற்கு மன்னிப்பு வழங்குவதற்கும் அவருடைய சொத்துக்களை விடுவிப் பதற்குமான வழிகளைச் செய்தார். ஆனால், அவருடைய பிரபுப் பட்டத்தை மீட்டுத் தர மறுத்தார். அவ்வாறு செய்யாமலிருந்திருந் தால் பிரபுக்கள் சபையில் அவருக்கு வலிமைமிக்க எதிரி ஒருவர் இருந்திருப்பார்.

1727 ஆம் ஆண்டில் முதலாம் ஜார்ஜ் ஹனோவருக்குச் செல்லும் வழியில் ஆஸ்னப்ரூக் (Osnabruck) என்னுமிடத்தில் மரணமடைந்தார். அப்போது வால்போலுக்குப் பேராபத்து வந்தது. ஏனெனில், இரண்டாம் ஜார்ஜ் தம்முடைய தந்தையின் ஆதரவாளர்களை அறவே வெறுத்தார். ஆயினும், அவரது ராணி யார் பகுத்தறிவு மிக்கவர். அதனோடு அரசர் தேர்ந்தெடுத்த சர் ஸ்பென்சர் காம்ப்டன் (Sir Spencer Compton) என்பவரின் திறமையற்ற தன்மை அரசர் வால்போலை நாடுமாறு செய்தது. மேலும், அரசரின் செலவுப்பணம் கணிசமான அளவிற்கு உயர்த்தப் பட்டதால் சிக்கல் தீர்ந்துவிட்டது. இங்ஙனம் ஆறு ஆண்டுப் போராட்டத்திற்குப் பின் வால்போல் பதினைந்து ஆண்டுகளுக்கு அதிகாரபீடத்தில் அமர்ந்திருந்தார்.

## சமகால நிகழ்ச்சிகள்

*1715* மூன்ருவது 'தடை நில' உடன்படிக்கை கையெழுத் தாதல்.

போப் எழுதிய 'Iliad'.

–*1774*. பதினைந்தாம் லூயியின் ஆட்சி.

*1716* துருக்கியர் ஹங்கேரியிலிருந்து இறுதியாகத் துரத்தப் படுதல்.

1717 ஜான் லா (John Law) ஃபிரான்சில் நிதி மந்திரியாதல்.
'பங்கோரியன்' (Bangorian) வாத எதிர்வாதம்.

1718 பாசரோவிட்ஸ் உடன்படிக்கை.
பாஸ்ஸரோ முனைப் போர்.
ஸ்வீடனின் மன்னர் பன்னிரண்டாம் சார்லஸின் மறைவு.

1719 ஸ்பெயினில் அல்பரோனி பதவியிலிருந்து நீக்கப் பெறல்.
டிஃபோ எழுதிய 'ராபின்ஸன் குரூஸோ' (Robinson Crusoe).

1721 நீஸ்டாட் (Nystad) உடன்படிக்கை.
ஃசார் (Czar) மன்னர் புனித சபையைக் (Holy Synod) கூட்டுதல்.

1722 மொராவியன் (Moravian) சங்கம் நிறுவப்பெறல்.
பாச்சினுடைய (Bach's) 'Fugues'.

1723 ஃபிரெஞ்சு அரசியலில் ஃபிளீயுரியின் (Fleury) ஆதிக்கம்.
வால்டேர் (Voltaire) எழுதிய 'Henriade'.
கிறிஸ்டோபர் ரென் (Christopher Wren) என்பவரின் மறைவு.

1724 காண்ட் (Kant) பிறப்பு.
பர்னெட் (Burnet) எழுதிய 'History of His Own Time'.

# 8. வால்போலும் பெல்ஹாம்களும், 1724–1754
## (Walpole and The Pelhams)

விக்கு ஆட்சியின் முப்பது ஆண்டுகள் கழிந்தன. வெளிப் பார்வைக்கு அந்த ஆட்சி பொதுவாகத் தன்னிறைவும் சுபிட்சமும் பெற்றதுபோல் காணப்பட்டாலும், இறுதிக்காலத்தில் புரட்சி, போர் ஆகியவைகளினால் சிதைந்தது. இறுதியில் வெடிப்பதற் குரிய முறையில் மேன்மேலும் பல நிகழ்ச்சிகள் ஒன்றுசேர்ந்தன. தொழிற் புரட்சி முன்னேறிக்கொண்டு வந்தது. சமூக அநீதி களினால் நாட்டின் பலம் குன்றியது. சமயத்துறையில் தோன்றிய அக்கறையின்மை மெதாடிசத்தினால் (Methodism) குலைந்தது. அயர்லாந்தும் அமெரிக்கக் குடியேற்றங்களும் சுயாட்சி வேட்கையால் பீடிக்கப்பட்டன. ஸ்காட்லாந்து, சீர்திருத்தம் வேண்டி நின்றது. பிரிட்டிஷ் வெளிநாட்டுக்கொள்கை, இறுதித் தீர்வினைத் தள்ளிப்போடுவதன்மூலமாக அமைதியை விலைக்கு வாங்குவதாக இருந்தது. விக்கு (Whig) அரசாங்கத்தின் தன்மை யையும், செயல்முறையையும் ஆழ்ந்து ஆராய்வதன்மூலமாக அத்தகைய ஆபத்துகளின் தன்மையை அறிந்துகொள்ள முடியும்.

விக்கு அரசாங்கத்தின் அதிகாரத்தை மிகைப்படுத்திக் கூறுதல் தகாது. அஃது ஏதோ தற்செயலாக நிகழ்ந்தது. காலத் தினால் மாற்றம் அடையக்கூடியது. யாகோபியர் எழுச்சியினால் இரண்டு டோரிகள் தற்காலிகமாகப் பதவியைவிட்டு விலகி இருந்தனர். மன்னருக்கும் விக்குகளை விட்டால் வேறு வழியில்லை. மேலும், வால்போலைத் தற்கால வழக்குப்படி ஒரு பிரதம மந்திரி என்று கருத இடமில்லை. ராணியார் இறந்த பிறகு வேல்ஸ் இளவரசரது எதிர்ப்பினால் வால்போலின் செல்வாக்குக் குறைந்து விட்டது. அரசியல் அமைப்புச் சட்டப்படியான அரசாங்கம் அப்போது தோன்றவில்லை. இரண்டாம் ஜார்ஜ் தம் விருப்பம் போலவே அமைச்சரைத் தேர்ந்தெடுத்தார். இருமுறை 1744ஆம்

ஆண்டிலும் 1757 ஆம் ஆண்டிலும் தமக்கு வேண்டியவர்களைக் கொண்டு கேபினெட்டை அமைக்க முயன்றார். திருச்சபை நியமனங்களிலும், படையிலும், அரண்மனையைச் சார்ந்த பதவிகளிலும் அவருடைய செல்வாக்கு மிகுந்து இருந்தது. வெளிநாட்டு விவகாரங்களிலும் அவர்தம் செல்வாக்கு மிகுந்திருந்தது. அவர் வெளிநாட்டு மன்னராகவும் இருந்ததனால் இது சாத்தியமாகியது. நாற்பத்தாறு ஆண்டு ஆட்சிக் காலத்தில் முதலாம் ஜார்ஜும், இரண்டாம் ஜார்ஜும் பதினெட்டு முறை ஹனோவருக்குச் சென்று வந்தார்கள். இவ்வாறு சென்று வந்ததில் பல இங்கிலாந்தின் நலன்களுக்குக் கெடுதல் விளைவிப்பனவாக இருந்தன.

மன்னருடைய செல்வாக்கும் பலவகையான ஆதரவும் காமன்ஸ் சபையிலுள்ள நாட்டுப்புற அங்கத்தினரிடையே, அரசாங்கத்தின்மீது அக்கறை உடையவரை உருவாக்கி ஒன்றாக வைத்திருப்பதற்குப் பயன்படுத்தப்பட்டன. எனவே, அரசாங்கம், ஒரு கூட்டுஆட்சியைப்போன்று இருந்தது. இதுவே ஓர் அரசியல் கட்சி வாழ்வதற்கான வசதி அளித்தது. புரட்சியின் நினைவுகள் மங்கிய காரணத்தால் விக்கு கட்சியும், டோரி கட்சியும் தங்களுடைய பழைய பொருளை இழந்தநிலையில் இருந்தன. அவைகளுக்குத் தனித்த வாழ்க்கை இருப்பதற்கில்லை. வால் போலுக்கும் பெல்ஹாம்களுக்கும் 'டோரி' என்று அழைக்கப் பெற்ற கட்சியின் எதிர்ப்பு மூன்றாம் வில்லியத்திற்கும் இரண்டாம் சார்லஸுக்கும் இருந்த எதிர்ப்பைப் போன்றதே. அது நாட்டுக் கட்சிக்கும் அரச கட்சிக்குமிடையே நடந்த சச்சரவுதான். அந்த டோரி கட்சியின் கொள்கையும் முன்னுள் இருந்ததைப் போலவே இருந்தது. இக்காலத்தில் நிலைப்படை வைத்துக்கொள்வதையும், மிகுந்த வரிகள் விதிப்பதையும், 'ஹேபியஸ் கார்பஸ்' (habeas corpus) ஒய்வு ஊதியம் பெறுவோர், தீர்வையாளர் ஆகியோரை விலக்கி வைப்பது போன்ற அரசாங்கத்தின் அத்து மீறிய செயல்களையும் இக் கட்சி கண்டித்தது. அதைப் போலவே ஹனோவிரியர் பணம் கொண்டு செல்வதையும், புறச் சமயத்தையும் (Dissent), நகரத்தில் உள்ள பணம் படைத்தவரையும் கண்டித்தது. பழமைப் பண்பியலான தடையும் அரசியலமைப்புச் சட்ட வழி வந்த நோக்கங்களும் சேர்ந்த இணைப்பு முதலில் தோன்றிய ரேடிகல்களுக்குக் (Radicals) கிடைத்தது. அப்படிப்பட்ட டோரியின் கொள்கை (Toryism) அரசாங்கத்தினுல் அசைக்க முடியாத ஸ்தானங்களில் அதிகமாக வாழ்ந்தது. நாட்டுப்புறங்களில் உள்ள பெரிய தொகுதிகளிலும், சில சமயங்களில் இரு நூறு ஆண்டுகளுக்கும் தொடர்ந்து ஒரே குடும்பத்தவரின் செல்வாக்கில் இருந்து பரம்பரையாக வந்த பரோக்களிலும் இந்நிலை இருந்தது.

குறிப்பாக, பிரிஸ்டல் கால்வாயின் வடக்கிலிருந்து ஸ்டா∴போர்டு ஷயர் (Staffordshire) வழியாக ஸ்காட்லாந்தின் போர்டர் வரை பரவி இருந்த அகன்ற பகுதியில் இது உண்மையாக இருந்தது.

புதிதாக ஆட்சிக்கு வந்தவர்கள் முன்பு இருந்தவர்களைக் காட்டிலும் சிறந்தவர்கள். இங்கிலாந்தைப் பொறுத்த வரையிலாவது மேம்பட்டவர்களாக இருந்தார்கள். இரண்டாம் ஜார்ஜ் வீண் பகட்டில் விருப்பமும் பேராசையும் மிகுந்து கொடுங்கோலராக விளங்கினர். இங்கிலாந்தைச் சார்ந்தனவற்றை விரும்பாது, ஹனேவிரிய காவலாளிகளையும், இன்பங்களையுமே பெரிதும் விரும்பினர். ஆயினும், அவர் ஆண்மையில் அரிமாவை ஒத்தவர். ஆங்கிலத்தில் அழகாகப் பேசும் ஆற்றல் படைத்தவர். அறிவறிந்த வயதிலேயே இங்கிலாந்து நாட்டைப்பற்றி நன்கு அறிந்துகொண்டார். தமது விருப்பு வெறுப்பிற்குட்பட்டே தமக்கு வேண்டியவற்றைத் தேர்ந்தெடுத்தார் எனினும், ஒருவரை ஒரு முறை நம்பினல் அவரிடம் இறுதிவரை உண்மையாகவே நடந்துகொண்டார். அவர் அநேகமாகத் தம் மனைவியின் சொல்லுக்கு மாற்றங் கூருதவர். எனவே, ராணியாரின் மறைவு, மன்னருக்கும் வால்போலுக்கும் பேரிடியாக இருந்தது.

எனினும், தமது சிறந்த ஆற்றல் காரணமாக, சர் ராபர்ட் வால்போல் இரண்டாம் ஜார்ஜின் ஆட்சி தொடங்குமுன்பே உச்ச நிலைக்கு வந்துவிட்டார். அவருக்கு முன்பும் பின்பும் யாரும் காணுத அளவிற்கு நீண்ட காலத்திற்கு—இருபத்தோரு ஆண்டுகள்—பிரதம மந்திரியாகப் பணியாற்றினர். அவர் ஈடனில் (Eton) தம்முடன் படித்த பாலிங்புரோக்கைக் காட்டிலும் முரட்டுத்தனம் உடையவர். ஆயினும், வலிமைமிக்கவராகவும் நேர்மை மிகுந்தவராகவும் திகழ்ந்தார். அவர் தமது பேச்சைக் கேட்போரிடம் இழிவாகப் பேசியதும், காமக்கிழத்தியாக இருந்த ஒருத்தியையே மணந்து கொண்டதும், பொது வாழ்வையே களங்கப்படுத்தும் கையூட்டு வாங்கியதும் அமைச்சராக இருந்ததற்கு அழகல்ல என்ருலும், அவர் தம் கொள்கை ஒருசில கோட்பாடுகளில் பற்றுறுதி கொண்டதாக இருந்தது. பிராட்டஸ்டென்டினரே பட்டத்திற்கு வருதல், விக்கு கட்சியின் மேன்மை, ஐரோப்பிய நலனைக் காட்டிலும் பிரிட்டிஷ் மக்களின் நலனில் அக்கறை ஆகியவை அவர் கொண்ட குறிக்கோள்களாக இருந்தன. அவர் திறமைசாலியாக இருந்ததோடு ரத்தம் சிந்துவதில் வெறுப்பு, ஐயத்திற்கு உரியனவற்றில் தலையிடாது இருத்தல் ஆகிய சில நேர்த்தியான பண்புகளையும் பெற்று இருந்தார். சோதனைச் சட்டத்தை (Test Act) ஒழிக்கவேண்டும் என்று வற்புறுத்திய புறச் சமயிகளுக்கும்

(Dissenters) அமெரிக்காவில் புதிய வரிகளைப் புகுத்தவேண்டுமென்று ஆலோசனை கூறிய அதிகாரிகளுக்கும் அவர் அளித்த பதில், தலையிடாது இருப்பதே தகுந்த வழி என்பதாகும். சிக்கல் மிகுந்த இந்தப் பிரச்சினைகளில் தலையிடாது தவிர்த்தார். 1727-லிருந்து பதவி ஏற்கும்போது ஆங்கிலிகச் (Anglican) சமயச் சடங்குகளைச் செய்ய மறந்த 'கருத்து வேறுபாட்டினருக்கு' உதவி செய்ய வேண்டி நஷ்ட ஈட்டுச் சட்டத்தை (Act of Indemnity) ஒவ்வோராண்டும் இயற்றிவந்தார். அதைப் போலவே நாவாய்ச் சட்டத்தை (Navigation Act) மீறிய அமெரிக்கரைக் கண்டிக்கத் தீவிர முயற்சி ஒன்றும் எடுக்கவில்லை. ஆயினும், அவர்தம் நேர்நிலையான பண்புகள் மெய்யானவை. அவர் பாராளுமன்ற விவாதங்களில் தன்னிகரற்று விளங்கினார். காபினெட்டின்மீது அவருக்கிருந்த செல்வாக்குத் தவறாததாகவும், ஓரளவு கருணையற்றதாகவும் இருந்தது. அவரது ஆளுமையும் (personality) அக்காலச் சூழ்நிலையும் சேர்ந்து அவரை இங்கிலாந்தின் தற்கால அரசாங்கத்தின் அடிகோலியாக மாற்றி இருக்கின்றன. அரசியல் கட்சி அடிப்படையிலேயே அதிகாரத்தைப் பெருக்கிக்கொண்ட முதல் அமைச்சர் அவர்தான். காமன்ஸ் சபையை ஆதிக்கம் செலுத்தும் கூட்டாளியாகச் செய்த முதல்வரும் அவரே. அவர் திறந்தவெளி விளையாட்டுக்கள், வீடுகள், மது ஆகியவற்றில் நாட்டம் கொண்ட பழங்குடியைச் சார்ந்த நார்ஃபோக் (Norfolk) செல்வந்தரின் சுவையோடு தொழில் யுகத்திற்குத் தேவையான பொது அறிவையும் இணைத்தார்.

இப் பண்பின்மீது ஆரம்ப கால மதிப்பும் மங்காத புகழும் சார்ந்து இருந்தது என்றாலும் அவர் சிறப்பாக ஓர் அரசியல்வாதியாகவே இருந்தார். நாட்டுக்கடனை அடைப்பதற்காக்கடன் கழிவு நிதி (sinking fund) ஒன்றை வைத்திருக்கும் கொள்கையைப் போற்றினாலும், பணமுட்டு மிகுந்த காலத்தில் அந் நிதியிலிருந்து முறையாகப் பணமெடுத்துக்கொண்டார். மனநிறைவு பெற்ற நாட்டுப்புற நிலக்கிழார்கள் அரசியல் காரணங்களுக்காக முக்கியமானவர்கள் ஆகையால், வால்போல் நிலவரியைப் போர்க்கால வரம்பாகிய நான்கு ஷில்லிங்குகளிலிருந்து ஒரு ஷில்லிங்காகக் குறைத்தார். ஆயினும் ஏழை மக்களுக்குச் சுமையாக இருந்த உப்புக் கலால் வரியை (excise duty) நீக்கவில்லை. நாட்டுக்கடனைக் குறைப்பதற்கான பொது முறையான திட்டமொன்றையும் அவர் கொண்டுவரவில்லை. எனினும் வாணிப வளர்ச்சிக்கு அரிய சேவை செய்தார், அக்காலத்தும் மெர்க்கன்டலிஸம் (Mercantilism) இங்கிலாந்தின் வாணிபக் கொள்கையாக இருந்தது. நாட்டின் வளம் ஏற்றுமதியில் சாதகமான நிலையைப்பொறுத்தே இருந்தது. ஒரு குறிப்பிட்ட வியாபாரத்தின் மேன்மை அதனால் ஏற்படும்

தொழில் பெருக்கத்தைக்கொண்டு மதிப்பிடப்பட்டது. இக் கோட்பாடுகளை ஓரளவு நிலையாக வால்போல் பயன்படுத்தினர். அரசியல் முன்னிலை மீட்சிக்குப் (Restoration) பிறகு முதன்முறையாகச் சுங்க வரி விகிதங்களை முழுவதுமாக மாற்றி அமைத்தார். 1721ஆம் ஆண்டில்மட்டும் நூற்றுக்கும் மேற்பட்ட பொருள்களின்மீது விதிக்கப்பட்ட ஏற்றுமதி வரியை நீக்கினர். அதே சமயத்தில் கச்சாப் பொருள்களின்மீது சுமத்தப்பட்ட இறக்குமதி வரிகளைக் குறைத்தார். மேலும், குடியேற்ற நாடுகளில் இருந்து பிரிட்டனுக்குமட்டுமே அனுப்பப்பெற வேண்டுமெனக் குறிப்பிடப் பெற்ற பொருள்களின் பட்டியலைச் சிறிது குறைத்தார். வருவாயினைப் பெருக்க எண்ணிய வால்போல், கலால் வரிப் பெருக்கம் சிறந்த கருவி என உணர்ந்தார். இப் பழக்கத்தை இங்கிலாந்து டச்சுக்காரரிடமிருந்து பெற்று விரிவுபடுத்தினர். பொருள்களின் மீது துறைமுகத்திலன்றி அவைகள் வெளியேறும் கிடங்குகளில் (warehouse) வரி விதிப்பது சிறந்தது என உணர்ந்தார் முதலமைச்சர். அதன்மூலமாகக் கரையோரப் பகுதியில் கலகமும் ஊழலும் மலிவதற்குக் காரணமாக இருந்த கள்ளக்கடத்தலைத் தடுக்க முடியும் என்று எண்ணினர்.

மேலும், அதன் மூலமாகப் பண்டங்களை ஏற்றிச் செல்லும் (carrying trade) வியாபாரத்திற்கு உதவ முடியும். மேலும், நுகர்விற்கு ஏற்றவாறு வரிவிதிப்பைச் சரிப்படுத்த முடியும். கிடைக்கின்ற புள்ளி விவரங்களைக்கொண்டு இங்கிலாந்து, வேல்ஸ் ஆகியவற்றின் சிறிய மக்கள் தொகையான ஆறு மில்லியனை வைத்துப் பார்க்கும்பொழுது வாணிபம் வேகமாக வளர்ந்தது எனலாம். 1720ஆம் ஆண்டிற்கும் 1740ஆம் ஆண்டிற்குமிடையே ஏற்றுமதி ஏறக்குறைய மூன்றில் ஒரு பங்கு உயர்ந்தது.

ஆனல், ஊதியம் பெறுவோரைக் காக்க எந்தவித நடவடிக்கையையும் வால்போல் எடுக்கவில்லை. குடியேற்ற நாடுகளின் துயரங்களைப் போக்க முன்வரவில்லை. சில சமயங்களில் வலிமை மிக்கவர்களின் நலனைப் பாதுகாக்கும் முறையில் செயலாற்றினர். உதாரணமாக, மேற்கு இந்தியத் தோட்டக்காரர்களைத் திருப்தி செய்வதற்காக 1733ஆம் ஆண்டில் வெல்லப்பாகுச் சட்டம் ஒன்றை (Molasses Act) இயற்றி பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் வாழ்ந்த மக்கள் சர்க்கரைக்கு அதிக விலை கொடுக்குமாறு செய்தார். ஆள் குழு நலன்களைக் காப்பான் வேண்டி, ஊழல்களைக் களைாமல் விட்டார். சிறுபான்மையினரின் நலனைப் பேண மறந்தார். எனவே, சிறுகச் சிறுகப் பல பக்கங்களிலிருந்தும் தவிர்க்க முடியாத எதிர்ப்பு வளர்ந்துவந்தது.

பாராளுமன்றத்தில் இருந்த டோரிகள் உணர்ச்சியற்ற வில்லியம் ஷிப்பன் (William Shippen) தலைமையிலிருந்த சிறிய யாகோபியப் பிரிவினராகவும், ஸர் வில்லியம் விண்ட்ஹாம் (Sir William Wyndham) தலைமையில் பெரும் பிரிவினராகவும் பிரிந்து நின்றனர். விண்ட்ஹாமின் கவர்ச்சிமிக்க தோற்றமும், சிறந்த நாட்டுப் பற்றும் காமன்ஸ் சபையினரைக் கவர்ந்தன. அதனால், அவர்களுடைய அன்பிற்கும் ஆதரவிற்கும் உரியவரானார். ஆனால், பிறருடைய உதவியின்றி டோரிகள் பெரும்பான்மைக் கட்சியாக முடியாது. எனவே, பாலிங்புரோக் (Bolingbroke) எதிர்க்கட்சியினரான விக்குகளோடு கூட்டுச்சேரும் நோக்கம் கொண்டார். அக் கட்சியின் தலைவராக இருந்த நகைச்சுவையுடைய, ஆனால் ஆற்றலற்ற புல்டினி (Pulteney) யோடு இணைந்து, ‘கிராஃப்ட்ஸ்மேன்’ (Craftsman) என்னும் பத்திரிகையை வெளியிட்டார். இப் பத்திரிகையில் ஆரம்ப காலத்தில் ‘அரசியல் கட்சிக் கட்டுரைகள்’ (Dissertations on Party) வெளியாயின. பிற்காலத்தில் ‘தேச பக்தியுள்ள அரசன்’ (Patriot King) எனும் நூலுக்கான வித்துகளும் இடம் பெற்றன. அங்கே அவர் ஹார்லி (Harley) யிடமிருந்து தாம் அறிந்தவற்றை இளைய சமுதாயத்திற்குப் பயன்படும் வகையில் புது மெருகிட்டு வெளியிட்டார். தெய்வ உரிமைக் கோட்பாட்டை முழுமையாக நீக்கிப் புரட்சியை ஏற்றுக்கொண்டார். இவற்றின் மூலமாக டோரி கொள்கையை (Toryism) புதுப்பிக்க முயன்றார். யாகோபியக் (Jacobitism) கொள்கை இறந்து ஒழிந்தாலும், அதன் காரணமாக டோரிகளுக்கு எதிராக விக்குகள் கொண்டிருந்த பொய்க் காரணம் நீங்கிவிட்டதாலும், கட்சிக்கு அப்பாற்பட்ட ஆட்சியை ஏற்படுத்த எல்லோரும் மன்னரோடு ஒத்துழைத்துச் சிறந்த கோட்பாடுகளைக் கொண்ட அரசியலமைப்பைத் திரும்பக் கொண்டு வரவேண்டுமென்னும் முயற்சியில் ஈடுபட்டார். வால் போலினுடைய ஊழல்களையும், ஏழாண்டுப் பாராளுமன்றங்களையும் (Septennial Parliaments), நிலைப் படைகளையும் நீக்குவதன் மூலமாக உரிமைகளைத் திரும்பப் பெறவேண்டுமென்றார். வாக்குரிமையை விரிவுபடுத்துவதன்மூலமாகவும், ராட்டன் பரோக்களை (rotten boroughs) ஒழிப்பதன்மூலமாகவும் காமன்ஸ் சபையினை நாட்டு மக்களின் கருத்துகளைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகச் செய்ய வேண்டுமென்றும் எண்ணினார்.

ஆனால், டோரிகளால் ‘ஜூடாஸ்’ (Judas) என்று கருதப்பெற்ற அவருடைய வார்த்தைகளுக்கு அவர்கள் செவி சாய்க்கவில்லை. டோரி திருச்சபைக் குழுவினரையும், நகர விக்குகளையும் ஒன்றுபடுத்துவது என்பது எளிதானதல்ல. புல்டினைப் பொறுத்தவரையில் அவருடைய நோக்கம் கைகூடாத பேராசையின் அடிப்

படையிலேயே இருந்தது. அவர் உண்மையில் டோரி திட்டங்களுக்குப் பரிவு காட்டாத விக்காகவே வாழ்ந்தார். அத் திட்டம் பதினெட்டாம் நூற்றாண்டில் அரசாங்கத்தின் அடிப்படைகளையும், ஏழாண்டுப் பாராளுமன்றங்களையும், பதவியில் உள்ளவரையும் மாற்றியமைத்தது. 1733ஆம் ஆண்டு 'கலால் வரி'யை மது, புகையிலை ஆகியவற்றுக்கும் விரிவுபடுத்தும் மசோதா ஒன்றை வால்போல் கொண்டுவந்தார். அது கடு முறைமை வாய்ந்த வழிகளை எதிர்க்கும் அனைவரையும் நகர ஆள்குழு நலங்களோடும் கள்ளக்கடத்தல் செய்பவரோடும் இணைப்பதாக இருந்தது. ஆயினும் இவ்வாறு வால்போல் அளித்த வாய்ப்பினை எதிர்க்கட்சியினர், தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள முடியவில்லை. வன்முறையான ஆரவாரத்தினாலும், படையில் இணக்கமுறிவு ஏற்படும் என்ற அச்சத்தினாலும், பிரதம மந்திரியை மக்கள் கூட்டமாகத் தாக்கியதாலும் அம் மசோதா கைவிடப்பட்டது.

1734ஆம் ஆண்டில் நடந்த தேர்தலில் வால்போல் கட்சியின் பெரும்பான்மை நிலைத்து இருந்தது என்றாலும், கலால் வரியை எதிர்த்த சிலரைப் பதவியிலிருந்து நீக்கியதால் சில செல்வாக்கு மிகுந்தவர்கள் எதிர்க்கட்சியோடு இணைந்தனர். அவர்களில் ஒருவர் முதலாம் ஜார்ஜின் காமக்கிழத்தியின் மருமகனும், திறமை மிக்க செல்வந்தருமான செஸ்டர்ஃபீல்டு (Chesterfield) ஆவார். அவருடைய அரசியல் நிபுணத்துவமும், அயல் நாட்டு விவகாரங்களை எளிதில் புரிந்துகொள்ளும் திறனும், கடிதம் எழுதுபவர் என்னும் புகழுக்கு முன் மங்கிவிட்டன. மற்றொருவர் மார்ல்பரோவின் (Marlborough) தலைவர்களில் ஒருவராக இருந்த கோபாம் (Cobham). அவர் 'தேசபக்தர்கள்' (Patriots) அல்லது 'பையன்கள்' (Boys) என்று அழைக்கப்பட்ட உறவுமுறை கொண்ட இளைஞர் கூட்டத்தின் தலைவராக இருந்தார். அக் கூட்டத்தில் கிரன்வில், ஜார்ஜ் லிட்டல்டன் (George Lyttelton), வில்லியம் பிட் ஆகியோர் இருந்தனர். அவர்கள் நிலையான விக்குகளாகவும், பிராட்டஸ்டென்டுகளாகவும் இருந்தனர். பேரவாக் கொண்டவர்களாகவும் உயர்மதி படைத்தவர்களாகவும் விளங்கினர். தங்களுடைய நலத்தையும், பிரிட்டனின் புகழையும் காப்பதில் பேரார்வம் கொண்டிருந்தனர். ஹனோவரை வெறுப்பவர்களாவும், ஊழலுக்குப் பகைவராகவும் விளங்கினார்கள். மூன்றாவது சக்தியாகத் தோன்றியது ஆர்கைல் (Argyll), ஸ்டேர் (Stair) ஆகியோரின் தலைமையில் தோன்றிய ஸ்காட்லாந்தியர் குழுவாகும். ஸ்காட்லாந்துப் பிரபுக்கள் தேர்தலில் தமக்கு வேண்டியவரையே வால்போல் புகுத்தியது அவர்களுக்கு ஆத்திரத்தை மூட்டியது. வால்போலின் அரசாங்கம் ஸ்காட்லாந்தில் எவ்வளவு தூரம்

வெறுக்கப்பட்டது என்பதனை விளக்குவதுபோல 1736-ல் ஒரு நிகழ்ச்சி நடந்தது. எடின்பரோ (Edinburgh) நகரத்துக் காவற்படைத் தலைவராக இருந்த போர்டியஸ் (Porteous) என்பவர், ஒரு செல்வாக்கு மிகுந்த கள்ளக்கடத்தல்காரனை விடுவிப்பதற்காக வந்த மக்கள் கூட்டத்தின்மீது சுடுமாறு உத்தரவிட்டதன் விளைவாகச் சிலர் கொல்லப்பட்டனர். ஆத்திரமடைந்த மக்கள் போர்டியஸை உயிருடன் தோலுரித்தனர். பொதுவாகப் பேசுமிடத்து இறுதியில் திறமைமிக்க அங்கத்தினரான ஸர் ஜான் பர்னார்டின் (Sir John Barnard) தலைமையில் நகரத்தார்மட்டுமன்றி அறிவும் ஆடம்பரமும் கொண்டவர் அனைவரும் வால்போலுக்கு விரோதமாக இருந்தனர். அகஸ்டன் சங்கத்தில் (Society of Augustans) எஞ்சி இருந்த குயின்ஸ்பரியைச் சார்ந்த ஹைடு கோமகள் (Hyde Duchess of Queensberry), ஜான் கே (John Gay) ஆகியோர் அவர்தம் எதிரிகளில் சிலர். கே எழுதிய 'பிச்சைக்காரரின் இசை நாடகம்' (Beggar's Opera) அரசாங்கத்தை அதிகமாகக் கிண்டல் செய்து தாக்கியது. ஹென்றி ஃபீல்டிங் (Henry Fielding), சாமுவேல் ஜான்சன் (Samuel Johnson) போன்ற இளைய சமுதாயத்தினரும் அவர்களோடு சேர்ந்துகொண்டனர். பிரதம மந்திரி தம்முடைய பத்திரிகைகள்மூலமாக மட்டுமன்றி வேறு வழிகளிலும் இத்தகைய எழுத்தாளர்களின் எதிர்ப்பை அழிக்க முற்பட்டார். 1737ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பெற்ற சட்டம் ஒன்று நாடகங்களின்மீது கட்டுப்பாடு விதிக்கும் உரிமையை அரண்மனையின் முதன்மைப் பிரபுவிற்கு (Lord Chamberlain) வழங்கியது.

ஆனால், அப்போது இருந்த நிலையில் எதிர்க்கட்சியினர் வேல்ஸ் இளவரசரைப் பெயரளவிற்குத் தலைவராக வைத்திருந்தது, வால்போலுக்குப் பேராபத்தாக இருந்தது. எத்துணைதான் ஆற்றல் குன்றியும் இழிவானவராகவும் இருந்தபோதிலும், இளவரசர், பட்டத்துக்கு வாரிசானவர் என்ற முறையில் அரசியல் ரீதியாக மிகுந்த பயனுள்ளவராக இருந்தார். எப்படியும் அவர் டோரிகளை யாகோபியர் எனும் பழியிலிருந்து விடுவிக்கமுடியும். பிரடரிக்குக்குச் சில உண்மையான துன்பங்கள் இருந்தன. அவர் ஹனோவரில் தனியராக விடப்பெற்றார். அவருக்குப் பணத் தட்டுப்பாடு இருந்தது. தாம் நினைத்த மங்கையை மணந்துகொள்ள முடியாமல் ஏமாற்றமடைந்தார். தம்முடைய தந்தையால் தேர்ந்தெடுக்கப்பெற்ற ஸாக்ஸி-கோதர் (Saxe-Gotha)வைச் சேர்ந்த அகஸ்தாவை மனைவியாக ஏற்றுக்கொண்ட பிறகு, தாராளமான படிகளுக்காக எதிர்க்கட்சியினர் பக்கம் திரும்பினார். 1737-ல் தமது தந்தையுடன் வாழ விரும்பாமல், தம் மனைவிக்கு ஆபத்து

வருமென்பதையும் பொருட்படுத்தாமல் பிள்ளேப் பேற்றிற்காக வெளியேற்றிக் கொண்டுசென்று கீவிலும் (Kew) லீஸெஸ்டர் மாளிகையினும் (Leicester House) வாழுமாறு செய்தார். நவம்பரில் ராணியார் இறந்தது, வால்போலுக்கு இருந்த சிறந்த கேடயம் மறைந்ததுபோலாயிற்று. மேலும், அப்போது அவருடைய அயல் நாட்டுக்கொள்கை காரணமாகக் காபினெட்டில் பிளவு ஏற்பட்டது.

1721-ல் ஸ்டான்ஹோப் (Stanhope) இறந்து பத்து ஆண்டுகள் கழிந்தபோதும், உண்மையான ஐரோப்பியச் சமாதானம் தோன்றவில்லே. இவ்வாண்டுகளேச் சமாதானமும் நிலவாமல் போரும் அறிவிக்கப்படாத ஆண்டுகள் என விக்கு கட்சியைச் சார்ந்த ஹெர்வி பிரபு (Lord Hervey) விவரித்தார். பாதுகாப்பாளராக இருந்த ஆர்லியன்ஸும் (Orleans), அவர்தம் ஆலோசகரான டுபாயும் (Dubois) இறந்ததனுல் ஃபிரான்ஸ், சொந்த நலன் காரணமாக இங்கிலாந்திடம் பற்றுறுதியோடு இருக்கவேண்டுமென்ற நிலே மாறியது. எனவே, அது ஸ்பெயி ஞேடு இயற்கையிலமைந்த இன உறவு கொண்டாட ஆரம்பித்தது. அதன் பயனுக ஜிப்ரால்டரைத் தனக்குத் தருவதாக ஜார்ஜ் வாக்களித்திருந்தார் என்று குற்றஞ்சாட்டிய ஸ்பெயினே ஃபிரான்ஸ் ஆதரித்தது. பிற்காலத்தில் பதினேந்தாம் லூயியின் மனேவியாக வருவதற்கென்று ஒரு ஸ்பானிய இளவரசியை அனுப்பி வைத்தனர். லூயியின் ஆசிரியராக இருந்து இப்போது பிரதான அமைச்சராக விளங்கிய கார்டினல் ஃபுலுயரி (Cardinal Fleury), அறிவாற்றல் மிகுந்தவராகவும் உறுதியான ராஜதந்திரியாகவும் திகழ்ந்தார். அவர் சண்டைக்குப் பதில் சமாதானத்தை விரும் பினுர் என்ருலும் ஃபிரான்ஸினுடைய குறிக்கோள்களே மறந்து விடவில்லே. பிரிட்டனின் ஆதிக்கத்தைக் குலேக்கவே முற்பட்டார். இதற்கிடையில் எலிசபெத் ஃபார்னஸ் (Elizabeth Farnese) தம் முடைய மைந்தர்களுக்கு இத்தாலிய நிலங்களேப் பெற்றுத் தருவதில் தீவிரமாக இருந்தார். அதைப் பேரரசர் சார்லஸ் வன்மையாக எதிர்த்தார். அவர் இங்கிலாந்தின்மீதும் ஹாலந்தின்மீதும் விரோதம் பாராட்டினுர். அதற்குக் காரணம் கிழக்கு நாடுகளுடன் வியாபாரத்தைப் பெருக்கிக்கொள்ள ஏற்படுத்திய ஆஸ்டன்ட் கம்பெனியை (Ostend Company) அந் நாடுகள் அழிக்க முயன்றன என்பதுதான். பால்டிக்கில் தலே யிட்டதனுலும், பிராட்டஸ்டென்டுகளுக்கு ஆதரவாக இருந்தமை யாலும், பிரஷ்யாவோடு உறவுகொண்டதனுலும் சார்லஸ் ஹனே விரியரிடம் பகைமை பாராட்டினுர். அதுபோது மகா பீட்டர் (Peter the Great) இறந்துவிட்டார் என்ருலும் ருஷ்யா ஒரு வலிமைமிக்க சக்தியாக விளங்கியது. அது பிரஷ்யாவிற்குப் பக்கவாட்டிலிருந்து

வரும் பேரிடியோ என்று தோன்றியது. அது ஆஸ்திரியாவை ஈர்க்கக்கூடியனவும் போலந்தைத் துண்டாடக் கூடியனவுமான திட்டங்களை உருவாக்கிவந்தது.

வெளிநாட்டுக் கொள்கையை உருவாக்கும் பொறுப்பினை ஏற்ற டவுன்ஷெண்ட் (Townshend) ஸ்டான்ஹோப்பைப்போலவே முன் கோபத்தையும், ஹனேவிரியரை ஆதரிக்கும் குணமும் பெற்றிருந்தார். ஆனால், அவரிடம் ஸ்டான்ஹோப்பிடமிருந்த கவர்ச்சி இல்லை. அதைத் தவிர அவர் அந்நியரிடம், குறிப்பாக ஆஸ்திரியரிடம் வெறுப்புக்கொண்டிருந்தார். 1725-ல் ஸ்பெயினும் ஆஸ்திரியாவும் தங்களுக்கு நேர்ந்த பொதுத் துன்பங்கள் காரணமாகத் தங்களுக்கிடையிலிருந்த பூசல்களை மறந்து ஒன்றாக இணைந்தன. ஸ்பெயினை இழிவுபடுத்தும் வகையில் ஸ்பானிய இளவரசியை ஒதுக்கிவிட்டுப் பதினைந்தாம் லூயிக்குப் போலந்து நாட்டுப் இளவரசியை மணமுடித்து வைத்ததால் ஸ்பெயின் அத்தகைய முடிவிற்கு வந்தது. ஜிப்ரால்டரையும் மைனார்க்காவையும் ஸ்பெயினுக்கு மீட்டுத் தருவதாக ஆஸ்திரியா வாக்களித்தது. அதற்குப் பிரதியாக ஸ்பெயின் வாணிபச்சலுகை வழங்கவேண்டும். இந்த ஏற்பாடுகளில் ஸ்டூவர்ட் ஆட்சியை மீட்கும் முயற்சியும் இருந்ததாக நம்பப்படுகிறது. அதே சமயத்தில் இத்தாலியின் பிற்காலத்தை உருவாக்கும் வகையில் ஹாப்ஸ்பர்க்-போர்போன் (Hapsburg-Bourbon) மணங்களைத் திட்டமிடுமாறு எலிஸபெத் ஃபார்னஸிக்கு ரிப்பர்டா (Ripperda) என்னும் டச்சுக்காரர் யோசனை கூறினார்.

வால்போலின் மனநிலைக்கு மாறான எதிர்த்திட்டம் ஒன்றை வகுப்பதில் டவுன்ஷெண்ட் முனைந்தார். 1725ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஹனேவிரியர் உடன்படிக்கையின்படி பிரிட்டன், ஃபிரான்ஸ், பிரஷ்யா ஆகிய மூன்று நாடுகளும் பாதுகாப்பு ஒப்பந்தம் ஒன்றைச் செய்துகொண்டன. சிறிய நாடுகளுக்கு ஏராளமாக உதவி மானியங்கள் வழங்கப்பட்டன. பெல்ஜியத்தைக் கூறு போடுவதைப்பற்றி டவுன்ஷெண்ட் பேசிக்கொண்டிருந்தார். ஆனால், ஸ்பானியர் ஜிப்ரால்டர் முற்றுகையைத் தொடங்கியபோதிலும் மறுமுறையும் பெரும் போர் ஒத்திவைக்கப்பெற்றது. மத்திய தரைக்கடல் பகுதியில் பிரிட்டனின் கடல் வலிமையின் எதிரே நிற்கமுடியாத அளவிற்குப் பேரரசர் வலிமைகுன்றி இருந்தார். அதேசமயத்தில் சண்டையினைத் தவிர்க்கவேண்டுமென்ற ஆணை இருந்தபோதிலும், நோயினால் கப்பலாட்களில் பெரும்பாலோர் இறந்தநிலையிலும், ஹோசியர் (Hosier) தலைமையிலிருந்த பிரிட்டிஷ் கடற்படை மெயினில் (Main) உள்ள போர்டோ பெல்

லோவை (Porto Bello) முற்றுகையிட்டது. போரினைத் தவிர்ப்பதில் வால்போல் அக்கறை காட்டினர் எனினும் உண்மையில் அவர் பிரிட்டிஷ் நலனுக்குமட்டும் அனுசரணையாக இருக்கும் போர் எதையும் விரும்பவில்லை. ஆஸ்திரியாவிற்கும் ஸ்பெயினுக்கு மிடையே தற்காலிகமாக ஏற்பட்டு இருந்த கூட்டினைச் சாமர்த்திய மாக முறித்தார். 1729ஆம் ஆண்டில் ஏற்பட்ட செவில் (Seville) உடன்படிக்கையின்படி ஸ்பானியப் படைகள் பார்மாவையும் (Parma), டஸ்கனியையும் (Tuscany) கைப்பற்றிக்கொள்வதற்கு பிரிட்டனுக்கும் ஃபிரான்சுக்கும் இணங்கின. ஸ்பெயின் ஜிப் ரால்டர் பிரச்சினையைக் கைவிட்டது. ஆனல், வால்போல் வற் புறுத்தியவாறு போரின்றியே இந்த ஒப்பந்தத்தின் உரிமைக் கட்டுப்பாடுகளை ஆஸ்திரியா ஏற்குமாறு செய்து நடைமுறையில் கொண்டுவருவது எப்படி என்பதுதான் பிரச்சினையாக இருந்தது. சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்பதில் வால்போல் டவுன்ஷெண்டோடு வாதிட்டு வெற்றியும் பெற்றார். 1730ஆம் ஆண்டில் டவுன்ஷெண்ட் ராஜினமா செய்தார். 1731ஆம் ஆண்டில் வியன்னு உடன்படிக்கையின்படி ஒப்பந்த நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ளப் பேரரசர் சம்மதித்தார். அதன்படி ஆஸ்டண்டு கம்பெனியைப் பேரரசர் கைவிடுவது என்றும் அதற்குப் பதிலாக அவருக்குப்பின் அவரது மகளான மேரியா தெரீஸாவைப் (Maria Theresa) பட்டத்திற்குரியவளாகச் செய்வதற்காக உருவாக்கப் பெற்ற பேரரசக் கட்டளைக்கு (Pragmatic Sanction) பிரிட்டன் உறுதியளிக்க வேண்டுமென்று ஆகியது.

இங்ஙனம் ஸ்டான்ஹோப்பின் திட்டம் நிலைநாட்டப்பட்டது போன்று தோன்றினலும், உண்மையில் அவ்வாறு நடைபெற வில்லை. ஆழ்ந்த பிரச்சினைகள் எதுவும் தீர்க்கப்பெறவில்லை. இத்தாலி, ஆஸ்திரியப் பேரரசு ஆகியவற்றின் எதிர்காலம் நிர்ணயிக்கப்படவில்லை. வலிமை குன்றி இறங்கு முகத்திலிருந்த ஹாலந்து, சமாதானத்தை விரும்பி நேச உடன்பாட்டிலிருந்து விலகிக்கொண்டது. ஒவ்வொரு கட்டத்திலும் விருப்பமின்றியே ஃபிரான்சு செயலாற்றிவந்தது. பிரிட்டனைப் பகை நாடாகக் கருதும் கூட்டமொன்று பாரிசில் வளர்ந்துகொண்டேவந்தது. பால்கன் நாடுகளிலும் மத்தியத்தரைக் கடலிலும், ஆஸ்திரியாவும் ரஷ்யாவும் தங்கள் செல்வாக்கு எல்லையை விரிவுபடுத்த முனைந்தன. அப்போது குடியேற்றப் போட்டி இருந்தபோதிலும் ஃபிரான்ஸ் வாளாவிருக்குமென்ற தவருன எண்ணம் பிரிட்டிஷ் கொள்கையில் காணப்பட்டது.

பின்வந்த ஆண்டுகள் இதனை நிரூபித்தன. உள்நாட்டு எதிரிகளை அடக்குவதில் வால்போல் தன் முழு கவனத்தையும்

செலுத்திய காலத்தில் ஃபிரெஞ்சுக்காரர் மாட்ரிட்டிலும் (Madrid) ஸ்டாக்ஹோம் (Stockholm), வார்ஸா (Warsaw), கான்ஸ்டான்டி நோபிள் (Constantinople) ஆகிய தலை நகரங்களிலும் தம்முடைய செல்வாக்கினைப் புதுப்பித்துக்கொண்டனர். ஹாப்ஸ்பர்கினரை (Hapsburgs) அடக்க எப்போதும் இச் செல்வாக்கினைப் பயன் படுத்திக்கொண்டனர். இந்த நிலையைச் சோதனை இடுவது போன்று 1733-ல் போலந்து வாரிசுரிமைப் போர் வந்து சேர்ந்தது. இப் போரில் ஆஸ்திரியாவும் ரஷ்யாவும் தங்களுடைய ஆளான ஸாக்ஸானியப் பண்ணையாள் (Saxon vassal) ஒருவரை ஆதரித்தனர். தங்கள் நாட்டு மன்னரின் மாமனாராகிய ஸ்டானிஸ் லாஸ் (Stanislaus) என்பவரின் கட்சியை ஃபிரெஞ்சுக்காரர் ஆதரித் தனர். போலந்தைப்பற்றியோ, ஸ்டானிலாஸைப்பற்றியோ ஃபிரெஞ்சுக்காரர் அக்கறை கொண்டு இவ்வாறு செய்யவில்லை. ஆஸ்திரியாவிற்கு எதிராக ஸ்பெயினையும் சார்டீனியாவையும் போரில் புகுத்தவேண்டுமென்பதுதான் அவர்களின் குறிக் கோளாக இருந்தது. அவர்கள் பெல்ஜியத்தைத் தாக்குவதில்லை என்று வாக்குறுதி தந்து உரமற்ற டச்சுக்காரரை ஆஸ்திரியரிட மிருந்து பிரித்துவிட்டனர். ஜிப்ரால்டரை மீட்டு, ஸ்பயினுக்குத் தருவதாகக் கூறி, அந்நாட்டுடன் குடும்ப ஒப்பந்தம் (Family Compact) செய்துகொண்டனர், இந்நிலையில் அவர்களுக்குப் பரிசு வழங்குவதுபோல ஆஸ்திரியாவிற்கு அளித்த உறுதி மொழியினை வால்போல் மறுத்தளித்துவிட்டார். இப் போர் 1738ஆம் ஆண்டில் முடிவுற்றபோது நேபிள்ஸையும் ஸிஸிலி யையும் ஸ்பெயின் திரும்பப்பெற்றது; லோரைனை (Lorraine) ஃபிரான்ஸ் பெற்றது. அதன் கோமகனாக இருந்த, மேரியா தெரீசா வின் கணவரான ஃபிரான்ஸிஸ் (Francis), டஸ்கனி மாகாணத் திற்கு மாற்றப்பட்டார். மன்னரது விருப்பத்திற்கும் நியூகாஸில் போன்ற ஒரு சில மதியமைச்சரின் விருப்பத்திற்கும் மாறாக வால் போல் தலையிடாக் கொள்கையை வற்புறுத்தினார். இறுதியில் போரானது ஃபிரெஞ்சுப் படையெடுப்பிற்கும், யாகோபியர் கலகத் திற்கும் அடிகோலிவிடும் என்று வாதிட்டார். சண்டையைத் தள்ளிப்போடுவதன்மூலமாக அதனைத் தவிர்க்கலாம் என்பது உண்மைதான். 'நனி சிறந்த ஒன்றை நாடுவது குற்றமென்று கூறப்படுவதை நான் கேட்டதில்லை' என்று வால்போல் கூறினார்,

ஆனால், அரசியல் தந்திரத்தின் முதற்படியை ஃபிரான்ஸிடம் விட்ட ஒரு கொள்கை, ஆஸ்திரியாவை ஆதரவின்றிக் கைவிட்ட ஒரு போக்கு, இரு போர்போன்களையும் பகைத்துக்கொண்ட செயல், போருக்குரிய காரணம் எழுமானால் பேராபத்தை உண்டாக்கும் என்பது உறுதி.

பிரிட்டனைப் பொறுத்தவரையில் அக்காரணம் பொருளாதாரம், வெளிநாட்டு வாணிபம் ஆகியவற்றோடு தொடர்பு கொண்டதாக இருக்கின்றது. வால்போல் ஆட்சியில் இறுதி ஆண்டுகளில் ஏற்றுமதிகள் மந்தமடைந்தன. அதற்கு ஃபிரெஞ்சுப் போட்டி காரணமன்று. ஆயினும் ஸ்பானிய அமெரிக்காவோடு இருந்த மிக முக்கியமான வாணிபம் படைபலத்தை நம்பியதாக இருந்ததால் ஆங்கில வாணிப வளர்ச்சிக்குத் தடையாக இருந்தது. அஸ்ஸியன்டோ (Assiento)விற்கு அடிமைகளை விற்கும் முற்றுரிமையும், ஆண்டுதோறும் ஒரு கப்பலை அனுப்பும் உரிமை தென் கடல் கம்பெனிக்கு (South Sea Company) அளிக்கப்பட்டதும் பிற தடைகளாக இருந்தன. மேற்கிந்தியத் தீவுகளிலும் பழைய பூசல்கள் இருந்து கொண்டே வந்தன. பிரிட்டிஷ் கள்ளக்கடத்தல்காரர்கள் சட்ட விரோதமான வாணிபத்தைப் பெருமளவில் செய்துவந்தனர். பிரிட்டிஷ் குடியேற்றக்காரர் கடற்கரைப் பகுதியில் காடுகளில் கட்டை வெட்டுவதுமூலமாக ஹாண்டூராஸின்மீது உரிமை கொண்டாடினர். பிரிட்டிஷ் குடியேற்றமாகிய ஜார்ஜியா ஸ்பானிய ஃபிளாரிடாவோடு மோதியது. இரு தரப்பினரும் மோசடியிலும் வன்முறைச் செயல்களிலும் ஈடுபட்டனர். அளிப்புக் கப்பல்கள் என்று அழைக்கப்பெற்ற கப்பல்களில் இருந்து, ஆண்டிற்கொரு முறை என்று இருந்த கப்பலில் பொருள்களை நிரப்புவதன் மூலமாக பிரிட்டிஷார் தங்கள் உரிமையைத் தவறாகப் பயன் படுத்திக்கொண்டனர். ஸ்பானியக் கடற்கரைக் காவலாளர் (guarda-costas) குற்றமுள்ள வியாபாரிகளோடு குற்றமற்றவரையும் கைது செய்தனர்.

ஸ்பானியர் இவ்விதம் ஆங்கிலக் கப்பல்களைச் சோதனை இடுவதற்குப் பெற்றிருந்த உரிமையை எதிர்க்குமாறு 1738-ல் எதிர்க்கட்சியினர் பாராளுமன்றத்தை ஏவினர். நாடு முழுதும் கொதிப்படையச் செய்யும் சான்றுகளைக் காட்டினர். குறிப்பாக, கேப்டன் ஜெங்கின்ஸ் (Captain Jenkins) ஸ்பானியரால் அறுபட்ட தமது காதைக் கொண்டுவந்து காட்டினர். அப்போது அவர் தம்முடைய ஆன்மாவைக் காக்கும் பொறுப்பைக் கடவுளிடமும், மானத்தைக் காக்கும் பொறுப்பைத் தாய் நாட்டிடமும் ஒப்படைப்பதாகக் கூறினர். அக்கூற்றே போர் முழக்கமாக மாறியது. பழி வாங்குதலுக்கு பயந்த ஸ்பானியர், 1739-ல் பார்டோ ஒப்பந்தத்திற்கு இணங்கினர். அஃது இருதரப்பினருக்கும் ஏற்பட்ட நஷ்டத்தினைச் சரிக்கட்டும் வகையில் அமைந்தது. பிரிட்டனுக்குச் சிறிய தொகையான 27,000 பவுன்கள் கிடைத்தன. ஆனால், கப்பல்களைச் சோதனையிடும் உரிமைபற்றிய விவாதத்தினைப் பிற்காலத்தில் வைத்துக் கொள்ளலாமென்பது ஒப்புக்கொள்ளப்பட்டது.

இரு நாடுகளிலும் பொது மக்களின் கருத்து அரசாங்கங்களின் சமாதான முயற்சிகளை மீறியதாக இருந்தது. நியூகாஸிலின் தலைமையில் போர்க் கட்சியொன்று காபினெட்டில் உருவாகியது. அக்கட்சியினர் பிரிட்டிஷ் கடற்படையின் வலிமையைக் காட்டியே ஸ்பெயினைப் பணியவைக்க முடியுமென்று வாதித்தனர். இத்தகைய பயமுறுத்தலுக்கிடையே ஸ்பெயின் சமாதானம் பேச முன் வரவில்லை. எனவே, 1739ஆம் ஆண்டு அக்டோபரில் போர் தொடங்கியது.

வால்போலின் விருப்பிற்கு மாருக எழுந்த இப் போர் அவர் தம் அழிவிற்குக் காரணமாக அமைந்தது. முதலிலேயே பதவியிலிருந்து விலகிக்கொள்ள அவர் நினைத்தபோது அரசர் அதனை ஏற்காது தடுத்துவிட்டார். இங்ஙனம் ஏற்கெனவே பிளவுபட்டு நின்ற காபினெட்டுக்குத் தடையாகவே வால்போல் விளங்கினுர். வால்போலின் வீழ்ச்சிக்கு டோரிகள் காரணமானவர் என்று கூறுவதற்கில்லை. ஏனெனில், அவர்களது இயற்கையான தலைவர் விண்ட்ஹாம் (Wyndham) இறந்துவிட்டார். பாலிங்புரோக்-புல்டினி கூட்டில் உளமார்ந்த ஆர்வம் குறைந்துகொண்டே வந்தது. மேலும், அவர்கள் வால்போலை நீக்கிவிட்டு அவருக்குப் பதிலாக மற்ருெரு விக்கினைப் பதவிக்குக் கொண்டுவர விரும்பவில்லை.

1741ஆம் ஆண்டு தேர்தல் நடைபெறுவதற்குள் பிரிட்டிஷ் கொள்கை பெருஞ்சோதனைக்குள்ளாகியது. 1739-ல் போர்டோ பெல்லோவை (Porto Bello) வெர்னுன் (Vernon) கைப்பற்றிய போது வெற்றியின் ரேகை சிறிது தென்பட்டது. அவ்வாறு வெற்றி பெற்ற கடற்படைத் தளகர்த்தர் ஒரு டோரி கட்சியினரே. மேலும், சமாதானத்திற்குப் பின் கப்பல்களோ, அவைகளைச் செலுத்தும் ஆட்களோ தயாராக இல்லை. மெயினின்மீதும் கியூபாவிற்கு எதிராகவும் 1741-ல் கொண்டுசென்ற படையெடுப்புப் பெருந்தோல்வியில் முடிந்தது. இதைக் காட்டிலும் ஃபிரான்சின் போக்கு இடர் விளைப்பதாக இருந்தது. மேற்கிந்தியத் தீவுகளில் வன்முறைத் தாக்குதல் நடத்துவதற்கெதிராக ஃபிரான்ஸ் ஏற்கெனவே எச்சரிக்கை விட்டிருந்தது. இரண்டு துருக்கியப் போர்களினுல் ஆஸ்திரியா பெறக்கூடிய நன்மைகளையெல்லாம் அபகரிக்கின்ற வகையில் கிழக்கத்திய சமாதானம் ஒன்றைச் செய்துகொண்டதன்மூலமாக ஃபிரான்ஸ் ஓர் அரசியல் தந்திர வெற்றியைப் பெற்றது. இதற்கிடையில் 1740-ல் பேரரசர் இறந்தார். அவருடன் அவரது பேரரசக் கட்டளையும் இறந்தது. பிரஷ்ய மன்னரான ஃபிரடரிக் தாம் கொடுத்த வாக்குறுதிகளையெல்லாம் காற்றில் பறக்கவிட்டு ஸைலீஷியாவைத் தாக்கினுர். போரை

விரும்பிய கட்சி ஒன்று ஃபிரான்சில் ஃபிளியுரியைச் சோர்வடையச் செய்தது. மேலும், ஹாப்ஸ்பர்கினரின் பகுதிகளைக் கூறு போட்டுக் கொள்வதற்காகவும், பவேரிய தேர்வாளரைப் பேரரசின் அரியணையில் அமர்த்துவதற்காகவும் ஃபிரான்ஸும் ஸ்பெயினும் 1741ஆம் ஆண்டில் பிரஷ்யாவோடு இணைந்தன. அந்த ஆண்டின் இறுதிக்குள் மேரியா தெரீஸா ஹங்கேரிக்குள் பின்னடையவேண்டியதாயிற்று. பிரேக் நகரத்தை ஃபிரெஞ்சுப் படையொன்று தன் வயப்படுத்திக்கொண்டது. ரைன் ஆற்றங்கரையிலிருந்த மற்றொரு படை ஹனோவரைத் தாக்குவதாக அச்சுறுத்தி அந் நாட்டை நடுநிலைமை நாடாக்குமாறு இரண்டாம் ஜார்ஜை வற் புறுத்தியது. அச் சமயத்தில் வட இத்தாலியை ஸ்பானியர் தாக்கியபோது அப் பகுதியிலிருந்த பிரிட்டிஷ் கடற்படையொன்று அதனைத் தடை செய்யாது வாளா இருந்துவிட்டது.

இத்தகைய இருண்ட சூழ்நிலையில் நடைபெற்ற பொதுத் தேர் தலில், ஓரளவு இளவரசரின் முயற்சி காரணமாக வால்போல் கட்சி யின் பெரும்பான்மை குறைந்தது. அதுவும் பாராளுமன்றம் கூடிய வுடன் மறைந்துவிட்டது. கட்சியையும் அரசரையும் காப்பதற்கு வால்போலின் ராஜினாமா இன்றியமையாதது என உறுதியாக நம்பிய பெல்ஹாம், ஹார்வி போன்ற வால்போலின் சகாக்கள் எதிர்த்தரப்பு விக்குகளோடு சமாதானம் செய்துகொண்டனர். வால்போலை ஒறுக்கும் முயற்சியெதனையும் தடுத்து நிறுத்த வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. 1742ஆம் ஆண்டு பிப்ர வரியில் வால்போல் பதவியிலிருந்து விலகி ஆர்ஃபோர்டின் ஏர்ல் (Earl of Orford) ஆனார். அவருடைய பழைய எதிரியான வில்மிங் டன் பிரபு (Wilmington) என்று அழைக்கப்பெற்ற ஸ்பென்ஸர் காம்ப்டன் (Spencer Compton) பெயரளவில் கருவூலத் தலைவராக (First Lord of the Treasury) இருந்தார். பாத் பிரபுவாக (Lord Bath) புல்டினி காபினெட்டில் புகுந்தார். கார்ட்டரட், ராஜாங்கக் காரியதரிசியாக அமர்ந்தார். இளவரசரின் நண்பர்களுக்குப் பதவிகளை வழங்கியும், பணம் கொடுத்தும் அன்னாருடைய ஆதரவு பெற்றனர்.

பலியாடாக வால்போல் வெளியேற்றப்பட்டபோதிலும், மூன்றாண்டுகளுக்குப் பின் தாம் இறக்கும் வரையிலும் அரசருக்கு வழங்கிவந்த ஆலோசனைகள் அரசரின் வாரிசுகளினிடையே சம நிலையைத் தோற்றுவித்தன. 'விட்டோடியவர்'களான (deserters) புல்டினியும், கார்ட்டரட்டும் தாங்கள் தேசாபிமானிகளாக (patriot) இருந்தபோது கொண்ட நெறியைக் கைவிட்டு, பதவி, ஓய்வு கால மசோதா (place and pension), மூன்றாண்டு (Triennial)

மசோதா போன்றவற்றை வற்புறுத்தவில்லை. வால்போலுக்கு எதிராகச் சான்றுகளைச் சேகரிப்பதற்காக நியமிக்கப்பெற்ற குழுவினை நீக்கிவிட்டனர். டோரிகளுக்கோ, தேசாபிமானிகளுக்கோ பதவி அளிக்க முயலவில்லை. சுருங்கக் கூறுமிடத்து மாறுபட்ட மன இயல்புகளாலும், கொள்கைகளாலும் புதிய அரசாங்கம் பிளவுபட்டு இருந்தது. கூடிய சீக்கிரத்திலேயே கோமகனுக்கப் பெற்ற புல்டினி தமது மன உறுதியையும் செல்வத்தையும் ஒருங்கே இழந்தார். எனவே, கார்ட்டரட், பெல்ஹாம்கள் ஆகியோர் கைகளில் எதிர்காலம் ஒப்படைக்கப்பட்டது. கார்ட்டரட் சிறந்த தகுதிகளைக் கொண்டவர். மிகுந்த படிப்பாளராகவும் அரசியல் தந்திரம் மிக்கவராகவும் இருந்தார். களிப்பூட்டும் தோழராக இருந்த அவரிடம் காணப்பெற்ற ஜெர்மன் மொழிப்பயிற்சி, அரசருடைய நன்மதிப்பை அவருக்குத் தேடித்தந்தது. அவர் 'அரசாங்கத்தின் உயர் துறைகளில் தன்னிகரற்று விளங்கியவர்' என்று பிற்காலத்தில் பிட்டினால் போற்றப்பட்டவர்.' ஆனால், இயற்கையில் வல்லாட்சியாளராக இருந்தார். அரசருடைய ஆதரவினால் கட்சியையும் காபினெட்டையும் எதிர்க்க முடியுமென்று நம்பினார். எல்லா ஐரோப்பிய அரசர்களையும் ஒருசேர ஒழிக்க வேண்டும் என்ற அவருடைய விருப்பமும், ஆபத்தும் பொருட் செலவும் மிகுந்த திட்டங்களும் அவர்தம் கூட்டாளிகளைக் கதி கலங்கச் செய்தன. இது பதினெட்டாம் நூற்றாண்டில் கட்சியை ஒற்றுமைப்படுத்தி வைப்பதற்கு வழியன்று. மந்தமதியினரான வில்மிங்டன் 1743ஆம் ஆண்டில் இறந்தபொழுது ஹென்றி பெல்ஹாமுக்குத் தலைமைப்பதவி செல்லவேண்டுமென்று பிட் ஆலோசனை கூறினார்.

புதிய பிரதம மந்திரி வால்போலை ஒத்தவர் எனினும் ஆற்றல் குறைந்தவரே. சிக்கனம், சோர்வு மனப்பான்மை, மக்களன்பு ஆகியவை ஒருங்கே அமையப்பெற்றவர். சமாதானப் பிரியராகவும், போற்றுதற்குரிய நிதியறிவுடையவராகவும், கட்சியைத் திறம்பட நடத்தும் தலைவராகவும் இருந்தபோதிலும், அவர் அறிவொளி பெற்றவர் அல்லர். மன்னரால் வெறுக்கப்பட்ட அவர் உண்மையில் அவருடைய சகோதரரான நியூகாஸிலைவிட அதிகாரம் குறைந்தவராகத்தான் இருந்தார். நியூகாஸில் கோமகன் சிறுமைக்குணம் படைத்தவர். ஈரமான படுக்கையைக் கண்டு அஞ்சியதைப் போலவே மக்கள் கூட்டத்தின் சிறு ஆரவாரத்திற்கும் அஞ்சினார். ஆயினும் அதிகாரப் பித்து பிடித்தவர். அவர் கண்ணீரோடு அணைத்துக் கொள்வதும் பிதற்றுவதும் கேலிக்கிடமாக இருந்தன. எனினும் அவர் தமது ஆதரவாளர்களுக்கும், ராட்டன் பரோக்களுக்கும், தம்முடைய கட்சியை அதிகாரத்தில் நிலை

நிறுத்துவதற்குப் பாராளுமன்ற உறுப்பினரின் ஆதரவைத் தேடுவதற்குத் தம்முடைய பொருளேயும் உழைப்பையும் செலவழித்தார் என்பதை முன்னூறு பாகங்களாகக் கிடைக்கும் அவருடைய கடிதங்கள நிரூபிப்பனவாக இருக்கின்றன. அவரை அரசியல் வல்லுநராகக் காட்டுவதற்கு எதுவும் அவரிடம் இல்லேயென்ருலும் அவருடைய நீண்ட கால அனுபவம் ஐரோப்பாவை ஓரளவு அறிந்துகொள்ளச்செய்தது.

இத்தகைய பிளவினேப் பயன்படுத்திக்கொண்டு அரச்ரைச் சார்ந்து நின்ற கார்ட்டரட்டின் அதிகாரத்தைக் கவிழ்ப்பதற்காக, 1744ஆம் ஆண்டில் எதிர்க்கட்சியிலிருந்த எல்லாப் பிரிவினரும் பெல்ஹாமோடு இணேந்தனர். செஸ்டர்ஃபீல்டு (Chesterfield) பதவி ஏற்ருர். மார்ல்பரோ (Marlborough) தொடர்பினுலும் தன்மையினுலும் விக்கு பிரிவைச் சேர்ந்த பெட்ஃபோர்டு (Bedford) பிரபுவும் தம்முடைய சார்பாளரான சாண்ட்விச் (Sandwich) என்பவரோடு பதவி ஏற்ருர். டோரிகளில் ஒரு காலத்தில் யாகோபியக் குழுவின் தலேவராக இருந்த கோவரும் (Gower), 'தேசாபிமானிகளில்' (Patriots), கோபாம் (Cobham) தம்முடைய 'பையன்" (Boys) களாகிய ஜார்ஜ் கிரன்வில், லிட்டல்டன் ஆகிய இருவரும் அமைச்சரவையில் சேர்ந்தனர். முன்னேறி வரும் பேச்சாளரான பிட்டையும் சேர்த்துக்கொள்ளும் வாய்ப்பும் இருந்தது. இத்தகைய பரவலான அடிப்படை கொண்ட மந்திரிசபை (Broad-bottom ministry), போர், கார்ட்டரட்டின் கொள்கை, இறுதியாக நடந்த யாகோபியக் கலகம் ஆகியவற்றின் விளேவாகப் பதவிக்கு வந்தது. அது பழைய டோரி கட்சியை ஒழித்தது. விக்கு கட்சியைப் பத்து ஆண்டுகளுக்கு வலிமை குன்றிய நிலேயில் வைத்திருந்தது.

ஸ்பெயினுடன் குடியேற்றப் போராகத் தொடங்கியது ஐரோப்பாவில் ஃபிரான்ஸுக்கு எதிராக வந்த போராக உருவாகியது. ஆஸ்திரியாவுக்கு உதவியளிப்பது கடினம் என்ருலும், அதனே இரண்டாம் முறையாகக் கைவிடுவது என்பது முடியாத செயல். அரசருடைய ஹனேவியச் சுயநலத்திற்காக அவ்வாறு செய்ய முடியாது. ஹனேவரை நடுநிலேமை நாடு என்று அரசர் அறிவித்ததால் மேரியா தெரீஸாவிடமிருந்து சலுகைகளேப் பெறமுடியவில்லே. அதே சமயத்தில் பிரஷ்யாவின்மீது காட்டிய வெறுப்பினுல் ஃபிரடரிக் ஃபிரான்ஸின் நட்பை நாடினுர். நடுநிலேமைக் கொள்கையில் தீவிரமான நம்பிக்கை கொண்டிருந்த டச்சுக்காரரை அவர்களது நம்பிக்கையிலிருந்து அசைக்க முடியவில்லே. பிரிட்டிஷாரின் நட்பு நாடாகிய சார்டீனியா, ஆஸ்திரிய லம்பார்டியில் முன்னேறியது.

ஓராண்டுக் காலத்திற்கு இத்தகைய பகைமைகளைக் கார்ட்டரட், தம்முடைய் ஆற்றலினால் சமாளித்தார். ஆஸ்திரியாவின் துணைப்படையாகச் சென்று ஹனோவியரின் சேனை போரிட வேண்டுமென்பதை ஜார்ஜ் ஏற்றுக்கொள்ளுமாறு செய்தார். இப்படைக்கு பிரிட்டனின் பணம் செலவிடப்பட்டது. பரந்த நோக்கமுடைய 'பேரரசுப் பொது'ப் (pragmatic) படையினை நெதர்லாந்தில் தயார் செய்வதிலும் வெற்றி பெற்றார். நேபிள்ஸில் இருந்த போர் போனியரைப் பிரிட்டிஷ் கடற்படை அடக்கிவைத்திருந்தது. அதைக் காட்டிலும் பிரஸ்லா (Breslau) உடன்படிக்கையின்படி ஸைலீஷியாவைத் தந்து, கொடிய விரோதத்தைத் தவிர்த்துக் கொள்ளுமாறு வற்புறுத்தினார். போரின் போக்கு மாறியது. 1743ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் பொஹீமியாவில் இருந்த இறுதி ஃபிரெஞ்சுப்படை வெளியேறியது. ஜூன் மாதத்தில் ஆஸ்திரியர் மியூனிச் (Munich) நகரைக் கைப்பற்றினர். பவேரியப் பேரரசர் தமது நாட்டை விட்டு வெளியேறினார். கடைசியில் பேரரசுப் பொதுப்படை பவேரியாவிலிருந்து பின்வாங்கிய ஃபிரெஞ்சுப் படையைத் துண்டிக்க முன்னேறியது. ஆனால், அப் படையை ஜார்ஜ் மெயினிலேயே நிறுத்திவிட்டார். அங்கே அவர் மிகுந்த தாக்குதலுக்கு உட்பட்டதனால்|வடக்குத் திசையில் அவர்படை பின்வாங்கியது. எனவே, ஜூன் மாதம் பதினாறும் நாள் பிரிட்டிஷ் படையும் ஃபிரெஞ்சுப் படையும் டெட்டிங்கன் (Dettingen) என்னுமிடத்தில் கைகலந்தன. போர்க்களத்தில்தான் பிரிட்டனின் மன்னர் இறுதியாக, நேரடியாகத் தலைமை தாங்கிப் படைகளை நடத்திச்சென்றார். பிரிட்டிஷ் படையின் தீவிரப் போராட்டம் காரணமாகவும் ஃபிரெஞ்சுப் படைத்தலைவர் செய்த பிழைகளினாலும் அரசர் ஆபத்திலிருந்து தப்பி வெற்றி பெறும் நல்வாய்ப்பினைப் பெற்றார்.

ஃபிரான்சும் பிரிட்டனும் நேரடியாகப் போரிட்டுக் கொள்ளவில்லையாகையால் ஜார்ஜ், மஞ்சள் நிறமுடைய ஹனோவியர் சின்னத்தை அணிந்து தேர்வாளராகவே போர் புரிந்தார். ஆனால், இப்போது இச் சண்டையில் ஃபிரான்சுக்கு எதிராக ஒரு வலிமை மிக்க கூட்டினை ஏற்படுத்துவது கார்ட்டரட்டின் குறிக்கோளாக இருந்தது. பிரஷ்யப் பேரரசருக்கும் மேரியா தெரீஸாவுக்குமிடையே பிளவு செய்து வைப்பதும், ஆல்ஸாஸையும் (Alsace) ஃபிரெஞ்சுக் கொள்ளைப்பொருளையும் மேரியா தெரீஸா இழப்பீடாகப் பெறுமாறு செய்வதும் அவருடைய திட்டங்களாக இருந்தன. சார்டீனியாவிற்குச் சில மிலான் பகுதிகளை ஆஸ்திரியர் வழங்குவதற்கான வோர்ம் (Worm) உடன்படிக்கையையும் செய்து கொண்டார்.

ஹனோவிரிய அரசியல் தந்திரம் என்று பிரிட்டனில் இ' ழப் பெற்ற கொள்கை பொருட்செலவு மிக்கதாக இருந்தது. பல நாடுகளுக்கு மானியம் வழங்கவேண்டி இருந்தது. முதல் வேளை வாக போர்போனியர் ஒன்றாக இணைந்து, இரண்டாவது கு ப ஒப்பந்தத்தைச் செய்துகொண்டன. போலியைப் பட்டத்தி தக் கொண்டுவரும் திட்டமும் அந்த ஒப்பந்தத்தில் அடங்கி இருந்து. இரண்டாவதாக இரண்டாம் ஃபிரடரிக்குக்கு ஆத்திரமூட்டி து. அவர் புதிய அமைப்பில் பிரிட்டனும் ஆஸ்திரியாவும் ஒன்றாக இணைந்து ஸைலீஷியாவைத் தம்மிடமிருந்து பறித்துவிடு மென அஞ்சினர். 1744ஆம் ஆண்டில் பிரிட்டனின்மீது ஃபிரான்ஸ் போர் தொடுத்தது. தேம்ஸ் (Thames) ஆற்றினுள் படை ன் றினைக் கொண்டுவர இருந்த பிரயாணக் கப்பல்கள் புயற்காற்றில் சிக்கிச் சிதறுண்டபோதிலும், திறமைமிக்க ஃபிரெஞ்சுக்கடல் தள கர்த்தரான ஸாக்ஸே (Saxe), ஃபிளாண்டர்ஸிற்குள் புகுந்து எப்ரஸைக் (Ypres) கைப்பற்றிக்கொண்டார். ஃபிரடரிக் மற் ருரு முறைபொஹீமியாவைத் தாக்கினர். மத்தியதரைக் கடலில் இ ந்த பிரிட்டிஷ் கடற்படை, கீழ்ப்படியாமை, வயோதிகத் தளகர் தர் களின் தவறுகள் ஆகியவற்றினால் வலிமையிழந்து இருந்தது. இத்தாலியப் படை சிக்கலான நிலையில் காணப்பட்டது.

'ஹனோவிரியப் படைகளின் அமைச்சர் இங்கிலாந்தினைக் கேவலமான தேர்வாளர்கட்கு உரிமையான மாநிலமாகச் செய்து விட்டார்' என்று கார்ட்டரட்மீது, பிட் குற்றம் சாட்டினர். கார்ட் டரட் பதவியிலிருந்து விலகுமாறு கட்டாயப்படுத்தப்பட்டார். இது மன்னரின் ஆத்திரத்தைக் கிளறியது. ஆனல், 1745 ஆம் ஆண்டில் பேரரசர் இறந்ததும் போர்ப் புயல் ஜெர்மனியைவிட்டு பிரிட்டனின்மீது வீசியபோது, கார்ட்டரட்டின் வாரிசுகள், ஹனோ விரியப் படையில்லாமல் இருந்தால், ஹனோவருக்கு மானியத்தை மறுத்தால் தங்கள் வலிமை குன்றிவிடும் என்பதை உணர்ந்தனர்.

அரசரின் செல்லப்பிள்ளையாகிய கம்பர்லண்டுதான் நெதர் லாந்தில் பிரிட்டிஷ் தளகர்த்தராக இருந்தார். இருபத்து நான்கு வயது நிரம்பிய அவர் விடாமுயற்சி கொண்டவர் எனினும் அநுபவ மற்றவராக இருந்தார். மேலும், டச்சுக்காரர் சண்டையிட விரும்ப வில்லை. அதுபோது ஃபிரெஞ்சுத் தளகர்த்தரான ஸாக்ஸே (Saxe), டோர்னேயை (Tournai) முற்றுகையிட்டார். முப்பதாம் தேதி ஐந்து மைல்களுக்கப்பாலுள்ள ஃபான்டினுயில் (Fontenoy) நிலை பெற்றிருந்த படைகளோடு தம் படைகளைக் கம்பர்லண்டு மோத விட்டார். இப்போரில் பிரிட்டிஷ் தரைப்படை அரிய சாகசங்களைச் செய்தபோதிலும், அவர் பேரிழப்போடு பின்வாங்க நேரிட்டது.

கென்ட் (Ghent), ஓடினூர்டு (Oudenarde), ஆஸ்டன்ட் (Ostend) ஆகியவை வீழ்ந்தன. பீட்மான்டில் (Piedmont) பாதியும், மிலான் முழுதும் போர்போனியப் படைகள் கையில் சிக்கின. ஜூன் மாதத்தில் சார்லஸ் எட்வர்டு (Charles Edward) ஏழே பேரோடு நான்ட்ஸிலிருந்து (Nantes) புறப்பட்டு லிஸார்ட்டைச் (Lizard) சுற்றிக்கொண்டு மாக்டனுல்டு (Macdonald) நாட்டிலுள்ள மோய்டார்ட்டுக்குள் (Moidart) வந்திறங்கினூர்.

1745ஆம் ஆண்டுக் கலகத்தைத் தவிர மற்றெந்தவிதமான எதிர்ப்பும் விக்கு ஆட்சிக்கோ, இரண்டாம் ஜார்ஜின் அரசாங்கத் திற்கோ ஏற்படவில்லே. 1745ஆம் ஆண்டுப் புரட்சியில் இளேய போலி (Young Pretender) ஓராண்டுக் காலம் சிறிது செல்வாக்குப் பெற்று இருந்தார். அதனுேடு அவர் ஒருசில ஆயிரக்கணக்கான ஹைலாந்து வீரர்களோடு மிட்லாண்டுப் பகுதிகளே வந்தடைந்தார். யாகோபியக் கொள்கை அநேகமாக மறைந்துவிட்டது. கடவுள் பற்று மிகுந்து, மகிழ்ச்சியற்றுக் குடும்பப் பிணக்குகள் காரணமாக அவமதிக்கப்பெற்று 'மூன்ரும் ஜேம்ஸ்' போப்பிற்குச் சொந்த மான ரோமில் வாழ்ந்துவந்தார். பியூ:போர்ட் (Beaufort) போன்ற ஒருசில பற்றுறுதி கொண்டவரிடமிருந்து ஒருசில வேளேகளில் சிறு தொகைகளேமட்டும் பிரிட்டனிடமிருந்து பெற்றுவந்தார். லங்கா ஷயரைச் (Lancashire) சார்ந்த ஒருசில கத்தோலிக்கரைத் தவிர ஆங்கிலேயர் எவரும் அவருக்காகப் பரிந்து வரவில்லே. அவர் :பிரெஞ்சுச் சேனேயின் உதவி கொண்டுதான் படையெடுத்து வெற்றி பெறமுடியும். ஓராண்டுக் காலத்திற்கு முன்பே ஒருமுறை முயன்று தோல்வி கண்ட :பிரெஞ்சுக்காரர் அனுப்பிய ஆயிரத் திற்கும் குறைவான படை காலந்தாழ்த்தி வந்ததால், சார்லஸ் எட்வர்டு அதிகப் பயன்பெறவில்லே. என்ருலும், பிரிட்டனில் எங்குப் பார்த்தாலும் திறமையின்மையும் ஒருவித பீதியும் காணப் பட்டன. இச் சமயத்தில் மன்னரும் இழிவாக நடந்துகொண்டார். ஹனுேவருக்குச் செல்லவேண்டுமென்று பிடிவாதம் செய்தார். கார்ட்டரட்டில் அரசாங்கத்தைத் திரும்ப அமைப்பதற்கு முயன்ருர். 1746ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் பெல்ஹாம்கள் ஒன்ருக ராஜி நாமா செய்து அரசரைப் பணிய வைத்தனர். ஒரு சிறு பதவி பிட்டிற்கு வழங்க அரசர் ஒப்புக்கொண்டார். 'கறுப்பு வெள்ளி' (black Friday) யன்று சார்லஸ் எட்வர்டு டர்பியை விட்டுச்சென்ருர். அதனுல் லண்டன் பாங்குகளில் நெருக்கடி ஏற்பட்டது. யார்க் ஆர்ச்பிஷப்பைப் போன்ற சிலரைத் தவிர மற்றவரிடம் ஆற்றல் அழிந்துவிட்டதைப் போல் காணப்பட்டது.

திறமைமிக்க அரசாங்கமாக இருந்திருந்தால் 'லோலாந் தியருக்கும்' (Lowlands) 'ஹைலாந்தியருக்கும்' (Highlands)

இடையே இருந்த பிளவு அதிகரித்ததைப் பயன்படுத்தி லோலாந்தைத் தாக்கமுடியாத அளவிற்கு உறுதிப்படுத்தி இருக்கும். ஒப்பந்தக்காரரின் இங்கிலாந்தில் எதிர் உணர்வு குறைந்துவிட்டது. அப் பகுதியில் அரசாங்கத்தின் பொருள் உதவியினுல் லினன் தொழில் வளர்ச்சியும், வெளிநாட்டு வியாபாரத்தில் பெற்ற பங்கு ஸ்காட்லாந்தின் வளத்தை ஓரளவு பெருக்கியது. கிளாஸ்கோ நகரம் அரசரிடம் பற்றுறுதிகொண்டு இருந்தது. லோலந்து நகரம் எதுவும் விருப்போடு போலிக்குப் பணியவில்லை. எடின்பரோ, ஸ்டர்லிங் ஆகிய கோட்டைகள் அவருடைய தாக்குதல்களை இறுதிவரை எதிர்த்துநின்றன. சமயப்பொறைக் கொள்கையினைப் பின்பற்றுவதாகப் போலி வாக்குறுதி அளித்தபோதிலும் கிர்க் (Kirk) சபையினர் ரோமின்மீது கொண்ட பகைமையை மாற்றவில்லை. போர்டியஸ் (Porteous) சம்பவமும் பிரிட்டன் விதித்த வரிகளும் வர்த்தகரின் மனங்களைப் புண்படுத்தியதனுலும், அரசாங்கத்தின் தேர்தல் சூழ்ச்சிகளினுல் அரசியல் கட்சிகள் அதிருப்தி அடைந்திருந்ததனுலும் மக்களிடையே அக்கறையின்மை காணப்பட்டது. ஆர்கைலேச் சார்ந்தவர்களுக்கும் அவரது பகைவருக்குமிடையே இருந்த பொருமைப் பூசல்கள் காரணமாக அரசாங்க ஆதரவாளர் பிளவுபட்டு நின்றனர். 1715ஆம் ஆண்டுக் கலகத்திற்குப்பின் ஹைலாந்தியரை மாற்றுவதற்கு முயற்சியேதும் எழவில்லை. ஜெனரல் வேட் 250 மைல் நீளமுள்ள ராணுவச் சாலைகளை அமைத்தார். கருங் காவற்படையினரைப் (Black Watch) போன்ற சிலர் படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். மேலும், சில பிரஸ்பிடீரியச் சமய குருமார் நிலைபெற்றனர். ஆனுல், கால்நடைத் திருட்டும், அச்சுறுத்திப்பணம் பறித்தலும் தொடர்ந்து எப்போதும்போல் நிகழ்ந்தன. பெயரளவிலிருந்த படைக்குறைப்புச் சட்டத்தினுல் பற்றுறுதிகொண்டவர் மட்டுமே படைக்கலன்களை ஒப்படைத்தனர். மற்றவர் அவற்றை மறைத்தனர். ஒரு ஹைலாந்துக் கூட்டத்தினர் பாரிஸோடும் ரோமோடும் சில ஆண்டுகளுக்குத் தொடர்புகொண்டிருந்தனர்.

எனினும், ஜெனரல் கோப் (Cope) பகுத்தறிவோடு நடந்து கொண்டிருந்தால், படையினர் திறமை காட்டியிருந்தால் ஸ்காட்லாந்தைப் பாதுகாத்து நின்ற 3000 படையினரைக்கொண்டே வெற்றி பெற்றிருக்கமுடியும். ஸ்டர்லிங்கையும் ஃபோர்த்தையும் (Forth) பாதுகாத்து நிற்பதை விடுத்து, கோப் (Cope) ஹைலாந்தில் புகுந்தார். அங்கே தாம் எதிர்பார்த்ததைவிட இளவரசர் வலிமை மிக்கு இருந்ததனுல், இன்வர்னஸில் (Inverness) தஞ்சம் புகுந்தார். அதன் பிறகு படைகளை டன்பருக்கு அனுப்பினுர். அப் படை செல்வதற்கு முன்பே எடின்பரோவைச் சார்லஸ் கைப்பற்றினுர்.

இந்த வெற்றி, சார்லஸின் சொந்த முறையிலான வெற்றியன்றி வேறொன்றுமில்லை. அவர் தந்தையின் விருப்பத்திற்கு மாருகவும் சிறந்த ஆலோசனைகளைப் புறக்கணித்தும் அவர் ஃபிரான்ஸிலிருந்து பயணமானார். தன்னுடைய தனிப் பண்புகளின் துணையினல்தான் ஹைலாந்தியரின் எதிர்ப்பினைச் சமாளித்தார். தம்முடைய இளமைப் பருவத்திலே இரண்டாம் சார்லஸுக்குப் பிறகு அரசரைப் போன்று நடந்துகொண்ட முதல் ஸ்டுவர்ட் அவர்தான். எப்போதும் ஹைலாந்தியரின் அங்கியை அணிந்து, நடக்கும்போது பதவிச் சின்னங்களைத் தரித்தே இருந்தவர். மங்கையர் உள்ளங் கவர்ந்தவராகவும், போரிடவும், போதையில் தள்ளாடவும் தயங்காதவராகவும் வாழ்ந்தார். பிராந்தியை மிகுதியாகப் பருகும் அவர் ஹைலாந்தியரால் வெறுக்கப்பட்ட தம்முடைய ஆசிரியர் ஷெரிடன் போன்ற புகழ் பாடும் ஐரிஷ்காரர்களின் வார்த்தைகளைச் செவி மடுத்தார். ஆயினும், அவர் ஹைலாந்தியரிடையே விருந்தினராக வந்தபோது அவர்களுடைய பற்றுறுதி வெளிப்பட்டது. ஐயப்பாடுகளையெல்லாம் நீக்கி அவர்களுடைய ஆதரவைப் பெற்றது அவருக்குக் கிடைத்த முதல் வெற்றியாகும். கிலன்பின்னனில் (Glenfinnan) அவர் தம்முடைய சிவப்புக் கொடியை உயர்த்திய போது லோச்சியலும் (Lochiel) கிளான்றனல்டைச் (Clandranald), சார்ந்த மெக்டனல்டுகளும் அவருடன் சேரவில்லை. ஆயின் பெர்த்தை (Perth) அவர் அடைந்தவுடன், சில கூட்டத்தினரும் 1715ஆம் ஆண்டுக் கலகத்தில் ஒதுங்கி இருந்த ஒருசிலரும் அவரோடு சேர்ந்துகொண்டனர். அவர்கள் பெர்த்தின் கத்தோலிக்கக் கோமகன், அப்பினைச் சார்ந்த (Appin) ஸ்டீவர்ட் (Stewart), கிலன்காரி (Glengarry), கிளன்கோவைச் (Glencoe) சார்ந்த மக்டனல்டுகளும், லோலண்டுப் பிரபுக்களான கில்மர்நாக் (Kilmarnock), நித்ஸ்டேல் (Nithsdale) ஆகியவர்கள். திறம்படைத்த இருவர் அவருக்குத் துணைவர்களாக இருந்தனர். அவரது செயலராகவும், பிற்காலத்தில் அவரைக் காட்டிக்கொடுத்த ஜூடாஸாகவும் (Judas) இருந்த புரோட்டனைச் சார்ந்த முர்ரே (Murray of Broughton) ஒருவர். மற்றவர் சார்லஸின் ராணுவ வெற்றிகளுக்குக் காரணமாக இருந்தபோதிலும், அவருடைய நம்பிக்கையைப் பெருத அதோல் (Atholl) வீரரான ஜார்ஜ் முர்ரே பிரபு ஆகிய இருவரும் ஒருவரை ஒருவர் வெறுத்துத் துயர் விளைப்பதாக இருந்தனர்.

சார்லஸ் வழியில் இருந்த நகரங்களில் தீர்வை விதித்து, எதிர்ப்பு ஏதுமின்றி ஸ்டிர்லிங் அருகில் ஃபோர்த் நதியைக்கடந்து லின்லித்கோ (Linlithgow) வழியாக எடின்பர்கின் வெளிப்புறத்தை அடைந்தார். ஒருசில குண்டுகளை வீசி, மென்னடை போட்டுச்சென்ற மன்னரின் குதிரைப் படையினை முறியடித்தார்.

அதன் பிறகு நகரத்திற்குள் சென்று ஹோலிரூடில் (Holyrood) உறங்கினர். பிறகு டன்பாரிலிருந்து முன்னேறி வந்த கோப் என்பவரைச் சந்திப்பதற்காக ஒன்பது கல் தொலைவில் உள்ள பிரஸ்டன் பான்ஸ் (Prestonpans) என்னுமிடத்திற்குச் சென்றார். அங்கே அவருக்குத் துணையாக நின்ற ஹைலாந்தியர், காலைப்பனியை ஊடுருவிச்சென்று பகைவரின் காலாட்படையினைச் சிதறடித்தனர். பெர்விக்-ஆன்-ட்விட் (Berwick-on-Tweed) என்னுமிடத்திற்குக் கோப் குதிரைமீது சென்றார். உண்மையான முடிவு எடுக்க வேண்டிய நேரம் நெருங்கியது.

இங்கிலாந்தில் கலகம் தோன்றினால்தான் தாம் நம்பி இருந்த ஃபிரெஞ்சு உதவி கிடைக்கும் என்பதைச் சார்லஸ் உணர்ந்ததால் இங்கிலாந்தின்மீது உடனடியாகப் படையெடுத்துச் செல்ல வேண்டுமென்று வற்புறுத்தினர். ஆனால், ஹைலாந்துத் தலைவர்கள் ஒரு மாத காலத்திற்கு அத்தகைய படையெடுப்பிற்குத் தடையாக இருந்தனர். அதற்குள் வயோதிகரான வேட் (Wade) தம்முடைய 18,000 வீரர்களோடு நியூகாஸிலுக்கு வந்து சேர்ந்தார். கம்பர் லண்டு ஃபிளாண்டர்ஸில் இருந்து படைவலிப் பெருக்கத்தைக் கொண்டு வந்தார். ஏற்கெனவே கடினமான செயலாக இருந்தது, தாமதம் காரணமாக மிகுந்த தொல்லை தருவதாக மாறியது. லங்காஷயரிலும் வேல்ஸிலும் நிரம்பி இருப்பவர்களாகக் கருதப் பட்ட யாகோபியரை அடைவதற்காக மேற்குத் திசையில் சார்லஸ் சென்றபோது எல்லாம் அவருக்கு எதிராகவே திரும்பின. ஹைலாந்தியரில் பலர் அவரைக் கைவிட்டு வெளியேறிவிட்டதனால் 5000-க்கும் குறைவான வீரர்களை வைத்துக்கொண்டு கார்லைலை (Carlisle) வீழ்த்தினர். கெட்ட சகுனத்தை உணர்த்தும் பிரஸ்டன் (Preston) வழியாகச் சென்று சிறப்பான வரவேற்புக்கிடையில் மான்செஸ்டரை அடைந்தார். டிசம்பர் மாதம் 4ஆம் தேதி டர்பினை வந்தடைந்தார். அதற்கு மேலும் செல்ல அவரது அதிகாரிகள் மறுத்தனர். மேலும், செல்வாக்குடைய ஒருவரும் அவரோடு சேரவில்லை. லிச்ஃபீல்டிலிருந்து (Lichfiield) கம்பர் லண்டின் படைகளும் வடக்கிலிருந்து வேடின் (Wade) படைகளும் கண்ணியை இறுக்குவதுபோல் நெருங்கின. சார்லஸும் அவரது படையினரும் கம்பர்லண்டின் முன்னணிப் படையினை ஏமாற்றி விட்டுப் பகை நகரமாகிய கிளாஸ்கோவில் கிறிஸ்துமஸ் நாளன்று புகுந்தனர். அச் சமயத்தில் ஃபிரெஞ்சுப்படை உதவிக்கு வராமற் போனால் அழிவு நிச்சயம் என்று ஆகிவிட்டது. நூறு ஆண்டு களுக்கு முன்னால் மான்ட்ரோஸ் (Montrose) வீழ்ந்தபோது இருந்த சூழ்நிலைகள் இப்போது உருவாகி இருந்தன. பணம் இல்லாத காரணத்தினால் படையினருக்கு உணவின்மூலமாகத்தான் ஊதியம்

அளிக்க முடிந்தது. பீரங்கிப்படை குறைவாக இருந்ததனல் ஸ்டிர்லிங், ஃபோர்ட் வில்லியம் (Fort William) ஆகியவற்றின்மீது தொடர்ந்த தாக்குதல் பயனற்றுப்போயிற்று. அரசாங்கத்திடம் பற்றுறுதிகொண்டு மிகுந்த பகுத்தறிவாளரான டன்கன் ஃபோர்பஸின் (Duncan Forbes) தூண்டுதலினுல் மெக்லியோட் (Macleod) போன்ற முக்கியத் தலைவர்கள் தயக்கம் கொண்டனர். வடக்கில் ஸீஃபோர்த் (Seaforth), சதர்லண்டு (Sutherland), மெக்கேக்கள் (Mackays), கிரான்டுகள் (Grants) ஆகியோர் மன்னருக்கு ஆதரவாக இருந்தனர். பிரிட்டிஷ் கடற்படை அநேகமாக எல்லா ஃபிரெஞ்சுக்காரரையும் துண்டித்தது. எனினும், புரட்சிப் படையினை மேலும் சிறிது காலத்திற்கு ஒன்ருகப் பிணைத்து வைத்திருந்த வெற்றியொன்று சார்லஸுக்குக் கிடைத்தது. கோர்டன் படைகள் சார்லஸுடன் சேர்ந்தன. 1746ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் பதினேழாம் தேதி மழையிலும் முன்னிருட்டிலும் ஃபால்கிர்க் (Falkirk) என்னுமிடத்தில் ஜெனரல் ஹாவ்லி (Hawley) யின் படையினைச் சார்லஸ் முறியடித்தார்.

எனினும், அம் மாத முடிவிற்குள் கம்பர்லண்டு எடின்பர்கை வந்தடைந்தார். மறுபடியும் சார்லஸின் ஆலோசகர்கள் பெர்த்ஷயர் (Perthshire) மூலமாக இன்வர்னஸுக்குப் பின்வாங்குமாறு செய்தனர். கடற்படையுடன் வந்த கம்பர்லண்டு அவரைப் பின் தொடர்ந்து சென்று பிப்ரவரி மாதத்தில் அபர்டீனை (Aberdeen) அடைந்தார். ஏப்ரல் மாதத்தில் ஸ்பே (Spey) ஆற்றைக் கடக்கச் சித்தமானுர். உணவுப் பற்ருக்குறை காரணமாக, உணவினைத் தேடியும் அறுவடை செய்வதற்காக விதை விதைப்பதற்கும் ஹைலாந்தியர் பல இடங்களில் சிதறுண்டனர். ஜார்ஜ் மர்ரே தம்முடைய மலைப்பகுதிக்குச் சென்றுவிடலாம் எனச் சார்லஸிடம் யோசனை கூறினுர். அதற்கு மாருகச் சார்லஸ் இன்வர்னஸின் வடக்கில் கல்லோடன் (Culloden) சமவெளியில் எதிரிப் படைகளோடு போரிட உறுதி பூண்டார். அவருடைய இரவுத் தாக்குதல் தோல்வியுற, ஏப்ரல் மாதம் 16ஆம் தேதி பசியால் வர்டிய அவாது படையைக் கம்பர்லண்டு தாக்கினுர். வலிமை மிக்க பீரங்கிப் படையால் தாக்கப்பட்டு, பகைவரின் குதிரைப் படையினுல் சூழப்பட்ட சார்லஸின் படை அழிந்தது. மக்ளாச்லன் (Maclachlan) தலைவர்கள், கெப்போச்சைச் (Keppoch) சார்ந்த மாக்டனுல்டு உள்பட ஆயிரத்திற்கு மேற்பட்டவர்கள் கொல்லப்பட்டதனுல் அது கலைந்து சென்றது. அதன் பிறகு ஆறுமாத காலத்திற்குச் சார்லஸ் மேற்குத் தீவுகளில் மறைந்து வாழ்ந்தார். ஃப்ளோரா, மாக்டனுல்டு போன்ற பற்றுறுதி கொண்டவர் அவருக்கு வழிகாட்டிகளாக இருந்தனர். இதற்கிடையில் அவர் தலையைக் கொணர்பவருக்கு 30,000

பவுன்கள் வெகுமதி அளிப்பதாக அறிவிக்கப்பெற்றபோதிலும், அவரை ஒருவரும் காட்டிக்கொடுக்கவில்லை. இறுதியாக அவர், செப்டம்பர் மாதத்தில் லோச்சியலோடு தப்பி ஃபிரான்சுக்குச் சென்றார். எண்பது பொதுநிலையாளரும் பிரபுக்களில் பால்மரினோ (Balmerino), கில்மர்னாக், புரோட்டனின் மரேயினால் காட்டிக் கொடுக்கப்பெற்ற நம்பிக்கைக்கேடு செய்யும் லோவட் (Lovat) போன்றவர்களும் தூக்கிலிடப்பட்டனர். பல ஸ்காட்லாந்துத் தலைவர்கள் நாடு கடத்தப்பட்டனர். யார்கிஸ்டுகளின் (Yorkists) இறுதி முயற்சிக்கு இழிவு நேரிட்டது. இளைய கிளன்காரி அரசாங்கத்தின் ஒற்றராக மாறினார். சார்லஸ் எட்வர்ட் 1788 வரையில் உடல் வளத்தோடு வாழ்ந்தார் என்றாலும் உள்ளப் பண்புகளை இழந்திருந்தார்.

இரக்கங் காட்டவேண்டுமென்று டன்கன் ஃபோர்பஸ் (Duncan Forbes) விடுத்த வேண்டுகோளைப் புறக்கணித்து ஈவிரக்கமின்றி அடக்குமுறைகளைக் கையாண்டு, குடிசைகளைக் கொள்ளையிட்டு, சந்தேகப்பட்டவரை குண்டுக்கிரையாக்கி, பயிர்களைக் கொளுத்தி, 'கொலைகாரர்' என்ற பட்டத்தைக் கம்பர்லண்டு பெற்றுக்கொண்டார். ஒருசில பெரிய பண்ணைகள் பறிமுதல் செய்யப்பெற்றன. ஆயின் 1747ஆம் ஆண்டு வெளிவந்த இரு சட்டங்கள் ஸ்காட்டிய வாழ்க்கை அடிப்படையையே தகர்ப்பனவாக இருந்தன. ஒன்று, ஹைலாந்துத் தலைவர்களின் ஆட்சி அதிகாரத்தினை ஒழித்தது. மற்றொன்று, பண்ணையாளர் படைப் பணிக்கு மாறாகக் குத்தகைப் பணமாகத் தருதல் வேண்டுமென்று வற்புறுத்தியது. கடுமையான ஆயுதக்குறைப்புச் சட்டம் ஒன்று டார்ட்டனையும் (tarten) கில்ட் (kilt) அணியையும் மன்னரின் படையினர் தவிர வேறு எவரும் அணிவதைத் தடை செய்தது.

பெல்ஹாம் மந்திரி சபையின் வரலாற்றில், 1745ஆம் ஆண்டுப் புரட்சிப்போரினால் விளையும் சேதங்களில் ஒன்றாகத்தான் இருந்தது. மொத்தத்தில் பிரிட்டன் தன்னுடைய பகுதியில் வெற்றிபெறவில்லை என்றாலும் அதன் முயற்சி சுயநலம்மிகுந்த நட்புநாடுகள் வெற்றி பெற உதவியது. 1745ஆம் ஆண்டு டிசம்பரில் உருவான ட்ரஸ்டன் (Dresden) உடன்படிக்கையின் விளைவாகப் போரிலிருந்து ஃபிரடரிக் விலகிக்கொண்டார். மேரியா தெரீஸா வேதனையோடு ஸைலீஷியாவை இழக்கச் சம்மதித்தார். இந்த ஏற்பாட்டினால் இத்தாலியில் செயலாற்றுவதற்கு வாய்ப்பாக ஆஸ்திரியப்படை விடுவிக்கப்பெற்றது. 1746ஆம் ஆண்டில் தம் கணவர் இறந்ததனால் எலிசபெத் ஃபார்னஸ் அதிகாரம் இழந்து இருந்த சமயத்தில் ஸார்டீனியருடன் சேர்ந்து ஆஸ்திரியப் படையினர் வட இத்தாலி

யின் வட பகுதியிலிருந்து பகைவரை விரட்டினர். ஆனால், அவர்களுக்கிடையே ஆழமாகப் பதிந்து இருந்த வெறுப்புணர்ச்சி பிரிட்டன் விரும்பியதைப்போன்று ஃபிரான்ஸ் ஒன்றாக இணைத்து தாக்கவிடவில்லை. ஜினேவாவைக் கைப்பற்றுவதில் அவர்கள் கண்ட தோல்வி போர்போன்களுக்கு ஒரு விலைமதிப்பற்ற தளத்தைப் பெற்றுத்தந்தது. அருகில் உள்ள பகுதிகளில் பிரிட்டன் ராணுவ நோக்கங்கள் நிறைவேறாதனபோல் தோன்றின. 1746 ஆம் ஆண்டில் சேக்ஸே (Saxe), வேகமாக முன்னேறி ப்ரஸ்ஸல்ஸ் (Brussels), ஆன்ட்வெர்ப் (Antwerp), லீஜ் (Liege) ஆகியவற்றைக் கைப்பற்றிக்கொண்டார். 1747 ஆம் ஆண்டு ஹாலண்டின்மீது படையெடுத்துச்சென்றார். மற்றொரு கோடியில் மேய்ஸ்டிரிச் (Maestricht)சின் எதிரில் லாஃபல்டு (Lauffeldt) என்னுமிடத்தில் கம்பர்லண்டைத் தோற்கடிப்பதற்காக மியூஸில் (Meuse) முன்னேறினார். ஹாலந்து வீழும் தருவாயில் இருந்தது. எனவே, சமாதானம் செய்துகொள்ளப் பெரிதும் விரும்பியது. இவைகளிலெல்லாம் ஆஸ்திரியர் சிறிதும் அக்கறை காட்டியதாகத் தெரியவில்லை.

இதற்கு மாறாக, பிற்காலத்தைக் கோடிட்டுக்காட்டுபவையாகவும், நல்ல முறையில் பயன்படுத்திக்கொண்டால் நலம் பயப்பவையாகவும் உள்ள சில நிகழ்ச்சிகளைக் குறிப்பிடலாம். 1745 ஆம் ஆண்டில் மெசாச்சுசட்ஸ் (Massachusetts) அனுப்பிய கடற்படை, ஒருசில பிரிட்டிஷ் கப்பல்களோடு சேர்ந்து பிரிட்டன் முனைத் தீவில் செயின்ட் லாரன்ஸ் நதியின் திறவுகோலாக அமைந்து, லூயிபர்கைக் கைப்பற்றியது. ஆனால், அது முழுப் பயனையும் அடைய முனையவில்லை. உலகைச்சுற்றி வந்த கடற்பயண வீரரான ஆன்சன் பிரிட்டிஷ் கடற்படைத் தலைமைக்கு உரமூட்டினார். ஹாக்கும் அவரும் சேர்ந்து ஃபிரெஞ்சுக் கடற்படைக்கும் வாணிபத்திற்கும் பெருஞ்சேதம் விளைவித்தனர். இத்தகைய கடற்சண்டை கிழக்கிலும் பரவியது. 1746 ஆம் ஆண்டில் லா போர்டோனாய்ஸ் (La Bourdonnais) சென்னையைக் (Madras) கைப்பற்றினார். 1748 ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சு இந்தியத் தலைநகரான பாண்டிச்சேரியிலிருந்து பாஸ்காவனை டியூப்ளே விரட்டினார்.

மேரியா தெரீஸா பிறருடைய பணத்தில் எப்போதும் போரிடத் தயாராக இருந்தபோதிலும் போரினால் ஃபிரான்ஸ் கடுமையாக பாதிக்கப்பட்டது. ஸ்பெயினுக்காகத் தன் விரலைச் சுட்டுக்கொள்வதில் சோர்வடைந்தது. ஹாலந்து, சமாதானம் வேண்டி வாதிட்டது. பிரிட்டிஷ் காபினெட்டில் பாதிக்கும் மேலானவர் சோர்வு மனப்பான்மையினால் பீடிக்கப்பெற்றனர். பெல்ஹாம், நியூகாஸி

லுக்கு எழுதிய கடிதத்தில் 'அருமை அண்ணுவே நாம் வீழ்ந்து விட்டோம்' எனக் குறித்திருந்தார். தேசியக்கடன் 78 மில்லியன் பவுனுக உயர்ந்துவிட்டதைக் கண்டு சிக்கனத்தை விரும்பிய அவர் நடுங்கி, செஸ்டர்ஃபீல்ட் (Chesterfield) அரசாங்கத்தின் போக்கைக் கண்டித்துப் பதவியிலிருந்து விலகிக்கொண்டார். நெதர்லாந்தைக் காப்பாற்ற முடியாது என்று கம்பர்லண்டு ஆலோசனை கூறினர்.

இங்ஙனம் 1748ஆம் ஆண்டில் ஃபிரான்சோடு இணைந்து பிரிட்டனும் ஹாலந்தும் ஏற்பாடு செய்த எய்க்ஸ்-லா-சேப்பல் (Aix-la-Chpelle) உடன்படிக்கை கையெழுத்தாகியது. பிறகு இஃது ஆஸ்திரியாமீதும் சார்டீனியாமீதும் திணிக்கப்பட்டது. இவ்வுடன்படிக்கை ஃபிரான்ஸுக்குப் பெருவெற்றியாக இருந்தது. ஃபிரடரிக் ஸைலீஷியாவைப்பற்றிய பன்னாட்டு உறுதிமொழிகளைப் பெற்றார். வோர்ம்ஸில் (Worms) தரப்பட்ட வாக்குறுதிப்படி மிலானின் ஒரு பகுதியை சார்டீனியா பெற்றது. ஸ்பானிய–ஃபார்னஸ் இளவரசரான ஃபிலிப்பிற்குப் பார்மா கிடைத்தது. மற்ற இடங்களில் இந்த உடன்படிக்கை தீக்குறியினதாக இருந்தது. பிரிட்டன் சென்னைக்கு ஈடாக லூயிபர்கைத் திருப்பித்தந்தது. அமெரிக்காவில் எல்லைகளைப்பற்றி ஏதும் கூறப்படவில்லை. போட்டிக் கிழக்கிந்தியக் கம்பெனிகளுக்கிடையே போர் தொடர்ந்து நடந்தது. தடை நிலத்தில் (Barrier) வலிமையற்ற டச்சு ஆட்சி மீட்கப்பட்டது. போருக்கு ஆதிகாரணமாக இருந்த கப்பலைச் சோதனை இடும் உரிமையைப்பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. அதே சமயத்தில் பிரிட்டிஷாரின் அஸ்ஸியன்டோ உரிமை இரண்டு ஆண்டுகளில் கைவிடப்பெற்றது. இங்கிலாந்து ஆஸ்திரியாவின் கூட்டை இழந்தது. ஸைலீஷியாவை மீட்கத் துடித்துக்கொண்டிருந்த மேரியா தெரீஸா ஏற்கெனவே ஃபிரான்ஸின் பக்கம் சாய்ந்திருந்தார். கிழக்கிலே புதிதாக எழுந்த ருஷ்யாவின் உதவியை எதிர்நோக்கி நின்றார். மன்னரைப் பின்பற்றிய நியூகாஸில் பிரபு பழைய திட்டத்திற்கு அரணாக இருக்கவேண்டி அடைகாக்கும் கோழி போன்று ஜெர்மன் தேர்வாளர்களுக்குப் பல ஆண்டுகள் மானியங்களை வாரி வழங்கினர். ஆஸ்திரியாவின் போக்கினல் அனைத்தும் வீணாயின.

நல்ல குறிக்கோளோடு, ஆனால் பிளவுபட்டு மெலிந்து இருந்த பெல்ஹாமின் அரசாங்கம் செல்வாக்கை இழந்தது. பெல்ஹாம் தம்முடைய சகோதரரின் தீமை பயக்கும் கொள்கையினை மிகப் பொறுமையோடு எதிர்த்துவந்தார். கடற்படையை 8000 ஆகக் குறைத்தார். நில வரியைப் பாதியாக்கினர். ஒருசில பயனுள்ள சட்டங்களை இயற்றியதோடு தேசியக் கடனுக்கான

வட்டியை மூன்று சதவிகிதமாகக் குறைத்துச் சிறந்த தொண்டினைச் செய்தார். ஹார்டுவிக் (Hardwicke) மணவினைச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதன்மூலமாக ஃப்ளீட் மணங்கள் என்று கூறப்படும் இளைஞர்களிடையே பொறுப்பற்ற முறையில் நடக்கும் காதல் திருமணங்கள், வாலிபர்கள் பணக்காரப் பெண்களை அபகரித்துச் செல்லுதல் ஆகிய அவதூறுகளை நீக்கியது. அதன்படி திருமணம் நிறைவேறுவதற்கு மூன்று வாரங்களுக்கு முன்பிருந்தே திருச்சபையில் அது மூன்று முறை அறிவிக்கப்பெறவேண்டும் என்பது கொண்டுவரப்பட்டது. காலண்டர் சீர்திருத்தம் கொண்டு வருவதன்மூலம் நீண்ட காலமாக வெளிநாடுகளில் கையாளப்பட்டு வந்த கிரிகோரியன் முறை ஏற்றுக்கொள்ளப்பெற்றது. அதனால் 1752ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் பதினொரு நாட்கள் நீக்கியசெயல் அறியாமையிருளில் சிக்கிய வாக்காளரிடையே அச்சத்தையும் ஆத்திரத்தையும் ஊட்டியது. அக்காலத்தில் பிரிட்டிஷ் கண்காட்சிசாலை (Museum) நிறுவப்பட்டது. லண்டன் நகர மாஜிஸ்டிரேட்டுகளின் யோசனைப்படி குறிப்பாக நாவலாசிரியரான ஃபீல்டிங்கின் ஆலோசனையின்பேரில் அமர்த்தப்பெற்ற போ சாலை (Bow Street) காவலர் பெரிதும் தேவைப்பட்ட நகர காவல் படையின் வித்தாக அமைந்தனர். மாஜிஸ்ட்ரேட்டுகளும், மருத்துவர்களும், திருச்சபையினரும் ஒருமுகமாக அக்காலத்தில் மோசமானது என்றும் தீமை என்றும் கருதிய ஜின் (gin) குடிப்பதைத் தடைசெய்ய மற்றொரு சட்டத்தைக் கொண்டுவந்தார். அதுவரையில் மாற்றி மாற்றி அளிக்கப்பெற்ற கடுந்தண்டனையோ கடைபிடிக்கப்பெற்ற தாராளப் போக்கோ அப் பழக்கத்தைக் குறைக்க முடியவில்லை. லண்டன் நகரத்தில்மட்டும் 17,000 ஜின் கடைகள் இருந்ததாகக் கூறப்படுகின்றது. ஒவ்வோராண்டும் 6 மில்லியன் மக்கள் 11 மில்லியன் காலன் மதுவினை அருந்தியதாகத் தெரிகின்றது.

ஆயின், முக்கியக் காரியங்களில் விரிந்த நோக்கோ, வீரமோ அதனிடம் காணப்படவில்லை. தொழிலாளர் தங்கள் நிலையினை உயர்த்திக்கொள்வதற்காக அமைத்துக்கொள்ளும் சங்கங்களைக் கடுமையான சட்டங்கள் தடைசெய்தன. உள்நாட்டு அங்காடிகளோடு போட்டியிட்ட நியூ இங்கிலாந்து உற்பத்தியாளர் (New England manufactures) தாய்நாட்டோடு கைத்தொழில் போட்டி போடுவதை மற்றொரு சட்டம் தடுத்தது. அயர்லாந்தின் பாராளுமன்றம் தன்னுடைய வரிகளை ஒதுக்கிக்கொள்ளும் உரிமையை அடுத்து, ஒரு சச்சரவு எழுந்தது. 1753ஆம் ஆண்டு வெளிநாட்டு யூதர்களுக்கு எளிதாகக் குடியுரிமை வழங்க ஒரு சட்டம் நிறைவேறியது. ஆனால், மக்கள் அதை வன்மையாக எதிர்த்ததனால்

அந்த ஆண்டிலேயே அது ரத்து செய்யப்பட்டது. அரசியல் கொள்கையோ உண்மையான கட்சியோ அப்போதில்லை.

1745ஆம் ஆண்டுப் புரட்சியினால் சீர்குலைந்து இருந்த டோரிகள் பண்ணையாளர் சிலரின் கூட்டமாக வாழ்ந்தனர். அவர்கள் ஹனோவிரியர், பதவியாளர், அரச சபையினர் ஆகியவருக்கு எதிராகத் தங்கள் உரிமையை நிலைநாட்ட முயன்றனர். கூலிப்படைக்கு எதிராக நாட்டுப்படைக்காகவும், திருச்சபைக்கு எதிராகப் 'புறச் சமயத்தவருக்'காகவும் பரிந்து பேசினர். 1751-ல் பாலிங்புரோக் இறந்தார். அவருடைய செல்வாக்கு மறைந்தது. அவருடைய சீடர்களில் கோவரைப்போன்ற பாதிக்கு மேற்பட்டவர்கள் பெல் ஹாமோடு சேர்ந்துகொண்டனர். இப்பொழுது கட்சிகள் அரசியலை வகுக்கவில்லை. சொந்த விருப்பு வெறுப்புகளும் மாறுபட்ட மன்னர் குழுக்களும்தான் பிளவிற்குக் காரணமாக அமைந்தன. நியூகாஸிலின் தனி அதிகார வேட்கை பெட்ஃபோர்டு (Bedford) குழுவினரை 1751ஆம் ஆண்டில் வெளியேற்றியது. அதே ஆண்டில் வேல்ஸ் இளவரசரான ஃபிரடரிக் இறந்தார். கம்பர்லண்டின்மீது பொறாமைகொண்டு சமாதானத்தையும் ஹனோவரையும் தாக்கிப் பேசியதே அவரது இறுதிச்செயல்களாக இருந்தன. கெட்ட பெயரெடுத்த பப் டாடிங்டன் (Bubb Dodington) போன்ற பதவி வேட்டைக்காரர்கள், ஒருசில டோரிகள், சில மனக்குறையுள்ள விக்குகள் ஆகியோர் அடங்கிய தன்னலக் கும்பல் ஒன்றினை உருவாக்கினர்.

அவருடைய மனைவியார் தம்முடைய மகனை மன்னரிடமிருந்தும் கம்பர்லண்டிடமிருந்தும் காப்பதற்காக அக் கும்பலைத் தொடர்ந்து போற்றிவந்தார். மன்னருக்கு வயது முதிர்ந்துவிட்டது; புதிய ஆட்சியில் பாதுகாப்பாளராக வரப் போட்டி எழும் என்று எதிர் பார்க்கப்பட்டது. எனவே, பெட்ஃபோர்டும் அவருடைய திறமை மிக்க சீடரான ஹென்றி ஃபாக்ஸும் (Henry Fox) கம்பர்லண்டு பிரபுவைப் பின்பற்றினர். அதே சமயத்தில் இளவரசியாரோடும், அவருக்கு நெருங்கிய ஆலோசகராக இருந்த பூட் (Bute) டோடும் நேச உறவை வளர்க்க பெல்ஹாம்கள் முயன்றனர். அப்போது சம்பளப் பட்டுவாடா செய்யும் பதவியை வகித்துவந்த இங்கிலாந்தில் தலைசிறந்து விளங்கிய வில்லியம் பிட் செல்வாக்கு மிகுந்த பதவியேதும் வகிக்காது பின்னணியிலேயே இருந்தார். பிட், வால்போலின் வீழ்ச்சிக்கு உதவியதாலும், கார்ட்டரட்டைப் பதவியிலிருந்து வெளியேற்றியதாலும், ஹனோவரைக் கேலிசெய்து இழிவுபடுத்தியதாலும் அவர்மீது மன்னர் கொண்ட குறையாத வன்மம்தான் இந்நிலைக்குக் காரணமாக இருந்தது.

பிட் இவ்வாறு மனம் நொந்து இருந்த சமயத்தில் ஃபாக்ஸ் முதன்மை இடத்தைப்பெற முயன்றுவந்ததைக் கண்டார். **1754**-ல் ஹென்றி பெல்ஹாமும் மறைந்தார். விக்கு கட்சிப் பெருமக்கள் ஃபாக்ஸ், கம்பர்லண்டின் கையாள் என்ற பயத்தினாலும், பிட்டின் நியமனம் மன்னரின் மனதைப் புண்படுத்தும் என்பதாலும், புகழ் பெருதவரும் நேர்மையான ராஜதந்திரியுமான சர் தாமஸ் ராபின்ஸன் (Sir Thomas Robinson) என்பவரைப் பொதுமக்கள் சபையின் தலைவராக்கினர். நியூகாஸிலைப் பிரதம மந்திரியாக்குமாறு மன்னருக்கு ஆலோசனை கூறினர். மன்னர், பிட், ஃபாக்ஸ் ஆகிய அனைவரது வெறுப்பினைப் பெற்ற இத் திட்டம் நீண்டநாட்கள் நிலைபெற முடியவில்லை. இந்தியாவில் பிரிட்டிஷ், ஃபிரெஞ்சு அதிகாரிகளின்கீழ் உருவாகிய பகைநாட்டுப் படைகளின் பெருக்கம், கர்னல் ஜார்ஜ் வாஷிங்டனின் தலைமையில் இருந்த வர்ஜீனிய நாட்டுப்படை ஃபிரெஞ்சுப் படையின் தாக்குதலால் பின்வாங்கியது போன்ற போருக்கு அறிகுறியான செய்திகள் வந்த நிலையில், நிலைமை மேலும் சீர்குலைந்தது.

## சமகால நிகழ்ச்சிகள்

*1725* மஹா பீட்டரின் மரணம்.
விகோ (Vico) என்பவர் 'Scienza Nuova' வெளியிடல்.
கை (Guy) மருத்துவமனைக்குக் கால்கோள் இடல்.

*1726* ஸ்பெயினில் ரிப்பர்டாவின் (Ripperda) வீழ்ச்சி.
ஸ்விப்டின் (Swift) 'Gulliver's Travel' வெளிவரல்.

*1727* ஜிப்ரால்டர் முற்றுகை.
கே (Gay) என்பவரின் 'Beggars Opera'.

*1729* செவில் உடன்படிக்கை.
வெஸ்லிகள் (Wesley) ஆக்ஸ்ஃபோர்டு கூட்டங்களைத் தொடங்குதல்.
பர்கின் பிறப்பு.

*1732* போப்பின் (Pope) 'Essay on man'.

*1733* போலந்து வாரிசுஉரிமைப் போர்.

*1734* இத்தாலியில் டான் கார்லோக்கள் (Don Carlos).

*1736* பட்லருடைய 'Analogy of Religion'.

*1737* ஃபிளாரன்ஸில் மெடிசி குடும்பத்தின் முடிவு.

*1739* பாரசீகத்தின் நாதிர் ஷா டில்லியை அழித்தல்.
ஹியூம் என்பவரின் 'Treatise of Human Nature'.

1740 பேரரசர் சார்லஸின் மறைவு. ஆஸ்திரிய வாரிசு உரிமைப் போர் தொடக்கம்.
தாம்சன் எழுதிய 'Rule, Brittannia'.
–1786. மகா ஃபிரடரிக் பிரஷ்யாவை ஆளுதல்.

1741 டூப்ளேயின் ஃபிரெஞ்சு இந்திய ஆட்சித்தொடக்கம்.
ஹாண்டலுடைய 'Messiah' வெளிவரல்.
பேரிங்கின் தலைமையில் ரஷ்யர்கள் அலாஸ்காவில் குடியேறுதல்.

1742 போப்பின் 'Dunciad'.

1743 வால்டேர் ஃபிரடரிக்கைச் சென்று காணுதல்.

1745 அமெரிக்கப் படைகள் லூயிபர்கைக் கைப்பற்றுதல்.
ஸ்விஃப்டின் மரணம்.

1746 டெடிராட் எழுதிய 'Pensees philosophiques'.

1747 அஹமத் ஷா துரானி ஆப்கானிய அரசைத் தோற்றுவித்தல்.

1748 மான்டஸ்கியூவினுடைய 'Esprit des lois'.

1749 ஆஸ்திரியாவில் கௌன்ட்ஸ் முதலமைச்சராதல்.
ஃபீல்டிங் எழுதிய 'Tom Fones'

1750 போர்ச்சுகலில் போம்பால் (Pombal) அதிகாரத்திற்கு வருதல்.
ஜான்சன் 'Rambler' என்னும் நூலைப் பதிப்பித்தல்.

1751 மேஸனும் டிக்ஸனும் அமெரிக்காவில் எல்லைகளை வகுத்தல்.
டிடெராட்டும், டி' அலம்பர்ட்டும் (d' Alembert) கலைக் களஞ்சியத்தைப் (Encyclopaedia) பதிப்பித்தல்.
லின்னஸ் (Linnaeus) என்பவர் எழுதிய 'Philosophia Botanica'.

1752 கிரிகோரியன் காலண்டரை (Gregorian calendar) பிரிட்டன் ஏற்றுக்கொள்ளல்.

1753 ஒஹியோவிலும் மிஸ்ஸிஸிப்பிலும் டூகொய்ஸ்னே (Duguesne) செல்லுதல்.
ஹோராஸ் வால்போல் (Horace Walpole) ஸ்ட்ராபெர்ரி ஹில்லைக் (Strawberry Hill) கட்டுதல்.
ரிச்சர்ட்சன் (Richardson) எழுதிய 'Sir Charles Grandison'.

1754 வால் (Wall), ஸ்பெயினின் பிரதம மந்திரியாக வருதல்.
'சமத்துவமின்மை' (Inequality) பற்றிய ரூஸோவின் கட்டுரை.

# 9. மூத்த பிட்டும் ஏழாண்டுப் போரும், 1754-1763

## (The Elder Pitt and the Seven Years' War)

1754லிருந்து 1783 வரையிலான காலப்பகுதி, ஒரு புதிய பிரிட்டிஷ் பேரரசு, அயர்லாந்தில் புரட்சி, புதிய பிரிட்டிஷ் அரசியல் கட்சிகள் ஆகிய கனிகளைக்கொண்டு விளங்கியது. இக் காலப் பகுதியில் முக்கியத் தலைவர்களாக விளங்கியவர்கள், பிற்காலத்தில் சாத்தம் பிரபுவாக (Lord Chatham) விளங்கிய வில்லியம் பிட்டும், மூன்றும் ஜார்ஜுமேயாவர். அரசர் அரியணையேறுமுன் அமைச்சரது அதிகாரம் மேலோங்கி இருந்தது.

பிட், சட்டதிட்டங்களுக்கு அப்பாற்பட்ட அரசியல் மேதைகளின் பரம்பரையைச் சார்ந்தவர். அவருடைய குலத்தில் தாராளமாகச் செலவிடும் பண்பு காணப்படுகிறது. ஒரு காலத்தில் சென்னையின் கவர்னராக இருந்த அவரது பாட்டனாகிய பிட், இந்தியாவிலிருந்து தாம் கொண்டுவந்த வைரக் கல்லை விற்று, பணத்தைத் தம்முடைய சிறிய பரோக்களில் (pocket boroughs) செலவிட்டார். இப் பண்பு சில சமயங்களில் வரம்பு மீறிய பைத்தியக்காரத்தனமாகவும் மாறியிருக்கின்றது. அத்தகையோரின் பேரனாகிய பிட், கீல்வாதத்தினாலும் நரம்புத் தளர்ச்சியினாலும் பாதிக்கப்பட்டு, தற்பெருமையும், ஏளனமாகப் பேசும் தன்மையும் பெற்று இருந்ததனால், அமைச்சர் குழுவில் (Cabinet) பிறர் நன்கு பழக முடியாதவராய் விளங்கினார். அக்கிலஸ் படைகளைத் தலைமை தாங்கி நடத்திச் செல்லவேண்டும் அல்லது கூடாரத்தில் அமர்ந்து கிடக்கவேண்டும். இந்த இரண்டும் கெட்ட நிலையில் இருந்ததனால்தான் அமைச்சர் குழுவில் (Cabinet) பிட் கடினமானவராக இருந்தார். வாழ்க்கையையே ஓர் அவல நாடகமாக அவர் கருதிய காரணத்தால் தாம் சிறப்புற்று விளங்கிய காலத்தும் நடிக இயல்பு பெற்றே காணப்பெற்றார். தமது ஊன்றுகோல், கருப்பு மென்பட்டு போன்றவற்றையும் நாடக

அணிகலன்களாக மாற்றிவிட்டிருக்கின்றார். தாம் எழுதிய சொந்தக் கடிதங்களில்கூட, வாழ்க்கையை ஒரு நாடகமாகக் காட்டியிருக்கின்றார். பணத்தைப் பொறுத்தவரையில், கண்மூடித்தனமாகக் கட்டடங்கள், மனைகள் வாங்குவதில் வாரி இறைத்தார். மேல் நிலைக்கு வரவேண்டும் என்னும் பேரவா அவரிடம் மிகுந்து காணப்பெற்றது என்பதை, இரண்டாம் ஜார்ஜ் ஆட்சிக்காலத்தில் பல ஆண்டுகள் அவர் கீழ்நிலையிலேயே வைக்கப்பட்டிருந்தபோது, கட்சிக் குழுக்களோடும், யார்மவுத்சீமாட்டி (Lady Yarmouth), பூட் பிரபு (Lord Bute) ஆகியவரோடும் சேர்ந்து செய்த சூழ்ச்சிச் செயல்களால் அறிகிறோம்.

படைவீரராக வளர்க்கப்பெற்ற பிட், செயல்திறம் படைத்தவரேயொழிய சட்டம் செய்வோர் அல்லர். ஆயின், அவர் எக்காலத்தும் காணமுடியாத ஒப்புயர்வற்ற பிரிட்டிஷ் பேச்சாளராகவும் இருந்தார். அவருடைய கண்களைக் கழுகுக் கண்களுக்கு ஒப்பிடுவர். தம் வாதத்திறமையினால் எதிரிகளைத் தீக் கொண்டு பொசுக்கிவிடுவதுபோல் தோற்றமளிப்பார். சாவரக்கனின் அழிவு வேலையைப் பார்த்தபோதும், ஹனோவரின் சின்னத்தைக் கண்ணுற்றபோதும், ஆர்மடா (Armada) போரின் வெற்றிச் சிலைகளைப் பிரபுக்களுக்குக் காட்டியபோதும், அதுபோன்ற மற்றச் சமயங்களிலும், திடீரெனக் கிளம்பும் உள்வேகத்தினால் அவரது சொற்பொழிவுகளில் தீப்பொறி பறக்கும். அவர் தம்மை ஒத்த குணங்களைப் பெற்ற மகா ஃபிரடரிக், கிளைவ் போன்றவர்மீது இரக்கம் காட்டினார். அவரால் தெரிவு செய்யப்பெற்ற இளம் படைத்தலைவர்களான உல்ஃப் (Wolfe), முர்ரே (Murray), கெப்பல் (Keppel), ஆம்ஹர்ஸ்ட் (Amherst), ஹோ (Howe) ஆகியவர்கள் போரிடுவதில் புகழ் மிகுந்து விளங்கினார்கள். கொள்கை வகுப்பதில் துணிகரமான செயல்களையும் நடைமுறைத் திறத்திற்கு ஒத்த கருத்துகளையும் இணைத்தார். மைனார்க்காவை அளித்து ஜிப்ரால்டரைப் பெற்றுக்கொண்ட துணிவு, கனடாவின் மும்முறைத் தாக்குதல், கடற்படையைப் பரவலாகப் பயன்படுத்துதல் ஆகிய இவை இரண்டிலும் படையின் பெயர்ச்சி, சாதனங்கள் தடையின்றி அளித்தல் உள்பட எல்லாச் செய்திகளையும் நுட்பமாகக் கவனித்துச் செயலாற்றுதல் போன்றவை இதற்குச் சான்றாக விளங்குகின்றன.

அடிக்கடி நிதானமிழத்தல், கர்ப்புக் கொள்ளுதல், அறியாமை போன்ற குறைபாடுகள் முதலியன அவரிடம் இருந்தன. எனினும், உள்ளத்தே அன்பு நிறைந்தவராகவும், உயர்ந்த உள்ளம் படைத்தவராகவும், கடவுள் பக்தி மிகுந்தவராகவும் விளங்கினார். ஃபாக்சைப்

## BRITISH NORTH AMERICA
## 1763

English Miles

0 100 200 300 400 500

- English Settlements to 1763
- Limits of French control to 1763
- Limits of Spanish control to 1763
- Western boundary of territory gained by England by Treaty of Paris, 1763
- Ft. Oswego — English forts underlined black
- Crown Point — French forts underlined red

West from 80 Greenwich

(Fox) போலல்லாது, படைவீரர்க்குச் சம்பளம் வழங்குபவரின் ஏராளமான லாபத்தைத் தாம் ஏற்க மறுத்தார். அக் காலத்தில் சில எளிய கருத்துகளே இங்கிலாந்தையும் அமெரிக்காவையும் ஊக்குவித்தன. அக் கருத்துகள் பின்வருமாறு மக்கள் பக்கம் சார்ந்திருந்தால்தான் விக்கு (Whig) கட்சி பிழைக்க முடியும். ∴பிரான்ஸ் ஒரு பகைநாடாகும். மகா சாசனத்தில் குறிப்பிடப் பெற்ற உரிமைகள் எல்லா ஆங்கிலேயருக்கும், எல்லா அமெரிக்கருக்கும் சொந்தமானவை. உரிமை வேட்கை உள்ள மக்களுக்கும் பிராட்டஸ்டென்டு சமயம் பொதுவானதாகும். மக்கள் மனதில் ஆழமாகப் புதைந்து கிடக்கும் அவாவினைத் தூண்டுதல்மூலமாகப் புரட்சி மனப்பான்மை பெருகி இருந்த ஹைலாந்துகளில் (High Lands) பிட், உன்னதமான படைவீரர்களைத் திரட்டினுர். 1757-ல் இயற்றப்பெற்ற நாட்டுச்சேனைச் சட்டத்தினல் நடைமுறையில் முதன்முதலாக ஒரு நிரந்தரப் படையும் அடுத்து ஒரு துணைப் படையும் நிறுவப்பட்டது. தம்மையே அரசாங்கத்தின் தலைவராக நியமிக்கவேண்டுமென்று இரண்டாம் ஜார்ஜை வற்புறுத்திய பிரிட்டிஷ் மக்களிடையேயும், தமக்குச் சிலைகளை எடுத்த அமெரிக்கரிடையேயும் விளம்பரத்திற்கு அஞ்சாத பிட், ஆழ்ந்த அறிவின் அடிப்படையிலன்றி ஒருவகையான உள்ளுணர்வில் கண்ட பொதுவான கொள்கைகளை வெளியிட்டார். உயர்பதவியில் இருந்தோரிடம் வெறுப்பு, ஹனேவரைப்பற்றிய அருவருப்பு, வரிவிதித்தலும் பிரதிநிதித்துவமும் பிரிக்கமுடியாத அளவிற்கு இணைந்து நிற்பவை முதலானவை அவற்றிற் சிலவாகும்.

பிட் என்பவர் தம்முடைய வாழ்நாள் முழுவதும் கட்சிப் பிளவுகளைக் கடுமையாகத் தாக்கிவந்தார். மனிதர்கள் முக்கியமல்லர்; அவர்தம் செயல்கள்தான் முக்கியம் எனக் கூறியவர். மூன்றும் ஜார்ஜ் எத்துணை அளவிற்கு அரசியல் கட்சிகளை அழித்திருக்கின்ருரோ, அத்துணை அளவிற்குப் பிட்டும் பங்கு பெற்று இருக்கின்ருர். ஹெஸ்தர் கிரன்வில்லை மணந்ததன்மூலமாக, வால்போலினுடைய ஊழலை எதிர்த்த கட்சியாளரையும் கார்ட்டரட்டினுடைய (Carteret) ஹனேவிரியக் கொள்கையைத் தாக்கிய வலிமை பொருந்திய கூட்டத்தினரையும் ஒன்று திரட்டினுர். நியூகாஸிலின் திறமையின்மையினையும் வெறுத்தார். யாகோபியருக்கு (Jacobite) எதிரான பிராட்டஸ்டென்டு சமயத்தவர் என்ற முறையில், அவர் ஒரு விக்கு (Whig) ஆவார். சிறந்த பேச்சாளரும் பிட்டிற்குப் போட்டியாய் வரக்கூடியவருமான வில்லியம் முர்ரே என்பவரை அடக்குவதற்கு இப் பண்பு பயன்பட்டது. ஸ்காட்லாந்தைச் சேர்ந்த யாகோபியக் குடும்பத்தைச் சார்ந்த முர்ரே பிற்

காலத்தில் மான்ஸ்∴பீல்டு பிரபுவாகி, மூன்றும் ஜார்ஜின் பிரபுவாகி, ஆலோசகர்களில் செல்வாக்கு மிக்கவராக விளங்கினர். பதவி வேட்டையில் இறங்கிய செல்வந்தருக்கு, பிட் வேறு துருவமாக இருந்தார். அவரை நன்கு அறிந்த பாலிங்புரோக்கும், வயதான மார்ல்பரோ கோமகளும் அவரிடம் நம்பிக்கை வைத்திருந்தனர். பெக்∴போர்டு, மற்ற லண்டன் நகர வணிகர்கள், தீரச் செயல்கள் புரிந்தவரும் ஆயிலஸ்பரி (Aylesbury) யின் அங்கத்தினருமான ஜான் வில்க்ஸ் (John Wilkes) போன்ற தீவிரவாதிகளோடு தொடர்பு வைத்திருந்தார். டோரி கட்சியில் சுயேச்சையாளராக இருந்தவரிடம் அவருக்கு ஈடுபாடு அதிகம் உண்டு. அதற்குக் காரணம் அவர்கள் உரிமை விரும்பிகள் மட்டுமல்லர்; ஹனேவர் குலத்தை வெறுத்தவர்கள் என்பதோடு, அவரைப்போலவே உறுதியான வலிமைமிக்க அரசாட்சியை விரும்பியவர்கள். இளைஞரான இளவரசர் ஜார்ஜின் சபையினரோடு அவர் தாற்காலிகமாகக் கூட்டு சேர்ந்தது இதனை விளக்குகின்றது. நாட்டுப் பற்று மிகுந்த பலர், பிட்டிற்கும் பூட் (Bute)டிற்கும் இடையே காணப்பெற்ற ஒற்றுமையினைப் பெரிதும் வரவேற்று, அதில் பெரும் நம்பிக்கை வைத்திருந்தனர். குறிப்பாக, 1755-ல் மன்னரின் அன்பைப் பெற்ற கம்பர்லண்டின் பிரதிநிதியான ஹென்றி ∴பாக்ஸை (Henry Fox) நியூகாஸில் பிரபு அமைச்சர் குழுவில் சேர்த்துக்கொண்டபோது இத்தகைய நம்பிக்கை துளிர் விட்டது. ஏனெனில், அவர்களின் கூட்டுச் செல்வாக்குக் காரணமாக நிச்சயமாகத் தோன்ற இருந்த போர், துரிதப்படுத்தப் பெற்றது.

ஆஸ்திரிய உரிமைப்போரில் ஏற்பட்ட பண விரயம் காரணமாகவும், உள்நாட்டுப் பூசல்களினுல் நாடு சீர்குலைந்திருந்ததனுலும், கப்பற்படையைப் புதுப்பிக்கவேண்டிய தேவை ஏற்படுமாகையாலும், ஒரு புதிய போரில் ஈடுபட ∴பிரான்ஸ் விரும்பவில்லை. ஆனுல், இரண்டு வகையான காரணங்களினுல் இரு பூசல்களாகத் தோன்றி, ஒன்ருக இணைந்த போர் எழுந்தது. ஆஸ்திரியா தன்னுடைய முன்னுள் நட்பு நாடுகளோடு கொண்ட முரண்பாடும், ∴பிரடரிக்கின் அண்டை நாடுகளான ரஷ்யா, சாக்சனி ஆகியவற்றின் துணைகொண்டு சிலீஷியாவைத் திரும்பக் கைப்பற்ற வேண்டும் என எண்ணியதும் முதற்காரணமாக அமைகின்றன. ஹனேவருக்கு ஆபத்து இல்லை எனின் இரண்டாம் ஜார்ஜ் இதைக் கண்டும் காணுததுபோல் இருந்துவிடுவார். கார்ட்டரட் தொடர்பு கொண்ட போரைப் போன்ற மற்ருெரு போருக்குப் பாராளு மன்றத்தின் ஆதரவைப் பெறுவதற்காக நியூகாசில் செய்த முயற்சி பலிக்கவில்லை. பழைய நட்புறவை நீடிக்கச் செய்ய

வேண்டுமென்ற அவரது வாதம் எடுபடவில்லை. அதற்குக் காரணம் அத்தகைய போக்கு ஏராளமான உதவி மானியங்கள் வழங்கவேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்துவதோடு பிரஷ்யாவைத் துண்டாடும்படி செய்தாலும் செய்யலாம் என்பதுதான். 1755-ல் உதவிமானியப் பெருக்கத்தையும் ஜெர்மானிய முறைகளையும் எதிர்த்ததனால் பிட் பதவியிலிருந்து விலக்கப்பெற்றார். அவரோடு ஜார்ஜ் கிரன்வில்லும் பதவிநீக்கம் பெற்றார். அதற்கு முன்பே ஃபிரான்ஸுடன் போர் ஏற்படுவதற்கான பிற காரணங்கள் தோன்றின. பிரிட்டனின் நேசக்கொள்கைக்கு ஆஸ்திரியா பரிவு காட்டவில்லை. ஹாலந்து நடுநிலைமை நாடாக இருக்க முடிவு செய்துவிட்டது. நட்பு நாடுகளை நாடி அலைந்த பிரிட்டன், ரஷ்யப் படையெடுப்பை எதிர்பார்த்து அஞ்சி இருந்த ஃபிரடரிக்குடன் 1756 ஜனவரியில், வெஸ்ட்மினிஸ்டர் உடன்படிக்கை (Convention of Westminster) செய்துகொண்டது. அதன்படி பிரஷ்யாவும் ஹனோவரும் ஒன்றை ஒன்று பாதுகாத்துக்கொள்ள முன் வர வேண்டும். இச் செயலினால், ஆஸ்திரிய அமைச்சர் கானிட்ஸ் வற்புறுத்தி வந்த நட்புறவு மாற்றத்தை ஃபிரான்ஸ் ஏற்கவேண்டியதாயிற்று. மே திங்களில் ஏற்பட்ட முதல் வெர்செயில் உடன்படிக்கையின்படி இங்கிலாந்திற்கும் ஃபிரான்சுக்கும் போர் மூண்டால் ஆஸ்திரியா நடுநிலைமை வகிப்பது என்றும், பிரஷ்யா தாக்குமானால் ஃபிரான்சும் ஆஸ்திரியாவும் ஏற்றுக்கொண்டு உதவி செய்யவேண்டுமென்றும் வகுக்கப்பட்டது. இதுவரையில் பாதுகாப்பை விரும்பிக் கையாளப்பெற்ற பிரிட்டிஷ் அரசியல் தந்திரம் ஃபிரான்சோடு போர் மூளுவதற்கு ஏதுவாயிற்று.

எனினும் இவ்விரு அரசாங்கத்தின் விருப்பத்திற்கு அப்பாற்பட்டு, நீண்டகாலமாக இருந்து வந்த சில காரணங்களினால் இப்போர் எழுந்தது என்று கூறலாம். 1748-லிருந்து போட்டிக் கம்பெனிகளுக்கிடையே இந்தியாவில் எழுந்த பூசல் நின்றபாடில்லை. பகையரசர்களுக்காக ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியும், ஃபிரெஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பெனியும், வாணிபச் சலுகை பெறுவதற்காகவும் கோட்டைக் கொத்தளங்களைப் பெறுவதற்காகவும் சிறுசிறு போர்களில் ஈடுபட்டுவந்தன. இப்போர்கள் கர்னாடகக் கரையிலும் ஐதராபாத்திலும் நிகழ்ந்தன. இவைகளில் முக்கியமானவராக இருந்தவர் பாண்டிச்சேரியின் கவர்னராக இருந்த டியூப்ளேயாவார். அவர் வாணிபப் பெருக்கத்திற்குப் பிரதேச விஸ்தரிப்பு இன்றியமையாதது என நினைத்தார். போர்த்திறமையும் அரசியல் தந்திரமும் பொருந்திய பேரறிஞனை புஸ்ஸியின் துணைகொண்டு ஃபிரெஞ்சுக்காரர் தலைமையில் இந்தியப் பட்டாளங்களை நிறுவினார் என்றாலும்,

தலைசிறந்த இரண்டு ஆங்கிலேயரான ஸ்டிரிங்கர் லாரன்ஸும் (Stringer Lawrence) ராபர்ட் கிளைவும் பிரிட்டிஷாரின் நிலையினைக் காத்தனர். முதலில் கர்னாடகத்தின் தலைநகராகிய ஆர்க்காட்டை 1751ஆம் ஆண்டில் கைப்பற்றியதன்மூலமாகக் கிளைவ் அழியாப் புகழடைந்தார். அடுத்தபடியாகத் தாம் கைப்பற்றிய கோட்டையை வெற்றிகரமாகக் காத்தார். பரந்த பகுதியில் படையினை வைத்துக் காப்பதும், பொருளாதார நெருக்கடியும் ஃபிரெஞ்சுக் கம்பெனியின் வலிமையைக் குறைத்தன. 1754-ல் டியூப்ளே திரும்ப அழைக்கப்பட்டார். எனவே, இந்தியா ஒரு தீர்வு காணுத சிக்கலாக விடப்பட்டது என்ருலும் அது போர் மூளுவதற்கான சமயம் அன்று.

போர் ஏற்படுவதற்கான காரணம் ஒன்று அமெரிக்காவில் தோன்றியது. அங்கே ஃபிரெஞ்சுக்காரர், நெருக்கடி காலத்தில் வன்முறைச் செயல்களில் ஈடுபட்டு இருந்தபோதிலும் பொது வாகத் தற்காப்பையே அடிப்படையாகக்கொண்டு வாழ்ந்தனர். ஏனெனில், இரண்டு மில்லியன் அமெரிக்கருக்கு எதிராகக் கனடா வில் ஏறக்குறைய ஐம்பத்தைந்தாயிரம் ஃபிரெஞ்சு மக்களே வாழ்ந் திருந்தனர். அப்போது இருந்த நிலையில் நாட்டு எல்லைகள் மாருமல் இருப்பதற்கில்லை. உட்ரக்ட் சமாதானத்தினுல் (Peace of Utrecht) நியூபவுண்டுலாந்து, நோவா ஸ்கோஷியா (Nova Scotia), ஹட்சன் விரிகுடா ஆகியவற்றில் கனடாவின் புறக் கோட்டைகள் பிரிட்ட னுக்குக் கிடைத்தன. என்ருலும், எல்லைகள் சரியாக வகுக்கப் பெறவில்லை. நோவா ஸ்கோஷியாவைக் கடல் பக்கமாக எதிர் நோக்கி இருந்த ப்ரெட்டன் முனைத் தீவில் லூயிஸ்பர்க் என்னும் வலிமை மிக்க தளத்தினை ஃபிரெஞ்சுக்காரர் அமைத்திருந்தனர். அது 1748-ல் திரும்ப அவர்களுக்கு அளிக்கப்பட்டபோது, அதற்கு எதிரில் பிரிட்டிஷார் ஹாலிஃபாக்ஸ் என்னுமிடத்தில் ஒரு ராணுவக் குடியேற்றத்தை ஏற்படுத்தினர். கத்தோலிக்கச் சமயம் பரப்புக் குழுவினரால் கொந்தளிப்பு நிலைக்குக் கொண்டு வரப்பெற்று இருந்த ஃபிரெஞ்சு அகேடியர் பிரிட்டிஷ் ஆட்சியை விரும்பவில்லை.

வடக்கில் இவ்வித இழப்புகள் ஏற்பட்டதால் ஃபிரெஞ்சுக்காரர் வேறு திசையில் திரும்பினர். தூரத் தெற்கில் மெக்ஸிகோ விரி குடாவில், லா சல்லி (La Salle) தோற்றுவித்த குடியேற்றத்தில் அவர்கள் கவனம் சென்றது. அங்கே லூசியாஞு என்னும் புதிய மாநிலம் எழுந்தது. மிஸ்ஸிஸிப்பி கழிமுகத்தில் தோன்றிய நியூ ஆர்லியன்ஸ், அதன் தலைநகரமாக அமைந்தது. அதுவரையில் சமயப் பரப்புக் குழுவினர்மூலமாகவும், மென்மயிராடை வணிகர் மூலமாகவும், கனடாவிற்கும் லூசியாஞுவிற்கும் ஏற்பட்ட

தொடர்பினை வலுப்படுத்துவதே ஃபிரெஞ்சுக்காரருடைய நிலையான குறிக்கோளாக இருந்தது. அவர்களுடைய வாணிபக் களங்கள் கனடாவின் தலைநகரமாகிய மான்ட்ரீலின் முத்திசையிலும் பரவி இருந்தன. மேற்குத் திசையில் டெட்ராய்ட் (Detroit) வழியாகக் கடக்கப்படாத ஏரிகள், பரந்த புல்வெளிகள் வரை பரவியது. தெற்கிலும், தென்கிழக்கிலும் உள்ள ரிசிலியூ (Richelieu) ஆற்றிலிருந்து சாம்ப்லெய்ன் (Champlain) ஏரிக்குச் சென்று அதன்மூலமாக நியூயார்க் பகுதியை அடைந்தனர். சாம்ப்லெய்ன் ஏரிக்கரையின்மீது கிரௌன் பாயின்ட்டிலும் டிகோண்டரோகா (Ticonderoga) என்னுமிடத்திலும் கோட்டைகளைக் கட்டினர். இவ்விரு எல்லைகளுக்குள் ஒன்டாரியோ ஏரியைச் சுற்றிக் கடந்து ஈரி (Erie) ஏரியை இணைக்கும் நயகரா தீபகற்பத்துக்குச் சென்றனர். அங்கிருந்து அல்லிகனி (Alleghany) ஐம்பது மைல் தொலைவில்தான் இருந்தது. அல்லிகனியை அடைந்துவிட்டால், நீர் வழியாக ஓஹியோ ஆற்றை அடைந்து அதன் வழியாக மிஸ்ஸிஸிப்பி ஆற்றைச்சென்று அடையலாம். இப்படியாகக் கனடாவிலிருந்து நெடுந்தொலைவில் உள்ள லூசியானவை அடையும் குறிக்கோளை ஃபிரெஞ்சுக்காரர் நிறைவேற்றத் துணிந்தனர். அவர்களுடைய திட்டம் நிறைவேறி இருக்குமானல் பிரிட்டிஷாரின் மேற்கு முக விஸ்தரிப்புத் தடைப்பட்டு அவர்களுடைய குடியேற்றங்கள் கடற்கரையோடு நின்றிருக்கும். ஆனல், ஒவ்வொரு கட்டத்திலும் ஃபிரெஞ்சுக்காரர் நியூயார்க்கிலிருந்து சென்ற முனைவரோடு போராடவேண்டியிருந்தது. வர்ஜீனியர், ஓஹியோ நிலக் கம்பெனி, கரோலின வணிகர் சங்கம் ஆகியவற்றை அமைத்து முன்னேறினர். இவ்விரு நாட்டினருக்கிடையே மோதல் தவிர்க்க முடியாமைக்கு மற்றொரு காரணம் இந்த விவாதத்திற்கிடமான பகுதி 'ஆறு நாட்டினர்' (six nations) என்று அழைக்கப்படும் இராகோயிஸ் இந்தியரைச் (Iroquois Indians) சார்ந்ததாகும். உட்ரக்ட் (Utrecht) சமாதானப்படி அவர்கள் பிரிட்டிஷ் குடிமக்கள் என அறிவிக்கப்பட்டாலும் பிரிட்டிஷாரின் நாடு பிடிக்கும் கொள்கையினல் ஆத்திரமடைந்தனர். ஃபிரெஞ்சுக் கையாட்கள் இத்தகைய கோபக் கனலுக்குத் திறமையாகத் தூபம் போட்டனர். இந்தியர் அறியாத நிலையில் பிரிட்டிஷ் கோட்டைகளும் ஃபிரெஞ்சுக் கோட்டைகளும் எழுந்தன. அதே சமயத்தில் வேட்டைக்காரரும் நிலமளப்பவரும் மனிதர் புகாத காடுகளில் புகுந்து முன்னேறினர்.

மேற்கிந்தியத் தீவுகளில் உற்பத்தியாகும் பொருள்கள் அமெரிக்க உணவுப்பொருள்களுக்கு ஈடாகக் கிடைத்தன. மேலும் அத் தீவுகளில் உள்ள துறைமுகங்கள் பகைவர் கடற்படைக்குத் தகுந்த புகலிடம் அளிக்கக்கூடியவை. எனவே, இத் தீவுகளைக்

குறித்து அமெரிக்காவிற்கு மிக முக்கியமான மூன்றாவது சிக்கல் தோன்றியது. அங்கே ஃபிரெஞ்சுக்காரர்கள், மார்டினிக் (Martinique), காடிலோப் (Guadeloupe) ஆகிய பகுதிகளில் பிரிட்டிஷாரை விட வளமாக வாழ்ந்தனர். பிரிட்டிஷாரின் சிறந்த தோட்டங்களெல்லாம் வளமிழந்து வெறுமையாகிவிட்டதனால் அவர்கள் கரும்புச் சாகுபடியிலேயே அளவுக்கு மீறிய கவனம் செலுத்தினர். மேலும் செயின்ட் லூசியா (St. Lucia), மற்றும் மூன்று தீவுகளின் உரிமைபற்றிய சிக்கல் தீர்க்கப்படாமலேயே இருந்துவந்தது.

1753–4-ல் வர்ஜீனியர், அல்லிகனி (Alleghany) ஒஹியோவோடு கலக்கும் இடத்தில் ஒரு கோட்டை கட்ட முனைந்தபோது, ஃபிரெஞ்சுக்காரருடன் மோதல் ஏற்பட்டது. அந்த இடத்தில் ஃபிரெஞ்சுக்காரர் ஏற்கெனவே டுகொய்ஸ்னே (Duquesne) கோட்டையைக் கட்டிக்கொண்டு இருந்தார்கள். கர்னல் வாஷிங்டன் தலைமையில் வந்த படையினை ஃபிரெஞ்சுக்காரர் மலைகளின் மீது துரத்தினர். 1755-ல் பிரிட்டிஷார் தீர்மானிக்கப்பட்ட இரண்டு காரியங்களைச் செய்தனர். ஒன்று நோவா ஸ்கோஷியாவில் இருந்த ஃபிரெஞ்சு மக்களை நியூ இங்கிலாந்திற்கு வெளியேற்றினர். மற்றொன்று ப்ராட்டாக்கின் (Braddock) தலைமையில் ஓர் உதவிப் படையை அமெரிக்கருக்குத் துணையாக அனுப்பினர். ஜூன் மாதத்தில் ஃபிரெஞ்சுப்படைப் பெருக்கச் சாதனங்கள் செயின்ட் லாரன்ஸில் நுழைவதைத் தடைசெய்ய, பாஸ்காவனின் கடற்படை தவறியது. ஜூலையில் வீரம் மிகுந்த, ஆனால் பழமைவாதியான ப்ராட்டாக் (Braddock) டுகொய்ஸ்னே (Duquesne) கோட்டையின் அருகில் திடீர்த்தாக்குதலுக்கு உட்பட்டுத் தமது பாதிப் படையினரோடு மடிந்தார். இச் சமயத்தில் அமெரிக்கா முழுவதிலும் போர் மூண்டெழுந்தது. கடற்போரில் தோல்விகள் ஏற்பட்டன. அப்போதும் நியூகாஸில் இப் போரானது ஐரோப்பாவைப் பாதிக்காது என்றே நம்பினார். 1756 ஏப்ரலில் ஃபிரான்ஸ், மைனர்க்காவைத் தாக்கியதாலும், செப்டம்பரில் மகா ஃபிரடரிக் தமது பகைவர் யார் என்பதை எதிர்பார்த்து ஸாக்ஸனியைக் கைப்பற்றிக்கொண்டு பிரிட்டனை உதவிக்கு அழைத்ததாலும், நியூகாஸிலின் நம்பிக்கை நாசமாகியது.

'செங்குத்தான பாறை விளிம்பில் நடைவண்டி தள்ளும் சிறு குழந்தைகளுக்கு' ஒப்பானவர் என்று பிட் குறிப்பிட்ட நியூகாஸிலின் ஆட்சி இப் போரின் விளைவாக முடிவடைந்தது. பிளவுபட்ட காபினெட்டில், கம்பர்லண்டிற்கு எதிராக இருந்த அமைதிக் கட்சிக்கு ஹார்டுவிக் (Hardwicke) தலைவராக விளங்கினார். நிரந்தரப் படையினர் 20,000 தான் இருந்தபோதிலும், அரசாங்கம்

ராணுவச் சட்டத்தினைக் கொண்டு வராது, ஜெர்மானியக் கூலிப் படைகளைக் கொண்டுவந்தது. இங்கிலாந்தின்மீது படையெடுப்பு நேரும் என்ற பீதியினால் மைனார்க்காவிற்கு உதவி அனுப்புவதில் தாமதம் ஏற்பட்டது. மேலும், மைனார்க்காவின் வீழ்ச்சி திறமை யற்ற படைத்தலைமையைக் குறிப்பதாக இருக்கின்றது. அத் தீவு போதுமான அளவிற்குப் படையினரைப் பெற்று இருக்கவில்லை. ஜிப்ரால்டரில் இருந்த படை உதவிக்கு வர மறுத்துவிட்டது. உதவிக்கு வந்த கடற்படையும் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்ட தால் வலியிழந்து நின்றது. அதனை நடத்திச்சென்ற அட்மிரல் பிங் (Admiral Byng) போரில் அனுபவம் இல்லாதவர். வெற்றி தோல்வியற்ற ஒரு கைகலப்பிற்குப் பிறகு, ஃபிரெஞ்சுக்காரருக்குத் தொல்லை விளைவிப்பதற்கோ அல்லது அவர் டூலோனோடு (Toulon) கொண்ட செய்தித் தொடர்பைத் துண்டிப்பதற்கோ ஆன முயற்சி யினை பிங் அறவே கைவிட்டார். அப்படியிருந்தும் மைனார்க்கா மேலும் ஒரு மாதம் வரையில் வீழாது சமாளித்தது. அரசியல் வாதிகள் இத் தோல்விக்கான பழியைக் கடற்படைத் தலைவரின் மீது சுமத்த முயன்றபோதிலும், மக்களின் ஆத்திரம் பலிக்கடாவை வேண்டியது. மக்கள் அந்நியக் கூலிப்படையினரை வெறுத்தனர். தானியங்களின் விலை பஞ்சகால நிலையை எட்டியது. அதே சமயத்தில் மான்ட்காம் (Montcalm) தலைமையில் வந்த ஃபிரெஞ்சுக் காரர் ஒன்டாரியோ கோட்டைகளைக் கைப்பற்றினர். எனவே, அமைச்சர் குழு வீழ்ந்தது. ஃபாக்ஸ் (Fox) ராஜிநாமா செய்தார். கோழையான முர்ரே, மான்ஸ்ஃபீல்டு பிரபு (Monsfield) என்னும் பெயரில் தலைமை நீதிபதியாகித் தப்பினார். நியூகாஸிலோடு எந்த நிபந்தனையின்பேரிலும் தாம் ஒத்துழைக்க முடியாது என்று பிடிவாதமாக நின்ற பிட், அவரை அரசியலிலிருந்து ஓய்வு கொள்ளு மாறு செய்தார். அதன் பிறகு நவம்பர் திங்களில், பெயரளவில் தலைவராக திவோன்ஷயர் பிரபுவை வைத்து, தன்னுடைய சகாக்க ளோடு அதிகாரத்திற்கு வந்தார்.

உள்நாட்டில் குழப்பத்தோடும் வெளியில் பேரிழப்போடும் மற்றுமோர் ஆண்டு கழிந்தது. படைத்துறை முறை மன்றத் தீர்ப்பின்பேரில் பிங் (Byng) சுட்டுக் கொல்லப்பட்டார். மக்களும் மன்னரும் தீர்மானமாக இருந்ததால் பிட் முயன்றும் பிங் (Byng) கைக் காப்பாற்ற முடியவில்லை. மிகுந்த பிரயாசையோடு 32,000 வீரர் கொண்ட ஒரு சிறு படையினைத் திரட்ட ராணுவச்சட்டம் கொண்டுவரப்பெற்றது. படை திரட்டியபோது முதலில் கலகங்கள் தோன்றின. ஃபிரடரிக்குக்கு உதவி செய்வதைப் பாராளுமன்றம் அனுமதித்தது. அந்நியக் கூலிப்படைகள் வெளியேற்றப்பட்டன. என்றாலும், மன்னருடைய பகைமையினால் காபினெட் நிலைத்திருக்க

முடியவில்லை. 1757, ஏப்ரலில் கம்பர்லண்டின் கோரிக்கையின் பேரில், மக்கள் விருப்பத்திற்கு எதிராகவும், அரசியல் அமைப்பு நிலைக்கு முரணாகவும் அமைச்சர்களை அரசர் பதவியிலிருந்து நீக்கினார். அதைத் தொடர்ந்து தமக்கு வேண்டியவர்கள் அடங்கிய அமைச்சரவையைக் கூட்டி, ஃபாக்ஸ் (Fox), கம்பர்லண்டு ஆகியோரைப் பதவியிலமர்த்துவதற்காகப் பொன்னான பதினொரு வாரங்களைப் பாழாக்கினார்.

நல்வாய்ப்பின் பயனாக மக்களின் எண்ணமும் அரசியல் கட்சிக் குழுக்களின் திட்டங்களும் ஒன்றாக இருந்தன. நகரங்கள் பல பிட்டிற்கு உரிமை வழங்கி பெருமைப்படுத்திய அதே சமயத்தில், லெஸ்டர் (Leicester House) குடும்பத்தைச் சார்ந்தவர்கள் கம்பர்லண்டின் கை மேலோங்குவதை விரும்பவில்லை. நியூகாசிலைச் சார்ந்த விக்குகள் (Whigs), வயோதிக மன்னரை ஆதரிப்பதைவிட இளவரசரைச் சார்ந்து இருத்தல் நல்லதென நினைத்தனர். ஒரு வகையில் பூட்டின் (Bute) தலையீட்டினால் இறுதியில் ஒரு கலப்பு அரசாங்கம் நிறுவப்பெற்றது. பழைய விக்குகளான நியூகாசிலும் ஹார்டுவிக்கும் (Hardwicke) அதில் கலந்து கொண்டனர். பிட் ராஜாங்கச் செயலராகவும், காமன்ஸ் சபை அங்கத்தினர்களின் தலைவராகவும் பொறுப்பேற்றார். அவருடைய மைத்துனர்களாகிய டெம்பிளும் (Temple) கிரன்வில்லும் காபினெட்டில் இடம்பெற்றனர். கம்பர்லண்டின் சார்பாளர்களான பெட்ஃபோர்டு போன்றவர்கள் சிறிய பதவிகளை வகித்தனர். செல்வம் திரட்டும் நோக்கத்தோடு ஊதியம் வழங்கும் உயர் அதிகாரியாக (paymastership) ஃபாக்ஸ் (Fox) பதவி ஏற்றுத் தமது அரசியல் வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்துக்கொண்டார்.

கலப்பு அரசாங்கத்தின் வாய்ப்புகள் 1757-ல் இருளடைந்தவையாகத்தான் இருந்தன. லூயிபர்க்கைக் கைப்பற்றும் முயற்சி தோல்வியில் முடிந்தது. ஃபிரெஞ்சுப் படைத்தலைவரான மான்ட்காம் (Montcalm) சாம்ப்லெய்ன் ஏரியைக் கடந்து முன்னேறினார். முந்திய கோடையில் புதிய நவாப் கல்கத்தாவைக் கைப்பற்றியதன் விளைவாக இருட்டறைச் சம்பவத்தினால் அங்கிருந்த படையின் பெரும்பகுதி அழிந்தது. இச் செய்தி இங்கிலாந்தை எட்டியது. ஆரம்பத்தில் பெற்ற சில வெற்றிகளுக்குப் பிறகு ஃபிரடரிக், கோலின் என்னுமிடத்தில் ஆஸ்திரியர்களால் முறியடிக்கப்பெற்றார். அதனால் அவர் பொஹிமியாவைவிட்டே வெளியேறும்படி ஆயிற்று. ஃபிரெஞ்சுப் படையொன்று சாக்சனியைத் தாக்கியது. இரண்டாவது ஃபிரஞ்சுப்படை ஹெஸ்டன்பேக் என்னுமிடத்தில் கம்பர்லண்டை ஜூலையில் முறியடித்தது.

அது அவரை ஹனேவரைவிட்டு விரட்டியது. கம்பர்லண்டு செப்டம்பரில் ஃபிரெஞ்சுக்காரரோடு கிளோஸ்டர்செவன் (Kloster-seven) உடன்படிக்கை செய்துகொண்டு அதன்படி பாதிப் படையைக் கலைத்துவிட ஒப்புக்கொண்டார். அதே மாதத்தில் லா ரோச்சல்லி (La Rochelle) யருகில் இருந்த ரோச் ஃபோர்டில் நம்முடைய தாக்குதல் முறியடிக்கப்பெற்றது. மத்திய தரைக்கடல் பகுதிகளை இழந்துவிட்டதாகவும் அமெரிக்காவில் நிலைமை மிக மோசமானதாக இருக்கிறது என்றும் பிட்டே கூறினர். பிரிட்டிஷ் கடற்படையின் நடவடிக்கைகளையும், இருவிதக் கொள்கைகளின் மூலம் சர்வதேசச் சட்டத்தை விரிவுபடுத்தியதையும் நடுநிலைமை நாடுகள் விரும்பவில்லை. '1756 ஆம் ஆண்டு விதி' ஃபிரெஞ்சுப் பொருள்களை டச்சுக் கப்பல்கள் ஏற்றிச் செல்வதைத் தடைசெய்தது. பொதுவாகச் சமாதான காலங்களில் இவ்வாறு செய்யமுடியாது. 'தொடர்ச்சியான பயணம்' (continuous voyage) என்ற கொள்கையின்படி ஃபிரெஞ்சுக் குடியேற்ற நாட்டுப் பொருள்களை நடுநிலைமை நாடுகள் தங்கள் துறைமுகங்களின் வழியாக ஃபிரான்சுக்குக் கொண்டுசெல்லக்கூடாது என விதிக்கப்பட்டது. இவைகளையெல்லாம் கண்டு நடுநிலைமை நாடுகள் முணுமுணுத்தன.

ஆனால், நவம்பரில் ஃபிரெஞ்சு அஞ்சாநெஞ்சம் படைத்த பிரஷ்ய மன்னர், போரின் போக்கையே மாற்றினர். ரஷ்யாவின் தாக்குதலினல் கிழக்குப் பிரஷ்யாவைக் கைவிட நேர்ந்தபோதிலும், போமிரேனியாவில் ஸ்வீடிஷ்காரரால் அச்சுறுத்தப்பட்ட போதிலும் ஆஸ்திரியப்படை ஒன்று பெர்லினைத் தற்காலிகமாகக் கைப்பற்றியபோதிலும், அவர் சாக்சனியில் ராஸ்பாச் (Rossbach) என்னுமிடத்தில் கட்டுப்பாடு அற்ற ஃபிரெஞ்சுப்படையை அழித்தார். அதன்பிறகு கிழக்கு முகமாக சிலீஷியாவிற்கு முன்னேறி ஆஸ்திரியர் படை ஒன்றினை லியூதன் (Leuthen) என்னுமிடத்தில் நிர்மூலமாக்கினர்.

1758-லிருந்து இப் போரில் தொடர்ந்து வெற்றிகளே கிடைத்தன. பிட், போர்த்துறை அமைச்சராக முழுப் பொறுப்பேற்றுப் போரை நடத்தியதால் இது சாத்தியமானது. கடற்படைத் தலைமையைக் கலக்காமலேயே பலமுறை அப் படைக்குத் தகுந்த ஆணைகளைப் பிறப்பித்தார். மேலும், அவருடைய போர்த் திட்டம், கடற்படை வலிமையின் உண்மைப் பொருளை உணர்ந்ததாக இருந்தது. இதனல் ஃபிரான்ஸ் கனடாவில் படைவலிமையைப் பெருக்கச் செய்வதைத் தடுக்கவும், பிரிட்டிஷ் இந்தியாவைக் காக்கவும் முடிந்தது. அதனோடு ஃபிரெஞ்சு, ஸ்பானியக் கடற்படைகளைக் கடல்களிலிருந்து விரட்டவும், பேரரசைப் பெறவும் முடிந்தது.

மேலும், சமாதானம் செய்துகொள்ளும் காலத்தில் வலிய நிலையிலிருந்து பேரம் பேசுவதற்கும் பயன்பட்டது. ஏற்றுமதி பெருகுதற்கும் வாணிபப் பொருள்களின் அளவு உயர்வதற்கும் வாய்ப்பாக இப் போர் நடைபெற்றது. இந் நிலையிலிருந்து பார்க்கும்போது ஜெர்மன் களம் முக்கியமற்றதாகிவிடுகின்றது. பகைவரை அடக்குவதற்காகக் கிலோஸ்டர்செவன் (Klosterseven) உடன்படிக்கை ரத்து செய்யப்பெற்றது. ஃபிரடரிக்குக்கு உதவியாகப் பணமும் படையும் அனுப்பப்பெற்றன. ஃபிரெஞ்சுக்காரரின் கவனத்தைத் திருப்புவதற்காக ஃபிரெஞ்சுக் கரை தாக்கப்பெற்றது. என்றாலும் கடல்கடந்த நாடுகளில்தான் கடுந்தாக்குதல் நிகழ்ந்தது. கம்பர்லண்டின் வாரிசான ப்ரன்ஸ்விக்கைச் சேர்ந்த ஃபர்டினண்டு சிறந்த போர்வீரர் என்றாலும் இத் திட்டப்படி பிட்டே போரின் முழுப்பொறுப்பையும் ஏற்றார். ஸ்வீடிஷ்காரரும், ஆஸ்திரியரும், ருஷ்யப் படையினரும் பலமாகத் தாக்கினர். சாக்சனி, சிலீஷியா, போமிரேனியா ஆகியவற்றை இழந்த பிட் பலமுறை தற்கொலை செய்துகொள்ள நினைத்தார். 1762-ல் தம்முடைய கொடும் வைரியான ரஷ்யப் பேரரசி ஃஸாரினா எலிசபெத் இறந்ததனால் பிட் பிழைத்தார். ஏனெனில், பேரரசியார் இறந்த காரணத்தால் ரஷ்யா நடுநிலைமை நாடாக மாறியது.

பிட், போர் முயற்சியை ஒரு புதிய வரம்பிற்குக் கொண்டு சென்றார். பிரிட்டிஷ் படையினர்மட்டும் 150,000 ஆகப் பெருகினர். கடற்படையில் கலங்களின் எண்ணிக்கை 400-க்கும் மேற்பட்டது. 1758-ல் பத்து மில்லியன் மானியம் அளிக்கப் பெற்றது. 1760ஆம் ஆண்டு வரவுசெலவு திட்டத்தில் அது பதினைந்து மில்லியனாக உயர்ந்தது. அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்கு ஒரு மில்லியனுக்குமேல் அளிக்கப்பட்டது. இவற்றைக் காட்டிலும், பிட்டினுடைய பரந்த நோக்கும், மக்களை ஒன்றுபடுத்திச் செயலாற்றும் திறனும், போரினை முதல் சர்வதேசப் போராக மர்ற்றியமைத்தன. விருப்பமில்லாத குடியேற்றங்களிலிருந்தும் அவருடைய வேண்டுகோள்களினால் அதிக வரிகள் கிடைத்தன. ஆணைபெற்ற (Commissioned) அமெரிக்க அதிகாரிகளை அவர் அங்கீகரித்ததாலும், ஒருசில அதிகாரிகளை உயர் பதவிகளுக்குத் தேர்ந்தெடுத்ததன்மூலமாகவும், குடியேற்ற மக்களிடம் அதுவரையில் காணாத பற்றுறுதியைக் காணமுடிந்தது.

பிரிட்டிஷாரின் கடலாதிக்கம் 1759ஆம் ஆண்டில் ஐரோப்பாவைப் பல அபாயங்களிலிருந்து காத்தது. அச் சமயங்களில் சிறந்த ஃபிரெஞ்சு அமைச்சரான சோய்சியூல் (Choiseul) வலிமை பெற்று விளங்கினார். இங்கிலாந்தைத் தாக்குவதற்காகப் படைகள்

ஃபிரெஞ்சுத் துறைமுகங்களில் குவிந்திருந்தன. எனினும், எம்டன் வழியாகவந்த படைவலிமைப்பெருக்கத்தைப்பெற்ற ஃபர்டினண்டு, திறமையோடு போர்புரியும் பிரிட்டிஷ் காலாட்படையின் துணை கொண்டு, மிண்டன் (Minden) என்னுமிடத்தில் பெரும் வெற்றி பெற்று ஜெர்மனியைக் காத்தார். லீசெஸ்டர் குடும்பச் சார்பாளரான சாக்வில்லியின் (Sackville) குதிரைப்படை பெற்ற தோல்வியினால் அந்த வெற்றியின் சிறப்புச் சிறிது கறைபட்டது. இந்தத் தோல்வி காரணமாக சாக்வில் படையிலிருந்து விலக்கப் பெற்றார். அதே திங்களில் ப்ரஸ்ட் என்னுமிடத்தில் இருந்த கடற் படையோடு சேருவதற்காக டூலானில் இருந்து வந்த கப்பற் படையைப் போர்ச்சுகலின் லகோஸ் (Lagos) என்னுமிடத்தில் பாஸ்காவன் அழித்தார். நவம்பரில் ப்ரஸ்டிலிருந்த படை லோயரி (Loire) லிருந்து பிரயாணத்தைப் பாதுகாத்துச் செல்லும் கலங் களின் கூட்டங்களாகப் பிரிந்து சென்றது. அவைகளைத் தொடர்ந்து சென்ற ஹாக் (Hawke) பிரிட்டானியிலுள்ள (Brittany) கியூப்ரான் (Quiberon) மணல் திட்டுகளில் பல கப்பல்களை அழித்து மற்றவைகளைப் பயனற்றவையாகச் செய்தார்.

இப்படியாக, ஃபிரான்ஸ் மையப்பகுதியை உறுதியாகப் பற்றி நின்றபோதிலும், சுற்றுப்புறத்தில் அது அழிக்கப்பட்டது. ஃபிரெஞ்சு மேற்கு ஆஃப்ரிக்காவைக் கைப்பற்றுதல், இந்தியாவில் பெற்ற வெற்றிகள் போன்ற சில வெற்றிகள் இப் போரில் குறிப் பிடத்தக்க உடனடி மாறுதல்களைத் தோற்றுவிக்கவில்லை என்றாலும், அவை பிற்காலத்தில் தோன்றிய போராட்டங்களோடு தொடர்பு கொண்டவையாக இருந்தன. கிளைவும் அட்மிரல் வாட்சனும் கல்கத்தாவை மீண்டும் கைப்பற்றிய பிறகு வங்காளத்தில் இருந்த ஃபிரெஞ்சுக் குடியேற்றங்களைப் பிடித்துக்கொண்டனர். ஜூனில் சிராஜ் உத்தௌலாவின் படையினைப் பிளாசி என்னுமிடத்தில் முறியடித்தனர். மூர்க்கமான லாலி (Lally) பின் 1758-ல் பாண்டிச்சேரியை அடைந்து, தெற்கே செயின்ட் டேவிட் கோட்டையைக் கைப்பற்றி, வடக்கே திரும்பி, சென்னையை முற்றுகையிட்டார். பிரிட்டிஷ் கடலாதிக்கத்தினால் சென்னை முற்றுகையை அவர் கைவிடும்படியாயிற்று. இதற்கிடையில் கிளைவின் துணைவர்களுள் ஒருவரான ஃபோர்டே (Forde), வட சர்க்கார் (Circars) பகுதியிலிருந்து ஃபிரெஞ்சுக்காரரை விரட்டினார்.

1760-ல் சென்னைக்கும் ஆர்க்காட்டிற்கும் இடையே இருந்த வந்தவாசியில் அயர் கூட் (Eyre Coote) லாலியைத் தோற்கடித் தார். கடலாதிக்கத்தின் காரணமாகத் தொலைவிலுள்ள மாரிஷிய ஸிலேயே ஃபிரெஞ்சுக் கப்பல்படை தங்குமாறு நேர்ந்ததனால்

எளிதாகப் படைவலிப்பெருக்கம் செய்ய முடிந்தது. 1761-ல் பாண்டிச்சேரியும் சரணடைந்தது.

அந்த நேரத்தில் அமெரிக்கக் களத்தில் முடிவு காணப்பெற்றது. 1758-ல் மேற்கொண்ட படையெடுப்பு எதிர்பார்த்த வெற்றியைத் தரவில்லை. லூயிஸ்பர்க்கைக் கைப்பற்ற ஆம்ஹர்ஸ்டிற்கு உதவியாகக் கடற்படை அனுப்பப்பெற்றபோதிலும், அது காலங்கடந்து வந்ததனுல் கியூபெக்கை அவரால் கைப்பற்ற முடியவில்லை. உள்நாட்டில் கனேடியர் ஓஹியோவுடன் தொடர்புகொள்ள வாய்ப்பாக இருந்த டுகோய்ஸ்னே (Duquesne) கோட்டையைக் கைப்பற்றினர். ஒன்டாரியோவின் வடகரையில் அமைந்த ஃபிரான்டினக் கோட்டையை அழித்தனர். ஆனுல், மூலப்படையினை மான்ட்காம் (Montcalm) டிகோண்டரோகாவில் முறியடித்து விரட்டினுர். இதனுல் புதிய செய்திகள் அறியப்பட்டன. பிட், படைத் தலைமையில் தீவிர மாறுதல்களைச் செய்தார். எனினும், 1759-ல் பெற்ற பெருவெற்றிகள்கூட அவருடைய குறிக்கோள்களைப் பூர்த்தி செய்யவில்லை. மேற்கில் ஒரு பிரிட்டிஷ் படை நயாகராவை அடைந்து, ஃபிரெஞ்சுக்காரரை ஏரிகளிலிருந்து விரட்டியது. ஆனுல், மான்ட்ரீலை நோக்கிச் சென்ற ஆம்ஹர்ஸ்டினுடைய முன்னேற்றம் சாம்ப்லெய்ன் ஏரிக்கருகில் இருந்த எதிர்ப்பினுல் தாமதமாகியது. அதனுல், செயின்ட் லாரன்ஸிலுள்ள படையின் உதவி இன்றியே போர்புரிய நேர்ந்தது.

இந்தப் படையெடுப்பில் பங்கு கொண்ட 9000 வீரர்களைக் கொண்ட வலிமை மிக்க படையும் கப்பற்படையும் சிறந்த தலைவர்களைப் பெற்று இருந்தன. ஆன்சனுடைய சிறந்த கேப்டன்களில் ஒருவரான சாண்டர்ஸ், இடுக்கான பறைகளின் வழியாகத் திறமையுடன் கப்பல்களைக் கொண்டுசென்று, ஒவ்வொரு கட்டத்திலும் வெற்றிதேடித்தந்தார். டெட்டிஞ்சன் (Dettingen) போரில் பங்கு கொண்ட ஜெனரல் ஜேம்ஸ் உல்ஃப் (James Wolfe) 33 வயதே ஆனவர். லூயிஸ்பர்கில் பெயரெடுத்தவர். படையினருக்குப் பயிற்சி அளிப்பதில் திறமை வாய்ந்தவர். மெலிந்த உடலும் மென்மைத் தன்மையும் பெற்று இருந்தாலும், அவர் வெற்றி பெறுதற்கு வேண்டிய உறுதி பெற்றிருந்தார். இத்தகைய தலைவர்களுடைய வற்புறுத்தலின்பேரின் நியமிக்கப்பெற்ற துணைவர்களும் சிறப்புமிக்கவர்கள். படைவீரர்களான முர்ரே, மாங்க்டன், டவுன்செண்ட், கார்லிடன் ஆகியோரும், மாலுமியான ஜேம்ஸ்குக்கும், பிற்காலத்தில் செயின்ட் வின்சென்டான ஜெர்விசும் முக்கியமானவர்கள் ஆவர். அவர்களுடைய பணி மிகக் கடினமானது. ஆறு உறைவதற்குமுன் தாக்குதல் தொடங்கவேண்டும்

என்ற குறிக்கோளோடு வேலைசெய்த அவர்கள் ஃபிரெஞ்சுக்கார ரைத் திடீரென்று தாக்க முடியவில்லை. அதற்குள் மான்ட்காம் தம் படையை ஆயத்தம் செய்துகொண்டார்.

ஆயிரம் கெஜத்திற்கும் குறைந்த அகலமுள்ள செயின்ட் லாரன்ஸ் ஆற்றுடன் வடக்கிலிருந்து வரும் செயின்ட் சார்லஸ் ஆறு வந்து சேரும் இடத்தில், கியூபெக் நகரம் அமைந்திருந்தது. அங்கிருந்து சில மைல்களுக்கப்பால் இருந்த மான்ட்மோரன்சி (Montmorency) ஒரு புறக்காப்பு நிலையமாக அமைந்திருந்தது. இப் பகுதியைத்தான் மான்ட்காம் அரணுடைய பாசறையாக அமைத்துக்கொண்டார். அவருடைய படை பல தன்மைத் தாயினும் எண்ணிக்கையில் பெரியது. அதனால் பிரிட்டிஷாரைக் களப்படையச் செய்து வீழ்த்த முடியும் என நம்பினர். ஆயின், கீழ்ப்புறமுள்ள ஆர்லியன்ஸ் தீவையும் நகருக்கு எதிரே உள்ள லிவிஸ் (Levis) முனையையும் கைப்பற்றிய உல்ஃப், முதலில் மான்ட் மோரன்ஸியில் ஃபிரெஞ்சுக்காரரை நெருக்கி, அதேசமயத்தில் அவர்கள் எதிரிலேயே செயின்ட் சார்லஸில் தமது படையினை இறக்கவேண்டும் என்னும் எண்ணத்தோடு செயலாற்றினர். ஆனல், முதல் தாக்குதல் படுதோல்வியில் முடிந்தது. உல்ஃபும் நோய்வாய்ப்பட்டார். காலமோ மிகக் குறுகியதாக இருந்தது.

புதிய சூழ்நிலையிலும் பலருடைய கூட்டு முயற்சியின் பேரிலும், ஆகஸ்ட் மாதக் கடைசியில் தீர்வு காண முடியவில்லை. சாண்டர்ஸ் மிகுந்த துணிவோடு, பகை பீரங்கிகள் முழங்கி யதையும் பொருட்படுத்தாது சில கப்பல்களை நதியில் மேல் நோக்கிச் செலுத்தினர். அங்கே இறங்கிய படை மான்ட்காம், மான்ட்ரியலோடு கொண்ட தொடர்பை அறுப்பதாக அச்சுறுத் தியது. எனவே, மான்ட்காம் தம் படையினை அங்கிருந்து அப்புறப்படுத்திக்கொண்டார். உல்ஃபினுடைய பிரிகேடியர்கள், மாலுமிகளைக் கலந்தாலோசித்து, கியூபெக்கிற்கு மேலே உள்ள ஒரு இடத்தில் இறங்குவதில்தான் விமோசனம் உண்டு என்பதை அவருக்குத் தெளிவுபடுத்தி அத் திட்டத்தினை ஏற்குமாறு செய் தனர். ஆனல், அவர்கள் கூறியதைப்போல் நதிக்கு மேலே எட்டு மைல் தொலைவில் உள்ள இடத்தைத் தேர்ந்து எடுக்காமல் ஆன்ஸ் டு ஃபோலேர்ன் (Anse du Foulon) என்னும் செங்குத்தான குடாவை உல்ஃப் தாமே தேர்ந்தெடுத்தார். அது நகருக்கு ஒரு மைல் தொலைவில் உள்ளதும், ஆப்ரஹாம் குன்றுகளுக்குச் செல்லும் வழியில் உள்ளதுமேயாகும்.

அவர் செப்டம்பர் பன்னிரண்டாம் நாள் இரவு ஆற்றில் கீழ் நோக்கிச் சென்றுகொண்டு இருந்தபோது, வெற்றிப்பாதை

சவக்குழிக்கு அழைத்துச் செல்லும் என்னும் உணர்வு அவரை ஆட்கொண்டு இருக்கவேண்டும். அவருக்கு மணமுடிப்பதாக நிச்சயித்த பெண் கொடுத்த கிரே எழுதிய 'எலிஜி' (Gray's 'Elegy') என்னும் நூலிலிருந்து சில பகுதிகளைத் தம்முடன் வந்த அதிகாரிகளுக்கு எடுத்துக் கூறினார். அவருடைய மனதில் எத்துணைதான் சந்தேக இருள் சூழ்ந்திருந்தபோதிலும், பிறரைத் தூண்டும் அவருடைய ஆற்றல் ஒரு பெரும் போர்ச்சாதனை புரியப் பயன்பட்டது. செங்குத்தான பாதையில் தமது வீரர்களை ஒரு வரிசையில் செலுத்தி 13ஆம் தேதி விடியற்காலையில் 4500 படையினரைக் குன்றின்மீது கொண்டு நிறுத்தினார். அதன் மூலமாக மான்ட்காமை ஆச்சரியத்தில் ஆழ்த்தினார். என்றாலும், அவரது படை கியூபெக்கிலும் நதியின் மேற்புறத்திலும் இருந்த படைகளுக்கு இடையில் அகப்பட்டுக்கொள்ளாது இருக்க வேண்டுமானால் அவர் உடனே கைகலப்பில் வெற்றிபெற்றாக வேண்டும். அதிர்ஷ்டவசமாக அத்தகைய வாய்ப்பு ஒன்றை மான்ட்காம் அளித்தார். காலை 8 மணிக்குத் தொடங்கிய சண்டை 11 மணிக்கெல்லாம் முடிந்துவிட்டது. உல்ஃபினுடைய தரைப்படையின் கட்டுப்பாட்டினாலும், அவர்தம் துணைவரின் நுண்ணயத் திறமையினாலும் பெருவெற்றி கிடைத்தது. நேருக்கு நேரான கைகலப்பு ஏற்பட்டபோது உல்ஃப் இருமுறை காயமுற்றார். மூன்றாவதுமுறை உயிருக்கு ஊறுதரும் வகையில் நுரையீரலில் அடிபட்டது. அதைப் போலவே மான்ட்காமும் படுகாயமுற்றார். மறுநாள்வரை உயிருடன் இருந்த அவர் கியூபெக் நகரம் ஆங்கிலேயருக்குச் சரணடைய வேண்டுமென்பதை ஏற்றுக்கொண்டார். மனம் தளர்ந்த ஃபிரெஞ்சுப் படையினர் மான்ட்ரீலை நோக்கி ஓடினர். மழைக்காலம் நெருங்கியதால் அங்கிருந்து கடற்படை வெளியேறவேண்டி இருந்தது. கியூபெக்கைக் காக்கும் பொறுப்பை முர்ரே ஏற்றார்.

இங்ஙனம் கனடா இறுதியில் வீழ்வது உறுதி என்றாலும் அது 1760 வரை தள்ளிப்போடப்பெற்றது. மான்ட்ரீலில் இருந்த தங்களது தளபதியான லீவிசுக்குப் படைவலிப்பெருக்கம் அளிக்க ஃபிரெஞ்சுக்காரர்களால் முடியவில்லை. பல கோழையர் நாட்டுப்பற்று அற்றவர்களாக இருந்தனர். எனினும், மழையினாலும் பிணியினாலும் பாதி அளவிற்குக் குறைந்து இருந்த கியூபெக்கின் காப்புப்படை, அந்நகரை அநேகமாக இழந்துவிடும் நிலைக்குவந்தது. மே மாதத்தில் பிரிட்டிஷ் படை திரும்பிச் சென்ற பிறகு லீவிஸ், முர்ரேயை முற்றுகையிட்டார். ஆனால், ஆகஸ்டில் செயின்ட் லாரன்ஸ் நதியில் மேல்நோக்கிச் சென்ற முர்ரே மான்ட்ரீலின் வெளிப்புறத்தை அடைந்தார். சாம்ப்லெய்ன் (Champlain) ஏரியிலிருந்து வந்த இரண்டாம் படை அங்கு அவருடன் வந்து இணைந்தது.

அதன் பிறகு மேற்கிலிருந்து ஒன்டோரியாவைக் கடந்து செயின்ட் லாரன்ஸ் நதியிலுள்ள சிறு நீர்வீழ்ச்சிகளில் இறங்கி வந்த ஆம்ஹர்ஸ்ட் அவரோடு சேர்ந்துகொண்டார். செப்டம்பர் எட்டாம் நாள் மான்ட்ரீல் சரணடைந்தது.

பிரிட்டனின் கடல் வலிமை ஃபிரான்ஸின் ஆதிக்கத்தை மேற்கு இந்தியத் தீவுகளில் இருந்தும் விரட்டியது. காடிலோப் (Gaudeloupe), டோமினிகா, மார்டினிக், செயின்ட் லூஸியா ஆகிய எல்லா இடங்களும் 1762ஆம் ஆண்டிற்குள் வீழ்ந்தன. பிஸ்கே விரிகுடாவில் உள்ள பெல் தீவினைக் கைப்பற்றியது ஃபிரான்சுக்கே பேரடி கொடுப்பதாக இருந்தது. பிரிட்டனை ஐந்து ஆண்டுகளாக வெற்றிபெறுமாறு செய்த பிட், ஹைடு பார்க்கில் செர்பர்க் (Cherbourg) மணிகளையும் படைகளின் கொடிகளையும் பார்க்கவும், முப்பதுகளில் இருந்த தளபதிகளின் வெற்றிபற்றி கேட்டறியவும் செய்தார். ஆனால், இப்போது புதிய காட்சி ஒன்று பிறந்தது. அக் காட்சியில் வெற்றிப் பேரரசு பத்து ஆண்டுகளில் இரண்டாம் தர அரசாகத் தாழ்த்தப்பெற்றது.

வயோதிக மன்னர் 1760-ல் இறந்ததும் இத்தகைய காட்சி தோன்றியது. இருபத்திரண்டு வயது இளைஞரான மூன்றும் ஜார்ஜ் பட்டத்திற்கு வந்தார். நாட்டின் நலனுக்குப் பயன்படும் நற்குணங்களை வெளிப்படுத்த அடுத்த அறுபது ஆண்டுகள் அவருக்குக் கிடைத்தன. இருந்தபோதிலும், அவருடைய இளகிய மனமும், துக்ககரமான சூழ்நிலையும் அவரது தனிப் பண்புகளைத் திரித்துக் கேடுகளை விளைவித்தன. தம்முடைய வயதிற்குப் போதுமான மனவளர்ச்சியற்ற ஜார்ஜ் ஆட்சியின் முதற்பகுதியில் தமது தாயார் பூட் (Bute) போன்றவர்களின் அறிவுரைப்படி நடந்தார். ஒறுப்புச் சிக்கலில் அவரை வளர்த்த அவர்கள் அவர்தம் தந்தையாரை உதாசீனம் செய்த விக்குகளுக்கு மன்னிப்பு அளிக்கக் கூடாது என்று போதித்தனர். அதைப்போலவே அவருடைய உறவினரான கம்பர்லண்டின்மீதும் 'கெடுமதி படைத்த' ஃபாக்ஸ் (Fox) போன்ற அவரது சகாக்களின்மீதும் அவநம்பிக்கை கொள்ளுமாறு செய்தனர். குறுகிய மனமுள்ள டோரிகளைக் கொதிப்படையச்செய்யும் ஜெர்மன் நடவடிக்கைகளின்மீதும், போர்களின் மீதும் காழ்ப்புக் கொள்ளுமாறும் செய்தனர். தங்களுடைய நோக்கங்களில் பெருமிதம் கொண்ட அவரது ஆலோசகர்கள், அதுவரையில் ஊழல் மிகுந்த செல்வந்தர்களால் கட்டுப்படுத்தப் பெற்று இருந்த அரசர் அதிகாரத்தை மேலோங்கச் செய்ய வேண்டுமென்று ஜார்ஜைத் தூண்டினர். எனினும், அரசியல் அமைப்பினைத் திருத்தி அமைக்கவோ டோரிக் கட்சியைப் புதுப்

பிக்கவோ தீவிரமான திட்டமேதும் வரவில்லை. அவர்கள் வேண்டியதெல்லாம் முதலிரண்டு ஜார்ஜ் மன்னர்கள் முயன்றதும், மூன்றும் வில்லியத்தின் வெற்றிபெற்ற முறைகளும்தான். உதாரணமாக, அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதில் கட்டுப்பாடற்ற உரிமை, கொள்கைகளை வகுப்பதில் இறுதி முடிவெடுக்கும் உரிமை, ஒரு குறிப்பிட்ட சாராரின் நன்மைக்கு அன்றி நாட்டின் நலனுக்காகப் பாராளுமன்றத்தின்மீது செல்வாக்குச் செலுத்தும் வழிமுறைகள் ஆகியவைகளைப் பெற நினைத்தனர்.

அத்தகைய கொள்கை அக்காலச் சூழ்நிலையில் நியாயமானதாகும். மேலும், பத்தொன்பதாம் நூற்றுண்டில் வலிமை தரும் சிறந்த கொள்கையாகவும் இருந்தது. ஆயின், அக் கொள்கையின் முதற்கருவியாக, பூட்டைத்(Bute) தேர்ந்தெடுத்ததே அதனை அழிப்பதற்குப் போதுமானதாக இருந்தது. ஸ்காட்லாந்தைச் சார்ந்தவர் என்ற வகையில் மக்களின் வெறுப்பைப்பெற்ற பூட், அரசியல் அனுபவம் அற்ற அரச ஆதரவாளர் ஆவர். தூய்மைச் செருக்கும் பகட்டு ஆரவாரமான எண்ணங்களையும் கொண்டிருந்த அவர், அப் பண்புகளை அரசர்மீதும் திணித்தார். பூட் (Bute) பிரதான அமைச்சராக வரவேண்டும் என்ற அவர்களது எண்ணத்திற்கு, பிட் இடையூருக இருந்தார். ஆயின், பிட்டினுடைய செல்வாக்கு, போரை அடிப்படையாகக் கொண்டு இருந்தது. எனவே, அவர்கள் பிட்டிற்கும் நியூகாசிலுக்கும் இடையே ஒரு பிளவை ஏற்படுத்தக் கூடிய சமாதானத்திற்காகப் பாடுபட முனைந்தனர். இப் புதிய போக்கிற்கான அறிகுறிகள் தென்பட்டன. அரசர் தமது கவுன்சில் முதல் பேச்சில் 'போர், இரத்தவெறி மிக்கது, செலவு மிக்கது' என்று தாக்குவதைப் பிட் மிகுந்த சிரமத்தோடு தடுத்தார். எனினும், பிரிட்டனின் புகழிலேயே பெருமை அடைவதாகப் பாராளுமன்றத்தில் அறிவித்ததன்மூலமாக ஹனேவிரியன் கொள்கையைக் (Hanoverianism) கைவிட்டார் என்பது தெரிகின்றது. நீண்ட காலமாகப் பதவியில் இல்லாத அரசியல்வாதிகள், புல்டினி (Pulteny) [Lord Bath], டாடிங்டன் (Dodington), எக்மான்ட் (Egmont) போன்றவரின் தூண்டுதலினுல், கட்சிக்கு அப்பாற்பட்டது அரசாங்கம் எனும் பாலிங்புரோக்கின் கொள்கையைப் புகழ்ந்து பத்திரிகைப் பிரசாரம் தொடங்கியது. டோரிக் கட்சியினர் அரசவையில் வரவேற்கப்பெற்றனர். அரண்மனையில் உயர்பதவியில் அமர்த்தப் பெற்றனர். 1761ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் பூட் (Bute), பிட்டுடன் பணிபுரிவோராக, உள்துறைச்செயலராக நியமிக்கப் பெற்ருர்.

ஓராண்டு காலமாகச் சமாதானம்பற்றிப் பேச்சுவார்த்தை தொடர்ந்து நடந்துவந்தது. போரினுல் கடன் இரட்டிப்பாகி, 150

மில்லியன் பவுனுக்கு உயர்ந்ததைக் கண்ட நியூகாசில் கூட்டத்தினர், பிரிட்டனின் அழிவுக்காலம் தொடங்கிவிட்டதாகக் கருதினர். போர் நீடிப்பதனல் உண்டாகும் அபாயத்தைப் பிட்டும் உணர்ந்தார். குறிப்பாக, ஸ்பெயினின் போக்கைக் கண்டு அவர் அஞ்சினர். அங்கே முன்னுள் நேபிள்ஸ் மன்னராக இருந்தவரும் நெடுநாள் பகைவருமான மூன்ரும் சார்லஸ் 1759-ல் அரியணையேறினர். அவரது ஆளுகையில் பிரிட்டிஷாருடைய கடலாதிக்கத்தை எதிர்த்த ஸ்பெயின் முடிவு கட்டியது. ஆனல், வலிவான நிலையிலிருந்து கொண்டு சமாதானம் பேசவேண்டுமென்று பிட் உறுதிபூண்டார். இறுதிவரை ஃபிரடரிக்குக்கு ஆதரவு அளிப்பதென்று தீர்மானித்தார். இது அவரிடம் கொண்ட பற்றுறுதி காரணமாகமட்டும் அன்று ; சிதைந்த பிரஷ்யாவைப் புதுப்பிக்க வேண்டுமானல் பிரிட்டிஷார் வெற்றிபெற்ற பகுதிகளை விட்டுக்கொடுக்கவேண்டி வரும் என்ற உணர்வு காரணமாகவுந்தான் எப் பகுதியை வைத்துக் கொள்வது, எப் பகுதியை விட்டுக்கொடுப்பது என்பதைப்பற்றி எண்ணிறந்த விவாதங்கள் எழுந்தன. உதாரணமாக, காடிலோப் அல்லது மார்டினிக் வளம் மிக்கவை என்ருலும் அவைகள் பிரிட்டிஷ் வசமுள்ள கரும்பு உற்பத்தி செய்யும் தீவுகளுக்குப் போட்டியாக இருந்தன என்றும், அமெரிக்காவில் பகுதிகளைப் பெறுவதன்மூலமாக அமெரிக்க மார்க்கெட்டைக் கைப்பற்றலாம் என்ருலும் கனடா ஃபிரெஞ்சுக்காரர் கையில் இருந்தால்தான் அமெரிக்கா பற்றுறுதியோடு இருக்கும் என்றும் விவாதங்கள் நடைபெற்றன. இறுதியாக நியூபவுண்டுலாந்தின் மீன் பிடிப்பு நிலையங்களோடு கனடா முழுமையும் வைத்துக்கொள்ள பிட் முடிவு செய்தார். அதன்மூலமாக ஒருசில மேற்கிந்தியத் தீவுகளின் உதவியோடு நிரந்தரமாக ஃபிரான்சைக் கடலில் வலியிழந்த நாடாகச் செய்யமுடியும்.

1761-ல் தொடர்ந்த பேச்சு வார்த்தைகள் சமாதானம் செய்ய முடியாத பெரும் பிளவு இருப்பதை வெளிப்படுத்தின. மீன் பிடிப்பு நிலையங்களையும் மிஸ்ஸிஸிப்பி எல்லையையும் ஏற்றுக்கொள்ள சோய்சியூல் (Choiseul) இணங்கவில்லை. வெற்றி பெற்ற ஜெர்மன் பகுதிகளைத் திருப்பித் தருமாறு ஆஸ்திரியாவை வற்புறுத்தவும் தயாராக இல்லை. இவற்றைக் காட்டிலும் ஸ்பெயினின் குறைகளை வைத்தே அவர் காலத்தை ஓட்டியது மிகுந்த சினமூட்டுவதாக இருந்தது. காபினெட் பெரும்பான்மையினரின் வற்புறுத்தலின் பேரில் பல சலுகைகளைப் பிட் வழங்கியிருந்தார். எனினும், சோய்சியூல் (Choiseul) மூன்ருவது போர்போன் குடும்ப ஒப்பந்தம் செய்துகொண்டதனல் செப்டம்பரில் சமாதானப் பேச்சு முறிந்தது. இந்த ஒப்பந்தத் தொடர்பான கடிதங்களை இடைமறித்து, அறிந்த செய்திகளைவைத்து உடனே ஸ்பெயின்மீது தாக்குதல் செய்ய

வேண்டுமென்று பிட் கூறினர். ஆனல், அவருடைய மைத்துனரான டெம்பிளைத் தவிர காபினெட் முழுதும் அவருக்கு எதிராக இருந்தது. ஒன்றாக இணைந்த ஃபிரான்சோடும் ஸ்பெயினேடும் போரிட முடியாது என்று வாதிட்ட ஆன்சனும் படை வீரரும் பிட்டிற்குப் பகையாக இருந்தனர். எனவே, பிட்டும் டெம்பிளும் அக்டோபரில் ராஜிநாமா செய்தனர்.

உதவிச் சம்பளத்தை ஏற்றுக்கொண்டதனுலும், தம்முடைய மனைவியருக்குப் பிரபுத்துவத்தைப் (peerage) பெற்றதனுலும், குறுகிய காலத்திற்குப் பிட்டின் செல்வாக்குக் குன்றி இருந்தபோதிலும், அவருடைய கொள்கை சிறந்தது என்பது வெளிப்பட்டது. எவ்விதத்தில் அணுகியபோதிலும் ஸ்பெயின் இணங்க மறுத்துவிட்டது. எனவே, பிரிட்டன் போரைத் துவங்கியது. இப்போரில் பிட்டினுடைய திட்டங்கள் வெற்றி அளிப்பனவாக இருந்தன. மேற்கிந்தியத் தீவுகளைக் கைப்பற்றுவதில் ஒரு முடிவு ஏற்பட்டதுடன், ஹவாஞவில் உள்ள பெரு நிதியோடு கியூபாவைத் திடீரெனத் தாக்கிப் பிடிப்பதிலும், ஃபிலிப்பைன் தீவுகளைக் கைப்பற்றுவதிலும், ஆங்கிலேயர் வெற்றி பெற்றனர். மேலும், ரஷ்ய ஆபத்திலிருந்து விடுபட்ட ஃபிரடரிக் முன்னேறினர். பிரிட்டிஷ் படைகள் காசலைக் (Cassel) கைப்பற்றிக்கொண்டன. ஆனல், பூட் (Bute) வெற்றியைப் பயன்படுத்திக்கொள்பவரல்லர். அச்சமயத்தில் சமாதானம் செய்துகொள்வது அவருடைய அதிகாரப் பெருக்கத்தோடு தொடர்புகொண்டதாக இருந்தது. பழைய அமைச்சர்களில் முன்கோபியான பெட்ஃபோர்டு பிட்டினை அருவருக்கத்தக்கவர் என்றும் ஃபிரான்ஸைக் கடலிலிருந்து விரட்டும் பிட்டின் நோக்கம் இயற்கையை எதிர்த்துப் போராடுவதாகும் என்றும் எண்ணினர். பிட்டின் பிடிவாதமும் செருக்குமே பிரிட்டிஷாரின் அழிவுக்குக் காரணம் எனவும் எண்ணினர். பிரஷ்யாவிற்கு உதவி மானியம் வழங்குவதை நிறுத்தியவுடன், நியூகாஸிலும் ஹார்டுவிக்கும் ராஜிஞமா செய்தனர். பூட் (Bute), தமது உறவினர்களான ஜார்ஜ் கிரன்வில், எக்ரிமான்ட் போன்றவர்களைக் கொண்டு காபினெட்டை நிரப்பினர். பூட் மேன்மேலும் ஃபிரான்சுக்கு விட்டுக்கொடுப்பதை அவர்கள் தடைசெய்ய முயன்றனர்.

நியாயமானது என்று கருதினலும் ஜெர்மனிக்கு அளிக்கப்பெற்ற மானியம் நிறுத்தப்பட்டது திடீரென்று மேற்கொண்ட தொடர்பற்ற செயலாகும். மேலும், ஃபிரடரிக்கைச் சமாதானம் செய்துகொள்ள வற்புறுத்த எண்ணிய பூட்டின் நோக்கத்தை ஆஸ்திரியாவும் ரஷ்யாவும் அறியுமாறு செய்தார். அதனல், ஃபிரடரிக் கொடும் பகைவரானர். சார்டீனியத் தூதுவர்மூலமாக

அவர்மேற்கொண்ட இரகசியப் பேச்சுவார்த்தையும், காபினெட்டின் வெளிப்படையான நலிந்த நிலையும் சோய்சியூலின் (Choiseul) வற்புறுத்தலுக்கு அவரை உட்படுத்தின. சிறிது சிறிதாகப் பல சலுகைகளை அவரிடமிருந்து சோய்சியூல் கறந்தார். காபினெட்டிலும், நகரத்திலும், வீதிகளிலும் தோன்றிய கலகங்கள் பூட்டை அழிப்பதாகப் பயமுறுத்தின. நியூகாசிலைச் சார்ந்த விக்குகள் (Whigs) தாழ்ந்த பதவிகளை ஏற்று, காபினெட்டில் நுழைய மறுத்ததால், போரில் ஆர்வம் மிகுந்த கிரன்வில்லைக் காமன்ஸ் சபையின் தலைமைப் பதவியிலிருந்து விலக்கி, அவருக்குப் பதிலாக ஃபாக்ஸை (Fox) அமர்த்துதற்கு அரசரை வற்புறுத்தினர். ஃபாக்சும் (Fox) பிரபுப் பதவி கிடைக்கும் என்ற நம்பிக்கையில் சமாதான நிபந்தனைகளை நடைமுறையில் கொண்டுவர ஒப்புக்கொண்டார். நாட்டுப்புற அங்கத்தினர்களை இணங்கச் செய்ய அதிக முயற்சி தேவையில்லை யென்றாலும் ஓரளவு இரகசியப் பணிப்பணம் செலவிடப்பட்டது. அரசரது நோக்கில் துணிகரமான கூட்டம் என்று கருதிய பழைய விக்குகளை அடக்கத் தீவிர முயற்சிகள் எடுக்கப்பட்டன. திவோன்ஷயர், கவுன்சிலிலிருந்து நீக்கப்பெற்றார். நியூகாசிலும், ராக்கிங்ஹாமும் லார்டு லெப்டினன்ட் (Lord Lieutinant) பதவியிலிருந்து நீக்கப்பட்டனர். காப்புவரித் துறை, மற்றத் துறைகளில் சாதாரணப் பதவியிலிருந்த பலரும் பதவி நீக்கம் பெற்றனர். இவ்வித இணைந்த செயல் முறைகளின் பயனாகப் பாரிஸ் உடன்படிக்கை பார்லிமெண்டில் நிறைவேற்றப்பட்டது. 1673ஆம் ஆண்டு பிப்ரவரியில் கையொப்பமிடப்பெற்றது.

அந்த உடன்படிக்கை, அது செய்துகொள்ளப்பெற்ற முறையோடு நியாயமான குற்றச்சாட்டுகளுக்கு இலக்காக இருந்தது. கனடாவும் பிரிட்டன் முனையும் பிரிட்டிஷார்வசம் வந்தன. அதனோடு அப்போது ஸ்பெயினுக்கு அளிக்கப்பெற்ற லூசியானாவிலிருந்து நியூ ஆர்லியன்ஸைப் பிரிப்பதற்காக, மிஸ்ஸிஸிப்பி வரையுள்ள பகுதி பிரிட்டிஷாருக்குத் தரப்பட்டது. நியூபவுண்டுலாந்திலும் செயின்ட் லாரன்ஸிலும் மீன் பிடிக்கும் உரிமையைத் தன்னிடமே ஃபிரான்ஸ் வைத்துக்கொண்டது. அதனோடு செயின்ட் பையர் (Pierre), மிக்யூலான் (Miquelon) தீவுகளையும் வைத்துக்கொண்டது. தரக்குறைவான ஃபிளாரிடாவிற்குப் பதிலாகக் கியூபா ஸ்பெயினுக்கு அளிக்கப்பெற்றது. மாற்றாக ஒன்றும் பெருமலே ஃபிலிப்பைன் தீவுகளும் அளிக்கப்பெற்றன. ஹோண்டுராஸ் பகுதியில் பிரிட்டிஷாரின் மரம் வெட்டும் உரிமை ஏற்றுக்கொள்ளப்பெற்றது. மேற்கிந்தியத் தீவுகளில் செயின்ட் வின்சென்ட் (St. Vincent), டொபாகோ (Tobago), டோமினிகா (Dominica), கிரினடா (Grenada) ஆகியவற்றையே பிரிட்டனை வைத்துக்

கொண்டது. மிகுந்த வளம் பொருந்திய காடிலோப்பும் (Gaudeloupe) மார்ட்டினிக் (Martinique) போர்முறைத் திறம் மிக்க செயின்ட் லூசியாவுடன் (St. Lucia) ஃபிரெஞ்சுக்காரருக்குத் திரும்பக் கிடைத்தன. பிரிட்டன், பெல் தீவுகளுக்குப் பதிலாக மைனர்க்காவைத் திரும்பப்பெற்றது. இந்தியாவில் ஃபிரெஞ்சுக்காரர் இழந்த இடங்களை மீண்டும் பெற்றனர். வங்காளத்தில் அவர்கள் கோட்டை கட்டிக்கொள்ளும் உரிமைமட்டும் மறுக்கப்பட்டது. ஆஃப்பிரிக்காவில் செனிகாலை பிரிட்டன் தன்னிடமே வைத்துக் கொண்டது. ஆனால், கோரீயைத் (Goree) திரும்ப அளித்துவிட்டது. ஒருசில தெளிவற்ற ஷரத்துகளைத் தவிர ஃபிரடரிக்கைத் தமது உரிமைக் கட்டுப்பாடுகளைச் செய்துகொள்ளுமாறு விட்டுவிட்டனர்.

இச் சமாதான உடன்படிக்கை ஏற்பட்டவுடனே அதனை உருவாக்கியவர்களின் உறுதி குலைந்துவிட்டது. பிரபு பட்டத்தோடும் ஊதியம் அளிக்கும் உயர் அதிகாரியின் ஊதியத்தோடும் ஃபாக்ஸ் செல்வாக்கிழந்தார். மெலிந்த உடல்நிலையில் இருந்த பூட் (Bute) மக்களுடைய வெறுப்பைத் தாங்கமுடியாது தவித்தார். அவருடைய வாகனத்தை மக்கள் கூட்டமாகத் தாக்கினார்கள். அவரது உருவச் சிலையைத் தூக்கிலிட்டனர். அவரையும் அரச மாதாவையும் மையமாக வைத்து அவதூறுகளையும், நாட்டுப் பாடல்களையும் பத்திரிகைகள் எழுதிக் குவித்தன. அதனால் மன்னருக்குத் தம்மால் ஆபத்து வருவதை அவர் உணர்ந்தார். எனவே, 1763ஆம் ஆண்டு ஈஸ்டர் சமயத்தில் ஓய்வு பெற்றார். புதிய பிரதமராகிய கிரன்வில், தமது மைத்துனரான எக்ரிமான்ட், பெட்ஃபோர்டினுடைய சகாக்கள், பெல்ஹாமின்கீழ் வேலை செய்த ஹாலிஃபாக்ஸ் (Halifax) போன்றவர்களுடைய உதவியைப் பெற்றார். மேலும், சில ஆண்டுகளுக்கு பூட் (Bute) அரசாங்கத்தோடு ஒருவிதத் தொடர்புகொண்டு இருந்தார். நீண்ட நாட்கள் வாழ்ந்தவரெனினும் 1765ஆம் ஆண்டிற்குப் பிறகு அவர் மன்னரைத் தனிமையில் சந்தித்ததாகத் தெரியவில்லை. அரசரின் தனிப் பற்றுதலுக்கு உரியவரின் கதை இங்ஙனம் முடிவுற்றது என்றாலும் அக் கதையின் பயன்கள் முடிவடையவில்லை.

## சமகால நிகழ்ச்சிகள்

1755 ஜினோவரிடமிருந்து கார்சிகாவைப் பயோலி (Paoli) மீட்டல்.

ஜான்சனின் கையகராதி.

1756 ஏழாண்டுப் போரின் தொடக்கம்.

சிராஜ் உத்தௌலா கல்கத்தாவைக் கைப்பற்றுதல்.

1757 கூட்டுறவு மாற்றம்.

கோலின் (Kolin), ரோஸ்பாச் (Rossbach), லியூதன் (Leuthen) சண்டைகள்.

தாமஸ் கிரேயின் (Thomas Gray's) இரங்கற்பா (Odes).

1758 சோய்சியூல், பிரான்சின் வெளியுறவு அமைச்சராக வருதல்.

பிசியோகிராட் (Physiocrats) பிரிவினரை குயூஸ்னே நடத்திச் செல்லுதல்.

1759 மிண்டன், லாகோஸ், கியூபரான், கியூபெக் சண்டைகள்.

போர்ச்சுகலிலிருந்து யூதர்கள் வெளியேற்றப் படுதல்.

1760 மாக்பர்ஸனுடைய 'ஓசியன்' (Ossian) பாக்கள்.

ஸ்டர்னேயினுடைய (Sterne's) 'Tristram Shandy'யின் முதல் பகுதி வெளியீடு.

1761 மூன்றுவது குடும்ப ஒப்பந்தம் (The third Family Compact).

பானிபட்டில் இந்து இந்தியாவின் தோல்வி.

கெயின்ஸ்பரோவின் (Gainsboroughs) முதல் ஓவியக் காட்சி.

1762 ரூஸோவின் 'Contract social' and 'Emile'.

கலாஸ் (Calas), சக்கரத்தில் முறிதல்.

–1796. ருஷ்யாவின் மகா காதரைனின் ஆட்சித் தொடக்கம்.

1763 பாரிஸ் சமாதானம்.

# கலைச்சொல்லகராதி

(ஆங்கிலம்-தமிழ்)

## A

Accession — அரசு எய்தல்
Act of Attainder — மரணதண்டனைச் சட்டம்
Act of Classes — வகுப்பார் சட்டம்
Act of Indemnity — இழப்பீட்டுச் சட்டம், நஷ்ட ஈட்டுச் சட்டம்
Act of Oblivian — மறப்புச் சட்டம்
Act of Resumption — புத்தேற்புச் சட்டம்
Act of Revocation — தள்ளுபடி சட்டம்
Act of Satisfaction — மனநிறைவுச் சட்டம்
Act of Settlement — அரசுரிமை நிர்ணயச் சட்டம்
Act of Succession — வாரிசுரிமைச் சட்டம்
Act of Supremacy — முதன்மைச் சட்டம்
Act of Uniformity — ஒரே வழிபாட்டுமுறைச் சட்டம்
Addled Parliament — பயனற்ற பாராளுமன்றம்
Admiralty — கடற்படைத் தலைமை அலுவலகம்
Agitators — கிளர்சியாளர்
Allies — நேசநாடுகள்
Articles of Perth — பெர்த் விதிகள்
Assize of Bread — ரொட்டிச் சட்டம்
Attorney-General — சட்டத் தலைமைப் பணிமுதல்வர்

## B

Balance of Power — சக்திச் சமநிலை
Barebhone's Parliament — பார்போன் பாராளுமன்றம்
Barrier — தடைநிலம்
Bible — பைபிள், திருமறை
Bill of Rights — உரிமைகள் மசோதா
Black Hole Tragedy — இருட்டறைத் துயர நிகழ்ச்சி
Black Watch — கருங்காவற் படையினர்
Board of Trade — வாணிப ஆணைக்குழு
Book of Rates — வரிவிகிதப் புத்தகம்
'Brotherhood' — உடன்பிறந்தார் நிலை

## C

Cabinet — காபினெட் சபை
Carding Machine — சிக்குவாரி எந்திரம்
Caualier Parliament — கேவலியர் பாராளுமன்றம்
'Chits', The — 'சிறு குழந்தைகள்'
Church — திருச்சபை

| | |
|---|---|
| Civil List | — அரசரின் செலவுப் பணம் |
| Clarendon Code | — கிளாரண்டன் சட்டத் தொகுப்பு |
| Committee of Safety | — பாதுகாப்புக் குழு |
| Common Law | — பொதுச் சட்டம் |
| Commonwealth Government | — பொதுநலத் துரைத்தனம் |
| Communion Service | — திருவிருந்து வழிபாடு |
| Confirmation | — தீக்கைச் சடங்கு |
| Continental wars | — கண்டப் போர்கள் |
| Conventicle Act | — இரகசிய தொழுகைக் கூட்டச் சட்டம் |
| Conventilcles | — இரகசிய சமயக் கூட்டத்தினர் |
| Convention | — மன்னர். அழைப்புப் பெறுத சட்ட சபை |
| Convention Parliament | — பிரத்யேகப் பாராளுமன்றம் |
| Cornice | — எழுதகம் |
| Corporation Act | — மாநகராட்சிச் சட்டம் |
| Council | — கவுன்சில் |
| Country Party | — நாட்டுக் கட்சி |
| Court of Registration | — ஆவணக் களரி |
| Court of Requests | — வேண்டுகோள் நீதிமன்றம் |
| Court of Session | — குற்ற விசாரணை நீதிமன்றம் |
| Covenanters | — ஒப்பந்தக்காரர்கள் |

**D**

| | |
|---|---|
| Deadlock | — முட்டுநிலை |
| Declaration of Indulgence | — பொறுத்தலறிக்கை |
| Declaration of Rights | — உரிமைகள் அறிவிப்பு |
| Dioceses | — சமய ஆட்சிப் பிரிவுகள் |
| Directory | — தகவல் தொகுதி |
| Dispensing Power | — சட்ட விலக்கு அதிகாரம் |
| Dissenters | — இணங்காதார் |
| Divine Right Theory | — தெய்வீக உரிமைக் கோட்பாடு |

**E**

| | |
|---|---|
| Ecclesiastical Commission | — சமய விசாரணை நீதிமன்றம் |
| Edicts of Nantes | — நான்ட்ஸ் கட்டளைகள் |
| Elector | — தேர்வாளர் |
| Elegy | — இரங்கற்பா |
| Enclosure System | — நிலஅடைப்பு முறை |
| Episcopacy | — பிஷப்புகள் ஆட்சி |
| Exclusion Bill | — விலக்கு மசோதா |
| Excommunication | — சமய விலக்கு |

**F**

| | |
|---|---|
| Feudalism | — நிலமானிய முறை |
| First Lord of the Treasury | — கருவூலத் தலைமைப் பிரபு |
| Five Mile Act | — ஐந்து மைல் சட்டம் |

Forced Loan — கட்டாயக் கடன்
Franchise — வாக்குரிமை ; ஓட்டுரிமை
Frescoes — காரை ஓவியங்கள்
Friar — கடுந்துறவி ; திரிதுறவி
Fundamentalist — அடிப்படைவாதி

**G**

Grand Remonstrance — பெருங்கண்டனம்
Great Plague — பெருங்கொள்ளை நோய்
'Great Scheme' — பெருந்திட்டம்

**H**

Harem — உவளகம்
Heresy — புறச்சமயம்
Hinterland — பின்னிலம்
Huguenots — யூக்நோக்கள்
Humble Petition — தாழ்மையான விண்ணப்பம்
House of Commons — காமன்ஸ் சபை

**I**

Impeachment — அரசியல் துரோகக் குற்ற விசாரணை
Imperial Council — பேரரசுப் பாராளுமன்றம்
Independents — சுயேச்சையாளர்
Infallibility — பிழையாமைக் கோட்பாடு
Inquisitions — சமய நீதிமன்றங்கள்
Instrument of Government — அரசாங்க அமைப்புப் பத்திரம், துரைத்தன அமைப்புப் பத்திரம்
Interlopers — கள்ள வாணிபம் செய்வோர்
Isthmus — நில இடுக்கு

**J**

Jacobites — யாகோபியர்
Joint Stock Company — கூட்டுப் பங்கு கம்பெனி
Justice of Peace — அமைதிகாண் நீதிபதிகள்

**L**

Lairds — பண்ணையாளர்
Letters Patent — காப்பு உரிமைச் சீட்டுகள்
Levellers — சமநிலைவாதிகள்
Lex Laquens — மதுச்சட்டம்
Libel — அவதூறு இலக்கியம்
Licencing Act — அனுமதிச் சீட்டுச் சட்டம்
'Limitations' — கட்டுப்பாட்டுத் திட்டம்
Litany — வழிபாட்டுப் பாசுரம்

